# ஆனந்த போதினி

ஒரு சிறந்த மாதாந்தத்
தமிழ்ச் சஞ்சிகை.



"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

(தொகுதி 23)

ஈசுவரஹூ ஆடிமீ முதல் வெகுதான்யஹூ
ஆனிமீ வரையில்
1937ஹூ ஜுலைமீ முதல் 1938ஹூ ஜுன்மீ வரையில்

நா. முனிசாமி முதலியார்,
"ஆனந்தபோதினி" ஆபீஸ்,
நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு,
சௌகார்பேட்டை, மதராஸ்.



காலிகோ பைண்ட் விலை ரூபா 1—6—0

1938.

தபாற் கூலி வேறு.

# ANANDA BODHINI

## GOLDEN OPINIONS

From Rao Saheb Late T. Ramakrishna Pillai Avl., B.A., F.M.U., F.R.H.S., Chairman, Board of Examiners in Dravidian Languages, Madras University.

I am a regular reader of "Ananda Bodhini" the Tamil monthly published in George Town and I am glad to take this opportunity of expressing my appreciation of the way the Journal is conducted. It is just the kind of magazine we want for the Indian women in their houses and the conductors of the Journal have my best wishes for the success of their undertaking.

*Madras, 28th Nov. 1915.*<br>THOTTAKADU HOUSE. } (Sd.) T. RAMAKRISHNA PILLAY.

From Rao Bahadur A. C. Pranatartihara Iyer Esq., B.A., I.S.O., Retired Inspector of Schools, and Registrar of Books, Nungambakkam.

I have read several numbers of "**Ananda Bodhini.**" It is conducted on right lines. The matter is suitable and the diction is unobjectionable. I can unhesitatingly say that the journal deserves public encouragement and support.

NUNGAMBAKKAM,<br>*Madras, 5th Dec. 1915.* } (Sd.) A. C. PRANATARTIHARA IYER.

We have received the current number of the Tamil monthly "**Ananda Bodhini,**" containing a variety of information on several subjects of every day importance. The special feature of the monthly is that a separate section is set apart for giving advice to women either in the form of abstract statements, or small stories containing moral lessons.—*Hindu 22-9-15.*

Dear Sir,

Your Tamil monthly entitled "ANANDA BODHINI"..........................is written in *easy, clear* and *readable* style, *well-suited, particularly,* to *ladies* who take a liking to it on account of the varied subjects of interest dealt therein, calculated to mould their characters. That such a monthly should be in existence, side by side with the Anglo-Indian contemporaries, is very much to be appreciated. The subjects dealt within the short compass of the monthly are such that they deserve to be *read* and *re-read* from the view point to quality in contradistinction from style and rhetoric, with a select few of our readers seem to yearn for, as is evident from the pages of the current number *i.e.* pages 288 and 289. A majority of the subscribers now on the rolls will be at one with me when I say that the style now adopted would conduce to the well-being and uninterrupted continuances of the monthly, since it is being and has to be read by both sexes, ... ... ... ... ... Itis very much to be envied that there should be over 10000 subscribers, on the rolls which no other monthly of the kind is able to secure, or has ever before secured since inception. I wish the monthly all success.

Trivandrum,<br>21-1-17. } A. V. SUBRAMANIA AIYAR,<br>F.M. S.A. (Lon.), F.G.I. (Birm.)

6127

# ஆனந்தபோதினி

## 23-ம் வருடத்திய விஷய அட்டவணை.

உ

ஓம்
பரப்பிரஹ்மணே நம!

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 23 | ஈசுவர ௵ ஆடி மீ ௧௳ | 1937 ௵ ஜூலை மீ 16௳ | பகுதி 1

## கடவுள் வணக்கம்.

ஏகநா யகனை இமையவர்க்கு அரசை
என்னுயிர்க்கு அமுதினை எதிரில்
போக நாயகனைப் புயல்வ(ண்)ணற் கருளிப்
பொன்னெடுஞ் சிவிகையா வூர்ந்த
மேக நாயகனை மிகுதிரு வீழி
மிழலைவிண் இழிசெழுங் கோயில்
யோக நாயகனை யன்றிமற் றொன்றும்
உண்டென உணர்கிலேன் யானே. (1)

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியைக்
கரையிலாக் கருணை மாகடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்றஎஞ் சிவனைத்
திருவீழி மிழலைவீற் றிருந்த
கொற்றவன் தன்னைக் கண்டுகண்டு உள்ளங்
குளிரஎன் கண்குளிர்ந் தனவே. (2)

மண்டலத்து ஒளியை விலக்கியான் நுகர்ந்த
மருந்தைஎன் மாறிலா மணியைப்
பண்டுஅலர் அயன்மாற்கு அரிதுமாய் அடியார்க்கு
எளியதோர் பவளமால் வரையை
விண்டுஅலர் மலர்வாய் வேரிவார் பொழில்சூழ்
திருவீழி மிழலையூர் ஆளும்
கொண்டல்அங் கண்டத்து எங்குரு மணியைக்
குறுகவல் வினைகுறு காவே. (3)

# அரும்பொருள் விளக்கம்

1. (இ-ள்.) தனிப்பெருந்தலைவனை, தேவர் தேவனை, அடியேனது ஆருயிர்க்கு அமுதானவனை, ஈடும் இணையு மில்லாத போகங்களை யூட்டும் பெருமானை, மேகவண்ணனாகிய மகா விஷ்ணுவுக்கு அருள் புரிந்த பொன்னு லாகிய நீண்ட பல்லக்கில் பவனிவரும் அருளாளனை மிகவும் சிறப்புவாய்ந்த திருவீழி மிழலைத் திருக் கோயிலில் எழுந்தருளி யிருக்கும் யோக நாயகனை யல்லாது வேறு பொருள் உண்டென்று நான் அறிய மாட்டேன். (எ-று.)

தனக்கு ஒப்பாரும், மிக்காருமில்லாத முழு முதற் பெருங்கடவுள் இறைவ னொருவனே என்பார், 'ஏகநாயகனை' என்றும், ஆன்மாக்களுக்குச் சகல போகங்களையுந் தருபவனாதலால் 'போக நாயகனை' என்றும், மேகம்போல் கைம்மாறு கருதாது அருளைப் பொழிபவன் என்னும் உண்மையை விளக்க 'மேகநாயகனை' என்றும், மக்கள் கடவுளை யடையச் செய்யும் யோகங்களுக் கெல்லாம் தலைவனாய் (பிரதமாசாரியனாய்,) விளங்குபவன் இவனே என்பார் 'யோக நாயகனை' என்றும் கூறினர்.

2. (இ-ள்.) ஞான நூல்களைக் கற்றுணர்ந்த பெரியார்கள் ருசிபார்க் கும் கற்பகக் கனியை, கரையில்லாத கருணா சமுத்திரத்தை, அஞ்ஞானிகள் அறியமாட்டாத மாணிக்க மலையை இடையறாது சிந்திப்பவர் (தியானிப்பவர்) களின் உள்ளங்களில் ஒளி வீசும் மணி விளக்கை, பகை யசுரர்களது திரி புரங்களைத் தகனஞ் செய்த எம் சிவபெருமானை, திருவீதி மிழலையில் எழுந் தருளியுள்ள மன்னர் மன்னனைத் தரிசித்து தரிசித்து அடியேனது மனம் இன்புற, கண்களும் களிப்படைந்தன. (எ-று.)

உலகம், உயிர் கடவுள் ஆகிய முப் பொருள்களின் உண்மையை உள்ள வாறு உணர்ந்தவரே மெய்யறி வுடையோராதலால், 'கற்றவர்' என்றும், அத்தகைய மெய்ஞ்ஞானிகளால் தான் இறைவனை அநுபூதி வாயிலாகத் தரி சித்து அநுபவிக்க முடியுமாதலால், 'கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியை,' என்றும், அறியாமை கொண்டவர்களால் கடவுளை அறிய முடியாதென்பார், 'மற்றவர் அறியா மாணிக்க மலையை' என்றும், சிந்திப்பார் உள்ளத்தில் தீபம் போல் திகழ்வான் என்பார், 'மதிப்பவர் மனமணி விளக்கை' என்றும் நயம் படக் கூறினர்.

3. (இ-ள்.) பிரபஞ்ச வாசனையை யொழித்து அடியேன் அருந்திய அருமருந்தை, என்னுடைய ஒப்பிலாமணியை, முன்னர் தாமரை மலரில் வீற் றிருக்கும் பிரமனுக்கும், திருமாலுக்கும் காண்பதற்கு அரியவனாயும், மெய் யடியார்கள் தரிசிப்பதற்கு எளியவனாயும் உள்ள பெரிய பவளமலை போன்ற வனை, முகிழ்த்து மலர்கின்ற பூக்களிலிருந்து தேன் ஒழுகும் பூஞ்சோலை சூழ்ந்த திருவீழி மிழலை என்னும ஊரையாளும் மேகம் போன்று கருத்த அழகிய கழுத்தை யுடைய எங்குருமணியை அடைய வன்மை பொருந்திய இருவினைகளும் அடியேனை நெருங்க மாட்டா. (எ-று.)

உலகப்பற்று அற்றவர்கள் தான் ஆண்டவனைத் தரிசித்து இன்புற முடியு மென்பார், "மண்டலத்து ஒளியை விலக்கியான் நுகர்ந்த மருந்தை' என்றும் ஆன்மாக்களின் அறியாமை யிருளைப் போக்கக் குருவாய் எழுந்தருளும் இறைவனை யடைந்ததும் தீவினைகள் நீங்கும் என்பார், 'எங்குருமணியைக் குறுக வல்வினை குறுகாவே' என்றும் அருளினர்.




# புத்தாண்டு செய்தி





இன்று நம் "ஆனந்த"னுக்கு 23-வது ஆண்டு பிறக்கிறது. கருணைக் கடலான இறைவன் திருவருளாலும், பேரன்புடைய தமிழ் மக்கள் ஆதரவாலும் நமது "ஆனந்தன்" கடந்த 22-வருஷங்களாக வளர்ச்சி யுற்று வந்திருக்கிறான் என்பதை நாம் வாசகர்களுக்கு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். பொது மக்களிடையே பத்திரிகை ஞானமோ, அபிமானமோ மிகவும் அருகி யிருந்த காலத்தில், நாம் தமிழ் மக்களுக்கும், தமிழ் மொழிக்கும் சேவை செய்ய வேண்டுமென்ற ஒரு பெரு நோக்கோடேயே, சிரமத்தையோ, கஷ்டத்தையோ சிறிதும் பொருட்படுத்தாது மிகவும் குறைந்த சந்தாவில், நிறைந்த விஷயங்களோடு "ஆனந்தனை" ஆரம்பித்து சிறந்த முறையில் நடத்தி வந்தோம். இதற்குப் பின்னர் ஒரு சிலர் எல்லா வகையிலும் நம் "ஆனந்தனை" முன் மாதிரியாகக் கொண்டு பல பத்திரிகைகளை நடத்த ஆரம்பித்தனர். அவ்வாறு தோன்றிய பத்திரிகைகளெல்லாம் சில நாட்களுக்கெல்லாம் பல்வித காரணங்களால் ஒன்றன் பின்னொன்றாக, மறைந்தொழிந்தன. ஆனால், இத்தனை வருஷங்களாக எத்தனையோ இடையூறுகளெல்லாம் குறுக்கிட்டும், அவைகளை யெல்லாம் சமாளித்துக் கொண்டு, இன்றுவரை உறுதியுடன் நின்று நிலவி, நம் "ஆனந்தன்" தமிழ் மக்களுக்குச் சேவை செய்து வருகிறான். இவ்வகையில், நம் "ஆனந்தன்" பெருமை கொள்வதில் தற்புகழ்ச்சிக்கு இடமில்லை யென்றே கருதுகிறோம்.

பத்திரிகையின் இயல்பைப் பற்றியும், அதை நடத்துபவர்களுக்கு உள்ள பொறுப்பைப் பற்றியும், அதனால் மக்களுக்கு விளையும் பயனைப் பற்றியும் நாம் சென்ற இதழ் தலையங்கத்தில் விரிவாக எழுதியிருக்கிறோம். ஆகவே, இந்த இருபதாம் நூற்றாண்டிலும் போதிய பத்திரிகாபிமானம் இல்லா இந் நிலையில்,—பொருளாதார நெருக்கடியால் மக்கள் வறுமை வாய்ப்பட்டிருக்கும் இந் நிலையில்-குறைந்த சந்தாவில் "ஆனந்தனை" ஒரு மாதமேனுந் தாமதப்படுத்தாமல் குறித்த காலத்தில் ஒழுங்காக வெளியிட்டு வருகிறோம் என்றால் அது எவ்வளவு அருமை என்பதை வாசக நேயர்கள் சற்றுக் கவனிக்கவேண்டும்.

நம் தமிழ்நாடு தற்போது இருந்துவரும் நிலையை நம்மவரில் பெரும் பாலார் சிந்தித்துப் பார்ப்பதாகத் தெரியவில்லை. சமய சமூக வளர்ச்சியில் கருத்துடையார் மிகச் சிலராகவே இருக்கின்றனர். சமயாபிமானிகள் வருடத்துக் கொருமுறை கூட்டங் கூடி ஆண்டு விழா நடத்திவிட்டு 'யோகநித்திரை' செய்ய ஆரம்பித்து விடுகின்றனர். அரசியலில் சமயத் தலைவர் பெரும்பாலார் கவனஞ் சென்றிருப்பதால், அவர்கள் தங்கள் காரியங்களைச் சாதித்துக் கொள்ளுவதற்கு அவசியமான போது, ஏதோ கூட்டங் கூட்டிக் கலாட்டா செய்து, பட்டம் பதவிகளில் பங்கு பெறுவதிலேயே நோக்கமா யிருக்கின்றனர். உண்மையான சமயப் பிரசாரம் தமிழ் நாட்டில் நடந்து எவ்வளவோ நாளாகி விட்டன. சமூக சீர்திருத்த வாதிகள் என்போர் பலர், தங்கள் மனம் போன போக்கில் ஏதோ செய்து ஜன சமூகத்தைப் பாழ்படுத்தி வருகின்றனர். இவற்றின் பயனாக, நாட்டில் எங்கு நோக்கினும், நாத்திகமும், கூடா ஒழுக்கங்களும் தலைவிரித்தாடி வருகின்றன. இவ்வகையில் சமயத் தலைவர்களோ, சமூக சீர்திருத்த வாதிகளோ யாருஞ் செய்யாத உண்மையான தொண்டை நம் "ஆனந்தன்" புரிந்து தமிழ் மக்களிடையே உண்மைச் சமயப் பற்றையும், சமூக முன்னேற்றத்தில் ஆர்வத்தையும் உண்டுபண்ணி வருகிறான் என்பதை, "ஆனந்தனை"த் தொடர்ந்து வாசித்து வரும் அன்பர்கள் அறிவர்.

"ஆனந்தன்" தோன்றிய நாள் முதல் தமிழ் மக்களிடையே சிறப்பாகச் சமய ஞானத்தையும், ஒழுக்கத்தையும் நீதி முறையையும் பரப்பிவந் திருப்பதோடு, கால தேச வர்த்தமானத்தை யொட்டி, ஜன சமூகத்துக்கு அத்தியாவசியமான அரசியல், விஞ்ஞானம், ரசாயனம், பொருளாதாரம் முதலிய நவீன விஷயங்களையும் அவ்வப்போது அறியச் செய்து வந்திருக்கிறான். பொழுது போக்காக மக்கள் படித்து மகிழக் கூடிய சிறு கதைகளையும் ஹாஸ்ய வியாசங்களையும் தாங்கி வந்திருக்கிறான். பல சமய ஆராய்ச்சிக்கும் இதில் இடங் கொடுத்து

சம நோக்கோடு நடந்து வந்திருக்கிறான். ஆகவே, நம் "ஆனந்தன்" ஒரு சமயத்தார்க்கு, ஒரு வகுப்பாருக்கு மட்டு முரியவனல்லன்; தமிழ் நாட்டில் வதியும் தமிழரென்பார்—அவர் இந்து, முஸ்லீம், கிறிஸ்தவர் யாராயினும்—அனைவருக்கும் உரியவனுயான். எனவே, தமிழ் நாட்டிலுள்ள எல்லா மக்களும் "ஆனந்தனை" ஆதரிக்க வேண்டியது அவசியமாகும்.

தமிழ் நாட்டுச் சகோதர சகோதரிகள் பல்லாயிரக் கணக்கில் சந்தாதாரரா யிருந்து, இது காறும் 'ஆனந்த'னுக்கு ஆதரவளித்து வந்தது போலவே, இனிமேலும் ஆதரித்து வரவேண்டு மென விண்ணப்பித்துக் கொள்கிறோம். இப் புத்தாண்டின் ஞாபகார்த்தமாக ஒவ்வொரு சந்தாநேயரும் குறைந்த பட்சம் இரு சந்தாதாரரை யேனும் சேர்த்துக் கொடுத்தால் பேருதவியா யிருக்கும். "ஆனந்த"னுக்குச் செய்யும் இவ்வுதவி, தமிழக மேன்மைக்குச் செய்யும் உதவியாகும் என்று நாம் சொல்லவும் வேண்டுமோ!

ஓம் தத் ஸத்.

---

# அரசியலில் காங்கிரஸ்

---

நமது "ஆனந்த"னுக்குப் புத்தாண்டு பிறப்பது போலவே, நம் நாட்டு அரசியலிலும் புதிய சகாப்தம் ஏற்பட்டிருக்கிறது. மூன்று வருடத்துக்கு முன் வரை, சர்க்காரோடு ஒத்துழையாமையை மேற்கொண்டிருந்த காங்கிரஸ்—சட்டசபை பகிஷ்காரத்தை மேற் கொண்டிருந்த காங்கிரஸ்—இன்று மந்திரி பதவியையும் வகிக்க முன் வந்திருக்கிற தென்றால், அது பெரு மாறுதலல்லவா! காலச் சக்கரத்தின் வேகத்தால் நடைபெறும் பல விசித்திரங்களில் காங்கிரஸ் பதவிவகித்து அரசியலை நடத்துவது மொன்றாகும்.

காங்கிரஸ் காரர்கள் சட்ட சபைகளைப் பகிஷ்கரித்து ஒத்துழையாமைப் போராட்டத்தை நடத்தினார்கள்; உப்பு சத்தியாக்கிரகஞ் செய்தார்கள்; சட்டமறுப்பு இயக்கத்தை அதி தீவிரமாய் நடத்தினார்கள். அவற்றின் போக்கைப் பார்த்த காலத்து, காங்கிரஸ் காரர்கள் சட்ட சபைகளை மீண்டும் கைப்பற்றுவார்களா? என்று நாம் நினைத்ததுண்டு. அந் நிலைமை மாறி, காங்கிரஸ் கட்டளைப்படி மூன்று வருஷத்துக்கு முன் காங்கிரஸ் காரர்கள் மீண்டும் சட்டசபைகளில் பிரவேசிக்கத் தொடங்கினர். இந்தியா சட்டசபைத் தேர்தலில் காங்கிரஸ் காரர்களுக்குப் பெரு வெற்றி யேற்பட்டது.

சமீபத்தில், இந்தியாவுக்கு மாகாண சுயாட்சி வழங்கி யிருப்ப தாகச் சொல்லிப் பிரிட்டிஷ் சர்க்கார் புதிய அரசியல் சட்ட மொன்றை நம் தலையில் சுமத்தி யிருக்கிறார்க ளல்லவா ! இந்தியர் யாரும் வேண் டாத அச் சட்டத்தின் போலித் தன்மையை விளக்கி உடைத் தெறி வதற்காக வேண்டி, காங்கிரஸ்காரர்கள், மேற்படி சட்டத்தின்படி நடத்தப்பட்ட பொதுத் தேர்தலில் கலந்து கொண்டார்கள். இத் தேர்தலிலும் காங்கிரஸுக்கே பெருவாரியான வெற்றி யேற்பட்டது. இந்தியாவிலுள்ள மொத்தம் பதினேரு மாகாணங்களுள் ஆறு மாகா ணங்களில் காங்கிரஸ்காரர்களே மற்ற கட்சியாரை விட பெரும்பான் மையாக வந்தார்கள். மற்ற ஐந்து மாகாணங்களில் கூட, மற்ற கட்சிகளின் நிலைமையை நோக்கும் போது, காங்கிரஸ் காரர்களே சட்டசபைகளில் பலமுடைய கட்சியினரா யிருக்கிறார்கள்.

காங்கிரஸ் காரர்கள் ஜனப்பிரதிநிதி சபைகளையும், ராஜாங்க சபைகளையும் எல்லாம் கைப்பற்றி யாயிற்று. அடுத்த படி யென்ன ? 'புதுச் சட்டத்தை யுடைத் தெறிவதற்குச் சட்டசபைகளில் அங்கத் தினர்களா யிருந்தால் மட்டும் போதாது; நிர்வாக சபையையும் கைப் பற்ற வேண்டும் ; காங்கிரஸ் காரர்கள் மந்திரி பதவிகளையும் வகிக்க வேண்டும்; அப்போது தான் அவர்களுடைய நோக்கம் நிறைவேறும். இல்லாவிடில், மற்ற பிற்போக்கான கட்சியினர் மந்திரி பதவியிலிருந்து கொண்டு, சட்டசபைகளில் காங்கிரஸ் காரர்கள் செய்யும் முற் போக் கான காரியங்களை யெல்லாங் கெடுத்துக் கொண்டே வருவார்கள் என்று ஒரு சாரார் அபிப்பிராயப் பட்டனர். அதிதீவிர வாதிக ளான வேறு சிலர், 'காங்கிரஸ் காரர்கள் மந்திரி பதவி யேற்றால் சர்க் காரோடு ஒத்துழைத்த மாதிரியாகவே ஆய்விடும்; சட்டசபைகளில் தீர்மானங்களைக் கொண்டு வந்து நிறைவேற்றிச் சர்க்காரை ஸ்தம்பிக் கச் செய்வது தான் நல்லது' என்று கூறினர். பதவி யேற்புக்கு நாடெங்கும் பலத்த ஆதரவிருந்தது.

ஆகவே, தேர்தலுக்குப் பின் மார்ச்சு மாதத்தில் நடந்த காங்கி ரஸ் காரியக் கமிட்டி, அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டங்க ளில் இப் பதவிப் பிரச்சினை பலமாக விவாதிக்கப் பட்டது. முடிவில் மகாத்மா காந்தி யோசனைப்படி, கவர்னர்களிடம் காங்கிரஸ் கட்சித் தலைவர்கள் விசேஷாதிகாரங்களை உபயோகிப்பதில்லை என்ற உறுதி மொழியை வாங்கிக் கொண்டு, மந்திரி பதவியேற்கலாம் என்று தீர்மா னிக்கப்பட்டது. ஆனால், கவர்னர்கள் காங்கிரஸ் கேட்ட வாக்குறுதி யைக் கொடுக்க மறுத்து விட்டனர். இதனால் அரசியலில் ஒரு பெரிய நெருக்கடி யேற்பட்டு விட்டது. காங்கிரஸ்காரர்கள் பெரும்பான்மை யாக வந்துள்ள ஆறு மாகாணங்களில் கவர்னர்கள் சில பேர்வழிகளைப் பொறுக்கி யெடுத்து 'பினாமி' மந்திரி சபைகளை யேற்படுத்தினார்கள்.

இப் பினும் மந்திரிகளுக்கு உயிர் பிச்சை யளிக்கவேண்டி சட்டசபை களையும் கூட்டாது காலந் தள்ளி வந்தனர்.

இதனிடையே, இந்தியாவில் ஏற்பட்டிருக்கும் இவ்வரசியல் நெருக்கடியைப் பற்றி காமன்ஸ் சபையிலும், லார்டு சபையிலும் கேள்விகள் கிளம்பின. இந்தியா உதவி மந்திரி பட்லரும், இந்தியா மந்திரி லார்டு ஸெட்லண்டும் அவ்வப்போது அறிக்கை வெளியிட்டு நிலைமையை விளக்கி வந்தனர். இந்தியா மந்திரி முதலில் முடுக்காக இருந்தாலும், பிறகு இறங்கி வந்து விட்டார். இதை யொட்டி மகாத்மா காந்தி அறிக்கை வெளியிட்டார். கடைசியாக, வைஸ்ராய் லார்டு லின்லிதோ, புதிய சட்டத்தில் கவர்னர்களுக்கும், மந்திரிகளுக்கும் இடையே யுள்ள சம்பந்தத்தையும், அதிகாரத்தையும் தெளிவு படுத்தி அறிக்கை வெளி யிட்டார். இவ் வறிக்கையே, இம் மூன்று மாத காலமாக நீடித்துவந்த அரசியல் நெருக்கடி ஒருவாறு தீர்வதற்கு உதவியாக இருந்தது.

இம்மாத மத்தியில் வார்தாவில் கூடிய காங்கிரஸ் கார்யக் கமிட்டியார் மேற்குறித்த அறிக்கைகளை அநுசரித்து பதவிப் பிரச்சினை பற்றி ஆலோசித்தனர். கடைசியாக, 'வைஸ்ராய் நிலைமையை ஒருவாறு தெளிவுபடுத்தி யிருப்பதால், அதை யாதாரமாகக் கொண்டு, காங்கிரஸ்காரர்கள் மந்திரி பதவி யேற்கலாம்' என்று தீர்மானிக்கப் பட்டது. அதன்படி, ஆறு மாகாணங்களிலும், முறையே காங்கிரஸ் மந்திரி சபைகள் அமைக்கப்பட்டு வருகின்றன. நம் சென்னை மாகாணத்தில் மேல் சபை, கீழ் சபை ஆகிய இரு சபைகளுங் கூட்டப் பட்டு, தலைவர்கள், உப தலைவர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டாயிற்று. காங்கிரஸ் கட்சித்தலைவர் திரு. இராஜகோபாலாசாரியார் மந்திரி சபையையும் அமைத்து விட்டார். இனித் தான், புதிய சட்டத்தின் யோக்யதை வெளியாகப் போகிறது. பொறுத்திருந்து பார்ப்போம்.



## புது வருட வாழ்த்து "ராஜாராம்."

ஆனந்த போதினிமெய் யானந்த மாஞ்சச்சித்
தானந்தப் பேரொளியைப் பேசுதலா—லானந்த
மல்லாத மாலை யகற்றுதற்கு வேறுண்டோ
நல்லா யுணர்ந்து நவில். (1)
நவில்கின்ற நாவலர்க்கு நற்றுணையாய் நாளும்
புவிநின்று வோங்குபுகழ் பொங்கும்—அவியென்று
நல்லோர் மதிதோறும் நாடும்நம் ஆனந்தன்
வல்லாய் வளர்ந்திடவே வாழ்த்து. (2)
வாழ்வேது தாழ்வேது வத்துவொன்றே யென்றிடுமெய்
யாழ்வார்க் கிதஞ்செய்யு மானந்தன்—வாழ்வதுவே
வாழ்வாகு மற்றை வளர்ச்சியெலா மாமாயைத்
தாழ்வாகு மென்றுணர்ந்து தள். (3)
தள்ளிப் பிறநெறிக டான்பூணாத் தன்மையரா
லள்ளிச் சொரியுமற மம்புவியிற்—றெள்ளுதமிழ்
காக்கும் கருத்தாரு மானந்தன் நீடூழி
யாக்கும் புதுவருட மாம். (4)
ஆம்வருக! வென்பார்க் களிக்கு மறம்பலவாம்
நாமந்தா னானந்த போதினியால்—நாமென்றுங்
கோருவது வேறுண்டோ! கூறிடுவீ ரின்றேமெய்ப்
பேறுபெற வானந்தன் பேர். (5)
பேரும் பெருநிதியும் பேசுபுவி வாழ்வும்
யாரும் பெறுதற் ககமகிழ்வர்—தேருங்கா
லானந்த னைச்சார்ந்தோ ரஞ்ஞான மாமிவையால்
ஞானந்தா னேயடைவர் நாடு. (6)
நாடு முலகியலும் நற்றவத்துப் பேரியலும்
கூடுபுக ழானந்த போதினியே—நீடுபுகழ்
கொள்ள விழையுள்ளங் கூறிடுமே யானந்த
வள்ளலென வெப்போழ்தும் வாழ்த்து. (7)
வாழ்வென்பர் கற்பகக்கா வாசத்தை யானந்தன்
வாழ்கின்ற வாசகர்கள் வாக்கெனிலோ—ஆழ்ந்துணர்ந்து
விண்ணோர் சுகமும் விரும்புவரோ! என்பதனால்
மண்ணுளதன் மாண்பு மதி. (8)
மதியார்க்குந் தன்னை மதிப்பவர்க்கும் நல்ல
மதிதருகும் மார்க்கத்தால் மாண்பாம்—சிதியுதவல்
ஆனந்த போதினியின் அன்பர்க் குளபுகழால்
நானிந்த வாழ்த்துதவல் நாள். (9)
நாளெல்லா நன்நாளா நாடுமொரு மார்க்கத்தை
ஆளல்லா மென்பதுவே யானந்தன்—தாளெல்லாம்
பற்றிப் படித்தறிந்தோர் பான்மையால் வாழியென
வெற்றிப் படிக்குமென்ற நா. (10)

# பொருள் நூல்

ஸ்ரீகண்ட் இராமன், எம். ஏ., எல். டி.,



(தொகுதி-22. பகுதி-12. 893-ம் பக்கத் தொடர்ச்சி.)

கேட்புச் சட்டத்திலிருந்து நாம் குறைந்து கேட்கப்படும் சட்டத்தை (The law of diminishing demand)ப் பற்றிக் கொஞ்சம் தெரிந்து கொள்ளுவது நலம். நாம் விலை கொடுத்து வாங்கப் பிரியப்படும் ஒரு சாமான் அதிகமாக இருந்தால் அந்த அமோகமாக இருக்கும் தன்மை விலையைக் குறைத்து விடும். (An increased quantity of supply reduces the price we are willing to pay) காரணம் என்ன? "மார்ஜினல்" உபயோகம் விலையால் அளக்கப்படுகிறது. "சப்ளை" அதிகமானால் "மார்ஜினல்" உபயோகம் குறைந்து விடுகிறது. இதை மற்றொரு விதமாகவும் சொல்லலாம். எந்த சாமானுடைய கிராக்கியும் "சப்ளை" அதிகப்பட்டால் குறைந்து விடும். (The demand for anything decreases with an increase of supply.) அதே மாதிரி சாமானின் விலை அதிகமானால் வாங்குபவனுடைய கேட்கும் தன்மையும் குறைந்து விடுகிறது. முன்பு நாம் சொன்ன "சில காரணங்கள் சரியாக இருந்தால்" என்பதை வைத்துக் கொண்டே மேற் கூறிய பொருளாதார விதிகளை கவனிக்க வேண்டும். உதாரணமாக முக்கியமாக உட்கொள்ளும் உணவு பதார்த்தங்களின் விலைகள் ஏறினாலும் அவற்றை வாங்குபவர்கள் வாங்காமல் போவதில்லை. அவை இல்லாமல் எப்படி உஜ்ஜீவிக்க முடியும்? ஹார்மோனியங்கள் விலை ஏறினால் அல்லது குறைந்தால் அவற்றைப் பற்றி எழும் கேட்பது (Demand) ஒரே மாதிரியாக இராது. ஜனங்களுடைய விருப்பமும் தேவையும் மாறும். விலை அதிகமானால் ஹார்மோனியங்கள் வாங்குபவர்கள் கம்மியாகும். விலையைப் பொறுத்து வாங்குதலில் அதிக மாறுபாடுகள் ஏற்பட்டால் கேட்பது வளையுந் தன்மையைக் கொண்டிருப்பதாகச் சொல்லலாம். மாறுதல்கள் அதிகமாக ஏற்படாதிருந்தால் அத்தகைய கேட்பது (Demand) விலைகள் மாறுதல்களுக்கு காது கொடுக்க வில்லை. விறைப்பாக இருப்பதாக எடுத்துக் கொள்ள வேண்டும். விலை அதிகமானாலும் குறைந்தாலும் வாங்குபவர்கள் குறைய மாட்டார்கள். பின் வரும் படங்கள் விஷயத்தை விளக்கும்:—

ஹார்மோனியங்கள்—Elastic demand

| விலை ரூபாய் | கேட்கப்படும் எண்ணிக்கை | மொத்த விலை ரூபாய் |
|---|---|---|
| 60 | 500 | 30,000 |
| 50 | 700 | 35,000 |
| 40 | 900 | 36,000 |
| 30 | 1200 | 36,000 |
| 25 | 1500 | 37,500 |

## ஹார்மோனிங்கள்—"டிமாண்டு"வளைவு.

### முதல் படம்




O Y என்பதில் ஹார்மோனியங்களின் விலைகள் குறிக்கப்பட்டிருக்கின்றன. O X என்னும் கோட்டில் தேவையான ஹார்மோனியங்களின் எண்ணிக்கை கொடுக்கப்பட்டிருக்கிறது. மேற் கூறிய படத்தில் ஹார்மோனியங்களின் விலைகள் குறைந்தால் அதை வாங்குபவர்களுடைய தேவை அல்லது கேட்பது (Demand) அதிகமாகிறது என்பதை அறிந்து கொள்ளலாம். இதனால் இங்கு விலையைப் பொறுத்துக் கேட்பது வளையும் தன்மையைக் கொண்டிருக்கிறது என்பது தெரிய வருகிறது. இது ஆங்கிலத்தில் "Elastic Demand" என்பதைப் பற்றி விளக்குகிறது. (தொடரும்)

## புதிய ஜீவிய சந்தாதார்.

இவ்வருஷம் நமது "ஆனந்த"னுக்கு சேலம் ஜில்லா தருமபுரி மகுதி தெருவில் வாழும் ஸ்ரீ டி. ராஜப்ப செட்டியார் ஜீவிய சந்தாதாரராகச் சேர்ந்துள்ள நற்செய்தியைப் பெரு மகிழ்ச்சியோடு தெரிவித்துக்கொள்ளுகிறோம். நம் "ஆனந்தனை" ஆதரவு செய்யும் நோக்கத்துடன் ஆயுட் சந்தாதாரராக முன்வந்த ஸ்ரீ. டி. ராஜப்ப செட்டியாருக்கு நமது மனப்பூர்ணமான நன்றியறிதலைச் செலுத்துவதோடு, அவர் எல்லா நலன்களும் பெற்று இனிது வாழ அருள்புரிய வேண்டுமென்று இறைவனை இறைஞ்சுகிறோம்.

பத்திராதிபர்.

# இந்தியர் தொழு முறைகள்

(தே. வி. ராமமூர்த்தி.)

புண்ணிய பூமியாம் நம் பாரததேசம் இப் பரந்த உலகில் தன்னையும் ஒரு உருவாக ஐக்கியப்படுத்திக்கொண்ட காலம் முதற்கொண்டு இன்று வரை தமிழ்நாட்டில் மக்கள் குடிகொண்டு இருந்திருக்கின்றனர் என்பதில் ஐயமில்லை. முதன் முதலாக கற்கருவிகள் வழக்கத்தில் இருந்த பல்லாயிரம் ஆண்டுகளிலும் (Stone-age), அதற்குப் பின் இரும்பினாலான கருவிகள் வழங்கிவந்த பலநூறு ஆண்டுகளிலும் (machine age), பிறகு தற்கால விஞ்ஞான ஆராய்ச்சிகள் உலகில் நிலைபெற்ற சமீபகாலத்திலும் (scientific age) தமிழகத்தில் மக்கள் நிரம்பாத காலமில்லை. எனவே பொதுவாக இந்தியரின் தொழு முறைகளைப்பற்றி ஆராயும் காலத்திலும் சிறப்பாக தமிழரின் தெய்வ வழிபாட்டைக் குறித்துப் பேசும் காலத்திலும் தமிழகத்தின் வரலாறு உலகில் மக்கள் வாழ்ந்த காலம் முழுவதையும் தழுவிச் செல்லும் என்பதை முக்கியமாய் கவனிக்கவேண்டும்.

இந்தியரின் தெய்வ வழிபாடு என்னும் பொழுதே விக்கிரக ஆராதனை தான் அதன் அடிப்படையான தத்துவம் என்பது நாம் சொல்லாமலே விளங்கும். இந்தியாவில் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டிற்கு முன்னால் உண்டான தமிழ்நூல்களைப்பற்றி ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிடும்பொழுது அதுவரை கோயில்களாவது அன்றி விக்கிரக ஆராதனையைக் குறிப்பிடும் வெளிச்சின்னங்கள் ஏதாவது இருந்ததாக தெரியவில்லை என்று முடிவு கட்டுகின்றனர். ஆனால் வடமொழியில் இருந்த இலக்கணத்தை தமிழ்மொழியில் மொழிபெயர்த்து வெளியிட்டதனால் பேரும் புகழும் பெற்ற பாணினி சிறு விக்கிரகங்களை வீடுகளில் மக்கள் பூஜைக்கு வைத்திருந்ததாக பொருள் தருமாறு 'சிவக' என்று குறிப்பிட்டிருக்கின்றார். 'சிவக' என்றால் சிவபெருமானுடைய விக்கிரகம் என்று விளக்கப்பட்டிருக்கின்றது. மௌரிய அரசர்கள் ஆட்சி செய்த காலத்தில் புதிய விக்கிரகங்களை செய்து புதிய பூஜை முறைகளை கையாண்டனர் என்பது சாணக்கியன் எழுதிய அர்த்த சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

பல்லவ அரசர்களில் மிகக் கியாதி வாய்ந்த மகேந்திரன் காலத்தில் அவன் முதன் முதலாக குடைந்தெடுத்ததாக கூறப்படும் குகைக் கோயில்களை 'தேவலோகம்' 'தேவகுலம்' என்ற பெயர்களால் விளம்பரப்படுத்துகின்றான்.

ஆனால் கி. பி. 200 முதற்கொண்டு நம் தமிழ்நாட்டில் பல கோயில்கள் சமைக்க துவக்கியதிற்கு அநேக சான்றுகள் உள்ளன. ஆகையினால் மகேந்திரன் காலத்திற்கு முந்திய கோயில்கள் மரம், மண், செங்கல் இவைகளைக் கொண்டுதான் கட்டபட்டவையாயிருத்தல்வேண்டும். அவை உருவில் மிக சிறியவையாயிருந்தன என்பதோடு விக்கிரகத்தை நிர்மாணம் செய்ய மரத்தையாவது, செங்கல் சுண்ணாம்பையாவது உபயோகித்தார்கள் என்பதும் தெரியக் கிடக்கின்றது. மிகப் பழமையானவை என்று புகழ்ந்து கூறப்படும் ஜகந்நாதம், திருவனந்தபுரம் முதலிய கோயில்களில் உள்ள விக்கிரகங்கள்

மரத்தினால் ஆனவை. ஸ்ரீரங்கத்தில் உள்ள மூலவர் சாந்தாகாரம்; செங்கல் சுண்ணாம்பு சாந்துடன் செய்த விக்கிரஹம். கி. பி. 600-ம் ஆண்டிற்கு முன்னரே இப்பொழுது நாம் கொண்டாடும் வைஷ்ணவ சைவ திருப்பதிகளெல்லாம் நிர்மாணம் செய்யப்பட்டு மிகவும் பிரபலமாக விளங்கின. ஆழ்வார்கள் பாடின ஆலயங்களும் அப்பர் சுந்தரர் சம்பந்தருடைய தேவாரம்பெற்ற திருப்பதிகளும் இவ்வாறு 6-ம் நூற்றாண்டிற்கு முன்னரே ஏற்பட்டவை. ஆனாலும் அப்போதைய கோயில்கள் எல்லாம் இப்பொழுது நாம் எவற்றை கர்ப்பக்கிரகம் என்ற பெயரால் குறிப்பிடுகின்றோமோ அவைகளையே குறிக்கின்றன. ஆனாலும் அவைகள் கூட மரத்தினால்தான் நிர்மாணிக்கப்பட்டவை. பிற்காலத்தில் அவ்வப்போது மதப்பிரசாரகர்கள் தோன்றி அவதரித்த காலத்தில் அவர்களுடைய அனுக்கிரக விசேஷ மகிமையினால் மதில்கள், கோபுரங்கள், மண்டபங்கள் கட்டத் தொடங்கவே இப்பொழுது கோயில்கள் பிரம்மாண்டமாய் பார்ப்பவர் மனதையும் கண்ணையும் ஒருங்கே கவரும் வண்ணம் தோற்ற மளிக்கின்றன.

கி. பி. ஐந்தாம் நூற்றாண்டின் இறுதியில் சுற்றுள்ள நாடுகளை தன் ஆட்சியின் கீழ்க்கொண்டு வருவதிலும் புது புது கோயில்களை நிர்மாணம் செய்வதிலும் ஏனைய பல்லவ அரசர்களைவிட உயர்நிலைமை எய்திய மகேந்திர பூபதியின் காலத்தில்தான் முதன் முதல் கற்கோயில்கள் சமைக்கப்பட்டன என்று முன்னரே குறிப்பிட்டோம். மரத்தினாலும் செங்கல் சுண்ணாம்பினாலும் அமைக்கப்படும் கோயில்கள் வெகு சீக்கிரம் இருந்த சுவடற்று போய்விட ஆரம்பிக்கவே கற் கோயில்களை நிர்மாணிக்க மகேந்திரன் இச்சை கொண்டான். ஆனால் பாறைமேல் பாறைவைத்து கோயில்களை சமைக்க அவன் முயற்சி எடுத்துக் கொள்ளவில்லை. சிறு குன்றுகளை நடுவில் குடைந்தெடுத்து குகைக்கோயில்களாகச் செய்தான். இதுமாதிரி முதன் முதலாக தென்னாட்டில் செய்தது பெஜவாடாவுக்கு அருகில் கிருஷ்ணாவுக்கு தென்புறம் உள்ள உண்டவல்லி கிராமத்திலிருக்கும் சேஷசாயி கோயில். இந்த கோயில் வேலை பூராவும் நடைபெறாமல் நடுவில் நிறுத்தப்பட்டதற்கு காரணம் மகேந்திரன் இந்த கோயில் திருப்பணியில் ஈடுபட்டிருக்கும் சமயத்தில் புலகேசி இவன்மேல் படை எடுத்து வந்தபடியால் வேலையை பாதியில் நிறுத்தியிட்டு காஞ்சிபுரம் ஓடிவந்து விட்டதாகத் தெரிகின்றது.

மலையைக் குடைந்தெடுக்காமல் கற்பாறைகளை ஒன்றின்மேல் ஒன்றாய் வைத்து கட்டப்பட்ட முதற்கோயில் கூரம் என்னும் நாட்டில் உள்ளது. இதை பரமேசுவரன் என்னும் மன்னவன் நிர்மாணித்தான். இதற்கு 'வித்தியா வினீத பல்லவ பரமேசுவர விக்கிரஹம்' என்று பெயர். இப்பொழுது இந்த கோயில் இடிந்து விழுந்துவிட்டது. இடிந்து விழுந்த கற்பாறைகளைக் கொண்டு ஒரு மண்டபம் அமைத்திருக்கிறார்கள். இந்த மண்டபம் கல்லால் மூடப் படவில்லை. சுட்ட ஓட்டால் மூடினான் என்று தெரிகின்றது. எனவே முழுவதும் கற்களைக்கொண்டு வேலைசெய்ய அவர்கள் இன்னும் தெரிந்து கொள்ளவில்லை.

இதைத் தவிர மற்றும் பல ஊர்களிலும் மகேந்திரன் கற்கோயில்களை செதுக்கி வைத்தான் என அறிகிறோம். அவற்றுள் பல்லாவரம், திருக்கழுக்குன்றம், திருச்சினாப்பள்ளி, புதுக்கோட்டை, சிற்றன்னவாயில் முதலியன முக்கியமானவை. அப்போதைய சிவன் கோயில்களில் விஷ்ணு விக்கிரகங்

களும் விஷ்ணு ஆலயங்களில் சிவலிங்கங்களும் பிரதிஷ்டை செய்யப்பட்டருக்கிறபடியால் அக் காலத்தில் சைவரும் வைஷ்ணவரும் சண்டை சச்சரவில்லாமல் சமாதானமாகவே வாழ்ந்துவந்தனர் என்பதை ஊகித்துணரலாம்.

இப்பொழுது சைவமும் வைஷ்ணவமும் தமிழகத்தில் பரவி தழைத்ததைப்பற்றி சிறிது ஆராய்வோம்.

அறுபத்திமூவர் சிவனடியாருடைய பக்தி பெருமையாலும் அவரில் சிலரை ஆதரித்த சில அரசருடைய முயற்சியாலும் சைவம் தமிழகத்தில் பரவியது. சுமார் ஓராயிரம் ஆண்டுகளாகவே அது தென்னிந்தியாவில் ஒரு முக்கிய சமூகமாக விருக்கின்றது. இவர்கள் கொள்கைக்கு மேற்கோளாக வடமொழியிலிருக்கும் 28 சைவாகமங்களையே இவர்கள் எடுத்துக் கூறுவார்கள். ஒவ்வொரு ஆகமமும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு பாதங்களாக பிரிந்துள்ளது. சரியை என்றால் கோயில் கட்ட அஸ்திவாரம் போட நிலத்தை பயன்படுத்துதல் முதலாக கட்டி முடிக்கும் வரை செய்ய வேண்டியவைகளை குறிக்கும். கிரியையானது கோயில்கட்டி முடிந்த உடன் அதற்கு செய்யவேண்டிய நித்திய நைமித்திய பூஜைகளை விவரமாகச் சொல்லும். யோகத்தில் தியானம் செய்வதற்கு சாதகமான விஷயங்களும் அதனால் விளையும் நன்மைகளும் விவரிக்கப்படும். ஞானமானது சைவசமயத்தின் கோட்பாடுகள் என்னென்ன அவை எத்தகையவை என்று விவரித்திருக்கும். முதலிரண்டு வழிகளும் பாமரமக்களும் அனுஷ்டிக்க எளிதாய் அமைந்திருந்ததால் அவையே பக்தி என்னும் குறிப்பால் நாட்டில் பரவத் தொடங்கியது. பன்னிரண்டு வழிகளும் அவ்வளவு எளிதல்ல. ஆனால் சிவனடியார்கள் அவைகளை அனுஷ்டிக்க தலைப்பட்டது யோகிகள் என்று வேஷம் தரிக்கும் போலி யோகிகளும் மலிய ஒரு வழியை உண்டு பண்ணியது.

உலக தத்துவங்களைப்பற்றி பேசும்பொழுது அவை பதி, பசு, பாசம் என மூவகைப் பெயரால் குறிக்கப்படுவதை ஈண்டு எடுத்துக் காட்டுவோம். பதி என்றால் அது சிவனைக் குறிக்கும்; பசு என்பது மோக்ஷ வீட்டை அடைவதற்கு ஈஸ்வரனுடைய அருளைக் கோரி நிற்கும் மக்களைக் குறிப்பிடும். பாசம் என்பது உலகத்தில் உழல்கின்ற பயனற்ற சட வஸ்துக்களின்மேல் அந்த மக்கள் கொண்டுள்ள மோகத்தைக் குறிக்கும். இந்த பந்தத்தி னின்றும் தப்பி சிவனுடைய அருளைப்பெற்று பேரின்ப வீட்டை அடைவதே பெரும்பேறு; அதுவே மோக்ஷநிலை. கடவுள் அருள் இருந்தால் மட்டுமே நாம் அந்த பேரின்ப வீட்டை அடைய சாத்தியமா யிருக்கும் என்பதில் சைவத்திற்கும் வைஷ்ணவத்திற்கும் அபிப்பிராய பேதமில்லை. ஆனால் சைவர் பதி, பசு, பாசம் என்பதையே வைஷ்ணவர் ஈசுவரன், சித்து, அசத்து என்பர். எனினும் சைவர் சிவனே ஈஸ்வரன் என்றும் வைஷ்ணவர் விஷ்ணுவே ஈஸ்வரன் என்றும் வாதாடுவர். எனவே மூடபக்தி அதிகரிக்க அதிகரிக்க தத்தம் தெய்வமே உயர்ந்தது என்று இருதாத்தாரும் கூறத் தொடங்கவே இவ்விரு சமயங்களும் இப்படி ஒன்றுயிருந்தது அப்போதைக் கப்பொழுது எதிர்த்து வர நேர்ந்தது. எனவே பிற்காலத்தில் கி. பி. 900-க்கு பின் சமைக்கப்பட்ட சிவன் கோயிலில் விஷ்ணு விக்கிரகங்க ளில்லாமலும் விஷ்ணு ஆலயங்களில் சிவலிங்கங்க ளில்லாமலும் கட்டத் தொடங்கினார்கள். கி. பி ஆறும் நூற்றாண்டின் முதற்பகுதியில் முக்கண்ணனையும் செந்தாமரைக் கண்ணனையும் ஒரே மாதிரி பிணைத்துக் கூறி

வணங்கியிருப்பதால் அந்த காலத்தில் வைஷ்ணவர் சிவனை தாழ்த்திக் கூறுவதும் விஷ்ணுவை உயர்த்தி புகழாமலும் இருந்தனர் என்பது புலனாகின்றது. எனவே அதற்கு பின்னர்தான் இரு திறத்தார்க்கும் துவேஷம் வெளிப்படையாக மூண்டு எழுந்தது என நாம் உணரலாம்.

கி. பி 750-ம் ஆண்டுவரை தழைத்தோங்கிய பௌத்தமும் சமணமும் தெய்வப்பற்று மிகுந்த ஹிந்து அரசர்களால் ஒடுக்கப்பட்டது. சைவமும் வைஷ்ணவமும் மற்ற தொழு முறைகளை மழுங்கச் செய்தன. அன்றியும் "உலகில் எல்லாம் 'பிரமம்' என்ற ஒரு பொருளே உள்ளது. அதுவே மெய்ப்பொருள். மற்றவை பொய்ப் பொருள்" என்னும் வேதாந்தமும் கல்வி மிகுந்தவர் உள்ளத்தில் வளரத் தொடங்கியது. பக்தி நெறியான வேதாந்த யோக வழிகள் வட நாட்டின ரிடையே பரவலாயின. நாட்டிலும் மெதுவாக அது தலை காட்டத் தொடங்கியது. "மூவுலகுக்கும் சிருஷ்டி ஸ்திதி சம்ஹார காரணமான பரப் பிரம்மம்" என்று நந்திவர்ம மகாராஜனின் சாஸனத்தில் காணப்படுகின்றது. அந்த சமயத்தில் தான் திருமங்கையாழ்வார் ஊரூராய் திரிந்து சென்று பாசுரங்கள் பாடி வைஷ்ணவம் தழைத்தோங்க பெரும் பாடுபட்டார்.

"பெயயோர்கள் பக்தி பண்ணியதற்கு மனம் தான் தூண்டுகோல் என்பர். மனம் தன் வழி நின்றால் செயற்கரியன எல்லாம் செய்து முடிக்கலாம் என்று வற்புறுத்துவார். பக்திமான்களுக்கு அவர்கள் கண்களுக்கும் புலப்படும் உயர்ந்த பொருள்கள். எல்லாம் கடவுளின் ஸ்வரூபமாகவே தோன்றும் பக்தி பெருகில் ஞானமும் கூடவே வளர்வதில் என்ன ஆக்ஷேபனை! உண்மை ஞானம் வந்து விடில் உடலபிமானம் பொருளபிமானம் முதலியவை அற்றுப் போய் விடுவதில் தான் என்ன சந்தேகம்! ஞானிகள் எக் குலத்தவராயினும் அக் குலத்தை கருதாது பொதுநலத்தையே கவனிப்பர் என்று இவ்வாறு அழகு மிகுந்த வர்ணனைகளால் பொது மக்களால் உள்ளத்தை கவர்ச்சி செய்த நம்மாழ்வார் இறைவனது உருவத் திருமேனியைப் பற்றி பல இடங்களில் தன்னையும் மீறிய உணர்ச்சி மேலீட்டால் புகழ்ந்து பாடியிருப்பினும் உருவம் அருவம் இல்லாத அவனுடைய அருள் திருமேனியையே முக்கியமாய் வற்புறுத்தியிருப்பது இங்கு குறிப்பிடத் தக்கது.

இப் பொழுது ஆரம்பகாலம் முதற் கொண்டு இறைவனை வழிபடும் முறைகளைப் பற்றி சிறிது ஆராய்ந்தோம். இப்பொழுது அவனை தோத்தரிக்க விதத்தை ஓரிரண்டு உதாரணங்களால் விளக்குவோம். கட்டுரையும் நீண்டு விட்டபடியால் ஆசிரியரின் கோபத்திற் குள்ளாகாமல் மேல் வாரியாகவே கூறி இச் சிறு கட்டுரையை ஒருவாறு முடித்து விடுவோம்.

கி. பி. நாலாம் நூற்றாண்டிற்கு முன்னால் ஆழ்வார்களும் சைவசமயாசாரியர்களும் இறைவனை வழிபட்டதற்கும், அதற்குப் பின் வந்தவர்கள் அந்த முறையை அனுஷ்டியாமல் வேறு விதமாக ஆராதித்ததற்கும் உள்ள வேற்றுமை கவனிக்கற்பாலது.

முருகப் பெருமானை நக்கீரர் புகழ்ந்து பாடுவதை எடுத்துச் சொல்வோம்.

"அறுவா பயந்த ஆறமர் செல்வ,
வால்கெழு கடவுள் புதல்வ மால்வரை
மலைமகண மகனே, மாற்றோர் கூற்றே,

வெற்றி வேல்போர் கொற்றவை சிறுவ !
இழைபணி சிறப்பில் மழையோள் குழவி,
வானோர் வணங்கு விற்றானைத் தலைவ,
மாலை மார்ப, நூலறி புலவ,
செருவி லொருவ, பொருவிறன் மள்ள,
வந்தணர் வெறுக்கை யறிந்தோர் சொன்மலை
மங்கையர் கணவ, மைந்த ரேறே.”

இந்த செய்யுளில் நக்கீரர் எவ்வளவு அழகாக முருகன் பெருமைகளையும் வாழ்க்கை வரலாறுகளையும் ஒன்றாய் பிணைத்துக் கூறுகின்றார். ஆனால் ஒரு இடத்திலும் தன்னைப்பற்றி குறிப்பிடுகின்றார் இல்லை. அவனுடைய பெருமைகளைப் பற்றி கூறுவதாலேயே தன்னுடைய தீவினை அகலும் என்ற கருத்தாயிருக்கலாம். அந்த காலத்தில் எல்லாம் மக்கள் அதிகமாய் வழிபடும் கடவுள் முருகக் கடவுளே !

கி. பி. ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கோயில்களில் பூஜைகள் தற்கால முறைகளை அனுசரித்தே நடந்து வர தலைப்பட்டன. தூபதீப நைவேத்திம் நித்திய நைமித்தியாதி கிரியைகள் எல்லாம் சரியாக நடந்தேறும் பொருட்டு ஒரு பூரா கிராமத்தை கூரம் கோவிலுக்கு சாசனம் எழுதி வைத்ததாக கூரம் ஸாசனத்தில் காணப்படுகின்றது. இதனின்றும் அப்பொழுதைய தொழு முறையை நாம் அறியலாம்.

பொய்கை ஆழ்வார் காலத்தில் அவர் விஷ்ணுவைப் பூஜை செய்வதும் புகழ்வதுமே முக்தி அடைவதற்கு சிறந்த சாதனம் என பறைசாற்றினர்.

“வையம் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காக—செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொல்மாலை
இடராழி நீங்குகவே என்று.”

பேயாழ்வார் ஹிருதயத்தில் பக்தி நிரம்பி செய்யுள்கள் தானே கிளம்பியதால் எளியவையாயும் மனதை உருக்கும் படியும் அமைந்தன.

“வரைசந்தன குழம்பும் வான்கலனும் பட்டும்
வரைப்பொலிந்த வெண் மல்லிகையும் நிறைத்துக்கொண்டு
ஆதிக்கண் நிறைந்த அறிவனடி யிணையே.”

ஓதிப் பணிந்தது நாடெல்லாம் நிறைந்தது எனில் நாம் அவருடைய பெருமையை விளக்க வேறு என்ன கூறுவோம் !

அதற்குப் பின் பக்தியை விட அன்பே கடவுளை அதிகம் பிணைக்கும் என்பது உண்மை பொருளாய் திகழ்ந்தது !

“புன்புலவழி அடைத்து அரக்கிலச்சினைசெய்து
நன்புலவழி திறந்து ஞான நற்சுடர் கொளீஇ
என்பிலெள்கி நெஞ்சுருகி உள்கனிந்து எழுந்ததோர்
அன்பிலன்றி யாழியானை யாவர் காணவல்லரே.”

இவ்வாறு அன்பினால் அல்லது இறைவனை அடிமைப் படுத்துவதற்கு வேறு வழியில்லை என்பதும் சகாதேவன் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் உள்ளத்தையும் உருவத்தையும் ஒருங்கே சங்கிலி போட்டு பிணைத்ததை யாவர் அறியமாட்டார் ! ஆனால் ஆலயத்தில் சென்று இறைவனை துதிக்க வேண்டும் என்ற

உணர்ச்சி பாமரர் உள்ளங்களில் வளர்ச்சியுற்ற பொழுது உடல் நிலையாமையை வற்புறுத்திய அடிகளை கவனிப்பதும் அவசியம்.

"தோற்றமுண்டேல் மரணமுண்டு துயர மனைவாழ்க்கை
மாற்றமுண்டேல் வஞ்சமுண்டு நெஞ்ச மனத்தீரே
நீற்றரேற்றர் நீலகண்டர் நிறை புன னீள்சடைமே
லேற்றர்கோயில் எதிர்கொள்பாடி யென்ப தடைவோமே."

இந்த காலத்தில் விக்கிரக ஆராதனையில் ஆலயங்களில் சென்று அருச்சனை செய்து அன்புடன் சேவித்து இறைவன் திருவருளை நாடுவதே அனுஷ்டானத்திலிருக்கின்றது. விக்கிரக ஆராதனை சரியா, தவறு என்ற ஆராய்ச்சியில் நாம்! இங்கு இறங்க வில்லை. அதற்கு முயற்சியும் இங்கு செய்யப்பட வில்லை. ஆனால் அன்பினால் இறைவனை பிணித்தல் சாத்திய மாதலின் ஒவ்வொருவர் உள்ளத்திலும் ஒவ்வோர் ஆலயம் இருக்கின்றது என்ற தத்துவத்தை ஒப்புக் கொண்டால் அண்டத்தை வளைக்கும் ஆலயத்திற்கு அவசிய மேற்பட வில்லை. ஆனால் பாமரர் உய்வதற்கு ஆலயமும் அவசியமா யிருத்தல் கண்கூடு!

கி. பி. 6-ம் நூற்றாண்டில் அவதரித்த வைஷ்ணவ குல மணியான திருமங்கையாழ்வார் திருமாலைப் பற்றி பாடு மிடங்களில் எல்லாம் வேதாந்த மொழி கலப்பின்றி திருமாலை நாயகனாகவும் தன்னை நாயகியாகவும் பாவித்து பாடுவதில் பாரதியாரின் மனோபாவம் அதன் எதிரொலி என்று நாம் எண்ண இடந்தருகின்றது.

தர்மமும் மோக்ஷமும் எப்பொழுதும் இந்தியாவின் இருவகை லக்ஷியங்களாக இருந்திருக்கின்றன. முரளியினின்றும் மெல்ல வெளிப்படும் இன்னிசையின் வசீகர சக்தியால் கவர்ச்சி அடையப்பட்ட நாம் என்றும் அந்த கர்த்தாவை மறந்ததில்லை. நம்முடைய நாடு க்ஷீண திசைக்கு அடி கோலுவதற்கு முன்னிருந்து இன்று வரை இந்தியாவில் தோன்றி யிருக்கும் எண்ணற்ற மகான்களுக்கு தாய் நாடாக விளங்கும் நம் பாரத தேசம் இவ்வளவு சிறப்புடன் விளங்குவதற்கு என்ன காரணம் இருக்க முடியும்? கணக்கற்ற மகா சக்தி வாய்ந்த மகரிஷிகளின் சந்ததியில் தோன்றியவர்கள் அல்லவா நாம்! நம்முடைய தாமச குணங்களாலும் ஒற்றுமை குலைவினாலும் தான் நம் தேசிய வாழ்வு சீர்குலைந்ததே அன்றி இந்தியாவின் அந்தராத்மா ஒரு நாளும் அடிமை வாய்ப்பட்ட தில்லை! இனியும் அது அந்த விலங்குகளை தரிக்காது என்று மார் தட்டி கூறுவதில் நாம் சற்றும் தயக்கமடைய மாட்டோம்! கர்மத்தையும் தியானத்தையும் கூறிக் கொண்டே வரும் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா நிஷ்காம்ய கர்மத்தை வற்புறுத்தும் பொழுது அதை எவ்வளவு தெளிவுபடுத்தி காட்டி யிருக்கின்றார்? அஞ்ஞானம் என்னும் சிறையில் வாடி வதங்கி ஆத்ம விடுதலை அடைந்த ஒரு ஞான யோகி அந்த செந்தாமரைக் கண்ணனின் அழகிய பாத கமலங்களையே நாடித்திரிவதில் தன் கண்ணையும் கருத்தையும் செலுத்துவானே அன்றி அவனால் அனுக்கிரகிக்கப்படாத மோக்ஷ சாம்ராஜ்ய பதவியையும் ஏற்றுக் கொள்ள மறுத்து அதினின்றும் தன் மனத்தையும் கண்ணையும் திருப்பிக் கொள்வதில் என்ன ஆச்சர்யம்! அன்பினால் நம்மை பிணைத்துக் கொண்ட அந்த செந்தாமரைக் கண்ணன் நம்மை சூழ்ந்திருக்கும் 'அடிமை வாழ்வு' என்னும் சங்கிலியை அறுத்தெறிந்து 'சுயராஜ்ய வாழ்வு' என்னும் அவனுடைய மோக்ஷ சாம்ராஜ்யத்தில் தனி அரசு புரிய கிருபை பாலிப்பானாக!

# மாதர் உலகம்



## ஒளவையார்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

"வித்தை விரும்பு" என்னும் நீதியை ஓதி யருளிய நமது ஞானத்தாய் அதற்கடுத்ததாக 'வீடு பெற நில்' என்று பொருத்த முறப் புகன்றார். உண்மையுணர்வு அரும்பப் பெற்றார்க்கு வீடு பெறுவதைத் தவிர வேறு நோக்கம் எழுமோ? வீடு பெற நில் என்னும் நீதியின் குறிப்பைக்கொண்டே, அதற்குமுன் கூறிய வித்தை விரும்பு என்னும் நீதியில் உள்ள வித்தை என்பதற்கு மெய்ஞ்ஞானக்கல்வியே பொருளென்பது தெளியப்படுகின்றது. 'பற்றுக பற்றற்றான் பற்றினை' என்று பணித்தது எல்லாப் பந்தங்களும் விடுவதற்கே யாதலின் அத்தகைய விடுதலை பெற முயல்வதே கல்வியின் இறுதிப் பயனாகும். அதுவே வீடு என்றுரைக்கப் படுவதாம். அதனை விரும்பு என்றுரையாது நில் என்று கூறிய நுட்பம் சாலச் சிறப்புடைத்து. விருப்பம் கழன்ற நிலையே விடுதலை யாதலினால் ஈண்டு நில் என்று வைராக்கியத்தை மெல்ல உணர்த்துகின்றார். வள்ளுவரும் 'வேண்டுதல் வேண்டாமை யிலான்' என இறைவன் தகுதியைச் சுட்டுகின்றார். விருப்பு வெறுப்பற்ற இடத்தில் கால் கொள்வதன்றோ விடுதலை. அதனை எளிதில் எவரும் பெற முடியாது. கிடந்தும் இருந்தும் நடந்தும் அணுக முடியாது. அசையாத நிலையில் நின்றே சாதிக்க முடியும். அசையா நிலையென்பது இவ் வுடலைப் பற்றியதன்று; உளத்தைப் பற்றியதே யாகும். சாதாரணமாக ஒருவர் ஒரு காரியத்தில் ஊக்கம் செலுத்தி முயன்று வெற்றி பெற்றாலும் நின்ற நிலையில் விடாப்பிடியாய் உழைத்து வெற்றி பெற்றான் என்று கூறுவது உலக வழக்கு. ஆதலினால் மனதைச் சலனமற நிறுத்துவதற்கே நிற்பதென்று பெயர். உள்ளம் நின்றால் உடல்தானே நிற்கும். உடல் மட்டில் அசைவற நிற்பதால் உள்ளம் நில்லாது. இந்திரஜால வித்தையில் மனதைப்போல் ஏமாற்றும் திறம் எதற்குண்டு? இம்மனதை யடக்குவதன் அளப்பற்கரிய அருமையை தாயுமானவரைப்போல் திறந்து காட்டினார் எவர்? 'கந்துக மதக்கரியை வசமாய் நடத்தலாம்' என்ற பெரியார் வாக்கினை அறியார் தமிழகத்தில் இரார். அவர் எல்லாம் செயல் எளிது. 'சிந்தையை அடக்கியே சும்மா விருக்கின்ற திறம் அரி'தென் றருளி யிருப்பதொன்றே போதிய உதாரணம். மனதையடக்கி நிறுத்துதல் மிக மிக அரிதாகையால் அதனை யடக்குவதற்கே யோகம் என்னும் சுவாஸப்பயிற்சியும் அறிஞரால் காணப்பட்டது. சுவாஸம் தகைவதால் மனமும் தகையப் பெறுகிறது. சுவாஸம் வெளிவரின் மனமும் வெளிவரல் இயல்பு. கட்டாயத்

திஞல் கற்பைக் காக்கும்படி ஒரு மங்கையைக் காவல் புரிவதற்கே இது ஒப்பாகும். கற்பே அரண் அன்றிக் கண்டிப்பான காவல் அரண் ஆகாதென்பது உலகநடை யுணர்ந்தோரும் அறிந்ததே. யோகத்தில் சித்தி பெற்று உலகம் பிரமிக்கும் அரிய பெரிய செயல்களைச் செய்ய வல்லுனர் பலர். அவ்வித பேராற்றலே ஞானத்தையடைய இடையூருதல் ஆராய்ச்சியாளர்க்குப் புலனுகும். ஆதல் பற்றியே ஞானத்திற்குச் சாதனமாக யோகப்பயிற்சி வேண்டற்பாலதேயன்றி யோகத்தில் மட்டில் பயில்வது சிறப்புடையதன்றென்பது பெருமக்கள் துணிபு. யோகப்பயிற்சிக்கு நல்ல யௌவனபருவம் வேண்டும். அப் பருவத்தின் இயல்புக்கு மாருக உறுதியுள்ளமும் நல்லொழுக்கமும் கடைப்பிடித்தல் அவசியம். போகத்தை மறந்தவனே யோகத்திற் சிறந்தவனுதல் முடியும். இவ் வழியில் நின்று யோகங் கைகூடப் பெற்ருரும் பிற்காலத்தில் அந்நிலைமாறி இயற்கைக்கு இரையாகித் தடுமாறுவதும் உண்டு. இயற்கைக்கு இரையாகாமல் இருப்பவரிலும் வழி தவறிப் பெருங்கேடுகளுக்கு உள்ளாகி அலக்கண் உறுவோரும் பலர். இதை யுணர்ந்தே அடயோகத்திலும் இராஜயோகமே சிறந்ததென்று குறிக்கப்படுகிறது.

எந்த யோகமும் கதியை அடைவிக்காது; ஞானமே அதற்கு சாதனம் என்பதை தாயுமான சுவாமிகள்,

"பத்திநெறி நிலைநின்று நவகண்ட பூமிப்
பரப்பை வலமாக வந்தும்
பரவையிடை மூழ்கியு நதிகளிடை மூழ்கியும்
பசிதாக மின்றி யெழுகா
மத்தியிடை நின்றுமுதிர் சருகுபுனல் வாயுவினை
வன்பசி தனக்கடைத்து
மவுனத் திருந்துமுயர் மலைநுழை தனிற்புக்கு
மன்னுதச நாடி யூற்றும்
சுத்தி செய்தும் மூலபிராணனே டங்கியைச்
சோமவட்டத் தடைத்தும்
சொல்லரிய வமுதுண்டும் அற்பவுடல் கற்பங்க
டோறு நிலைநிற்க வீறு
சித்திசெய்தும் ஞானமலது கதிகூடுமோ?"

என்று அறைகூறி வினவும் செய்யுளினுல் ஞானம் தனிச்செல்வம் என்பதும், எவ்வித பக்தியாலோ யோகத்தாலோ மிகக் கடுமையான பிற உழைப்புகளாலோ அடையக் கூடியதன்றென்பதும் தெளிவாகின்றது. சங்கற்ப விகற்பங்கள், முற்றிய கவடுகளில் பழுப்புகள் காம்பற்று வீழ்தல்போல மனத்தினின்றும் பக்குவ முதிர்ச்சியாற் கழல்வதே உண்மை யுதாரணமாகக் கொள்ளலாம். மனம் அவாவறுத்து அமைதி பெறுவதே விடுதலை. அதைப் பெறுவதே மக்களின் இறுதி நோக்கமாம் என்பது அன்னையாரின் துணிவு.

ஆத்திச்சூடியாகிய இந் நீதி நூலைக் கூறவந்த அன்னையார், இளமையிற் கல் என்றருளியதும் ஓதுவ தொழியேல் என்று பணித்ததும் வித்தை விரும்பு என்று குறித்ததும் வீடுபெற நிற்க வேண்டியதற்கே என்

பத தொடர்ச்சியாக ஊன்றி நோக்குவார்க்குப் புலனாகும். மேலே கூறிய காரணங்களால் ஞானந் தவிரப் பிற சாதனங்கள் வேண்டுபவைகளல்ல வென்று கூறியதன்று. சாதனமின்றி யொன்றைச் சாதிப்பார் உலகில் இல்லை யென்றார் ஆன்றோர்; எனவே சாதனங்கள் வேண்டற்பாலனவே. இளமையிலேயே சாதனத்தின் முழுப்பயனை எவருமடைய முடியாது. 'பல்லூழிகாலம் பயின்றரனை யர்ச்சிக்கில் நல்லறிவு சற்றே நகும்' என்று பெருமாட்டியாரே பிறிதோரிடத்தில் சுட்டியுள்ளபடி எல்லாச் சாதனங்களும் (உலகை மயக்குதற்காகவன்றி) உண்மை நோக்கம் கொண்டதா யிருத்தல் வேண்டும். களங்கமற்ற கட்டற்ற பேரன்புடன் எல்லா வுயிர்களையும் நேசிக்கும் பெருநிலையே விடுதலையை அளிக்கும் சாதனம் என்றும் அத்தகைய ஜீவ காருண்ய வுணர்ச்சியின் மலர்ச்சியே முத்தி வீட்டின் திறவுகோலென்றும், அந்தப் பெரிய நிலையுற்றார்க்கு வேறு தவமும் தானமும், பூசையும் விரதமும், கோலமும் சீலமும் வேண்டற்பாலன வன்றென்றும் கண்டனர் ஆன்றோர். பலநாள் பசித்திருப்பதும் இன்னவகை யுணவைத்தான் உண்பதென சங்கற்பம் செய்வதும், வீட்டைத் துறந்து வெளியேறுவதும் கண்மூடி நிற்பதும், வாய் மௌனியாவதும், வீடுபேற விழைவோர்கள் கைக்கொள்ளும் பொதுவான சாதனங்களாக உலகில் கருதப் படுகிறது. உண்மையில் இம் முறைகள் நேரான உபாயங்களாக மாட்டா. கட்டி லடங்காத மனத்தின் கோரமான வாதனைகளையே அவை குறிக்கும். இம் முறைகளை மேற்கொண்ட வனவாசியான கொங்கணரிஷி இல்லறக் கடமைகளில் வழுவாத உத்தமியாகிய தருமசீலையையும் இறைச்சி வியாபாரத்தைக் கடமையெனக் கருதி அகப்பற்றன்றி யாற்றிவந்த தரும வியாதனென்னும் வேடனையும் உபதேச குருவாகக் கொள்ள நேரிட்டதென்னும் இதிகாசம் எதை நமக் குணர்த்துகின்றது? உடலை வருத்தும் சாதனங்களை விட உள்ளத்தூய்மையே எளிதான மார்க்கம். அவ்வித தூய்மை தன்னலமற்ற பரோபகார சிந்தையினால் கால்கொள்ளல் இயல்பு. அதுவே உண்மைத் தவம். அத்தவமும் பழம் பிறவிகள் பலவற்றிலும் கைக் கொள்ளப்பட்டுத் தொடர்ந்துவந்தே முதிர்ச்சி பெறுவது என்னும் உண்மையைத் "தவமும் தவமுடையார்க்காகும்" என்னும் பொய்யாமொழியே வலி யுறுத்துகின்றது. விருப்பம் கழன்ற விடமே உண்மை விடுதலை யாதலினால் வீடுபெற விரும்பு என்றுரையாத அன்னையார் வீடு பெறவில் என்று குறிப்பா லுணர்த்தினர். இது கொண்டே,

"தன்னை யறியாது தானல்லார் என்னுமிவ்
இன்மை யறியா திளையரென் றோராது
வன்மையில் வந்திடும் கூற்றும் வருமுன்னத்
தன்மையி னல்லதவஞ் செய்யு நீரே."

என்று பெரியார் நினைவூட்டி யருளினர். பிறந்ததும் பிராணிகளெல்லாம் பசி நோயைத் தீர்த்துக்கொள்ள ஈன்ற தாயின முலைப்பாலை (பிறர் உணர்த்தாமலே) நாடி அவாவுதல் போலப் பகுத்தறிவுள்ள மக்களாய்ப் பிறந்தோர் எவரும் அழியாப் பேரின்பமாகிய வீடுபேற்றினை நாடிப் பாடுபடல் வேண்டியது இயல்பாகும். அங்ஙனம் இயல்பா யிருக்கவும் தீவினை வயத்தால் தவறான துறைகளி லீடுபட்டு அரிய மனிதப் பிறவியின் பயனை யிழக்கின்றனர். பலப்பல அவப்பிறவிகள் பிறந்துழல்கின்றனர். இவர்பால் இரங்கியே நம்

மூதறிவுடைய முதுமக்கள் நமக்கு நமது கடமை இதுவென அறிவூட்டு மூகத் தான் அறவுரைகளை அமைத்து வைத்தனர். எல்லாப் பிராணிகளும் தாயின் பாலைத்தானே யறிந்துண்டு உடலோம்ப, இம் மனிதக்குழவிகள் மட்டில் தாயே உண்ணும்படி கற்பித்தாலன்றி உண்ண உணர்வதில்லை. இவ் வுதாரணம் ஒன்றே மனிதப்பிறவி ஒன்றே தன் கடமையைப் பிறர் உதவியின்றி உணரத் தவறும் தன்மையுடைய தென்பதற்கு தக்க சான்றாகும். மனிதனுக்கே கல்விச்சாதனம் கேள்விச் சாதனம் குருவுபதேசம் ஆகிய அனைத்தும் எத்தனை யிருந்தும் தவறுபவன் மனிதனே. ஆதல் பற்றியே உறுதியாக நில் என்றருளினர். அசைத்தற்கரிய அம்மனத்திட்பம் பிற்பட்ட பிறவிகளில் உருக்கொண்டு கருவிலமைந்த திருவாய் பற்றற்ற உண்மை யுணர்வைப்பெறச் செய்யும். ஆதலினால் ஆத்திச்சூடியின் 101-வது இறுதிச் சூத்திரத்தில் மக்கள் அடையவேண்டிய விடுதலைப் பயனைச் சோம்பலின்றி அடைய முயலுகவெனக் குறிப்பிட்டார் என்றுணர்தல் வேண்டும். விடுதலை பெற்றே தீருவதென்னும் உறுதி மூளை நிமிர்ந்து நிற்பதற்கு இளமையிலிருந்தே ஏற்பட வேண்டிய குணங்களை இதனடியில் தொடர்ந்து கூறுவதை யொப்ப "உத்தமனா யிரு" என்ற நீதியை அமைத்துள்ளார். நற்குண நற்செய்கைகளினாலே எல்லாரிலு மேலானவனாக நீ இருத்தல் வேண்டுமென்பது கருத்து. பகைவனும் நல்லோன் என்றெண்ணும்படி நடையிற் சிறந்தவர் உண்டு.

பாண்டவரை வென்று வாகைசூட விரும்பிய துரியோதனன் அப் பாண்டவரில் ஒருவனாகிய சகாதேவனிடமே வந்து போரில் தனக்கு ஜெயம் தரும்படியான நல்ல வேளையை ஆராய்ந்து குறித்துத் தரவேண்டினான் என்றால் அதை நம்பக் கூடியவர்கள் மிகச் சிலர் கிடைப்பதும் இஞ்ஞான்று அருமை. கெட்டவன் தன்னைப்போலவே எல்லாரையும் கெட்டவர்களாக எண்ணுவது இயல்பு. அப் பொது இயல்பினையும் கடந்து ஐயமற்ற நம்பிக்கையை உண்டுபண்ணியது சகதேவனுடைய உத்தம நடையின் நேர்மையென்றால் அதை எவ்வண்ணம் மனக்கண்ணால் நோக்குவது ? தன்னை நம்பி வந்தவனுக்கு உண்மையான நாளைக் குறிப்பதே தனது கடமையாக எண்ணினதேயன்றி அப்படி உண்மை யுரைப்பதனால் தனக்கே கேடு வருவிப்பதென்பதை சகதேவன் ஒரு பெரிய விடயமாகச் சிறிதும் கருதவில்லை. அதனால் அவன் உள்ளம் உண்மையுடன் கலந்து இரண்டற நின்றதேயன்றித் தன் நலமும் தன்னைச் சார்ந்தவர் நலமும் சிறிதும் துறவு கொள்ளவில்லை. இத்தகைய உத்தமருடைய நிலையே விடுதலை பெறத்தக்க உதாரணமென்பது கூறாமலே விளங்கும். நற்குண நற்செய்கைகளை நழுவாமல் கடைப்பிடித்து ஒழுகப் பயில்வதே மேல்நிலை யெய்தச் செய்யும் உபாயம் என்பது தோன்ற நீதிக்கிழத்தியார் உத்தமனா யிருக்கும்படி உணர்த்தி யருளினர் போலும்.

ஆதிகாலத்தில் பொய் பேசுவோர் அருமையினும் அருமையாகவே இருந்திருத்தல் வேண்டும். கல்வியிற் பெரிய கம்பநாடரும் "உண்மையில்லை பொய்யுரை யிலாமையால்" என்று கூறினர். பொய் பேசுவதற்கு மனிதன் துணியமாட்டான் என்று வனவிலங்குகளும் மதித்திருந்ததாகச் சில உதாரணக்கதைகளும் காணப்படுகின்றன. குரு தட்சிணைக்காக ஒரு அரசன் மனைவியின் காதிலணிந்துள்ள இரத்தின குண்டலங்களை நாடிச் சென்ற ஓர் வேதவித்தான பிரமசாரியை வழிமறித்துத் தனக்கு உணவாகும்படி கேட்ட

இராக்கதனுக்கு, அப் பிரம்மசாரி தன் கடமையை நிறைவேற்றிய பின்பு மீண்டும் வந்து உனக்கிரை யாகின்றேன் எனக் கூறியதாகவும், அதற்கிசைந்து அவ்வரக்கன் தடை சொல்லாது விட்டதாயும், அவ்வாறே அவ்விப்பிர இளைஞன் தன் காரியத்தை முடித்துக்கொண்டு அரக்கன் இருந்த இடம் தேடி வந்து தன் உடலை ஏற்கும்படி வேண்ட அவ்வுண்மையாளனை உத்தமனின், தெரிசன பலத்தினாலேயே பூர்வசாபம் நீங்கப்பெற்று பழைய க்ஷத்திரியகுல நாயகனாக மாறினானெனக் கூறும் சரித்திரச்சான்றும் உத்தமனா யிருப்பவரின் பெருமைக் குதாரணமாகும். உத்தமத்தன்மை நற்குண நற்செய்கைகள் என்னும் இருவகைகளும் ஒன்றுபட்ட இடத்திற்கே பொருந்தும், என்றாலும் வாய்மை காப்பராயின் அதனடியாக எல்லா நன்மைப்பேறும் தானே வந்தமையும் என்பது ஆன்றோர் துணிபு.

"யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற."

என்ற பொய்யாமொழியே போதிய சான்று. வாய்மை, ஒழுக்கம், பொறை, அடக்கம், பணிவு, ஈகை, இன்சொல், இரக்கம், பரோபகாரம் ஆகிய ஒவ்வொன்றும் உத்தமம் என்னும் தருவினுடைய கிளைகள், இலைகள், அரும்புகள், மலர்கள், கனிகள், என்று சொல்லத்தக்க உறுப்புக்களே ஆகும். உத்தமநிலையை சன்மார்க்கம் என்னும் மறுபெயரால் கூறலாம். அந்த சன்மார்க்கநடையே மக்களை உத்தமராக்கவல்ல மாத்திரைக்கோல். துன்மார்க்கத்தின் வீழ்ச்சியே சன்மார்க்கத்தின் தோற்றுவாய் சன்மார்க்க நெறி கால் கொண்ட உள்ளத்தில் வேறெவ்வித தீமையும் தலைப்பட முடியாது. சன்மார்க்கம் என்பது பொதுவாக அறிஞர்களால் விதித்தவைகளைக் கைக்கொண்டொழுகலும் விலக்கினவைகளைத் தவிர்த்தலும், என்பது பொதுவாகும். அப் பயிற்சி உறுதிப்படுமாகில் அயலாக வேண்டற்பால தொன்றுமில்லை யென்பது கண்கூடு. உத்தமம் என்னும் மொழிக்கு உண்மை, நன்மை, முதன்மை என்பதே பொருளாக அரும்பொருள் விளக்க நூலிலும் காணப்படுகிறது. உண்மை சொல்லாலும், நன்மை செயலாலும் வெளிப்படும். இரண்டும் அகத்தூய்மையுடன் ஈடுபடுங்கால் எழுவதே முதன்மை யாகும். புகழ் விருப்பத்தாலோ, பிறகாரணங்களாலோ ஒருவராற் செய்யப்படும் நற்செய்கைகளும் பல. அவைகள் உத்தமத்திற்கு உரித்தாகா. கண்கவர் வனப்பிற் சிற்பியொருவனாற் காணப்படும் பதுமைகளுக்கே ஒப்பாகும். அவைகட்கு உயிரில்லாததுபோல் இவர்கள் செய்யும் அறமும் உயிரில்லாததே. ஆதலின் அவைகளை உதாரணமாகப் பின்பற்றுதல் அறியாமை. பெருமாட்டியார் குணமும் செயலும் ஒத்த சத்தான மார்க்கத்தையே உத்தமம் என மதித்தார். அத்தகைய உத்தமனாக இருக்கவே ஒவ்வொருவரும் முயலல்வேண்டும். ஒருவரது உண்மை செயலாலும் நடையாலும் உணரப்படுதல் வேண்டுமன்றி வேடத்தால் அன்றென்பது விளக்கம். ஒப்பாரு மிக்காருமில்லாத் திருவருட் பிரகாசவள்ளலாரும், தாமியம்பிய அருட்பெருஞ்சோதி அகவலின் இறுதியாக,

"சுத்த சன்மார்க்கச் சுகநிலை யெய்துக
உத்தம னாகுக வோங்குக வென்றனை."

என்ற முத்திரையில் முடித்திருப்பதும் சிந்திக்கத் தக்கது.

# கூடாரத்தரசன்

(T. R. பெரிய நம்பியார்.)

ஓர் நாள் காலை ஆறு மணி. இளஞ் சூரியன் பொன்னிறமான கதிர்களைப் பரப்புகின்றான். கூடா நகர் வீதிகளில் பெருத்த ஆரவாரம். ஜனங்கள் அரசனது கொலு மண்டபத்தை நோக்கி ஓடுகிறார்கள். கொலு மண்டபத்தில் அரசன் மகா கோபத்துடன் வாளாயுதத்தைக் கையிலேந்தி அரியாசனத்தில் அமர்ந்திருக்கின்றான். அப்போது ஈட்டிகள் தாங்கிய ஐம்பது இராணுவ வீரர்கள் ஓர் பிராம்மணனையும் அவனது ஸ்திரீயையும் கைது செய்து கொலு மண்டபத்திற்கு அழைத்து வருகின்றனர்.

சில விநாடிகளில் அக் கைதிகள் அரசன் முன்னே நிறுத்தப்பட்டனர். அரசன் மகா கோபத்துடன் வாளாயுதத்தை அவர்கள் முகத்திற்கு நேரே சுழற்ற, அக் கைதிகள் நடு நடுங்கிக் கண்ணீர் சொரிந்து அரசனை நோக்கி;

"பிரபுவே! யாங்கள் அறிவீனத்தால் செய்த பிழையை மன்னித்து ரக்ஷிக்க வேண்டும்" எனக் கூறினர். அரசன் சற்று சாந்த மடைந்து அப் பிராமணனை நோக்கிக் கூறுகின்றான்:—

ஓய் பிராம்மணரே! உம்மைப் பார்த்தால் பரம சாதுவைப் போல் காணப்படுகிறது. ஆனால் உமது நடத்தையோ கொலை பாதகத்திற்கும் அஞ்சாதவரெனக் காட்டுகின்றது. இத்தகைய வேஷதாரிகளை சிக்ஷிக்க வேண்டியது எனது கடமையல்லவா?

பிராம்ம:—பிரபுவே! யாங்கள் பரம ஏழைகள். சத்திய நெறி தவறாதவர்கள். இப்போது கால சாமானியத்தால் பெருங் குற்றத்திற்கு ஆளாயிருக்கின்றோம். எப்படியாவது எங்களை மன்னித்து ரக்ஷிக்க வேண்டும் பிரபு!

அரசன்:—சரி, இருக்கட்டும். நேற்றிரவு நடு நிசியில் உமது வீட்டில் ரகஸியமாய்ச் சில சதி யோசனைகள் நடந்ததல்லவா? அவைகளை ஒன்றும் ஒளியாமல் வெளியிடவேண்டும். இல்லையேல் உமது சிரசும் உமது மனைவியின் சிரசும் இப்பொழுதே எமது வாளாயுதத்திற்கு இரையாக்கப்படும். என்ன சொல்லுகிறீர்?

பிராம்ம:—பிரபுவே! யாதொரு கள்ளங் கபடமில்லாமல் நடந்த விஷயங்களைச் சொல்லுகின்றேன். எங்களுக்கு ஆண் சந்ததி கிடையாது. ஒரே யொரு பெண் மகள் உண்டு. அவள் ஆண்டாள் என்று அழைக்கப்படுகிறாள். அழகிலோ, அறிவிலோ, ஒழுக்கத்திலோ அவளை வென்றவர் இந் நாட்டில் கிடையாது. தற்போது அவளுக்குப் பதின்மூன்று பிராயம் நடக்கிறது. இன்றோ நாளையோ புஷ்பவதி யாகுந் தறுவாயி லிருக்கிறாள்.

பெண்களைப் புஷ்பவதியாகு முன் விவாகம் செய்து கொடுப்பது எங்கள் ஜாதி வழக்கம். அவ்விதம் ஆண்டாளை விவாகம் செய்து கொடுக்க எவ்வளவோ முயன்றும் இது வரை பயன் படவில்லை.

அரசன்:—என்ன ஆச்சர்யம்! சகல யோக்கியாம்சங்களும் பொருந்திய உமது மகளுக்கு ஏன் வரன் அமையவில்லை?

பிராம்ம:—பிரபுவே! அவளுக்கு ஜாதக ரீதியாக ஓர் பெருந் தோஷம் ஏற்பட்டிருக்கிறது. யாராவது அவளை மணம் செய்து அவளுடன் சிற்றின்ப போகத்தை யனுபவித்தால் அத் தினமே அம் மணமகன் மரணமடைவானென்பது அவளுடைய ஜாதக பலன். இதன் மூலமாய் அவளை மணம் செய்ய ஒருவரும் முன் வரவில்லை.

பிரபுவே! இந் நிலையில் யாங்கள் என்ன செய்கிறது. ஆகவே இதைப் பற்றி யாங்கள் நெடு நாள் யோசனை செய்து கடைசியாக ஆண்டாளைக் கொலை செய்வதைத் தவிர வேறு வழியில்லை யென்ற முடிவுக்கு வந்தோம்.

அரசன்:—சரி, அப்பால் நடந்ததைச் சொல்லும்?

பிராம்ம:—எங்கள் வீட்டில் ஓர் இருட்டறை இருக்கிறது. அதில் ஓர் குழி தோண்டி ஆண்டாள் தூங்கும்போது அவளை யெடுத்துக் குழியில் போட்டுப் புதைத்து அடக்கம் செய்து அப்பால் யாங்களிருவரும் காசி யாத்திரை போவதாகத் தீர்மானித்து நேற்றிரவு அக் காரியத்தை முடிக்க எத்தனித்தோம். இரவு பன்னிரண்டு மணி முதல் அவ் வேலைக்கு ஆரம்பித்து குழி தோண்டி சித்தப்படுத்தி வைத்துக் கொண்டு மூன்று மணி சுமாருக்கு ஆண்டாளைத் தூக்கப் போகும் சமயத்தில் இராணுவ வீரர்கள் பெரிய ஆரவாரத்துடன் எங்கள் வீட்டை முற்றுகை யிட்டு கதவை இடித்துத் தள்ளி வீட்டிற்குள் நுழைந்து எங்களைக் கைது செய்தனர்.

அரசன்—இவ் விஷயம் இராணுவ வீரர்களுக்கு எப்படித் தெரிய வந்தது? இதைப் பற்றி உமக்கு ஏதேனும் தெரியுமா?

பிராம்ம:—தெரியாது பிரபு!

அரசன்:—யாம் நேற்றிரவு பன்னிரண்டு மணிக்கு மாறுவேடம் பூண்டு நகர் சோதனையாக வீதிகளைச் சுற்றி வரும்போது உமது வீட்டில் அழுகையும் ரகஸ்யப் பேச்சும் கேட்டது. அதை யறிவதற்காக யாம் உமது வெளித் திண்ணையில் ஒரு மணி நேரம் படுத்திருந்து உற்றுக் கேட்டதில் உமது சதி யோசனையில் ஓர் சிறிது வெளியாயிற்று. உடனே யாம் ஒரே ஓட்டமாய் அரண்மனை சென்று பாராவிலிருந்த இராணுவ வீரர்களை உமது வீட்டுக்கு அனுப்பினேன்.

நீர் பிராம்மணரா யிருந்தும் இத்தகைய கொடிய செயலைச் செய்ய எத்தனிக்கலாமா? உமது மனைவியும் இதற் கிசைந்தது ரொம்ப ஆச்சர்ய மல்லவா!

பிராம்ம:—பிரபுவே! எனது கருத்தைக் கூசாமல் வெளி யிடுகின்றேன். உலகில் மனிதர் பிறப்பதும் இறப்பதும் சர்வ சாதாரணமாகவே யான் கருதுகிறேன். என் அருமை மகள் விவாக மின்றிப் பிறர் நகைக்கப் பழிச்

சொல்லோடு உயிர் வாழ்வதைக் காட்டிலும் அவள் மரண மடைவதே நல மென்பது என்னுடைய அபிப்பிராயம். ஆனல் என் மனைவி சபல சித்த முடையவளாதலால் நேற்றிரவு குழி வெட்டும்போது புழுவாய்த் துடித்து வாய் விட்டுக் கதறினள். யான் அவள் வாயைப் பொத்திப் பல சமாதானங் கள் சொல்லி அடக்கி வைத்தேன்.

அரசன்:—சரி, இருக்கட்டும்! நீங்கள் இருவர்களும் பெருங் குற்றத் திற்கு ஆளா யிருந்தாலும் உமது அந்தரங்க எண்ணத்தைக் கபட மில்லாமல் வெளியிட்ட படியால் உங்களிருவரையும் மன்னிக்கிறேன். ஆனல் ஆண்டாள் விஷயத்தில் இன்னும் உமது யோசனை எப்படியோ?

பிராம்ம:—பிரபுவே! சத்தியமாய்ச் சொல்லுகிறேன். இனி இக் கொடிய எண்ணத்தைக் கனவிலும் நினையேன்.

அரசன்;—உமது வார்த்தையை யாம் நம்ப முடியாது. ஏனெனில் அவள் விவாகமின்றிக் கன்னிப் பெண்ணு யிருப்பதை நீர் விரும்ப வில்லை யல்லவா?

பிராம்ம:—பிரபுவே! அவள் எப்படி யிருந்தாலும் இனி யான் அக் கொடும் பாவத்திற்கு ஆளாக மாட்டேன்.

அரசன்:—சரி, இருக்கட்டும்! இப்போது யான் ஓர் சரியான வரனைக் கொண்டு வந்தால் ஆண்டாளை விவாகம் செய்து கொடுப்பீரா?

பிராம்ம:—அவளுடைய ஜாதக பலனுக்கு அவளை விவாகம் செய்ய ஒரு வரும் முன் வரமாட்டார்கள். இது நிச்சயம்!

அரசன்:—அந்தக் கவலை உமக்கு வேண்டாம். சரியான வரன் கிடைத் தால் உமது அபிப்பிராய மென்ன?

பிராம்ம:—தடை யில்லாமல் விவாகம் செய்து கொடுக்கிறேன்.

அரசன்:—அப்படியானல் ஒரு யோசனை கூறுகிறேன். யான் அரசனு யிருந்தாலும் குலத்தில் பிராம்மணனே. இதுவரை எனக்கு விவாகமும் ஆக வில்லை. ஆதலால் உமது மகளை எனக்கு கன்னிகாதானமாய் மணம் செய்து கொடுக்க உமக்கு இஷ்டந் தானு?

பிராம்ம:—(திடுக்கிட்டு) பிரபுவே! ஆண்டாளுக்கிருக்கிற தோஷத்தை யான் வெளியிட்ட பிறகு தாங்கள் இவ் வார்த்தை சொல்லலாமா? தங்கள் உயிருக்கு அபாயம் ஏற்பட்டால் இந்த அரசாங்கத்தின் கதி என்னுகும்? ஆத லால் இந்த எண்ணத்தை ஒழித்து விட வேண்டும் பிரபு!

அரசன்:—நகரிலுள்ள பிரஜைகளின் க்ஷேமத்தைக் கருதுவது அர சனது கடமையாகும். யான் ஆண்டாளை விவாகம் செய்து உங்கள் குடும்பத் திற் கேற்பட்ட அபவாதத்தைப் போக்க உத்தேசிக்கிறேன்.

பிராம்ம:—பிரபுவே! இந்த அற்பப் பெண்ணுக்காகத் தாங்கள் உயிரை தியாகம் செய்யலாமா? அவ்விதம் செய்தாலும் பின் ஆண்டாள் அமங்கிலி யாகத் தானே இருக்கப் போகிறுள். உலகில் அமங்கிலிகளுக்கு எந்த வகை

யில் சுக மிருக்கிறது ? உயர்ந்த ஆடையாபரணங்கள் அணிய முடியுமா ? மஞ்சள், குங்குமம் தரிக்க முடியுமா? பரிமள மலர்கள் சூட முடியுமா? இவை யொன்று மில்லாமல் சாகாப் பிணமாய்க் காலந் தள்ளுகிறார்கள். ஆதலால் ஆண்டாளுக்காகத் தாங்கள் பிராணத் தியாகம் செய்ய முற்படுவது சரியான யோசனையல்ல.

அரசன்:—எனது அபிப்பிராயம் உமக்குச் சரியாய் விளங்கவில்லை போலும். யான் ஆண்டாளை மணம் செய்து சாந்தி முகூர்த்தத்தை முடிக்காமலிருந்தால் எனக்கு மரணம் நேரிடாதல்லவா? அப்பால் அவள் தீர்க்க சுமங்கலியா யிருந்து நெடு நாள் ராஜபோகத்தை யனுபவிக்கலாமே.

பிராம்ம:—தாங்கள் இவ் விஷயத்தைச் சற்று கூர்ந்து கவனிக்க வேண்டும். தாங்கள் ஆண்டாளை விவாகம் செய்து கொண்டாலும் சந்தான விருத்திக்காக வேறு ஸ்திரீகளையும் விவாகம் செய்து கொள்ள நேரிடுமல்லவா? அவ்விதம் விவாகம் செய்து கொண்டு அவர்களோடு போக பாக்கியங்களை அனுபவித்துக் கொண்டிருந்தால் ஆண்டாளுக்கு எப்படி திருப்தி ஏற்படும்?

அரசன்:—நீர் கூறுவது வாஸ்தவமே. குடும்பத்தில் ஏற்படுகிற சுக துக்கங்களை ஸ்திரீ புருஷர்கள் இருவரும் சமமாய் அனுபவிக்க வேண்டியதே முறையாகும். அவ்விதம் இல்லையானால் அவர்கட்குள் உண்மை யன்பு நிலைத்திருப்பதாய்ச் சொல்ல முடியாது. ஆதலால் யான் ஆண்டாளை விவாகம் செய்த பிறகு வேறு ஸ்திரீகளை விவாகம் செய்வதில்லை யென உமக்கு உறுதி கூறுகிறேன்.

பிராம்ம:—பிரபுவே! என்ன ஆச்சர்யம்! ஆண்டாளுக்காகத் தாங்கள் சிற்றின்ப போகத்தை விடுவதும் சந்தானத்தை இழப்பதும் தங்கட்குப் பெருந் துன்பத்தைக் கொடுக்குமல்லவா? அன்றியும் தங்கள் உற்றார் உறவினர்கட்கு இவ் விஷயம் எவ்வளவு மன வருத்தத்தைக் கொடுக்கும்? ஆத்திரப் படாமல் நன்றாய் யோசனை செய்து பாருங்கள்.

அரசன்:—மிகுந்த ஆலோசனையின் பேரிலேயே யான் இந்த முடிவுக்கு வந்திருக்கிறேன். நல்லறிவும் நல்லொழுக்கமு முடைய ஒரு பெண் ஆயுள் முழுவதும் பெருந் துன்பத்தில் ஆழ்ந்திருக்க நேரிடும் போது அவளை விடுதலை செய்யாமல் யான் மட்டும் போக பாக்கியங்களை அனுபவித் திருப்பதில் எனக்குப் பிரியமில்லை. ஆதலால் நீர் எவ்வித ஆக்ஷேபமும் செய்யாமல் ஆண்டாளை எனக்கு கன்னிகாதானம் செய்து கொடுக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

அப்பால் பிராம்மணருக்கு மறு வார்த்தை பேச முடியவில்லை. அரசனது வேண்டுகோளுக் கிணங்கி அவரிடம் விடை பெற்று மனைவியோடு தமது கிரகம் சென்றார். பின் சில தினங்கள் கழித்து ஓர் சுப முகூர்த்தத்தில் அரசருக்கும் ஆண்டாளுக்கும் விவாகம் நடைபெற்றது. அரசனோ ஆண்டாளை சகோதரியாய்ப் பாவித்து அவளுடன் இல்லறம் நடத்தி வந்தார். பின் இருவரும் அரசை வெறுத்து ஸ்ரீ ரங்கநாதப் பெருமாளுக்கு அந்தரங்க பக்தர்களாயினர்.



# புதுமையிற் புதுமை!

(0)

(எஸ். கிருஷ்ணன் பி. ஏ., எல். டி.)

ஆக்கற்றொழில் அழித்தற்றொழிலை யொட்டிப் பின்றொடர்ந்து உயிர் வருக்கத்தின் றொடர்ச்சியை வளரச் செய்யா நிற்கிறது. பூர்வீகத்தில் நிகழ்ந்திருந்த இரண்டு மகாயுத்தங்களை" யொட்டி இந்துக்களின் இரண்டு இதிகாசங்கள் தோன்றின. முற்காலத்தில் அதர்மத்தை வீழ்த்தித் தர்மத்தை நிலை நிறுத்தின விஷயம் மகாகாவியங்களான இராமாயண மகாபாரதங்களிற் பதிவு செய்யப்பட் டிருக்கிறது. இந்துக்களின் மனது ஒரு நாடகம், ஒரு கதை, ஒரு சரித்திரம் இவற்றோடு திருப்தி யடைவதில்லை. அது மகத்தான நிகழ்ச்சிகளின் காரணம் ஜதத் சம்ரக்ஷணமென்று உணர்ந்து, அரிய பெரிய விஷயங்களை ஞானத்தாலறிந்து, மனிதர்களின் நன்மைக்காக இன்பமான இதிகாச புராணங்களை வெளியிடுகின்றது.

சமீப காலத்தில் ஒரு மகாப்ரளயம் நேரிட்டது. பழைய உலகம்போய்ப் புதிய உலகம் பிறந்தது. ஆயினும் இப் பிறப்பை யறிவித்துப் புதிய தோற்றங்களை யுண்டுபண்ணக்கூடிய இந்துக்களின் இதிகாசங்களைப் போன்ற மகாகாவியம் ஒன்றும் இதுவரையிற் றோன்றவில்லை. வங்காள மகாகவி 'தாகூர்,' சித்த விருத்தியும், சுத்தப் பிரம்மமுமே (Ideas and Idealism) தம்முடைய நோக்கமென்று கூறி விட்டார். அவர் மனதிற்கு லண்டனும், நியூயார்க்கும் எவ்வளவு தூரமோ அவ்வளவே தூரம்தான் மாஸ்கோவும், லெனின்கிராட்டும். பிற் கூறியவை இன்னும் சமீபமாக இருக்கவுங் கூடும்! அவர் இயற்றிய நூல்கள் மிக விசாலமான குறியைச் சுட்டி எய்தமையால் அவற்றால் அடையக் கூடிய பலன் குன்றியது. அவை யுத்தத்தில் ஆரம்பித்த அழித்தற்றொழிலைப் பூர்த்தி செய்யத் துணையாயினவே யன்றி வேறில்லை. பலமாய்க் கட்டப்பட்ட கோட்டைகளுடன் நீண்டு நிமிர்ந்து நின்ற ஆலயங்களின் கோபுரங்களும் தகர்க்கப்பட்டுத் தரைமட்ட மாக்கப்பட்டன. சமதர்மவாதம் பூமி எங்கும் பாவிவிட்டது. சுவதந்தராபினிவேசம் மேலிட்டுக் 'கடவுளுங் கற்புங் கட்டுப்பாடே,'' என்றும், "குலமுங் குருவும் குருட்டுத்தனமே," என்றும், "மதமும் பக்தியும் மாயமயக்கே," என்றும் விபரீதமான எண்ணங்களைப் பொது ஜனங்களின் மனதிற் கிளப்பிப் புரட்சி மார்க்கங்களுக்கு ஏதுவாய் விட்டன பிரம்மோப நிஷத்துக்களும். தொழிலாளிகளிடத்திலிருந்த அடக்கமும் மரியாதையும் அற, முதலாளிகளிடத்தில் அன்பும் தயையும் வறண்டு போக, வேலை நிறுத்தம் ஒரு பக்கமும், வேலையில்லாத் திண்டாட்டம் மற்றொரு பக்கமும் ஜனங்களை வாட்ட, உலக வியாபாரம் எங்கே பார்த்தாலும் தடைபட்டு நிற்கிறது. "நெய்க்குத் தொன்னை ஆதாரமா, தொன்னைக்கு நெய் ஆதாரமா," என்னும் சந்தேகம் இன்னும் நிவர்த்தியான பாடில்லை! தொழிலாளிகளுக்கு ஆதாரம் முதலாளிகளே என்கிறார் ஒருவர்; மற்றொருவர் அதை மறுத்து

முதலாளிகளுக்குத் தொழிலாளிகளே ஆதாரமென்கிறார். மானிடரின் சமூக வாழ்க்கைக்கு இன்றியமையாததா யிருப்பது அன்பு என்னும் ஆதாராதேய தத்வ உண்மையை விளக்கத் துவாபர யுகத்தின் முடிவில், தமிழ்யோகிகளில் ஒருவரான, பூதத்தாழ்வார் என்னும் பெரியார் ஏற்றிய திருவிளக்கின் ஒளி மழுங்கித் தமிழகத்தும் இருள் சூழ்ந்து கொண்டது. ஸ்தூலமான பொருள்களிலேயே செலுத்தப்பட்டுத் தடைபட்ட கலைஞானிகளின் மனதோ, இப்போது சூக்ஷ்மமான விஷயங்களின் மேல் திருப்பப்பட்டு அங்கேயும் தடைபட்டு நிற்கிறது. இத் தடைகளை நீக்குவது நாளுக்குநாள் கஷ்டமா யிருக்கிறது. அர்ச்சுனன் யுத்தம் செய்ய ஆரம்பிப்பதற்குக் காண்டிபத்தை நாணேற்றுமுன் அதனால் விளையக்கூடிய கொடுமைகளைப்பற்றிச் சிந்தித்தான். நாமோ, கையிலுள்ள வெடிமருந்து மாளும் வரையிலும் குண்டுகளை வீசியான பிறகு அந்தக் கொடுமைகளைப்பற்றிச் சிந்திக்கா நின்றோம். இருவரும் சிந்தனை யென்கிற சேற்றில் அசையாது சிக்கிக் கொண்டோம். இருவரையுங் கரையேற்றக்கூடிய ஓர் கீதாசாரியன் வேண்டும்.

இங்கிலாந்து நாளுக்குநாள் அதிக்ரமிக்கும் நவீன நாகரீகத்தைக் குறிக்கிறது. இந்தியா நாளுக்குநாள் ஒடுங்கிக்கொண்டு வரும் புராதன நாகரீகத்தைக் குறிக்கிறது. இரண்டையும் எந்த அளவில் இணைத்தால் க்ஷேமகரமான உண்மையான நாகரீகம் ஏற்படுமென்பது இன்னும் யாருக்கும் ஏற்படவில்லை. ஒரு சாரார், பொது ஜனங்களைத் தூண்டக்கூடிய உணர்ச்சிகளைக் கிளப்புவதில் வெற்றியுள்ளவராய் இருக்கின்றனர். மற்றொரு சாரார் அது செய்ய முடியாது ஆலோசனை, புத்தி இவற்றைக்கொண்டே வேலை செய்கின்றனர். அதிக முன்னேற்ற மடைந்த தேசங்களிலும் சாமான்ய ஜனங்கள் ஆலோசனையினாலும், புத்தியினாலும் தூண்டப்பட்டவர்க ளல்லர்.

பாஷையின் சொற்சோர்வினால் உலகத்தில் நிகழும் விஷயங்கள் நிகழாமல் நிற்கவில்லை. அப்படி நிகழும் விஷயங்களில், ஞாபகத்தில் நிலைநிறுத்த வேண்டியவை ஏதேனும் நிகழின் அவற்றை ஜனங்கள் சாஸ்வதமான ஒரு கட்டிடத்திலேயோ அல்லது நூலிலேயோ பதிவு செய்து வைக்கவே முயன்றனர். இந்திய சரித்திரத்தில் அற்புதமான நிகழ்ச்சிகள் அநேகம். முதலில் ஒரு கோவிலையோ, அல்லது மண்டபத்தையோ, அல்லது கற்றூணையோ, கட்டுவிக்கும்படி செய்து, பிறகு அதன் மூலமாக அநேக பாடங்களையும், பிரபந்தங்களையும் இயற்றுவிக்கும்படி தூண்டி யிருக்கின்றன. அதேமாதிரி, சமூக வாழ்க்கையின் குறைபாடுகளினாலோ, பஞ்சத்தினாலோ, அரசாட்சியின் கொடுமையினாலோ, மத பேதங்களின் தீவிரத்தினாலோ, ஜனங்கள் செய்து வரும் விருத்திகளுக்குத் தடை யேற்பட்டபொழுது அதை நீக்க ஒரு கோவிலோ, அல்லது புராணமோ தோன்றியதாகவும் திருஷ்டாந்தங்கள் உள.

வாஸ்தவத்தில், சில வேளைகளில் கலப்பில்லாத அப் படம் உண்மையானது, இயற்கையைப் பிரதிபிம்பித்துக் காட்டினாலும், அசங்கியத்தையும், அருவருப்பையும் விளைவிக்கும் அவலக்ஷணமாகக் காணப்படுகிறது. அவற்றைக் கவி தன் சாமர்த்தியத்தினால் மறைத்து, அழகான ஆடை யுடுத்தி, இடையில் மணிமேகலை திருத்தி, அணிகல னணிந்து, விரித்த கூந்தலை வாரி முடித்து, பூச்சூடி, கண்ணுக்கு மையிட்டு, நெற்றிக்குப் பொட்டிட்டு, உயிரோடுலாவும் ஓர் அணங்காக அமைத்தாலன்றிச் சந்தோஷத்தையும், மங்கள

# உயிர்க் கொலை

(கோட்டாறு—தே. ப. பெருமாள்.)

உயிர்க் கொலை எனும் போழ்தே உடல் நடுங்குகிறது. உளம் பதறுகிறது; உயிர் கரைகிறது; ஏன்? உயிர்க்கொலை மகனை வன்னெஞ்சனாக்குகிறது. அவனை விலங்குச் செய்கையினில் கொண்டு புகுத்துகிறது. இவ்வுலகிடை அவனை நரகிடைக் கொண்டு புகுத்துவதும் அஃதே.

உயிர்க் கொலை புத்தர் உளத்தை மயக்கிற்று. அசோகன் நெஞ்சைக் கலக்கிற்று. சமயக் குரவரைத் தியக்கிற்று; பிற அறிஞரைப் பேதுறச் செய்தது. புத்தரும் அசோகரும் மன்னர் மரபினில் வந்தோர். இவர்கள் இருவருள் அசோகன் போர் செய்தலில் வேட்கை மிக வுடையன். பகைவரை புற முதுகிட் டோடச் செய்யும் பெற்றியன். அவனை எவ்வாறு உயிர்க் கொலை கலக்கிற்று? இவன் உயிர்க் கொலைக்கு அஞ்சுபவன் கொல்? அசோகன் முதற் கண் உயிர்வதை செய்தலில் வேட்கை மிக வுடையோனாயே இருந்தான். பின்னர் இவனது உள்ளம் உலக நிலையாமையில் கருத்து இருத்திற்று. கலிங்கப் போரில் களத்திடை உயிர் துறந்த வீர மக்களை எண்ணி நோக்கினான். அவர்கள் அஞ்சா நெஞ்சுடன் முன்னர் அமர் மலைந்ததையும், பின்னர் படு பிணமாய், கையற்று, காலற்று கருந் தலையற்று உருவழிந்து கிடந்ததையும் கண்ட அவனது விழிகள் மணி நீர் உகுத்தன. உள்ளம் ஓர் நற்பாடம் கற்றது. அப் பாடமே உலக நிலையாமை. அதன் வழி அன்பும் பிறந்தது.

அன்று முதல் அசோகன் துறவு பூண்டான். உலகில் உயிர்கள் வாழும் நாள் நாளும் அமைதியுடனும் இன்பமுடனும் அவ் வுயிர்கள் வாழல் வேண்டும் என்னும் உயரிய எண்ணம் அவனது உள்ளத்து அரும்பிற்று. அன்று முதல் அவன் அதற்காகப் பாடு பட்டான். இன்று அவனது பெருமை வானைக் கிழித்துச் செல்கிறது.

உயிர்க் கொலை நமது நாட்டின் கண் பெரும்பாலும் மக்களின் உணவிற்காகவே நிகழ்ந்து வருகிறது. மக்களில் பெரும்பான்மையோர் ஊனுணவையே உரன் பெற்ற உணவாக எண்ணுகிறார். இவ் வெண்ணத்தால் இவர்கள் நாள்தோறும் எண்ணிக்கை யற்ற உயிரைக் கொலை செய்கிறார். யாண்டு

---

காத்தையும் உண்டு பண்ண வியலாது. சமீப காலத்தில் நேரிட்ட ஐரோப்பிய மகாயுத்தத்தின் உண்மையும், அதனால் விளைந்த ரணக்கோலமும், பிண நாற்றமும், அழு குரலும், மறைவதற்கு, இந்துக்களின் இதிகாசங்களான, இராமாயண, மகாபாரதங்களைப் போன்ற ஒரு கம்பீரமான காவியம் உதிக்க வேண்டும்; இவ்வித நவீன காவியம் தோன்றினாலன்றி மக்கள் உள்ளத்தில் குதூகலமும், புத்துணர்ச்சியும் உண்டாகாது.

நோக்கினும் இன்று ஊனுணவே காணப் படுகிறது. காப்பி, தேயிலைக் கடைகளிலும் முக்கியமாய்—ஊனுணவே விற்கப்படுகிறது. வதுவையும் பிற சடங்குகளும் நிகழும் இல்லங்களிலும் கூட ஊனுணவையே யாவர்க்கும் வழங்கப் படுகிறது. ஊனுணவு சமைக்கப் படா இல்லம் இன்று விருந்தினரால் இகழப் படும். அத்துணை யளவு மக்கள் ஊனுணவில் காமங்கொண்டுள்ளார். இத்துணைக் காமத்திற்கு காரணம் என்னை யெனின் மக்கட்கு முற்கூறிய ஊனுணவின் மிசை யுள்ள திருப்தியேயாம். ஊனுணவில் 'அதிகம் சத்துப் பொருள் இருப்பதாக மக்கள் எண்ணுகிறார். பிற உணவின் கண் அத்துணை சத்துப் பொருள் இல்லை யென்பதுவும் இவர் எண்ணமாகும். இவரின் இவ் வெண்ணம் எத்துணை அறியாமை வழியில் செல்கிறது! இவர்கள் மேனாட்டார் ஆராய்ச்சி முடிபை அறியார் போலும்! இன்று மேனாட்டார் ஊனுணவினும் பிற உணவின் கண்ணே மக்களின் உடலை யோம்புதற்குரிய சத்துப் பொருள் நிரம்பி யுள்ளதாக அறிவித்துள்ளார்கள். இஃதை ஊனுண்போர் உன்னி நோக்குதல் வேண்டும்.

இனி தெய்வத்தின் பொருட்டும் உயிர்க் கொலை செய்யப் படுகிறது. மக்களின் எண்ணம் என்னவென்றால் தெய்வங்கள் தம்பால் பலியை விரும்புகின்றன என்பதாம். இவ் வெண்ணத்தால் இவர்கள் ஆடு, கோழி, பன்றி யாதிய ஏழை உயிர்களை பலி செய்கிறார். அறியாமையின் சிறப்பும் இருந்தவாறென்னே! என்னே! தெய்வத்தின் அருட் குண மென்னை? அன்பை வளர்ப்பதன்றோ! அன்பை வளர்க்கும் தெய்வமா உயிர்ப் பலியை வேட்கும்? வேட்பதாக எண்ணுதல் அறியாமை அரும்பிய மக்களின் செய்கையே யன்றிப் பிற வென்னை? அறிவுடையார் இவ்வழிச் செல்வரோ?

தெய்வத்தின் முன்னர் பலி செய்யும் போழ்து அத் தெய்வம் ஆண்டு உறையுங் கொல்? தெய்வத்தின் நெஞ்சம் கல்லோ இரும்போ? அன்றி பிறவன் பொருளோ? தெய்வத்தின் நெஞ்சம் மிக மெல்லியதன்றோ? அந் நெஞ்சமோ இஃதைக் காண ஒருப்படும்? ஏற்கத் துணியும்?

தெய்வத்தின் முன்னர் பலி செயக் கொண்கும் உயிர்ப் பிராணி வாயற்ற ஒன்றன்றோ! அது கூரிய கத்தியைக் கண்டு எங்ஙனை யுற்றிருக்கும்! அதன் நெஞ்சம் எவ்வாறு துடி துடித்திருக்கும்! தனது துன்பத்தை கொடிய மகனிடம் கூறுதற்கு சக்தி அதற் கிருக்குமாயின் உரைத்துத் தப்பு மன்றோ! ஐயகோ! பாதகர் அதன் கழுத்தைத் துண்டிக்கிறார்! அப்போழ்து அது அலறுகிறது; ஆற்றுகிறது; அவ்வலறலும் அாற்றலும் அதன் உயிரின் ஒரு பாகமன்றோ! அதன் பின்னர் ஆண்டு குருதிக்குளம். ஆ! அதன் தலையற்ற உடல் துள்ளிக் குதிக்கிறது. இதைக்காண எவன் சகிப்பன்? வன்னெஞ்சமும் கரையுமன்றோ! இதையோ தெய்வம் விரும்பிற்று. கொடுமை! கொடுமை!!

உலகில் மக்கட்காகவே பிற பொருட்கள் படைக்கப்பட்டதென்பர் ஒரு சாரார். இவர் இவ்வெண்ணத்தால் தம் மனம் போந்த வழி உயிர்க்கொலை செய்கிறார். இது எத்துணை அறியாமை! உலகில் மக்கட்காகவே பிற பொருட்கள் படைக்கப்பட்டன. ஆனால் மக்கள் அப் பொருட்களை எம் முறையில் பயன் படுத்துதல் வேண்டும்? நேரிய முறையிலன்றோ பயன்படுத்துதல் வேண்டும்!

இறைவனால் மீன்கள் படைக்கப்பட்டன. எற்றுக்குப் படைக்கப்பட்டன? நீரைத் தூய்மைப் படுத்துதற்கு. மீன்கள் நீரின்கண்ணுள்ள அழுக்குகளை யெல்லாம் விழுமிய உணவாக உட்கொள்ளுகின்றன. மீன்களின்றேல் மகன் மாசுபடிந்த நீரையே உட்கொள்ளுதல் வேண்டும். மாசு படிந்த நீரை மகன் உண்ணின் பின் அவன் எந்நிலை அடைவன்? ஐயோ! அவன் கொடிய பிணிவாய்ப்பட்டன்றோ மடிவன். இந்நிலையில் மீன்கள் மகனுக்கு எத்துணை உயரிய தொண்டாற்றுகின்றன? அத் தொண்டின் நிலை உயர்வு சான்றது. இதற்கு மகன் மீன்கட்கு எத்துணை நன்றி செலுத்துதல் வேண்டும்? ஐயோ! அவன் செலுத்தும் நன்றி மிகக் கொடிது! அம்முறையில் மகன் நன்றி செலுத்துதல் கூடாது. மகன் மீன் குழுவை வளர்த்தலில் கண்ணுங் கருத்துமா யிருத்தலே மீன்கட்கு அவன் செலுத்தும் உயரிய நன்றியாகும். அந்நன்றியை அவன் செலுத்துதல் வேண்டும்.

அழகிய பறவைகள் இறைவனால் படைக்கப்பட்டன. அவைகள் மகன் கவலையால் கருகி வாடும்போழ்து தமது இனிய குரலாலும் எழில் மிக்க உருவாலும் அவனை இன்பூட்டுகின்றன. பறவையின் இனிய உருவிலும் எழில் மிக்க நடையிலும் உளங்கொண்டோன் கவலையால் வாடுதல் அரிது. இதற்காகவே இறைவனும் பறவைகளைப் படைத்தான். இஃதை யறியாது மகன் பறவைகளை கல்கொண்டு கொல்லுதலும் துப்பாக்கிகொண்டு சுடுதலும் எத்துணை அறியாமை! மகன் பறவையின் உயரிய செய்கையை கூர்ந்து நோக்குதல் வேண்டும். அது மகனுக்கு எத்துணைப்பாடம் கற்பிக்கிறது என்பதை ஊன்றி அறிதல்வேண்டும். பறவையை இறைவன் தமது வாகனமாய்க் கொண்டாரெனப் பழந்தமிழ் பனுவல் கூறும் உயரிய நுட்பத்தை நுணுகி ஆய்தல் வேண்டும். இவைகளை அறிந்து பறவையை ஓம்பிக் காத்தற்கு மகன் முற்படல்வேண்டும்.

மகனைப் பால்கொடுத்து ஓம்புவது ஆடும் மாடும். அவைகள் நிலங்கட்கு செழுமை மிக்க உரத்தையும் கொடுக்கின்றன. பால் மிகச் சத்துள்ள ஒரு பொருள். அப்பொருள் ஏனைப் பொருட்களிலும் மகனை நன்கு ஓம்புகிறது. வறுமை மிக்க நமது பாரதநாட்டில் பால் எத்துணை உயிர்களைக் காக்கிற தென்பதை நாட்டின் நிலையறிந்த நண்பர் அறிவர். அப் பால் தரும் ஆட்டையும் மாட்டையும் கொல்லுதல் எத்துணை மடமை!

மகன் ஆட்டையும் மாட்டையும் கொல்லுதலை அகற்றுதல் வேண்டும். அவைகளின் இன்றியமையாமையை நன்கு அறிதல்வேண்டும். ஊர்கடோறும் ஆடு மாடுகளை பண்ணைகள் வைத்துப் பெருக்குதல் வேண்டும்.

ஒவ்வொரு உயிர்ப்பிராணியையும் ஊன்றி நோக்கின் அவைகள் மகனுக்கு நலன் குறைதலேயன்றி கூடுவதில்லை. அவன் தன்னலன் அழிவோடு இயற்கை முனிவுக்கும் உடந்தை யாகிறான். இறைவன் அவனை ஒறுத்தே தீர்வன்.

கண்ணப்பர் இறைவரின் உயரிய தொண்டர். தமது பக்தியால் இறை அருளைப் பெற்றவர். அவர் கான் விலங்குகளை வேட்டையாடியே வாழ்வைக் கழித்தார். இறைவற்கும் கான் விலங்குகளின் ஊனைக் கொடுத்தார். ஆனல் இறைவர் அஃதை வேண்டாம் என்பரோ? பக்தி மிகுந்த கண்ணப்பர்

கொடுத்தவை யன்றோ? அஃதை ஒருவழி வாங்கி உண்டார். பின் இறைவர் கண்ணப்பரை எம்முறையில் ஆட்கொண்டார்? தமது விழிகளினின்றும் கண்ணீர் பெருக்கினர். தமது விழிநோயுடையது போன்று கண்ணப்பருக்குக் காட்டினர். இஃதைக் கண்ட கண்ணப்பர் பொறுப்பாரோ? தமது விழிகளைப் பிடுங்கி இறைவர்க் கீந்தார். இவைகளினின்றும் விளங்குவதென்னை? கண்ணப்பர் செய்த கொலைகட்கு இறைவர் அவரை ஆட்கொள்ளும்போழ்து துன்புறுத்தி ஆட்கொண்டமை தெரிகிறது. பக்தரென்று இறைவனர் வாளாவிட்டாரோ? கண்ணப்பர் செய்த கொலைகட்கு அவ்வாறு ஒறுக்கவே செய்தார்.

கோவலன் முற்பிறப்பில் அவமே ஒரு வணிகனை பகைவர்நாட்டு ஒற்றனெனக் கூறி கொலை செய்வித்தான். பின் கோவலன் நிலை என்னுயிற்று? மறுபிறப்பில் அவனும் அவமே கொலைப்பட்டான். அவன் எததுணை அறங்கள் செய்தான்? செய்தும் பயன் என்னை? கொலைப்பாவம் அவனைக் கொலைக்குட்படுத்திய தன்றோ! இதனுல் முற்பகல் செயின் பிற்பகல் விளையும் என்பதும் விளங்குகின்ற தன்றோ!

இனி உயிர்க்கொலை செய்வோரில் பெரும்பாலாரும் இறைவன் அருட்குவழி பெறுதே வாழ்வு நடாத்துவர். எனெனின் அவர்கள் நெஞ்சம் வன்மத்தால் உரன்பெற்று எப்போழ்தும் கொலையை நச்சியவண்ண மிருக்கும் கொலை நச்சும் உள்ளம் இறைவனை நினைக்குமோ? அவ்வுள்ளம் இறைவனை நினைக்கா. அவ்வுள்ளத்தில் அன்பு மெழா.

மக்கள் அருள் நெஞ்சராய் வாழ்க்கை நடாத்துதல் வேண்டும். அவரது உள்ளத்தின்கண் அன்பு வளர்தல் வேண்டும். அறிஞராயினும் கொலைத்தொழில் புரிவாராயின் அவரை உலகு மதியா. இறைவன் அருளையும் அவர் அடையார். இதையே ஆசிரியர் திருவள்ளுவனர்,

"நன்றாகு மாக்கம் பெரிதெனினும் சான்றோர்க்கு
கொன்றாகு மாக்கங் கடை."

என்னுங் குறளிடை வைத்துக் கூறினர். மக்கள் யாதோருயிர்க்கும் இடுக்கண் நிகழ்த்தாது, உலக நிலையாமையில் கருத்து இருத்தி, அன்பை யோம்பி இறைஅருள் பெற்று உய்தல்வேண்டும்.



# ஸதாசிவப் பிரம்மேந்திரர்

(V. சங்கர ஐயர்.)

இப்போது கொஞ்ச காலமாக இந்தியாவின் நிலைமை எத்தகை யது என்ற உண்மை உலகத்தோருக்கு நன்கு விளங்கத் தொடங்கி யிருக்கிறது. உலகத்தின் மற்றப் பாகங்களிலுள்ளோர்கள் காட்டு மனிதர்களாக ஆடைகள் கூட இல்லாமல் அலைந்து திரிந்து கொண்டிருந்த அக் காலத்திற்கும் முன்பே நமது நாடாகிய இந்தியாவானது நாகரீகம், கல்வி, செல்வம், சிற்பம், சங்கீதம், நாட்டியம், சாஹித்யம், கணிதம், வான சாஸ்திரம் முதலிய பல துறைகளிலும் முன்னேற்ற மடைந்திருந்தது என் பது பல ஆராய்ச்சிகளால் கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றன.

சென்ற வருஷம் நவராத்திரி மஹோத்ஸவத்துக்கு நான் புதுக் கோட் டைக்குச் செல்ல நேரிட்டது. அப்பொழுது அங்கு அவ்வளவு விமரிசையாக நவராத்திரி உற்சவம் நடப்பதற்குக் காரணம் ஸதாசிவப் பிரம்மேந்திர் தான் என்று நான் தெரிந்து கொண்டேன். ஆகையால் அம் மஹானுடைய சரித்திரத்தை பலரும் தெரிந்து கொள்ளும் பொருட்டு இங்கு எழுதத் துணிந்தேன். இம் மஹான் அஷ்ட சித்திகளும் பெற்றவர். அஷ்டமஹா சித்திகளென்றால் என்ன வென்பதை விளக்குகிறேன். அதைக் குறித்து தாயு மானவ ஸ்வாமிகள் விளக்கி யிருக்கிறார்.

(1) வசித்வம்:—(வசியப்படுத்துவது) கந்துகமதக் கரியை வசமாய் நடத்தலாம், கரடிவன்புலியையும் கட்டலாம் ஒரு சிங்க முதுகின் மேற்கொள்ள லாம், கட்செவியெடுத்தாட்டலாம்.

(2) மஹிமா:—வெந்தழலின் இரதம் வைத்து ஐந்து லோகத்தையும் வேதித்து விற்றுண்ணலாம்.

(3) அணிமா:—வேறொருவர் காணாமல் உலகத்துலாவலாம்.

(4) ஈசத்வம்:—விண்ணவரை யேவல் கொள்ளலாம்.

(5) பிராகாச்யம்:—சந்ததமும் இளமையோ டிருக்கலாம்.

(6) பிராப்தி:—மற்றொரு சரீரத்தினும் புகுதலாம்.

(7) லகிமா:—சலமேல் நடக்கலாம், கனல் மேலிருக்கலாம்.

(8) கரிமா:—தன்னிகரில் சித்தி பெறலாம். (தேஜோமயானந்தம் பாடல் 8.)

இம் மஹானைக் குறித்து தமிழ் நாட்டில் தெரியாதவர்கள் இருக்க முடி யாது. இவர் அத்வைத பரமாக பல ஸம்ஸ்கிருத புத்தகங்கள் எழுதி யிருக்கி

ளூர். இவர் பல அத்வைத கீர்த்தனங்களும் செய்திருக்கிறார். இம் மஹான் கும்பகோணத்திற்கு சமீபத்திலுள்ள திருவிசை நல்லூரில் வெல்நாடு என்ற தெலுங்குப் பிராம்மண வகுப்பில் மோக்ஷம் என்ற வீட்டுப் பெயரை யுடைய ஸோமஸுந்தர அவதானி என்பவரின் அருமைப் புதல்வர். இவர் பூர்வாசிரம நாமதேயம் சிவராம கிருஷ்ணன்.

இம் மஹான் தன் ஸஹபாடிகளான கௌண்டின்ய ராம பத்திர தீக்ஷிதர், அய்யர்வாள் என்ற ஸ்ரீதர வேங்கடேசுவரர், கோபால கிருஷ்ண சாஸ்திரிகள், என்ற மூவருடன் குருகுலவாசம் செய்து பல சாஸ்திரங்களைக் கற்றுக் கொண்டார். தர்க்க சாஸ்திரத்தில் மிகத் தேர்ச்சி யடைந்தனர். விவாஹமாகியும் குருகுல வாசத்திலேயே யிருந்து படித்து வந்தார். அப்படி யிருக்கும் பொழுது, இவருடைய மனைவி வயது அடைந்து புஷ்பவதியாகி யிருக்கும் விஷயத்தை ஒரு மனிதன் இவரது மாமனார் இல்லத்திலிருந்து குருவிடத்திற்கு வந்து கூறினன். உடனே குருவும் சீடனை யழைத்துச் செல்லும்படி ஆக்ஞாபித்தார். வெகு சந்தோஷமாக நமது சிவராம கிருஷ்ணனும் தமது மாமனாரில்லத்தை யடைந்தான். அங்கே பெண்களும், ஆண்களும் அவரவர்கள் வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தார்களே யன்றி இவரைக் குறித்துக் கவலைப்பட வில்லை. நாழிகையும் ஆயிற்று. நடந்து வந்த சிரமத்தாலும் பசியின் கொடுமையாலும் நமது சிவராம கிருஷ்ணன் அதிக சினமடைந்து "உலகம் கஷ்ட பரிபூரணம், மனைவி பெரியவளானதற்கே நமக்கு பட்டினி யிருக்க நேரிட்டது. இன்னும் சம்சாரத்தில் ஈடுபட்டால் எவ்விதத் துன்பங்கள் உண்டாகுமோ" என்று எண்ணி உடனே விரக்தி யடைந்து வெளிக் கிளம்பினர். பூர்வஜன்ம வாசனையால் 'காக்கை யேறினதும், பனம்பழம் விழுந்ததும்' என்ற பிரகாரம் இதே ஒரு காரணமாக சம்சார வாழ்க்கையை விட்டு பேரின்பத்தை நாடுவதற்குள்ள வழியைத் தேடச் சென்றார்.

பின் பரமசிவேந்திர சரஸ்வதி என்ற ஸன்னியாசியை குருவாக அடைந்தார். இக் குருவினல் இவரும் ஸன்யசிக்கப்பட்டு ஸதாசிவப் பிரமமேந்திர ஸரஸ்வதி என்று நாமதேயமிடப்பட்டார். பூர்வஜன்ம வாசனையால் வைராக்கியம் புத்தியின் பரிபக்குவம், இவைகளின் பலனல் எதில் குருவினிடத்திலிருந்து பல சித்திகளை யடைந்து மஹா யோகீந்திரரானர். இவர் ஸர்வஜாதி ஆசிரமதர்மாதி அதீதமான அதிவர்ணசிரமத்தையும், அவதூத ஸன்யாஸத்தையும் கைக்கொண்டார்.

தன் குருவினிடம் வரும் தார்க்கிகர்களை யெல்லாம் தாமே வாதத்தில் ஜயித்து வந்தார். இதைக் குறித்து சிலர் புகாராக இவர் குருவினிடம் கூறி அவருக்கு கோபத்தை மூட்ட அவரும் இம் மஹானை அழைத்து "ஸதாசிவ! நீ எப்பொழுது உன் வாயைக் கட்டப் போகிறாய்? அப்பொழுது தான் உனக்கு மன நிம்மதி உண்டாகும்" என்று கோபித்துக் கூறினர். உடனே நமது பிரம்மேந்திரர் மௌன விரதம் (பேசாமை) கொண்டார்.

ஒரு சமயம் அவ்தூதராக இருட்டில் ஒரு வயலில் வரப்பின் மேல் தலை வைத்து படுத்து உறங்கினர். அப்பொழுது அவ் வழியாகச் சென்ற சிலர் இவரைப் பார்த்து 'சன்யாசியாம்! அவதூதராம்! இவர் கெட்ட கேட்டுக்கு தலையணை எதற்கு!" என்றார்களாம். உடனே ஆகாயத்தில் அவர்கள் காண

உயர்ந்து அந்தரத்தில் படுத்தாராம். உடனே அவர்கள் "என்ன கர்வம்? சன்யாசிக்கு கர்வமுண்டா?" என்றனர்.

இச் சம்பவத்தின் பின் அதிக பரிபக்குவ மடைந்து கண்டதை யெல்லாம் உண்டு பித்தனாக ஊரூராகத்திரிந்து வந்தார். இவர் நிலைமையைக் கண்டு இவாது குருவும் அதிசயப்பட்டார். இச் சக்தி தமக்கில்லையே என்றும் ஏங்கினார்.

ஒரு சமயம் கொடுமுடிக்குச் சமீபம் காவேரிநதியின் நடுவில் மணலில் உட்கார்ந்திருக்கையில் திடீரென்று பெரு வெள்ளம் வந்து விட்டது. பலர் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே தண்ணீரில் மூழ்கி விட்டார். எல்லோரும் இவர் காலமாகி விட்டதாகவே எண்ணினார்கள். பிறகு மூன்று நான்கு மாதங்களுக்குப் பின் வெள்ளம் வற்றினதும் ஓடுகால் போடும் பொழுது ஓரிடத்திலிருந்து ரத்தம் வந்ததைப் பார்த்து ஆச்சரியத்துடன் கையால் மணலை ஒதுக்கிப் பார்க்க அம் மணலில் தூங்கிக் கொண்டிருக்கும் நமது ஸதாசிவத்தைக் கண்டு அவரை எடுத்தனர். உடனே தூங்கி எழுந்தவர் போல் எழுந்திருந்தனர். உடனே அவ்விடம் விட்டு புறப்பட்டனர்.

சிறு கிராமங்களிலும் மற்ற இடங்களிலும் சிறு பிள்ளைகள் இவரிடம் அதிகப் பிரியமா யிருப்பார்கள். இவர்களை இவர் தம் சக்தியால் உற்சாகப் படுத்தி வந்தனர். பிள்ளைகளுக்கு யோக சக்தியால் பற்பல இடங்களைக் காண்பிக்கவும், தின்பண்டங்களை வரவழைத்துக் கொடுக்கவும் செய்திருக்கின்றனர். ஒரு மனிதன் இவரை அன்புடன் சேவித்துப் பணி விடை செய்து வந்தான். அவன் நிரக்ஷகுக்ஷி. அவனை தன் மஹிமையால் மஹா வித்துவானாகச் செய்தனர்.

ஒரு சமயம், ஒரு துருஷ்க அரசனின் அரண்மனைக்குள் சென்றதற்காக இவருடைய கை யொன்றை வெட்டி விட்டான். கை வெட்டுப் பட்டதையும் உணராமல் பிரம்மம் போய்க் கொண்டிருந்ததைக் கண்ட அத் துருஷ்க அரசன் அவரை பின் பற்றிச் சென்று ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்து மன்னிப்புக் கோரினன். அவனுக்கு மன்னிப்புக் கொடுத்ததும் கை மறுபடியும் உண்டாகி விட்டது. இத் துருஷ்க அரசனுக்கு கிடைத்த பாக்கியம் கூட தனக்கு கிடைக்க வில்லையே என்று சிருங்கேரி சங்கராசாரிய சுவாமிகள் ஜகத்குரு நரசிம்ம பாரதி ஸ்வாமிகள் இரு சுலோகங்களால் பிரம்மத்தை தோத்திரித்திருக்கிறார்.

1760-ம் வருஷம் புதுக்கோட்டை சமஸ்தானததை ஆண்டு வந்த விஜய ரகுநாத தொண்டமான் ஒரு சமயம் காட்டிற்கு வேட்டைக்குச் சென்றான். அங்கு பிரம்மேந்திரரைச் சந்தித்தான். அம் மஹான் சில எழுத்துக்களை மணலில் எழுதிக் காட்டினார். அவர் ஆக்ஞைப் பிரகாரம் பிக்ஷாண்டர்கோவில் கோபாலகிருஷ்ண சாஸ்திரிகள் புதுக்கோட்டை அரசரின் குலகுருவானார். அம் மணலைக்கொண்டு வந்து தங்கப் பெட்டியில் வைத்து இப்பொழுது புதுக்கோட்டை ஸமஸ்தானத்தில் பூஜை செய்யப்பட்டு வருகிறது. அந்த உபதேசப்படியே புதுக்கோட்டை ராஜ்ய க்ஷேமத்திற்காக நவராத்திரி உத்ஸவம் நடைபெற்று வருகிறது. திருக்கோகர்ணத்தில் ஸதாசிவ பிரம்மரின் சிலை யொன்றிருக்கிறது. ஆனி மாதம் சுக்கில பக்ஷ தசமியன்று தான் அமராவதிக் கரையில் நெரூரில் சமாதி யடைவதாகவும் அன்று காசியிலிருந்து ஒரு

# கோயிலும்—குளமும்

—(0)—

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

"கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்"—என்பது பழமொழி. நவீன நாகரிகப் பேய் தலைவிரித் தாடும் தற்காலத் தமிழ் நாட்டில் கூட, இரண்டொரு சிறு கோயில்களேனும் இல்லாத கிராமத்தைக் காண்பது அரிது. "ஆலயம் தொழுவது சாலவும் நன்று"—என்பது ஔவைப் பாட்டியின் அமுத மொழி. ஆன்மா லயித்தற்கு உரிய இடமே, 'ஆலயம்' என்று முன்னோரால் வழங்கப் பட்டது. ஆயிரக் கணக்கான வருடங்களாக ஆயிரக் கணக்கான அன்பர்களால் பெரிதும் போற்றி வழிபடப் பட்டு வந்துள்ள தமிழ் நாட்டுத் திருக் கோயில்களின் ஒப்புயர் வற்ற பெருஞ் சிறப்பு எத்தகைய தென்பதையும் அக் கோயில்களை அடுத்துள்ள திருக் குளங்களின் சிறப்பு எத்தகைய தென்பதையும் விரித்து விளக்கிக் காட்ட முயல்வது, இக் கட்டுரையின் நோக்கமல்ல. தற்காலத் தமிழ் நாட்டில் வாழும் பெண்மணிகளால், இந் நாட்டிலுள்ள கோயில்களும் குளங்களும் எவ்வாறு உபயோகப் படுத்தப்பட்டு வருகின்றன என்பதைச் சிறிது எடுத்துக் காட்டுவதே இந்த கட்டுரையின் நோக்கம்.

இந்த செந்தமிழ் நாட்டிலே, கோயில்களும் குளங்களும் ஒன்றையொன்று அடுத்தாற் போலவே அமைந்திருப்பதன் தத்துவம் என்னவென்பதை முதலில் கவனிப்போம். முதலில், உடலிலுள்ள வெளி யழுக்குகளை அகற்றி உடலையும் உள்ளத்தையும் ஒருங்கே குளிர்வித்து புறத்தூய்மை பெறுவதற்காக ஏற்பட்டவை குளங்கள்; பின்னர், மனத்திலுள்ள தீய குணங்களாகிய உள்ளழுக்குகளை ஒழித்து உடலையும் உள்ளத்தையும் ஒருங்கே குளிர்வித்து அகத் தூய்மை அடைவதற்காக ஏற்பட்டவை கோயில்கள். ஆனால், இன்றைய செந்தமிழ் நாட்டிலே, அவை எத்தகைய நிலையிலிருக்கின்றன வென்பதைச் சற்று கவனிப்போம்.

---

பிராம்மணர் பாணலிங்கத்துடன் அங்கு வருவார் என்றும் அதைத் தன் சமாதிக் கருவில் பிரதிஷ்டை செய்ய வேண்டுமென்றும் கூறினார்.

அவர் சொன்னபடியே நடந்தது. இப்பொழுதும் உத்ஸவம் விமரிசையாக நெரூரில் நடந்து வருகிறது. இவர் பிரம்ம ஸூத்திரத்திற்கு தத்வப் பிரகாசிகையும், பதஞ்சலியோக ஸூத்திரத்திற்கு யோகஸுதாகரமும், அப்பய்ய தீக்ஷிதரின் ஸித்தாந்த லேச சங்கிரகத்துக்கு ஸித்தாந்த கல்பவல்லியும், இன்னும் அனேக கிரந்தங்களும் இம் மஹான் நியமதித்திருக்கிறார்.

தற்காலத் தமிழ் நாட்டிலுள்ள குளங்களிலும் கோயில்களிலும் ஸ்நான—தர்சனங்களை முன்னிட்டுக் கொண்டு கூடுவோரைக் கவனித்தால், ஆண்களைக் காட்டிலும் பெண்கள் இரும்டங்குக்கு மேல் அதிகப்பட் டிருப்பதை எளிதில் உணரக் கூடும். அதன் காரணம் என்ன? திடீரென்று, தமிழ் நாட்டு மாதர்களுக்கு பதி-பக்தியைக் காட்டிலும் தெய்வ-பக்தி அதிகப் பட்டு விட்டதா என்ன? ஸ்வாமி தரிசனத்தில் கொள்ளும் ஆவல், புருஷர்களைக் காட்டிலும் பெண்களுக்கு இரட்டித்து விட்டதா என்ன? அவை யெல்லாம் ஒன்றுமில்லை. பொழுது முழுதும் தத்தம் வீட்டுச் சிறைகளில் அடைபட்டு—வீட்டிலுள்ள மற்றவர்களின் அதிகாரங்களுக்கு அஞ்சி அடங்கி—உழைத்துக் கொண்டிருக்கும் பெண்களுக்கு, சிறிது நேரமேனும் சுதந்திர இன்பத்தை அனுபவிக்கக் கூடிய இடங்களாக விளங்குகின்றன குளங்களும் கோயில்களும். ஆனால், அந்த சொற்ப ஒய்வு நேரத்திலேனும் பகவத் சிந்தனையிலும் அமைதியிலும் மனத்தைச் செலுத்தாமல், அந்த குளங்களையும் கோயில்களையும் 'வம்பர் மகாசபை' கூடுவதற்கு உரிய 'நகரப் பொது நிலையங்' (Town Hall) களாகச் செய்து வரும் பெண்மணிகளைச் சிந்திக்கும் போது, சிரிப்பும் வருத்தமும் ஒருங்கே கலந்து உண்டாகின்றன.

ஊர் வம்புகளை யெல்லாம் எடுத்துப் பேசி 'கிருக தேவதைகள்' ஒருவரோ டொருவர் கலந்து உரையாடும் "Ladies clubs" ஆக இருந்து வரும் குளங்கள், சிற்சில சமயங்களில் வசைச் சண்டை—மயிர்பிடிச் சண்டை—முதலிய சண்டைகள் தொடங்கி விடும் போர்க் களங்களாகவும் மாறி விடுவதுண்டு. அப்பொழுது அவை புருஷர்களும் சிறுவர்களும் கூடி நின்று வேடிக்கை பார்க்கும் விநோதக் காட்சிச் சாலைகளாகவும் விளங்கும். 'கிருக தேவதைக'ளாகிய பெண் தெய்வங்களுக்குள் சண்டை தொடங்கி விட்டால், அவற்றினிடையில் தலையிட்டு இருதிறத்தினரையும் சமாதானப் படுத்தும் உரிமையும் அப் பெண் தெய்வங்களுக்கே உண்டு. அத்தகைய யுத்தங்களில் எந்த ஆடவனேனும் தலையிட்டுச் சமாதானம் செய்யத் துணிந்து முன்வருவானுனல், அவன் இரு கட்சியினரின் வசைகளுக்கும் உள்ளாகி கண்டோர் பரிகசிக்கும்படி அவமானமடைய வேண்டியது தான். கிராமங்களில் காலை மாலை வேளைகளில் குளக்கரைகள் வாய்ப் போர்க் களங்களாகக் காட்சி அளிப்பது போல், நகரங்களில் 'குழாயடிகள்' காட்சி யளிக்கின்றன. உயிர் வாழ்வதற்கு இன்றி யமையாததான ஜலத்தைக் கொண்டு வருவதற்காக தினந்தோறும் 'கிருக லக்ஷ்மிகள்' குளக்கரைக்குச் செல்ல வேண்டியிருப்பது அத்தியாவசிய மென்பதை யாரும் மறுக்க முடியாது. ஆனால், வீட்டுத் தொல்லைகள் எல்லாவற்றினின்றும் விடுதலை பெற்று ஒருவரோ டொருவர் கலந்து பேசிக் களிக்கக் கூடியவாறு கிடைக்கும் சொற்ப சுதந்திர நேரத்தை, 'பெண் தெய்வங்கள்' ஊர் வம்புப் பேச்சுகளில் செலவிட்டு சொந்தக் கவலைகளுடன் ஊர்க் கவலைகளையும் விலை கொடுத்து வலிய வாங்கி மன அமைதி இழப்பானேன்? அந்த சொற்ப நேரத்தை ராஜீய—தேசிய விஷயமான பேச்சுக்களிலும் பக்தி ரஸம் நிறைந்த பயன் மிகுந்த பேச்சுக்களிலும் செலவிட்டு கிராமக் குளங்களை தேசிய மணம் கமழும் சபைகளாகவும் சமரச—சன்மார்க்க சாது சங்கங்களாகவும் மாற்றி விடுவார்களாயின், தற்காலக் கிராமப் 'பெண் தெய்வங்கள்' அரும் பெரும் புகழுக்கும் செந்தமிழ்த் தாயின் பேரருளுக்கும் மிக மிக எளிதில் பாத்திரர்களாகக் கூடுமல்லவா?

மேலும், வீட்டுக்கு விலக்கான மாதர்களும் பல குழந்தைகளைப் பெற்றெடுத்த தாய்மாரும் தெய்விகத் தன்மை பொருந்திய பரிசுத்தம் மிகுந்தனவாகக் கருதப்படும் திருக் குளங்களில் செய்யும் செயல்கள், பொது ஜனங்களின் சுகாதாரத்தைப் பெரிதும் பாதிப்பனவாக இருக்கின்றன. திருக் கோயில்களை அடுத்துள்ள திருக் குளங்கள் பக்தர்களின் பாவங்களைப் போக்குவதற்காக ஏற்பட்டனவே யன்றி, ஸ்த்ரீகளின் தீட்டையும் சிறு குழந்தைகள் செய்த அசுத்தங்கள் நிறைந்த பாய்—துணி முதலியவற்றின் தீட்டையும் போக்குவதற்காக ஏற்பட்டன வல்ல. ஆதலின், தினந்தோறும் பற்பலர் நீராடும் திருக் குளங்களை அசுத்தப் படுத்தத் துணியும் பெண்கள், தீர்த்த நாயகனை ஆண்டவனது மகத்தான கோபத்திற்கும் பக்தர்களின் சுகாதாரத்திற்குப் பெருங் கேடு விளைவித்த மகா பாபத்திற்கும் ஆளாவ ரென்பதை இனியேனும் நன்கு உணர்ந்து கொள்ள வேண்டும்.

தற்காலத் தமிழ் நாட்டில் விளங்கும் திருக் குளங்கள் முற்காலத்தில் எத்தனையோ பக்தர்களின் மகா பாபங்களைப் போக்கி இஷ்ட சித்திகளைக் கொடுத்திருக்கக் கூடும். ஆனல், அது ஒன்றையே மனத்தில் பதிய வைத்துக் கொண்டு, எப்படிப் பட்ட கொடிய பாவங்களைச் செய்தாலும் ஒரே ஒரு முழுக்கில் தீர்த்து விடக் கூடிய சக்தி அத் திருக் குளங்களுக்கு உண்டென்னும் துணிவினல், மேன் மேலும் தீவிரமான உற்சாகத்துடன் பாவச் செயல்களில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் 'பக்த சிரோமணிக'ளும் சிலர் உண்டு. திருக் குளங்களில் மூழ்கும் போது அவற்றின் தெய்விகத் தன்மை பொருந்திய விசேஷ வைபவங்களை மனத்தில் சிந்திப்பதால், அலைந்து கொண்டிருக்கும் மனம் அமைதி பெற்று பகவத்—பக்தியில் படிந்து குடைந்தாடித் தூய்மை பெறக் கூடு மென்னும் சீரிய நோக்கத்தினலேயே, நமது முன்னேர் தீர்த்தங்களின் மகிமையைப் பலவாறு சிறப்பித்துக் கூறி யிருக்கின்றன ரென்பதை ஒவ்வொருவரும் உணர்ந்து கொள்ள வேண்டும்.

இனி, தற்காலத் தமிழ் நாட்டு மாதர்கள் தெய்வ சாந்நித்யம் மிகுந்த திருக் கோயில்களில் எவ்வாறு நடந்து கொள்கின்றன ரென்பதைச் சிறிது கவனிப்போம். முற்காலத் தமிழ்ப் பெண்கள், தங்களது உடல் மற்ற புருஷர்களின் மேல் படுவதைச் சிறிதும் சகியாதவர்களாக விளங்கினர். 'நாணம்—மடம்—அச்சம்—பயிர்ப்பு'—எனும் நால்வகைப் படைகளால் தத்தமது காதலரின் மனக் கோயிலில் ஏக போக சுதந்திரத்துடன் ஆட்சி செலுத்திக் கொண்டிருந்தது, தமிழ்ப் பெண்களின் தனிப் பெருஞ் சிறப்பாக விளங்கியது. அவர்களது அத்தகைய ஆட்சியின் பயனக, வேறு எவருக்கும் பயப்படாத வருணன் கூட அவர்களது கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடக்க நேர்ந்தது. "தெய்வந் தொழாஅள்—கொழுநற் றொழுதெழுவாள்—பெய்யெனப் பெய்யும் மழை"—என்ருர் பொய்யா மொழிப் புலவராகிய நாயனரும். அவர்களது ஆட்சிக்கு வருணன் அடங்கி நடந்து கொண்டிருந்ததால், புருஷர்கள் மழையைப் பற்றிய கவலையேயின்றி பழுதற்ற தொழிலாகிய பயிர்த் தொழிலில் ஈடுபட்டு, பூமி தேவியின் பேரருளை எளிதில் பெற்று, மகிழ்ச்சி பொங்கிப் பெருகும் மன முடையவர்களாய் வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தனர். கடந்து போன அந்த பழைய காலம், இனி திரும்பிவரக் கூடு மென்னும் நம்பிக்கைக்கு இட முண்டோ?

தற்காலத் தமிழ் நாட்டுக் கோயில்களின் பிரகாரங்களில் பெண்மணிகள் பிரதட்சிணம் செய்யும் போது, அவர்களது திருவாய் பெரும்பாலும் அவர்களது உடலுடன் ஒத்துழைப்பதில்லை.

"ஏண்டி, மீனு! மூத்தாநேத்து கோமளத்துக்கு சீமந்தம் நடந்துதாமே! அவா தாயாராத்துக்காரர் என்னென்ன சீர் பண்ணி யிருந்தா, நோக்குத் தெரியுமோ?"

"என் கேக்கிறே, அந்த வெட்கக் கேட்டை? யாராவது அஞ்சாறு ஆத்துக்காவது வந்து அழைச்சாளா? எங்கியாவது நாலு பேர் தப்பித் தவறி வந்துட்டா, வரிசை குடுத்த பவிஷைப் பார்த்து சிரிக்கப் போறான்னு தான் அவான் யாரையும் கூப்பிடாமே விட்டுட்டான் போலிருக்கு? அத்தொட்டு தான் ஒருத்தருக்கும் தெரியாமே, காதோடு காது வச்சாப் போலே காரியத்தை நடத்தி விட்டா".

"ஏண்டி, அலமு! உங்காத்துக்காரருக்கு, உங்கப்பா எவ்வளவோ பணம் செலவழிச்சி பீ. ஏ. (B.A.) வரேலே படிக்கவச்சாளாமே! அவருக்கு, ஏதாவது வேலை கீலை கிடைச்சு தோல்லியோ?"

"அந்த கண்றாவியை என் கேக்கிறே? பணத்தை சுளை சுளையாச் செலவழிச்சது தான் கண்ட பலன், எத்தனை எத்தனையோ 'அப்ளிகேஷன்' போட்டாச்சு; யாராரையோ 'காக்கா பிடிச்சிப்' பார்த்தாச்சு. அவர் ஏறாத ஆபீசில்லே; கேக்காத உத்தியோகமில்லை. ஒண்ணும் பலிக்கவேயில்லே பாழும் படிப்புக்கு செலவழிச்ச பணத்தைக் கொண்டு ஒரு கடை வச்சிருந்தால், கௌரவமாய் பிழைச்சுக்கலாம்."

பகவத் சந்நிதிகளின் பிரகாரங்களில் 'கிருக லக்ஷ்மிக'ளின் கால்கள் தம்மையு மறியாமல் தாமாக நடந்து கொண்டிருக்கும் போது, அவர்களது திருவாய் செய்யும் 'ஸ்தோத்ரங்கள்—மந்த்ரோச்சாரணங்கள்—தத்வ விசாரணைகள்—பாசுர அநுஸந்தானங்கள்'—எல்லாம் இத்தகைய சம்பாஷணைகளே. இத்தகைய சம்பாஷணைகளால் எவ்வளவு புண்ணியம் சம்பாதிக்கக் கூடுமென்பதைச் சொல்லவும் வேண்டுமோ? விலையுயர்ந்த நகைகளுக்கும் பகட்டான நவீன நாகரிக 'புது மோஸ்தர்' சேலைகளுக்கும் தாங்கள் சொந்தக்காரிக ளென்பதை மற்ற பெண்களுக்கு விளம்பரப் படுத்துவதற்காகவே—மற்ற மங்கையரின் கவனத்தைத் தங்களிடம் இழுக்க முயற்சிப்பதற்காகவே—தங்களை ஆடம்பரமாக அலங்கரித்துக் கொண்டு கோயில்களுக்குச் செல்லும் சிமாட்டிகளும் பலர் உண்டு.

பாரத நாட்டின் பிற்கால வீரர்களாவதற்கு உரிய குழந்தைகளை வளர்ப்பவர்களும் வாழ்க்கைப் பிரயாணத்தில் ஆடவர்களுக்கு இணையற்ற துணைவிகளாக விளங்க வேண்டியவர்களுமான பெண்மணிகள், கோயில்களையும் குளங்களையும் 'வம்பர் மகா சபைகள்' கூடுவதற்கு உரிய இடங்களாகக் கொண்டிருப்பதை நினைக்க நினைக்க, உண்மைத் தமிழன் ஒவ்வொருவன் மனமும் பெரிதும் வருந்து மன்றோ! அவ் வருத்தம் நீங்குமாறு செந்தமிழ்த் தாய் திருவருள் புரியத் திருவுள்ளம் இரங்கும் காலம், கூடிய விரைவில் நோக் கூடுமென்னும் நம்பிக்கைக்கு இனியேனும் இட முண்டாகுமா?

---

# உண்மைக் குற்றவாளி



"அனந்தன்"



இளந்தென்றல் புஷ்பங்களின் நறுமணத்தைச் சேகரித்து எங்கும் வீசிற்று. பூங்காவின் நடுவில் அமைக்கப்பட்ட ஆசனத்தில் ஒரு பெண்பாவை கையில் புகைப்படத்துடன் அமர்ந்திருந்தாள். காலடி சப்தம் கேட்கவே தலையை இறக்கி அப் படத்தையே உன்னிப்பாய் நோக்கு பவள்போல் காணப்பட்டாள். பின்பக்க மிருந்து மணி என்னும் வாலிபன் அடி மேலடி வைத்து நடந்துவந்து அவள் கண்களைப் பொத்தி முத்தமிட்டான். "யாரது?" என்ற சப்தத்துடன் எழுந் திருந்தாள் அப்பெண். மணிஅவள் முகத் தைப் பார்த்ததும் தணலை மிதித்தவன் போல் ஆயினன். திடீரெனத் தன்முன் சரோஜா வெறுப்புடைய முகத்துடன் நிற் பதைக் கண்டான். அப்பாவை சரோஜாவைக் கண்டதும் வேகமாகச் சென்றான்.



"ச—ரோஜா இவள்.........யார்?" என்று தழதழத்த குரலுடன் கேட்டான் மணி.

"ஏன்? உங்கள் வைப்பாட்டிதான்" என்று அகங்காரச் சிரிப்புடன் மொழிந்தாள் சரோஜா.

"என்ன வார்த்தை சொன்னாய்!"

"நான் எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டுதா னிருந்தேன். முழுப் பூஷணிக்காயை சோற்றில் மறைக்க முயலவேண்டாம்."

"என்ன என்ன? என்னை அப்படி எண்ணி விட்டாயா" என்று அவள் கைகளைப் பிடித்தான்.

கரங்களை உதறிவிட்டு அப்பால் சென்றாள் சரோஜா. மணி கற்சிலை போல் நின்ற இடத்திலே நின்றுவிட்டான்; எவ்வளவு நேரம் நின்றானோ. இருள் சூழ்ந்து கொண்டதும் தன் சுய உணர்ச்சிக்கு வந்தான். காதலியை சுற்றுமுற்றும் தேடினன். வீதிக்கு ஓடிவந்தான். ஏதாவது வண்டிகள் வந்தால் அதில் எட்டிப்பார்த்து காதலியிடம் உண்மையைத் தெரிவித்து அவ

சாத்தினால் தவறியது என்று சொல்லி மன்னிப்பு பெற்றுக் கொள்ளலாம் என்று எண்ணுவான். காதலியினால் வெறுக்கப்படவே வெறி கொண்டவன் போலாயினான். மோட்டார் ஏதாவது சென்றால் அதை வழிமறித்து நிறுத்தி அது நின்றதும் கிட்டேசென்று பார்ப்பான். யாராவது திட்டினாலும் அடித்தாலும் பொருட் படுத்தவில்லை.

இரண்டு மூன்று தெருக்களைத் தாண்டினதும் தன்முன் அதிவேகமாக ஒரு மோட்டார் வந்து கொண்டிருப்பதைக் கண்டான். சடக்கென நடுப் பாதையில் போய் நின்றான். முன்னிருந்த விளக்கு வெளிச்சத்தினால் ஆள் நின்று இருப்பதைக் கண்டு அநேக ஹாரன் சப்தங்கள் கிளம்பின. ஒன்றும் நமது மணியை நகர வைப்பதாகத் தெரியவில்லை. கடைசியில் காரும் நின்றது. ஓடிப்போய் அதில் பார்த்தான். அதற்குள் எதிர்ப்புறம் ஒரு மோட்டார் பறந்துவந்தது. அதை மறிக்க ஓடும்போது, "இன்றோடு கலெக்டர் ஒழிந்தான்" என்ற குரலும் ஒரு துப்பாக்கி வெடி சப்தமும் கேட்டது.



.........ஓடிப்போய் அதில் பார்த்தான்.

குண்டு மணியின் கரத்தை ஊடுருவி கலெக்டரின் மண்டையில் பட்டது. எந்த காரிலிருந்து வெடி கிளம்பியது என்று அவனால் ஊகிக்க முடியவில்லை. சப்தம் வந்த திக்கில் தனது ரிவால்வரால் சுட்டான். அவ்வளவுதான். "ஐயோ! கையை ஒடித்துவிட்டான். ஸ்டியரிங் பிடி" என்ற சப்தமும் கார் கிளம்பும் சப்தமும் கேட்டது. ஒரு நிமிடத்திற்குள் ஒன்றை ஒன்று துரத்திக்கொண்டு இரு மோட்டார்களும் சென்றுவிட்டன.

மணி மனக்கலக்கத்துடன் வீடு சென்றான். கையிலிருந்து வடிந்த ரத்தத்தைத் துடைத்துவிட்டு மருந்துகள் போட்டுக் கட்டிக்கொண்டான். அவனது எண்ணம் தூக்கத்தில் செல்லவில்லை. காதலியை நினைத்து வாடினான். பொழுதும் விடிந்தது. நியூஸ்பேபர் விற்கும் சிறுவன் பேபர் ஒன்றை வைத்துவிட்டுச் சென்றான். வலியை மாற்றுவதற்காக அதை எடுத்துப் படித்தான். அதன்மேல் புத்தி செல்லவில்லை. திடீரென அவன் கண்கள் கொட்டையாக அச்சடிக்கப் பட்டிருந்த ஒரு இடத்தை நோக்கின. அதைப் படித்துவிட்டு தன் கரத்தைப் பார்த்தான். உடனே திகில் பிடித்தது. "கையில் குண்டு பாய்ந்திருப்பவனைப் பிடித்து கைது செய்தாவது அவன் இருப்பிடத்தை அறிவிப்பவர்களுக்காவது ரூபாய் ஐயாயிரம் கலெக்டரால் கொடுக்கப்படும்." என்ற வார்த்தைகளே அவனைப் பயப்படுத்தியது. தனது கைத்துப்பாக்கியை எடுத்துப் பார்த்தான். தான் சுட்டது ஞாபகம் வந்தது. தான்தான் கொலை செய்யச் சுட்டு விட்டதாக கலெக்டர் நினைத்திருப்பார் என்று எண்ணினான். தன் மனது மாறுபட்டிருந்ததால் தான் அவரை யேன் சுட்டிருக்கக் கூடாது என்றும் எண்ணினான்.

நேரே பம்பாய்க்கு ரயிலேறிவிட்டான். அங்கு சென்றுவது தன் வாழ் நாட்களை பிரம்மச்சாரியாகவே கழித்து விடலாம் என்று எண்ணினன். சரோஜாவின் நினைவு அவனை விட்டகலவில்லை. அவனுக்கு ஹிந்தி பாஷை நன்ருகத் தெரிந்திருந்ததில் கொஞ்சம் நன்மை யுண்டாயிற்று. மெள்ள மெள்ள ஒரு ஆஸ்பத்திரியில் டாக்டர் வேலைக்கமர்ந்தான். அவனது வசிகா மான குணங்களும் பேச்சுக்களும் நோயாளிகளைக் குணப்படுத்த போதுமான தாக இருந்தது. அவனது பெயர் எல்லாரது வாயிலும் புகழப்பட்டது. எங் கிருந்தும் நோயாளிகள் சிகிச்சைக்கு வந்திருந்தனர். இதற்கெல்லாம் நடுவில் அவனது மனம் சஞ்சலப்பட்டுக் கொண்டே யிருந்தது.

இரண்டு மாதங்கள் கழிந்தன. ஒருநாள் பத்திரிகையில் "சேலம் கலெக் டரைக் கொல்ல முயன்றவன் அகப்பட்டுவிட்டான்" என்று பிரசுரப்படுத்தி யிருந்ததைக் கண்டான். உடனே அவனது மனம் கொஞ்சம் சந்தோஷப் பட்டது. சடக்கென தன் கரத்தை நோக்கினன். முன்னிருந்ததை விடப் பன்மடங்கு கிலேசமுற்றான். 'கொலையாளி இங்கிருக்க நிரபராதியை ஏன் ஹிம்சிக்கிருர். நான்போய் அவனை மீட்டு நானே இறக்கிறேன்" என்று தீர் மானித்துக் கொண்டு அன்றைய தினமே சேலத்திற்குச் சென்ருன்.

ஸ்டேஷனை விட்டுத் தாண்டியதும் கால்கள் நடுங்க ஆரம்பித்தன. தூக்கு மேடைக்குக் கொண்டு போகப்படும் கைதியைப்போல நடந்து சென் ருன். கலெக்டர் பங்களாவை நெருங்கியதும் பற்கள் கெட்டித்துக் கொண் டன. தலை சுற்ற ஆரம்பித்தது. "என் காதலி என்னை என்ன நினைப்பாள்? தன் தகப்பனைக் கொன்ற பாதகன் என்று வெறுக்கமாட்டாளோ! இருந்தா லும் நிரபராதியை விடுவிக்க வேண்டும்" என்ற எண்ணம் தூண்டவே மனதை திடப்படுத்திக் கொண்டு கேசவனிடம் சென்று "கொலையாளி இருக்குமிடம் சொல்லுவதாக எஜமானனிடம் சொல்லு" என்ருன்.

கேசவனே சிரித்துக் கொண்டே, "அவன் எப்போதோ அகப்பட்டுக் கொண்டான். நீ பொய் சொல்லி இனும் பணத்தை அடிச்சுக்கொண்டு போகப் போகிருயா" என்று இழிவுபடுத்தினன். இதற்குள் ஒரு மோட்டார் வரும் சப்தம் கேட்டது. மணி திரும்பிப் பார்த்தான். திடீரென மயங்கி விழுந்து விட்டான். கலெக்டர் அவனை தூக்கிவரும்படி உத்தரவிட்டு உள் சென்ருர். மணி கண்விழித்தான். தன் பக்கத்தில் சரோஜா உட்கார்ந்திருப் பதைக் கண்டான். கண்களை நன்ருய் விழித்துப் பார்த்து உண்மைதான் என உணர்ந்தான்.

"ஆ! மணி உன்னை எப்போது காண்பேனே என்றிருந்தேன்" என்று வாஞ்சையுடன் அவனது கரங்களைத் தடவினள்,

"என்னைத் தொடவும் உனக்கு மனம் வருகின்றதா! கொலைகாரப் பாவியாகிய என்னை........" என்று சொல்லுவதற்குள் உள்ளே கலெக்டர் நுழைந்தார்.

"அப்பா, இவ்வளவுநாள் எங்கேயோ சென்று இப்போதுதான் திரும்பி யிருக்கிருர்."

மணி கண்களை மூடினன். தான் துப்பாக்கியால் சுட்டதும் மற்றவை களையும் ஞாபகப்படுத்தினன். தைரியத்துடன் உண்மையை உரைப்பதே நல்லது என்று, "ஐயா, தங்களைச்......சுட்ட பாபி இதோ இருக்கின்றேன். குற்றவாளி நிரபராதி" என்ருன்.

"என்ன, தாங்களா குற்றவாளியா" என்று ஆச்சரியத்துடன் கேட்டாள் சரோஜா;

"ஆம்; இந்தக் கரம் சொல்லும்" என்று காயவடு இருந்த இடது கரத்தை கலெக்டரிடம் காண்பித்தான்.

கலெக்டர் சிறிதுநேரம் யோஜித்தார். சடக்கென அக்கரத்தை இரு கைகளாலும் பிடித்துக்கொண்டு, "என் உயிரைக் காத்த புண்ணிய புருஷன் இதோ இருக்கிருர்" என்று சொல்லி வாய் மூடுமுன், "என்னப்பா" என்று கேட்டாள்.

"என்னை அப்படுபாவி கொல்லச் சுடும்போது இவர் கையில் குண்டு பாய்ந்து என் மண்டையில் பட்டு மூர்ச்சையடையச் செய்தது. இவரது கா மில்லாவிட்டால் நான் அப்போதே இறந்திருப்பேன்." என்று கூறி முடித் தார்.

---

# பேன் புராணம்

(ஆசிரியர் அழகனர்.)

## 1. பேன்களின் பதி விடம்

எதற்கும் புராணம் புராணம், புராணம் புராணக் கதை உண்டா என்பதே கேள்வியாப் போச்சுது நமது பக்தி மலிந்த பாரத நாட்டிலே. புராணக் கதை இது என்று சொல்லிவிட்டாலோ பூரா நம்பிக்கையும் அதில் உண்டாகிவிடுகிறது. ஐயா பேனுக்கேது புராணக் கதை? என்று கேட்பீர்களோ? புராணத்தில்தான் பூராப் பேர்வழிகளுக்கும் கதைகள் இருக்கின்றனவே. கந்தப் புராணத்தில் எந்தப் பிராணிக்கும் ஒரு புளுகுக் கதை புதைந்து கிடக்கிறது என்பது வெட்ட வெளியும் வட்டபோளியும் போலத் தெளிவாயிற்று. கந்தபுராணத்தில் ஆயிரத்தெட்டாம் காண்டத்தில் ஐம்பத்தெட்டாம் படலத்தில், "வாரீர் வரமிக்க வறிஞர்களே, நான்கு திசைகளுக்கும் நான்கு முகமுடையவனும் ஞானிலப் பொருள்கள் யாவையும் சிருஷ்டித்து அந்தந்த சிருஷ்டிகளை அதனதன் இடத்திற்கு அனுப்பிக்கொண்டிருக்கும் அலுவலில் ஒருநாள் பிரமாதிபன் பலமாகச் சிக்கி இருந்தார். அலுவல் மிகுதியால் பிரமாவுக்கு அதிகக் களைப்புண்டாகி இளைத்தார். எட்டுக் கண்களாலும் எட்டக்கூடிய எல்லா இடங்களிலும் நிறையும்படி தமது கைப் பொருள்களைக் கணந்தோறும் அனுப்பிக்கொண்டிருந்து கையும் சோர்ந்தார். மெய்யும் சோர்ந்து ஒருபால் மகிழ்ச்சியும் ஒருபால் கோபமும் கொண்டிருந்தார். அந்த நேரத்தில் அவருடைய சிருஷ்டிப் பொருள்களில் ஒன்றாகிய பேன் அவரிடம் வந்து, "நாயகா, நாங்கள் ஞானிலத்தில் எங்கேபோய் வசிப்பது, நாங்கள் சௌகரியமாய் இருக்க இடமில்லாமல் தவிக்கிறோமே" என்று கேட்டது. பிரமனவர் உழைத்த களைப்பால் மிஞ்சிய கோபத்தோடு யோசித்துப் பார்க்கையில் பேன்களுக்குரிய வாசஸ்தானத்தை வகுத்துக்கொடுக்க இயலாமல் எந்த இடத்தை நிர்மானிப்பது என்று திகைத்தார். அப்பொழுது பேன்கள் முன்னிலும் ஆத்திரமடைந்து "ஐயா, எங்களுக்கு நல்ல ஓரிடத்தைஉடனே காட்டுங்கள்; உங்களுக்கு எங்கள்மேல் அன்பில்லையா" என்று விடாமல் அலட்டிக்கொண்டிருந்தன. பிரமன் தமது நெஞ்சில் கைவைத்து ஓரிடத்தை நினைத்துப் பார்த்தார்; தலையை ஆட்டி ஆட்டிப் பார்த்து எந்த இடத்திற்குப் போகச் சொல்வது என்று யோசித்தார். ஒன்றும் தென்படாததால் திகைத்தார். அப்பொழுது பேன்களுக்குக் கோபமுண்டாயிற்று. "ஐயா, எங்களைப் படைக்கத் தெரியும்; பதியில் இருத்தத் தெரியாது. உம்முடைய திறமை வெகு நன்று" என்று பகடிபண்ண ஆரம்பித்தன. பிரமன் தமது மண்டையைக் கோபத்தோடு சொரிந்து பார்த்து, இன்ன இடத்திற்கு போங்கள் என்று சொல்லியனுப்பக் கூடாதவராய்க் கோபத்தோடு, "இடம், இடம், உங்களுக்கா இடம் எங்கே போவீர்கள் என் தலைமயிர்க்குள்ளே போங்கள்" என்று கோடை இடிபோல் இடித்தார். அதைக் கேட்ட பேன்கள் யாவும் உடனே

மயிர்களுக்குள் போய்விட்டன. எனவே அன்று முதல் அவை பிரமன் முதல் மக்கள் அனைவர்களுடைய தலைகளையும் தங்களுக்கு இடமாகக் கொண்டு வாழ்ந்து வருகின்றன என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது மெய்தான் என்று ஒப்புக்கொள்ள ஆக்ஷேபனையும் இல்லையே.

## 2. பேன்கள் மூட்டும் சண்டை

ஒரு நாள் மிஸ்டர் சலம் என்பவர் தமது டாய்லட் மேஜையருகில் நின்று கண்ணாடியைப் பார்த்துத் தலை வாரிக் கொண்டிருந்தார். அப்பொழுது ஒரு தக்கடிப் பேனொன்று பொத் தென்று அவர் சட்டை மேல் விழுந்ததைக் கண்டார். கண்டதும் உண்டான கோபம் அவரைத் தூக்கி வாரிப் போட்டது. உடனே அவர் தமது ஸரஸாவைக் கூப்பிட்டு, "அடீ, ஸரஸா, உன் தலையில் உள்ள பேன் தான் என் தலையில் ஏறி விட்டது. நீ தினந் தோறும் நன்ருய்த் தலை வாரிப் பேன் எடுக்கிருயா?" என்க, 'ஆமா, நீங்க எந்த வேளையும என் மேல்தான் குற்றங் கண்டு பிடிக்கப் பார்ப்பீர்கள். உங்க தலையில் உள்ள பேன்கள் எல்லாம் என் தலையில் ஏறி விட்டன என்று நான் எண்ணிக் கொண்டிருக்கிறேன்!" என்ருள். மிஸ்டர் சலம் தம் மனைவியைப் பார்த்து, 'அடீ, அதிகம் பேசுகிருயே, எனக்காவது, பேனாவது, கத்தியால் வழித்துப் பார்த்தாலும் ஒரு பேன் கூட எடுக்க முடியாதே' எனலும், ஸரஸா ஓடிப்போய் ஒரு சீப்பை எடுத்துக் கொண்டு வந்து, மிஸ்டர் சலத்தினுடைய தலைமயிரைச் சாட்டுச் சாட் டென்று சீவினதும், தப்பு திப் பென்று ஐந்தாறு பேன்கள் விழுந்தன. இதோ, பார்த்தீர்களா, உங்கள் தலையிலா பேன்கள் இல்லை—ஐயோ பாவம், ஒரு பேனும் காணமுடியாத என் தலை உங்களால் போயிற்று" என்று சொன்ன உடனே, மிஸ்டர் சலம் ஒருவாறு தான் முன்பு கூறியதை நிலை நிறுத்த வேண்டி, என்னமோ முதல்வது நான் காட்டிய பேன் உன்னுடைய பேன்தான், வேற்றுப் பேன் தான் தலையில் மிதந்து கொண்டு திரியும் என்பார்கள். ஆகையால்தான் முதலடியிலேயே அந்தத் தக்கடிப் பேன் விழுந்தது. மற்றப் பேன்களும் உன் தலையில் உள்ளனவாகவே இருத்தல் வேண்டும். அவைகள் நெடு நாட்களாகத் தங்கி என் தலையில் வேர் கொண்டு விட்டன" என்ருர். "சரி, அப்படித்தான் வைத்துக் கொள்ளுங்களேன், எல்லாம் என் தலையில் உள்ள பேன்கள் தான். உங்க தலை சுத்தந்தான். இப்பொழுது அதற்கு என்ன செய்கிறது? என்ருள் ஸரஸா—'சரிதான் என்ன செய்கிறதா? இனிமேல் கொஞ்ச நாளைக்கு உன்னோடு படுத்துறங்கவே கூடாது' என்று மிஸ்டர் சலம் கூற, 'ஏன், கொஞ்ச நாளைக்கு; மிச்சம் நாளைக்கு என்று சொல்லுங்களேன்" என்று சிரித்துக் கொண்டு சரஸா போய் விட்டாள். இவ்வாறு தம்பதிகளுக் கிடையில் சண்டை மூட்டவும், நகை உண்டாக்கவும், தம்பதிகள் இச்சா விரதம் பேணிப் பச்சைப் பெருமாளைச் சிந்திக்கவும் பண்ணக்கூடிய சக்தி வாய்ந்தவை பேன்க ளென்ருல் அவைகளின் பெருமை என்னே!

## 3. பேனுக்குப் பயப்படுகிற பயம்

திப்பிலிபுரம் ஜமீன்தார் காட்டுமான்களை வேட்டை யாடுவதிலும் வீட்டு மான்களை வேட்டை யாடுவதிலும் தம்மிட மிருந்த செல்வங்களை யெல்லாம் கோட்டை விட்டுப் பாப்பாரானுர். அவரை நம்பிக் கடன் கொடுப்பார்

எவருமிலர். திப்பிலிபுரம் ஜமீன்தாருக்குச் சலவை செய்து கொடுத்து வந்தவன் சுப்பன் என்னும் வண்ணான். அவன் தான் ஜமீன்தாருக்குப் பிறகு திப்பிலி புரத்துத் தனவந்தர்களில் ஒருவனுக எண்ணப்பட்டான். அவனுக்கும் ஜமீன்தாருக்கும் இடையில் கண்ணுக்குக் கண் சிநேகம். ஒருநாள் ஜமீன்தாருக்குப் பண நெருக்கடி அதிகமாயிற்று. சுப்பனிடம் கடன் கேட்கலாமா என்பது அவருடைய யோசனை. இப்படி யிருக்கையில் சுப்பன் ஜமீன்தாருடைய சலவை உருப்படிகளை எடுத்துக் கொண்டு பங்களாவுக்குச் சென்றான். ஜமீன்தார் அவனைப் பணங் கேட்க ஒருவாறு அஞ்சினர். ஆஹா, வண்ணானிடத்தில் கடன் வாங்கினர் ஜமீன்தார் என்ற பேச்சு வெளி வருமாயின் மரியாதைக் குறைவு ஏற்படுமென்று எண்ணினர். என்றாலும் பண அவசரம் பல்லைக் காட்டிக் கேட்டால் என்ன என்றும் சொல்லியது. என்ன பண்ணுவார்! "சுப்பா, ஒரு ஐந்நூறு ரூபாய் எனக்குத் தேவை. ரூபாய்களுக்கு மாதம் அரையணு வட்டியோடு ஆறு மாதத்திற்குள் செலுத்தி விடுவேன். ஆனல் நான் உன்னிடம் கடன் வாங்குவது ஒருவருக்கும் தெரியக் கூடாது. உன் தலையில் கிடக்கிற பேனுக்கும் கூடத் தெரியக்கூடாது" என்றார் ஜமீன்தார். அவ்வளவு பெரிய ஜமீன்தார் தமது செய்கை காரணமாக, வண்ணான் தலையில் கிடந்த பேனுக்கும் பயந்தாரே, காரண மென்னவென்று யோசித்துப் பாருங்கள்! பேன்கள் மனிதர் தலைகளில் உட்கார்ந்து கொண்டு சதா மூளைரத்தத்தை உறிஞ்சுவதால் நமது விஷயங்களை யெல்லாம் கிரகிக்கக் கூடிய புத்திக் கூர்மை அவைகளுக்கு அதிகம் போலும்.

## 4. பேனைப் பற்றிய சகுனம்

முத்துக் கண் தீக்ஷதர் தன் மகன் பொருட்டுப் பெண் பேசி வர முத்து சாமி தீக்ஷதர் வீட்டிற்குச் சென்றிருந்தார். அப் பெண் அப்பொழுதுதான் தன் தந்தையாரின் உச்சிக் குடுமியைச் சீப்பினுல் வாரி அதிலிருந்த நாலைந்து பேன்களை படீர் படீர் என்று பொடித்தனள். முத்துக்கண் தீக்ஷதர் இதைக் கண்டு சிவ சிவா என்று வாயில் அடித்துக் கொண்டார். சரி கிடக்கட்டும் என்று தள்ளிவிட்டு மகட்பேச ஆரம்பித்தார். கடைசியாக முத்துக்கண் தீக்ஷதர் அதிக சிரமப்பட்டு, 3000 ரூபாய் நகையும் 3000 ரூபாய் ரொக்கமும் தான் என்னல் பெண்ணுக்குத் தரமுடியும் என்று சாதித்து விட்டார். எதிர் பார்த்திருந்த வரதக்ஷிணைக்கு இது மிகவும் குறைந்தது என்றிருந்த முத்துக் கண் தீக்ஷதருக்கு முத்துசாமி தீக்ஷதர் தாம் தருவதாக வாக்களித்த தக்ஷிணையையும் தருவாரோ என்ற சந்தேகம் உண்டாகி விட்டது. ஆகையால் அவர் தீக்ஷதரைப்பார்த்து, "ஐயா, தலையில் பேன் கிடந்தால் கடன் உண்டு என்று சொல்வார்களே; தங்களுக்கு அதிகக் கடன் உண்டு போலும்" என்க, அவர், 'கடனில்லாதவர் யார்தான் உண்டு. குடித்தனம் என்றால் ஒரு பக்கத்தில் கடனும் இருக்கலாம், ஒரு பக்கத்தில் மிஞ்சிய லாபமும் இருக்கலாம், அதற்கென்ன?' என்க, 'இல்லை, உங்களுடைய பெண் உங்கள் தலையிலிருந்து நாலைந்து பேன்கள் எடுத்துக் கொல்லப் பார்த்தேன், தங்களுக்குப் பெரிய துட்டுக்கு நாலைந்து துட்டாவது கடன் இருக்க வேண்டியதாச்சே' என்று முத்துக்கண் தீக்ஷதர் சொன்னர்; முத்துசாமி தீக்ஷதர் இடி இடித்தாற்போல நகைத்து, "இந்தப் பாட மெல்லாம் எங்கே படித்தீர்கள். எனக்கு நாலைந்து துட்டுக்குக் கடனிருந்தாலும், உங்களுக்குத் தர வேண்டிய தக்ஷிணைக்கு

மோசம் வாது இல்லிங்க' என்றாலும், முத்துக்கண் தீக்ஷிதர் சந்தேகம் தெளியாதவராய், நீங்கள் தக்ஷிணை தருவதா யிருந்தாலும் வேண்டாம், நம்பவும் முடியாது என்று எழுந்து விட்டார். பார்த்தீர்களா! நாலைந்து பேன்கள் தலையில் கிடந்து ஒரு விவாக சம்பந்தத்தை ரத்துச் செய்து விட்டது.

## 5. ஈரைப் பற்றிய ஆராய்ச்சி

பேனின் முட்டையை ஈர் என்று சொல்லுகிறார்கள்—இந்த வார்த்தைக்கும் பேனுக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறதோ தெரியவில்லை—ஈர் என்றால் இழு என்று அர்த்தம். பெண்களால் ஈர்வழி என்ற கவியைக் கொண்டு வெளியே இழுத்து வழிக்கப்படுவது என்ற காரணம் பற்றி அதை ஈர் என்று சொல்லுகிறார்கள் என்பதே எமது துணிபு. எனவே பேன்களை இலேசாக வெளியே கொண்டு வரலாம், ஈரையோ வழிய இழுத்துத்தான் தள்ள முடியும் என்பது பெறப் பட்டது. ஏன்? ஈர்கள் முட்டைப் பருவமுதலே மயிர்களோடு ஒட்டிக் கொண்டிருக்கிறது. எப்படி ஒட்டிக் கொள்கிறது? முட்டையாக வெளிப்படும் பொழுது அதன் மீது உள்ள பசையினாலே அது மயிரோடு ஒட்டுவிக்கப் படுகிறது. ஆகையால் தான் அதை ஈர்வழியினாலே பகீரத பிரயத்தனத்தோடு வெளியே இழுத்துத் தள்ளப் படுகிறது. ஈர்வழி =ஈரைவழிப்பது. அந்தக் கருவி பிற நாடுகளிலும் உண்டா என்பது புதிய ஆராய்ச்சிக்கு இடம் தருகிறது.

## 6. கோபத்தால் வந்த கேடு

பிரமனுடைய கோபத்தால் மயிர்க்குள்ளே புகுந்துகொள்ளும் பேன்களினால் உலகத்தில் என்ன உபத்திரவம், என்ன செலவு என்பதை என்றைக்காவது உணர்ந்தீர்களா? பேன் பிடித்துவிட்டால் பெண் சிறுவர்களுடைய பள்ளிக்கூடங்களில் அச்சிறுமியர் படும் உதைகளுக்குக் கணக்குண்டா? பேனுக்காக வேண்டி ஒவ்வொரு வீடுகளிலும் சீப்பு, சோப்பு, ஈர்வழி, எண்ணெய் முதலியவை இருக்கவேண்டியது ஆகிறது. அது விஷயமாய் ஒவ்வொரு வீட்டிலும் மாதம் ஒன்றுக்கு நபருக்கு 2 அணா என்று கணக்கு வைத்துப் பார்த்தால், 35 கோடி மக்களுக்கு எவ்வளவு செலவாகும் என்று பாருங்கள்! பிற நாடுகளில் எவ்வளவு செலவாகும்? ஆயின் வருஷம் ஒன்றுக்குப் பேனினால் உண்டாகும் செலவு உலகம் பூராவுக்கும் அம்மம்மா எவ்வளவு? ரூபாய் பைசா அணாக் கணக்கில் அடக்கிக் கூற முடியுமோ என்பது சந்தேகம். ஆக பிரமனும் பேனின் பொருட்டு நமக்கு இவ்வளவு பணச் செலவை இழுத்து வைத்து விட்டாரே என்பதுதான் அவர் மேல் எனக்கு உண்டாகும் கோபம். ஆனால் நீங்கள் கோபப் படாமல் நான் எழுதினதை வாசித்து முடிப்பீர்களாக.



# மானத சாஸ்திரம்.

(எம். ஏ. எஸ். முத்துப் பிள்ளை.)

புறப் பொருள்களினு லுண்டாம் உணர்ச்சிகள் நமது புலனுறுப்பு களிலும், நரம்புகளிலும் மூளையிலும் வந்து பதிகின்றன. அப் பதிவுகள் பின்னர் மனதில் சில நிகழ்ச்சிகளை விளைவிக்கின்றன. இவ் விருவித நிகழ்ச்சிகளும் பெரும்பாலும் நமக்குத் தமோற்றத்தை விளைவிக்கின் றன. நம்முடைய புலன்கள் நம்மை அடிக்கடி ஏமாற்றி விடுகின்றன என நாம் கருதுகின்ருேம். அப்படி யன்று. அவைகள் நமக்கு அளிக்கும் காரி யாதிகளைப் பற்றி நாம் எப்பொழுதும் திருத்தமான பொருள் கொள்ளுவ தில்லை என்று ஒத்துக் கொள்வதே பொருத்த முடைத்தாம்.

பொருள்களின் உண்மைத் தன்மையை உடனே உணருந் தன்மையும், நேரே உணருந் தன்மையும் அமையப் பெற்றுள்ள கல்வி முறை, கவனத்தை விருத்தி செய்வதிலும், கருத்தை ஊன்றிப் பழகுதலிலுமாகப் புலன்களைப் பயிற்சி செய்வதற்கு உபயோகப் படுகின்றன. ஆனல், இது போதுமான தல்ல. புலன்கள் நிறை வெய்துவதற்கும், அவை ஒவ்வொன்றும் தன்னுடைய சொந்த தொழிற்படும் நிலையில், கூடியவரை எல்லா வித வல்லமையும், நுணுக்கமும், நிதானமும் பெறுமாறு செய்வதற்கும், அவைகள் தகுந்த படிப் படியான தனித்த அப்பியாச முறைகளில் படிந்து வருதல் வேண்டும்.

பரம்பரையாக வுள்ள சில வகுப்பின ரிடத்தில் சில அரிய உணர்ச்சிகள், போக்குகள் இயற்கையில் காணப்படுகின்றன. ஆனு லிவைகள் வெறும் இயற்கை மூளைப்பும், எழுச்சியுமாகவே யிருக்கின்றன. இவைகள், மனித னின் குணத்தையும், அவன் மனப் போக்கையும் ஒருவாறு பாதிக்கலாமே யொழிய, நினைவிற்கு வேண்டிய (உள்ளுவதற் குரிய) பொருள்களைத் தாங்க ளாகவே கொடுக்கக் கூடியனவல்ல.

குருடும் செவிடுமா யுள்ளவனும், முகரவும், சுவைக்கவும், உணரவும், இயங்கவுங் கூடாதவனுமான ஒருவனைப் பற்றி நினைந்து பாருங்கள். அவன் எப்படி யிருப்பான்? அவன் முற்றிலும் நினைப் பின்றியே யிருப்பன். அவ னிடம் எண்ணமே நிகழ்ச்சி பெறுது. ஏனெனில், நினைப்பிற்குரிய பொருள் எதுவும் அவன் உள்ளத்தி லில்லை. நினைவுப் பொருளோ, உள்ளக் கிடைத் தொகுதியோ புலன்களின் வழியாகவே அடையப் பெறுகின்ருேம். மன தைப் பழக்குவதற்கான எந்த அறிவுடை முயற்சியும் புலன்களை (சரியாய்ச் சொல்ல வேண்டுமானல் புலனுணர்வுகளை)ப் பழக்கு முகத்தானே ஆரம்பித் தல் வேண்டும். ஏனெனில், அப்பொழுதுதான் நாம் பார்ப்பன, கேட்பன, முகர்வன, சுவைப்பன, ஊறுவன வாகிய தொழில்கள் அதிக நிதானத்துட னும், கூர்மையுடனும், பொருத்தமாயும் நிகழுதல் கூடும். பயிற்சி பெற்ற புலனுணர்வுகளே, மானத சக்தி முழுமைக்கும் அடிப்படை யாகும்.

ஆகவே, புலனுணர்வுகள், புலன்களைப் பற்றியும், மிகத் தெளிவாய்ப் பார்த்தற்கும், கருத் தூன்றிக் கவனித்தற்கும், நுட்பமாய் உணர்தற்கும்,

பொதுவாக, புலனுணர்வுகளின் சக்திகளை வலுப்படுத்தக் கூடிய வல்லமையைப் பெறுவதற்கான முறைகளைப் பற்றியும் சுருக்கமாக ஆராய்வாம்.

## ஞாபக சத்தியும் அதன் உபயோகமும்

நாம் உணர்ந்தவற்றை உள்ளத்தில் பதிய வைத்தாலொழிய உணர்ச்சிகள் யாதொரு பயனையும் விளைவியா. தோன்றிய எல்லா அறிவு நூல்களையும் ஒருவர் பயின்றிருக்கலாம். அங்கண்மா ஞாலமெங்கும் அரும்பிரயாணம் செய்திருக்கலாம். இனியதும் வழக்கத்தி லில்லாததுமான எல்லாவித அனுபவங்களும் அவர்க்குத் தோன்றி யிருக்கலாம். ஆயினும், படித்தவைகளையும், பார்த்தவைகளையும், செய்தவைகளையும், உணர்ந்தவைகளையும் ஞாபகத்தில் வைத்தா லொழிய அவை உண்மைப் பயன் எதனையும் விளைவியா தொழியும். மன உணர்வுத் தொகுதி எதுவும், அதாவது மன உயர்வைப் பெறுவதற்கு ஒருவர் உபயோகிக்கக் கருதிச் சேகரிக்கும் பொருள் எதுவும் அவர் அடைந்திருக்க மாட்டார். அதாவது புலனுணர்வைப் பெருக்குவதற்கு அல்லது விருத்தி செய்வதற்கான வழிகளை மாத்திர மன்றி, அவ் வுணர்வைப் பதிய வைத்திருந்து வேண்டுங்கால் உபயோகத்துக்குக் கொண்டு வருவதற்கான உபாயங்களையும் நாம் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியமாகும்.

## ஞாபகத்திலுள்ளவைகளைப் பிணைக்கும் சக்தி

இனி, ஞாபக சத்தி அதுவாகவே மாத்திரம் போதுமானதல்ல. அபாரமான ஞாபக சத்தி யுடையவர்களே யாயினும் பேசவாவது, எழுதவாவது, நன்ருய் யோசிக்கவாவது முடியாதவர்களை நாம் பார்க்கலாம். அவர்கள், கண்ட மாத்திரையில் வாசித்துப் புத்தகப் படிப்பு மூட்டைகளை நிறைய நிரப்பி வைத்திருக்கும் ஏட்டு மூடர்களேயாவர். ஆனால், அவர்கள் தங்களுடைய அனுபவ முழுமையும், அதனை ஞாபகப் படுத்தும் திறமையும் உடையவர்களே யாயினும் எழுதுவதற்காவது பேசுவதற்காவது முடியாம லிருப்பதைக் காண்கின்ரேம்.

ஆதலினல், ஞாபக சத்தி மாத்திரம் போதுமான தன்று. ஒருவர் தமது ஞாபகத்தில் அமைந்து கிடப்பனவற்றை யெல்லாம் ஒருங்கு வைத்து, பகுத்துணர்ந்து, ஒற்றுமை வேற்றுமைப் படுத்திப் பார்த்து, இனஞ் சேர்த்து அமைத்தற் குரிய வன்மை வாய்ந்தவராதல் வேண்டும். உணர் வடக்கத்தை (உணர்வுத் தொகுதியை) உண்டாக்குகின்ற ஞாபகத் தொகுதி முழுமையும், அவற்றில் ஒவ்வொன்றும் ஏனைய பலவற்ரேடு நெருக்கிப் பிணைக்கப்பட்டு, அவை யெல்லாம் சித்தமெனும் உள்ள முனைப்பினல் உடன் தொழிற் படுவனவாய இயல்புடைய ஒரே தன்மையனவான சிறந்த மானத தோற்றக் காட்சித் தொகுதியாக அமைக்கப் படல் வேண்டும்.

அதன் பின், மானத தோற்றக் காட்சிகளைப் பகுத்துணர்ந்து, ஒற்றுமை வேற்றுமைப் படுத்தல், ஒருங்கு இனஞ் சேர்த்தலாகிய இந்த மிகச் சிறந்த காரியத்தில் பெருங் கவனஞ் செலுத்துதல் அவசியமாகும். மானத முயற்சிகளெல்லாவற்றுள்ளும் இனங்களை ஒருங்கு சேர்க்கும் இச் சக்தியானது "பேரொளி பிறங்கும் உள்ளம்" உண்டாவதற்கு நேர் உதவியாய் நிற்கும் ஓர் நிகரற்ற சக்தி என அறிதல் வேண்டும்.




# 52. ஆங்கிலேயரின் எகிப்து, தென் ஆப்பிரிக்கா விவகாரங்கள்

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

வியாபார சம்பந்தமாக இந்தியாவிலும், குடியேற்ற நாடுகள் சம்பந்தமாக அமெரிக்காவிலும், ஆங்கிலேயர் செழித்திருந்தனர். அந்த செழிப்பு ஆங்கிலேயருடைய கடலாதிக்கத்தினால் சாத்தியமாகி இருந்தது. அதையும் அமெரிக்கர் சிதைத்து தங்கள் சுயேச்சையை கத்திமுனையில் ஸ்தாபித்துக் கொண்டனர். நெப்போலியன் நிமிர்ந்து நின்ற காலத்திலும் திண்றித் திண்டாட வேண்டியிருந்தது. ஆயினும் அந்த 19-ம் நூற்றாண்டின் முற்பகுதி ஆங்கிலேயருடைய சுக்கிர திசை காலம் என்னலாம்! அமெரிக்காவிற்கு ஈடாக ஆஸ்திரேலியா கண்டு பிடிக்கப்பட்டு குடியேறப்பட்டது. ஆதியில் தீவாந்திர சிக்ஷை விதிக்கப்பட்ட குற்றவாளிகளை அனுப்பும் அந்தமான் போல உபயோகிக்கப்பட்டு பிறகு, தங்கம் கிடைக்கிற தென்ற விஷயம் வெளியான பிறகு அசல் யோக்கியதையுள்ள ஆங்கிலேயரும் ஆர்வத்துடன் குடியேறத் தொடங்கினர்!! நெப்போலியனுடன் சேர்ந்தனர் என்ற பாபத்திற்காக டச்சுக்காரர்கள் குடியேறி வசப்படுத்தி யிருந்த தென் ஆப்பிரிக்கக் கரையோரங்களைக் கைப்பற்றி விட்டனர் ஆங்கிலேயர். ஆனால் வெகு காலம் குடியேறி யிருந்த டச்சுக்காரர்களும் சுதேசிகளும் கலந்து உறவாடின சம்பந்தத்தினால் ஏற்பட்ட ஒரு கலப்பு ஜாதியினர் போயர்கள் (The Boers) ஆங்கிலேயர் அபிவிருத்திக்கும் பரவுதலுக்கும் இடையூறாக இருந்தனர். நாளடைவில் இவர்களுடைய தொந்திரவுகளைத் தாங்க மாட்டாத போயர்கள், சமுத்திரக் கரைகளைக் காலி செய்துவிட்டு, மலைகளுக் கப்பால் சென்று பீடபூமிகளிலும் பாலைவன ஓரங்களிலும் போய்ச் சேர்ந்து விட்டனர்.

ஆனால் அந்த உள்நாட்டில் பாலைவனப் பிரதேசங்களில் வைரம் தங்கம் போன்ற உயர்ந்த உலோகங்கள் கிடைக்கின்றன என்று தெரிய வந்ததும் ஆங்கில ஜனங்களும் உள் ஏறத் தொடங்கி விட்டனர் என்பது சரித்திரப் பிரசித்தம்!!! இந்த சந்தர்ப்பத்தில் போயர்கள் நாகரீகம் உள்ளவர்களாகவும் ஆட்சி முறை அறிந்தவர்களாகவும், குடியரசு ஸ்தாபித்துக் கொண்டு தங்களையே செம்மையாய் ஆண்டு கொள்ளும் சக்தியுள்ளவர்களாகவும் இருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது. அப்படி யேற்பட்ட குடியரசு ஸ்தாபனங்களின் பெயர்கள் ட்ரான்ஸ்வால், ஆரஞ்சு ப்ரீஸ்டேட். (Transvaal, Orange-river Free State) என்பன. இருந்தாலும் அந்த ட்ரான்ஸ்வாலையும் ஆங்கி

லேயர் 1877-ல் ஜெயித்து விட்டனராம். ஜெயித்த போதிலும் போயர்களை சுயேச்சையுடன் இருக்க அனுமதித் திருந்தனராம் ஆங்கிலேயர். வைரச் சுரங்கங்கள் உள்ள சங்கதி இதற்குப் பிறகு தான் தெரியவந்தது. ஆகவே மூண்டது போராட்டம் மறுபடியும் 1899-ல். சிறந்த யுத்த வீரர்களான போயர்கள் வெகு கொடூரமாகவும் தீவிரமாகவும் விடாப் பிடியுடனும் "போரில் காலனும் அஞ்சக் கலக்கும் மராட்டர்கள்" போன்றும், "மறைவரும் கீர்த்தி கொள் ரஜபுத்திர வீரர்கள்" போன்றும் போராடி ஆங்கிலேயரின் பூராசாமர்த்தியத்தையும் சோதித்து விட்டனர். புலவாயோ, லேடீஸ்மித், ப்ளோம் பாண்ட்டின், ப்ரீட்டர் மேரிட்ஸ்பர்க் முதலிய இடங்களில் நிகழ்ந்த சண்டைகளும் முற்றுகைகளும் யுத்த நிகழ்ச்சிகள் என்பது சரித்திரம். 1901-ல் போர் முடிந்தது. இதற்குள் 1835-ல் முதல் ஆண்ட மஹாராணி விக்டோரியா காலமாகி எட்வர்ட் VII பட்டம் பெற்றார். (இந்த யுத்தத்தில் கணக்கில்லாத இந்தியர்கள் சாரணர்களாகவும் வீரர்களாகவும், உதவிப் படையினராகவும் இருந்து, உடல் பொருள் ஆவி, முதலியவைகளைத் திரணமாக நினைத்துத் தியாகம் செய்து சாம்ராஜ்யத்தைப் பாது காத்தனர். மஹாத்மா காந்தியும் அவர்களில் ஒருவரே. அதற்கு முன்பும் ஆப்பிரிக்கா கரையோரங்களையும் இதர பிரதேசங்களையும் காடு திருத்தி, கரம்பாக்கி, தோட்டங்கள் துரவுகள் ஏற்படுத்தி கற்பகவனம் போல் செய்து ஆங்கிலேயர்களுக்கு செல்வ விருத்தியும் வியாபார விருத்தியும் ஏற்படச் செய்ததோடு, அவர்கள் வசிப்பதற்கு வீடுகளையும் நகரங்களையும் நிர்மாணித்துக் கொடுத்து இந்திரலோகமாகவும் ஆக்கினார்கள்!! அக் காலங்களில் இந்தியர்களை வருந்தியழைத்து, ஏராளமான பொருள் வருவாய்க்கு வழிகாட்டி வேண்டிய உபசாரணைகளைச் செய்தனர் ஆங்கிலேயர். ஆனால் காரியங்கள் எல்லாம் முடிந்து சுயேச்சை பெற்று, தாய் நாட்டையும் உதறித்தள்ள சக்தி வந்த பிறகு இந்தியர்களைக் கூலிகளென்றும், கருப்பர்கள் என்றும், ஜீவாதாரமான பிரஜா உரிமைகளுக்கு லாயக்கற்றவர்கள் என்றும் தேசத்திலேயே இருக்கக் கூடாத படியான இன்னல்களையும் செய்ய அப்பொழுதே துடங்கிவிட்டனர். காந்தியடிகளின் பிற்காலத்திய பெருமைகளை அக்காலத்திலேயே சொரூபங்காட்ட உதவி செய்த தென்னாப்பிரிக்கா அல்லவா அது? கோகலே போன்ற மேதாவிகளின் முழுகவனத்தையும் செலுத்தும்படி செய்திருக்கிறது. தற்காலத்திலும் ஏதோ காப்பாற்றி நன்மைகளைப் புரட்டி வைத்து விடுவதற் கென்றே போவதாகச் சொல்லி ராஜப் பிரதிநிதியின் ஏஜண்டுகளாக ஒருவர்பின் ஒருவராய்ச் சென்று கொழுத்த சம்பளங்களைச் சிலருக்கு வாங்கிக் கொடுக்க உதவுகிறதல்லவா? இவ்வளவுக்கும் பின்னர் "ஆங்கிலேயருக்கு ஏராளமான அனுதாபங் காட்டும் மனோபாவம் இருக்கிறது: நம் மிந்தியர்கள் அதற்குப் பாத்திரர்கள் தாம் என்று காட்டிக் கொள்ளும் முறையில் நடந்து கொள்ள வேண்டும்" என்ற நற்செய்திகளுடன் நமது நாட்டிற்கு வந்து உறங்கவும் செய்வது அல்லது வேறு பெரும் உத்தியோகங்களுக்கு வேலை பார்ப்பதும் மாமூலாகி விட்டது அனுபவம்!!!) மூச்சு விடுவதற்கு மட்டும் லைசென்ஸ் வாங்க வேண்டியதில்லை. மற்ற எந்தக் காரியத்திற்கும் எவ்வளவோ இன்னல்கள். இவற்றை யெல்லாம் சகித்துக்கொண்டு போராடி வரும் நம் ஆப்பிரிக்கா சகோதர சகோதரிகளின் நிலைமைக்கு மாற்று நமது கையில் தான் இருக்கிறது. அந்த மாற்று சரியான வழியில் உபயோகப்படுத்தப்பட்டு நாமும் உலகத்தின் இதர மக்களுக்கு இணையாக தலை நிமிர்ந்து நிற்க "பழம்

கதைகள் பேசுவதில் ஓர் மகிமை யில்லை. நாமே திறமையுடையவர்களாகி பிறநாட்டார் நம்மையும் நம் தேசத்திற்கும் தலை வணக்கம் செய்தல் வேண் டும்'' என்றபடியான நோக்கம் ஒவ்வொருவருக்கும் வேண்டும்.

இவ்வாறாக தென்னாப்பிரிக்க ஆங்கிலேயர்கள் போயர்களுடன் போராடி பிறகு தங்களுக்குள் ஒன்றுபட்டு ஐக்கியமாகி சுய ஆட்சி பெற்று இன்று தாய் நாட்டினர் வார்த்தைகளையும் மீறும் சக்தி பெற்றிருக்கின்றனர். ஒரு வேளை மலடியின் பிள்ளை போன்று ஒரு எண்ணம் தோன்றி இந்தியர் விஷயத்தில் அனுதாபம் காட்டும்படி தாய் நாட்டார் ஆப்பிரிக்க பிரிட்டானியருக்குச் சொன்னாலும் கூட அதை அலக்ஷியம் செய்யக் கூடியதான நிலைமைக்கு வந்து விட்டனர்.

வடக்கே மத்தியதரைக் கடல் மார்க்கமாக இந்தியாவுக்கு இந்திய நிர்வா கம் செய்யும் அவசியம் ஏற்படவே எகிப்திலும் ஆங்கிலேயர் தலையிடவேண்டி வந்தது. இந்த இந்திய வியாபாரக் கவலையினால் தான் முந்தின தொகுதியில் சொல்லப்பட்ட ''கிழக்கும் பிரச்சினை''யும் ''ஐரோப்பிய நோயாளி'' விபரமும் ஏற்பட்டு ருஷ்ஷியாவை கண் காணிப்பு செய்யும் வேலையில் ஆங்கி லேயர் முனைந்தது. இந்த ஆபத்தைக் காட்டியது நெப்போலியன் என் பது இத் தொகுதிகளைத் தொடர்ந்து படித்தவர்கள் உணர்ந்தது ஆகும். ஆக மத்தியதரைக் கடலுக்கும் செங்கடலுக்கும் இடையிலுள்ள சூயஸ் பூசந் தியில் ஆங்கிலேயருக்குக் கவனம் சென்றது. அவர்களும், பிரஞ்சுக்காரர்க ளும் சேர்ந்து கூட்டுறவு முறையில் தொழில் திட்டம் போட்டு, கப்பல் போக்குவரத்துக்கு சாதகமான ஒரு கால்வாயை வெட்டத் திட்டம் போட்டு, சுமார் 1885க்குள் பூர்த்தியாகி, கப்பல்கள் ஆப்பிரிக்காவைச் சுற்றி வராமல் இந்த கால்வாய் வழியாகப் போகவும் ஆரம்பம் ஆகி விட்டது. அந்த எகிப்து தேசத்தை ஆண்டவர்களுக்கு கெடிவ் என்ற (Khedive) பட் டப் பெயர் உண்டு. அப்போதைய கெடிவுக்கும் கால்வாயில் ஐரோப்பியர்க ளுடன் பங்குகள் உண்டு. முக்கியமான பிரதேசத்தில் உள்ள அரசர்களை ஐரோப்பியர் கவனிக்கும் போது விசேஷமாக அந்த அரசர்களின் குடிகளின் க்ஷேமங்கள் ஐரோப்பியர் ஹிருதயங்களை ஊடுருவச் செய்வது சகஜமல்லவா? அந்த முறையில் கவனித்த போது நாட்டுக் குடிகளின் நலமே பெரிதெனப் பட்டதால், அவர்களை ஹிம்சித்த கெடிவை பிரஞ்சுக்காரரும், ஆங்கிலேயரும் பட்டத்தினின்றும் நீக்கி, தாங்கள் இருவருமாகச் சேர்ந்ததான ஒரு ஆக்ஷித் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்தார்கள். பழைய கெடிவ் துராகிருத மான வழிகளில் அக்கிரமச் செலவுகள் செய்து ஏகக் கடனாளியாக ஆகிவிட் டான்! ஆக கால்வாய் பங்குகள் ஈடானதுடன், இராக் கடன்களைத் தீர்க்கும் முறையில் ஆட்சி நடத்தப் பட்டது. (யோஜித்து ஊன்றிப் பார்க்கும் அள வில் ஐரோப்பிய ரல்லாத எந்த மன்னருக்கும் மேலே சொல்லப்பட்ட குண திசயங்கள் தாம் இருப்பதாகச் சொல்லாமல் சூசுபிக்கப் படுவதை நாம் கவ னிக்கலாம். சமீபத்தில் முஸலோனியும் அதே காரணத்தைக் கொண்டு தான் அபிஸீனியாவை 'அபேஸ்' பண்ணினான். டல்ஹௌஸிப் பிரபுவின் நிர்வாக காலத்தில் பல சுதேச அரசர்களுடைய சமஸ்தானங்கள் ஆங்கிலேயர் வசமானதற்கும் காரணம் இதுவும் ஒன்று என்பது சரித்திரம் சொல்லுகிறது. ஸூராஜ் உட்டௌலா வென்ற வங்காள நவாபுக்கும் இதே காரணம் எழுதப் படுகிறது, விளங்கும். ' இவ்வளவும் சாதாரண சரித்திரங்களிலும் காணப்

பட்டும் ஐரோப்பா வாசமோகம் கொண்ட நம் சுதேச மன்னரில் சிலர் 'நூறு ரூபாய் நோட்டுகளை' அலக்ஷியமாக கொளுத்தி தேகீர் விருந்துக்கான தேகீரை சூடு செய்து அதிகார வர்க்கத்தினருக்கு விருந்து செய்து தமது கௌரவத்தைக் காட்டிக் கொள்ளும் போது உண்மை இந்தியக் குடியின் மனம் எவ்வாறு கொதிக்கும்? அத் தேகீர் சுட வைக்கக் கொளுத்தப்பட்ட பல 'நூறு ரூபாய் நோட்டுகள்' வீணாகப் போவதுடன் இவர்களைப் பைத்தியக் காரர்கள் என்று உலகம் கருதும் என்பதையும் அந்த டம்பாச்சாரிகள் உண ருவ தெக்காலம்? விகடமாக, இன்னும் சிலர் வின்ஸர் கோமகனுக்கு உபகார நிதியை இம் மன்னர் குழாம் ஏற்படுத்திக் கொடுக்கலாம் என்றும் குறிப்பிடப் பட்டதை வாசகர்கள் ஞாபகத்தில் வைத்திருக்கலாம்!!

ஆளுகின்ற அன்னியர் தங்களுடைய ஆட்சியைப் பற்றி எப்போதும் சிலாகித்தே பேசிக் கொள்வது சகஜம். ஆனாலும் அவர்கள் கொடுத்துக் கொள் ளுகிற விசேஷங்கள் எல்லாம் ஆளப்படும் ஜனங்களுக்குத் தெரிவதில்லை யல்லவா? இந்த அறியாமை எகிப்தியருக்குள் பரவி, "ஆயிரமானாலும் அந்நிய ராட்சி எங்களுக்கு வேண்டாம்" என்று கலகங்கள் செய்யக் கிளம்பி விட்ட னர். அப்படிக் கலகங்களை ஆங்கிலேயரா சும்மா விட்டுவிட்டு, தங்கள் பிசகுக ளைத் திருத்திக் கொள்பவர்கள்? போதாத குறைக்கு எகிப்திற்குத் தெற்கே யுள்ள ஸூடானிலும் ஒரு கலகம் கிளம்பியது! அந்த ஸூடான் ஒரு காலத்தில் கெடிவ்வால் ஜெயிக்கப் பட்டு அவருடைய ஆதிக்கத்தில் இருந்து வந்தது. அந்த நிலைமையை மாற்றுவதற் கென, மாடீ (Mahti) என்ற ஒரு மகம்மதிய மத குருவின் தலைமையில் ஸூடானியா கிளம்பி எகிப்து சம்பந்தத்தை அறுத் தெறியலாயினர். இந்த இரண்டு அகோர நிலைமையைக் கண்ட பிரஞ் சுக்காரர், எகிப்தைக் கை விட்டு, பிரிந்து போய் பிரிட்டிஷாரையே பூரா பொறுப்பையும் பொறுத்துக் கொள்ளச் செய்து விட்டு போய் விட்டனர்! இவர்கள் ஆதிக்கத்திலிருந்த எகிப்து மட்டும் சீக்கிரத்தில் அடக்கப் பட்டுவிட் டது! ஆனால் ஸூடான் மட்டும் மும்முரமாக எதிர்த்து நின்றது. அதன் எல்லையிலிருந்து சில எகிப்து பாகங்களும் எதிர்த்து நின்றன.

இம்மாதிரி நிலைமை எப்போதும் சங்கடமான தென்பதை உணர்ந்து ஆங்கிலேயர் நடவடிக்கைகளை ஆரம்பித்தனர். அதற்காக கார்டன் என்ற ஒரு தளகர்த்தரை ஸூடானுக்கு அனுப்பி வைத்தனர். இந்த கார்டனுக்கு கீழைப் பிரதேச அனுபவம் அதிகம் உண்டாம். சைனாப் பிரதேசத்திலேயே வெகு காலம் இருந்து, முன்னேற்றம் அடைந்தவராம். (சைனாவின் அனுபவம் எகிப்தில் செல்லுபடியாகும் என்று எண்ணிய போக்கு மேலே குறிப்பிடப் பட்டிருக்கிறது) தவிரவும், கெடிவ் அதிகாரம் வகித்து வாழ்ந்த காலத்தில் இந்த ஸூடானில் அந்த கெடிவ்வின் பிரதிநிதியாக கார்டன் துரை அனுப்பப் பட்டிருக்கவும் ஏற்பட்டிருந்ததாம் ஆகவே அவர் தான் நிலைமையை சமாளிக் கத் தகுந்தவர் என்று எண்ணிய ஆங்கில நிர்வாகிகள் அவரை அனுப்பினர். அவர் போய் அதிகமான சைனியம் இருந்தாலொழிய காரியம் பலியாது என்று தெரிந்து எழுதினாராம். அதற்குள் மாடீயின் சைனியங்கள் இந்த கார்டன் இருந்த கார்ட்டூம் (Khortum) நகரை வளைத்துக் கொண்டு முற் றுகை யிட்டன. சரியான காலத்தில் உதவி வராததால் எவ்வளவோ தீரத் துடன் முயன்றும் கார்டன் வெற்றி பெறாததுடன், கடைசியில் கொலை யுண்டும் போனார். இது 1885-ல் பிறகு வந்து சேர்ந்தது பிரிட்டிஷ் சேனை!

ஸூடானை சுத்தமாக மறந்து விட்டனர். மாடீ காலம் வரையில் அவன் செல்வாக்கு இருந்து பிறகு அழிந்தது. பிறகு நாளடைவில் ஆங்கிலேயர் பாதுகாப்பில் வந்தது. அப்பொழுது முதல் ஆரம்பித்தது தான் எகிப்திய சுதந்திரப் போராட்டம். ஒருவகையாக சமீப காலத்தில் தான் அபிஸீனிய அபேஸ் காலத்தில் சுய ஆட்சி பெற்று, வெகு சமீப காலமாக எகிப்தியர் தங்கள் கிளர்ச்சியை சற்று மட்டுப்படுத்தி யிருக்கின்றனர். இந்தத் தொகுதியில் விஸ்தரிக்கப் பட்ட போயர் யுத்தம், எகிப்து யுத்தம் பொதுப் போக்கையே குறிப்பிடுவதற்காக உபயோகப் படுத்தப்பட்டிருக்கின்றன. 1902-ல் சமாதானம் செய்து கொள்ளப்பட்டு போயர் யுத்தம் ஏழாவது எட்வர்ட் காலத்தில் முடிவு பெற்றது. சுமார் 1910-ல், போயர்களின் நாடான ட்ரான்ஸ்வால், ஆரஞ்சு ப்ரீஸ்டேட் இரண்டும், கேப்காலனி, நெடால் என்ற இதர ஆங்கில குடியரசுகளுடன் ஐக்கியமாகி தென் ஆப்பிரிகா ஐக்கியம் பெற்ற சமபல நாடுகளாக ஒன்று சேர்ந்திருந்து சுயேச்சையான குடியேற்ற நாடாகி விட்டது. ஆங்கிலேயருடைய அதிகாரம் செல்வதும் சந்தேகமே. ஏனெனில் அவைகள் "வயது வந்த குழந்தைகள்"

அடுத்து இந்தத் தொகுதியில் நோக்க முடியாத சில சில்லரையான உள்நாட்டு வெளி நாட்டு விஷயங்களைப் பற்றி எழுதப்படும். ராணி விக்டோரியாவின் வெகு நீடித்த கால ஆக்ஷியில் நடந்த பல விஷயங்களையும் தனித்தனி அம்சங்களாகத் தான் தொகுத்து எழுதவேண்டி யிருப்பதற்கு வாசகர்கள் மன்னிக்கவும்.

---




# பிரம சூத்திரம்

(சித்தூர் பண்டித-பூ. ஸ்ரீநிவாசன்)

(தொகுதி 22. பகுதி 11. 815-ம் பக்கத் தொடர்ச்சி.)

(“ஸ ஆத்மா தத்வமஸி ச்வேதகேதோ” என்பது போன்ற வாக்கியங்களால் ஜீவனே பிரம்மமா யிருப்பதாகவும், பிரம்ம ஜீவ வியவகாரத்தை யடைந்திருப்பதாகவும் வேதாந்திகள் கூறுகின்றார்கள். இப்படிக் கூறுவதனால், ஜீவனுக்குப் பிரம்மபாவம் ஏற்பட்டு பிரம்மத்திற் குள்ளதாகிய சிருஷ்டிகர்த்தாவாகுந் தன்மையும் அவனுக்கு (ஜீவனுக்கு) ஏற்படுகின்றது. அப்படியானால்—ஜீவனே சிருஷ்டிகர்த்தாவானால்—அவன் தனக்கு இதமான சிருஷ்டியைச் செய்து கொண்டிருக்க வேண்டுமே யன்றி அகிதமான ஜனனமரண ரோகாதி துன்பக் கூட்டங்களைச் சிருஷ்டித்துக் கொண்டிருத்தலாகாது. தவிர, பரமாத்மாவே ஜீவனானன் என்னும் பக்ஷத்தில் அத்தியந்த நிர்மலனாகவுள்ள பரமாத்மாவுக்கு அத்தியந்த மலினமாகிய தேகத்தினிடத்து ஆத்மபுத்தி யுண்டானதாக நினைக்கவேண்டி வரும். ஒருவேளை அவ்வித புத்தி யுண்டாயினும், அது துக்ககரமானதென்று அறிந்தவுடனே அதனை அவன் விட்டிடுவான்; ஆனால், அவன் அவ்வாறு செய்வதில்லை.—ஆகவே வேதாந்திகள் கூற்று தோஷமுடையதாகும் என்று பூர்வபக்ஷிகள் ஆக்ஷேபிக்க, இதற்கு வேதாந்திகள் “ஈசுவரனைவிட ஜீவன் வேறானவன் என்று வியவகார தசையில் நிச்சயிக்கப்பட்டிருத்தலின், ஜீவனைவிட ஈசுவரன் சிரேஷ்டமானவன். ஜகத்கர்த்தா ஈசுவரனேயன்றி ஜீவனல்ல. ஜீவன் ஜகத்கர்த்தாவென்று எங்கும் வேதாந்தமதத்தில் சொல்லப்பட்டிருக்கவில்லை. ஜீவன் உபாசகன் என்றும் ஈசுவரன் உபாசியன் என்றுமே வேதாந்திகள் கூறுகின்றனர். ஆகலின், பூர்வபக்ஷிகள் கூறும் தோஷம்வேதாந்த மதத்தைப் பாதிக்காது.

ஆனால், “தத்வமஸி” முதலிய வாக்கியங்கள் கூறும் அபேதவாதத்தின் கருத்துதான் யாதோ? என்றால், எந்தக் காலத்தில் ‘ப்ரஹ்மாஹமஸ்மி” என்னும் அனுபவம் உண்டாகின்றதோ அந்தக்காலத்தில் ஜீவனுக்கு ஜீவத்தன்மையாவது ஈசுவரனுக்கு சிருஷ்டிகர்த்தாவாகுந் தன்மையாவது பொருந்துவதில்லை. அத்தகைய ஏகத்வஞானம் உண்டான வளவில் மித்தியா ஞானத்தா லுண்டான பேதவியவகார மனைத்தும் நசித்து சிருஷ்டியே இல்லாமற் போகின்றது. ஆகவே மகாவாக்கிய போதனைகள் குற்றமுடையனவன்று” என்று சமாதானம் கூறுகின்றனர் என்றும் இந்த விஷயம் முன் சஞ்சிகையில் கூறப்பட்ட விஷயத்தின் சுருக்கமாகும்.)

23-வது சூத்திரம் அவதாரிகை:—

இதற்குமேல், பூர்வபக்ஷிகள் வேறொரு ஆக்ஷேபம் கூறுகின்றனர். அது இது;

"ஜீவனும் ஈசுவரனும் பேத மானவர்களே என்று கூறப்பட்டிருப்பதால், ஹிதாகரணாதி (தனக்கு இதமானவற்றைச் செய்யாமை; அஹிதமான வற்றைச் செய்தல் முதலிய) தோஷங்கள் சம்பவியா என்று முன் சூத்திரத்தில் போதிக்கப்பட்டது. ஆனால், அகண்டைக ரூப பிரம்மத்திற்கு ஜீவேசுவரபேத விசித்திரமாவது, நாநாவித பிரபஞ்ச விசித்திரமாவது எவ்வாறு சம்பவித்தது?"

இதற்கு சமாதானம் கூறப்படுகின்றது.

சூ. 23. "அச்மாதிவச்ச ததநுபபத்திঃ"

பதவுரை:—அச்மாதிவத்=பாஷாணம் முதலியவற்றைப் போலவே, ததநுபபத்திঃ=மற்றவர்களால் ஏற்படுத்தப்பட்ட தோஷத்திற்கு விரோதம் சம்பவிக்கின்றது.

கருத்து:—ஒரே மண்ணிற்கு உத்தமம் மத்திமம் அதமம் என்னும் பேதங்களையுடைய இரத்தினக்கல் சூரியகாந்தக்கல், சாதாரண கல், என்பனபோன்ற பேதங்கள் உண்டாகின்றன; ஒரே மண்ணை யடையும் விதைகளுக்கு சந்தனம் எட்டி சம்பங்கி முதலிய வடிவங்களுண்டாகிப் பலவித பத்திரம் புஷ்பம் பலம் கந்தம் முதலிய பேதங்கள் உண்டாகின்றன; மேலும், ஒன்றேயாகிய அன்னரசத்திற்கு நகம் உரோமம் பற்கள் இரத்தம் மாமிசம் முதலிய பேதத்தன்மைகள் உண்டாகின்றன. இப்படியே ஒன்றேயாகிய பிரம்மத்திற்கு ஜீவபிரபஞ்ச பேதங்கள் உண்டாகின்றன. ஆகையால், பூர்வபக்ஷிகள் ஆக்ஷேபம் சரியன்று.

## 8-வது. உபஸம்ஹார தர்சநாதி கரணம்

24-வது சூத்திரம். அவதாரிகை:—முந்திய அதிகாணத்தில் ஔபாதிக (உபாதியோடு கூடிய) ஜீவேசுவர பேதங்களை அங்கீகரித்து, ஈசுவரனிடத்தில் ஜீவனுக்குரிய தோஷங்கள் சம்பவியா என்று சொல்லப்பட்டது. ஏகமும், அத்விதீயமும், சேதனமுமாகிய பிரம்மம் இந்த ஜகத்திற்கு—ஜீவன் ஈசுவரன் முதலிய பல பேதங்களுக்கு—எப்படி காரணமாகக் கூடும்? என்று உண்டாகும் சங்கை பரிகரிக்கப்படுகின்றது.

சூ. 24. "உபஸம்ஹார தர்சநாந்நேதி சேந்நக்ஷீரவத்தி"

பதவுரை:—உபஸம்ஹாரதர்சநாத்=காரியத்தின் உற்பத்திக்கு முன்பு உபகரணங்களின் சேர்க்கை உலகத்தில் காணப்படுவதால், ந—பிரபஞ்சம் ஈசுவரனுடைய காரியம் என்னும் பக்ஷம் யுக்தமன்று; இதிசேத்—என்று சொல்லுவாயானால், ந=இந்த வாதம் சரியன்று; ஏனெனில்ঃ=க்ஷீரவத்—ஹி=பாலானது சகஜமாகத் தயிராவது பிரசித்தமான விஷயமல்லவா?

கருத்து:—"குடத்திற்குக் குலாலன் தண்டம் சக்கரம் முதலியனவும் ஆடைக்கு நூல் முதலியனவும் சாதனங்களாகித் தத்தம் காரியங்களைச் செய்தலை, நாம் உலகத்தில் காண்கின்றோம். அவ்வித சாதனங்களின் உதவி பக

மாத்மாவுக்கு இல்லாமையால் அவன் பிரபஞ்சத்திற்குக் கர்த்தாவாகான்—" என்று சொல்லுதல் கூடாது. ஏனெனில், அவன் எதன் சகாயமும் வேண்டாதவன். பாலானது இயல்பாகவே தயிராவது போலவே தன்னிடத்துள்ள விசித்திர சக்தியால் பிரபஞ்ச வடிவமாகப் பரிணமிக்கின்றான். பரிபூரண சக்தி யுடையவனாகிய அப் பரமேசுவரன் இவ்வாறு பரிணமிப்பதில் அவனுக்கு வேறு சாதனங்களின் அபேக்ஷை இல்லை. சுருதியும் இவ்வாறே கூறுகின்றது.

25-வது சூத்திரம். அவதாரிகை:—"அசேதனமா (அறிவற்றதா)கிய பாலானது வேறு சாதனங்களை வேண்டாமலே காலவசத்தினால் தயிரின் தன்மையை யடைவது உண்மையாயினும், சேதனர்களாகிய குயவன் முதலியோர் சாதனங்களின் சகாயமின்றித் தமது காரியங்களைச் செய்ய வியலாதவர்களா யிருப்பதை நாம் காண்கின்றோம். ஆகையால் சேதனமாகிய பிரம்மமும் சாதன வஸ்துக்க ளில்லாமல் ஜகத் சிருஷ்டியை எவ்வாறு செய்யக் கூடும்?"

இவ்வாறு உண்டாகும் ஆக்ஷேபத்திற்குச் சமாதானம் கூறப்படுகின்றது.

சூ. 25. "தேவாதிவதபிலோகே"

பதவுரை:—லோகே=உலகத்தில், தேவாதிவத்=தேவரிஷி பித்ருவர்க்கங்களைப் போலவே (பிரம்மத்திற்கு விசித்திர நிர்மாண சக்தி உண்டு.)

கருத்து:—சேதனர்களாகிய தேவர் முதலியோர் தத்தம் உலகங்களில் வேறு சாதனங்களை வேண்டாமலே தமக்கிஷ்டமான வஸ்துக்களை தங்கள் சங்கற்பத்தினாலேயே உண்டாக்கிக் கொண்டு அவற்றை அனுபவிக்கின்றார்கள் என்று இதிகாச புராணங்களால் அறிகின்றோமல்லவா? தேவர் முதலியோரின் சக்தியே இவ்வாறாயின், சர்வசக்தியுடைய பிரம்மத்திற்கு வேறு சாதனங்களின் உதவி அவசியமில்லை யென்பதைச் சொல்லவும் வேண்டுமா?

9-வது. க்ருத்ஸ்ந ப்ரஸக்த்யதிகரணம்

26-வது சூத்திரம், அவதாரிகை:—முந்திய அதிகரணத்தில் சொல்லப்பட்ட பால் தயிராகப் பரிணமித்தல், தேவராதியோர் வேறு சாதனமின்றி சங்கற்ப மாத்திரத்தால் வேண்டியவற்றைப் பெறுதல் என்ற திருஷ்டாந்தங்களால், சேதனமும் ஏகமும் அத்விதீயமுமாகிய பிரம்மம் வேறு சாதனங்களை வேண்டாமலே சுயமாக உலகவடிவமாகப் பரிணமித்ததாக ஏற்படுதலால், இந்தப் பரிணாம வாதம் உண்மையல்ல என்றும் விவர்த்த வாதமே சாஸ்திர சம்மதமான தென்றும் இந்த அதிகரணம் ஸ்தாபிக்கின்றது.

இந்த சூத்திரம் பூர்வபக்ஷ சூத்திரம்.

எது நிரவயவமோ அது அபரிணாமி; எது பரிணாமியோ அது சாவயவம் (அவயவமுடையது;) என்னும் நியாயங்களை யனுசரித்து, உலக வடிவமாகப் பிரம்மத்திற்குச் சம்பவித்த தென்னும் பரிணாமம் கண்டிக்கப்படுகின்றது.

சூ. 26. "க்ருத்ஸ்ந ப்ரஸக்திர் நிரவயவத்வ சப்தகோபாவா"

பதவுரை:—க்ருத்ஸ்நப்ரஸக்தி:=பிரம்மம் நிரவயமாதலினால் எல்லாப் பிரம்மமும் (பிரம்ம சொரூபம் முழுதும்) ஜகத்தாகப் பரிணமித்த தென்று

ஏற்படுகின்றது. (இவ்வாருயின், ஆதாரத்திற்கு அழிவும், 'பார்க்கத்தக்கது' என்னும் சுருதி வாக்கியத்திற்கு விரோதமும் சம்பவிக்கும்; இந்த விரோதத்தைப் பரிகரிப்பதற்காக பிரம்மம் சாவயவம் என்ருலோ) நிரவயவத்வ சப்தகோபாத்=பிரம்மம் நிரவயவம் என்று கூறும் சுருதிக்கு விரோத முண்டாகும்.

கருத்து:—முந்தின அதிகாணத்தில் சித்தாந்திகளால் கூறப்பட்ட பால் திருஷ்டாந்தத்தினுலும், பிரம்மம் நிரவயவமாதலாலும் பிரம்மம் முழுவதும் ஜகத்தாகப் பரிணமித்ததென்று சொன்னதாக ஏற்படுகின்றது. அப்படியாளுல் பிரம்மம் முழுவதும் காரிய வடிவமாகப் பிரத்தியக்ஷமாக (உலக வடிவமாகக் காணப் படுதலின், அதனைத் தேடித் தெரிந்து கொள்ள வேண்டிய வேலை இல்லாமற் போகும். ஆனுல் பிரம்மம் 'தேடத் தகுந்தது; பார்க்கத் தகுந்தது' என்று சுருதி வாக்கியங்கள் கூறுகின்றன. ஒரு கால், பிரம்மம் சாவயவ மென்றும், அதில் ஏக தேசம் (ஒரு பாகம்) மாத்திரமே ஜகத்தாகப் பரிண மித்த தென்றும், மற்றப் பாகம் தேடத் தகுந்ததா யிருக்கின்ற தென்றும் கூறும் பக்ஷத்தில், பிரம்மம் "நிரவயவம்—அகண்டம்" எனக் கூறும் சுருதிகளுக்கு விரோத முண்டாகின்றது.

இவ்வாறு பிரம்மம் ஜகத்திற்கு பரிணுமோபாதான காரண மென்ருலும், அதில் ஒரு பகுதியே பரிணமித்த தென்ருலும், எல்லாம் (முழுவதும்) பரிண மித்த தென்ருலும் சுருதி விரோதம் சம்பவியாமலிராது. ஆகவே இது யுக்த மன்று— என்பது பூர்வ பக்ஷிகளின் ஆக்ஷேபம்.

27-வது சூத்திரம், அவதாரிகை:—மேற்கண்ட பூர்வபக்ஷ ஆக்ஷேபங்களை நிராகரித்து, பரிணுமவாதம் அசாத்திய மென்பது தமக்கும் சம்மதமே யென்றும், ஜகத்திற்குப் பிரம்மம் விவர்த்தோபாதான காரணமே யன்றி பரிணுமோபாதான காரணமல்ல வென்றும் இச் சூத்திரம் போதிக்கின்றது.

## சூ. 27. "ச்ருதேஸ்து சப்த மூலத்வாத்"

பதவுரை:—ச்ருதேః=விகாரத் தன்மையுடைய பிரபஞ்சத்திற்கு வேருகப் பிரம்மத்திற்கு இருப்பைக் கூறும் சுருதி யிருத்தலால் (பிரம்மம் முழுவதும் ஜகத்தாகப் பரிணமித்த தென்னும் தோஷம் சம்பவியாது); மேலும், சப்த மூலத்வாத்=நிரவயவ பிரம்மமே ஜகத் காரணம் என்னும் விஷயத்தில் வேதப் பிரமாண மிருத்தலால் (அவயவ முடையது என்னும் கற்பனையில் கூறப்பட்ட நிரவயவத் தன்மைக்கு விரோதமும் சம்பவியாது); து=ஆகவின் பூர்வ பக்ஷம் யுக்த மன்று.

கருத்து:—சம்பூரண பிரம்மம் ஜகத்தாகப் பரிணமிக்க வில்லையென்றும், ஜகத்திற்கு வேருகப் பிரம்மம் இருக்கின்ற தென்றும் சுருதி கூறுகின்றது. பிரம்மம் முழுவதும் விகாரத்தை யடைதலாலும் விகாரத்தை யடையாத பிரம்மம் வேருக இல்லாம லிருத்தலாலும் பிரம்மம் இந்திரிய கோசரமானதாகக் காணப் படுகின்றதாயினும், பிரம்மம் இந்திரியங்களுக்கு எட்டாதது (அகோசரம்) என்று சுருதிகள் முழங்குகின்றன. ஆகவின், விகாரத்திற்கு வேருகப் பிரம்மம் உள தென்பது இதனுல் பெறப் படுகின்றது. மேலும், நிரவயவ பிரம்மமே ஜகத் காரணமென்னும் விஷயத்தில் அனேக சுருதி வாக்கியங்களிருக்கின்றன. இதனுல், சாவயவத்வ (அவயவ முடையது என்னும்) கற்ப

னையால் ஏற்பட்டதென்று பூர்வ பக்ஷிகள் கூறும் ("பிரம்மம் நிரவயவத் தன்மையுடையது" என்னும் சுருதிக்கு) விரோதம் உண்மையிற் சம்பவியாது.

"பிரம்மம் நிரவயவமானால் அதற்கு உபாதான (முதற்) காரணமாந் தன்மை சம்பவியாது. அது சாவயவமானால் அதற்கு அநித்தியத்துவம் உண்டாவதுமன்றி 'நிரவயமானது'' என்று கூறும் சுருதி வாக்கியத்திற்கு விரோதமும் சம்பவிக்கும். அவ்வாறின்றி, பிரம்மம் நிரவயவமும் சாவயமுமா யிருப்பதாகும் என்பதும் யுக்தமன்று. ஆகலின், பிரம்மத்தின் விஷயமாக வுள்ள சுருதி வாக்கியங்கள் ஒன்றற்கொன்று ஒற்றுமை யுடையனவாயில்லை; முரண் பட்டவைகளா யிருக்கின்றன'' என்று பூர்வ பக்ஷிகள் கூறும் ஆக்ஷேபத்திற்குச் சமாதானம் பின் வருமாறு:—

காணப் படுவனவாகிய ரூப பேதங்களெல்லாம் அவித்யா கற்பிதமானவை (அஞ்ஞானத்தால் கற்பிக்கப் பட்டனவாகும். கற்பிதமாவது; ஒன்றினிடத்து இல்லாததை உளதாகக் கூறுதல்.) கற்பிதங்களாகிய ரூப பேதங்கள் எக்காலத்தும் வஸ்துவிற்கு சாவயவத் வாதி விகாரங்களை உண்டாக்க மாட்டா. உதாரணமாக, கிளிஞ்சலினிடத்துக் கற்பிதமாகக் காணப்படும் வெள்ளியானது அக் கிளிஞ்சலை விகாரப் படுத்த வல்லதாமா? விசாலமாகிய ஊஷர பூமியில் கற்பிதமாகத் தோன்றும் கானல் நீரானது அந்தப் பூமியை சேறுதல் முதலிய விகாரங்களை யடையச் செய்யக் கூடியதாமா? ஆகாது.

அவ்வாறே, கற்பிதமும் எல்லாவற்றிற்கும் ஆசிரயமுமாகிய பிரகிருதியானது பிரம்மத்திற்கு விகாரத் தன்மையை யாயினும் சாவயவத் தன்மையை யாயினும் உண்டாக்காது. அவித்தையால் கற்பிக்கப் பட்டவையான நாமரூப பேதங்கள் வஸ்துவின் (பிரம்மத்தின்) நிரவயவத் தன்மைக்குக் கேடு விளைப்பதில்லை. நிற்க, பரிணாமத்தைக் குறிக்கும் சுருதி வாக்கியங்கள் "பிரமம் ஜகத்தாகப் பரிணமித்தது'' என்று பரிணாமத் தன்மையைக் கூற வந்தனவல்லல; "எல்லாம் பிரம்ம மயம்'' என்று பிரமாத்ம பாவத்தைக் கூறுவதே அந்த வாக்கியங்களின் கருத்து என்று கொள்ளுதலே சிறப்பாகும்.

இக் காரணங்களால் பிரம்மம் ஜகத்திற்குப் பரிணாமோபாதான காரணமன்றென்றும், விவர்த்தோபாதான காரணமாகவே பிரம்மம் இருக்கின்றதென்றும், அதனாலேயே பிரம்மத்திற்கு பரிணாம வாதத்தினால் உளதாகும் விகாரத் தன்மை சாவயவத் தன்மை முதலிய தோஷங்கள் சம்பவிப்பதில்லையென்றும் அறிந்து கொள்க.

28-வது சூத்திரம், அவதாரிகை:—பால் தயிர் திருஷ்டாந்தத்தின்படி ஒரு வஸ்துவின் முந்திய நிலை கெட்டு வேறு நிலையை யடைவது பரிணாமம்; கிளிஞ்சல் வெள்ளி திருஷ்டாந்தத்தின் படி, ஒரு வஸ்துவின் முந்திய நிலை கெடாமலே உண்டாகும் வேறு வடிவத் தோற்றம் விவர்த்தமாகும்—கீழ் வரும் சூத்திரம் சொப்பன சாக்ஷி திருஷ்டாந்தத்தால் பிரம்மத்திற்கு விவர்த்தோபாதானத் தன்மையையே உறுதிப்படுத்துகின்றது.

சூ. 28. "ஆத்ம நிசைவம் விசித்ராச்சஹி."

பதவுரை:—ஹி=எந்தக் காரணத்தால், எவம்=இந்த விதமாகவே (சுய வடிவம் கெடாமலே), ஆத்ம நிச=ஜீவனிடத்தும் (சொப்பன சாக்ஷியினிடத்தும்), விசித்ராச்ச=விசித்திர சிருஷ்டிகள் காணப் படுகின்றனவோ,

(அப்படியே சொரூப நாச மில்லாமலே ஒன்றாகிய பிரம்மத்தினிடத்து விசித்திர வடிவ சிருஷ்டி உண்டாகின்றது).

கருத்து:—ஒன்றாகிய பிரம்மத்தி னிடத்து அதற்கு எவ்வித விகாரமும் உண்டாகாமலே பல வடிவங்களை யுடைய சிருஷ்டி எப்படி உண்டாகக் கூடுமென்று சந்தேகிக்க வேண்டியதில்லை. சொப்பன சாக்ஷியாகிய ஒரு ஜீவனிடத்து சொரூப நாச மில்லாமலே அனேக வடிவ சிருஷ்டி உண்டாகிறதில்லையா? அப்படியே பிரம்மத்தி னிடத்தும் என்றறிக.

29-வது சூத்திரம், அவதாரிகை:—இவ்வாறு வேதாந்த மதம் மேலே கூறப்பட்ட (பூர்வ பக்ஷிகளின்) தோஷங்களைப் பரிகரித்து, அத் தோஷங்கள் பூர்வ பக்ஷிகளாகிய சாங்கியர்களின் மதத்திலும் நையாயிகர்களின் மதத்திலுமே உள்ளன வென்று இச் சூத்திரம் காட்டுகின்றது.

சூ. 29. "ஸ்வபக்ஷ தோஷாச்ச."

பதவுரை:—ஸ்வபக்ஷ தோஷாத்—ச=பிரதான வாதத்திலும் அணுவாதத்திலும் தோஷங்க ளிருத்தலாலும்—(நிரவயவ பிரம்மமே ஜகத்திற்கு விவர்த்தோ பாதான காரணமென்பது உறுதியாகின்றது.)

கருத்து:—"நிரவயவமும் அகண்டமுமாகிய பிரதானமே சாவயவமும் கண்டமுமாகிய ஜகத்திற்குப் பரிணாமோபாதான காரணம்" என்பது சாங்கியர்களின் மத சித்தாந்தம். இவ்வாறாயின் முழு பிரதானமும் ஜகத்தாகப் பரிணமித்ததோ? அல்லது, அதில் ஏக தேசம் மாத்திரமே அவ்வாறாயிற்றோ? என்பதைப் பூர்வ பக்ஷிகள் விளக்க வேண்டி வரும். முழுவதும் பரிணமித்தது என்றால் (தயிராகும் போது பால் கெட்டுப் போவது போல) ஆதார மழிந்து பிரதானமே இல்லாமற் போகும். ஏக தேசம் பரிணமித்ததென்றால் அதற்கு சாவயவத் தன்மை அநித்தியத் தன்மையாகிய தோஷங்கள் சம்பவிக்கும்.

இப்படியே அணுவாதத்திலும் தோஷங்கள் காணப்படுகின்றன. எவ்வாறெனில்:— உலகத்திற்குக் காரணம் பரமாணு வென்பதும், அது நிரவயவ மென்பதும் தார்க்கிகர்களின் மத சித்தாந்தம். அந்தப் பரமாணு மற்றோரணுவுடன் சேராமல் அதிக பரிமாணத்தை யடையாது. ஓரணு மற்றோரணுவுடன் சம்பூர்ணமாக சேர்ந்த தென்னும் பக்ஷத்தில், அபிவிருத்திக்கு இடமில்லாமல் பிரபஞ்ச மெல்லாம் அணுப் பரிமாணமா யிருக்க வேண்டும். ஆனால், அது (பிரபஞ்சம்) அவ்வாறின்றி விசால முடையதா யிருக்கின்றது. இவ்வாறின்றி, அணுக்கள் ஒன்றோ டொன்று சிறிது பாகம் மாத்திரம் சேர்ந்தன வென்றாலோ அவற்றிற்கு சாவயவத்துவ தோஷம் சம்பவியாமற் போகாது.

ஆகலின், வேதாந்த மதத்தி லுள்ளனவாகப் பூர்வ பக்ஷிகள் கூறும் தோஷங்கள் உண்மையில் வேதாந்த மதத்திலில்லை; பூர்வ பக்ஷிகளாகிய சாங்கியர் தார்க்கிகர் என்பவர்களின் மதங்களிலேயே உள்ளன வென்பது நிரூபிக்கப் பட்டது.

# வஞ்சத்தின் விளைவு

ஏ. கே. பி.

தான் ஒருவர்தான் கிராமத்தின் சர்வாதிகாரி என்ற நினைப்பெல்லாம் மலையேறி வெகு நாளாய் விட்டது. ராமத்தேவர் இப்பொழுது பெட்டிப் பாம்புபோல் அடங்கி வீட்டை விட்டு வெளி வரவே அஞ்சி யிருக்கிறார். ஆனால் அவரிடம் பேசி வந்த சிலரிடம் இன்னும் தன்னுடைய மதிப்பின் அளவைப் பற்றி அவர் தற்பெருமை அடித்துக் கொண்டதாகக் கேள்வி.

பரம்பரையாக இவருடைய குடும்பத்தார்களே ஊரின் நாட்டாண்மைக்காரர்களாகவும், அதிக பணக்காரர்களாகவும் இருந்து வந்தனர். ராமத்தேவரின் தகப்பனார் காலத்தில் பனையூர் என்ற இக் கிராமம், அவர், சொல்லுவதைக் கேட்டு அவருக்கு அடிமையாக நடந்து வந்தது. அவர் ஊராரின் ஒற்றுமையையும், சுபிட்சத்தையும் வளர்க்க வெகு பாடுபட்டு, சில ஆயிரம் ரூபாய்கள் வரை, ஊராரின் நன்மைக்காகச் சேர்த்து வைத்திருந்தார். அவருக்குப் பின் ராமத்தேவரின் தமையனரான சொக்கத் தேவருக்கு தகப்பனாரின் உத்தியோகம் கிட்டியது. இவர் பரம சாது. கோபத்தையே இவரிடம் காண்பதரிது. இவர், பெயருக்குத் தான் நாட்டாண்மை உத்தியோகம் வகித்து வந்தார். அதிகாரமெல்லாம் ராமத்தேவர் கையில்தான். ஊரில் வழக்குகள் தீர்ப்பு செய்வதில் சொக்கத் தேவருக்கு அதிக மதிப்பு இருந்து வந்தது. ஆனால் ராமத்தேவர் எல்லா வழக்குகளிலும் தானே பேசுவதற்கு முயற்சிப்பார். நாளடைவில் தீர்ப்பும் சொல்வதற்குத் தலைப்பட்டார். அவருடைய தீர்ப்பில் ஜனங்களுக்கு அதிருப்தி ஏற்பட்டது. ஆயினும், ராமத்தேவருக்கு, தன் பக்கம் பேசுவதற்கு துணையாகவும் சில ஜனங்கள் இல்லாமலில்லை. இதைக் கண்ட நாட்டாண்மைக்காரர், தன்னுடைய தம்பியை இதமான வார்த்தைகளால் சொல்லித் தடுத்தும், பயனில்லாது போகவே, அதிகப் படியாக ஒன்றும் செய்ய வியலாமல், வாளா இருந்து விட்டார். இது, ராமத்தேவருக்கு அதிக தைரியத்தைக் கொடுக்க, ஏதுவாயிருந்தது. இனி தன்னை தமையனர் தவிர வேறெவரும் துணிந்து கண்டிக்க வரமாட்டார்கள் என்று தெரியவே, பனையூரையே ஒரு ஆட்டம் ஆட்டி விடலாம் என்று அவர் தீர்மானித்து விட்டார்.

(2)

ராமத் தேவரின் பந்துக்களாகிய ஒருவரின் வீட்டில் ஒரு சமயம் சந்தேகமான ஒரு மரணம் ஏற்பட்டது. அது விஷயமாக பனையூர் கிராம முனிசீப், பல நண்பர்களின் தூண்டுதலின் பேரில், பலமான லஞ்சத்தை மரண வீட்டாரிடம் வற்புறுத்திக் கேட்க ஆரம்பித்தார். அவர்கள் பணம் கொடுக்க சக்தியற்ற எளிய குடும்பத்தார்கள். இதற்குள்ளாக, ராமத்தேவர் தன் நண்பர்களுடன் கலந்தாலோசித்து ஒரு ஏற்பாடு செய்து கொண்டார். பின்பு அவர் தன் கையிலிருந்தே கிராம முனிசீப் கேட்ட பணத்தைக் கொடுத்து,

விட்டு, பிணத்தை அடக்க வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து முடித்து விட்டார். ஒரு வாரத்திற்குள்ளாக கிராம முனிசிபின் பேரில் லஞ்சம் வாங்கியதாகக் கோர்ட்டில் பிராது தாக்கல் செய்யப்பட்டது. இதற்கு மரணம் நேர்ந்த வீட்டுக்காரர் தான் வாதி. ஆனால் ஊரின் பொதுப் பண்டிலிருந்த மூவாயிரம் ரூபாயும் இக் கேசுக்காக காலி செய்யப் பட்டது. காணாததற்கு வீடு வீடாய், வரி வைத்தும் பணம் பிரித்தார்கள். இவ்வளவு ஏற்பாடும் ராமத்தேவரின் பெரு முயற்சியினால் தான் என்பது விளங்கும். கேஸ் ஜயித்து கிராம முனிசீபுக்குச் சிறைவாச தண்டனை கிடைத்தது. அதனால், ராமத்தேவருக்கு எவ்விதம் கர்வம் அதிகமாகாமலிருக்க முடியும்?

ஊரிலிருந்த பண மெல்லாம் போய் விடவே, ஒரு சிலர்க்கு, ராமத்தேவரின்பேரில் கோபமும், ஆத்திரமும் மூண்டது. அவர்கள் ராமத்தேவரையும், அவருடைய கூட்டாளிகளையும், எவ் வழியிலும் எதிர்த்துப் போராட தீர்மானித்தனர். இவ்விதமாக ஜனங்களுக்குள் இரண்டு கட்சியாகி விட்டது. சொக்கத்தேவர் எவ்வளவோ முயற்சி செய்து ஒன்று சேர்க்கப் பாடு பட்டார். ஆனால் தம்பியினுடைய குணத்திற்கு, இவருடைய முயற்சி பலியாய் விட்டது. கடைசியாக சொக்கத்தேவர், ஒரு கட்சியிலும் சேராமலும் ஊராரின் ஜோலிகளுக்கே போகாமலு மிருந்து வந்தார். இது தம்பிக்குப் பிடித்தமாயில்லை. தமையனை தன்னுடைய கட்சியில் சேரும்படி எவ்வளவோ கட்டாயப் படுத்தியும், அவர் சம்மதியாது போகவே, சமயம் வந்தால் அவரையும் எதிர்த்துப் போராட துணிவு கொண்டார்.

(3)

ஆடி அமாவாசை இருட்டு. நடு ஜாமம். பனையூர் ஜனங்கள் முழுவதும் உறக்கத்தில் ஆழ்ந்திருக்கும் சமயம். தெருவின் ஒரு மூலையில் பெரும் சப்தம் கிளம்பியது. ஜனங்க ளெல்லோரும், விழித் தெழுந்து, ஓடிப் போய் என்னவென்று பார்த்தனர். ராமத் தேவரின் எதிரிகளில், சிலருடைய வீடுகள் தீப் பற்றி எரிந்துகொண் டிருந்தன. ராமத்தேவரின் ஆட்கள் இதைப் பார்த்து விட்டு தங்கள் தங்கள் வீடுகளுக்குள் போய் கதவுகளைத் தாளிட்டுக் கொண்டனர். தெருவில், ராமத்தேவரின் தூண்டுதலின் பேரில்தான் இது நடந்தது என்ற வதந்தி கிளம்பிற்று. இரண்டு கட்சிக்காரர்களுக் குள்ளும் பலமான சண்டை. பெரிய தடிக் கம்புகளும் அரிவாள்களும் தாண்டவமாடின. அநேகருக்குக் காயங்க ளேற்பட்டதே யொழிய, உயிர்ச் சேதமெதுவுமில்லை. ராமத்தேவர் சும்மா விடுபவரா? தன்னுடைய தமையன், தமையனுடைய பிள்ளைகள் முதலியவர்களையும், இன்னு மனேகர்களையும், பிரதிவாதிகளாகச் சேர்த்து ஒரு பிராது கொடுத்தார். தமையனர் உடனே வேண்டிய ஏற்பாடுகள் செய்து, தன்னையும், தன் பிள்ளைகளையும் விடுவித்துக் கொண்டார்.

வழக்கு முடிவடையும் சமயம். ராமத்தேவருக்கு அனுகூலமாகவே தீர்ப்புக் கிடைத்தது. எதிரிகள் பணம் கடன் வாங்கி, அப்பீல் செய்தும் பயனில்லாது போய் விட்டது. ஒவ்வொருவரும், இரண்டு வருஷத்திற்குக் குறையாத சிறை வாசத் தண்டனையை அடைந்தனர்.

(4)

பனையூரில், ராமத்தேவரின் தகப்பனர் காலத்திலேயே, அவரால் ஏற்

படுத்தப் பட்ட ஒரு ஆரம்பப் பாடசாலை யுண்டு. அது தற்போது நாட்டாண்மை, சொக்கத்தேவர் நிர்வாகத்தில் இருந்து வந்தது. வருடந்தோறும் சர்க்காரிலிருந்து கிராண்டும் வந்து கொண்டிருந்தது. ஊரிலுள்ள இரு கட்சிக்காரர்களின் பிள்ளைகளும் அதில் கல்வி பயின்று வந்தனர். பள்ளிக்கூடத்தில் தலைமை யாசிரியராக, சொக்கத்தேவரின், குமாரரே இருந்து வந்தார். தன் அண்ணன் நிர்வாகஸ்தராயும், அவருடைய பிள்ளையே, ஆசிரியராகவும் இருப்பதைப் பார்த்து ராமத்தேவரின் நெஞ்சம் பொறுக்குமா? மேலும் பள்ளிக்கூட கட்டிடம், தன் தகப்பனார் கட்டி வைத்ததல்லவா? இக்காரணத்தைக் கொண்டே, தமையனை தனக்கு நிர்வாகத்தை எழுதி மாற்றும்படிவாதாடி, பள்ளியையும் அடைத்துப் பூட்டி விட்டார்.

சொக்கத்தேவருக்கு, தன்னுடைய நிர்வாகத்தை, தம்பிக்கு எழுதிக் கொடுப்பதில் பரிபூர்ண விருப்பந்தான். ஆனால் தம்பியின் எதிர்க் கட்சியார்கள், இவரை அறவே கொடுப்பதி னின்றும் தடுத்தனர். தம்பிக்கு நிர்வாகத்தை மாற்றினால் எதிரிகளின் கோபம்; மாற்றா விட்டால் தம்பியின் உபத்திரவம். என் செய்வார்? உடனே தனக்கு நிர்வாகம் தேவை யில்லையென்று கல்வி அதிகாரிக்கு எழுதி விட்டார். ஆனால் ராமத்தேவர் பெரு முயற்சி செய்து பணத்தைப் பெரிதென்று பாராமல், தன் பெயருக்கு மறுபடியும் அங்கீகாரம் வாங்கி விட்டார். ஆயினும் எதிரிகள் முன் போல பிள்ளைகளை இவருடைய பள்ளிக்கு அனுப்பவில்லை. போகிற மற்றப் பிள்ளைகளையும், போகாது தடுத்து விட்டனர். காலடைவில் பள்ளிக்கூடத்தை மூட நேர்ந்து விட்டது. இன்னும் பள்ளிக்கூடம் திறக்கவில்லை. அந்த இடத்தில் தான் கள்ளுக்கடைக்கு, ராமத்தேவரின் சம்மதத்தின் மேல், கவர்ன்மெண்டார் லைசென்ஸ் கொடுத்திருப்பதாக ஊரார் பேசிக் கொள்ளுகின்றனர்.

(5)

ஜெயிலி லிருந்து, எதிரிபி ளுட்கள், திரும்பி வந்தனர். அவர்கள் ராமத்தேவரை வஞ்சம் தீர்த்துக் கொள்ள நினைத்து, வேவு பார்க்க ஆரம்பித்து விட்டனர். ராமத்தேவர் என்ன செய்வார்? முன்னால் தன்னோடிருந்து, தனக்க ஊக்கமளித்த நண்பர்களெல்லாம், தற்போது எட்டி பார்க்காமலிருந்தால் அவர் மனது என்ன பாடுபடும்? தமையனும் விரோதி. ஊர் ஜனங்களும் பகை. துணைக்கு என்ன செய்வார்? பகலில் வீட்டை விட்டு வெளியே வராமலும், அவசிய மேற்பட்டால், இரவில் வெளியே போய் வந்து கொண்டுமிருக்கிறார். இது இன்னும் எவ்வளவு காலத்திற்கோ தெரியவில்லை.

இக் கட்சியின் பயனாக, கிராமத்தின் பொதுக் கோவில்களெல்லாம் கேட்பாரற்று, அடைபட்டிருக்கின்றன. தினந்தோறும் பூஜை நைவேத்யங்கள், சம்பிரமமாய் நடந்து வந்த இக் கோவில்களை அடைத்திருப்பது, பனையூருக்கு இன்னும் என்ன கேடுகாலம் சம்பவிக்குமோ என அஞ்சவேண்டியிருக்கிறது.

அன்பர்களே! இந்த ராமத்தேவரைப் போன்று நம் கிராமங்களில் இன்னும் அநேகரைக் காணலாம். இவர்களுள்ளவரை, நாம் கிராம சீர்திருத்தத்தை எதிர்பார்க்க முடியுமா? நம் பாரத நாட்டிற்குத் தான் விமோசனமுண்டாகுமா?

# அவிஸ் நகர்

(எம். சுந்தரராமன்.)

"ஸமீபத்தில் ஏதேனும் நல்ல ஊராகவிருந்தால் பார்த்துவிட்டு வருவோம் ஸார்" என்றேன்.

"உங்களை யொத்தவர்கள் ரஸிக்கும்படியாக என்ன இடம் ஸார் இருக்கிறது இந்த பொட்டை வெளியில்? வடலூரில் இன்றைக்கு மாஸபூசம், வேண்டுமானல் போய் பார்த்துவிட்டு வருவோம். அப்படியே 'அவிஸ்நகர் ஸெட்ல்மெண்டு'க்கு வேண்டுமானுலும் போய் வருவோம். வடலூரிலிருந்து அவிஸ்நகர் ஐந்து மைல்தான்" என்ருர் நண்பர் வேம்பு அய்யர்.

ஆகவே, அன்று இரவு அந்தப் பிரஸித்திபெற்ற இராமலிங்க சுவாமிகள் இருந்த விடமாகிய வடலூரை அடைந்தோம். அன்றையதினம் மாஸ பூசமாதலால் சுமார் 200 ஜனங்களுக்கு மேல் கூடியிருந்தனர். நாங்களும் என் நண்பருக்கு வடலூரில் அறிமுகமானவர் இருவரோடு இரவு சுமார் மணி 8-க்கு ராமலிங்க சுவாமிகள் ஆலயத்தை யடைந்தோம். ஆலயம் என்று சொன்னே னல்லவா? உண்மையில் அது எனக்கு ஆலயமாகவே தோன்றவில்லை.

நிற்க, நாங்கள் சென்றதும் ஸந்நிதியில் திரை ஒன்று தொங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தேன்.

"என்ன ஸார்? இப்பொழுது எதற்காக திரை போட்டிருக்கிருர்கள்" என்றேன்.

"திரையா? இந்த ஆலயமே திரைகளாலானதுதான்" என்ருர் வேம்பு அய்யர். நான் அடைந்த ஆச்சர்யத்திற் களவேயில்லை. அதற்குமேல்தான் அந்தக் கோவில் ஐதீகமே வேறு என்றும், ஸந்நிதி ஒன்றல்ல இரண்டல்ல ஏழு திரைகளாலான தென்றும் ஏழாவது திரையில்தான் அருட்பெருஞ்சோதி தெரிகிறது என்றும் விளக்கினர் வடலூர் நண்பர் ஒருவர். இதற்குள் திரைகள் ஒவ்வொன்ருகத் தூக்கப்பட்டன. மூன்ருவது திரை தூக்கப்பட்டதும் சிவகாமி சமேதராய் நடராஜர் காக்ஷியளித்தார். ஆனல் இதிலும் ஒரு விசேஷம். அந்த நடராஜரும் சிவகாமியும் 'சுத்த ஹம்பக' பேர்வழிகள் தானும் ஏனெனில் இருவருக்கும் விக்கிரஹங்கள் கிடையாதாம். வெறும் புஷ்ப மாலைகளாலும் ஆடைகளாலும் ஆனவர்கள் தானும் அந்த நடராஜரும் சிவகாமி அம்மையும்.

ஆருவது திரை தூக்கப்பட்டதும் ஜோதி பௌர்ணமி சந்திரனில் பாதியை வெட்டி வைத்தாற்போல் தெரிந்தது. தைப் பூசத்தன்றுதான் பூர்ண ஜோதி தெரிவதாகவும் மற்ற பூசங்களில் அர்த்த ஜோதிதானென்றும் அறிந்து கொண்டேன். இதற்குள் நேரமாகி விடவே நாங்கள் தங்கியிருந்த

விடுதியை யடைந்தோம். மறுநாட் சாவதானமாக அந்தக் கோயிலை சுற்றிப் பார்த்துவிட்டுப் போக வேண்டுமென்று நான் விரும்பினபோதிலும் என் நண்பர்கள் அன்று அவிஸ்கர் ஸெட்ல்மெண்டைப் பார்த்தால்தான் ஜன்மம் சாபல்யமாகுமென அபிப்ராயப் பட்டதால் நான் என்னுடைய தீர்மானத்தை ஒத்திவைக்க நேர்ந்தது. ஆரம்பத்தில் வடலூர் கோவில் கோவிலாகவே தோன்றவில்லை என்று சொன்னேனல்லவா? இறுதியாக நான் அவ்வித முடிவுக்கு வந்த காரணத்தைச் சொல்லிவிட்டு இச்சிறு கட்டுரையை முடித்துக் கொள்ளுகிறேன்

ஒரு கோவிலை கற்பனை செய்து பாருங்கள். மூலவர், உற்சவர், சிலைகள், விக்ரஹங்கள் என்ன, வாகனங்கள் என்ன, மேள வாத்தியம் சதிர்க்கச்சேரிகள் என்ன, பெண்கள் பக்தி மேலீட்டு மெய்மறந்திருக்கும் போது கழுத்துச் சங்கிலியை யாராவது அபேஸ் பண்ணிக்கொண்டு போய் விடுவதென்ன? எல்லாம் உங்கள் மனக்கண்முன் அமர்க்களப் படுகின்றனவல்லவா? இவைகளில் ஒன்றுகூட மருந்துக்குக் கேட்டாலும் இல்லை, யென்றால் வடலூர்க் கோவில் கோவிலாகத் தோன்றுமா ஸ்வாமி?

• • •

மறுநாட் காலை மணி 10 சுமாருக்கு அவிஸ்நகர் 'ஸெட்ல்மெண்டை அடைந்தேன். ஊத்தங்கால் மங்கலம் ஸ்டேஷனிலிருந்து ஸெட்டில்மெண்டு இரண்டு மைலிலுள்ளது. ஜில்லாபோர்டு ரோட்டிலிருந்து ஒரே மைல்தான். அவிஸ்நகர் ஸெட்டில்மெண்டு செங்கல்பட்டு ரிபர்மேடரி ஸ்கூலைப்போல, கைதிகளை அடைந்து வேலை வாங்குவதற்கென சர்க்காரால் நடத்தப்பட்டு வரும் ஒரு ஜெயில் என்று கேள்விப்பட்டிருந்த நான் அங்கு உள்ளே நுழைந்ததும் அடைந்தது பெரிய ஏமாற்றம்தான்.

அழகிய சிறு விடுதிகள். ஒவ்வொரு விடுதிக்கும் முன்னால் ஒரு சிறு தோட்டம். இதைப்போல் 20 அல்லது 30 விடுதிகள் கொண்டது ஒரு தெரு. ஒவ்வொரு தெருவிலும் இரண்டு அல்லது மூன்று இயற்கை ஊற்றுக்கட். இந்தக் கோட்டையில்கூட குழாய்கள் வழியாக ஜலம் இடைவிடாது வழிந்து கொண்டிருந்தது. இச்சிறு ஸ்தாபனம் இயற்கையன்னையின் பூரண அன்பிற்கு பாத்திரமாயிருந்தது. ஸெட்ல்மெண்டு உத்தியோகஸ்தர்கள் யாராவது உதவி புரிந்தாலன்றி ஊரைச் சுற்றிப்பார்த்து ரஸிக்க முடியாது என்று தோன்றவே நாங்கள் நேரே மானேஜராபீஸிற்குச் சென்றோம். எங்கள் துர்திர்ஷ்டம் மானேஜர் லீவில் எங்கோ சென்றிருந்தார். எனவே, வேறொருவரது உதவியால்தான் எல்லாவற்றையும் சுற்றிப் பார்த்தோம். சாப்பாடு முடிந்ததும் சுற்றக் கிளம்பினோம்.

முதன் முதலில் ஸெட்ல்மெண்டு சிறுவர்களும், சிறுமிகளும் படிப்பதற்கென்று அமைக்கப் பட்டிருந்த ஆண் பெண் பாடசாலைகளுக்கு விஜயம் செய்தோம். (என்னுடன் வந்த நண்பர்கள் மூவரும் ஆசிரியர்கள் என்று நேயர்களுக்கு ஞாபக மூட்டுகிறேன்.) ஆண் பாடசாலையில் எட்டு வகுப்புக்களும், பெண் பாடசாலையில் ஐந்து வகுப்புக்கள் வரையிலும் அமைந்திருந்தன. ஆண் பாடசாலையில் உபாத்தியாயர்கள் ஏழு பேர், பெண் பாடசாலையில் ஐந்து உபாத்தியாயினிகள். இரு பள்ளிகளிலும் சுமார் 500 ஆண் பெண்கள் படித்துக் கொண்டிருந்தனர். பாடசாலைகளில் படிக்கும் சிறுவர்

சிறுமியர் யாவருக்கும் புஸ்தகங்கள், துணிமணிகள், சாப்பாடு எல்லாம் அதிகாரிகளால் அளிக்கப்பட்டு வருகின்றன. எல்லா மாணவர் மாணவிகளுக்கும் ஆரம்பக்கல்வி புகட்டுவதோ டல்லாமல பிரம்பு பின்னல் (Rattan Works), மரவேலைகள் (Wood Works), நெசவு தொழில் (Weaving) முதலிய தொழில்களும் பழக்கிக் கொடுக்கிறார்கள். ஆகவே ஸெட்டில்மெண்டு கைதிகளுக்குத் தங்கள் குழந்தைகளைப் பற்றிய கவலை கொஞ்சங்கூட வேண்டியதில்லை.

பிறகு தொழிற்சாலைகளைப் பார்வை யிட்டோம். கைத்தறிகள் மட்டும் சுமார் 600-க்கு மேலிருந்தன. எல்லாவற்றிலும் ஜமக்காளங்கள் நெய்து கொண்டிருந்தனர். அந்தக் கைதிகள் தறிகளில் நெய்து கொண்டிருந்த சுறுசுறுப்பு என்னே! இவர்கள்கூடத் திருடி யிருப்பார்களோ என்று தோன்றியது. மரவேலை, தோல் வேலை செய்யு மிடங்களிலும் இதே சுறுசுறுப்பு; இதே கூட்டம். தொழிற் சாலைகளில் வேலைசெய்யும் கைதிகளுக் கெல்லாம் அவ்வரவர் திறனுக்குத் தக்கபடி வாரம், ரூ 2 முதல் 3 ரூபாவரையில் சம்பளம் கொடுக்கிறார்கள்.

கடைசியாக, அந்த ஸெட்டில்மெண்டுக் கென்று அமைத்திருந்த சிறு ஆஸ்பத்திரியைப் பார்வை யிட்டுவிட்டு "ஸ்டோர் ஹவுஸி"ற்குச் சென்றோம். அங்கு கிடந்த விதவிதமான மேஜை நாற்காலிகள், ஜமக்காளங்கள், செருப்பு, பூட்ஸ் வகையறாக்கள் அனைத்தும் "அமெரிக்காவில் செய்தது" என்று லீல் போடலாம்போ லிருந்தன. சுமார் ஐந்து அல்லது ஆறு ஜில்லாவிலுள்ள போலீஸாருக்கு வேண்டிய செருப்புக்கள் ஜமக்காளங்கள் முதலிய எல்லா சாமான்களும் இங்கிருந்துதான் ஸப்ளை செய்யப் படுகின்றனவாம். இதைத் தவிர அங்கு செய்யப்படும் சாமான்களை சில்லரையிலும் விற்பனை செய்கிறார்கள்.

மாலை டிபன் முடிந்ததும் கைதிகளின் விடுதிகளை யடைந்தோம். அழகிய சிறு குடிசைகளில் அங்கிருந்த பெண்கள் வீட்டுவேலைகளை பரபரப்புடன் கவனித்துக் கொண்டிருந்தனர்.

"காணி நிலம் வேண்டும் ............................"

என்று பாரதியார் பாடினா ரல்லவா? இங்கு ஒரு காணியல்ல, இரண்டு வேலியே வேண்டு மென்றாலும் ஒவ்வொரு குடும்பத்திற்கும் தருகிறார்கள். அவர்கள் இதில் பயிரிட்டு, வந்ததில் வாயிதா கட்டிவிட்டு பாக்கி யிருந்தால் சாப்பாட்டிற்கு வைத்துக் கொள்ளலாம். ஆகவே ஒவ்வொரு கைதியும், நிலத்தைப் பயிரிட்டோ அல்லது தொழிற்சாலைகளில் வேலை செய்தோ தான் தன் குடும்பத்தைப் பாது காக்கவேண்டும்.

எல்லாவற்றையும் சுற்றிப் பார்த்தும், "என் ஸார்! எங்கேயாவது முடிச்சவிழ்த்து மாட்டிக் கொள்ளுகிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். இங்கு வந்து விடலாமல்லவா?" என்றார் வேம்பு அய்யர். அவர் ஹாஸ்யத்திற்காக அப்படிக் கேட்டார்; எனினும் ரஷ்யாவில் அமுலிலிருந்து வரும் பொதுவுடமை ராஜாங்கத்தைப் போல் நடந்துவரும் அந்த ஸ்தாபனம் யாவர் மனதையும் கவரத்தக்கதா யிருந்தது. நானும் "எது? நம் காருண்ய கவர்ன்மெண்டார்கூட நல்ல காரியங்கள் செய்கிறுப் போலிருக்கே" என்று நினைத்

தொடர் கதை.

# மாயா விரோதி

(ஸி. எஸ். இராமன், எம். ஏ., எல். டி.)



(961-வது பக்கத் தொடர்ச்சி)

மாயாவிரோதியின் முகம் வெளுத்த தென்றாலும் அடுத்த நிமிஷம் அவன் அதை அகற்றிவிட்டு வாய்விட்டுச் சிரித்தான். "இவர்கள் இப்படித்தான் பேசுவார்கள். நாம் போவோம்," என்று சொல்லிவிட்டு விருந்தாளிகளை அழைத்துச் சென்றான்.

சிறிது நேரத்திற்குப்பின் கப்பலதிகாரிகள் களியாட்டத்திற்கு மாயா விரோதி விருந்தினர்களைப் போகுமாறு சொல்லிவிட்டுத் தனது அறைக்குச் சென்று எல்லப்ப செட்டியாருடைய வார்த்தைகளைப்பற்றி யோசனை செய்தான். அதிகநேரம் அந்த விஷயத்தில் யோசனை புரிந்து ஒரு முடிவுக்கு வந்தான். பின்பு மேல்தளத்திற்கு வந்து கடற்காற்று வாங்கலாமென்று அங்கே சென்றான். அவன் அங்கே செல்லுகையில் கப்பலின் மற்றொரு புறத்திலிருந்து சங்கீத ஒலி வந்துகொண்டிருந்தது. தனது சகாக்கள் களியாட்டத்திலும் நடனத்திலும் காலத்தைச் சந்தோஷமாகப் போக்குவதை அறிந்தான். அதைப்பற்றி யோசனை செய்யாமல் மேலே வந்தான்.

காற்று ஜிலு ஜிலுவென்று அடித்துக் கொண்டிருந்தது. ஒருபுறம் இரு ஆடவர் தனித்துப் பேசுவதைக் கண்டான். கூர்ந்து நோக்கினான். இராஜமன்னாரும் முத்துசாமி ஐயங்காரும் மெதுவாகப் பேசுவதைக் கண்டான். காது கொடுத்துக் கேட்டான். சில வார்த்தைகள் மட்டும் அவனுடைய காதுக்கு எட்டியதால் அதைக் கேட்பதாயினன்.

"எனக்கு...சந்தேகம்...மாயா விரோதி இப்போது...இருக்கிறான்... நாம் தப்பிப்பது......" என்று இராஜமன்னார் பேசிக்கொண்டிருந்தார்.

"ஆம்...சண்டாளன்..." என்று சொன்னார் முத்துசாமி ஐயங்கார்.

---

தேன். ஆயினும் அது அல்ப சந்தோஷமாகவே முடிந்தது. அங்குள்ளவர்களின் குறைகள் ஒவ்வொன்றாய்க் கிளம்பின.

அங்குள்ள கைதிகள் முதல் உத்யோகஸ்தர்கள் வரையில் யாவருக்கும் குறைந்த ஓய்வு; நிறைந்த வேலை.

அங்கு உழைத்துவரும் ஏழை உபாத்தியாயர்களுக்கு, பிற்கால வாழ்க்கைக்கு உதவும்படி, உபகாரச் சம்பளமோ, பிராவிடண்டு நிதியோ ஒன்றும் கிடையாது. அதிகாரிகள் கடைக்கண் நோக்கி இக்குறைகளை நிவர்த்திப் பார்களா ?

மாயா விரோதிக்கு அவர்கள்மீது கோபம் உண்டாயிற்று. இராஜமன்னார் மீதே அதிக கோபம் ஏற்பட்டதால் அவரை ஒழித்து விடவேண்டும் என்று நினைத்தான்.

## அதிகாரம்—3

### வஞ்சனை வலை—வேதனை மலை

மற்றொருவன் முத்தய்ய செட்டியின் நிலைமையில் இருந்திருந்தால் மானம்போய், தைரியம் நீங்கி, மனத்தளர்வு பெற்று; என்ன செய்வது என்பது தெரியாமல் அறிவு கலங்கி, சிந்தனை சிதைந்து, பயத்தினால் உடல் பதறி ஏதாவது உளறிக் கொட்டி தன்னை யாரென்று அறியுமாறு செய்து துன்பத்தில் அகப்பட்டுத் தவித்துக் கொண்டிருப்பான். மாயாவிரோதி தைரியமும் யுக்தியும் அபாரமாகப் பெற்றிருந்தானாதலின் பொய்க் கைதிகள் அனைவரும் தன்னைத் தூற்றிக் காண்பித்த வார்த்தைகட்கு அஞ்சாமல் வாயாரச் சிரித்தான்.

“இக் கைதிகள் வேறு எந்த வகையில் என்னை தூஷிக்க முடியும்! சரி-நாம் போகலாம்,” என்று சொல்லிக்கொண்டே திக்பிரமையும் திடுக்கிட்ட மனதும் கொண்ட விருந்தினர்களைத் தொடர்ந்து சென்றான்.

விருந்தினர்களுடைய பயம் சொல்லி முடியாது. அவர்கள் தைரியத்தை யிழந்துபோய் எவ்வகையிலாவது அக் கப்பலை விட்டகன்றால் போதும் என்று எண்ணியவர்களாய் ஜில்லென்று அவ்விடத்தை விடுத்துப் போனார்கள். மாயா விரோதியின்மீது அவர்கள் சொல்லொணா அச்சம் கொண்டிருந்தமையால் கப்பித்தானாக நடிக்கும் மனிதனே கள்வனாக இருக்கவேண்டும் எனும் முடிவுக்கு வந்தனர்.

“நீங்கள் அக் கைதிகளுடைய போலி விஷயத்திற்கு பயந்து போகலாமா!” என்று மாயா விரோதி நகைத்துக்கொண்டே அவர்களைக் கேட்டான். “தைரியத்தை இழக்காதீர்கள்.”

இராஜமன்னாரும் அவரது நண்பர்களும் முத்தய்ய செட்டியை நோக்கினார்கள்; தங்களிடம் தைரியம் முகத்தில் இருப்பதாகக் காண்பித்துக் கொண்டனர்.

“சந்தோஷம்,” என்று மாயா விரோதி சொல்லிவிட்டுத் தனது அறைக்குச் சென்றான்.

அவ்விடத்தை விட்டகன்றதும் விருந்தினர்கள் தமக்குள் மெல்லிய குரலில் முத்தய்ய செட்டி கபடநாடகம் நடிப்பதைப்பற்றிப் பேசிக்கொண்டனர். கூண்டில் அடைக்கப்பட்டிருந்த மனிதர்கள் குற்றவாளிகளாக இருக்க முடியாது என்று கருதினர். அவர்களை விடுதலை செய்ய முடியாத நிலைமையில் தாங்கள் இருப்பதற்கு மனம் நொந்து கொண்டனர். எதற்கும் தாங்கள் ஜாக்கிரதையாக நடந்துகொண்டு, எமகாதகப் பேர்வழியான மாயா விரோதியின் பிடியிலிருந்தும் தப்பிச்சென்றால் போதும் என்று நினைத்தார்கள்.

அப்பொழுது கனகன் அங்கே தோன்றி எல்லோரையும் நடனத்திற்கு விஜயம் செய்யவேண்டும் எனக் கேட்டுக்கொண்டான்.

“அதற்கென்ன? வருகிறோம்,” என்று ஸ்திரீகள் சொன்னார்கள்.

இரண்டொரு விநாடிகளுக்குப் பின் மூத்துசாமி ஐயங்காரும் இராஜமன்னரும் தவிர ஏனையோர் நடனத்தில் கலந்துகொள்ள சந்தோஷமாகச் சென்றார்கள். அப்படியாவது சில மணிகளை உல்லாசமாகப் போக்கி விடலாம் என்பதே அவர்களுடைய கருத்து.

அவர்கள் போனதும் செங்கோட்டை ஜெமீந்தார் பிரபல நாவலாசிரியரோடு மாயா விரோதியைப்பற்றி மீண்டும் பேசினர்: சிறிது நேரத்திற்குப் பின் அவர்கள் இருவரும் கப்பலின் மேல் தளத்திற்குச் சென்று இரகசியமாகப் பேசிக்கொள்வதாயினர்.

கொஞ்சநேரம் கழித்து மாயா விரோதி மனவமைதி சிறிது குன்றியவனாய் அங்கே தோன்றினன். செங்கோட்டை ஜெமீந்தாரும் அவருடைய ஸ்நேகிதரும் தன்னைப் பற்றி ஒரு மூலையில் நின்று பேசிக்கொண்டிருப்பதைக் கணத்தில் அறிந்து கொண்டானாதலின், கடுமையான கோபம் கொண்டான். தான் முன்பு காதலித்த இந்திராவை ஜெமீந்தார் பணத்தின் பொருட்டு வஞ்சகமாக மணந்துகொண்டதை நினைத்ததும் பொறாமைத் தீ அவனுடைய மனத்தில் கொழுந்துவிட்டு எரியலுற்றது. மேலும் மற்றொரு விஷயத்தை முன்னிட்டும் இராஜமன்னர்மேல் மூத்தய்யனுக்கு முனிவு இருந்தது. வெள்ளைத் தொப்பியை யணிந்த மனிதனைக் கண்டு பிடித்துக் கொடுத்தும் வயதான செங்கோட்டை ஜெமீந்தாரைத்தான் கொலை செய்துவிட்டதாகச் சொல்லிய இராஜமன்னரை சும்மா விடுவது கூடாதென்று முடிவு செய்தான். இந்திராவைத் தான் எவ்வகையிலாவது மனைவியாக்கிக்கொள்ள வேண்டுமென்று யோசனை செய்திருந்தமையால்தான் அக் காரியத்தைச் சாதித்துக்கொள்ள கனகனைக் கேட்கவேண்டும், ஜெமீந்தார்மீது வஞ்சம் தீர்த்துக்கொள்ள வேண்டும் என்று கோபத்தோடு முடிவு செய்து, பற்களை நறநறவென்று கடித்துக்கொண்டு தன்னறைக்கு மறுபடியும் சென்றான்.

அங்கே அவனுடைய அந்தரங்க நேசனான சௌடப்பன் இருந்ததைக் கண்ணுற்று, "நீ போய் கனகனை இங்கே அனுப்பு," என்று சொன்னான்.

சௌடப்பன் சரியென்று சொல்லிச் சென்றான்.

கனகன் வந்ததும் மாயா விரோதி அவனை நோக்கி, "சீமாட்டி எங்கே?" என்று வினவினன்.

"அவள் நடனத்தில் சேர்ந்து சந்தோஷமாக இருக்கிறாள்," என்று கனகன் பதில் கொடுத்தான்.

"சரி, நாம் இப்பொழுது அந்தமானுக்குப் போவதில்லை. கப்பலை இந்து மகா சமுத்திரத்தில் போகுமாறு செய்கிறோம் அல்லவா? நாம் இக் கப்பலில் சிலவற்றைக் கடலில் எறிந்துவிட்டால் அதை ஆதாரமாகக்கொண்டு சென்னை சர்க்கார் "ஜலதூதன்" கடலினுள் மூழ்கி விட்டதாக நினைத்து விடுவார்கள், பிறகு நாம் சுயேச்சையாக வேறு தேயத்துக் கொடியைப் போட்டுக்கொண்டு பிரயாணம் செய்யலாம்," என்றான் மூத்தய்யன்.

"மலேயா நாட்டுப்பக்கம் போகலாம்," என்று சொன்னான் கனகன்.

"சரி. நான் ஒரு காரியத்தை உன் மூலமாகச் செய்துகொள்ள விரும்புகிறேன், கனகா."

"அதற்கென்ன?"

"நான் அவனைப்பற்றி அப்பொழுதே சொல்லியுளேன்; அவன் நன்ருகக் கஷ்டப்பட வேண்டும். தெரிந்ததா? ஐயோ! மலையை நிகர்த்த வேதனையால் நான் படும் கஷ்டத்தை நீ அறிந்தால் என் பொருட்டு மன முருகுவாய்........."

கனகன் அவ்வறையின் ஒரு மூலைக்குச் சென்று யோசித்தான். மாயா விரோதி அவனுடைய யோசனையைக் கலைக்காமல் அவனை உற்று நோக்கிய வண்ணம் உட்கார்ந்திருந்தான். கனகன் யோசனை தீர்ந்தபின் தனது தலையை நிமிர்த்தினுன். அவனுடைய மூகம் அச்சத்தைக் கொடுப்பதுபோல் பயங்கர மாகவும் விகாரமாகவும் இருந்தது. கண்களில் ரத்தம் ஏறியதால் சிவந்திருந் தன.

ஏதோ மூளைக்கோளாறு ஏற்பட்டதால் அத்தகைய விகாரம் ஏற்பட் டதோ என்று கருதவேண்டியிருந்தது. மாயா விரோதியைக் கண்டு ஒரு வகையான பார்வையைச் செலுத்தினுன்.

பின்பு மாயா விரோதியை யடைந்து அவனுடைய காதில் ஏதோ பேசி னுன். பத்து நிமிஷங்கள் வரைக்கும் அவன் விகார முகத்தோடும் திகி லோடும் வார்த்தைகளைக் கொட்டினுன். அக் காட்சியைக் கண்ணுற்ருல் அச்ச உணர்ச்சி ஏற்படுவதுபோல் இருந்தது. ஏதோ பயங்கர இரகசியத்தைச் சொல்லும்பொழுது அவ்வாறு விகாரத் தோற்றமும் பயங்கரமும் ஏற்படுவது உண்மையே.

கனகனுடைய இரகசியப் பேச்சுகளைக் கேட்கக் கேட்க கோபத்தினுல் சந்தோஷம் உண்டாயிற்று. கோபச்சிரிப்பு என்று சொல்லலாம். சாதா ரணமாக கோபத்தில் யாருக்கும் நகைப்பு உண்டாகாது. ஆனுல் மாயா விரோதிக்கு ஒருபுறம் கோபமும் மற்ருெருபுறம் சந்தோஷமும் ஏற்பட்ட தால் கோபநகை உண்டாயிற்று. விரோதியை நினைத்ததே கோபம். அவ ருக்குத் தீமை செய்வதைக் கருதியதும் சந்தோஷம். ஆதலால் அத்தகைய முரணுன மனஉணர்ச்சி ஏற்பட்டது. கையை விரித்துக்கொண்டு, கனகனை உற்று நோக்கிய வகையில் பத்து நிமிஷங்களைக் கடத்தினுன். மௌனம் அச் சமயத்தில், திடீரென்று மாயாவிரோதி அந்நிலைமையை மாற்றிக்கொள்ள அவ்விடத்தை விட்டும் ஓடினுன். கனகன் மௌனமாகவே ஒரு சிலையைப் போல் அப்பொழுதும் நின்று கொண்டிருந்தான்.

மாயா விரோதி மறுபடியும் திரும்பி வந்தான். கண்களில் சந்தோஷம். முகத்தில் அமைதி. கனகனைக் கட்டி யணைத்துக்கொண்டான்.

"உன்னைப்போல் சிறந்த சிநேகிதன் யாரும் இல்லை," என்று முத்தய் யன் சொன்னுன்.

கனகன் தனது கரத்தை நீட்டினுன். மாயா விரோதி அதைச் சந்தோஷ முக மலர்ச்சியோடு எடுத்துக் குலுக்கினுன்.

பிறகு இருவரும் பிரிந்தனர்.

கப்பலில் அந்த இரவில் வாத்திய கோஷம் உல்லாசக் கப்பலில் இருந் தும் காப்பாற்றப்பட்ட பெண்மணிகளுக்கு குதூகலத்தைக் கொடுத்து, அவர் களை நடனத்தில் சிறந்தவர்கள் என்று சொல்லும் படியாகச் செய்தது. இரவு செல்லச் செல்ல அவர்கள் களைப்பு அடைந்து போனமையினுல் தங்களு

டைய அறையை யடைந்து துயில் கொண்டால் போதும் என்ற நிலைமையைக் கொண்டு விட்டார்கள். அவர்கள் அந்த இடத்தை விட்டுச் செல்ல அனுமதிக்கப் படவில்லை. அது அவர்களுக்கு மிகுந்த கிலேசத்தையும் பயங்கரத்தையும் உண்டாக்கி, அவர்கள் கைதிக் கப்பலில் இருப்பதை உணர்த்தியது. சில கைதிகள் அப் பெண்களை தங்கள் வசம் வைத்துக் கொள்ள யோசனை செய்வதை அறிந்த அந்த ஸ்திரீகள் தங்களுடைய கற்பிற்கு பங்கம் வந்தூற்றால் என்ன செய்வது என்பதை அறியாமல் தத்தளித்த மனதோடு இருந்தனர்.

சிறிது நேரத்தில் மாயா விரோதியின் ஆட்கள் ஸ்திரீகளை வசம் செய்து கொள்ள வேண்டும் எனும் எண்ணத்தினால் கண்டபடி தமக்குள் பேசிக் கொண்டார்கள். அப்பொழுது அங்கே முத்துசாமி ஐயங்கார் ஓடி வந்தார்.

"செங்கோட்டை ஜெமீந்தார் மாயமாய் மறைந்து போனார்!" என்று கதறினார்.

அதைக் கேட்டு ஸ்திரீகள் கதறினார்கள். அவர்களுடைய நட்பான தன்றோ?

அப்பொழுது மாயா விரோதி அங்கே தோன்றினான். ஸ்திரீகளைத் தனது சகாக்களுடைய பிடியி லிருந்தும் அகற்றி ஸ்திரீகளை நோக்கினான். கப்பித்தான் உடையில் இருப்பது மாயா விரோதி என்பதை அறிந்து கொண்ட ஸ்திரீகள் பேச நாவெழாமல் அப்படியே சோர்ந்து உட்கார்ந்து விட்டனர்.

அத்தகைய சமயத்தில் முத்தய்ய செட்டி எல்லோரையும் நோக்கி, "சிநேகிதர்களே, இந்த ஸ்திரீகளையும் மற்றும் சில வேண்டாதவற்றையும் நாம் ஒரு குறிப்பிட்ட தேதியில் ஓரிடத்தில் பத்திரமாக இறக்கி விட்டுச் செல்லத் தீர்மானித்திருக்கிறோம். நீங்கள் எல்லோரும் இனி மேல் நல்ல நடத்தையை மேற்கொண்டு நடக்க வேண்டும். செங்கோட்டை ஜெமீந்தார் தமது நண்பர்கள் யாவரையும் மீட்பதற்கு ஒரு லட்ச ரூபாய்கள் கொடுப்பதாக ஒப்புக் கொண்டிருக்கிறார்," என்று சொல்லுகையில் கைதிகளுள் உள்ளக் கிளர்ச்சி ஏற்பட்டது.

அவர்கள் ஆச்சரியம் கொண்டனர். ஒரு லட்ச ரூபாய் வருகிறது என்பதைக் கேட்டதும் ஆச்சரியமே. பேச முடியவில்லை. முதலில், சந்தோஷத்தில் தாண்டவ மாடினார்கள்.

அப்பொழுது மாயா விரோதி மறுபடியும் எல்லோரையும் பார்த்துச் சொன்னதாவது:—"என் சிநேகிதர்களே, செங்கோட்டை ஜெமீந்தார் லட்ச ரூபாய் கொடுக்கும் வரையில் மாயா விரோதியாகிய எனது கையில் இருப்பார். லட்ச ரூபாய் வராவிடில் அவர் மரண மடைய வேண்டியதே," என்றான்.

ஜெமீந்தாருடைய நண்பர்கள் அதைக் கேள்வி யுற்றதும் ஐயோவென்று கூவினார்கள். கூவி என்ன பயன்? வஞ்சனை வலையில் இராஜமன்னார் விழுந்தாகி விட்டது.

கபட நாடகத்தில் வேஷம் போட்டு நடிப்பதில் சிறந்த முத்தய்ய செட்டி யிடம் சிக்கிய பின்னர் எப்படி தப்பித்துச் செல்லுவது என்பதை

அவர்கள் ஆலோசித்தார்கள். பணம் வந்த பிறகாவது விடுதலை செய்ய முடியுமா? இராஜமன்னருடைய எதிர்பாராத சிறை வாசத்தை அவர்கள் கண்டு பயந்து போனார்கள்.

அவர்கள் அத்தகைய உள்ளக் கிளர்ச்சியில் இருக்கையில் மாயா விரோதியும் அவனுடைய சகாக்களும் அவ் விடத்தை விட்டுச் சென்றார்கள்.

சில தினங்கள் விரைவாகச் சென்றன. கப்பலில் மிக்க அமைதியும் பொறுமையும் அதிகமாகியதால் எல்லோரும் மாயா விரோதியின் கட்டளைக்கு அடங்கி நடப்பதாகத் தெரிந்தது. கைதிகள் தங்களுக்குப் பணம் வந்ததும் அது பகிர்ந்து கொடுக்கப் படும் என்பதை அறிந்து, ஆனந்தங் கொண்டு தங்களுடைய வேலைகளையும் அலுவல்களையும் நன்றாகச் செய்து வருவதாயினர்.

அயல் நாட்டுப் பெயர் ஒன்றை "ஜல தூதனு"க்கு வைத்தனர். கப்பலும் தனது பிரயாணத்தைச் செய்து கொண்டிருந்தது. ஸ்திரீகளும் ஆடவர்களும் அவரவர் காரியத்தைச் செய்து வருவதாயினர். பழைய கப்பல் அதிகாரிகள் சிறையில் மாயா விரோதியின் கட்டளையின்படி நன்கு நடத்தப் பட்டனர்.

கைதிகளாக அடைக்கப் பட்டவர்களை ஓரிடத்தில் இறக்குவதற்கான ஏற்பாடு ஒதுக்கி வைக்கப்பட்டது. ஏற்ற சமயம் வாய்க்க வேண்டுமல்லவா? மேலும் ஒரு லட்சம் ரூபாய்கள் வராமல் இராஜமன்னரையும் ஏனைய பொய்க் கைதிகளையும் எப்படி விடுதலை செய்ய முடியும்? "ஜல தூதன்" கைதிக் கப்பல் கடலினுள் மூழ்கி விட்டதாக சர்க்காருக்கு அனுப்பப்பட்ட செய்தி பொய் என்று ஆகு விடுமல்லவா? மலேய நாடுகள் பாரிசம் சென்றதும் கப்பலில் உள்ள கைதிகளை ஓரிடத்தில் இறக்கி விட்டு, மாயா விரோதியும் அவனுடைய மனிதர்களும் பத்திரமாக வேறு நாட்டினுள் கொஞ்ச காலம் இருந்து விடுவதாக ஒரு கூட்டத்தில் முடிவு செய்திருந்தனர். முதலில் கப்பல் தூத்துக்குடி அருகே சென்று சௌடப்பனை இறக்கி, அவன் சென்னை சென்று பணம் கொண்டுவர ஏற்பாடாகி யிருந்தது. சௌடப்பன் மிகவும் நம்பகமும் நாணயமும் ஆன நடத்தையைக் கொண்டிருந்தான். மாயா விரோதி முன்பு கப்பலில் சிறை வைக்கப் பட்டிருந்தபொழுது அவன் மிக்க உதவியும் உபகாரமும் செய்திருந்தான். அத்தகைய மனிதனை பணம் கொண்டு வருவதற்கு மாயா விரோதியும் கனகனும் ஏற்பாடு செய்திருந்தனர். சௌடப்பனுக்கு மாயா விரோதியைப் பிரிந்து செல்ல சிறிதேனும் பிரியம் இருக்கவில்லை. ஆனால் மாயா விரோதியே அவனைப் பணம் கொண்டு வா அனுப்பத் தீர்மானித்தான். அதற்கு அப்பீல் உண்டா? கட்டளையை சௌடப்பன் நிறைவேற்றி வைக்க வேண்டிய பெரிய பொறுப்பு அவனுக்கு ஏற்பட்டது.

மேலும் செங்கோட்டை ஜெமீந்தார் பணம் கொண்டுவர மிகவும் சுலபமான ஏற்பாட்டை செய்து விட்டார். அதற்கு வேண்டிய கடிதங்களை முன்னரே எழுதி வைத்துவிட்டார்.

(தொடரும்.)




ஹோட்டல்காரர்:—என்ன அம்மா! நீ கொடுக்கிற பாலு, விக்கவே இல்லே. உன் பாலுக்கு அதிர்ஷ்டமே இல்லே.

குப்பகோனர் மனைவி:—என்னுங்க ஐயா அப்படி சொல்றே, பால் அவ்வளவு டிக்கா தாரேன், அதனாலேதான்.

***

உபத்தியாயர்:—(ஒருவனை அடித்த பையனைப் பார்த்து) டேய்! உண்மையை சொல், விட்டு விடுகிறேன்.

பையன்:—இருங்க ஸார் சொல்லுகிறேன்.

உபாத்தியாயர்:—சொல்லேன் சீக்கிரம்.

பையன்:—நான் அடிக்கவில்லே ஸார்.

***



"டாக்டர்! நான் நம்பிக்கையை யிழந்து விட்டிருந்தும், கடைசியாக எப்படியோ என் உயிரைக் காப்பாற்றி விட்டீர்கள்."

"இது எனது கைராசி யென்பது ஞாபக மிருக்கட்டும்."

"அப்படியானால், நீங்கள் உங்களுடைய 'பில்'லே அனுப்ப மாட்டீர்களென்று நம்புகிறேன்."

***

எஜமானன்:—ஐயா, 10 ரூபாயைக் காணோம்.

குமாஸ்தா:—எனக்குத் தெரியவே தெரியா, அன்றியும் நான் எடுக்கவில்லே.

எ:—நீர் எடுத்ததாக வேலையாள் சொல்லுகிறான்.

கு:—நான் திரும்பும்போது அவன் இல்லே.

பாட்டி (பேரனைப் பார்த்து) எலே! ராமு, பூவை முகராதேடா.

பேரன் (கொஞ்சநேரம் யோசனை செய்துவிட்டு) போ! பாட்டி, பவளக் கொடியிலே அர்ஜுனன் முகர்ந்தானே. அதுக்கு?

***

மாஜிஸ்ட்ரேட்:—புதிதாக வேலைக்கு வந்தவனை நீயேன் நேற்றிரவு தாலூகாபீஸில் 12 மணி அடிப்பதற்கு பதிலாக 25 மணி அடித்தாய் என்று கேட்டார்.

புதிதாக வேலைக்கு வந்தவன்:—எஜமான் தூக்கத்திலே 12-க்கு 13, அடிச்சுட்டேனுங்க. அப்புறம் விழிச்சுக்கிட்டு 12 மணி சரியா அடிச்சுட்டேனுங்க என்றான்.

***

கலியாணத்திற்கு பெயர் ராசி பார்க்க வந்தவர்:—சோதிடரே! என்ன முகவாட்டமா யிருக்கிறீர்?

சோதிடர்:—(விசனப்பட்டு) போன மாதத்தில் கட்டின என் மனைவி இறந்து 6 நாளாயிற்று! தங்கள் சேதி யென்ன?

கலி:—தாங்கள் இறந்து விட்டதாகக் கேள்விப்பட்டு இங்கே வந்தேன்!

***

கெங்காதரன்:—(தன்னுடைய பாதரக்ஷையை மறந்து ஓட்டலில் விட்டு விட்டு மறுபடியும் ஓட்டலில் போய்) சுவாமி! செருப்பிருக்கிறதா?

ஐயா:—(கோபத்தோடு) என்ன விளையாடுகிறாய். பைத்தியம் பிடித் திருக்கோ?

கெங்:—இல்லே சாமி; நான் மறந்து இங்கே வைத்து விட்டுப்போன செருப்பு, சாமி.

***

பையன்:—(அவனுடைய தாத்தாவைப் பார்த்து) "தாத்தா! ஆற்றில் என்ன மீன் இருக்கும்?"

தாத்தா:—"ஆறமீன்."

பையன்:—"குளத்தில்?"

தாத்தா:—"கொக்குமீன்."

பையன்:—"கிணற்றில்?"

தாத்தா:—"கெண்டைமீன்."

பையன்:—"அப்படியானால் உங்க வாயில் என்ன மீன் இருக்கும்?"

தாத்தா தம் பொக்கைவாயைக் காட்டிச் சிரித்தார்.

***

ஜட்ஜு:—(திருடனைப் பார்த்து) ஏன் அந்தப் பூட்டை உடைத்துக் கொண்டு வீட்டிற்குள் சென்றாய்?

திருடன்:—((Wel come) வெல்கம் என்ற போர்டு தெரிந்தது; ஆகையால்தான்.




அமெரிக்கா யுனைடெட் ஸ்டேட்ஸை விட, ஆஸ்டிரேலியா 25 மடங்கு பெரியதாம்.

* * * *

மனிதர்களுக்குக் காதுகளின் அபூர்வ அமைப்பு பரம்பரையை யொட்டி இருக்கிறதாம்.

* * * *

உலகில் பிரிட்டிஷாருக்குச் சொந்தமாக 5000 தீவுகள் இருக்கின்றன வாம்.

* * * *

உலகிலுள்ள வைரங்களில் பாதிக்கு மேல் அமெரிக்கர்களுக்குச் சொந்த மானவையாம்.

* * * *

காற்றானது 500 மைல் தூரத்திற்கு அதிகமாக ஒரே திசையில் அடிப்ப தில்லையாம்.

* * * *

ஒரு திமிங்கிலத்தின் நாக்கி லிருந்து ஒரு டன் எண்ணெய் இறக்கப் பட்டிருக்கிறதாம்.

* * * *

உலகிலுள்ள பூ வகைகளில் நூற்றுக்குப் பத்துதான் நறுமண முடையன வாக இருக்கின்றனவாம்.

* * * *

ஒரு காலன் தண்ணீரின் பளுவை விட ஒரு காலன் உப்பு நீரின் பளு அதிகமாக இருக்கும்.

* * * *

திபேத் தேசம், பிரான்ஸ், ஜெர்மனி, ஸ்பெயின் ஆகிய தேசங்களை விட மிகப் பெரியதாம்.

* * * *

மனிதர்களுடைய இரு காதுகளும் பொதுவாகப் பார்ப்பதற்கு ஒன்று போலக் காணப் பட்டாலும், அவற்றிற்குள் உருவத்திலும், பருமனிலும், வித்தியாச மிருக்குமாம்.

* * * *

பறவை யினங்களில் காகம், கழுகு ஆகியவை வெகு காலம் உயிர் வாழ்ந்து வருகின்றனவாம். அவை 100 வருடங்களுக்கு மேலும் ஜீவித் திருக்கக் கூடுமாம்.

* * * *

தூக்கணங் குருவிகள் பறந்து கொண்டிருக்கையிலேயே ஆகாரத்திற்கு வேண்டிய புழுக்களைப் பிடித்துக் கொள்ளுவதோடு நீரைப் பருகித் தாகத்தையுந் தீர்த்துக் கொள்ளுகின்றனவாம்.




பற்களால் பளுவைத் தூக்கும் வாலிபன்

சென்னத் பிண்டோ என்பவன் 18-வயதுடைய வாலிபன்; அவன் தனது பற்களால் 160 ராத்தல் எடையுள்ள பளுவை வெகு எளிதாகத் தூக்குகிறானும். இவ்விதம் பளுவைத் தூக்குவதில் உலகில் தன்னை மிஞ்சிய வர்களில்லை எனப் பாத்தியதை கொண்டாடுகிறானும்.

* * * *

மூளை யில்லாக் குழந்தை

நியூயார்க்கில் உள்ள ஆஸ்பத்திரிகளில் ஒன்றில் உணர்ச்சியே யில்லாத குழந்தை யொன்று பிறந்ததாம். சதா அழுது கொண்டிருப்பதைத் தவிர, பசி முதலிய எவ்வித உணர்ச்சியும் அதற்குக் கிடையாது. இதைக் கண்டு டாக்டர்கள் வியப்புற்றனர். பிறந்த 27 நாட்களுக்குப் பிறகு அக் குழந்தை மரண மடைந்தது. அதன் பின்னர் டாக்டர்கள் அக் குழந்தையின் பிரேதத்தை அறுத்துப் பரிசோதிக்கையில் தலையில் மூளையே யில்லை யென்பதைக் கண்டார்களாம். அதற்குப் பதிலாக நீர் போன்ற ஏதோ ஒன்று காணப்பட்டதாம். டாக்டர்கள் இதுவரை இவ்வித விசித்திரக் குழந்தையைக் கண்டதில்லை என ஆச்சரியப் படுகிறார்கள்.

* * * *

மின்சார நகரம்

ஐரோப்பாவில் கொலம்பியா நதிக்கு அருகில் மேஸன் நகரம் என்று ஒன்று இருக்கிறது. அங்கு பெரிய அணை யொன்று கட்டப்பட்டிருக்கிறது. அங்கு மின்சாரம் எடுக்கப்படுவதால் மிக மலிவான விலைக்கு விற்கப் படுகிறதாம். அதனால் அங்குள்ள மக்கள் சமையல் முதலிய எல்லா வேலைகளுக்கும் மின்சாரத்தையே உபயோகிக்கிறார்களாம். அந் நகரம் குளிர் பிரதேசமாதலால், சில சமயங்களில் எங்கும் பனிக்கட்டியே காணப்படும். அவ்வித காலங்களில் இருக்கு மிடங்களை வெப்ப முடையதாகச் செய்ய மின்சாரமே உபயோகிக்கப் படுகிறதாம்.

* * * *

இறகுகளுள்ள பல்லி

ஆஸ்திரேலியாவில் இறகுகள் உடைய ஒருவித பல்லி யிருக்கிறது. ஓடும்போது இடை மறித்தால், அச் சமயம் இப் பல்லி வாயை நன்றாகத் திறக்கிறதாம். அதற்குக் குடை போன்ற இறகுகளும் குடைக் கம்பியைப் போன்ற எலும்புகளும், குடைத் துணியைப் போன்ற சதையும் இருக்கின்றனவாம்.

# ஆசிரியர் குறிப்புக்கள்

## புளூம் சர்க்கார் ராஜிநாமா!

பிரான்ஸில் மந்திரிசபை அடிக்கடி ராஜிநாமா செய்து வருவது சர்வ சாதாரணமாய் விட்டது. ஆதலால் இப்போது இருந்த திரு. புளூமை முதன் மந்திரியாகக் கொண்ட மந்திரி சபை ராஜிநாமா செய்து விட்டதைக் கண்டு யாரும் ஆச்சரியப் படுவதற்கில்லை. ஆயினும், தற்போது ஐரோப்பா உள்ள குழப்பமான நிலைமையில் புளூம் சர்க்கார் திடீரென ராஜிநாமா செய்தது ஒரு விதத்தில் துரதிர்ஷ்டமேயாகும். இவ் விஷயத்தில் நாம் கவலை கொள்வதற்கு ஒரு முக்கிய காரணமுண்டு. திரு. புளூம் அவர்களைத் தலைமையாகக் கொண்ட சர்க்கார் ஏழைகளுக்குப் பலவகையிலும் அநுகூலஞ் செய்து வந்தார்கள். பல முற்போக்கான காரியங்களை நடத்திக் காட்டினர். இத் தீவிரச் செயல்கள் மிகவும் பிற்போக்காளர்களான செனட் சபையினருக்குப் பிடிக்கவில்லை. அவர்கள் புளூம் சர்க்காரைக் கவிழ்ப்பதற்குச் சந்தர்ப்பம் பார்த்துக்கொண்டிருந்தனர். அதற்குச் சமயமும் சமீபத்தில் கிடைத்தது. புளூம் சர்க்கார் ஒரு முக்கிய மசோதாவைக்கொண்டு வந்தனர். அம் மசோதா பிரதிநிதிச் சபையில் இருமுறை நிறைவேறின. கடைசியில் அது செனெட் சபைக்கு வந்தது. செனெட் சபையினர் அம் மசோதாவை நிறைவேற வொட்டாது தடுத்துவிட்டனர். இதுவே புளூம் சர்க்காருடைய ராஜிநாமாவிற்குக் காரணமாகும். தங்கள் மசோதா நிறைவேறவில்லை யென்பதற்காக புளூம் சர்க்கார் ராஜிநாமா செய்யவேண்டுவதில்லை. என்னமோ அவர்கள் ராஜிநாமா செய்துவிட்டார்கள். வேறு புதிய சர்க்காரும் வந்துவிட்டனர். இவர்கள் எவ்வளவு காலம் நிலைத்திருப்பார்களோ! பொறுத்திருந்து பார்ப்போம்.

---

## இந்தியாவும் ஏகாதிபத்யமும்

லண்டனில் பல வாரங்கள் வரை ஏகாதிபத்ய மகாநாடு நடைபெற்றது. அதில் இந்திய கோஷ்டியின் சார்பாக சர். சபருல்லாகான் பேசி யிருக்கிறார். அதைப் பற்றி எழுத வந்த ஜஸ்டிஸ் பத்திரிகை, ஆரம்பத்திலேயே காங்கிரஸ் தலைவர் பண்டித ஜவஹர்லால்நேரு ஊரெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்து பூரண சுயேச்சையைப் பற்றிப் பிரசங்க மாரி பொழிந்து வருகையில் அறிவுள்ள அரசியல் வாதிகள் இங்கிலாந்தில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கும் இந்தியாவுக்கும் உண்மையான கூட்டுறவை ஏற்படுத்த முயன்று வருகிறார்கள் என்று கூறி யிருக்கிறது. யார் அறிவுள்ள அரசியல் வாதிகள் என்று முடிவு செய்வதெப்படி? அந்த முடிவைச் செய்யும் உரிமை யுடையவர்கள் யார்? என்பது ஆராயத் தக்க விஷயமாகும். இந்தியா சம்பந்தப்பட்ட வரையில் அதன் தலைவிதியை நிர்ணயித்துக் கொள்ள வேண்டியவர்கள் மகா ஜனங்களேயாவர். ஆதலின் மேற்படி முடிவைச் செய்யக் கூடிய உரிமை உடையவர்கள் அவர்களேயாவர் என்று கூறுவது மிகையாது. லண்டனில் ஏகாதிபத்ய மகா நாட்டில் பேசிய சர். சபருல்லாவோ, மற்றவர்களோ தேசத்தின் பிரதி நிதிகள்தானா என்பது முதல் கேள்வி. இந்த மகா நாட்டில் இந்தியாவின் சார்பாகப் பேச ஒருவரை அனுப்ப வேண்டுமென்று தேர்தல் நடைபெற்றால் ஸ்ரீ. சபருல்லாகான் போன்றவர்கள் ஓட் பெற முடியுமா என்பது இரண்டாவது கேள்வி. குடியேற்ற நாடுகளைப் போன்ற சம அந்தஸ்தை

யடைவதே இந்தியாவின் லக்ஷியமென்று அவர் அம் மகா நாட்டில் கூறியுள்ளார். அது உண்மைதானு? அவர் தேசத்திலுள்ள எந்தக் கட்சியின் சார்பாகப் பேசுகிருர் என்பது தெரிய வேண்டும். பூரண சுயேச்சை இந்தியாவின் லக்ஷியம் என்பது காங்கிரஸ் தீர்மானம். மகாத்மா காந்தியும் இந்தியா இஷ்டப்பட்டால் தன் சம்பந்தத்தைப் பிரிட்டனிடமிருந்து அறுத்துக்கொள்ளக்கூடிய உரிமை வேண்டுமென்றும், அதுதான் பூரண சுயேச்சையின் அர்த்தமென்றும் விளக்கியிருக்கிருரே யொழிய பிரிட்டனை விட்டு விலகி விரோதபாவத்துடன் இருப்பதுதான் பூரண சுயேச்சை எனக் கூறவில்லை. இந்தியா வேண்டுவது பூரண சுதந்தரமும், இதர நாடுகளின் நட்பும்தான்.

---

## மாகாண சுய ஆட்சியில் நடப்பதென்ன?

மாகாண சுய ஆட்சி என்று சொல்லப்படும் இச் சமயத்தில் உண்மையில் தேசத்தில் நடப்ப தென்ன? பாபு சுபாஷ் சந்திரபோஸ் இந்த உண்மை நிலைமையை அடிக்கடி விளக்கி வருகிருர். ஸ்ரீமான் பக்ஷி சிறையில் ராஜீயக் கைதிகளின் சௌகரியத்தை உத்தேசித்து உண்ணுவிரதம் கிடக்கிருர். சுய ஆட்சியில் இப்படி இருக்காது. மேலும் ஸ்ரீமதி மீராபென் மகாத்மாஜியின் சிஷ்யை. அவர் சாந்தமும் அமைதியும் உடைய தூய பரிசுத்த வாழ்க்கையை நடத்துவதைக் கண்டு உலகமே பிரமிப்பு அடைகிறது. ஆனல் இந்தியாவிலுள்ள இரகசியப் போலீசாரோ மாகாண சுய ஆட்சியிலும் அவ் வம்மையாரை ஒரு சிறு பிரயாணத்தை முடிப்பதற்குள் ஊரையும் பேரையும் கேட்டுத் தொந்தரவு அளித்து விடுகின்றனர். ஏன்? தமிழ்நாட்டுத் தலைவரான ஸ்ரீ. ராஜாஜி பம்பாய் சென்று சென்னைக்குத் திரும்பிய போது இவ்வாறே தாங்க முடியாத தொந்தரவைக் கொடுத்தனர். அது மட்டுமா! நமது சென்னை மாகாணத்தைக் கவனித்தால் மாகாண சுய ஆட்சி என்பதன் விசித்திர நிலைமை பளிச்சென்று தெரிகிறது. கொத்தப்பட்டணம் அரசியல் பாடசாலையை ஏதோ சாக்கு போக்குகளைச் சொல்லி மூடியதுடன் பலரையும் தண்டித்து விட்டார்கள். முஸ்லிம் மக்களைப் பெரும்பான்மையாகக் காங்கிரஸில் சேர்க்க பிரசாரம் செய்த ஜனப். மெஹர் அலி தண்டிக்கப்பட்டார். இத்தகைய நடவடிக்கைகளை யெல்லாம் பார்க்கும்போது இதை மாகாண சுய ஆட்சி என்று எப்படிச் சொல்லுவது என்னும் கேள்வியே பிறக்கிறது.

---

## கல்வி முறையில் சீர்திருத்தம்

நமது மாகாணத்தில் கல்வி முறை இப்போதிருந்து வரும் நிலைமையை ஆராய்ந்தும், இனி சர்க்கார் செய்ய இருக்கும் சீர்திருத்த நோக்கங்களை விவரித்தும் அரசாங்கத்தார் ஒரு அறிக்கையை வெளியிட் டிருக்கிருர்கள். அதை பூராவாக நிதானத்துடன் படித்துப் பார்த்த போது, இப்படிப்பட்ட கேவலமான நிலைமையை அவ்வளவு காலம் எப்படி அரசாங்கத்தார் கவனியாமலும், அவ் விஷயத்தில் அசிரத்தையாகவும் இருந்தார்கள் என்றே நினைக்கவேண்டியதாக இருக்கிறது. எத்தனையோ ஆரம்பப் பாடசாலைகளுக்குச் செலவழிக்கப்படும் பணம் விரயமாவதாக அறிவித்துள்ளனர். ஏன் இந்த நிலைமையை அவர்கள் இத்தனை காலம் விட்டு வைத்தனர் என்னும் கேள்விக்கு என்ன பதில் அளிப்பார்களோ தெரியவில்லை. இப்போதேனும் அரசாங்கத்தார்

விழித்துக் கொண்டது பற்றி சந்தோஷப் படுகிறோம். அவர்கள் கல்வி முறையில் பலவித சீர்திருத்தங்களைச் செய்யப் போவதாக உத்தேசித்திருக்கின்றன. ஆனால் இதுவே முடிவான யோசனைகளல்ல வென்றும், தக்க அனுபவஸ்தர்கள் கூறும் ஆலோசனைகளையும் ஏற்றுக் கொள்வதாயும் தெரிவித்திருக்கின்றனர். எல்லாம் சரியே. ஆயினும் இப்போது சர்க்கார் அமைப்பு உள்ள நிலைமைமாறினு லொழிய எத்தகைய யோசனையும் பயன்படாது.

---

## ஹிந்துமத புனருத்தாரண வேலை

புனருத்தாரண வேலை என்றால் ஒன்றை அழித்துவிடுவதென்றோ அல்லது ஏதோ ஒரு காலத்தில் இருந்த ஒருவித நிலைமைக்குக் கொண்டுபோய் விடுவதென்றோ அர்த்தமல்ல. பண்டை நிலைமை, இன்றைய நிலைமை ஆகிய இரண்டையும் கவனித்து எதிர்காலத்தில் எவ்வாறு இருந்தால் நலமாக இருக்கும் என்பதை முடிவு செய்து அவ்வாறு நன்முறையில் திருத்தி யமைப்பதற்கே புனருத்தாரண வேலை என்று பெயர். அவ்வேலையில் ஈடுபடுகிறவர்கள் வேலையில் உண்மையான பற்றுடையவர்களாயும், பண்டை நிலை, தற்கால நிலை ஆகியவற்றை அறிந்தவர்களாயும் இருத்தல் வேண்டும். ஹிந்துமத புனருத்தாரண வேலை இப்போது மிக அவசியமானதாகும். நமது ஹிந்துமதம் பண்டைப் பெருமை வாய்ந்தது. உயரிய ஆத்மஞானக் கொள்கைகளையுடையது. ஆயினும் இப்போது நம்மவர்களின் ஆசாரத்திலும் பழக்க வழக்கங்களிலும் பல குறைகள் ஏற்பட்டு விட்டிருக்கின்றன; எது சமய சம்பந்தமான தென்றும் எது சமூக சம்பந்தமானதென்றும் இப்போது தெரியவில்லை; ஆசாரங்களை அடிக்கடி காலத்துக் கேற்றவாறு சீர்திருத்திக் கொள்ளாவிட்டால் மதத்துக்கே ஹானி ஏற்படும். தீண்டாமை விலக்கு என்று ஆரம்பித்தால் ஹிந்துக்கள் தங்கள் ஜனத்தொகையைப் பாதுகாத்துக் கொள்வதற்காகவே இவ்வாறு செய்வதாகக் கருதப்படுகிறது. இது தவறு. சமீபத்தில் சென்னையில் ஹிந்துமத புனருத்தாரண வேலை சம்பந்தமாக நடைபெற்ற ஒரு விவாதத்தின்போது தலைவர் ஸ்ரீ. சி. ராஜகோபாலாசாரியார் தெரிவித்தபடி நாம் ஹிந்துக்கள் என்னும் முறையில் நம்முடைய மதமும் அதன் அனுஷ்டானங்களும் சரியானவையாக இருக்கவேண்டுமென்றும், நமது மதத்தின் மதிப்பை உயர்த்துவது நமது கடமை என்றும் நாம் கருதுவதால்தான் இவ்வேலையில் ஈடுபடுகிறோம். புனருத்தாரண வேலையைப்பற்றி யோசிப்பதற்காக அதில் பற்றுடைய பண்டிதர்களின் பரிஷத் ஒன்று கூட வேண்டியது அவசியம்தான். ஆனால் ஸ்ரீ. ஆச்சாரியார் கூறுவதுபோல முன் கூட்டிய அபிப்பிராயத்துடன் யாவரும் அதற்குச் செல்லலாகாது. நமது ஹிந்து மதம் சமூக முன்னேற்றத்திற்காகவும், தேசத்தின் மேன்மைக்காகவும் நமது ஆசாரங்களையும் பழக்க வழக்கங்களையும் எவ்வாறு சீர்திருத்த வேண்டுமென்பது பற்றி யோசிப்பதுதான் அந்தப் பரிஷத்தின் நோக்கமாக இருக்கவேண்டும். ஆலயப் பிரவேசம் போன்ற விஷயங்களில் பண்டிதர்களின் ஆதரவும் இருந்துவிட்டால் சட்டத்தின்மூலம் அவற்றை அமுலுக்குக் கொண்டுவர சுலபமாக இருக்கும். முன் காலத்திலும் ராஜாக்கள் சுயேச்சையாக நடந்து கொண்டாலும் பண்டிதர்களின் பரிஷத்தைக் கூட்டி யோசனை கேட்டது போல இப்போதும் ஜனப் பிரதிநிதி சபையினர் பரிஷத்துகளின் யோசனையைக் கேட்டு அதன் மீது சட்டங்கள் செய்தால் எளிதில் அவற்றை அமுலுக்குக்

கொண்டு வரலாம். பண்டிதர்கள் நவீன யோசனைகளை ஏற்க மாட்டார்களென்று கூறுவது தவறு. சீர்திருத்தத்தை ஆதரிக்கும் நிபுணர்கள் பலர் இருக்கின்றனர். அறிஞர்கள் பரஸ்பரம் ஆராய்ச்சி செய்து சமூக நன்மைக்கான வேலைகள் செய்தால் எப்போதும் நலமே ஏற்படும். விரைவில் பரிஷத் கூடி நல்ல விதமான சீர்திருத்தங்களுக்கு ஆதரவளிக்குமென்று நம்புகிறோம்.

---

## ஜெயின சுவாமிகள் வழி காட்டுகிறார்

மதப் பிரசாரம் செய்யும் மடாதிபதிகளும், குருமார்களும், சுவாமிகளும் மக்கள் இகத்திலும் பரத்திலும் கதிமோக்ஷத்தை யடைவதற்காக ஆத்மஞான தத்துவங்களைப் போதிப்பதுடன் நின்று விடாமல் தினசரி வாழ்க்கையில் மக்கள் சௌக்யத்தை யடைவதற்கான வழிகளையும் உபதேசிக்க வேண்டியது அவசியமாகும். அவர்களும் அட்போதைக் கப்போது தேசத்தின் நிலைமையையும் விளக்கிக் காட்டி நாம் முன்னேற்ற மடைவதற்குரிய வழிகளையும் உபதேசிக்க வேண்டும். அரசியல், சமூக, பொருளாதாரத் துறைகளில் மிகவும் கேவலமான நிலைமையில் இருக்கும் ஒரு மக்கள் கூட்டம் ஆன்மத் துறையில் மட்டும் எப்படி அபிவிருத்தி யடைந்துவிட முடியும்? தினசரி வாழ்க்கையில் ஒருவன் நிம்மதியாக இருந்தால் தான் பாரமார்த்திகத்தைப் பற்றிக் கருத முடியும். மகா ஜனங்களிடையே சமய சம்பந்தமான ஆச்சாரியார்கள் மடாதிபதிகள் ஆகியோருக்கு அதிக செல்வாக்கு இருப்பதால் அவர்கள் தங்கள் சமயப் பிரசாரத்துடன் தேசியப் பிரசாரத்தையும் செய்தால் நல்ல பலன் ஏற்படும் என்பது எமது அபிப்பிராயம். ஜெயின சுவாமிகள் ஒருவர் இத் துறையில் வழி காட்டி யிருப்பதை நாம் பாராட்டுகிறோம். சென்னைக் கடுத்த ஆலந்தூரில் முகாம் செய்திருக்கும் ஜெயின சுவாமிகள்ஒருவர் ஒரு கூட்டத்தில் பிரசங்கம் செய்தபோது 'தேசத்தை நாம் மறந்து விட்டதனால் தான் இந் நிலையை இத்தேசம் அடைந்திருக்கிறது. சுதேசி சாமான்களையும், தாய் பாஷையையும் ஆதரியுங்கள்; மது பானம், பீடி முதலியவற்றை விட்டு விடுங்கள்; ஏழைகளுக்கு உதவி செய்யுங்கள்!' என்று உபதேசித்தார். இத்தகைய உபதேசங்களை நாம் மனமார வரவேற்கிறோம். எல்லா சமயாசாரியர்களும், மடாதிபதிகளும், இதர குருமார்களும் தங்கள் வழக்கமான பிரசாரத்துடன் இத்தகைய தேசியப் பிரசாரத்தையும் மேற் கொண்டால் தேசம் விரைவில் நன்னிலையை எய்தும் என்பது திண்ணம். ஜெயின சுவாமிகள் காட்டிய வழியை மற்றவர்களும் பின்பற்றவேண்டு மென்பதே நமது அவா.

## ஆனந்தனுக்கு நன்கொடை

ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்த, ஜான்ஸி என்னுமிடத்தில், சிப்ரி பஜார் ஸஹேன் ஹட்டாவில் வசிப்பவரும், ஜி. ஐ. பி. ரயில்வே ஸ்டேஷன் மாஸ்டருமான திரு. ஆர். ராமச்சந்திர ஐயர், நமது "ஆனந்தன்" தமிழ் மொழிக்கும், தமிழ் மக்களுக்கும் புரிந்துவரும் சேவையைப் பாராட்டி ஒரு ரூபாயை நன்கொடையாக அனுப்பியிருக்கிறார். "ஆனந்தன்" வளர்ச்சியில் ஆர்வமுடைய அவ் வன்பருக்கு ஆண்டவன் எல்லா நலமுந் தந்தருள்வானாக.—ப-ர்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

ஈசுவரஞு ஆடிமீ — கலியுகாதி 5039, சாலிவாகனம் 1860,
பசலி 1347, கொல்லமாண்டு 1112, ஹிஜரி 1356,
இங்கிலீஷ் 1937ஞு ஜூலைமீ — ஆகஸ்ட்டுமீ

| ஆடிமீ | ஜூலைமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | வெள் | நவ60 | சுவா60 | சித்60 | ஆடிப் பண்டிகை, திருதின ஸ்பிருக், சர்வகதி ரஜஜ்வலை |
| 2 | 17 | சனி | நவ1-3 | சுவா5-10 | அ5-10சி | லட்சுமி விரதாரம்பம், கரி |
| 3 | 18 | ஞா | தச7-18 | விசா12-55 | மர60 | [நாள் |
| 4 | 19 | திங் | ஏகா13-33 | அனு20-33 | சித்60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 5 | 20 | செவ் | து19-23 | கே27-43 | ம27-43அ | பிரதோஷம், குளம் கிணறு |
| 6 | 21 | புத | திர24-15 | மூல்34-5 | மர43-5அ | [வெட்ட |
| 7 | 22 | வியா | ச○28-5 | பூரா39-13 | சித்60 | பவித்ரோபணம், கடன்தீர |
| 8 | 23 | வெள் | பவு30-50 | உத்43-15 | சி43-15மர | பௌர்ணமி, வியாச பூஜை |
| 9 | 24 | சனி | பிர31-55 | திரு45-53 | சித்60 | |
| 10 | 25 | ஞா | துதி32-0 | அவி47-30 | மர47-30சி | |
| 11 | 26 | திங் | திரி30-58 | சத48-0 | சி48-0மர | |
| 12 | 27 | செவ் | சது28-55 | பூர47-30 | ம47-30அ | |
| 13 | 28 | புத | பஞ்26-3 | உத்46-15 | சி46-15மர | |
| 14 | 29 | வியா | சஷ்22-18 | ரே44-15 | சி44-15அ | |
| 15 | 30 | வெள் | சப்18-8 | அஸ்42-38 | அ42-38சி | |
| 16 | 31 | சனி | அஷ்13-5 | பர38-15 | சி38-15அ | |
| | 1937ஞு ஆகஸ்ட்டுமீ | | | | | |
| 17 | 1 | ஞா | நவ7-33 | கி❋34-28 | சித்60 | |
| 18 | 2 | திங் | தச1-35<br>ஏகா55-10 | ரோ30-10 | அமி60 | |
| 19 | 3 | செவ் | து48-35 | மிரு25-43 | சி25-43மர | வைஷ்ணவ ஏகாதசி |
| 20 | 4 | புதன் | திர42-8 | திரு21-13 | சித்60 | மாச சிவராத்திரி |
| 21 | 5 | வியா | சது35-58 | புன16-50 | அமி60 | ஆபரணம் பூண, மாடுவாங்க |
| 22 | 6 | வெள் | ●30-20 | பூச13-0 | மர60 | சர்வத்திர அமாவாசை |
| 23 | 7 | சனி | பிர25-55 | ஆயி10-3 | மர10-3அ | சிராவணசுத்தம் |
| 24 | 8 | ஞா | துதி22-40 | மக8-18 | மர8-18சி | மதுஸ்ராவா, ஆடிப் பூரம் |
| 25 | 9 | திங் | திரி21-3 | பூர8-3 | சித்60 | சித்திரம் எழுத |
| 26 | 10 | செவ் | சது21-13 | உத்9-35 | அ9-35சித் | மாசசதுர்த்தி விரதம் |
| 27 | 11 | புத | பஞ்23-8 | அஸ்12-58 | ம12-58சி | நாக பஞ்சமி, கருடபஞ்சமி |
| 28 | 12 | வியா | சஷ்26-53 | சித்18-3 | சித்18-3அ | சஷ்டி, சூரிய சஷ்டி |
| 29 | 13 | வெள் | சப்31-55 | சுவா24-25 | சித்60 | கரிநாள், பும்சவனம் |
| 30 | 14 | சனி | அஷ்38-3 | விசா31-50 | சித்60 | தானியஞ் செலவிட |
| 31 | 15 | ஞா | நவ44-23 | அனு39-33 | மர60 | ஆடியறுதி, சுபகாரியம்நீக்க |

| | | | |
|---|---|---|---|
| சனி | | சுக்<br>கே | |
| | 5-விரு-செ<br>12-சிம்-புத<br>14-மிது-சுக் | | சூரி<br>புத |
| குரு | ராகு | செ | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
NO. 8, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம :

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு" திருவள்ளுவர்.—



தொகுதி 23 } ஈசுவர ஹு ஆவணிமீ கவ { பகுதி 2
1937 ஹு ஆகஸ்டுமீ 16உ

## கடவுள் வணக்கம்.

பெருமையிற் சிறுமை பெண்ணொடு ஆணய்என்
  பிறப்புஇறப்பு அறுத்தபே ரொளியே
கருமையின் வெளியே கயற்கணாள் இமவான்
  மகள்உமை யவள்களை கண்ணே
அருமையின் மறைநான்கு ஓலமிட்டு அரற்றும்
  அப்பனே அம்பலத்து அமுதே
ஒருமையில் பலபுக்கு உருவிநின் றுயைத்
  தொண்டனேன் உரைக்குமாறு உரையே. (1)

கோலமே மேலை வானவர் கோவே
  குணங்குறி இறந்ததோர் குணமே
காலமே கங்கை நாயகா எங்கள்
  காலகா லாகாம நாசா
ஆலமே யமுதுண்டு அம்பலஞ் செம்பொன்
  கோயில்கொண்டு ஆடவல் லானே
ஞாலமே தமியேன் நற்றவத் தாயைத்
  தொண்டனேன் அணுகுமா நணுகே. (2)

நீறு அணி பவளக் குன்றமே நின்ற
  நெற்றிக்கண் ணுடையதோர் நெருப்பே
வேறு அணி புவன போகமே யோக
  வெள்ளமே மேருவில் வீரா
ஆறு அணி சடைஎம் அற்புதக் கூத்தா
  அம்பொன்செய் அம்பலதது அரசே
ஏறு அணி கொடிஎம் ஈசனே உன்னைத்
  தொண்டனேன் இசையுமாறு இசையே. (3)

# அரும்பொருள் விளக்கம்

1. (இ-ள்.) பெருமையாகவும், சிறுமையாகவும், பெண்ணாகவும், ஆணாகவும் இருந்து, அடியேனது ஜனன மரணங்களை யொழித்த பரஞ் சோதியே! கருமையாகிய இருளின் இடைவெளியே! இமயபர்வத ராஜ னின் திருக்குமாரியாகிய கயற்கண் பார்வதியின் துணைவனே! அருமை வாய்ந்த நான்கு வேதங்களும் முறையிட்டுக் கோஷிக்கும் உலகத் தந் தையே! திருச்சிற்றம்பலத்தில் நடனமாடும் அமிர்த சொரூபனே! ஏகத் தன்மையில் பல பேதங்களாய்ப் புகுந்து யாவற்றிலும் ஊடுருவி நின்ற பெரு மானாகிய உன்னை அடியேன் எவ்வாறு புகழ்வது? கூறியருள்வாயாக.

இருவினைவயத்தால் ஆன்மாக்களுக்கு வரும் ஜனனமரணங்களை அறவே ஒழித்தருள்பவன் இறைவனே யாதலால், "என் பிறப்பு இறப்பு அறுத்த பேரொளியே" என்று கூறினார். சந்தான குரவர்களில் ஒருவராகிய அரு ணந்தி சிவாச்சாரியார் தமது 'சிவஞானசித்தி'யாரில்,

"சிவஞ்சத்தி நாதம்விந்து சதாசிவன் திகழும்ஈசன்
உவந்துஅருள் உருத்திரன்தான் மால்அயன் ஒன்றின்ஒன்றாய்ப்
பவந்தரும் அருவ(ம்) நால்இங்கு உருவ(ம்)நால் உபயம்ஒன்று(ம்)
நவந்தரு(ம்) பேதம்ஏக நாதனே நடிப்பன் என்பார்"

என்று கூறியுள்ளபடியே, திருமாளிகைத் தேவரும், இப்பாட்டில் "ஒருமை யில் பலபுக்கு உருவிநின்றாய்" என்று இறைவனின் அபேதத் தன்மையை விளக்கியருளினார்.

2. (இ-ள்.) அழகுப் பிழம்பே! தேவர்க்கரசனே! பண்பும் அடை யாளமும் அற்ற ஒரு குணக்குன்றே! காலகற்பமே! கங்காதேவியின் தலைவா! அடியேங்களுடைய உயிர்க்கு எமனா யிருப்பவனுக்கு எமனே! மன்மதனை எரித்த முனிவா! நஞ்சை யமுதாக அருந்திச் சிதாகாயத்தைத் தனது கனகசபையாகக் கொண்டு நடனஞ் செய்யும் நடராஜனே! பிரபஞ் சமே தானாக இருப்பவனே! தனியனாகவுள்ள எனக்கு நல்லயோகியாக வுடைய உன்னை அடியேன் எவ்வாறு அடைவது? நீயே என்னை வந் தடைவாயாக. (எ-று)

ராஜஸம், தாமஸம், சாத்வீகம் ஆகிய முக்குணங்களில் இன்ன குண முடையவன் என்றோ, இன்னவுருவினன் என்றோ இறைவனை அளவிட்டுக் கூற முடியாதாதலால், "குணங்குறி இறந்ததோர் குணமே!" என்றார்.

3. (இ-ள்.) திருநீறு தரித்த பவளமலை போன்றவனே! நெற்றி யின் நடுவில் நேத்திர முடைய அழற்பிழம்பே! வெவ்வேறாகிய அழகை யுடைய உலக போகப் பொருள்களா யிருப்பவனே! யோக வெள்ளமே! மகாமேருவை வில்லாக வுடைய வீராதி வீரா! கங்கா நதியைச் செஞ் சடையில் தாங்கிய எங்கள் அற்புத நடனஞ் செய்யும் அரசே! அழகிய கனக சபைக்குத் தலைவனான நடராஜப் பெருமானே! ரிஷபக் கொடி தாங்கிய எங்கள் ஒப்பற்ற தலைவனே! உன்னை அடியேன் எவ்வாறு பாடிப் பராவு வது! அதை உபதேசித் தருள்வாயாக. (எ-று.)

சிவபெருமான் செம்மேனியம்மான் ஆகையால் 'பவளக் குன்றமே' என்றும், ஊழிக் காலத்தில் அண்டபுவனங்களை யெல்லாம் கணத்தில் சாம் பராக்கும் சம்மார மூர்த்தியாதலால் 'நெருப்பே' என்றும் உவமித்தார்.




# கல்வியின் இலட்சியம்





"நான் கல்வி என்று சொல்லும்போது குழந்தைகள், பெரியவர்கள் ஆகியவர்களுடைய மனம், உணர்ச்சி இவற்றில் சிறந்ததாக உள்ளதை விகசிக்கச் செய்வதையே குறிப்பிடுறேன். எழுதப் படிக்கத் தெரிவதோடு கல்வியின் குறிக்கோள் நின்றுவிடவில்லை. அது கல்வி கற்பதின் ஆரம்ப நிலை கூட ஆகாது. அது ஆண் பெண் இரு பாலார்க்குங் கல்வி போதிப்பதற்கான சாதனமாகவே இருக்கும். எழுதப் படிக்கத் தெரிந்தால் கல்வி கற்றதாகாது.

"நமது தேசம் கல்வியில் மிகவும் பிற்போக்காக இருக்கிறது. ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் நமது தேசத்தாருக்கு இது சம்பந்தமாகச் செய்யவேண்டிய கடமைகளை நிறைவேற்ற முடியுமென்று நம்ப முடியாது. இந்த வேலைத்திட்டம் நிறைவேறும் விஷயம் பணத்தைப் பொறுத்ததாக இருப்பின், இந்தத் தலைமுறையில் இதனை நிறைவேற்ற முடியாது. எனக்கு நிர்மாண யோசனைகளைக் கூறும் திறமை இல்லை என்று பிறர் சொன்னால் கூட அதனைப் பொருட்படுத்தாமல் தன் செலவுக்குத் தன்னைக் கட்டிக்கொள்ளக் கூடியதாகக் கல்வி இருக்க வேண்டுமென்று நான் யோசனை கூறுகிறேன்.

"இதனால் குழந்தைகளுக்கு உபயோகமுள்ள கைத்தொழில்களை ஆரம்ப முதலே போதிக்க ஆரம்பிக்கவேண்டும். பயிற்சி பெற ஆரம்பிக்கும் சமயத்திலிருந்தே குழந்தைகள் பொருள்களை உற்பத்தி செய்ய இயலுமாறு செய்யவேண்டும். ஒவ்வொரு பள்ளிக்கூடமும் தனது செலவுக்குப் பிறரை நம்பியிராமல் தன்னைத்தானே நம்பியிருக்கவேண்டுமானால், அது உற்பத்தி செய்யும் பொருள்களையெல்லாம் சர்க்காரே வாங்கிக் கொள்ளவேண்-

டும். அம் மாதிரியான கல்வி முறையில் மனதையும் ஆத்மாவை யும் பூரணமாக வளர்ச்சி செய்ய முடியுமென நம்புகிறேன்."

என்று மகாத்மாகாந்தி "ஹரிஜன்" பத்திரிகையில், "கல்வி"யைப்பற்றி எழுதிய கட்டுரையில் குறிப்பிட்டிருக்கிறார்.

நம் தாய் நாட்டில் தற்போது இருந்துவரும் கல்வி முறை மிக வும் பிற்போக்கு வாய்ந்ததாக இருக்கிறது. கல்வி கற்கும் மாணவர் களை அது கடைதேற்றுவதாக இல்லை; ஒன்றுக்கும் உபயோகமற்ற பரிதாப நிலையில் அவர்கள் திண்டாடுகின்றனர். இவ்விரங்கத்தக்க நிலைதான் மகாத்மாகாந்தி, ஸர். ராதாகிருஷ்ணன், கனம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரி போன்ற பெரியார்களைக் கவலை கொள்ளச் செய்திருக்கிறது. தற்போதைய கல்வி முறையை மாற்றியமைக்க வேண்டும் என்ற கொள்கையை அவர்கள் நாட்டின் முக்கிய பிரச்சினைகளுள் ஒன்றாகக் கொண்டு அதற்குப் பரிகாரந் தேட தீர்க்காலோசனையுடன் முயன்று வருகிறார்கள்.

கல்வி கற்பதன் நோக்கமே வாழ்க்கைக்கு உதவி புரிவதா யிருக்க வேண்டும். ஜனசமூகத்துக்கு வேண்டிய சேவையைப் புரிந்து கொண்டிருக்க வேண்டு மென்பதே கல்வியின் நோக்கமாகும். ஆகவே, கல்வி சம்பந்தமான பிரச்சினையை ஒரு தனிப்பட்ட பிரச்சினை யாகக் கருதாது, ஜனசமூகப் பிரச்சினைகளுள் ஒன்றாகவே கருதிச் சில அறிஞர்கள் கூறி வருவது இங்கு குறிப்பிடத்தக்கதாகும். இந் நோக் கத்தின் தத்துவத்தைச் சரியாக அறிந்து கொண்டால், கல்வி விஷயத் தில் கீழ் நாட்டுக்கும், மேல் நாட்டுக்கும் அதிக வித்தியாசம் ஏற்ப டாது. ஆனால், கல்வி கற்பிக்கும் முறையில் தான் வித்தியாசம் காணப்படும். அந்தந்த தேச நிலைமைக் கேற்றவாறே கல்வி போதனா முறை அமையவேண்டும். இந் நோக்கோடு கவனித்தால், மேனாட்டுக் கல்வி முறை நமது இந்தியாவுக்குப் பொருந்தாது என்பது புலப்படும்.

கல்வியை ஓரளவுக்குக் கற்று முடிந்ததும் பொது வாழ்வில் தங் கள் தங்களுக்குரிய ஸ்தானத்தை வகிக்கத் தயார் செய்து கொள்வதே மாணவர்களின் முக்கிய நோக்கமாக இருக்க வேண்டும். இவ் வகை யில் அவர்களுக்கு உதவுவதே-அவர்களைத் தகுதியற்றவர்க ளாக்கு வதே-ஆசிரியர்களின் இன்றியமையாக் கடமையாகும்.

பண்டைக்காலத்துக் கல்வி இவ் வகையில் தான் மாணவர்களைத் தயார் செய்து வந்தது. நமது தாய் நாடாகிய பாரத தேசத்தில் வழங்கிவந்த கல்வி மாணவர்களுக்கு வாழ்க்கையின் பல துறைகளிலும் பயிற்சி யளித்து வந்தது. உலக வாழ்க்கை, ஞான வாழ்க்கை எனும் இரு துறைகளிலும் மாணவர்களைத் தேர்ச்சி பெறச் செய்து வந்தது. அந் நாளில் ஆசிரியர்கள் உலக நூற் கல்வியையும், அறிவு நூற் கல்வி யையும் ஒருங்கே மாணவர்களுக்குப் போதித்து வந்தனர். ஆனால், நம் இந்தியாவில் உலக வாழ்க்கைக்குரிய கல்வியை அவ்வளவாகப்

போற்ருது, ஞான நூற் கல்வியையே அதிகமாக வளர்த்து வந்தனர் என்று வெளி நாட்டாரும், நம்மவரில் ஒரு சிலருங் கூட அதை ஒரு குறையாகக் கூறி வருகின்றனர். இக் கொள்கை உண்மையானதல்ல; தவருகும். முற்காலத்தில் மாணவர்களுக்கு உலக நூற் கல்வியின் பல துறைகளிலும் பயிற்சி அளிக்கப்பட்டது. அது மட்டுமல்ல; கணித நூல், வான நூல், தருக்க நூல், பூத பௌதிக நூல், அரசியல், ஓவியம் முதலிய கலைகளும் போதிக்கப்பட்டன. இவ் வுண்மை சாந்தோக்கிய உபநிடதம் போன்ற பழைய உபநிடதங்களில் கூறப்பட்டிருக்கிறது. இத்தகைய பல கலைகளிலும் தேர்ச்சி பெற்றவர்கள் பலர் அந் நாளில் இருந்து வந்தார்கள். ஆனல், பிற்காலத்து, இத் துறைகளில் அறிவை வளர்க்க இயலாது போமாறு சில நிகழ்ச்சிகள் இந்திய நாட்டுச் சரிதத்தில் ஏற்பட்டமையால், அத் துறைகளில் நமது முன்னேற்றம் தடைப்படலாயிற்று. ஞான நூற் கல்வியோ நம்மவரது வாழ்க்கைக்கு உயிராய் அமைந்திருக்கின்றமையால், அதை விட்டு விலக அவர்களால் முடியவில்லை. இக் காரணத்தினலேயே இந்தியாவில் இன்றளவும் ஞான உணர்ச்சி கெடாது இருந்து வருகிறது. அன்றியும், இதுவே நம்மிடையே சமூக உணர்ச்சியைப் பாதுகாத்து வருகிறது; நம் நாட்டு மக்கள் அனைவரையும் ஒன்ருகப் பிணைத்து வருகிறது. நமது அரசியல் வாழ்க்கையிலும், சமூக வாழ்க்கையிலும் நமக்குப் போதிய வசதிகள் மட்டும் கிடைக்குமாயின், இந்தியா அறிவு நூற் கல்வியில் முதன்மை பெற்றிருப்பதே போன்று, உலக நூற் கல்வியிலும் முன்னணியில் இருந்துவரும் என்பது திண்ணம்.

தற்காலக் கல்வி முறையில் முற்காலக் கல்வியினுல் ஏற்பட்ட நன்மைகள் ஓரளவேனுங் கிடையாது. மேலும் பல குறைகள் காணப்படுகின்றன. தற்காலக் கல்வி முறையிலுள்ள மிகப் பெரிய குறையாதெனில், சிரத்தையை இழந்திருக்கும் நிலையேயாகும். தன்னம்பிக்கையை இழக்கச் செய்யும் கல்வி உண்மையான கல்வியாகாதன்ருே?

போதன முறையிலும் தற்காலக் கல்வி மிகவும் பிற்போக்கானது. தற்காலக் கல்வி போதன முறையில் தக்க மாறுதல்களும், திருத்தங்களும் ஏற்பட வேண்டும். நம் நாட்டில் மேனுட்டுப் போதன முறைகளே பெரும்பாலும் பின்பற்றப் பட்டு வருகின்றன. அதுவும் மேனுட்டில் புதிய முறை யொன்று புகுந்து பழைய முறை கழிந்த போது அப் பழைய முறையைப் புகழ்ந்து நம் கல்வியிலாகா அதிகாரிகள் பின்பற்றுகிருர்கள்.

"மேனுடுகளில் ஆரம்ப காலத்தில் காலியான ஓரிடத்தில் செங்கலும் சுண்ணும்புங் கொண்டு ஒரு மாளிகை கட்டுதல் போன்றது போதித்தல் என்ற கருத்து பரவி யிருந்தது. பிறகு, மாணவனது மனம் காலி மனையை ஒத்ததல்ல என்று புலப்பட்டதும் அடுத்தபடியாக சிற்பி முறை போற்றப்பட்டது. சிற்பி யொருவன் ஒரு கல்லின்

கண் தான் நினைத்த உருவத்தைச் செதுக்கித் தோற்றுவித்தல் போன்றது, மாணவனுக்குக் கற்பிப்பது என்று கருதப்பட்டது. பின்னுளில் சிறுவர்களது உள்ளம் கல்லைப் போன்று உயிரற்ற தொன்றல்ல என்ற உணர்ச்சி எழுந்தது. ஆகவே, உயிருள்ள செடிகளுக்கு நீரும் உணவும் இட்டு வளர்ப்பது போன்று கல்வி புகட்டுதல் வேண்டும் என்று அறிந்து அம்முறையைக் கையாண்டனர். இக்கருத்தே இன்றுவரை நிலைத்துள்ள அபிப்பிராயமாகும்." ஆனல் இதுவும் பிழைபட்ட கருத்தாகும்.

"தொட்டனைத்து ஊறும் மணற்கேணி மாந்தர்க்கு
கற்றனைத்து ஊறும் அறிவு."

என்பது திருவள்ளுவரது வேதவாக்கு. இதுதான் உண்மையானது. உண்மையில் கல்வி கற்பித்தல் மணற்கேணியைத் தோண்டுதலுக்கு ஒப்பாகும். இதுவே மிகச் சிறந்த போதனுமுறை யாகும். மனிதனது உள்ளத்தினுள்ளே வரம்பிலா அறிவு புதைந்து கிடக்கிறது; அதைச் சிறிது தோண்டியதும் அறிவு முகிழ்க்கிறது. அறிவு பிறரால் ஒருவனது உள்ளத்துப் புகுத்தப்படுவதன்று; உள்ளிருந்து ஊறி வெளிவருவதே அறிவாகும். இவ்வுண்மையை யுணர்ந்து நம் நாட்டில் கல்வி முறை போதிக்கப்பட்டு வருமாயின், நாம் உலக வாழ்க்கையில் எல்லா நலங்களும் பெற்று உன்னதவாழ்வு நடத்துவதோடு அல்லாது ஆன்மார்த்த லாபத்தையும் எளிதில் அடையப் பெறுவோம் என்பது நிச்சயம்.

கடைசியாகச் சொன்ன உயரிய போதனு முறையை நன்குணர்ந்தவர்கள் நமது பெரியோர்கள். அக் காலத்து குருகுல வாசம் மிகச் சிறந்த நிலையில் இருந்ததற்கு இதுவே காரணமாகும். குருகுல வாசத்தில் கல்வி பயின்ற மாணவர்கள் பல துறைகளிலும் மணிகளாய் விளங்கினர்கள் இக் குருகுல வாசத்தின் மேன்மையை ஆங்கிலம் பயின்ற பேரறிஞர்கள் சிலர் இப்போதுதான் உணர்ந்து வருகிறுர்கள். சமீபத்தில் சென்னையில் நடந்த சென்னை சர்வகலாசாலை பட்டமளிப்பு விழாவின்போது மாணவர்களுக்கு உபதேசஞ் செய்த சென்னை மெடிகல் கலாசாலை பிரின்ஸிபால் டாக்டர் ஏ. லக்ஷ்மணசாமி முதலியார் கூட தமது பிரசங்கத்தில் பழைய குருகுலவாச முறையைப் பாராட்டிப் பேசி யிருக்கிறுர். "உபாத்தியாயர்கள் பழைய காலத்திய குருமார்கள் மாதிரி இத்தேசத்திய இளைஞர்களை உருவாக்க வேண்டும். விவசாயத்தில் பட்டம் பெற்றவர்கள் விவசாய அபிவிருத்திக்கான மார்க்கங்களைத் தேடவேண்டும்" என்று கூறி யிருப்பது இங்கு குறிப்பிடத் தக்கதாகும்.

டாக்டர். லக்ஷ்மணசாமி முதலியார் தமது பிரசங்கத்தின் கடைசியில் மாணவர்களுக்குக் கூறிய புத்திமதி ஒவ்வொருவரும் சிந்தித்துப் பார்க்கவேண்டிய தவசியமாகும்.

"எல்லாவற்றிற்கும் மேலாகப் பட்டதாரிகளாகிய நீங்கள் அனை

வரும் நல்ல பிரஜைகளாக இருக்கவேண்டும். இப்போது நீங்கள் ஒரு புதிய சகாப்தத்தின் ஆரம்பத்தில் இருக்கிறீர்கள். தேசத்தின் நல னும், பொதுமக்களின் க்ஷேமமும், முன்னேற்றமும், உங்களுக்குப் பிரதானமாகத் தோன்றினால் பொது இயக்கத்தில் நீங்கள் மும்மரமாக ஈடுபடுவீர்கள். தேசத்தின் ஒவ்வொரு பிரஜையும் உங்களுடைய சகோதரன் எனவும், அவரவர்களின் வாழ்க்கைகளை உருப்படுத்திக் கொள்வதில் அவர்களுக்குச் சமமான வசதிகள் அளிக்கப்பட வேண்டுமென்றும் நீங்கள் கருதுவீர்களாயின், சாதி மத வித்தியாச மும், பிறப்பு, பணம், அந்தஸ்து ஆகியவைகளால் ஏற்படும் வேற் றுமையும் ஒழிந்து விடும். எல்லோரும் தெய்வத்தின் முன்பு சமம் என்பதை நீங்கள் உணர்ந்தால் சர்வகலாசாலைப் பயிற்சி உங்களுக்குப் பயனளிக்கும் வித்தியாசங்களை அலட்சியஞ் செய்து ஒற்றுமையை வற்புறுத்துவதிலும், தற்போது பயனற்ற பழைமையான பழக்கங் களை அறவே நீக்குவதிலும் தான் உண்மையான தேசபக்தி இருக் கிறது. தற்போது இவ்வுலகில் விரோதமான லட்சியங்கள் காணப் படுகின்றன. பலாத்காரமே மதிக்கப்பட்டு வருகிறது. சுபீட்சத் திற்கும், திரவிய லாபத்திற்கும் குறுக்கு மார்க்கம் போதிக்கப்படு கிறது. தேசங்களுக்குள் ஒற்றுமையையும், அமைதியையும் கொணர்ந்து ஒரு புதிய சகாப்தத்தை ஆரம்பிக்க நீங்கள்தான் அவசி யம். அப்போதுதான் நமது இந்திய சாம்ராஜ்யத்திற்குள் துரோகி யும், வெளியே பகைவரும் இருக்க முடியாது. அப்போதுதான் இந்த இந்திய சாம்ராஜ்யம் இதர மேனடுகளுக்கு நிகராக விளங்கும். அப் போதுதான் உலகில் தீமை புரிபவர்களின் சக்தி அடங்கும். பிறகு தான் உலகத்தில் சமாதானம் நிலை நாட்டப்பட்டு மக்களுக்கு நிலை யான சுகம் ஏற்படக் கூடும்."

இப் புத்திமதி இச் சமயத்தில் எவ்வளவு இன்றியமையாதது என்று வாசகர்களுக்கு எடுத்துக் கூற வேண்டியதில்லை.

"வாழ்க்கைப் போரில் முன்னணியிலிருந்து வெற்றிபெறப் பொரு தற்குத் துணைபுரியாத கல்வியும், ஒருவனது ஒழுக்கத்தைப் பண்படுத் திச் சீரியதாக்காத கல்வியும், பொதுமக்களது நலத்திற்காகத் தன்ன லத்தைப் பலியிடும் தியாக புத்தியை ஏற்படுத்தாத கல்வியும் கல்வி யெனும் பெயர்க்குரியன வாகுமா?" என ஒரு சமயம் சுவாமி விவேகானந்தர் கூறி யிருக்கிறார். ஜன சமூக நலனுக்காகப் பாடுபடும் தேசீய அரசாங்கமே இத்தகையதான கல்வி முறையை ஏற்படுத்த முடியும். ஆகவே இப்போது நாட்டில் அதிகார பதவியை ஏற்றிருக் கும் காங்கிரஸ் மந்திரிகள், மகாகனம் ஸ்ரீநிவாச சாஸ்திரிகள் கேட்டுக் கொள்வதுபோல் ஜன சமூகத்தின் முன்னேற்றத்துக்கு உகந்த வழி யில் கல்விமுறையில் தகுந்த மாறுதல்களை ஏற்படுத்திக் கல்வியின் இலட்சியத்தைக் கைகூடச் செய்வார்களென்று நாம் நம்புகிறோம்.

# ஆனந்தனுக்கு வாழ்த்து

(கரணவாய்-அரசினர் தமிழ்க்கழகம்
பண்டிதர்-திரு த. போ. கார்த்திகேசு அவர்கள்.)

**வெண்பா.**

காரேறும் பூவிற் கண்ணியஞ்சேர் பத்திரிகை
சீரேறுஞ் சென்னையிற் றன்செனித்துப்—பேரேறுந்
தானஞ்செய் மாழனியாந் சாமிமுதல் தந்த
ஆனந்த போதினியே யாம்.

ஆமிதற்கு ஆண்டு ஆனதுமூன் றேடிருபான்
நாமிதனை நன்கு நவின்றிடுவோம்—பூமிதனிற்
பேரறிவைக் கூட்டிப் பெருகொளியைச் சேர்ப்பிக்கும்
நேரறிவை நாமடைவோம் நின்று.

நின்றிலங்கும் ஆனந்த! நீடூழி வாழியரோ!
என்று மென்றாழை யேநிகர்த்து—நன்றுவந்து
திங்கடொறு மெங்கரத்துற் றின்னுதீர்த் தின்புடனே
பங்கமிலா தெங்கும் பரந்து.

## II

ம-ள-ஸ்ரீ ஆனந்தபோதினி ஆசிரியருக்கு எழுதும் கடிதம்.

அன்புள்ள ஐயா, எனது மனமார்ந்த வாழ்த்துகள் உரியதாகுக. தற்போது நமது ஆனந்தனுக்கு 22 வருடம் கழிந்து புது வருடம் பிறந்திருப்பதைப்பற்றி நான் சந்தோஷிக்கிறேன். வாழ்க நம் ஆனந்தன்! பத்திரிகையுலகிற்கே நமது தமிழ்நாட்டில், முதன்மையானது தங்கள் "ஆனந்த போதினி" என கூறலாம். இதற்கு பின்னர் புற்றீசல்போல் தமிழ்நாட்டில் அனேக பத்திரிகைகள் தோன்றின. பெரும்பாலான பத்திரிகைகள் மறைந்தன. ஆனால் நம் "ஆனந்த"னே வளர்பிறை சந்திரன்போல் வருடா வருடம் அபிவிருத்தி யடைந்து வந்திருக்கிறது. பல்லாயிரக் கணக்கான ஜனங்களை மகிழ்வித்து வருகிறது. ஜாதி, மத பேதங்களைக் கவனிக்காமல் தமிழர்களுக்கு நன்மையே புரியவேண்டும்; தமிழ்மொழி வளர்ச்சி யடைய வேண்டும் என்ற நோக்கம் கொண்டது. சமய வேற்றுமைகளும், சாதி, மத பேதத்தைப் பாராட்டாமலும் யாவருக்கும் பொதுவாக தொண்டு புரிவதில் 'ஆனந்தன்' தலைமை ஸ்தானம் வகிக்கிறது. உயர்ந்த முறையில் ஆடவரும், பெண்டிரும், சிறுவரும், சிறுமியரும் படித்து இன்புறத் தகுகவாறு வெளி வருவது தங்கள் பத்திரிகை ஒன்றே. உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் உருக்கமான சிறு கதைகளும், இராமயணம், மணிமேகலை, சிலப்பதிகாரம் முதலான புராதனமான நூற்களில் உருக்கமான பகுதிகளுக்கு விளக்கவுரை, பதவுரை முதலியவைகளை எழுதி யாவரும் அறியுமபடி எழுதுவதையும் நான் பாராட்டுகிறேன். மாணவர் பகுதியில் இங்கிலாந்து தேச சரித்திரத்தைத் தகுந்தவிதமாக தற்காலத்திற் கேற்றவாறு நமது இந்தியாவின் நிலைமையும் இடை இடையே சேர்த்து எழுதுவதைப் பற்றி மகிழ்ச்சி யடைகிறேன்.

சிறுவரும் சிறுமிகளும் உவகைகொள்ள ஆத்திசூடி நீதி வாக்கியங்களுக்கு பதவுரை கருத்துரை எழுதுவதைப்பற்றி ஆனந்த மடைகின்

# திருஞான சம்பந்தர்

(பண்டிதர்-சே. இராமசாமிப் பிள்ளை.)

உலகில் இருளும் ஒளியுங் கலந்தே யிருக்கிறது. ஆயினும ஒளி சுடர்விட்டால் தான் இப்பரந்த உலகம் தேஜோமயமாய்க் காணப்படுகிறது. இருள் கவிந்த காலத்து உலகமே பாழடைந்து போகிறது. ஆகவே இந்நிலவுலகிலுள்ள ஜீவராசிகளுக்கு ஒளி மிக இன்றியமையாததாய் வேண்டப்படுகிறது. அவை ஒளியினால்தான் உயிர்வாழ்கின்றன. பிரபஞ்சத்தைக் கண்டு மகிழ்ந்து அதனோடு உறவாடுகின்றன. இவ்வொளியில்லாது இருள் மிகுந்திருக்குங் காலத்து அவை படும் பாட்டை—தடுமாற்றத்தை—என்னென்று வருணிப்பது! ஜீவராசிகள் படும் பரிதாப நிலையைக் கண்டுதான் இறைவன் சூரியன், சந்திரன் ஆகிய இரு கோள்கள் வாயிலாக, உலகுக்கு ஒளியை அருளியிருக்கிறான்.

சூரிய, சந்திரனொளி உலகுக்கு எவ்வளவு இன்றியமையாததோ, அது போலவே, ஆன்மாக்களுக்கு—அதாவது உயிர்களுக்கு அறிவாகிய ஒளி இன்றியமையாததாகும். உலகில் எவ்வாறு இயற்கையாக இருள்

---

றேன். தொடர் நாவல்களோ படிக்க சுவாரஸ்யமா யிருப்பதோடு அடுத்த மாத சஞ்சிகையை ஆவலுடன் எதிர்பார்க்கும் வண்ண மிருக்கிறது. மனிதர்களுக்கு இன்றியமையாதது தேகசுகம். அதற்கு சுகாதார சம்பந்தமான கட்டுரைகளும் வைத்திய பகுதியும் அமைந்திருக்கிறது. கவிதைகளோ மனதிற்கு ரம்யத்தையும் ஆறுதலையும் அளிக்கிறது. பொருளாதார நூல் எழுதுவதிலும் யாவருக்கும் பிரயோஜனமுண்டு. அறிவிற் சிறந்த அறிஞர் கட்டுரைகளும் விஞ்ஞான சம்பந்தமான கட்டுரைகளும் தங்கள் பத்திரிகையில் வெளிவருகிறது. தங்கள் பத்திரிகை இன்பக் களஞ்சியம். மனதிற்கு ஆறுதலை அளிக்கும் சஞ்சீவி. கட்டுரைகளும், கதைகளும் கவிதைகளும் நிறைந்த ஆனந்த பொக்கிஷம். இத்தகைய ஆனந்தனுக்கு தாங்கள் வருட முழுவதும். சந்தாவாக ஏற்படுத்தி யிருப்பது மிகவும் குறைவான தொகை ஒரு ரூபாய் மட்டுமே சுயநலம் கருதாது தமிழர்களுக்கு தொண்டு புரிவதையே தனது நோக்கமாக கொண்ட நமது செல்வன் ஆனந்தனை தமிழ்மக்கள் ஆதரிக்க முன்வரா திருப்பரோ! ஆனந்தபோதினி பிரசுரகர்த்தரையும், அதனை அலங்கரிக்கும் கட்டுரையாளர்களையும் அதன் அருமை தெரிந்து ஆதரிக்கும் அன்பர்களாகிய வாசகர்களையும் எல்லாம்வல்ல ஜகதீசன் காப்பாற்றுவாராக.

தங்கள் அன்பன்,

பி. நாச்சிமுத்து.

நிறைந்திருக்கிறதோ அதுபோல, ஆன்மாக்களுக்கும் இயற்கையாக அறியாமை என்னும் இருள் உண்டு. இவ்வுயிர்கள் யாதேனும் ஒரு உடம்பைத் தரித்தற்கு முன் கேவலாவஸ்தையில், அறியாமை இருளில் கண்ணில்லாக் குழந்தைகளைப்போல் கட்டுண்டு தவித்துக் கொண்டிருக்கும். கருணையே உருவமான கடவுள் மாயையாகிய ஒளியை அவைகளின் மீது வீசி, அம்மாயையின் உதவியால் தநு கரண புவன போகங்களைத் தந்து அறிவு விளக்கமுறச் செய்கிறுன். அறிவாகிய ஒளிதான் உயிர்களை உலகிலும் ஆனந்தத்தோடு வாழச் செய்து—அதாவது உலகில் அநுபவிக்க வேண்டிய இன்ப துன்பங்களை யெல்லாம் அநுபவிக்கச் செய்து—கடைசியாக ஆண்டவனையும் அடையச் செய்கிறது. இத்தகைய அறிவைத்தான் ஞானம் என்றும் வழங்குகிறுர்கள். ஆகவே, இவ்வறிவு தொடர்பு—ஞானசம்பந்தம்—பெற்ற மனிதன்தான் இவ்வுலக சம்பத்துகளை மட்டுமல்ல; மோட்ச சாம்ராஜ்யத்தையும் பெறுவான் என்று நாம் அறிந்துகொள்ள வேண்டும். ஆறறிவுடைய மக்கள் ஞான சம்பந்தம் பெற்றுல்தான் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய பேறுகளைப் பெறமுடியும் என்ற உண்மையை உலக மக்களுக்கு உணர்தத தோன்றியவர்தான் சைவ சமயாசாரியர்களில் முதல்வராகிய திருஞான சம்பந்தப் பெருமாளுவர். இஞ் ஞாஞசிரியரது வரலாற்றை ஊன்றி நோக்குபவர்களுக்கு நாம் எடுத்துக் காட்டும் உண்மை புலனுகாமல் போகாது.

திருஞான சம்பந்த சுவாமிகளுக்கு சகல சம்பத்தையுந் தரத்தக்கதாகிய ஞானசம்பந்தம் எவ்வாறு ஏற்பட்டது? என்பது ஒரு பெரிய அற்புத வரலாருகும். திருஞான சம்பந்தர் சோழவள நாட்டிலுள்ள சீகாழிப் பதியில் சிவபாத விருதயருக்கும் பகவதியம்மையாருக்கும் திருமைந்தராய் அவதரித்தார். அவரது மூன்றுவது வயதில் தந்தையாரோடு திருக்குளத்துக்குச் சென்றுர். அங்கு சிவபாதவிருதயர் நமது பிள்ளையாரைக் கரைமீதிருத்தி விட்டுக் குளத்திலிறங்கிக் குளிக்கலாஞர்.

இதனிடையே நமது பிள்ளையார், எதோ எண்ணமெழ கைகளைப் பிசைந்துகொண்டு கண்களில் நீர் ததும்ப, அழகிய செவ்விதழ் துடிக்கப் பொருமி யழுதார். அவ்விதம் அழத் தொடங்கியவர், திருத்தோணியப்பரது கோயில் சிகரத்தை நோக்கி "அம்மே! அப்பா!" என்று அழைத்த வண்ணம் அழலாஞர். இச்செய்கையை, தெய்வக் கவிஞர் சேக்கிழார்,

"தம்மேலைச் சார்புணர்ந்தோ, சாரும் பிள்ளைமை தானே?"

என்று அதிசயித்துப் பாராட்டுகிறுர். பால்மணம் மாறுப் பாலகன் அழுதால் எவருக்குத்தான் மனமிளகாது! கருணுமூர்த்தியான சிவபெருமான் இதைக் கண்டு வாளாவிருப்பாரா? பிள்ளையாரின் குதலைமொழி செவியில் விழுந்ததும், பார்வதி தேவியாரோடு அவர் எழுந்தருளிஞர். பின்னர், ஈசன் தேவியைப் பார்த்து பிள்ளையாருக்குப் பாலூட்டும்படி ஏவிஞர். தந்தையன்புக்கு தாயன்பு இளைத்ததா என்ன? தேவியார் திருவருளே உருவானவ ரல்லவா! எனவே, அம்மையார் பிள்ளையாரை யணுகி, கருணையோடு கண்ணீரைத் துடைத்து தான் பொற் கிண்ணமொன்றில் கொண்டு வந்த ஞானப்பாலை யருந்துமாறு செய்தார். எவ்வுலகுந் தொழுகின்ற

உமாதேவி அளித்த சிவஞானத்து இன்னமுதை யுண்டதனுல் பிள்ளையார் திருஞானசம்பந்தர் ஆகி அதையே தமது சிறப்புப் பெயராகக் கொண்டார்.

பிள்ளையார் ஞானப்பாலருந்திய அற்புத நிகழ்ச்சியைச் சேக்கிழார்,

"யாவருக்குந் தந்தைதாய் எனும்இவர் இப்படியளித்தார்
ஆவதனுல் ஆளுடைய பிள்ளையா ராய்அகில
தேவருக்கு முனிவருக்குந் தெரிவரிய பொருளாகுந்
தாவில்தனிச் சிவஞான சம்பந்த ராயினர்."

"சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கியஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாம்உணர்ந்தார் அந்நிலையில்"

"எப்பொருளும் ஆக்குவான் ஈசனே எனும் உணர்வும்
அப்பொருள்தான் ஆளுடையான் அடியார்கள் எனும்அறிவும்
இப்படியால் இதுவன்றித் தம்மிசைவு கொண்டுஇயலும்
துப்புரவுஇல்லார் துணிவு துகளாகச் சூழ்ந்துஎழுந்தார்"

என்னுஞ் செய்யுள்களால் விளக்கிக் காட்டியிருக்கிறார்.

உலகமே இன்னதென அறியாப் பச்சிளங் குழந்தை சிவஞானத்தைப் பெற்றதனுல், மெய்யுணர்வடைந்து, அண்ட புவன தத்துவங்களையே யல்லாது, இவற்றிற்கெல்லாம் தனிப்பெருந் தலைவனுகிய முழுமுதற் பெருங் கடவுளையும் அறிந்தார். தந்தை ஸ்நானஞ் செய்துவிட்டு வந்து, மகன் வாயினின் றொழுகும் பாலைக் கண்டு திடுக்கிட்டு, "எச்சில் மயங்க உனக்கு இப்பாலை யருத்தியது யார்?" என்று கேட்டபோது திருஞானசம்பந்தர், பிரம விஷ்ணுக்களுக்கும், வேதாகமங்களுக்கும் எட்டாத விழுப்பொருளாகிய சிவபெருமானைத் தம் கைவிரலாற் சுட்டிக் காட்டி உள் நிறைந்து பொழிந்தெழுந்த உயர்ஞானத் திருமொழியால்,

"தோடுடைய செவியன் விடையேறிஓர் தூவெண்மதிசூடி
காடுடைய சுடலைபொடிபூசி என்உள்ளங் கவர்கள்வன்
ஏடுடைய மலரான்முனை நாட்பணிந்து ஏத்தஅருள்செய்த
பீடுடைய பிரமாபுரம்மேவிய பெம்மான இவன்அன்றே!"

என்ற திருப்பதிகத்தைப் பாடி, பிரமபுரத்துறை பெம்மான்தான் தம் உள்ளத்தைக் கவர்ந்து ஞானப்பாலூட்டி ஆட்கொண்டருளினன் என்று எடுத்துக் கூறினர். இதைக் கேட்டு சிவபாதவிருதயர் திகைத்துப்போனர் என்பதைக் கூறவும் வேண்டுமோ! மூன்று வயது பச்சிளம் பாலகன்—வாய் நிரம்பா சொற்களைக் குழறிக்குழறிப் பேசிப் பெற்றோரையும், மற்றோரையும் மகிழ்விக்கும் நிலையிலுள்ள மதலை—இறைவனைச் சுட்டிக் காட்டிப் பாட்டுப் பாடுவதென்றால் யாருக்குத்தான் வியப்பை யுண்டாக்காது? நாமும் இந்நிகழ்ச்சியைப் படிக்கும்போதும் கேட்கும்போதும் எல்லாம் இறும்பூது எய்துகிறோமல்லவா! இயற்கை வாதிகள் 'இது பொய்க்கதை' என்று கூறி

வாதாடுகின்றனர்! "யாவர்க்கும் முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ!" என்ற பெருந் தத்துவத்தை யுணர்ந்தவர்கள், "ஈசன் செயல் இதுபோலும்" என்று சிவபாத விருதயர் மனந்தேறியதுபோல், தேறுதலடைவர்.

ஞானசம்பந்தம் ஏற்பட்ட காலத்து—ஞானங் கைகூடிவிட்டால்—சர்வ சித்திகளையும் பெறலாம்; பல அற்புதச் செயல்களையுஞ் செய்யலாம்; மோட்சத்தையும் எளிதில் எய்தலாம் என்று துவக்கத்திலேயே குறிப்பிட்டோமல்லவா! அதுபோன்றே, நமது ஆளுடைய பிள்ளையார் சிவஞானங் கைவரப் பெற்றபின்னர், பல பதிகளுக்குஞ் சென்று பல அற்புதங்களைச் செய்து காட்டி, உலக மக்களுக்கு இறைவன் உண்மையையும், அவனையடையும் நன்னெறியையும் தமது தேவாரப் பாடல்கள் வாயிலாக எடுத்து உபதேசிக்கலானார். அவைகளையெல்லாம் விரித்தெழுதுவதெனின், இவ்வேடு அடங்காது. ஆகவே, திருஞான சம்பந்தர் தமது வாழ்க்கையில் நடத்திக் காட்டிய முக்கியமான அற்புதங்களைமட்டும் இங்கெடுத்துக் கூறுவோம். அவை வருமாறு :—

1. திருப்பாச்சிலாச்சிரமம் என்னும் ஊரில் கொல்லிமழவன் என்னும் அரசனின் புதல்வியுடைய முயலக வியாதியை "துணிவளர்" என்னும் பதிகம் பாடிப் போக்கியருளினார்.

2. திருக்கொடிமாடச் செங்குன்றூரில் தம்முடனிருக்கும் திருக்கூட்டத்தார்க்கு வந்த சுரப்பிணியை "அவ்வினைக்கிவ்வினை" என்ற திருநீலகண்ட பதிகம் பாடித் தீர்த்தார்.

3. திருமருகல் என்னும் ஊரடைந்தகாலத்து சிவபிரான் முன்னிலையில் கதறி யழுதுகொண்டிருந்த ஒரு வணிகமங்கையின் கையறுநிலையை மாற்றவேண்டி பாம்பு தீண்டி இறந்த அவளது காதலனை உயிர்பெற்றெழச் செய்தார். அச்சந்தர்ப்பத்தில் அவர்,

"சடையாய் எனுமால் சரண்நீ எனுமால்
விடையாய் எனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலருங் கழனி
உடையாய் தகுமோ இவள்உள் மெலிவே"

என்று ஆரம்பித்துப் பாடிய பதிகம் ஓதுவார் உள்ளத்தை உருக்குவதாகும்.

4. பாண்டிமாதேவி மங்கையர்க்கரசியார், மந்திரி குலச்சிறையார் ஆகியவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி, திருஞான சம்பந்தர் மதுரைமாநகர் சென்று தாம் தங்கியிருந்த மடத்துக்குச் சமணர் இட்ட தீயை 'பையவே சென்று பாண்டியற்கு ஆகவே' என்று பாண்டிய மன்னன்பால் ஏவினார். அதன் பயனாக, அம்மன்னனுக்கு ஏற்பட்ட சுர நோயைத் தீர்த்தார். "வாழ்க அந்தணர்" என்னும் பதிகத்தில், "மன்னனும் ஓங்குக" என்று பாடி மன்னனது கூனை நிமிர்த்தார். அரசனை மயக்கிவைத்திருந்த சமணர்கள் இவரை வாதுக்கழைக்க, அதற்கு உடன்பட்டு, அனல்வாதம், புனல்வாதம் முதலியன செய்து எண்ணாயிரம் சமணர்களையும் வென்றார். பாழ்பட்டிருந்த பாண்டிநாடு முழுதும் சிவமணம் பெருகச் செய்தார்.

5. திருவோத்தூர் என்னுமிடத்தில் அன்பர் வேண்டுதலுக்கிரங்கி, ஆண் பனைகளைப் பெண்பனைகளாக்கினர்.

6. திருமயிலையில் அரவந்தீண்டி யிறந்த பூம்பாவையின் எலும்பை அவளது தந்தை சிவநேசர் என்பாரது வேண்டுகோளுக்கிணங்கி, கபாலீச்சுரத்தில் "மட்டிட்ட புன்னை" என்னும் பதிகம் பாடிப் பழையபடி பெண்ணுக்கினர். இவ்வற்புதம்தான் திருமயிலை அறுபத்துமூவர் திருவிழாவின் போது "அங்கம்பூம்பாவையான வைபவம்" என்ற பெயரோடு சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. இச்சமயம் திருஞானசம்பந்தர் பாடிய,

"மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலை
கட்டுஇட்டங் கொண்டான் கபாலீச்சுரம் அமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திரபல் கணத்தார்க்கு
அட்டுஇட்டல் காணுதே போதியோ பூம்பாவாய்"

என்று தொடங்கும் பதிகம் மிகுந்த பக்திச் சுவை வாய்ந்ததாகும்.

கடைசியாக, திருஞான சம்பந்தப் பெருமான் தமது பதினாறுவது வயதில் பெற்றோர் உற்றார் விருப்பத்திற் கிணங்கியும் உலக ஒழுக்கத்தை நிலை நிறுத்துவதற்கும், திருநல்லூரில் நம்பாண்டார் நம்பி என்னும் பெரியாரின் திருமகளைத் திருமணஞ் செய்துகொண்டார். பிறகு அவர் சுற்றத்தாரும், அடியார்களுஞ் சூழ்ந்து தமது மனைவியாரோடு சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் பெருமணக்கோவிலை யடைந்து,

"கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில
சொல்லூர்ப் பெருமணஞ் சூடலரே தொண்டர்
நல்லூர்ப் பெருமண மேய நம்பானே"

என்ற பதிகத்தைப் பாடி, செம்பொற் சோதியின் அருட் சோதியில் இரண்டறக் கலந்தார். அவரது அருளால் திருமணத்துக்கு வந்திருந்தார் அனைவரும் சோதியில் கலந்தனர்.

திருஞானசம்பந்த சுவாமிகள் மெய்ஞ்ஞானங் கைவரப் பெற்றமையால் தம் வாணளில் பல அற்புதங்களைச் செய்து காட்டியதோடு, நினைத்த மாத்திரத்தில் தமக்கும், தம்மைச் சேர்ந்தவர்களுக்கும் முத்திப் பேற்றை அடையும்படி செய்தாரென்றால், அறிவுச் செல்வம் அல்லது ஞானப் பொக்கிஷத்தின் மகிமையை என்னென்பது! எனவே, நாமும் அவ்வித மெய்ஞ்ஞானத்தைப் பெற முயலவேண்டுவது அவசியமல்லவா! ஞானசம்பந்தம் பெற்ற திருஞானசம்பந்தப் பெருமான் நமக்குக் காட்டிச் சென்ற சற்புத்திர மார்க்கத்தைக் கடைப்பிடித்தொழுகி, இம்மை, மறுமை, வீடு ஆகிய அனைத்தையும் அளிக்கவல்ல மெய்ஞ்ஞானச் செல்வத்தைப் பெற இறைவனை நோக்கித் தவங் கிடப்போமாக.

---

# சின்னம்மை நோய்.

---

ஒட்டுவாரொட்டி வியாதிகளிலெல்லாம் மிகச் சாதாரணமானது சின்னம்மை நோய் என்பது. இந்த நோய், அநேகமாக, ஒரு ஆளுக்கு ஒரு தடவை தான் வரும். மூன்று வயதுக்குக் கீழ்ப்பட்ட பிள்ளைகளுக்கும் அந்த வயதுக்கு மேற்பட்ட பலவீனமான பிள்ளைகளுக்கும் இந்த நோய் வரும், சில கேஸ்களில், உயிருக்கு ஆபத்தாக முடியும். மரணத்தை விளைவிக்கும் ஒட்டுவாரொட்டி வியாதிகளில் சின்னம்மை வெகு உயர்ந்த ஸ்தானத்தை வகிக்கிறது.

பெரும்பான்மையான ஜனங்களுக்கு எப்படியும் ஒரு தடவையாவது சின்னம்மை காணுமாகையால், அதைத் தடுக்க முயலுவதிலே பிரயோஜனமில்லையென்று சிலர் எண்ணலாம். ஆனால் ஒரு சங்கதி. உங்களுடைய குழந்தை இப்பொழுது நல்ல ஆரோக்கியமாக இருக்கலாம். அதனால் அதற்கு சின்னம்மை வார்க்கும்போது, இலேசாகத்தான் வார்க்குமென்று யார் சொல்லக்கூடும்? நீங்கள் வேண்டுமென்றோ, அல்லது அலக்ஷியமாகவோ உங்களுடைய குழந்தைகளுக்குச் சின்னம்மை தொற்றும்படி விட்டுவைத்திருந்தால், அதற்குச் சின்னம்மை கண்டு செத்துப் போனால், உங்களுடைய மனசாக்ஷி உங்களைச் சும்மாவிடுமா? ஆகவே எப்பொழுதும் முன்னெச்சரிக்கைகளையும் தடுப்பு முறைகளையும் செய்து கொள்ளுவதுதான் நல்லது.

சின்னம்மை நோய்க்குக் காணும் முதற் குறிகளாவன:—சளி, தும்மல், இருமல், கண்ணினின்று நீர் வடிதல், ஜுரம். முதல் இருபத்துநாலு மணி நேரத்திலே ஜுரம் 101 அல்லது 102, சில கேஸ்களில் 104 டிகிரி வரை ஏறிவிடும். வியாதி கண்ட முதல் நாள் இரவு ஜுரம் அதிகமாக இருக்குமானால், சின்னம்மை கடுமையாகக் காணும் என்று தெரிந்துகொள்ளலாம். குழந்தை கடுமையாக ஜலதோஷம் அல்லது இன்புளுயென்ஸா கண்டதைப் போலக் கிடக்கும்.

பின்பு கழுத்திலே பொரி கிளம்பும்; கழுத்திலிருந்து விரைவாக முதுகுக்கும், பின்பு உடம்புக்கும், கடைசியாக, கை கால்களுககும் பரவும்; இரண்டு தினங்களுக்குள், இந்த வரிசைப்படியே, பொரிகள் உலர்ந்து, மஞ்சள் அல்லது பழுப்பு நிறமான பொறுக்குகள் தட்டும். சில நாட்களுக்கெல்லாம் இப்பொறுக்குகள் உதிர்ந்து போகும். பொரி கிளம்புகையிலும் உதிருகையிலும் நமைச்சல் காணும். நோய் கண்ட ஐந்து தினத்திற்குள்ளாக ஜுரம் இறங்காவிட்டால், நோயின் அடியாக வேறு ஏதோ சிக்கல் ஏற்பட்டிருக்கிறதென்று, அநேகமாக யூகித்துக் கொள்ளலாம்.

சாதாரணமாக, சின்னம்மையின் அடியாகக் கிளைக்கக் கூடிய நோய்கள் நிமோனியாவும் காது நோயுமாகும். பொறுக்குகள் உதிரும் காலத்திலே தான் இந்தக் கிளை நோய்கள் அநேகமாக உண்டாகும். பொறுக்கு

களெல்லாம் உதிர்ந்து, ஜுரமும் தணிந்த பின், ஜுரம் மறுபடியும் காணுமானல், நிமோனியா அல்லது காது நோய் ஏற்பட்டாலும் ஏற்படலாம்.

குழந்தைக்கு விரைவாகச் சுவாசித்தல், ஒவ்வொரு மூச்சுக்குப் பின்னும் கரகரவென இரைச்சல் முதலிய சின்னங்கள் இருக்கின்றனவா என்று தாயார் கவனிக்க வேண்டும். டாக்டரைக் கொண்டு குழந்தையினுடன் காதுகளை அடிக்கடி பரிசோதித்துக் கொள்ளுதல் நல்லது. மாஸ்டாய்ட் முதலிய காதுக் கோளாறுகள் ஏற்படாதபடிக்கு வேண்டிய தடுப்பு சிகிச்சைகளை டாக்டர் செய்வார்.

சின்னம்மை கண்டால், அதிகக் கஷ்டப்படக் கூடியவர்களாகவுள்ள குழந்தைகளுக்கு, அந்த நோய் காணுதபடி நம்மால் கூடுமான தடுப்பு முறைகளையெல்லாம் அனுசரிப்பது நல்லது. ஊரிலே சின்னம்மை கொள்ளை நோயாகப் பரவும் காலங்களில், அப்படிப்பட்ட குழந்தையைப் பிள்ளைகள் கூடும் இடங்களுக்கு அனுப்பக் கூடாது. சளி பிடித்த வேறு பிள்ளைகளை அப்படிப்பட்ட குழந்தையுடன் விளையாட விடக் கூடாது.

அப்படிப்பட்ட குழந்தைக்கு சின்னம்மை வீரமும் கொடுக்கலாம். சமீபத்திலே தான் அந்த நோய் கண்டு சொஸ்தமடைந்த குழந்தையினுடைய இரத்தத்தின் நீர்ப் பாகமே இந்த வீரம். இது குழந்தை சின்னம்மை நோயுள்ளவர்களுடன் பழகிய ஐந்து நாட்களுக்குள் கொடுக்கப் படவேண்டும். இந்த வீரம் வியாதியைச் சம்பூரணமாகத் தடுத்து விடாவிட்டாலும் அதை இலகுவாகக் காணச் செய்யும் என்பதற்குச் சந்தேகமே இல்லை.

வியாதியினுடைய முதற்குறிகள் கண்டவுடனேயே சிகிச்சையை ஆரம்பித்து விடவேண்டும். அது முதலில் சின்னம்மையாக இராமல், கடுமையான மூக்குச் சளியாகவோ இன்புளுயென்சாவாகவோ இருந்தாலும் பரவாயில்லை. செய்துகொண்ட சிகிச்சையில் லாபமே தவிர நஷ்டமில்லை.

நல்ல காற்றோட்டமுள்ள அறையில் நோயாளியை ஒதுக்கி வைக்க வேண்டும்.

ஜுரம் இருக்கும் காலம் வரை நீராகாரமே சாப்பிட வேண்டும். தண்ணீர் தாராளமாகச் சாப்பிடலாம். பால், ஆரஞ்சு ரசம் முதலியனவும் குடிக்கலாம். வியாதியஸ்தர்கள் ஒரே நேரத்திலே அதிகம் சாப்பிட முடியாது. ஆகையால் இரண்டு மூன்று மணிக்கொரு தரம் அவர்களுக்கு ஏதாவது சாப்பிடக் கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டும்.

இருமல் அடிக்கடி இருக்குமானல், குழந்தை பலவீனப்பட்டு போம். தும்மலுக்கும் சளிக்கும் பரிகாரமாக, ஆப்போலீன் (Abbolene) முதலிய மூக்குத் துளிகளை உபயோகிக்கலாம். பொரி கிளம்புகிற காலத்திலும் உதிருகிற காலத்திலும், அதிக நமைச்சல் எடுக்காதபடிக்கு, தினம் தேகத்திலே எண்ணெய் தடவுவது நல்லது. ஒரு பெர்ஸெண்டு மெந்தோல் ஆயிண்மெண்ட் அல்லது காலமைன் லோஷன் நமைச்சலைத் தவிர்க்க உபயோகப்படும்.

உடம்பிலுள்ள விஷங்களை வெளிப்படுத்துவதற்கு நாலு வழிகள் உண்டு. அவைகளாவன: சர்மத்தின் மூலமாக, நுரையீரல்களி லிருந்து வெளி வரும் காற்றின் மூலமாக, மூத்திரத்தின் மூலமாக, மலத்தின் மூல மாக. வியாதியஸ்தருக்குச் சுத்தமான காற்று வேண்டுமென்றும் அவர்கள் பல தடவை மூத்திரம் கழிக்க வேண்டும் என்றும் தினம் மல விஸர்ஜனம் செய்ய வேண்டுமென்றும் நீங்கள் ஒத்துக் கொள்வீர்கள்.

குழந்தை நீராகாரம் சாப்பிடுவது, சாதாரணமாக, மலத்தை இளக்கி விடும். மலம் அடிக்கடி இளகி, தானுகக் கழியவில்லையென்றால், எனிமா கொடுக்கலாம். அல்லது மில்க் ஆப் மக்னீஷியா போன்ற கழிச்சல் மருந்தைக் கொடுக்கலாம். ஆமணக்கெண்ணெய் மட்டும் உபயோகிக்காதீர்கள்.

ஜுரம் தணிந்த பிறகும் இரண்டு மூன்று தினங்களுக்குக் குழந்தை படுக்கையிலேயே இருக்க வேண்டும். மழை காலமா யிருந்தால் ஒரு வாரம் வரை வெளியே போகக்கூடாது.

சின்னம்மை நோய்க்குப் பிறகு, குழந்தையி னுடைய உடம்பு நன்றாகத் தேறவில்லையென்றால், குழந்தைக்கு க்ஷய ரோகம் காணக்கூடிய நிலையில் இருக்கிறதா என்று தக்க டாக்டர்களைக் கொண்டு சோதிக்க வேண்டும். பசி தீபனத்தைப் பெருக்கிக் கொள்வற்கும் எடையை அதிகரித்துக் கொள்வதற்கும் காட்லிவர் ஆயில் அல்லது ஹாலிவர் ஆயில் கொடுப்பது நல்லது.

(நல்வழி.)

---

## புதிய ஜீவிய சந்தாதார்.

இவ்வருஷம் நமது "ஆனந்த"னுக்கு ராமநாதபுரம் ஜில்லா, தேவகோட்டை, இரவிசேரியில் வாழும் திரு. வ. சி. வையாபுரி பூசாரி ஜீவிய சந்தாதாரராகச் சேர்ந்துள்ள நற்செய்தியைப் பெருமகிழ்ச்சியோடு தெரிவித்துக்கொள்ளுகிறோம். நம் "ஆனந்தனை" ஆதரவு செய்யும் நோக்கத்துடன் ஆயுட் சந்தாதாரராக முன்வந்த திரு. வ. சி. வையாபுரி பூசாரிக்கு நமது மனப்பூர்வமான நன்றியறிதலைச் செலுததுவதோடு, அவர் எல்லா நலன்களும் பெற்று இனிது வாழ அருள்புரிய வேண்டுமென்று இறைவனை இறைஞ்சுகிறோம்.

பத்திராதிபர்.

# கணபதியின் குடும்பம்



(E. K. வெங்கடராமன், பி. ஏ,)

'மாலை ஆறுமணி யிருக்கும். வழக்கம் போல் ஏரிக்குப் போய் கை கால்களைச் சுத்தி செய்து கொண்டு சந்தியா வந்தனத்தை முடித்துக் கொண்டேன். வீட்டுக்குத் திரும்பும் போது அரச மரத்தடியில் தொந்தியைத் தள்ளிக் கொண்டு உட்கார்ந்திருந்த விநாயக

ரைக் கண்டவுடன் என் மனதில் அடைபட்டிருந்த சங்கடங்க ளெல்லாம் சப்தரூபமாக வெளிவர ஆரம்பித்தன.

"கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான்
குடிக்கத்தான் கற்பித்தாயா?
இல்லைத்தான் பொன்னைத்தான் எனக்குத்தான்
கொடுத்துத்தான் ரக்ஷித்தாயா?
அல்லைத்தான் சொல்லித்தான் யாரைத்தான்
நோவத்தான் ஐயோ எங்கும்
பல்லைத்தான் திறக்கத்தான் பதுமத்தான்
புவியில் தான் பண்ணினாயே."

என்று வாய்விட்டு அலறினேன். "ஏ! கஜானனா! நான் பி. ஏ. பாஸ் செய்து ஐந்து வருஷங்கள் ஆன விஷயம் உனக்குத் தெரியாததா? எங்கு போனாலும் வேலைசாலியில்லை; போ" என்று சொல்லி வெருட்டுகிறார் கள்.

பிரம்மா பிறப்பித்த இம் மானிடப்பிறவியை நான் மனப்பூர்வமாக மாற்றுவது அசாத்தியம். உன்னையன்றி எனக்கு வேறு கதியில்லை. ஒன்று எனக்கு வேலை கிடைக்கும்படி சிபார்சு செய்ய வேண்டும், இல்லா விட்டால் உத்தியோகத்தில் அபேக்ஷிக்கிற தனத்தையாவது தயங்காமல் தந்தருளல் வேண்டும். இரண்டில் ஒன்று நடக்காவிட்டால் நான் நாக்கைப் பிடுங்கிக் கொண்டு உன் காலி னடியிலேயே விழுந்து சாவது நிச்சயம்" என்று முறையிட்டு மரத்தடியில் உட்கார்ந்தேன்.

பெண்ணைக் கண்டால் பேயுமிரங்கும் என்றபடி பி. ஏ. பட்டதாரியாகிய என்னைக் கண்டு விநாயகரின் மனதும் இளகியது. துதிக்கை மெதுவாக மேலே உயர்த்தப்பட்டது. கணபதி பேச ஆரம்பித்தார்.

"அடடா! நவமணி போல் வந்த பட்டதாரியே, மிகவும் கவனமாக உன் கதையைச் சொன்னாய், கொஞ்சம் என் கதையைச் சொல்கிறேன் கேள். வயிற்றுக்கில்லாமல், சோற்றுக்கு ஏமாறி வீதிக ளெல்லாம் இருக்கிறேன். சப்பாணிப் பிள்ளை என்று தாய் தகப்பன் தள்ளி விட்டார்கள். எனக்குப் பெண் கொடுப்பாரோ எப்போதும் கிடையாது. ஒரு தந்தம் உடைபட்டு விட்டது. என் குட்டெல்லாம் வெளிப்பட்டு விட்டது. வாழைப்பழம், தேங்காய், இளநீர் இவை யெல்லாம் எங்கு கிடைக்குமென சந்தி சந்தியாய் உட்கார்ந்திருக்கின்றேன். இப்படி இருக்கையில் என்னால் என்னப்பா முடியும்? சற்று என் தகப்பனார் செய்தியைக் கேள்.

வீடோ வெட்டவெளி: மாடோ ஒத்தை. மேலும் மழுமாறி. விஷத்தை உண்டு பைத்தியம் பிடித்திருக்கிற விஷயம் உலகமெல்லாம் தெரியும். தண்ணீர் சுமந்து, சுயம்பாகம் செய்து அரை உடம்பாகிவிட்டார். விறகெடுத்து விற்று இருக்கிறார். ஓடேந்தி பிச்சை எடுத்திருக்கிறார். மண்ணைச் சுமந்து ஒருவனால் பிரம்படிபட்டிருக்கிறார். முழுதும் சடைப்புரட்

டன். எல்லாரும் ஒருகால் நொண்டி என்பார்கள். இந்த எட்டு திக்குங் காண அரைச் சோமனைத் தலையில் கட்டியாடித் திரிந்தார். மேலும் மிகவும் துஷ்டன். மாமனைக் கொன்றுவிட்டார். மருமகனைச் சுட்டுவிட்டார். ஆகையால் பந்துக்கள் ஒருவரும் இவரை 'வா' என்று அழைப்பதில்லை. நாம் அவரை ஏதாவது கேட்டால் கொடுப்பாரா? என்னைப் பெற்றவள் கேவலத்தைக் கேள்.

ஒரு கம்பத்தில் இரண்டானை கட்டினதுபோல் ஆனாள். வம்புக்குடித்தனத்தால் வாடினாள். தம்பி! நான் என்ன சொல்வேனப்பா! சொந்த புருஷனையே அம்பலத்தி லேற்றிவிட்டாள். என்னப்பா மரியாதை. பிள்ளைக் கறி தின்பவள். எள்ளளவும் அவளிடத்தில் கருணை கிடையாது. தமிழறியாதவள். கேட்டாலும் கொடுக்கமாட்டாள். இன்னுமொரு தம்பி எனக்கு உண்டு. அவன் பிணிமுகங் கொண்டு வாழ்கிற வதிசயம் கேள்.

அவன் எப்போதும் கைவேலை மாறாதவன். பணமிருந்தால் தினைமாவுக்கு அவன் காட்டில் போய்த்திரிவானா? அப்படித் தனமில்லாவிட்டாலும் இரண்டு பெண்டாட்டிக்காரனுக்கு பேசத்தான் வாயுண்டோ? நீ என்ன முறையிட்டாலும், அவன் பணமோர் மாகாணியும் கொடுக்கமாட்டான். என் தம்பி பாக்கியத்தைச் சொன்னேன். என் மாமன் செய்தியைக் கேள்.

வெண்ணெய் எல்லாம் திருடி உண்டு கொடுமைப் பசிக்குப் போதாமல், மண்ணை யெல்லாம் வாரித் தின்றான். ஆடு, மாடு மேய்த்துத் திரிந்து மானங்கெட்டவன். இடைச்சியர் சேலை யெல்லாம் ஒடித் திருடினான். வீடு வீடாகப் பாலை யெல்லாம் மிகக் குடித்தான். பெண்கள் பிடித்து உரலில் கட்டியடிக்கக் கதறினான். உடலோ கறுப்பு. ஒரு கண் குருடு. மேலும் கடலே கதியாக யிருக்கின்றான். ஒரு சமையம் கல்லைத் தூக்கிக்கொள்வான். மற்றொரு சமையம் காட்டுக்குள் ஒடிவிடுவான். எல்லார்க்கும் நல்லவரைப் போலிருப்பான். எதிரில் போய் வாயினால் சொல்லாமல் மெதுவாகத் துடை யடிப்பான். அவன் செய்ததெல்லாம் சட்டத்துக்கு விரோதமான காரியங்கள். தம்பி பரதனுக்குத் தன் ராஜ்யத்தைக் கொடுத்தான். வாலியைக் கொன்று அவன் தம்பி சுக்ரீவனுக்கு மகுடம் சூட்டினான். ராவணனைக் கொன்று அவன் விபீஷணனுக்கு இலங்கையைக் கொடுத்தான். இந்திரனைப் போலிருந்த கர்ணனைக் கொன்று அவன் தம்பியாகிய அர்ச்சுனனுக்கு மேன்மையைக் கொடுத்தான். இதுவரையில் இங்கு ஒன்பது தடவைகள் வந்திருக்கிறான். ஒவ்வொரு தடவையும் யாரையாவது கொல்வதற்கென்றே வந்திருக்கிறான். அவன் வந்தால் போர்க்களம் தயாராக இருக்கவேண்டும். மேலும் பணமீதிலேறி படுத்திருக்கும் அக்குணலோபி என்ன கொடுப்பான்? அவனிடத்தில் ஒருகாசும் பேராது.

இப்படி யிருக்கையில் எங்களால் ஒன்றும் கொடுக்க முடியாது. நான் ஆண்டி, என் தந்தை ஆண்டி, என் தாய் ஆண்டிச்சி. என் மாமன் முழுத் தாதன், நீ வேண்டிவந்த என் குடும்பத்திற்கு மேன்மை என்பது எப்போதும் கிடையாது. எல்லாம் சொல்லிவிட்டேன்; இனிச் சொல்வதற்கு ஒன்றுமில்லை'' என்று சொல்லி முடித்தார். நான் பதில் சொல்லாமல் என் தலைவிதியை நினைத்துக்கொண்டு எழுந்து ஒடி வந்துவிட்டேன்.

---




# ஔவையார்

(ஸ்ரீமதி. பண்டிதை—அசலாம்பிகை அம்மையார்.)

"ஊருடன் கூடிவாழ்" என்பது அடுத்த நீதி. இது நீ ஊரில் உள்ளவர்களுடன் சுபா சுபங்களில் கலந்துகொண்டு ஒற்றுமையாக வாழ்தல் வேண்டுமென்று கூறுவதாகும். இது இல்வாழ்வானுக்கு இன்றியமையாத நலம் பயப்பது. செல்வத்தின் பெருக்கினாலும் கல்வியின் சிறப்பினாலும் அதிகாரத்தின் வன்மையாலும் ஒவ்வோர் சமயம் (தன் சிறப்புக் கொவ்வாத) ஊரில் உள்ளவர்களுடன் சமமாகக் கூடிக் குலாவுவதா? என்கிற அகம்பாவம் ஏற்படுவதுமுண்டு. இது அறிவுடைமை யாகாது. கல்வியிலும் கேள்வியினாலும் எய்தும் சிறப்புக்கள் ஊருடன் அளவளாவி வாழாமையால் ஏற்படும் குறைகளை நீக்குதல் அரிது. கல்வியும் கேள்வியும் பிறர் வியக்கும்படி பேசுவது எழுதுவது இவைகளைப் பயனாகக் கொண்டிருக்கவில்லை. அவைகளின் உண்மைப்பயன் அறிவுடைமை தான். அறிவுடைமைக்கு அடையாளம்

"எவ்வ துறைவ துலகம் உலகத்தோ
டவ்வ துறைவ தறிவு."

என்பதே. பின்னும்,

"உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்."

என்ற குறட்பாவும் கல்வி கேள்விகள் மட்டில் அறிவுடைமையைக் காட்டா; உலகத்தோ டொட்ட ஒழுகும் தகுதியே அறிவுடைமை யென்பதை வலியுறுத்துகின்றது.

முதலில் ஊருடன் கலந்து அளவளா வுதலை முக்கிய கடமையாகக் கருதிப் பின்னர் நாடொப்பன செய்ய வல்லுனராவர் அவர்களே அதன் வளர்ச்சியாக உலகத்தோ டொட்ட ஒழுகும் பெரியாராவர். ஈண்டு உலக மென்பது தரைப் பரப்பையும் மலைப்பரப்பையும் நீர்ப்பரப்பையும் குறிப்ப தன்று. உலகின்கண் வாழும் மக்களையே குறிப்பதாகும். மக்களிலும் பெரியார் என்பதைச் சுட்டுவதாகவும் கொள்ளலாம்.

நிலப்பரப்பும் அதனதன் சீதோஷ்ணத்தை யறிந்து அதற்கேற்ப நடவாதாரைப் பிணிக்குள்ளாக்குதல் அநுபவம். அங்ஙனம் இருக்கப் பகுத்

தறிவுடைய மக்களினத்தை எவ்வாறு அசட்டை செய்ய முடியும்? ஊர் என்றதால் ஊரில் தீமைபயக்கும் குழுவினர் உளராயின் அவர்களிடம் கூடிக் குலாவுதலுக்கும் பொருந்து மென்று உட்கொள்ளுவது பிழை. ஒரு ஊரில் வாழுமாந்தர் அனைவரும் நன்மை தீமைகளில் ஒருவர்க்கொருவர் அவ்வவர் தரத்திற்கேற்பக் கலந்துகொள்ளல் அவசியம் என்பதே இந் நீதி யின் நோக்கம். தனது சொந்த குடும்பத்தில் பிணக்குற்று நடப்பவன்கூட ஊராருடன் கூடாமல் ஒதுங்கி நிற்க ஒருபோதும் முடியாது. அப்படி நிற் பின் பெரும் வெள்ளத்தில் பற்றுக்கோடொன்று மின்றி எதிர்த்து நிற்ப வன் நிலைமையையே அவன் அடைவான். குடிப் பிறந்தாரிடம் தீராப்பகை கொண்ட துரியோதனனும் தன் கீழுள்ள நாட்டினரிடமும் சூழ்ந்துள்ள பிரஜைகளிடமும் ஒற்றுமையாய்க் கலந்து அரசு செலுத்தியதாகச் சஞ் சயன் கூறுகிறான். அங்ஙனம் நடவாமல் பாண்டவரிடம் காட்டிய கொடு மையை எல்லாரிடமும் காட்டி யிருந்தால் அவனுக்குப் பல அக் குரோணி சேனைகள் படைத்துணையாக வந்திருப்பார்களோ? யாசகர் உள்பட அனை வரையும் சந்தோஷப்படுத்துவதில் வல்லவனாக இருந்த காரணமே அவ னது அடாத கொடுஞ் செயல்களுக்குப் பின்பும் பலகாலம் அரச போகத் திற் சுகித்தான். ஊருடன் கூடிவாழ அறியாதவனுக்கு மனதில் இன்ப மும் ஆறுதலும் ஏற்படவே முடியாது. ஊருடன் கூடி வாழ்தலென்பது ஒரு வித கூட்டுறவு இயக்கத்தின் அடிப்படையே என்பது ஊன்றி நோக்கு வோர்க்குப் புலப்படும். ஒருவர் சமையத்திற்கு ஒருவர் உதவி செய்து தமக்குற்ற அமையம் அன்னார் உதவியை ஏற்பதே கூடி வாழ்தல் என்பதன் குறிக்கோள். இதன் வளர்ச்சி முறையே பொதுவுடமைக் கொள்கையு மாகும். சுபா சுபங்களில் ஒருவர்க்கேற்படும் பொறுப்பை அவர் குலத் தைச் சார்ந்த நெருங்கிய உறவினர் வீதாசாரம் வகுத்து மகிழ்ச்சிக்கொடை யாக உதவிப் பகிர்ந்துகொண்டு வந்த வழக்கமும் பண்டைக்கால மக்க ளிடம் பரிணமித் திருந்தது. அதனால் தனக்கேற்படும் செலவு பெரிதென மலைத்தலுக் கிடமின்றி பெரிய காரியங்களையும் செய்ய முடிந்தது. ஒருவ ரின் பொறுப்பு பிறருக்கில்லை யென்னும் உணர்ச்சி ஏற்பட்டதி லிருந்தே வறுமை நம் நாட்டில் குடியேறி விட்டது. இதுவுமன்றி ஆலய நிர்வாகம், குருமாரை ஆதரிப்பது, இரப்போர்க்களைக் காப்பது, நீர்நிலைகளை நல்ல நிலைமையில் பராமரிப்பது முதலிய பற்பல பொதுக்காரியங்களையும் சுபா சுபங்களில் வசூலாகும் பணத்தாலும் கிராம சபைகளால் விதிக்கப்படும் அப ராதத் தொகையாலும் நன்கு கவனித்து நடத்தப்பட்டு வந்ததாகக் காண் கிறோம், ஊரில் ஒற்றுமையின்றி மூன்றுவது பேர்வழிகளாய அரசாங்க உத் தியோகஸ்தர்களிடம் சென்று பரிகாரம் தேடுவது நாகரீகமென்று எண்ணத் தொடங்கிய காலமே இந்தியரின் கண்ணியமும், செல்வமும் உரிமையும் வீழ்ச்சியுற்றதென்பது முழு உண்மை. கிராம விளைபொருள்கள் பலவும் அக் காலம் ஒருவர்க்கொருவர் பரஸ்பரம் பண்டமாற்று முறையாலும் சீராகச் செழிப்புற்றிருந்தது. நாணய பரிவர்த்தனை நெடுநாட்களுக்குப் பிறகே இடையில் ஏற்பட்டுக் கிராம ஒற்றுமையைக் குலைத்து விட்டதாகக் கூறு வது குற்றமாகாது. திருவிளையாடற் புராணத்திலும் கடற்கரை வாசிக ளான செம்படவப் பெண்கள் தம்பாலுள்ள முத்துக்களை நாழி என்னும் அளவு கருவியால் அளந்து கொடுத்து மருதநிலத்தாரிடம் உள்ள உணவுப் பொருள்களை வாங்கியதாகக் கூறப்படுகிறது. இவ்வித முறை மாறியதிலிரு

ந்தோணய மதிப்பும் தேவையும் அதிகரித்தது. அதன் பயனகவே திருட்டு மோசம் முதலியன தோன்றின போலும். ஊரார் கட்டளைகளுக்குக் கீழ்ப் படியாமல் ஒருவர் இருப்பரேல் அவர்களிடம் நீர் வழங்கல், நெருப்பு வழங்கல், வண்ணன், நாவிதன் பணி முதலியவைகள் பொதுச்சபைகளால் மறுக்கப்படும். இரும்புக்கம்பிகளாலும் கற்கோட்டை யொத்த திண் சுவர்களாலும் ஆகிய சிறையைத் தகர்த்து வெளிவரக்கூடிய மல்லனும் கிராமத்தில் விதிக்கும் மேலே சுட்டிய தண்டனைகளை மீற முடியாது. படிகட்டாமலும், வழக்கறிஞர்களின் சட்டைப் பைகளை நிரப்பாமலும் ஊரைவிட்டுச் செல்லாமலும் சாப்பாட்டுக்கடைகள் என்னும் அஞசார விடுதிகளில் நுழையாமலும் விவகாரம் பைசலாகி விடும். கந்தகக்குச்சிகள் ஏற்பட்ட பிறகுகூட நெருப்புண்டு பண்ணப் பெரும்பாலும் கிராமப்பெண்கள் கணப்பு என்னும் சாதனத்தையே கையாண்டு வந்தனர். மண்ணெண்ணெ வந்தபிறகுதான் கணப்பு அணைந்தது. எதற்காகவும் ஒருவரை நாடவேண்டியதில்லையென்னும் உணர்ச்சி கால் கொண்டது. ஆண் மக்களைவிடப் பெண்மக்களும் ஊருடன் கூட்டுறவு முறையில் வாழ்வு நடத்த அதிக சந்தர்ப்பங்கள் இருந்தன. சுமைதாங்கி முதலிய பொதுவான பரோபகாரச் செயல்களும் அத்தகைய ஊர் ஒன்றுபட்டு வாழ்ந்த காலத்தில்தான் எழுப்பப்பட்டன. சுயநலவாதிகளாய் அவரவர்கள் நலத்தையே அவரவர்கள் பெரிதெனப் பாராட்டியதன் பயனகவே இந்தியநாட்டின் அறங்கள் அழிந்தன. அதற்குரிய எண்ணங்களும் மறைந்தன. இத்துணைப் பெரிய கேடுகளைத் தடுக்கவே மூதாட்டியார் ஊருடன் கூடி வாழும்படி நமக்குப் போதித்துள்ளார். ஒருவருடனும் கூடாமல் உண்டு உடுத்து உலவுவது ஒரு வாழ்வாகாது. ஈரம் வற்றிய மரம்போல் தாழ்வேயாகும். அது குறித்தே நல்வாழ்வு என்பது ஒன்று படுதலிஞல் முகிழ்ப்பதென்று தோன்றும்படி ஊருடன் கூடி வாழ் என்றருளினர். நமது நவீன வரகவியாகிய பாரதியாரும் 'ஒன்றுபட்டாலுண்டுவாழ்வு' என்று வலியுறுத்தினர்.

ஊர்க்கட்டுப்பாடு ஒழுக்கத்தை மறைமுகமாக ஓம்புவதாகும். ஊரிலுள்ளார் நன்மதிப்புக்காகத் தம் தவருன செயல்களைக் கைவிடுவோர் பலப்பலர். ஊரார் அலருக்கு அஞ்சும் குணம் ஆண்மககளிலும் பெண்களுக்கே அதிகம். உலைவாயை மூடினலும் ஊர் வாயை மூட முடியாதென எல்லா மாதரும் சொல்வது பிரசித்தம். ஊருடன் கூடிக் கலந்துவாழ முடியாதவன் விலங்குகள் வாழும் வனத்திடை வசிப்பனுக்கே ஒப்பாவான். பிராட்டியார் அசோகவனத்தில் தனது சொல்லொணுத் துயரினல் மனமுடைந்து வருந்தியதாகக் காணப்படும் செய்யுள்களில்,

"வருந்தலின் மானமா வனைய மாட்சியர்
பெருந்தவ மடந்தையர் முன்பு பேதையேன்
கருந்தனி முகிலினைப் பிரிந்து கள்வர்ஊர்
இருந்தவள் இவள் என ஏச நிற்பனே?"

என ஊர் அலர்தூற்றும் என்பதை யெண்ணிக் கலங்குவதாகக் கம்பநாடர் காட்டுகிறுர்.

"இனி "வெட்டெனப் பேசேல்" என்பது அடுத்த நீதி. நீ ஒருவரோடும் கத்தி வெட்டைப்போல் கடினமாகப் பேசாதே என்பது இதன்

பொருள். மதிப்பையும், காரியசித்தியையும் விரும்பும் ஒவ்வொருவருக்கும் இருக்கவேண்டிய உயர்ந்த தன்மையாகும். உலகத்தையாளும் சக்கிரவர்த்தியும் காட்சிக் கெளியனுகவும், கடுஞ்சொல் இல்லாதவனுகவும் இருக்க வேண்டியது அவசியமென்னில் மற்றையோர் எவ்விதம் கடுமையாகப் பேச முடியும்? நமது பாட்டியார்க்கு இதில் அதிக கவன முண்டென்பதைப் பிறிதோரிடத்தில்,

> "வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம் வேழத்திற்
> பட்டுருவும் கோல் பஞ்சிற்பாயாது—நெட்டிருப்புப்
> பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
> வேருக்கு நெக்கு விடும்."

என்ற அழகான வெண்பாவினுல் உதாரணத்தோடு உணர்த்தி யுள்ளார். இதன் கருத்து வருமாறு:—வன்மை எப்போதும் மென்மையை வெல்ல மாட்டாது. மதங்கொண்ட யானையின் கடினமான உடலில் தைத்து ஊடுருவிப்பாய்ந்து துளைத்திடவல்ல ஒரு வீரன் விடும் அம்பானது மென்மையான பஞ்சுப் பொதியில் பாய முடியாது.

இரும்பினுல் வடிக்கப்பட்ட பார் என்று வழங்கும் (கடப்பாரை) ஆயுதத்தினுலும் உடைக்க முடியாத கருங்கற் பாறைகளை பசுமையும் மென்மையுமுள்ள மரத்தின் சல்லி வேர்கள் பிளந்து கொண்டு இடம் பெற்று வெளிவரும். இதுபோலவே நயமாகப் பேசும் மொழிகளால் காரியம் சித்திப்பது போல, பயமுறுத்துவதால் நன்மை விளையாதது மட்டில் அன்றித் தீமையும் விளையும். யாழ் வல்லோன் அதனை வாசிப்பதனுல் எவராலும் அடக்க முடியாத மதம் கொண்ட யானை அடங்கிக் கட்ட எளிதாகும் எனச் சரிதவரலாற்றினுல் அறிகின்ருேம். பிராணிகளுக்குள் மிகக் குரூரமுள்ள நஞ்சுடைய நாகமும் இன்னிசை கேட்டுக் கரந்துறை நீங்கி வெளிவந்து அவ் விசைக் குரியோனுகிய பிடாரன் வசப்படுகின்றது. எல்லா மொழிகளிலும் மென்மை வேண்டப் படுமாயினும் மென்மையி னுயர்வையும் வன்மையின் தாழ்வினையும் தமிழ்மொழி வழக்கைச் செப்பஞ் செய்த முன்னேர் மொழிகளின் அமைப்பிலேயே பொருத்தி வைத்தனர். இச் சிறப்பு வேறு எம் மொழி வழக்கிலும் காணப்படாத ஓர் தனிச் சிறப்பேயாகும். தமிழ் என்னு மொழியே மிகச் சாந்தமான ஒலியை அளிக்கிறது. வல்லினம், மெல்லினம, இடையினம் ஆகிய மூன்று பிரிவுகளி லிருந்தும் அப் பிரிவுகளிலும் மிக மெல்லோசைகளை நல்கும் மூவெழுத்துக்களால் யாக்கப் பட்டிருப்பதை ஊன்றி நோக்கின் மிக இன்பம் விளைக்கும் வல்லினமாகிய கசடதபற என்ற ஆறெழுத்துக் களிலேயே மிக்க வல்லோசையை வழங்குவது ட, ற ஆகிய இரண்டெழுத்துக்களேயாகும். இந்தக் காரணம் பற்றி அவையிரண்டும் எம் மொழிக்கும் முதல் எழுத்தாக ஆதியிலேயே அமைத்தாரில்லை. கோபத்தால் கொதித்து மாந்தர் மொழியும் சொற்களிலேயே ட, ற இடம் பெறுகின்றன. வல்லோசையே தமோ குணத்தைச் சுட்டுவதென்பது இதனுல் விளங்கும். அதிக கோபத்தை வெளியிட வேண்டியதற்கு மேலே சொல்லிய எழுத்துக்களையே இரட்டிப்பது அவசியமாகிறது.

உதாரணமாக வாலிவதைப் படலத்தில் அவனை அவன் எதிர் நிற்கவும் வல்லமை யில்லாத அவன் தம்பி சுக்ரீவன் வலிய அறை கூவி (இராம சரி

யம் புறத்தே யிருப்பதால்)ப் போருக் கழைக் கின்றான். அது பஞ்சணையில் படுத்திருந்த தமையன் காதில் விழுகிறது. அதனால் அவன் திடுக்கிட்டு ரோஷமும் கோபமும் உடையவனாகிய தன்மையை உணர்த்தவந்த கவி யரசர்,

"இடித்துரப்பிவந்து போர் எதிர்த்தியேல் அடர்ப்பன் என்
றடித்தலங்கள் கொட்டிவாய் மடித்தடுத் தலங்குதோள்
புடைத்துநின் றுளைத்தபூசல்,புக்கதென்ப மிக்கிடம்
துடிப்ப அங்குறங்குவாலி திண்செவித் தொளைக்கணே"

எனவும், சடாயு உயிர் நீத்த படலத்தில், ஜடாயு "வானுள்பவன் மைந்தன் வளைத்த விலான் தானே வரினின்று தடுப்பரிதால்"—எனப் புகலக் கேட்டதும், பொங்கிய சினத்தனான தசமுகன் தன்மையை,

கேட்டா னிருதர்க்கிறை கேழ்கிளர்தன்
வாட்டாரை நெருப்புக வாய்மடியா
ஒட்டாயினி நீயுரை செய்குனரைக்
காட்டாய் கடிதென்று கனன்றுரையா"

என்ற செய்யுளாலும் பொருத்தமுறக் காட்டுகின்றார். எல்லா நூல்களிலும் இது போன்ற உதாரணங்கள் தமிழ்க் கவிதைகளில் உண்டு. அவ்வாறே சத்துவகுணம் தலை சிறக்கத் தீட்டிய இடங்களில் இடையின எழுத்துக்களே மிகுதியாக விரவி நிற்பதாகக் கீழே கண்ட உதாரணத்தினால் உணரலாம். நாகபாசப் படலத்தில் கருடாழ்வார்

"எழுவா யெவர்க்கு முதலாகி யீறே
டிடையாகி யெங்கு முளையாய்
வழுவாதவர்க்கும் வரமீய வல்லை
அவரால் வரங்கள் பெறுவாய்
தொழுவா யுணர்ச்சி தொடா ராததன்மை
யுருவாய் மறைந்து துயரால்
அழுவா யொருத்த னுளைபோலும்
ஆர்இவ் வதிரேக மாயை யறிவார்"

என்று துதித்ததாக உள்ள செய்யுளே போதிய சான்றாகும். ஆண்மையும் அறிவும் குறைந்து மோகத்தால் இருண்ட பேதமையுடைமையை வெளியிட நேருங்கால் அதன் தன்மைக்கேற்ப மெல்லின எழுத்துக்களே மிகுதியும் விரவிவரும் மொழிகளை உபயோகித்தலும் இத் தமிழ் மொழியிலேயே காண்டலெளிது. இதற்குதாரணமாக மாயாஜனகப் படலத்தில் பிராட்டியை நோக்கி,

"வஞ்சனேன் எனக்கு நானே மாதரார் வடிவுகொண்ட
நஞ்சுதோய் அமுதம் உண்பான் நச்சினேன் நாளுந்தேய்ந்து
நெஞ்சு நேரான தும்மை நினைப்புவிட் டாவிநீக்க
அஞ்சினேன் அடியனேன் உம்மடைக்கலம் அமுதின் வந்தீர்"

என்ற செய்யுளை மட்டில் நோக்குவோமாக.

நவக்கிரகங்களில் கூட வாக்குஸ்தானத்தில் பாபிகள் இருந்து சுபர் பார்வையின்றேல் துடுக்காய்ப் பேசும் இயற்கை இயல்பாகும். ஔவையாரும் வெட்டெனை என்று வல்லோசையுள்ள டகரம் இரட்டித்து வரும் ஒரு மொழியாலேயே ஈண்டு உரைத்திருப்பது சிந்தித்து மகிழத்தக்கது.

வெட்டெனப் பேசுவோனை எவரும் அணுகி உரையாட அஞ்சுவர். விரும்புவோரும் இலராவர். பலராலும் வெறுக்கப்படும் ஒரு நிலை அரசனுக் கிருந்தாலும் காரிய சாதகம் கிட்டாது. அபாயமே தருணம் பார்த்து நிற்கும். இவ்வாறு பேசும் இயல்பு பொதுவாகக் கோபம் மீறியபோதே தோன்றுமாதலால், நீதி நூலாசிரியர்,

"சினமுளோன் மனைமைந்தர்கள் இவன் வெளிசெல்லும்
தினமெலாம் பெருவிழவு கொண்டாடுவர் செல்லா
தினையன்தங்கு நாள்இழவு கொண்டாடுவர் இறப்பின்
மனையிலோர் பெருநல்விழா வந்தெென மகிழ்வார்"

என்று கூசாது கூறினர்:

"இனிய வுளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய் கவர்ந்தற்று"

என்றருளினர் வள்ளுவனாரும்.

தவிர வெட்டெனப் பேசுதலினால் பேசுவோரின் தண்மையான இருதயம் வெம்மையுற்றுக் கெடுவதுடனில்லாது கேட்போனது உள்ளமும் துணுக்குற்று உரம்குன்றி எவ்வாறு மெலிவுறும் என்பதையும் சிந்தித்தல் வேண்டும். இதனை விளக்க,

"தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினாற் சுட்ட வடு"

என்றெழுந்த பொன்னுரை யொன்றே போதியதாகும்.

இவைகளுமன்றி நாம் வல்லோசை தோன்ற வெட்டெனப் பேசுங்கால் நமது சொற்களோடு வெளிவரும் உயிர்ப்பில் எண்ணிறந்த விஷக்கிருமிகள் கிளைத்து நெருங்கி நிற்போரின் உடலிற் பரவி நலத்தைக் குறைக்கின்றதென சுவாமி விவேகாநந்தரே கூறியுள்ளார்.

பல்லாயிரக் கணக்கில் குழுமி நிற்கும் கூட்டத்தில் உரத்த குரலிற் பேசவேண்டியிருந்தது. பேசிய விஷயங்கள் மிகச் சிறந்தவைகளே. ஆயினும் உரத்த குரலில் பேசுவதனாலேயே வாக்கால் வெளிவரும் வாயுக்களில் தீய கிருமிகள் அதிகம் தோன்றிப் பரவுகின்றன. இதனால் நன்மையைச் செய்கையிலும் தீமை விளைகின்றதென்று கூறி யிரக்கமுற்றாராம். உரத்த குரலுக்கே தீங்கு விளையுமாயின் உள்ளூறக் கனன்று வெளிவரும் துஷ்ட வார்த்தைகளின் விளைவு எவ்வளவு கொடியதெனவுணர்தல் வேண்டும்? இதுபோன்ற எத்தனையோ தீமைகளை விளக்க வேண்டி அன்னையார் இந் நீதியை வகுத்தனர் என்று கருதல் வேண்டும்.

---

# விடுதலை

ஸ்ரீ. நாராயணன்.

கௌரி அவள் பணக்காரப் பெற்றோருக்கு ஒரே செல்வப் புதல்வி. அவளுக்கு மணமாகும் பொழுது அவள் கணவன் குடும்பத்தார் நல்ல ஸ்திதியி லிருந்தார்கள். கால வித்தியாசத்தால் கை நொடித்துப் போய் விட்டார்கள். அவள் கணவன் பரேஷ் சிரமப்பட்டு பி. எல். பட்டம் பெற்று ஒரு வக்கீலானான். பரேஷ் படித்துக் கொண்டிருக்கும் பொழுது கௌரி தன் சொந்த வீட்டிலேயே இருந்தாள். பரேஷ் வக்கீல் பிராக்டீஸ் பண்ணத் துடங்கிய உடன் தான் தன் கணவன் வீட்டிற்கு வந்து சேர்ந்தாள். அவள் பெற்றோருக்கு கௌரியை பரேஷிடம் அனுப்ப மனமே கிடையாது. கௌரியின் பிடிவாதத்தின் பேரில் கௌரியை பரேஷிடம் அனுப்பினார்கள்.

பரேஷ் ஒரு தினுசான பேர்வழி. கௌரியை ஒரு அபாக்கிய தேவதை என்று எண்ணி அவளை வெறுத்து வந்தான். இதற்குக் காரணம், தன் மணத்திற்கு பின்பு தன் குடும்பம் குலைந்ததுதான். கௌரி உத்தமிதான். ஆனாலும் அவனுக்கு அவள் மீது சந்தேகம் ஏற்பட்டு விட்டது. அவளுக்கு சரியான போஷணை கிடையாது. பரேஷ் சில நாள் கோர்ட்டுக்கு பாதி வழி போய்விட்டு மனதில் எதையாவது நினைத்துக் கொண்டு வீட்டிற்கு வந்து விடுவான். சில சமயம் கோர்ட்டு கலையுமுன்னமேயே வந்து விடுவான். காரணமில்லாமல் வேலை யாட்களை வேலையினின்றும் நிறுத்தி விடுவான். எந்த வேலை யாள் கௌரிக்கு ஒத்தாசையாய் இருக்கிறானே அவனையே முதன் முதல் நிறுத்தி விடுவான். இந்த செய்கைகள் கௌரிக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. தன் கணவன் பெரிய சந்தேகி என்று தெரிந்து கொண்டாள். நாட்கள் செல்லச் செல்ல பரேஷ் கௌரியை ரொம்ப கஷ்டப் படுத்தலானான்.

வீட்டு வேலைக்காரியிடம் இரகசியமாக கௌரியின் நடத்தையைப் பற்றி விசாரிக்கலானான். இதுவும் கௌரியின் காதில் விழுந்தது. கௌரி கூட்டில் அடைபட்ட பெண் சிங்கம்போல் தன் கோபத்தை யெல்லாம் அடக்கிக் கொண்டிருந்தாள். பிறகு நேருக்கு நேரே கௌரியை கண்டிக்கவும் தொடங்கி விட்டான் பரேஷ். பொறாமைத் தீயும் சந்தேகத் தீயும் அவன் உள்ளத்தில் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்தது. கௌரியிடமோ பொறுமை என்ற பொக்கிஷம் அதிகரித்துக் கொண்டு வந்தது. இவ்வாறாக இரு வருஷம் அகன்றது. கௌரி தன் தாய் வீட்டிற்கு தான் சுகமாக கணவனுடன் இருந்து வருவதாக கடிதம் எழுதுவாளே யொழிய தன் கணவனை நிந்தித்து ஒருபொழுதும் எழுத மாட்டாள்.

மக்கட் பேறுமின்றி இல்லற வாழ்க்கையில் இன்பமொன்றும் காணுத கௌரி இல்லற வாழ்க்கையி னின்றும் தப்பித்துப் போக—ஏன்—விடுதலையடைய எண்ணினுள். அவ்வூரில் அச்சமயம் வந்திருந்த ஒரு இளம் சந்நியாசியிடம் சென்று அனுதினமும் கீதை உபந்நியாசம் கேட்கத் தொடங்கினுள். தபசி கௌரியின் குரு பக்திக்கும் அவளுக்கு கீதை உபந்நியாசத்தில் உள்ள அளவு கடந்த பிரேமைக்கும் வியந்தார். கௌரி கணவனிடம் அல்லல் படுவதை விட, குருவினிடம் அடிமையா யிருப்பது நல்லது என்று அவள் மனதிற்கு பட்டது.



பரமானந்தஸ்வாமி களங்க மில்லாதவர். நாஸ்திகரும் அவரைப் போற்றி வந்தார் என்ருல் அவரைப் பற்றி கூறுவது மிகையே. பரேஷ் மாத்திரம் அவர் மேல் ரொம்ப சந்தேகம் கொண்டிருந்தான். அவரை பெரிய ஆஷாடபூதி என்று எண்ணி வந்தான். கௌரி அங்கு அடிக்கடி போவதிலிருந்து அவருக்கும் அவளுக்கும் ஏதோ சம்பந்தம் உண்டு என்றும் எண்ணி வந்தான்.

ஒரு நாள் பரேஷிற்கு கோபம் தன்னை மீறி வந்தது. கௌரியிடம் சென்று பரமானந்தர் ஒரு பசுத் தோல் போர்த்த புலி யென்றும் கௌரியையும் பரமானந்தரையும் தாறுமாருக திட்டினுன். கௌரி தன் பொறுமையை யிழந்து விட்டாள். குருவையும் தன்னையும் தூஷிப்பதை அவளால் கேட்டுக் கொண்டு சும்மா இருக்க முடியவில்லை. என்று மில்லாமல் கௌரீ பாம்புபோல் சீறினுள். கண்கள் கோவைப்பழம் போல் சிவந்து விட்டது. ஒரு வார்த்தையும் வாயினின்றும் தெளிவாக வர மறுத்து விட்டது. தட்டுத் தடுமாறி "நான் எப்படிப் போனுல் உங்களுக்கென்ன" என்று சொல்லி விட்டாள். சொன்னதின் பின்பு தான் அதை நினைந்து கௌரி வருந்தினுள். பரேஷ் மறு வார்த்தை பேசாமல் கௌரியை வீட்டினுள் வைத்துப் பூட்டிக் கொண்டு கோர்ட்டுக்குப் போய் விட்டான்.

பரேஷின் இந்தச் செய்கை கௌரிக்கு மன அதிர்ச்சியை யுண்டாக்கி விட்டது. அவள் கொஞ்ச நஞ்சம் கணவன் என்ற மரியாதை வைத்திருந்ததும் பறந்தோடி விட்டது. எப்படியோ கதவைத் திறந்து வீட்டை விட்டு வெளியில் போய் விட்டாள்.

உச்சி வேளை. பரமானந்தஸ்வாமி தன் தனி அறையில் நிஷ்டையிலிருந்தார். மேகமில்லாத வானில் மின்னல் கொடி இளம் பிறைபோல் கௌரீ அவர் அறையில் நுழைந்தாள்.

ஸ்வாமி திடுக்கிட்டு "என்? எதற்கு வந்தாய்?" என்றார். கௌரி "என்னை காப்பாற்றுங்கள். அல்லல் பிடித்த இந்த குடும்பக்கடலி னின்றும் கரை யேற்றுங்கள். உங்களுக்கு தொண்டு செய்து காலத்தைக் கடத்த உத்தரவு கொடுங்கள்" என்று முறை யிட்டாள்.

பரமானந்தஸ்வாமி ஒரு வார்த்தையும் சொல்லாது அவளைக் கணவன் வீட்டிற்குப் போகச் சொன்னார்.

கோர்ட்டி லிருந்து வந்த பரேஷ் தன் வீடு திறந்திருந்தது கண்டு அதிசயப் பட்டான். "யார் வந்து கதவை திறந்தது?" என்று கௌரி யைக் கேட்டான்.

"ஒருவரும் வரவில்லை. நான்தான் என் குரு வீட்டிற்குப் போயிருந் தேன்."

"ஏன்? எதற்காக?"

"அது என் இஷ்டம்."

இத்துடன் அன்று அவர்கள் சம்பாஷணை முற்றுப் புள்ளி வைக்கப் பட்டது.

* * * *

பரேஷ் இப்பொழுது கௌரிக்கு காவல் வைத்திருந்தான். இவன் செய்கை ஊராருக்கு சொல்லாமல் சொல்லிக் காண்பித்தது. பரமா னந்தஸ்வாமிக்கும் பரேஷின் செய்கை எட்டிற்று. கௌரிக்காக வருந்தி னார். அன்றே அவ்விடத்தை விட்டு வேறிடம் போக முடிவுகட்டி விட் டார். நாளும் குறிப்பிடப் பட்டது.

பரமானந்தர் புறப்பட இருக்கும் நாளுக்கு முதல் நாள் கௌரிக்கு பரமானந்தரிட மிருந்து ஒரு ஓலை கிடைத்தது. அதில்:—



" குழந்தாய், கடவுளை நம்பினோர் கைவிடப் படார். முக்தி கொடுக்கு முன்பு 'அவன்' பக்தர் களை பல சோதனைக் குள் ளாக்குவான். கடவுளடி மையான உன்னை 'அவன்' உதவியால் காப்பாற்றத் துணிகிறேன். நீ என் னுடன் வர மனமிருந் தால் நாளை உன் தோட் டத்துக் குளத்தங் கரை யண்டை மத்தியானம் 2 மணிக்கு சந்திப்பாய்" என்றிருந்தது.

கடிதத்தை கௌரி பன்முறை படித்தாள். அதை கிழித்தெறியாமல் தன் கூந்தலில் மறைத்து வைத்துக் கொண்டாள். கடிதம் படித்ததிலிருந்து அவள் மூளை ஒரு வழியிலும் செல்லாமல் தத்தளித்துக் கொண்டிருந்தது.

மறுநாள் காலை மணி பத்திருக்கும். கூந்தலில் வைத்திருந்த கடிதத்தைக் காணவில்லை. ஸ்நான அறையில் போய் பரிசோதித்தாள். படுக்கை யறையை நன்றாக சுற்றிப் பார்த்தாள். ஒரு இடத்திலும் காணப்படவில்லை. தன் கணவன் கையில் சிக்கி விட்டதோ என்று அஞ்சினாள். பரேஷ் கையில் கிடைத்திருந்தால் அவன் என்ன செய்யத் துணிவான் என்பதையும் அவன் கோபத்தையும் ஆத்திரத்தையும் பற்றி அளவிடலானாள்.

வேகமாகத் தன் கணவன் அறைக்கு ஓடினாள்.

ஹா ! என்ன கோரம். பரேஷ் தரையில் பிணம்போல் கிடந்தான். வாயிலிருந்து நுரை வெளிப்பட்டுக் கிடந்தது. அவன் இடது கையில் ஒரு காகிதம் கசக்கி வைத்திருந்தது. கௌரி காகிதத்தை எடுத்தாள். டாக்டருக்கு ஆள் அனுப்பினாள்.



டாக்டர் வருவதற்கு முன்பே அவன் ஆவி அவனுடலை விட்டு பிரிந்துவிட்டது.

அன்றைய தினம் பரேஷுக்கு அயலூரில் அவசர வேலை யிருந்தது. இதை யறிந்தே பரமானந்தர் கௌரியுடன் ஊரை விட்டுப் போக நினைத்தது.

மணி 2. பரேஷின் ஆவி பிரிந்த சமயம் குரு திருடன்போல் குளக் கரையில் வந்து நின்று கொண்டிருந்ததை, தோட்டத்து ஜன்னல் வழியாய் கௌரி நோக்கினாள். கௌரிக்கு இப்பொழுது குருவைக் காணப் பிடிக்கவில்லை. பற்பல எண்ணங்கள் அவள் மனதைக் கலக்கிக் கொண்டிருந்தது.

குரு "கௌரி" என்றழைத்தார். அவருக்கு என்ன தெரியும் உள் நடக்கும் சங்கதி.

"இதோ வந்து விட்டேன்" என்றாள் கௌரி.

* * *

பரேஷின் எதிர்பாரா மரணத்தைக் கேட்ட அவன் நண்பர்கள் பரேஷின் வீட்டிற்கு வந்து பார்க்க




(ஆசிரியர் - வி. சங்கரய்யர்)

1. தேகபுஷ்டி, ரத்தசுத்தி முதலியவைகளுக்கு

## பிண்டாஸவம்

16-பலம் அரிசித்திப்பிலி, 16-பலம் தானிக்காய்த்தோடு இவ்விரண்டையும் 1 படி தண்ணீரில் நன்ருக அரைத்துக் கலக்கி 16-பலம் வெல்லம் சேர்த்து 40-நாட்கள் நெற்களஞ்சியத்தில் நெல்லினுள் வைத்து நன்ருக மூடி வைத்திருந்து எடுத்து தினமும் காலை மாலை ஒரு அவுன்ஸ் வீதம் சாப்பிட்டு வரவும்; பத்தியமில்லை. சகலவித மேகரோகமும் தீரும்.

2. குஷ்டம், காமாலை, மூத்திரரோகம், குன்மம், கிருகணி, பாண்டு, அரிசஸ், மூலரோகம் முதலியவைகளுக்கு

## பீஜகாஸவம்

மாதுளைப்பழ விதை 1-படி, திருபலை மூன்றுமாக 1-பலம், திராக்ஷைப் பழம் 5-பலம், கொம்பரக்கு 7-பலம், இவைகளை 16-படி தண்ணீரில் போட்டு 4 படியாக காய்ச்சி வடிகட்டி 100-பலம் ஜீனி, 1-படி தேன் விட்டு, சுக்கு, மிளகு, விளாமிச்சவேர், அதிமதுரம், கோஷ்டம், வகைக்கு 1-பலம் வீதம், இடித்து வஸ்திரகாயம் செய்த பொடிபோட்டு நெய் பூசின மண்பாண்டத்தில் விட்டு 15-நாட்கள் நெற்களஞ்சியத்தில் தான்ய புடம் வைத்து பிறகு காலை மாலை ஒரு அவுன்ஸ் வீதம் சாப்பிட்டு வரவும்.

3. தாது க்ஷயம், காஸம், தேகபுஷ்டி, தேகபலம், காமவிருத்தி, புத்திரப் பிரதம் இவைகளுக்கு

## பிருங்கராஜாஸவம்

16-படி கரிப்பான் சாறு, 200-பலம் வெல்லம், 8-பலம் கடுக்காய்த் தூள் நெய் தேய்த்த பாண்டத்தில் போட்டு சீலமண் செய்து 15-நாட்கள் வைத்திருந்த பிறகு எடுத்து திப்பிலி, ஜாதிக்காய், கிராம்பு, ஏலம், சிறு

---

அங்கு பரேஷின் பிணத்தின் பக்கலில் கௌரியின் சவ சரீரமும் அலங்கோலமாக கிடந்தது. பக்கத்தில் ஒரு விஷப்புட்டி காலியாய் தரையில் பாதி உடைந்தும் உடையாமலும் கிடந்தது. ஒரு கர்மக் கிரியைக்கு வந்த நண்பர்கள் இரண்டு கர்மக் கிரியைகளையும் செய்து முடிக்க வேண்டியிருந்தது. வந்தவர்கள் யாவரும் கௌரியின் 'சதி'யைப் பற்றி மெச்சினர்கள். அவள் விடுதலைக்காகப் போராடி விடுதலை யடைந்தது யாருக்குத் தெரியும்? (கவி தாகூர் கதையைத் தழுவியது.)

நாகப்பூ, ஜாதிபத்திரி வகைக்கு 2-பலம் வீதம் பொடி செய்து சேர்த்து, காலை மாலை ஒரு அவுன்ஸ் வீதம் சாப்பிடவும்.

4. இருமல், க்ஷயம், வாயுக்குத்து, சுவாசம் விட முடியாமல் அடிக்கடி கஷ்டப்படுவது, கண்டமாலை, நெஞ்சுவலி முதலியவைகளுக்கு

## மாசிகாஸவம்

50-பலம் புளிச்சக்கீரையை 16-படி தண்ணீர் விட்டு காய்ச்சி 4-படியாக வற்றவைத்து வடிகட்டி பிறகு 200-பலம் வெல்லம் போட்டு நெய் பூசிய மண்பாண்டத்தில் விட்டு அதில் வால்மிளகு, திப்பிலி, கருஞ்சீரகம், ஏலம், சிறுநாகப்பூ, மிளகு, ஜாதிபத்திரி, வகைக்கு 1-பலம் வீதம் பொடி செய்து போட்டு சீலமண் செய்து ஒருமாதம் வைத்திருந்து பிறகு தினம் ஒரு அவுன்ஸ் வீதம் சாப்பிடவும்.

5. வயிற்றுவலி, குன்மம் முதலியவைகளுக்கு

## ஹிங்குவாதி சூரணம்

காயம் 1-பலம், வசம்பு 2-பலம், உப்பு 3-பலம், சுக்கு 4-பலம், ஓமம் 5-பலம், கடுக்காய்த்தூள் 6-பலம், கொத்தமல்லி 7-பலம், கோஷ்டம் 8-பலம், சிவதை 9-பலம் இவைகளை இடித்துப் பொடிசெய்து வஸ்திரகாயம் செய்து வெந்நீரில் திருகடிப் பிரமாணம் போட்டு சாப்பிட்டு வர சகலவித குன்மமும் தீரும்.

6. அஜீரணம், புளிச்ச ஏப்பம் முதலியவைகளுக்கு

## வைச்வாநர சூரணம்

இந்துப்பு 1-பலம், சீரகம் 2-பலம், ஓமம் 3-பலம், திப்பிலி 4-பலம், சுக்கு 5-பலம், கடுககாய்தூள் 6-பலம் இவைகளை இடித்து பொடி செய்து வஸ்திரகாயம் செய்து திருகடிப் பிரமாணம் வெந்நீரில் போட்டு சாப்பிடவும்.

## 7. தாம்பூல மாத்திரை

கிராம்பு, மாச்சக்காய், ஜாதிக்காய், பத்திரி, வால்மிளகு, காசிக்கட்டி, கத்தக்காம்பு, பெப்பர்மிண்டு உப்பு இவைகளைச் சமம் சேர்த்து தூள் செய்து கோரோஜனை, குங்குமப்பூ சேர்த்து, பன்னீர் விட்டரைத்து சிறு பயறு அளவில் மாத்திரை செய்யவும். இதைத் தாம்பூலத்துடன் உபயோகிக்கவும்.

## 8. பற்பொடி

வசம்பு, ஏலம், கிராம்பு, ஜாதிக்காய், பத்திரி, பெப்பர்மிண்டு உப்பு, சூடம், மிளகு இவைகள் சமம், கருவேலம் பட்டை, பிரஞ்சு சாக்கு சேர்த்து இடித்து வைத்துக் கொள்ளவும். பல் உறுதிபடும், பல் வலி தீரும், பல் புழு நீங்கும்.

## 9. ரண பிளாஸ்திரி

தேன் மெழுகு, சாம்பிராணி, நல்லெண்ணெய், போறிக் பவுடர், இவைகள் சமம் ஒன்று சேர்த்து உருக்கி உருட்டி வைத்துக் கொள்ளவும். சகல ரணங்களுக்கும் போடலாம்.

## 10. ஸுகந்த ஸ்நாநப்பொடி

மஞ்சள், கஸ்தூரி மஞ்சள், பூலாங்கிழங்கு, புழுக்கப்பட்டை, சந்தனம், சடாமாஞ்சி, பச்சிலை, விளாமிச்சவேர், வெட்டிவேர், வாயுவிளங்கம், கசகசா, கோரங்கிழங்கு, தவனம், மருக்கொழுந்து இவைகளை இடித்து வைத்துக் கொள்ளவும்.

## 11. ஜன்னிக்கு எண்ணெய்

ஒரு சேர் வேப்பெண்ணெயை இலுப்ப சட்டியில் ஊற்றி, 1 பலம் எருக்கின்பூ, 1 பலம் வெள்ளைப்பூண்டு, 1 விராகனிடை ஜாதிலிங்கம், இவைகளை தட்டிப் போட்டு நன்றாக சிவக்கும் வரை வறுக்கவும். இதை தலை முதல் கால்வரை தேய்க்கவும். பிதற்றல், புலம்பல் எல்லாம் தீரும்; ஜன்னியும் சுகமாகும்.

## 12. லிங்க சிந்தூரம்

சூடம் 1 பலம், சாம்பிராணி 1 பலம் இரண்டையும் இடித்து, 1 பலம் ஒரு கட்டி லிங்கத்தைப் பொதிந்து கொளுத்தி விடவும். ஆறின பிறகு இப்படியே மூன்று தரம் செய்து சீசாவில் வைத்துக் கொள்ளவும். வேளைக்கு 2 அல்லது 3 அரிசி யிடை தேனில் கொடுக்கவும். இஞ்சிச் சாற்றிலும் கொடுக்கலாம். ஜ்வரம், வாய்வு, வாதம் முதலியவை தீரும்.

## 13. சுக்குக் களி

சுக்கு, கண்ட திப்பிலி சமம், பசு மோர் விட்டு அரைத்து துணியில் கட்டி மோரில் வேகவைதது எடுத்து தேன் விட்டு பிசைந்து கொடுக்கவும். வயிற்று வலி, சீதம், வயிறு கடுப்பு முதலியவை தீரும்.

## 14. கீழ்வாய் நெல்லித் தைலம்

கீழ்வாய் நெல்லி ஸமூலம் எடுத்து மண்போக நன்றாக கழுவி உரலில் போட்டு இடித்து $\frac{1}{8}$ படி விளக்கெண்ணெய் விட்டு காய்ச்சி வடிகட்டி சீசாவில் வைத்துக் கொள்ளவும். இரவு படுக்கு முன் ஒரு சொட்டு வீதம் கண்ணில் விட சகல வித நேத்திர ரோகமும் தீரும்.

15: க்ஷயம், காஸம், சுவாசம், அருசி, அஜீரணம், வாந்தி, நெஞ்சுவலி, ஜ்வரம், அதிசாரம் இவைகளுக்கு

## தாளீசபத்திரி சூரணம்

தாளீசபத்திரி 1-பலம், மிளகு 2-பலம், சுக்கு 3-பலம், திப்பிலி 4-பலம், ஏலம் $\frac{1}{2}$-பலம், கிராம்பு $\frac{1}{2}$-பலம், ஜீனி 8-பலம் இவைகளை இடித்து வஸ்திர காயம் செய்து ஜீனி சேர்த்து திரிகடிப் பிரமாணம் காலை மாலை சாப்பிடவும்.

16. குன்மம், உதர ரோகம், சூலை முதலியவைகளுக்கு

## ஹிங்கு திரிகுணதி லேகியம்.

காயம் 1-பலம், இந்துப்பு 3-பலம், விளக்கெண்ணெய் 9-பலம், உள்ளிச் சாறு 27-பலம் இவைகளை ஒன்று சேர்த்து கிண்டி பதமாகக் காய்ச்சிக் கொடுக்கவும்.




## 53. ஜனங்களின் நன்மைக்கான சட்டங்கள்.

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)



இங்கிலாந்தின் சரித்திரப் போக்கில் வால்போலினுடைய விஜயம் ஒரு புதிய சகாப்தத்தை யுண்டாக்கிய விபரம் நேயர்களறிவார்கள். அதுமுதல் சரித்திர முன்னணியில் அரசர்கள் பட்டம் பெறுவதோ, ஆட்சி முடிவதோ வருவதில்லை. ஆனால் மந்திரிகளும், அவர்களுடைய திட்டங்களும், செய்கைகளும்தான் முன்னணியில் இருக்கின்றன. உதாரணமாக, "க்ரென்வில் மந்திரி சபைக் காலம்," "இளைய பிட் மந்திரி காலம்," "கிளாட்ஸ்டன் மந்திரி காலம்", "கன்ஸர்வெடிவ் மந்திரி காலம்" என்றே கால வரையறை ஏற்படுகிறதே யல்லாது, அரசர்களின் பெயர்களை அல்லது காலங்களை யொட்டி கால வரையறை ஏற்படுகிறதில்லை. அதாவது தேர்தலுக்கு நின்று பொதுஜன வோட்டு ஆதரவைப் பெற்று, உருவான திட்டங்களுள்ள பெரும்பான்மைக் கக்ஷியில் சேர்ந்து, தேசநிர்வாகம் செய்ய ஏற்பட்டவர்களே சரித்திரத்தின் கவனத்திற் குரியவர்கள் என்பது ஏற்படுகிறது. அது பற்றியே கார்லைல் (Carlyle) என்ற பேரறிஞரும், "சரித்திரம் என்பது, அரசர்களையும், அவர்களுடைய அரண்மனைகளின் அழகுகளையும், ஆஸ்தானத்தின் வரிசைகளையும், உடைகளின் பள பளப்பையும், நடைகளின் உல்லாசங்களையும், மந்திரிகளையும் அவர்களின் மதிகளையும், யுத்தங்களின் வீர ப்ரதாபங்களையும், சமாதானங்களின் பலா பலன்களையும், வெற்றிச் சின்னங்களையும் பற்றி விவரிப்பது அல்ல! ஆனால், பொதுஜன சுகா சுகங்களையும், திட்டங்களின் தன்மைகளையும், உண்மை யுணர்ச்சிகளையும் கிளர்ச்சிகளையும் விவரிப்பதே உண்மைச் சரித்திரம் ஆகும். சரித்திரத்தின் காய்ந்த எலும்புகளுக்கு உயிர் நிலையுள்ளன வாகும்படியான விபரம் எழுதப் படவேண்டும்" என்று கூறி யிருக்கின்றார்.

சென்ற 2, 3 தொடர்ச்சிகளில் சொல்லப்பட்ட விஷயங்கள் விக்டோரியா மஹா ராணி காலத்தியவை சில, ஏழாவது எட்வர்ட் காலத்தியவை சில, ஐந்தாம் ஜார்ஜ் காலத்தியவை சில என்று குறிப்பிட்டுவிட்டு, வியாசத் தலைப்பில் சொல்லப் பட்டபடி எழுதுவோம். இளைய பிட்டும், பாக்ஸ் (Younger Pitt and Fox) தங்கள் ஜீவிய காலத்தில் அடிமைத் தனத்தை பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் ஒழித்துவிட பாடுபட்டனர். ஆனால் ஆஸ்டர் லிட்ஸ் அதிர்ச்சியில் 1807ல் பிட் இறந்தபிறகு, நெப்போலியனுடன் நடந்த போராட்ட அவசியத்தினால், உடனே "எல்லா மேதாவிகளடங்கிய மந்திரி சபை" (The ministry of all talents) ஏற்படுத்தப்பட்டது. யுத்த நிர்வாக அவசரத்தோடு அவசரமாய் "அடிமை வியாபாரம் (The slave trade) ஒழிக்கப் படவேண்டும்" என்று ஒரு சட்டம் 1807ல் செய்யப்

பட்டது. இந்த கொடூரமான பழககத்தை ஒழித்துவிட பிட் படாதபாடும் பட்டார். ஆனால் அவர் காலத்தில் பலிக்கவில்லை! ஆப்பிரிக்காவி லிருந்து, அயர்ந்து ஏமாந்திருக்கக் கூடிய நீக்ரோக்களைத் திடீரென பிடித்துக் கப்ப லேற்றி, அமெரிக்காவுக்குக் கொண்டு, மிருகங்களைச் செய்வதுபோல் விற்று அவர்களைச் சொல்லொணாக் கஷ்டங்களுக் குள்ளாக்கி, அதன் மூல மாய் பல ஆங்கில கனவான்கள் ஏராளமான செல்வ வான்கள் ஆயினர் என் பது சரித்திரத்தில் கண்ட ஒரு உண்மை. இந்தக் கொடிய மிருகத்தன மான "நரசோர வியாபாரம்" ஒழிந்தது. என்றாலும் அதனால் அவ் வனாதைகளுக் குண்டான கஷ்டங்கள் ஒழிய காலம் வெகுவாய்ச் சென்றது. (இதற்கு நிகராக நமது தரித்திர தேசத்திலும் இலங்கைக்கும், மலாய் நாடு களுக்கும், பிலிப்பைன் தீவுகளுக்கும், லேபர் கமிஷன்களும், கங்காணி முறைகளும் கையாளப் பட்டு, வருஷா வருஷம் கணக்கற்ற ஆண் பெண் கள் நாடு கடந்து வயிறு பிழைக்கச் சென்று, 'தமிழர்கள்' என்றால் கூலிகள் என்ற பெயரையும் சம்பாதித்துக் கொடுத்து, பல கஷ்டங்களை யனுபவிக் கிறார்கள். "கரும்புத் தோட்டத்திலே" என்ற பாட்டில் கல்லும் கரையும் படி கதறுகிறார். அப் பாடல்களிலுள்ள விஷயங்கள் எந்த தேசாபிமானி யின் உள்ளத்தை உருக்காது?) இங்கிலாந்தில் அந்த வியாபாரம ஒழிந்தா லும், அதன் கொடூரங்கள் குறைய ஆண்டுகள் 30 பிடித்தன. அந்தச் சட் டத்தின் மூலம் கொடுமைகள் பல ஒழிந்தனவாம்!

(நம் கற்பகப் பாரதநாட்டைச் சீரழிக்கும் ஹரிஜனப் பிரச்னையும் இத தன்மையதே. இக் கொடுமைக்கு சாஸ்திரத்தில் ஆதார மிருப்பதாகத தொண்டையைக் கிழித்துக்கொண்டு, எதிர்த்துப் பேசுபவர்களை வாய் கொண்ட மட்டும வைது ஸ்தாபிக்க முயல்பவர் ஒரு பக்கம் இருக்கின்ற னர். சாஸ்திரங்களை எவ்விதமாகப் புரட்டினாலும் ஆதாரமே கிடையாது. யுக்தி, புத்தி, அனுபவங்களுக்கு ஒவ்வாதது என்று, அனுஷ்டான ஞாதாக்க ளான மாளவ்யாஜி போன்றவர்களும், உலகம் போற்றும் உத்தமர் மஹாத மாஜி கவி சிரேஷ்டர்களான ரவீந்திரநாத் தாகூர், சரோஜனி தேவி போன்றவர்களும், சிவசங்கராச்சாரியாரும் கூட சொல்லி, அநேக தேசாபிமானிகள் ஹரிஜனக் கஷ்ட நிவாரண வேலையிலும், முன்னேற்றப் பணியிலும் ஈடுபட்டுழைக்கின்றனர். ஆயினும் ஒரு விஷயம் கவனிக்கப்பட வேண்டும். பல பல பெரிய பண்ணைகளில் தங்கள் கீழுள்ள ஹரிஜனங் களைப் பரம்பரை பாத்தியம் கொண்டாடி, அவர்களுக்கு நிரந்தரவாச வசதி கள் செய்துகொடுத்து, நன்மை தீமைகளுக்கு பணங் கொடுத்துதவி, விசேஷ காலங்களில் பரிசுகளைக் கொடுத்து, அவரவர் நிலைமைக்கும், சக் திக்கும், தன்மைக்கும் ஏற்றவாறு, கவனிக்கப்படுவதும் இருக்கிறது. இது பிராசீன கிராம சமுதாய முறையில் இன்னும் அமுலிலிருக்கிறது. இந்த நிலைமையில் இருக்கும்போதே, பல விதங்களிலும் மிருகத் தன்மைகளைக் கையாண்டு நேற்று வரையில் இருந்து வந்திருக்கும் அந்நிய ஆட்சி முறை யில் இது சுயேச்சை பெற தடையாக இருக்கிறது என சொல்லி வருவது விந்தையே! இதை தீர்க்க தரிசனம் செய்து உணர்ந்த நமது பாரதிப் பெரி யாரும் "ஏழை யென்றும், அடிமை யென்றும் எவனுமில்லை ஜாதியில்; இழிவு கொண்ட மனிதரென்பது இந்தியாவில் இல்லையே" என்றும், "தொண்டர் என்றோர் வகுப்பில்லை. தொழிற் சோம்பலைப்போல் இழிவில்லை" என்

றும், "மனிதர் யாரும் சரி நிகர், சமானமாக வாழ்வம் இந்த நாட்டிலே" என்றும் சொல்லி, "மனிதர் உணவை மனிதர் பறிக்கும் அந்தப் புலனில் வாழ்க்கை நமக்குண்டோ? மனிதர் நோக மனிதர் பார்க்கும் அந்த வழக்கம் இனி நம்மிலுண்டோ?" என்றும் வினவுகிறார்!)

ஜார்ஜ் IVன் காலத்தில், கானிங்பிரபு மந்திரியாக இருந்த சமயததில் 1822-ல், "தப்புக் கையெழுத் திடுதலுக்கும், திருட்டுக்கும் விதிக்கப்பட்டு வந்த மரண தண்டனையை ரத்து செய்ய" ஒரு சட்டம் நிறைவேற்றப்பட்டது. அதுவரையில் சாதாரண சிறு திருட்டுகளுக்கும் மரண தண்டனை விதிக்கப்பட்டதென்பது புலனாகிறது. அதுவும் ஆளுக்கும், தன்மைக்கும், பொருளாதார நிலைமைக்கும் தகுந்தபடி தண்டனை விதிப்பதில் பாரபட்சம், ஏற்றத்தாழ்வுகள் இருந்தனவாம். உதாரணமாக வயிற்றுக்கில்லாத ஒருவன் ½-பென்னியைத் திருடினாலும் அவனுக்குக் கடுமையான தண்டனை; பணம் படைத்த அகம்பாவி பெரிய திருட்டுத் திருடி பெருங்குற்றம் செய்தாலும் சாதாரண தண்டனை. (இந்த அழகில்தான் ஆங்கில சரித்திரக்காரர்கள் இந்திய சரித்திரம் எழுதும்போது "இந்தியாவில் தண்டனைகள் வெகு கொடூரமாகவும் அநாகரீகமாகவும் விதித்து ஜனங்களை மிரட்டி பயத்தினாலேயே பழைய காலத்திய மன்னர்கள் ஆண்டு வந்தனர்" என்று நாம்பின்றி எழுதி விடுகின்றனர். ஆனால், அக் கடுந் தண்டனைகள், தோட்டியானாலும், தொண்டமானாலும், அரச குமாரனே யானாலும் பேதமின்றி ஒரே யளவாய் வழங்கப்பட்டன வென்பதற்கு நூற்றுக்கணக்கான உதாரணங்கள் உண்மைச் சரித்திரங்களில் காணப்படுகின்றன. இன்னும் ஆராய்ச்சிக்காரர்கள் முயற்சியால் பல பல திடுக்கிடக்கூடிய உண்மைகளும் புலனாகி, புளுகுகளும் கட்டுக்கதைகளும் வெட்டவெளிச்ச மாகலாம்.)

பிறகு தேச வியாபாரத்தின் அபிவிருத்திக்குத் தடையாக இருந்த பல சட்டங்கள் ரத்தாகின. போலீஸ் படைக்கு சரியான பயிற்சி யளிக்கப்பட்டு, காரியாம்சத்தில் சிறந்து விளங்கி, ஜனோபகார முறைகளில் வேலை செய்ய வழி செய்யப்பட்டது. அதற்கானபடி, அவர்களுக்கு மாக்ஷிமை தங்கிய சக்ரவர்த்தியே யானாலும் மதிப்புக் கொடுக்கவேண்டும் என்று ஏற்பட்டது. தெருச் சந்திகளில் நின்று போக்கு வரத்தை ஒழுங்குபடுத்தும் லண்டன் போலீஸ்காரனுடைய சமிக்ஞைக்கு சக்கிரவர்த்தியின் வாகனமும் கீழ்ப்படிந்து உலவ வேண்டும் என்று வானமளாவ புகழப்படுவது நம்மில் பலருக்கும் தெரிந்திருக்கலாம். (நமது நாட்டிலும், இதுவரையில் இருந்தது போக, இனி அம்மாதிரி அழகிய, கண்ணிய முறைகளில் போலீஸ்காரர்கள் நடந்து கொள்வதற்கான பழக்கம் கொடுக்கப்படும் என்பதற்கான அறிகுறிகளை நமது தியாகமூர்த்திகளான காங்கிரஸ் மந்திரிகளின் அருமையான பிரசங்கங்களில் காணுவதை நாம் அகமகிழ்வுடன் எதிர்பார்த்து நடைபெறுவதற்கு வேலை செய்வோம். ராஜாஜி, கோவிந்தவல்லபபந்த், ஜவஹர்லால் போன்றவர்கள் விடுத்திருக்கும் போலீஸ்காருக்கான செய்திகளை நாம் பத்திரிகைகளில் கண்குளிரப் பார்த்தோம்! செவி மடுக்கக் கேட்டோம்!!) பிறகுதான் முந்தின தொகுதிகளில் குறிப்பிடப்பட்ட, "கதோலிக்கர் விடுதலைச் சட்டம்," "முதலாவது சீர்திருத்தச் சட்டம்" முதலியன ஏற்பட்டு, பொதுஜனக் கிளர்ச்சிகளுக்கு, நிர்வாகம் செவிசாய்த்து உளங்

கனிந்து உட்படவேண்டும் என்றது ஏற்பட்டது. அதுவரையில் அந்த ஜனங்கள் அவர்கள் நாட்டிலேயே பட்ட கஷ்டங்களும், அடைந்த அல்லல் களும் பல. (சொந்த ஜனங்களையே இப்பாடு படுத்திவைத்த ஆங்கில முதலாளிகளும், தோட்டக்காரர்களும், நம் பாரத மக்கள் விஷயத்தில் முதலைக் கண்ணீர் வடித்து புரட்டுகள், பித்தலாட்டங்கள் எல்லாம் செய்து, ஆட்டம் போடுவது சகஜம். அவர்கள் சரக்குகளுக்கு சந்தையும், சிறுவர் களுக்கு பணம் சம்பாதிக்க இடமும் நம் தேசத்தைவிட வேறு எங்கும் கிடையாது. ஆகவே இக்கற்பக நாட்டை சுலபமாகக் கைவிட அவர்களுக்கு எவ்வாறு மனம்வரும்? சமீபத்தில் கூட, இந்திய சம்பளத்தை ஒருமுறை, இருமுறை, மும்முறை பருத்த தொகை வாங்கிய வில்லிங்டன் பிரபு வும், "இங்கிலாந்து இளைஞர்களுக்கு இந்தியாவில் முன்னேறி அபிவிருத் தியடைய பல துறைகளும், சந்தர்ப்பங்களும் உண்டு" என்று துணிகர மாகச் சொல்லியிருக்கிறார்!! இதை யறிந்து செயலற்ற நிலையில் தான் சொல்லப் படுவனவாக ஸாப்ரூ, ஜெயக்கர் போன்ற பெரியார்களின் பேச் சுகளை நாம் புரிந்துகொள்ள வேண்டும்.)

பிறகு ஆங்கில குடியேற்ற நாடுகளில் உள்ள அடிமைச் சொந்தக்காரர் கள் எல்லாம், தங்கள் தங்கள் வசமிருந்த அடிமைகளை விடுதலை செய்து விட வேண்டும் என்று ஒரு சட்டம் 1883-ல் ஏற்பட்டு, அவ்வாறு நடப்ப தற்கு ஹேதுவாக, அந்த சொந்தக்காரர்களுக்கு நஷ்டஈடு கொடுக்கும் வகை யில் ஏராளமான பொருள் செலவும் ஏற்பட்டதாம். முன்பு ஏற்பட்ட "அடிமைத்தன நீக்க" முயற்சி, பலன் பட இப்போது தான் நேர்ந்தது. எளியவர்களுக்கான கஷ்ட நிவாரணத் திட்டங்களும் எலிஸபெத் மஹா ராணி காலம் முதல், உசிதப்படி அப்போது போடப்பட்டு அமுலுக்குக் கொண்டுவரப் பட்டிருந்தன. அதை யொட்டி 1834லும் ஏற்பட்டு, எளிய வர்களுக்கு உள்ள உதவி முறைகளில் பல அபிவிருத்திகள் செய்யப்பட் டன. பொதுவாக எளியவர்களுக்கும், வேலை யில்லாதவர்களுக்கும் உதவி கள் செய்யப்பட்டன. (நமது நாட்டைப் போல் ஜனங்களைப் பிச்சையெடுக் கும் தொழிலில் புகவிட்டு, சோம்பேறித் தடியர்கள் கூட்டத்தை வளர விடவில்லை. சாபக் கேட்டுப் பலனே போன்று, பலர், பரம்பரை பாத்திய தையும் கொண்டாடி பிச்சைபோட மறுப்பவர்களை வைது, திட்டிச் செல் லவும் துணிந்திருப்பது பலருடைய அனுபவத்திலும் வந்திருக்கலாம். இந்தத் திட்டம் அரசாங்கத்தின் கடமையாக இருக்க நமது நாட்டில் மட்டும் தரும புத்தி படைத்த பெரியோர்களின் பொறுப்பாக விடப்பட்டிருக்கி றது. எதையும் ஆரம்பிப்பதானால் அரசாளுபவரின் இனத்தாரின் நஷ்டத் திற்கு காரணமாகும் போல் இருந்தால் உடனே தடை செய்யப்படுகிறது. அல்லது தாங்க முடியாத வரிகளுக்கும் அல்லல்களுக்கும் உள்ளாக வேண்டி யிருக்கிறது. தேசீய ராஜாங்கத்தில் இனி யென்ன நடை பெறப் போகி றதோ என ஆவலுடன் எதிர்பார்ப்போம். ஸாப்ரூ அவர்கள் சமீபத்தில் வேலையில்லாத் திண்டாட்ட சம்பந்தமான நிவர்த்தி முறைகளைப் பெரியதாக வகுத்து, நீண்டதொரு அறிக்கையை காகித ரூபமாக வெளியிட்டிருந் ததை, பத்திரிகை படிக்கும் அன்பர்கள் அறிவார்கள்.)

1835-ல் ஸ்தல ஸ்தாபனங்களின் சீர்திருத்த சட்டம் ஏற்பட்டு,

அமைப்பு, அதிகாரம், அங்கத்தினர்களின் உரிமைகள், வாக்குரிமை வழங்கு தல், வாக்குக் கொடுக்கும் முறைகள் முதலியவற்றில் அபிவிருத்திகள் செய்யப்பட்டன. அந்தந்த ஊர்களிலுள்ள சபைகளுக்கு அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு தலைவர்களும் ஏற்பட்டு, அந்தந்த பிரதேசங்களின் நிர்மாண திட்டங்களுக்கும் அடி கோலப்பட்டன. நகர பரிபாலனம் கிராம பரிபாலனம் செவ்வனே நிர்வாகம் செய்யப்பட்டு கஷ்ட நிவாரண வேலைக ளும் நடைபெற்றன. நாட்டுக்குப் பெரிய பார்லிமெண்ட் செய்யக் கூடிய தான நன்மைகளை இந்த ஸ்தல ஸ்தாபனங்கள் கிராமங்களுக்கு பூரண ஸ்வ தந்தரத்துடன் செய்து வந்தன. ஆங்காங்கு ஜனங்கள் சௌகரியங்களு டன் வாழ ஹேதுவாக இருந்தனர் என்று தெரியவருகிறது. (நமது நாட் டிலும், அதிலும் நமது மாகாணத்திய ஸ்தல ஸ்தாபனங்களைப் பற்றி அதி கம் பேச வேண்டியதில்லை. இந்த மாதிரி நிர்வாகம், "நம் இந்தியர்களுக்கு தங்களையே நிர்வகித்துக் கொள்ளத் தெரியாது" என்பதை ருஜுப்படுத் தவே நிர்மாணிக்கப்பட்டதோ என்று ஐயுறும் முறைகளில் இருந்து வந்தி ருப்பதை எவரும் ஒப்புக் கொள்ளவே வேண்டி யிருக்கின்றது. அது பற் றியவைகளை விஸ்தாரமாக விளக்கும் பல விகட வியாசங்களையும், புனைக் துரைகளையும் அன்பர்கள் பலரும் அநேக முறைகளில் அநேக சந்தர்ப்பங் களில் படித்திருக்கலாம். அவரவர்கள் சொந்த அனுபவங்களாகவும் பல விபரங்களை யறிந்திருக்கலாம் என்பது மட்டும் குறிப்பிடுவோம்.)

வெகு பால்யத்தில் பட்டத்திற்கு வந்த விக்டோரியா மஹாராணியார் மிகுந்த புத்திசாலியாகவும், நாட்டின் நலத்தை நாடியவராகவும், சமயோ ஜித புத்தியுடையவராகவும், தாராள சிந்தையும் பெரும் போக்கும் உடைய வராகவும் அமைந்தது ஆங்கிலேயரின் அதிருஷ்ட வசமேயாகும். அவ ருக்கு ஏற்றவாறு ராஜரீக காரியங்களில் நம்பிக்கையாகவும் நல்ல யோஜனை களை செலுத்துபவராக அவருடைய கணவர் ஆல்பர்ட் என்ற ஜெர்மன் இள வரசர் ஏற்பட்டார். அவருக்கு இராஜா பட்டம் கிடையாது என்பது அவ ருடைய பற்றற்ற தன்மையையும் ஆங்கிலேயருடைய அதி தேசாபிமானத் தையும், காட்டுகிறது. தன் மனைவிக்குப் பின்னணியில் இருந்து அந்தரங்க சுத்தியான அபூர்வ யோஜனைகளை சமயோஜிதம் போல் சொல்லி வந்ததாக சரித்திரம் கூறுகிறது. தன்னலப் பற்றின்றி சுயநல மறுப்புச் சிந்தையில் இருந்து, அந்த சமயங்களில் தேசத்தில் இயங்கிய பத்திரக் காரர்களின் இயக்கம், சீர்திருத்த முயற்சி இயக்கம், ஐயர்லந்து சுய ஆட்சி இயக்கம் முதலிய சந்தர்ப்பங்களை அருமையாக சமாளிக்க உதவியாக இருந்தாராம். எவ்வளவு தான் இயக்கங்களும், சங்கங்களும் இருந்தாலும், நிலச் சொந்தக் காரர்கள், முதலாளிகளின் போக்குகளில் மட்டும் மாறுதல்களும், ஜீவகா ருண்ய நோக்கும் ஏற்படுவது கஷ்டமாகவே இருந்தது குறிப்பிடத்தக்க விஷயம். அவரவர்கள் தங்களுடைய லாபங்களில் எள்ளளவும் குறைய சம் மதிக்காததோடு, எவ்வளவு அதிக லாபத்தைக் கசக்கி, பிழிந்து, வாட்டி, வதக்கிப் பெறலாமோ அவ்வளவையும் பெறுவதற்கான மனோபாவத்தில் தான் இருந்தார்கள். இது சம்பந்தமான, தான்ய வரிச் சட்டத்தைப் பற்றி யும், இதர பல முக்கிய சட்டங்களைப் பற்றியும் தொடர்ச்சியாக அடுத்த தொகுதியில் வெளிவரும்.

---

# புலால் ஏதுக்கையா?

(கோட்டாறு-தே. ப. பெருமாள்.)

மக்கள் வாழ நினைப்பதுபோல்—இந்த
மாககளும் வாழ நினைக்குமையா
இக்கொலை செய்துண்ணல் நன்றோ வையா?—ஈசன்
இன்னருள் தானிங்கு வுண்டே வையா? (1)

கண்ணப்ப ரூனைச் சுவைத்ததினால்—ஈசன்
கண்ணைப் பிடுங்கியே காவல் செய்தார்
எண்ணு முயர்திரு பக்தரேனும்—ஈசன்
இன்னல் கொடுத்தே இதம் புரிந்தார். (2)

கண்ணப்பரே யிந்தப் பாடுபட்டால்—நாமும்
காணப் பெறுவது என்னோ வையா?
எண்ணித் துணிக கருமத்தினை—இன்றேல்
எண்ணரு மின்ன லடைவோ மையா. (3)

விலங்கு விரும்பும் உணவதனில்—மகன்
வேட்கை கொள்ளுத லறமாமோ?
இலங்கும் அறிவினைப் பெற்றவரும்—நடை
ஈனமாய்க் கொள்ள விழிவன்றோ! (4)

மானிட யாக்கை இடுகாடோ?—அதன்
மாண்பினைப் பற்றி அறியீரோ?
தேனுந் தினையு மிருக்கையிலே—இந்தத
தீய உணவை விரும்புவதோ? (5)

நல்ல தானியம் விளைவதுண்டு—அவை
நல்லுடல் தன்னைத் தருவதுண்டு
வெல்ல சுவை மரககீரையுண்டு—அவை
வேண்டு முரனும் அளிப்பதுண்டு. (6)

கீரைப் பாத்திகள் பலவுமுண்டு—அதன்
கீரைகள் இன்சுவை ஈவதுண்டு
தீராப் பெருநோய் பலதையுமே—அவை
தீர்த்திடும் சக்தி படைத்ததய்யா. (7)

காடு கிழங்கைத் தருவதுண்டு—சுவைக்
காயுங் கனியும் அளிப்பதுணடு
தேடும் புலாலு மெதற்கோ வையா?—இந்தத்
தேட்ட மொழிந்து திரும்பு வீரே. (8)




# விதியின் பயன்.

V. A. சின்னஸ்வாமி.

"ஆ..................! கா......ப்......பாற்றுபவர்கள்...... சண்டாள...ப் பாதகன்......" என்ற சப்தங்களைக் கேட்டதும் ராம் பிரமித்து விட்டார். ஒரு பெண் குரல்போல் தோன்றியது. பக்கத்திலிருந்த பார்க்கிலிருந்து வந்து கொண்டிருந்தது. உடனே ராம் அங்கு சென்றார். அவர் பார்த்த காட்சி அவரை ஒரு நிமிஷம் அப்படியே பிரமிக்கச் செய்தது. ஆம்; யாருக்குத்தான் ஆச்சர்யமும் தயவும் வராது? தனியாய் இருக்கும் ஒரு அழகிய யுவதியை தடியனொருவன் பலாத்காரப் படுத்த முயலும் காட்சியைக் கண்டால்! சிங்கம்போல் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து அவ்வழகியை மீட்டார். இவருடைய ஆரோக்யமான கட்டுமஸ்தான தேகமும் அகன்ற மார்பும் அத் தடியனை ஒரு நொடியில் பறக்கடித்தது. உடனே அவன் ஓட்டம் பிடித்தான்.

அந்த யுவதியை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தார். குறைந்தது ஒன்பதாவது வகுப்பு படித்தவளாகத் தோன்றியது. அவளது கண்களும் இவர் கண்களும் ஒரு முறை சந்தித்தன. ஒருவித மின்சாரம்போல் இருவர் தேகத்திலும் ஓடியது. ஆனால் அப் பெண்மணி இவரிடத்தில் தன் ஹிருதயத்தையே பறிகொடுத்து விட்டாள். நாணத்தை ஒருவாறு அடக்கிக் கொண்டு குயிலினும் இனிய குரலில் "கடவுள்தான் உங்கள் ரூபமாக வந்து உதவி செய்தார் என்று நினைக்கிறேன். ரொம்ப தாங்ஸ்; தங்கள் விலாசத்தை தெரிவித்தால் நான் தங்களுக்கு என்னாலான உதவியைச் செய்வேன்" என்று கூறினாள்.

"நான் என்ன அவ்வளவு பெரிய காரியத்தைச் சாதித்து விட்டேன். என் போன்ற வேலை யில்லாத M. A. பட்டதாரியின் விலாசங்களைத் தெரிந்துகொண்டு என் செய்வீர்" என்று சொல்லிவிட்டு விர்ரென நடந்து விட்டார்.

ஒரு அழகி. கவிகளின் கையில் கிடைத்திருந்தால் மூன்றாம் பிறைச் சந்திரன் கார்மேகம் தாமரைப் புஷ்பம் முத்துக்கள் பவளங்கள் எலுமிச்சம் பழம் வாழை மின்னல் முதலிய உபமானங்களால் நிரப்பி யிருப்பார்கள். தற்கால நவ நாகரீகத்திலும் குறைந்தவளல்ல. ஆனால் நம் ராமிற்கு அவளுடன் பேசவே பிடிக்கவில்லை. இந்த மாதிரி அநேக சம்பவங்களில் ராம் அனுமார் அல்லது பீஷ்மரைப் போல் பிரமசர்யத்தைக் காப்பாற்றுவ தற்குப் பாடுபட்டிருக்கிறார்.

ஆனால் நம் யுவதி கனகவல்லி தன் உள்ளத்தை கொள்ளை கொண்ட திருடனை பழிக்குப் பழி வாங்க நினைத்தாள். என்றும் தோன்றாத ஒருவித

உணர்ச்சி அவளை இன்று வாட்டியது. தன் மனதாகிய குதிரையை நாணம் என்னும் கடிவாளத்தால் அடக்கிப் பார்த்தாள். ஆனால் அத்துஷ்டக் குதிரை கடிவாளத்தை அறுத்துக் கொண்டு செல்லப் பார்க்கிறது. அவருடைய அழகிய தோற்றம் மனதை விட்டு அகலவே மாட்டேனென்கின்றது. அவ்வாலிபனை, அவள் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட திருடனை எப்படி பழி வாங்குவது என்று எண்ணி ஏங்கினள். இந்த எண்ணத்தில் மூழ்கியிருந்த அவளுக்கு நேரம் போனதே தெரியவில்லை. மணி 8 அறிவிக்கும் குண்டு வெடித்த பொழுதுதான் வீட்டின் ஞாபகமும் தனியாக இங்கு காலங்கழிப்பது ஆபத்தானது என்றும் தெரிந்தது. வீட்டிற்குப் போய் பேசாமல் படுத்துக் கொண்டாள். வேலைக்காரி பன்முறை சாப்பிடக் கூப்பிட்டும் பதில் வரவில்லை. சாப்பாடு யாருக்கு வேண்டும்? வேண்டும் வஸ்து ஒன்றிருக்க பசிதான் எப்படி வரும்? தூக்கம் வருவதற்குத்தான் நியாயம் உண்டோ? அவளுடைய உடம்பில் ஒருவித சூடு காணப்பட்டது. உடனே எழுந்திருந்து மேல் மாடியில் உலாவப் போனள். தெள்ளிய பால்போல் பிரகாசிக்கும் வெண்ணிலவின் தண்ணெனும் கிரணங்கள் இவளை எரித்தது. இவளுக்கு சந்திரனே ஒரு பெரிய நெருப்புருண்டையாகத் தென்பட்டான். ஒரு கருநாகம் போல் கடித்தான். ஆம்; அவ் விஷ ஜ்வாலையைத தாங்க முடியாமல் மறுபடியும் போய்ப் படுத்துக் கொண்டாள். புரண்டு புரண்டு அழுது அழுது கண்களெல்லாம் வீங்கி விட்டன. கடைசியில் திடீரென்று ஒரு எண்ணம் மனதில் தோன்றியது. ஆம்; அது தான் சரி என்று எண்ணிக் கொண்டாள்.

நாட்கள் யாரையும் கேட்காமல் வழக்கம்போல் 5, 6 சென்றன. தன் ஏக புதல்வியின் நிலைமையைப் பார்த்த திவான்பஹதூர் ராஜசேகர முதலியார் துக்கக்கடலில் ஆழ்ந்தார். என்ன செய்வதென்று தோன்றவில்லை. டாக்டர்களுக்கு பணத்தை வாரி வாரி இறைத்தார். பிரயோஜனமில்லாமல் போகவே தன் மகளிடம் நிலைமையை ஒருவாறு கேட்டுத் தெரிந்து கொண்டார். அவ் வாலிபன் செய்த உதவியைப் பற்றியும் அவனைத் தேடிப் பிடிக்கும் யுக்தியையுங்கூட கனகவல்லி யிடமே தெரிந்து கொண்டார்.

* * * *

2

மாலைநேரம். நம் ராம் அப்படியே தனியாக உலாவிக் கொண்டே இருக்கிறார். 'ஹிண்டு! ஒரு அணு! ஹிண்டு பேப்பர்' என்று ஒரு பையன் கத்திக் கொண்டே வந்தான். ஒரு அணுவைக் கொடுத்து ஒரு பேப்பரை வாங்கி அன்றைய "Wanted" காலங்களைப் பார்த்தார். அதில் ஒன்று அவர் மனதைக் கவர்ந்தது.

'Wanted a private Secretary on a salary of Rs 150. Only M. A.s should apply. Handsome youths aged within 23 are preferable'.

Apply with photos to

Box No. 140, C/o
The Hindu, Madras.

இவ் விளம்பரத்தைப் பன்முறை படித்தார். ஹா! இந்த உத்தியோகம் மாத்திரம் கிடைத்து விட்டால், இந்த உத்தியோகம் மாத்திரம் கிடைத்து விட்டால்! மனக் கோட்டைகள் கட்டிக் கட்டி இடித்த வண்ணமே இருந்தார். இருட்டியதும்கூட தெரியவே இல்லை. மெல்ல எழுந்து தன் அறைக்குச் சென்றார்.

தன் அறையில் ஒரு சிறிய விளக்கு மங்கி ஒளி கொடுத்துக் கொண்டிருந்தது. இப்பொழுதோ பிறகோ! காடு வா! வா! வீடு போ! போ! என்னும் கிழவனின் நிலைமையில் அவ் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. நம் ராமின் தரித்திர நிலைமை அவ்வறையின் ஒவ்வொரு சாமானிலும் வெளி வந்து கொண்டிருந்தது. காகிதம் பேனா எடுத்து யோசித்து யோசித்து ஒரு மணி நேரத்திற்கு மேல் கஷ்டப்பட்டு விண்ணப்பத்தை எழுதி முடித்தார். கடைசியில் போட்டோவின் ஞாபகம் வரவே எழுந்து தன் நண்பன் கடைக்கு ஓடினார். ஒரு போட்டோ அந்நேரத்தில் எடுத்து அதை வைத்துக்கொண்டு அழகாய் காணப்படுகிறோமா இல்லையா என்பதைப் பற்றி தர்க்கம் செய்து கொஞ்ச நேரத்தைக் கழித்தார். கடைசியில் தான் அழகாக இல்லாவிட்டாலும் அவ்வளவு குரூபி அல்ல என்ற முடிவுக்கு வந்து விண்ணப்பத்தை முடித்தார். விண்ணப்பத்தை முடித்து ஸ்டாம்பு ஒட்டியதும் எதிரிலுள்ள மருந்துக் கடையின் கடிகாரம் டன் டன் என்று மணி 10 அடித்தது. அப்பொழுதே சென்று தபால் பெட்டியில் போட்டு விட்டு வந்து படுக்கையை விரித்து உறங்கினார்.

* * * *

3

7, 8 தினங்கள் ஓடிவிட்டன. விண்ணப்பம் போடுவதே ராமிற்கு ஒரு வேலையாக விருந்தது. இப்படி எத்தனை வாலிபர்கள் காட்டை விற்று வீட்டை விற்று பெண்டாட்டி நகையை விற்று எம். ஏ. அல்லது பி. ஏ. பட்டம் பெற்று கடைசியில் குமாஸ்தா வேலைக்கு விண்ணப்பம் போட்டுக் கொண்டு அலைகிறார்கள். இன்று இந்திய வாலிபர்கள் தங்கள் அதிர்ஷ்டத்தின்மேல் அழுது அழுது அலறுகின்றனர். எங்கு பார்த்தாலும் சோற்றுப்பாடு! பசி! பசி! ஹா! இப் பசியரக்கன் பச்சிளங் குழவிகளைக் கூட பாலில்லாமல் செய்து பரிதவிக்க வைத்து எரித்து சாம்பலாக்குகின்றான். தங்கம் முதலிய விளைந்த செழிப்பையும் இப் பாரத நன்னாட்டின் நாகரீகத்தையும் பார்த்து ஒரு காலத்தில் அன்னிய நாட்டார் பொறாமைப் பட்டார்கள். ஆனால் இன்றோ நம் சகோதர சகோதரிகள் அணிய ஆடைக்கும் உண்ண உணவுக்கும் திண்டாடுவதைப் பார்த்து பரிகசிக்கின்றனர். ஆம். தேசம் இன்று அடிமை நோயால் பீடித்து இறக்கும் தருவாயிலிருக்கிறது! ஆ! அடிமைத் தனமே! ஆ! வேலையில்லாத் திண்டாட்டமே! நம் கதி மோட்சம் என்றோ! யார் அறிவர்!

வாயிலில் போஸ்ட் மேனைப் பார்த்ததும் தீபாவளி இனாமிற்கு வந்து நிற்கிறான், என்று ராம் நினைத்து கொடுப்பதற்குக்கூட காசில்லையே என்று வருந்தினார். போஸ்ட் மேன் "சார், ஒரு லெட்டர்" என்று ஒரு கடிதத்தை ஜன்னல் வழியாக நீட்டினான். வெகு ஆவலுடன் வாங்கிப் பிரித்துப் படித்

தார். கோவை-திவான்பஹதூர் ராஜசேகர முதலியார் அவரை வேலை யில் வைத்துக் கொண்டதாகவும் உடனே புறப்பட்டு வரும்படியும் எழுதி யிருந்தார்.

ராமின் சந்தோஷத்திற்கு எல்லையில்லை. கரை புரண்டோடியது. பூர்வ ஜன்ம புண்ய பலன் தனக்கு கிட்டி விட்டது என்று ஆனந்த மடைந் தார். எதிர் காலத்தைப் பற்றி பகற் கனவுகள் கண்டார். ஊரின் எல்லா சுவாமிகளுக்கும் தேங்காய் உடைத்தார். அன்று எல்லா ஏழைகளுக்கும் தர்மம்கூட செய்தார். தன் கையில் கஜானா ஒன்று இருந்திருந்தாலும் காலி செய்திருப்பார். ஆனால் பாவம் இல்லை. என் செய்வார்?

மறுநாள் திவான்பஹதூரின் கார் வந்து இவரை யழைத்துக் கொண்டு போயிற்று. முதலியார் பங்களாவை யடைந்தது. முதலியார் அதிக உப சாரணை செய்து அவருக்கு வேலையை அன்றே ஒப்புவித்தார். தங்க அறை, சாப்பாடு, எல்லாம் முதலியார் வீட்டிலேயே! தன் வேலையில் யாதொரு குற்றமும் இல்லாமல் சரிவரச் செய்து வந்தார். இவர் வந்த நாள் முதற் கொண்டு—இல்லை—இவர் மனுவுடன் போட்டோவைப் பார்த்த நாள் முதற் கொண்டு கனகவல்லி சுகமடைந்து வந்தாள்.

அடிக்கடி கனகவல்லிக்கும் இவருக்கும் சந்திப்பு ஏற்பட்டது. இரு வரும் உலாவுவதற்கும் சினிமாவுக்கும்கூட அடிக்கடி போவார்கள். ஆனால் சமயா சமயங்களில் கனகவல்லி தன் காதலை வெளிப்படுத்த முயற்சித்த போதிலும் நாணம் வந்து தடுத்து விடும். நம் ராமோ ஒரு ஆண் மித்திர னுடன் பழகும் நடவடிக்கைப் பிரகாரம் தான் நடந்து கொண்டு வர லானார்.

* * * *

4

ஏறக்குறைய வருஷம் ஒன்று கழிந்துவிட்டது. தீபாவளி தினம். எல்லோரும் ஆனந்தமாக சீனா வெடி சுடுவதிலும் புது வேஷ்டி கட்டிக் கொள்வதிலும் மூழ்கி யிருந்தனர். நம் ராம் முதலியார் கொடுத்த பட்டு ஜரிகை முதலிய வேஷ்டிகளை யெல்லாம் விட்டுவிட்டு 1 ரூபாய்க்கு ஒரு கதர் வேஷ்டியும் 0—12—0 வுக்கு அங்கவஸ்திரமும் வாங்கி அணிந்து கொண்டார். கனகவல்லி இந்தக் கோலத்தைப் பார்த்து தமாஷ் செய் தாள். இப்படியும் முட்டாள் தனம் உண்டா என்று சிரித்தாள்.

ராம், "உன்னைப் போல் பணக்காரிகள் தான் 40-க்கு 50-க்கு பட்டுப் புடவை வாங்கிக் கட்டிக் கொள்கிறார்கள். ஆனால் இன்று எத்தனை சகோ தரிகள் அரைத் துணிக்கூட வழியில்லாமல் துன்புறுகிறார்கள். நாட்டில் தரித்திரம் தாண்டவ மாடுகின்றது! பண்டைக் காலத்தில் நம் ஹிருதயத் தில் பலம் சக்தி இவைகள் நிறைந்திருந்தன. தேசம் சுவதந்திரமாக இருந் தது. நாம் தலை நிமிர்ந்து கௌரவமாக நடந்தோம். பண்டைக் காலத் தில் தேசம் தன தான்யம சம்பூர்ணமாக இருந்தபடியால் வீடு வீடாக நோன்புகளும் பண்டிகைகளும் ஆனந்தமாக கொண்டாடப் பட்டன. ஆனால் இன்றோ! பண்டிகையைப் பார்த்துப் பயப்படுகிறார்கள்! ஒவ் வொருவரும் நோன்பைப் பார்த்து நோய்வாய் படுகிறார்கள்! இன்று

பாரதமாதா பராதீனமாய் அடிமை வியாதியால் பீடித்து பரிதாப நிலையி லிருக்கிறள். கைகால்கள் அடிமைத் தளைகள் பூட்டி யிருப்பதால் வேலை செய்ய முடியாமல் தன் புதல்வர் புதல்விகளை பட்டினியால் வருத்துகிறள். அவளுடைய அநேக அருமைக் குழவிகளை, பசி யமன் கொள்ளை கொள் கிறன் ஒரு பக்கம். மற்றொரு பககம் அன்னியர் அவள் ரத்தத்தை மூட் டைப்பூச்சி மாதிரி உறுஞ்சுகிறர்கள்! நீ இன்றைக்கு சில்க் புடவை கட்டிக் கொண்டு உல்லாசமாக இருக்கிறய். கற்பையும் லஜ்ஜையையும் பூஷண மாகக் கொண்ட எத்தனை சகோதரிகள் இன்று அறைத் துணிக்கு அலறு கின்றனர். இப்படி தரித்திரம் தாண்டவமாடும் நிலைமையில் நம் நாட்டில் ஏழைகள் கஷ்டப்பட்டு கையால் நூற்று கையால் நெய்து 0—2—0 சம் பாதித்து சாப்பிடுபவர்களின் துணியை விட்டு விட்டு நாம் இன்னும் நம் பணத்தை அன்னிய நாட்டுத் துணிகளின்மேல் மோகம் கொண்டு அனுப் பினல் நம்மை விட குரூரர்கள் யார் இருக்க முடியும்? நீ கட்டியிருக்கும் புடவைக்கு 5 மெல்லிய கதர்ப் புடவைகள் வாங்கலாம். குறைந்தது 50 பேராவது 3 வேளை சாப்பிடுவார்கள். பசி நோயால் வருந்தும் நம் சகோ தரர்கள் நம்மை வாயார வாழ்த்துவார்கள். அப்பணத்தை அயல் நாட்டுத் துணிகளின்பேரில் போட்டால் ஏழைகளின் வாயில் மண்ணைப் போட்டு நம் இரத்தத்தை உறுஞ்சும் மூட்டைப் பூச்சிகளுக்கு உணவளித்தது போலல்லவோ ஆகின்றது. ஆகையால் நீ இனிமேல் கதர் கட்டா விட்டால் உன்னேடு பேசக்கூடமாட்டேன்'' என்றர் ராம்.

கொஞ்ச நேரம் கனகவல்லி யோசித்தாள். ராம் சொல்வது உண்மை யாகத்தான் தோன்றியது. “சரி உனக்காக இனிமேல் கதர் கட்டுகிறேன்'' என்று சொன்னுள்.

“எனக்காக நீ கதர் கட்டவேண்டாம். பசியால் வருந்தி வருந்தி எலும்புக் கூடுகளுடன் கூடிய 7 லட்சம் கிராமங்களில் வசிக்கும் மனிதப் பிண்டங்களுக்காகவும் அவர்களும் நம்மைப் போல் மனிதர்கள் தான்; அவர் களும் சாப்பிடத்தான் வேண்டும் என்பதற்காகவும் கதர் கட்டு'' என்றர் ராம்.

* * * *

ஒரு நாள் ராம் தனது பெட்டியின் பழைய ரிகார்டுகளைப் பார்வை யிட்டுக் கொண்டிருந்தார். ஒரு நீண்ட பழைய கவரின் மேல் தன் விலா சம் எழுதப்பட்டிருந்தது. ஆச்சரியத்துடன் உடைத்தார். அதில்

திருச்சி.

ஆருயிர் அனைய அருமைக் குழந்தாய், 16—9—1916.

ஹா! நான் செய்த அபாக்யவசத்தால் இன்று உன்னைப் பிரியவேண்டி யிருக்கிறது. நீ க்ஷேமமாக இருக்க வேண்டுமென்று கடவுளைப் பிரார்த் திக்கிறேன். நின் தாயையும் தந்தையையும் சிறுவயதிலே இழந்தாய்! இன்ரு வது உன் சரித்திரத்தை தெரிந்துகொள். சென்னை பிரபல பாரிஸடர் கனகசுந்திரம் முதலியாருக்கு வாழ்க்கைப்பட்டேன். நீ பிறந்த மாதத் தில் அவர் காலனுக் கிரையானர். அவர் சொத்து அப்படி ஒன்றும்

இல்லை. கோவையில் என் தந்தை தினகர முதலியாரிடம் நான் இருக்க வேண்டியிருந்தது. என் துர்ப்பாக்கியம் என்னை அங்கும் விடவில்லை. அவரும் இறந்து விட்டார். பிறகு என் அண்ணனின் மனைவி என்னை பற்பலவாறு இம்சித்தாள். என் அண்ணனும் அவள் வலையில் வீழ்ந்து என்னைத் துன்புறுத்தினன். உன்னை எடுத்துக் கொண்டுபோய் கடைசியில் திருச்சி அநாதாலயத்தை யடைந்தேன். அதே இடத்தில்தான் இப்பொழுது உன்னைப் பிரிகிறேன். என் நகைகளை விற்று 10,000 ரூ. இம்பீரியல் பாங்கில் டிபாசிட் செய்திருக்கிறேன். அதன் வட்டியில் பாதி இப்பொழுது உனக்கு வந்துகொண் டிருக்கும். உனது M.A. படிப்பு வரையிலும் அவஸ்யமானல் அதற்கு மேலும் கூட கவர்ன்மென்டாரும் ஸ்காலர்ஷிப் சேங்ஷன் செய்திருக்கிறார்கள். நீ இனி பெரியவனான பிறகு கோவைக்கு உன் மாமனிடம் சென்று அவர் சொற்படி நட.

எல்லாம் விதியின் பயன் எவர்மீதும் வருந்துவதில் பலனில்லை. என் கடைசி முத்தங்கள்.

உன் அபாக்ய மாதா
ராஜி.

உடனே எடுத்துக்கொண்டு சென்று முதலியாரிடம் காட்டினர். தன் தங்கையின் எழுத்துக்களை முதலியார் தெரிந்து கொண்டார். தன் தங்கையை அக்காலத்தில் வருத்தியதற்காக அதிக துக்கமும் அடைந்தார். தன் புதல்வி தன் தங்கை புதல்வனையே நேசிப்பதைப் பார்த்து அளவற்ற ஆனந்தமடைந்தார். அது முதல் ராம் வீட்டு எஜமான் மாதிரி ஆய்விட்டார்.

கனகவல்லி அடிக்கடி தன் தகப்பனரிடம் தன் விவாஹத்தை முடித்துவிடும்படி சொல்லி தொந்திரவு செய்தாள். முதலியாரும் சாக்குப் போக்கு சொல்வதில் பிரயோஜனம் இல்லை என்று தெரிந்து கொண்டார். ராமைப் பற்றிய சந்தேகமும் தீர்ந்தது. ஒரு நாள் மாலைநேரம். எல்லோரும் சாப்பிட்டுவிட்டு உல்லாசமாக உட்கார்ந்திருந்தார்கள். முதலியார் ராமிடம் விவாஹத்தைப் பற்றி பிரஸ்தாபித்தார். ராம் அவரிடம் சில சங்கதிகள் சொல்வதாகவும் அவர் கோபம் கொள்வதில்லை யென்றால் சொல்வதாகவும் அச்சங்கதிகள்தான் விவாஹத்திற்குத் தடையாகவிருப்பதாகவும் சொன்னர்.

ராம்:—"கோபம் கொள்வதில்லையே"

முதலியார்:—"நிச்சயமாக இல்லை"

ராம்:—"எனக்கும் தங்களுக்கும் ஜாதியில் வித்யாசமிருக்கிறது !"

முதலியார்:—"நீ என் சகோதரி புதல்வன் ஆயிற்றே."

ராம்:—"ஆனாலும் என் மதம் சுவதந்திரம். ஜாதி காங்கிரஸ். நம் நாட்டில் வாழும் 35 கோடி சகோதர சகோதரிகளும் நம்மைப்போலவே இருக்கின்றார்கள் என்று நினைத்துக்கொண் டிருக்கிறீர்கள். எத்தனை ஏழைகள் உண்ண உணவுக்கும் உடுக்க ஆடைக்கும் தவிக்கின்றார்கள். எத்-

தனை சகோதரர்கள் வெயிலால் உலர்ந்து மழையால் நனைந்து கஷ்டப்படு கிறார்கள். அவர்களின் க்ஷேமத்திற்காக பாடுபடுகிறது காங்ரகிஸ்.

தாங்கள் இப்பொழுது இரவும் பகலுமாக எலக்ஷனில் ஜனங்களுக்கு 'இது செய்கிறேன். அது செய்கிறேன். குதிரை மேல் ஏற்றிக்கொண்டு ஆகாயத்தில் பறக்கவைக்கிறேன்' என்றெல்லாம் சொல்கிறீர்கள். ஆனால் 20 வருஷங்களாக தாங்கள் சட்டசபையில் செய்த வேலையென்ன? உப்புவரி குறைக்கலாம் என்று தீர்மானம் வந்தால் எதிர் ஓட்டு போட்டீர்கள். கடன் பளுவால் வருந்தும் கிருஷிகரின் கஷ்டத்தை தாங்கள் எப்படி அறிவீர்? I கிளாஸில் ரயில் பிரயாணம் செய்து கொண்டு கார்டன் பார்ட்டி, டீ பார்ட்டி, டின்னர் பார்ட்டி கலக்டர் பார்ட்டி முதலியவைகளில் மூழ்கியிருந்தீர்கள். ஆம். தங்கள் உபகாரத்தை காருண்ய சர்க்கார் மறவாமல் 'திவான் பஹதூர்' என்றல்லவோ அழைக்கிறார்கள். இதனால் எவ்வளவு ஏழைகள் சாப்பிடு கிறார்கள் பாருங்கள்.

இன்னும் தாங்கள் எப்படி 'சர்' ஆகலாம் என்னும் யோசனையில் மூழ்கி பார்டிகளில் பணத்தை யிறைக்கிறீர்கள். நான் இவ்வளவு அதிகப் பிர சங்கித்தனம் பண்ணியதற்காக மன்னிக்கவும். தாங்கள் தங்கள் பட்டத்தை வாபீஸ் செய்து காங்ரசில் சேர்ந்து தேசசேவை செய்வதாக உறுதி கூறி விட்டால் நான் கல்யாணம் செய்துகொள்ள மாட்டேன். தாங்கள் பட்டத் தைத் துறந்து காங்கிரஸில் சேர்ந்தவுடன், நான் கல்யாணம் செய்து கொள் கிறேன்.

முதலியார் ஆழ்ந்த யோசனையில் மூழ்கியிருந்தார்.

* * * *

ஒருவாரம் கழிந்தது.

பிரபல தினசரிகளில் பின்வரும் செய்தி காணப்பட்டது.

எதிர் பாராத சம்பவம்.

கோவை திவான் பஹதூரின் பட்டத்துறவு!

காங்கிரஸில் சேர்ந்து விட்டார்!!

(நமது நிருபர்)—கோவை, டிச. 19.

திவான் பஹதூர் ராஜசேகர முதலியார் சுயாலக் கட்சியில் யாதொரு பிரயோஜனமில்லையென்று ராஜிநாமா செய்தும பட்டத்தின் மீது வெறுப் படைந்தும் அதை வைஸ்ராய்க்கு பேட்சுடன் அனுப்பிவிட்டார்.

மறுபக்கத்தில் கனகவல்லி ராமின் விவாஹப் போட்டோவும் இருந் தது.

---




# பிரம சூத்திரம்

(சித்தூர் பண்டித-பூ. ஸ்ரீநிவாசன்)

## 10-வது சர்வோபேதாதி கரணம்.

30 வது சூத்திரம். அவதாரிகை:—முந்திய அதிகரணத்தில் சொப்பன திருஷ்டாந்தத்தினால், மாயையோடு கூடிய பிரம்மமே, ஜகத் காரணமாகும் என்று நிரூபிக்கப் பட்டது. அதன் மேல், பரமாத்மா அசரீரியாக விருத்தலின், அவனிடத்தில், விசித்திர பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கும் மாயையானது எவ்வாறு இருக்கின்றது? என்று மற்றோர் சங்கை பூர்வ பக்ஷிகளால் காட்டப் படுகின்றது. இவ்வதி கரணம் அச் சங்கையைப் பரிகரிக்கின்றது.

சூ. 30. "ஸர்வோபேதாச தத்தர்சநாத்."

பதவுரை:—ஸர்வோபேதா=சிருஷ்டி கர்த்தாவாகிய பரதேவதை சர்வ சக்தியுடையது; ஏனெனில், தத்தர்சநாத்-ச=பரதேவதை சர்வ சக்தி வாய்ந்தது என்று சுருதி கூறுதலால்.

கருத்து:—பரதேவதை யென்பது இங்கு பரமாத்மாவைக் குறிக்கும். "அசரீரமா(சரீர மில்லாததா)கிய ஒரு பொருள் எதற்கும் ஆசிரயமாகாது" என்னும் உலக நியாயம் பரமாத்மாவின் விஷயத்தில் பொருந்தாது. ஏனெனில், பரமாத்மா அசரீரியாயினும் எல்லாப் பிரபஞ்சத்தையு முண்டாக்கும் மாயைக்கும், அதன் காரியங்களுக்கும் ஆசிரயமா யிருப்பதாகவும், அதனாலேயே, அவன் சர்வ சக்தி யுடையவனா யிருப்பதாகவும் சுருதிகள் கூறுகின்றன.

31 வது சூத்திரம் அவதாரிகை:—மேலே கூறியபடி பரமாத்மா சர்வ சக்தி யுடையவனாயினும், காரியம் செய்யும சக்தி அவனுக்கில்லை என்று ஆக்ஷேபம் கூறப் படுகின்றது. சேதனர் (அறிவுடையவர்)களாகிய மனிதர் முதலியோர் சக்தி யுடையவர்களாயினும், இந்திரியங்களின் உதவி இல்லாதபோது, வீடு கட்டுதல் முதலிய காரியங்களைச் செய்ய முடியாதவர்களா யிருப்பது பிரசித்தம். அவ்வாறே, பரமாத்மாவும் இந்திரியங்களில்லாதவனா யிருத்தலின் உலக சிருஷ்டி செய்யும் சக்தி யுடையவ னாகான் என்னும் இந்த ஆக்ஷேபத்திற்குச் சமாதானம் கூறப் படுகின்றது.

## சூ. 31 "விகாணத்வாந்நேதி சேத்ததுக்தம்,"

பதவுரை:—விகரணத்வாத்=சரீரம் முதலிய சாதனங்கள் இல்லாமற் போவதால், நேதிசேத்=பிரம்மம் ஜகத் காரணமாகாது என்பா யானல், ததுக்தம்= இதற்குச் சமாதானம் முன்னமே சொல்லப் பட்டிருக்கின்றது.

கருத்து:—முன்பே காட்டப் பட்டுள்ள "தேவாதி வதபிலோகெ" முதலிய சூத்திரங்களால், பிரம்மம் இந்திரிய சூனியமா யிருந்தும் எல்லா வியாபாரங்களையும் செய்யும் சக்தி வாய்ந்தது என்றும், சர்வ சக்தி யுடையது என்றும் காட்டப் பட்டது.

இந்தக் கருத்தையே சுருதியும் "பாதமில்லாதவ னுயினும் நடப்பவன், கை யில்லாதவ னுயினும் வாங்குபவன், கண்ணில்லாதவ னுயினும் பார்ப்பவன், காதில்லாதவ னுயினும் கேட்பவன்" எனக் கூறுகின்றது. ஆதலின், பரமாத்மா இந்திரியங்க ளில்லாதவ னுயினும் எல்லாச் சாமர்த்தியமு முள்ளவன் என்பது விளங்குதல் காண்க.

## 11-வது பிரயோஜனவத்த்வாதி கரணம்.

32 வது சூத்திரம். அவதாரிகை:—இது பூர்வ பக்ஷத்தைக் காட்டும்.

சூத்திரம். ஆப்த காமனுகிய பரமாத்மாவுக்கு இந்தச் சிருஷ்டியைச் செய்வதனுல் யாதொரு பிரயோஜனமும் இருப்பதாகத் தெரியாமையால், அவன், சிருஷ்டி கர்த்தாவாக இருக்க மாட்டான் என்னும் ஆக்ஷேபத்தைக் காட்டுகின்றது.

## சூ. 32. "நப்ரயோஜன வத்வாத்."

பதவுரை:—ப்ரயோஜன வத்வாத்=பிரவிருத்திகள் பிரயோஜன விசிஷ்ட மாகலின், ந=பரமாத்மா ஜகத் கர்த்தாவாக மாட்டான்.

கருத்து:—யாதொரு பிரயோஜனமு மில்லாமலே உலகத்தில் எவனும் ஒரு காரியத்தில் பிரவர்த்தித்தல் இல்லை. ஆகலின், எல்லாவற்றையும் குறைவறப் பெற்றுள்ளவனும் நிஷ்காமனுமாகிய பரமாத்மா பிரயோஜன மில்லாமலே பிரபஞ்ச சிருஷ்டியில் பிரவர்த்தித்தா னெனல் பொருந்துவ தெப்படி? தன் சொந்த பிரயோஜனத்திற்காக இந்தச் சிருஷ்டியைச் செய்தானென்றால், அவனுடைய "என்றுங் குறையாத திருப்தித் தன்மை" க்குத் தோஷமுண்டாகும். மற்றவர்களின் பியோஜனத்தின் பொருட்டு சிருஷ்டித்தா னென்பதும் சரியாகாது. ஏனெனின், இந்தச் சிருஷ்டியினுல் ஜீவர்களுக்கு எள்ளள வேனும் சுக ரூபமாகிய பிரயோஜனம் இல்லையென்பது நன்றாகத் தெரிந்த விஷயம். பிறருடைய துக்கத்தைக் காணச் சகிக்காமையால் தனக்குண்டான வியாகுலத்தை நீக்கும் பொருட்டுச் செய்தான் என்றால் அதுவும் சரியாகாது. ஏனெனில், "விஞ்ஞானம் ஆனந்தம் பிரம்மம்" என்பது போன்ற சுருதி வாக்கியங்களுக்கு விரோதம் சம்பவிக்கும். ஒரு கால், உன்மத்தனைப் போல, யாதொரு பிரயோஜனமு மில்லாமலே சிருஷ்டித்தான் என்றால், அதனுல் அவனது சர்வஞ்ஞத் தன்மைக்குப்

பழுதுண்டாகும். ஆகலின், இந்த சிருஷ்டியானது சேதனத்தின் காரியம் என்பது பொருந்ாது.

33-வது சூத்திரம். அவதாரிகை.—மேலே காட்டிய பூர்வபக்ஷம் நிராகரிக்கப் படுகின்றது.

சூ. 33. "லோகவத்து லீலாகைவல்யம்."

பதவுரை:—லோகவத்=உலகத்திற் போலவே, லீலாகைவல்யம்= சிருஷ்டியானது லீலாமாத்திரப் பிரயோஜன முடையது, து=ஆகலின், பூர்வபக்ஷம் யுக்தமன்று.

கருத்து:—உலகததில் அரசன் மந்திரி முதலியோர்கசு, எவ்வித பிரயோஜனமு மின்றியே கேவலம் லீலா ரூபப் பிரவிர்த்திகள் எவ்வாறு உண்டாகின்றனவோ, அவ்வாறே, ஈசுவரனுக்கும் பிரயோஜனத்தின் அபேக்ஷையின்றியே, சுபாவமாகவே கேவல லீலா ரூபப் பிரவிர்த்தி உண்டாகின்றது. சிருஷ்டியைச் செய்வதில் ஈசுவரனுக்கு எவ்விதமான பிரயோஜனமேனும் இருக்கின்ற தென்பதற்கு நியாயமில்லை; சுருதியுமில்லை. அவனியல்பு வெகு கம்பீரமானதா யிருத்தலின், இத்தகையது என்று அறிய முடியாததா யிருக்கின்றது.

முக்கிய கவனிப்பு:—சிருஷ்டியைக் கூறும் சுருதிகள் பரமார்த்த நிலையைப் போதிக்கப் பிறக்கவில்லை. அத்தியாரோபத்தினல் (தோற்றத்தைக் கூறுவதால்) முதலில் துவைதத்தைப் போதித்து, பிறகு, அபவாததால் (ஒடுக்கத்தைக் கூறுதலால்) அத் துவிதத்தைப் போதிக்கவே தோன்றின. (மாயா மாத்ர மிதம் த்வைத மத்வைதம் பரமார்த்ததஃ) நாம ரூப வியவகாரங்களெல்லாம் அவித்யா கற்பிதமென்றும், உண்மையில் பிரம்மமொன்றே சத்தியம் என்றும் சுருதிகள் முழங்குகின்றன.

12-வது வைஷம்ய நைர்குண் யாதிகாணம்.

34-வது சூத்திரம். அவதாரிகை:—"எவன் விஷமகாரியோ அவன் தோஷமுள்ளவன்" என்னும் நியாயத்தை யொட்டிப் பார்க்குமிடத்து உலகோற்பத்திக்குக் காரணமாயிருக்குந் தன்மை ஈசுவரனுக்கில்லை என்பது விளங்கும் என்று மற்றோர் ஆக்ஷேபத்தைப் பூர்வபக்ஷிகள் கூறுகின்றார்கள். அவர்கள் வாதம் என்னவெனில்,

உலகத்தில் உத்தம மத்திம அதம ரூபங்களாகிய தேவ மனுஷ்ய திரியக் (விலங்கு) முதலிய வித்தியாசமான சிருஷ்டிகளைச் செய்வதால், ஈசுவரன் பக்ஷபாத முள்ளவனுவான். மேலும் சீவர்களுக்கு நன்மையில்லாதவைகளாகிய தாபத்திரயங்களை கற்பிப்பதாலும், எல்லாப் பிராணிகளுக்கும் மரணத்தை யுண்டாக்குவதாலும் அந்த சிருஷ்டிகாரணனுகிய ஈசுவரனிடத்து குரூரத்தன்மை யிருப்பதாகவும் சொல்ல வேண்டிவரும். ஆகலின், ஈசுவரன் ஜகத் காரணனெனல் சரியாகாது என்பதே அவர்களின் வாதம். இந்த வாதத்திற்குச் சமாதானம் கூறப்படுகின்றது.

சூ. 34. வைஷம்ய நைர்குண்யே நஸாபேக்ஷத் வாத்ததாஹி தர்சயதி

**பதவுரை:**—ஸாபேக்ஷத்வாத்=ஜீவர்களின் தர்மா தர்மங்களினுடைய அபேட்சை யிருத்தலால், வைஷம்ய நைர்குண்யே=பக்ஷபாதமான தயை யற்ற தன்மைகள், ந=பிரம்மத்திற்குச் சம்பவியா, ததாஹி=இப்படியே யல்லவா, தர்சயதி=சுருதிகளும் செல்லுகின்றன.

**கருத்து:**—விஷமமான (வெவ்வேறு வகைப்பட்ட) சிருஷ்டிக்கு, சிருஷ்டிக்கப்படும் அந்தந்த பிராணிகளின் புண்ணிய பாவ வடிவ கருமங்களே காரணங்களா மன்றி, ஈசுவரனுடைய பக்ஷபாத குணங்கள் காரண மன்று. நிரபேக்ஷனாய் ஈசுவரன் இந்த விஷம சிருஷ்டி செய்தான் என்னும் பக்ஷத்தில், பிரதி பக்ஷிகள் கூறும் தோஷங்கள் சம்பவிக்குமே யன்றி, அபேக்ஷை யுடையவனாய் இதனைச் செய்தா னென்றால் அத்தகைய தோஷங் கள் சம்பவியா. பிராணிகளின் கர்மங்களுக் கேற்றவாறு சிருஷ்டி செய்த வில் ஈசுவரன் குற்றம் என்ன இருக்கிறது? ஈசுவரன் மேகம் போன்றவன். மேகமானது பயிர் முதலிய எல்லாவற்றிற்கும் சாதாரண காரணமாக இருப்பினும், அந்த அந்த விதைகளி னிடத்திலுள்ள அசாதாரண தர்மங் களினால் (சிறப்புத் தன்மைகளினால்) அவை பல் வேறு வகைப்பட்டனவா கின்றன. இப்படியே மனிதர் முதலிய சிருஷ்டிகளின் விஷயத்தில் ஈசுவ ரன் சமான காரணமா யிருந்தாலும், அந்தந்த ஜீவர்களின் புண்ணிய பாவங் களே அந்த ஜீவர்களைத் தேவர் மனிதர் முதலிய பிறவிகளாகச் செய்வ தற்கு விசேஷ காரணமாகின்றன. ஆகவின், இது ஈசுவரனுடைய தோஷ மல்ல.

35-வது சூத்திரம். அவதாரிகை:—பிரதி பக்ஷிகளின் மற்றொரு ஆக்ஷே பம்:—அப்படியானால், முதல் முதல் உண்டான சிருஷ்டிக்கு முன் வைஷம் யத்தி (வேறு பாட்டி)ற்குக் காரணமான கர்மத்தின் பேதமே இல்லை யல் லவா? ஆகவே, அந்தச் சிருஷ்டி ஒரே விதமாகவே இருந்திருக்கு மென்று சொல்ல வேண்டியதா யிருக்கும். அவ்வாறே பின் சிருஷ்டியும் பேதமற்ற தாகப் போகும். சிருஷ்டிக்குப் பின்பேயல்லாமல் சம்பவிக்க முடியாத சரீராதி பேதங்களை யபேக்ஷித்திருப்பது கர்மம்; கர்மத்தை யபேக்ஷித்தி ருப்பது சரீராதி பேதங்கள். ஆகவின், இந்த வாதத்தில் அன்னியோன் னியாசிரய தோஷ மிருத்தல் காண்க. (ஒன்றை யொன்று ஆசிரயித்து நிச்சயமான ஒரு முடிவுக்கு வரக் கூடாத நிலைமையை யுண்டு பண்ணுவதா கிய ஓர் குற்றம் அன்னியோன்னியாசிரய தோஷம் எனப்படும்.)

இவ்வாறு வந்த ஆக்ஷேபத்திற்குச் சமாதானம் சொல்லப் படுகின்றது.

சூ. 35. "நகர்மா விபாகாதிதிசேந்நா அநாதித்வாத்."

**பதவுரை:**—அவிபாகாத்=வைசித்திரங்களுக்கு எதுவாகிய விபாகம் இல்லாமற் போதலால், கர்ம=புண்ணிய பாவகர்மங்கள், ந=விஷம சிருஷ்டிக்குக் காரணமாயிருக்க முடியாது; இதிசேத்=என்றிவ்வாறு கூறுவாயானால், ந=அத் தோஷம் சம்பவியாது; ஏனெனில், அநாதித் வாத்=சம்சாரம் அநாதியாகலின்.

கருத்து:—சம்சாரம் அநாதியாகலின், கர்மமும் சிருஷ்டிபேதமும், காரண காரியத்தன்மையை யடைந்து, பீஜாங்குரம் போல (விதையும் செடியும் போல) பிரவிருத்தியை யடைகின்றன. ஆகலின், வேதாந்திகளின் சித்தாந்தம் குற்றமற்றது.

36-வது சூத்திரம். அவதாரிகை:—சம்சாரம் அநாதி என்பதற்குப் பிரமாணம் கூட்டப்படுகின்றது.

சூ. 36. "உபபத்யதே சாப்யுபலப்யதேச."

பதவுரை:—உபபத்யதேச=சம்சாரத்திற்கு அநாதித் தன்மை பொருந்துகின்றது, உபலப்யதேச=மேலும் பிரமாணமு மிருக்கின்றது.

கருத்து:—சம்சாரத்திற்கு அநாதித் தன்மையை அங்கீகரித்தால் மாத்திரமே சிருஷ்டியின் விபாகம் பொருந்துவதாகும். இன்றேல், சிருஷ்டியின் விபாகத்திற்குக் காரண மில்லையாகும். இப்படி, ஜனன மரணப் பிரவாக ரூபமான சம்சாரத்திற்கு அநாதித் தன்மையை அங்கீகரிக்கும் பக்ஷத்தில், கர்மமும் சரீரமும் விதையும் செடியும் போலப் பொருத்த முடையதாகும்.

## 13-வது ஸர்வதர்மோப பத்த்யதிகரணம்

37-வது சூத்திரம். அவதாரிகை:—நிர்க்குணமாயும் சேதனமாயுமுள்ள பிரம்மம் ஜகத்திற்கு அபின்ன நிமித்தோபாதான காரணம் என்பது வேதாந்த மதம்:—"நிர்க்குணமாகிய பதார்த்தம் சகுண வஸ்துவிற்கு உபாதான காரணமாகாது" என்னும் நியாயத்தை யனுசரித்து, நிர்க்குணமாயுள்ள பிரம்மம் முக்குணங்களோடு கூடிய இப் பிரபஞ்சத்திற்கு உபாதான காரணமாகாது என்பது பூர்வ பக்ஷிகளின் வாதம். இந்த வாதம் இங்கு நிராகரிக்கப்படுகின்றது.

சூ. 37. "ஸர்வதர்மோப பத்தேச்ச"

பதவுரை:—ஸர்வதர்மோபபத்தேঃ—ச=ஜகத்காரண தர்மங்கள் முழுவதும் பிரம்மத்தினிடத்துப் பொருந்துவதால் (உபநிடத வாக்கியம் பொருத்தமானதே.)

கருத்து:—பிரதிவாதிகள் வாதிப்பது போல, நிர்க்குணமானது வஸ்து சகுணமான வஸ்துவிற்கு பரிணாமோ பாதான காரணமாகாதே யன்றி, விவர்த்தோபாதான காரணமாகு மென்பதில் பாதகமில்லை. அறியப்படாத கயிறு, மித்தியா சர்ப்பத்திற்கு அதிஷ்டானமாகி, பயத்தையும நடுக்கத்தையும் உண்டாககுவதில்லையா? ஆகலின், வேதாந்த மதம் மிகப் பொருத்தமானதென்று அறிக.

# தலைவி எழுதிய படம்

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

இயற்கையரசி தனது ஒப்புயர்வற்ற அற்புதப் பேரழகு பெரிதும் சிறந்து விளங்கக் கொலு வீற்றிருப்பதொரு சிங்காரப் பூங்காவனம். பலவகைப்பட்ட மலர்களும் மெல்ல மெல்ல மெல்லிதழ் விரித்து நறுமணம் பரப்பி மலரத் தொடங்கிய மாலைக்காலம். செங்கழுநீர்மலர்கள் மலர்ந்திருப்பதொரு ஓடையின் கரையிலே அமைந்திருப்பதொரு அழகிய பளிங்கு மேடை. அம் மேடையின்மீது, சுமார் பதினெட்டு வய்து மதிப்புடைய சுந்தரி ஒருத்தி வீற்றிருக்கிறாள். கொடிய வெயிலில் வாடி வதங்கிய செந்தாமரை மலரைப்போல், அவளது முக மலர் பெரிதும் சோர்ந்திருக்கிறது. அவள் தனது மலர்க்கரங்களில் ஒரு படத்தை வைத்துக் கொண்டு, கவலை நிறைந்த மனதுடன் அதையே பார்த்துக் கொண்டிருக்கிறாள். அப் படத்தைப் பார்க்கப் பார்க்க, அவளது விழிகளினின்றும் நீர் தாரை தாரையாய்ப் பெருகி வழிந்து கொண்டிருக்கிறது. தனது மனத்தைக் கவர்ந்துகொண்டு மையல் பெருக்கியருளிய தனது இன்



னுயிர்த் தலைவராகிய தென்னரங்கத் தின்னமுதரைப் பிரிந்ததனால் விளைந்த பெருந் துயரைப் பொறுக்க முடியாமல், பெரிதும் தவித்து நிற்கிறாள் அவள். தனது ஆருயிர்த்தலைவராகிய அப் பெருமானைப் பிரிந்து தனித்துத் தவித்து நிற்கும் அவள்—தனது தலைவரது ஒப்புயர்வற்ற பேரழகு வாய்ந்த திருமேனியைக் கண்குளிரக்கண்டு களிப்பதற்கின்றி பெரிதும் ஏங்கி நிற்கும் அவள்—உள்ளத்திற்குள் ஒளிந்திருந்துகொண்டு தனது அகக் கண்ணுக்குக் காட்சியளிக்கும் கட்டழகனை, புறக்கண்களாலும் கண்டு களிக்கப்

பேராவல் கொண்டு நிற்கும் அவள், அப் பெருமானைச் சித்திரத்தில் எழுதி யேனும் எப்பொழுதும் கண் குளிரக் கண்டு களித்துக் கொண்டிருக்கலா மென்று எண்ணி யிருந்தாள். அவ் வண்ணமே, அவள் அப் பெருமானது திருவுருவத்தை மிக மிக அழகாகவும் எழுதி முடித்து விட்டாள். ஆனால், அத் திருவுருவப்படம், அவளது மனக்கவலையை மாற்றி மகிழ்வூட்டுவதற் குப் பதிலாக, அக் கவலையைப் பின்னும் பன்மடங்கு பெருக்கி விட்டது. எனவே, அப் படத்தைப் பார்க்கப் பார்க்க, அவளது மனத்தில் துன்பமே மேன்மேலும் பொங்கிப் பெருகுகிறது. அப் படத்தை நோக்கிய வண் ணமே, அவள் என்ன கூறுகிறா ளென்பதைச் சற்று கவனிப்போம்:—

"இந்தத் திருமுடி, உண்மையில் வெகு அழகாகவே அமைந்திருக் கிறது. நவமணிகள் பதிந்த இந்தத் திருமுடியிலே, திருத்துழாய் மாலையை யும் அழகாகவே எழுதி விட்டேன். மரகதம்—இரத்தினம்—நீலம் வைரம் முதலிய வெவ்வேறு நிற ஒளிகளுடைய மணிகள் பதிந்த முடியின் அடி யிலே, பசுமை நிறமுடைய திருத்துழாய் மாலை அமைந்திருப்பது மிக அழ காகவே இருக்கிறது. அந்த திருத்துழாய் மாலையிலிருந்து பெருகும் செந்தேனைப் பருகும் ஆர்வத்துடன், ஐந்தாறு பொன்வண்டுகள் அம் மாலையை மொய்த்துக் கொண்டிருப்பதுபோல் கூட சித்திரித்திருக் கிறேன். ஆயினும், என்ன பயன்? எம்பெருமானது திருமுடியில் அமைந் துள்ள திருத்துழாயின் மனோகரமான நறுமணத்தை, இப் படத்தில் அமைக்க முடியவில்லையே! என்ன ஏமாற்றம்! எனது முயற்சியில் நான் முழுத்தோல்வி அடைந்தேனென்பது, இப்பொழுதே எனக்கு விளங்கு கிறது!

இந்தக் கண்கள்—எனது ஹிருதயத்தில் ஊடுருவிப் பாயும் இந்தக் கண்கள்—முதலையின் வடிவமாகச் செய்வித்த அழகிய மணிக்குண்டலங் கள் அசைந்தாடும் திருச்செவிகளளவும் சென்று அவற்றைத் தழுவி நிற்கும் இந்த மோகனக்கண்கள்—சிந்தையை அடிமைகொண்டு விடும் இந்த செந் தாமரைக்கண்கள்—கண்டாரை மையலேற்றி மயக்கும் இந்த தண்டாம மரைக் கண்கள்—'கரியவாகிப் புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட இந்த பெரிய கண்கள்—ஏழை மங்கையரின் உள்ளத்தை உருக்கி உண்ணும் இந்த கள்ளக்கண்கள்—பல பலவாறு புரளும் இந்த மாயக்கண்கள்—சிந்தைக்கினிய செந்தாமரை யிதழின் நடுவில் அமர்ந்துள்ள கருவண்டை யொத்த இந்தக்கண்கள்—மெய்யன்பர்களின் உள்ளத்தையும் உயிரையும் உடலையும் ஒருங்கே உருக்கும் இக் கருந்தடங் கண்கள், மிக மிக இயற்கை யாகவும் அழகாகவுமே அமைந்து விட்டன. ஆனால், அந்தோ! என்ன ஏமாற்றம்! எனது இன்னுயிர்த் தலைவராகிய தென்னரங்கத் தின்னமுத ரது திருக்கண்களிலே நிறைந்து ததும்பும் சீரிய பேரருளை, இக் கண் களிலும் அமைக்கக்கூடிய சக்தி எனக்கில்லாமற் போய்விட்டதே! திரு வருட் பேரொளி வீசி உண்மை யன்பர்களின் உள்ளத்தை உருக்கி உருக்கி உண்ணும் திருவரங்கச் செல்வனாரது திருக்கண்களுக்கும், அழகிற் சிறந் திருந்தும் அருளொளி வீசப் பெறாத இக் கண்களுக்கும் இடையிலுள்ள வேற்றுமை, மலைக்கும் மடுவுக்கும் இடையிலுள்ள பெரு வேற்றுமையைப் போலல்லவா இருக்கிறது! என்னை முதன் முதலில் அடிமைகொண்டு,

இன்றளவும் எனது உயிரை உருக்கி உருக்கி உண்பதையே தமது தொழிலாகக் கொண்டிருக்கும் திருவரங்கேசரது திருக்கண்களில் பொங்கித் ததும்பும் திருவருட் பேரொளியை, கேவலம் எனது கலைப் பித்தினாலும் கைத் திறமையினாலும் படத்தில் சித்திரித்து விட முடியுமென்று நான் கொண்டிருந்த பேதைமைதான் என்ன!

செவ்வாயமிர்தம் ஊறித் ததும்பும் இந்த செங்கனிவாய்—வெற்றி முழக்கம் செய்யும் வீரவெண் சங்காழ்வான் படிந்து குடைந்தாடும் தூய தீர்த்தம் நிறைந்த இந்த கோவைவாய்—பல்லாயிரக்கணக்கான சுந்தரிகளின் உள்ளத்தைக் கொள்ளைகொண்டு தனது சம்பந்தம் பெற்று மகிழும் பாக்கியத்தைப் பெற ஏக்கம் மிகுந்து நிற்கச் செய்வித்த செங்கனிவாய்—பளபளவென்று குளிரொளி வீசும் முத்துப்பற்களின் அழகினால் பன்மடங்கு சிறந்து விளங்கும் செம்பவளவாய், மிக அழகாகவே அமைந்து விட்டது. ஆனால்.........ஆனால்.........இப்பொழுது இந்த செம்பவள வாயைக் கனிந்த நெஞ்சோடும் காதற் பெருக்கோடும் முத்த மிடுவேனானால், முன்னொருநாள் தென்னரங்கத் தின்னமுதர் எனக்குத் தந்தருளினாரே ஒரு முத்தம்—அக் கணத்திலே எனது ஹிருதயம் அனுபவித்ததே ஒரு ஆனந்தம்—அத்தகைய ஒப்புயர்வற்றதொரு பேரானந்தத்தை மீண்டும் நான் அனுபவிக்க முடியுமோ? இவ்வுலகம் முழுவதையுமே மறக்கச் செய்து எனது ஆத்மாவைப் பரவச மடையச் செய்துவிடக்கூடிய சக்தி, இப் படத்திலுள்ள இச் செவ்வாய்க்கு உண்டோ? அதுதான் போகட்டும்; எனது நெஞ்சக் கோயிலில் கம்பீரமாக வீற்றிருக்கும் எனது ஆருயிர்த் தலைவரின் செம்பவளவாயில் தோன்றும் ஜகன்மோகன சிங்காரப் புன்னகையின் அற்புதப் பேரழகை, இப் படத்திலுள்ள இத் திருவுருவத்தின் வாயில் காணேமே! செம்பவள வாய்திறந்து உண்மையன்பர்களுடன் உரையாடத் தொடங்கித் துடிதுடிப்பனவேபோல் தோன்றும் எனது இன்னுயிர்த் தலைவரது செங்கனிவாய் இதழ்களின் இயற்கையழகைப் பன்மடங்கு பெருக்கி பக்தர்களின் ஹிருதயத்தைப் பக்தி-பரவசமடையச் செய்துவிடும் மோகனப் புன்னகையை, படத்தில் அமைத்துவிட முடியுமென்று எனது உள்ளத்திற்குள் நான் கட்டிக் கொண்டிருந்த ஆசைக் கோட்டை அடியோடு இடிந்து குலைந்து விட்டதே!

கருணையே உருவான திருமகளின் திருவுள்ளத்திற்குப் பெருமகிழ்வூட்டக்கூடிய ஆலயத்தைப்போல் விளங்கும் திருமாலின் திருமார்பிலே—மங்கைகளின் மனத்தையும் உண்மையன்பர்களின் உள்ளத்தையும் எளிதில் அடிமை கொண்டுவிடும் வீரத் திருமார்பிலே—மணிமாலைகளும் மலர் மாலைகளும் அசைந்தாடும் மணிமார்பிலே, விண் மீன்கள் பலவற்றினிடையில் தனிப் பேரழகுடன் சிறந்து விளங்கும் தண் மதியேபோல், பலவகை மணிகளினிடையில் நடுநாயகமாகச் சிறந்துவிளங்கும் கௌஸ்துப மணியை மிக அழகாகவே எழுதி விட்டேன். ஆனால், அந்த கௌஸ்துப மணியினின்றும் எழுந்து பரவி நிற்கும் ஒப்புயர்வற்ற அற்புதக் குளிரொளியை, படத்தில் அமைத்து விடக்கூடிய சக்தி எனது எழுதுகோலுக்கு ஏது? எத்தகைய வர்ணங்களைக் கலந்து பார்த்தாலுங்கூட, அத்தகைய அற்புத ஒளியை உண்டாக்கிவிட முடியுமோ? பலவகை வர்ணங்களைக்கொண்டு

திருவரங்கேசரின் திருவுருவத்தை அழகாகவே எழுதி முடித்து விட்டேன்; ஆனால், அவற்றைக்கொண்டு ஒளியை—அதிலும் எம்பெருமானது திரு மார்பில் விளங்கும் கௌஸ்துபமணி வீசும் ஒப்புயர்வற்ற அற்புதக் குளிரொளியை—இதில் அமைப்பது எப்படி?

உயிர்களை யெல்லாம் படைத்த நான்முகக் கடவுளைத் தோற்றுவித்த உந்தி மலர், இந்த படத்தில் அழகாகவே அமைந்திருக்கிறது. ஆனால், அந்த சின்னஞ்சிறு சிங்கார உந்தியிலே அடங்கி யிருக்கின்ற எறும்பு முதல் பிரமன் வரையிலுள்ள எண்ணிறந்த உயிர்களை, இச் சிறு படத்திலுள்ள சின்னஞ்சிறு உந்தியில் என்னால் எவ்வாறு அடக்கிக்காட்ட முடியும்? தெய்வச் சிற்பியாகிய விச்வகர்மாவே முயன்றாலுங்கூட, அவ்வாறு அடக்கிக் காட்டுவதென்பது சிறிதும் முடியாத காரியமே யல்லவா? எம்பெருமானது உந்தி மலரைக் கண்குளிரக்கண்டு களித்தபோது, அது தன்னுள் அனைத்துயிரையும் அடக்கிக்கொண்டு—'எவ்வுயிர்க்கும் தாயாக இலங்கும் எம்பெருமானது தனிப்பெருங் கருணை'யை எனது நெஞ்சுக்குப் பன்முறை அறிவுறுத்திய தல்லவா? இந்த படத்திலுள்ள இந்த உந்தி மலரிலே, ஒரு உயிரை அமைத்துக் காட்டக்கூட எனக்கு சக்தியில்லையே!

இதோ இந்த திருவடி மலர்கள்—காலையிளங் கதிரவனின் பொன்னொளியினால் புத்தழகு பெற்று நீலநீரின்மேல் மெல்லிய காற்றில் உல்லாஸமாக அசைந்தாடும் செந்தாமரை மலரைப்போல் விளங்குகிற இந்த திருவடிமலர்கள்—தம்மைத் தழுவி நிற்கும் சின்னஞ்சிறு தங்கச் சதங்கைகளுக்கு இணையற்ற பேரழகு தந்து நிற்கும் இந்த திருவடி மலர்கள்—எல்லா வகைத் தாபங்களையும் மாற்றக்கூடிய எம்பெருமானாகிய திருக்குளத்தில் இறங்கி படிந்து குடைந்தாட விரும்பும் பக்தர்களுக்கு, இறங்கும் துறையாக இலங்கும் இந்தத் திருவடி மலர்கள்—எனது ஹிருதயமாகிய சிங்காசனத்தில் வீற்றிருந்து என்னை ஆண்டுவரும் இந்தத் திருவடி மலர்கள், இப் படத்தில் மிக மிக அழகாகவே அமைந்து விட்டன. ஆனால், எம்பெருமானது திருவடி மலர்களில் அடங்கி நிற்கும் கங்கா தேவியை, இப் படத்திலுள்ள திருவடிகளில் என்னால் எப்படி அடக்கிக்காட்ட முடியும்? பொங்கி எழுந்து பரந்து வேகமாக ஓடிவரும் கங்காதேவியைத் தமக்குள் அடக்கிக் கொண்டு விடக்கூடிய சக்தி, எம்பெருமானது திருவடிகளுக்கு உண்டு; ஆனால், அந்த மகாதேவியை இப் படத்திலுள்ள திருவடிகளில் அமைத்துக் காட்டக்கூடிய சக்தி, எனது எழுதுகோலுக்கு ஏது?

திருத்துழாய் மணம் கமழாத திருமுடியையும் திருவருட் பேரொளி வீசாத திருக்கண்களையும் புன்னகையழகு பொருந்தாத திருவாயையும் குளிரொளி பரப்பாத மணியணியுடைய திருமார்பையும் தன்னுட் கொண்டுள்ள ஆன்மகோடிகளை நினைவூட்டாத திருவுந்தியையும் கங்காதேவியை அடக்கிக் கொண்டிராத திருவடிகளையும் கொண்டுள்ள இப் படத்திலுள்ள இத் திருவுருவம், எம்பெருமானது பிரிவாற்றாமல் தனித்துத் தவித்து நிற்கும் எனது ஆன்மாவுக்கு ஆறுதலையும் ஆனந்தத்தையும் எவ்வாறு அளிக்க முடியும்? எம்பெருமானது உண்மைத் திருவுருவைக் கண் குளிரக்கண்டு களிப்பதற் கில்லாமல் பெரிதும் ஏங்கித் தவித்துக் கொண்டிருக்கும் எனது ஆன்மாவுக்குப் பேராறுதலாக இருக்கக் கூடுமென்ற ஆர்வப் பெருக்

னு லல்லவா, இத் திருவுருவப்படத்தை எழுதி முடித்தேன்! அந்த ஆர்வம், இப்பொழுது சிறிதளவும் நிறைவேறுமற்போய்விட்டதே! எம்பெருமானது பிரிவினுல் விளைந்த துயரத்தின் கொடுமை, முன்னிருந்ததைக் காட்டிலும் இப்பொழுது பன்மடங்கு பெருகிவிட்டதே! ஆறுதலும் ஆனந்தமும் பெறுவதற்காக மேற்கொண்ட முயற்சி, முடிவில் பயங்கரமான ஏமாற்றமாக வல்லவோ முடிந்துவிட்டது! ஒருவரது உருவத்தைச் சித்திரத்தில் அமைத்து விடக்கூடிய சித்திரவித்தையைக் கண்டுபிடித்தவர்கள், அவர்களது குணம்—மணம்—செயல் முதலியவற்றையும் சித்திரத்தில் அடக்கிக் காட்டக்கூடிய வித்தையையும் கண்டு பிடித்திருந்தால், எவ்வளவு நன்று யிருக்கும்! அவ் வித்தை மட்டும் எனக்குத் தெரிந்திருந்தால், எனது இன்னுயிர்த் தலைவரது பிரிவாற்ருமையால் யான் இப்பொழுது அனுபவித்துக் கொண்டிருக்கும் கொடுந் துயரத்தைச் சிறிதும் அனுபவிக்கவேண்டி யிராதல்லவா?

என்னே, என் மதியீனம்! எனது ஹிருதய சிம்மாசனத்தில் கம்பீரமாக வீற்றிருந்து கொண்டு என்னை ஆண்டருளும் எனது இன்னுயிர்த் தலைவரின் இணையற்ற வடிவழகை, கேவலம் கற்பனு சக்தியினுலும் கைத்திறமையினுலும் படத்தில் சித்திரித்து விட முடியுமென்று நான் கொண்டிருந்த நம்பிக்கை எவ்வளவு கேவலமானது! ஆ! அதோ, என் ஆருயிர்ச்



செல்வன்! அதோ, என் ஆசைக் கற்பகம்! அதோ, என் காதற் களஞ்சியம்! அதோ, என் கருத்தைக் கவர்ந்த கட்டழகன்! அதோ, எனது ஆருயிரை ஆண்டுகொண்ட பேரருளாளன்! என் உயிரே! என் அரசே! என் செல்வமே! என் தெய்வமே! ஏன் என்னைப் பார்த்து அவ்வாறு சிரிக்கிருய்? போதுமே, உன் பரிகாசம்! எனது உயிரைச் சித்திரவதை செய்யும் அந்த ஏளனச் சிரிப்பைக் கொஞ்சம் நிறுத்திக் கொள்ளேன்! ஒப்புயர்வற்ற

பேரின்பத்தை அனுபவிக்கும்படி அருள் செய்துவிட்டு நீ திடீரென்று மறைந்து பிரிந்து போயிருந்ததனு லல்லவா, பிரிவாற்ருமையின் கொடுமையினுல் விளைந்த பித்துப் பெருக்கினுலல்லவா, உனது ஒப்புயர்வற்ற வடிவழகு சித்திரத்தில் அடக்கி அமைக்கப்பட முடியாத தென்பதைச் சிறிதும் சிந்தித்துப் பாராமலே, இந்த படத்தை நான் எழுதி முடிக்க நேர்ந்தது! கரியகடலின் நடுவிடமும் பிளவுறும்படி சுழித்து பொன்னும் முத்தும் மணியும் கொழித்து அலை மோதி மேற்றிசையினின்றும் வெகு வேகமாக ஓடிவரும் 'கங்கையிற் புனிதமாய காவிரியின் நடுவிலே, ஐந்தலையாவப் பள்ளியிலே அறிதுயில் கொள்ளும் அமிர்த வடிவினனுகிய நீ, உனது மெய்யடியவர்களை எழுவகைப் பிறவியுள் எழுதிக் கலங்கி நிற்கச் செய்யாமல் தடுத்தாட் கொண்டருளும் தனிப்பெருங் கருணையாள னல்லவா? உனது ஒப்புயர்வற்ற அற்புத வடிவழகைச் சித்திரத்திற்குள் அடக்கி அமைக்க முயன்றதே எனது பெரும் பிழைதான்; அதை நான் ஒத்துக் கொள்ளுகிறேன். ஆனுல், அப் பெரும்பிழைக்கும் காரணமாக இருந்தது, உனது பிரிவின் கொடுமையே யல்லவா? எனவே, நான் செய்த பெரும்பிழையின் முழுப் பொறுப்பையும், நீ என்மேல் சுமத்துவது தருமமா? நடந்து விட்டதைக் குறித்துப் பன்னிப் பன்னிப் பேசுவதால் பயனென்ன? நான் செய்துவிட்ட பெரும் பிழைக்கு உரிய தண்டனையை, இப்பொழுதே நீ கொடு; நான் ஏற்றுக்கொள்ளுகிறேன். எனது ஆருயிர்க் காசே! எனது காதற்கனியே! எங்கே, யான் இழைத்த பிழைக்குத் தகுந்த தண்டனையாக, உனது செங்கனிவாயினுல் ஒரே ஒரு முத்தம் தர மாட்டாயா?"—என்று கூறியவாறே எதிரில் தோன்றிய திருவரங்கச் செல்வனுரது உருவெளித் தோற்றத்தை நோக்கி ஆர்வத்தோடு செல்கிருள் அந்த சுந்தரி. அவ் வுருவத்தை அவள் ஆர்வப் பெருக்கோடு கட்டித் தழுவி முத்தமிட்டுக் கொள்கிருள். ஆனுல், அந்தோ! என்ன ஏமாற்றம்! அவளது ஆலிங்கனத்திற்கு உள்ளானது, ஒரு முல்லைச்செடி! அவ்வுண்மை உணர்ந்தவுடன், அவளது ஹிருதயத்தில் தோன்றிய பயங்கரமான ஏமாற்றத்தின் அதிர்ச்சியினுல், அங்கே—அப்பொழுதே—அவள் தன்னை மறந்து மூர்ச்சித்து விழுந்து விடுகிருள்! ஐயோ, பாவம்! அவ்விடத்திலே, அவளது மூர்ச்சையைத் தெளிவித்து, அவளைத் தேற்றி, அவளது துயரத்தை மாற்றி மகிழ்விக்கக்கூடியவர்கள் யாரையும் காணேமே!

(இக் கட்டுரைக்கு ஆதாரமாக விளங்குவது, "வாழும் மவுலித்துழாய் மணமும்"—என்று தொடங்கும் திருவரங்கத்திலுள்ள முப்பத்து மூன்ருவது திருப்பாசுரம்.)





# மனித வாழ்க்கையும், இராமலிங்கரும்

---

(பே. இராமாநுஜம்.)

நமது போற்றுதற்குரிய மகான்களில் மனிதப் பிறவியை விரும்பியவர்களும் இருந்திருக்கின்றார்கள்; வெறுத்தவர்களும் இருந்திருக்கின்றார்கள். "எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதான் யாதினும் அரிதரிது" எனத் தாயுமான சுவாமிகளும், "மனிதப் பிறவியும் வேண்டுவதே" "வாய்த்தது நந்தமக்கு ஈதே பிறவி" என அப்பர் சுவாமிகளும் அருளியிருக்கின்றார்கள். "புலையாம் பிறவி பிறந்தென்செய்தோம்" எனப் புலம்புகின்றார் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார். இவ்வாறு ஒன்றற்கொன்று விரோதமுடையவைபோல் தோன்றும் இவ்வாசகங்கள் உண்மையில் விரோதம் உடையவைதானா என்பதை நாம் சிந்திக்கவேண்டும். கண், கால், செவி முதலிய அவயவங்களில் ஊனமில்லாமல் மனிதவுடல் தாங்கிப் பிறந்துவிடுவதால் ஒருவன் மனிதனாகி விடமாட்டான். அவ்வாறு பிறப்பது அரிதுமல்ல. சில வருடங்களுக்கு முன்பு வரையில் 30 கோடி ஜனத்தொகையாயிருந்த பாரத தேசம் இன்று 36 கோடி எண்ணிக்கைக்கு வந்துவிடவில்லையா? இத்தகைய ஜனப்பெருக்கத்தால் எண்ணிக்கை அதிகம் என்பது ஒன்றைத் தவிர வேறென்ன பெருமையைப் பெற்றிருக்கின்றோம்? மனித உருத் தாங்கிப் பிறப்பது எளிதேயாகும். ஆனால் மனித உடலோடு பிறந்த நாம் மனிதத் தன்மையோடு வாழ்வதுதான் அரிது. மனிதத் தன்மையைப் பெறுதவரையிலும் மனித உடலோடு பிறந்திருப்பினும் மனிதர்கள் ஆகமாட்டோம்.

நாம் மனித உடலோடு பிறந்திருப்பினும் மனிதத் தன்மையைப் பெற்று வாழ முயற்சிக்கவேண்டும். "நல்லது, மனிதத் தன்மையைப் பெறுவதற்கு என்ன செய்யவேண்டும்?" என்று சந்தேகம் நம்மில் பலர்க்கு நேரலாம். இந்த ஐயத்தைத் தீர்த்துக்கொள்ள நாம் நமது முதற் பாவலராகிய திருவள்ளுவரைத்தான் தஞ்சமாக அடையவேண்டும். அவர் நமது ஐயத்தைத் தீர்த்துவைக்க எப்பொழுதும் ஆயத்தமாகவே இருக்கிறார். "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் மனிதனாவான்" என்று கூறுகின்றார். அவர் வையத்துள் வாழ்வாங்கு வாழ்தலாவது பூமியில் மனிதவுடலோடு பிறந்தவர்க்கு இயற்கை நியதி எவ்வாறு ஏற்பட்டிருக்கிறதோ அதை

யநுசரித்து வாழவேண்டும். மனிதப்பிறவியின் இயற்கை நியமமாகிய "வாழ்வாங்கு" வாழ்தல் என்ற நாயனுரின் திருவுளக் கருத்தை யறியாத மந்த மதியினனுகிய நான் "நான் பார்க்கிறேன்-பேசுகிறேன்—நடக்கிறேன்—உண்கிறேன்; இவைபோன்ற செயல்களெல்லாம் மனிதப் பிறவிக்கு ஏற்பட்ட நியமங்கள்தானே? இவ்வகையில் வாழும் நான் மனிதனுகேனே?" என்று நினைக்கின்றேன். "நீ எவ்வாறு மனிதனுவாய்? நீ வாழ்வதாக நினைப்பதெல்லாம் வீண்—வாழ்வேயல்ல" என்று மறுத்து "வகையொழிய வாழ்வாரே வாழ்வார்—யார் பழி முதலியவற்றினின்று நீங்கி வாழ்க்கை நடத்துகின்றுரோ அவர்தான் வாழ்பவரென்று மதிக்கப்படுவார். வாழ்வதாகவே மதிக்கப்படாதபோது மனிதனுவது எப்படி?" என்று அறிவுறுத்துகிருர் பெருநாவலர். பின்பு அப்பெருந்தகையாளரே பழி முதலியவற்றினின்று நீங்க விரும்பின் "ஈதல் இசைபட வாழ்தல்—பிற வுயிர்களுக்கு உற்ற சமயத்து உதவிபுரிந்து வாழ்வதால் பழியினின்று நீங்கலாம்" என நமக்கு வழியும் காட்டுகிருர்.

இவ்வாறு எல்லா உயிர்களுக்கும் உதவி செய்து வாழ "நான் அன்புடையவனு?" என்று என்னை நானே சோதித்துக்கொள்ளவேண்டும். நான் எனது மனைவி மக்கள் சுற்றத்தார் அநாதைகள் முதலிய அனைவரிடத்திலும் சம அன்பு காட்டுகிறுனு என்பதை உணர்ந்து நடக்கவேண்டும். இவ்வெண்ணமில்லாமல் என்னைப் பொறுத்தவரையில் எனது உறுப்புக்களெல்லாம் உண்டல்—பார்த்தல் முதலிய தொழில்களைச் செய்கின்றன. அதனுல் வாழ்கின்றேன்—மனிதன் ஆனேன் என்று நினைப்பது பெருந்தவறு.

"புறத்துறுப் பெல்லாம் எவன் செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பி லவர்க்கு"

என்றபடி மனத்திற்கின்றியமையாத அன்பில்லாமல் வெறும் புறவுறுப்புக்களால் பயனில்லை. இதைச் சில உதாரணங்கள் மூலம் விளக்க முயல்கின்றேன்.

நான் வீட்டில் தனித்திருக்கையில் பிச்சைக்காரன் ஒருவன் வாசலில் வந்து நின்றுகொண்டு "தாயே! பசி காதடைக்கிறது; கொஞ்சம் சோறு போடுங்க!" என்று கூப்பிடுகிறுன். நான் அவன் கூப்பாட்டைக் கேட்டதும் "வீட்டில் ஒருவரும் இல்லை, இன்னொரு வீட்டிற்குப் போ" என்று சொல்ல நினைக்கிறேன். நினைத்தவன் "வீட்டில் ஒருத்தரும் இல்லையா? நீங்கள்தான் இருக்கிறீர்களே! பரதேசிக்குக் கொஞ்சம் அன்னம் போட்டு அனுப்புங்கள்" என்று நம்மையே அவன் வற்புறுத்தினுல் என்ன செய்வது? நம் வாயால் ஏன் இல்லையென்று சொல்லி வீண் விவாதத்திற்கு இடம் வைத்துக்கொள்ளவேண்டும்? என்று மறுபடியும் சிந்தித்து அவன் கூக்குரல் காதில் விழாதவன்போல் மௌனமாகவே இருந்துவிடுகிறேன். அவன் பலமுறை கூப்பிட்டுவிட்டு சபித்துக்கொண்டே வேறொரு வீட்டிற்குச் சென்றுவிடுகிறுன். ஒரு சிறிய ஊசி தரையில் விழுந்தாலும் கேட்கக்கூடிய அவ்வளவு தெளிவான செவிப் புலன்களை நான் பெற்றிருந்தும் என்ன பயன்? அவனுடைய துன்ப வொலிக்கு எனது செவியில் இட

மில்லை. இத்தகைய காதுகளை "ஓட்டைச் செவிகள்" எனப் பரிகசிக்கின்றார் வள்ளுவப் பெருந்தகையார்.

கழைக் கூத்தாடி ஒருவன் தெருவில் பலவித விளையாட்டுகளெல்லாம் செய்து முடித்த பிறகு கூட்டத்தாரைப் பார்த்து "பிரபுக்களே! இவ்வளவு நேரம்வரை என்னுடைய பலவிதமான விளையாட்டுத் திறமைகளையெல்லாம் பார்த்து சந்தோஷப்பட்டீர்கள். இன்னும் ஒரே ஒரு வேலை இருக்கின்றது. அதையும் பார்த்துவிட்டு உங்களுக்குத் தோன்றியதைக் கொடுத்துக் காப்பாற்றவேணும்" என்ற பீடிகை போட்டுவிட்டு, ஒரு இளஞ் சிறுவனைத் தரையிற் கிடத்திக் கூரிய வாள் ஒன்றினால் அவன் வயிற்றைக் கீறுவதுபோல ஓர் ஜாலம் செய்ய முற்படுகிறான். அதுவரையிலும் கூட்டத்தோடு கூட்டமாக இருந்து அவன் செய்து காட்டிய விளையாட்டுகளைக் குதூகலமாகப் பார்த்துக்கொண்டிருந்த நான் "பாவிப் பயல்–வயிறு வளர்ப்பதற்காக இதுபோன்ற கோரக் காட்சியையா காட்டவேண்டும்?" என்ற முணுமுணுப்போடு அக் கூட்டத்திலிருந்து மெல்ல நழுவிவிடுகிறேன். அவன் செய்வது உண்மையல்ல–போலி–ஜாலம் என்பதை எனது கண்களும் மனமும் அறிந்திருந்தும் அதைப் பார்க்க உடன்படவில்லை. இது நல்லதுதான். போலித்தனமான கோரக் காட்சியைப் பார்த்துப் பழகிய கண்ணும் மனமும் நாளடைவில் உண்மைத் துன்பச் செயல்களையே அமைதியோடு பார்க்க ஒருப்பட்டு எனது நெஞ்சத்திருக்கும் "கொஞ்சநஞ்சம்" அன்பு ஊற்றையும் வற்ற அடித்துவிடும். ஆனால் அவற்றைப் பார்க்கச் சகியாமல் சென்ற நான் "எதற்காக அவன் இந்தத் துன்பக் காட்சியைக் காட்ட முற்பட்டான்? வயிற்றின் கொடுமைக்காக அல்லவா?" என்று சிந்தித்து மனமிரங்கி, அவன் விரித்திருந்த பழந் துணியில் ஒரு காலணாவைப் போட்டுவிட்டு வந்திருக்கவேண்டும். அவ்வாறு செய்ய என் மனம் ஒருப்படவில்லை.

கிராமங்களில் நடைபெறும் திருவிழாக் காட்சிகளை ஆனந்தமாகக் கண்டுகளித்துக் கொண்டிருக்கையில் ஆடு கோழி முதலியவற்றைப் பலியிட முயலும்பொழுது, "கொடுமை! கொடுமை! தெய்வம் இத்தகைய ஜீவ ஹிம்சையையா விரும்புகிறது?" என்று அதைப் பார்க்க ஒப்பாமல் அவ்விடத்தினின்றும் சென்றுவிடுகின்றேன். இவ்வாறு நான் சென்றுவிடுவதால் அவை மரணத்தினின்றும் தப்பிவிடுமா? இன்னும் சில நிமிஷநேரத்தில் பதைபதைத்து உயிர்விடப் போகின்றன என்பதை எனது கண்கள் எனக்கு அறிவித்திருந்தும் நான் அதைப் பொருட்படுத்தவில்லை. நாம் நமது காதுகளினால் இன்ப ஒளியையும் கேட்கலாம், துன்ப ஒளியையும் கேட்கலாம். இன்ப வோசையைக் கேட்கும்பொழுது மகிழ்வடைகிறோம். துன்ப வோசையைக் கேட்கும்பொழுது மனம் இரங்கி, அவ்வொலி வரும் இடத்திற்கு விரைந்து சென்று அத் துன்பச் செயல் நிகழவொட்டாமல் நம்மால் இயன்றவரையில் தடுக்க முற்படவேண்டும். அவ்வாறே நமது கண்களால் நல்லனவும் பார்க்கக்கூடும். அல்லனவும் பார்க்கக்கூடும். நல்லனவற்றைப் பார்க்கும்பொழுது குதூகலமடைகிறோம். அல்லனவற்றைப் பார்க்க நேர்ந்தபொழுது மனமிரங்கி விரைந்து சென்று அத்துன்பச்செயல் நடைபெறவொட்டாது தடுக்க முயலவேண்டும். "கொன்றால் பாவம், தின்றால் போச்சு" என்னும் பழமொழிக் கிணங்க "நாம் கண்ணால் பார்த்

தால்தானே பாவம்; காதால் கேட்டால்தானே பாவம்" என்று கண்களை இறுக மூடிக்கொள்வதாலோ, காதுகளை இருகரத்தாலும் அடைத்துக் கொள்வதாலோ நாம் பழிபாவங்களினின்று தப்பியவர்களாகமாட்டோம்.

நற்குண நற்செயல்களால் நாம் நல்லுணர்வு அடைகின்றோம். இந்நல்லுணர்விலிருந்து முகிழ்ப்பது அன்பு—ஜீவகாருண்யம். அன்பில்லாமல் ஒருவன் வாழ்கிறேன் என்று சொல்வது ஒப்பமுடியாத செய்தி. பட்ட மரம் தளிர்த்தது என்றால் நாம் நம்புவோமா? அதிலும் ஈரம் என்பதே மருந்திற்கும் அகப்படாத கொடிய நிலத்தில் பட்டுப்போன மரம் துளிர்விட்டுத் தழைக்கிறது என்று ஒருவன் சொன்னால் நாம் எப்படி அதை அசம்பாவிதம் என்று தள்ளிவிடுகிறோமோ அப்படித்தான் அன்பில்லாதவன் வாழ்கிறேன் என்று சொல்வதும்.

"அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல்மரம் தளிர்த் தற்று"

என்பது வள்ளுவர் திருமொழி. ஆகவே பிற ஜீவராசிகளின் இன்ப துன்பங்களில் கலந்து அவற்றிற்கு உதவவேண்டும் என்ற விரிந்த சிந்தை யில்லாத வரையில் நாம் மனிதர்க ளாகமாட்டோம்.

"நான் ஒரு மானுடன் நான்மதி யாதன
மானுட வாழ்வில் இலை"

என்ற பரந்த நோக்கம் நமக்கு இருக்கவேண்டும்.

"எவனே இதர மனிதர்மா பறவைகள்
அவனிவாழ் உயிர்க்கெலாம் அகம் கனிந்து உருகி
அன்பு பெருகுவோன் அவனே மனிதன்;
பெரியன சிறியன என்றுபே ணாமல்
உரியன உதவிக்கு உயிரெலாம் என நினைந்து
அருள்பழுத் தவனே ஆன்ற மனிதன்;
என்னெனின் இனியநம் ஈசனே படைத்த
மன்னுயிர் அனைத்தையும் மகிழ்ந்தளிப் பவனே"

என்று மனிதனவான் இவன் என மிகத் தெளிவாகக் கூறியிருக்கின்றார் ஒரு பெரியார். ஆகையால் மனிதத் தன்மையோடு கூடிய பிறவியை எவரும் வெறுப்பதற்கே இல்லை.

எனவே மனிதப் பிறவியின் விழுமிய நோக்கம் இறைவன் திருவருளுக்கு இலக்காகி அவன் பாதாரவிந்தங்களை அடைவதுதான். ஆண்டவன் அருளுக்கு நாம் பாத்திரராக வேண்டுமாயின் அவனால் படைக்கப்பட்ட அனைத்துயிர்களிடத்தும் அன்புடையவராக வேண்டும். உலகத்துள்ள சகல ஜீவராசிகளும் இறைவனால் படைக்கப்பட்டவையே யல்லவா? இங்ஙனம் அவனால் படைக்கப்பட்டு, அவனுக்குச் சொந்தமான உயிர்களிடத்தில் அன்

பில்லாமல், நம்மீது மட்டும் அவன் அருள் பாலிக்கவேண்டும் என்று எதிர் பார்ப்பது நேர்மையானதாகுமா? இதனுல்தான் தாயுமான சுவாமிகளும்,

எவ்வுயிரும் என்உயிர்போல் எண்ணி இரங்கவும்நின்
தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே"

என்று பரம்பொருளிடத்தில் முறையிடுகின்ருர். அன்புகனிந்த நெஞ்சின ராய்—அருள்பழுத்த உளத்தினராய் வாழ்வு நடத்துபவர்களை மனிதரென்று அழைக்க ஒருப்படாது, தேவருள் ஒருவராக மதித்துப் போற்றுகிருர் நமது முதற் பாவலர்.

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப்படும்"

என்பது அவர் திருமொழி.

இராமலிங்க அடிகள் அழகு பொலியும் மனித உருத்தாங்கி, மனித வாழ்வு நடாத்தி, தேவர் குழாத்துள் ஒருவராக இன்று நமக்குக் காட்சி தருகிருர். அப்பெருமான் அன்பும் அருளும் அறிவும் ஓர் உருவமாயமைந்த பெரியார். சாதி சமய வேறுபாடில்லாத சமரசஞானி. பிறவுயிர்களின துன்பம் துடைத்தலையே தமது வாழ்க்கையின் நோக்கமாகக் கொண்டவர்.

"மண்ணுலகதிலே உயிர்கள்தாம் வருந்தும்
வருத்தத்தை ஒரு சிறிதேனும்
கண்ணுறப் பார்த்தும் செவியுறக் கேட்டும்
கணமும் நான் சகித்திடமாட்டேன்"

என்று சுவாமிகள் உளங்கனிந்து அருள்பெருகி உரைத்திருக்கின்ருர். இத்ஞல் மற்றெந்த மகான்களுக்கும் வழங்காத "வள்ளலார்" என்ற தனிச் சிறதப் பெயரை இவர் அடைந்திருக்கின்ருர். ஒரு புறவிற்காகத் தன் உடலையே கொடுக்க முற்பட்ட சிபிச் சக்ரவர்த்திக்குக் கூட இப் பெயர் வழங்கவில்லை. ஏனெனில் நமது சுவாமிகள் சீவராசிகளின் ஊனுடலுக்குநேர்ந்த துன்பங்களை நீக்கி வந்ததோடு உயிருக்கு உறுதியான சன்மார்க்க நிலைகளைப் போதித்துக் காப்பாற்றி வந்தார். இவ்வாறு உடல் உயிர் இரண்டிற்கும் உறுதுணையா யிருந்ததனுல் "வள்ளலார்" என்ற தனித்திருநாமம் நமது அடிகளுக்கே வழங்குவதாயிற்று.

சுமார் 65 வருடங்களுக்கு முன்பு வாழ்ந்த இராமலிங்க சுவாமிகளின் ஞானேபதேசங்கள் தற்காலத்து வாழும் நம்மவர்க்கு எவ்வளவு பொருத்தமாயும் இன்றியமையாதனவாயும் இருககின்றன என்பதைச் சிந்திககும் பொழுது நமதுள்ளம் பூரிப்படைகின்றது. சுவாமிகளின் குணுதிசயங்களைப் பற்றிக் கூறும்பொழுது "சாதி சமயம் கடந்த சமரச ஞானி—ஈ எறும்பு முதலிய சகல ஜீவராசிகளிடத்திலும் அளவற்ற அன்புபூண்ட கிருபா சமுத்திரம்" என்று இவைபோற்ற குணநலன்களைப் பற்றிச் சொல்லுகிருேம். நமது மதிப்பிற்குரிய பெரியோர்கள் எல்லோரும் வெறும் ஆகாயக் கோட்

டை கட்டியவர்களல்லா. மற்றவர்கள் எவ்வாறு நடக்கவேண்டுமென்று விதித்திருக்கிறார்களோ அவ்வாறே தாங்கள் முதலில் நடந்து அநுபவித்து உணர்ந்தவர்கள். அவ்வாறு உணர்ந்த பின்பே "இவற்றால் நன்மையுண்டாகும்; ஆதலின் இன்னின்னவாறு நடக்கவேண்டும்" என நம்மனோர்க்கு விதித்துப்போயிருக்கிறார்கள். ஒரு மகானுடைய ஜீவிய காலத்தில் நாம் எல்லோரும் வாழும் பாக்கியம் பெற்றிருக்கின்றோம். அந்த மகானுடைய குணாதிசயங்களும், தருமோபதேசங்களும் எத்தன்மையன? மக்கள் எவ்வாறு நடந்து கொண்டால் நல்வாழ்வு பெறக்கூடும் என்பதைத் தாமே நடந்து அநுபவித்துத் தேர்ந்தவற்றையே நமக்கு நல்வழியாக-சன்மார்க்கமாகக் காட்டி வருகின்றார். அம்மகான் காந்தியடிகள்தான் என்பதை உங்களுக்குச் சொல்லவேண்டியதில்லை.

நமது இராமலிங்க அடிகளும் தமது வாழ்க்கையில் அநுபவித்து உணர்ந்தவற்றையே நமக்கெல்லாம் அருட்பாக்கள் மூலமாக அறிவு புகட்டியிருக்கிறார்.

"சாதியிலே மதங்களிலே சமய நெறிகளிலே
சாத்திரச் சந்தடிகளிலே கோத்திரச் சண்டையிலே
ஆதியிலே அபிமானித் தலைகின்ற வுலகீர்!
அலைந்தலைந்து வீணே நீர் அழிதல் அழகலவே."

என்ற அடிகளின் திருமொழி சாதிப் போராலும் சமயப் பூசல்களாலும் அறிவிழந்து—ஆண்மை குன்றி—உரிமை யிழந்து அவதியுறும் நமக்கு எவ்வளவு பொருத்தமான உண்மை யுரையாய்த் திகழ்கின்றது. மக்கள் தோன்றிய ஆதிகாலத்தில் சாதிகள் தோன்றியிருப்பதற்கு நியாயமில்லை. அவர்களனைவரும் நமது இறைவனால் படைக்கப்பட்டவர்களே. ஜனத்தொகை சிறிது பெருக்கமடைந்தகாலத்தில் வாழ்வில் சுகம் வேண்டியும், தொழில் முறையில் வளர்ச்சியுற வேண்டியும் செயல்களினால் சாதிகள் ஏற்பட்டிருக்கலாம். ஆகவே இச்சாதிப் பிரிவினை கூடாதென்று நீண்ட காலத்திற்கு முன்பிருந்தே பல பெரியோர்கள் கூறிவருகிறார்கள். இவ்வுலகின் முன்னேற்றத்திற்குப் புத்த பகவான் செய்த முயற்சிகளுள் சாதிப் பிரிவினையை ஒழிக்க எடுத்துக் கொண்ட முயற்சியும் ஒன்றாகும். எனினும் அம்முயற்சி பூரண வெற்றி பெறவில்லை. இப்பொழுது நிலைமை சிறிது மாறிவருகிறது. சில வருஷங்களுக்கு முன்பெல்லாம் ஒவ்வொருவரும் தமது பிறப்பின் உயர்வைப் பற்றிப் பெருமை யடித்துக்கொண்டார்கள். ஆனால் இன்று தமது பெயர்களுக்குப் பின்னால் வழங்கிவந்த சாதிப் பெயரைச் சேர்த்துக கொள்வதையும் விட்டுவிட்டார்கள். ஏன்? சாதி இறுமாப்பால் விளைந்த அனர்த்தம் இவ்வளவென்பதை அறிந்து வருகின்றோம்.

இனி சமயம் என்பது என்ன? சமயத்தையும் வெறுத்துத் தள்ள வேண்டியதுதானா? என்றால், சமயம் அவசியமானதுதான். கடவுளை யுணர்ந்து இன்புறுவதற்காகக கொண்ட சன்மார்க்கமே சமயம் என்பது. ஆனால் அறிஞர்கள் பலர் தமது ஆராய்ச்சியிற் கண்ட முடிவுகளை யொட்டியே ஒவ்வொரு மதத்தை நிறுவியிருக்கிறார்கள். இவ்வாறு சமயங்கள்

பலவாயினும் அவற்றால் அடையப்படும் பொருள் ஒன்றுதான். இந்த உள்ளுறையை மறந்து வெளிவேஷத்தில் பூசலிடத் துவங்கிவிட்டோம். இத்தகைய சாதிசமயப் போராட்டத்தால் விளையும் அனர்த்தத்திற்கு வேறொரு உதாரணம் வேண்டியதில்லை; நமது தற்கால நிலைமையே போதுமானது. இதனால் சமயமே கூடாதென்பதல்ல. புறக்கோலத்தைக் கொண்டு பூசலிடாது, இறைவன் ஒருவனே; அவனை அடைவதற்கு ஏற்பட்டவைதான் சமயங்கள் என்ற உட்கருத்தை யோர்ந்து ஒற்றுமையாக வாழ முயலவேண்டும். நமது இராமலிங்க அடிகள் சமயத்தை மறுக்கவில்லை.

"எவ்வுலகில் எவ்வெவர்க்கும் அரும்பெரும் சோதியரே
இறைவரென்ப தறியாதே இம்மதவாதிகள் தாம்
கவ்வைபெறும் குருடர்கரி கண்ட கதைபோல
கதைக்கின்றார்......................."

எனவும்,

"தெய்வங்கள் பலபல சிந்தை செய்வாரும்
சேர்கதி பலபல செப்புகின்றாரும்
மெய்வந்த திருவருள் விளக்க மொன்றில்லார்
மேல்விளை வறிகிலர் வீண்கழிக்கின்றார்."

எனவும் அருளிய திருவாக்கால் தெய்வம் ஒன்றென்பதை அறியாது, பலபல தெய்வம் என்று பேசுவதைத்தான் மறுக்கின்றார். "சாதியும் மதமும் சமயமும் தவிர்த்தேன், சாத்திரக் குப்பையும் தணந்தேன்" என்ற வாசகத்தைக் கொண்டு சுவாமிகள் நாத்திகத்தையும் விரும்புகின்றாரோ என்று நாம் சிறிதும் ஐயுறவேண்டியதில்லை. "நாத்திகம் சொல்கின்றவர், தம் நாக்குமுடை நாக்கு" என்ற அருண் மொழியால் நாத்திகரை முற்றிலும் வெறுப்பவர் என்பதைத் தாமே தெள்ளத் தெளிய உரைத்துவிடுகின்றார்.

"............................என் கணவர் திருப்பேர்
அருகர் புத்தர் ஆதியென்பேன் அயனென்பேன்
நாராயணனென்பேன் அரனென்பேன் ஆதிசிவனென்பேன்
பருகு சதாசிவமென்பேன் சத்திசிவ னென்பேன்
பரமமென்பேன் பிரமமென்பேன் பரப்பிரம மென்பேன்"

என்ற அருட்பாவால் தாம் சர்வசமய சமரசவாதி யென்பதை உணர்த்துகின்றார். சாதி சமயங் கடந்து சமரச எண்ணம் பூண்டு, எல்லா உயிர்களிடத்தும் அளவற்ற அன்பு செலுத்தி வாழ்ந்தமையால்,

"சிற்பொதுவும் பொற்பொதுவும் நான் அறியலாச்சு!
சித்தர்களும் முத்தர்களும் பேசுவதென் பேச்சு!
இப்பெரிய இவ்வுலகில் என்னையினி எச்சு?
என்பிறவித் துன்பமெலாம் இன்றோடே போச்சு!"

என்று தாம் ஆனந்த நிலையை அடைந்ததைக் கூறிக் களிக்கின்றார்.

ஏழை மக்களின் துயரைத் தீர்க்காது செல்வக் களிப்பில் மூழ்கித் திரிபவர்க்கு நமது இராமலிங்க சுவாமிகள் அறிவு புகட்டும் பாக்கள் ஓசையின்பமும், பொருள் நயமும் பொதிந்து படிப்பவர் மனதைக் கவருந் தன்மையன. அவற்றுள் இரண்டு பாக்களை இங்கு உதாரணமாகத் தருகிறேன்.

"கட்டோடே கனத்தோடே வாழ்கின்றோ மென்பீர்!
கண்ணோடே கருத்தோடே கருத்தனைக் கருதீர்!
பட்டோடே பணியோடே திரிகின்றீர்! தெருவில்
பசியோடே வந்தாரைப் பார்க்கவும் நேரீர்,
கொட்டோடே முழக்கோடே கோலங் காண்கின்றீர்!
குணத்தோடே குறிப்போடே குறிப்பதைக் குறியீர்,
எட்டோடே இரண்டுசேர்த் தெண்ணவும் அறியீர்!
எத்துணை கொள்கின்றீர்? பித்துலகீரே!"

"வட்டிமேல் வட்டிகொள் மார்க்கத்தில் நின்றீர்!
வட்டியை வளர்க்கின்ற மார்க்கத்தை யறியீர்,
பெட்டிமேல் பெட்டிவைத் தாள்கின்றீர் வயிற்றுப்
பெட்டியை நிரப்பிக்கொண் டொட்டியுள் ளிருந்தீர்
பட்டினி கிடப்போரைப் பார்க்கவும் நேரீர்
பழங்கஞ்சி யாயினும் வழங்கவும் நினையீர்
எட்டிபோல் வாழ்கின்றீர்! கொட்டிபோல் கிளைத்தீர்!
எத்துணை கொள்கின்றீர்! பித்துலகீரே!"

சொல் நயமும் பொருள் நயமும் ஒருங்கே தவழ்ந்து நடமாடும் இவ்வருட்பாக்கள் நம் மனமாசகற்றப் பெருந் துணை செய்வனவாகும். சுவாமிகள் அழகு பொலியும் மனித உடல் தாங்கி, மனித வாழ்வு நடாத்தி, அமரர் குழாத்துள் ஒருவரான தன்மையைக் கேள்வி முறையானன்றி அவர் அருளிய அருட்பாக்கள் மூலமாகவே உணர்ந்து கொள்ளலாம்.



# விசித்திர விநோதம்

பெரியவர்:—பட்டினத்தில் உள்ள கடைகளில் எது பெரியது?

சிறுவன்:—'சாக்கடை.'

***



டாக்டர்:—"நீ சைவ உணவைக் கண்டிப்பாய்க் கடைப்பிடிக்க வேண்டுமென்று நான் உனக்குப் புத்திமதி சொல்லி யிருக்கிறேன். ஆனால், நீ ஆட்டு மாமிசம் சாப்பிட்டதாகச் சொல்லுகிறாய்?"

நோயாளி:—ஆனால், நீங்கள் பாருங்கள் டாக்டர்! ஆடுகள் வெறும் புல்லைத் தான் தின்கின்றன.

***

ஒரு வீட்டின் கூரை மேலிருந்து ஒரு காகம் கரைந்து கொண்டிருந்தது. உடனே கிட்டு வீட்டிற்குள் ஓடி ஒளிந்தான். அதைக் கவனித்த அவன் தாய் ஓடி வந்து 'ஏன் ஒளிகிறாய்?' என்றாள்.

கிட்டு:—காகம் கரைந்தால் யாராவது விருந்தினர் வருவார்களென்று தாங்கள் தானே அன்று சொன்னீர்கள்.

தாய்:—ஆம் அதற்கென்ன?

கிட்டு:—ஏன் ஒருவேளை எனது மாமன் வரக்கூடாது?

தாய்:—வந்தாலென்ன?

கிட்டு:—அவர் டாக்டரென்று உங்களுக்குத் தெரியாதா?

தாய்:—டாக்டரா யிருந்தாலென்ன?

கிட்டு:—எனக்குக் காலில் கட்டி புறப்பட்டிருக்கிற தல்லவா?

தாய்:—ஆம். அதற்கென்ன?

கிட்டு:—இன்னுமா சொல்ல வேண்டும்! அவர் கட்டாயம் ஆப்ரேஷன் செய்வார்!

மனைவி:—'நாதா! நீங்கள் என்னைக் கலியாணம் கொண்டிருக்காவிடில் என் நிலையிலிருப்பீர்.'

புருஷன்:—'இது தெரியாதா! வேறொருவளைக் கலியாணம் செய்து கொண்டிருப்பேன்?'

***

ஜட்ஜ்:—'ஏன் அக் கம்மலைத் திருடினாய்?'

திருடன்:—'எனக்குத் தெரியாது சார்.'

ஜட்ஜ்:—'என்ன தெரியாது.'

திருடன்:—'அது சாதாரண ரங்கூன் கமலமென்று எனக்குத் தெரியாது.'

***

தாய்:—மகனே! ஏன் இவ்வளவு கூச்சல் போட்டழுகிறாய்? உனக்கு என்ன சம்பவம் நேர்ந்தது?

மகன்:—அம்மா! எ—எ—ன்—ன்—வாத்—தி—யார்—ர்—அம்மா—ஆங்—ஆங்—(தேம்பி தேம்பி யழுதுகொண்டு) ஒரு—ஒரு—ஒரு—மாதமாக அதிக வியாதியா யிருந்தார். (அப்பால் எனக்கு பேச நா எழவில்லையே என்று அதிகமாக தேம்பி யழுகிறான்.)

தாய்:—என் சாமி! உன் வாத்தியார் காலகதி அடைந்து விட்டாரா! ஆஹா! வெகு நல்ல மனிதராயிற்றே.

மகன்:—இல்லை அம்மா இல்லை. சவுக்கியமடைந்து இன்று காலையில் பள்ளிக் கூடத்துக்கு வந்து விட்டாரே—என்று சொல்லி மறுபடியும் அழுதான்.

***

நீதிபதி:—"நீங்கள் கள்ள நோட்டுகளைச் செய்த துண்டா?"

குற்றவாளிகள்:—"இல்லையே. நாங்கள் நிஜமான நோட்டுகளைப் போலவேதான் செய்தோம்."

***

உபாத்தியாயர்:—பையன்கள் சாதாரணமாக உபயோகிக்கும் இரு வார்த்தைகள் யாது?

பையன்:—'எனக்குத் தெரியாது' ஸார்!

உபாத்தியாயர்:—பலே பேஷ்! உட்காரு!

***

நாடகக் கொட்டகை சொந்தக்காரர்:—நேற்றயதினம் ஆட்டத்திற்கு வந்த இருபது, முப்பது பேர்வழிகளும் திரும்பிச் செல்ல நேர்ந்தது.

அவர் சிநேகிதரில் ஒருவர்:—என்ன, இடமில்லை யென்று சீட்டுக் கொடுக்கவில்லையா?

நாடகக் கொட்டகை சொந்தக்காரர்:—நல்ல வெட்கக்கேடு, வந்திருந்தவர்களே அவ்வளவுதான். அவர்களுக்காக ஆட்டம் நடத்த இஷ்டமில்லை. ஆகவே துட்டைக் கொடுத்து திருப்பிவிட்டோம்.




**மும்முறை உயிர் பெற்றெழுந்த சிப்பாய்**

பிரான்சைச் சேர்ந்த சிப்பாய் ஒருவன் மும்முறை குண்டு அடிபட்டு வீழ்ந்தான். ஒவ்வொரு முறையும் அவன் இறந்ததாகக் கருதிப் பூமியில் புதைக்கும்போது உயிர்பெற்று எழுந்தானாம்.

***

**சங்கீதம் வாசிக்கும் காகங்கள்**

செஸ்டர் என்ற இடத்தில் நான்கு காகங்கள் ஒரு வாத்தியத்தில் சங்கீதம் வாசிக்கின்றனவாம். அங்குள்ள சங்கீத வித்வானொருவர் இக் காகங்களை இவ்விதம் பழக்கி விட்டிருக்கிறாராம்.

***

**பூச்சிகளைத் தின்னும் செடிகொடிகள்**

தெற்கு சமுத்திரத்தில் உள்ள தீவுகளில் சில செடிகொடிகள் இருக்கின்றன. அவற்றின் இலைகள் நுனியில் கிண்ணம்போல் குவிந்திருக்கின்றன. அவற்றிலிருக்கும் தேனைப் பருகுவதற்காகச் சில பூச்சிகள் வருகின்றனவாம். அப் பூச்சிகளை அவ்விலைகள் அப்படியே உறுஞ்சித் தின்று விடுகின்றனவாம்.

***

**குண்டூசியைத் துளை செய்த அற்புத மனிதர்**

ஒண்டாரியோ நகரைச் சேர்ந்த ஹென்றிஹாஸ் என்பவர், ஒரு குண்டூசியை எடுத்து நுனியிலிருந்து அடிவரை துளை செய்தாராம். ஆனால் அவ்விதம் அதைத் துவாரஞ் செய்வதற்கு இரண்டு வருஷம் பிடித்ததாம்.

***

**பணம் சேர்க்க, கடிகார உதவி**

டார்ம்ஸ்டாட் என்ற நகரின் முனிசிபாலிடியார், தங்கள் நகரமக்கள் பணஞ் சேர்க்க வேண்டுமென்று விரும்பினார்கள். அதற்குப் புது வழியொன்று கண்டுபிடித்தார்கள். அதன்படி, நகரவாசிகள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு நூதன கடிகாரமொன்றைத் தயாரித்துக் கொடுத்தார்களாம். அக்கடிகாரத்தினுள் தினமும் ஒரு குறிப்பிட்ட தொகையைப் போடவேண்டுமாம். அவ்விதம் போடாவிடில் அக் கடிகாரம் நின்றுவிடுமாம்.

***

**வைடமின்களைப் படம்பிடிக்க போடோ**

நியூயார்க் நகரிலுள்ள போர்டாம் சர்வகலாசாலையைச் சேர்ந்த இரு அறிஞர்கள், உணவுப் பொருள்களில் இருக்கும் வைடமின் (சத்து) களைப் படம் பிடிக்க ஒரு புதிய கருவியைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். இம் முறைப்படி நரம்புகளை வளர்க்கும் 'பி' என்ற சத்து படம் பிடிக்கப்படுகிறதாம்.




கண் குருடாயிருப்போர் நாணங் கொள்வதில்லையாம்.

*　　　*　　　*　　　*

பிரஞ்சுக்காரர்கள் பெப்பர்மிண்டுகளை அதிகம் உபயோகிப்பதுபோல், டச்சுக்காரர்கள் ஊறுகாய்களை அதிகமாக உபயோகிக்கிறார்களாம்.

*　　　*　　　*　　　*

லண்டன் நகரின் நெருக்கமான இடங்களில் ஒரு சதுர அடி நிலம் 500-ரூபாய்க்கு விற்கப்படுகிறதாம்.

*　　　*　　　*　　　*

இங்கிலாந்தில் இடி விபத்தால் மட்டும் சராசரி வருஷத்துக்கு 10 பேர் மரண மடைகிறார்களாம்.

*　　　*　　　*　　　*

அமெரிக்க டாக்டரொருவர், ஆபரேஷன் செய்த பின் தைப்பதற்காக ஒரு தையல் மிஷினைக் கண்டு பிடித்திருக்கிறாராம்.

*　　　*　　　*　　　*

உலகிலேயே மிகுதியாக வழக்கிலிருக்கும் மொழி ஆங்கிலந்தான். ஏறக்குறைய 160,000,000 பேர் அதை வழங்கி வருகிறார்கள். ஜெர்மனி பாஷையை 120,000,000 பேர் பேசி வருகிறார்கள். 100,000,000 பேர் ருஷிய பாஷையை உபயோகித்து வருகிறார்கள்.

*　　　*　　　*　　　*

லண்டன் நகரத் தெருக்களில் வாழைப்பழம், ஆரஞ்சுப் பழங்களின் தோல்களை எறிந்தால்—அதை யாராவது கண்டு பிராது செய்தல்—அவர்களுக்கு முப்பது ரூபாயிலிருந்து ஐம்பது ரூபாய் வரை அபராதம் விதிக்கப்படும். அப் பழத்தோல்களால் சறுக்கி விழுந்து பலர் பலத்த காய மடைவதே இவ்வளவு கடுமையான தண்டனைக்குக் காரணமாகும்.

*　　　*　　　*　　　*

கடல் குதிரை என்கிறார்களே! அது ஒருவகை மீனாகும். அது மற்ற மீன்களைப்போல் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கிறது. ஆண் மீனின் வயிற்றில் வெளிப்புறத்தில் ஒரு பையிருக்கிறதாம். அதனுள் பெண் மீன் முட்டை யிடுகிறதாம். அவை அப் பையிலேயே பொரிகின்றன. சுமார் 500-குஞ்சுகள் வெளி வருகின்றனவாம்.

*　　　*　　　*　　　*

இவ் வுலகின் நிலப்பரப்பு 57,000,000 சதுரமைல் கொண்டதா யிருக்கிறதாம். அதில், கிரேட் பிரிட்டனுக்கு 13,172,000 சதுரமைலும், ருஷியாவுக்கு 8,144,000 சதுரமைலும், பிரான்ஸுக்கு 5,000,000 சதுரமைலும், சீனாவுக்கு 4,25,000 சதுர மைலும் நிலப்பரப்பு சொந்தமா யிருக்கின்றனவாம். இவற்றிற்கு அடுத்த ஸ்தானத்திற்குத் தான் பிரேஸிலும், யூனைடெட் ஸ்டேட்ஸும் போட்டி யிடுகின்றனவாம்.

# ஆசிரியர் குறிப்புக்கள்

## இரு தேசப் பிரதிநிதிகள் சந்திப்பு

புதிய அரசியல் சட்டம் இந்தியாவில் அமுலுக்கு வந்த ஏப்ரல் மாதம் முதல் தேதிக்குப் பின்னர் இந்திய ராஜீய உலகில் பல விசேஷ சம்பவங்கள் நிகழ்ந்திருக்கின்றன. ஆறு மாகாணங்களில் பூரண மெஜாரிட்டி பெற்ற காங்கிரஸ் கட்சியினர் முதலில் பதவி ஏற்க மறுத்து மூன்று மாத காலம் வரை புதுமையான ஒரு கிளர்ச்சியை நடத்தி சற்று அதிகமான அதிகாரங்களைப் பெற்ற பின் பதவி ஏற்றுக் கொண்டார்கள். அவர்கள் பதவி ஏற்றது முதல் நாட்டிலேயே ஒரு புது யுகம் தோன்றி யிருப்பது போல் காணப்படுகிறது. எங்கும் எதிர்பாராத மாறுதல்கள்! அதிகார வர்க்கத்தினரின் மனப்பான்மையிலேயே மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. காங்கிரஸ் பதவி ஏற்றுள்ள மாகாணங்களிலுள்ள கவர்னர்கள் மனப்பூர்வமாக மந்திரிகளுடன் ஒத்துழைத்து அவர்களுடைய வேலைகளில் எவ் வகையிலும் குறுக்கிடாமல் இருந்து வருகிறார்கள். அனைவரையும் விட சென்னை கவர்னர் எர்ஸ்கின் பிரபு காங்கிரஸ் மந்திரிகளுக்கு ஒரு உண்மையான சகாவாகவே இருந்து வருகிறாராம். சென்னை பிரதம மந்திரி ராஜாஜியின் ஆற்றல் அளக்க வல்லதோ? சர்க்கார்பிரதம காரியதரிசியையே கதர் அணியும்படி செய்திருக்கிறார். இவைகளெல்லாவற்றையும் விட விசேஷமான சம்பவம் சென்ற 4-ந் தேதி யன்று சிம்லாவில் பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தின் பிரதிநிதியாகிய லின்லித்கோ பிரபுவும், இந்தியாவின் பிரதிநிதியாகிய மகாத்மா காந்தியடிகளும் சந்தித்தது தான். இந்த சந்திப்பு அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகும். அதிகார வர்க்கத்தினரின் மனமாறுதலுக்கும் நல்லெண்ணத்துக்கும் இது ஒரு அறிகுறியே. மகாத்மாஜியைச் சந்தித்து சிநேக முறையில் அறிமுகப் படுத்திக்கொள்ள விரும்பியே வைசிராய் மகாத்மாவை அழைத்தார். காந்திஜியும் இத் தேச சம்பந்தமான பல விஷயங்களைப் பேச விரும்பி யிருந்ததால் உடனே அழைப்பை ஏற்றுக் கொண்டு வைசிராயைச் சந்தித்தார். இருவரும் மனம் விட்டுப் பேசினார்கள். அதில் முக்கிய விசேஷம் எதுவும் இல்லை என்று கூறப்பட்டாலும் இரு பெரிய தேசங்களின் பிரதிநிதிகள் சந்தித்துப் பேசும்போது பல விஷயங்களைப் பற்றியும் ஆராய்ச்சி செய்யாமல் இருக்க முடியுமா? வைசிராய் மகாத்மாவைச் சந்தித்தது போலவே இந்திய காங்கிரஸ் மகாசபையின் தலைவரும், இளம் இந்தியர்களின் தலைவருமான பண்டித ஜவஹர்லால் நேருவையும், ஆறு காங்கிரஸ் பிரதம மந்திரிகளையும் சந்தித்து அரசியல் நிலைமையைப் பற்றிப் பேசுவது நலம். இத்தகைய சந்திப்புகளால் தேசத்துக்கு நன்மையே ஏற்படும்.

---

## கவி ரவீந்திரரின் ஆட்சேபம்

கவிச் சக்ரவர்த்தி ரவீந்திரநாத தாகூர் ஒரு ராஜீயவாதி அல்ல. ஆனால் அவர் தமது தேசத்தின் பெயரால் ஒரு விஷயத்தைப் பலமாக ஆக்ஷேபிக்கிறார். ஆங்கிலேயர்கள் தங்கள் விஷயத்தில் அனுஷ்டிக்கும் நல்ல முறைகளை, அவர்களால் ஆளப்படும் நாடாக இருக்கும் இந்தியாவில்

அனுஷ்டிப்பதில்லை. அவர்கள் இவ்வாறு இந்தியர்களாகிய நம்மை வித்தியாசப்படுத்தி நம்மையெல்லாம் அவமானப் படுத்துவதை ராஜீய வாதியல்லாத தாகூரும் சகிக்கவில்லை. ஆகவே அவர் ஆங்கிலேயர்களின் இந்த நடத்தையைப் பலமாக ஆக்ஷேபிக்கிறார். எத்தகைய ராஜீய காரணத்தைக் கொண்டும் அவர் இவ்வாறு கூறவில்லை. ஆனால் நீதியும் ஜீவகாருண்யமும் உலகில் நிலவ வேண்டாமா! ஆகவே அவற்றின் பெயரால் அவர் ஆங்கிலேயர்களின் கடமையை ஞாபகப் படுத்துகிறார். ராஜீய கைதிகளை விசாரணையின்றிச் சிறையில் அடைத்து வைப்பதும், அதிலும் அந்தமான் தீவுக்கு அனுப்பிச் சகிக்க வொண்ணாத கஷ்டங்கள் அனுபவிக்கும்படி செய்வதும் நீதியாகுமா? இப்போது அந்தமானிலுள்ள கைதிகள் தங்களை இந்தியாவுக்கே திருப்பி யழைத்துக்கொள்ள வேண்டு மென்னும் கோரிக்கையை வெளியிட்டு அது காரணமாகப் பட்டினி விரத மிருக்கின்றனர். இது சம்பந்தமாகக் கல்கத்தாவில் கூடிய ஒரு மாபெரும் கூட்டத்தில் தலைமை வகித்த போது தான் கவிச் சக்ரவர்த்தி இந்த ஆட்சேபத்தைக் கிளப்பினார். அவர் அக் கூட்டத்தில், 'துரதிஷ்டம் வாய்ந்த இம் மாகாணத்தில் யுவர்களும் யுவதிகளும் விசாரணையின்றியும் கால வரையறையின்றியும் சிறை வைக்கப்பட் டிருக்கிறார்கள். இம் மாதிரி நூற்றுக் கணக்கான குடும்பங்கள் கஷ்டப்படுகின்றன. இக் குடும்பங்களின் மனச் சோர்வும் துக்கமும் இம் மாகாண மெங்கும் பரவி வருகின்றன. சட்ட பரிபாலன முறையை அடியோடு மாற்றுவதுடன், அதன் கடுமையைச் சிறிதேனும் குறைப்பதும் அவசியமாக இருக்கிறது' என்று கூறியிருப்பது கவனிக்கத்தக்கதாகும்.

---

## காங்கிரஸும் தொழிலாளரும்

தொழிலாளர், விவசாயிகள், பாமரமக்கள் ஆகிய பொது ஜனங்களின் நன்மைக்காக உழைப்பதையே காங்கிரஸ் தனது கடமையாகக் கொண்டிருக்கிறது. காங்கிரஸ் தேசீய விடுதலையை விரும்பும் ஒரு தேசீய ஸ்தாபனமே யாயினும், தேச மகாஜனங்களில் பெரும்பான்மையோர் பாமரமக்களே யாதலின் அவர்களின் நலத்தையே காங்கிரஸ் பெரிதாகக் கருதுகின்றது. இப்போது காங்கிரஸ்காரர்கள் தேசத்தின் அதிகார பதவியை ஏற்றிருப்பதால் தங்கள் கொள்கைக்கேற்ப தொழிலாளர், விவசாயிகள் ஆகியோரின் துயரங்களைக் கூடியவரையில் போக்கி அவர்களுக்கு வேண்டிய பலவித சௌகரியங்களையும் செய்துதர முயற்சிக்கலாம். அவ்வாறே செய்வார்களென்றும் நாம் நம்புகிறோம். ஆயினும் இப்போதுதான் தொழிலாளர்களுக்கும் பொறுப்பு அதிகமாக இருக்கிறதென்பதை அவர்கள் உணர வேண்டும். உரிமைகளையும் சௌகரியங்களையும் விரும்பும் தொழிலாளர் பொறுப்புகளையும் கடமைகளையும் அறியவேண்டும். தாங்கள் பொறுப்பையும் கடமைகளையும் ஒழுங்காக நிறைவேற்றுவதில் சிரத்தை செலுத்தாமல் உரிமைகளையும் சௌகரியங்களையும் பற்றி மட்டும் சதா பேசிகொண்டும், அதற்காக நிதானமற்ற முறைகளிலும் கிளர்ச்சி செய்துகொண்டும் இருந்தால் எவ்வித பயனும் ஏற்படாது. தொழிலாளர் நியாயமான முறையில் அமைதியாகப் போராடினால் காங்கிரஸ் தலைவர்கள் தவறாமல் உதவி செய்வார்கள். ஆனால் காங்கிரஸ்காரர்களின் கையிலுள்ள அதிகாரத்தையும், அவர்களின் மனோபாவத்தையும் சோதிக்க வேண்டுமென்றே அல்லது

அவர்களைச் சங்கடத்தில் விடவேண்டுமென்றே எண்ணி பொறுப்பும் நிதானமுமற்ற முறையில் கிளர்ச்சி செய்தால் அதனல் காங்கிரசுக்கும் தொழிலாளருக்கும் சங்கடம் ஏற்படுமே யொழிய எந்த ஒரு சாராரும் சுகப்படப் போவதில்லை. நாம் ஏன் இவ்வளவு தூரம் எழுதுகிறோமென்றால் காங்கிரஸ்காரர்கள் மந்திரி பதவி யேற்றதும் ஒரு சம்பவம் ஏற்பட்டது. சென்னையில் மராமத்து இலாகா தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்தார்கள். இதுவரையில் அதிகாரிகள் நடந்துகொள்ளாத முறையில் காங்கிரஸ் மந்திரிகள் அதில் தலையிட்டுச் சமரசம் செய்து வைத்தார்கள். சென்னைத் தொழிலாளரும் மதிப்பு வைத்து சமரசத்தை ஏற்று வேலை நிறுத்தத்தை நிறுத்திவிட்டார்கள். ஆனல் கான்பூரில் இதேமாதிரி ஒரு வேலை நிறுததம் ஏற்பட்டது. அங்கும் காங்கிரஸ் பிரதம மந்திரி தலையிட்டுச் சமரசம் செய்தார். முதலில் தொழிலாளர் ஒப்புக்கொண்டனர். ஆனல் பின்னல் தீவிரவாதிகளான தொழிலாளர் அதை ஒப்புக்கொள்ள மறுத்து வேலை நிறுத்தத்தை நீடித்து வருகின்றனர். இதனல் யாருக்கு நஷ்டம்? இவ்வாறு செய்வது வேண்டுமென்றே காங்கிரசை சங்கடத்தில்விட முயற்சிப்பதாகுமல்லவா?

---

## சென்னை சட்டசபைகளின் தலைவர்கள்

புதிய அரசியல் முறைப்படி சென்னை மாகாணத்தில் ஸ்தாபிக்கப் பட்டுள்ள இரண்டு சட்டசபைகளுக்கு அதாவது ஜனப் பிரதிநிதி சபை எனப் படும் கீழ்ச் சபைக்கு, ராஜாங்க சபை எனப்படும் மேல் சபைக்கும் தலைவர்கள், உபதலைவர்கள் தேர்தல் ஜூலை 15-ந் தேதியன்று நடைபெற்றது. இரு சபைகளிலும் காங்கிரஸ் கட்சியினரே பெரும்பான்மை யோராக இருப்பதால் அக் கட்சி சார்பாக நியமிக்கப் பட்ட அபேக்ஷகர்களே எதிர்ப்பின்றி ஏக மனதாகத் தேர்ந்தெடுக்கப் பட்டனர். மேல் சபைக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட டாக்டர். யூ. ராமராவ் அதற்கு முற்றிலும் தகுதி வாய்ந்தவர்; நீண்ட கால சட்டசபை அனுபவம் உடையவர். அதிக காலமாகவே பல பொது விஷயங்களிலும் ஈடுபட்டுள்ளார். அது போலவே உபதலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்ட. ஸ்ரீ. கே. வெங்கடசாமி நாயுடுவும் பொருத்தமானவரே. அவர் சட்டசபை அனுபவம் இல்லாதவராயினும் சென்னை கார்ப்பொரேஷனில் தக்க அனுபவம் பெற்றவர். இருவரும் இனிய குணதிசயங்களை யுடையவர்கள். கீழ்ச்சபைக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் ஸ்ரீ. புலுசு சாம்பமூர்த்தி. அவர் செய்துள்ள தியாகத்திற்கும், அவரது அரிய அறிவாற்றலுக்கும் அப்பதவி மிகச் சிறியதென்றே கூறலாம். உபதலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஸ்ரீமதி. ருக்மணிலட்சுமிபதி முற்றிலும் தகுதி வாய்ந்தவர். அத்தகைய வேலைகளை ஆர்வத்துடன் செய்யக்கூடிய சுபாவமுடையவர். நிர்வாகத்தில் பெண்களுக்குப் பிரதிநிதித்வம் அளிக்கப்பட்டது சந்தோஷிக்கத் தக்கதே. இத்தலைவர்கள் நால்வரும் தேசத்தின் உரிமைக்காகப் போராடியது போலவே சட்டசபைகளின் உரிமையைக் காப்பதிலும் நிஷ்பக்ஷபாதமாக நடந்து கொள்வதிலும் உறுதியுடன் இருப்பார்கள் என்பது நிச்சயம்.

---

## ராஜாஜியின் சிறப்பான மந்திரி சபை

சென்னை மாகாண காங்கிரஸ்கட்சியின் தலைவரான ராஜாஜி அவர்கள் தாம் மேற்கொள்ளும் வேலையை மிக்க திறமையுடனும், பலரும் ஆச்சரியப் படத்தக்க வகையிலும் செய்து முடிக்கக்கூடிய அறிவும் ஆற்றலும் உடையவர் என்பதைத் தமது மந்திரி சபையை அமைத்ததிலிருந்தே ருஜுப்பித்து விட்டார். அவர், ஜாதி, வகுப்பு வாரியாகவோ, பிரதேச வாரியாகவோ, மந்திரிகளைப் பொறுக்கவில்லை. அவ்வாறு பலருக்கும் திருப்தியுண்டாகும்படி பொறுக்குவதென்றால் ஆச்சாரியார் அவர்களே சொல்வது போல் முப்பது ஸ்தாபனங்கள் இருந்தாலும் போதாது. மேலும் காரியங்களும் குறுகிய திருஷ்டியுடன் கவனிக்கப்படுமே யொழிய கூட்டுப் பொறுப்பு என்பது அவ்வளவாக இருக்காது. ராஜாஜியின் கொள்கையெல்லாம் காங்கிரசின் கொள்கையும் கௌரவமும் குறைவுபடாத வகையில் வேலை நடைபெற வேண்டும்; மந்திரிகள் கூட்டுப் பொறுப்புடன் தமது சொல்லைத் தட்டாமல் வேலை செய்யவேண்டும் என்பதே. ஆதலின் அதற்கு தக்கபடி யார் யார் மந்திரி சபையில் இருந்தால் நலமென்று கருதினாரோ அவர்களை நியமித்துக் கொண்டார். ஆதலின் மகாஜனங்கள் மந்திரிகள் யார்? அவர்கள் எந்த ஜாதி, வகுப்பு, பிரதேசத்தைச் சேர்ந்தவர்கள்? ஜெயிலுக்குப் போயிருக்கிறார்களா, இல்லையா? என்றெல்லாம் விவாதித்துக் கொண்டிராமல், காங்கிரஸ் காரியம் எப்படி நடக்கிறது, அதற்கு எவ்வாறு பலத்தை அளிப்பது என்பதிலேயே கண்ணுங் கருத்துமாய் இருக்கவேண்டும். ராஜாஜி அவர்கள் மந்திரிகளாக நியமித்துள்ள பதின்மரில் ஸ்ரீமான்கள் எஸ். ராமநாதன், டி. எஸ். எஸ். ராஜன் ஆகிய இருவர் இருப்பதை அறிந்து சிலர் ஆச்சர்யப் படுவதுடன் பலவாறாகவும் நினைக்கிறார்கள். ஆயினும் அவ்விரு பெரியார்களும், இடையில் என்ன தவறு நிகழ்த்தியிருந்த போதிலும், காங்கிரசுக்காகச் செய்துள்ள தியாகம், அவர்களின் அறிவு ஆற்றல், ராஜாஜிக்கும் அவர்களுக்குமுள்ள தொடர்பு இவற்றையெல்லாம் சிந்தித்தால் ஆச்சாரியார் அவர்கள் செய்ததிலும் ஏதோ நன்மை இருக்கிறது என்றே உணர்வார்கள் என்பது நிச்சயம். காங்கிரஸ் மந்திரி சபையில் அங்கம் வகித்துள்ள பத்து மந்திரிகளும் அவரவர்களுக்கு அளிக்கப் பட்டுள்ள இலாகாக்களை ஏற்று நிர்வாகம் நடத்துவதற்குரிய ஆற்றலும் ஆர்வமும் உடையவர்களே என்பதில் சந்தேகமில்லை. அனைவரும் தேசசேவையில் ஆர்வமுடையவர்களே. ஆதலின் காங்கிரஸ் மந்திரிசபைக்கு மனமார்ந்த ஒத்துழைப்பை அளித்து அவர்களுடைய வேலையை எளிதாக்க வேண்டியது மகாஜனங்களின் கடமையாகும்.

---

## சென்னை ராஜீயத்தில் புது யுகம்

இம்மாதம் 14-ந் தேதி புதன்கிழமை முதல் நமது மாகாண அரசியலில் ஒரு புது சகாப்தம் அல்லது யுகம் தோன்றிற்றென்று நிச்சயமாகக் கூறலாம். இதுவரை பிரிட்டிஷ் இந்திய சரித்திரத்திலேயே இல்லாத முறையில் விஸ்தரிக்கப்பட்ட ஓட்டுரிமையின் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் அடங்கிய ஜனப் பிரதிநிதி சபை அன்றுதான் கூடியது.

புதிய அரசியலின்படி மாகாணத்திலும் இரு சட்டசபைகள் ஏற்படுத்தப்பட்டன. மேலும் இதுவரை சர்க்காருடன் போராடுகிறவர்களென்றும், அரசாங்கத்துக்கு விரோதமானவர்களென்றும் கூறப்பட்ட காங்கிரஸ் மகாசபையைச் சேர்ந்தவர்கள் சட்டசபையில் பெரும்பான்மை பெற்று அந்தப் பலத்தின் மீது மந்திரி பதவிகளையும் ஏற்று அதிகாரத்தை வகிக்கலானார்கள். இப்போது காங்கிரசும் அரசாங்கமும் கூடியவரை ஒன்றாகப் போய்விட்டது. காங்கிரஸ் அரசாங்கம் நடைபெற ஆரம்பமாகி இருப்பதாகவும் துணிந்து கூறலாம். காங்கிரஸ் மகாசபை மகாஜனங்களின் நன்மைக்காகவும் தேச விடுதலைக்காகவுமே பாடுபடக் கங்கணம் கட்டிக் கொண்டிருப்பதால் அதன் ஆட்சி பொதுஜன ஆட்சியேயாகும். ஏனெனின் அதன் பலமெல்லாம் பொதுஜன ஆதரவையே அஸ்திவாரமாகக் கொண்டிருக்கிறது. காங்கிரஸின் எதிரிகள், இப்போது காங்கிரஸ்காரர்கள் மட்டும் சர்க்காருக்கு நல்ல பிள்ளைகளாகி விடவில்லையா? அவர்களும் உத்தியோக ஆசை கொண்டு பதவிகளை ஏற்றுக் கொண்டுவிடவில்லையா? அவர்களுடைய தீவிரமான வேலைகளை விட்டு இதர பிற்போக்காளர்களென்போர் அனுஷ்டித்து வந்த முறைகளுக்குத் தானே திரும்பியிருக்கிறார்கள்? இவற்றையெல்லாம் காங்கிரசைச் சேராத நாங்கள் செய்தால் மட்டும் தவறா? என்றெல்லாம் கேட்கவும் எழுதவும் செய்வார்கள். ஆயினும் மனப்பான்மையிலும் வேலை போக்கிலும் காங்கிரசுக்கும் மற்ற கட்சிகளுக்கும் எப்போதும் தாரதம்மியம் உண்டு என்பது நிச்சயம். இதற்கு முன் நமது சட்டசபை கூடிய காலத்தில் ஜஸ்டிஸ் கட்சியினர் மெஜாரிட்டியாக இருந்தார்கள். ஒரு நாளாவது சட்டசபையில் தேசீய கீதம் பாடவோ வந்தே மாதர கோஷம் செய்யவோ தேசீய உடைகளுடன் சபையில் செல்லவோ தைரியமோ ஆர்வமோ அவர்களுக்கு இருந்ததா? சொந்த யோசனையும் சுய மரியாதையும் எதுவுமின்றி அதிகாரிகள் மனம் கோணாதவாறு அவர்கள் சொல்வதையே கிளிப் பிள்ளைகளைப் போல் சொல்லியும் செய்தும் வந்தார்கள். ஆனால் தாங்களும் ஜனப்பிரதிநிதிகளே என்று சொல்லிக் கொண்டார்கள். இப்போது சட்டசபையில் நடப்பதென்ன? வந்தேமாதர கோஷம், தேசீய கீதம் பிரார்த்தனை, ஐரோப்பியருள்பட அனைவரும் அதற்கு மரியாதை செய்தல், உத்தியோகஸ்தர்கள் முதல் பியூன்கள் வரை அனைவர்க்கும் எல்லாம் நமது என்னும் உணர்ச்சி முதலியவைகளே காணப்படுகின்றன. இச்சிறு மாறுதலே விரைவில் மிகப் பெரிய பலனை அளிக்கும் என்பது நிச்சயம். ஆகவே நமது மாகாண ராஜீயத்தில் புது யுகம் ஆரம்பமாகிவிட்டதென்பது பிரத்தியட்சமாகும்.



தொடர் கதை.

# மாயா விரோதி

(ஸி. எஸ். இராமன், எம். ஏ., எல். டி.)



(71-வது பக்கத் தொடர்ச்சி.)

சென்னையில் ஜெமீந்தாரினியையும் ஒரு வக்கீலையும் செடைப்பன் பார்க்க வேண்டியது; மாயா விரோதியின் ஆளுக்கு ஏதாவது ஆபத்தை அவர்கள் உண்டாக்க முயற்சித்தால் ஜெமீந்தாரும் அவருடைய சகாக்களும் உடனே உயிரை இழந்து விடுவார்கள் என்பது தெளிவாக எழுதப்பட்டிருந்தது.

சில தினங்களுள் கப்பலில் ஏற்பட்ட சம்பவம் யாவருக்கும் கவலையைக் கொடுப்பதாக யிருந்தது. அத்தகைய சம்பவம் என்ன ?

செங்கோட்டை ஜெமீந்தார் இராஜமன்னருக்கு திடீரென்று ஒரு பெருத்த வியாதி ஏற்பட்டதால் அவரைத் தனிமையான ஓரிடத்தில் அடைத்து வைத்தான் மாயா விரோதி. அவரைக் காண்பதற்கு காந்திமதிச் சீமாட்டி, மாயா விரோதி, கனகன் ஆகிய மூவரே போகவேண்டும் எனும் பொதுவான உத்தரவு பிறந்தது. பிரபுவின் அறையின் வாசலில் இரண்டு போர் வீரர்கள் நிறுத்தப்பட்டிருந்தனர். இராஜமன்னரைப் பார்க்க முன் சொன்ன மூன்று ஆசாமிகள்தான் செல்லலாம். வேறு எவராவது செல்வார்களேயானால் அவர்களை தாக்ஷண்யம் இன்றி சுட்டு வீழ்த்தலாம் என்று அந்த வீரர்களுககு கட்டளை யிடப்பட்டிருந்தது. ஏன் ? பிரபு கொடிய தொத்து வியாதி ஒன்றினால் கஷ்டப்படுவதால், கப்பலில் உள்ளவர்களுக்கு அந்த வியாதி வர வொட்டாமல் தடுப்பதற்கே அத்தகைய விதிகளை அநுசரிக்க வேண்டும் என்று மாயா விரோதி எல்லோரிடத்தும் சொன்னான். அதைக கேட்டு அவர்கள் கவலையும் ஆச்சரியமும் கொண்டனர்.

செங்கோட்டை ஜெமீந்தார் தொத்து வியாதியினால் கஷ்டப்படுவதாகவும் அவரைக் காண்பதற்குச் சிலரைத் தவிர்த்து ஏனையோர் போகக்கூடாதென்றும் திடீரென்று மாயாவிரோதி விடுத்த அறிக்கை கப்பலில் இருந்தவர்களுக்கு பயத்தையும் ஆச்சரியத்தையும் விளைத்தது. 'பாம்பு என்றால் படையும் நடுங்கும். தொத்து வியாதி என்றால் மனிதர்களும் நடுங்குவர். இது சகஜம்.

ஒருகால் இராஜமன்னர் வியாதியினால் இறந்துபோனால் என்ன செய்வது ? எனும் கேள்வி மாயா விரோதியின் ஆட்களுக்கு ஏற்பட்டது. ஜெமீந்தார் முதலில் ஒரு கடிதம் எழுதி முத்தையனிடம் கொடுத்த விஷயத்தை அவர்கள் ஞாபகத்திற்கு கொண்டு வந்ததும் இராஜமன்னர் இறந்து போனாலும் பணம் தங்களைத் தானாகவே தேடிவரும் என்று தைரியம் கொண்டு

சந்தோஷங் கொண்டனர். என்ன தொத்து வியாதிதான் இருந்தாலும் இராஜமன்னரை கனகனும் மாயா விரோதியும் என் நன்ருக காவல் போட்டுக் காக்கவேண்டும் எனும் வினு அடிக்கடி எழுந்து ஒரு வகையான சம்சயத்தைக் கொடுத்து வந்தது. அடிக்கடி இராஜமன்னருடைய நிலைமையை தங்களுடைய தலைவன் வாயிலாகத் தெரிந்து கொள்வார்கள். அப்பொழுது சிரிப்பார்கள். ஆனல் மாயா விரோதி மட்டும் நகைக்காமல் பதில் கொடுத்துச் சென்று விடுவான்.

சில தினங்களுக்குப் பின் மாயா விரோதி தனது அறையினுள் இருந்து வருவதைக் கண்டனர். சில சமயங்களில் அவன் செங்கோட்டை ஜெமீந்தாருடைய அறைக்கு மட்டும் போய் வருவதையும் கண்டனர். சதா நன்ருகப் பேசும் சுபாவம் கொண்ட முத்தைய செட்டி அதிகமான மௌனத்தை அநுசரிப்பது அவர்களுக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. சௌடப்பன் அதைக் கண்டு யோசனை பல செய்வானுயினுன். மாயா விரோதி மிசை மிக்க ஸ்நேகப்பான்மையான உணர்ச்சி கொண்டிருந்தான். அதனுல் மாயாவிரோதியினுடைய நடத்தை அவனுக்கு வேடிக்கையாகவும் கிலேசத்தைக் கொடுப்பதாகவும் இருந்தது.

ஒருநாள் மாலை சௌடப்பன் தனது நண்பனைப்பற்றி சிந்தனை செய்கையில் மாயா விரோதி, கனகன், சீமாட்டி ஆகிய மூவரும் இரண்டு துப்பாக்கி வீரர்கள் காவல் புரியும் இராஜமன்னருடைய அறைக்குத் துரிதமாக செல்லுவதைக்கண்டு மனம் பதறினுன். ஜெமீந்தாருடைய கொடிய வியாதி மாயா விரோதிக்கு வந்துற்ருல் என்ன செய்வது எனும் எண்ணம் அவனுக்கு விசனத்தை உண்டாக்கியது. மேலும் மாயா விரோதியின் முகம் வாடியதாக அவனுக்கு புலப்பட்டது. தனது எஜமானனும் நண்பனும் ஆன முத்தைய செட்டி வெளிவரும் வரையில் வெளியே இருக்க முடிவு செய்தான். ஆனல் மாயா விரோதி வெளியே வரவில்லை. அது அவனுக்கு அச்சத்தை யளித்தது. இரவு பத்துமணி ஆகியும் கப்பித்தான் வெளியே வரவில்லை. கலக்கமும் விசனமும் அவனைத் தோழமை கொண்டதால் அவன் மறுநாள் காலை வரை அங்கேயே உட்கார்ந்திருந்தான்.

மறுநாட் காலை நான்குமணி இருக்கும். சீமாட்டி மட்டும் அவசரமாக வெளியே வந்தாள். சௌடப்பன் அவளிடம் சில கேள்விகள் கேட்க எண்ணினுன். அவள் அதை அசட்டை செய்ததைப்போல் வேகமாகச் சென்றதைக் கண்டு மனம் வருந்தினுன். சிறிது நேரத்திற்கு எல்லாம் சீமாட்டி மறுபடியும் தனது கையில் எதையோ எடுத்துக்கொண்டு ஜெமீந்தார் இருக்கும் அறையினுள் சென்ருள். காலை எட்டுமணி ஆகியும் ஒருவரும் வெளி வரவில்லை.

சில நிமிஷங்களுக்குப் பின் சீமாட்டியும் கனகனும் வெளியே வந்தனர். கனகனுடைய முகத்தில் ஒரு அபூர்வமான தோற்றம் இருந்தது. இருப்பினும் அவர்கள் சாந்தமான முகத்தையே கொண்டிருந்தனர். சௌடப்பன் அவர்களிடம் "மாயா விரோதி எங்கே?" என்று கேட்டான். முத்தையன் ஜெமீந்தாரிடம் இருப்பதாகவும் கொஞ்சம் களைத்து இருப்பதாகவும் அதைப்பற்றி அவன் பயப்பட வேண்டியதில்லை யென்பதாகவும் பதில் கிடைத்தது.

"மாயா விரோதி ஜெமீந்தாரிடம் இருந்தால் வியாதி வரலாகும். உடம்பை நன்ருகப் பார்த்துக் கொள்ளுமாறு சொல்லவேண்டும்," என்று சௌடப்பன் கேட்டுக்கொண்டான்.

"மாயா விரோதிக்கு புத்தியும் எண்ணமும் சொல்லவேண்டியதில்லை," என்று கனகன் கடுகடுத்த பார்வையோடு சொல்லி அங்கு நின்றும் அகன்ருன்.

அவர்கள் இருவரும் சென்றதும் சௌடப்பன் ஜெமீந்தாருடைய அறை வாசலை நோக்கினுன். நிசப்தமாக இருந்த தோற்றம் அவனுக்கு பயத்தை யளிப்பதாக இருந்தது. உள்ளிருந்து ஒரு சப்தமும் வரவில்லை. ஜெமீந்தார் பிரபு தனிமையில் இருந்த பொழுதுகூட அந்தப் பாரிசம் போவதற்கு சௌடப்பன் பயம் கொள்ளுவான். மாயா விரோதி தொத்து வியாதியுடைய பிரபுவிடம் தனிமையாக ஏன் இருக்கவேண்டும் எனும் நல்லெண்ணம் அடிக்கடி தோன்றி அவனுக்கு சமாதானமின்மையையும் குழப்பத்தையும் கொடுத்தது. தனது எஜமான் நண்பன் பொருட்டு மனம் வருந்தினுன். அப்படி அவன் அந்த அறையை நோக்கிய வண்ணம் யோசனை செய்கையில் கைதிப் போர்வீரன் அங்கே தோன்றிச் சௌடப்பனை அங்கு நின்றும் போகுமாறு கட்டளை யிட்டான்.

அப்பொழுது மாயா விரோதியின் குரல் சௌடப்பனுக்கு கேட்டதாக அவனுக்குத் தோற்றியது. களைப்படைந்த குரல்போல் கேட்டது. சௌடப்பன் மனம் பதறினுன். "அவன் கைகள் வேண்டாம்," எனும் வார்த்தைகள் சௌடப்பன் காதில் விழுந்ததாகத் தோற்றியதால் மாயவிரோதிக்கு ஏதோ ஆபத்து ஏற்பட்டு விட்டதாக நினைத்து நெஞ்சு துடிதுடித்தான்.

அங்கு இருந்தால் போர் வீரன் தன்னைத் துரத்தி விடுவான் என்பதை உணர்ந்து கொண்ட சௌடப்பன் சிறிது நேரத்தினுள் மற்ருெருபுறம் சென்று ஜெமீந்தாருடைய பெரிய அறைக்கு வெளியில் காது கொடுத்துக் கேட்டான். அங்கு காவலாளர் இருக்கவில்லை. மாயாவிரோதி களைப்பான குரலில் பேசுவதைக் கேட்டான்.

மாயாவிரோதி முன்னரே சில இரகசிய விஷயங்களை சௌடப்பனுக்குச் சொல்லி யிருந்தான். சௌடப்பன் அதைப்பற்றி யோஜனை செய்தான். இந்திராவின் புருஷன் இராஜமன்ஞர் மீது பழைய துவேஷத்திற்காகப் பழி வாங்க வேண்டும் என்று மாயாவிரோதி சபதம் செய்திருந்ததை ஞாபகப்படுத்திக் கொண்டான். இராஜமன்ஞரைத் தண்டிக்க வேண்டுமாஞல் அவருக்காக மாயாவிரோதி ஏன் பரிந்து பேச வேண்டும்? என்பது அவனுக்கு அருத்தமாக வில்லை. அப்பொழுது மாயாவிரோதி பேசி விட்டு பெருமூச்சு விடுவதைக் கேட்டான். மிகுந்த குலை நடுக்கம் கொண்டான்.

கனகனுடைய பேச்சும் அவனுக்குக் கேட்டது.

"முத்தையா, நீ ஒன்றும் சொல்லக் கூடாது," என்று கனகன் பேசியது ஸ்பஷ்டமாக சௌடப்பனுடைய செவியில் விழுந்தது.

"சரி, நான் இனி மறு வார்த்தை சொல்வதில்லை. ஆனால் இவனை விட்டு விடுவோம். இவன் கைகளை மட்டும் தொட வேண்டாம். என்னால் பொறுக்க முடியாது. வேண்டாம்; வேண்டாம்," என்று மாயாவிரோதி விசனத்தோடு உரைத்தான். சௌடப்பன் வெளியில் இருந்தவாறே அதையும் கேட்டான்.

சிறிது நேரமானதும் சீமாட்டியின் குரலையும் சௌடப்பன் கேட்டான்.

"முத்தையா நாம் சொல்வதன்படி நடந்தால் இக் காரியத்தை நாம் இப்பொழுதே செய்து முடித்து விடலாம்" என்று அவள் பேசினாள்.

"ஆம். இவன் புத்தியோடு நடந்து கொள்ள வேண்டும்," என்று கனகன் பதில் கொடுத்தான்.

மாயாவிரோதி பதில் கொடுத்தான்.

"ஐயோ! இவனுடைய கைகள்! ஐயோ! நான் எத்தனை கஷ்டப்படுகிறேன் என்பதை யோசித்தால்.................."

ஜெமீந்தார் கைகளுக்கு அவர்கள் என்ன செய்தனர்! எனும் கேள்வி சௌடப்பன் மனத்தில் பயத்தோடு எழுந்தது. மாயாவிரோதியின் கஷ்டத்திற்கும் பிரபுவின் கைகளுக்கும் என்ன சம்பந்தம்? அவனுக்குச் சரியாக ஒன்றும் விளங்க வில்லை. இருந்தாலும் அவன் கொண்ட அச்சம் அவனுடைய உயிரையே கொள்ளை கொண்டு விடுவதாக இருந்தது. அப்பொழுது மாயாவிரோதி அழுவதாக அறிந்து திடுக்கிட்டான்.

"ஐயோ! பிசாசுகளே! பிசாசுகளே!" என்று முத்தையன் முணுகுவதைக் கேட்டான்.

"நீ இனிமேல் ஏதாவது பேசினால் உன் வாயை அடைத்து விடுவேன்," என கனகன் பதில் கொடுத்தான். "சீமாட்டி, துணியைக் கொடு."

"ஐயோ! என் வாயை அடக்க வேண்டாம். நான் பேசுவதில்லை. ஆனால் இவனுடைய கைகளை மட்டும் விட்டு விடுங்கள். ஐயோ! விட்டு விடுங்கள்! என் வேதனை மலை போல் இருக்கிறது," என்று மாயாவிரோதி பரிதபித்தான்.

சௌடப்பனுக்கு முத்தையனுடைய விசனகரமான நிலைமை தாங்க முடியவில்லை. தன்னை மறந்து, "முத்தையரே, நான் இங்கு இருக்கிறேன். நீங்கள் என்னை வரச் சொல்லுகிறீர்களா?" என்று கேட்டான்.

ஜெமீந்தார் அறையில் சிறிது நேரம் அமைதி நிலவியது.

மறுபடியும் சௌடப்பன் உருக்கமான குரலில் முன்பு சொல்லியதை திருப்பிச் சொன்னான். பேச்சில்லை. அமைதி. சௌடப்பன் அந்த அறையின் சுவற்றின் மீது நான் கைந்து குத்துகள் குத்தினான். அப்பொழுது யாரோ அவனுடைய தோளை தொட்டதால் அவன் திரும்பிப் பார்த்தான்.

கலியாணம் விறைப்பான பார்வையில் நின்று கொண்டிருப்பதை சௌடப்பன் கண்டான்.

கலியாணமும் ஒரு கைதி தான். இப்பொழுது ஜெமீந்தார் அறைக்குள் காவலாள் போல் இருக்கிறான்.

கலியாணம் கடுகடுத்த முகத்துடன், "மாயாவிரோதி உன்னை இருபத்து நான்கு மணிவரை கை கால்களில் சங்கிலி பிணித்து சிறையில் இருக்குமாறு கட்டளை யிட்டிருக்கிறார்," என்றான்.

"என்னை நீர் தண்டிக்கிறீரா? செட்டியாரே, சொல்லும். நான் நம்ப வில்லை. நீங்கள் இந்த மாதிரி உத்தரவு பிறப்பிக்க மாட்டீர்கள்...... ..........எனக்குத் தெரியும்," என்று வருத்தங் கலந்த குரலில் சௌடப்பன் சொன்னான்.

பதில் ஏதும் கிடைக்க வில்லை. கலியாணம் சௌடப்பனை அழைத்துச் சென்று விட்டான்.

சௌடப்பன் ஒரு நாள் முழுவதும் ஜெயிலில் வைக்கப்பட்டான். கை கால்களில் இரும்புச் சங்கிலிகள் காணப்பட்டன. ஒரு நாளானதும் அவன் விடுவிக்கப்பட்டான். விடுவிக்கப்பட்டதும் அவன் மாயாவிரோதியைப் பற்றி சமாசாரம் சேகரிக்க முற்பட்டான். புதிதாக ஒன்றும் கிடைக்க வில்லை. கனகன் ஜெமீந்தாருடைய அறையில் இருப்பதாக அறிந்தான். சீமாட்டி மட்டும் வெளியே ஓடி வந்தாள். எதையோ அறைக்குள் எடுத்துச் சென்றாள். அவள் உடையில் ஏதோ ரத்தக்கறை காணப்பட்டது.

சௌடப்பனுக்கு உண்மையை அறிய வேண்டுமென்று ஆவல் பொங்கியெழுந்தது. சீமாட்டியும் கனகனும் இருந்த சொந்த அறைகளுக்குச் சென்று தேடினான். சில மருந்து புட்டிகளும் பஞ்சும் அவன் கண்டான். அறையை விட்டுச் செல்லாமல் ஒளிந்து கொண்டிருந்தால் கனகனும் சீமாட்டியும் முக்கியமான சம்பாஷணையை நடத்துவார்கள் என்று கருதி கனகன் அறையினுள் ஒளிந்து கொண்டான்.

நான்கு மணிகளுக்குப் பின் கனகனும் சீமாட்டியும் அங்கே வந்தனர். அவர்களுடைய முகம் கோரமாக இருந்தது. வந்ததும் அவர்கள் அறை வெளிக் கதவைத் தாளிட்டனர். மேலங்கிகளைக் கழற்றி வைத்தனர். அவர்கள் உடைகள் மீது ரத்தம். சௌடப்பன் அதைக் கண்ணுற்றதே மனங் கொதிக்கலுற்றான். ஏதோ கொலை செய்தார்களோ என்று அவன் எண்ணினான். சொல்ல முடியாத அச்சமும் கோபமும் அவனை வாட்டி வதைத்தன. கனகனையும் சீமாட்டியையும் கேட்டு விடலாமா என்று யோசனை செய்தான். அப்பொழுது அவனை அறியாமல் கடுங் கோபத்தினால் எழுந்த சப்தம் அறையினுள் வந்த இருவர்களுடைய கவனத்தைக் கவர்ந்ததால், அவர்கள் திடுக்கிட்டார்கள்.

கனகன் சப்தம் வந்த இடத்தை யடைந்து பார்த்தான்; சௌடப்பன் ஒளிந்து கொண்டிருந்ததைக் கண்டு, அவனை பிடித்து வெளியே கொண்டு வந்தான். கனகனுடைக முகம் கோபத்தினால் சிவந்து, பார்ப்பதற்கு நெருப்பைக் கக்கும் பிரளய கால ருத்திரனைப் போல் இருந்தது. சீமாட்டி

யும் மிக்க முனிவு கொண்டு சௌடப்பனை உயிருடன் சாப்பிட்டு விடுவது போல் தோன்றினாள்.

"பாதகா, இந்தமாதிரி, அறையில் ஒளிந்து கொண்டு நாங்கள் பேசுவதைக் கேட்டு விடலாம் என்று நினைத்துக் கொண்டாயா?" என்று சீறி விழுந்தாள்.

கனகனும் அங்ஙனமே சொன்னான். "நாங்கள்மட்டும் பேச விரும்பிய விஷயத்தைக் கேட்க முற்பட்டிருந்தால் உன்னைக் கிழித்துக் கொன்று தின்றிருப்பேன். நீ ஏன் இங்கு வந்தாய்?" என்று கோபத்தால் மேலும் சீறி விழுந்தான்.

சௌடப்பன் யோசித்தான். பயங்கொண்டால் தன்னை அவர்கள் கொன்று விடுவார்கள் என்று கருதி, தைரியமாக இருப்பதே சரியென்று நினைத்து அவர்களை விறைப்பாக நோக்கி நின்றான்.

"கனகா, நீயும் சீமாட்டியும் மாயாவிரோதியை ஏன் ஜெமீந்தாருடைய அறையில் இருக்க வைத்திருக்க வேண்டும்? காரணம் என்ன? ஜெமீந்தாரைக் கொன்று விட்டீர்களா?" என்று கேட்டான்.

"நாய் போன்றவனே! பேசாதே!" என்று கூவினாள் சீமாட்டி. அவனைத் தின்று விட வேண்டும் என நெருங்கினாள்.

சௌடப்பன் அவளுடைய கையை உதறித் தள்ளி தூர நின்றான். அதைக்கண்ட கனகன் கோபமுற்று அவனை இழுத்துப் பிடித்துக் கொண்டு "இனி மேல் எனது ரகசியத்தை அறிய விரும்பினால் கொன்று விடுவேன். ஜாக்கிரதை," என்று சொல்லிக் கொண்டே சௌடப்பனை அறைக்கு வெளியில் தள்ளினான்.

சௌடப்பன் தொப்பென்று ஒரு சாமான் விழுவதைப் போல் கீழே சிறிது நேரம் விழுந்து கிடந்தான். அவனால் மூச்சு விடவும் பேசவும் முடியவில்லை. அச் சமயத்தில் அவனுடைய சிநேகிதர் ஒருவர் வந்தனர். அவர்களிடம் நடந்த விஷயத்தைச் சொன்னான். அவர்கள் பதில் ஏதும் சொல்லாமல் மௌனமாக இருந்தனர். பின்னர் சௌடப்பனை அழைத்துச் சென்றார்கள்.

மறுநாள் முடியுமுன் சௌடப்பன் வாயிலாக கப்பலில் இருந்த ஏனைய கைதிகள் மாயாவிரோதியைப் பற்றி கவலை கொண்டு, எப்படியாவது உண்மையை அறிய வேண்டும் என்று பேச வாரம்பித்தார்கள்.

(தொடரும்.)



# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

ஈசுவர௵ ஆவணி௴—கலியுகாதி 5039, சாலிவாகனம் 1860,
பசலி 1347, கொல்லமாண்டு 1113, ஹிஜரி 1356,
இங்கிலீஷ் 1937௵ ஆகஸ்டு௴—செப்டம்பர்௴

| ஆவணி௴ | ஆகஸ்டு | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | திங் | தச50-20 | கேட்47-3 | சித்60 | விஷ்ணுபதி புண்யகாலம் |
| 2 | 17 | செவ் | ஏகா55-25 | மூல53-25 | அ53-25சி | சர்வ, மத்வ ஏகாதசி |
| 3 | 18 | புதன் | துவா59-5 | பூரா58-45 | அமி60 | தாமோதர துவாதசி |
| 4 | 19 | வியா | திர60 | உத்60 | சித்60 | பிரதோஷம், விவாகம் |
| 5 | 20 | வெள் | திர1-3 | உத்2-18 | சி2-18மர | வரலட்சுமீ விரதம் |
| 6 | 21 | சனி | ச○1-35 | திரு4-25 | சித்60 | ○, யஜுர் உபாகர்மம் |
| 7 | 22 | ஞா | பௌ0-40<br>பிர58-23 | அவி5-8 | மர5-8சித் | சிராவண பகுளம், காயத்<br>தீரீ ஜெபம், அவமாகம் |
| 8 | 23 | திங் | துதி55-0 | சத4-33 | சித்4-33ம | |
| 9 | 24 | செவ் | திரி50-58 | பூர3-3 | மர3-3அ | |
| 10 | 25 | புதன் | சது46-20 | உத்0-48<br>ரேவ58-0 | சி0-48மர | |
| 11 | 26 | வியா | பஞ்41-28 | அஸ்54-55 | அ54-55சி | |
| 12 | 27 | வெள் | ஷஷ்35-0 | பர51-40 | சித்60 | |
| 13 | 28 | சனி | சப்31-5 | கி❋48-23 | அமி60 | |
| 14 | 29 | ஞா | அ25-48 | ரோ45-3 | சித்60 | |
| 15 | 30 | திங் | நவ20-38 | மிரு41-45 | அ41-45சி | |
| 16 | 31 | செவ் | தச15-33 | திரு38-38 | ம38-38சி | |
| 17 | 1937௵ செப்டம்பர்௴ 1 | புதன் | ஏகா10-33 | புன35-45 | சித்60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 18 | 2 | வியா | துவா5-55 | பூச33-10 | அ33-10சி | பிரதோஷம் |
| 19 | 3 | வெள் | திர1-45<br>சது58-20 | ஆயி31-15 | மர60 | மாச சிவராத்திரி |
| 20 | 4 | சனி | ●55-58 | மக30-10 | அ30-10சி | சர்வத்திர அமாவாசை |
| 21 | 5 | ஞா | பிர54-48 | பூரா30-13 | சி30-13அ | பாத்ரபத சுத்தம், மௌன |
| 22 | 6 | திங் | துதி55-5 | உத்31-35 | சித்60 | சந்திரதெரிசனம் [விரதம் |
| 23 | 7 | செவ் | திரி56-53 | அஸ்34-28 | சித்60 | சோடசோம விரதம் |
| 24 | 8 | புதன் | சது60 | சித்38-58 | சித்60 | விநாயக சதுர்த்தீ |
| 25 | 9 | வியா | சது0-25 | சு44-48 | அ44-48சி | ரிஷிபஞ்சமி, விவாகம் |
| 26 | 10 | வெள் | பஞ்5-22 | வி51-50 | சித்60 | ஷஷ்டி, சம்பா ஷஷ்டி |
| 27 | 21 | சனி | ஷஷ்11-20 | அ59-30 | சித்60 | சூரிய ஷஷ்டி, ஜெயசப்தமி |
| 28 | 12 | ஞா | சப்17-48 | கேட்60 | மர60 | தூர்வாஷ்டமி [ணீ மூலம் |
| 29 | 13 | திங் | அஷ்24-5 | கேட்7-13 | சித்60 | நந்த, அதுக் நவமி, ஆவ |
| 30 | 14 | செவ் | நவ29-25 | மூல14-13 | அ14-13சி | வியாதியஸ்தர் குளிக்க |
| 31 | 15 | புதன் | தச33-28 | பூரா20-3 | அமி60 | க்ஷீர விரதாரம்பம் |
| 32 | 16 | வியா | ஏகா35-50 | உத்24-13 | சித்60 | சர்வ, மத்வ ஏகாதசி |

| | | | |
|---|---|---|---|
| சனி | | கே | சுக் |
| | 3-கன்-புத<br>9-கடக-சுக்<br>28-சிம்-புத | | |
| | | | சூரி<br>புத |
| குரு | செ<br>ராகு | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No. 6, LAWYER CHINNATHANBI MUDALI STREET, MADRAS.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம :

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "திருவள்ளுவர்.—

(ALL RIGHTS RESERVED.)

தொகுதி 23 } ஈசுவர ஹு புரட்டாசிமீ கஉ 1937ஹு செப்டம்பர்மீ 17உ { பகுதி 3

## கடவுள் வணக்கம்.

அழுக்கு மெய்கொடு உன்திருவடி யடைந்தேன்
அதுவு(ம்) நான்படப்பாலது ஒன்றானல்
பிழுக்கை வாரியும் பால்கொள்வர் அடிகேள்!
பிழைப்பன் ஆகிலுந் திருவடிப் பிழையேன்
வழுக்கி வீழினுந் திருப்பெயர் அல்லால்
மற்றுநான் அறியேன் மறுமாற்றம்
ஒழுக்க என்க(ண்)ணுக்கு ஒருமருந்து உரையாய்
ஒற்றியூர் எனும்ஊர் உறைவானே. (1)

கங்கைதங்கிய சடையுடைக் கரும்பே
கட்டியே பலர்க்குங் களைகண்ணே
அங்கை நெல்லியின் பழத்திடை யமுதே
அத்தாஎன்இடர் ஆர்க்கு எடுத்து உரைக்கேன்
சங்கும் இப்பியுஞ் சலஞ்சலம் முரல
வயிரமுத்தோடு பொன்மணி வரன்றி
ஒங்குமா கடல் ஓத(ம்)வந்து உலவும்
ஒற்றியூர் எனும்ஊர் உறைவானே. (2)

மானை நோக்கியர் கண்வலைப்பட்டு வருந்தி
யான்உற்ற வல்வினைக்கு அஞ்சித்
தேனை யாடிய கொன்றையினய் உன்
சீலமுங் குணமுஞ் சிந்தியாதே
நானும் இத்தனை வேண்டுவது அடியேன்
உயிரொடு நரகத்து அழுந்தாமை
ஊனம் உள்ளன தீர்த்தருள் செய்யாய்
ஒற்றியூர் எனும்ஊர் உறைவானே. (3)

# அரும்பொருள் விளக்கம்

1. (இ-ள்.) திருவொற்றியூர் என்னும் திருப்பதியில் கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் பெருமானே! அழுக்கடைந்த தேகத்தோடு உன்னுடைய திருவடிகளையே தஞ்சமாக வந்தடைந்தேன்; இவ்வித இழி நிலைமையையும் அடியேன் அநுபவிக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டு விட்டது; ஆயினும், மெய்ஞ்ஞான சொரூபனே! பால் கறப்பவர்கள், பால் கறக்கையில் பிழுக்கை விழுந்தால், அதை வாரியெறிந்துவிட்டு, பாலையெடுத்துக்கொள்வதுபோல, நான் உண்மையிலேயே தவறு செய்திருப்பவனாயினும், உன் திருவடியைப் பற்றுக்கோடாகக் கொள்வதில் எப்போதும் தவறமாட்டேன்; கால் வழுக்கித் தவறி விழுஞ் சமயத்திலும் உன்னுடைய திருப்பெயரை யுச்சரிப்பேனே யன்றி, வேறு ஒரு வார்த்தையுஞ் சொல்ல எனக்குத் தெரியாது; ஆகையால், (நான் செய்த தவறுகளைப் பெரிதாகக் கருதாது மன்னித்து) நீர் ஒழுகும் எனது அஞ்ஞானக் கண்களுக்கு (ஞானச் சுடராகிய உன்னைக் காண) ஒரு மருந்தைக் கூறுவாயாக. (எ-று.)

ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களால் ஆக்கப்பட்டதாதலாலும், அப் பாச பந்தத்தால் பற்றப்பட்டு பாவகாரியங்களைச் செய்தற்குக் கருவியாயிருப்பதாலும் 'அழுக்கு மெய்' என்றார். 'இருக்கினும் நிற்கும் போதும் இரவுகண் துயிலும்போதும், பொருக்கென நடக்கும்போதும் பொருந்தியூண் துய்க்கும்போதும், முருக்கு இதழ் கனிவாயாரை முயங்கி நெஞ்சு அழியும்போதும், 'நமசிவாய' என்னும் இறைவன் திருப்பெயரை மறப்பதில்லை யென்பார், 'வழுக்கி வீழினும் திருப் பெயர் அல்லால் மற்று நான் அறியேன் மறுமாற்றம்' என்று அழுத்தமாகக் கூறினார். மற்றொரு சமயாசாரியாரும், "நற்றவா உன்னை நான் மறக்கினும் சொல்லும்நா நமசிவாயவே" என்று ஓதியிருப்பதும் இங்கு ஒப்பிட்டு கவனிக்கத்தக்கது.

2. (இ-ள்) சங்கும், கிளிஞ்சலும் நீரோடு நீராக உருள, வயிரம் பாய்ந்த கெட்டிமுத்தும் பொன்னும் நவமணியும் கலந்து புரள, கொந்தளிக்கும் பெருங்கடலின் அலைகள் ஒன்றோடொன்று மோதி உலவும் திருவொற்றியூர் என்னும் திருப்பதியில் கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் பெருமானே! கங்காதேவி வீற்றிருக்கும் சடாபாரத்தை யுடைய தித்திக்கும் செங்கரும்பே! அக் கருப்பஞ் சாற்றில் செய்யப்பட்ட கற்கண்டே! உலகிலுள்ள ஆன்மாக்களுக் கெல்லாம் ஆதார புருஷனே! அழகிய கையிலிருக்கும் நெல்லிக் கனியைப் போல, அப் பழத்திலூறி யிருக்கும் தெள்ளமுதமே! தலைவா! அடியேனது துயரை உன்னிடத்தன்றி வேறு யாரிடத்துப் போய் எடுத்துக் கூறுவேன். (எ-று.)

3. (இ-ள்) திருவொற்றியூர் என்னும் திருப்பதியில் கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் பெருமானே! மானைப் போன்ற மருண்ட பார்வையுடைய மகளிரது சேல்விழியாகிய வலையில் சிக்கி வாடி வருந்தி யான் அடைந்த கொடிய தீவினைக்குப் பயந்து, தேன் ததும்பிய கொன்றை மாலையணிந்த பரமசிவனே! உன் சீலத்தையும், குணத்தையுஞ் சிந்தித்துப் பாராது நான் இவ்வளவு தூரம் வேண்டிக் கொள்ளுகிறேன்; அடியேன் உயிரோடு நரகத்தில் அழுந்தி வருந்தாவாறு, என்னிடத்தில் ஊனங்களாக உள்ளவற்றை யெல்லாம் நீக்கித் திருவருள் புரிவாயாக. (எ-று.)




# ஹிந்தி கட்டாய பாடப் பிரச்சினை





நமது தமிழ்நாட்டில் சில நாட்களாகக் கல்வி சம்பந்தமான ஒரு முக்கிய பிரச்னை அறிஞர்களிடையே பலமாக விவாதிக்கப்பட்டு வருவது வாசகர்கள் அறிந்திருக்கலாம். அப் பிரச்சினை என்ன? உயர்தரப் பாடசாலைகளில் முதல் மூன்று பாரங்களிலும் ஹிந்திமொழியைக் கட்டாய பாடமாக வைக்கவேண்டுமென்பதே யாகும். இவ் விஷயத்தை முதன்மந்திரி கனம் இராஜகோபாலாசாரியார் முதன்முதலாக மைலாப்பூர் இராமகிருஷ்ண மாணவர் இல்லத்தில் நடந்த கூட்டமொன்றில் பிரஸ்தாபித்தார். அதன் பயனாக, தமிழ்நாடெங்கும் பெருத்த கிளர்ச்சி யேற்பட்டிருக்கிறது. இது சம்பந்தமாக நாடோறும் பொதுக் கூட்டங்களிலும், பத்திரிகைகளிலும் பல அறிஞர்கள் சாதக பாதகமான அபிப்பிராயங்களைத் தெரிவித்து வருகின்றனர்.

ஹிந்தியைக் கட்டாய பாடமாக வைப்பதை ஆதரிப்போரைப் பற்றி இங்கு பேச்சேயில்லை. ஏனென்றால், அவர்களெல்லாம் கனம் இராஜகோபாலாசாரியார் என்ன காரணங் கூறுகிறாரோ அதை வேத வாக்காகக் கருதுபவர்களாவர். ஹிந்தி கட்டாய பாடமாதலை எதிர்ப்போர் பலதிறக் கருத்துடையாரா யிருக்கின்றனர். அக் குழுவினருள் முக்கியமாக இரு பிரிவினரை மட்டும்தான் நாம் இங்கு குறிப்பிட விரும்புகிறோம். ஒரு சாரார், 'ஹிந்தி கட்டாய பாடமாக வைக்கப்பட்டால் தாய்மொழி வளர்ச்சிக்குப் பாதகம் நேரிடுமோ' எனப் பயப்படுபவர்களாவர். பிறிதொரு கோஷ்டியார், 'ஏற்கனவே மாணவர்களுக்கு அவர்கள் தாங்க முடியாத அளவு பல விஷயங்கள் பாடங்களாக வைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றோடு ஹிந்தியையுங் கட்டாய பாடமாகவைப்பது முறையன்று' என்று கூறுபவர்களாவர். இவ்விரு திறப்பட்ட அபிப்பிராயங்களும் கவனிக்கப்படத் தக்கதேயாகும். அவ்வித அபிப்பிராயங்களை வெளியிடுபவர்கள் சாதாரணமானவர்களல்லர். பல மொழிகளிலும் வல்லவர்கள்; கல்வித் துறையில் ஈடுபட்டு

பல வருடங்களாகச் சேவை செய்து வருபவர்கள். பிரம்மஞான சங்கத்தைத் தோற்றுவித்து உலகமெங்கும் பாவச் செய்த அன்னி பெஸண்ட் அம்மையாருடன் சேர்ந்து பல வருடங்களாகக் கல்வி முன்னேற்ற விஷயமாகப் பாடுபட்டு வருபவரும், தற்போது பிரம்மஞான சங்கத்தின் தலைவரா யிருப்பவருமான டாக்டர். அருண்டேல் என்ன! சிறந்த வழக்கறிஞரும், அண்ணாமலை சர்வகலாசாலைப் போசிரியருமான உயர்திரு எஸ். சோமசுந்தர பாரதியார் எம் ஏ., பி. எல்., என்ன! திருவாளர்கள் கே. சுப்பிரமணியம் பிள்ளை எம். ஏ., எம். எல், பண்டிதமணி கதிரேசஞ் செட்டியார் முதலிய பேரறிஞர்கள் என்ன! இப்பெரியார்களெல்லாம் ஹிந்தி கட்டாய பாட மாதலை எதிர்க்கிறார்கள் என்றால், அதற்குத் தக்க காரணங்கள் இல்லாமலிருக்க முடியாது.

திரு. சோமசுந்தர பாரதியார் போன்ற பேரறிஞர்கள், ஹிந்தி கட்டாய பாடமானால் நம் தாய் மொழியாகிய தமிழ் மொழியின் வளர்ச்சி குன்றும் என்று பயப்படுவதற்கு இடமிருக்கிறது. ஏற்கனவே ஆங்கிலத்தாலும், அதுபோன்ற அயல் மொழிகளாலும் நம் தமிழ்மொழி நசுக்கப்பட்டு வளர்ச்சி கெட்டு வந்திருக்கிறது. இது அநுபவத்தில் கண்ட உண்மையாகும். ஆகவே, இப்போது ஹிந்தியைக் கட்டாய பாடமாக வைப்பின் தமிழ் மொழியின் நிலை என்னுமோ? என்று தமிழ்மக்கள் பலர் அஞ்சுவது இயல்பேயன்றோ!

தற்போது எல்லா பள்ளிக் கூடங்களிலும் அரசாங்க மொழியாகிய ஆங்கிலம் முக்கியமாக—அதாவது கட்டாய பாடமாக-வைத்துக் கற்பிக்கப்படுகிறது. அத்துடன் நாட்டு மொழி என்று வேறொரு மொழி கற்றுக் கொடுக்கப்படுகிறது. அது தமிழ் மொழியாகவும் இருக்கலாம்; சமஸ்கிருதமாகவும் இருக்கலாம். தமிழ்மொழிதானிருக்க வேண்டுமென்ற விதியில்லை. இவ்விதம் தாய்மொழி கட்டாய பாடமாக வைக்கப்படாம லிருக்கும்போது, ஹிந்தி மொழியைக் கட்டாய பாடமாக வைக்க முயற்சி செய்வதென்றால், தமிழ்மொழி வளர்ச்சியில் ஆர்வ முடையவர்களுக்கு மனக்குறை யேற்பட்டதில் ஆச்சரியமொன்று மில்லை.

காலஞ்சென்ற தமிழ்ப் போசிரியர்-திரு. கா. நமசிவாய முதலியார் போன்ற பெரியார்கள் தமிழ் மொழியைக் கட்டாய பாடமாக்க வேண்டுமென்று கல்வியிலாகா அதிகாரிகளுக்கும், அரசாங்கத்துக்கும் பல வருடங்களாக முறையிட்டு வந்தனர். இதன் பயனாக சில வருடங்களுக்கு முன், ஆங்கிலபாடம் நீங்கலாக, மற்ற விஷயங்(பாடங்)களைத் தமிழில் போதிக்கலாம்; மாணவர்களும் தமிழில் விடையெழுதலாம் என்று தீர்மானிக்கப்பட்டது. ஆனால், அவ்விதி இதுவரை அமுலுக்கு வந்ததாக நமக்குத் தெரியவில்லை. எனவே, முதலில் தமிழ் மொழியைக் கட்டாய பாடமாக்குவதும், சகல பள்ளிக்கூடங்களிலும் ஆங்கிலம் நீங்கலாக மற்றெல்லாப் பாடங்களையும் தமிழில்

போதிக்கும்படி செய்வதும் மிக இன்றியமையாத தாகுமன்றோ! இவ்விதம் தாய்மொழி வளர்ச்சிக்கான செயல்கள் செய்ய வேண்டியது நமது காங்கிரஸ் மந்திரிகளின் முதற் கடமையாகும். அவ்விதம் தலையாய கடமையைச் செய்யவேண்டிய காங்கிரஸ் மந்திரிகள் அதைக் கவனியாது, எடுத்த எடுப்பிலேயே ஹிந்தியைக் கட்டாய பாடமாக்க முற்பட்டிருப்பதுதான் ஒரு சிலருக்குச் சந்தேகத்தை யுண்டுபண்ணி யிருக்கிறது.

மகாத்மாகாந்தியும், அவரைப் பின்பற்றும் மற்ற தலைவர்களும் இந்தியாவுக்குப் பொது மொழியொன்று இருக்க வேண்டியது அவசியமாகும் என்று சுமார் இருபது வருஷங்களாகவே கூறி வருகின்றனர். அவர்கள் கூறுகிறபடி, இந்தியாவுக்கு அதன் பல பாகங்களிலுள்ள பல்வேறு மக்களும் பேசுவதற்கு ஒரு பொதுமொழி அவசியமானதே என்பதை யாரும் மறுக்கமுடியாது. இந்தியா நாம் விரும்புகிறபடி சுயராஜ்யமடைந்தால், இப்போது வழங்கும் ஆங்கிலத்துக்குப் பதிலாக ஒரு பொதுமொழி யிருக்க வேண்டியது அவசியமேயன்றோ! அரசியல் நடவடிக்கைகளுக்கும் எல்லா மாகாணங்களி லுள்ளவர்களெல்லாம் ஐக்கிய மடைவதற்கும் வியாபார முதலியன நடத்துவதற்கும் பொது மொழியொன் றில்லாவிடில் முடியாது. அப்படியானல் எம்மொழி பொது மொழியாவது? இந்தியாவிலேயே மற்றெல்லா மொழிகளையும்விட, ஹிந்தியே பெரும்பாலோரால்—அதாவது ஏறக்குறைய 22 கோடி மக்களால்—பேசப்படுகிறது; ஆதலால் மகாத்மா காந்தி ஹிந்தியையே பொதுமொழியாக்கி யிருக்கிறார். ஆகவே, அந்த ஹிந்தி மொழியை இப்போதிருந்தே பயின்று வரவேண்டியது அவசியமேயாகும். அதைப்பற்றி யாரும் ஆட்சேபிக்கமாட்டார்கள். தக்ஷிண ஹிந்தி பிரசார சபையார் நமது நாட்டில் சென்ற இருபதுவருட காலமாக ஹிந்தியைப் பரவச்செய்ய முயன்று பலருக்கும் போதித்து வருகிறார்கள். ஆனல் ஹிந்தியைக் கட்டாயபாடமாக வைக்க வேண்டியது அவசியமா? விருப்பப் பாடமாக (Optional subject) வைத்து மாணவர்களுக்குப் போதிக்கக் கூடாதா? என்பதே இப்போது திரு. சோமசுந்தர பாரதியார் போன்றவர்களுடைய கேள்வியாகும்.

இவ்வித எதிர்ப்புக் கிளர்ச்சிகள் பலப்பட்ட பிறது, கனம் இராஜகோபாலாசாரியார், இவற்றிற்கெல்லாம் பதிலளிக்கு முறையில் பல இடங்களில் பேசி வருகிறார். டாக்டர் டி. எஸ். எஸ் ராஜன், கனம் எஸ். ராமநாதன் முதலிய போன்ற மந்திரிகளும் இதை யொட்டிப் பேசிவருகின்றனர்.

முதன் மந்திரி கனம் ராஜகோபாலாசாரியார், தாம்பரம் கிறிஸ்தவக் கலாசாலையில் மாணவர் கூட்டத்தில் பிரசங்கஞ் செய்த போது,

"நமது வாழ்விலே, நமது மனோ உணர்ச்சிகளை அப்படியே வெளியிடத் தாய் பாஷை எவ்வளவு முக்கியமாக விருக்கிற தென்பதை உணராதிருப்பது மிகவும் துக்ககரமாகும்.

நமது தாய் பாஷையில் போதிய பதங்கள் இல்லை என மதிப்பது தவறு. அப்பாஷையை நாம் உபயோகிக்காததால் அது படிப்படியாக க்ஷீணித்து வருகின்றது. தாய் மொழியைப்போல அவ்வளவு சுலபமாகவும் சரியாகவும் நமது உணர்ச்சிகளை வேறெந்தப் பாஷை மூலமும் வெளியிட முடியாது. ஷேக்ஸ்பியர் நாடகத்தைக் கூடத் தாய் மொழியில் மாணவர்களுக்கு மேலாகக் கற்பிக்கலாம்.

கணக்கு, ரஸாயன சாஸ்திரம் முதலியவைகளையும் எம். ஏ வரையிலும் கூடத் தமிழிலேயே கற்பிக்கலாம். மேல் வகுப்புக்களில் எல்லாப் பாடங்களையும் தாய் மொழியிலேயே கற்பிக்கவேண்டும். இப்பொழுது கீழ் வகுப்புக்களில் சில பாடங்களைத் தமிழில் கற்பிக்கின்றனர். ஆனால் மேல் வகுப்புக்களில் எல்லாம் இங்கிலீஷிலேயே கற்பிப்பதால் கீழ் வகுப்பு மாணவர்கள், தாய்மொழி ஏற்பாடு தற்காலீகமானதே யென்றும், சில வருஷங்கள் கழித்து எல்லாம் இங்கிலீஷ் மூலமே கற்பிக்கப் படுமென்றும் எண்ணி, தமிழ்மொழியை ஒருவித அலட்சியத்துடன் மதிக்கின்றனர் ஆகையால்தான் மேல் வகுப்புக்களிலும் தாய்மொழி மூலமே பாடங்கள் கற்பிக்கப்பட வேண்டுமென்று நான் கூறுகின்றேன்........................"

"தென்னிந்தியர்கள் ஹிந்துஸ்தானியிலே பண்டிதர்களாக வேண்டுமென்று நான் சொல்லவில்லை தாய்மொழியாகிய தமிழுக்குப் பதிலாக வேறொரு பாஷையை வைக்க வேண்டுமென்று நான் சொல்லவில்லை அவ்வித யோசனையையும் நான் கண்டிப்பாக எதிர்ப்பேன். ஆனால், இந்திய தேசீய சமுதாய பிரஜைகளுக்குப் பொதுப் பாஷையான ஹிந்துஸ்தானி அவசியமாகும். இந்தியா வெங்கும் வேலை பெறுவதற்கும் பொதுஜன சேவை செய்வதற்கும் ஹிந்தி பாஷையில் பழக்க மிருக்கவேண்டியது அவசியம்."

என்று குறிப்பிட்டுப் பேசி யிருக்கிறார். இப்பிரசங்கம், ஹிந்தி கட்டாயபாட மாக்குவதால், தமிழ்மொழி வளர்ச்சி குன்றும் என்று பயப்படுபவர்களுடைய சந்தேகங்களை ஒருவாறு போக்கும் என்று நாம் நம்புகிறோம்.

சமீபத்தில், சென்னை தியாகராய நகர் ரங்கசாமி ஐயங்கார் ஞாபகார்த்த மண்டபத்தில் கல்வி யபிவிருத்தியில் கருத்தும் கல்வியிலாகாவில் சம்பந்த முமுடைய பெரியார்கள் கூட்டம் ஒன்று கனம் ராஜகோபாலாசாரியார் தலைமையில் நடைபெற்றது. அக் கூட்டத்தில் ஹிந்தி கட்டாய பாடமாக வைக்கப்படுதலைப் பற்றியும் விவாதிக்கப்பட்டது.

---

(176-ம் பக்கம் பார்க்க.)

# தமிழர் கடமைகள்

(ஆசிரியர். எம். எஸ். சுந்தரேச ஐயர்.)

அறுசீராசிரிய விருத்தம்

தேம்பழம் கண்டு சீனித் தேனுவின் பாலுங் கைக்கும்
தீந்தமிழ்ச் சுவையை யோராத் திருவிலாப் பரத நாட்டீர்!
மாந்தர்கள் உலகில் யாரும் மாண்புடன் தமிழைக் கற்கச்
சாந்தனை யுழைத்து நீவிர் தமிழர்நா டாக்கு வீரே. (1)

நம்முடை நாட்டுப் பண்டை நூல்களை நலமாய்க் கற்றச்
செம்மையோ ரவரைப் போற்றுச் சீரிலா பரத நாட்டீர்!
நம்முடை தமிழைப் பேணி நம்மவர் மனங்களிக்கச்
செம்மையாய்க் கடனையாற்றிச் செல்வ நாடாக்குவீரே. (2)

அத்தையும் பாட்டி மாரும் அகத்தினில் வியக்கும் வண்ணம்
இத்தரை மீது நூலை இயற்றிடும் பரத நாட்டீர்!
வித்தகர் வியக்கும் வண்ணம் மேன்முறை யாளர் நூலைச்
சுத்தவா ராய்ச்சி செய்து தூய்மைநா டாக்கு வீரே. (3)

ஆங்கிலம் வல்லோர் நாளு மளவிலா தனத்தைக கொள்ள
ஆங்கதைப் பார்த் திருக்கும் ஆண்மையில் பரத நாட்டீர்!
பாங்குறு நமது தேசப் பாஷையி னுயர்வைக் காட்டித்
தீங்கிலா அறப்போர் செய்து தீரநா டாக்கு வீரே. (4)

அன்னிய நாட்டா ரெல்லாம் அருந்தமி ழதை யவாவ
மன்னிய கீர்த்தி யின்றி வாடிடும் பரத நாட்டீர்!
தன்னிலை யறிந்தான் நாளுந் தரணியி லுழைத்தல் போல
இன்னையே சோர்வைத் தள்ளி இன்பநா டாக்கு வீரே. (5)

தேனிசைப் புலவரென்று "டெனிஸனைப்" புகழ்ந்து கூறி
மானிலத் துவகை கூறும் மாண்பிலா பரத நாட்டீர்!
மேனிலைக் 'கம்ப' ராதி வித்தகர் நூலைப் பார்த்து
ஞானிலத் துவகை கூறி நல்லநா டாக்கு வீரே. (6)

செந்தமிழ் ஞானத் தோடு சிறந்தநல் 'பி. ஏ.' பட்டம்
எந்தையி னருளால் பெற்றே இலங்கிடும் பரத நாட்டீர்!
இந்தமா நிலத்தில் யாரும் இழிசொலைப் பகரா வாறு
அந்தமாய் நடந்து நீவிர் அருமைநா டாக்கு வீரே. (7)

ஆங்கிலம் முறையாய்க் கற்றே அந்நிய நாட்டிற் காகப்
பாங்குடன் உதவி யாற்றும் பண்புசால் பரத நாட்டீர்!
தாங்கொணு வறுமை யேற்றுத் தவித்திடுந் தாய்நாட் டிற்காத்
தீங்கிலாப் பணியே யாற்றித் தெய்வநா டாக்கு வீரே. (8)

நந்தமிழ் வரலா றெல்லாம் நயம்பட ஆங்கிலத்தில்
பந்தமா யெழுதி விக்கும் பற்றுடை பரத நாட்டீர்!
விந்தையா யவர்கள் நூலை விருப்புடன் மொழி பெயர்த்துச்
செந்தமி ழதனிற் காட்டிச் செல்வநா டாக்கு வீரே. (9)

உத்தம மக்கள் வாழும் ஒவ்வொரு ஊர்கள் தோறும்
வித்தகர் வழியில் வந்த வீறுடை பரத நாட்டீர்!

சத்துவ குணங்க ளூட்டுந் தமிழ்மொழி வளர்ச்சிக் காகப்
புத்தக சாலை வைத்துப் புலமைநா டாக்கு வீரே. (10)

அன்னிய பாஷை வேட்டுளம் மன்னையைத் தூற்றி வாழும்
நன்னய மில்லா வீர நலஞ்செறி பரத நாட்டீர் !
சொன்னயந் ததும்பு கின்ற தொன்மையாந் தமிழைப் போற்றிப்
பன்னரும் புலவோர் வாழ்த்தப் பண்டைநா டாக்கு வீரே. (11)

இமிழ்கட லுலகத் தோர்கள் இனிமையாய்ப் புகழு மிந்தத்
தமிழதின் பெருமை எண்ணாத் தன்மை சேர்பரத நாட்டீர் !
இமையவர் தங்கட் காக எமுறக் கொண்டு வந்த
அமிழ்தென இதனைப் பேணி ஆதிநா டாக்கு வீரே. (12)

வள்ளுவர் இளங்கோ சாத்தன் வகுத்தநற் பண்டை நூலைத்
தெள்ளற வாசி யாது திரிந்திடும் பரத நாட்டீர் !
வெள்ளைய ரென்று நாளும் வீணிலே யழிந் திடாமல்
உள்ளுற ஞானம் பெற்றே உயர்ந்தநா டாக்கு வீரே. (13)

சாத்திரம் வேத மெல்லாம் சாற்றிய நெறியைப் பற்றி
நீர்த்திரை யுலகில் வாழும் நேர்மைசேர் பரத நாட்டீர் !
நாத்திகக் குழியி லாழ்ந்து நலிந்துயர் நீங்கா முன்னர்
ஆத்தும நூலை யோதி அன்புநா டாக்கு வீரே. (14)

செந்தமிழ் நாட்டில் தோன்றிச் செந்தமி ழிடை வளர்ந்து
செந்தமிழ் இழிவென் றோதும் சீரிலா பரத நாட்டீர் !
செந்தமிழ் புலவர் யாத்த செய்யுளில் வழிந்து வீழும்
செந்தமிழ்ச் சுவையை மாந்தித் திவ்யநா டாக்கு வீரே. (15)

நண்பரைக் காணும் போது நந்தமி ழதிற்பே சாது
பண்பற ஆங்கி லத்தில் பறைந்திடும் பரத நாட்டீர் !
விண்புலத் தவரும் கற்க விழைவுறும் பாஷை தன்னைத்
திண்புவி மீது போற்றிச் சிறந்தநா டாக்கு வீரே. (16)

அகம்புற மென்று முன்னோர் அணிபெற அமைத்த நூலின்
அகம்புறந் தெரிகி லாத அறிவிலா பரத நாட்டீர் !
அகந்தனை அறவே நீக்கி ஐயனைக் காண வேண்டில்
அகந்தனில் தமிழை ஏத்தி ஆன்றநா டாக்கு வீரே. (17)

திண்மைசேர் மனத்தின் கண்ணே சீரிய ஊக்கம் பொங்கி
உண்மையாய்த் தமிழுக் காக உழைத்திடும் பரத நாட்டீர் !
வண்மைசேர் செல்வத் தோர்க்கு வான்தமி ழுருசி காட்டித்
தண்மையால் பொருளை யீட்டித் தருமநா டாக்கு வீரே. (18)

தாய்மொழி யதனி லூக்கம் தரணியில் வேண்டு மென்று
வாய் மொழி யாகப் பேசி மகிழ்ந்திடும் பரத நாட்டீர் !
நாய் மொழி நிகர்க்கு மந்த நரரது பாஷை விட்டெம்
ஆய்மொழி கற்று நீவிர் அமலநா டாக்கு வீரே. (19)

மேதினி மாந்தர் யார்க்கும் விரித்திடுந் தமிழானந்த
போதினி வாசிக் கின்ற புகழுடை பரத நாட்டீர் !
ஓதினி மையே யான உயர்தமிழ் கற்று பாரில்
வாதினி யறவே நீக்கி மாட்சிநா டாக்கு வீரே. (20)

# உலக சமாதானம் சாத்தியமா?



ஒவ்வொரு காலத்திலும் மனிதர் தேசங்கள் பலவற்றிற்கு மிடையே இருந்துவரும் பகைமைகளையும் பூசல்களையும் இல்லாதொழித்து உலக அமைதி காண மிகுந்த பிரயத்தனம் செய்திருக்கின்றனர். பத்தொன்பதாம் நூற்றூண்டிலே டிஸ்ரீயலினுடைய தலைமையின் கீழ் ஐரோப்பிய அரசியல் நிபுணர்கள் உலக சமாதானத்திற்கான மார்க்கத்தைத் தாங்கள் கண்டுபிடித்துவிட்டதாக எண்ணினூர்கள். ஆண்டிரு கார்ணகீ உலாந்து தேசத்திலுள்ள ஹேக் பட்டணத்திலே சமாதான மாளிகை ஒன்று கட்டுவதற்காகத் தம்முடைய பணத்தைக் கோடிக் கணக்கில் வாரி இறைத்தார். ஆனல் திடீரென ஏற்பட்ட உலக யுத்தத்தால் அவரும் அவரது சகாக்களும் பெரும் ஏமாற்றம் அடைந்தார்கள். அவர்களுடைய பிரசாரத்தின் காரணமாக, 1914-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் கூடவிருந்த சமாதான மகா நாட்டிற்கு உலகத்தின் பற்பல பாகங்களிலிருந்தும் பிரதிநிதிக் கோஷ்டிகள் வந்துகொண்டிருக்கையில் தானே யுத்தம் ஏற்பட்டுவிட்டது; வந்த பிரதிநிதிகள் தங்கள் தங்கள் தேசங்களுக்குத் திரும்பிப் போவதற்குக் கஷ்டமாய்விட்டது. இந்தத் துக்கம் தாள மாட்டாமல், ஆண்டிரு கார்ணகீ சிறிது காலத்திற்குப் பின் மரணமடைந்தார்.

மகா யுத்தத்திற்குப் பின், அமெரிக்க ஐக்கிய மாகாணங்களின் தலைவரும் அப்போது உலகத்தில் இருந்த மிகச் சிறந்த இலக்ஷியவாதிகளுள் ஒருவருமாகிய உட்ரு வில்சன், சம்பிரதாயத்தை மீறி கடல் தாண்டி ஐரோப்பாவிற்குப் போய், அங்குள்ள அரசியல் தந்திரிகளுடன் சேர்ந்து, இனி உலகத்தில் ஒருபொழுதும் யுத்தம் என்பதே தோன்றாதபடிக்குச் சர்வ தேச சங்கத்தை ஸ்தாபிப்பதிலே தீவிரமாக ஈடுபட்டார். ஆனல் அவருக்குப் பலத்த எதிர்ப்பு இருந்தது. "வில்ஸன் இயேசுக் கிறிஸ்துவைப் போல் அல்லவா பேசுகிறார்?" என்று கிளெமென்ஸோ அவரைக் கேலி செய்தார். கிறிஸ்துவினுடைய கொள்கைகள் அனுபவ சாத்தியமல்லாதவை என்பது கிளெமென்ஸோவின் அபிப்பிராயம். உட்ரு வில்சனும் துக்கத்தால் மன முறிந்து மரித்தார்.

இப்படிப் பலத்த எதிர்ப்புக்கும் ஏளனத்திற்கும் இடையே பிறந்தது சர்வதேச சங்கம். அது மிக உயர்ந்த இலக்ஷியங்களைக் கொண்ட சங்கம். பல துறைகளிலும் அது செய்திருக்கும் சேவையை அளவிடல் அரிது. பற்பல தேசங்களிலும் உள்ள சிறுபான்மை ஜாதிகள், தேசப் பிரஷ்டர், அடிமைகள், லாகிரி வஸ்துக்கள் வியாபாரம் முதலியன சம்பந்தமாக அது எடுத்துக்கொண்டிருக்கும் முயற்சிகள் பெரிதும் பாராட்டற்பாலன. உலக சரித்திரத்தில் வேறெந்த ஸ்தாபனத்தைக் காட்டினும் மிகப் பேரளவாக அது யுத்தத்திற்கு விரோதமான மனப்பான்மையை வளர்த்து விட்டிருக்கிறது என்பதற்குச் சந்தேகமே இல்லை. ஆனல் அதனுடைய முக்கிய நோக்கத்தைச் சிந்தித்துக் கொள்வதிலே, அதாவது யுத்தமென்பதே இல்லாத ஒரு புது உலகத்தைச் சிருஷ்டிக்கும் முயற்சியிலே அது முற்றும் தோற்றுவிட்டது.

உலகம் அலுத்துவிட்டது. அதற்கு சமாதானம் வேண்டுமென்று நாம் மனப் பூர்த்தியாக விரும்புகிறோம். நம்முடைய அனுதாபம் ஆதரவு அத்

தனையும் உலக அமைதிக்காக முயலுபவர்களைத்தான் சேரும். ஆனால் இவ் வுலகத்திலே நிலையான சமாதானம் ஏற்படும் என்பதில் மட்டில் நமக்கு நம்பிக்கை இல்லை. மனந் திரும்பி மறுபிறப்புப் பிறந்து புனிதம் அடையாத மக்களுடைய அகத்தியற்கை அழுக்குச் சேற்றை ஒக்கும். அதன மேலே நிலையான சமாதானம் என்ற மாளிகையை எங்ஙனம் கட்ட முடியும்? ஜினிவாவில் "சமாதான மாளிகை" என்பதனுடைய கட்டடங்களெல்லாம் கட்டி முடிந்த 1935-ஆம் ஆண்டிலே தான், அது முழுக்கத் தோல்வியடைந்ததும். போர்க்கருவி ஒழிப்புமகாநாடும் வியர்த்தமாய்ப் போய்விட்டது. சர்வ தேச சங்கத்தின் அமைப்புச் சட்டங்களில் ஒரு முக்கிய பகுதியாகிய வெர்ஸேய்ல்ஸ் ஒப்பந்தத்தை ஜெர்மனி நிராகரித்துவிட்டது. இம் மட்டோ! அச்சங்கத்தை ஸ்தாபித்த வல்லரசுக்களுள் ஒன்றாகிய இத்தாலி, இப்பொழுது தானே அதை மீறிவிட்டிருக்கிறது. ஸினர் முஸோலினி அபீஸினியாவின்மேல் போர் தொடுக்க ஆயத்தஞ் செய்துகொண்டிருக்கையில், தாம் அந்த யுத்தத்தை சர்வ தேச சங்கத்தினுடைய உதவியுடன் கூடவோ, உதவி இன்றியோ, அவசியமானால் சங்கத்தை மீறியோ, எப்படியும் செய்யப்போவதாய்ப் பச்சையாகக் கூறினது வாசகர்களுக்கு ஞாபகமிருக்கும்.

இத்தாலி சங்கத்தினுடைய ஒப்பந்தப் பத்திரத்தில் கையெழுத்திட்ட பொழுது, இனிச் சண்டை போடுவதில்லை என்றும் தான் பிற தேசங்களுடன் செய்துகொள்ளும் உடன்படிக்கைகளை மீறுவதில்லையென்றும் ஒப்புக்கொண்டது. சர்வ தேச சங்கத்தினுடைய அமைப்பின் 12ம் விதியின் வாசகம் வருமாறு: "சங்கத்தின் உறுப்பினர், எவர்க்குமிடையே முறிவுக்கு ஏதுவான ஏதாவதோர் விவகாரம் நேருமானால், அவர்கள் அதை மத்தியஸ்தர்களுடைய தீர்ப்புக்கோ, நியாயக் கூட்டங்களின் தீர்ப்புக்கோ விடவேண்டும்; மத்தியஸ்தர்களுடைய தீர்ப்பும் சங்கத்தினுடைய ரிப்போர்ட்டும் வெளியாகி மூன்று மாதம் ஆகும்வரைக்கும் யுத்தத்திற்குப் போவதில்லை என்று அவர்கள் ஒப்புக்கொள்ளுகிறார்கள்." இப்படிப்பட்ட உறுதி மொழிகளையே சீனா நம்பியிருந்தது; இறுதியில் அது ஜப்பானின் ஏகாதிபத்திய ஆசைக்குப் பலியாகும்படி நிர்க்கதியாக விடப்பட்டது. அதே கதியைத்தான் வெகு சமீபத்தில் அபிஸீனியாவும் அடைந்தது.

சங்கத்தின் 8-ஆம் விதி போர்க்கருவிகளின் குறிப்பைக் குறித்துப் பிரஸ்தாபிக்கிறது. கிரேட் பிரிட்டன் இவ் விதியின் உட்கருத்தை அனுசரித்து நடக்க முயன்றிருக்கிறது. ஆனால் 1934-ஆம் ஆண்டிலே பிரிட்டிஷ் கவர்ன்மெண்ட் தன்னுடைய நடை முறையின் பயனின்மையைக் கண்டு, யுத்த ஆயுதங்களைப் பெருக்கும் போட்டி முயற்சியில் மீண்டும் முனைந்திருக்கிறது.

ஆயுதப் பரிஹாரண மகா நாட்டின் தலைவரான திரு. ஆர்தர் ஹெண்டர்ஸன் 1932-ஆம் ஆண்டில் மகா நாட்டைத் திறந்து வைத்துச் செய்த பிரசங்கத்திலே, மனுஷ ஜாதியினுடைய நம்பிக்கை யெல்லாம் அந்த மகா நாட்டையே பற்றியிருக்கிறதென்பதைச் சுட்டிக் காட்டினார். "நாம் அபஜெயமடைவோமானால், அதன் காரணமாக விளையும் தீயபயன்களை யார் அறிவார்? போர்க் கருவிகளை மேலும் மேலும் பெருக்கும் பொல்லாப் போட்டி மீண்டும் ஏற்பட்டுவிடும். நாம் நம்முடைய பிரயத்தனத்திலே

ஜெயம் அடையாவிட்டால், கட்டாயம் அந்த நிலைமைதான் ஏற்படப் போகிறது" என்று அவர் கூறினர். ஸர் ஜான் ஸைமன் சொன்னர்: "நாம் இப்பொழுது அபஜெயம் அடைவோமானல், அளப்பரிய ஆபத்து ஏற்படும்." சீனர் முசோலினிகூட பின் வருமாறு சொன்னர். "சர்வ தேச சங்கம் மட்டில் அல்ல, நாகரீகமே இப்பொழுது ஆபத்தில் இருக்கிறது..... மேனுட்டு நாகரிகம் தன்னைப் பாதுகாத்துக்கொள்ள வழி தேடவேண்டும்; அல்லது வேருடன் கெடவேண்டும்." இப்படி 1932ஆம் ஆண்டில் சொன்ன முஸோலினிதான் 1935ஆம் ஆண்டில் உலக சமாதானததைக் குலைத்து, ஏழை அபிஸீனியாவைக் கைப்பற்றிக்கொண்டார்.

உலக சமாதானத்தை ஏற்படுத்திக்கொள்ள மக்கள் செய்யும் முயற்சிகளெல்லாம் ஏன் பாழாய்ப் போகின்றன? யுத்தமில்லா ஒரு உலகத்தைச் சிருஷ்டிக்க வேண்டுமென்ற உத்கிருஷ்டமான பிரயத்தனத்திற்கு ஏன் முட்டுக்கட்டைகள் ஏற்படவேண்டும்? ஏனென்றால், மனித இயற்கை கெட்டுப் போயிருக்கிறது. இரண்டு மனிதர் ஒருவரோடொருவர் சண்டை போடுமளவும், இரண்டு தேசங்களும் ஒன்ருேடொன்று யுத்தம் புரியும்.

இது விஷயமாக, லியோ ஹி. ராஸ்டன் என்பவர் 1935ஆம் வருஷம் ஜூலை மாதத்திய "ஹார்ப்பர்ஸ்" பத்திரிகையிலே ஒரு சிறந்த வியாசம் எழுதியிருக்கிருர். அதில் அவர் சொல்வதாவது: "சரித்திரத்தில் முன்னெரு காலத்திலும் இல்லாத அளவு இக் காலத்திலே மக்களிடையே போர் ஒழிப்பு உணர்ச்சி பரவியுள்ளது. என்ருலும், எவ்வளவுதான் எச்சரிக்கைகளும் ஆவேசப் பிரசங்கங்களும் செய்யப்படுகிறபோதிலும், ராஜ்யங்கள் ஆத்திரம் ஆத்திரமாகப் போர்க்கருவிகளைப் பெருக்கிக்கொண்டு போவதை மட்டும் நம்மால் நிறுத்த முடியவில்லை. உண்மை என்னவென்ருல் யுத்தமானது மனிதனுடைய மனதுக்கமைந்த ஒரு கவர்ச்சியுடையதாயிருக்கிறது. சமாதானத்தால் உண்டாகும் நன்மைகளைக் காட்டிலும், யுத்தந் தரும் இன்பமும் திருப்தியுந்தான் அவனுக்கு உள்ளூறப் பிடித்தம்........ "ஒவ்வொரு மனிதனும், அந்தரங்கத்தில், ஒரு கொலைகாரனே......திடீரென நெருக்கடி ஏற்பட்டு, அத் தருணத்தில் அவனுடைய சன்மார்க்கமாகிய போர்வை நழுவி, ஊரார் வெறுப்பார்களே, அரசியலார் தண்டிப்பார்களே என்ற பயமும் போய்விட்டால், பிறகு பார்க்கவேண்டுமே அவனுடைய இரத்த வெறியை! இதுவரை அவனது இருதயத்தில் எங்கோ பதுங்கிக் கிடந்த இரத்த வெறி இப்பொழுது பீறிக்கொண்டு வந்துவிடுகிறது." "தேச பக்திக்கும் பட்டாளத்திற் சேருவதற்கும், பல சமயங்களில், சம்பந்தமே இருப்பதில்லை. ஆயிரக் கணக்கான மனிதர் தாங்கள் கஷ்டப்பட்டு அடக்கி வைத்துக்கொண்டிருக்கும் துர் ஆசைகளை வெளியிடுவதற்கு ஒரு நல்ல சந்தர்ப்பமாக யுத்தத்தைக் கொள்ளுகிருர்கள்."

மனிதர் யுத்தத்தை விரும்புகிருர்கள் என்பது முற்றும் உண்மையே. எனவே தான் இயேசு கிறிஸ்துவும், "ஒருவன் ஜலத்தினலும் ஆவியினலும் பிறவாவிட்டால் தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிக்கமாட்டான்" என்று கூறியிருக்கிருர். "நாய்களும் சூனியக்காரரும் விபசாரக்காரரும் கொலைபாதகரும் விக்கிரகாராதனைக்காரரும் பொய்யை விரும்பி அதன்படி செய்கிற யாவரும்" புறம்பே இருக்கும் தெய்வ ராஜ்யம் ஏற்படும்

# பாரதியின் பாட்டோவியம்

(தே. ப. பெருமாள்.)

பாட்டோவியம் என்றால் என்னை? பாட்டாலாய ஓவியமே பாட்டோவியமாம். பாட்டென்பதற்கு பல பொருளுரைப்பர் பாவலர். பாட்டு எனுஞ் சொல் பெரும்பாலும் மனிதனது உள்ளத்தைக் கவரும் உயரிய அழகிற்கே அமைந்த பெயராகும். கங்குற் கழிந்த காலைப் போழ்தில் கதிரவன் உதயத்தால் அழகு பெற்றிலங்கும் பொருட்கள் அனைத்தும் பாட்டேயாம். நீலத்திரை விரிக்கும் நெடுங்கடல் கதிரவன் ஒளி பெற்று விளங்குங்கால் அதனைக்கண்டு மகிழும் புள்ளினங்களும் விலங்கின் தொகுதியும் பிறவும் பாட்டேயாம். அந்தி மாலையில் மேற்றிசை மறையும் கதிரவன் அழகும், பூஞ்சோலையின் புறத்தே தோன்றும் வெண்மதியின் உதயமும், மணிகளைக் கொழித்த வயற்றரையில் வனப்பும், மரங்களும் செடிகளும் கொடிகளும் அடர்ந்து கான்யாறு ஓடவும் பெற்ற காட்டின் கவினும், வானளாவிய மரங்களும் சலசலத்த ஒலி கொண்ட அருவிகளும் அறிஞர் அகமெனத் தெளிந்த சுனைகளும் வெய்ய விலங்குகளும் இனிய பறவைக் கூட்டங்களும் நிறையப் பெற்ற வரைகளும் பாட்டேயாம்.

இத்தகைய பாட்டால் அமையும் ஓவியமே முற்கூறிய பாட்டோவியம். இவ் வோவியம் இருவகைத் தாகும். ஒன்று விழிகட்கு விளக்கமுற பருப் பொருளாய் புலனாவது. மற்றொன்று அறிவில் நுண் பொருளாய் விளங்குவது. முன்னது பலநிற வர்ணங்களால் ஓவியப் புலவனால் திரையில் வரைந்து காட்டுவது. பின்னது பொருள் நிரம்பிய சொற்களால் புலவனால் பாடிக் காட்டுவது.

முன்னதாகிய வர்ணங்களால் வரைந்து காட்டுவதினும் பின்னதாகிய சொற்களால் கூறிக் காட்டுவதே சிறப்புடையது. வர்ணங்களால் வரைந்து காட்டுவது மிக்கத் துன்பத்தை யுடையதாகும். அது நீண்ட பொழுதை அள்ளிச் செல்லும். பின்னும் பாட்டின் கூறு அனைத்தையும் அஃதின்கண் பொருத்திக் காட்டுதல் இயலாது. அழகின் வழியே செவிக்கு இன்பம் பயக்கும் இன்னிசையை ஓவியப்புலவன் யாங்ஙனம் தன் சித்திரத்தின் கண் சித்திரித்துக் காட்டுவன்? அஃது அவனால் இயலுந் தன்மையதோ?

சொற்புலவனே தன் கண்ணெதிரே காணும் அழகை சிறிது பொழுதிற்குள் அழகுற கூறிக் காட்டுகின்றனன். அவனது சொற்கள் பொருள்

---

பொழுதுதான் உலகத்தில் எங்கணும் அமைதியும் சமாதானமும் நிலவும். அந்தத் தெய்வ ராஜ்யம் மறு பிறப்புப் பிறந்தவர்களுக்கு மாத்திரமே உரியது. "ஜீவ விருட்சத்தின் மேல் அதிகாரமுள்ளவர்களாவதற்கும் வாசல்கள் வழியாய் நகரத்திற்குள் பிரவேசிப்பதற்கும் அவருடைய கற்பனைகளின்படி செய்கிறவர்கள் பாக்கியவான்கள்" (நல்வழி)

நிரம்பியனவாய் பாட்டின் கூறு அனைத்தையும் செவ்விதின் விளக்கிக் காட்டுகின்றது. ஓவியப்புலவன் பன்னாட்கள் வருந்தி முடிக்கும் ஒரு பாட்டின் ஓவியத்தை சொற்புலவன் நான்கு அல்லது ஐந்தடிகளில் அச் சித்திரத்தினும் விளக்கமுற விளங்குவதாய் ஒரு கணத்தில் கூறிக் காட்டுகின்றனன். அத் துணை பெருமையுடையவன் சொற்புலவன். அத்துணை விளக்கமுடையது சொல்லாலமையும் ஓவியம்.

இத்தகைய சொல்லான் அமையும் ஓவியம் எல்லாப் புலவராலும் அமைக்க இயலுந் தன்மையதன்று. கற்றவராய் இருப்பினும் அவரிடை அத் திறன் அமையப் பெறல் அரிது. தெய்வத்தன்மை பொருந்திய புலவர்க்கே அத்திறன் அமையும்.

பொருள் நிரம்பிய சொற்புலவர் நமது தமிழ்நாட்டின் கண் தோன்றி மறைந்தனர். மறைந்த அன்னார் தம் தொகையினை நம்மால் சரிவர எடுத்துக் கூறுதல் இயலாது. அவரது எண்ணம் நூற்றுக்குமேல் ஆயிரம் பதினாயிரமாகச் செல்லும். அன்னார் தம் விழுமிய முழுத்திறனால் அமையப் பெற்ற நூற்கள் அனைத்தும் ஆழிப் பெருக்கில் அமிழ்ந்தன. எஞ்சிய சிலவே இன்று தமிழ்நாட்டிடை நிலவுகின்றன. இந்நூற்கள் பொருணயமும் சொன்னயமும் பொலியப்பெற்று விளங்குகின்றன. இவை பழந்தமிழரின் குணம், அழகு, ஆற்றல் முதலியனவற்றைத் தெற்றென விளக்கிக் காட்டும். இந் நூற்களாலேயே நாம் பழந்தமிழ்நாட்டு நாகரீகத்தின் உயர்வை அறிய இயலுகின்றது.

இத்தகைய உயரிய நூற்களின் பெருமைக்கொப்ப நம் தமிழ்நாட்டின் கண் அணித்தே ஓர் நூலெழுந்தது. இந்நூல் பாரதி நூலாகும். இந்நூலை இயற்றியவர் வரகவி சுப்பிரமணிய பாரதியாராவர். இவரது பெயரைக் கொண்டே இந்நூல் இலங்குகின்றது.

இவரது பாடல்கள் அனைத்தும் எளிய நடையில் இனிய ஓசையுடன் அமைந்துள்ளது. சொல் நயத்திலும் பொருள் நயத்திலும் தலைமை பெற்று விளங்குகின்றது. குறுகிய அடியில் பெருகிய பொருளை விளக்கிக் காட்டுகின்றது. பழந்தமிழ்ப் புலவரின் பாடலை ஒட்டி இவர் பாடலும் பொருளை ஆயுந்தோறும் ஆயுந்தோறும் பொருள் பெருகிச் செல்லுகின்றது.

இவரது நூற்களில் இயற்கை அழகினைக் கூறும் பாகங்கள் பல. இயற்கையின் ஒவ்வொரு பகுதியினையும் பாரதியார் விளக்கமுற எடுத்துரைக்கின்றார். அப்பாடலை நோக்கியதும் நம் கண்முன் அவை ஓவியமாகவே பொலிகின்றது. அவ்வோவியத்துள் சிலவற்றை ஈண்டெடுத்து தீட்டுதலே இக் கட்டுரையின் தலையாய நோக்கம்.

நாம் பிறந்த பாரதநாட்டின் அழகினைக் கூறப்புகுந்த பாரதியார்,

"ஆற்றினிலே சுனையூற்றினிலே—தென்றற்
காற்றினிலே மலைப் பேற்றினிலே
ஏற்றினிலே பயனீந்திடுங் காலி
யினத்தினிலே யுயர் நாடு."

என்று கூறுகின்றார். இது எத்தகைய இனிய சொல்லில் எளிய நடையாக

அமைந்துள்ளது. இப் பாடல் நான்கு அடிகளும் ஒரு தனிவாக்கும் கொண்டு மிளிருகின்றது. இச் சிற்றடிகளில் எத்துணை உயர்பொருள் அமைந்துள்ளன. இப் பாட்டினைப் பாடுங்கால் நமது மனக்கண்முன் நமது நாட்டின் எழிலோவியம் விளங்குகின்ற தன்றோ !

இந்திய நாட்டகத்தேயே வான்முகத்தைக் கிழிக்குந்தன்மையதாய் உயரம் பெற்று சந்தனம், சண்பகம், குருக்கத்தி. ஆசினி யாதிய நல்மரங்களை தன்னகம் கொண்டதாய் விளங்கும் வரையினையும், அவ்வரையின் முகட்டினின்றும் பெருக்கெடுத்து மணியினையும் முத்தினையும் மலரினையும் காய்ந்த இலைச்சருகினையும் கொண்டு பள்ளத்தை நோக்கி இழியும் தீம்புனல் நதியினையும், அந் நதியினின்றும் துகில் போர்த்தாலென்ன பரந்து பாயும் அருவியினையும், அவ்வருவியின் அணித்தே ஊறும் சுனையினையும், அச்சுனையின் பக்கத்தே மலர்ந்து மணம் வீசும் பன்னிற மலர்களில் படிந்து வருந் தென்றலினையும், பாரதியார் தம் முதலிரு அடிகளால் விளக்கிக் கூறுகின்றார். பின்னிரு அடிகளில் அஃதால் நாடு கொள்ளும் செழிப்பினை மறைமுகமாக உரைக்கின்றார்.

பாரதியாரின் இப் பாட்டோவியத்தை நோக்கியதும் நமது உள்ளம் பெருமிதத்தால் இறுமாப்பு கொள்ளுகின்றது. ஏனென்றால், நமது நாட்டகத்தேயே வையகத்தின் கண் உயர்ந்த வரையாய இமையம் அமையப் பெற்றுள்ளது. இதன் உயர்வை மேனாட்டறிஞர் பலர் தம் புதுப் புனைவுகளுடன் அறிய முயன்றும் அஃது போதிய பயனைக் கொடுத்திலது. அத்துணை உயரஞ் சான்றது நமது இமயம். இதைப் பாரதியாரே ஒரு இடத்தின்கண்,

'மன்னு மிமயமலை யெங்கள் மலையே,
மாநில மீதது போற் பிறிதிலையே!'

என்றுரைக்கின்றார். அத்தகைய மலைப் பேறுடையதன்றோ நமது நாடு ! இன்னும் எவ்வளவு மலைகள் நமது நாட்டகம் உள்ளன! இஃதனைத்தையுமே பாரதி 'மலைப்பேறு' என்ற உயர் மொழியில் உரைப்பாராயினர். கோடைக் காலத்தும் மாரிக்காலத்தும் வளங் குன்றாது பெருகியோடும் புண்ணிய நதிகளும் நமது நாட்டகத்தேயே பெருகி யிருக்கின்றன. கங்கையும் சிந்துவும் நீர் வளங் குறையப்பெற்ற நதியாமோ? காவிரியும் தென் பெண்ணையும் ஒட்டங் குறைவுடையனவோ? இன்னும் இஃதே போன்று எத்துணை மாநதிகள் நமது நாட்டகம் முழுதும் ஓடி செழிப்பை அளிக்கின்றன.

தென்றல் காற்றினிலே உயர் நாடு என்று பாரதியார் கூறியதும் நமது அறிவினிலே பொதியமலையினின்றும் பொங்கி எழும் சந்தனத் தென்றல் வந்துறுகின்றதன்றோ! அந்தி மாலையில் பிரிந்த காதலர்க்கு வெய்யதாய் கூடியோர்க்கு அமிழ்தாய் ஆடுந் தென்றல் பொதிய மலைத் தென்றலன்றோ! ஆரத்தினை அளைந்து காலும் அத்தென்றலின் பெருமையை என்னென்றுரைக்க இயலும்? இத்தகைய தென்றல் ஒன்றுமட்டுமா நமது நாட்டகம் உள்ளது. இன்னும் எத்துணை திறத்துத் தென்றல்கள் நமது நாட்டகம் வீசுகின்றன ! கன்னிகுமரித் துறையில் வதியும் கொடும் பிணியாளரின் பெரு நோய் யாங்ஙனம் அகல்கின்றது? மருத்துவாழ் மலையினின்றும் போதரும் மருந்துத் தென்றலும் குமரித் துறையில் வீசும் குளிர் தென்

றலுமன்றோ! அன்னோர் தம் நோய் அகற்சிக்கு காரணம். இன்னும் இதுபோன்று ஆங்காங்கே ஆடுந் தென்றல்கள் எத்தனை! அம்மம்ம! உரைக்கவும் இயலுமோ?

இஃதனைத்தும் பாரதியார் தம் பாவின் கண் அடக்கிக் கூறுகின்றார். இஃது, இந்திய நாட்டின் இயற்கை எழிலிலும் செழுமையிலும் பாரதியார் உள்ளம் தத்தித் தடுமாறி அலைந்த காலையில் எழுந்த செழுங் கவியாகும்.

பாரதியார் மனக் கண்முன் பாரத நாட்டின் ஒரு பிரிவினதாய தமிழ் நாடு தோன்றுகிறது. யாண்டு நோக்கினும் வானளாவிய மரங்கள்! பைங் கொடிப் பந்தர்கள்! செந்நெல் விளையும் பூமியிலே பயிர்கள் சீதப்புனலால் செழுமையுற வளர்ந்து மெல்லிய பூங்காற்றால் தலை அசைத்து ஆடுகின்றன. கொத்துக் காய்களுடன் குற்றுச் செடிகள் தரையில் உரன் பெற்று நின்றன. தினை, பயறு, சாமை, சோளம் ஆதிய பயிர்கள் கண்ணுக்கெட்டாத தொலைக்கு செழித்து வளர்ந்து தங் கொண்டையினைக் கீழ் சாய்த்து அசைகின்றன. இதைக் கண்ட பாரதியார் உள்ளம் இச் செழுமையின் ஏதுவை அறிய அவாக்கொண்டது. அதுபோழ்து அவரது அகக் கண்ணில் ஐந் திணை நிலங்கடந்து செல்லும் பெரு நதிகளும் புலனாகின்றன. தமிழ் நாட்டின் செழிப்பு இப் பெரு நதிகளாலேயே என்று இதுபோழ்தே இவர் அறிகின்றார். இச்சமயம் இவர் தீட்டிய பாட்டோவியமே,

"காவிரி தென்பண்ணை பாலாறு—தமிழ்க்
கண்டதோர் வையைப் பொருநை நதி
மேவிய யாறு பலவோட புகழ்
மேனி செழித்த தமிழ் நாடு"

என்பதாகும்.

இனி கலைமகளின் இருக்கையைக் கூறப்புகுந்த பாரதியார்,

'வெள்ளைத் தாமரைப்பூவி லிருப்பாள்
வீணை செய்யும் ஒலியிலிருப்பாள்
கொள்ளையின்பங் குலவு கவிதை
கூறுபாவலர் உள்ளத் திருப்பார்
உள்ளதாம் பொருள் தேடியுணர்ந்தே
ஓதும் வேதத்தி னுண்ணின் றொளிர்வாள்
கள்ளமற்ற முனிவர்கள் கூறும்
கருணை வாசகத்துட் பொருளாவாள்.'

என்று கூறுகின்றார்.

கலைமகள் வெள்ளைத் தாமரையில் வீற்றிருப்பாள் என்றும், வீணையின் ஒலியில் இயைந்துள்ளாள் என்றும் தேன் பிலிற்றுந் தகையனவாய் தீங்கவி இயற்றும் திருப்பாவலர் உள்ளமிசை உறை கொண்டாள் என்றும், ஆண்டவன் அருணெறியிற் பிணிக்கும் திரு வேதத்தே தேங்குவாள் என்றும், மெய் நெறி கண்டு துறவு பூண்ட மாசற்ற முனிவர் வாசகத்தி லுறைவாள் என்றும் கவிஞர் தம் பாட்டோவியத்தின் கண் பொறித்துள்ளார்.

கலைமகள் அழகுப் பொருட்களிலேயே பதி கொள்ளுவள். அப் பொருட்களில் பதி கொண்டு அப் பொருட்களின் கூறுகளாகிய அன்பு அருள் என்பவற்றோடு இயைந்து வாழ்வள். அழகுப் பொருட்களில் ஒன்றே வெண்டாமரை. ஆதலின் கலைமகள் அவ்வெண்டாமரையில் விளங்கித் தோன்றலானாள் என்று கவிஞர் கூறுகின்றார். ஆயின் செந்தாமரை அழகுப் பொருள் அல்லவோ? அஃதின் கண்ணும் கலைமகள் இருக்கை விளங்குகின்றதே எனின் செந்தாமரையும் அழகுப் பொருளேயாம். அஃதின் கண்ணும் கலைமகள் இருக்கை விளங்குதல் காணலாம். பின்னை வெண்டாமரையை கவிஞர் குறித்தது என்னை எனின் கலைமகளது உள்ளம் பெரிதும் மாசற்றதையே விரும்பும். மாசற்றது வெண்மை. வெண்மையில் மாசு கலவின் அம்மாசு கடிதிற் புலனாகும். என்னெனின் வெண்மைக்கு மறைக்குந் தன்மை கிடையா. இஃது 'வெள்ளைக்கில்லை கள்ளச்சிந்தை' என்பதனாற் போந்ததே. ஆதலின் கலைமகள் மாசற்ற பொருளாகிய வெண்டாமரையை அச் செந்தாமரையினும் பெரிதும் விரும்பி அண்டு வாளாயினள். இதைத் தான் கவிஞர் கூறுகிறார். இஃதையே ஆன்றோர் 'வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு வெள்ளைக் கமலத்தே வீற்றிருப்பாள்' என்று கூறுவாராயினர்.

கவிஞர் கலைமகளை வீணையின் ஒலியில் இருப்பதாகக் கூறுகின்றார். வீணையின் ஒலி இனிய தொனி. அவ்வினிய தொனியாலாயது இசை. அவ்விசை ஒருவரது உள்ளத்தை உருக்குந் தன்மையது. இசையினில் உருகாத மனிதன் இலன். விலங்குகளும் இசையினில் உருகி மறக்கின்றன. அன்று கண்ணன் ஊதிய இசையில் நசை கொண்டு ஆனிரையும் பிற கானுறை விலங்கும் ஊனெடுத்தலையும் வெறுத்து அவ்விசையை அண்மிய தன்றோ! புற்றிலுறையும் நச்சுடை நாகமும் இசையினில் இச்சை கொண்டு தம்முயிர் நலனைபு மெண்ணாது வெளி வந்தாடலைக் காணாதார் உளரோ? இத்தகைய இனிய இசையிலேயே கலைமகள் இருக்கை கொண்டாள். இதையே நம் பாரதியார் 'வீணை செய்யும் ஒலியிலிருப்பாள்' என்று கூறுகின்றார். (தொடரும்)

---

(166-ம் பக்கத் தொடர்ச்சி.)

அதில் பெரும்பான்மையோர் முதன் மந்திரி ஹிந்தியைக் கட்டாய பாடமாக வைக்கத் தீர்மானித்திருப்பதற்குச் சாதகமாகவே இருந்ததாகத் தெரிகிறது. சமீபத்தில் சென்னை காங்கிரஸ் மண்டபத்தில் கொண்டாடப்பட்ட "பாரதி திருநாள்" கூட்டத்தில் கனம் ராஜகோபாலசாரியாரும் கனம் டாக்டர் ராஜனும் இந்த ஹிந்தி பிரச்னையைப்பற்றி பேசிய தோரணையைப் பார்த்தால் கூடிய சீக்கிரம் முதன் மந்திரி ஹிந்தியைக் கட்டாய பாடமாக வைத்து அமுலுக்குக் கொண்டு வந்து விடுவாரென்றே நம்புகிறோம். ஆகவே, இனியும் ஹிந்தியைக் கட்டாயபாடமாக வைக்கலாமா கூடாதா என்று விவாதித்துக் கொண்டிருப்பதில் பயனில்லையென்றே கருதுகிறோம். நாம் கனம் முதன் மந்திரியை இச்சமயத்தில் வேண்டிக்கொள்வதென்னவென்றால், தாய் மொழியாகிய தமிழ்மொழி வளர்ச்சிக்கும் வேண்டும் விதியைக் கூடிய சீக்கிரம் ஏற்படுத்த வேண்டுமென்பதே.

# "வாழ்க்கை இன்பம்"

(தே. வி. ராமமூர்த்தி.)

வாழ்க்கை என்பது ஒரு பெருங் கடலுக்கு ஒப்பாகும். அந்த சம்சார சாகரத்தை கடக்க நமக்கு கடவுளால் அளிக்கப் பட்டிருக்கும் தோணியே இம் மானிட சரீரம். ஆனால் இத் தோணியைக் கொண்டே அம் மாபெருங் கடலை எளிதில் கடந்துவிடலாம் என்பது பைத் தியக்கார யோசனையாகும். பெரும் கொந்தளிப்புடன் ஆரவாரிக்கும் சமுத்திரத்தினூடே, மலைபோல் உயரக் கிளம்பி, பாதாளத்தில் ஆழ்த்தும் அலைகளுக்குத் தப்பி, தோணியை அக்கரை சேர்ப்பதற்கு கை வல்லமையும் நெஞ்சத் துணிவும், விடா முயற்சியும் வேண்டும். மனுஷ்ய யத்தனம் எவ்வளவுதான் இருந்தாலும் தெய்வ யத்தனம் சிறிதளவாவது அமைதல் அவசியம். இடையில், இருக்கும் பெருந்தூரத்தைக் கண்டு நாம் அஞ்ச வில்லை! மோதி அடிக்கும் அலைகளைக் கண்டும் அஞ்சவில்லை! ஆனால் எதிர் பாராவிதமாக பிரளயாந்த காலத்து ஊழிக் காற்றுபோல் கோரமாக எழும் பும் அதீதமான புயற் காற்றுக்குமுன் மனுஷ்யன் யாது செய்ய இயலும்? விபரீதப் பலன் சித்திப்பதற்கு முன்னால் தெய்வம் சிறிதளவு கை கொடுப் பின் ஆழ்கடலை கடப்பதென்பது கஷ்ட சாத்தியமான காரியமாயிராது. ஆனால், அவனுடைய துணையை கோரு முன்னர் அதற்கு நாம் அருகதை உள்ளவர்களாகச் செய்துகொள்வது முக்கியம். மிருகங்களிடையே அகப் பட்ட மனிதன்போல், மனித சமூகத்தினிடையே ஞானிகள் தோன்று கின்றனர்.

மனிதன் மிருகங்களை வேட்டையாட காட்டை அடைகின்றான். ஞானி கள் மனிதர்களை உய்விக்க நாட்டில் அவதரிக்கின்றனர். ஞானிகள் என் னும் பொழுது நாம் எந்த தனி மனிதனாலும் அடையப் பெறாத உயர் நோக்கங்களை கடைபிடித்து ஒழுகுகின்றவர்கள் என்ற கருத்தில் வைத்து பேசவில்லை. கடமையைச் சரிவரச் செய்தல், தன்னைப்போல் பிறரையும் பேணுதல், எல்லா ஜீவராசிகளிடத்தும் அன்புடனிருத்தல் இவைகளே கடவுளின் உள்ளன்பையும் அருட் துணையையும் பெற போதுமானவை. பிறர்பால் பழிப்புக்கிடமான செய்திகள் கிட்டுமா என்று ஆராய்வதிலும் அநேக பழிகளினின்றும் தங்களைச் சீர்திருத்திக்கொள்ள வகையறியாது அஞ்ஞானத்தில் மூழ்கியிருப்பவர்களுமே இக் காலத்தில் மிகுந்து காணப் படுகின்றனர். அந்த கருத்தையே வரகவி மாரிமுத்து பிள்ளை அவர்கள் குறிப்பாக பின் வரும் கீர்த்தனைப் பகுதிகளில் புகுத்தியுள்ளார்.

"செய்யவர் பழிகேட்க வளைபோல் வளையும் காது
சிவகதை கேட்கவென்றால் காதினுள் துளையேது?"

என்றும்,

"எய்தும் என்பழி நோக்க இருகண்ணும் காமாலை
இதரர் பழிகள் நோக்க இந்திரன் கண்ணெந்த மூலை?"

என்றும் குறிப்பிட்டுள்ள வரிகள் ஆழ்ந்து சிந்திக்கத் தக்கவை. மனிதன் மாணுகிய இன்பத்தை வேட்டையாடச் சென்று மதயானையாகிய துன்பத்தைச் சந்திக்கின்றான். அதை எதிர்த்து நின்று வீழ்த்த அவனுக்கு வல்லமை இல்லையேல், அதே மத யானையால் அவன் இடர் உறுகின்றான். அந்த துன்பத்தை எதிர்த்து நிற்க அன்பு உருவாகிய ஆண்டவனை சிந்திப்பின் அவனிடமிருந்து உதவி பெறுவதில் என்ன ஆட்சேபனை! ஓடி யாடி விளையாடும் குழந்தைகளுக்கு அறிவுறுத்தும் பாவனையாய் பாரதியார் கூறியிருக்கும் மணி மொழிகள் இதை நன்கு விளக்குகின்றது.

" துன்பம் நெருங்கிவந்தபோதும்—நாம்
சோர்ந்துவிட லாகாது பாப்பா
அன்பு மிகுந்த தெய்வம் உண்டு—துன்பம்
அத்தனையும் போக்கிவிடும் பாப்பா
உயிர்களிடத்தில் அன்பு வேணும்—தெய்வம்
உண்மைதான் என்று அறிதல் வேணும்
வயிரமுடைய நெஞ்சு வேணும்—இது
வாழும் முறைமை அடி பாப்பா"

ஆனால் இன்ப துன்பங்கள் இரண்டும் கலந்தே ஒவ்வொரு அணுவிலும் இருப்பதால் அதை நாம் ஆராய்வது அவசியம். இன்பமாவது யாது? துன்பமாவது யாது? இரண்டிற்குமுள்ள மூலாதார வேற்றுமை என்ன? இவைகளை இக் கட்டுரையில் சிறிது விளக்க முயல்வோம்.

குழந்தை பிறக்கும்பொழுதே 'ஊம்' 'ஓம்' 'ஆம்' என்ற அழுகைக் குரலுடனேயே ஜனிக்கின்றனது. அவை 'ஓம்' என்ற ஒப்பற்ற வார்த்தையின் சிதைவுகளே. ஒவ்வொரு குழந்தைக்கும் 'ஓம்' என்ற தொனி உள்ளிருந்தே கிளம்புகின்றது. ஓம் என்ற தத்துவம் ஒருபுறம் இருக்கட்டும். நம்முள் வழங்கும் சம்பிரதாயத்தை ஒட்டி அது மங்கல ஒலியா அன்றி அழுகைக் குரலா என்பதை ஈண்டு குறிப்பிடுவோம். இது வரை அது தாயின் கருப்பையில் இருந்தபோதிலும் அது உலக கஷ்ட நிஷ்டூரங்களை அறியாது பேரின்ப சாகரத்தில் திளைத்துக்கொண்டிருந்தது. தாயின் கருப்பையில் இருக்கும் காலம்வரை அதற்கு பூர்வ ஜன்ம வாசனை உண்டென்று ஆன்றோர் கூறுவர். அது உண்மையாயின் அது ஜனிக்கும் பொழுதே அழுங் காரணம் யாதா யிருக்கக் கூடும் என்பதை உற்று நோக்குவோமாயின் காரணம் நமக்குப் புலப்படாமல் போகாது.

நிலையாத சமுத்திரத்தில் சமுசார துறைகளில் தன்னை விடுவிப்பதாக விரும்பினும் அது உண்மையான விடுதலை ஆகமாட்டாது. சமுசார துறைகளில் நம் கைக்கு கிட்டும் ஆதாரம் சிற்றின்பமே! ஆனல், சிற்றின்பமோ நிலையற்ற வஸ்து. அது நம்மை இன்னும் காற்றுவாக்கில் தள்ளிக்கொண்டே போய் நடுச் சமுத்திரத்தில் விட்டுவிடுமே ஒழிய கரையேற நமக்கு அது சாதனமாகமாட்டாது. இந்த வேதாந்த கருத்துபற்றியே, அக்குழந்தை துயர் உறுகிறது.

"வந்து வந்து முன் தவழ்ந்து
வெஞ்சு கந்த யங்க நின்று
மொஞ்சு மொஞ்சு என்றழும் குழந்தை"

பூமியில் ஜெனிக்கும்பொழுதே அதற்கு இந்த கவலையும் கூடவே தொடருமாயின் சிற்றின்பம் எப்படி நிலையற்றது என்று மறுபடியும் கூறவேண்டியதில்லை. அதன் நிலையற்ற தன்மையை இங்கு சிந்திப்போம்.

குழந்தை பருவத்தில் அது தேடி மகிழ்வது தாயின் மார்பும் மடியும் தான்! தாயின் மடியிலும் மார்பிலும் தவழ்ந்து விளையாடும்பொழுது அது அடையும் இன்பம் நேரில் அனுபவித்தவர்களுக்குத்தான் தெரியும். தாயின் புடவைத் தலைப்பை இழுத்து அதனல் தன் முகத்தை மூடிக்கொண்டு "அம்மா! என்னைக் கண்டுபிடி" என்று கொச்சைப் பேச்சுகள் பேசி தாய் கண்டு பிடிக்க முடியாததுபோல் பாசாங்கு செய்ய அது திடீரென்று வெளிப்பட்டு விழுந்து விழுந்து பொக்கைப் பல்லைக் காட்டி சிரிப்பது எத்துணை இன்பம் விளைக்கிறது?

ஆனல் அந்த இன்பம் சாஸ்வதமானதல்ல. இதே குழந்தை மதலைப் பருவத்தைக் கடந்து ஓடியாடி விளையாடும் திறன் படைத்ததும் அதன் மகிழ்ச்சி வேறு எல்லையில் செல்லுகின்றது. தன்னைப்போலுள்ள மற்றைச் சிறுருடன் கூடி விளையாடுவதிலும் நாவிற்கினிய தின்பண்டங்களைப் பெறுவதிலேயுமே தன் சிந்தையைச் செலுத்துகின்றது. அதே குழந்தை பெண் குழந்தையா யிருக்குமாயின் மண் வீடு கட்டுவதிலோ, பொம்மைக் கலியாணம் செய்து மகிழ்வதிலுமோ அது விருப்பத்தைக் கொள்ளுகின்றது. முன்பு ஒன்றுமறியாத பேதைப் பருவத்திற்கும் இப்பொழுது அதன் மனதில் வேர் ஊன்றியுள்ள குழந்தை மனத்திற்கும் எத்துணை வேற்றுமை?

இந்த மகிழ்ச்சியும் நெடுநாள் நிலைப்பதில்லை. அச் சிறுவன் பள்ளிச் சென்று பயிலும் பாலப் பருவத்தை அடைந்தவுடன் கதைகளைக் கேட்பதிலும் படிப்பதிலும் மிகுந்த ஆவல் காட்டுகின்றுன். எப்பொழுது பார்த்தாலும் தின்பண்டங்களைத் தின்றுகொண்டே புழுதியில் புரண்டு விளையாடும் குழந்தைகள் இல்லாமல் இல்லை. அன்று அபார புத்தி கூர்மையுடன் ஆழ்ந்த சிந்தனையுடன் கூடி ஆராய்ச்சி மனேபாவத்தைக் கொண்டவர்களு மிருக்கலாம். ஆனல் நாம் குழந்தை என்னும்பொழுது பொதுவாக சாதாரண அறிவுள்ள குழந்தைகளைப் பற்றியே பேசுகின்றேம் என்பதை முக்கியமாய் நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும்.

பள்ளிப் பயிற்சி பெறுங்காலையில் சலியாத உழைப்பு அபார புத்தி கூர்மை இவற்றல் சர்வகலாசாலைப் பட்டத்திற்கு அடி கோலுகின்றுன். அநேக வருஷ முயற்சியின் மிகுதியால் அதையும் அடைகின்றுன். தன்னுடைய பெயருக்குப் பின்னல் பி.ஏ., என்ற இரண்டு அக்ஷரங்களை ஒட்ட வைத்துக்கொள்ள உரிமை அளிக்கப்பட்ட உடன் அவனுக்குச் சிந்தனை வேறு விதத்தில் செல்லுகின்றது. இத்தனை நாள் உழைத்ததெல்லாம் பி. ஏ. என்பதற்குப் பிழைப்பது எப்படி என்பதை உணரமட்டும்தானு? ஒவ்வொரு ஆபீஸுக்கும் மனு எழுதிப் போடுகின்றுன்.

மூன்று மாதமோ, ஆறுமாதமோ அவன் பொறுமை பரிசோதிக்கப் பட்ட பின்னர். அவனுக்கு ஒரு உத்தியோகமும் அளிக்கப்படுகின்றது 'என்று வைத்துக்கொள்ளுவோம்.

"உடுக்க துகில் வேணு நீள்பசி
யவிக்க கனபான வேணும் நல்
ஒளிக்கு புனலாடை வேணும்மெய் யுறுநோயை
ஒழிக்க பரிகார வேணுமுள்
இருக்க சிறுநாரி வேணு மொர்
படுக்க தனிவீடு வேணுமிவ் வகையாவும்
கிடைத்து கிருஹ வாசியாகிய
மயக்கக் கட்லாடி..................."

என்றபடி தன்னைச் சுற்றிலும் உள்ள மாந்தர் நடாத்தும் மயக்க வாழ்வை ஒட்டி அச் சௌகர்யங்களை தானும் செய்துகொள்ளவேண்டும் என்ற சிந்தனை தானே எழுகின்றது. அவன் விவாகம் செய்துகொள்வதில் ஊக்கம் செலுத்துகின்றான். கண்ணன மனையாட்டியுடன் இல்லற வாழ்க்கையை இனிது நடத்தும் நாளை ஆவலுடன் எதிர்பார்த்து நின்ற அவன் அந்நாள் வந்ததும் அதை எதிர்கொண்டோடி தழுவுகின்றான். ஆ! என்ன மகிழ்ச்சி! நாட்கள் செல்லுகின்றன. ஏன்? வாலிப முறுக்கிலும் மகிழ்ச்சியிலும் பறக்கின்றன. ஆம்? இறக்கை கட்டிக்கொண்டுதான் பறக்கின்றன.

'குடும்ப இன்பங்களே குவலயம் தருபவைகளுள் தலை சிறந்தவை. குழந்தைகளிடம் பெற்றோர்களுக்குள்ள ஆனந்தமே மனிதன் அறிந்த ஆனந்தங்களில் புனிதத்தில் புனிதமானது. அது அவர்கள் இருதயத்தை தூய்மைப் படுத்துகின்றது. அதை நல்லுருவாகச் செய்கின்றது. அது மனிதர்களை ஆண்டவனிடம் கொண்டு சேர்க்கின்றது' என்று ஆங்கில அறிஞர் பெஸ்டலோஜி கூறியிருக்கிறார்.

இனி அந்த குழந்தைகளின் சக்தியை கவனிப்போம். அவன் வேலை செய்துகொண்டிருக்கிறான். டெலிபோன் மணி கிணுகிணு வென்று ஒலிக்கின்றது. ரிஸீவரை எடுத்து காதில் வைத்துக்கொள்ளுகிறான். "வீடு தீப்பற்றி எரிகின்றது. குழந்தை வீட்டிற்குள் அகப்பட்டுக்கொண்டது." என்ற பரிதாபகரமான செய்திதான காதில் விழவேண்டும்? ஆ! என்று அலறுகின்றான். ரிஸீவரை தொப்பென்று கீழே வைக்கின்றான். தன் மேஜைக்கு ஓடுகின்றான். வழக்கம்போல் தலைப்பாகையை எடுத்து அணிந்து கொள்ளவில்லை. அதை அப்படியே ஒரு மூலையில் எறிந்துவிட்டு ஓடுகின்றான். எதிரில் சேவகன் வருவதையும் லட்சியம் செய்யவில்லை. எஜமானே என்று அவன் கூப்பிடுவதைக் கேட்டுத் திரும்புகின்றான். அவன் முகம் பார்க்க விகாரமாயிருக்கிறது. சேவகனே "துரை உங்களை சீட்டாட அழைக்கிறார்" என்கிறான். உண்மையாகவா? துரையே அவனை சீட்டாட அழைத்தால் அது எவ்வளவு கௌரவம்! மற்றோர் சமயமாயிருந்தால் அவன் அதை நம்பக் கூடமாட்டான்! தலை கால் தெரியாமல் குதிப்பான்! அந்த அந்தரங்க விஸ்வாஸத்தைப் பெற உயிரும் உடலுமாய் உழைத்த அநேகம் குமஸ்தாக்களில்

அவனும் ஒருவன்! ஆனால் இப்பொழுதோ பதில்கூட பேசாமல் ஓடுகிறான். சேவகன் முழிக்கின்றான். அவனை அப்படி முழித்துக்கொண்டிருக்க விட்டு விட்டு ஓடியவனைத் தொடர்வோம்.

அவன் டிராமில் ஏறி உட்கார்ந்துகொள்ளுகிறான். எதிரில் புன்னகை பூத்த வதனத்துடன் அழகே திரண்டுருண்டு ஓர் உருவெடுத்து வந்ததுவோ என்று ஐயுறத்தக்க காரிகை ஒருத்தி உட்கார்ந்துகொண்டிருக்கின்றாள். இவன் அவளை ஏறெடுத்துக்கூட பார்க்கவில்லை. ஆனால் அவளாக இன்று "நீங்கள் டென்னிஸ் விளையாடுவதைக் கண்டு பிரமித்துவிட்டேன். உங்களோடு ஒரு 'ஸெட்' டென்னிஸ் விளையாடவேண்டுமென்று.........'' மேலே அவள் என் பேசுகின்றாள்! அவன் அவளைப் பார்த்துவிட்டு முகத்தைத் திருப்பிக்கொண்டான். எவ்வளவோ சமயங்களில் அவளோடு ஒரு வார்த்தை பேச அவன் எதையும் தியாகம் செய்யத் தயாராயிருந்தான். ஆனால் இப்பொழுது அவன் மனம் அவள்பால் செல்லவில்லை. கடைசியாக வீட்டை அடைகின்றான். எங்கும் ஒரே இறைச்சலும் அழுகையுமாயிருந்தது. எங்கும் புகை எழும்பி மேக மண்டலத்தை மறைத்துக்கொண்டது. இவன் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்வார் எவருமில்லை. ஆனால் மெதுவாக இவன் விஷயத்தைக் கிரஹித்துக்கொண்டான்.

குழந்தை சாப்பிட்டுவிட்டு தொட்டிலில் படுத்துக்கொண்டது. குழந்தை தூங்கியதும் தாய் ஏதோ காரியமாக வெளியில் சென்றாள். வேலைக்காரி மட்டும் குழந்தை அருகில் தூங்கிக்கொண்டிருந்தாள். சில உறவினர்களும் வீட்டில் இருந்தார்கள். வீடு எப்படியோ தீப்பிடித்துக்கொண்டது. கலவரத்தினாலும், திகிலினாலும் எல்லோரும் வீட்டை விட்டு வெளியே ஓடி வந்தார்கள். குழந்தை அவரிடமிருக்கின்றது இவரிடமிருக்கின்றது என்று நினைத்திருந்தனர். ஆனால், எல்லோரும் வெளியில் வந்த பிறகு குழந்தை ஒருவரிடமுமில்லை எனத் தெரிந்தது. விம்மலும் பொருமலும் உதட்டைக் கடித்தலும் எங்கும் நிரம்பின.

தீயணைக்கும் படையினர் எவ்வளவோ சிரமப்பட்டும் நெருப்பின் அருகில்கூட செல்ல முடியவில்லை. அவன் அவர்களிடத்தில் ஓடுகின்றான். "ஐயோ, எங்கள் சிறிய இனிய குழந்தையை எப்படியாவது காப்பாற்றுங்கள். எங்கள் சொத்து முழுவதையும் கொடுக்கிறோம். எங்களுக்கு சொந்தமான எதையும் கொடுக்கிறோம். நாங்கள் இனி சம்பாதிப்பதில் ஒரு பகுதியையும் கொடுத்துவருகிறோம். எப்படியாவது' எங்கள் குழந்தையைக் காப்பாற்றுங்கள். ஐயோ எப்படியும் காப்பாற்றுங்கள்'' என்று அலறுகின்றான்; கதறுகின்றான். சொத்து சுதந்தரம் எதையும் குழந்தைக்காக தியாகம் செய்யத் தயாராக அவன் அந் நிலையில் இருக்கின்றான்.

"குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்ப்பட விதிர்த்தும்
மயக்குறு மக்கள்''

என்றபடி அக்குழந்தையின் வசீகரத்தை அவன் எதற்காகவும் இழக்க தயாராயில்லை. ஆனால் அந்த குழந்தையின் வசீகரமாவது என்றும் நிலைத்திருக்

கிறதா என்றால் ஐயோ! அதுதான் இல்லை என்று வருத்தத்துடன் கூற வேண்டியிருக்கிறது. குழந்தை பெரியவனானதும் அந்த பழைய இணைப்புக்குக் காரணமான வசீகரமான மோஹன வடிவு மறைந்துவிடுன்றது. எனவே அந்த பழைய அன்பு விட்டுப்போகாதுபோனாலும் பழைய இணைப்பு என்னமோ நீடிப்பதில்லை.

அப்படியாயின் இதுவரை படிப்படியாக கவனித்துவந்தவற்றில் இன்பம் நிலைபெற்றது எவ்விடத்தில் எனக் கேட்கின்றோம். ஒரு இடத்திலும் இல்லை என்பது வெளிப்படை. இன்ப துன்பங்களுக்குக் கர்த்தாவான பரம் பொருள் ஒன்றே நிலையானது. மற்றது எல்லாம் மாயை. மாயையாவது யாது? அது அநாதி. முடிவையுடையது அது உள்ளதுமல்ல. இல்லாததுமல்ல. இரண்டும் கலந்ததுமல்ல. ஆகவே இன்னதென் றுரைக்கப்படாத அநிர்வசனீயம் எனப்படுகின்றது. இதன் தன்மை இதுவாகலின் இதன் காரியமான உலகம் அநிர்வசனீயமாகும்.

இவ்வுலகம் காட்சிப்பிரமாணமாக காணப்படுகின்றன என மேற்கூறியவற்றால் அறியலாம். கண்ணுக்கும் அதனால் அறியப்படும் பொருளுக்குமுள்ள சம்பந்தமே காட்சிப்பிரமாணமாகும். அதாவது கண் ஒரு பொருளை (மண்,பெண்,பொன் ஏதோ ஒன்றை)ப் பார்க்கின்றது. இவ்விரண்டுக்கும் சம்பந்தம் நிகழ்கின்றது, சம்பந்தம் என்பது சம்பந்திகள் வேறாய் இருபொருள்களிலுமுள்ளதாய் ஒன்றை ஒன்று பற்றியதென்னும் உணர்ச்சியைத்தருவது. இதன்படி கண் ஒன்றைப் பார்த்து அதை ஸ்தூலமாக அடைந்த உணர்ச்சி பெற்றதும் அதற்கு அன்னியமாய் நின்றுவிடுகின்றது. கண்ணுக்கும் அதற்குமுள்ள சம்பந்தம் ஈண்டு குறிப்பிடற்பாலது. கண் அவ் வஸ்துவல்ல. அன்றி அவ்வஸ்துவும் கண்ணல்ல. இரண்டும் தனிப்பட்ட பொருள்கள். இதுதான் காட்சிப்பிரமாணம். குழந்தையாய் தானே முதலில் ஜனித்தான். பின்னர் அதே குழந்தைக்காக எல்லாவற்றையும் தியாகம்செய்ய துணிந்தான்.

இவற்றால் இவ்வுலக இன்பம் எப்படி நிலை அற்றது என்று விளக்கினோம். அதனால் யாவரும் துறவறத்தை நாடவேண்டும் என்பது நம் கருத்தல்ல. நிலையற்ற இன்பத்தில் அதீத இச்சை வைக்காமல் தன் கடமை என்று ஒவ்வொன்றையும் செய்துவரவேண்டும் என்பதே நம்அபிப்பிராயம். "நிஷ்காம்ய கர்மம்" நம்மை பேரின்ப வீட்டிற்கு அருகதையாக்கும் என்பது துணிவு.



# பிரதிக்ஞை

(V. A. சின்னஸ்வாமி.)

ஆதித்தன் தன் அந்திம அருண கிரணங்களினால் ஆற்றின் மணலை ஸ்வர்ண மயமாக்கிக் கொண்டிருந்தான். மல்லிகை மகரந்தங்களின் சுகந்தம் சேர்ந்த சீதள சமீரம் மந்தகதியில் வீசிக் கொண்டிருந்தது. மானிட உள்ளங்களில் எழுந்து எழுந்துவிழும் எண்ணங்களைப் போன்று ஆற்றிலும் அலைகள் எழுந்து எழுந்து விழுந்து கொண்டிருந்தன. இச் சிங்கார சோபாம்ருதத்தைப் பருகியதால் உன்மத்தம்பிடித்து உட்கார்ந்து கொண்டிருந்தாள் ரத்தினம். திடீரென்று யாருடையனவோ இரு கோமள கரங்கள் அவள் கண்களை மூடின.



“யார்? கமலாவா” பதிலில்லை. “இல்லை. ரமாமணி” இதற்கும் பதிலில்லை. மெல்ல கைகளை தொட்டுப் பார்த்தாள். ஷர்ட் கப்கள் கிடைத்து விட்டன. “ஓ! கோபால்!” என்று சொன்னதும் விடுதலையடைந்தாள்.

கோபாலன் புன்முறுவலுடன் “ரத்தினம்! உனக்கு ஏன் பகவான் இவ்வளவு அறிவையும் அழகையும் கொடுத்தார்? உன்னையடைபவன் பெரிய பாக்யசாலி என்பதில் சந்தேகமில்லை” என்று கூறிப் பெருமூச்சு விட்டான்.

“ஏன் வீண் புகழ்ச்சி செய்கின்றாய் கோபால்! நான் என்ன அவ்வளவு அழகிற் சிறந்தவளா?” என்று சங்கோசத்துடன் ரத்தினம் கூறினாள்.

“நீ பெரிய கள்ளி. என் ஹிருதயத்தையே திருடிக் கொண்டு விட்டாய். இப்பொழுது பொய்யும் பேச வாரம்பித்து விட்டாய்!” என்றான் கோபாலன்.

"என்ன பிதற்றுகின்றாய்? அந்தஸ்தை அறிந்து பேசு. நீ ஒரு பெரிய மிராசுதாரின் மகன். நானோ ஒரு அநாதை. மேலும் நீ உயர் குலத்தைச் சேர்ந்தவன்" என்று ஆத்திரத்துடன் கூறினாள் ரத்தினம்.

"நீ என்ன 9-ம் நூற்றாண்டு பேர்வழியைப் போல் குலம் கோத்திரம் எல்லாம் பேசுகின்றாயே? காதலின் முன்னால் ஜாதி மதம் அல்ல; இந்த உலகின் எந்த பெரிய சக்தியும் ஒரு பொருட்டல்ல."

"ரொம்பவும் நல்லது. இந்த மாதிரி பசப்பு வார்த்தைகள் பேசி என்னையா ஏமாற்றப் பார்க்கின்றாய்? இந்தக் காலத்தில் ஒன்று மறியாத யுவதிகள் எவ்வளவு பேர் இம் மாதிரி காமவெறி பிடித்தவர்களின் கைகளில் சிக்கி கடைசியில் சந்தியில் நிற்கின்றனர்!"

கோபாலனுக்கு இந்த வார்த்தைகளைக் கேட்டு அளவற்ற துக்கம் உண்டாயிற்று. அவன் மனதில் இருந்த கொஞ்சம் நஞ்ச நம்பிக்கையும் அகன்று விட்டது. அவன் யாரை இவ் வுலகத்தின் முழுமனதுடன் நேசித்து வந்தானோ அவளிட மிருந்தே திரஸ்கார வார்த்தைகளை எப்படி, எதிர்பார்க்க முடியும்? கண்களில் நீர் ததும்பிய வண்ணம் "ரத்தினம், என்னை ஒரு போதும் அப்படி யெண்ணாதே. இவ்வளவு நாள் பழகியும் என்னை இன்னும் நீ அறிந்து கொள்ள வில்லை. என் குல தெய்வம் முருகக் கடவுள் சாட்சியாக மணந்தால் உன்னையே மணப்பேன்; இல்லா விட்டால் பிரம்மசர்ய பாலனம் செய்வேன்" என்று பிரதிக்ஞை செய்தான்.

ரத்தினத்தின் மனதிலும் சகானுபூதி தோன்றியது. அவளுக்கும் அவளை யறியாமலே இவனிடம் ஒருவித பிரீதி ஏற்பட்டு விட்டது. "ஆனால் வாஸ்தவமாக என்னை நீ காதலிக்கின்றாயா?"

"இன்னும் சந்தேகமா?"

இருவரும் மௌனம் சாதித்தனர். தினகரனும் உலகத்தாருக்கு "எவ்வளவு நாள் எவ்வளவு ஆனந்தத்துடன் இவ்வுலகில் வாழ்ந்தாலும் ஒரு நாளைக்கு இறப்பது திண்ணம்" என்னும் நீதியைப் புகட்டுவது போல் மேற்றிசை மலை மாலைகளின் மத்தியில் மறைந்தான். தினம் பூராவும் அத்யந்த பிரகாசமாய் ஜ்வலித்துக் கொண்டிருந்த தினகரனின் இப் பரிதாப நிலையைப் பார்த்து துக்கம் தாங்க முடியாத காரணத்தால் தன் வைரங்கள் பதித்த கரும்புடவை யணிந்து கொண்டு சந்திரவதனி இரவும் சூர்ய பகவானுக்கு தேறுதல் சொல்லப் புறப்பட்டாள்.

2

"நான் சொல்வதைக் கேட்டாற்கேள். இல்லா விட்டால் இந்த வீட்டை விட்டுப் போ" என்று கோபத்துடன் கூறினார் கோபாலனின் தகப்பனார்.

"அப்பா! அந்த ஒரு விஷயத்தில் மாத்திரம் என் எண்ணத்தை மாற்ற முடியாது" என்றான் கோபாலன்.

"குலத்தைக் கெடுக்கவந்த கோடரிக் காம்பே! நான் உன்னைக் கெட்டுப் போகவா சொல்கின்றேன்? அந்தப் பெண் ரங்கநாத முதலியாரின் ஏக புதல்வி. சொத்தும் ஒரு லட்சத்திற்கு இருக்கிறது. வீணில் என் கெட்டுப் போகிறாய்?"

"அப்பா! நான் ரத்தினுளே விட்டு விட்டு வேருருத்தியை கனவிலும்.............................."

"பறைப்பையனைப் பள்ளியில் வைத்தாலும் 'அநே' என்கிற புத்தி போகாது. நீ மறுபடியும் அந்த அநாதையைப் பற்றிப் பேசுகிருய். ஏதோ கொஞ்சம் கோணெ யெழுத்தும் தளுக்கும் மினுக்கும் படித்திருக்கிருள்; ஆனபடியால் நீ மயங்கி விட்டாய்"

"அவள் நல்ல விவேகி. ஞானமுள்ளவள். ஏழை வீட்டுப் பெண்; நம் மிஷ்டப்படி நடப்பாள்."

"ஒஹோ நான் சொல்வதைக் கேட்கமாட்டாய். நீ எக் குட்டிச் சுவ ராய் போனுல் எனக்கென்ன? என் பேர் வீணுகக் கெட்டுப் போய் விடும். கந்தசாமி முதலியார் மகன் ஒரு நாயுடுப் பெண்ணை கட்டிக் கொண்டான் என்ற களங்கம் மறைவதெப்போ?"

"இதில் என்ன களங்கம்? இன்றைக்கு எத்தனை முதலியார்கள் தேவடியாள் வீட்டிற்குப் போகிருர்கள். கல்யாணம் செய்து கொண்டால் களங்கம் வந்து விடுமாக்கும்" என்று ஆத்திரத்துடன் கூறிஞன் கோபால்.

"அது போகட்டும்; ரூபாய் ஒரு லட்சம் வருகின்றதே. அது எப்படி சம்பாதிப்பாய்?"

"எனக்கு கல்யாணம் செய்து கொள்வது ரூபாயுடனல்ல. ரூபாய் என் வாழ்க்கைத் துணைவியாக முடியாது. ஆனந்த மில்லாமல் ரூபாயை என்ன செய்வேன்?"

"கொஞ்சம் கூட தகப்பனிடம் மரியாதை யில்லாமல் எதிர்த்துப் பேசுகிருயா? செல் அப்புறம். உனக்கு ஒரு செப்புக் காசுகூட வைப்பதில்லை. ஏதாவதொரு கோவில் குளத்திற்கு எழுதி வைத்து விடுகிறேன் பார்." என்று கர்ஜித்தார் கந்தசாமி முதலியார்.

கோபாலனும் விசனத்துடன் அந்த அறையை விட்டு வெளிக் கிளம்பிஞன்.

3

கோபால் கண் திறந்ததும் ஒரு புதிய சுத்தமான பெரிய அறையில் ஸ்பிரிங் கட்டிலில் படுத்திருப்பதைப் பார்த்து ஆச்சர்ய மடைந்தான். பிறகு தன் உடம்புகளில் கட்டுகளையும் உடம்பு பூராவும் வீக்கத்தையும் பார்த்ததும் மெல்ல மெல்ல முன் நடந்த சம்பவங்கள் ஒருவாறு ஞாபகத்திற்கு வந்தன. தாகம் எடுத்தது. மேஜையின் மேலிருந்த காலிங் பெல்லைத் தட்டியதும் ஒரு அழகிய யுவதி வந்து "என்ன வேண்டும்?" என்று கேட்டாள்.

"கொஞ்சம் தண்ணீர்" என்று கோபாலன் மெல்லிய குரலில் கேட்டான். அந்த யுவதி ஒரு பீங்கான் கோப்பையில் தண்ணீரை அவன் முகத்தருகில் கொண்டு வந்து கொடுத்தாள். கோபால் தண்ணீரருந்தி விட்டு, "நான் எங்கிருக்கிறேன்?" என்று கேட்டான்.

"ஜெனரல் ஆஸ்பத்திரியில்"

"எப்பொழுது வந்தேன்?"

"காலை 11 மணிக்கு"

கோபாலனுக்கு இன்னும் சரியாக உணர்ச்சி வரவில்லை. ஆனபடியால் ஏதோ சொப்பனம் காணுவது போன்று அவனுக்குத் தோன்றியது. மேலும் இக் குரலை எங்கோ கேட்டது போன்று தோன்றிற்று. கோபாலனுக்கு ஒரு சிந்தனை. இம் மூர்ச்சித்த நிலையிலும் "ரத்தினம்! ரத்தினம்!!" என்று பிதற்றிக் கொண்டே யிருந்தான்.

"எந்த ரத்தினத்தை நினைத்துக் கொண்டு புலம்புகிறீர்கள்" என்று கேட்டாள் அந்த யுவதி.

"என் 'கிளாஸ்மேட்' ரத்தினம். அவளுக்காகத்தான் இச் சங்கட நிலையிலும் பிராணனை வைத்துக் கொண்டிருக்கின்றேன்."

"என்ன தூக்கத்தில் பிதற்றுகிறீரா?"

"தூக்கமா? வெகு நல்ல தூக்கம். நானும் என் ரத்தினமும் VI பாரம் வரை ஈரோடு 'மஹாஜன ஹைஸ்கூலில் 'கிளாஸ்மேட்டு'கள். அவளிடம் நான் அவளையே மணப்பதாக பிரதிக்ஞை செய்திருககின்றேன். என் தகப்பனார் என் விவாஹத்தை ஒரு பணக்காரனின் பெண்ணுடன் நிச்சயம் செய்திருந்தார். நான் எப்படி ஒத்துக் கொள்ள முடியும்! அவளிடம் என் உள்ளத்தையே பறிகொடுத்து விட்டேன். அதனால் தான் வீட்டை விட்டு வெளியே போகவும் நேர்ந்தது. வேறொரு வேலையும் அகப்படாததால் இங்கு கூலி வேலை செய்து வந்தேன். எனக்கு என் ரத்தினமில்லாமல் உண்ணவும் முடிய வில்லை. உறங்கவும் முடிய வில்லை. என் உடம்பும் இந் நிலைமையை அடைந்தது. இன்று என் எஜமான் ஒரு நெய் ஜாடியைத் தலையில் வைத்து ஸ்டேஷனுக்கு கொண்டுவரச் சொன்னார். தவறிக் கீழே விழுந்து விட்டது. அதனால் தான் இம் மாதிரி தன் கை நோக பிரம்பால் அடித்தார். ஹா! ரத்தினம்!!"

அந்த யுவதியால் பொறுக்க முடியவில்லை. சொல்லச் சொல்ல அவள் கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருகியது. "ஆ கோபால்! எனக்காகவா நீ இவ்வளவு கஷ்டப்பட்டாய்?" என்று கூறி அவனைத் தன் மார்புடன் அணைத்துக் கொண்டாள்.

* * * *

கந்தசாமி முதலியார் தன் புதல்வன் கோபாலனைப் பிரிந்து இரண்டு வருஷங்களாயின. புத்ர சோகத்தால் எலும்பும் கூடுமாய் விட்டார். பிரபல தினசரிகளில் தன் மகனுக்கு தன் நிலைமையை எடுத்துக் கூறி தன்னை மன்னித்து உடனே வந்து பார்க்க வேண்டு மென்று கடிதம் விளம்பரம் செய்தார்.

கோபாலன் தன் தகப்பனாரின் நிலையை யறிந்து ரத்தினத்துடன் தன் வீட்டிற்குச் சென்றான். முதிய வயதில் வெகு நாள் பிரிந்திருந்த தன் புத்திரனைப் பார்த்ததும் ஆனந்த மிகுதியால் அவர் ஹிருதயம் அப்படியே நின்று விட்டது.




# ஔவையார்

(ஸ்ரீமதி. பண்டிதை—அசலாம்பிகை அம்மையார்.)

"வேண்டி வினை செயேல்" என்பது அடுத்த நீதி. இதற்கு யாதொரு பயனை விரும்பி நீ தீவினையைச் செய்யாதே என்பது பொருள். இந்தத் தொடரில் வினையென்பது பொதுப்படவே ஆளப்பட்டிருக்கிறது. இதனால் நல்வினை செய்வதாயினும் சுயநலம் கருதிச் செய்யாதே என எச்சரித்ததாகவும் கொள்ள இடமுண்டு. இவ்வாறு செய்வதால் தீமை யில்லாவிடினும் சுயநல எண்ணம் வளர்ச்சி பெறக்கூடும். தன்னலம் கருதி ஒரு நற்காரியத்தினைச் செய்ய முதலில் முற்படுவோர் காலக்கிரமத்தில், தன்னலமே தலைமைக் கொள்கையாகி அதற்காகத் தீவினையையும் செய்ய முனைவோ ராகலாம். நல்வினை தீவினை இரண்டிற்கும் காரணம் ஈண்டு சுயநலந்தான் என்பது விளக்கம். சுயநலம் எல்லா நலங்களையும் அழிக்கும். அதனையே ஔவையார் முதலில் வெறுப்பதை யுணர்த்த இந்நீதியில் சுயநலத்தைக் குறிக்கும் 'வேண்டி' என்னு மொழியைத் தொடக்கத்தில் அமைத்துள்ளார் போலும்.

ஆனால் உலகில் பொதுவாக மக்கள் வழக்கில் வினை என்பதற்குத் தீவினை யென்பதே பொருளாகக் கொள்வது இயல்பு. உதாரணமாக துன்பப்படும் ஒவ்வொருவரும் அதற்குக் காரணம் தாம் பூர்வத்தில் செய்த வினைப் பயன்(தீமை) என்று புகல்வதையே காண்கிறோம். அதுபோல நன்மையை யடைந் தின்புறுவோர் தாம்செய்த பூர்வபுண்ணியம் என்று கூறுவதே மரபு. ஆதலினால் வேண்டிவினை செயேல் என்ற தொடரில் உள்ள வினை என்பதற்கும் தீவினை என்பதே பொருளாக உரை கண்டனர் அறிஞர். அன்றியும் சுயநலம் காரணமாயினும் செய்கை நன்மை தருமாயின் அதனால் இழுக்கில்லை. பிறரும் இன்புறுவர். இந்தக் கருத்தை யொட்டியும் வினையென்பதற்கு தீவினை யென்றே பொருள் கோடல் விழுப்பமுடைத்து. முன்னைய கருத்தில் சுயநலம் என்னும் ஒரே பிழையுண்டு. பின்னைய கருத்தில் சுயநலம், பிறர்க்கின்னல் என இரண்டு பிழைகள் இடம் பெறுகின்றன. இதனாலும் தீவினை செய்வதைக் கடிந்தார் என்று கொள்வது சிறப்பு.

திருவாதவூ ரடிகள்,

"வாழ்த்துவதும் வானவர்கள் தாம்
வாழ்வான் மனமின்பாற்

றுழ்த்துவதும் தாமுயர்ந்து தம்மையெலாம்
தொழவேண்டி
சூழ்த்துமது கரமுரலும் தாரோயை
நாயடியேன்
பாழ்த்தபிறப் பறுத்திடுவான் யானும்
உன்னைப் பரவுவனே."

என்னும் இனிய செய்யுளால் சுயநல முயற்சியை எவ்வாறு இழித்துக் கூறி யிருக்கின்றார் என்பது சிந்திக்கத்தக்கது. ஜயவிஜயீபவ என்றும், பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு எனவும், வாழி வாழி எனவும், எல்லா ஆத்திகப் பெரியார்களும் கடவுளை வாழ்த்துகின்றனர். இதன் உண்மை யென்ன? எங்கும் நீக்கமற நிறைந்து எல்லாமாகிய பிறப் பிறப்பில்லாத கடவுளுக்கு சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினராகிய நாம் வாழ்த்துக் கூறுவானேன்? வாழ்த்துரை தம்மினும் இளையோர்க்கன்றோ முதியோர் கூறுதல் முறைமை.

சராசரங்களனைத்தையும் ஆக்கியும் காத்தும் அழித்தும் செய்யும் எல்லாம் வல்ல இறைவனுக்குப் பிறப்புண்டா? இறப்புண்டா? எதற்காக நாம் வாழ்த்துக் கூறுவது? பின்னை மூதறிவாளரின் மொழிக்குப் பயன்தான் என்னை? எனின்.

விருப்பு வெறுப்பற்ற பரம்பொருளிடம் நாம் எதை அர்ப்பணம் செய்தாலும் அது அவ்வண்ணமே திரும்பி நம்மிடம் வருதல் உண்மை யாகும். இதற்குதாரணமாக மகாபாரதத்தில் ஓர் குறிப்புளது.

தருமபுத்திரர் ஆராதனை முடிவில் 'பாவபுண்ணியங்க ளிரண்டினையும் கிருஷ்ணா உனக்கே அர்ப்பணம் செய்கிறேன்' எனச் சொல்ல எத்தனிக்கையில் வீமன் தடுத்து 'அண்ணா நாம் கிருஷ்ணன் திருவடியில் அர்ப்பணம் செய்யும் எப்பொருளும் ஒன்று அநந்தமாக நம்மிடத்திலேயே திரும்பி வரும். ஆதலினால் புண்ணியத்தினை மட்டில் அர்ப்பணம் செய்யுங்கள். பாவத்தை அர்ப்பணம் செய்யவேண்டாம்' என்று கூறினார் என்பதே. ஆதலால் நாம் கூறும் வாழ்த்துரையும் நமக்கே வரும் என்னும் உட்கருத்தை விளக்கவே,

'வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான்.'—என்றும்,

'மனநின்பாற் றுழ்த்துவதும் தாம் உயர்ந்து
தம்மையெலாம் தொழவேண்டி.'—என்றும்,

'சூழ்த்து மதுகாமுரலும் தாரோயை நாயடியேன்,
பாழ்த்த பிறப்பறுத்திடுவான் யானும் உன்னைப் பரவுவனே,'

என்றும் கூறிப் போந்தார்.

தேவர்கள் தத்தம் உள்ளங்களை நினது திருவடிகளில் தாழ்த்தி வணங்குவதும் அதன் காரணமாகத் தமக்கு மிகுந்த மதிப்பும் உயர்வும் எற்

பட்டுத் தமது பாதங்களில் பல்லோரும் வணக்கம் செய்தற் பொருட்டே யாகும் என்கின்றார்.

உண்மையில் தெய்வத்தை மெய்யன்புடன் வழிபடுவோர்களை பெரும்பான்மையாக எவரும் மேன்மைப்படுத்துதல் இயற்கை. தெய்வ வழிபாட்டிற் சிறந்த சீலர்கள் பிறர் தம்மை வணங்க வேண்டுமென்று ஒருகாலும் விரும்பவும் செய்யார். எனினும் உலகினர் செயலை இவர்கள் தடை செய்ய முடியாது. அன்பு காரணமாக இவர்களை எவரும் பணிந்தே தீருவர். இறைவன் திருவடியில் இவர் சிந்தை ஒன்று தாழ்வதால் எண்ணிறந்தோர் தலைகள் இவர் அடியிற் ருழ்கின்றனவென்பது வெளிப்படை. மேலடியில் வானவர்கள் வாழ்த்துவதும் தாம்வாழ்வு பெறவே என்பது யூகம்.

"மனம் நின்பாற் ருழ்த்துவதும் தாம் உயர்ந்து
தம்மை யெலாம் தொழவேண்டி."

என்பது அநுபவம். பிந்திய உதாரணத்தைக் கொண்டு நாம் வாழ்த்தும் உரைகளும் ஒன்று அநந்தமாகி நம்மையே திரும்பவும் வந்தடைதல் உண்மை யென்ப துறுதியாகின்றது. மெய்யன்பர்களுக்கு பிறர் தம்மைப் பெரியவர்கள் எனப் போற்றுவதில் வெறுப்புண்டெனினும், ஜீவனோபாயத்திற்காக அடியார் வேடம் பூணும் பொய்யன்பர்களுக்குப் பல பாரமார்த்திகர்களையும் தமது வஞ்சவேட வலையிற் சிக்கவைப்பதே நோக்கமென்பதைக் கூற வேண்டியதில்லை.

இதனல் கடவுளை வாழ்த்துவதும் இவர் திருவடிகளில் வணங்குவதும் அநந்தம் அநந்தமாக நம்பால் வந்து குவிகின்றன. எனது பாழ்த்த பிறப்பறுத்திடும் இலாபம் கருதியே அடியேனும் உன்னைத் துதி செய்கின்றேன் எனத் திருவாதவூரடிகளே கூறி யுள்ளாரெனில், வேட்கையினல் தூண்டப்பட்டு வினை செய்யாதே எனப் பெருமாட்டியார் உணர்த்தியது அரிய உபதேசமென்பதில் ஐயம் உண்டோ? இதைத் தார்க்கீக முறையில் எந்நாட்டவரும் போற்றிப்புகழ எழுந்த நூல் குருக்ஷேத்திர பூமியில் பாண்டவருள் நடுப்பிறந்தோனுகிய தனஞ்ஜெயனுக்குக் கண்ணபிரானல் உபதேசிக்கப்பட்ட பகவத்கீதை என்னும் ஒப்பில்லாத பாரததேச பொக்கிஷம். திலகர் பெருமானின் திருவுள்ளத்தைக் கவர்ந்து அவரை நிஷ்காம்ய கர்மயோகியாக்கியதும் மோஹனதாஸ் கரம் சந்திரகாந்தியடிகளை இந்தியர்க்கே சொந்தமான மகாத்மாவாக்கியதும் கீதையே யாகும் என்னும் உண்மை அவ்விரு பெரியார்களின் ஜீவிய சரிதைகளைப் படித்தவர்க்கு நன்கு தெரியும்.

பயனை விரும்பாமல் (பலாபபேக்ஷை யில்லாமல்) கடமையென எண்ணி கர்மத்தைச் செய் என்பதே கீதையின் ஸாரம். அவ்வாறு செய்பவன் கர்மத்தில் அகர்மத்தைக் காண்கின்றான். அதாவது வினை செய்தாலும் அதன் பயனில் நாட்ட மில்லாமையினல் அதனைச் செய்யாதவனுகவே ஆகின்றான் என்பது பொருள். அருச்சுனனைப் பயங்கரமான பாரதப் போருக்கு ஊக்கிய இவ்வெண்ணமே தற்காலம் நமது பாரததேச விடுதலைப் போருக்கும் அரும் பெரும் தலைவர்களை ஊக்கிச் செலுத்தியதென்பது மிகையாகாது.

எனவே, ஔவையார் வேண்டி வினைசெயேல் என்று வகுத்த நீதியில் தாஸாரம் அடங்கி யிருப்பது உன்னத்தக்கது. ஔவையார் தீவினையை மட்டில் செய்யாதே என்று தடுத்ததாகப் பொருள் கொள்வோமாயினும் ஆரம்பத்தில் சுயநலம் காரணமாக ஒரு தீயசெய்கையும் செய்யாமலிருக்கத் தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள முயற்சி செய்பவன் காலக்கிரமத்தில் சுயநலம் அற்றவனாக மாறுதல் இயற்கை. இந்த மாறுதல் ஏற்பட்டால் எவ்வினையையும் பற்றின்றிக் கடமைக்காகச் செய்பவனாகின்றான். இதுவே தெய்வீக நிலை. இதற்கு மேற்பட்ட நிலை வேறில்லை. இதனையே மேற்கண்ட நீதி குறிப்பதாகும்.

இனி அடுத்து வருவது "வைகறைத் துயிலெழு" என்னும் நீதி. வைகறை என்பது விடிவதற்கு ஐந்து நாழிகை முன்னிட்ட காலம். அதிலிருந்து நித்திரை தெளிந்து எழுந் திருக்கவேண்டும். அந்தக் காலமே விவேகம் களங்கமற்று நிமிர்ந்து நிற்கும் உத்தமகாலம். ஒவ்வொரு நாளையும் சத்துவ காலமென்றும் ராஜஸ காலமென்றும் தாமச காலமென்றும் முக்கூறாகப் பகுக்கலாம். மனிதரிடமுள்ள மேலே கூறிய மூன்று குணங்களும் மூன்றினுக்கும் உரிய காலங்களோடு சேருங்கால் இன்னும் வலிமை பெறும். அறிவை வளர்ப்பதற்கும் மனப்பாடம் செய்வதற்கும் மறந்தவைகளை ஞாபகத்தில் கொண்டு வருவதற்கும் காலை நேரமே ஏற்ற தென்பதை ஒவ்வொரு மாணக்கரும் உணர்வர். இதுவே விடியற்காலம் அறிவை யெழுப்பும் ஆற்றலுடைய சத்துவகால மென்பதை மெய்ப்பிக்க வல்லதாகும். இத்தகைய அதிகாலை நேரங்களில் பண்டைக்காலத்திய பிரதம போதனைக் கூடங்களில் கற்பிக்கும் வழக்கம் இருந்ததால் அக்காலத்தில் பயின்றவர்கட்கு ஞாபகசக்தியும் மனனசக்தியும் அதிக மிருந்தது. வர வர பள்ளிக்கூடங்களில் அம்முறை மாறிவிட்டது கண்கூடு. இதற்கு முதற்காரணம் நம்மை ஆளும் ஆங்கிலேயர்களின் நாடுகளில் பனி மிகுதியினால் சூரியனை காலை ஒன்பது மணிக்கு முன் காண முடியாது. சூரியவொளி படாமல் பனிவிலகாது. அதற்கு முன் வெளியேறினால் அபாயம் நேரும். ஆதலினால் அவர்கள் பள்ளிக்கேகும் காலம் ஒன்பது மணி. உஷ்ண மிகுந்த நம் மிந்தியநாட்டில் ஆரோக்கியமான குளிர்ந்தகாலம் 9-மணிக்குள் விடை பெற்றுக்கொள்வ தியற்கை. மூளைக்குக் கொதிப்பை யேற்றும் வெய்யில் உயர்வது அதுமுதலே யென்று எவரும் உணர்வர். நடை யுடைகளிலும், உண்பன உடுப்பன ஆகியவைகளிலும் அநேகமாக ஆங்கிலேயரைப் பின்பற்றி நடக்க ஆவலுடையவர்களாகிய நம்மவர் பள்ளிக்கூட போதனைக்குரிய காலங்களையும் அந்நாட்டினரைப் பின்பற்றி வகுத்துக் கொண்டனர். இதன் பயனாக ஞாபகசக்திக்கு வேண்டற் பாலதாகிய நெட்டுருச் செய்யும் கட்டாய முறையும் கைவிடப்பட்டது. தற்போதுள்ள ஆசிரியர்கள் இந்த நுனிப்புல் மேயும் முறையிற் பயிற்சி பெற்றவர்களே யென்பதைச் சொல்லாமலிருக்க முடியவில்லை. கணிதத்தை முன்னர் காலையில் பிரதம பாடமாகத் திண்ணைப் பள்ளிக்கூடங்களில் கூட எடுத்துக் கொண்டிருந்தனர். வந்த பாடங்கள் மறக்கும் மாலை நேரத்தில் வாய்ப்பாடு சொல்வதை இக்காலம் காண்பதெளிது. விடியு முன்பு படுக்கை விட்டெழாமல் இருக்கும் மாணவர்களும் பலர். தூக்கம் கலைந்தால்கூட அதிகாலை எழுந்திருக்கச் சோம்பலினாலேயே இருப்பார்.

"நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன்."

என்றார் தெய்வப்புலவரும். அதாவது விரைந்து செய்யவேண்டிய காரியங்களைத் தாமதமாகச் செய்யும் குணமும் அதிக மறதியும் சோம்பலும் அதிக நித்திரையும் கேட்டினை எய்துவோர்களின் அடையாளங்கள் என்பது. தான் விரும்பி ஏறும் கப்பலில் பல துளைகள் இருக்குமாகில் விரைவில் அது நீரில் அமிழ்ந்து ஏறியவனை அழிப்பதுபோல், வாழ்க்கையில் மேன்மையடைய விரும்புவோர் மேலே சுட்டிய நெடுநீர், மறதி, மடி, துயில் ஆகிய நான்கு குற்றங்களுக்கு இரையாதல் கூடாதென்று உணர்த்தி யுள்ளார்.

ஆழ்ந்து சிந்திக்குமிடத்து நெடுநீர், மறதி, மடி ஆகிய மூன்று குறைகளுக்கும் பிறப்பிடம் பெருந்துயில் என்பது புலனாகும். ஆகவே மூதாட்டியார் "வைகறைத் துயிலெழு" என்று சுருக்கி யுரைத்தனர் போலும். மேலே கூறியபடி துயிலுணர்ந்தும் படுக்கையிலிருந்து எழாம விருப்போர்க்கும் எச்சரிக்கையாகவே அன்னையார் "வைகறைத் துயில் உணர்" என்றுரையாது "துயில் எழு" என்றமைத்த நுட்பம் போற்றற்குரியது. இதனைப் பற்றி நீதி நூலாசிரியர்,

"விடியவிற பறவைமிருகம் யாவுமுள்
விரைந்துணர்ந்து பலவினை செயும்
கடிமலர்ப் பொழில்கள் மலரும் ஆர்வமொடு
கண்டிறந்து மதுபில்கிடும்
படியின் மன்னுயிரெலா மெழுந்து
பலபணியியற்றிட எழாமலே
தடியெனத் துயிலுவோன் நரன் கொலொரு
தாவரம்கொல் அறியோமரோ"

என்று இடித்துக் கூறினர். அதாவது ஓரறிவு, ஈரறிவு, மூவறிவு, நான்கறிவு, ஐந்தறிவுகளை முறையே உடைய எல்லாவுயிர்களும் விடியு முன்னதாக உணர்ந்தெழுந்து சுறுசுறுப்புடன் தம்தம் கடனாற்றுதலைக் காண்கிறோம். ஆறறிவுடையனென்று போற்றப்படும் மக்களினத்திற் பிறந்தவன் மட்டில் சிற்றுயிர்களிடம் காணப்படும் கடமை யூக்கம் கொள்ளானாயின், அவனை, துணித்து வீழ்த்தப்பட்ட மரத்தாலாகிய ஒரு தடிக்குச் சமானம் என்பதாகும். கொல் என்னும் அசையினால் அந்தத் தடியாகவாவது இருப்பானோ? என்னும் ஐயப்பாட்டினையும் சுட்டுகிறது. இம்மட்டோடு விடாமல்,

"வானுலா மருணன் எனும் மக்கள் ஆயுளின் கணக்கன்
தானெழு முன்எழாரைச் சகத்திரக் காத்தாற் றட்டும்
என்னென எழார் வாழ்நாளை எண்குறைத் தெழுதிக் கொள்வான்
ஆனது கண்டு காலன் அவரிடம் அணுகுவானே."

என மற்றுமோர் செய்யுள் வரைந்துள்ளார்.

இதன்பொருள் மனிதர்களின் ஆயுட்காலத்தை அளக்கும் கணக்கன் தினகரனாகிய சூரியனே யாவன். அந்தக் கணிதப் பணியுடைய சூரியனுக்கு ஆயிரம் (கிரணங்கள்) கைகள் உண்டென்பது நூல் வழக்கு. அக்கடவுள் தனது ஆயிரம் கைகளாலும் தான் கீழ்த்திசையில் உதயமாவதற்கு முன்னம் எழாமல் உறங்குவோர்களைத் தட்டி எழுப்புகின்றான். அதன் பிறகாவது துணுக்குற்று யார் யார் படுக்கை விட்டெழ வில்லையோ, அவர்களுடைய ஆயுள் பாகத்தில் தினப்பிடித்தம் இவ்வளவெனக் குறைத்தெழுதிக்கொள்வான். அதன் பயனாக இவர் அற்பாயுள் பெறுகின்றார். வாழ்வின் காலத்தை நிறைவேற்றி வைக்கும் பொறுப்புள்ள இயமன் மேற்சொன்ன பரிதிக் கணக்கன் ஆயுட்காலத்தில் நெடுந்துயில் காரணமாகக் கழித்துக் காட்டிய முடிவான புள்ளிகளையே ஆதாரமாகக் கொள்கின்றான் என்பது. இதைவிட அழகாகவும் அழுத்தமாகவும் சொல்லக்கூடியது உண்டோ?

சுருங்கக் கூறின் வைகறைத் துயில் எழாதவர்கள் சரீர ஆரோக்கியமும் குன்றி விரைவில் அகால மரணத்திற்குள்ளாவார் என்னும் நுட்பம் இதனுள் மிளிர்கிறது. பிணியாளருக்கும் அதிகாலையில் நோயின்வன்மை தணிந்து காட்டும். உட்கொள்ளும் மருந்துகளும் அதிகாலையில் உடலிற் சென்று நலம் விளைவிப்பதுபோலப் பிற நேரங்களில் விளைவியாது. மூளையை ஊக்கப்படுத்தும் முதற்சாதனம் வைகறையில் படுக்கை விட்டெழுந்து விடுவதே யாகும். புத்தி கூர்மையை விடப் பகுத்தறிவுடைய மனிதனுக்கு ஆக்கம் வேறில்லை. அதில் கவனமில்லாமல் நாம் நடந்துகொண்டால் புத்தி மந்தம் என்னும் வறுமைக்கு அடிமைப்பட்டு வாழ்நாள் எல்லாம் சிறுமை யுழத்தல் திண்ணம். ஔவையார் உபதேச மொழிகள் அனைத்துமே பல நோய்கட்கொரு மருந்தென்பதுபோல் அமைந்துள்ளவைகள் என்பது ஆன்றோர் துணிவு. ஆதலின் நாம் அவைகளை நன்கு உளத்திற் பதித்து அதன்படி ஒழுக முற்படுவோமாக.

---



(ஆசிரியர் - வி. சங்கரய்யர்)

17. சுவாசகாசம், பீனஸம், தீப்னம் முதலியவைகளுக்கு

### தாடிமீ ரசாயனம்

மாதுளைப்பழச்சாறு $\frac{1}{2}$-படி, வெல்லம் 8-படி, திரிகடு சூரணம் 3-படி லேகிய பாகமாகக் கிண்டி தேன் நெய் சேர்த்து தினமும் சாப்பிட்டு வரவும்.

18. உஷ்ணவாய்வு, மூத்திரரோகத்துக்கு

### கோக்ஷுர கஷாயம்

நெரிஞ்சி ஸமூலம், கஷாயம் வைத்து ஜீனியும், தேனும் சேர்த்துக் கொடுக்கவும்.

19. ஸர்வவாத ஹாரி,

### ராஸ்ன பஞ்சகம்

சித்தரத்தை, சிற்றமிருது, தேவதாரு, சுக்கு, ஆமணக்குவேர் கஷாயம் வைத்துக் கொடுக்கவும்.

20. அஜீர்ணத்தா லுண்டான வாயு உபத்திரவத்துக்கு

### தான்ய நாகரம்

கொத்தமல்லி, சுக்கு, ஆமணக்குவேர், இவைகளாலான கஷாயம் கொடுக்கவும்.

21. கண்குளிர்ச்சி, நேத்திரரோகத்துக்கு

### பிருங்காமலக தைலம்

கரிப்பான்சாறு $\frac{1}{2}$-படி, நெல்லிக்காய்சாறு $\frac{1}{2}$-படி, நல்லெண்ணெய் படி 1, பால் படி 1. அதிமதுரத்தை பால் விட்டரைத்து கலக்கி எண்ணெய் காய்ச்சி வடிகட்டி மூழ்கி வரவும்.

22. தேககாந்தி, தேகபலம், தேகபுஷ்டி முதலியவைகளுக்கு

### பஞ்சகவ்ய கிருதம்

கோரங்கிழங்கு, ஏலம், கொடுவேலிக்கிழங்கு, அமுக்கிராக்கிழங்கு, வாயுவிளங்கம், அதிமதுரம், மஞ்சள், மஞ்சட்டி, வசம்பு, திப்பிலி, கடுகுரோகிணி, திருபலை, ஆடாதோடைவேர், திராக்ஷைபழம், மரமஞ்சள் இவைகளைத் தண்ணீர் விட்டரைத்து வைத்து பசுசாணக நீர் $\frac{1}{8}$ படி, பசு மூத்திரம் $\frac{1}{4}$-படி, பால் 2-படி, தயிர் $1\frac{1}{4}$-படி, நெய் 1-படி சேர்த்து காய்ச்சி வடிகட்டி தினம் காலை மாலை ஒரு டீ ஸ்பூன் வீதம் கொடுக்க கர்ப்பாசய

சுத்தி யுண்டாகி கர்ப்ப முண்டாகும். புருஷனுக்கு சுக்கிலசுத்தி ரத்த விருத்தியு முண்டாகும்.

### 23. வயிற்றுவலி, அஜீரணம், முதலானவைகளுக்கு
### அஷ்ட சூரணம்

சுக்கு, மிளகு, திப்பிலி, ஓமம், இந்துப்பு, ஜீரகம், கருஞ்சீரகம், காயம் வகைக்கு 1-பலம் வீதம் இடித்து பொடிசெய்து திரிகடிப்பிரமாணம் வெந்நீரிலோ, மோரிலோ போட்டு சாப்பிடவும்.

### 24. சகல ஜ்வர நாசினி
### வட சிருங்காதி கஷாயம்

ஆலமொட்டு, ஆடாதோடைவேர் இவைகளுடன் பால் ½-படி விட்டு கஷாயம் வைத்து தினம் இரண்டு வேளையும் கொடுக்கவும். தினம் புதிதாக செய்யவும்.

### 25. பாம்புக் கடிக்கு

வாழைமரத்தின் சாறு கொடுக்கவும். கிழங்கின்சாறு மிக சிலாக்கியம்.

### 26. தேள்கடிக்கு

நவசாரம், சுண்ணாம்பு இவ்விரண்டையும் உள்ளங்கையில் ஒன்று சேர்த்து ஆள்காட்டி விரலால் மூக்கில் முகரவும்; கொட்டிய இடத்தில் போடவும்.

### 27. பிரண்டைத் துவையல்

பிரண்டையை எண்ணெய்விட்டு வதக்கி அதோடு ஜீரகம், மிளகு, மஞ்சள், உப்பு, புளி சேர்த்து அரைத்துக் கூட்டவும். இது ஜீரண சக்தியை வளர்க்கும்.

### 28. சகல ஜ்வரத்துக்கும்
### முதற் சிகிச்சை

5-வெற்றிலை, 9-அரிசித்திப்பிலி, 1-அங்குலநீள அரத்தை இவைகளை நன்றாக மைபோல் தண்ணீர்விட்டு அரைத்து ஒரு கரண்டியைக் காய வைத்து அதில் விட்டு சுரசம் செய்து கொடுக்கவும். இப்படி 3-வேளை கொடுக்கவும்.

#### இதில் குணப்படாத பக்ஷம்

சுக்கு, தேசாவரம், செவியம், சிறுதேக்கு, பேப்புடல், சித்தரத்தை, நிலவேம்பு, பற்படகப்புல், திராக்ஷைப்பழம் வகைக்கு காலணுவுக்கும் திப்பிலி அரையணுவுக்கும் வாங்கி நன்றாக இடித்து மூன்று சமபாகம் வைத்து ஒரு பாகத்தில் அரைப்படி தண்ணீர்விட்டு கஷாயம் வைத்து கால்படியாக வற்றவைத்து காலை மாலை வேளை யொன்றுக்கு அரைக்கால்படி வீதம்

கொடுத்து வரவும். மூன்று நாட்கள் கொடுத்தால் சகல ஜ்வரமும் குணப் படும்.

## 29 பைத்தியம், சித்தப்பிரமை, உஷ்ணம்

### இவைகளுக்கு

அகத்திக்கீரை, வெங்காயம் இவைகளை கறி சமைத்து சாப்பிட்டு வரவும்.

## 30. குஷ்டத்திற்கு

மருதோணிவேர் கஷாயம் சாப்பிட்டு வரவும்.

## 31. இரத்தவிருத்திக்கு

கசகசா, வால்மிளகு, வகைக்கு பலம் 2. இளவறுப்பாக வறுத்து அதில் வாதம்பருப்பு சீனுக் கற்கண்டு, வகைக்கு 2-பலம் வீதம் சேர்த்து இடித்து தினம் காலை மாலை சாப்பிட்டு வரவும்.

## 32. வயிற்றுவலிக்கு ஓமப்பொடி

ஒரு சேர் ஓமத்தை புளித்தமோரில் ஊறப்போட்டு உலர்த்தி பிறகு அப்படியே எலுமிச்சம்பழச் சாற்றில் ஊறப்போட்டு உலர்த்தி ½-சேர் இந்துப்பு சேர்த்து இடித்து தினம் காலை மாலை ஒருவராகனிடை வீதம் சாப்பிடவும்.

## 33 தாதுபுஷ்டி ஹல்வா

கோதுமை, கசகசா, சவ்வரிசி, வாதம்பருப்பு வகைக்கு ¼-படி வீதம் ஜலத்தில் ஊறப்போட்டு மைபோல் அரைத்து எருமைப்பால் ஒருபடி, தேங்காய்ப்பால் ஒரு படி, சீனி ஒரு படி, நெய் படி கால், சேர்த்து நன்றாகக் கிண்டி ஏலப்பொடி சேர்த்து இறக்கி தினம் இரவு படுக்கும் முன் சாப்பிட்டுவரவும்.

## 34. முகவாதம், சந்துவாதம், பலஹீனம், ரத்தசுத்திக்கு

### அன்னபேதி மாத்திரை

எலுமிச்சம்பழ ரசத்தில் ஊறப்போட்டு சுத்தப்படுத்தின அன்னபேதி ஒருபலம், மிளகு ஒருபலம், இரண்டையும் பொடித்து தேன் விட்டரைத்து மாத்திரை செய்து வைத்துக்கொண்டு ஒரு வேளைக்கு சுண்டைக்காய் பிரமாணம் காலை மாலை சாப்பிடவும்.

## 35. சொப்பன ஸ்கலிதம், துரித ஸ்கலிதம்

கர்ப்பூரம் 1-பலம், அபின் அரைக்கால் பலம் கூட்டி சேர்த்து அரைத்து மிளகு அளவு தினம் படுக்குமுன் சாப்பிடவும்.

### 36. சகல ஜ்வரத்துக்கும் லிங்க மாத்திரை

லிங்கம் விராகனிடை 1¼, திப்பிலி 2½ விராகனிடை பசுவின்பால் விட்டரைத்து பயற்றளவு மாத்திரை செய்து வைத்துக்கொள்ளவும். காலை மாலை தேனிலோ, இஞ்சிச்சாற்றிலோ கொடுக்கவும்.

### 37. சுக்கிலம் கெட்டிபட

தாழம்பூ மகரந்தத்தூள், அமுக்கிராக்கிழங்கு, வசம்பு, மருந்தோன்றி விதை இவை சமனிடை பொடிசெய்து வைத்து கோழிமுட்டை வெள்ளைக் கருவில் குழப்பி மேல் பூசவும்.

### 38. பித்தத்துக்கு ஜீரசப்பொடி

2-சேர் ஜீரகத்தை, வல்லாரை, கரிப்பான், பொன்னாங்காணி, புளியாரை, இஞ்சி, எலுமிச்சம்பழம், இந்தச் சாறு ஒவ்வொன்றிலும் தனித்தனியாக ஊறப்போட்டு உலர்த்தி தினம் காலை மாலை 2-விராகனிடை வீதம் சாப்பிட்டு வரவும்.

### 39. உஷ்ணத்துக்கு மிளகு

1-சேர் மிளகை கரிப்பான், எலுமிச்சம்பழம், இந்தச்சாறு ஒவ்வொன்றிலும் ஊறப்போட்டு, அத்துடன் ½-சேர் இந்துப்பு சேர்த்து உலர்த்தி தினம் காலை மாலை 7-முதல் 10-மிளகு வீதம் சாப்பிட்டு வரவும். ரத்தசுத்தி விருத்தியு முண்டாகும்.

### 40. வல்லாரை கிருதம்

சிவதைவேர், இஞ்சி, மஞ்சள், நெல்லிப்பருப்பு, கடுக்காய், திப்பிலி, வாயுவிளங்கம், இந்துப்பு, வசம்பு, ஏலம் வகைக்கு 1-ரூபாயிடை வீதம் பொடிசெய்து வஸ்திரகாயம் செய்து வல்லாரைச்சாறு அரைப்படி, பசுவின் நெய் அரைப்படி சேர்த்து காய்ச்சி காலை மாலை கால் ரூபாயிடை வீதம் சாப்பிடவும். சகலமேக வியாதிகள், ஸ்திரீ வியாதி, சூதகவாய்வு, பாலர் கணைப் பிணிகள் தீரும். ரத்தசுத்தி ஞாபகசக்தி, தீபனசுத்தி யுண்டாகும்.

### 41. வல்லாரை சூர்ணம்

வல்லாரை இலையை பாலில் புட்டவியல் செய்து நிழலில் உலர்த்தி சூர்ணித்து தினம் காலை மாலை திரிகடிப்பிரமாணம் தேன் நெய் கலந்து சாப்பிடவும். சகல சர்மவியாதிகளும் தீரும். ஞாபகசக்தி அதிகப்படும். கல்லீரல் மண்ணீரல் பெருக்கும் குணப்படும்.



# பழமையிற் புதுமை

—:(ப):—

(S. ராமஸ்வாமி ஐயங்கார்)

பழையன வெறுப்பதும் புதியன விரும்பி ஏற்பதும் நம்மிற் சிலர் செய்கையாம். பழையன கழியின் புதியன கொள்மினென்றார்ப்பரித்து 'பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல காலவகையினானே' என்னு முறையைத் தமக் காதாரமாகக் காட்டுகின்றனர். பழைமையிற் குற்றங் காணுதலும் நன்மை காணமாட்டாமையு மிதற்குக் காரணமாம்.

பல்லாண்டுகட்கு முன்பு வதிந்த அறிவிற் சிறந்த பெரியோர் எழுதிப் போந்த நூல்களில் நவீனக் கருத்துகளும் கொள்கைகளும் மலிந்து கிடப்பதைக் காணக்காண அப் பெரியோரின் தீர்க்க தரிசனம் நமக்குப் பெரு வியப்பைத் தருவதாகும்.

கவிக்கரசு கம்பன் வாழ்ந்த காலம் பன்னிரெண்டாம் நூற்றாண்டின் இடைப் பகுதியாம். இவரறிவிற் றலை சிறந்த அரும் பெரும் புலவர். இவரியற்றிய அரிய பெரிய நூலாகிய இராமாயணத்தில் தம் முள்ளக் கருத்துகளையு மாங்காங்கே பொறித்திருக்கின்றார். இவ்விராமாயணம் மிகப் பழைமையே யாயினு மிதிற் புதுமை மிளிர்ந்து காணப்படுகின்றது.

இது போழ்து நவீனமெனப் படும் பெண்கல்வி, பெண்களின் சொத்துரிமை, பால்ய விவாகத் தடை, தேவதாசி முறை ஒழிப்பு, மதுவிலக்கு அபேத வாதக் கொள்கை ஆகியவை கம்ப ராமாயணத்தில் இடம் பெற்றிருக்கின்றன. கம்பராமாயணச் செய்யுள்களைத் துருவித்துருவி யாராயுமிடத்துப் புத்தம் புதிய கருத்துகளும் தோற்றங்களும் நமக்குப் புலனாகாமற்போகா.

பெண்மக்கட்குங் கல்வி மிக அவசியமென்பது கம்பர்தங் கருத்து. நாட்டணி கூறுமிடத்து இதை மிக அழகு பெறக் காட்டுகின்றார்.

'பெருந்தடங்கட் பிறை நுதலார்க் கெலாம்
பொருந்து செல்வமுங் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்
விருந்து மன்றி விளைவன யாவையே'

என்று கூறுகின்றார். மிகப் பெரிய கண்களோடு பிறைபோன்ற நெற்றியையுமுடைய மாதர்களுக் கெல்லாம் நிலைத்த செல்வமும் கல்வியறிவு முண்டாயிருத்தலால் தம்மை வந்தடைந்தார்க்குங் கொடுத்தலும் நாடோறும் விருந்தோம்பலு மல்லாது வேறு தொழில் யாது என மிடுக்குடன் வினவுகின்றார்.

'கண்ணுடைய ரென்பர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்'

என்று ஆண் பெண் இருதிறத்தார்க்குங் கல்வி யவசியமென்பதைத் தமிழ் மறை பொதுவாகக் கூறி நிற்பதும் நோக்கற் குறித்து.

'கல்லாது நிற்பார் பிறரின்மையிற் கல்விமுற்ற
வல்லாருமில்லை யவை வல்ல ரல்லாருமில்லை'

என்று கம்பர் பிறவிடத்துங் கூறுகின்றார்.

'பொருந்து செல்வமும்' என்பதால் பெண்கள் நிலைத்த செல்வத்திற்கு முரித்தானவர் என்பது பெறப் படுகின்றது. வருந்தி வந்தவர்க்கீயு முரிமையும் அவர்க் குரித்து. எனவே பெண்களுக்குச் சொத்துரிமையுமுண்டென்ற கருத்துக் கொண்டவர் கம்பனென்பதும் புலனாகின்றது.

(ஆற்றின் வெள்ளத்தைக் குறித்துக் கூறுமிடத்து,

'ஈக்கள் வண்டொடு மொய்ப்ப வரம்பிகந்
தூக்கமே மிகுந் துட் டெளி வின்றியே
தேக் கெறிந்து வருதலிற் றீம்புனல்
வாக்கு தேனுகர் மாக்களை மானுமே'

என்று கூறுகின்றார். இது கட்குடியருக்கும் வெள்ளத்திற்குஞ் சிலேடையாக வமைந்த பாடலாகும். கட்குடியனுடைய குணாதிசயங்கள் இப்பாட்டில் பரக்கக் காணப்படுகின்றது. தீம்புனல் வெள்ளம் வார்க்கப் படுகின்ற கள்ளைக் குடிக்கின்ற மனிதர்களை ஒததிருக்கின்றது. இதெவ்வாறெனின் ஈக்கள் வண்டுகளோடு மொய்க்கவும், அணையைக் கடந்து வலிமிகுந்து உள்ளிடத்துத் தெளிவில்லாமலும், தேக்க மரங்களை வீசிக்கொண்டும் வருவதாலெனப்படும். கட்குடியர் மேலேற்றிக் கூறுமிடத்துக் கள் நாற்றத்துக்கும் இனிமைக்கும் ஈக்கள் வண்டொடு மொய்ப்ப, தமது குலம் குடிப்பிறப்பு முதலியவைகட் குரிய ஒழுக்க வரம்பு கடந்து மனத் தெளிவில்லாமல் வருதலாலென்ற பொருள்படும். கட்குடியால் ஊக்க மிகுவதாலும், மனத் தெளிவின்மையாலும் வரம்பு கடந்து செல்லுங் குணமடைவதாலும் கட்குடியன் செய்யுஞ் செயலனைத்தும் பெருந் தீங்கினதாகவே முடிகின்றது. அவன் குடும்பம் வீழ்ந்து படுகின்றது. எனவே கட்குடி கூடாது என்ற கருத்து இப்பாட்டி லொளிர்கின்றது. கம்பர் மதுவிலக்குப் பிரசாரத்தை எத்துணை நாகரீக முறையில் கையாண்டிருக்கின்றாரென்பதுந் தெள்ளிதிற் புலனாம்.

'துஞ்சினார் செத்தாரின் வேறல்லரெஞ்ஞான்று
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்'

'உண்ணற்க கள்ளினை யுணிலுண்க சான்றோரா
லெண்ணப்பட வேண்டா தார்'

என்பவை தமிழ் மறைமொழியாம். பெறுதற்கரிய அறிவைப் பெற்றிருந்தும் கள்ளாலழித்துக் கொள்ளுவாரை இயல்பாகவே அறிவில்லாத மிருகங்களுடனேயு மெண்ணாராகலால் 'சான்றோரா லெண்ணப்பட வேண்டாதாருண்க' என்றார். இதையறிந்தே சென்னை யரசாங்கம் சேலம் ஜில்லாவில் மதுபானத்தை யொழிக்கக் கருதி உத்தரவும் பிறப்பித்திருக்கின்றது. பல்லாண்டுகட்கு முன்னர் கம்பர் கொண்ட கொள்கை இது காலை ஒருவாறு வெற்றி பெற்றதென்னலாம்.

வேசைக்கும் வெள்ளத்திற்குஞ் சிலேடையாக,

‘தலையு மாகமுந் தாளுந் தழீஇயதன்
நிலைநிலா திறை நின்றது போலவே
மலையி னுள்ள வெலாங் கொண்டு மண்டலால்
விலையின் மாதரை யொத்ததவ் வெள்ளமே’

எனக் கூறுகின்றார். வெள்ளத்தின் போக்கிற் குபமானமாக வேசையை யெடுத்தாள்கின்றார் கவி. விலைமாதர் தம்மிடத்து வந்த காமுகரது சிரத்தையும், மார்பினையும் பாதத்தையுந் தழுவின நிலையினளவாயினும் நில்லாமல் சிறிது நேரம் நின்றது போன்று காணப்பட்டு அன்னாரிடமிருக்கும் பொருள்கள் யாவற்றையும் பறித்துக் கொண்டு விரைந்து போதலே போன்று வெள்ளஞ் சென்றது என விலைமாதர் குணமும் அவர்களைச் சாரும் ஆடவரிழி நிலையு மொருங்கே எடுத்துக் காட்டுகின்றார். இன்னல் தருந் தேவதாசி முறை ஒழிமின் எனச் சாற்றுவது போன்றமைந் துள்ள திப் பாடல். அகழி, ‘பொன் விலை மகளிர் மனமெனக் கீழ் போய்’ என்றார் பிறவிடத்தும். இவைகளை நோக்குழி கம்பர் எத்துணை ஆழ்ந்த நவீனக் கருத்துகளைக் கொண்டுளார் என்பது பெறப்படும்.

இனி அபேத வாதத்தைப் பற்றிக் கம்பன் கூறுவதை யாராய்வோம். அயோத்திமா நகரில்,

‘எல்லாரு மெல்லாம் பெருசெல்வமு மெய்தலாலே
இல்லாரு மில்லை யுடையாரு மில்லை மாதோ?’

என்றவடிகள் ஆழ்ந்த கருத்துக்களைத் தாங்கி நிற்கின்றன. அந் நகரிலிருப்பவர்க ளெல்லாரு மெவ்வகைப் பெருஞ் செல்வங்களையும் நிரம்பப் பெற்றிருப்பதால் அங்கு வறியவர்களுமில்லை, உடையவர்களுமில்லை என்ப திதன் கருத்தாம். ஏழை, பணக்காரன் என்ற வித்தியாசம் அங்கு தலைகாட்டுவதில்லை என்ப திதன் தேர்ந்த பொருள். இது குறித்து மேலும் விளங்கக் கூறுமிடத்து,

‘வள்வார் முரசம் மதிர்மாநகர் வாழுமாக்கள்
கள்வா ரிலாமைப் பொருள்காவலு மில்லையாதும்
கொள்வா ரிலாமைக் கொடுப்பாரு மில்லைமாதோ’

என்று கூறி இவ்வபேத வாதக் கொள்கையை விளங்க வைக்கின்றார். அயோத்திமா நகரில் வாழும் மக்கள் தங்கள் பொருட்டுக் காவல் செய்வதில்லை. என்னையெனின் களவு செய்வா ரின்மையாலாம். வறுமையா லிரப்பாருமில்லை. எனவே கொடுப்பாருமில்லை யென்ப திதன் தேர்ந்த பொருள். இத்தகைய தேர்ந்த அருங் கருத்துகளையும் கொள்கைகளையும் பல்லாண்டுகட்கு முன்னரே கம்பன் கண்டார். நவீனம் நவீனமெனப் படுபவை வெகு காலத்திற்கு முன்னரே பெரியாரின் கருத்திற்றோன்றி வெளிப் போந்தவை யென்பது தேற்றம். பழைமையிற் புதுமை காணும் நோக்கொடு எவற்றையு மாராயின் பல உயரிய கருத்துக்களைக் காணலாம். கற்றறிந்த பெரியோர் நமக்கு விட்டுக் சென்ற நூல்களை இந்நோக்கொடு ஆராய்தலெத்துணை சிறப்பினதாகு மென்பது அறியக் கிடக்கின்றது. இது போழ்து புதியனவாகத் தோன்றுபவை முன்னரே உண்டென்பது இவ்விராமயண ஆராய்ச்சியால் தெரிந்து கொள்ளலாம்.



# உலகம்—ஒரு நாடக மேடை

(ஆரியூர்-வ பதுமநாப பிள்ளை.)

நீல வானவீதியிலே உல்லாஸமாக பவனி வந்துகொண்டிருந்த மோகன சந்திரனைக் கண்டு மகிழ்ச்சி பொங்கிய கடலரசி, அலைக்கைகளை வீசி அனந்த ஆரவாரம் செய்துகொண்டிருந்தாள். அவ்வேளையிலே, திருவல்லிக்கேணிக் கடற்கரையிலே, நிலவொளியால் பேரழகு பெற்று விளங்கிய வெண் மணல் தரையிலே, சுமார் நாற்பது வயது மதிப்புடைய ஒருவர் அமர்ந்திருந்தார். அன்று பகற்பொழுது முழுதும் ஆபீசில் ஏற்பட்ட 'எக்ஸெட்ரா ஹெவி—வொர்க்'கினால் விளைந்த சிரமத்தைத் தீர்த்துக் கொள்வதற்காக தனிமையின் இனிமையை அனுபவிக்கும் ஆர்வப் பெருக்குடன் 'மெரினா'வை அடைந்த அந்த கோபாலசாமி நாயுடு, ரேடியோவையும் ஜனக்கூட்டத்தையும் தாண்டி வெகுதூரம் சென்று ஏகாந்தமானதொரு இடத்தில் அமர்ந்துகொண்டிருந்தார். மனித இனத்தினின்றும் விலகியிருந்து சிறிது நேரமேனும் தனிமையை அனுபவிக்க வேண்டுமென்பது அவரது எண்ணம். ஆனால், மனிதர் எண்ணியது எண்ணியபடியே நிறைவேறி விட்டால், இந்த உலகம் எதற்காக இருக்கிறது? கடவுள் தான் எதற்கிருக்கிறார்? அந்த இடத்திலுங்கூட அவர் ஏகாந்த இன்பத்தை அனுபவிக்க முடியாதபடி எங்கிருந்தோ வந்து சேர்ந்தார், அவரது நெருங்கிய நண்பராகிய இராமசாமி நாயுடு. ஏகாந்த இன்பத்தை நாடிவந்த கோபாலசாமி நாயுடுவுக்கு, 'கண் மூடி மௌனி'யாகி சமாதி நிஷ்டையில் ஆழ்ந்துவிடக் கூடிய சக்தி இல்லை. எனவே, அதன் பின் அவருக்கும் அவரது நண்பருக்குமிடையில் நடைபெற்ற சம்பாஷணையைக் கவனிப்போம்:—

"என்ன, கோபு! ஏது இன்றைக்கு இவ்வளவுதூரம் வந்து விட்டாய்? என்னவோ தீவிரமான சிந்தனையில் ஆழ்ந்திருப்பது போல் தோன்றுகிறதே! என்ன விசேஷம்? என்னிடத்தில் சொல்லக் கூடியதாயிருக்குமோ?"

"என்ன சொல்லக் கிடக்கிறது? என்னைப் போன்ற மனிதர்கள், இந்த உலகத்தில் வாழ்வதற்குச் சிறிதும் தகுதியற்றவர்கள். வர வர இந்த உலகம் எனக்குக் கொஞ்சங்கூட பிடிக்கவேயில்லை. இந்த உலகத்தைத் தொலைத்துத் தலை முழுகிவிட்டு மனிதப் பூண்டேயில்லாத வேறு எந்த இடத்திற்காவது ஓடிப்போய் விடலாமா வென்றுகூட, அடிக்கடி நான் நினைப்பதுண்டு. இந்த நன்றி கெட்ட உலகத்தின் மண்ணை மிதிக்காமல், வேறு எங்காவது ஓடிப் போய்விட வேண்டுமென்று எனது மனம் மிகவும் துடிதுடித்துக் கொண்டிருக்கிறது. இதோ இந்த பரந்த கடலிலாவது நீல வானத்திலாவது தன்னந்தனியாக வசிக்கக் கூடிய சக்தி மட்டும் எனக்கிருந்தால், எவ்வளவு நன்றாயிருக்கும்! இந்த உலகத்தில், இந்த மனித ஜன்மம் இன்னும் எனக்கு எதற்காக?"

"எண்ணரிய பிறவி தனில் மானிடப் பிறவிதான் யாதினும் அரிதரிது காண்; இப் பிறவி தப்பினால் எப் பிறவி வாய்க்குமோ ஏது வருமோ அறிகிலேன்"—என்று தாயுமானவர் கதறிப் புலம்பியிருப்பது உனக்குத் தெரியாதா? கடவுளால் அளிக்கப்பட்ட மகத்தான பாக்கியமாக மனிதப் பிறவியை, நீ இப்படி வெறுத்துப் பேசலாமா?"

"அந்தக் கடவுள் எனக்கு மனிதப்பிறவி கொடுப்பதற்கு முன்பு, என்னை மட்டும் ஒரு வார்த்தை கேட்டிருந்தால், "ஸ்வாமின்! தங்களுக்கு அனந்த கோடானு கோடி நமஸ்காரங்கள் சமர்ப்பிக்கிறேன். ஸம்ஸார ஸாகரத்தில் விழுந்து பலவகைப்பட்ட கவலைகளால் பெரிதும் அலக்கழிக்கப் பட்டுத் தவித்து கரையேறுங் காலத்தை எதிர்பார்த்து பலவகைப்பட்ட தளைகளால் கட்டுண்டு கலங்கிக் கிடக்கும் மனிதப் பிறவி மட்டும் எனக்கு வேண்டவே வேண்டாம். பூரண—சுதந்திரத்தைச் சிறிதும் பறிகொடுக்காமல் நீல வான வீதியில் சுயேச்சையாகப் பறந்து திரியும் ஏதேனும் ஒரு பறவைப் பிறவியை எனக்குக் கொடுத்தாலே போதும்"—என்று வேண்டிக்கொண்டிருப்பேன். என்னைப் போன்றவர்களுக்கும் இந்த உலகத்திற்கும் ஏழரைநாட்டான் பொருத்தந்தான்! இப்பொழுது, இந்த உலகம் எனக்குக் கொஞ்சங்கூட பிடிக்கவேயில்லை. எல்லாக் கட்டுகளையும் அறுத்துக் கொண்டு ஏகாங்கியாய்ப் புறப்பட்டு எங்கேனும் போய்விடலாமா என்று யோசித்துக்கொண்டிருக்கிறேன்."

"இதற்குள் ஏன் உனக்கு இவ்வளவு வைராக்கியம் பிறந்து விட்டது? யாராவது சாமியார் உபதேசம் பண்ணிவிட்டுப் போய்விட்டாரா என்ன?"

"சாமியாருமில்லை; கீமியாருமில்லை. "...........சற்றேனும்—ஏறுமாறாக இருப்பாளேயாமாகில்—கூறாமல் சந்யாசம் கொள்"—என்ற ஔவை மொழியே, இப்பொழுது என்னைத் தூண்டி விட்டுவிட்டது. போன மாதம் முழுதும் உழைத்த உழைப்புக்குப் பிரதிபலனாகக் கிடைத்த சம்பளத்தை வாங்கிக் கொண்டு இன்று வீட்டுக்குப் போனேன். அந்த பணம் முழுவதையும்—அணா பைசா உட்பட—கண்டித்துக் கேட்டு வாங்கிக் கொண்டு

விட்டாள் எனது 'கிருக தேவதை'! எனது சொந்தச் செலவுக்காக ஒரு பத்து ரூபாயையாவது திருப்பிக் கொடுக்கும்படி, எவ்வளவோ நயமாக—அழாத குறையாக—அந்த தேவதையைக் கெஞ்சிக் கேட்டுப் பார்த்தேன். அப்பொழுது அவளது 'திருமுக தரிசன'த்தைக் கண்டவுடன், வாய் திறக்கத் துணிவின்றி தலை குனிந்து கொண்டேன். "உங்க பணத்தை நீங்களே வச்சிக்கிட்டு குடும்பத்தை நடத்துங்கோ. எனக்கு வேறே போக்கிடம் இல்லாம போயிடலே. நாளைக்கே நான் எங்க தாயார் வீட்டுக்குப் போயிடறேன்"—என்றாளவள். சம்பளத்தைத் தவிர 'கிம்பள'மாக ஏதாவது மேல் வரும்படி சம்பாதிக்க ஆசைப் பட்டால், 'உள்ளதும் போச்சே, நொள்ளைக் கண்ணு!'—என்கிற கதையாய், இருக்கிற உத்தியோகத்தையும் இழந்து நடுத்தெருவில் நிற்க நேர்ந்து விட்டால் என்ன செய்வது? 'நெற்றி வேர்வை நிலத்தில் விழ உழைத்து' ஏரோட்டிப் பயிரிட்டுச் சம்பாதிக்கா விட்டாலும், 'சுய—மரியாதை'யை வீட்டில் மூட்டை கட்டி வைத்துவிட்டு மேலதிகாரிக்குப் பயந்து உள்ளுக்குள் நடுங்கிக் கொண்டே பேனா பிடித்த கையாலும் மூளையாலும் உழைக்கிற உழைப்பின் கடுமையான சிரமம் எனக்கல்லவா தெரியும்! அம்மாதிரி உழைக்கிற எனக்கு, 'டிப்பன்' முதலிய சில்லரைச் செலவுகளுக்காக கொஞ்சம் பணம் சொந்தத்தில் வைத்துக் கொள்ளக்கூட சுதந்திரமில்லையா என்ன?"

"சரி, சரி! ரொம்ப சரி!! உன் மனைவி பகவத்கீதையைப் படித்துத் தேர்ந்த பரம பண்டிதையாக இருப்பாள் போலிருக்கிறது. 'கர்மத்தைச் செய்ய நீ கடமைப் பட்டவனேயன்றி, அதன் பலனை எதிர்பார்க்க உனக்கு உரிமை இல்லை'—என்று கண்ணபிரான் கீதையில் அறிவுறுத்தி யிருக்கிறாரல்லவா? அதனால் தான், அவள் உனது கடமையாகிய கர்மத்தைச் செய்யும்படி தூண்டி விட்டுவிட்டு, அதன் பலனில் நீ ஆசை கொண்டு விடாதபடி தடுத்து உன்னை அடக்கி ஆட்கொண் டிருக்கிறாள் போலும்! ஆணாய்ப் பிறந்த நாமெல்லோரும், உழைத்து உழைத்துக் காலங் கழிக்கக் கடமைப் பட்டவர்கள்; ஆனால், மனையின் சர்வாதிகாரியாக விளங்குவதால் 'மனைவி' எனும் சிறப்புப் பட்டத்தைப் பெற்றுள்ள நமது 'கிருக தேவதைகள்' சுக—போகங்களை அனுபவிப்பதற்காகவே ஆண்டவனால் சிருஷ்டிக்கப் பட்டவர்கள். ஒற்றைக் காலில் நின்று கடுந்தவம் செய்தாலும், 'மனைவன்' என்ற பட்டப் பெயரைச் சம்பாதித்துக் கொள்ள உன்னால் முடியுமா? 'பெண்களெல்லோரும் பராசக்தியின் அம்சம் கொண்டவர்க'ளென்று பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரே கூறியிருக்கிறாரல்லவா? அவ்வளவு மகிமை பொருந்திய தேவிகள் மட்டும் இல்லாவிட்டால், இந்த அழகிய உலகம் ஏது? மக்கள் தான் ஏது?"

"அது சரி! தற்காலத் தமிழ் நாட்டிலுள்ள 'கிருக—தேவதைகள்' பராசக்தி தேவியின் அதிகாரத்தை வகிக்க மட்டும் ஆசைப் படுகிறார்களே, அதுபோல் அவர்கள் தேவியின் அபாரக் கருணையிலும் கொஞ்சமாவது மேற்கொள்ள வேண்டாமா? எது எப்படியானாலும், பொழுது முழுவதும் சிறிதும் சோம்பலின்றி உழைத்தும் ஆபீசிலும் வீட்டிலும் கொஞ்சமேனும் அமைதியின்பத்தை அனுபவிக்க முடியாமல் எக்காலத்திலும் ஒரு அடிமையைப் போல் மனம் கலங்கிநிற்கும் எனக்கு, இந்த உலகம் கொடிய நரகமாகவே தோன்றுகிறது. "அருளில்லார்க்(கு) அவ்வுலக மில்லை; பொருளில்

லார்க்(கு) இவ்வுலக மில்லாகி யாங்கு''—என்று நாயனூர் கூறியது போல் காலம் முழுவதும் பொருள் முடையால் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் எனக்கு, இந்த உலக வாழ்க்கையால் என்ன பயன்? இந்த பாழும் மண்ணுலகத்தைப் பற்றி எண்ணும் போதெல்லாம், என் வயிறு பற்றி எரிகிறது. ''ஐயோ, என்ன உலகமடா இந்த மண்ணுலகம்? ஒழியாத ஏமாற்று, ஒழியாத வஞ்சனை, ஒழியாத கவலை! ஸாரமில்லை; ஸத்து கிடையாது; உள்ளூரப் பூச்சியரித்துக் கொண்டிருக்கும் வாழ்க்கை. மனித ஜாதிக்குத் தீராத நோய் ஒன்று பிடித்திருக்கிறது—மாறாத சாபம்; இறங்காத விஷம்; இதன் பெயர் பணம். மனித ஜாதியைக் கவர்ந்திருக்கும் தெய்விகமாகிய அன்பு என்னும் வலையை அறுத்தெறியும் நீசத்தன்மை கொண்ட எலி ஒன்றிருக்கிறது; இதன் பெயர் பணம். இப்பேய்க்கு வணங்கும்படி மனிதனைத் தூண்டி விடுவது விருப்பம்''—என்று பாரதியார் மனம் கசந்து கூறியிருப்பதை நீ படித்திருக்கிறாயா? அத்தகைய பணப்பேய் தலை விரித்தாடும் கொடிய சுடுகாடு, இந்த உலகம். வறுமைப் பேயின் கொடுமையினால் உடல் வளம் இழந்து உற்சாகங்குன்றி நடைப்பிணமாக ஒடுங்கிநிற்கும் எளியவர்களை, ஆசைப் பேய்களும் வஞ்சனை நாய்களும் பொறாமைக் கழுகுகளும் கூடிக்கொண்டு உயிரோடு கொத்திப் பிடுங்கித் தின்னும் பயங்கரமான—இரத்த மயமான போர்க்களம், இந்த உலகம். மனப்பூர்வமான உண்மையன்பு நீர் வற்றி உலர்ந்து ஆசைக் கனல் வீசி எரிக்கும் கொடிய பாலைவனம், இந்த உலகம். பழங்காலத்திய உலகம் எப்படி யிருந்ததென்பதைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டு மூளையைக் குழப்பிக் கொள்ள இப்பொழுது எனக்கு சாவகாச மில்லை; விருப்பமுமில்லை. இன்றைய நிலைமையைப் பொறுத்த மட்டில், என்னைப் போன்ற மனிதர்கள், இந்த உலகத்தில்—இந்த மனித உடலுடன்—சிறிதேனும் இன்பம் அனுபவிக்கக் கூடுமென்ற நம்பிக்கைக்குச் சிறிதும் இடமில்லையென்பது மட்டும் சர்வ நிச்சயம்.''

''ஏதேது, நீ பேசுவதைப் பார்த்தால், இப்பொழுதே—இங்கிருந்தே—புத்த பகவானைப் போல் துறவு பூண்டு புறப்பட்டு விடுவாய் போலிருக்கிறதே! என் வீணாக நீயாகவே உன் மனத்தைக் கவலைகளால் கலக்கிக் கொண்டு விடுகிறாய்? ''ஆகாயத்துப் பட்சிகளைக் கவனித்துப் பாருங்கள்; அவை விதைக்கிறது மில்லை; அறுக்கிறது மில்லை; களஞ்சியங்களில் சேர்த்து வைக்கிறது மில்லை. அவைகளையும் உங்கள் பரம பிதா பிழைப்பூட்டுகிறார்; அவைகளைப் பார்க்கிலும், நீங்கள் விசேஷித்தவர்களல்லவா?''—என்ற ஏசுநாதரின் அருள் மொழிகளை நீ மறந்து விட்டாயா என்ன?''

''அது சரி; அதனால் தான், இன்றைய உலகத்திலே, நவீன நாகரிக முறையில் உடையணிந்து ஆபீஸ் நாற்காலியில் ஒய்யாரமாக உட்கார்ந்து கொண்டு மின்சார விசிறியின் காற்று வாங்கிக் கொண்டு மேலதிகாரியைப் பற்றிய பயத்துடனும் வீட்டுத் தேவதையைப் பற்றிய கவலையுடனும் 'அடிமை வேலை' பார்க்கும் ஒரு உத்தியோகஸ்தனது வாழ்வைக் காட்டிலும், ஒரு மரத்தின் சிறிய கிளையிலே தனது அருமைக் காதலியுடனும் 'பொன் குஞ்சு'களுடனும் கொஞ்சிக் குலவிக் கொண்டிருக்கும் ஒரு சிறு பறவையின் வாழ்க்கை எவ்வளவோ சிறந்ததென்று கூறுகிறேன். அதோ, அந்த மரக்கிளையில் அமர்ந்து கொண்டிருக்கும் அந்த காக்கைத் தம்பதிகளைக் கவனித்துப் பார்! அவை யிரண்டும், எவ்வித மன வேறுபாடு மின்றி 'சரி—

நிகர்—சமானமாக'வே கொஞ்சிக் குலவிக் குதூகலிக்கின்றன் வல்லவா? எங்கெங்கோ திரிந்து அரும் பாடு பட்டு சம்பாதித்துக் கொண்டு வந்த பொருள்களைத் தன் கையினலேயே செலவழிக்கும் பூர்ண—சுதந்திரத்தை அந்த ஆண் காக்கை பெற்றிருக்கிறது; அதனிடமிருந்து அவ் வுரிமையைப் பெண் காக்கை பிடுங்கிக் கொண்டு விடுவதில்லை. அந்த ஆண் காக்கைக்குத் தனது காதலியிடம் எவ்வித பயமும் சிறிதும் இல்லை. ஆதலின், அத் தம்பதிகளின் வாழ்வு, துன்பக் கலப்பற்ற தனியின்ப வாழ்வாக விளங்குகிறது. அத்தகைய பாக்கியம் மட்டும் எனக்கு வாய்த்து விட்டால், உலக வாழ்க்கையில் நேரும் எப்படிப்பட்ட துயரங்களையும் சகித்து நடந்து கொள்ளக் கூடிய சக்தி எனக்கு உண்டாய் விடும். ஆனல், அப்படிப்பட்ட பாக்கியம், இப் பிறவியில் எனக்குக் கிடைப்பதேது? வீட்டிலிருந்தால் தொல்லையாயிருக்கிற தென்று வெளியில் சென்றாலும், என் கண் முன்பு எதிர்ப்படுவோரில் மிகப் பெரும்பாலோர் கொடிய வஞ்சகர்களாகவும் பேராசைக் காரர்களாகவுமே காணப்படுகின்றனர். களங்கமற்ற மெய்யன்புடைய உத்தம நண்பர்களைக் காண்பது மிக மிக அருமையாக இருக்கிறது. அதனல், இந்த உலகம் எப்பொழுதும் என் கண்களுக்கு பயங்கரமான நரகலோகமாகவே காட்சி யளிக்கிறது."

"அது உன் குறையேயன்றி உலகத்தின் குறையல்ல.

"நிற்கின்றதெல்லாம் நெடுமால் என்(று) ஓராதார்—கற்கின்றதெல்லாம் கடை"—என்ற ஆழ்வார் அருள் மொழியை அறியாததனல் விளைந்த அஞ்ஞானமே அது! வீட்டிலிருக்கும் போது, உனது 'கிருக—தேவதை' உன்மேல் சொல்லம்பு தொடுத்து வீர வாதம் செய்து நிற்கிறதென்று வைத்துக்கொள்; அப்பொழுது, நீ செய்ய வேண்டியதென்ன தெரியுமா? உனது இரு கண்களையும் இறுக மூடிக்கொண்டு—இரு கைகளையும் கூப்பி நின்று கொண்டு—அத் தேவியைக் 'கிருக—நாராயணி'யைப் பாவித்துக் கொண்டு—"வீட்டுப் பெருமாளே! வீட்டுப் பெருமாளே!! எனது அபசாரங்களெல்லாவற்றையும் பொறுத்தருள்வாய்!"—என்று வாய்விட்டுக் கூற வேண்டும். அதற்காக நீ சிறிதும் வெட்கமடைய வேண்டியதில்லை; உண்மையாகவே, உனது 'கிருக—தேவதை'யின் ஹிருதயத்திற்குள்



ஒளிந்துகொண்டிருக்கும் நாராயணனை நோக்கிப் பிரார்த்திப்பதாகவே, அப்பொழுது நீ உன் மனத்திற்குள் பாவித்துக்கொள். உனது மனைவியின் அழகிய உடலும், பகவான் வசிக்கும் கோயில்களுள் ஒன்று தானே! ஆபீசில் வேலை பார்க்கும்போது உனது மேலதிகாரி உன்னைக் கடிந்து பேச நேர்ந்து விட்

டால், அப்பொழுதும் உனது கண்களை இறுக மூடிக் கொண்டு, "ஆபீஸ் பெருமாளே! ஆபீஸ் பெருமாளே!! தெரியாமல் செய்து விட்ட பிழைகளை யெல்லாம், தயவு செய்து மன்னித்தருள வேண்டும்."—என்று வாய்விட்டுச் சொல்லி விடு. எங்கும் நிறைந்து நிற்கும் பெருமாள், அப்பொழுது அந்த ஆபீசை விட்டு வேறெங்கும் ஓடிப் போய் விட மாட்டார். அவ் வேளை யிலே, உனது மேலதிகாரியின் கோபத் தீ அடியோடு தணிந்து போவதுடன் அவ் விடத்தில் உண்டாகக் கூடிய குதூகலச் சிரிப்பினால் நீ மகிழ்வதோடு மற்றவர்களையும் மகிழ்வூட்டலா மல்லவா? அப்படியே, உனக்கு வெறுப் பையோ கோபத்தையோ விளைவிக்கக் கூடிய எவர்—எவ் விடத்தில்—எப் பொழுது உன் கண் முன்பு தோன்றினாலும், அவர்களது ஊன உடம்பைக் கண்டு வெறுப்போ கோபமோ கொண்டு விடாமல், அவர்களது உள்ளத்திற் குள் ஒளிந்து கொண்டிருக்கும் சாந்த சொரூபியான பகவானையே தியா னித்து நிற்கக் கடவாய். அத்தகைய நிலையை மட்டும் நீ அடைந்து விட் டால், இப்பொழுது நரக லோகமாகக் காணப்படுகிற இதே உலகம், அப் பொழுது உனக்கு வீட்டிலும்—வெளியிலும்—நினைத்த போதும்—நினை யாத போதும்—எந் நேரத்திலும்—எங்கெங்கும் 'ஸ்ரீமந் நாராயண தரிச னம்' கிடைக்கக் கூடிய சாக்ஷாத் பரமபதமாகவே மாறி விடுமல்லவா?"

"ஆம்! ஆம்! அதுவே சரி! தங்கமான—இல்லை—வைரமான—இல்லை —மாணிக்கமான யோசனை! யார் யார் எப்படி நடந்து கொண்டால் தான், எனக்கென்ன கவலை? என்னிடத்திலுள்ள குறைகளை முற்றிலும் நீக்கிக் கொண்டு விடக் கூடிய சக்தி இன்னும் எனக்கு வாய்க்காம லிருக்கும்போது இந்த பரந்த உலகத்திலுள்ள மற்றவர்களைப் பற்றி குறை கூற எனக்கு அதி கார மேது? எளிதில் காணப்படும் ஒவ்வொருவர் மனத்திலும் பகவான் ஒளிந்து கொண்டிருக்கும்போது, அவர்களை வெறுப்பதோ கோபிப்பதோ மகத்தான அபசாரமல்லவா? பகவானது திருவுள்ளத்தைப் பல வழிகளி லும் மகிழ்விக்கக் கூடியவாறு நடந்து கொள்ள இந்த உலகில் பற்பல சந் தர்ப்பங்க ளிருக்கும்போது, நான் என் இந்த உலகத்தை வெறுக்க வேண் டும்?"

"அதுதான் சரி! இந்த உலகம், ஒரு பெரும் நாடக மேடை; இதுவே ஒரு பெரிய நிலைக்கண்ணாடி. நாம் கண் கொண்டு—எத்தகைய எண்ணத் துடன்—எவ்வாறு இந்த உலகத்தை நோக்குகிறோமோ, அவ்வாறே அது நமக்குக் காட்சியளிக்கிறது. நாம் அழுதால், அதுவும் அழுகிறது; நாம் சிரித்தால், அதுவும் சிரிக்கிறது. இது தான் இரகசியம். ஆதலால், எப் பொழுதும் சிரித்த முகத்துடனும் மகிழ்ச்சி நிறைந்த மனத்துடனும் இருந்து பழகிப் பார்! அப்பொழுது, இந்த உலகமே உனக்கு ஒரு பெரும் 'ஆனந்த பூங்காவன'மாகக் காட்சியளிக்கும்."



# பாலர்கள் பக்கம்



## சிறு வேதாந்தி

(K. V. S. மணியன் பி. ஏ.)

வைத்தியநாத தேசிகர் குதிரை சவாரி செய்வதில் மிகவும் சமர்த்தர். அவர் பெயருக்கேற்றபடி வைத்தியத்தில் நிபுணர். அதுவே அவருக்கு ஜீவனம். ஒருநாள் காலையில் எழுந்திருந்து ஒரு மருந்து செய்வதற்காக சில மூலிகைகளைச் சேகரிப்பதற்கு தன்னுடைய குதிரையின்மேலேறி நெடுந்தூரம் சவாரி செய்தார். கடைசியில் மூலிகை இருக்குமிடத்தை யடைந்து குதிரையை ஒரு செடியில் கட்டிவிட்டு வேலியோரத்தில் மூலிகைகளைத் தேட ஆரம்பித்தார். பக்கத்தில் ஒட்டர்கள் கல் உடைத்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் வெடி மருந்துகளைக் கொண்டு கல்லை உடைப்பது வழக்கம். திடீரென்று ஒரு வெடி கிளம்பியது. உடனே குதிரை கட்டியிருந்த செடியைப் பிடுங்கிக்கொண்டு ஓரே ஓட்டமாய் ஓட ஆரம்பித்துவிட்டது. பார்த்தார் தேசிகர். குதிரையைப் பின் தொடர்ந்தார். இவரைக் கண்டதும் குதிரை காற்றினும் வேகமாகப் பறந்தோடியது. தேசிகர் தூரத்தில் வரும்போது நிற்கும்; சமீபத்தில் வந்ததும் ஓட்டம்பிடிக்கும். இப்படியாக வைத்தியர் அவிழ்ந்த வேஷ்டியைக் கையில் பிடித்துக்கொண்டு தொந்தி குலுங்க ஓடினார். ஐந்துமைல் தூரம் இருவரும் போட்டிபோட்டுக்கொண்டு ஓடினார்கள். அங்கே பக்கத்திலுள்ளதோர் வயலில் ஒரு சிறுபையன் இந்த வேடிக்கையைப் பார்த்துவிட்டு திடீரென்று குதிரையை வழிமறித்து கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டான். தேசிகர் வந்ததும் குதிரையை அவர் கையில் ஒப்புவித்தான். பெருமூச்செறிய ஓடி வந்த தேசிகர் சிறுவன் சின்னனுடைய உற்சாகம் முகத்தையும் தைரியத்தையும் கண்டு ஆச்சரியமடைந்தார். "அப்பா ரொம்ப சந்தோஷம். நான் களைத்துப்போன சமயத்தில் நீ சாமர்த்தியமாகக் குதிரையைப் பிடித்துக் கொடுத்ததற்கு என்ன பதிலுபகாரம் செய்யப்போகிறேன்" என்றார் தேசிகர் சட்டைப்பைக்குள் கையைப் போட்டவண்ணம்.

"ஐயா! எனக்கு ஒன்றும் வேண்டாம்" என்றான் சிறுவன்.

தேசிகர்:—ஒன்றும் வேண்டாமா? இந்நேரம் வரையில் இந்தக் காட்டில் என்ன செய்துகொண்டிருக்கிறாய்?

சிறுவன்:—காலையில் களை பிடுங்கிவிட்டு ஆடுகளை மேய்த்துக் கொண்டிருக்கிறேன்.

தேசிகர் :—இந்த வேலையைச் செய்வதில் உனக்கு மனதில் சந்தோஷந் தானா?

சிறுவன் :—ஆஹா! தடையென்ன. எப்பேர்ப்பட்ட குளிர்ந்த காற்று வீசுகிறது பாருங்கள்.

தேசிகர் :—அப்படியானால் உனக்கு விளையாடுவதில் விருப்பமில்லையா?

சிறுவன் :—நான் செய்வது கடினமான வேலையல்ல. இதுவும் ஒரு விளையாட்டுதான்.

தேசிகர் :—உன்னை இப்படி வேலை செய்யும்படி சொன்னது யார்? அவர் பெயரென்ன?

சிறுவன் :—என்னுடைய தகப்பனார்தான். அவர் பெயர் வீரமுத்து.

தேசிகர் :—அவர் எங்கே குடியிருக்கிறார்?

சிறுவன் :—அதோ அங்கே மரங்க ளடர்ந்திருக்கும் தோப்பிலிருக் கிறது எங்கள் வீடு.

தேசிகர் :—உன் பெயர் என்ன? உன்னுடைய வயது எவ்வளவு?

சிறுவன் :—என் பெயர் சின்னான். வருகிற ஆனியோடே பன்னெண்டு வயசு.

தேசிகர் :—நீ இப்போது எவ்வளவு நேரமாக இங்கு வேலை செய்து கொண்டிருக்கிறாய்?

சின்னான் :—காலை ஆறுமணியிலிருந்து.

தேசிகர் :—அப்படியானால் உனக்கு இப்போது பசியெடுக்கவில்லையா?

சிறுவன் :—ஆம். இப்போது வீட்டுக்குப் போவேன். வயிறார கஞ்சி குடிப்பேன்.

தேசிகர் :—இப்போது உன் கையில் ஒரு அணா இருந்தால் என்ன செய்வாய்?

சிறுவன்:—தெரியாது. இதுவரையில் என்னுடைய கையில் அவ்வளவு இருந்தது கிடையாது.

தேசிகர் :—நீ விளையாடுவதற்கு விளையாட்டுச் சாமான்கள் வாங்குவ தில்லையா?

சிறுவன் :—இல்லை. என் தம்பி செய்யும் சாமான்களைக்கொண்டே விளையாடுவோம்.

தேசிகர் :—வேறு சாமான்கள் உனக்கு வேண்டாமா?

சிறுவன் :—வேண்டாம். ஏனெனில் எனக்கு நேரம் கிடையாது. காலை யில் ஆடுமாடுகளை ஓட்டிவந்து மேய்ப்பேன். பிறகு மாலையில் அவைகளுக் குத் தண்ணீர் காட்டிக் கட்டிவிட்டு கடைக்குப்போய் சாமான்கள் வாங்கி வருவேன். இவையெல்லாம் எனக்கு விளையாட்டுதான்.

தேசிகர் :—தம்பீ! உன்னுடைய கையில் காசு இருந்தால் கடைக்குப் போகும்போது காப்பி குடிக்கலாம். ஆரஞ்சிப்பழங்கள் வாங்கித் தின்னலா மல்லவா?

சிறுவன் எங்கள் வீட்டில் மாம்பழமும் பலாப்பழமும் கிடைக்கின்றன. சில சமயங்களில் ஆரஞ்சும் வாங்குவதுண்டு. காப்பியைப்பற்றி எனக்கு அக்கரை கிடையாது. பாட்டி எப்போதாவது அரையணு ஒரணு கொடுப் பாள். அப்போது பார்த்துக்கொள்ளுவேன்.

தேசிகர் :—(தன்னிடமுள்ள அழகிய கத்தியையாவது அவனுக்குக் கொடுக்கலாமென நினைத்து) குச்சுகள் செடிகள் முதலியவைகளை நறுக்க உனக்கு கத்தி வேண்டாமா?

சிறுவன் :—ஐயா! என்னிடம் ஒன்றிருக்கிறது. தம்பிக்குமிருக்கிறது.

தேசிகர் :—உன் செருப்புகள் கிழிந்துவிட்டதே! புதிதாக ஒரு ஜோடி வேண்டாமா?

சிறுவன் :—தினந்தோறும் போட்டுக்கொள்ள இவை. தேர் திருவிழா விற்குப் போட்டுக்கொள்ள புதிதாக ஒன்று வைத்திருக்கிறேன்.

தேசிகர் :—உனக்கு குடையில்லைபோலிருக்கிறதே?

சிறுவன் :—அவசியமில்லை. சிறு தூறலில் நனைந்தால் பாதகமில்லை. அதிக மழை பெய்தால் நிற்கும்வரையில் ஒரு குடிசையிலோ மரத்தடியிலோ தங்கிவிட்டு வீட்டுக்குப் போவேன்.

தேசிகர் :—காட்டில் வேலைசெய்யும்போது பசியெடுத்தால் என்ன செய்வாய்?

சிறுவன் :—கம்பு முதலிய கதிர்களையும் கிழங்குகளையும் தின்பேன். அதுவும் அகப்படாவிட்டால் அதைப்பற்றி நினையாமல் என் வேலையைச் செய்துகொண்டே இருப்பேன். மாலையில் சாப்பிடுவேன்.

தேசிகர் :—தம்பீ! உன்னைப்போல் இதுவரையில் நான் ஒருவரையும் கண்டதில்லை. நீ இச் சிறுவயதில் பெரிய வேதாந்தியாய் விளங்குகிறாய். ஆனல் நான் சொல்வது உனக்கு ஒன்றும் விளங்காது.

(சின்னன் முகமலர்ச்சியோடு சிரிக்கிறான்)

தேசிகர் :—போதுமென்ற மனமே பொன்செய்யு மருந்து என்ற உண்மையை யறிந்துகொண்டாய். நீ படித்திருக்கிறாயா?

சிறுவன் :—நெல்லடிப்பு முடிந்ததும் எங்கப்பா என்னை பள்ளிக்கூடம் போகச்சொல்லுகிறார்.

தேசிகர் :—அப்பா சந்தோஷம். நான் ஊருக்குப்போய் உனக்கு அரிச் சுவடி புத்தகமும் கற்பலகையும் அனுப்புகிறேன். இதை உன் தகப்பனு ருக்குச் சொல். போய்வருகிறேன். ஆடுமாடுகளைப் பார்த்துக்கொள்.

சிறுவன் :—நல்லது. வந்தனம்.

தேசிகர் தனது சொந்த ஊருக்குத் திரும்பிவந்து ஜனங்களுக்கு இனம் வைத்தியம் செய்து வந்ததைக்கொண்டு திருப்திகரமாக வாழ்ந்து வந்தார்.

---




# 54. தான்யச் சட்டமும் தாராள வியாபார முறையும்

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

முதலாவது சீர்திருத்தம் பார்லிமெண்டின் அமைப்பு முறையில் ஏற்பட்டும் கூட, நிலச்சுவான்தார்களின் ஆதிக்கமும் செல்வாக்கும் பார்லிமெண்டில் ஏற்படவில்லை. பார்லிமெண்டில் மாறுதல் கொஞ்சநஞ்சம் ஏற்பட்டாலும் கூட அது பொதுஜன சபையான House of commonsல்தான். பிரபுக்கள் சபையான House of Lordsன் மனப்போக்கு எளிதில் மாறுவதாக இல்லை. தவிரவும் அந்த பிரபுக்களின் செல்வாக்கு பொதுஜன சபையிலும் இருந்தது. சாதாரண ஜனங்களின் செல்வாக்கில் பார்லிமெண்டு வந்தது வெகு சமீபகாலத்தில்தான் என்பது முன்பு குறிப்பிடப்பட்டது. சமீப காலத்திய பொதுஜன செல்வாக்கும் மிகச் சொல்பமானதே யென்பதும் முதலாளி செல்வாக்கே ஊடாடுகிற தென்பதும் குறிப்பிடப்பட்டது.

இங்கிலாந்தில் விவசாய சௌகரியம் கிடையாது. செய்யக்கூடிய சொல்ப விவசாயமும் ஏராளமான சிலவில்தான் நடக்கவேண்டும். அதை யொட்டி, பல விவசாய நிலங்கள் மேய்ச்சல் தரை நிலங்களாக மாறின போக்கு, இத் தொடர்களின் ஆரம்பப் போக்கில் விளக்கப்பட்டது. ஆனாலும் பிற்காலங்களில் ஏற்பட்ட விவசாயப் புரட்சி காரணமாக, பரிசோதனைகளின் போக்கில் கொஞ்ச தானியவிளைவுக்கு ஹேதுவாயிற்று. இந்த கொஞ்ச விளைவு தானியத்தைக்கொண்டு எதேஷ்டமான லாபத்தை யடைந்துவிட விரும்பினர். பொதுவாக தேசம் பூராவுக்கும் போதாததென்ற காரணத்தினால், பிறதேசங்களிலிருந்து தானியம் வந்து தீரவேண்டி யிருந்தது. அப்படி வந்த தானியங்களின் விலை வெகு மலிவாக இருந்தது. அந்த காரணத்தினால் உள்ளூர் தானியங்களின் விலைகளும் குறைய வேண்டி வந்தது. அதனால் பார்லிமெண்டில் செல்வாக்குள்ள நிலச்சுவான்தார்கள் தங்கள் சுயநலத்தை நாடியவர்களாய், தங்களுக்கு கட்டி, நஷ்ட மில்லாமல் கோரிய லாபம் கிடைக்கும் அளவுக்கான விலைக்கு சமமாக வரும்படி செய்ய, அயல்நாட்டு தானியங்களின்மேல் வரி விதித்து விட்டனர். இத்தகைய வரியைத்தான் பாமரஜனங்கள் "தான்ய வரிகள்" (corn laws) என்று முறையிட்டனர். தொழில்முறைப் புரட்சியினால் நாணயச் செலாவணி ஜாஸ்தியானபோது விலைகளையும் ஏற்றிவிட்டனர். அதே தொழில் முறைப் புரட்சியின் காரணமாகவே உண்டான போட்டியில் சம்பளக் குறைவு ஏற்பட்டபோது ஏழைத் தொழிலாளிகள் தான்யங்களை வாங்கக் கஷ்டப்பட்டனர். அவர்களுடைய

கஷ்டங்களைக் கவனிப்பாரில்லை. (பர்மா அரிசி, இந்துசீன அரிசி இறக்குமதி விஷயம் வாசகர்களின் மனதில் இருக்கலாம். இந்திய அரிசி வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுவதற்கும் தடைகள் உண்டான நிலைமையில் நமது நிலச் சுவான்தார்களின் பரிதாப நிலைமையும் சிந்தித்துணரற்பாலது.) ஏழைகளுக்கு உணவுப்பாடு பெரும்பாடாகி விட்டது. செல்வப் பெருக்கத்தில் ஏழைகளுக்குப் பிண்டம் பெருங்காய மாகிவிட்டது.

ஏழைகளிடத்தில் அனுதாபமும், காருண்யமும் நாளுக்கு உணரப்பட்டு, சீரியரின் மனது சிதைவுற்றது. இப்படியான இரு சீரியர்தான் ஜான் பிரைட (John Bright)டும், ரிச்சர்ட் காப்டன் (Richard Cobden) என்பவரும். அவர்கள் இருவருடைய முயற்சியில் தோன்றியது ஒரு சங்கம். அதுதான், "தான்யவரி எதிர்ப்புச் சங்கம்" (Anti-corn law league) ஆகும். அச் சீரியர் இருவரும் தொழிலாளிகள். அவர்கள் இருவரும் "ஆகாரப் பொருள்களின் மீது வரி விதித்தலே கூடாது: அவ்விதம் செய்வது ஏழைகளின் வயிற்றி லடித்தது போலாகும்" என்பது போன்ற அபிப்பிராயங்களை தங்கள் சங்கத்தின்மூலம் கிளர்ச்சியுடன் கூடிய பிரசாரம் செய்தனர். இருவரும் உணர்ச்சியும் வாக்குவன்மையும் படைத்தவர்கள். நிலச் சுவான்தார்களோ என்றால் அவ் வரிகளை ரத்து செய்து விட்டால் தாங்கள் அழிந்தே போய்விடுவோம்" என்று கிளர்ச்சிகளை எதிர்த்தனர். ஆனால் "தனிப்பட்ட ஒரு கோஷ்டியினர் நன்மையை உத்தேசித்து பெரும்பாலான ஏழைமக்கள் கஷ்டப்படுவது அதிக்ரமமும் அநியாயமுமானது" என்று பொது ஜனங்கள் உணர்ந்து விட்டனர்.

அப்போது தேச நிர்வாகத்தை நடத்திய பீல் என்பவர் ஆரம்பத்தில் தான்ய வரிக்கு ஆதரவு செய்பவராக இருந்தும், நிலைமையையும், சந்தர்ப்பத்தையும், பொதுஜன உணர்ச்சியையும் அனுசரிக்க வேண்டியவராகி, தாராள மனதுடையவராய் தான்ய வரியை ரத்து செய்ய உடன்பட்டார். இதற்கு சாதகமாக ஐர்லந்தில் ஏற்பட்ட ஒரு கோரமான பஞ்சம் இருந்தது. ஐர்லந்தின் பெருவாரியான ஏழை மக்களுக்கு பிரதம உணவுப் பொருள் உருளைக்கிழங்கு ஆக இருந்தது. விதி வசத்தால் எதிர்பாராத விதமாய் உருளைக்கிழங்குப் பயிருக்கு ஒருவித பூச்சியின் மூலம் பூரா அழிவு ஏற்பட்டு விட்டது. உணவின்றி வாடித் தத்தளித்தனர். பஞ்சக்கஷ்ட நிவாரணத்திற்கு, நயமான பிறநாட்டு தானியங்களை வரவழைப்பதற்கு தானிய வரிச்சட்டம் சத்துருவாக இருந்தது. அதற்கு ஆதாரமான நிலச் சுவான்தார்களோ, "வஞ்சகச் செல்வரடி, அவர் வயிற்றுக்கும் உண்ணாரடி" என்றபடி இரக்கமற்ற கடினச்சித்தம் கொண்டவர்களா யிருந்தனர். நிலைமையை யுணர்ந்த பீல் தன் கொள்கையைக் கைவிட்டு தான்ய வரிச்சட்டம் தள்ளுபடியாவதற்கு உழைத்தார். எவ்வளவு முயன்றும் ஐரிஷ் மக்களின் பஞ்சத்தின் கொடுமையைத் தவிர்ப்பது கஷ்டமானதைக் கண்ட பீல், தான்யவரிச் சட்டத்தைத் தள்ளுபடி செய்ய தானே தீர்மானம் கொண்டுவந்தார். ஜனங்கள் உண்ண வழியின்றித் தவிக்கும்போது, நிலச்சுவான்தார்களின் லாபத்தை பலப்படுத்துவது அசுரத்தனம் என்று நினைத்து விட்டார். அவர் தாராள சிந்தனையற்ற "டோரி" என்ற பெயரை வெறுத்து "மிதவாதி" என்று பொருள்படும் "கன்ஸர்வேடிவ்" என்ற பெயரைத் தன் கக்ஷிக்கு இட்டுக்கொண்டார். அவர்களுக்கு இந்த விஷயமாக, தான்ய வரியைத்

தளளுவது நியாயமில்லை என்று பட்டும், பீல் துணிந்து, தீர்மானங்கொண்டு வந்தது பெருமையே. (இதை நமது நாடுகளிலும் கக்ஷித்தலைவர்கள் அனுசரித்து நடக்கும் காலம் சமீபத்தில்தான் வந்து உதயமாகியிருக்கிறது என்பது தற்சமய நிர்வாகத்தில் பலவித புனிதத் தன்மைகளில் ஒன்றாகும்.)

1846-ல் பீல் தான்யவரியைக் குறைத்து பெயரளவுக்கு மட்டும் உள்ளதாகச் செய்துவைத்தார். அதன்மூலம் நயமான விலையில் கிடைக்ககூடிய தானியங்களை வாங்குவதற்கு ஜனங்களுக்கு சௌகரியமாக இருந்தது. இதற்கே எதிர்ப்பு பலமாகஇருந்து பெஞ்ஜமின் டிஸ்ரேலி என்பவர் தலைமையில் ஏற்பட்டு கஷ்டமும் உண்டாயிற்று. ஒருசமயம் பீல் நிர்வாகத்தைவிட்டு ராஜிநாமாச்செய்யவும் நேர்ந்தது. நேர்மையுடன் முயன்றார் என்ற காரணத்தினால் பீலுக்கு ராணியுடைய ஆதரவும் இருந்ததாம். கக்ஷியும் நாளடைவில் வலுப்பட்டது. இதிலிருந்து செல்வநிலை சம்பந்தமான இரு கக்ஷிகள் தோன்றின. தான்ய விஷயம் வியாபாரமாகக் கருதப்பட்டு, உள்நாட்டு வியாபாரம், கைத்தொழில் தழைத்தோங்குவதன் பொருட்டு,வெளிநாட்டுப் போட்டியை காப்புவரி மூலம் தடுக்கவேண்டும் என்பது ஒரு கக்ஷி. இதற்கு காப்புவரிக் கக்ஷி அல்லது தடை வியாபாரக்கக்ஷி என்று பொருள்படும் Protectionists என்று பெயர் உண்டாயிற்று. மறு கக்ஷிக்கு "தாராள வியாபாரக்கக்ஷி" என்று பொருள்படும் "Free traders என்றும் பெயர் கொடுக்கப்பட்டது. இந்த இரண்டு கக்ஷிகளுக்கும் பொதுவாக சாதக பாதகமான அபிப்பிராயங்கள் எக்காலத்திலும் உண்டு. கைத்தொழிலில் அபிவிருத்திக்கு ஆரம்பித்து முன்னேற விரும்பும் ஒரு ஜனநாயக அரசாங்கம், இந்த தாராள வியாபாரக் கொள்கையை விரும்பாது. ஏனெனில் பிறநாட்டு மலிவான விலையில் போட்டி யிடக்கூடிய வியாபார சாமான்கள் அத் தேசத்திய கைத்தொழிலைக் கொன்றுவிடும். இதை யொட்டி இம்மாதிரியான பிறதேச சாமான்களை காப்பு வரியின் மூலம் தடை செய்ய முயற்சி செய்யப்படும். (காதி தலையெடுக்காத நிலைமைக்கு ஒருவிதத்தில் பிறநாட்டு மலிவான துணிகளின் விற்பனையும் காரணமாகும் அல்லவா? நமது நாட்டில், அரசாங்க வரும்படிக்கென பெயர் கொடுத்து, தீக்குச்சி ஸோப் போன்ற தொழில்களுக்கும் வரி விதிக்கப்படுவது சிந்திக்கவேண்டிய விஷயமாகும்.)

தாராள வியாபாரக்கக்ஷியினர், பொதுஜன நன்மையைக் கோரி, அவர்களுக்கு சாமான்கள் மலிவாகக் கிடைக்க வேண்டுமானால் தாராள வியாபாரமே வேண்டுமென வாதிப்பர். (இதே காரணத்தை பர்மா, சைகோன் அரிசி சம்பந்தமாக, நிர்வாகிகள் கொஞ்ச காலத்திற்கு முன்பு சொன்னது பத்திரிகை படிக்கும் அன்பர்களுக்கு ஞாபகம் இருக்கலாம்.) வியாபாரக் கொள்கையில் பீல் தாராள வியாபார முறைக்கு ஆதரவு கொடுக்கும் போக்கு இல்லாதவராயினும் தான்யவரி விஷயத்தில் தாராள சிந்தனையும் பெரும் போக்கும் படைத்தவராக இருந்தார். அதனால் முன்னைய தொகுதிகளில் ஐர்லந்து சம்பந்தமாக சிரத்தை யெடுத்த கிளாட்ஸ்ட்டன் பீலின் கக்ஷியில் சேர்ந்து அந்த கோஷ்டியை வலுப்படுத்தினார். பிறகு கக்ஷி வலுப்பட்டு பிரதம மந்திரியாகவும் வந்து தன்னால் முடிந்த சேவையைச் செய்து புகழ்பெற்றார்.

இந்த கிளாட்ஸ்ட்டன் சேனை சம்பந்தமாக சீர்திருத்தம் செய்து, ஒவ்வொரு ஜில்லாவுக்கும் வெவ்வேறான படை யணிவகுப்புகளை ஏற்படுத்தி

ஞர். அதற்கு முன்பு சேனைத்தலைவர்களே தங்கள் படைகளைச் சேர்த்து அணி வகுத்துக்கொள்வதென்ற முறை இருந்தது. அவரால் நிறைவேற்றப்பட்ட மற்றொரு விஷயம் 1870-ம் வருஷத்திய ஆரம்பக்கல்வி முறைத் திட்டம் ஆகும். அந்த முறையின்படி ஸ்கூல் போர்டுகளை ஏற்படுத்தி, ஒவ்வொரு குழந்தையும் படித்தும், எழுதியும் கணக்குகளறிந்தும் இருக்கும் படியுள்ளதாக ஆகவேண்டும் என்று செய்தார். ஆரம்பக்கல்வி முறையை கட்டாயமாகச் செய்தார். (நமது நாட்டில் கட்டாய ஆரம்பக்கல்வி அமுலுக்கு சென்ற 15-வருஷங்களாகவே கொண்டு வரப்பட்டுக் கொண்டிருக்கிறது. ஒவ்வொருவருக்கும் மிகுந்த சிரத்தை ஆசை மதிப்பு மரியாதை எல்லாம் விசேஷமாக இருந்தும் வந்தது உண்மைத் தேசாபிமானிகள் அறிந்ததாகும்!) எந்த நல்ல திட்டத்திற்கும் எதிர்ப்பு இருந்தது அந்த தேசத்திலும் உண்டென்று சரித்திரம் சொல்லுகிறது.

சுமார் 1885-ம் வருஷத்திய மூன்றாவது சீர்திருத்தச் சட்டத்திற்குப் பிறகு எளியவர்கள் சுதந்திரத்துடன் தேர்தல்களில் தங்கள் வாக்குகளை (வோட்) பதிவு செய்ய சாத்தியமாக இரகசிய வோட்டு முறையை (Vote by ballot)க் கொண்டுவரப்பட்டது. இவற்றை யெல்லாம் தாண்டி, ஏழாவது எட்வர்ட் காலத்திற்கு வந்தபோது பார்லிமெண்டில் பேருக்கு பொது ஜன சபைக்குச் செல்வாக்கு இருந்ததுபோய் உண்மையில் நிச்சயமான செல்வாக்கு ஏற்பட்டது. ஏனெனில் 1909-ல் பட்ஜட் திட்டத்தை பொது ஜன சபை சமர்ப்பித்தபோது, பிரபுக்கள் சபை நிராகரித்து விட்டதின் பேரில் நிர்வாகம் கஷ்டப்பட்டது. அது வரையில் சட்ட மியற்றும் போக்கில் ஒரு மாமூல் இருந்தது. அதாவது எந்தத் திட்டமும் பொதுஜன சபையில் மூன்றுமுறை சமர்ப்பிக்கப்பட்டு, பிரபுக்கள் சபையின் ஆமோதிப்புப் பெறவேண்டும். பிரபுக்கள் நிராகரித்து விட்டால் அத் திட்டம் நிறைவேறாது போய்விடும். அதில் பொது ஜனங்கள் ஆத்திரமடைந்து ஒரு புதிய சட்டம் ஏற்படுத்தினர். அதாவது, எந்த திட்டத்தையும் பொதுஜன சபையில் மூன்றுதரம் நிறைவேற்றி விட்டால், பிரபுக்கள் சபை ஆமோதித்தாலும், ஆமோதிக்கா விட்டாலும் ஒழுங்காக சட்டமாகவே ஆகிவிடும் என்பதாகும். இந்தமாதிரி ஏற்பட்டது 1911ல். இதற்குப் பிறகு நமது சமீப காலத்திற்கு வந்து விடுகிறோம். முக்கிய சில விஷயங்கள் முந்தின தொகுதிகளில் குறிப்பிடப்பட்டு எழுதப்பட்டன. இன்ஷியூரன்ஸ் சம்பந்தமாகச் சில சட்டங்கள் செய்யப்பட்டன. ஆனால் பொதுவாக ஜனநாயக ஆட்சி இருந்தாலும், அனுஷ்டானத்தில் இன்றளவும் பணமூட்டைகளுள்ள முதலாளிகளின் ஆதிக்கமே மேலோங்கி நிற்கிறது என்பது உண்மை. தவிரவும் உள்நாட்டு விஷயங்களில் எவ்வளவு சச்சரவுகள் இருந்தாலும் வெளிநாட்டு விவகாரங்களில் ஏகோபித்த அபிப்பிராயமே உள்ளவர்கள் என்பது இத் தொகுதிகளில் பலமுறைகளிலும் தகுந்த உதாரணங்களால் காட்டப்பட்டது. அதிலும் இந்தியா விஷயத்தில், "சுயஆட்சி கொடுக்கவே கூடாது" என்பதில் அபிப்பிராயபேதமே அவர்களுக்குள் கிடையாது. செல்வாக்கில்லாத சிலர் உதட்டளவில் அனுதாபங் காட்டுவதுண்டு. அதுவும் விசேஷமாக நிர்வாகத்தி லிருப்பவர்களை பயமுறுத்துவதற்காகத்தான். நிர்வாகத்திலிருந்தால் இந்திய விஷயம் தவிடு பொடிதான். இதற்கு விதிவிலக்காக பல கண்ணியமுள்ள ஆங்கிலேயர் உண்டு என்பது உண்மையானு

# கணவன் பெயரைக் கூறலாமா?

(ஜே. டி. ஜே. ஜேக்கப்.)

நம் நாட்டுப் பெண்பிள்ளைகள் தங்கள் கணவன் பெயரைச் சொல்லக் கூச்சப்படுவார்கள். புருஷனின் பெயரைச் சொன்னால் அவனுக்கு மரியாதைக் குறைச்சல் உண்டாகும் என்று அஞ்சி அவனுடைய நாமத்தை உச்சரிக்கவேமாட்டார்கள். 'அகஸ்மாத்தாய்' யாராவது ஒருவர் 'அம்மா, உன் புருஷன் பேரென்ன?' என்று வினவினால் என்ன கூறுவது என்று விழிப்பார்கள். அவன் பெயர் பாலு என்றிருந்தால் பால்காரியை அழைக்கும்போது, 'ஏ இவளே, காப்பியில் ஊத்துவோமே அந்த வெள்ளைத் தண்ணீ இருக்கா?' என்று கேட்பார்கள். சீனி என்றிருந்தால் கடையில் சீனி வாங்கப்போனால், 'இனிக்குமே வெல்லப்பொடி அது இருக்காய்யா?' என்று கடைக்காரனைக் கேட்பார்கள். கணவன் பெயரைச் சொன்னால் தோஷம் என்பது அவர்கள் கருத்து.

கிறிஸ்தவர்கள் இன்னும் மேனாட்டு நாகரிகத்தில் தேர்ந்துவிடவில்லை, 'உன் புருஷன்பேரென்ன?' என்று யாராவது ஒருவர் வினவினால் 'மிஸ்டர் சோ அன் சோ' என்று பதில் சொல்லாமல் எப்படிச் சொல்லுவது என்று திகைப்பார்கள். ஒருநாள் கோவிலில் ஐயரவர்கள் சபையாரைப் பார்த்து, "'ஆசீர்வாதம் வேணும்' என்னும் பாட்டைப் பாடக்கடவோம்" என்று கூறினார். அங்கே ஒருத்தி 'ஊ ஊவும் வேணும்' என்று பாட்டுப் பாடினாள். ஐயர் அவள் வாயைக் கவனித்துக்கொண்டார். 'பார்த்தீர்களா, தன் புரு

---

லும் அவர்களால் சாதிக்க முடியக்கூடியது ஒன்றும் கிடையாது. தீனபந்து ஆண்ட்ரூஸ் போன்றவர்கள் இருட்டு வானத்திலுள்ள சில பிரகாசமான நக்ஷத்திரங்களை போன்று இருக்கின்றனர். அவர்களை யெல்லாம் போன்று லக்ஷக்கணக்கான ஆண்ட்ரூஸ்கள் ஏற்படும்போது நாம் கேட்காமலே ஸ்வயராஜ்யம் கிடைத்து விடும். அதுவரையில், மிதவாத மனப்போக்கை மேற்கொண்டு கேட்டுக்கொண்டே இருந்து, கிடைத்தால், கிடைக்கும்போது வாங்க வேண்டியதுதான். அல்லது துவேஷம் என்பதே எள்ளளவும் இன்றி, உலக க்ஷேமத்தில் கருத்துடையவராய் நடந்து கொள்ளும் "காந்தியடிகள் என்ற சாந்தமூர்த்தி தேர்ந்து காட்டும் அஹிம்சா செந்நெறிதான்" நாம் கடைப்பிடிக்க வேண்டியவர்களாகிறோம் என்பது வெள்ளிடைமலை. தீர்க்க தரிசனம் உள்ள அம்மகான் வெற்றி நம் பாரதமக்களின் வெற்றியே யாகும்!! அடுத்து சென்ற உலக மஹாயுத்தத்தைப்பற்றிய பொதுவான சில குறிப்புகள் எழுதப்படும். அதைப்பற்றி அநேக புஸ்தகங்கள் பல விதங்களிலும் வெளியிடப்பட்டிருக்கின்றன என்பது யாவரும் அறிந்த விஷயம்.

ஷன் பெயர் என்றவுடனே அவள் அதைச் சொல்லிப் பாடவுங் கூச்சப்படுகிருளே! கடவுள் நாமத்தை எத்தனை தடவை தாராளமாய் உபயோகிக்கிருள்' என்ருர். இதேமாதிரி 'ஆண்டவா மோட்சகதி நாயகனே', 'மோசே மோசே' 'தாசன் தானியேல் தலபக்தனே' என்னும் பாடல்களில் குறிப்பிட்ட வார்த்தைகளை சில பெண்பிள்ளைகள் உச்சரிக்கிறதில்லை.

இந்தக் கதையை நான் எழுதத் தூண்டியது என் ஊரில் நேர்ந்த சம்பவமே. புதிதாக கனம் ஞான ஒளிவு ஐயரவர்கள் எங்கள் ஊருக்கு வந்தபோது மற்ற பாதிரிமார்களைப்போலிராமல் ஒவ்வொரு தினமும் சாயங்காலந்தோறும் சபையார் வீட்டைச் சந்திக்கப் புறப்பட்டார். ஒருநாள் சாயங்காலம் மாமரத்தடியிலிருக்கும் வீட்டிற்குப் போனுர். கழனி பிழிந்துகொண்டிருந்த ஒரு பெண் அவரைக் கண்டு சிரித்த முகத்துடன், 'தோத்திரம் ஐயா, இந்த நாற்காலியில் உக்காருங்க' என்று சொல்லி நாற்காலியைத் தூக்கிப்போட்டாள்.

'ஒம் புருஷன் பேரென்ன அம்மா? அவரைக் காணமே, அவர் எங்கே போயிருக்கிருர்?' என்று கேட்டார். அவள் முதல் கேள்விக்கு உத்தரவு கொடாமல் 'அவ்க மாடல் ஸ்கூலில் வேலை செய்ருக. இன்னும் வரல' என்ருள். 'அவர் யாரம்மா? அவர் பேரென்ன?' என்று மறுபடியும் கேட்டார் குருவானவர். 'அவ்க கொஞ்சம் வளந்து, பொதுநிறமாக இருப்பாக. வெள்ளக் கோட்டுதான் போட்டுக்கொண்டு பள்ளிக்கூடத்துக்குப் போவாக' என்று பெயரை மறைத்தே உத்தரம் சொன்னுள். பாதிரியாருக்கு அவளுடைய குறிப்பை அறிந்துகொள்ளக் கூடாமற்போயிற்று. 'அது யாரம்மா? எட்வர்ட் வாத்தியாரா?' என்று யோசனை பண்ணிக்கொண்டே கேட்டார். 'இல்ல, நீங்க சொல்றவர் கிழவன். எங்கூட்டய்யா வாலிபம். வயது முப்பது இருக்கும்' என்று மீண்டும் கூறினுள். 'எனக்குத்தான் மாடல் ஸ்கூல் வாத்தியார் எல்லாம் தெரியுமே. சொர்ணமா? ஞானையாவா? செல்லையாவா? .........' என்று ஒவ்வொரு உபாத்தியாயர் பேரையும் அடுக்கிக்கொண்டே போனுர். அவள் ஒவ்வொன்றுக்கும் 'இல்லே இல்லே' என்று சொல்லுகிருளே யொழிய புருஷன் பெயரைச் சொல்லவேயில்லை.

'என்னம்மா உனக்கு உன் புருஷனுடைய பேர் தெரியலியே, நீ எப்படிக் காரியத்தைச் சமாளிக்கப்போறே' என்று அவளுக்குப் படும்படி ஐயர் பேசினுர். எனினும் அவளுக்கு தன் பத்தாவின் பெயரைச் சொல்ல நா எழவில்லை. உடனே அவள் பக்கத்து வீட்டுக்குப்போய், 'எக்கா ஒன் அண்ணன் பேரைச் சொல்லு ஐயா கேக்காக?' என்ருள். 'அவன் பேர் கசமுத்து ஐயா' என்று சொன்னுள். 'ஓ அவரா? அவர்தான் எனக்குத் தெரியுமே!' என்று ஐயர் ஆச்சர்யத்தோடு சொன்னுர்.



# தமிழ்நாட்டில் ஹிந்திப் பயிற்சி

(K. V. சிவசுப்பிரமணியன் B. A.,)

சென்ற சில வாரங்களாக ஹிந்தி மொழியை பாடசாலைகளில் கட்டாய பாடமாக வைக்க வேண்டும் என்ற தீவிர உணர்ச்சி நாடெங்கும் பரவி வருகிறது. சில தினங்களுக்கு முன் சென்னை முதல் மந்திரியவர்கள் இராமகிருஷ்ண மாணவர் விடுதியில் பாடசாலைகளில் ஹிந்தியை நுழைக்கும் விஷயமாக போட்ட பீடிகையே இவ்வுணர்ச்சிக்கு அடிப்படையான காரணமாகும். அது முதல் நாடெங்கும் மக்களுக்கு ஹிந்தியில் ஒரு அபிமானமும் ஆசையும் ஏற்பட்டன. இது விஷயத்தில் ஹிந்தி பிரசார சபையார் செய்து வரும் பெரு முயற்சியோடு சென்னை முதலிய பிரபல இடங்களில் புதிய ஹிந்திப் பாடசாலைகளும் ஆரம்பிக்கப் படுகின்றன. ஹிந்தியை அகில இந்திய பாஷையாகச் செய்ய வேண்டும் என்பது காங்கிரஸ் அரசாட்சியின் முக்கியமான நோக்கங்களில் ஒன்று என்பதை நண்பர்கள் அறிவார்களாக.

இந்த பிரச்னை விஷயமாக பொதுமக்களிடையே பல திறப்பட்ட அபிப்பிராய பேதங்கள் இருந்து வருகின்றன. ஹிந்தியை கட்டாய பாடமாக வைப்பதை பலர் ஆதரிக்கின்றனர்; பலர் எதிர்க்கின்றனர். தமிழ் நாட்டில் சேர சோழ பாண்டியர்கள் ஒரு மொழி வைத்துலகாண்ட காலத்தில் மக்கள் பெரு நன்மையடைந்தது போல், ஹிந்திப் பயிற்சியால் தற்கால இந்தியா நன்மையடைய முடியும் என்பது ஆதரிப்போரின் கருத்து. இச்செயலை ஆதரிப்பாரை விடுத்து, எதிர்ப்போரின் நோக்கங்களை நாம் ஆராய வேண்டிய தவசியம்.

ஹிந்தி மொழிப் பயிற்சியை, பலர் பல காரணங்களை அடிப்படையாகக் கொண்டு எதிர்க்கின்றனர். காங்கிரஸ் கடைப்பிடித்துள்ள குறிக்கோள்களையெல்லாம் அழிக்கவேண்டும் என்னும் நோக்கத்தோடு எதிர்ப்போர் சிலர்; ஹிந்தியை கட்டாய பாடமாக வைத்தால் தத்தம் தாய் மொழிக்கு ஆபத்து நேரிடும் எனக் கருதி எதிர்ப்போர் மற்றும் சிலர்; மாணவர்கள் பாடசாலையில் பயின்று வரும் பாடங்களோடு ஹிந்தியையும் கட்டாய பாடமாக வைத்தால் மாணவர்களால் சுமை தாங்க முடியாதென்னும் கருத்து கொண்டு ஆட்சேபனை செய்பவர் பின்னும் சிலர். இங்ஙனம் எழுந்துள்ள முத்திறப்பட்ட அபிப்பிராயங்களை ஒவ்வொன்றாக ஆராய்வோம்.

முதலாவதாக, காங்கிரஸார் செய்வனவற்றை எல்லாம் எதிர்க்கவேண்டும் என்னும் கொள்கையுடையோர் "எனக்கு இரண்டு கண்களும் போனாலும் போகட்டும், அண்டைவீட்டுக் காரனுக்கு ஒரு கண் குருடாய்ப் போக வேண்டும்'' என்று கூறினவனுடைய வகுப்பைச் சேர்ந்தவர். மாஜி

இடைக்கால மந்திரிகளிற் பலர் இக் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள். ஹிந்தியைத் தவிர வேறெந்த பாஷையை கட்டாய பாடமாக வைத்தாலும் இக் கோஷ்டியாருக்கு ஆட்சேபனை கிடையாது. காங்கிரஸாரின் பிரஸ்தாபமெல்லாம் இவர்களுக்கு வேம்பு; மற்றவர் பேச்சு கரும்பு.

இரண்டாவது தொகுதியினராகிய தாய் மொழிப் பற்றுடையோரது கொள்கை சற்று நியாயமானதே. அதாவது ஹிந்தியை கட்டாய பாடமாக ஏற்படுத்தி விட்டால் தாய்மொழி வளர்ச்சி குறையும் என்பதே அவர்கள் நோக்கம். சென்னை மாகாணத்தில் தமிழ் ஜில்லாக்களே அதிகமாகையால் தமிழை உதாரணமாக எடுத்துக் கொள்வோம். சென்ற சில ஆண்டுகளாக தமிழ் நாடெங்கும் மகா நாடுகள் கூட்டப் பெற்று "பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியிற் பெயர்த்தல் வேண்டும்"; இதுவரையில் அரசியலார் தமிழ் மொழி வளர்ச்சியை கனவிலும் கருதுவதில்லை; ஆகையால் காங்கிரஸ் அரசாட்சியிலேனும், தமிழைக் கட்டாய பாடமாக ஏற்படுத்தும்படிச் செய்ய வேண்டும்" என்று ஆங்காங்கே தீர்மானம் செய்கின்றனர். சென்ற ஆண்டில் நடைபெற்ற தமிழ் மகாநாடுகளொன்றில் பிரதம மந்திரி கனம் இராஜகோபாலாசாரியாரவர்களே "தமிழை பாடசாலைகளில் கட்டாய பாடமாக வைக்க முயற்சி செய்ய வேண்டும்" என்று கூறியிருக்கிறார். இப்போது அவர் மந்திரி சபைத் தலைவராக வந்தபின் அதைக் கவனிக்காமல் ஹிந்தியைப் பற்றி பெருமுயற்சி எடுத்துக் கொண்டதற்காக தமிழர்களிடையே மனவருத்தம் ஏற்பட்டிருக்கின்றது. தமிழ் நாட்டுப் பாடசாலைகளில் தமிழையும் ஆந்திர பாடசாலைகளில் தெலுங்கையும், கர்நாடகத்தில் கன்னடத்தையும், மலையாள நாட்டுப் பள்ளிகளில் மலையாளத்தையுமே கட்டாய பாடமாக வைப்பது நேரிய முறையாகும். பத்திரிகைக் காரர்கள் கூறுவது போல் அது சுயபாஷையபிமானத்தால் கூறும் சுயநலக் கூற்றல்ல. மாதா வயிறெரிய மகேஸ்வர பூசை செய்தென்ன பலன்? ஒருவன் தான் பிறந்த நாட்டில் வழங்கும் மொழியைக் கற்ற பின்னரே பிறமொழிகளிற் கருத்தைச் செலுத்த வேண்டும். தாய்மொழிப் பற்றே சுதந்திரம் தந்திடுமாகையால், ஒரு நாட்டு மக்கள் தாய் மொழியை கற்றற்குரிய சட்ட திட்டங்களை அந்நாட்டு அரசியலார் ஏற்படுத்த வேண்டும். ஹிந்தி மொழிப் பயிற்சி, இந்தியாவெங்கும் உலவி வருவதற்கு ஒருவனுக்குப் பேருதவியாயிருப்பதால் அதையும் கற்க வேண்டிய தவசியமே. இப்பொழுது உயர்தர பாடசாலைகளில் தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம் முதலியன இஷ்ட பாடங்களாக (Optional Subjects) வைக்கப்பட்டிருக்கின்றன. ஆங்கிலம் எப்படி கட்டாய பாடமாக கற்றுக் கொடுக்கப் படுகிறதோ, அதைப் போலவே அந்தந்த நாட்டு தாய் மொழியை அங்கங்கே கட்டாய பாடமாகவும் ஹிந்தியை இஷ்ட பாடமாகவும் வைத்தலே உசிதமானது. அதனால் ஹிந்தி மொழி நாட்டில் பரவுவதற்கு ஏது வில்லை எனக் கூறிவிட முடியாது. இப்போது மாணவர்கள் இஷ்ட பாடங்களைக் கற்பது போலவே ஹிந்தியில் விருப்ப முள்ளவர்கள் அதை எடுத்துக் கொண்டு படித்தே தீருவார்கள். நாளடைவில் அவர்கள் தொகை அதிகரித்து விடும். இப்போது அமுலிலிருந்து வரும் கல்வி முறைப்படி தமிழ் மாணவனொருவன் தமிழ் கற்காமலே பீ. ஏ. வரையில் வேண்டுமானாலும் படித்து விடலாம். அதனால் தான் இப்போது பலர் பொதுக் கூட்டங்களில் தம் தாய் மொழி

யில் இரண்டொரு வார்த்தைகள் சேர்ந்தாற் போல் பேசத் தெரியாமல் தவிக்கின்றனர்; இங்ஙனம் பலரும் தமிழை நிராகரித்தார்களானல் நாளடைவில் தமிழின் கதி என்னும்? ஆகையால் தமிழ் கற்றது போக எஞ்சின ஓய்வு நேரங்களில் ஹிந்தியைக் கற்கலாம். ஹிந்தியை கட்டாய பாடமாக வைத்தாலும் சரி, இஷ்ட பாடமாக வைத்தாலும் சரி அதைக் கற்கும் விருப்பமுள்ளவன் கற்றே தீருவான். அங்ஙனங் கற்கும் விருப்பமுடையவர் பாலராயினும் விருத்தராயினும் அவர்களுக்குப் பயன்படுமாறு தக்ஷிண பாரத ஹிந்தி பிரசாரசபையார் அங்காங்கே ஹிந்தி பள்ளிக்கூடங்களை ஏற்படுத்த வேண்டும். சர்க்கார் அவற்றிற்கு ஆண்டு தோறும் தக்க மானியங்கள் (Grants) அளிக்க வேண்டும். ஆகையால் ஹிந்தியை முதல் மூன்று பாரங்களிலேனும் அல்லது வேறெந்த வகுப்பிலேனும் கட்டாய பாடமாக வைக்க வேண்டுமென்பது உசிதமான நோக்கமல்ல. இக்கருத்து கொண்டே அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் திரு. S. சோமசுந்தர பாரதியார் மேற்படி கழகத்திலும், சீகாழிப் பொதுக் கூட்டத்திலும், பெண்ணாகடம் கரந்தைத் தமிழ்ச் சங்கத்திலும் ஹிந்தியை கட்டாய பாடமாக வைப்பதை எதிர்த்துப் பேசியிருக்கின்றார். இக் கொள்கையுடைய திரு கா. சுப்ரமணியம் பிள்ளை, திரு இ. மு. சுப்ரமணிய பிள்ளை முதலியோர் தென்காசியில் இதை ஆட்சேபித்துப் பேசியுள்ளனர்.

மூன்றாவதாக, மாணவர்களுக்கு பாடச் சுமை அதிகமாகிவிடும் என்ற கொள்கை. இது அவ்வளவு சிறந்த காரணமல்ல. ஏனென்றால் இப்பொழுது ஒவ்வொரு பாடசாலையிலும் அனுசரித்து வரும் பாடதிட்ட முறையில் (Syllabus) நீக்க வேண்டியவைகளை நீக்கியும் சேர்க்க வேண்டியவைகளைச் சேர்த்தும் சீர்திருத்தம் செய்தால் அத்தகைய பாடச் சுமைக்கு ஏது விராது. அங்ஙனம் மாற்றியமைக்கா விடில் மாணவர்கள் பெரிதும் துன்புறுவார்களென்பது திண்ணம்.

முடிவாகக் கூறுமிடத்து நாமெல்லோரும் ஹிந்திப் பயிற்சியை வரவேற்பது அவசியம். இந்தியாவிலுள்ள மக்களிற் பெருந் தொகையினர் ஹிந்தியை தாய் பாஷையாகப் பெற்றிருக்கின்றனர். அதனால் தென்னிந்தியர்களும் ஹிந்தியை எழுதப் படிக்கக கற்றுக் கொண்டார்களேயானல், வியாபாரம், கல்வி, கைத்தொழில் முதலிய துறைகளை மேற்கொண்டு, நாடெங்கும் உலவி நலம் பெறலாம். இங்ஙனங் கூறுவோமாயின், வடநாட்டிந்தியர்கள், தென்னாட்டு மொழிகளும் பெரும்பாலோரால் வழங்கப்படும் தமிழ் மொழியை கற்கவேண்டியது அத்தியாவசியமானது. ஆகையால் சென்னை அரசாங்கத்தார் இது விஷயத்தை தீர ஆலோசித்து அமுலுக்குக் கொண்டு வருவது மிகவும் அவசியமாகும்.



# பொருள் நூல்

ஸ்ரீகண்ட இராமன், எம். ஏ., எல். டி.,


(தொகுதி-23. பகுதி-1. 9-ம் பக்கத் தொடர்ச்சி.)

## அரிசி—Inelastic Demand

| மூட்டை விலை ரூபாய் | கேட்கப்படும் எண்ணிக்கை | மொத்த விலை ரூபாய் |
|---|---|---|
| 10 | 1000 | 10,000 |
| 9 | 1050 | 9,450 |
| 8 | 1100 | 8,800 |
| 7 | 1200 | 8,400 |
| 6 | 1350 | 8,100 |
| 5 | 1500 | 7,500 |

அரிசி—"டிமாண்டு" வளைவு

## இரண்டாவது படம்




இந்த இரண்டாவது படத்தில் "Inelastic demand" அதாவது வளையாமல் இருக்கும் கேட்பதைக் காட்டப்பட்டிருக்கிறது. அரிசியின் விலை விழும் பொழுது அல்லது கம்மியாகும் பொழுது "டிமாண்டு" அதிகமாகும். ஆனால் அந்த "டிமாண்டு" அதிகரிப்பு குறையும் விலையைப் பொறுத்து

நோக்கினல் கம்மியாகவே இருப்பதைக் காணலாம். முன் படம் போலவே இங்கும் O Y-யில் விலைகளும் O X-ல் மொத்த மூட்டைகளும் குறிக்கப் பட்டுள்ளன.

மேற் கூறிய விஷயங்களில் இருந்தும் நாம் தெரிந்து கொள்ளுவ தென்ன? ஹார்மோனியங்களில் கொஞ்சம் விலை மாறினல் அது "கேட் பதை" (Demand) பாதிக்கிறது. அதிகமாக பாதிக்கிறது என்றே சொல்லி விடலாம். ஆனல் அரிசியின் விலையில் பெரிய மாறுதல் உண்டா னாலும் "டிமாண்டை"ப் பொறுத்த மட்டில் கொஞ்சமாகவே பாதிக்கிறது. ஹார்மோனியங்களைப் பொறுத்த மட்டில் அதனுடைய விலை குறைந்தால் மொத்த விலை கொடுத்தது ஜாஸ்தியாக இருக்கும். விலை ஜாஸ்தியானல் கொடுத்த மொத்த தொகை குறைகிறது. ஆனல் அரிசியின் விலை குறைந் தாலும் மொத்த விலை குறைந்துதான் காணப்படுகிறது. அடுத்த "செக்ஷ னி"ல் "கேட்பது" (Demand) எந்த நிலைமையில் மாறுகிறது என்பதை ஆராய்வோம்.

## கேட்பது எவ்வெப்போது மாறுபடும்?

கேட்பது (Demand) எவ்வெப்போது, ஒவ்வொரு தடவையும் ஒரு குறிப்பிட்ட சாமானுக்கு இணங்குந் தன்மையைக் கொண்டிருக்கி றதா அல்லது விறைப்பாக இணங்காத தன்மையை (Inelastic)க் கொண்டிருக்கிறதா என்பதை நிர்ணயிப்பது மிகவும் கஷ்டமான காரியம். உண்மையில் ஒரு குறிப்பிட்ட சாமான் விலையை யநுசரித்து ஒரு தடவை இணங்கும் அல்லது வளையும் தன்மையைக் கொண் டிருக்கும். அதே சாமான் மற்றொரு விலைக்கு வளையாத தன்மையைக் கொண்டிருக்கும். உதாரணமாக ஒரு வீசை காப்பிக் கொட்டை ஒரு ரூபாயிலிருந்து இரண்டரை ரூபாய்கள் வரையில் கேட்புச் சட்டத்திற்கு அடங்கி இணங்கும். அதற்கு மேல் விலை யேறினல் "Inelastic" ஆக இருக்கும். சில சமயங்களில் விலை விழும்பொழுது கேட்பது கொஞ்ச காலத்திற்கு அதிகரிக்கும்; ஆனல் இது ரொம்ப காலத்திற்கு நீடித்திருக் காது. இதற்கு கிராமபோனை உதாரணமாக எடுத்துக் கொள்ளலாம்.

கேட்பது இணங்கும் (Elasticity of Demand) எனும் கருத்து வழக் கத்தில் மிகவும் ஜாக்கிரதையாக கையாளப்பட வேண்டும். கொஞ்ச காலத்தில் மாறுதல்கள் ஏற்படும் விலையின் விளைவுகளுக்கு மட்டும் உபயோ கப்படுத்த வேண்டும். திடீரென்று மாறுதல்கள் ஏற்படும் விலையிலும் ஜனங் களுடைய பழக்க வழக்கங்களின் விளைவாக மாறுதல்கள் ஏற்படும் விலையின் விளைவாகவும் இது உபயோகப்படுத்தா விட்டால் சரியாக இருக்காது.

ஆடம்பர வஸ்துக்களுக்கு (Luxuries) சாதாரணமாக கேட்பது (Demand) இணங்குந் தன்மையைக் கொண்டிருக்கிறது. இன்றியமை யாத வஸ்துக்களுக்கு (Necessaries) கேட்பது வளையாத தன்மையைக் கொண்டிருக்கிறது; என்ன விலையானலும் நித்திய வாழ்க்கைக்கு அவசிய மாக வேண்டிய சாமான்கள் வாங்கப்பட்டே தீரும். ஆனல் ஆடம்பர வஸ் துக்களுக்கு கேட்பது ஒரே நிலையாக இராது. ஏன்? அவற்றை மாந்தர்கள் தள்ளி விட்டுச் சும்மா இருக்கலாகும். (The demand for luxuries is

usually elastic while the demand for necessaries is usually inelastic.)

இது சில விலக்குகளோடு தான் உபயோகிக்கப்பட வேண்டும். உதாரணம் கொடுப்போம். சில வாழ்க்கைத் துறைகளில் ரேடியோ, பியானோக்கள் சமூக அந்தஸ்தின் இன்றியமையாத வஸ்துக்களாக கருதப்படுகின்றன. இதை ஆங்கிலத்தில் Conventional necessaries என்று சொல்லுவர். சில பணக்காரர்கள் விலை ஏறினாலும் அவற்றை வாங்கியே தீருவார்கள். விலையுயர்ந்ததும் கம்மியாக இருக்கக் கூடியதும் சமூகத்தில் அவற்றை உபயோகிப்பது ஒரு விசேஷ கௌரவத்தைக் கொடுக்கிறதென எண்ணுவதும் ஆன வைரங்கள் சாதாரணமாக "Inelastic" கேட்பாகத் தான் இருக்கும். வைரங்களின் விலை குறைந்தால் முன் வாங்காத மனிதர்களுள் சிலர் அவற்றை வாங்கலாகும். ஆனால் முன்பு அந்தஸ்திற்கும் சமூக கௌரவத்திற்கும் மேன்மை தருவதெனக் கருத்துக்கொண்டு அதை உபயோகித்து வருபவர்கள் வைரங்களின் விலை கீழே போயிருப்பதைக் கண்டு அவற்றை வாங்குவதை இப்பொழுது நிறுத்தி விடுவார்கள். ஏன்? பணக்காரர்கள் உபயோகித்து வந்ததை இப்பொழுது ஏனையோர் வாங்கினால் வைரங்களின் மதிப்பு குறைந்து விட்டதாக அவர்கள் நினைத்துக் கொள்ளுவர். அவற்றின் மீது இருந்த ஒரு மோகம் இப்பொழுது அவர்களிடம் கிடையாது. அதனால் கேட்பது குறைந்து போகிறது. இதனால் கேட்பது என்பதை அநுசரித்து நிற்கும் காரணம் விற்பதை ஆதரிப்பதும் தள்ளுவதும் ஆக இருக்கிறது.

இன்றியமையாத வஸ்துக்கள் விலை ஏறினாலும் "டிமாண்டு" வளைந்தே இருக்கும்: ஜனங்கள் அவற்றை வாங்கியே தீருவர். ஆனால் இது எல்லா முக்கியமான சாமான்களுக்கும் பாதிக்கும் என்று சொல்லமுடியாது. உப்பு, நெருப்புக்குச்சிகள் ஆகிய இவற்றின விலைகள் நூற்றுக்கு இருபது அதிகமாக ஏறினாலும் ஜனங்கள் அதை பொருட்படுத்தாமல் வாங்கியே தீருவர். ஏன்? அவர்கள் இவற்றிற்காக செலவிடும் தொகை மிகவும் சொற்பமேயாகும். ஆனால் துணி மணிகள் முதலானவை விலை யுயர்ந்தால் மனிதர்கள் சிக்கனத்தை யநுசரிக்க ஆரம்பித்து விடுவார்கள். அதனால் கேட்பது குறைந்து போகும்.

ஒரு சாமானுக்கு பதில் சாமான்கள் (Substitutes) இருக்குமானால் கேட்பது Elastic ஆகத்தான் இருக்கும் அதாவது கேட்பது விலைக்கு இணங்கியே இருக்கும். (Demand is more elastic where there are-substitutes) ஒரு பவுண்டு தேயிலை இரண்டு மூன்று ரூபாய்கள் என்று விலை யுயர்ந்தால், காப்பிக் கொட்டையின் விலை முன்மாதிரியே இருந்தால், ஜனங்கள் காப்பிக் கொட்டையையே வாங்கி உபயோகிப்பார்கள். காப்பிக் கொட்டைக்கு வியாபாரம் வந்தால் அதனுடைய விலையும் உயரும்—இதனால் இரண்டு வகையான சரக்குகளின் விலைகள் கருணையுடன் ஒரே மாதிரி நிலைக்கு வர முயற்சிக்கும் என்பது தெரிகிறது.

(தொடரும்.)

---

# தோற்றம்

டர்பன், திரு. ச. முனிசாமி பிள்ளை)

"அகத்தினழகு முகத்திற் றெரியும்" என்றோர் வாக்கிய முண்டு. அதன் உண்மை ஆராயத்தக்கது. முகம் வேறுபட்டிருப்பதும், சில குளிர்ச்சியும், சில கடுமையும், வேறு சில மந்தமும், சில பொறுமையும், அறிவுடைமையும் இவைபோன்ற அநேகவித குணங்கள் முகத்தில் தென்படுவதை யாவரும் நன்கு பார்த்திருப்பர். முகப் பார்வையை ஓர் அறிகுறியாய் வைத்து மனிதரின் குணத்தையும் அவரது பெருமையையும் திறமையையும் எண்ணுவோரு முளர். ஆகையால் இவ் விஷய நுட்பம் கவனிக்கலாயிற்று.

நெப்போலியன் மிகுந்த தீர்க்கதரிசியும் பொறுமையு முடையவர்போலுள்ள தோற்றமுடையவர். அநேக மேதாவிகள் சாஸ்திர ஆராய்ச்சியிலும் நூலாராய்ச்சியிலும் உழல்வோர் பித்தர்களின் பார்வையை வகிக்கின்றனர். ஆகவே, முகப் பார்வையிலிருந்தும், தோற்றத்திலிருந்தும் குணத் திறமைகளைக் கண்டறிவது எளிதாகத் தோன்றவில்லை. சாதாரணமாய் முகமும், தோற்றமும் குடும்பப் பற்றையும் பழக்கப் பற்றையும் தனித்தனியுடைமையாலே சிற்சில சமயம் அழகுள்ள மூடனும் அன்பை யொத்த மோசக்காரனும், சாதுப்போன்ற கபடனும் உலகத்திலமைவது தெற்றெனப் புலப்படும். இத்தகைய வஞ்சகர்களைக் கண்டறிவதற்கு முகம் போதாது.

இரண்டாவதாக சொன்னதிலிருந்து பொது வாக்கியத்தின் சிறப்பு குன்றியவாறல்ல. அது வாக்கியத்தைத் தழுவி நின்று அதைக் கொள்ளும் வகையைக் காட்டியவாறும். கல்விமானின் அழகின்மை, ஞானியின் பைத்தியத் தன்மை, லோகோபகாரியின் கடினதன்மை, வீரனின் பொறுமை இவைகள் அவரவரின் முகக்குறியால் காணுமானால் அவைகள் கவனிக்கத் தக்கவையே. கல்விமானின் அழகின்மை அவன் மனக்குறையாலும், கவனமின்மையாலும் நிகழ்ந்ததாகும். ஞானியின் பைத்தியத் தோற்றம், அவன் புத்தியை ஒரே நிலையில் வைத்திருப்பதே. இந்திரியங்கள் அனைத்தும் வேலை செய்து சுகிக்கும்போதே சந்தோஷமும், துன்பக்கேடும் உண்டாகும். அப்போதுதான் முகம் நற்பார்வையை யுடையதாகும். இம்மாதிரியே லோகோபகாரியின் கடினத்தன்மை அவனது மனம் உலக துன்பத்தை சகிக்கமுடியாமல் ஏற்பட்ட கோபக்குறியாகும். இவ்விதமே வீரனின் பொறுமை, தன்னை ஒருவராலும் அவமதிக்கமுடியாதென்ற நிகழ்ச்சியால் பிறந்தது. நற்பார்வை விசேஷம் பார்வையின்மையினும் கொண்டாடத்தக்கது.

நற்பார்வையுடன் அமைந்த குணம், திறமை, நுட்பம். "பொன்மலர் நாற்ற முடைத்தானற்" போல, குணமே சிறப்புப் பொருந்தியதாகையால்

எவ்விதமாயினும் கொள்ளற்க. அழகுள்ள மடமை விரும்பத்தக்கதல்ல. ஏமாற்றத்திற்கு ஏதுவாகுமாகையால் புறம்பே விலக்கத்தக்கது. மாணிக்கம் குப்பையிலும் விசேஷ ஒளியைக் கொடுக்கிறது. மனதைக் கவர்கிறது. அதை நாம் அப்போதும் பாராட்டுகிறோம். அவ்விதமே நற்கும் எவ்விடத்திலும் போற்றப்படும், படுவது நலம்.

தற்கால நாகரீகம், அநேக நன்மைகளுடன் தீமைகளேயும் விருத்தி செய்கின்றது. மனிதன் தேக சௌக்கியத்தையும், மரியாதையையும், கொடுக்கும்பொருட்டு ஏற்பட்டவைகள் சிற்சிலசமயம் மனிதரை ஏமாற்றவும்உபயோகப்படுத்தப்படுகின்றன. இக்காலத்திலே அநேகருடைய உண்மை நிலைகள் தெரியாமலே மறைக்கப்படுகின்றன. வண்ணான், நாவிதன் உதவியைக் கொண்டும் ஆடம்பர உடை இவைகளின் உதவியைக்கொண்டும் அநேகர் பெரிய பிரபுக்கள்போலத் தோன்றுகிறார்கள். இவ்வித தோற்றம் ஒவ்வோர் செய்கையிலும் விளங்குகிறது. சிலர் பிரசங்கத்தாலும், சிலர் சபைகளில் சேர்ந்து தடபுடல் செய்வதாலும், சிலர் பணத்தைக் கவனியாது செலவு செய்வதாலும் தாங்கள் பேர் வாங்கவேண்டுமென்று தூண்டப்படுகிறவர்களின் தொகை அதிகரித்து வருகிறது. இப்பேர்ப்பட்ட எண்ணங்களால், ஊக்கத்தோடும், கவனத்தோடும் அநேக முயற்சிகள் நடத்தப்படாமல் நிலைகுலைந்து போயிருக்கின்றன. அதன்காரணமாகப் பேரும் புகழும் தேசத்தில் குன்றுகின்றன. உண்மையே நிலைக்குமாகையாலும், உண்மையற்றவை ஈனமாகையாலும் உண்மையே கையாளத்தக்கது.

---

# நமது வாஞளில்

‘மணி’

1. அறியாமை என்ற திரைச் சீலையில் பயம் என்ற பென்சிலைக் கொண்டு மூட நம்பிக்கை என்ற சிற்பியால் வரையப்படும் படமே பேய், பிசாசாகும்—இங்கர்ஸால்.

2. நம் வாஞள் அளிக்கும் அற்புதப் பொக்கிஷம் களங்கமற்ற பெயராகும். அது இல்லையேல் நாம் வர்ணம் பூசிய களிமண் போலாகின்றோம்—ஜெகத்தைச் சிற்பிப்பவர்.

3, இப்புவியில் எவன் ஒரு காரியத்தைச் செய்ய இயலாதவஞக இருக்கின்றானே அவன் முயற்சியுள்ளவஞக இருக்கின்றான். எவஞல் கூடுமோ அவன் வாளா விருக்கின்றான். என்னே? மானிட இயற்கை!—பிரௌனிங்.

4. உயர்ந்தோரை வெறுப்பதே, கீழோர் அவர்களுக்குப் புரியும் இயற்கையான தொண்டு—டிக்கன்ஸ்.

5. பழிக்குப் பழி, நாகரீக மற்ற நியாயத் தீர்ப்பு—பைரன்.

6. ஒருவனுடைய எண்ணத்திற்கும், செய்கைக்கும் வித்யாசம் அபரிதமாக இருக்கவேண்டும். அவன் செய்தது செய்ய நினைப்பதை விட குறைந்ததாக இருக்கவேண்டும். இல்லையேல் சுவர்க்கம் எதற்கு?—பிரௌனிங்.

7. நாம் முன்னும் பார்க்கின்றோம். பின்னும் பார்க்கின்றோம். பார்த்தும் இல்லாதவைகளுக்கு வருத்த முறுகின்றோம். நமது உளம் பூரித்த சிரிப்பிலும் சிறிது வலி அடங்கியுள்ளது. நமது கர்ஞமிர்த பாடல்கள் துக்கமான எண்ணங்களை தோற்றுவிக்கின்றன.—ஷெல்லி.

8. நம் வாஞள் அதிகரிக்க அதிகரிக்க, அது ஒரு எளிய வஸ்துவாகிறது—ஆப்த வாக்கியம்.

9. கடவுளுக்குப் பயப்படு. அதுவே ஞானத் தோற்றத்திற்கு அறிகுறியாகும்.—இந்தியன்.

10. கிழக்கு கிழக்கே
மேற்கு மேற்கே
கிழக்கும் மேற்கும்
நமக்கு விருப்பே.—தாகூர்.

11. ஒரு பத்து ரூபாய் நோட்டைக் கண்டெடுப்பதைக் காட்டிலும் ஒரு சந்தோஷகரமான மனிதனையோ, மாதையோ பார்ப்பது உசிதமானது —ஸ்டீவன்ஸன்.

12. நாம் ஒருவனைப் பார்த்து ஏசிச் சொன்ன சொற்களை நான்கு குதிரைகள் பூட்டிச் சென்ற போதிலும் திரும்பக் கொண்டுவர முடியாது. —பர்மிய வசனம்.

13. அந்தோ! உன் வறுமையைப் போக்குகிறேன். உன் துக்கத்தைப் போக்குகிறேன். ஆனால் எங்கள் தேசப் புலவர்களை, அதிலும் பாரதியை யாசிக்காதே.—பாரத புத்திரன்.

14. ஒரு பசுந்தழையைப் பார்ப்பதிலிருந்து எழும் எண்ணம் ஞானிகள் கூறுவதைக் காட்டிலும் ஜாஸ்தியாகவே, மனிதனைப்பற்றியும், நீதி நெறிகளைப்பற்றியும் நமக்குப் புகட்டும்.—வொர்ட்ஸ்வொர்த்.

---

# விசித்திர விநோதம்

உபாத்தியாயர்:—"பையன்களே! தினந்தோறும் படிக்காவிட்டால் பாடங்கள் பொதி யேத்தினைப் போலக் குவிந்துவிடும்"

ஒரு மாணுக்கன்:—"பொதி யேத்துகிறது யார் ஸார்?"

***

வக்கீல்;—"உமக்கும் சண்டை நடந்த இடத்திற்கும் எவ்வளவு தூரம் இருக்கும்?"

சாட்சி:—"இருபதடி இருக்கும்"

வக்கீல்:—"நீர் சண்டையை விலக்கக் கூடாதா?"

சாட்சி:—'மறுநாள்தான் எனக்குச்சண்டை நடந்த இடமே தெரியும்.'

***



"நீ என் லீவு எடுத்துக் கொண்டு என் குமாரன் கலியாணத்துக்கு விஜயஞ் செய்யக் கூடாது? நீ இல்லாவிட்டால் உன் ஆபீஸில் எந்த வேலையும் நடைபெருது என்பது உன் எண்ணமா?"

"அது இல்லை நான் லீவு எடுத்துக் கொணடால் நானில்லாக் காலத்திலும் வழக்கம் போல்தான் எல்லா வேலைகளும் நடக்கின்றன என்பதைச்சொந்தக்காரர்கள அறிந்து கொள்வார்களே என்ற பயந்தான்."

***

மனைவி:—தாங்கள் படித்த நாவலின் முடிவு சந்தோஷமாக இருக்கிறதல்லவா!

புருஷன்:—இல்லை, இல்லை! துக்கத்தில்தான் முடிந்தது.

மனைவி:—எப்படி?

புருஷன்:—அவர்கள் இருவரும் கடைசியில் கல்யாணம் செய்து கொண்டார்கள்.

ஒரு பிராமணன் உடுப்பி ஹோட்டலில் போய் ஒரு இட்லி வாங்கி சாப்பிட்டு கொண்டு இருந்தான். பாதி இட்லியில் சட்னி ஆய்விட்டது. வேலைக்காரனைப் பார்த்து அய்யர்,—அடே சட்னி கொஞ்சம் போடு என்றார்.

வேலைக்காரன்:—சட்னி எடுத்துகொண்டு வந்து போட்டுவிட்டு (கன்னடை பாஷையில்) சாக்கா (போதுமா) பேக்கா (வேணுமா) சாமி என்றான்.

அய்யர் (தனக்குள் என்ன சாக்கும் பேக்கும் ஒரு பலகாரம் என்று நினைத்துகொண்டு) அப்படியானால் சாக்கு கொஞ்சம் போடு, பேக்கு கொஞ்சம் போடு என்றார்.

***

பீச்சில் பாப்பா அழுதுகொண்டிருந்தது. தாயார் சீனுவைப் பார்த்து, ஏண்டா சீனு தம்பி அழுகிறான்?

சீனு:—பாரம்மா! தம்பி மணலில் ஒரு பள்ளம் தோண்டச் சொல்லி அதை வீட்டுக்கு எடுத்துகொண்டு வரச்சொல்லி அழுகிறான்.

***

ராமு:—"மாமா என்னை சினிமாவுக்கு நாளைக்கு அழைச்சுண்டு போரேன்" என்று பொய் சொல்லுகிறாரே?

தாயார்:—அவர் பொய்ப் பல் கட்டிண்டு இருக்கா ரோல்லியோ, அதனால் தான்!

***

வக்கீல்.—நீ பிறந்த தேதி என்ன?

குற்றவாளி:—ஐயா, அது எனக்குத் தெரியாது?

வக்கீல்:—என் தெரியாது?

குற்றவாளி:—நான் பிறக்கும்பொழுது எனக்கு முன்னால் ஒரு காலண்டரும் கிடைக்கவில்லை.

***

வக்கீல்;—(கொத்து வேலை கூலிக்காரனைப் பார்த்து) படி (Fees) கட்டியாய் விட்டதா?

கூலிக்காரன்:—எசமானே! கொல்லையிலா? வாசலிலா? நிமிசம் கட்டிடரேனுங்க.

***

புராணிகர்:—"சங்கநிதி பதுமநிதி இரண்டும்........." என்று இராகத்துடன் பாடத்தொடங்கினார்.

முதலிழந்த முட்டாள்:—போதும், போதும், மற்ற நிதிகளும் அப்படித்தான், அதை நினைத்து அழுவதில் பிரயோஜனமே இல்லை.

***

'திண்டன்':—இப்போது பெங்களூர் மெயில் எங்கே இருக்கும்?

முண்டன்:—தண்டவாளங்களின்மேல் இருக்கும்!




**கலியுக பூதகி**

பிரிட்டன், ஹேடர்ஸ்பீல்ட் என்னுமிடத்தில் வசிக்கும் ரோசிபுருக் என்னும் பெயருடைய பெண்மணி மிகப் பருத்துக் காணப்படுகிருளாம். அவளது தற்போதைய தேகநிறை கால்டன்னும், உடலின் சுற்றளவு 8-அடியும் இருக்கிறதாம். தான் இவ்விதம் பருத்திருப்பது பற்றிப் பெருமை கொள்வதோடு, பருத்த தேகிகளே உலக இன்பங்களை நன்கு அனுபவித்து, மகிழ்ச்சியாக இருக்க முடியுமென்று கூறுகிருள். நாளுக்குநாள் பருத்து வருவதைக் காணும்போது இவள் கலியுக பூதகியோ என எல்லோரும் ஆச்சரியப் படுகிருர்களாம்.

***

**தங்க வியர்வை யநம்பிய நோயாளி**

லண்டன் பெரிய ஆஸ்பத்திரி யொன்றில் சிகிச்சை பெற்றுவந்த நோயாளியை ஒருநாளிரவு நர்ஸ் வந்து கவனித்தபோது, வயது முதிர்ந்த அந் நோயாளியின் உடல் தங்கமயமாய்க் காணப்பட்டதை யறிந்து ஆச்சரிய முற்றுளாம். எனவே, அவள் டாக்டருக்குத் தகவல் தெரிவித்தார். அவர், நோயாளியைப் பரீக்ஷித்து பார்த்துவிட்டு, நோயாளியின் வியர்வை தங்கமாக இருக்கிறதென்றும், முன்னுள் அந்நோயாளிக்குத் தங்கம் அதிகமாகச்சேர்ந்த மருந்தொன்று இஞ்சக்ஷன் செய்யப்பட்டதே இதற்குக் காரணமென்றும், அம் மருந்திலிருந்த தங்கம் இரத்தத்திலிருந்து பிரிந்து வியர்வையாக வெளிப்பட்டிருக்கிறதென்றும் கண்டு பிடித்துக் கூறினுர். இம் மாதிரி அதிசய நிகழ்ச்சி இதற்குமுன் நிகழ்ந்ததே கிடையாதாம்.

***

**ஜன்னல் குடை**

மழைக்காலங்களில் எதிர் வருவோரையோ அல்லது வண்டிகளையோ பார்த்துக்கொண்டு சௌகரியமாக நடப்பதற்காக, மேனுடுகளில் ஜன்னல் போன்ற துவாரங்கள் செய்து மூடப்பட்டுள்ள குடைகள் நூதனமாகச் செய்யப்பட்டு உபயோகிக்கப் படுகின்றனவாம்.

***

**விதவிதமாக ஓசை செய்யும் விசித்திரக் கடிகாரம்**

வேனீஸில் தற்போது ஒரு விசித்திரமான கடிகாரத்தை மார்லோ பிரட்டி என்ற இத்தாலியர் கண்டுபிடித் திருக்கிருராம். சில நவீன மோட்டார்களில் 7, 8-விதமாக ஓசை புரியும் 'ஹார்ன்'கள் இருப்பது போல, இக் கடிகாரத்தின் அலாரம் மணி 20-விதமாகச் சப்திக்குமாம். இதில் மற்ருெரு விசேஷ மென்னவென்ருல், ஒவ்வொரு நாளுக்கும் ஒவ்வொருவிதமாக 20-நாட்கள் முறையே சப்தித்து, மீண்டும் 21-ம் நாள் பழையபடி சப்திக்க ஆரம்பிக்குமாம். முதல்நாள் மட்டுந்தான் சாதாரணமாக ஓசை செய்யுமாம். மற்ற 19, நாட்களில் மேனுட்டு நடன சங்கீதம், ரிவால்வர் சுடும் சப்தம் முதலியவைகளை ஓசை செய்யுமாம்.




ஆந்தை 40-நாட்கள் வரை கூட நீர் பருகாமல் இருக்குமாம்; தனக்கு ஆபத்து நேர்வதாயிருந்தால், அது செத்து விட்டதுபோலப் பாசாங்கு செய்யுமாம்.

* * * *

எறும்புகள் எட்டு முதல் பத்து வயதுவரை ஜீவிக்குமாம்.

* * * *

மனிதனுக்குப் பல் 32-என்று கூறப்பட்டாலும், சிலருக்கு அதிகமாகவும் இருப்பதுண்டு. நாய்க்கு 42-பல்கள் இருக்கின்றனவாம்.

* * * *

நத்தைக்குக் கண் காது கிடையாதெனப் பலர் நினைக்கிறார்கள். அது தவறு. நத்தைக்கு முன்னால் மீசைபோல் நீட்டிக்கொண்டிருக்கும் இரு உறுப்புகளின் நுனியில் அதற்குக் கண்கள் இருக்கின்றன.

* * * *

நியூஸிலந்தில் சமீபத்தில் ஒரு பெட்டைக்கோழி முட்டை யிட்டதாம். அம் முட்டையினுள் விக்டோரியா ராணி காலத்திய ஷில்லிங் (1880-வருடம் செய்யப்பட்ட நாணயம்) இருந்ததாம்.

* * * *

தெற்கு கடலிலுள்ள ஒரு தீவில் வாழும் மக்கள், சமுத்திரத்தில் மூழ்கி, அதனடியில் இருக்கும் நல்ல தூய நீரை முகந்து வந்து குடிக்கிறார்களாம்.

* * * *

டேக்ஸாஸ் என்னுமிடத்தைச் சேர்ந்த அடால்ப் டாப்பர்வீன் என்பவர் துப்பாக்கிப் பிரயோகஞ் செய்வதன் வாயிலாகச் சித்திரங்களை எழுதுகிறாராம்.

* * * *

ஆண்டொன்றுக்கு இந்திய ஆலைகளில் 350 கோடி கஜம் துணி நெய்யப்படுகிறது.

* * * *

ஆண்டுதோறும் ஒவ்வொரு சத விகிதம் உலகில் ஜனத்தொகை அதிகமாகி வருகிறதாம்.

* * * *

இந்தியாவில் வருடத்துக்கு 10 லட்சம் மணங்கு சரிகை உற்பத்தி செய்யப்படுகிறதாம்.

* * * *

புதாபெஸ்டு என்னும் பிரதேசத்துக்குச் சமீபத்திலுள்ள ஒரு நகரில் மக்கள் ஈயைக் கட்டாயம் கொல்லவேண்டுமென்று ஒரு சட்ட மிருக்கிறதாம். எவரேனும் அவ்விதஞ் செய்யாவிடில், அவருக்கு அபராதம் விதிக்கப்படுமாம்.

# ஆசிரியர் குறிப்புக்கள்

## அஹிம்சா தர்மத்தின் வெற்றி

பலாத்கார உணர்ச்சியும், மிருக சக்தியுமே எங்கும் வியாபித்திருக்கும். இக் காலத்தில் உலகம் போற்றும் உத்தமராக இந்தியாவில் அவதரித்துள்ள மகாத்மா காந்தியடிகள் அன்பையும், அஹிம்சா தர்மத்தையும், உண்மையையும், எளிய வாழ்க்கையையும் உபதேசிக்கத் தொடங்கியதைக் கண்ட பலர் அவரைப் பரிகசித்ததுண்டு. எளிய வாழ்க்கை நாளடைவில் அமுலுக்கு வந்துகொண்டிருக்கிறது. இன்று ஆறு பெரிய மாகாணங்களில் பிரதம மந்திரிகளாக விளங்குபவர்கள் எளிய வாழ்க்கையை நடத்தி இதரர்களுக்கு வழி காட்டுகின்றனர். எளிய வாழ்க்கையினாலும் அன்பினாலும் மட்டுமே உலகில் சமாதானத்தையும், சந்துஷ்டியையும் ஏற்படுத்த முடியுமென்பதை உலக அறிஞர்கள் உணர்ந்து வருகின்றனர். நமது நாட்டில் அஹிம்சா தர்மம் நாளுக்குநாள் வெற்றிக்கொடியை நாட்டி வருகிறது. நமது தேச அரசியலில் மகாத்மா அஹிம்சா தர்மக் கொள்கையை புகுத்தியபோது சிலருக்குக் கஷ்டமாகத்தான் இருந்தது. சில வாலிபர்கள் தங்கள் தீவிர தேசபக்தியின் காரணமாகப் பயங்கர இயக்கங்களில் ஈடுபட்டு அளவிலாக் கஷ்டங்களை அனுபவிக்கின்றனர். மகாத்மாஜியும் மற்ற தலைவர்களும் அவர்களுடைய தேசபக்தியைப் பாராட்டிய போதிலும் அவர்களின் முறையை ஆதரிக்க முடியாமலும் அவர்களுக்காகப் பரிந்து பேசமுடியாமலும் கஷ்டப்படுகின்றனர். நமக்குச் சுயராஜ்யம் வேண்டியதுதான். அதற்காக எவ்வித தியாகமும் செய்யவும், அவசியமாயின் நமது இரத்தத்தைச் சிந்தவும் தயாராக இருக்கவேண்டியதுதான். ஆனால் பண்டைப் பெருமையும், உயரிய நாகரிகமும், நல்ல ஞானமும் படைத்த இந்தியர்களாகிய நாம் எவ்விதத்திலும் பிறரைத் துன்புறுத்துவதோ அல்லது பலாத்காரத்தில் ஈடுபடுவதோ கூடாது. இப்போது புரட்சி இயக்கத்தைச் சேர்ந்தவர்களும் இந்த உண்மையை அறிந்துவிட்டார்கள். காங்கிரஸ் தலைவர் பண்டித ஜவஹர்லால் கூறியதேபோல் மகாத்மாஜியின் இயக்கங்களால் நாட்டில் புரட்சி இயக்கத்துக்கு வலிவு இல்லாமல் போய்விட்டது. இப்போது மகாத்மா அந்தமானிலுள்ள புரட்சி இயக்கக் கைதிகள் மூலமே இந்த உண்மையை மெய்ப்பித்துவிட்டார். அவர்களே புரட்சி இயக்கம் பிரயோசன மற்றதென்றும், தங்களுக்கெல்லாம் அஹிம்சையில் நம்பிக்கை ஏற்பட்டுவிட்டதாகவும் பகிரங்கமாக அதுவும் இந்தியா சர்க்கார் உள் நாட்டிலாகா மூலம் மகாத்மாவுக்குத் தெரிவித்திருக்கிறார்கள். ஆதலின் மகாத்மாவின் அஹிம்சா தர்மம் வெற்றி பெற்றுவிட்டது என்பதில் சந்தேகமில்லை. இனியும் அரசாங்கத்தார் சாக்குபோக்குகளைச் சொல்லிக்கொண்டு தீவிர அடக்குமுறைகளை அனுஷ்டியாமல் உடனே அந்தமான் கைதிகளை விடுதலை செய்து தேசத்தில் அமைதியை உண்டாக்குவதுடன் மகாத்மாவின் சாத்வீக இயக்கத்துக்கு ஆதரவளிப்பார்களென்றும் நம்புகிறோம்.

---

## ராஜாஜியின் நிதி நிபுணத்துவம்

நமது தமிழ்நாட்டின் ஒப்பற்ற தலைவரான ஸ்ரீ. ஸி. ராஜகோபாலாசாரியார் ராஜ தந்திரத்திலும், அரசியல் சட்ட விவகாரங்களிலும், தேச பக்தியிலும் மிகச் சிறந்தவர் என்பது அனைவர்க்கும் தெரிந்த விஷயம். இத்

துறைகளில் இவ்வளவு சிறப்பு அவருக்கு இருந்தபோதிலும் நிதி சம்பந்த மாக அவருக்கு அதிக ஆற்றல் இருப்பதற்கு நியாயமில்லை யென்றும், ஆத லின் நிதி மந்திரி பதவியையும் அவர் எற்றுக் கொண்டதால் அவ் விஷயத் தில் எவ்வாறு அவரது செயல்கள் இருக்குமோ என்றும் பலர் சந்தேகப் பட்டதுண்டு. ஆனால் அவர் சென்னை ஜனப்பிரதிநிதி சபை, சென்னை சட்டசபை ஆகிய இரு சபைகளிலும் செப்டம்பர் மாதம் முதல் தேதியன்று சமர்ப்பித்த 1937-38-ஆம் வருஷத்திய பட்ஜெட் அவ ரது நிதி நிபுணத்துவத்தையும் நன்ருக விளக்கிவிட்டது. சென்னை ஜனப் பிரதிநிதி சபையிலுள்ள ஸ்ரீமான்கள் முகம்மது ஷம்னத், அப்பாதுரைப் பிள்ளை, வில்லியம் ரைட் முதலிய எதிர்கட்சிப் பிரமுகர்களே ராஜாஜியின் நிபுணத்துவத்தைப் பாராட்டி யிருக்கிருர்களென்பது குறிப்பிடத்தக்கது. காங்கிரஸ் மந்திரி சபையாக இருப்பதாலேயே அதைப் பாராட்டிவிட வேண்டுமென்பது நமது கருத்தல்ல. தவறுகள் நிகழுமாயின் அதை எடுத் துக் காட்டித் திருத்துவது எப்படி நமது கடமையாக இருக்கிறதோ அது போலவே சமயத்தில் பாராட்டியும் உற்சாகத்தை உண்டாக்க வேண்டிய தும் நமது கடமையாகும். ஸ்ரீ ராஜாஜி அவர்களே, இது பரிபூர்ணமான காங்கிரஸ் பட்ஜெட் அல்லவென்றும், இப்போது கிடைத்த அவகாசத்தில் இதற்குக் காங்கிரஸ் சாயல் மட்டுமே கொடுக்க முடிந்ததென்றும் தெளிவாக ஒப்புக் கொண்டிருப்பது அவரது பெருந் தன்மையையே காட்டுகின்றது. தீவிர காங்கிரஸ் வாதிகளுக்கு திருப்தி இல்லாமலிருக்கலாம். அவர்களும் அடுத்த வருஷப் பட்ஜெட்டைப் பார்த்த பிறகுதான் காங்கிரஸ்காரர்கள் பதவி எற்றதன் பலாபலனை அறிய முடியுமேயொழிய இந்த பட்ஜெட்டைக் கொண்டே ஒருவித முடிவுக்கு வருவது அவசரப்பட்ட செயலாகும். பட் ஜெட்டிலுள்ள குறைகளைத் தேடிக் கண்டுபிடித்து அதை வெளியாக்குவதே எதிர் கட்சியினரின் வேலையாக இருந்தும் அவர்களே அவ்வாறு செய்யா மல் பொதுவாகப் பாராட்டி விட்டதிலிருந்தே இந்த பட்ஜெட் திறமை யானதென்பது தெளிவாகிறது. ஐரோப்பிய மெம்பர் ஸர். வில்லியம்ரைட், இவ்வளவு சீக்கிரத்தில் சிக்கலான நிதி விவகாரங்களைச் சமாளித்து திறமை யான ஒரு பட்ஜெட்டைச் சமர்ப்பித்ததற்காகப் பிரதம மந்திரியைப் பாராட்டியது குறிப்பிடத் தக்கது. ஜனவரி மாதத்திலோ அல்லது எப்ரல் ஆரம்பத்திலோ இந்த பட்ஜெட்டைத் தயாரிக்கும் நிலைமை எற்பட்டிருக்கு மானல் இது இன்னும் விசேஷ காங்கிரஸ் அம்சங்களை யுடையதாக இருந் திருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

---

## பட்ஜெட்டிலுள்ள விசேஷ அம்சங்கள்

காங்கிரஸ் மந்திரி சபையினர் தயாரித்த இந்த வரவு செலவு திட்டத்தி லுள்ள விசேஷ அம்சங்களை மட்டும் கவனிப்போம். சென்ற வருஷத்தை விட இவ்வருஷம் கல்வி, சுகாதாரம், தொழில், விவசாயம் முதலிய எல்லா செலவினங்களுக்கும் அதிகமான தொகை ஒதுக்கி வைக்கப் பட்டிருக் கிறது. விவசாயிகளின் கஷ்டங்களைக் குறைப்பதில் பெரிய மாறுதல்களை எற்படுத்த விருப்பங் கொண்டிருந்த போதிலும் இந்த பட்ஜெட்டிலேயே அவற்றைப் புகுத்த அவகாசமில்லாமல் போனதால் 75 லக்ஷம் ரூபாய் வரி வஜா அளிப்பதுடன் கடன் சுமையை நிவர்த்திப்பதற்காக விவசாயிகளுக்

குக் கடன் கொடுக்க 30 லட்சம் ரூபாயும் ஒதுக்கி வைக்கப்பட் டிருக்கிறது. காங்கிரஸ் கொள்கையாகிய மதுவிலக்கை அமுலில் கொண்டுவரும் பொருட்டு முதற் படியாக சேலம் ஜில்லாவில் மதுபான வியாபாரத்தை ஒழித்து விட்டதால் 14 லக்ஷம் நஷ்டம் ஏற்படுவது ஏற்றுக் கொள்ளப்பட் டிருக்கிறது. சிறையிலுள்ள கைதிகளுக்குத் தினசரி காலணு மோராவது கொடுக்க ஏற்பாடு செய்ததால் முக்கால் லக்ஷம் செலவாகிறது. இது மட்டு மன்றி கையால் நூற்கும் தொழில் அபிவிருத்தி யடைந்து ஏழை விவசாயி கள் சௌக்ய மடைவதற்காக அத்தொழில் முன்னேற்றத்துக் கென இரண்டு லட்சம் ஒதுக்கி வைக்கப்பட் டிருக்கிறது. கைத்தறிகளுக் குப் பாதுகாப்பு அளிக்கும் பொருட்டு கைத்தறி ஆடைக ளல்லாத இதர ஜவுளி வர்த்தகர்களுக்கு உபாயமாக லைசென்ஸ் கட்டணம் ஏற்படுத்த உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. கிராம ஜனங்களின் சௌகரியத்தைக் கவ னிப்பது தான் காங்கிரசின் லக்ஷிய மாதலால், வாழ்க்கைக்கு எல்லாவற்றை யும்விட முக்கியமாகத் தேவையாக இருப்பது சுத்த ஜலமாதலாலும் ஜல சப்ளைக்காகவும், சாக்கடைத் திட்டம்போன்ற சுகாதார முறைகளுக்காக வும் பணம் ஒதுக்கப்பட்டு அதற்கான ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன. மற் றும் மின்சார திட்டமபோன்ற வருமானத்தை யளிக்கக் கூடியதும், பலருக் கும் தொழிலை யளிக்கக்கூடியதுமான தொழில்களை ஆரம்பிக்கவும் ஏற்பாடு செய்யப்பட் டிருக்கிறது. எல்லாவற்றையும் விட முக்கியமாக நிர்வாகச் செலவைக் குறைக்கும் உத்தேசத்துடன் உத்தியோகஸ்தர்களுக்கும் அதிக கஷ்டத்தைத் தராத வகையில் புடித்தரமான முறையில் சம்பள வெட்டுக் கும் ஏற்பாடு செய்யப்பட் டிருக்கிறது. இதனல் அடுத்த வருஷத்தில் இன்னும் அதிகமான சீர்திருத்தங்கள் செய்ய வழியாகிறது. இவ்வளவு விசேஷ அம்சங்களுடன் கூடியதாக இந்த பட்ஜெட் இருந்தபோதிலும் கனம் பிரதம மந்திரி அவர்களே ஒப்புக்கொள்வது போல இது பூரணமான காங்கிரஸ் பட்ஜட் ஆகாது என்பது மட்டும் உண்மையே. அடுத்த வரு ஷத்தில் கனம். ராஜாஜி பரிபூரணமான மாறுதலை உண்டாக்குவார் என்று நம்புகிறோம். அடுத்த ஆண்டும் சரியான மாறுதல்களை உண்டுபண்ண முடியவில்லை யென்றால் காங்கிரஸ் பதவி ஏற்றதால் பலனுண்டா என்று கவனிக்க வேண்டியதுதான். ஆகவே அதுவரையில் மகா ஜனங்களும், காங்கிரஸ் தீவிர வாதிகளும் பொறுமையுடன் இருக்க வேண்டுமென்பதே எமது அபிப்பிராயம்.

---

## விவசாயிகள் கடனும் காங்கிரஸ் மந்திரிகளும்

இந்தியா விவசாய நாடு என்பது அனைவர்க்கும் தெரிந்த விஷயம். ஆகவே விவசாயிகளான கிராமவாசிகள் தான் இந்தியாவின் முதுகெலும்பு போல் இருக்கின்றனர். அவர்கள் சுபீக்ஷமாகவும் சௌகரியமாகவும் உற் சாகமாகவும் இருந்தால் தான் பொதுவாகத் தேசம் சுபீக்ஷமடைய முடியும். இக் காலத்திலோ கிராமவாசிகளின் துயரம் எல்லையற்றது. அவர்களு டைய துயரங்க ளனைத்திற்கும் அடிப்படையாக இருப்பது தாங்க முடியாத கடன் சுமையே யாகும். 'கடன் பட்டார் நெஞ்சம்போல் கலங்கினன் இலங்கை வேந்தன்' என்பது போலச் சமாளிக்க முடியாத கடன் தொல்லை யால் அவதிப்படும் கிராமவாசிகள் வாழ்க்கையில் உற்சாக மற்றவர்களாய் இரா

வில் தூக்கமுமின்றி அதே கவலையுடன் வாடி வதங்குகின்றனர். விவசாயிகளின் துயரத்தைப்பற்றி நமது காங்கிரஸ் மந்திரிகளில் ஒருவரான கனம் எஸ். ராமநாதன் அவர்கள் சென்னை பொருளாதார சாஸ்திரமாணவர்கள் கூட்டத்தில் உள்ளபடி கேட்போர் மனமும் கரையும்படி வர்ணித்திருக்கிறார். விவசாயிகள் நிலைமை நாயினும் கடையானது என்று கனம் மந்திரி கூறுவது உண்மையே யாகும். இத்தகைய அவதியிலுள்ள கிராமவாசிகளை வைத்துக் கொண்டு கிராம புனருத்தாரணமென்றும், விவசாயத்தில் நூதன முறைகளை அனுஷ்டித்தல் என்றும் பேசிக்கொண்டிருப்பதில் பயனில்லை. மகாத்மாஜியின் கிராம புனருத்தாரண இயக்கத்தாலும், குடிசைத் தொழில்களுக்கு மதிப்பு ஏற்படுவதாலும் விவசாயிகளின் வருமானம் ஓரளவு உயருமென்பது வாஸ்தவமேயாயினும், கடன் பட்ட அவர்களுடைய நெஞ்சம் எப்போதும் குழப்பத்தில் தானே இருக்கும்; ஆதலின் கடன் தொல்லையை ஒழிப்பதற்கு முதலில் வழி காணவேண்டும் என்று மந்திரி கூறுவது கவனிக்கத் தக்கதாகும். எந்த முறையை அனுஷ்டிப்பது என்பதில் அபிப்பிராயபேதம் ஏற்படலாம். கனம். ராமநாதன் தமது சமதர்ம மனப்பான்மைக்கேற்ப விவசாயிகளின் கடனை அடியோடு தள்ளிக் கொடுத்து விடுவது நலம் என்கிறார். ஆயினும் அதில் என்ன சிரம மிருக்குமோ என்பதை உணர்ந்தே சர்க்காரே விவசாயிகளின் கடனை ஏற்றுக்கொண்டு அவர்களை அத் தொல்லையினின்றும் விலக்கிப் பிறகு சர்க்கார் அவர்களிட மிருந்து சிறிது சிறிதாகப் பணம் வசூலித்துக் கொள்ளவேண்டும் என்கிறார். அவர் பிரசங்கம் செய்த கூட்டத்துக்குத் தலைமை வகித்த பொருளாதார அறிஞரான டாக்டர். தாமஸ், மேற்கூறிய இரு வழிகளிலும் சிரம மிருக்கிறதென்றும் நில அடமான பாங்கிகள், கடன் சமரச போர்டுகள் ஆகியவற்றை ஏற்படுத்துவது, விவசாயிகளுக்கு எளிய வட்டிக்குக் கடன் கொடுக்கக் கூட்டுறவு சங்கங்கள் நியமிப்பது முதலிய பல வேலைகளை ஒன்றாகச் செய்து கடன் நிவாரணத்துக்கு வழி செய்யலாம் என்கிறார். எனினும் டாக்டர் தாமஸ் காங்கிரசைப் போன்ற செல்வாக்கும், ஏழைகளிடம் அனுதாபமும், தீவிரமான மனோபாவமும் உடைய மந்திரி சபையினரே இத்தகைய தீவிர காரியத்தில் இயங்க முடியுமென்றும் கூறினார். ஆதலின் சென்னை காங்கிரஸ் மந்திரி சபையினர் முறையை அனுஷ்டித்து விரைவில் விவசாயிகளைக் கடன் தொல்லையினின்றும் விடுவிக்க முயற்சிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறோம்.

---

## சர். விசுவேசுவரய்யாவின் யோசனை

இப்போது மாகாண சுய ஆட்சி அளிக்கப்பட்டிருப்பதாகச் சொல்லப்பட்டாலும் அது சரியான சுய ஆட்சிதானா என்பதிலேயே சந்தேக மிருக்கிறது. அதைப் பரீட்சிக்கவே இப்போது காங்கிரஸ்காரர்கள் அதிகாரம் வகித்திருக்கிறார்கள். எனினும் மந்திரிகளின் கையில் சில அதிகாரங்கள் இருக்கின்றன என்பது உண்மையே. ஆயினும் மத்ய சர்க்காரும் பொது ஜன ஆதிக்கத்திற் குட்படும் வரையில் தேசத்தின் தீவிரமான பொருளாதார மாறுதல்களை ஏற்படுத்த முடியாது என்பது வாஸ்தவம். இருந்தாலும் மாகாண சர்க்கார்கள் இப்போது முதலே பொருளாதார திட்டங்களை வகுத்துக்கொண்டு வேலை செய்ய வேண்டுமென்று சர். எம். விசுவேசு-

வரய்யா கூறுவதை எவரும் மறுக்க முடியாது. அவர் மைசூர் திவானுக இருந்தவரென்பதும், பொருளாதார சாஸ்திரத்தில் தக்க ஆராய்ச்சியும் அறிவும் உடையவர் எனபதும் அனைவருக்கும் தெரிந்த விஷயமே. அவர் சமீபத்தில் புனுவில் பம்பாய் சர்க்கார் பிரதம மந்திரி ஸ்ரீ. கெர் தலைமையில் கூடிய ஒரு கூட்டத்தில் தெரிவித்துள்ள யோசனைகளை ஒவ்வொரு மாகாண சர்க்காரும் கவனிக்க வேண்டியது அவசியமாகும். அந்த அறிஞர், மாகாணங்கள் 5 வருஷத்தில் நிறைவேற்றக் கூடிய பொருளாதார திட்டத்துடன் வேலை செய்ய வேண்டுமென்றும், பெரிய கைத்தொழில்களை ஆரம்பித்து தேசமெங்கும் கைத்தொழில் அபிவிருத்தி யுண்டாகும்படி செய்ய வேண்டு மென்றும், குடிசைத் தொழில்களையும் ஆதரிக்க வேண்டுமென்றும், பொது ஜனங்களுக்குக் கல்வி போதித்து எல்லோருக்கும் எழுதப் படிக்கத் தெரியுமாறு செய்ய வேண்டு மென்றும் தெரிவித்திருக்கிருர். இந்த யோசனைக ளனைத்தும் முக்கியமாகக் காங்கிரஸ் மந்திரி சபையினரால் கவனிக்க வேண்டியவைகளே யாகும். நமது மாகாண பிரதம மந்திரி கனம். ராஜாஜி அவர்கள் அடுத்த வருஷ பட்ஜெட் தயாரிப்பதற்குள் சர். விசுவேசுவரய்யாவின் இந்த யோசனைகளையும் கவனித்து அவற்றை அடுத்த வருஷம் முதலேனும் அமுலுக்குக் கொண்டுவர முயற்சிப்பார் என்று நம்புகிறோம்.

---

## இங்கிலாந்து மக்களின் கடமை

இங்கிலாந்து மக்களின் பிரதிநிதி சபையாக இருப்பது தான் பார்லிமெண்டு. அந்த சபைதான் இந்தியாவுக்குப் புதிய அரசியலை வழங்கியிருக்கிறது. அந்த அரசியல் நமக்குத் திருப்தியளிப்பதாக இல்லை யென்றுலும் பிரிட்டிஷ் சர்க்கார் நிர்வாகிகள் இந்த அரசியல் மூலம் இந்தியாவுக்கு மாகாண சுய ஆட்சி அளித்திருப்பதாகவும், மாகாணங்களில் மந்திரிகளே சட்டசபைக்கு ஜவாப்தாரிகளாக இருந்து மாகாணத்தின் நலனை நன்கு கவனிக்கலா மென்றும் கூறுகிருர்கள். இதில் காங்கிரஸ் தலைவர்களுக்கு நம்பிக்கை இல்லாமல் இருந்ததால் தான் தாங்கள் பதவி ஏற்பதற்குச் சில நிபந்தனைகளைக் கேட்டார்கள். அந்த நிபந்தனை நேர்முகமாகக் கொடுக்கப்படா விட்டாலும் மந்திரிகளின் தினசரி வேலைகளில் கவர்னர்கள் தலையிடுவது சாமான்யமாக இராது என்று காங்கிரஸ்காரர்களுக்கு நம்பிக்கை உண்டாகும்படி இந்தியா மந்திரியும் வைசிராயும் சர்க்கார் சார்பாக அறிக்கைகள் வெளியிட்டதால், காங்கிரஸ்காரர்கள் பதவி ஏற்றுப் பிரிட்டிஷ் சர்க்கார் மாகாண சுய ஆட்சியை அளித்ததாகக் கூறுவது உண்மைதானு என்பதைப் பரீட்சை செய்து வருகின்றனர். இந்த சமயத்தில் பிரிட்டிஷாரின் கடமை யொன்று மாகாண சர்க்கார்கள் சார்பாக இருக்கிறது. அதை அவர்கள் செய்ய வில்லை யென்றுல் மற்றப் பேச்சுக ளெல்லாம் வீண் பேச்சு தான். அந்தக் கடமை என்ன என்பதையும் சென்னை சர்க்கார் பிரதம மந்திரி கனம் ராஜகோபாலாசாரியார் லண்டனில் வெளியாகும் 'டெய்லி ஹெரால்ட்' என்னும் பத்திரிகைக்கு அனுப்பியுள்ள செய்தியின் மூலம் ஞாபகப்படுத்தி யிருக்கிருர். அவர் மாகாண சுய ஆட்சி பெற்றதாகக் கூறப்படும் ஒரு மாகாண அரசியலின் தலைவராக இருப்பதால் மாகாண வாசிகளின் நன்மைகளை உத்தேசித்துச் சில காரியங்களைச் செய்ய விரும்பு

கிறார். அவ்வாறு செய்வதற்குப் பணம் தேவை. அதிக வரிகளையோ விதிக்க முடியாது. இப்போதுள்ள வரிச் சுமையையே தாங்க முடியாமல் விவசாயிகள் அவஸ்தைப் படுகிறார்கள். ஆதலால் அதிக வரிகளை விதிக்காமல் பணத்துக்கு வகை செய்யவேண்டி யிருக்கின்றது. இதற்கு வழி நிர்வாகச் செலவைக் குறைக்க வேண்டியது அவசியம். கனம். ராஜாஜி இங்கிலாந்துக்கு அனுப்பியுள்ள செய்தியில், ராணுவச் செலவில் பெரும் பாகத்தைக் குறைத்து, மாகாண கவர்ன்மெண்டுகள் புதிய மாறுதலை உண்டு பண்ண அந்தப் பணத்தை மத்ய கவர்ன்மெண்டு அவற்றிற்கு அளிக்குமாறு இங்கிலாந்து செய்தாலல்லது மாகாண காங்கிரஸ் மந்திரிகளுக்கு இங்கிலாந்து நேர்மையான இடமளித்ததாகக் கூறுவதற்கில்லை என்று தெரிவித்துள்ளார். 'மான்செஸ்டர் கார்டியன்' பத்திரிகையும் முன்னமே ராணுவச் செலவைக் குறைக்க வேண்டிய அவசியத்தை வற்புறுத்தி யிருக்கிறது. இங்கிலாந்து வாசிகள் ராஜாஜியின் வேண்டுகோளின் உண்மையை உணர்ந்து தக்கப்படி நடந்து கொள்வார்களென்று நம்புகிறோம்.

---

## மேல் நாடும் கீழ் நாடும்

"மேல் நாடுகள் மேல் நாடுகள்தான்; கீழ்நாடுகள் கீழ்நாடுகள்தான்; இவை இரண்டும் ஒன்றாகச் சேரப்போவதில்லை" என்று சிலர் சாதாரணமாகச் சொல்வது வழக்கம். ஒரு காலத்தில் உலக நிலைமை அப்படித்தான் இருந்தது. மேல் நாடுகளும் கீழ் நாடுகளும் எந்தத் துறையிலும் சேர்வது கஷ்டம் என்று கருதவேண்டி யிருந்தது. ஆனால், இன்று உலக நிலையே மாறி இருக்கிறது. உலகத்தில் புதிய மனோபாவம் தோன்றி வருகிறது. இவ்விரு நாடுகளும் ஒன்று சேர்ந்து வருகின்றன. இங்கிலாந்து ஆக்ஸ்போர்டு சர்வ கலாசாலையில் கீழ்நாட்டுத் தத்துவ போதகாசிரியராகவுள்ள அறிஞர். ராதாகிருஷ்ணன் இந்த அபிப்பிராயத்தைத் தெரிவித்திருக்கிறார். ஆசியா தேசத்து நாகரிகம் மானிட சமூக உணர்ச்சியில் ஊடுருவி வருகிறதாம். ஆசியாவின் முக்கிய தேசங்களாகிய இந்தியாவும் சீனாவும் பிராபல்யமாக இல்லாவிட்டாலும் மற்ற நாடுகள் இவற்றைப்பற்றி அறிய ஆசைபடும்படியான விசேஷ சக்தியையும், வாழ்க்கை ரகசியங்களையும் இவை பெற்றிருப்பதாக அந்த அறிஞர் கூறுகிறார். மேலும் மானிட சமூகத்தின் கதிமோக்ஷமே மேல் நாடுகள் இந்தியாவினிட மிருந்து அஹிம்சை, அன்பு, சகிப்புத்தன்மை, பொறுமை முதலியவற்றைக் கற்றுக் கொள்வதிலேயே இருக்கிறதே யொழிய இந்தியா மேனாடுகளிலிருந்து துவேஷம், பலாத்காரம் முதலியவற்றைக் கற்பதில் இல்லை என்றும் உலகமே அறிந்து வருகிறது. இப்போது கீழ்நாடுகளும் மேல்நாடுகளும் பழைய நிலைமையினின்றும் மாறி வருவதால் பரஸ்பரம் இரண்டு மானிட சமூகத்துக்குத் துணைபுரியும் ஆர்வத்தில் அவற்றினிடையே நெருங்கிய சம்பந்தம் ஏற்படுவதால் இவ்விரு நாடுகளும் விரைவில் ஒன்று சேரும் என்பது நிச்சயம். எனினும் உலகத்துக்கே புதிய மனோபாவத்தை அளிக்கக் கூடிய விசேஷ சக்தியைத் தன்னிடம் அடக்கிக் கொண்டுள்ள இந்தியா உண்மையில் உலகத்துக்கு இன்னும் சிறப்பான விதத்தில் சேவை செய்ய வேண்டுமானால், இந்தியா சுதந்தரம் பெற்ற நாடாக இருக்கவேண்டும். புதிய மனோபாவம் பெற்றுவரும் மேனாடுகள் இந்திய சுதந்தரத்துக்கும் துணையாக இருக்குமென்று நம்புகிறோம்.

தொடர் கதை.

# மாயா விரோதி

(ஸி. எஸ். இராமன், எம். ஏ., எல். டி.)



(159-வது பக்கத் தொடர்ச்சி.)

மாயாவிரோதியை நேரில் காணவேண்டும்; அவனோடு பேச வேண்டும் எனும் எண்ணத்தை அவர்கள் உறுதியாகக் கொண்டிருந்தார்கள். அதை அறிந்த கனகன் கப்பல் அதிகாரிகளைத் தனது புதிய அறையில்—காப்டனுடைய அறையில்—பார்க்க விரும்புவதாகச் செய்தி சொல்லி அனுப்பித்தான்.

கப்பல் அதிகார்ரிகள் காலஹரணம் செய்யாமல் கப்பித்தானுக வேலை பார்க்கும் கனகனுடைய அறைக்குச் சென்றார்கள். அவர்களை கலக்க மற்ற முகத்தோடு கனகன் வரவேற்று, ஆசனங்களில் அமர்ந்து கொள்ளுமாறு செய்து, பல ஆபீஸ் கடிதங்களைக் கொஞ்ச நேரம் படித்தான். அதைக் கண்ட ஏனைய கப்பலதிகாரிகளுக்கு கொஞ்சம் நம்பிக்கை ஏற்பட்டது. மாயாவிரோதி சௌக்கியமாக இருப்பதனுல் தான் கனகன் கவலையற்றவனுகக் காணப்படுவதாக அவர்கள் நினைத்துக் கொண்டவர்களாய், சிறிது தைரியம் அடைந்தனர். உண்மை வேறு விதம். கனகன் மிக்க கவலையும் களைப்பும் கொண்டிருந்தாலும் அவை அவர்களுக்குப் புலனுகக் கூடாதென்று கருதியே முகத்தில் நம்பிக்கை கொண்டவன் போல் தோன்றினன்.

சிறிது நேரமானதும் கனகன் அவர்களுடைய காரியங்களைப் பற்றியும், கைதிகளைப் பற்றியும் சகஜமாகப் பேசுவது போல் பேசியிருந்து விட்டு, அவர்கள் முகங்களைக் கூர்ந்து கவனித்தான்.

மாயாவிரோதியைப் பற்றி ஒரு வார்த்தையும் பேசாததால் அவர்கள் ஆச்சரிய மடைந்தனர். மேலும் அதைப் பற்றிக் கனகன் பேசுவான் என்று எண்ணியே அங்கு வந்தனர்.

“நீங்கள் எல்லோரும் போகலாம்,” என்று “ஆக்டிங்’ காப்டன் கனகன் கூறியதும், அவர்களுடைய ஆச்சரியம் சிகரத்தைத் தொடுவதாயிருந்தது.

ஆச்சரியமும் கவலையும் கொண்டவர்களாய் அவர்கள் தங்களுடைய ஆசனங்களை விட்டும் எழுந்திருக்கவில்லை.

“தற்காலிகத் தலைவரே, நாம் இன்னும் இரண்டொரு தினங்களுள் தூத்துக்குடியருகே செல்வோம் அன்றோ?” என்று சூபரின்டென்ட் விநாயகமூர்த்தி மரியாதையுடனே கனகனை கேட்டான்.

“ஆம், அதைப்பற்றி என்ன?” என்று கனகன் வினவினன்.

"அதற்குள் முக்கியமான விஷயங்களைப் பற்றி நாம் தீர்மானங்களைச் செய்ய வேண்டும்."

"உம்............பிறகு?"

"மாயாவிரோதி யில்லாமல் நாம் அவற்றைத் தீர்மானிக்க முடியாது. தலைவரே, நாங்கள் எல்லோரும் மாயாவிரோதியிடம் வைத்திருக்கும் அன்பும் விஸ்வாசமும் நீங்கள் அறியாததன்று. அவருக்கு உடம்பு என்ன? நாங்கள் மாயாவிரோதியைப் பார்க்க வேண்டும். உண்மை நிலைமை என்ன என்பதை அறிந்து கொள்ள வேண்டும்," என்று விநாயகமூர்த்தி விநயத்தோடு உரைத்தான்.

"நாங்கள் மாயாவியைப் பார்க்க வேண்டும்! பார்க்க வேண்டும்!" என்று ஏனையோர் ஆவலோடும் உறுதியோடும் சொன்னார்கள்.

"அது முடியாத காரியம்," என்று கனகன் பதில் கொடுத்தான்.

"நீங்கள் சொல்வதை நாங்கள் ஒருவாறு ஏற்றுக்கொள்ளுகிறோம். எங்களுள் ஒருவர் மாயாவியை நேரில் கண்டு பேசிவர வேண்டும். நாங்கள் சௌடப்பனை மாயாவியிடம் போய், ஐந்து நிமிஷங்கள் வரையில் பேசி வர விரும்புகிறோம். நாங்கள் வேறு எதையும் கேட்பதில்லை. சௌடப்பன் பார்த்துவிட்டு வந்தால் அது எங்களது புண்ணுன மனதிற்கு மிக்க ஆறுதலைக் கொடுக்கும்," என்று புத்தரைப் போல் காணப்பட்ட விஸ்வநாதன் அழுத்தந் திருத்தமாகப் பேசினான்.

"ஓ! இது முடியாது! நான் ஒப்புக் கொள்ள மாட்டேன்," என்று கப்பித்தான் பதவியைத் தாங்கிய கனகன் பிடிவாதமாக மறுமொழி தந்தான்.

"அப்படியானால் நாங்கள் சிறைச்சாலைக் கதவுக்கு அருகே நின்று பேசுவோம்," என்று அவர்கள் சொல்லினர்.

"மாயாவிரோதி இப்பொழுது யாரோடும் பேச மாட்டார்," என்றான் கனகன்.

"ஏன்?" என்று கேட்டான் விஸ்வநாதன்.

"ஏனா? அவரால் பேச முடியாது."

"அப்படியானால் மாயாவிரோதி ஏன் ஜெமீன்தாருடைய அறையில் இருக்கிறார் என்பதை எழுதட்டும். அதைப் படித்த பின் நாங்கள் சந்தோஷ மடைவோம்," என்றான் விஸ்வநாதன்.

"மாயாவிரோதி எழுதவும் முடியாது," என்று கனகன் தயை தாட்சண்ய மின்றிக் கூறினான்.

அதைக் கேட்டதும் விஸ்வநாதனுக்கும் ஏனைய சகாக்களுக்கும் அளவிட முடியாத சினம் பொங்கி யெழுந்தது. விஸ்வநாதன் பயபக்தி மரியாதையை விடுத்து, முனிவு மிக்கு, கோபக் குறி பறக்க, கனகனை நோக்கி, "கனகா! என்ன உளறுகிறாய்? நீ எங்களுக்கு சமாதானம் சொன்னாலொழிய இவ் விடத்தை விட்டுச் செல்ல முடியாது. மாயாவிரோதியை நீ என்ன செய்தாய்? சொல்," என்றான்.

"நீங்கள் என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள். நான் ஒன்றும் சொல்லமாட்டேன்," என்று பிடிவாதம் பிடித்த கனகன் பயமின்றிக் கூறினான்.

"நாங்கள் சிறைச்சாலை அறையினுள் பலாத்காரமாகப் பிரவேசிப்போம்,"என்று மற்ற கைதியதிகாரிகள் ஆக்ரோஷத்தோடு கூவினார்கள்.

"உங்களுடைய பிரியம். பின்பு ஜெமீந்தாருடைய பணத்திற்கு நீங்கள் உரியவர்கள் ஆக முடியாது. இதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்," என்று பணத்தைப் பற்றி நினைவூட்டினான் கனகன்.

"ஓ! லட்ச ரூபாய்கள்! அதை நினைத்தா மாயாவிரோதி இராஜமன்னாரிடம் இருக்கிறார்!" என்று சாந்த மடைந்தார்கள் ஏனைய மனிதர்கள்.

"வேறு என்ன வென்று நினைத்துக் கொண்டீர்கள்? ஜெமீந்தார் பணம் கொடுப்பதைப் பற்றித் தான் மாயாவிரோதி அங்கு இருக்கிறார். காரியம் முடிந்த பின் நீங்கள் அவரைக் கண்டு தாராளமாகப் பேசிக் கொள்ளலாம். கனவான்களே, நீங்கள் உங்களுடைய காரியங்களைக் கவனிக்கப் போய் வாருங்கள்," என்றான் கனகன்.

அவர்கள் சிறிது ஆச்சரியமும் சந்தேகமும் கலந்த மனதோடு கப்பித்தானுடைய அறையை விட்டு வெளியே சென்றார்கள். சௌடப்பன் ஒன்றும் பேசவில்லை. அவர்கள் உண்மை எப்படி இருக்கும் என்று கேட்டதற்கு அவன் தீர்க்க ஆலோசனை செய்ததன் பயனாக ஒரு கருத்தைக் கொண்டிருப்பதாகச் சொன்னான்.

மாயாவிரோதிக்கு பேசவும் எழுதவும் முடியாது என்று கனகன் கூறியதை அவர்கள் சிந்தித்துப் பார்த்தார்கள். கனகன் ஏதாவது சூழ்ச்சி செய்கிறானோ என்று ஐயப்பட்டார்கள்.

மறுநாள் கனகனும் காந்திமதிச் சீமாட்டியும் ஜெமீந்தாருடைய அறையினுள் இருந்த பொழுது சாகுந் தருவாயிலிருக்கும் ஒரு நாய் எப்படி ஊளையிடுமோ அப்படியே கோரமான, சகிக்க முடியாத ஊளை அந்த அறையிலிருந்தும் எழுந்து, சௌடப்பன் முதலானவர்களை அஞ்சுமாறு செய்தது. கப்பலதிகாரிகளுள் சிலரும் மற்றும் சில சாதாரணக் கைதிகளும் அந்த அறையைச் சூழ்ந்து நின்றார்கள். கொடிய ஊளைச் சப்தம் மறுபடியும் கோரமாக எழுந்து அவர்கள் யாவருக்கும் சொல்லொணாத வகையில் திகிலையும் பயத்தையும் கொடுத்து விட்டது. பன்முறை ஊளைகள் வந்த பொழுது துன்பத்தில் சகிக்க முடியாத வேதனையை யநுபவித்த மனிதனைப் போல் ஜெமீந்தார் இராஜமன்னாருடைய பேச்சுக்குரல் அவர்களுக்கு கேட்டது. ஆனால் அப்பிரபு என்ன பேசுகிறார் என்பது மட்டும் கேட்கவில்லை.

ஊளைகள் பலப்பட்டு பின்பு கூவுதல்கள் ஆயின; பின் கோபமுற்ற ஊளைகள்; கடைசியில் அழுகை. திடீரென்று அவை நின்று விட்டன. அவற்றையெல்லாம் நெஞ்சுபதற, துடிக்க, வெடிக்க கேட்டுக்கொண்டிருந்த கைதிகள் கண்கள் பயத்தைக் காண்பிக்க, கால்மணி நேரம் அங்கேயே நின்று கொண்டிருந்தனர். பின்பு ஒரு சப்தமும் கேளாமல் போனதால் கைதிகள் கூட்டம் கரைந்து போயிற்று. சௌடப்பனுக்கு மட்டும் துக்கம் சொல்லி முடியாது. தனது எஜமான் நண்பன் ஆன மாயாவிரோ

திக்கு என்ன நேரிட்டது என்பதை அறிய வழிவகையின்றி மனம் பதறி, ஆவி சோர்ந்து, அங்கேயே உட்கார்ந்து விட்டான்.

மறுநாள் தூத்துக்குடி துறைமுகத்தை "ஜலதூதன்" அணுகிக்கொண்டிருந்தது. கப்பல் துறைமுகத்தினுள் வெளியிலேயே, சௌடப்பன் பொருட்டு நிறுத்தப் படுவதாக சௌடப்பனுக்கு அறிவிக்கப் பட்டது. அப்பொழுது கனகன் அவனை அணுகினான்.

"சௌடி, கப்பல் இன்னும் சில மணிகளுள் துறைமுகத்திற்கு வெளியே உன் பொருட்டு நிற்கப் போகிறது. நீ இங்கே இனிமேல் இப்படி உட்காரலாகாது. ஜெமீந்தாருடைய கடிதங்களை யெடுத்துக் கொண்டு நமது படகிற்குப் போய் ஏறிக் கொள். நீ செய்ய வேண்டிய காரியங்களை மாயாவிரோதியே தமது கையினால் எழுதியிருக்கிறார்," என்றான்.

மாயாவிரோதியைப் பார்த்தாலொழிய தான் போவதில்லை யென்று சௌடப்பன் கனகனிடம் சொல்லி விட்டான். சிறிது நேரமானதும் கனகன் அங்கே வந்து "நீ மாயாவிரோதியைக் காணலாம்," என்றான்.

அச் செய்தியைக் கேட்டதும் சௌடப்பனும் ஏனைய மனிதர்களும் மிக்க சந்தோஷ மடைந்தார்கள்.

சந்தோஷ சாகரத்தில் மூழ்கிய சௌடப்பன் மாயாவிரோதியைப் பார்க்கச் சென்ற பொழுது விளக்கு வைக்கும் நேரம்; ஜெமீந்தாருடைய சிறையறையினுள் சென்றதும் அங்கு விளக்கு மிகவும் மங்கலாக எரிந்து கொண்டிருப்பதைக் கண்டான். அறை முழுவதும் இருளாகவே யிருந்தது என்றே அவன் நினைத்துக் கொண்டான். விளக்கு ஏன் பிரகாசமான நிலைமையில் வைக்கப் படவில்லை என்று தனக்குள் எண்ணினான். அவனுக்கு அறைக்குள் ஏதும் இருப்பதாக அவன் கண்ணுக்குத் தெரியவில்லை. நான் கைந்து விநாடிகட்குப் பின் கொஞ்சம் கொஞ்சமாகத் தெரிய வாரம்பித்தது. சீமாட்டி ஒரு புறம் உட்கார்ந்து கொண்டிருந்தாள். சிறிது தூரத்தில் இரண்டு கட்டில்களின் மீது இரண்டு மனிதர்கள் படுத்துக் கொண்டிருப்பதை அவன் கண்டான். அவ் விருவருக்கும் சக்தி என்பதே இல்லாமல் சோர்ந்து கிடப்பதாக சௌடப்பன் நினைத்தான். யார் மாயாவிரோதி, யார் ஜெமீந்தார் என்பதே அவனுக்கு கண்டு பிடிக்கக் கூடவில்லை.

அப்பொழுது மாயாவிரோதியின் குரல் கேட்டது. அதை யறிந்து கொண்டதும் அவனுடைய சந்தேகம் ஓடிப்போய் விட்டது.

"இங்கே உட்கார், சௌடி." சௌடப்பன் ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான். மாயாவிரோதி மெதுவாகப் பேசினான்.

"மாயாவிரோதரே!" என்று காதோடு காது வைத்து ஈனஸ்வரத்தில் சௌடப்பன் கூப்பிட்டான். விசனம் அவனுடைய தொண்டையை யடைத்துக் கொண்டது.

"நீ போகுமுன் என்னைப் பார்க்க வேண்டும் என்று ஆசை கொண்டாயா?" என்று முத்தய்ய செட்டி கேட்டான்.

"ஆம்............நீங்கள் சௌக்கியமா?............இப்படியும் கஷ்டப் படுவீரா?" என்று சௌடப்பன் வருத்தத்தோடு கேட்டான். மேலும் அவனைப் பார்த்து, "உமது கையைப் பார்க்கட்டுமா?" என்று கேட்டான்.

"கூடாது. மாயாவிரோதியின் கரத்தை நீ தொடக் கூடாது. நீ உட்கார்ந்திருக்கும் இடத்திலேயே இரு. நகராதே," என்று கனகன் உத்தர விட்டான்.

"ஆம். கனகன் சொல்வது சரி. நீ என்னைத் தொடலாகாது. நான் கொடிய தொத்து வியாதியொன்றால் பிடிக்கப்பட்டு வருந்துகிறேன் என்பதை நீ அறிந்திருக்கலாகும்," என்று முத்தய்ய செட்டி ஈனக்குரலில் பேசினன்.

"நான் உம்மைச் சரியாகப் பார்க்கக் கூடவில்லை. மிக்க இருட்டாக இருக்கிறது. பிரகாசமான மின்சார தீபம் போட்டால் என்ன? நான் உமது முகத்தைப் பார்க்க வேண்டும். நீங்கள் எப்படி இந்த வியாதியை வைத்துக் கொண்டு சமாளிக்கிறீர்கள் என்பதைப் பற்றி நான் தெரிந்து கொள்ள ஆவல் கொண்டிருக்கிறேன்."

"உனக்காக இப்பொழுது வெளிச்சம் பிரகாசமாகப் போடமுடியாது. நான் ஒப்பமாட்டேன். மேலும் நமது நண்பர் முத்தய்ய செட்டியாருடைய கண்ணுக்கு வெளிச்சமே கூடாது," என்று கனகன் கடுகடுத்த முகத்துடன் மொழிந்தான்.

"ஐயோ, கடவுளே! உங்களுக்குச் சுயாதீனம் இல்லையா?" என்று பரிதபித்துப் பகன்றான் சௌடப்பன். 'சௌடி, நான் எல்லா விஷயங்களையும் பின்பு சொல்லுகிறேன். இப்போது நடக்கவேண்டிய காரியத்தை நீ நிறைவேற்றி வைக்க வேண்டும். கனகன் சொல்லுகிறபடி நீ நட. ஐந்து நிமிஷங்கட்கு மேல் நீ இங்கே இருக்கமுடியாது" என்றான் மாயாவிரோதி,

"ஐயோ! உமது குரல் எத்தனை பலஹீனமாக ஆகிவிட்டது! உமது குரல் என்று அறிவதுகூட கஷ்டமாக இருக்கிறது" என்று வருத்தத்தோடு சௌடப்பன் சொன்னன்.

"இவருக்கு மிக்க பலஹீனம் இருப்பதால் நீ இவருக்கு பிரயாசை உண்டாக்க கூடாது. சீக்கிரம் பேசிவிடு" என கனகன் கட்டளை யிட்டான்.

"சௌடி, நமது நண்பர்களிடம் சென்று கனகன் என்னை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொண் டிருப்பதாகச் சொல்லவேண்டும். என் உயிரைக் காப்பாற்றிவிட்டதாகச் சொல்லவும். மேலும் நான் கனகனைக் கப்பித்தாஞக இப்பொழுது நியமித்திருப்பதால் எல்லோரும் இவருக்குக் கீழ்ப் படிந்து நடக்கவேண்டும் என்பதையும் சொல்லு. கனகன் என்னைக் காப்பாற்றிவிட்டதால் என் பங்கு இவரை யடையவேண்டும்" என்று மிகவும் தூர்பலமான குரலில் மாயா விரோதி மெதுவாகப் பேசினன்.

அதைக்கேட்டு சௌடப்பன் மிக்க பரிதாபங் கொண்டான்.

"மேலும் ஜெமீந்தார் ஒரு லட்சத்தை இரண்டு லட்சங்களாக எழுதி வைத்துவிட்டார். எல்லாம் கடிதங்களில் எழுதிவைத்திருக்கிறோம். அதில் எழுபத்தைந்தாயிரம் ரூபாய்களை நீ கனகனுக்குச் சேர்ப்பித்து விட வேண்டும். நீ திரும்பி வருவதற்கு இரண்டு வாரங்கள் ஆகும். அதற்குள் நான் பூரண தேகசுகம் பெற்றுவிடுவேன் என்று நினைக்கிறேன்.........ஒருகால் .........நான்.........இற......ந்து போய்விட்டிருந்தால்........." என்று மாயாவிரோதி கூறுகையில் சௌடப்பன் அவனை இடைமறித்துப் பேசினன். (தொடரும்.)

# “ஆனந்தபோதினி” பஞ்சாங்கம்.

ஈசுவரஸு புரட்டாசிமீ—கலியுகாதி 5039, சாலிவாகனம் 1860,
பசலி 1347, கொல்லமாண்டு 1113, ஹிஜரி 1356,
இங்கிலீஷ் 1937ஸு செப்டம்பர்மீ—அக்டோபர்மீ

| புரட்டாசி | செப்டம்பர் / 1937ஸு அக்டோபர்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | வெள் | து36-13 | திரு26-35 | சித்60 | பரிவர்த்தனை துவாதசி |
| 2 | 18 | சனி | திர36-30 | அவி27-8 | சித்27-8அ | பிரதோஷம், யாத்திரை |
| 3 | 19 | ஞா | சது31-45 | சத26-3 | சித்60 | அனந்த விரதம், 8-க்குள் |
| 4 | 20 | திங் | ○27-33 | பூர23-35 | ம23-35சி | பௌர்ணமி [மழை |
| 5 | 21 | செவ் | பிர22-0 | உத்20-8 | அ20-8சித் | மாளயபட்ச ஆரம்பம் |
| 6 | 22 | புதன் | துதி15-55 | ரே15-55 | மர60 | |
| 7 | 23 | வியா | திரி9-30 | அஸ்11-28 | அ11-28சி | |
| 8 | 24 | வெள் | சது3-3 பஞ்56-45 | பர✻6-55 | சித்60 | |
| 9 | 25 | சனி | சஷ்50-50 | கிரு2-33 ரோ58-33 | அமி60 | |
| 10 | 26 | ஞா | சப்45-33 | மிரு55-10 | சித்60 | |
| 11 | 27 | திங் | அ40-40 | திரு52-18 | சி52-18அ | |
| 12 | 28 | செவ் | நவ36-33 | புன50-8 | சித்60 | |
| 13 | 29 | புதன் | தச33-5 | பூச48-38 | சித்60 | |
| 14 | 30 | வியா | ஏகா30-20 | ஆயி47-45 | சி47-45அ | சர்வ, மத்வ ஏகாதசி |
| 15 | 1 | வெள் | து28-25 | மக47-55 | ம47-55சி | கரிநாள், ஜய துவாதசி |
| 16 | 2 | சனி | திர27-25 | பூர48-48 | சி48-48ம | கேதார விரதம், மாச சிவ |
| 17 | 3 | ஞா | சது27-30 | உத்50-53 | அமி60 | வாகனமேற [ராத்திரி |
| 18 | 4 | திங் | ●28-35 | அஸ்54-8 | சி54-8பிர | சர்வ, பிதுரு மாளய அமா வர்சை, அரசபிரதக்ஷணம் |
| 19 | 5 | செவ் | பிர31-18 | சித்58-35 | சித்60 | நவராத்திரி ஆரம்பம் |
| 20 | 6 | புதன் | துதி34-58 | சுவா60 | சித்60 | சந்திர தெரிசனம் |
| 21 | 7 | வியா | திரி40-3 | சுவா4-20 | அ4-20சி | வியாதியஸ்தர் குளிக்க |
| 22 | 8 | வெள் | சது46-3 | வி11-15 | சித்60 | மாச சதுர்த்தி விரதம் |
| 23 | 9 | சனி | பஞ்52-40 | அ18-48 | சித்60 | உபாங்கலலிதா கௌரி வி |
| 24 | 10 | ஞா | சஷ்59-20 | கே26-40 | ம26-40அ | சஷ்டி, குளம்வெட்ட [ரதம் |
| 25 | 21 | திங் | சப்60 | மூல34-18 | சி34-18ம | சரஸ்வதி ஆவாஹனம் |
| 26 | 12 | செவ் | சப்5-20 | பூரா41-5 | சித41-5அ | கணிதாரம்பம் |
| 27 | 13 | புதன் | அ10-13 | உத்46-20 | அ46-20சி | துர்க்கை நவமி, சரஸ்வதி பூஜை, ஆயுத பூஜை |
| 28 | 14 | வியா | கவ13-18 | திரு49-55 | சித்60 | விஜயதசமி (விசேஷம்) |
| 29 | 15 | வெள் | தச14-27 | அவி51-30 | சித்60 | துவிதலா விரதாரம்பம் |
| 30 | 16 | சனி | ஏகா13-40 | சத50-55 | அ50-55ம | சர்வ, மத்வ ஏகாதசி, துலா ரவி நா-38-18 |

| | | | |
|---|---|---|---|
| சனி | | கே | |
| | 4-தனு-செ 4-சிம்ம-சுக் 18-கன்-புத 28-கன்-சுக் | | சுக் |
| | | | புத |
| குரு | செ ராகு | | சூரி |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE “ANANDA BODHINI” PRESS,
No. 6, LAWYER CHINNATHANBI MUDALI STREET, MADRAS.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம :

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு" — திருவள்ளுவர்.



தொகுதி 23 | ஈசுவர௵ ஐப்பசிமீ கஉ | பகுதி 4
1937௵ அக்டோபர்மீ 17உ

## கடவுள் வணக்கம்.

சோதியே சுடரே சூழொளி விளக்கே
சுரிகுழல் பணைமுலை மடந்தை
பாதியே பரனே பால்கொள்வெண் ணீற்றாய்
பங்கயத்து அயனு(ம்)மால் அறியா
நீதியே செல்வத் திருப்பெருந் துறையில்
நிறைமலர்க் குருந்தமே விய‌சீர்
ஆதியே அடியேன் ஆதரித்து அழைத்தால்
அதெந்துவே என்று அரு ளாயே. (1)

---

நிருத்தனே நிமலா நீற்றனே நெற்றிக்
கண்ணனே விண்ணுளோர் பிரானே
ஒருத்தனே உன்னை ஓலமிட்டு அலறி
உலகெலாந் தேடியுங் காணேன்
திருத்தமாம் பொய்கைத் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அருத்தனே அடியேன் ஆதரித்து அழைத்தால்
அதெந்துவே என்று அரு ளாயே. (2)

---

எங்கள்நா யகனே என்னுயிர்த் தலைவா
ஏலவார் குழலிமார் இருவர்
தங்கள்நா யகனே தக்கநற் காமன்
தனதுஉடல் தழலெழ விழித்த
செங்கண்நா யகனே திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அங்கணா அடியேன் ஆதரித்து அழைத்தால்
அதெந்துவே என்று அரு ளாயே. (3)

# அரும்பொருள் விளக்கம்

(இ-ள்) பரஞ்சோதியே! சோதிப்பிழம்பே! சுடர்விட்டுப் பிரகாசிக்கும் தீபமே! சுருண்ட கூந்தலையும், பருத்த கொங்கைகளையும் உடைய பார்வதி தேவியை இடப்பாகத்தில் கொண்டிருக்கும் சிவபெருமானே! பராபரனே! பால் போன்று வெண்மையான திருநீற்றைத் தரித்திருப்பவனே! தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவனும், மகாவிஷ்ணுவும் கண்டறியாத நீதிசொரூபனே! பல்வளங்களும் நிரம்பிய திருப்பெருந்துறையில் நிறைந்த மலர்களைக் கொண்ட குருந்தமரத்தின் கீழ் எழுந்தருளிய ஆதிமூலமே! அடியேன் ஆதரவோடு உன்னை யழைக்கும்போது 'அஞ்சாதே!' என்று கூறி ஆட்கொண் டருள்வாயாக. (எ—று.)

எத்துணை பெரிய தகுதி யுடையோராயினும் ஞானக்கண் கொண்டு பார்த்தாலன்றிப் புலப்படான் என்பார் 'பங்கயத்து அயனும்மால் அறியா நீதியே' என்றும், யாவர்க்கும் முன்னவன் இவன் ஒருவனே என்பார் 'ஆதியே' என்றும் கூறினர். 'அபயம்' என்று அலறினால், 'அஞ்சேல்! ஆட்கொண்டோம்' என அடைக்கலந் தந்தருளல் வேண்டுமென்று, 'அடியேன் ஆதரித்து அழைத்தால் அதெந்துவே என்று அருளாயே' என்ற அடிகளால் உருக்கமாகப் பிரார்த்திக்கிறார். (1)

(இ-ள்) நடராஜனே! மலரகிதனே! திருநீறை ஐஸ்வரியமாக உடையவனே! நெற்றியில் கண்ணுடைய மூர்த்தியே! தேவர்கள் தலைவனே! அழுது அலறி உலக முழுதும் தேடியும் உன்னைக் காண முடியவில்லை; திருத்தமாம் பொய்கை என்னும் தீர்த்தத்தையுடைய திருப்பெருந்துறையில் செழுமையான மலர்கள் நிறைந்த குருந்தமரத்தின் கீழ் எழுந்தருளிய செல்வமே! அடியேன் ஆதரவோடு உன்னை யழைக்கும்போது 'அஞ்சாதே!' என்று கூறி ஆட்கொண் டருள்வாயாக. (எ-று)

யுக உற்பத்தியிலும், யுக முடிவிலும் பரசிவன் ஒருவனே எஞ்சி நிற்கிறான் என்று சைவசித்தாந்த சாஸ்திரங்கள் பறைசாற்றுவதால், மாணிக்கவாசகப் பெருந்தகையாரும், 'ஒருத்தனே' என்று விளித்தார். இருதய கமலத்தில் வீற்றிருக்கும் இறைவனை அந்தர் முகமாகவே தரிசனஞ் செய்ய முயல்வதை விட்டு, வெளியே சடப்பொருள்களை யெல்லாம் நோக்கித் தேடி யலைவதில் பயனில்லை என்னும் உண்மையை, 'உன்னை ஓலமிட்டு அலறி உலகெலாந் தேடியுங் காணேன்' என்று எடுத்துக் கூறினார். (2)

(இ-ள்.) பசுத்தன்மை யெய்திய மக்களாகிய எங்களுக்கு நாயகனே! என் இன்னுயிர்த் தலைவனே! மயிர்ச்சாந்தணிந்த நீண்ட கூந்தலையுடைய பார்வதிதேவி, கங்காதேவி ஆகிய இருவருக்கும் கணவனாக இருக்கும் புருடோத்தமனே! தகுதியும் அழகும் வாய்ந்த மன்மதனது உடம்பு பற்றி யெரிந்து சாம்பராகும் படியாக விழித்த சிவந்த நெற்றிக்கண்ணையுடைய யோகமூர்த்தியே! திருப்பெருந்துறையில் செழுமையான மலர்கள் நிறைந்த குருந்த மரத்தின் கீழ் எழுந்தருளிய அருட்கண்ணுடைய தயாபரனே! அடியேன் ஆதரவோடு உன்னை யழைக்கும்போது 'அஞ்சாதே!' என்று கூறி ஆட்கொண் டருள்வாயாக. (எ-று.)

இரு தேவிகளைக் கொண்டிருந்தும், காமரகிதன் என்பார், 'தக்க நற்காமன் தனது உடல் தழலெழ விழித்த செங்கண் நாயகனே' என்று அருளினார்.




# சேலத்தில் சுபாரம்பம்

"பாழும் கள்ளால் பட்டதை நினைத்தால்
பதைக்குது நெஞ்சம் கொதிக்கு தடா !"

என்று தமிழ் நாட்டுத் தேசிய கவி திரு. இராமலிங்கம் பிள்ளை கதறுகிறார். மதுபானத்தால் மக்கள் சமூகம் அடைந்து வரும் சீர்கேடான நிலைமையைச் சிந்தித்துப் பார்க்கும் எவரும் இவ்விதம் நெஞ்சங் குமுறிக் கதறாமலிருக்க முடியாது. உலகந் தோன்றிய நாள் முதலே மதுபானம் என்னுங் கொடிய வழக்கம் மனித சமூகத்தில் ஏதோ ஒரு வகையான ரூபத்தில் இடம் பெற்றுவிட்டது. மது மயக்கத்தால் மக்கள் செய்யும் தீய செயல்களும், அதன் பயனாக அவர்கள் அடையும் துன்பங்களும் சொல்லி முடியாது. உலக சரித்திரத்தைப் புரட்டிப் பார்த்தால் இதற்கு எத்தனையோ உதாரணங்களைக் காணலாம்.

சில ஆண்டுகளுக்கு முன்னர் பிரான்ஸ் தேசத்தில் வருஷந்தோறும் ஜனத்தொகை அதிகப்படுவதைவிட்டுக் குறைந்து வர ஆரம்பித்ததாம். ஆகவே, தேசாபிமானமுள்ள சில பிரஞ்சுக்காரர்கள் ஒன்று கூடி, மக்கள் ஜனன தொகையைக் காட்டிலும் மரண எண்ணிக்கை அதிகமாகி வருவதற்குக் காரணமென்ன வென்று ஆராய்ந்தனர். அவர்களது ஆராய்ச்சியின் பயனாக, பல உண்மைகள் வெளிப்பட்டனவாம். அவற்றில் மிக முக்கியமானது மதுபானத்தால் தான் மக்கள் அகால மரணத்துக்கு ஆளாகின்றனர்; மக்கள் மரண எண்ணிக்கையும் வருஷந்தோறும் பெருகி வருகிறது என்று ஏற்பட்டதாம். அம் முக்கிய காரணத்தை அவர்கள் தாங்கள் வெளியிட்ட அறிக்கையில் பின்வருமாறு தெளிவாகக் குறிப்பிட்டிருக்கின்றனர்:—

"மதுபானம் மனிதனுக்கு இயற்கையாகவுள்ள அன்பை அழித்து, மகனாகவும், கணவனாகவும், தந்தையாகவும் இருந்து அவன் செய்ய வேண்டிய கடமைகளை மறக்கும்படி செய்கிறது. அது அவனை வேலை செய்யத் திறமையற்றவனாக்கி, திருடவும், கொள்ளையடிக்கவும், இன்னும் பலவிதமாக சட்டத்தை மீறி நடக்கும்படியும் அவனைத் தூண்டுகிறது.....................

"இது மட்டுமல்ல; பாரிசவாயு, இரைப்பை ஈரல் குண்டிக்காய் ஆகியவைகளின் எரிச்சல், க்ஷயம், கபஜுரம், பைத்தியம் முத லிய கொடிய நோய்களுக்கும் மதுபானந்தான் முக்கிய காரணமாகும். மதுபானத்தால் இரத்த நாடிகளும் மெலிவுற்று நோயுறுகின்றன. மது பானம் இந் நோய்களுக்குக் காரணமா யிருப்பது மாத்திரமல்ல; மது பானஞ் செய்யாதவர்களுக்கு மேற் கூறிய நோய்கள் வந்தால் அவர் கள் குணமடைவதற்கு இடமுண்டு. மதுபானஞ் செய்பவர்களுக்கு இந் நோய்கள் வந்தாலோ அவன் குணமடைவதற்குப் பெரிதும் இட மில்லை யென்றே சொல்லலாம்"

இதிலிருந்து மதுபான பழக்க முடையவர்களுக்குக் கொடிய நோய்கள் எளிதாக ஏற்படு மென்றும், அவை எவ்வித மருந்தாலும் குணமடையா வென்றும், கடைசியில், அகால மரணத்துக்கே ஆளாக் குகிறது என்றும் ஏற்படுகிறதல்லவா!

'ஆமாம்; ஒரு சிலர்—ஏன் டாக்டர்களுங் கூட—மதுவுங்குச் சில நோய்களைப் போக்கிக் குணமாக்கும் குணமிருக்கிற தென்று கூறு கிறார்களே' என்று வாசகர்கள் கேட்கலாம்; அக் கூற்று முற்றுந்தவ றுகும் சிறிது காலத்துக்கு முன் வரை, பல டாக்டர்கள் சில நோய் களுக்குப் பிராந்தி போன்ற மதுபான வகைகளை, நோயாளிகளுக்குக் கொடுத்து வந்தது உண்மை தான். ஆனால், இப்போது நோய்களைக் குணஞ் செய்யுங்குணம் மதுவுக்குச் சிறிதுமில்லை யென்பதை எல் லோருந் தெரிந்துகொண்டனர். அதனால், டாக்டர்கள் மதுவை உள் ளுக்குக் கொடுக்கும் மருந்தாக உபயோகிக்கும் வழக்கத்தை விட்டு வருகின்றனர். மது நோயைக் குணப்படுத்துவதற்குப் பதிலாக அதி கப்படுத்தி இன்னும் பல நோய்களை யுண்டாக்குகிறது. ஆகையால் மதுபான வகைகள் எதுவுமே எந்த வகையாலும் மக்கள் உட்கொள் ளத்தக்க தல்லவென்று நாம் உறுதியாகக் கூறுகிறோம்.

மதுபானம் மக்கள் உட்கொள்ளத் தக்க உணவுப்பொருள்களில் ஒன்று என்று ஆராய்ந்தால், அல்லவென்ற பதிலே கிடைக்கும். ஏனென்றால், உணவுப் பொருள்களுக்கு இருக்கும், உடம்புக்கு ஒரு தீங்கையும் விளைவிக்காமல் அதற்கு உஷ்ணத்தையும் பலத்தையும், வளர்ச்சிக்கும் பழுது பார்ப்பதற்கும் வேண்டியவற்றையுந் தரும் சக்தி மதுபானத்துக்கு இல்லை. மதுபானம் உணவுக்குழாய் வழி யாகச் சென்றாலும் அது ஜீரணமாவதுமில்லை; வேறு விதமாக மாற்ற மடைகிறது மில்லை. இரத்தத்தோடு கலக்கும் போதும் அது மது வாகவேதான் இருக்கிறது. மேலும் உடம்பில் எந்தெந்த உறுப்பு களில் மது தங்குகிறதோ அந்தந்த அங்கங்களை அது சுருங்கச் செய் கிறது; வளர்ச்சியையும் பலத்தையுங் குறைக்கிறது. இரைப்பை நோயின்றி யிருக்கும்போது சாதாரண உணவுகளை உண்டால் அது ஏற்றுக் கொள்கிறது. ஆனால் மதுவை முதன்முறையாக அருந்து கையில் இரைப்பை அதை ஏற்றுக்கொள்ளாமல் வாந்தி செய்கிறது.

மது தனக்கு இயற்கையான உணவோ பானமோ அல்ல என்றும், அது தனக்குப் பகைப் பொருளென்றும் அறிந்து, அதை விரைவில் வெளியே தள்ளிவிட முயல்கிறது இரைப்பை தன்னுணர்வால் எச்சரிக்கிற எச்சரிக்கையை யாகிலும் மனிதன் அறிந்து நடக்கவேண்டாமா என்றே கேட்க விரும்புகிறோம்.

மதுபானம் இயற்கையாக உண்டாகிற ஒரு பொருள் அல்ல. பதார்த்தங்கள் அழிவதால் மது உண்டாகிறது. மதுவிலுள்ள முக்கிய பொருளாகிய மதுசாரம் கொடிய விஷத்தன்மை வாய்ந்தது. எனவே, ஒருவனைக் கொல்ல அதிக மதுசாரம் வேண்டியதில்லை.

மதுபானத்தை யருந்தினால் சுறுசுறுப்பு உண்டாகிறதென்று சிலர் கூறுகிறார்கள். மற்றுஞ் சிலர், 'நெற்றி வியர்வை நிலத்தில் விழ கஷ்டப்பட்டு வேலை செய்யும் உழைப்பாளிகளுக்கும், தொழிலாளிகளுக்கும் மது தேவாமிர்தம்போல் இருந்து ஆறுதலைத் தருகிறது. அதை யருந்திய மாத்திரத்தில் நாள் முழுதும் பட்ட கஷ்டத்தை ஒரு நொடியில் போக்கிச் சுகத்தைக் கொடுக்கிறது' என்றெல்லாம் கூறுகின்றனர். இவ்வித அபிப்பிராயங்களும் தவறாகும். மது அருந்தி முதல் பத்து அல்லது பதினைந்து நிமிஷங்கள் வரை புத்தி சுறுசுறுப்பா யிருப்பதுபோலவும், ஆறுதலைத் தருவதுபோலவும் காணப்படுகிறதே யொழிய, பிறகு அவ்வளவும் உடல் சோர்வையும், மனமாருட்டத்தையுமே யுண்டாக்குகிறது.

மதுபானஞ் செய்யப் பழகும் ஒரு மனிதன் முதன் முதலாக அறிவை யிழக்கிறான். நல்லது தீயது என்று பகுத்தறியக் கூடாத ஒரு நிலைமை யேற்பட்டதும், பல கொடிய செயல்களைச் செய்யக் கூடிய தன்மையை யடைகிறான். பலவித நோய்களுக்கும் அவன் ஆளாகிறான். அது மட்டுமல்ல; ஜன சமூகத்தால் அவன் வெறுக்கப் படுகிறான்; அவ்வளவு ஏன்? அவனுக்கு வாழ்க்கைப்பட்ட மனைவியும், அவனைப் பெற்றெடுத்து அருமையாக வளர்த்த தாயும் கூட அவனை வெறுத் தொதுக்குவார்கள் என்றால், அதிகம் கூறுவானேன்!

"குடியினால் மானிடர்க்கு நேரிடும் விபத்துகள், யுத்தம், நோய், பஞ்சம் ஆகிய இம் மூன்றினால் நேரிடும் விபத்துகளைக் காட்டிலும் அதிகம் என்று சொல்லப்படுகிறது" என்று, 1880-ம் வருடத்தில் காமன்ஸ் சபையில் மிஸ்டர் இவார்டு க்ளாட்ஸ்டன் என்பார் பேசுகையில் குறிப்பிட்டார். இது வொன்றே மதுபானத்தின் தீமைகளை விளக்கப் போதுமானதாகும்.

மது வரக்கன் மக்களுக்குச் செய்துவரும் தீமைகளைக் கண்டே, நம் நாட்டில் தோன்றிய மகான்க ளெல்லாம் அக் கொடிய வழக்கத்தை யொழிக்கப் பாடுபட்டார்கள். மது வருந்துவதைக் கண்டிக்க—அதன் தீமைகளை விளக்க—பல நீதி நூல்கள் எழுந்தன. ஆயினும், மதுப்பேயின் ஆதிக்கம் ஒழிந்தபாடில்லை.

நம் ஜீவியகாலத்தில் பெரிய மகானாக விளங்கிவரும் மகாத்மா காந்தி இம் மதுபான பழக்கத்தை யொழிக்க வெகுவாகப் பாடுபட்டு வருவது உலகறிந்த விஷயம். காங்கிரஸ் மகாசபையில் காந்தியடிகளின் செல்வாக்கு ஏற்பட்டதும், காங்கிரஸும் மதுவிலக்குத் திட்டத்தை மேற்கொண்டது. அத் திட்டத்தை நிறைவேற்ற இந்தியா முழுவதுமுள்ள காங்கிரஸ்காரர்களும், அநுதாபிகளும் எடுத்துக் கொண்ட முயற்சியும், பட்ட கஷ்டமும் உலகறிந்த தொன்று. 1930-ம் வருஷத்தில் நடைபெற்ற சட்டமறுப்புப் போராட்டத்தின் போது, மதுபானக் கடைகளை மறியல் செய்து எத்தனையோ காங்கிரஸ்காரர்கள் தடியடி பட்டனர்; சிறை சென்றனர். அச் சமயம் அவர்களது பெருமுயற்சி பலன்தரா விட்டாலும், வீண் போகவில்லை காங்கிரஸ்காரர்கள் ஏழு மாகாணங்களில் மந்திரி பதவி யேற்று அரசியலை நடத்திவரும் இப்போது, மதுவிலக்கு முயற்சிக்கு விமோசனம் ஏற்படுங் காலம் ஏற்பட்டிருக்கிறது. காங்கிரஸ் காரியக் கமிட்டியார் காங்கிரஸ் மந்திரிகளுக்கு வகுத்திருக்கும் வேலைத் திட்டங்களில், 'தத்தம் மாகாணங்களில் மூன்று வருஷ காலத்துக்குள் பூரண மதுவிலக்கைக் கொண்டு வர வேண்டும்' என்று உத்திரவிட்டிருக்கிறார்கள். ஆகவே, காங்கிரஸ் மந்திரிகள் மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டுவர முயன்று வருவதில் ஆச்சரிய மொன்று மில்லை.

இவ் விஷயத்தில் நமது பிரதம மந்திரி கனம் இராஜகோபாலாசாரியார் மற்ற மாகாணங்களுக்கு முன்பே முந்திக் கொண்டார். அவர் சமீபத்தில் மது விலக்கு மசோதாவை ஜனப் பிரதிநிதி சபையிலும், அரசாங்க சபையிலும் கொண்டு வந்து நிறைவேற்றிச் சட்டமாக்கி விட்டார். இப்போது முதன் முதலாகச் சேலம் ஜில்லாவில் தமது பரீட்சையை ஆரம்பித்திருக்கிறார். அந்த ஜில்லா முழுவதிலுமுள்ள மதுபானக் கடைகளும், அபின் கஞ்சா முதலிய லாகிரிவஸ்து விற்பனையாகும் கடைகளும் எல்லாம் மூடப்பட்டன. இம் மதுவிலக்கு வேலையை, கனம் ஆச்சாரியார் கடந்த இருபது வருஷங்களுக்கு மேலாகவே செய்து நன்கு பழகியிருக்கிறாராதலால், அதை வெற்றிகரமாக நடத்திக் காட்டி இந்தியாவிலுள்ள மற்ற மாகாணங்களுக்கு வழி காட்டுவதோடல்லாது பூவுலகுக்கே ஒரு புதுமையை உண்டு பண்ணுவார் என்பது திண்ணம். கனம் ஆச்சாரியார் தம் சகாமந்திரிகளோடு 13—நாட்கள் வரை சேலம் ஜில்லா முழுதும் சுற்றுப் பிரயாணஞ் செய்தார். மதுவரக்கன் ஒழிந்ததில் மக்கள் எல்லோரும் மகிழ்ச்சியாகத் தான் இருக்கிறார்கள் என்று தெரிகிறது. குடிப்பேய் ஒழிந்ததால், குடி மக்கள் நலமடைந்து சேலத்தில் சுகாரம்பம் ஏற்பட்டு விட்டது. இனி தமிழ் நாட்டிலுள்ள மற்ற ஜில்லாக்களிலும் இவ்வித சுகாரம்பம் உதயமாவது வெகு தூரத்தில்லை என்றே நாம் நம்புகிறோம்.

“நீங்கள் என்ன சமாதானம் சொன்னாலும் எனக்கு அவனைக்கண்டால் வெறுப்பே. அவன் தனது வைத்திய சாமர்த்தியத்தினால் ஜெமீந்தாருடைய மூக்கையும் கைகளையும் உங்களுடைய தேகத்தில் பொருத்திவிட்டான். உங்களுடைய கைகளும் மூக்கும் என்னவாயின?”

“சௌடி, நான் எனது கரங்களை இழக்கக் காரணம் சொல்கிறேன். என் மூக்கை பூராவும் இழக்கவில்லை. இராஜமன்னாரின் மூக்கு சிறிது நீண்டு, கெம்பீரத் தோற்றத்தைக் கொடுக்கும். எனது கொஞ்சம் நீண்டு வளைந்திருக்கிறது. கனகன் என்ன செய்தான் தெரியுமா? இராஜமன்னாரின் மூக்கில் சதையைப் பெயர்த்து, ஒருவகை திராவகத்தால் எனது மூக்கின் வளைவில் ஒட்டிவிட்டான். இப்பொழுது எனது மூக்கு ஜெமீந்தாருடைய மூக்கைப்போலவே உளது. திராவகம் போடும்பொழுது எனக்கு உண்டான வேதனை பொறுக்கமுடியாது. எல்லாம் எனது பழைய காதலியும் ஜெமீந்தாரணியுமான இந்திராவை அடையவே இங்ஙனம் செய்ய வேண்டியதாயிற்று,” என்று ஆச்சரிய உருவமாக உட்கார்ந்திருந்த சௌடப்பனுக்கு முத்தய்யசெட்டி சொன்னான்.

“நீங்கள் “இவன் கைகள் வேண்டாம்,” என்று முன்பு அலறினீர்களே?” எனக் கேட்டான் சௌடப்பன்.

“அதுவா? எனது இரண்டு கரங்களிலும் ஜெயிலில்போட்ட குறிகள் இருந்தன. அவை நானிறந்தாலொழியப் போகா. ஆதலால் ஜெமீந்தார் தன்னுடைய கரங்களை இழக்க வேண்டியதாயிற்று. நானும் எனது கைகளை நீக்கி, அவனுடைய கைகளை வைத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. வலியும் வீக்கமும் பொறுக்க முடியவில்லை. இப்பொழுது அவனுடைய கைகள் என்னுடையதே! அவனது மனைவியும் எனக்குச் சொந்தமே! நான் அவள் புருஷன்!” என்று ஆர்வத்தோடு பேசினான் முத்தய்யசெட்டி.

“நீங்கள் பழிக்குப்பழி ஜெமீந்தார்மீது வாங்கிவிட்டீர்கள்! மிக்க சாமர்த்தியவான்,” என்று புகழ்ந்தான் சௌடப்பன்.

“சென்னை சர்க்கார் மாயாவிரோதியாகிய நானும் எனது சகாக்களும் கடலில் மாய்ந்து போனதாக நம்பிக் கொண்டிருக்கின்றனர். நான் இப்பொழுது கபட நாடகம் நடிப்பது அவர்களுக்குத் தெரியாது. ஜெமீந்தார் தொலைந்தான்; கடலின் அடியில் இருக்கின்றான். ஆனால் அவனுடைய விரோதியாகிய நான் இப்பொழுது அவனைப்போல் பட்டமும் பதவியும் வகிக்கிறேன். உண்மையை உலகினர் அறியவே மாட்டார்கள். அது எப்படி முடியும்? சரி, நாம் சரியாக நமது புதிய வேஷத்தில் நடிக்கவேண்டும். நீ எனக்கு காரியதரிசி. உன் பெயர் பிரசாத். நான் செங்கோட்டை ஜெமீந்தார். எனக்கே சிரிப்பு வருகிறது. துப்பறியும் கொக்கு ஹிம்ஹநாதனை இனிமேல் நன்கு ஏமாற்றுகிறேன் பார்,” என்றான் மாயாவிரோதி.

சௌடப்பனும் (இனிமேல் நாம் அவனை பிரசாத் என்றே அழைப்போம். மாயா விரோதியைப் பல விடங்களில் ஜெமீந்தார் என்றே கூப்பிடுவோம்) சிரித்தான்.

இரண்டு தினங்கட்குப் பின் செங்கோட்டை ஜெமீந்தாரும் அவருடைய காரியதரிசி பிரசாதும் ஒரு மோட்டார் வண்டியில் சென்னையை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள்.

ஜெமீந்தார் பிரபுவின் உள்ள உணர்ச்சிகளை நாம் அறியவேண்டுமன்றோ? தமது இன்பக் காதலியான இந்திராவைத் தாம் சடுதியில் அடைந்து பேசிச் சந்தோஷ முறவேண்டும் எனும் எண்ணத்தினுல் தாக்கப்பட்டா ராதலின், அவர் கொண்ட குதூகலம் அளவிடுவதற்கு முடியாத காரியமாக இருந்தது. பல இன்பக் கனவுகள் கண்டு கொண்டிருந்தார்.

அதனுல் அவரது மனம் கட்டுக்கடங்காமல் எல்லா விடத்திலும் இன்பமாக சஞ்சரித்துக் கொண்டிருந்தது. எப்பொழுது அம்மாதரசியைக் காண்போம், களிகொள்வோம் எனும் ஆனந்தக் கருத்துடன் பிரபுவினுடைய மனம் வேகமுள்ள குதிரையைப்போல் ஓடிக் கொண்டிருந்தது. சௌந்தரியம் பொருந்திய இந்திராவின் பழைய செய்கைகளையும பேச்சுகளையும் பிரபு ஞாபகப்படுத்திக் கொண்டா'. அத்தகைய ஆழ்ந்த இன்பக் கருத்தில் புதைந்து கிடந்தது அவரது மனம்.

சிறிது நேரமானதும் செங்கோட்டை ஜெமீந்தார் பல்லாவரத்தையடைந்தார். அங்கே, சிறு வயதில் அவர் போய்வந்த ஹோட்டல் ஒன்றுண்டு. வீதியில் ஒரு பெரிய "போர்டு" தொங்குவதைக் கண்டு, "நான் சுயாதீனம் பெற்று இருக்கையில் இருந்தமாதிரியே இந்த ஹோட்டல் இப்பொழுதும் இருக்கிறது. எத்தனை வருஷங்கள் நான் சிறையில் இருந்தேன்," என்று பிரசாத்திடம் கூறினுர்.

"பதினுறு பதினேழு ஆண்டுகளாக நீங்கள் காவலோடு இருந்தீர்கள்,' என்று காரியதரிசி மெல்லப் பேசினுன்.

"நாம் உள்ளே போய் ஏதாவது சாப்பிடலாமா?" என்று பிரபு கேட்டார்.

"பதவியும் பவிஷுும் மிக்க தாங்கள் போவது கூடாது," என்று சொன்னுன் பிரசாத்.

"நம்மை யார் தெரிந்துகொள்ளப் போகிருர்கள்?"

"அப்படியல்ல. ஜெமீந்தா ரல்லவா தாங்கள்? வேண்டாம்."

செங்கோட்டை ஜெமீந்தார் வேறு பேச்சு பேசாமல் மோட்டார் வண்டியை ஓட்டுவதாயினுர்.

சாயுங்காலம் ஏழுமணி சமயம். நீலநிற வானத்தில் அஸ்தமிக்கும் சூரியனது செங்கிரணங்கள் ஆகாயத்தின் வருணத்தை மாற்றிப் பார்ப்பதற்கு பொன்னே என்று சந்தேகிக்கும்படி செய்தன. பிரபுவும் அவருடைய காரியதரிசியும் அடையாறில் சமுத்திரத்தை யடுத்திருந்த மாளிகைக்கு வேகமாகப் போய்க் கொண்டிருந்தார்கள். இந்திராவின் எழிலையும் அன்பையும் தாம் பெற்று மகிழவேண்டும் என பேராவல் கொண்டிருந்த பிரபு இந்திராவை உண்மை ஜெமீந்தார் எந்தப் பெயரால் அழைத்தார் என்பதை

அறிய ஆவல் கொண்டார். ஆனால் அதை எப்படி அறிவது? ஜெமீந்தாரும் அவருடைய நண்பர்களும் ஒருவரை யொருவர் எப்படி அழைத்துக் கொண்டார்களோ? பழைய ஜெமீந்தார் தமது மனைவியைச் சரியாக நேசிக்காமல் வேறு பிரபு ஒருவருடைய மனைவியை நேசித்து வந்ததை பிரபு எப்படியோ அறிந்திருந்தார். அந்த அம்மாள் தங்களைக் கண்டால் தாங்களும் எப்படி நடந்து கொள்ளவேண்டும்? இந்திரா எப்படியும் தங்களை மணாளனாகவே நினைத்துக் கொண்டாலும், தாங்கள் அவளோடு சாமர்த்தியமாக நடந்து கொள்ளவேண்டும் என்று கருதினார்.

"பிரசாத், நாம் எப்படியும் மாளிகைக்குச் செல்லுகிறோம். நமது வருகையை நாளையதினம் அல்லவா மாளிகையில் உள்ளவர்கள் எதிர்ப்பார்கள்?" என்று ஜெமீந்தார் கேட்டார். இன்ப எண்ணங்களும் தாம் நடந்துகொள்ள வேண்டிய விதமும் அவரது மூளையைக் கொஞ்சம் குழப்பிவிட்டனவென்று சொல்லவேண்டும்.

"அப்படியானால் நாம் மாளிகைக்கு இப்பொழுது போகலாகாது. இன்றிரவை வேறு எங்கேயாவது கழித்துவிட்டுப் போதலே நலம்," என்று காரியதரிசி பிரசாத் பதிலளித்தான்.

"ஆமாம்; அப்படித்தான் செய்ய வேண்டும். ஒரு ஹோட்டலில் தங்கிச் செல்லலாம். (சிறிது யோசனை செய்து) பிரசாத், என் பொருட்டு நீ பணம் கொண்டுவரச் சென்றபொழுது ஜெமீந்தாரினி அம்மாள் இந்திராவை நேரில் கண்டு பேசினையா?" என்று மாயாவிரோதி கேட்டான்.

"இல்லை, பிரபுவே, அந்த அம்மாளின் வக்கீலைக் கண்டு பேசி, பணத்தைக் கொண்டு வந்தேன். இப்பொழுது அந்த வக்கீல் இறந்துபோய் விட்டார். மற்றொருவர் புதிதாக எஜமானியவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள் என்று அறிந்தேன். அவர் பெயர் ராஜதேவர்," என்று சௌடப்பன் சொன்னான்.

"ஓ! பிரசாத், ராஜதேவர் நல்லவர். நீ இந்திராவைப் பார்க்காதது எனக்கு மிக்க சந்தோஷத்தைக் கொடுக்கிறது. ஏன் தெரியுமா? உனக்கு ஒருகால் அவள் அழகாக இல்லாமல் தோன்றியிருக்கலாம். அப்பொழுது அவள் சர்வ சாதாரண அழகு வாய்ந்தவள் என்று நீ என்னிடம் சொல்லியிருந்தால் உன்மீது எனக்கு அடங்காச் சினம் உண்டாகியிருக்கும். நீ பார்த்தால் அவளை அழகுத் தெய்வம் என்றுதான் கூறுவாய்," என்று தமது மனம் போனவாறு ஜெமீந்தார் கூறினார்.

அதைக் கேட்டு காரியதரிசி மௌனம் சாதித்தான். இது நிற்க.

செங்கோட்டை மாளிகையில் மறுநாள் காலையில் நடக்கும் விஷயத்தைப் பார்ப்போம்.

(தொடரும்)

---

# “ஆனந்தபோதினி” பஞ்சாங்கம்.

ஈசுவரஞு ஐப்பசிமீ—கலியுகாதி 5039, சாலிவாகனம் 1860,
பசலி 1347, கொல்லமாண்டு 1113, ஹிஜரி 1356,
இங்கிலீஷ் 1937ஞு அக்டோபர்மீ—நவம்பர்மீ

| ஐப்பசிமீ | அக்டோபர்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | ஞா | து10-45 | பூர48-40 | சி48-40அ | பிரதோஷம், துலாஸ்நாஞ |
| 2 | 18 | திங் | திர6-13 | உத்44-48 | சித்60 | விவாகம் [ரம்பம் |
| 3 | 19 | செவ் | ச○0-10 பௌ53-8 | ரே39-45 | சித்60 | பௌர்ணமி. தனபால விர தாரம்பம், அன்னுபிஷே |
| 4 | 20 | புதன் | பிர45-10 | அஸ்34-3 | மர43-3சி | ஆஸ்வீயபகுளம் [கம் |
| 5 | 21 | வியா | துதி37-10 | ப✻27-50 | சி27-50ம | கிருத்திகை (அனுஷ்டா |
| 6 | 22 | வெள் | திரி29-15 | கிரு21-50 | சி21-50ம | கிநந்திகை [னப்படி) |
| 7 | 23 | சனி | சது21-43 | ரோ16-5 | அ16-5சி | |
| 8 | 24 | ஞா | பஞ்14-53 | மிரு11-5 | சித்60 | |
| 9 | 25 | திங் | சஷ்8-58 | திரு6-58 | சித்6-58அ | |
| 10 | 26 | செவ் | சப்4-5 | புன3-50 | சித்60 | |
| 11 | 27 | புதன் | அ0-28 நவ58-3 | பூச1-58 | சித்60 | |
| 12 | 28 | வியா | தச57-0 | ஆயி1-15 | சித்1-15அ | |
| 13 | 29 | வெள் | ஏகா57-8 | மக1-53 | ம1-53சி | |
| 14 | 30 | சனி | து58-20 | பூர3-38 | சி3-38மர | |
| 15 | 31 | ஞா | திர60 | உத்6-33 | அமி60 | |
| 16 | 1937ஞு நவம்பர்மீ 1 | திங் | திர0-53 | அஸ்10-35 | சி10-35பி | நரகசதுர்தசிஸ்நானம் (இர |
| 17 | 2 | செவ் | ச●4-30 | சித்15-45 | சித்60 | ச்சந்ர அமாவர்சை, [வில்) தீபாவளி பண்டிகை, கேதாரகௌரி விரதம் |
| 18 | 3 | புதன் | அமா9-22 | சு21-40 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 19 | 4 | வியா | பிர14-45 | வி28-40 | சித்60 | சந்திர தெரிசனம் [28 |
| 20 | 5 | வெள் | துதி20-58 | அ36-10 | சி36-10ம | விசாக கார்த்திகை நா-40- |
| 21 | 6 | சனி | திரி27-40 | கே44-3 | சித்60 | ஆலோசன கௌரி விரதம் |
| 22 | 7 | ஞா | சது34-30 | மூல51-58 | அ51-58சி | மாச சதுர்த்தி விரதம் |
| 23 | 8 | திங் | பஞ்40-55 | பூரா59-20 | மர60 | கணிதாரம்பம், கடன்தீர்க்க |
| 24 | 9 | செவ் | சஷ்46-33 | உத்60 | அமி60 | சஷ்டி, கந்தர் சஷ்டி, சூர சம்ஹாரம், மஹா சஷ்டி |
| 25 | 10 | புதன் | சப்50-45 | உத்5-38 | அமி5-38சி | சுப முகூர்த்தம் செய் |
| 26 | 11 | வியா | அ53-3 | திரு10-33 | சித்60 | கோவாஷ்டமி |
| 27 | 12 | வெள் | நவ53-28 | அவி13-43 | சித்60 | அக்ஷய நவமி, , |
| 28 | 13 | சனி | தச54-15 | சத14-48 | அ14-48ம | க்ர்ம்நதி புஷ்கய |
| 29 | 14 | ஞா | ஏகா47-55 | பூர13-58 | சி11-58அ | சர்வ, மத்வ ஏகு |
| 30 | 15 | திங் | து42-25 | உத்11-18 | சித்60 | யோகீஸவர முன் ரபு தை |

| | | | |
|---|---|---|---|
| சனி | | கே | |
| | 5-துலா-புத<br>16-மகர-செ<br>22-துலா சுக்<br>24-விரு-புத<br>28-மகர-குரு | | |
| செ குரு | ராகு | சூரி | புத சுக் |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALI
AT THE “ANANDA BODHINI” PRESS,
No. 6, LAWYER CHINNATHANBI MUDALI STREET, MAD.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 23 | ஈசுவர ௵ கார்த்திகைமீ ௧௨ 1937௵ நவம்பர்மீ 16உ | பகுதி 5

## கடவுள் வணக்கம்.

வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே யெனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தாழ் உறுபுனலிற் கீழ்மே லாகப்
பதைத்துஉருகும் அவர்நிற்க என்னை ஆண்டாய்க்கு
உள்ளந்தாள் நின்றுஉச்சி யளவு நெஞ்சா
உருகாதால் உடம்பெல்லாங் கண்ணாய் அண்ணா
வெள்ளந்தான் பாயாதால் நெஞ்சங் கல்லாம்
கண்ணிணையும் மரமாம்தீ வினையி னேற்கே. (1)

---

வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போதுநான் வினைக்கேடன் என்பாய்போல
இனையன்நான் என்றுஉன்னை யறிவித்து என்னை
ஆட்கொண்டு எம்பிரானானாய்க்கு இரும்பின்பாவை
அனையநான் பாடேன்நின்று ஆடேன் அந்தோ
அலறிடேன் உலறிடேன் ஆவி சோரேன்
முனைவனே முறையோநான் ஆன வாறு
முடிவுஅறியேன் முதல்அந்தம் ஆயினானே. (2)

---

ஆயநான் மறையவனு(ம்) நீயே யாதல்
அறிந்துயான் யாவரினுங் கடைய னாய
நாயினேன் ஆதலையு(ம்) நோக்கிக் கண்டு
நாதனே நான்உனக்குஓர் அன்பன் என்பேன்
ஆயினேன் ஆதலால் ஆண்டு கொண்டாய்
அடியார்தாம் இல்லையே யன்றி மற்றோர்
பேயனேன் இதுதான்நின் பெருமை யன்றே
எம்பெருமான் என்சொல்லிப் பேசுகேனே. (3)

# அரும்பொருள் விளக்கம்

(இ-ள்.) கங்காநதி தங்கிய விரிந்த சடாதாரனே! ரிஷபவூர்தியே! தேவர்தலைவனே! எனத் துதிக்கக் கேட்டு, விரும்பிய திருவுள்ளமுடைய பெருமானே! பள்ளத்தில் பாய்கிற நீரைப்போல் கீழும் மேலுமாய் பதைத்து மனமுருகும் அந்த மெய்யடியார்கள் இருக்கும்போது, அடியேனை ஆட்கொண்டு அருளினாய்; அத்தகைய உன் பொருட்டு, உள்ளங்காலிலிருந்து தலையுச்சி வரை நெஞ்சாகி உருகாததாலும, தேக முழுவதும் கண்ணாகி, அண்ணலே! விழிநீரைப் பெருக்காததாலும், தீவினையுடைய எனக்கு மனங் கல்லாகவும், இரு கண்களும் மரமாகவும் ஆய் விட்டன. (எ-று.)

பரம பக்தர்களெல்லாம் இறைவனை யடைய தவஞ்செய்து கொண்டிருக்க, ஒன்றுக்கும் பற்றாத அடியேனை வலிய ஆட்கொண்டும், அதற்கு நன்றி யறிதலைச் செலுத்து முறையில் நெஞ்சமுருகிக் கண்ணீர் பெருக்கி வந்திக்காதது சடத்தன்மையையே காட்டுகிறது என்பது இச் செய்யுளின் கருத்து. (1)

(இ-ள்) ஆதியும் அந்தமுமில்லா அருட்பெருஞ் சோதியே! கன்மத்தில் கிடந்துழலும் அடியேனிடத்தில் புகுந்து, 'நீ பாசமற்றவன்; வா' என்று கூறுவதுபோல், 'நான் இத் தகுதியுடையவன்' என்று உன்னை அறிவித்து அடியேனை ஆட்கொண்டதன் வாயிலாக, எனது தலைவனை உன்பொருட்டு இரும்புப் பதுமையை யொத்த உன் பெருமையைப் பாடவில்லை; களிப்பு மிகுதியால் உன் எதிரில் நின்று ஆடவில்லை; எனது இழிதகைமையையும், உனது பெருந் தன்மையையும் கருதி நன்றியறிதலோடு வாய்விட்டு அலறவில்லை; கதறவில்லை; என் ஆருயிரை உனது நன்றிக்குக் கைம்மாறாகப் பலியிடவில்லை; முழுமுதற் பெருமானே! நான் இவ்விதமிருப்பது சிறிதாயினும் முறையோ! இதன் முடிவு என்னாகுமோ அறியேன். (எ-று)

மாணிக்கவாசகப் பெருந்தகையார், இப்பாட்டிலும் நம்மனோர்க்குப் புத்தி புகட்டு முறையில், ஆண்டவனது அருட்டன்மையை விளக்கியுள்ளார். (2)

(இ-ள்) ஆராயப்பட்ட நால் வேதங்களுக்குந் தலைவன் நீயே என்பது அறிந்து, அடியேன் மக்களனைவரிலும் கடையவனாகிய நாயேன் ஆனதையும் நோக்கிப் பார்த்து, நாதனே! நான் தேவரீருக்கு ஒரு மெய்யன்பன் என்று எப்படியோ ஆய்விட்டேன். ஆதலால், என்னை ஆட்கொண்டு அருளினாய்; பேயனாகிய என்னைவிட வேறு அடியார்கள் இல்லையா? இதுதான் உனது பெருந்தன்மையோ! எம்பெருமானே! உனது செயலை என்னென்று விவரித்து நான் பேசுவது? (எ-று.)

கருணையே திருவுருவாகவுடைய முழு முதற்கடவுள் ஆட்பாலவர்க்கு அருளும்வண்ணம் இன்னதென எளிதில் உணர முடியவில்லை யென்பார், ஆய நான் மறையவனும் நீயேயாதல் அறிந்து யான் யாவரினும் கடையவனாய நாயினேன் ஆதலையும் நோக்கிக் கண்டு நாதனே நான் உனக்கு ஓர் அன்பன் என்பேன் ஆயினேன். ஆதலால் ஆண்டுகொண்டாய்.........எம்பெருமான் என்சொல்லிப் பேசுகேனே' என்று அருளினார். (3)



# தன்னலமற்ற தொண்டு

இவ்வுலகில் வாழும் ஒவ்வொரு மனிதனும் தன்னை யறிந்தோ அறியாமலோ, தனக்கு நன்மை செய்து கொள்வதைக் காட்டிலும், பிறருக்கே அதிகமாகப் பாடுபட்டு உதவி புரிகிறான். அதாவது ஒவ்வொருவரும் தன் பெற்றோருக்கோ, மனைவி மக்களுக்கோ அல்லது குடும்பத்திற்கோ அல்லது தன் சமூகத்திற்கோ அல்லது தான் பிறந்த நாட்டிற்கோ சேவை செய்து வருகின்றனர். இவ்விதம் செய்யாதவரை உலகில் காண்பது மிக அரிது. ஜனநாயக ஆட்சி நிலவியுள்ள தேசத்திலுஞ் சரி; சர்வாதிகார ஆட்சி ஏற்பட்டுள்ள தேசத்திலுஞ் சரி; மக்கள் தங்கள் தேசத்துக்காக வாயினும் பாடுபடுவதைக் காண்கிறோம். தங்கள் நாட்டுக்குக் கெடுதி அல்லது அகௌரவ மேற்பட்டு விடப் போகிற தென்று கருதி, அவ்விதம் எதுவும் நேராதவாறு காப்பதற்குத் தங்கள் உயிர்களையும் தியாகஞ் செய்ய முன் வருகிறார்கள். இவ்விதம் ஏதோ ஒரு வகையில் உலகிலுள்ள மக்கள் தன்னலமற்ற தொண்டைச் செய்து கொண்டு வருகிறார்கள். தன் குடும்பத்திற்கோ சமூகத்திற்கோ, அல்லது நாட்டுக்கோ சேவை செய்யாது, தனது சுக சௌக்கியங்களையே கருதி அல்லும் பகலும் பாடுபட்டு தனக்கு வேண்டிய தேவைகளைப் பெருக்கிப் பூர்த்தி செய்து கொண்டுவரும் மனிதர்களும் இருக்கிறார்களே யென்றால், அவர்கள் மக்கள் உருவங்களைக் கொண்டிருந்தாலும் உண்மையான மக்கள் அல்லர்; மனித உருவந்தாங்கிய மிருகங்கள்; மிருகங்களிலும் கேவலமானவர்களாவர். அத்தகையோர் ஜனசமூகத்தினிடை வாழ்வதற்கே தகுதியற்றவர்களென்று நாம் துணிந்து கூறுவோம்.

மக்கள் அனைவரும் தன்னலமற்ற தொண்டை மேற்கொண்டிருந்தும், ஜன சமூகத்தில் கலகங்களும், சண்டைகளும், கொலை முதலிய கொடுமைகளும் நிகழ்வானேன்? உலகில் ஒரு தேசத்தோடு மற்றொரு தேசம் யுத்தம் செய்வானேன்? என்ற கேள்வி எழுவது இயற்கையே. இதற்கு நாம் ஒன்றுதான் கூற முடியும். இதுவரை கூறி வந்த தன்னலமற்ற தொண்டில் உள்ள குறைபாடே மேற்குறித்த

அனர்த்தங்களுக்கெல்லாம் காரணமாகும். ஒரு மனிதன் தன் நன்மை, தன் சுகசௌக்யங்களை மட்டுங் கவனிப்பதோடல்லாது தன்னைச் சேர்ந்தவர்களுக்கும் உதவி புரிகிறான்; ஆயினும், அதுவும் தன்னலமேயாகும். 'அது எப்படி தன்னலமென்று கூறலாம்; ஒருவன் தன் சுக சௌக்கியங்களைக் கூட துறந்துவிட்டு குடும்பத்திற்காகப் பாடுபடுகிறானே! தன் பெற்றோர்க்கு ஏதேனும் நேர்ந்து விட்டதென்றால், அவன் எவ்வளவு துடி துடிக்கிறான்? தன் மனைவிக்கோ, மக்களுக்கோ ஒன்று உற்று விட்டதென்றால் அதை நிவர்த்திக்கும் வரை ஊண் உறக்கத்தையும் தவிர்த்துப் பாடுபடுகிறானே! அவர்கள் பட்டினி பசியோடு இருக்கக்கூடாது என்றும், அவர்கள் சிறிதும் கஷ்டமின்றிச் சுகமாக வாழ வேண்டுமென்றும் அவன் நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபட்டும், தான் பட்டினியாகவுங் கிடந்துங்கூட பொருள் சேகரித்து வைத்துக் காப்பாற்றுகிறானே! தன் சமூக முன்னேற்றத்துக்காகவும், தன் நாட்டின் வளர்ச்சிக்காகவும் அல்லும் பகலும் பாடுபடுகிறானே! சமயம் நேர்ந்தால் உயிரைக் கூடத் தியாகஞ் செய்கிறானே' என்று சிலர் கேட்கலாம்.

அம் மனிதன் எந்நோக்கத்தோடு தன் குடும்பம், சமூகம், நாடு முதலியவைகளுக்காக உழைக்கிறான் என்று ஆராய்ந்து பாருங்கள். தன் பெற்றோர், தன் மனைவி மக்கள், தன் குடும்பம், தன் சமூகம், தன் நாடு என்ற ஒருவிதப் பற்றுடனேயே அவன் உழைக்கிறான். 'இவர்கள் தன்னைச் சேர்ந்தவர்கள்; அதனால் அவர்களுக்கு உதவி புரிய வேண்டும்; இது தான் பிறந்த சமூகம்; இதுதான் பிறந்தநாடு; அதனால் இவற்றின் வளர்ச்சிக்காகப் பாடுபடவேண்டும்' என்று குறுகிய நோக்கத்தோடு சேவை செய்கிறான். ஆதலால், அவன் தன் சொந்த நலத்தைக் கவனியாது பாடுபட்டாலும் தன்னலமே யாகும்; சுயநலம் என்ற தன்மையைத்தான் அடையும். ஆகவே, தன்னை மறந்து பிறருக்கு உழைப்பதைத் 'தன்னல்மற்ற தொண்டு' என்று நாம் முதலில் கூறினோமாயினும், அது உண்மையான தன்னலமற்ற தொண்டாகாது. தன்னலமற்ற தொண்டு என்பதற்கு இதைக் கட்டிலும் உயர்ந்த லட்சியம் ஒன்று இருக்கிறது. அது என்ன? யான் எனது என்ற பற்றை—அதாவது தன்னலப் பற்றை—முதலில் அறுக்கவேண்டும். தனக்கு மட்டுமல்ல; உலகில் வாழும் எல்லா மக்களுக்கும் தன்னலான சேவையைச் செய்யவேண்டும். இவ்வித பரந்த நோக்கத்தோடு செய்யப்படும் சேவையே உண்மையான தன்னலமற்ற சேவையாகும்.

இவ்வித தன்னலமற்ற சேவையுணர்ச்சிக்குச் சமய (மத) அறிவு அத்தியாவசியமாகும். சமய அறிவு இல்லாவிடில், மக்களுக்கு எளிதில் சேவை யுணர்ச்சியே யுண்டாகாது. ஒரு சிலர் இவ் வுண்மையை ஒப்புக் கொள்வதில்லை. அவர்கள் சமயத்தை அல்லது மதத்தை ஒரு வெறுங் கொள்கையாகவும், நம்பிக்கையாகவுமே கருதுகிறார்கள். மனி

தனின் அறியாமையின் விளைவே மதமென்றும், வெறும் மாயையி லிருந்து பிறந்ததே மதமென்றும் எல்லாம் அவர்கள் சொல்லுகிறார் கள். இவ்விதங் கூறுவது அவர்களது அறியாமையையே விளக்குகி றது. இக் கோஷ்டியார் சமயத்தைப்பற்றி தீவிரமாகச் சிந்தித்துப் பார்ப்பதில்லை ; மேலெழுந்தவாரியாக வெறும் அறிவைக் கொண்டு மாத்திரம் தான் மதத்தைப்பற்றி அறிய முயல்கிறார்கள். இதுவே அவர்கள் சமயத்தைப் பற்றிய தடுமாற்றத்துக்குக் காரணமாகும். இத்தகையவர்களால் தன்னலமற்ற சேவையைச் செய்ய ஒரு நாளும் இயலாது

சமய அறிவே மனிதனின் அகக் கண்ணைத் திறக்கிறது. சமயம் உலக மக்களுக்கு என்ன போதிக்கிற தென்று நோக்குங்கள். உல கில் பலவித சமயங்கள் வழங்குகின்றன வாயினும், அவை ஒன்றோ டொன்று முரண்பட்ட பல்வேறு கொள்கைகளை யுடையனவாயினும். அவைகளின் அடிப்படையான தத்துவம் என்ன வென்பதையே இங்கு ஆராய்ந்து பார்க்க வேண்டுகிறோம். எல்லா சமயங்களும், 'கடவுள் ஒருவன் உண்டு ; உலகிலுள்ள ஜீவராசிக ளெல்லாம் அவ னது மக்களே ; அந்த ஜீவராசிக ளெல்லாம் ஒன்றோடொன்று சகோ தர நேயம் பூண்டே வாழவேண்டும். ஒவ்வொரு ஜீவனும் தனக்காக வன்றி, பிறவுயிர்களுக்கு உதவி புரியவே பிறந்திருக்கின்றன. இதுவே பிறவியின் நோக்கம். இந் நோக்கத்தின்படி நடவாத உயிர்கள் இறை வன் அருளைப் பெற முடியாது' என்றே போதிக்கின்றன. எனவே, ஜீவகாருண்யத்தையும், மக்களிடையே ஐக்கியத்தையும், சகோதர பாவத்தையும் உண்டு பண்ணுவது சமய உணர்ச்சியே என்று ஏற்படுகிற தல்லவா! இத்தகைய சமய உணர்ச்சி கைவரப் பெற்றவன், சமயத்தின் தத்துவத்தை நன்குணர்ந்தவன், 'இது என் ஜாதி! இது என் சமூகம்! இது என்நாடு! இவர் என் உறவு' என் றெல்லாம் தன்னலப்பற்றோடு—குறுகிய மனப்பான்மையோடு கூறு வானா? என்று யோசித்துப் பாருங்கள் வாசகர்களே! 'உலகிலுள்ள எல்லா நாடுகளும் என் தேசம்; எல்லா மக்களும் என் சகோதரர்கள்; அவர்களுக்கு என்னாலான உதவிபுரிய நான் கடமைப்பட்டவன்; மனித சமூகத்துக்கு மட்டுமல்ல; சகல ஜீவராசிகளுக்குஞ் சேவை புரி யவே நான் பிறந்தேன்' என்று அல்லவோ எண்ணித் தன்னலமற்ற தொண்டு செய்து வருவான். ஆகவே, மனிதனின் தன்னல மனப் பான்மையை—மிருகப் பிராய உணர்ச்சியை—முற்றும் மாற்றும் ஒரு மகாசக்தி சமயத்துக்கு உண்டு என்பதை, பகுத்தறிவாளர்கள் என்று தங்களைக் கூறிக்கொள்ளும் மேற்படி கோஷ்டியார் அறியாமையா லேயே, அவர்கள் சமயத்தைப்பற்றித் தங்கள் மனம் போனவாறு கூறுகின்றனர். அவர்கள் பேச்சை நாம் பொருட்படுத்தக் கூடாது என்று கேட்டுக்கொள்ளுகிறோம்.

தன்னலமற்ற தொண்டு இன்னதென அறிவுறுத்திச் சென்ற பெரியார் பலர் நம் இந்தியாவில் இருந்திருக்கின்றனர். அவர்களது வாழ்க்கை வரலாறுகளை நாம் படித்துப் பார்த்தோமானால், உண்மை உணரலாம். நம்மிடையே இன்று ஒரு பெரியார் இருக்கிறார். அவர் தன்னலத் தியாகி; அவர் நமக்கெல்லாம் தன்னலமற்ற தொண்டு இன்னவிதமான அறிவுறுத்தி வருகிறார்; நடத்திக் காட்டி வருகிறார். மனித ஜீவாபிமானத்தோடு உலக மக்களுக்கெல்லாம் உண்மையான சேவை செய்து வருகிறார். அவர் யார் என்று இந்நேரம் அறிந்திருப்பீர்கள் அல்லது அறிய ஆவலுற்றிருப்பீர்கள். அப் பெரியார்தான் மகாத்மாகாந்தி. அவர் நம் இந்தியாவில் பிறந்தவராயினும், உலக முழுதும் போற்றக்கூடிய உத்தம புருஷராய் இருந்து வருகிறார்.

ஒரு சமயம், மகாத்மாகாந்தியை ஒருவர், "இந்தியாவின் அரசியல் விடுதலையை அடைவதற்காக, பலாத்காரத்தையும், இரத்தப் புரட்சியையும் கைக்கொள்வது நியாயமா?" என்று கேட்டாராம்.

அதற்கு மகாத்மா, "அதைப்பற்றிச் சரித்திரம் உங்களுக்கு பதில் சொல்லும். ஆனால், சாத்வீக முறைகளால் ராஜீய விடுதலையைப் பெறுவது சாத்திய மானதாகும்" என்று பதிலளித்தாராம்.

"சாத்வீக முறைகளால் ஒருவேளை முடியாதென்றால்..........?" என்று கேட்கப்பட்டது.

உடனே காந்தியடிகள், "இந்தியா பாதாளத்தில் வீழட்டும்; இந்திய விடுதலைக்காக நான் பலாத்கார முறையோ இரத்த புரட்சியோ கைக்கொள்ளும்படி ஒருகாலும் சொல்லமாட்டேன்" என்று கூறினாராம்.

சமீபத்தில் புரொபஸர்-ஸர். ராதாகிருஷ்ணன் சென்னை கன்னிமரா ஹோட்டலில் ரோட்டரி கிளப் சார்பில் நடைபெற்ற கூட்டத்தில் "அறிவாளிகளின் தோல்வி" என்னும் விஷயமாகப் பேசியபோது, மேற்படி சம்பவத்தைக் குறிப்பிட்டு "இவர்தான் சரியான அறிவாளி; லட்சியங்களுக்காகச் சேவை புரிய தமது வாழ்நாளை அர்ப்பணஞ் செய்தவர். இவரது லட்சியங்கள் குறுகிய நோக்க முடையன வல்ல; ஒரு வகுப்பிற்கோ அல்லது ஒரு குறிப்பிட்ட தேசத்திற்கோ மட்டும் சொந்தமானதல்ல; இத்தகைய சேவையை இவரால் எவ்விதஞ் செய்ய முடிகிறது? இவர் எல்லாவிதமான தன்னலப்பற்றையும் உதறி எறிந்திருப்பதால்தான். தன்னலமற்ற சேவையே குறிக்கோளாகக்கொண்டு இவர் சேவை புரிகிறார். மனித சமூக முழுவதுக்கும் சேவை புரிவதே உத்தமமான மார்க்கம்" என்று மகாத்மாவைப் பாராட்டி யிருக்கிறார்.

மகாத்மாகாந்தி மாபெரும் அரசியல் நிபுணராயும் தலைவராயுமிருந்தும், பாரதநாட்டு விடுதலைக்காகப் பலாத்காரமோ. இரத்தப் புரட்சியோ கூடாதென்று ஏன் கூறுகிறார்? அஹிம்சா தர்மம், சத்தியாக்கிரக முறை என்று அடிக்கடி ஏன் கூறுகிறார்? உலகிலுள்ள அரசியல் நிபுணர்களெல்லாம் தங்கள் நாட்டு முன்னேற்றத்துக்குப் பலாத்கார முறைகளையும், புரட்சிகளையும் கையாண்டு வருவதை நாம் கண்டு வருகிறோம். ஜர்மன் சர்வாதிகாரி ஹிட்லரும், இத்தாலி சர்வாதிகாரி சினர் முஸோலினியும் தங்கள் நாட்டு முன்னேற்ற விஷயமாகப் பலாத்கார முறைகளையும் இரத்தப் புரட்சியையும் செய்து வருவதையும், தங்கள் நாட்டு வளர்ச்சிக்காக, பிறநாடுகள் மீது படையெடுத்தும், போர் புரிந்தும் ஹிம்சை செய்து வருவதோடு, தங்கள் நாட்டில் அவர்களுக்கும் எதிராக வேலை செய்யும் தங்கள் நாட்டு மக்களையுங் கூட சித்திரவதை செய்தும், கொலை புரிந்தும் வருவதையும் பத்திரிகைகளில் படித்து வருகிறோம். அவ்விதமிருக்க, மகாத்மாகாந்தி இந்திய விடுதலைக்குப் பலாத்கார முறையைக் கைக் கொள்ளாது அஹிம்சா தர்மத்தை யடிப்படையாகக் கொண்டு, சத்தியாக்கிரக வழியில் போராட்டத்தை நடத்தி வருவதேன்? மகாத்மாகாந்தி சமயத்தின் உண்மைத் தத்துவத்தையும், தன்னலமற்ற சேவையின் தத்துவத்தையும் நன்கு உணர்ந்திருக்கிறார். ஹிட்லர் முஸோலினி போன்ற மேனாட்டு அரசியல் தலைவர்களோ மேற்படி தத்துவங்களை யுணரவில்லை. இதுவே இவ் விருதிறத்தாருக்கும் உள்ள வேற்றுமையாகும்.

ஆகவே, உலகம் க்ஷேமமுற வேண்டுமெனின், உலக மக்கள் ஐக்கியத் தன்மையையும், சகோதரத்துவத்தையும் பெற வேண்டுமெனின், கொடூர சம்பவங்களும், யுத்தங்களும் ஒழிந்து சமாதானம் எங்ஙனும் நிலவ வேண்டுமெனின் தன்னலமற்ற தியாக உணர்வு மக்களிடையே பரவவேண்டும்; வேரூன்ற வேண்டும். அத்தகைய தன்னலமற்ற தியாக உணர்வு ஏற்படுவதற்குச் சமய அறிவு அத்தியாவசியம். இன்று மனித சமூகத்துக்கு அத்தியாவசியமான தேவைகளுக்குப் பொருத்தமான ஒரு சமயத்தை வளர்க்க வேண்டியது அறிஞர் கடமை. சத்தியத்தையும் அன்பையும் அடிப்படையாகக் கொண்ட சமயந்தான் சிதறுண்டு கிடக்கும் இவ்வுலகத்திற்குப் புத்துயிரூட்ட முடியும். எனவே மக்கள், சமயம், தத்துவம் இவற்றின் மகத்தான சக்திகளையும் உபதேசங்களையும் பின்பற்றிச் செல்ல முற்பட வேண்டும். அப்பொழுது தான் உலகம் தனது பாரமார்த்திகப் பிரபுத்துவத்தை அடைய முடியும்.

ஓம் ஸத் ஸத்:

# "நிட்காமன்"

("ராஜாராம்")

இந்தியாவின் பெருமை இமயமலையே. நம் கதை வெகு காலத்துக்கு முன் அங்கு நிகழ்ந்தது.

"மானஸ ஸரோவம்" என்பது கங்கை உற்பத்தி ஸ்தானத்துக்கு சமீபம் உள்ள ஓர் ஏரியாகும், புராணங்கள் சத்தியலோகத்திலிருப்பதாக கூறுகின்றன.

அங்குள்ள தாமரையில் அமர்ந்துள்ள அன்னப் பறவைகள், நிஷ்டையிலிருக்கும் முனிபுங்கவர்களை ஞாபகப்படுத்தும்.

மந்த மாருதம் மலரிலுள்ள மகரந்தங்களை வாரி இறைத்து, தேகத்திலுள்ள இயற்கை நாற்றங்களை மாற்றும்.

சாதுக்களோடு பல்காலம் பழகினும், உண்மை நெறியறியாத மூடரைப் போல, மண்டுகங்கள், தாமரையில் கட்டவிழ்ந்தோடும் மதுவை யுண்ணவறியாதிருக்க, கானத்திருந்து ரீங்கார மிட்டுவரும் வண்டினங்கள், நறவம் மாந்தி களிப்பது, ஒருநாள் பழகினும் உண்மை நெறியறியும் விவேகியை குறித்தது.

வானத்தை யளாவும் வடவால விருக்ஷங்களில் புள்ளினங்களின் வித விதமான இனிய கானங்கள், சாத்திர ஆராய்ச்சி செய்யும் சாதுக்களோவென ஐயுறச் செய்தன.

பூக்களை நாடிச் செல்லும் வண்டினங்களின் ரீங்காரம் பகவானை நாடிச் செல்லும் பக்தர்களின் நாமகோஷத்தை ஒத்தது.

மது உண்டு மகிழ்ந்துள்ள வண்டுகளோ! ஆத்மாநுபோத மது உண்டு அக நாட்டத்துள் ஆழ்ந்து ஆனந்திக்கும் நிட்களங்கரை நினைப்பூட்டின.

இத்தகைய இயற்கை வனப்பு கொண்ட இமயமலைச் சாரலில், முனிவர்கள் மனம் போல தெள்ளிய நீர் சிறந்து, அவர்களின் வேத கோஷம் போல் "சல சல" வென்ற நீரோட்டமுள்ள அருவிகளை யடுத்து முனிவர்கள் பலர் பன்னகசாலையில் தவமியற்றினர்.

கன்றுக்குப் பாலைத்தரும் பசுவின் கருணையை யொத்த பரமேஸ்வரி சஹிதராய பரமசிவன், ரிஷபாரூடராக இருடிகளின் தவம் பலித்ததென காட்சி தந்தனர்.

முனிவர்கள் புளகாங்கிதராயினர். நான் மறையாலும் தேவார திரு வாசகங்களாய தமிழ் மறையாலும், சொந்த கவிகளாலும் கானம் செய்தனர். சந்தோஷ மிகுதியால் மெய்மறந்து நர்த்தனம் செய்தனர். பன் முறையும் பணிவார் பலர், ஒன்றும் தோன்றாமல் ஓடுவர் சிலர், இம் மாதிரி ஆரவாரத் துடன் வரவேற்றனர்.

"நாமரூபம் மாயா காரியம்" என்பதனை யுணர்ந்து ஆத்மானு சந்தா னியாகிய சனத்குமரர் மட்டும், தனக்குள் விளங்கும் தன்வடிவாகும் தனக்கு அந்நியமில்லாத ஆன்ம வஸ்துவாகிய பரமசிவனை, கண்டு களித்திருப்பதால் வெளியில் நடக்கும் இந்திரியப் புலனாகும் ஆரவாரங்களை கவனிக்கா திருந் தனர்.

பரமேஸ்வரர் சனத்குமரனின் உண்மை ஞானத்தை உள்ளத்தில் மதித்து, மகிழ்ந்தனர். தீரனென்று மெச்சினர். நாமரூப காரணியாகிய பரமேஸ்வரிக்கு சனத்குமரரின் செய்கை வெறுப்பைக் கொடுத்தது. கோபத்தால் உதடுகள் துடித்தன வில் போன்ற புருவங்கள் நெளிந்தன. கண்களின் கோபம் வில்லிலிருந்து புறப்படும் அம்புகளை ஒத்தன. கொவ் வைக் கனியென சிவந்த கண்கள் கோபத்தின் அளவைக் காட்டின. ஒளி கிளம்பிய பின் வெடி கிளம்புதல் போல் தீட்சண்யமான பார்வைக்குப் பின் கோபத்தோடு கூடிய கீழ்கண்ட வார்த்தைகளின் சத்தம் கிளம்பிற்று.

"ஹே! சனத்குமர! நீ மிகவும் செருக்குற்றவன்! லோக நாதர்கள கிய எங்களை மதித்திலை. கோட்டான் அறியுமோ ரவியின் ஒளி! நீ எவ் வாறு அறிவை எங்கள் வரவை! தாழ்ந்தவனாக இருக்கத்தக்க உனக்கு மரி யாதை எப்படித் தெரியும்? "தாழ்ந்து நிற்பவரன்றோ வாழ்ந்து நிற்பர்" இதை நீ அறியாதது ஆச்சரியமல்ல. பணிவற்ற நீ பரிகாக்கும் பறையனாகக் கடவை" என்று சபித்தனள்.

நாமரூப காரணியின் விருப்பப்படியே, தீப்பட்டு அழகுபெற்ற மாளி கையொன்று அழகிழந்து கரியானதே போல், நாமரூப லக்ஷியமான சனத் குமரனது பிராமண சரீரம் நழுவிற்று; குதிரை காக்கும் பறையனது தூலம் தோன்றியது.

உடையால் நடையும் கொடையும் மாறுவது உலக இயற்கை. ஆனால் சனத்குமார் ஆன்மானந்தத்தையே அங்கும் அனுபவித்தனர். ஆன்மா எங் கும் நிறைந்ததன்றோ! இருப்பு, விளக்கப் பிரியம் இன்றி வஸ்துக்கள் எந்த ஆதாரத்தால் விளங்கும்! ஒவ்வொரு வஸ்துவிலும், நாமரூபமாகிய மாயா காரியமும் இருப்பு விளக்க பிரியமாகிய ஆன்ம காரியமும் விளங்குவது பிரஸித்தம். நாமரூபத்தை லக்ஷியம் செய்யாத ஆன்மதீரர் ஆன்மானந்தத் தையே அடைவர்.

உலக காரியம் செய்ய வலிவான இந்திரியங்களும் விஷயாகாரமுள்ள மனமும் சாதகமாகும். சாந்த ரூபியாகிய சனத்குமார் அக நாட்டத்தால் பிரவர்த்தியற்றவரானார். இதை அறியாத இவரது இனத்தவரென இப் போது காணப்படும் பரிப்பாகர்கள், இவரை "சோம்பேரி" என மதித்து குதிரை லாயம் காக்கும் தொழிலில் அமர்த்தினர்.

நடை பழக்கல், குதிரை தேய்த்தல், மயிர் கத்தரித்தல், அழகுபடுத்தல், சவாரி போதல் ஆகிய இந்திரிய நாட்டத்தால் செய்யப்படுவனவாகிய தொழில்களின்றி ஆன்மாநு போதத்தழுந்தி யானந்திக்க சாதகமான காவற்றொழிலை களிப்புடன் ஏற்றார்.

குதிரை யுண்ணும் கொள்ளில் எஞ்சியதே இவரது ஆகாரமாயிற்று. வேலை செய்யாதவனுக்கு கூலி ஏது? "கண் முன் நின்றது புசிப்பார்" என்னும் ஜீவன் முக்த இலக்ஷணப்படி இவரும் கிடைத்ததைக் கொண்டு பசி தணிந்தனர்.

பிராமண சரீரத்தே இருந்த போது, வேதத்தே விதிக்கப்பட்ட நித்ய நைமித்ய கர்மங்களை செய்யத் தவறின் "கர்மபிரஷ்டன்" என்ற கொடிய பழிக்குப் பாத்திரனாக வேண்டும். இந்த சண்டாள ஜன்மத்தோ வேத விஹிதமான கர்மங்களே இன்மையால் "பிரஷ்டத்வமும்" கிடையா. ஆகவே எப்பொழுதும் ஸர்வானந்த மயமாகிய ஆத்மபோதத்தே அழுந்தி வெளிமுக மின்றி சாந்தியாக இருந்தனர்.

உலகில் மாயையால் சூழப்பட்டவர்கள் ஒருவருக்கு இடுக்கண் விளைவிப்பதைவிட அவர் படும் வேதனையை நேருக்கு நேர் பார்த்து மகிழ்வதே பெரிய பாக்யமாக மதிப்பர். மாயாசக்தியாகிய பரமேஸ்வரியும் தன்னால் தாழ்த்தப்பட்டு வருந்துவதாகக் கருதும் சனத் குமாரைக் காண விழைந்தனள்.

கந்தை வஸ்திரமும், இளைத்த உடம்பும் உயிரற்ற சவமோ என்று ஐயுறும் வண்ணம் அசைவற் றிருத்தலையும்—உடைய சனத்குமாரைக் கண்டாள். "ஐயோ! பாவம்! ஹே செருக்கே! உன்னால் மிக மிக உயர்ந்ததாகக் கருதப்பட்ட பிராம்ண சரீரத்தை இழந்து இந்த இழிந்த உடலோடு அவதிப்பட வைத்தனையே" என்று எண்ணினாள்.

"ஹே சனத்குமர! சௌக்யமா? செருக்கடங்கிற்றா? இனியும் அது தலை யெடுக்காதே! ஐயோ பாவம்! காலத்தில் ஸ்நான, பானங்களுக்கும், கன்மேந்திரிய, ஞானேந்திரியங்களை செம்மை வழியில் நடத்தலாகிய சத்கர்ம பிரவர்த்திக்கும், யோக்யமான பிராமண சரீரத்தை இழந்தனை! இந்த ஜன்மத்தும் திறமை யற்ற சோம்பேரியாயினை!" என்று ஏளனம் செய்தாள்.

"தேவி! சௌக்யத்தின் ஸ்வரூபமே ஆத்மா வன்றோ! ஆத்மாவின்றி ஜன்மமும் உண்டோ? ஆன்மா வென்ற சமுத்திரத்தில் தோன்றி மறையும் குமிழிகளை ஒத்த சரீர பேதத்தால் ஆன்மா பேதப் படுவதுண்டோ? இந்திரியங்களின் காரிய மிருந்தாலன்றோ சன்மார்க்க துன்மார்க்க முண்டு. பொன் விலங்கு போன்றது சத்கர்மா, இரும்பு விலங்கு போன்றது அசத்கர்மா. எந்த விலங்கானால் என்ன? இரண்டும் சுதந்தரம் இழக்கச் செய்வதேயன்றோ?

"மனத்தின் இயற்கை பிரவர்த்தி சத்கர்மாவிலேயே, அது சத்துவ குணத் தோற்ற மன்றோ! இச்சன்மத்தோ சத்கர்மப் பிரவர்த்திக்கு அதிகாரமின்றென்று கூறுகின்றனை. ஆகவே இருவினையும் அற்று மனம் பிறப்

பிடத்தை நாடி நிற்கிறது. அதனால் அது மனம் என்ற ஸ்வரூப மற்றது. "சங்கற்பமே மனதின் வடிவம்; நின் அருளால் வேதநிந்தை ஒழிந்ததென்று சங்கற்ப மற்று சதா நிர்விகற்பனா யுள்ளேன்.

"செருக்கு என்பது அக்ஞான ஜன்யமன்றோ? அக்ஞான நீக்கத்துடன் அனைத்தும் ஒழிந்த தென்பது திருவுளம் அறியாததோ! நின் கருணையாற் கிடைத்த இத் தேகத்தே நிறைந்த ஆன்மானந்தியாக இருக்கின்றேன்" என்றார்.

"அவிகிற அனலில் நெய் சொரிந்ததுபோல்" அம்பிகையின் கோபம் உச்சநிலையை அடைந்தது. எதிர் பார்த்ததற்கு எதிரிடையான பதில் அம்பிகையை அவமானப் படுத்திற்று. "நீ இன்னும் செருக்கை விட்டில இழிந்த இந்த தேகத்துள்ளும் உன் மதம் தலை சிறந்துள்ளது" என்றாள்.

தன்னை பரிகசிப்பதாக நினைத்தாள். "இவன் ஆணவம் பூராவும் அடங்கும்படி செய்கிறேன்" என்று சிந்தித்தாள். "ஹே அகங்காரியே! இக்கணமே நீ விகாரமான ஒட்டை யாவாய்" என்று சபித்தனள்.

இச்சையின்படி உலகை ஆட்டி வைக்கும் பரமேஸ்வரியே விரும்பினால் எதுதான் நடவாது? சனத்குமாரரின் பிராமண சரீரம் மறைந்ததேபோல் இதுவும் மறைந்தது. ஜாலவித்தைக்காரன் விதவிதமான உருத்தாங்கி வேடிக்கை பார்ப்போரை சந்தோஷப் படுத்துவதேபோல் உலக காரியங்களை லீலா விநோதமாகக் கருதும் தேவியின் ஆனந்தத்திற்காக நெட்டையான-ஒட்டையானார்.

ஜன்மம் என்பது சட்டை மாற்றுவது போலாகும். சட்டை மாறுவதனால் அறிவும் மாறவேண்டு மென்பது விதியல்ல. அறிவிலிகள் உடையால் நடை மாறுவது உலக இயற்கை. ஆயினும் "எப்பொரு ளெத் தன்மைத்தாயினும் அப்பொருளிலெல்லாம் மெய்ப்பொருளான அறிவையே காணும்" உத்தமர் தன்னிலை மறவாது சொந்த ஆத்மானந்தத்தையே அநுபவித்தார்.

ஒட்டகச் சட்டை போர்த்த உத்தமர், தானாகக் கிடைக்கும் தழைகளையும், தளிர்களையும் தின்று தெள்ளிய நீரைக் குடித்து சாந்தமாகக் காலங் கழித்தனர்.

காட்டில் திரிந்த ஒட்டகத்தை ராஜதூதர்கள் பிடித்தனர். வேளைக்குத் தீனியம் மற்ற பராமரிப்பும் பாகர்கள் நடத்தினர். இந்திரியங்களின் சேஷ்டையற்ற உத்தமர் அவர்கள் பழக்கும் நடையை அறிவது எப்படி? தனக்கு அன்னியமென்று ஒதுக்கி வைத்துள்ள சரீர தொந்தரைகள் அவரை சிறிதும் பாதிக்கவில்லை. பாகர்களின் பிரயத்தனம் பயனற்றதாயிற்று. முரட்டு ஒட்டை யென்று காட்டில் விரட்டினர்.

மூடர்களின் கூட்டுற வொழிந்த ஒட்டை முன்னைப்போல் நிச்சிந்தையாக காட்டில் வாழ்ந்தது.

"அதிக பாரத்தை ஏற்றி கண்காண சிறு சிப்பத்தை எடுத்தாலும் பாரமெல்லாம் குறைந்ததாகக் கருதும் மூடமதியும் விகார நெட்டை யுருவும்

கொண்ட சனத்குமரர் துக்கமே அநுபவிப்பர்'' என்று எண்ணிய பரமேஸ்வரி சனத்குமரரை நண்ணினள்.

நிர்விகற்பத்திருந்த சனத் குமரரைக் கண்ட தேவி தனக்குள் சிந்திக்கலானாள். "என்ன அடம் செய்கிறான்; பாழும் செருக்கைக் கொண்டானே! கஷ்டம் பொறுக்காமல் தனியே கிடக்கிறான், மழை வெயில் பனி இவற்றினின்று பெரிதும் வருந்தி தன் சரீரத்தையும் காத்துக் கொள்ள சக்தியற்ற இவன் மதம் முற்றும் ஒழிந்திருக்கும்'' என்று.

"ஹே மமதையிற் சிறந்த சனத் குமர! நின் சௌக்யம் எவ்வாறுளது? மமதையென்னும் பேய் உன்னைவிட்டககன்றதா?'' என்று வினவினள்.

தாயே! மாயாஸ்வ ரூபியாகிய நின்னையன்றி நாம ரூபங்கள் வேறு ஆதாரத்தை உடையவைகளோ! நீ சௌக்யங்களுக் கெல்லாம் உறைவிட மன்றோ! ஆகவே உன் அம்ஸங்களான நாம ரூபங்களை உன்னுடையதாகவே கண்டவர்கள் சௌக்யத்தினின்றும் நழுவுவதுண்டோ? சூரியன்முன் பனி நிற்பதுண்டோ! ஆன்ம ஞான சத்தி ஸ்வரூபிணியாகிய நின்முன் ஆணவப் பேய் எப்பொழுதும் நின்றதில்லையே!

கண்ணாடி உறைகளால் தீபவொளி வர்ணத்தில் வித்யாசப்பட்ட போதிலும் தீபத்தின் இயற்கைக் குணமாகிய ஒளி, நிறம், குணம் இவற்றில் மாறுதலடையாததேபோல், ஆன்மவொளி நாமரூப உறைகளால் தடைப்படுதல் இல்லையன்றோ! ஆகவே என்னுள் ஆன்ம ரூபியாக விளங்கும் நின்னருளால் அன்றும் இன்றும் என்றும் சௌக்யமே.

தாயே நின்னருளால் தரப்பட்ட சரீரம் சுகத்தைத் தராதொழிவதுண்டோ? சேய்க்குத் துயர் தரும் தாயுண்டோ! பிராமண சரீரமும், சண்டாள சரீரமும் முறையே தவறின் வேத நிந்தைக்கும் லோக நிந்தைக்கும் பாத்திரமானவைகள். இந்த ஒட்டைச் சரீரத்தோ மல சலங்களும் தூரத்தே போய் வீழ்வதால் தேக வாதனையும் அற்றதென்னலாம்.

உன்னருளால் யதேச்சையாகக் கிடைக்கும் இளந்தளிர்களும் தெள்ளிய அருவி நீரும் கனல்வாதை வந்தெய்தின் ஒரு வாரத்துக்கு மேலும் போதுமானபடி உட்கொள்ள சாதகம் செய்கின்றன. சீதப்பனிக்கு நீ தந்த ரோமங்கள் காப்பாகும்.

ஆதலால் ஹே ஜகத்காரணி! நிரந்தர ஆன்மானந்தமடைய இதனிலும் உயர்ந்த தேகம் இலை என நீ கனிந்தளிந்த கருணையை என்றும் மறவேன்'' என்று தோத்தரித்தார்.

தேவியின் கண்கள் கருணை மழை பெய்கின்றன. கைகள் சனத் குமரரை வாரி எடுக்க அவஸரப் படுகின்றன, தனக்குள் களித்தவளாய், "ஆ! இவன் நிட்காமன். நாமரூபத் தோற்றத்தால் மயங்குபவன் அல்லன். சச்சிதானந்தமே வடிவாக விளங்குபவன். அவஸரத்தில் இதை யூகித்திலம்'' என்று நினைந்து "அருமைக் குழந்தாய்! நின் பொறுமைக்கு மெச்சினேன் கண்ணாடி போன்ற உன் முன்னர் என்னிடம் இருந்த செருக்கையே உன்னிடம் இருந்ததாக எண்ணினேன். இப்போது உண்மை விளங்கி விட்டது.

உன்னிலும் தீரன் இலன்! எவ்வுருவிலும் அறிவாகிய பொருளை அறிந்தாய். வேண்டியதைக் கேள்'' என்றனள்.

''ஜகன் மாதா! நின்னைக் கண்டபின் வேண்டத்தக்கதும் உண்டோ? என்னிலும் அன்னியமல்லாத உன்னையன்றி உள்ள பொருளும் உளதோ: வேண்டுவது என்றால் அன்னியத்தையன்றோ வேண்ட வேண்டும். அன்னியமெல்லாம் அழியும் பொருளன்றோ! கேட்பதும் காண்பதும் அழிவாம் மலத்தால் பூசப் பெற்றவையன்றோ? தானேயனைத்துமாய் விளங்கும் தாங்கள் ஈதறிந்தது தானே'' என்றார்.

தேவியின் மகிழ்ச்சி எல்லை கடந்தது. ''அருமைக் குழந்தாய்! நிட்காமன் வேண்டுவதும் ஒன்றுண்டோ. பூரண சுதந்தரம் பெற்ற நீ கேவலம் இந்த சரீரங்களாகிய சிறைக் கூடங்களால் வருந்த மாட்டாய் என்பது தெரிந்தேன். நான் வேண்டுவதையாவது தருக'' என்று வேண்டினள்.

''தாயே! நின் இச்சைப்படி நாம ரூபங்கள் மாறுகின்றன. எந்த விதமாக மாற்ற இச்சையோ அப்படி செய்து கொள்ளலாம்'' எனப் பணிவுடன் கூறிய சனத் குமரரை வாரியெடுத்து உச்சி மோந்து ''யான் வேண்டியது இதுவே'' என்று கூறி ''ஸ்கந்தமூர்த்தி'' யாக்கினள்.

அந்த மங்கள விக்ரஹத்தின் அம்சமே சுப்பிரமண்யமாகி வேதாவைச் சிறையிலிட்டு வேதப் பொருளை விமலருக்கு எடுத்தோதி ''தகப்பன் சாமி'' ''சுவாமிநாதன்'' என்பதாதி சிறப்புப் பெயர்களைக் கொண்டு ஞான பண்டிதனாய் குன்றுதோறும் அமர்ந்து திருவிளையாடல் புரிவது உலகம் அறிந்ததே.

''ஆசைக்கடியான் அகில லோகத்தினுக்கும்
மாசற்ற நல்லடியா னவானே—ஆசை
தனையடிமை கொண்டவனே தப்பாதுலகந்
தனையடிமை கொண்டவனே தான்''

என்ற மூதுரைக்கு, நிட்காமரான சனத் குமாரரின் சரிதம் போதிய சான்றாகும். சாதாரண இருடியாக இருந்தவரை உலகம் போற்றும் உயரிய கடவுளாக ஆக்கியது அவர் கொண்ட நிராசையெனும் சக்தியன்றோ!

குறிப்பு:—இஃது ஆன்ம புராணத்தில் கூறப்பட்டுள்ளது.



# மதுவரக்கன் மரணம்



(வி. ஆறுமுகம்.)

மண்பறிக்கும் மது(அ)ரக்கன் மாண்டொழிந்த சேதியால்
மண்டலத்துள் மாந்தருள்ளம் மகிழ்ந்திடும் நந்நீதியே
கண்ணிருந்தும் குருடராகக் கள்(உ)ண்டோர்கள் ஆவதால்
எண்ணும்போ தினிப்புவியில் இகழ்ச்சியில்லை; இல்லையே. (1)

பண்பறுக்கும் பரத்தைநாடும் பாக்கியந் தொலைந்திடும்
கொண்டமங்கை மக்கள்சுற்றம் கூடிடா தடித்திடும்
அண்டினோரை ஆழ்த்திஐந்து பாதகத்திற் கேதுவாய்
கொண்டுசெல்லும் இம்மதுவின் கொடுமைஎன்ன கொடுமையே (2)

மட்டிலாத பொருள்தொலைத்த மானிடர்கள் எத்தனை?
வெட்டிக்குத்திக் கொலைபுரிந்த வீண்மடையர் எத்தனை?
புட்டிபுட்டியாய்க் குடித்து போதைகொண்ட சுகங்கள்போய்
சட்டிகொண் டிரந்துண்டோர்கள் சாலவுண்டு மதுவினால். (3)

பட்டிஆடு போய்விடும் பண்ணைமாடு போய்விடும்
அட்டியின்றி நஞ்சைபுஞ்சை ஆஸ்திகள் தொலைந்திடும்
தொட்டி தொட்டியாயிருந்த தூயஇல்லம் போய்விடும்
வட்டியோடு கடன்இறுத்தி வாங்கிடும் உயிர்மது. (4)

சித்திரஞ் செறிந்திலங்கும் சேலமென்னும் நகரிலே
முத்தியியும் ஈஸ்வராண்டு மூன்றிரண்டு மாதமாம்
பத்தினோடு ஐந்துதேதி பாடையில் கிடத்தினர்
முத்தரான முதல்அமைச்சர் மூடக் கள்ளரக்கனை; (5)

சத்தியங் கடைப்பிடிக்கும் சற்குணர் ராஜாஜியே
மித்திரர் பலத்தினோடு மீத்தினர் ஐவேஜியே
நித்தியங் குடித்தலைந்த நேர்மையற்ற மாந்தரே
வித்தியாசம் ஏதுமின்றி வீரவேட்கை கொள்ளுவோம். (6)

சாதிரண்டு ஆண்பெண்ணென்று சாஸ்திரம் புகல்வதே
நீதியென்று நாமுணர்தல் நேர்மையாகு மானதால்
சாதியென்ற பேயைவெட்டிச் சாய்த்தமேல் அறிவினால்
சாதிசெத்த சேலம்ஒக்கும் சஞ்சலம் ஒன்றில்லையே. (சாதி-கள்) (7)

ஆதியும் பகவனும் ஆக்கிவிட்ட வள்ளுவர்
நீதிவேதம் தந்துமேன்மை நேர்ந்தகாதை பாருமின்
ஆதியே அனந்தஜீவ னாகுமென்ற உண்மையால்
காதிசொலலும் போதனைக்கு யாதுகுற்ற மில்லையே? (8)

சங்கடங் களைந்துமக்கள் சற்குணஞ் சிறந்துவாழ்வர்
தங்கிடும் பொருள்மிகுந்து தாழ்மையென்ற ஏழ்மைபோம்

# பாலர்கள் பக்கம்




## அறிவு விளக்க வினா சரியான விடை

———:0:———

(சிந்தூர் பண்டித-பூ. ஸ்ரீநிவாசன்)

மூத்தவன் தன் தம்பி கேட்டபடி ஒன்பது புஸ்தகங்களையும் இரண்டடுக்குள்ள புத்தக வடுக்கில் (Book shelf) 2-ல் 1. அதாவது $\frac{1}{2}$ பாகம் காட்ட $\frac{6729}{13458}$ என்று அமைத்தது போலவே, $\frac{1}{3}$ பாகத்திற்கு $\frac{5832}{17496}$ ஆகவும்; $\frac{1}{4}$ பாகத்திற்கு $\frac{4392}{17567}$ ஆகவும்; 1/5 பாகத்திற்கு $\frac{2769}{15845}$ ஆகவும்; 1/6 பாகத்திற்கு $\frac{2943}{17658}$ ஆகவும்; 1/7 பாகத்திற்கு $\frac{2394}{16758}$ ஆகவும்; 1/8 பாகத்திற்கு $\frac{3187}{25496}$ ஆகவும்; 1/9 பாகத்திற்கு $\frac{6381}{57429}$ ஆகவும் புத்தகங்களை யமைத்துக் காட்டினான். இளையவன் கண்டு மட்டில்லா மகிழ்ச்சி கொண்டான்.

**குறிப்பு:**—இவ் வினாவுக்குப் பல மாணவர்களும் (ஏன்? பெரியவர்கள் சிலருங் கூட) தாங்கள் கண்டு பிடித்த விடைகளை யனுப்பினர். ஆயினும், ஒரு விடையாயினும், மேற் குறித்த சரியான விடைக்கு ஒத்ததாக இல்லை என்பதை வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்கிறோம். கீழே வெளியிட்டிருக்கும் இரண்டாவது வினாவுக்காயினும் மாணவர்கள் சரியான விடைகளைக் கண்டு பிடித்து அனுப்ப முயல்வார்களாக.

---

அங்கம்நொந் துழைத்தகாசு அழிந்திடாது மதுவினால்
எங்கணும் இந்நந்நெறிக்கு இன்னும்ஒத் துழைத்தமேல். (9)

தங்கம்ஈயும் இந்தியாநம் தாயின்நாடு அல்லவோ?
மங்கியின்னும் வறுமைகொள்ளல் மாநிலத்தீர் நல்லதோ?
பங்கவேற்றுமை களைந்து பாரில்ஒன்று சேருவோம்
சங்கையின்றி தேசநன்மை சார்ந்துவெற்றி கூறுவோம். (10)

# அறிவு விளக்க வினு 2.

கோவிந்தன் தன் அறையில் ஒரு மூலேயில் உட்கார்ந்து தேம்பித் தேம்பி அழுது கொண்டிருந்தான். அப்போது அவ் வறைக்குள் வந்த அவன் அண்ணன் அப்பாதுரை அவனேப் பார்த்து "தம்பி! என் இப்படி அழுகிருய்? உனக்கென்ன நேர்ந்தது? யாராவது அடித்தார்களா உன்னே? என்று கேட்டான்.

கோவி:—இல்லே. அண்ணு! ஒருவரும் அடிக்க வில்லே.

அப்பா:—அப்படியானுல் என் அழுகிருய்?

கோவி:—நேற்று உபாத்தியாயர் கரும்பலகையில் ஒரு வகுத்தல் கணக்கு போட்டு, "இந்த கணக்கை நோட் புஸ்தகத்தில் எழுதிக்கொண்டு வாருங்கள்" என்ருர். நான் அதைப் பலகையில் எழுதிக்கொண்டு வந்தேன். இப்போது எடுத்துப் பார்த்தேன். அனேக இடங்களில் எண்கள் அழிந்து போயிருக்கின்றன. நான் கொண்டு வரும்போது என் சொக்காய் பட்டு அழிந்து போயிருக்கும். போட்டுக்கொண்டு போகாவிட்டால் உபாத்தியாயர் அடிப்பார்.

அப்பா:—எங்கே அதைக் காட்டு. (கோவிந்தன் பலகையைக் கொண்டுவந்து காட்டினுன். (எண்கள் அழிந்துபோன இடங்களில் × இந்த குறிகள் இருக்கின்றன) அக் கணக்கு கீழ்வருமாறு இருந்தது.

```
215) × 7 × 9 × (1 × ×
       × × ×
      ________
       × 5 × 9
       × 5 × 5
      ________
          × 4 ×
          × × ×
          ______
```

அப்பா:—தம்பி! இந்த கணக்கில் மிகுதி என்ன? ஞாபகம் இருக்கிறதா?

கோவி:—மிகுதி ஒன்று மில்லே யண்ணு! எனக்கு நன்ருய் நினேவிருக்கிறது.

அப்பா:—அப்படியானுல் இந்தக் கணக்கை நான் சரியாக போட்டுக் கொடுக்கிறேன். அழாதே.

(இவ்விதம் தேறுதல் கூறி அந்தக் கணக்கை அப்பாதுரை சரியாகப் போட்டுக் கொடுத்தான். அவன் எப்படி போட்டுக் கொடுத்திருப்பான்?

———

# மலர் வீரர்களும் வண்டுப் பாடகர்களும்

—(0)—

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

என்ன மனோகரமான சோலை! எவ்வளவு இனிய மணம் வீசும் மலர்கள்! பச்சைப் பசேலென்று தழைத்துச் செழித்து அடர்ந்து வளர்ந்துள்ள பசுங்கொடிகள், எவ்வளவு அழகாக காற்றில் அசைந்து அசைந்து ஆடிக்கொண்டிருக்கின்றன! தெளிந்து குளிர்ந்த நீர் நிறைந்த அந்த செந்தாமரைக்குளம், எவ்வளவு அழகாக விளங்குகிறது! அக் குளத்திலே தமது காதலனாகிய செங்கதிரவனை நோக்கிச் சிரித்து நிற்பனவேபோல் தலைநிமிர்ந்து நின்று மெல்லிய பூங்காற்றில் உல்லாஸமாக அசைந்து ஆடிக்கொண்டிருக்கும் அந்த செந்தாமரை மலர்களை உற்று நோக்குங்கள்! அச் செந்தாமரை மலர்கள், திருவரங்கப் பெருநகரிலே அரவணையின்மேல் அறிதுயில் கொண்டு கிடக்கும் அரங்கநாயகனின் அழகிய திருமுகத்தை நினைவூட்டுகின்றன வல்லவா? அவற்றினிடையே மலர்ந்து நிமிர்ந்து நிற்கும் நீலோற்பல மலர்களை நோக்குங்கள்! அந்த கருநீல மலர்கள், திருவரங்கச் செல்வனாரது திருமேனியின் ஒப்புயர்வற்ற இந்திர நீல நிறத்திற்குப் போலியாகத் தோன்றுகின்றன வல்லவா? நீலநீரில் நிமிர்ந்து நிற்கும் அம் மலர்களை உற்று நோக்கும்போது, அவை வீர உணர்ச்சி மிகுதியால் போர் முகத்திற்குப் புறப்படத் துடிதுடித்து நிற்பதுபோல் தோன்றுகின்றதல்லவா? தெளிந்த நீரில் பிறந்து வளர்ந்து நிற்கும் அம் மெல்லிய மலர்களையுங்கூட, கோபத்தால் துடிதுடித்து நிற்கச்செய்து விட்டவர்கள் யாராயிருக்கக் கூடும்? ஒருகால், தண்ணீர்கொண்டு செல்ல குளத்திற்கு வந்திருந்த பெண்மணிகளுள் எவளேனும் ஒருத்தி, செருக்கு மிகுந்து நிற்கும் அம் மலர்களைப் பார்த்துப் பரிகசித்துச் சிரித்து—"அட, மட மலர்களே! இவ்வூருக்குள் நம்மைப்போல் அழகுடையவர்கள் வேறு எவருமில்லையென்று எண்ணிக்கொண்டு ஏன் இப்படி தலைக்கிறுக்கு மிகுந்து துள்ளி நிற்கிறீர்கள்? ஆயிரக்கணக்கான அன்பர்கள் தினந்தோறும் போற்றித் துதிக்க அரவணையின்மீது அறிதுயில் கொண்டு கிடக்கும் எங்களது தனிப் பெருந்தலைவராகிய திருவரங்கச் செல்வனாரது திருமுகத்தின் பேரழகுக்கும் அவரது திருமேனியின் பேரழகுக்கும் முன்பு, உங்களது அற்ப அழகு எம்மாத்திரம்? எங்களது தனிப்பெருந் தலைவரின் திருமுக அழகிலும் திருமேனி அழகிலும் தங்களது அற்ப அழகையும் கண்கொண்டு காண்பரோ? அப் பெருமானது வடிவழகைக் கண் குளிரக்கண்டு பரவசமடைவதற்குக் கொடுத்து வைக்காமல், கேவலம் தவளைகளோடும் மீன்களோடும் உறவாடிக் கொண்டிருக்கும் உங்களுக்கு இவ்வளவு கர்வமேன்? உங்களது சகோதரிக

ளுள் மல்லிகை செண்பகம் செவ்வந்தி முதலிய சிற்சிலர், எங்களது தலைவரின் அழகிய திருமேனியை அணைந்து எத்தகைய பேரின்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள் தெரியுமா? அவர்கள் அனுபவிக்கும் பாக்கியமல்லவோ பாக்கியம்! பாசி பிடித்த கொடிகளினிடையில் சிக்கிக் கொண்டு ஆகாயத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருக்கும் உங்களுக்கு, இவ்வளவு கர்வமும் தலையாட்டமும் எதற்காக?"-என்று இழித்துக் கூறிச் சென்றிருப்பாள் போலும்! அப் பெண்ணின் பரிகாச மொழிகளைக் கேட்டுச் சகிக்க முடியாததனாலேயே, அச் செந்தாமரை மலர்களும் நீலோற்பல மலர்களும்முறையே அரங்கநாயகனது திருமுகத்தோடும் திருமேனியோடும் போர் செய்யக்கருதி ஆத்திரம் மிகுந்து துடிதுடித்து நின்று கொண்டிருக்கின்றன போலும்! கலியுகம் பிறந்து நாற்பத்தேழாவது வருஷத்தில்—தென்பாண்டிய நாட்டில்—ஸ்ரீ வில்லிபுத்தூரில் தோன்றியவரான பெரியாழ்வார், அவ்வற்புதக் காட்சியைத் தமது அரிய சொற்சித்திரத்தில் எவ்வளவு அழகாகச் சித்திரித்துக் காட்டியிருக்கிறார் பாருங்கள்:—



"மருமகன்றன் சந்ததியை உயிர்மீட்டு மைத்துனன்மார்
உருமுகத்தே வீழாமே குருமுகமாய்க் காத்தான் ஊர்:
திருமுகமாய்ச் செங்கமலம்; திருநிறமாய்க் கருங்குவளை;
பொருமுகமாய் நின்(று) அலரும் புனல் அரங்கம் என்பதுவே."

அன்பர்காள்! அதோ தோன்றும் அப் பூஞ்சோலைக்குள் புகுந்து பார்ப்போம், வாருங்கள்! ஆகா, என்ன கர்ணாமிர்தமான கானம் கேட்கிறது பாருங்கள்! யாரேனும் ஒரு சங்கீத வித்வான் அங்கே வந்து அமர்ந்திருந்து தன்னை மறந்து இன்னிசையில் ஈடுபட்டவனாய் ராக ஆலாபனம் செய்து கொண்டிருக்கிறானா என்ன? என்ன விந்தை இது? எந்த மனிதனையும் காணோமே! சங்கீத வித்வான் எவனும் இல்லாதிருந்தும், ராக ஆலாபனம் மட்டும் எப்படி

இவ்வளவு அற்புதமாகக் கேட்கிறது? அதோ, அத் தாழைமடலை உற்று நோக்குங்கள்! மெள்ள மெள்ள மலரத் தொடங்கும் அத் தாழை மடலுக்குள்ளே, பொன்னிறச் சிறகுகளைப்பெற்ற அவ் வண்டுகள் தமது சிறிய உடல் வருந்த உராய்ந்துகொண்டு நுழைவதைக் கவனித்துப் பாருங்கள்! அம் மடலுக்குள் ளிருக்கும் வெள்ளை வெளேலென்ற வெண்ணிறப் பொடியில் படியும் அவ் வண்டுகள், அங்கு எவ்வளவு குட்டிக்கரணங்கள் போட்டுக் குதூகலமாகப் புரள்கின்றன பாருங்கள்! ஆற்று மணலில் புரளும் குதிரைகளைப்போல், அவ் வெண்ணிறப் பொடியில் ஆசை தீர உருண்டு புரண்ட பின், அவ் வண்டுகள் மடலைவிட்டு வெளிப்படுகின்றன. ஐயையோ! என்ன இது? கண்ணுக்கினிய பொன் வண்ணத்துடன் உள்ளே புகுந்த அவ் வண்டுகள், அப் பொன்வண்ணத்தை இழந்து சுண்ணும்பு வண்ணத்தைப் போன்ற வெண்ணிற மடைந்து வெளிப்படுகின்றனவே! முதலில் பொன்னிறமுடையனவாக இருந்த அவை, இப்பொழுது வெண்ணிற முடையனவாக மாறிவிட்டதைப் பார்ப்பதற்கு நம்மால் சகிக்க முடியவில்லையே! அவ் வண்டுகள், தமது அருமையான தங்கநிறத்தைப் பறிகொடுத்து சுண்ணும்பு நிறத்தைப் பெற்றது குறித்துச் சிறிதளவும் வருந்துவதாகத் தெரியவில்லையே! தங்களது மேனி நிறத்தின் மாறுதலை, அவை சிறிதும் கவனிக்கவேயில்லையே! ஓகோ! அவை இப்பொழுது சுயஉணர்வை முற்றிலும் இழந்துவிட்டிருக்கின்றன போலும்! பூக்கள் தோறும் புகுந்து வயிறு நிரம்பச் செந்தேன் அருந்திச் சிந்தை மயங்கி மனம் போனவாறு அலைந்து திரிந்துகொண்டிருக்கும் அவ் வண்டுகளுக்கு, இப்பொழுது சுய உணர்வு எப்படி இருக்கும்? மது மயக்கம் தலைக்கேறி விட்ட பின்னர், அவற்றை அறியாமலே அவற்றின் வாய் ‘தென்ன—தென’ வென்று தெம்மாங்கு பாடத் தொடங்கிவிடுவது இயல்புதானே! அவ்வாறு மது மயக்கத்தால் சுய உணர்வை இழந்த அவை, தற்சமயம் தாம் தமது பொன்னிறத்தைப் பறிகொடுத்துவிட்டு வெண்ணிறத்தைப் பெற்றிருப்பதை எங்கே கவனிக்கப் போகின்றன? மெல்லிய மலர்களிலிருந்து அவ் வண்டுகளின் வயிற்றில் புகுந்த செந்தேன், கர்ணமிர்தமான ராக ஆலாபன வடிவம் கொண்டு அவற்றின் வாய் வழியாக வெளிப்பட்டு நமது செவிகளில் வந்து பாய்கிறது போலும்! செந்தேன் விருந்தருந்திச் சிந்தை மயங்கித் திரிந்து கொண்டிருக்கும் நிலையிலும், அவற்றை நாடி வந்த நமது இரு செவிகளுக்கும் அவை பெரு விருந்தளிக்கின்றன வல்லவா? தமது சுய உணர்வை மறந்து திரியும் நிலையிலுங்கூட, தம்மை அடுத்து வந்த அதிதிகளுக்கு மகிழ்வூட்ட மறவாத விருந்தோம்பும் பெருந் தகைமை அவ் வண்டுகளிடம் அமைந்திருப்பது, அவை ‘வரு விருந்தை அளித்திருக்கும் சிறப்புடைய மறையவர்கள் நிறைந்த’ திருவரங்கப் பெரு நகரில் நித்திய வாசம் செய்யும் மகத்தான பாக்கியத்தைப் பெற்றிருப்பதனு லல்லவா?

அதோ, அம் மல்லிகைப் புதரிடம் செல்வோம், வாருங்கள்! மேற்றிசையிலே, செஞ்சுடர்க் கதிரவன் விரைந்து இறங்கிக்கொண் டிருக்கின்றுனல்லவா? பகற் பொழுதி லெல்லாம் அவனது வெய்யிலின் கொடுமையைப் பொறுக்க முடியாமல் தனது மெல்லிய இதழ்களைக் குவித்து உடசமுழுவதையும் ஒடுக்கிக் கொண்டிருந்த மல்லிகைச் செல்வி, செஞ்சுடர்க் கதிரவன் தனது வெஞ்சுடர்க் கிரணங்களை ஒடுக்கிக்கொண்டு மேற்றிசைக்

யில் விரைந்து இறங்கும் காட்சியைக் கண்டு, அவனைப் பரிஹாசித்துச் சிரிப்பவளைப்போல் உடல் பூரித்து மெல்லிதழ்களை விரித்துச் சிரித்து நிற்கும் அற்புதக் காட்சியைப் பாருங்கள்! அவளது உள்ளத்தில் ஒடுங்கியிருந்த களிப்பு, கதிரவனது கடுங் கிரணங்களின் ஒடுக்கத்தைக் கண்டவுடன் விரிந்து மலர்ந்து சிரிப்பாக வெளிப்படுகிறது போலும்! மது மயக்கத்தினால் சுய உணர்வை மறந்து பறந்து திரிந்துகொண் டிருக்கும் பெண் வண்டுகளின் கண்களுக்கு, தமது முறுவல் பூரித்த முகத்தினாலும் சிறுத்த அடியினாலும் வெண்ணிறத்தினாலும் அந்த மல்லிகைச் சுந்தரிகள் வெண் சங்குகளாகக் காட்சி யளிக்கிறார்கள் போலும்! சங்கீதப் பித்து மிகுந்த வண்டுகள், இனிய நாதத்தை எழுப்பும் சங்குகளைக் கண்டால் சும்மா விட்டுவிட இசையுமோ? திருவரங்கப் பெரு நகரிலே—மார்கழி மாதத்திலே—தினந்தோறும் அதிகாலை வேளையிலே, இடையிடையில் திருச்சங்கு ஊதிக்கொண்டு இறைவனைத் துதித்துப் பாடிச் செல்லும் அன்பர்களை, அரங்கநகர்ச் சோலைகளில் திரியும் வண்டுகள் பன்முறை கண்டிருக்கக் கூடும். அந் நினைவினாலே, இப்பொழுது அவ் வண்டுகள் தாமும் அவ் வண்ணமே சங்கநாதம் செய்துகொண்டு பகவத் குணங்களைப் பாடி மகிழத் தீர்மானித்துக் கொண்டுவிட்டன போலும்! அம் மல்லிகைச் சுந்தரிகளைக் கண்டு காதல் வெறி கொண்டுவிட்ட அவ் வண்டுகள், அச் சுந்தரிகளின் வெள்ளிதழ்களில் ஆராத காதலோடு முத்தமிட்டு இன்ப வெறி மிகுந்து தமது உச்சக் குரலினால் கத்துகின்றன. அதன் பயனாக உண்டாகும் இனிய நாதம், அவ் வண்டுகளை மட்டுமன்றி அம் மல்லிகைச் சுந்தரிகளைக் கூட பெரிதும் பரவசப்படுத்தி விடுகின்றன. அம் மல்லிகைச் சுந்தரிகளின் தலையில் வாய் வைத்து ஊதிக்கொண்டும் அவர்களின் வெள்ளிதழ்களில் சிங்காரமாக வீற்றிருந்து திருவரங்கேசரின் அருட் குணங்களைப் பாடிக்கொண்டும் அவ் வண்டுப் பாடகர்கள் அனுபவிக்கும் ஆனந்தத்தை நம்மால் அனுபவிக்க முடியுமா? மல்லிகைக் காதலிகளும் வண்டுக் காதலர்களும் கருத்தொருமித்துக் கலந்து நிற்கும் அக் காட்சி, எவ்வளவு அற்புதமாக இருக்கிறது! அவர்கள் தங்களுக்குள் பேசிக்கொள்ளும் காதல் மொழிகளையும் கடல்மடை திறந்தது போன்ற களிப்புப் பெருக்கினால் பாடும் பகவத்—கீதங்களின் அரும் பொருள்களையும் அறிந்து அனுபவிக்க, அவ் வண்டுப் பாடகர்களின் பாஷை நமக்குத் தெரியுமா என்ன? இவ் வற்புதக் காட்சிகளை, பரம பக்தரும் ரஸிக சிகாமணியுமான பெரியாழ்வார், தமது அரிய சொற் சித்திரங்களால் எவ்வளவு அழகாக விளக்கிக் காட்டி யிருக்கிறார் பாருங்கள்:—

"தாழை மடல் ஊ(டு) உரிஞ்சித்
தவள வண்ணப் பொடி அணிந்து
யாழின் இசை வண்டினங்கள்
ஆளம் வைக்கும் அரங்கமே";

"எல்லியம் போ(து) இருஞ் சிறை வண்டு
எம்பெருமான் குணம் பாடி
மல்லிகை வெண் சங்கு ஊதும்
மதிள் அரங்கம் என்பதுவே".

# மூனிவனும் வேந்தனும்

—:(o):—

(M. S. ராமஸ்வாமி ஐயங்கார்.)

மூனிவன், காமம் வெகுளி மயக்கமெனு முக்குற்றத்தையு முனிபவன். ஆசைக்கிருப்பிடமாய மண், பெண், பொன்னுகியவை துறந்தவன். எனவே துறவி எனும் பெயர் பூண்டவன். மனம் ஆசலம்புரி ஐம்பொறி வழி செல்லாது நிற்கைக் கேதுவான செய்பவன்.

'அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும், வேண்டிய வெல்லா மொருங்கு' என்ற குறளாசிரியர் மொழிக்கிணங்க ஐம்பொறிகளுக்குரிய புலன்களைக் கெடுக்கு மியல்பினன்.

"வினையின் வந்தது வினைக்கு விளைவாயது
புனைவன நீங்கில் புலால் புறத்திடுவது
மூத்து விளிவுடையது தீப்பிணியிருக்கை
பற்றின் பற்றிடம் குற்றக் கொள்கலம்
புற்றடங் கரவில் செற்றச் சேக்கை
அல்லக் கவலைக் கையாறு அழுங்கல்
தவலா உள்ளம் தன்பா லுடையது
மக்கள் யாக்கை இது"

என்ற உடற் கூற்றினை நன்கறிந்து, உண்டி சுருங்கல் முதலிய விரதங்களுடன் சரீரப் பற்றற்று நிற்பவன். 'பொல்லாப் புழுமலி நோய் புன்குரம்பை, நல்லாரறிந்திருப்பா ராதலிமூல், ஆங்கமல நீர்போற் பிரிந்திருப்பார் பேசார் பிறர்க்கு' என்ற பொன்மொழிகளு மிதனை வலியுறுத்தும். தவம் செய்யு மியல்பினனுதலின் தவசி என்ற பேரும் படைத்தவன்.

"உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு"

என்பது தமிழ் மறை மொழி.

தவத்திற்கு வடிவமானது உண்டி சுருங்குதல் முதலானவைகளால் தம்முயிர்க்கு வருந்துன்பங்களைப் பொறுத்தலும், பிறர்க்கின்னு செய்யாமையும் ஆகிய அளவினதாம். எனவே அவாவறுத்து, பற்றற்று, அஹிம்ஸா தர்மத்தைப் பூண்டவன் முனிவன். புல்லாலுந் தழையாலும் வேய்ந்ததும் தனித்திருப்பதுமாய ஆசிரம வாழ்க்கையை யுடையவன். இத்தகைய இயல்புகள் வாய்ந்த தூய வாழ்க்கையைக் கொண்ட பெரியார் இது காலை நம்மிடையே காணக்கிடைத்த பெரும் பேற்றை நாம் அடைந்துள்ளோம். அஹிம்ஸா தர்மத்திற் கிருப்பிடமானவரும் மிக்க ஆத்மசக்தி பெற்றவருமாய அப்பெரியார் காந்தி சந்நியாசி என்றழைக்கப்படுவது உலகறியுமே.

இத்தகைய பெரியோர் தமது ஆத்ம சக்தியாற் பல அரிய சக்திகளைத் தம்மிடமிருந்து கிளப்புந்தகமையாளர். இவர்தம் பெருமை சாலவும் பெரிது. இவர் அரும் பெருஞ் செயலாற்ற வல்லார். விண்ணவரையும் ஏவல் கொள்வர். பூவுலகிலுள்ள சக்தியெலா மொன்று சேர்ந் தெதிர்ப்பினு மஞ்சார். இதனுற்றான் 'முனிவர்க்கு வேந்தன் துரும்பு' என்ற பழமொழியும் வழங்கிவருகிறது. 'யாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்' என்ற வீரமொழி யிதனைப் பெரிதும் வலியுறுத்தும்.

ரோமபத வரசன் றிருநாட்டில் 'மின்னியெழு முகிலின்றி வெந்துயரம் பெருகு நாளில்' கலைக்கோட்டு மாமுனிவன் வரலும் 'சளசள வென மழைத் தாரை கான்றன' என்பதனுலும் முனிவன் ஆற்றல் தெற்றென விளங்கும். இதுகாலை காந்தி சந்நியாசியார் இயற்றிவரும் பெருஞ் செயல்கள் கண்கூடு.

## வேந்தன் இயல்பு

இனி வேந்தனைக் காண்பம். வேந்தன் படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆகிய ஆறு அங்கங்களை யுடையவன். பயமற்ற தன்மை, கொடுக்கு மியற்கை, அறிவு, ஊக்கமாகிய நான்கு இயல்புகள் வாய்ந்தவன். காட்சிக் கெளியனுயுங் கடுஞ் சொல்ல னல்லனுயு மிருப்பவன். பொருள் வரவு தேடலிலும், சேர்த்தலிலும், காத்தலிலும், அற வழியிற் செலவுசெய்தலிலும் வல்லவனரசன். அரசனே மக்கட்குத் தெய்வமுமாகின்றான்.

'முறை செய்து காப்பாற்று மன்னவன், மக்கட்கிறை யென்று வைக்கப்படும்' என்பது பொய்யாமொழி. அன்பு, இன்சொல்லிவை கொண்டு தம் மக்களை யாளுமரசன் பெரும் புகழுடன் வாழ்வன். அரசரிலும் முனிவரியல்புகள் கொண்டவருண்டு. ஜனக மஹாராஜன், அசோகன் ஆகியவர் இந்நிலையினராம்.

முனிவன் வேந்தனுகிய இவ்விருதிறத்தாரையுங் கம்பநாட்டாழ்வார் நமக்கு மிக்க அழகுபெறச் சித்திரித்துக் காட்டும் பான்மை பெருமகிழ்ச்சியூட்டுவதாம். விசுவாமித்திர முனிவன் ஆதியில் அருந்திறல் அரசன்.

"இறையெனப் புவிக்கூறுஇல் பல்லாண் டெலாம்
முறையினிற் புரந்தே யருள் முற்றினன்"

என்று கூறுகின்றார் கவி. இவ்வரசன் ஓர் நாள் வேட்டைமேற் கானகஞ் சென்றான். வேட்டை முடிந்து களைப்பு மேலிட்டதனுல் மாதவத்தோங்கு வசிட்டனுறைவிடஞ் சேர்ந்தான். வசிட்டனரசனை யுபசரித்து அறுசுவைத் தாயவுண்டி யரசனுக்குஞ் சேனைகட்கு மளித்து நறுமலர்த்தாரும் வாசகக் கலவையும் நல்கினுன். இவை காமதேனு வெனும் பசுவினுதவியாலாயது கண்ட அரசன் 'மேதகு பொருள்கள் யாவும் வேந்தருக் கென்கை தன்னுல்' அப்பசு தனக்குரித்தெனப் பகன்றான். அவ்வாறுயின் கொண்டு போவென வசிட்டன் கூறினுன். அரசன் பசுப் பிடித்தலும் அது வசிட்டனுற் கொடுக்கப்படவில்லை யென்பதறிந்து பெருஞ் சினங்கொண்டது. தன் மெய் மயிர் சிலிர்த்தது. அதனின்றும் பப்பரர் எயினர், சீனர், சோனகர் முதலிய பல வீரர்கள் தோன்றி அரசன் சேனையை முறியடித்து அவன் குமாரரையும் மடித்து வெற்றிச் சங்கமூதினர். இவை யாவும் வசிட்டனுல் வந்த வினை

யென வெண்ணி அரசன் அவர்மேற் போர்புரிந்தான். வசிட்ட முனிவன் தன் கைத் தண்டினை விடுத்து எதிர்க்குமாறு கூறித் தாம் வாளாவிருந்தான். இப்போர் ஆத்ம சக்திக்கும் மிருக பலத்திற்கு மேற்பட்ட போரேயாம். தூய மனத்தின் கண் அரும்பி யெழுஞ் சக்திக்கு வேறெதுவு மீடாகா. எனவே,

"கடவுளர் படைகளீறுக் கற்றன படைகள் யாவும்
விடவிட முனிவன் றண்டம் விழுங்கிமேல் விளக்கக்காணு"

என்று ஆத்ம சக்தியின் பெருமையைக் கவி கூறிக் களிக்கின்றார். எவற்றினும் வலிய படைகளெல்லாம் பயனுறுதொழிந்தது கண்ட வரசன் 'கலைமறை முனிவர்க் கல்லால் திண்டிறல் வலியுந் தேசு முளவெனல் சீரிதம்மா'' என்றோர்ந்து ஒண்தவம் புரிய வெண்ணி அரசர் கோலமும் போகமுந் துறந்து தவக் கோலங் கொண்டான். முனிவனும் அவனது ஆத்ம சக்தியுமெத்துணை சிறப்பினது என்பது இதனாற் போதரும். ஆத்ம சக்தி மனத்தூய்மையாலமைவதாம். மனத்தூய்மை வாய்மையாலாம்.

"புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்"

என்பது மறைமொழி. உடம்பு நீராற் சுத்தமாகும். உள்ளஞ் சத்தியத்தாற் சுத்தமாம். எனவே சத்திய வழி நின்றார் மாபெரும் வலியுடையாராவர். தவக்கோலங் கொண்ட விசுவாமித்திரன் ஆசையறுத்து, பற்று விடுத்து, மனமாசகற்றி, சத்திய தரிசனங் கண்டு தபோ பலம் எனக் கூறப்படும் ஆத்ம சக்தி யடைந்தனன்.

இனி இராமாயண வரசன் தயாத மஹாராஜனைக் கவனிப்போம். இவ்வரசன் அரசற்குரிய சகல குணங்களையு மொருங்கே கொண்டு விளங்கினன்.

'தாயொக்கு மன்பிற் றவமொக்கு நலம்பயப்பின்
சேயொக்கு முன்னின் றொருசெல்கதி யுய்க்குநீரால்
நோயொக்கு மென்னின் மருந்தொக்கு நுணங்குகேள்வி
ஆயப்புகுங்கா லறிவொக்கு மெவர்க்கு மன்னன்'

என்ற குணம் படைத்தவன். அரசன் யாவர்க்குந் தாய்போலுஞ் சேய்போலுமிருந்தனனென்பதால் அரசர்க்குரிய வுயரிய குணங்களெவை யென்பதைக் கவி யறிவுறுத்துகின்றார்.

தசாதன் ஆட்சியில் ஏழை மக்கள் மிகவுங் கவனிக்கப்பட்டன ரென்பதை 'ஈந்தே கடந்தா னிரப்போர் கடல்' என்பதனு லறியலாகும். இவ்வாசன் ஓர் வறிஞன் தன் பயிரைப் பட்டி மாடு முதலியன மேயாவண்ணம் காப்பதுபோல் தன்னாலும் தன் பரிசனத்தாராலுமே யன்றிக் கள்வர், பகைவர் முதலியவர்களாலும் வருத்தம் நேரிடாது உயிர் காக்கின்றானென்பதை,

"வையக முழுவதும் வறிஞனோம்பு மோர்
செய்யெனக் காத்து இனி தாசு செய்கிறான்"

என்னும் பொன் மொழிகளழகுபெறக் காட்டி நிற்கின்றன.

இத்தகைய குணவிசேடங்கள்மிக்க இவ்விருவரது, சந்திப்பைக் காண்போம். இச்சந்திப்பு நமக்குக் கற்பிக்கும் பாடம் மிகப் பெரிது. ஆத்ம சக்தியினுயர்வே நாமிங்குகாணும் படிப்பினை. மண்டபத்தில் தூயமெல்லரியணையில் வந்தமர்ந்தானரசன். இவ்வாறமர்ந்திருக்கும் மடங்கல் போன் மொய்ம்பினன் முன்னர் நான் முகனையும் படைப்பனென்று கூறிய விசுவாமித்திர முனிவன் றோன்றினன். முனிவனைக் கண்டவரசன் விரைந்தெழுந்து அடிபணிந்து முகமன் கூறி உயர்ந்த வோராசனத்திருத்தி யுபசரித்தான். நாற்படை கொண்டவனும் அருந்திறல் வீரனுமாய ஓர் ஒப்பற்றவரசர்க்கரசன் ஓர் முனிவனைக் காண்டலு மிவ்வாறு விரைந்தெழுந்து உபசரித்தனனென்றால் அது ஆத்ம சக்தியினரிய தன்மையையே காட்டுவதாம்.

"வந்துமுனி யெய்துதலு மார்பி னணியாரம்
அந்தர தலத் திரவி யஞ்ச வொளி விஞ்சக்
கந்தமலரிற் கடவு டன்வரவு காணும்
இந்திர னெனக் கடிதெழுந் தடிபணிந்தான்"

என கம்பநாட்டாழ்வார் அரசன் செயலைச் சித்திரித்துக் காட்டுகின்றார். முனிவன் தானியற்றுந் தவவேள்வி காத்தற் பொருட்டு தசரதன் மூத்த மகன் இராமனைத் தன்னுடன் காட்டிற் கனுப்புமாறு கேட்கின்றான். இவ்வாறு செய்தலரசன் கடமை யென்பதை மிகுந்த சாத்வீக முறையில் வலியுறுத்துகின்றான். முனிவருந் தேவரும் தமக்கிடையூறு நேருங்காலத்து அடைக்கலமாகப் புகுமிடங்களில் அயோத்திமா நகரும் ஒன்றும் என நயம்பட வுரைத்து,

"தருவனத்துள் யானியற்றுந் தவவேள்விக் கிடையூறாத் தவம்செய்வோர்கள்
வெருவரச் சென்றடை காமவெகுளி யென நிருதரிடை விலக்காவண்ணம்
செருமுகத்துக் காத்தியென நின்சிறுவர் நால்வரினுங் கரியசெம்மல்
ஒருவனைத் தந்திடுதி............"

யெனக் கேட்கின்றான். குளிர் நிழல் தரும் மரங்க ளடர்ந்த வென்பதும், இராமனுக்கு வேண்டிய யாவையும் தர வல்ல வன் மென்பதும் 'தருவனம்' என்பதன் விசேடப் பொருளாம். நற்கல்வி, மணம் ஆகியவை இராமபிரானுக்கு இவ்வனஞ் சென்றதனாலாயது தெளிவு.

"பெய்யுமாரியாற் பெருகு வெள்ளம் போய்
மொய்கொள் வேலைவாய் முடுகுமாறு போல்
ஐயநின்மகற்கு அளவில் விஞ்சை வந்து
எய்து காலமின்று எதிர்ந்த தென்னவே"

என அரசனைப் பார்த்து வசிட்டன் கூறுவது கவனிக்கற்பாலது.

தீயவை யொழித்தற் பொருட்டும் நல்லவை நிலைபெறச் செய்தற் பொருட்டும் விசுவாமித்திர முனிவன் தசரதனுதவிநாடி இராமனை யனுப்ப வேண்டுகின்றான். நல்லறங் காத்த லரசர்க்குக் கடனாதலின் 'தந்திடுதி' எனக் கடமையை வலியுறுத்திக் கேட்டனன். இராமன் சிறியன், படையூற்ற மிலன் எனக் கூறித் தயாதன் இராமனை அனுப்ப மறுத்துத் தான் வந்துதவுவதாகக் கூறியவுடன் முனிவன் வெகுண்டனன். ஆத்ம சக்தியி

# தியாகம்

(S. கிருஷ்ணன்.)

திவிராட்சதன் எனவும், கௌடப்புலவன் எனவும், கூத்தன் கவிச் சக்கரவர்த்தி எனவும் சிறப்பித்துக் கூறப்படும் கல்விப் பெருமையுடையவர் ஒட்டக் கூத்தர். இவர் செங்குந்த மரபைச் சேர்ந்தவர். ராஜ ராஜ சோழனது சபையில் தலைமைப் புலவராக இருந்தார். ஒரு நாள் அவர் தனது வீட்டின் வாயிலில் நின்று கொண்டிருக்கும் போது ஒரு அரிய கானம் அவர் செவியில் விழுந்தது. உற்றுக் கேட்டார். அப் பாட்டு திருஞானசம்பந்தப் பெருமான் அருளிச் செய்த திருவீதி மிழலை திருப்பதிகத்திலுள்ள தேவாரம் என்று அறிந்து கொண்டார். அதனை கும்பகோணம் வீர சிங்காதன மடத்தில் வாழ்ந்து வந்த சிவபக்தர் ஒருவர் பாடிய வண்ணம் தெருவழியாகச் சென்று கொண்டிருந்தார். நாள்தோறும் தேவாரப் பதிகங்கள்பாடி பிச்சை யேற்றல் அந்த சிவனடியாரின் வழக்கமா யிருந்தது. இன்னிசையோடு அவர் பாடிய அந்தப் பதிகம் கூத்தரின் உள்ளத்தை உருக்கியது. ஆகவே கூத்தர் அந்த சிவனடியாரை அழைத்து அந்தப் பதிகத்தை திரும்பவும் பாடும்படி கேட்டுக் கொண்டார்.

கூத்தரின் விருப்பத்திற்கிணங்க அந்த அடியார் மீண்டும் அப் பதிகத்தைப் பாடினார். அப் பதிகத்தின் இன்னிசையும், தாள முறையும் கூத்தரின் கவிதை யுள்ளத்திற்கு மகா அற்புதமாக இருந்தது. எனினும் அப் பதிகத்தின் சரியான கருத்தை அவரால் அறிந்து கொள்ள முடியவில்லை. ஆகவே, அவர் அந்த சிவனடியாரைப் பார்த்து "சங்கமப் பெரியீர், அப் பதிகத்தின் பொருள் தெரியுமாயின் எனக்கு கூறுவீர்" என்று கூறினார்.

---

ஞளி வீறுகொண்டு வெளிப்போந்தது. அதன் சக்தியைக் கம்பர் கூறுமிடத்து,

"இறுதிக்கால மன்றெனை வாமென விமையோ ரயிர்த்தனர்
மேல்வெயில் கரந்து அங்குமிங்கும் நின்றனவும் திரிந்தன"

எனக் காட்டுகின்றார். தசரதன் யாது செய்வன்? அவன் ஆத்ம சக்தியின் மகிமை நன்கறிவன். எனவே குலகுரு வசிட்டனுரைப்படித் தன் மகன் இராமனை யனுப்பத் துணிந்தனன். முனிவன் கோபம் தணிப்பான் போன்று இராமனுடன் இலக்குமணனையுமனுப்பி முனிவனை விளித்து,

"நற்றந்தைநீ தனித்தாயு நீ யிவர்க்கு
எந்தை தந்தனன் இயைந்த செய்க"

என்று கெஞ்சிக் கேட்டுக்கொள்கின்றான். எனவே மனத்துக்கண் மாசிலாத் தூய்மையாளர் தம் ஆத்ம சக்தியால் அருஞ்செயல் ஆற்றவல்லா ரென்பது இராமாயணப் படிப்பினைகளி லொன்றாம்.

"என்ன! தமிழ் மறையாம் தேவாரத்திற்கு எவனால் தான் பொருள் கூற முடியும்? அவ்வாறு பொருள் கூறும் தரத்தில் உள்ளதோ அந்த தெய்வீகப் பாடல்கள்? எம்பெருமான் ஒருவனுக்கே யன்றி வேறு எவருக்குத் தான் அப் பொருள் விளங்கும்?" என்று அந்த அடியவர் கூறினர்.

"உமக்குத் தெரியுமா என்று கேட்டால் தெரியும் அல்லது தெரியாது என்று கூறுவதை விடுத்து ஏதேதோ பிதற்றுகிறுப். தேவாரத்தின் பொருள் எனக்குத் தெரியாது என்று நினைத்தனையோ?" என்று கூத்தர் மறுத்துக் கூறினர்.

அதைக் கேட்ட அடியவர் அளவிலடங்கா கோபம் கொண்டு "கல்விச் செருக்கால் நீர் இவ்வாறு கூறுகிறீர் போலும். நீர் அதற்கு பொருள் கூறினல் ஏற்றுக் கொள்வார் யார்?" எனக் கூறினர்.

கூத்தருக்கு அசாத்தியமான கோபம் உண்டாய் விட்டது. ஆகவே அவர், "நான் கவிச் சக்கரவர்த்தி என்று உணர்ந்தும் வாயில் வந்த விதம் பேசினையோ. அதன் பலனை அனுபவி" என்று கூறி பக்கத்தில் இருந்த குதிரைச் சம்மட்டியை எடுத்து ஒரு அடி அடித்தார்.

தளர்ந்த வயதும், மெலிந்த மேனியும் உடைய பக்தர் அடி பொறுக்காது பூமியில் விழுந்தார். சிறிது நேரத்தில் அவர் உயிரும் பிரிந்தது. அதன் பிறகு தான் கூத்தர் தான் கோபத்தால் செய்த பாதகச் செயலை அறிந்தார். அதனல் யாது துன்பம் வருமோ என பயந்தார். வருந்தினர். கடைசியில், நடந்தவைகளை அரசனிடம் கூறி அதனல் வரும் துன்பங்களிலிருந்து தன்னைக் காக்கும்படி வேண்டினர். அரசனும் விஷயம் அறிந்து வருந்தினன்.

சிறிது நேரத்தில் சிவனடியார் இறந்த செய்தி மடத்தில் வாழ்ந்துவந்த இதர அடியார்கட்கும் எட்டியது. அவர்கள் சினங் கொண்டு பெருங் கூட்டமாய் திரண்டு வேல், வாள் முதலிய கருவிகளை ஏந்திக் கொண்டு பழிக்குப் பழி வாங்க கூத்தர் வீட்டிற்குச் சென்றனர். அங்கு அவர் இல்லாமையால் அரண்மனையில் அவர் இருப்பாரென்று நினைத்து அரச சபை அடைந்தார்கள்.

சங்கமர்கள் கூட்டமாய் வருவதைக் கண்ட அரசன் விஷயம் முழுவதும் அறிந்தவனுதலால், "பெரும் புலவரான கூத்தரை இவர்கள் முன் விட்டால் இவர்கள் கொன்று விடுவார்கள். தமிழன்னைக்கு அதனல் பெரும் நஷ்டம் உண்டாகும்" என்று மனதில் நினைத்து கூத்தரை மறைவிடம் ஒன்றில் மறைத்து வைத்து விட்டு அடியவர்கள் முன் சென்று "சிவனடியார்களே! என்ன விசேஷம்? ஏன் கொலைக் கருவிகளை ஏந்தி நிற்கின்றீர்கள்? உங்கட்கு கோபம் வரக் காரணமென்ன? என்ன துன்பம் நேரிட்டது. கூறுங்கள். நான் தக்கன செய்கிறேன்" என்று ஒன்றும் அறியாதவன் போல் கூறினன்.

"அரசே! குற்றமொன்றும் புரியா எங்கள் மடத்து அடியவர் ஒருவரை கூத்தன் கொலை புரிந்து இங்கு வந்து மறைந்திருக்கிறுன். இக் கொடுஞ் செயலுக்கு தக்க தண்டனை விதிக்க வேண்டும். அவனை எங்களிடம் விட்டுவிடும்" என்று அவர்கள் கூறினர்கள்.

"அடியவர்களே! கோபத்தை விடுங்கள். இந்த தீய கொலைக்கு தரும நூல்கள் கூறுகிறபடி நான் கழுவேறுகிறேன்" என்று அரசன் உரைத்தான்.

"நன்று. நன்று. கூத்தன் செய்த கொலைக்கு அரசன் கழுவேறவா? கூடாது. கூத்தனை எங்கள் பால் விட்டு விடும். இன்றேல் இதை விட்டு அகலோம்" என்று தீர்மானமாய் உரைத்தனர்.

பின்னர், அரசன் சிறிது நேரம் ஆலோசித்து விட்டு "இங்கு இருங்கள். நான் வருகிறேன்" என்று கூறி அந்தப்புரம் சென்று தன் மகனை அழைத்து, "அப்பா! மனுச்சோழனுக்கு முன்னர் நடந்த சோதனை போல் எனக்கும் இப்பொழுது நேர்ந்திருக்கிறது. இக் குறை உன்னால் தான் தீர வேண்டும்" என்று கூறி நின்றான்.

தந்தையின் கருத்தை மகன் உணர்ந்து கொண்டான். "ஐயனே! என் உடலும் உயிரும் தங்கள் உடைமை. தங்கள் இஷ்டம் போல் நான் நடக்க சித்தமா யிருக்கிறேன்" என்று பணிந்து கூறினான்.

ராஜ ராஜன் மகிழ்ந்து, மகனை ஒரு மூடு பல்லக்கில் வைத்து, திரையால் மறைத்து, கொலு மண்டபத்தில் அதனை தூக்கிவரச் செய்து அடியவர்களை நோக்கி "சிவனடியார்களே! சங்கமக் கொலை புரிந்த இவனை நீங்கள் இஷ்டம்போல் தண்டித்துக் கொள்ளலாம். இப் பாவியை நீங்கள் பார்ப்பது கூட மிகவும் பாவமாதலால் இருள் சூழ்ந்த மறைவிடத்தில் வைத்து கொலை செய்யுங்கள்" என்று கூறி அனுப்பினான்.

அரசன் சொல்லை உண்மை யென நினைத்து பல்லக்கைத் தூக்கிச் சென்று மறைவிடம் ஒன்றில் வைத்து அவர்கள் கொலை செய்ய ஆரம்பிக்கையில், சங்கமருள் சிலர், "இவன் ஒட்டக் கூத்தன் தானா என்பதைப் பார்த்து கொலை செய்ய வேண்டும். வேறு யாராகவாவது இருந்தால் பெரும் பாவமாகும்" என்றனர்.

அது கேட்ட சங்கமர்கள் திரையை விலக்கலும், அங்கு அரசகுமாரன் சந்தோஷத்தோடு வீற்றிருந்ததைக் கண்டனர். திகில் கொண்டனர். அரசகுமாரன் "நீங்கள் எண்ணியபடி செய்யுங்கள். காலதாமதம் வேண்டாம்" என்று கூறி நின்றான்.

"ஒட்டக் கூத்தனை நாங்கள் கேட்க உன் தந்தை உன்னை அனுப்பி எங்களை ஏமாற்றி விட்டார். உன்னைக் கொல்லுதல் தருமமல்ல" என்று சங்கமர்கள் கூறினார்கள்.

"நானும் என் தந்தையும் உடன்பட்டு இக் காரியம் செய்ததால் என்னைக் கொல்வது தருமமே" என்று அரசிளங்குமாரன் மறுத்துக் கூறினான்.

கூத்தன் பால் அரசன் கொண்டுள்ள அன்பை அறிந்து சங்கமர்கள் ஆச்சரியப்பட்டார்கள். "அன்னாளில் குமணன் கவிக்காகத் தன் தலை கொடுத்தான். சோழனோ கூத்தனை காப்பாற்ற தன் குமாரனை ஈந்தான் போலும். இதன்றோ தியாகம்" என்று சங்கமர்கள் அரசனைப் புகழ்ந்து அரசகுமாரனை அரசனிடம் கொண்டு போய் விட்டார்கள்.

# பண்டைத் தமிழர் மணமுறை

(பி. சுப்பிரமணியன்.)

பண்டைத் தமிழரின் மணமுறை யென்றால் பண்டு நம் முன்னோர்களெல்லாம் மணமுறையினை எவ்வாறு மேற்கொண் டிருந்தார்கள் என்பதை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும். இவ்வாறு பண்டைய நம் முன்னோரின் மணச் சிறப்பினை ஆய்வதற்குத் துணையாயுள்ளவை, "அக நானூறு, சிலப்பதிகாரம், தொல்காப்பியம்" முதலிய சங்ககால இலக்கிய இலக்கண நூல்களேயாகும்.

பண்டு நந்தமிழ் நாட்டுத் தமிழர்களெல்லாம், "பிரமம், பிரசா பத்தியம், ஆரிடம், தெய்வம், ஆசுரம், இராக்கதம், பைசாசம், காந்தர்வம்" என்னும் எண்வகை மணத்தினுட் சிறந்த "கந்தர்வ (களவு) மணத்தையே பெரும்பாலும் மேற்கொண் டிருந்தார்கள். பண்டைக் காலத்தில் ஆடவனும் பெண்ணும் இயற்கையாகத் தனியே சந்தித்து இருவரும் ஒருவர்க்கொருவர் மனத்திற் சிறந்த அன்புடையராய்ப் பழகி வருவதும், ஆடவன் பெண்ணின் பெற்றோர் உடன்பாட்டோடு மணம் முடித்துக் கொள்ளுவான். இதுவே பண்டைத் தமிழ் மக்கள் மேற்கொண் டிருந்த சிறந்த மணமுறையின் சுருக்கமாகும்.

இவ்வாறு பண்டைத்தமிழ்மக்கள் மேற்கொண்டிருந்த கந்தர்வ (களவு) மணத்துள் சிறிது, பொய்யும், குற்றமும் தோன்றக் கண்ட நம் முன்னோர்களெல்லாம் திட்டமாகிய கரணம் (மணம்) ஒன்றனைத் தமிழ் மக்களுக்கு வகுத்து வைத்துள்ளார்கள். இச் செய்தியினைத் தொல்காப்பியத்திலுள்ள,

"பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப"

என்னும் சூத்திரத்தால் நன்கு விளங்கும். (ஐயர்—மேலோர்)

நிற்க பண்டைக் காலத் தமிழரின் மணமுறையை பண்டைய சங்க இலக்கியமாகிய அகநூற்றிலிருந்து சிறிது விளக்கிக் காட்டுவாம்:—

ஒரு புறம்; உழுந்து முதலியவை தலைப்பெய்து அடப் (சமைக்கப்) பட்ட பெருஞ் சோற்றினைத் திருமணத்திற்கு வரும் ஒவ்வொருவரும் அவரவர்கள் மனப்படி தின்று கொண்டேயிருப்பர். மற்றொருபுறம் நிறைந்த கால்கள் புதைக்கப்பட்ட பந்தரின் கண் நுண்மணல் பரப்பப்பட் டிருக்கும். இவைக ளிங்கன மிருப்ப இல்லி (வீட்டி)ன் கண் நல்ல விளக்கினைச் சுடருண்டாம்படி ஏற்றி வைத்து, மாலை யிருளைப் போக்கிய வளர்பிறைக் காலத்தில் சகடம் (உரோகிணி) திங்களை (சந்திரனை) அடையும் நன்னாள் வந்து விட்டது என்பதை யறிந்து, உச்சியிற் புதிய அகன்ற குடத்தை யேந்தி வந்த மக-

ளிர்களெல்லாம், முன்னர் முடிவுபெற வேண்டிய காரியத்தை முன்னரும் பின்னர் முடிவுபெற வேண்டிய காரியத்தைப் பின்னரும் முறையாகச் செய்து முடிப்பார்கள். பின்னர் மகப்பேறடைந்து மாங்கலியத்துடனிருக்கும் மகளிர் நால்வர் ஒருங்கு கூடித் தலைவியை நீராட்டுவார்கள். மேலும் அம்மகளிர்கள் தலைவிக்கு நீராட்டுவதோடன்றி, "உன்னை வாழ்க்கைத் துணைவியாகப் பெறும் தலைவனை நன்கு காப்பாற்றும் பேற்றினையுடையவளாக நீ ஆக வேண்டும்" என்று உபதேசமுஞ் செய்து மேலோரைக் கொண்டு வதுவையினை முற்றுவிப்பார்கள். இதனை

"உழுந்து தலைப்பெய்த கொழுங்களி மிதவை
பெருஞ்சோற் றமலை நிற்ப நிரைகாற்
தண்பெரும் பந்தர்த் தருமணன் ஞெமிரி
மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்
கனையிருள் அகன்ற கவின்பெறு காலைக்
கோள்கால் நீங்கிய கொடுவெண் டிங்கள்
கேடில் விழுப்புகழ் நாடலை வந்தென
வுச்சிக் குடத்தர் புத்தகன் மண்டையர்
பொதுசெய் கம்பலை முதுசெம் பண்டிர்
முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்
புதல்வர்ப் பயந்த திதலையவ் வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல வுதவிப்
பெற்றோர் பெட்கும் பிணையை யாகென
நீரொடு சொரிந்த வீரிதழ் அலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க
வதுவை நன்மணம்................................"

என்னும் அகநானூறு 86-ம் பாட்டால் அறியலாம்.

ஆக, மேலே காட்டிய மேற்கோளிலிருந்து பண்டு நமது முன்னோர்களெல்லாம், மணமுறையை எத்தகைய சுருங்கிய நெறியிலும், நேரிய முறையிலும், நடத்தி வந்துள்ளார்களென்பதும், இக்காலத்தன போல் நான்கைந்து நாள் மணமுறை யென்பது பண்டைக் காலத்து நம் நாட்டில் இல்லை யென்பதும் ஒருவாறு விளங்கும்.

நிற்க, இக்காலத்து நம் நாட்டு இளந்தமிழ்ச் சிறார்களெல்லாம் ஒரு சிலரின் ஆடம்பர மணமுறை வாழ்க்கையினைப் பார்த்து, நாமும் அவர்கள் போல் ஆடம்பர மணவாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும் என்று எண்ணங் கொண்டு பொருளினையும், காலத்தினையும் வீணே பாழாக்குகின்றார்கள். என்னே நமது தமிழர்களின் சீர்கேடு! மேலும் பொருளினை அவ்வாறு நல்வழியிற் செலவு செய்வதே நமக்கும் நமது சமூகத்தினருக்கும் நற் பயனளிக்கும் என்பது திண்ணம். ஆடம்பர மணமுறையினை இன்றே உதறித் தள்

சிறு கதை.

# பட்டாசு விற்கும் பையன்

ஸ்ரீ. நாராயணன்.

“டேய், குப்பா நீ நேற்று நல்ல வியாபாரம் செய்துகொண்டு வரவில்லை. இன்னிக்கு இந்த தட்டு சாமான்களை எல்லாம் காசாக்கிக்கொண்டு வரணும் தெரியுமா? நாளை தீபாவளிக்கு உனக்கு நல்ல கதர் சட்டை வேட்டி வாங்கி வைத்திருக்கிறேன். போ. எடு தட்டை”

“ஆகட்டுங்க” என்று பதில் சொல்லிவிட்டு பட்டாசு நிறைந்த தட்டொன்றைத் தலையில் தூக்கிக்கொண்டு புறப்பட்டான் குப்பன். பத்து வயது நிரம்பா பாலன். இவனையொத்த மற்ற சிறுவர்கள் பள்ளிக்கூடம் போகிறார்கள். பந்து விளையாடுகிறார்கள். குப்பன்விதி இப்படி. அவன் தாய் தகப்பன் இல்லாத ஓர் அநாதை! புண்ணியத்திற்கு தூரபந்து ஒருவன் கஞ்சி வார்க்கிறான். மாதம் இரண்டு ரூபாய் சம்பளம். அதற்கு எவ்வளவு அலைச்சல்? எவ்வளவு அடிகள் பெறவேண்டியிருக்கிறது.

2

மணி மூன்றாய்விட்டது. காலையில் புறப்பட்டது. பல தெருக்கள் சுற்றி வந்துவிட்டான். அவன், “பட்டாசு வாங்கவில்லையா பட்டாசு,” என்று தொண்டையை கிழித்துக் கொண்டதுதான் மிச்சம். அவன் தட்டிலிருந்து ஒரு மத்தாப்பூப் பெட்டிகூட விலையாகவில்லை.

காலையில் உணவருந்தியது. முதலாளிக்குப் பயந்து கடைக்குப் போகவில்லை. பாவம் பசியாலும் வெய்யிலினாலும் மெலிந்துவிட்டான். நடக்க முடியாமல் தள்ளாடித் தள்ளாடி ஊர்ந்து சென்றான். பசியைக்கூட அவன்

---

ளுங்கள். மேலும் அடிமை நாட்டில் அடிமை மக்களாய்ப் பிறந்த நாம் ஆடம்பர மணமுறையினை உதறித் தள்ளாது மேற்கொண்டு வாழ்வோமாயின், சுதந்திர நாட்டில் சுதந்திர மக்களாய் வாழ முடியாது. அன்றியும் நாம் எளிய மணமுறையை மேற்கொண்டொழுகும் மக்களால் எள்ளி நகையாடும் தன்மையராவோம். ஆதலின், இன்றுவரை ஆடம்பர மணமுறையினை மேற்கொண்டு, காலத்தையும், பொருளையும் வாளா கழித்து உறங்கியிருந்த நந்தமிழ் நாட்டுத் தமிழ் மக்களெல்லாம், இனியாவது உறக்கத்தினின்று விழித்துப் பண்டைய தமிழ் நாட்டுத் தமிழ் மக்களைப் போல் எளிய மணவாழ்க்கையும், தூய எண்ணமும் உடையராய் வாழ்ந்து நன்னிலையடைய எல்லாம் வல்ல இறைவர் அருள் புரிவாராக.

நினைக்கவில்லை. தட்டில் ஒரு காசுகூட சேரவில்லையே என்பதுதான் அவன் வருத்தம். அவன் அப்பொழுது வருத்தத்தின் வடிவமாகவே தோன்றி ளுன். அவன் தன் வீட்டிற்குக் கஞ்சிகுடிக்கப் போகவும் நினைக்கவில்லை. ஏன்? எவனாவது குறும்புப் பையன் 'குப்பன் வீட்டிலேயே இருந்தான். வெளியே போனால்தானே பட்டாசு விலையாகும்' என்று தன் முதலாளி யிடம் கோள் சொல்லிவிட்டால் என்ன செய்வது என்று வீட்டிற்கும் போகாது சுற்றின தெருக்களையே மறுபடியும் சுற்றிக் கொண்டிருந்தான்.

மேலும், குப்பன் முதலாளி பெரிய முன்கோபி. இப்படியே போனால் உதை நிச்சயம். அவர் தீபாவளிக்கு கொடுக்கவிருக்கும் கதர் வேஷ்டி சட் டைகளின் வாயில் மண் விழுந்துவிடப் போகிறதே என்றும் அஞ்சினான்.

இதற்கிடையில் நீருண்ட மேகங்கள் ஒன்றுகூடி மழை கல்வர்ஷமாய் பெய்யத் தொடங்கிற்று. குப்பன் மழைக்குப்பயந்து ஒரு வீட்டின் திண்ணை யில் தட்டுடன் உட்கார்ந்து கொண்டான். வீட்டினுள்ளிருந்து ஒரு பையன் வந்து தட்டினண்டை உட்கார்ந்துகொண்டு 'அது என்ன விலை' 'இது என்ன விலை' என்று அவன் வாயைக் கிண்டிக்கொண் டிருந்தான்.

3

மழையோ விட்டபாடில்லை. வீட்டுக்காரப் பையன் "டே, எனக் கொரு மத்தாப்பூப்பெட்டி சும்மா கொடேண்டா. நீதான் நிரைய வைச் சிருக்கியே?" என்றான்.

"காசு கொண்டுவா உனக்கு சும்மா மத்தாப்பூ பெட்டி தரேன்."

"காசு எங்காத்திலில்லியே"

"பெட்டி எங்கிட்ட இல்லையே"

"அப்டீன்னு இங்கிருந்து போ"

"மழை வுட்ட உடனே போயுடரேன்"

"முடியாது, போ" என்று குப்பன் பக்கத்தில் வைத்திருந்த தட்டை காலால் உதைத்து வீதியில் தள்ளிவிட்டு வீட்டினுள் போய் தாழிட்டுக் கொண்டான்.

பட்டாசுகள் தெருவில் சிதறிவிட்டன. குப்பன் வீட்டுக் கதவைத் தட்டினான். கதவு திறக்கப்படவில்லை. நனைந்துகொண்டே தட்டையும் சிதறிக்கிடந்த பட்டாசுகளையும் பொறுக்கி வைத்துக்கொண்டு மறுபடியும் அந்தத் திண்ணையிலேயே உட்கார்ந்து கொண்டு கதவு எப்பொழுது திறப் பார்கள் என்று எதிர்பார்த்திருந்தான். அவனுக்கு உட்கார்ந்திருப்பது பிடிக்கவில்லை. முதலாளியிடம் நனைந்த பட்டாசுகளைக் கொண்டுபோய்க் கொடுத்தால் என்ன செய்வாரோ என்ற பயம் ஒருபுறமும், பசியின்கொடுமை மற்றொரு புறமும் அவனை வாட்டின. வருத்தம் தாங்காது 'கோ' என்று கதறினான். அவன் அநாதை! அவனை ஆதரிப்பார் யார்?

4

மறுபடியும் மழை ஆவேசத்துடன் பெய்யத் தொடங்கிற்று. பையனுக்கு மேல் துண்டுகூட கிடையாது. அவனுடைய கைகால்கள் குளிரால் நடுங்கி அனேகமாய் விரைத்துப் போய்விட்டன. அந்தத் திண்ணையிலேயே சுருண்டு படுத்துவிட்டான்.

இரவு சுமார் 10 மணிக்கு வீட்டினுள்ளிருந்து ஒருவர் வந்து குப்பனை பலதடவை எழுப்பினர். அவன் அசைந்துகூடக் கொடுக்கவில்லை. எழுப்பினவர் "பயல் தூங்கட்டும்" என்று சலிப்புடன் சொல்லிவிட்டு வீட்டினுள் போய்விட்டார்.

5

தீபாவளி அன்றிரவு. எதிர் வீட்டுப் பெண்ணுக்கு தலை தீபாவளி. அங்கு சிரிப்பும் களிப்பும் கலந்து உலாவின. ஊருக்குமுன் எழுந்து கங்கா ஸ்நானம் செய்து மத்தாப்பூ முதலியவைகள் விடத் தொடங்கினர். அவைகள் கொஞ்சநேரம் சுடர் விட்டெரிந்து பிறகு கரிக்குச்சியாய் கீழே விழுந்தன. மனிதனின் யாக்கையும் அப்படியே!

குப்பன் கண் விழித்துக்கொண்டான். அவனுக்குத் தன் நினைவில்லை. ஜில்லென்று குளிர் அவனுடலை நடுக்க ஆரம்பித்தது. மத்தாப்பூவினால் உண்டான ஜோதியை அவன் கவனிக்கவில்லை. மற்றொரு ஜோதி அவன் முன்பு தோன்றிற்று. அது ஆளை மயக்கக் கூடியதாயிருந்தது. அந்த ஜோதியின் நடுவே ஒரு உருவம். கருத்தமேனி பெருத்த தேகம். முறுக்கிவிட்ட மீசை. கையில் ஒரு நீண்ட சூலாயுதமும் கயிறும்.

குப்பன் அந்த உருவத்தையே நோக்கிக் கொண்டிருந்தான். வைத்த கண் எடுக்காமல் நோக்கிக் கொண்டிருந்தான்.

உருவம் புன்னகை தவழ்ந்த முகத்துடன் குப்பனை அன்புடன் அழைத்தது. மறுநிமிடம் குப்பன் உருவத்தின் அணைப்பிலிருந்தான். குப்பனுடன் மறைந்துவிட்டது அந்த உருவம். ஜோதியும் மறைந்தது. இருள் சூழ்ந்து கொண்டது. நிசப்தம் குடிகொண்டது.

பழைய இருள். இடையிடையே கொஞ்ச நேரம் மத்தாப்பூக்களின் ஜோதி. அதிர்வெடிகளின் ஆவேசம்.

6

தீபாவளி இளஞ்சூரியன் குப்பனின் புன்னகை தவழ்ந்த பிரேதத்தின் மேல் பிரகாசித்தது. ஊர் ஜனங்கள் வந்து கூடினர். அவர்கள் குப்பன் காலனுடன் தீபாவளி கொண்டாட சென்றுவிட்டான் என்று பேசிக் கொண்டார்கள்.

---

# அவசர புத்தி

(ஜி. சௌந்திரராஜன். பீ. ஏ..)

சென்னை பிரபல வக்கீலான மீனாக்ஷிசுந்தரம்பிள்ளை ஐந்து லக்ஷ ரூபாய்க் கதிபதியாய் இருந்தார். அவரது மனைவி பார்வதியம்மாள், ஆறு வயதுள்ள மகனான கந்தசாமியை விட்டுவிட்டு இறந்தாள். பிள்ளை தன் மனைவி இறந்த துக்கத்தினால் பதினைந்து வருட காலமாய் மணம் செய்யாமலிருந்து, பிறகு ஒருவாறு தன் குமாரன் சொன்னதின்பேரில், மைலாப்பூரிலுள்ள அருணாசலம் பிள்ளையின் குமாரத்தியான சுமார் பதினாறு வயதுள்ள விசாலாக்ஷி என்ற நங்கையை மணந்து கொண்டார். கந்தசாமி அப்பொழுது பி. ஏ. தேறி இருந்தான். கந்தசாமியும், அடுத்த வீட்டு கோபாலசாமியும் இளம் பிராயத்திலிருந்து ஆப்த சிநேகிதர்களா யிருந்து வந்தனர்.

ஒருநாள் மீனாக்ஷி சுந்தரம்பிள்ளை, வழக்கப்படி கோர்ட்டிற்குச் சென்றிருந்தார். அன்று கந்தசாமி ஓர் சாய்வான நாற்காலியில் சாய்ந்துகொண்டு, ஓர் தமிழ்ப்பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்தான். அச் சமயம் பின்னால் யாரோ வந்து தன் கண்களைப் பொத்தியதாகக் கண்டு திடுக்கிட்டு, "யாரது? கோபாலசாமியா? தெரியும் நீதான்; பந்தயம் வேண்டுமானாலும் கட்டுவேன்; எடு கையை," என்றான். அதற்கு அவன் பின்னிருந்த உருவம் பேச ஆரம்பித்து, "இல்லை; நீங்கள் இப் பந்தயத்தில் தோற்று விட்டீர்; எடுங்கள் பந்தயத்தை," என்று சொல்லி, கந்தசாமியின் கன்னத்தில் ஓர் முத்தம் ஈந்தது.

உடனே கந்தசாமி, தன் கண்களைப் பொத்தியிருந்த கைகளை சடக்கென்று விலக்கித் திரும்பிப் பார்க்கவே, தன் சிற்றன்னை நிற்பதைக்கண்டு திடுக்கிட்டு நாணமடைந்து, ஓர் மூலையில் ஒதுங்கி நிற்க, விசாலாக்ஷி அவனருகில் வந்து பேசத்தொடங்கி, "நாதா! என் இப்படி பெண்போல் நாணிக்கோணி நிற்கிறீர்கள்? என் அருகில் வந்து எனக்கு ஓர் முத்தம் தரலாகாதா? அறுபது வயது சென்ற கிழவனைக் கட்டிக்கொண்டு எவ்வளவு நாட்கள்தான் சும்மா இருப்பேன்? என்னைப்போன்ற இள நங்கைகள் தங்களைப்போன்ற வாலிபர்களில்லாது எவ்வாறிருக்க முடியும்? நான் உங்களை காதலிக்கிறேன்," என்று கூறி தன் காதலை வெளிப்படுத்தி, காமவெறியுடன் கந்தசாமியைக் கட்டி அணைக்கும் பொருட்டு பாய்ந்து வந்தாள்.

இதைக்கண்ட கந்தசாமி அவளை நிறுத்திப் பேசத்தொடங்கி, "தாயே! என்ன காரியம் செய்ய நினைத்தீர்கள்? நான், தாங்கள் பெற்ற பிள்ளையல்லவா; தாங்கள் எனது பெற்ற தாயல்லவா; இது வேண்டாமம்மா;" என்று கெஞ்சி, அவள் காலில் விழுந்து கும்பிட, அப்பொழுதும் காமவேட்கை தணியாதவளாய், விசாலாக்ஷி அவனைத் தூக்கி முத்தமிட முயல, கந்தசாமி, தான் வாளாவிருந்தால் காரியம் மிஞ்சிவிடும் என்று எண்ணி, அவளை கீழே தள்ளி, அவள் எழுந்திராவண்ணம் அவள் கரங்களிரண்டையும் தரையோடு சேர்த்துப் பிடித்துக்கொண்டிருந்தான். அச் சமயம் எதிர்பாராத விதமாய் ஓர் சம்பவம் நிகழ்ந்தது.

மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை, அன்று கோர்ட்டிற்கு போய்விட்டு அதி சீக்கிரத்தில் திரும்பி விட்டபடியால், தன் இளமனைவியைப் பார்க்க வேண்டுமென்ற ஆவலால் தூண்டப்பட்டவராய் தன் பங்களாவை யடையந்தார். அச்சமயம் ஹாலில் யாரோ, "ஐயோ! என்னை ஹிம்சிக்கின்றானே மூர்க்கன்! எனக்கு உதவி செய்ய யாருமில்லையா? என்னைப் பலவந்தப் படுத்துகின்றானே சண்டாளன்!" என்ற கூச்சலைக் கேட்ட பிள்ளை, ஹாலை நோக்கி விரைந்தோடி வந்து பார்க்க, விசாலாக்ஷி கீழே அலங்கோலமாய் வீழ்ந்து கிடக்கவும், மேலே கந்தசாமி அவளது இரண்டு கைகளையும் அமுக்கிக் கொண்டிருந்ததைக்கண்டு பின்னடைந்தார். தன் தந்தை வந்ததை யுணர்ந்த கந்தசாமி திடுக்கிட்டு, விசாலாக்ஷியின் கரங்களை விடுவித்து விட்டு, அச்சத்தால் ஓர் மூலையில் தலைகவிழ்ந்த வண்ணமாய் நிற்க, விசாலாக்ஷி, தன் தலையையும், உடையையும் சரிப்படுத்திக்கொண்டு எழுந்து ஓடிவந்து மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையைக் கட்டிக்கொண்டு தேம்பித் தேம்பி யழுது கொண்டு பேசத்தொடங்கி, "நாதா! தாங்களில்லாத சமயம் பார்த்து, தங்கள் மகன் என்னிடம் வந்து, "என் கண்ணே! என் கனியே! என் ரசமே! நான் உன்னை காதலிக்கிறேன்; நீ என்னை மணந்துகொள்; சாகப்போகின்ற கிழவன் கிடக்கிறான்," என்று இன்னும் என்ன என்னமோ சொல்லத் தகாத வார்த்தைகளைப் பிதற்ற, நான் அதற்கெல்லா மிணங்காதிருக்க இவன் என்னைப் பலவந்தப்படுத்தி ஹிம்சை செய்ய ஆரம்பித்தான்; அதற்குள் நல்லவேளையாக தாங்கள் வந்து என்னைக் காப்பாற்றி, என் மானத்தையும் காப்பாற்றினீர்கள்" என்று புலம்பினாள்.

உடனே பிள்ளைக்கு ரௌத்ராகாரமான கோபம் வந்துவிட்டது. "அடே கந்தசாமி! உனக்கு இவ்வளவு திமிரா?; நான் இந்நாள்வரை உன்னை யோக்யனென்று நினைத்ததற்கு மாறாக மிகுந்த துர்க்குணமுள்ளவனாய் மாறி விட்டாய்; பெற்ற தாய்க்குச் சமானமான உன் சிற்றன்னையை மனையாட்டியாகக் கொள்ள நினைத்த உன் புத்தியே புத்தி! என்னைக் கிழட்டுப் பிணம் என்று சொன்ன உன்



நாவைத் துண்டித்தாலும் என்மனம் ஆறாது; உன் முகத்தைப் பார்க்க எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை; இனி அரைக்ஷணமேனும் என் எதிரில் நில்லாதே! வீட்டைவிட்டு வெளியில் போ," என்று கந்தசாமியின் கழுத்தைப்

பிடித்துத்தள்ள, அவன் ஒன்றும் சொல்ல நாவெழாதவனாய், ஓர் ஊமை போல் நடந்து பங்களாவைவிட்டு வெளி யேறினான்.

* * * *

வெளியேறின கந்தசாமி இனி இச் சென்னையி லிருக்க கூடாதென்று தீர்மானித்தவனாய், ரயிலேறி மதுரை யடைந்தான். சிறிது காலத்தில் கந்தசாமி அங்கே கலெக்டர் ஆபீசில் மாதம் இருபத்தைந்து ரூபாய் சம்பளத்தில் ஓர் குமாஸ்தாவேலையி லமர்ந்தான். சில மாதங்களில் அவன் தன் சாமர்த்தியத்தால் சப்கலெக்டர் வேலையி லமர்ந்தான். அப்போது அவனுக்குச் சம்பளம் ஐந்நூறு ரூபாயா யிருந்தது.

* * * *

ஐந்து வருடங்கள் கழிந்தன. விசாலாக்ஷியும் சுந்தரம்பிள்ளையை வெறுக்க ஆரம்பித்தாள். எதிர்த்த பங்களாவில் வசித்துவந்த சுமார் இருபத்தைந்து வயதுடைய தங்கப்பா என்ற வாலிபன்மேல் தன் காதலைச் செலுத்தினாள். தங்கப்பா, அடிக்கடி தன் பங்களாவின் மேன்மாடிக்கு உலாவ வருவானாதலால், அது சமயம் பார்த்து விசாலாக்ஷியும், தன் பங்களாவின் மேன்மாடியை யடைந்து தங்கப்பாவை அனுதினமும் உற்று நோக்கி, கண்ஜாடை காட்ட ஆரம்பித்தாள். தங்கப்பாவும் அவளது மையலில் சிக்கி, கண்ஜாடை காட்ட, சில தினத்திற்குள் இருவரும் பரஸ்பர காதலர்களாய் மாறினர். பிள்ளை கோர்ட்டிற்குச் சென்றிருக்கும் சமயம் பார்த்து, தங்கப்பா பிள்ளையின் பங்களா வடைந்து, விசாலாக்ஷியோடு கொஞ்சிக்குலாவி விட்டுப் போய்வரும் வழக்கமாகக் கொண்டான். இவ்வாறு சிலகாலம் கழிந்தது.

ஒருநாள் பிள்ளை கோர்ட்டிற்குச் சென்றவர், பாதி வழியில், தனக்குச் சிறிது தலைநோவெடுத்ததால் திரும்பி பங்களாவை யடைந்தார். தன் இளைய மனைவியிடம், தனக்குத் தலைநோவா யிருந்ததால், அன்று கோர்ட்டிற்குப் போகவில்லை என்ற விஷயத்தைச் சொல்லிவிட்டுப் போகலாமென்று நினைத்து, அவளது அறையை யடைய, அங்கே எதிர்பாராத விதமாய் தங்கப்பாவும், விசாலாக்ஷியும் சேர்ந்து மஞ்சத்தில் படுத்திருப்பதைக்கண்டு திகிலடைந்தார். தான் இனி சும்மாவிருந்தால் விபத் தேற்படுமென்று நினைத்தவனாய், தங்கப்பா பக்கத்தில் ஒருமேஜை மீது வைத்திருந்த ஓர் வெண்கலச்சிலையை யெடுத்து ஓடிவந்து, பிள்ளையின் தலையில் மோத, அவர் மூர்ச்சித்து விழ, தங்கப்பா பங்களாவைவிட்டு வெளியில் ஓடினான்.

* * * *

தன்னை எப்படி வைதாலும், கழுத்தைப் பிடித்துத் தள்ளினாலும் தன் தந்தை யென்ற பாசத்தாலும், ஐந்து வருடமாய் அவரைப் பார்க்கவில்லையென்ற ஆவலாலும் கந்தசாமி சென்னைக்கு வந்து, தன் தந்தையின் பங்களாவை யடைய, எதிரில் தங்கப்பா ஓடிவரக் கண்டு, அவனை வழி மறித்து “என்ன விசேஷம்? ஏன் இப்படி குடல் தெறிக்க ஓடுகின்றாய்?” என கேட்க தங்கப்பா சிறிது தடுமாற்ற மடைந்து, “ஒன்றுமில்லை, ஒரு சாமான் கேட்க வந்தேன்; ‘இல்லை’ என்று வேலைக்காரர்கள் சொன்னார்கள். அத

ஞல் போகிறேன், என்னை விடு; சீக்கிரம் போக வேண்டும்" என்று திக்கித் திக்கிச் சொன்ஞன்.

கந்தசாமி சிறிது சந்தேகித்து தங்கப்பாவைப் பார்த்து, "சரி என்னோடு வா; பிறகு போகலாம்" என்று அவனது கைகளைப்பற்றி இழுத்துக் கொண்டு ஹாலுக்குள் நுழைய அங்கே தன் தந்தை மூர்ச்சித்துக் கிடந்ததைக் கண்டு, ஏதோ நடந்திருக்கிறதென்று நினைத்த கந்தசாமி, வேலைக்காரர்களைக் கூப்பிட்டு தங்கப்பாவை, அவர்கள் பிடித்துக் கொள்ளுமாறு கூறிவிட்டு, தந்தையின் மூர்ச்சையைத் தெளிவிக்க லாஞன்.

சிறிது நேரம் கழித்து, பிள்ளை மூர்ச்சை தெளிந்து பார்க்க, அருகில் கந்தசாமி உபசாரம் செய்து கொண்டிருப்பதைக் கண்டு அவனைககட்டி அணைத்து கண்ணீர் சொரிந்தார். பிறகு அவர் நடந்த விருத்தாந்தங்களையெடுத்தியம்ப, கந்ததாமி உடனே டெலிபோனண்டை போய் போலீசாரை வரும்படி பேசிவிட்டு தந்தையிடம் வந்தான். பிறகு மீஞக்ஷிசுந்தரம் பிள்ளை விசாலாக்ஷியின் நகை நாணயமெல்லாம் பிடுங்கிக்கொண்டு ஓர் கந்தைத்துணியுடன் அவளை வெளியில் விரட்டி விட்டார். சிறிது நேரத்திற்குள் போலீசார் வந்து தங்கப்பாவை கைது செய்துகொண்டு சென்று விட்டனர்.

தனியில் விடப்பட்ட பிள்ளை, கந்தசாமியைப் பார்த்து "அப்பா! உன்னை தீர விசாரியாமல் அவசர புத்தியிஞல் ஏதோ பிதற்றிவிட்டேன். போனது போகட்டும்; நடந்ததைப்பற்றி நினைத்து வருத்தப்படாமல் இரு;" என்று கூறி கந்தசாமியை புத்திரபாசத்தால் கட்டித்தழுவி உச்சிமோந்தார்.

---

# மது வண்டு (தே. ப. பெருமாள்.)

---

வையத்து வாழ்க்கையே வகையென்கும் வணிகரிடை
பையத்தான் நீபோந்து பார்வாழ்வின் இயலுரைத்து
நையலுறும் எளியோரின் நரகத்து நிலைகாட்டி
ஐயமதை அவர்க்களிக்க அன்புடனே அறைவண்டே! (1)

உணவுக்கு வருந்தியழும் உள்ளன்புக் குழவியொடு
தணல்சுட்ட இலையெனவே தவிப்புற்ற எளியோரை
கணப்பொழுதில் கண்டதுமே காறிஉமிழ் வணிகரைத்தான்
இணைபிரியா மதுவண்டே! இரங்கத்தான் வைப்பாயே! (2)

உண்ணுதற்கு உணவின்றி உடுத்தற்கு உடையின்றி
கண்ணுறக்கம் வெறுந்தரையில் கழிப்போர்கள் மிக்கிருப்ப
கண்டபடி தம்பொருளை கரியாக்கும் செல்வரிடை
உண்டாடும் உயர்வண்டே! உரைத்திடுவாய் இவர்நிலையை. (3)

என்பாட இளைப்புற்ற இளமகவின் உடல்நோக்கி
துன்பாடித் துயருழந்து தீவறுமை நிலையோர்ந்து
தன்பாடுந் தொலைந்திடவே தீநச்சுண் தந்தையினை
இன்பூட்டி இதுவொழிக்க இயன்றளவும் முயல்வண்டே! (4)

செல்வத்தை இழந்தமக்கள் சிறுவயிற்றைக் கழிப்பதற்கு
எல்லையில் வழிநடந்தும் இறுதியினில் பெறுவதையம்!
செல்வமும் நிலைக்குமொன்றோ? செவ்வறம் நிலைக்குமன்றோ!
செல்வத்தை அறவழியில் செலவிட செய்சுரும்பே! (5)

ஏழைக்கு இரங்குதலே இவ்வுலகில் பெருநிலையாம்
ஏழைக்கு இரங்கியே இன்தமிழர் முன்னாளில்
பாழில்லாப் பெருஇன்பம் பாருலகில் பெற்றிருந்தார்
பாழில்லா அவ்வின்பம் பாரடையப் பண்சுரும்பே! (6)

உலகத்தில் பிறந்தவர்கள் உயிர்நீப்ப ரெனுமுண்மை
உலகத்தார் உணர்ந்துவிடில் உலகமதில் மலைவுண்டோ?
கலகந்தான் அழிந்திடவே கதியில்லார் வாழ்வாரே
நிலவுலகில் இதுவரவே நீயுழைப்பாய் பூவண்டே! (7)

ஒருநாடு தன்வறுமை ஒழித்துவிடில் அந்நாடு
பெருநாடு புகழ்நாடு பேரின்பந் தருநாடு
திருநாடு எனப்பலவாய் போற்றுதல் பெற்றிடுமே
இரும்புவியும் அந்நிலையில் இயற்றிட உழைவண்டே! (8)

உலகத்தில் பிறந்தவர்க்கு ஒருவனே இறைவனாகும்?
உலகத்து மக்களெல்லாம் அவ்வொருவன் புதல்வராகும்
உலகத்தி லொன்றுஉண்ண உறும்பசியா லொன்றுவாடின்
உலகத்து இறையொறுப்பன் உண்பவர்பால் உரைவண்டே! (9)

கனிபழுத்த பழப்பொழிலில் கால்நடையில் ஒருமங்கை
இனிவூட்டும் கருங்கனியென் றெடுத்திட்ட ஒருகனியை
கனிவோடு உண்ணுகையில் கடிதினில் பறந்தவண்டே!
இனிஉலகில் ஏழையர்கள் வாழ்வதற்கு இறைநோற்பாய்! (10)




(ஆசிரியர் - வி. சங்கரய்யர்)

## 42. சுக்கு மோர்

கிராணி அஜீரணத்துக்கு இரவு ஒரு துண்டு சுக்கை மோரில் ஊறப் போட்டு காலையில் அரைத்துக் கொடுக்கவும்.

## 43. சுக்குத் தேன்

பலஹீனம், நீர்எரிச்சல், மேஹரோகம், ஜுரம், அஜீரணம், வயிற்று வலி முதலியவைகளுக்கு சுக்கை மணலில் போட்டு மூடி ஒருமாதம் தண்ணீர் விட்டு பிறகு எடுத்து அலம்பி துண்டாக நறுக்கி தேன்விட்டு ஒரு சீசாவில் ஒருமாதம் வைத்திருந்து பிறகு காலை மாலை ஒரு துண்டு வீதம் சாப்பிட்டு வரவும்.

## 44. விளக்கெண்ணெய்

நீரடைப்புக்கு விளக்கெண்ணெய் கால்படி பெருங்காயம் 1-பலம் தட்டிப்போட்டு நன்றாகக் காய்ச்சி வடிகட்டி அதில் பொரித்த வங்காரம், கடுக்காய்த்தூள், ¾-ரூபாயிடை வீதம் போட்டு 6-நாட்கள் வைத்திருந்து பிறகு தினமும் இரவு கொடுத்து வரவும்.

## 45. ஜாதிக்காய் எண்ணெய்

கணை, இரத்தவாந்தி, இருமல், கக்குவான், சீதபேதி இவைகளுக்கு நல்லெண்ணெய் 1-படி முலைப்பால் ⅛-படி பசுவின் பால் ¼ படி கலந்து ஜாதிக்காய் 1-பலம், பத்திரி 1-பலம், வெந்தயம் 1-பலம், இவைகளை கத்தாழைச்சாறு விட்டரைத்து கலக்கி காய்ச்சி வடிகட்டி வெந்நீரில் 2 சொட்டு முதல் 4 சொட்டுவரை கொடுக்கவும்.

## 46. சந்தன எண்ணெய்

சொறிசிரங்கு கரப்பான் வகையறாவுக்கு 8-பலம் சந்தனத்தூள், நல்லெண்ணெய் ¼ படி, 4 படி தண்ணீரில் போட்டு காய்ச்சி வடிகட்டி புண்களில் பஞ்சில் தோய்த்துப் போடவும்.

## 47. லவங்காதி எண்ணெய்

லவங்கம், கற்கண்டு வகைக்கு 2-பலம், ஜாதிக்காய், பத்திரி வகைக்கு ¼-பலம், விளக்கெண்ணெய் ¼-படி சேர்த்து காய்ச்சி குங்குமப்பூ, கோரோசனை சேர்த்து வேளைக்கு 2-துளி வீதம் வெந்நீரில் கொடுக்க க்ஷயம், இருமல், உப்பசம் வகையறா நீங்கும்.

## 48. ஏலாதி வடகம்

அக்னிமாந்தம், வயிற்றுவலி, மூலக்கொதிப்பு வகையறாவுக்கு ஏலம், இலவங்கப்பட்டை, முந்திரிப்பழம், திப்பிலி வகைக்கு 6-பலம் அதிமதுரம்,

சர்க்கரை, பேரீச்சம்பழம், வகைக்கு பலம் 1 இடித்து கழற்சிக்காயளவு தினமும் காலே சாப்பிடவும்.

## 49. பூண்டு வடகம்

மேகத்துக்கு 10-பலம் பூண்டு, ¼-படி நெய், ¼-படி பசுவின் பால் விட்டு காய்ச்சி மெழுகு பதத்தில் இறக்கி 3-பலம் ஜீனியும், 5-பலம் கோதுமை மாவும் தூவி கிளறி வேளை ஒன்றுக்கு கொட்டைப்பாக்கு அளவு சாப்பிடவும்.

## 50. லிங்கக்கட்டு

ஜன்னி, வாயு, குன்மம் காய்ச்சல் வகையருவுக்கு ஒரே கட்டியான லிங்கத்தை ஒரு கரண்டியில் மேலும் கீழும் சீனக் காரத்துள் போட்டு கிளறிக் கொடுத்து ¼-படி தேன்விட்டு சுருக்குக் கொடுக்கவும். இதை இஞ்சிச் சாற்றில் உரைத்துக் கொடுக்கவும்.

## 51. பவள பஸ்மம்

உஷ்ணத்துக்கு கீழ்வாய் நெல்லியிலையை அரைத்து அதனுள் பவளத்தை வைத்து 7-சீலே மண் செய்து 50 எருவில் புடமிடவும்.

குறிப்பு:—திரிகடுகு—சுக்கு, மிளகு, திப்பிலி.

திரிபலை—கடுக்காய், நெல்லிக்காய், தானிக்காய்.

திரிகடி—மூன்றுவிரல் அளவு.

## 52. சங்கி பஸ்மம்

கல்லடைப்பு, நீரடைப்பு, நீரேரிவு, க்ஷயம், இருமல், உஷ்ணம், மேகம் முதலியவைகளுக்கு—மான் கொம்பை சிறு துண்டாக நறுக்கி குப்பைமேனிச் சாற்றில் ஊறவைத்து ஷியால் கவசம் செய்து சீலமண் செய்து 50 எருவில் புடம் போடவும். பிறகு பசுவின்பால் விட்டு அரைத்து முன்போல் புடம் போடவும்.

## 53. விரோசன மருந்துகள்.

(a) பூவரசம் பட்டையை பசுவின்பால் விட்டிடித்து 4 தாம் வடிகட்டிக் கொடுக்கவும். அன்று புளி, உப்புதள்ளவும். துர்நீர் நீங்கும். புழுக்கடி மேக ஊறல் குணப்படும்.

(b) பாலில் அவித்து உலர்த்தின அதிமதுரம் 1 பங்கு, திப்பிலி ½பங்கு இடித்து பொடிசெய்து ஒரு வேளைக்கு 4½ வராகனிடை நெய்யில் கொடுக்கவும்.

(c) சுக்கு, கருவேப்பிலை, பெருங்காயம், வகைக்கு 1 ரூபாயிடை, திப்பிலி, இந்துப்பு வகைக்கு ⅛ ரூபாயிடை உலர்த்தி பொடிசெய்து நெய்யில் கொடுக்கவும்.

(d) திரிகடுகு, ஜீரகம், இந்துப்பு, கரிவேப்பிலை, பெருங்காயம், சமம் சூர்ணித்து திரிகடி அளவு நெய்யில் சாப்பிடவும்.

(e) ½ வராகனிடை மாம்பருப்பை பொடி செய்து தேனில் கொடுக்கவும்.

(f) சிற்றாமணக்கெண்ணெய் 1 படி, பசுவின்பால் 4 படி, அதிமதுரம், இந்துப்பு, கடுக்காய், கடுகுரோகிணி, நேர்வாளப் பருப்பு, வகைக்கு 3 ரூபாயிடை அரைத்துப் போட்டு காய்ச்சி வடிகட்டி வைக்கவும். இதில் 12 முதல் 24 வரை சொட்டுக்கள் வெந்நீரில் கொடுக்கவும். சிரங்கு, சொறி, கரப்பான், கணை, அஸ்திசுரம், வெட்டை, தேகவலி, கடுப்பு, பித்தம் முதலியவை தீரும். கஞ்சி ஆகாரம், புளி கூடாது. இரவு மோர்விட்டு சாப்பிடவும்.

(g) எருமைச் சாணி, எலுமிச்சம்பழம், ஆவின்பால் இவைகளில் அவித்து மேல்தோல் இதழ் போக்கிய நேர்வாளம் வராகனிடை 6, காசுக்கட்டி 12 வராகனிடை தேன்விட்டு அரைத்து குன்றுமணியளவு மாத்திரை செய்து வைத்துக் கொள்ளவும். அதிக பேதியானால் எலுமிச்சம்பழச் சாறு கொடுக்கவும். ஜன்னி, ஜுரம் இவைகளுக்கும் கொடுக்கலாம்.

## 54. தீ சுட்ட புண்

(a) சுண்ணாம்பும் எருக்கம் பூவும் அரைத்துப் போடவும்.

(b) சோடா உப்பை தண்ணீரில் கரைத்து நன்றாக பத்துப் போடவும்.

## 55. பித்த வெடிப்புக்கு

உப்பு, செம்மரியாட்டு சாணி, அரசம்பட்டை வகைக்கு 1 பலம், எருக்கம்பூ 3 பலம் இடித்து சூடாக்கி ஒத்தடம் கொடுக்கவும். ஜீரகம் 1 வராகனிடை, சுண்ணாம்பு 3 வராகனிடை, துருசு 5 வராகனிடை பொடி செய்து எருமை வெண்ணெயில் குழப்பிப் போடவும்.

# நமது வாழ்வில் ‘மணியன்’

:0:

1. அறியாமை என்ற திரைச் சீலையில் பயம் என்ற பென்சிலைக் கொண்டு நம்பிக்கை என்ற சிற்பியால் வரையப்படும் படமே பேய், பிசாசாகும். —இங்கர்ஸால்.

2. நம் வாழ்வு அளிக்கும் அற்புதப் பொக்கிஷம் களங்கமற்ற பெயராகும். அது இல்லையேல் நாம் வர்ணம் பூசிய களிமண் போலாகின்றோம். —ஷேக்ஸ்பியர்.

3. இப் புவியில் எவன் ஒரு காரியத்தைச் செய்ய இயலாதவனாக இருக்கின்றானோ அவன் முயற்சியுள்ளவனாக இருக்கின்றான். எவனால் கூடுமோ அவன் வாளா யிருக்கின்றான். என்னே ? மானிட இயற்கை ! —பிரௌனிங்.

4. உயர்ந்தோரை வெறுப்பதே, கீழோர் அவர்களுக்குப் புரியும் இயற்கையான தொண்டு. —டிக்கன்ஸ்.

5. பழிக்குப்பழி, நாகரீகமற்ற நியாயத் தீர்ப்பு. —பைரன்.

6. ஒருவனுடைய எண்ணத்திற்கும், செய்கைக்கும் வித்தியாசம் அபரிதமாக இருக்க வேண்டும். அவன் செய்தது செய்ய நினைப்பதை விட குறைந்ததாக இருக்க வேண்டும். இல்லையேல் சுவர்க்கம் எதற்கு ? —பிரௌனிங்.

7. நாம் முன்னும் பார்க்கின்றோம். பின்னும் பார்க்கின்றோம். பார்த்தும் இல்லாதவைகளுக்கு வருத்த முறுகின்றோம், நமது உளம் பூரித்த சிரிப்பிலும் சிறிது வலி அடங்கியுள்ளது. நமது கர்ணாமிருத பாடல்கள் எண்ணங்களைத் தோற்றுவிக்கின்றன. —ஷெல்லி.

8. நம் வாழ்வு அதிகரிக்க அதிகரிக்க, அது ஒரு எளிய வஸ்துவாகிறது. —ஷில்லா.

9. கடவுளுக்குப் பயப்படு. அதுவே ஞானத் தோற்றத்திற்கு அறிகுறியாகும். —இந்தியன்.

10. கிழக்கு கிழக்கே; மேற்கு மேற்கே.
கிழக்கும் மேற்கும் நமக்கு விருப்பே. —தாகூர்.

11. ஒரு பத்து ரூபாய் நோட்டைக் கண்டெடுப்பதைக் காட்டிலும் ஒரு சந்தோஷகரமான மனிதனையோ, மாதையோ பார்ப்பது உசிதமானது. —ஸ்டீவன்ஸன்.

12. நாம் ஒருவனைப் பார்த்து ஏசிச் சொன்ன சொற்களை நான்கு குதிரைகள் பூட்டிச் சென்ற போதிலும் திரும்பக் கொண்டுவர முடியாது. —பர்மிய வசனம்.

13. அந்தோ ! உன் வறுமையைப் போக்குகிறேன். உன் துக்கத்தைப் போக்குகிறேன். ஆனால் எங்கள் தேசப் புலவர்களை, அதிலும் பாரதியை யாசிக்காதே. —பாரத புத்திரன்.

14. ஒரு பசுந் தழையைப் பார்ப்பதிலிருந்து எழும் எண்ணம் ஞானிகள் கூறுவதைக் காட்டிலும் ஜாஸ்தியாகவே, மனிதனைப் பற்றியும், நீதி நெறிகளைப் பற்றியும் நமக்குப் புகட்டும். —வொர்ட்ஸ் வொர்த்.



# உற்ற யாக்கையின் உறுபயன் என்?

"மைவண்ணன்."

வார்கடலுலகில் கடவுளால் தோற்றுவிக்கப்பட்ட பலவகைப் பிறப்பினுள் மானுடப் பிறவியே பெறுதற்கரிய பிறவியாம். ஏனெனில், நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்பினுள்— அண்டசம், சுவேதசம், உற்பீசம், சராயுசம் என்னும் நால்வகைத் தோற்றமும், தேவர், மானுடர், விலங்கு, பறவை, ஊர்வன, நீருறைவன, தாவரம் என்னும் எழுவகைப் பிறப்பும்—புல்முதல் பல் பிறவியெடுத்து இப் பிறவிகளில் செய்த நல்வினையின் பயனாக, மானுடப் பிறவி யெய்தலாலும், இம் மானுடப் பிறவியே பகுத்தறிவுடைமையும், தன்னைத் தோற்றுவித்த இறைவனொருவனுளன் என்னும் உணர்வும் உண்டாதற்கு ஏதுவா யிருத்தலாலும் மற்றப் பிறவியிலும் மானுடப் பிறவியே மிகச் சிறந்ததாகும்.

இம் மானுடப் பிறவியின் பெறுதற் கருமையை யுணர்த்தற்கன்றே' அருணந்தி சிவாசாரிய சுவாமிகள்,

"அண்டசஞ் சுவேதசங்கள் உற்பீசஞ் சராயுசத்தோடு
எண்தரு நாலெண்பத்து நான்கு நூறுயிரத்தால்
உண்டுபல் யோனியெல்லா மொழித்து மானிடத்துதித்தல்
கண்டிடிற் கடலைக்கையால் நீந்தினன் காரியங்காண்"

என்று தெளிய உரைத்தனர். இதனையே,

"அரிதரிது மானிடராத லரிது"

என்றும்,

"எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதான்
யாதினும் அரிதரிது காண்."

என்றும் முறையே ஞானமூதாட்டியாரும், தாயுமானத் தவச்சிரேட்டரும் வலியுறுத்திப் போந்தனர்.

இவ்விதம் பெறுதற்கரிய மானுடப் பிறவியை யடைந்த நாம் இம் மானுட யாக்கையால் பெறும் பயன் யாது? என ஆராய்வதே இக் கட்டுரையின் நோக்கமாகும். மானுடர்களாகிய நாம் இப் பிறவி யெடுத்ததின்

நோக்கமென்ன? இறைவன் நம்மை இம் மானுடப் பிறவி யெடுக்கும்படி செய்தது எதற்கு? நாம் இம் மானுட யாக்கை தாங்குவதற்கு முன் என்னென்ன பிறவிகளில் பிறந்து இறந்து உழன்றோம்? இப் பிறவிகளில் புகுவதற்கு முன் நம் உயிர்கள் எந் நிலையில் எவ்விடத்தி லிருந்தன? என இன்னோ ரன்னவற்றை முறையாக ஆராய்வோமாயின், இம் மானுடப் பிறப்பின் பெறுதற் கருமையும் இன்றியமையாமையும், அதனை யடைந்தால் நன்னெறியில் ஒழுகிப் பயன்படுத்திக் கொள்ளும் அவசியமும், அதனாலாய பயனும் இனிது விளங்கும். முதலில் உயிர்களாகிய நாம் பிறப்புக்களுள் புகுவதற்கு முன் எவ்வித மிருந்தோம் எனச் சிறிது ஆராய்வோம். ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலமும் உயிர்களாகிய நம்மிடத்தில் இயற்கையாக அமைந்துள்ளன. உயிர்களின் கன்மபலம் பரிபாக மாதற் பொருட்டு முதல்வன் மாசங்காரத்தை இயற்றுங் காலத்து மாயையின் காரியமாகிய யாவும் ஒன்றனுள் ஒன்றாய் அவற்றிற்கு நிலைக்களமான மாயையில் ஒடுங்க, மாயை சிற்சத்தியி லொடுங்க, சிற்சத்தி இறைவனுள் ஒடுங்குகின்றது. உயிர்களெல்லாம் முதல்வன் இச்சையின் வண்ணம் ஆணவமலத்தால் விழுங்கப்படுகின்றன. ஆணவமலம் இன்னதெனச் சொல்லொணாத் திணித்த இருளை வாய்ந்தது. மாணிக்க மணியை நஞ்சுவாய்க்கு ளடக்கின நாகம் போலவும், பச்சையாய் முளைத்து விறகாகு மட்டும் தீயைத் தெரியாமல் மறைத்து வைத்திருந்த காட்டம் போலவும், ஞானக் கண்ணை மறைத்து அறிவுஞ் செயலும் இறக்கும்படி ஆணவமலம் உயிர்களைப் பிடித்துக் கொண்டிருக்கின்றது என்று இந் நிலையை ஒருவாறு விளக்கலாம்.

இனி, உயிர்கள் சகசமலமாய் ஆணவமலத்தால் விழுங்கப்பட்டு அறிவு செயலின்றி மூடம் போல நீண்டகாலம் இருந்த பின்னர் கருணைத் தடங்கடலான முழுமுதற்கடவுள் இரக்கங்கொண்டு அவ் வாணவமலம் பரிபாக மாதற் பொருட்டுப் படைப்புக் காலத்து அவ்வவ் வுயிர்களின் முன்னை வினைக்கு (பிராரப்த கன்மத்துக்கு)த் தக்கவாறு புல் முதல், தேவர் ஈறாகச் சொல்லப்பட்ட பிறவிகளுள் புகுத்திச் சிறிது சிறிதாக அறிவு விளக்கம் உண்டாகச் செய்கிறான். இவ்வாறு உயிர்கள் புல் முதல் பல் பிறவிகளில் பிறந்து, இருந்து, இறந்து உழன்றே இறுதியில் மானிடப் பிறவியினை யடைகின்றன வென்பதை,

> "புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
> பல்விருக மாகிப் பறவையாய் பாம்பாகிக்
> கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
> வல்ல சுரராகி முனிவராய்த் தேவராய்ச்
> செல்லாஅ நின்ற இத்தாவர சங்கமத்துள்
> எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் எம்பெருமான்
> மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்"

என்னும் மணிவாசகமே வலியுறுத்தா நிற்கும்.

இனி, இவ்வாறு உயிர் மானுடப் பிறவி யெடுக்கு முன் தாய் வயிற்றில் இருக்கும் காலத்து அனுபவிக்கும் இன்னல்களோ சொல்லொணாதன.

உயிர் ஆணவமலத்தில் மறைப்புண்டிருக்கும் நிலைக்கும், தாய் வயிற்றில் கருக் கொண்டிருக்கும் நிலைக்கும் சிறிதும் வேற்றுமை இல்லை.

மாதாவினிடத் துண்டான செம்பாலிலே (சுரோணிதத்திலே) பிதாவினிடத் துண்டாகிய வெண்பால் (சுக்கிலம்) பவளப்பையில் முத்தை வைத்தாற் போலப் படுகிற நாளில், உயிரானது பிராணவாயுவை வாகனமாகவும், மனதை வழியாகவும் கொண்டு முதல்வனுடைய ஆணையாலே சென்று வெண்பால் செம்பாலின் தலையிலே பதிகிறது. பிறகு கன்மத்துக் கீடாக மூன்றரைகோடி யுரோமத்துவாரமும், எழுபத்தீராயிர நாடியும், வாயுவிற் பிரதானமான தசவாயுவும், நவத்துவாரமும், எண்சாணுடம்பும், எழு தாதுவும், ஆறுதாரமும், ஐந்து பொறியும், நாலு கரணமும், மூன்று மண்டலமும், இரண்டு வினையுமெனப் பேர் பெற்று, இவற்றை யொன்றெனப் போர்த்த புறத்தோலுமாக உருவங் கொள்கிறது. இந்த உருவத்தையுடைய சீவனும் அன்னரசத்திற்குப் பிராரத்த மளவுந் தன்னுடைய உடலில் உந்திச் சக்கரத்தின் மேலே கிடந்து ஆறுமாத முதல் உந்தி நாளத்தாலே மாதா விடத்திலே அன்னரசமும் கொள்கிறது. அந்த அன்னரசத்தின் மிகுதியாலே சுழிமுனை நாடி யடைபட்டு இடையும் பிங்கலையுந் திறந்து பிராணவாயு புகுந்து மேனோக்கி நாசித் துவாரங்களாலே விட்ட வெழுத்தாலே நாளொன்றிற்கு இருபத்தோராயிரத்தறுநூறு சுவாச வுச்சாரணந் தோன்றி, முப்பத்திரண்டு நூறாயிரத்து நாற்பதினாயிரம் உருச் சென்றவாறே யுதரகன்மந் தொலைந்து, மாதாவினிடத்துண்டான பிராணவாயுவிலே முதல்வனுடைய கருணையாலே சத்தி யதிட்டித்துக் கொண்டு, இந்தச் சத்தி பலத்துடனே வாயுவானது பிரஞ்ஞையை பூமியிலே பதிக்க வேண்டி 'பிரஞ்ஞாபத்தியம்' என்னும் பெயர் பெற்று, இவனுடைய போதம் போல் இவனுடைய உடலும் கீழ்நோக்கி விழும்படி முழுமுதற்கடவுள் தன்னுடைய ஆற்றலாலே தலைகீழாகத் தள்ளி பூமியில் வரச் செய்கிறான். இவ்விதக் கடவுளின் கருணைத்திறத்தை யுணர்த்தற் கன்றே,

"மூலையி லிருந்தாரை முற்றத்தே விட்டவர்
சாலப் பெரியரென்றுஉந் தீபற,
தவத்திற் றலைவரென்றுஉந் தீபற."

என்னும் அருமைத் திருவாக்கும் எழுந்தது. இங்ஙனம் மானிடப் பிறவி வாய்க்கப்பெற்ற உயிர்களே அறிவு முழுதும் நிரம்பப் பெறுகின்றன. ஏனெனில், கண் காது நா மூக்கு மெய் என்னும் ஐம்புலனும், அப் புலன்களால் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியுந் தன்மையும் வாய்ந்ததோடு, இன்னது செய்தல் நன்மையானது, இன்னது செய்தல் தீமையானது என்று பகுத்தறியும் நெஞ்சம் முதலாகிய அந்தக்கரண நான்கும் வாய்ந்திருப்பதால் முழு அறிவும் விளங்கப் பெறுவதற்கு ஏதுவா யிருக்கின்றது.

மேலும் உயிர்களுக்கு இறைவன் செஞ்ஞாயிற்றினையும் வெள்ளிய நிலவினையும், எழில் மலையினையும், மணி கொழிக்கும் அருவியினையும், செழும் பொழிலினையும் அற்புதமாக அமைத்து இவ்வுலகப் பொருள்களி லெல்லாம் அறிவு நுழைந்து இன்புற்றுப் பேதைமையை நீக்கி மெல்ல மெல்ல அறிவு விளக்கமுறும்படி செய்கின்றான்.

பின்னர் உலகத்தில் தோன்றியது முதல் உண்டாகும் இடர்களிலெல்லாம் உயிர்கள் உழன்று அறிவு விளக்க முழுதுமெய்தி, உலகத்தோடு ஒட்ட ஒழுகித் தன்னை தோற்றுவித்தானும், தனக்கு வேண்டுவன உதவி மகிழுறச் செய்தானும் துன்ப விளைவின் மூலமாய் இன்பம் விளைவிப்பானும் ஆகிய ஒரு முதல்வன் உளன் என்னும் எண்ணமுண்டாகி, அவ்விதம் தோன்றாத் துணையாய் நின்று அருள்புரியும் அவனை வணங்குதல் இன்றியமையாத கடமையாமென்பதை உணரும்படி செய்கின்றான்.

இவ்வாறு இறைவனருளால் உண்டாகும் மெய்யுணர்வே உயிர்கள் அடைந்த பிறப்புறுதலுக்கு ஏதுவாகிற தென்பது ஒருதலை. மானுடப் பிறப்பின் பயன் உணர்வைப் பெறுதலாம். இம்மானுடப் பிறப்பாலன்றி உணர்வு வருதல் ஒருகாலுமில்லை.

இவ்விதம் உயிர்களை மேற்கூறியவண்ணம் சகச மலமாகிய ஆணவ மலத்தினின்றும் பிறப்பினுள் புகுத்தித் தன் திருவடியில் அணையும்படி யருளும் நிலையைத் தெளிய வுணர்த்துவான் வேண்டியே எந் தாயுமானச் செல்வரும்,

“காரிட்ட ஆணவக் கருவரையி லறிவற்ற
கண்ணிலாக் குழவியைப் போற்
கட்டுண்டிருந்த வெமை வெளியில்விட்டு அல்லலாங்
காப்பிட்டு அதற் கிசைந்த
பேரிட்டு மெய்யென்று பேசுபாழ்ம் பொய்யுடல்
பெலக்க விளையமுத மூட்டிப்
பெரிய புவனத் தினிடை போக்குவர வுறுகின்ற
பெரிய விளையாட்டு அமைத்திட்டு
ஏரிட் டதன்சுருதி மொழிதப்பின் நமனைவிட்டு
இடருற வுருக்கி யிடர்தீர்த்து
இரவுபக லில்லாத பேரின்ப வீட்டினில்
இசைந்து துயில் கொண்மி னென்று
சீரிட்ட வுலகன்னை வடிவான எந்தையே.”

என்று விளக்கி யருளினர்.

இங்ஙனம், இறைவனுடைய நோக்கம் உயிர்களாகிய நாம் பாசக் கட்டினின்றும் நீங்கி விடுதலைபெற்று இன்ப மனுபவிக்க வேண்டுமென்பதே யென்று அறிந்தோமாதலின், அம் முதல்வன் நோக்க மறிந்தே செய்தல் நம் கடமை என்பது அறியக்கிடக்கிறதல்லவா? உலக வழக்கிலும் தலைவனது இச்சையின் வண்ணம் செய்தலே உண்மைப் பணியாளன் கடமை யென்பது நாம் அறிந்த தொன்றன்றோ! உடையோனின் குறிப்பின்படி உடைமைப் பொருளாகிய நாம் நடத்தல் தலையாய கடமை என்பது இதனால் பெறப்படுதலின், அம் முன்னவனுடைய நோக்க மறிந்து ஒழுகி உய்தற்கு வாயிலாக இருப்பவர்கள் அவன் உண்மை யடியார்களும், அவர்களருளிய திருவாக்குகளுமே யாகும்.

உயிர்களாகிய நாம் கடவுளின் நோக்கமும், நாம் இம்மானுட பிறப்

பெடுத்ததின் நோக்கமும் இன்னதென அறிய வேண்டுமாயின் இறைவன் அருள் பெற்றுய்ந்த மெய்யடியார்களின் வாழ்க்கையில் அவர்கள் எவ்வாறு ஒழுகினர்கள் என்பதை உய்த்துணருதல் இன்றியமையாத தாகும். அவ்வாறு அவ் வாய்மையாளர்களின் வாழ்க்கையைப்பற்றித் துருவி யாராயின், அவர்கள் தங்கள் வாணுளில் அண்ட பகிரண்ட சராசரங்களைப் பயந்து காத்துஅழிக்கும் மூவர்கோனாகிய முதல்வனை ஓவாதுசிந்தித்து மனங்கசிந்து நெக்கு நெக்குருகுதலிலும் அவனை வாயாரப் புகழ்ந்து பரசுதலிலும், யாக்கையால் அவனுக்காம் பணிகளை விழைந்து செய்தலிலும் அவ்வெம் பெருமானின் மெய்யடியார்களைப் பேணுதலினும் கருத்தூன்றி நின்று, தம் ஒழுக லாறுகளைச் செவ்வனம் திருத்திக் கடைபிடித்து ஒழுகி இந் நற்செயல்களையும் நற்குணங்களையுமே விழுமிய அறப்பேறென்றும் தலையாய கடமையென்றும் மேற்கொண்டார்கள் என்பது செவ்விதின் விளங்கா நிற்கும்.

இனி, மெய்யடியார்கள் வாய்மைப் பொருளாகிய இறைவனை இறைஞ்சி வீடு பெற்றதோ டமையாது பின்வரும் நாமெல்லாம் உய்யும் பொருட்டு அச் செல்வர்கள் அறிந்த உண்மைகளை தேவாரம், திருவாசகம், திருமந்திரம், நாலாயிரப் பிரபந்தம் முதலிய அரு நூல்களாக அருளிச் செய்தனர். அத்திருவாக்குகளைக் கூர்ந்து பார்ப்போமானுல் நாம் இம்மானுட யாக்கையைப் பெற்றதனு லாய பயனை யறிந்தவர்க ளாவோம்.

மானுடப் பிறவி யெடுத்த நாமெல்லாம் ஆண்டவனை வணங்குதலே சால்புடைத்தென்பதும், நம் ஒவ்வொரு உறுப்பும் கடவுளுக்கே பயன்படுத்த வேண்டும் என்பதும் இதனுல் பெறப் படுகின்றதன்றே! இதனை திருநாவுக்கரசு சுவாமிகள் தாம் அருளிய திருவங்கமாலையில், மானுடரின் ஒவ்வொரு உறுப்பும் இறைவனின் திருப்பணிக்கே பயன்படுதல் வேண்டுமென்பதைத் தெளிவாக விளக்கியருளினர்.

"கோளில் பொறியில் குணமிலவே யெண்குணத்தான், தாளை வணங்காத் தலை" என்னும் அமுதவாக்கும் இது பற்றியே எழுந்ததென்க.

கடவுளை யடைவதற்கு வாயிலாயிருக்கும் மானுடப் பிறவியை எடுத்த நாமெல்லாம் அதைத் தக்க வழியில் பயன்படுத்தி யொழுகுதலன்றே அறிவுடைமை?

பெறுதற்கரிய இம்மானுடப் பிறவியை நல்வழியில் பயன்படுத்தி ஆண்டவனை யடைவதை விடுத்து, தீய வழிகளில் புகுந்து வீணேயிருந்து நரகத் துன்பங்களில் வீழ உண்மையறிந்த எவ்வுயிரேனும ஒருப்படுமா? இம் மானுடப் பிறவி தவறினுல் உயிர்களாகிய நம்மை எப்பிறவியில் நம் வினைகள் விடுமோ? யாரறிவார்! கடவுளருள் பெற்ற உண்மை யடியார்களாகிய தாயுமானச் செல்வரும், தாண்டகச் சதுரராகிய திருநாவுக்கரசரும்,

"இப்பிறவி தப்பினுல் எப்பிறவி வாய்க்குமோ
யாது வருமோ அறிகிலேன்" என்றும்

"துறக்கப்படாத வுடலைத் துறந்து வெந்தூதவ ரோடு
இறப்பன் இறந்தால் இருவிசும்பு ஏறுவன் எறிவந்து

பிறப்பன் பிறந்தால் பிறையணி வார்சடைப் பிஞ்ஞகன்பேர்
மறப்பன் கொலோவென்றுஎன் உள்ளம் மறுகிடுமே''

என்றும் முறையே இம்மானுடப் பிறவியின் விழுமிய பெருமையை நமக்கு அறிவுறுத்துவான் வேண்டி தெளிய விளக்கியருளினர்.

இதுகாறும் கூறியவற்றால் கடவுள் படைப்புக் குட்பட்ட நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்பினுள் மானுடப் பிறவியே சிறந்ததென்பதும் ஆணவமலத்தில் கட்டுண்டிருந்த உயிர்களைக் கருணையங் கடவுள் அம்மலம் பரிபாகமாதற் பொருட்டுப் புல் முதல் பல் பிறவிகளில் புகுத்தியருளினனென்பதும், இவ்விதம் உயிர் பல் பிறவிகளிலும பிறந்திருந்திறந்து உழன்றே மானுடப் பிறவியை யடைகின்றதென்பதும், இப்பெறுதற்கரிய பிறவியை உயிர்களுக்குக் கொடுத்த இறைவனது நோக்கமும், அப்பிறவி யெடுத்ததின் பயனும் அம்முழு முதற் கடவுளைச் சிந்தித்து வாழ்த்தி வணங்குதலேயாமென்பதும், இவ்வுண்மைகளை அவ்விறைவனின் உண்மை யடியார்களின் சரிதங்களும், அவர்கள் நம்பொருட்டு அருளிய அருள் நூல்களும் வாயில்களாக இருந்து அறிவிக்கின்றன என்பதும், ஆதலால் மானுடப் பிறவி எடுத்த ஒவ்வொரு உயிரும் மாயையின் மாய்கைக்குள் மயங்கி வாணாளை வீணாளாக் காது தன்னைச் சொல்லொணாத் துன்பங்களி னின்றும் மீட்டு அருளைச் செய்த முழுமுதற் பொருளெதுவோ அக்கடவுளை மனமொழி மெய்களால் நினைந்து சிந்தித்து வாழ்த்தி வணங்கி இறைஞ்சி அறியாமையினை நீக்கி இன்பப்பேறெய்தலே உற்ற யாக்கையின் உறுபயன் என்பதும் அறிந்தோம்.



# சுதந்திர வாழ்க்கையே சுக வாழ்க்கை

(சித்தூர் பண்டித-பூ. ஸ்ரீநிவாசன்.)

ஒரு பெரிய காடு. அதில் பல மிருகங்கள். அவைகளுக்குள் ஒரு நரி. அக்காட்டிற்கருகில் ஒரு பெரிய ஊர். அவ்வூருக்குப் போகும் வழி அக்காட்டிற் கருகிலிருந்தது. அந்த நரி வழியோரத்தில் இருந்த ஒரு மரத்தடியில் உட்கார்ந்திருந்தது. அழ முடியாத துக்கம். ஒரு முறை அழுததென்றுகூட சொல்லலாம். என்ன கஷ்டமோ பாவம்! அவ் வழியாக ஒரு நாய் வெகு அவசரமாக போய்க் கொண்டிருந்தது. நரி அதைப் பார்த்துவிட்டது. 'அண்ணா! அண்ணா! நாயண்ணா!' என்று மெலிந்த குரலில் கூப்பிட்டது. நாய் சிறிது நின்று சுற்றுமுற்றும் பார்த்தது. நரி மறுபடியும் 'நாயண்ணா! இதோ இப்படிப்பார். இங்கே இருக்கிறேனே. தெரியவில்லையா?' என்றது. சப்தம் வந்த திசையைப் பார்த்தபோது நரியைப் பார்த்தது நாய்.

'என்ன தம்பி! யாரைக் கூப்பிடுகிறாய்? என்னையா? என்? என்ன விசேஷம்?' என்று நாய் நின்ற விடத்திலிருந்தே கம்பீரமான குரலுடன் கேட்டது.

நரி:—ஆமண்ணா! உங்களைத்தா னழைக்கிறேன். என்னால் நடக்க முடியவில்லை. அதனாலே உங்களை யழைத்தேன். இல்லாவிட்டால் உங்க ளண்டை நானே ஓடிவந்திருப்பேன். ஒரேயொரு வார்த்தை. இப்படி கொஞ்சம் தயவு பண்ணவேண்டும்.

நாய் அதனருகில் சென்றது. நரி, நாய்க்கு நமஸ்காரஞ் செய்து அண்ணா! இப்படி கொஞ்சம் உட்காரவேண்டுமே.

நாய்:—இல்லெ. இப்போது நேரமில்லை. ரொம்ப அவசரம். சொல்ல வேண்டியதைச் சீக்கிரம் சொல்லு தம்பி!

நரி:—நாயண்ணா! என் உடம்பைப் பார்த்தாயா? துரும்பு துரும்பாப் போய்விட்டது. வேளைக்குச் சரியான சாப்பாடு கிடைப்பதில்லை. மூன்று நாளா பட்டினி. பசி வயிற்றைப் பிடுங்குது. உங்கள் நிலையைப் பார்த்தால் உங்களுக்கு நல்ல சாப்பாடு ஏராளமாகக் கிடைக்கும் போலிருக்குது. உங்க ளிடத்திற்கு என்னையும் அழைச்சிண்டு போங்களேன். ரொம்ப புண்ணியம்.

நாய்:—அப்படியா சங்கதி? நான் ஒரு பெரிய பணக்காரப் பிரபுவி னிடம் இருக்கிறேன்.

நரி:—அந்த பிரபுதான் உங்களைப் போஷிக்கிறனு?

நாய்:—ஆமாம். இங்கே பாரு. சாப்பாடென்றால் என்ன சாப்பாடு அது.

நரி:—சொல்லவா வேண்டும். உடம்பைப் பார்க்கும்போதே தெரிகிறதே. நல்ல கொழுத்த சாப்பாடு. ஆமாம். நீங்கள் அங்கே என்னவேலை செய்யவேண்டும்?

நாய்.—வேலை ஏது வெட்டி ஏது? அதெல்லாம் ஒன்றும் கிடையாது. சாப்பிடுவது தூங்குவது இதுதான் வேலை.

நரி:—அப்பா நாயண்ணு! உங்கள் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்! தயவு செய்து அவ்விடத்திற்கு என்னையும் அழைத்துப் போங்கள். அநியாயமா பட்டினி கிடந்து சாகிறேனே இங்கே.

நாய்:—ஐயோ பாவம்! சரி, தம்பி; என்னோடு வந்துவிடு. வா போகலாம்.

நரி வெகு சந்தோஷமாய் தன் வீட்டுக்கு ஓடி ஒரு சிறு மூட்டையைத் தூக்கித் தலைமேல் வைத்துக்கொண்டு மறுபடியும் நாயிடம்வந்து 'அண்ணு! வாங்கோ போகலாம்' என்றது.

நாய்:—ஏது தம்பி! மூட்டை முடிச்சுகளோடு கிளம்பிவிட்டாய் போலிருக்கிறதே.

நரி:—உம். இனி இங்கே என்ன வேலை எனக்கு. அங்கேயே காலத்தைக் கழித்துவிட உத்தேசம். புறப்படுவோமே.

இரண்டும் சந்தோஷமாகப் பேசிக்கொண்டே சென்றன. ஒரு பர்லாங்கு தூரமிருக்கும். நரி நாயின் உடலைப் பார்த்துக்கொண்டும், நாமும் கொஞ்ச நாளைக்குள் இப்படியே ஆய் விடுவோமென்று எண்ணமிட்டுக் கொண்டும் சென்றது. அப்போது நரி நாயின் கழுத்தில் தோல்பட்டை ஒன்றிருக்கக் கண்டது. உடனே ஆச்சரியத்தோடு,

நரி:—என்ன அண்ணு! இதென்ன கழுத்தில் ஏதோ தொங்குகிறதே!

நாய்:—அது கழுத்துப்பட்டை.

நரி:—அதை யார் கட்டினுர்கள்?

நாய்:—என் எஜமான் கட்டினுர்.

நரி:—எதற்காக கட்டினுர்கள்? அழகுக்காகவா?

நாய்:—இதோ பாரு. இங்கே வளையம் ஒன்றிருக்கிறதே. அதில் ஒரு சங்கிலியை மாட்டி என்னைக் கட்டி வைப்பார்கள். அழகாகூட இருக்கிறதல்லவா?

நரி:—அழகு இருக்கட்டும். எப்போதும் கட்டியே வைப்பார்களா?

நாய்:—நரித்தம்பி! அதெல்லாம் ஏன் கேட்கிருய்? நீ வருகிருயா? இல்லையா? எனக்கு ரொம்போ அவசரமென்று அப்போதே சொன்னேனே.

நரி:—கோபித்துக்கொள்ள வேண்டாமண்ணு! தெரியாமெதானே

கேட்கிறேன். பட்டண வாசத்துக்கு போறு இதெல்லாம் தெரியாமல் இருக்கலாமா ? அதற்காகத்தான் கேட்கிறேன்.

நாய்:—ஓ! அப்படியானல் சொல்லுகிறேன். ராக்காலங்களில் மாத்திரம் அவிழ்த்து விடுவார்கள்.

நரி:—பகலெல்லாம் என்ன பண்ணுவே.

நாய்:—சாப்பிட்டுவிட்டு ஹாயா தூங்குவேன்.

நரி:—ஒண்ணுக்கு ரெண்டுக்கு வந்துட்டா என்ன பண்ணுவே ?

நாய்:—காலேயிலும் மாலேயிலும் உலாத்துவதற்கு ஒரு ஆள் அழைச்சிண்டு போவான். அப்போது அந்த வேலேயெல்லாம் முடித்துக்கொள்ள வேண்டும்.

நரி:—இன்னும் ஒரே கேள்வி. ராத்திரியில் அவிழ்த்து விடுகிறுர்களே. அப்போது உங்களிஷ்டப்படி வெளியிலே போகலாமா ?

நாய்:—கூடாது கூடாது. ராத்திரியிலேதான் என் வேலே யெல்லாம். திருடன் கிருடன் வராதபடி பார்த்துக் கொள்ளவேண்டும். வெளியில் எங்கும் போக முடியாது. கதவெல்லாம் மூடி விடுவார்கள்.

நரி:—அண்ணு! ரொம்ப நமஸ்காரம். போய் வாருங்கள்; நான் இங்கேயே நிற்கிறேன்.

நாய்:—என்ன தம்பி! என்னேடெ வர வில்லேயா ?

நரி:—உங்களோடே வர எனக்குப் பிரியமில்லெ. போய்வாங்கொ (என்று சொல்லி மூட்டையைத் தலேமேல் தூக்கிவைத்துக் கொண்டது.)

நாய்:—என்ன சங்கதி! இதற்குள் ஏன் உன் மனம் இப்படி மாறி விட்டது ?

நரி:—அண்ணு! உங்களுக்கு நல்ல சாப்பாடு கெடெச்சாலும் உங்கள் வாழ்க்கை நல்ல வாழ்க்கையல்ல. அந்த வாழ்க்கை எனக்கு வேண்டாம்.

நாய்:—அட பைத்தியக்காரா! என் வாழ்க்கை ராஜவாழ்க்கை யல்லவா ? இங்கே வயிற்றுக்கில்லாமல் கஷ்டப்படுவது நல்ல வாழ்க்கையா ?

நரி:—எவ்வளவு கஷ்டப்பட்டாலும் சரி; சாவதா யிருந்தாலும் சரி. சுதந்திரமாக இருக்கவேண்டும். சுதந்திர வாழ்க்கையே சுகவாழ்க்கை. ராஜவாழ்க்கை யாயினும் அடிமை வாழ்க்கை வேண்டாம்— என்று சொல்லிக்கொண்டே காட்டிற்குள் ஓடி மறைந்தது. நாய் திகைப்புக்கொண்டு அதைப் பார்த்தவண்ணமாகச் சிறிதுநேரம் நின்று பின் தன் வழியே போயிற்று.

---

# புலால் உணவு அவசியமா?



(ஈ. வி. மாக்காலம் பி. எச். டி.)

ஆகார நியதிக்கும் ஆரோக்கியத்திற்குமுள்ள சம்பந்தத்தை ஆராய்ச்சி செய்பவர்களுடைய கவனத்தை ஈர்த்திருக்கும் பல பிரச்னைகளுள், உணவுத் திட்டத்தில் இறைச்சியைச் சேர்த்துக் கொள்ளுதல் அவசியமா அல்லவா என்னும் பிரச்னை ஒன்று. இக்கேள்வியைக் குறித்து சாதக பாதகமாக நூற்றுக்கணக்கான புத்தகங்கள் எழுதப் பட்டுள்ளன. இந்த வாதானுவாதத்தில் மிகப் பெரும் பகுதி தற்கால உணவுப் பொருள் ஆராய்ச்சிகளுக்கு முந்திச் செய்யப்பட்டது. அந்தக் காலத்திலேயே, இறைச்சியுணவு இல்லாமலே முதல்தரமான தேகாரோக்கியம் சாத்தியப்படுமென்று நிரூபணமாயிருந்தது. எனினும் இது விஷயம் குறித்து எப்பொழுதுமே அபிப்பிராயபேதம் இருந்திருக்கிறது.

புத்த சந்நியாசிகளும் டிராப்பிஸ்ட் சந்நியாசிகளும் வெகு காலமாக இறைச்சியற்ற உணவுத் திட்டத்தைக் கைக்கொண்டு வந்திருக்கிறார்கள். அவர்களிற் பெரும்பாலோர் நீண்ட ஆயுளையும் ஆரோக்கியத்தையும் மன அமைதியையும் அனுபவித்திருக்கிறார்கள் என்பதை எவரும் மறுக்கவியலாது. புத்த சந்நியாசிகள், பொதுவில், பால்கூடக் குடிப்பதில்லை. டிராப்பிஸ்ட் சந்நியாசிகள் குடிப்பதுண்டு. மரவகை யுணவுகளையே உண்ணுபவர்களாகிய வங்காளிகளைப் போன்ற ஜாதியார் மட்டான தேகக்கட்டு உடைத்தாயிருப்பதற்குக் காரணம் அவர்கள் இறைச்சி புசிக்காததே என்று முன்னே சிலர் விவாதித்து வந்தார்கள். ஆகாரபதார்த்தங்களின் குண பாகங்களைக் குறித்து முன்னைக் காட்டிலும் அதிகமான அறிவாராய்ச்சி இப்பொழுது ஏற்பட்டிருக்கிறபடியால், மனித தேகத்திற்கு இறைச்சியுணவு அவசியமா அல்லவா என்னும் கேள்வி குறித்து நாம் இப்பொழுது சாஸ்திரோக்தமாக முடிவு செய்யக்கூடும்.

சில ஜாதி மிருகங்கள் மாமிசத்தையே உண்டு வாழ்கின்றன. சிங்கம், புலி, ஓநாய் முதலிய மிருகங்கள் மரவகையுணவை உண்ணாவிட்டாலும், பெருத்த உருவையும் வலுவையும் அடைகின்றன. இதற்கு மாறாக, எருது, காட்டெருமை, மான் முதலிய மிருகங்கள் தலைமுறை தலைமுறையாக சாக பக்ஷணத்தையே கைக்கொண்டிருக்கின்றன. இவைகள் எவ்விதத்திலும் மாமிச பக்ஷணிகளைவிட மட்டான உடற்கட்டு உடையவைகளல்ல. இவைகளிற் பல, சாதாரணமாக, மாமிச பக்ஷணிகளைவிட நீண்டகாலம் வாழ்வன மாமிசம் புசிக்கும் மிருகங்களுள் ஒன்றாவது சாக பக்ஷணியாகிய யானையைப் போல் அவ்வளவு நீண்ட காலம் வாழ்வது கிடையாது.

இந்த மிருகங்களுடைய குணாகுணங்கள் அவற்றின் ஆகாரத்தைப் பொறுத்ததாகவில்லையென்று தோன்றுகிறது. மாமிச பக்ஷணிகளாகிய மிருகங்களைப்போலவே, சாக பக்ஷணிகளாகிய யானை, காளை முதலிய மிருகங்களும் போர்க்குணம் படைத்தவை.

இந்த எடுத்துக் காட்டுகள் சில அனுபவ உண்மைகளை விளக்குகின்றன. ஆனால் மிருகங்களுடைய ஜீரணக் குழாய்களுக்கும் மனிதனுடைய ஜீரணக் குழாய்களுக்கும் நெடுவாசி வித்தியாசம் இருக்கிறபடியால், மிருகங்களுடைய பழக்கங்களையே நாம் பிரமாணமாகக் கொண்டு விடுதல் கூடாது. மனிதருடைய உணவு சம்பந்தமாய் அலாதியாகப் பெருத்த ஆராய்ச்சி செய்யப்பட்டிருக்கிறது. அன்றி, சில நபர்களுடைய அனுபவமும் இருக்கிறது. இவைகளைக் கொண்டுதான் நாம் மனிதனுக்கு ஏற்ற ஆகாரம் எது, ஏற்காதது எது என நிர்ணயித்தல் தகுதி. இந்த ஆராய்ச்சியறிவும் அனுபவமும் மனிதன் இறைச்சியின்றித் தன் தேகாரோக்கியத்தைச் சிறந்த முறையில் காத்துக்கொள்ள இயலுமென்று சந்தேகமறக் காட்டுகின்றன.

ரசாய்ன சாஸ்திரிகள் மனிதனுக்கு எது போதிய உணவாகுமென்பது குறித்து இக்காலத்தில் செய்துள்ள ஆராய்ச்சி முடிவுகள் மிகவும் தெளிவாக இருக்கின்றன. மனிதனுக்கு வேண்டிய போஷணை குணங்களை, முன்னே போல, புரதம் (Protein), கரிநீரயிகள் (Carbohydrates), கொழுப்பு (Fats), சாம்பல் (Ash) என்று பரும்படியாகச் சொல்லாமல்,இப்பொழுது ஒவ்வொன்றையும் வகைப்படுத்தி, மனிதனுடைய ஆகாரத்திலே ஏறக்குறைய முப்பது ரசாயனப் பொருட்கள் இருத்தல்வேண்டு மென்று சாஸ்திரிகள் சொல்லுகிறார்கள். மனிதனுடைய ஆகாரத்தைப் பல நுணுக்கமான ரசாயனப் பொருட்கள் கலந்த ஒரு கலவை என்னலாம். இந்த ரசாயனப் பொருட்கள் அத்தனையும் தக்க அளவில் கிடைக்கும் பொழுது, நல்லாரோக்கியம் ஏற்படுகிறது.

மிருக ஜாதிகளிடத்திலும் தாவர ஜாதிகளிடத்திலும் பல வகையான புரதங்கள் இருக்கின்றன. இந்தப் புரதந்தான் மனித தேகத்திற்கு மூலாதாரமான வஸ்து. முட்டையிலுள்ள வெள்ளைக் கரு, ஊன்பசை (Gelatin) பால் புளித்து விடும்பொழுது அதினின்று பிரியும் கேஸீன் (Casein) முதலியவை புரத வகைகளுள் சில. ஒவ்வொரு செடிக்கும் அததற்குரிய புரதம் உண்டு. அப்படி ஒவ்வொரு ஜாதி மிருகத்திற்கும் அததற்குரிய புரதம் உண்டு. ஒரு ஜாதி செடியிலுள்ள புரதத்தை இன்னொரு ஜாதி செடியிலோ, ஒரு ஜாதி மிருகத்திலுள்ள புரதத்தை இன்னொரு ஜாதி மிருகத்திலோ காண முடியாது. நாம் உண்ணும் ஆகார பதார்த்தங்களிலுள்ள புரதங்களெல்லாம் நமது உடம்பிற்கு அந்நிய வஸ்துக்களாகிய புரதங்கள். நமது தசை நார்களும் உடம்புகளும் வளர்வதற்கும், பழுது பார்க்கப்படுவதற்கும் ஆன புரதமாக மாறவேண்டுமானால், அதாவது, அவை நமது உடம்பிலே சேரவேண்டுமானால், அவை நமது உடம்பிலுள்ள புரதத்திற்கு ஒப்பாக மாறவேண்டும். ஜீரணத்தின் மூலமாகவே அவை இந்த மாறுதலை அடைகின்றன.

நாம் உட்கொள்ளும் புரதங்களெல்லாம் உணவுக் குழாயிலே அமினோ ஆஸிடுகள் (Amino Acids) என்று அழைக்கப்பட்ட இருபத்திரண்டு தனிப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் புரதங்களிலே ஒரு சங்கிலி தொடர்போல அமைந்திருக்கின்றன. அவை வெவ்வேறு அளவாய் அமைந்திருக்கும். சங்கிலியிலுள்ள வளையங்களை வெவ்வேறாகப் பிரிப்பதை ஒக்கும் ஜீரணத் தொழில். இப்படிப் பிரிக்கப்பட்ட அமினோ

ஆஸிட்டுகள்தான் இரத்தத்தில் உறிஞ்சப்படக்கூடும். இரத்தத்திலிருந்து தசைநார்கள், கல்லீரல், சிறுநீர் பிரித்தி, மூளை முதலிய ஜீவ உறுப்புகள் தங்கள் தங்களுக்கு வேண்டிய எண்ணிக்கை அமினோ ஆஸிட்டுகளைப் பொறுக்கி யெடுத்து, மனித திசுக்களுக்குப் பொருத்தமான புரதங்களாக அமைத்துக்கொள்ளுகின்றன.

சில புரதங்கள், முக்கியமாக தானியங்களிலுள்ள புரதங்கள் நல்ல தரமானவையல்ல; ஏனெனில் அவை ஜீரணிக்கப் பெறும்பொழுது, பல வகையான அமினோ ஆஸிட்டுகளும் தக்க அளவில் கிடைப்பதில்லை. ஆனால் தானியங்களிலுள்ள புரதங்களோடு கீரைகளிலுள்ள புரதத்தையும், இன்னுங் கொஞ்சம் குறைந்த அளவு, கிழங்குகளிலுள்ள புரதத்தையும் சேர்த்துச் சாப்பிட்டால், அவற்றினுடைய த்ரம் உயரும். தானியப் புரதங்களுடன் சேர்த்துச் சாப்பிடுவதற்கு கீரைப் புரதங்கள் நல்லவை.

கீரைகளில் உள்ள புரதங்களைக் காட்டிலும் பாலிலும் முட்டையிலும் உள்ள புரதங்கள் மிகச் சிறந்தவை. இவற்றிலுள்ள புரதங்கள் தானியங்களில் குறைந்துள்ள புரதங்களை மிகுதியாகக் கொடுத்து பூர்த்தி செய்கின்றன. எனவே, மரவகை யுணவுகளோடு பாலையும் முட்டையையும் சேர்த்துச் சாப்பிடவேண்டும். இறைச்சியற்ற உணவுத் திட்டத்தைக் கைக்கொள்ள விரும்புகிற எவரும், தங்கள் திட்டத்திலே பாலையும் முட்டையையும் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

பொருத்தமான உணவுத் திட்டம் எதிலும் குறைந்த பக்ஷம் பன்னிரண்டு லோகச் சத்துக்களாவது இருக்கவேண்டுமென்று இப்பொழுது கண்டறியப்பட்டிருக்கிறது. அவையாவன: சோடியம், பொட்டாஸியம், கால்ஸியம், மாக்னீஸியம், குளோரைன், ஐயோடின், பாஸ்பரஸ், கந்தகம், இரும்பு, செம்பு, மாங்கனீஸ், நாகம் (Zinc). ஒருவேளை இன்னும் சில லோகச் சத்துக்களும் அவசியமாக இருக்கலாம். இந்தச் சத்துக்கள் யாவும் செழுமையாக காய்கறி வகைகளில் இருக்கின்றன. கால்ஸியம் ஒன்றுதான் மரவகை உணவுப் பொருட்களில் குறைவாக இருப்பது. எலும்பு வளர்ச்சிக்கு இந்தக் கால்ஸியம் அத்தியாவசியமானது. செடிகளினுடைய இலைகளைத் தவிர மற்றெல்லா மரவகைப் பொருட்களிலும் கால்ஸியம் குறைவாகவே இருக்கிறது. ஆனால் லெற்றூஸ், காபேஜ், கேல், பினுஷ், டர்னிப், பீட்டாப்ள் முதலிய கீரைத் தினுசுகளில் கால்ஸியம் ஏதேஷ்டமாக இருக்கிறது. இவைகளை நாம் இப்போதைக் காட்டிலும் அதிகமாகச் சாப்பிடவேண்டும்.

தானியங்கள், மொச்சை, அவரை, தினை முதலியவற்றிலே கால்ஸியமும் சில உயிர்ச் சததுக்களும் குறைவாக இருக்கின்றனவென்று சொல்லுகிறபடியாலே, அவற்றை உபயோகிப்பதை நாம் கண்டிக்கிறோம் என்று அர்த்தமில்லை. அவற்றில் குறைவாகவுள்ள சத்துக்கள் எங்கெந்த உணவுப் பொருட்களில் காணப்படுகின்றனவோ அந்த உணவுப் பொருட்களையும் சேர்த்து சாப்பிடவேண்டுமென்கிறோம்.

உயிர்ச் சத்துக்கள் விஷயத்தில், இறைச்சியற்ற உணவுத் திட்டத்தைக் கைக்கொள்ளுகிறவர்களுக்கு எவ்வித கஷ்டமும் இல்லை. ஏ. உயிர்ச்சத்து



# உலக வாழ்வின் தத்துவம்

(பம்பாய்-T R. இராஜகோபால்.)

இவ்வுலகமானது உத்கிருஷ்டமானவைகளும் கோரமானவைகளும் நிரம்பப் பெற்றது. நம்மை எதிர்த்து நிற்கின்றது. "மித்தை, மாயை, அபாவம்" என்று கூறி அதை இகழ்ந்து தள்ளுவதில் விவேகமும் பயனுமில்லை. விசித்திரமான இவ்வுலகில் சொற்ப ஆயுளும் அற்ப பலமும் பெற்றுள்ள மானுடர்கள் செய்யக் கூடியதும் செய்ய வேண்டியதும் என்ன? திகைக்கச் செய்யும் பயங்கர நிகழ்ச்சிகளும், திகிலுறச் செய்யும் விலங்கினங்களும் ஓர் பக்கத்திலுமாய், புலன்களைக் கவர்ந்து பிரமிக்கச் செய்யும் எழிற் பொருட்களும், இனித்து ஆனந்திப்பதற்கான அநுபவங்களும் மற்றோர் பக்கத்திலுமாய்க் கூடி விளங்கப் பெற்ற பிரபஞ்சத்தில் தேக அசக்தத்தினால் அவமே உட்கார்ந்து பெருமூச் செறிந்து மாய்தலோ, அல்லது மனோ சக்தியினால் அவைகளை எதிர்த்து, முன்னவைகளை வேருடன் பிடுங்கி அழித்தற்கியலாவிடினும், அக்கொடூரங்களை மட்டுப்படுத்திப் பின்னவைகளைப் பரப்புதற்கான ஆர்வ முடைத்தாய்ப் பற்பல உபாயங்களை ஆராய்ந்து, பலதிறக் கர்மங்களிலீடுபட்டு உழைத்தலோ, இவற்றுள் மதிக்கத் தக்கது எது? துக்கமும் பச்சாத்தாபமும் கலந்துள்ள வாழ்க்கையை அவைகளுக்குக் காரணமான அல்லல்களினின்று விடுவிப்பதற்கான மார்க்கம் யாது? பிரகிருதிப் போக்கை அங்கீகரித்து தக்கன செய்து உயர்வோமோ, அல்லது மனக் கோட்டைகளை எழுப்பி அவைகளுட் பதுங்கி உறங்குவோமோ? அல்லது, ஆற்று நீரோட்டத்தை யொட்டி மிதந்தோடும் துரும்புபோல், பிரகிருதி சலனத்

---

காரட்டு, டர்னிப், ஸ்குவாஷ், மொச்சை முதலியவற்றிலும் பச்சை அல்லது மஞ்சள் நிறமான எல்லா காய்கறிகளிலும் இருக்கின்றது. பீ. உயிர்ச்சத்து எல்லாத் தானியங்களிலும் கிழங்குகளிலும் கீரைகளிலும் இருக்கிறது. ஸீ. உயிர்ச்சத்து எல்லாப் புதுப் பழங்களிலும் காய்கறிகளிலும் பாலிலும் முட்டைகளிலும் இருக்கிறது. டீ. உயிர்ச்சத்து முட்டையின் மஞ்சட் கருவில் இருக்கிறது. அப்படியே ஈ. உயிர்ச்சத்து பல காய்கறிகளிலும் எப். உயிர்ச்சத்து பல எண்ணெய்களிலும் ஜீ. உயிர்ச்சத்து கீரைகளிலும் பாலிலும் முட்டையிலும் காணப்படுகிறது.

(நல்வழி.)

தின்படிக்கு நிச்சிந்தனையுடன் ஓடியாடி மறைவோமோ? அறிந்தோ அல்லது அறியாமலோ, இஷ்டத்துடனோ அல்லவோ, மாந்தரிற் பெரும்பாலார் உலகாதிகளால் ஆட்டப்பட்டுக் காலச் சுழற்சியில் மறைந்து வருகிறார்கள். இயற்கையின் போக்குகளுக்கு அவ்வாறு அடிமைகள் போல் கீழ்ப்படிந்து வாழ்தலோ மானுடத் தன்மை?

உலக வாழ்க்கையானது "மண்ணினின்று உண்டாகி மண்மீது அலைந்து திரிந்து, இறுதியில் அம்மண்ணுடனே கலந்து அழிவதான புல்லிய தோற்ற"முமன்று; "காய்ந்த புல், வாடிய மலர், சலிக்கும் நிழல், ஓடும் மேகம், அலையும் ஆவி, பறக்கும் துகள், திடீரென தோன்றிச் சடுதியில் மறையும் கனவு" போன்றது மன்று; இன்னமும், துன்பியல் நாடகமுமன்று; களிக்கூத்து மன்று; பரிகசித்து உதறித்தள்ளத் தக்க இழி நிலையு மன்று. வாழ்க்கையாகிய வனத்தில் கூரிய முட்களும் கற்களும், விஷப் பூச்சிகளும் ஜந்துக்களும், குரூரப் பிராணிகளுமுள. எனினும், அதே வனத்தில், மனோகர மலர்களும், இனிய செடிகளும், நிழலளித்துக் குளிர்ப்பிக்கும் பெருமரங்களும், தாகத்தைத் தீர்க்கும் நீரருவிகளும், பசியையாற்றி ரமிக்கச் செய்யும் காய்கனி வர்க்கங்களும் ஏராளமாக வுள்ளன. இவ்விஷயங்களை முழுமனத்துடன் ஒப்பி அவைகளின் ஏற்றத் தாழ்வுகளையும் பயனையும் செம்மையாக ஓர்ந்துணர்ந்தறிந்து, வாழ்க்கையைச் செலுத்த வேண்டிய தென்பதைப்பற்றித் தெளிவித்தலேதான் வித்தகத்தின் மெய் நோக்கமாகும்.

இன்னமும், ஜடம் ஜீவன், தேகம் மனம், உணர்ச்சி புத்தி, விவேகம் பாவனை, ஞானம் அஞ்ஞானம், அறம் மறம் எனப்பட்ட இருதிறப் பண்புகளின் சேர்க்கையான வாழ்க்கையைச் சிறிது காலம் நடத்திப் பின் மாய்வோமல்லோம்! உலகாதிகளையும், விஷயப் போக்குகளையும், அநுபவ நிகழ்ச்சிகளையும் அறிதற்காகப் பிரபஞ்சாதிகளை நாம் அவ்வாறு கூறுபடுத்தி ஆராய்கின்றோமேயல்லாது, உண்மையில், வெவ்வேறாக அவைகள் பிரிந்து நிற்பனவு மன்று, பிரிக்கப் படுவனவு மன்று. இது போலவே காரணமும் காரியமும், தொழிலும் பலனுமாம். இவ்வுண்மையை அறியாமையினால், குழப்பங்களையும், காட்சிகளையும், தர்க்கங்களையும் நாம் பெருக்கி, பிரகிருதி, விகிருதி, மதம் தத்வம், விஞ்ஞானம், பரஞானம், ஸ்தூலம் சூக்ஷமம், உணர்வு அறிவு ,எனவும், த்வைதம், அத்வைதம், லோகாயதம், யோகாசாரம், அகிர்முகம் பகிர்முகம் எனவும் பிதற்றிக்கொண்டு, சிற்சில சமயங்களில், உக்கிர வாதங்களும் குரூரச் சண்டைகளு மிட்டு வருகின்றோம்! சரீரவுறுப்புக்கள் பலவும் இணங்கித் தொழில் புரிவதினாற்றான் தேகாரோக்கியம் உண்டாகி நிலைத்துத் தேகியைச் சந்தோஷித்திருக்கச் செய்கின்றன. பல்வேறு அவயவங்களும் இசைந்து இயங்கப்பெற்ற உருவமே யாக்கையாவது. ஒவ்வொரு உறுப்புமாத்திரம் தேகமாகாது. பொது நன்மைக்காகத் தேகமும் உறுப்புகளும் உறுப்க்புகளின் தொழில்களும் பொறிகளும் மனமும் ஒன்றோடொன்று சம்பந்தித்து, ஒன்றையொன்று பாதித்து இயங்கி வளர்தல்போல், பொதுச் சிறப்பிற்காகச் சமூகமும், அங்கமும் அதாவது ஒவ்வொரு மனிதனும், தொழில்களும் தொழிற்பிரிவுகளும் ஒன்றையொன்று பாதித்து இயங்கி மாறி வருகின்றன.

நோய்கொண்ட உறுப்பைச் செம்மையாகப் பரீக்ஷித்தறியாமல் மேலோட்டமாகப் பார்த்துத் தற்கால சாந்தியாக ஏதோ மருந்து ஒன்றைக்

கொடுக்கும் பொழுதும், அல்லது தேகமுழுதும் நோயுற்றுக் கெட்டிருக்கையில் ஒரே அவயவம் அல்லது பாகத்தின்மீது கவனத்தைச் செலுத்திச் சிகிச்சை செய்யும்பொழுதும், அல்லது ஓர் உறுப்பைமாத்திரம் பலப்படுத்தி அதிகவேலை புரியச் செய்யும் பொழுதும், அல்லது தக்க மருந்துகொடுத்து நோயைத் தீர்த்தபோதிலும் அந்நோய் அத்தேகத்தை மறுபடியும் சார்ந்து துன்புறுத்தாவண்ணம் பாதுகாத்தற்கான ஏற்பாடு செய்யாமல் விடும் பொழுதும், எவ்வாறு கெட்டுப்போன உறுப்பு மெம்மேல் கெட்டு இதர அவயவங்களையும் தாக்கித் தேகத்திற்கு தீங்கு விளைத்தற்போலும், அல்லது பழையகாரண ஸ்திதியினால் தேகமானது மீண்டும் நோய் வசப்படுதல் போலும், சமூக வாழ்க்கையில் அவ்வப்போது தோன்றும் இன்னவிடர்களையும் மாற்றங்களையும் மேற் காட்டியபடிக்கு இருதிறக் குணங்களாகப் பிரித்துத் தீமை எனப்பட்டவைகளை அடக்கி நன்மை எனப்பட்டவைகளை வளர்த்து உயர்த்துவதற்காகச் செய்யும் முயற்சிகளெல்லாம் வீணாகித் தீமை எனப்பட்டவை எதிர்பாராத விதங்களிலும் சமயங்களிலும் நம்மை அலப்புறுத்துவதுடன் நிற்காமல் நன்மை எனப்பட்டவைகளையும் தாக்கி இழித்துச் சமூக வாழ்க்கையை அல்லோல கல்லோலப் படுத்துகின்றன. இது போலவே ஒரு இனம் அல்லது வகுப்பு, அல்லது கக்ஷியின் நிலைமையானது இதர இனங்களையும், வகுப்புகளையும், கட்சிகளையும் பாதித்து மாற்றுகின்றது.

நன்மை தீமை, தனம் தரித்திரம், நட்பு பகைமை என்பனவாதிகள் தரிக்கப் படுவனவன்று; பின்னவைகளைக் களைந்து முன்னவைகளைப் பெருக்குதற்கான உபாயம் யாதெனின், வெறும் உபதேசங்கள் செய்வதும் கணக்கற்ற ஆக்ஞா சட்டங்களையும் நூற்களையும் பிரசுரிப்பதும், நியாய ஸ்தலங்களையும் பாடசாலைகளையும் நிருமிப்பதும் மாத்திரமன்று. பின்னவைகள் உண்டாகி வளர்ந்து பரவுதற்கு ஹேது அல்லது காரணமானவைகளைப் போக்கி அவைகள் மீண்டும் எழாவண்ணம் சமூக அமைப்பையும் போக்கு முறைகளையும் முற்றிலும் சீர்திருத்தலே நல்லுபாயமாவது போலும்! வேரிலிருந்து ஊறிப்பெருகும் விஷமானது வேரை எரித்தால் போகுமேயல்லாமல், மேற்கிளைகளை மாத்திரம் பன்முறை வெட்டி யெறிந்துகொண் டிருந்தால் போகுமோ?

உள்ளபடிக்கு மனிதன் பாபியுமன்று; சுசீலனுமன்று; குரூபியுமன்று; தயாநிதியுமன்று. உண்டுறங்கி இனத்தைப் பெருக்கிவரும் பிராணிகளில் இவனும் ஒன்றாகத் தோன்றினும், பசிதாகம் காமமாகிய வேட்கைகளால் தூண்டப்பட்டு அவைகளைப் பூர்த்திப்பதற்காக அந்நாள்தொட்டு இந்நாள் வரையிலும் படாத பாடுகள்பட்டு விதம் விதமான உபாயங்களையும் கருவிகளையும் கண்டுபிடித்துக் கையாண்டு வந்தபோதிலும், அப்பாடுகளெல்லாம் அவ்வேட்கைகளைப் பூர்த்தி செய்ததுடன் நின்றுவிட்டனவன்று. விலங்குகளின் வாழ்க்கையில் தோன்றாத சில அபூர்வக் குணமாற்றங்கள் மானுடருலகில் தோன்றின. சரீரவூக்கமும், விவேக வளர்ச்சியும், மன விரிவும், கூட்டுறவு வாழ்க்கையும் உண்டாகி, உடைமை உரிமைகளென்ற பாவனைகள் முளைக்கிளம்பின. பிரகிருதிப் பொருட்களின் தார தம்மியங்களையும் போக்கையும் கவனித்துப் பார்க்கையில், அறிவு விசாலித்து பிர

கிருதி நிகழ்ச்சிகளையும் பொருட்களையும் தனக்கு உபயோக முள்ளனவாக மாற்றுதற்கான சக்தி விருத்தியாயிற்று.

மானுடச் சுபாவம் சதா காலமும் மாறிக் கொண்டிருப்பதாகும். அம் மாற்றங்களுக்குக் காரணம் யாதெனின், உலக வாழ்க்கையைப் பற்றிய அவனுடைய ஆதர்சங்களின் தன்மையாம்; முறையே அவ்வாதர்சங்களின் தன்மையானது வாழ்க்கைக்கான சாதனங்களின் வளர்ச்சியையும் குறைவையும், அபரிமிதத்தையும் இன்மையையும் பொறுத்துள்ளது.

உயர்வு தாழ்வுக ளென்ற வித்தியாசங்களை மாந்தருலகில் புகுத்திப் போற்றுபவர் எவரெனின் செல்வச் செருக்கினரும் வீர சூரர்களுமேயாம். சில நூற்றுவர் மாத்திரம் போகித்து ரமித்து வருகையில், பற்பல வாயிரம் பேர்கள் வருந்தித் துடித்தற்குக் காரணம் யாதெனின், ஒருவர்க்கு 'லக்ஷ்மி கடாக்ஷம்' இருப்பதும், மற்றவர்க்கு அக் கடாக்ஷ மின்மையுமன்று. சிலர் பெரும் படிப்புகள் படித்து, உயர்ந்த பட்டங்கள் பெற்று, உன்னத ஸ்தானங்களிலமர்ந்து ஆக்ஞா சக்கிரத்தை உருட்டுகையில், ஏனையோர் எழுதப் படிக்கத் தெரியாது நாள்தோறும் இடுப்பொடிய ஊழியஞ் செய்தும் கஞ்சியும் கந்தையுமில்லாது ஏங்கி வாடுதற்குக் காரணம் யாதெனின், ஒருவர்க்கு "சரஸ்வதியின் கிருபை" இருப்பதும், மற்றவர்க்கு அக் கிருபை இன்மையுமன்று. ஒருவர் சுகிப்பதும் மற்றவர்கள் துக்கிப்பதும் "பண்டை வினைப் பயன்" என்று, சுருக்கத்தில், இன்னலிடர்கள், வலி வருத்த மேக்கங்கள், வேற்றுமை விபரீதங்க ளெல்லாம் பின்வருமாறு மாந்தருலகில் தோன்றிப் பரவின.

ஆரம்பத்தில் "இயற்கை அன்னை"யின் அடிமையாகப் பாடுபட்ட "அநாகரீகன்" படிப்படியாக அவள் போக்குகளை ஒருவாறு அறிந்து அவளைத் தன்னுடைய தோழியாக மாற்றினன். நாட்குநாள் ஜனத்தொகை அதிகரித்துச் சமூக வாழ்க்கை பலமுற்று தொழிற்கள் பெருகிவரவே, தன்னுடைமை—தன்னுரிமைக ளென்ற பாவனைகள் முளைத்தன. ஆதியில் இயற்கை அன்னையோடு அதி உக்கிரத்துடன் தொடுக்கப்பட்ட போரானது நாளாவட்டத்தில் மாந்தருலகில் புகுந்து, மானுடராசியை வருப்புக்களாகவும் ஜாதிகளாகவும் பிரித்து ஒருவரை யொருவர் பகைக்கச் செய்தது. "ஜீவாதாரப் போரானது பொருளாதாரப் போராகப் பரிணமித்தது. வேட்கை விருப்பமாகவும், விருப்பம் ஆசையாகவும் செழிக்கவே, வழக்குகளும் புரட்சிகளும் உண்டாகிப் பெருகின; இன்னமும் பெருகி வருகின்றன.

நாளேற நாளேற நூதனப் பிரதேசங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. பற்பல ஜாதியர்களுக்குள் அறிமுகம் ஏற்பட்டது. கப்பல் போக்குவரத்துக்களும், பண்டங்கள் மாற்றமும், வர்த்தகமும் பிரபலமாயின. விஞ்ஞான சாஸ்திரப் பயிற்சிகளும் தேர்ச்சிகளும் அபிவிருத்தியாயின. இதனின்று இயந்திரங்களும், இயந்திரத் தொழில்களும், தொழிற் சாலைகளும் ஓங்கி வளர்ந்து பரவின. வியாபாரிகள் தலை யெடுத்தனர். பற்பல தேசத்தினர்க்குள் கூட்டுறவும், பண்டங்களின் ஏற்றுமதி இறக்குமதிகளும் பெருகவே அவ் வியாபாரிகள் வர்த்தக அதிபதிகளாகவும், முதலாளிகளாகவும் மாறி செல்வாக்குற்று உயர்ந்தனர். சுயநலத்தின் பொருட்டு அவ் வர்த்தகர்களும் முதலாளிகளும் தமக்கு அநுகூலமான அரசு முறைகளையும் சட்

டங்களையும் வரம்புகளையும் நியமித்து, ஏனையோர்களைப் பாமரர்களாகவும் எளியர்களாகவும் இருத்தி மேலெழாவண்ணம் அவர்களை அடக்கினர். இன்னமும் அடக்கி வருகின்றனர்.

மேற் சொல்லிய வேற்றுமை விபரீதங்களெல்லாம் தற்காலத்திற்றான் தோன்றியுள்ளன எனக் கொள்ளக் கூடாது. பற்பல ஆயிரவாண்டுகளாக அவைகள் நிலவி நின்று வருகின்றன. அக் காலங்களுக்கும் இக் காலத்திற்கு முள்ள பேதம் அளவிற்றானே யல்லாது தன்மையி லன்று.

விஞ்ஞான சாஸ்திரப்பயிற்சிகள்-தத்துவ விசாரணைகள்—வித்தகக் கற்பனைகள்—பலதிறக் கலைகளின் நோக்கங்கள்—இலக்கிய இலக்கணங்களின் போக்குகளிற் பெரும்பான்மையும் அவ்வக்காலத்தின் நிலைமையை அடிப்படையாகக்கொண்டு, அவ்வக்காலத்திய செல்வாக்கினரின் மனோபீஷ்டங்களுக்கு அனுகூலமாக வளர்ந்து வியாபித்தன. இன்னமும், ஒரு சமயத்தில் சமூக மாற்றங்களின் பிம்பங்களாகவும், மற்றொரு சமயத்தில் பிரதி பிம்பங்களாகவும் விளங்கின. சிற்சில சமயங்களில், அவைகள் பொது ஜனங்களின் எழுச்சிக்கும் புரட்சிக்கும் சீர்திருத்தங்களுக்கும் தூண்டுகோலாகவும் வழிகாட்டிகளாகவும் விளங்கிய போதிலும், அவைகளிற் பெரும்பான்மையும், அந்நாள் தொட்டு இந்நாள் வரையிலும், மேற்காட்டியபடிக்கு ராஜாங்கங்களின் ஊது குழாய்களாகவும், செல்வாக்கினரின் தோழராகவும், தனவான்களின் ஊழியராகவும் நடித்து வந்தனவே யல்லாமல், பாமரர்களின் நல்லாசிரியராகவும், ஏழைகளின் நண்பர்களாகவும், சுயமதிப்புடையவர்களாகவும் நின்று உதவி புரிந்தன வன்று.

மானுடருலகில் விரவிநிற்கும் இடையூறு இடுக்கண்களும், வேற்றுமை விபரீதங்களும் ஆகாயத்தினின்று அகோசரவிதத்தில் குதித்தன வன்று; ஆனால், மண்ணுலகி லிருந்தே, மண்ணுலக வாழ்க்கைப் போக்கிற்கும் தேவைக்கு மானபடிக்கு உண்டாகி வளர்ந்து மாறிப் பெருகினவென்றே கூறவேண்டும். மாந்தர் தம் சுகதுக்கங்களுக்கும் உயர்வு இழிவுகளுக்கும் அதிகாரியும் உத்தரவாதியும் ஆனவர் மாந்தரே யல்லாமல், சூக்ஷ்மதேவதைக ளன்று. மௌட்டியத்திற்கும் ஞானத்திற்கும், தனத்திற்கும் நல்குரவிற்கும் சமூக அமைப்பும், கட்டுப்பாடுகளும் சம்பிரதாயங்களுமே தான் காரணமாவன. பிராமணன் முதல் தீண்டாதான் வரையிலும், மன்னவர் மன்னன் முதல் நித்திய தரித்திரன் ஈறாக யாவரும் ஒரே ராசியைச் சேர்ந்தவராயினும், ஒரே விதச் சத்திபெற்றவ ராயினும், சமூக வாழ்க்கைப் போக்கில் சில மானுடத் துரோகிகளால் ஏற்படுத்தப்பட்ட வகுப்புக்களும், நியதிகளும், உடைமை யுரிமைகளுமேதான் மாந்தர் பெரும்பாலோரின் சுகதுக்கங்களுக்கும் வேற்றுமை விபரீதங்களுக்கும் காரணமே யல்லாது, வேறில்லை.



# தற்காலக் கல்வியின் சீர்கேடு

(டர்பன்-திரு. ச. முனிஸ்வாமி பிள்ளை.)

நமது நாடு வறுமையுற்றதற்கும், கைத்தொழில் குறைந்ததற்கும், வாணிகங் குன்றியதற்கும், இளைஞர்கள் பலர் வேலையின்றி அலைந்து திரிதற்கும் ஏதுவாய் நிற்பது நமது இளஞ்சிறார்க்கு ஊட்டப் பட்டு வந்ததும், வருவதுமாகிய கல்வியின் குறைபாடே யென்பது யாவரும் ஒப்ப முடிந்ததொன்று.

எருவிடப்படலால், வளஞ்செறிந்த நிலத்தினிடத்தே விதைத்த வித்தானது தண்ணீரால் வீறெய்தி பயனிருக்குமாப்போல், வாழ்க்கை நிலைக்கின்றியமையாத தொழிற் பயிற்சியோடு இளஞ்சிறார் பொதுக்கல்வியும் பயின்று பயன்பெறச் செய்தல், தற்கால உலகத்தின் போக்கினை உற்று நோக்கி இரங்குகின்ற உள்ளத்தினர் எவர்மேலும் பொறுத்த கடமையன்றோ?

எத்தேயத்திலும் தாய் மொழியை யொதுக்கிவிடுத்து பிறமொழியை ஏற்று அதனை வளரச்செய்ய எத்தனித்தல், தாய்வேரில்லாது தயங்கும் மரமானது வளர்ந்து பயனுதவியதை யொக்கும். கண்டன யாவும் உணவே யெனக் கருதும் பகுத்தறிவில்லாப் பிள்ளைப்பருவத்தும், அதன் பின்னும் தனக்கு அன்பு குழைத்துப் பாலூட்டி, அருள் நிறைத்துத்தாலாட்டி வளர்த்தெடுத்த தாய் தனக்கு வேறெவர்தான் ஒப்பாவர் ?

சிறுவயது தொடங்கியே வீட்டிலும், வெளியிலும் அல்லும் பகலும் ஆங்கிலத்தையே முற்றுங்கற்று, தமிழைச் சிறிதளவேனும் கல்லாதுவிடுத்த—அதைக்கற்றல் தமது போலிப் புகழுடை நிலைமைக்கோர் இகழ்வாமென விடுத்த—மாணவர்கள் யாவரும், ஆங்கிலத்தில் அரும்பெரும் அறிஞர்களாய்த் துலங்கிவிடவில்லை. மற்று இவர்தாமே தாய்மொழியிற் பயின்ற நமது முன்னோரினும் பல்லாற்றானும் இழிவு நிலைமையி லிருக்கின்றனர். தாய் மொழியிற் பயின்றானொருவன் அன்னியமொழியைப் பயிலுதற்காகத் தனது மனவலிமையைச் சிறுவயது தொடங்கியே வருத்திய மாணவனினும், அறிவு முதிர்ச்சியால் ஒப்பற்று விளங்குவானென்பது திண்ணம். இதற்கு எடுத்துக்காட்டாக கவிச் சக்கிரவர்த்தி தாகூர் அவர்களின் ஜீவிய சரித்திரத்தை உற்று நோக்குவோம்.

அவர் பதினொன்கு வயதுவரை ஆங்கிலமே சிறிதுந் தெரியாதிருந்தது மன்றித் தாய்மொழியில் ஊக்கத்துடன் பயிற்றப்பட்டு வந்தாரெனவு மறிகிறோம். நாட்டுப் பள்ளிக்கூடத்தின் தாய்மொழியில் நன்கு கற்ற மாணவனொருவன், பட்டினத்துக் கல்லூரியில் சேர்ந்து ஆங்கிலம் படிக்கத்தொடங்கிய சிறிது காலத்திற்றானே ஆங்கிலமே பிறந்த நாள் தொடங்கிப் பேசிப் பழகிய மாணவரைப் பார்க்கிலும் முதன்மை பெற்றும், ஆசிரியரால் நன்கு மதிக்கப்பட்டும் விளங்குதலே போதிய சான்றாம்.

நமது நாட்டில், தீவினை ஒரு சிறிது மில்லாத செய்தற்றொழிலும், உழவுத் தொழிலும் வாணிகமு மடைந்திருக்கும் இழிநிலைமை கூறவும் மனம் கூசுகின்றது.

எழுதப் படிக்க சிறிது தெரிந்தவர்களும், அது தானு மில்லாதவர்களுமே கைத்தொழில்களை நடாத்தி வருகின்றனரே யன்றி, கற்றவர்கள் இம் முயற்சிகளில் தலையிடுதலைக் காணோம். நமது நாடு பண்டைக்காலத்து செப்புதற்கரிய செழிப்புற்று விளங்கியதா மென்ற உண்மைதானும், பொய்யாய் பழங் கதையாய் மறைந்து படுமன்றோ? ஆகையால் நம்முடைய கல்வி சீரியதாகவும் கைத்தொழில்களை விருத்திசெய்வதற் குதவியாயு மிருத்தலவசியம். அரசாட்சியினரின் காரியாலயங்களில் லிகிதர் வேலையே பெரும் பேறாக மதிக்கும் கல்வி முறையை முற்றிலும் வேருடன் களைந் தெறிந்து, உழவு, நெசவு, வாணிபம் முதலிய கைத்தொழில் முயற்சிகளை மன நிறைவுடன் புதிய வழிகளில் செய்தற்குரிய கல்வியை நமது நாட்டவர்க்கு, தாய் மொழியாம் தமிழ் மொழியில் ஊட்டல் வேண்டும். மேனாட்டார் தங்களுக்குள்ள கல்வியறிவின் மேன்மையால் நாளுக்கு நாள் எல்லா முயற்சியிலும் பிறை போல் வளர்ந்தோங்கி வருதலையும், அஃதில்லா நம்மனோர் அம் முயற்சிகளில் குறை மதிபோல் தேய்ந்து போதலையும் அறியார் யார்?

இப்பொழுது பள்ளிக்கூடங்களிற் பயன்படுதற் பொருட்டு வெளியிடப்பட்ட நூல்களோ அளவில் மலிவுடைமை பற்றி ஆழ்ந்த கருத்துடையனவாய்த் தோற்றவில்லை. இம்மை மறுமைக் கேற்றன யாவற்றையும், கட்டிக்கரும்பை இறுக்கக் காய்ச்சிய பாகெனத் தித்திக்கும் முறையால் விளக்கிக் காட்டிய நூல்கள் மறைந்து பயனற்ற நூல்கள் பல பெருகி வருகின்றன.

'கன்னடமுங் களிதெலுங்குங் கவின் மலையாள முந்துளுவும்' தோன்றுதற்குக் காரணமாய் நின்ற தாய் மொழியாம் அமிழ்தினுமினிய உயர்தனித் தமிழ் மொழியைக் கற்றல் இகழாமென விடுத்த தமிழ் இளைஞர்காள்! சன நெருக்கத்தினாலும், தூசியினாலும் கெட்ட காற்றை உட்கொண்டு, வாழ் நாட்களை குறுகச் செய்து அரசாட்சியினரின் காரியாலங்களிலிருந்து அறிவு வளர்ச்சி யற்றிருக்க விரும்பியும், இளந்தென்றல் வீசும் இயற்கை வனப்பு வாய்ந்த சிற்றூர்களிலிருந்து கைத்தொழில் வேலைகளைச் சிறப்புடன் நடத்தவும் ஒருப்படாத இளங்காளைகாள்!! தமிழ்மொழி மடவாள் ஈன்ற மாசிலா மக்காள்!!! இனியேனும் உங்கள் உறக்கம் ஒழிந்தும், மயக்கந் தீர்ந்தும் விழித்துக் கொள்வீர்களாக. உங்கள் வழித் தோன்றல்களையாயினும் தக்க முறையில் கல்வி யூட்டுவித்தல் வேண்டும். அன்றேல் நமது நாடு வலிகுன்றிச் சிறப்புக் கெடுமேயன்றி முன்னேற மாட்டா தென்பது திண்ணம்.

---

# சோபியாவின் காதல்.

(பி. எம். அப்துல்மஜீது.)

அழகிய மாளிகை. மதில் சூழ்ந்த கோட்டைக்குள் அதிவிரைவுடன், பருத்த கொழுத்தவொரு கனவான் கம்பீரமுடன் நுழைந்தார். அவர்தான் ஜெல் பிரபு. ஹனேவர் அரசர் எர்னஸ்ட் அகஸ்டவின் சகோதரர். ஜார்ஜ் வில்லியம் என்ற பெயர் புனைந்தவர். அவர் கீழ் மாடியிலிருந்தபடியே, "சோபியா! சோபியா!" என்று அழைத்தார்.— சில நிமிடங்கள் சென்று 'சோபியா,' என்று மீண்டும் கூப்பிட்டார்.

சில விநாடிக்குப்பிறகு மாடிப்படியில் தடதடவென்ற சப்தம் கேட்டது. வேட்டை உடையுடன் நின்றுகொண்டிருந்த பிரபுவுக்குமுன்பு, அழகே உருவெடுத்ததுபோல் மான் போன்ற மருண்ட பார்வையுடன் கூடியதொரு சோபித மங்கை நடுங்கிக்கொண்டே நின்றாள்.

வணக்கத்துடன், "என் அப்பா, என்னை அழைத்தீர்கள்? என்ன, அப்பா" என்று அவள் தழுதழுத்த குரலில் கேட்டாள்.

"ஒன்றுமில்லை......சோபியா கேள், நான் உன் பெரிய தந்தையுடன் வெகுநேரம் சம்பாஷணை செய்து கொண்டிருந்தேன். நாங்கள் இருவரும் ........உன்னை, அண்ணன் ஜார்ஜுக்கு விவாகம் செய்வதென ஏற்பாடு செய்துவிட்டோம்; தெரியுமா?" என்றார் பிரபு.

"அப்படியா அப்பா, என்னையா......?" என்று கேட்டாள் சோபியா.

"ஆம்; நாங்கள் கூடியசீக்கிரம் விவாகம் நடத்திவைக்க ஏற்பாடு செய்திருக்கிறோம்" என்று சொல்லிவிட்டு அப்பிரபு குதிரை லாயத்திற்கு அவசரமாகச் சென்று விட்டார்.

தந்தையின் மொழிகளைக் கேட்ட கன்னி சோபியா இடியோசை கேட்ட நாகம்போல், அங்கேயே ஸ்தம்பித்து நின்றாள். அப்போது அவள் மரப் பதுமைபோல் தோன்றினாள்.

ஒருநாள் தான் யாரையேனும் ஒருவரை மணக்க வேண்டுமென்றும் இந்திய ராஜகுமாரிகள் போன்று தனது மனதிற்குகந்த நாயகனை தெரிந்தெடுத்துக்கொள்ளும் உரிமை தனக்கு கிடையாதென்றும் அவளுக்கு நன்கு

தெரியும். ஆனல் துர்க்குணரும், ஸ்திரீலோலருமான ஜார்ஜை மணக்க, அழகும் புத்தி கூர்மையும் நல்ல படிப்பும் வாய்ந்த இளங்கட்டழகிக்கு எப்படி மனம் வரும்? இவனை மணந்தால் தன் கதி என்னவாகு மென்பதை நினைந்து நினைந்து நெஞ்சம் கலங்கினள். ஆனல் பெற்றோர் முடிவை மறுக்க 17-ம் நூற்ருண்டில் ஜெர்மன் பெண்களுக்கு உரிமை யேது? எல்லாம் விதிவிட்ட வழி நடக்கட்டும் என்று அவள் விட்டுவிட்டாள்.

விவாகமும் நடந்தேறியது. விவாகத்தின் பிறகு ஜார்ஜ் வீட்டில் தங்குவதே இல்லை. வேறு மங்கையர் கூட்டுறவு இருக்கையில் அவனுக்கு மனைவியைப்பற்றி கவலை எதற்கு? அவன் தன்னை தீராப் பொறியாகவே மணந்திருக்கிறன். ஆதலால்தான் தன்னை அவன் அலக்ஷியஞ் செய்கிறன் என்று கருதி சோபியா வருந்தினள். இப்படி இருப்பினும் ஜார்ஜினிடமாக அவளுக்கு ஒரு மகனும் மகளும் பிறந்தனர். பின் ஜார்ஜ் அவளைக் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை.

கோணிக்ஸ் மார்க் பிரபுவான பிலிப் கிறிஸ்டாபரைச் சந்தியாம லிருந்தால் சோபியாவின் வாழ்க்கையே, வேறுவிதமாக முடிந்திருக்கும். ஆனல் விதி யாரைவிட்டது?

பிலிப் பிராண்டன்பர்க் பிரபுக்களது வம்சத்தைச் சேர்ந்தவர். இவ்வம்சத்தினர் ஸ்வீடன் தேசத்தில் வசித்து பெரும் வீரர்களாய் திகழ்ந்தனர். பிலிப் பிழைப்புக்காக ஹனேவர் வந்தார். ஹனேவர் அரசர் இவரை பட்டாளத்துக்கு கர்னலாக நியமித்தார். பிலிப் மிக்க அழகும் துணிவும் வீரமும் வாய்ந்தவர். காதலற்ற வாழ்க்கையால் வாடி மெலிந்த 'சோபியா, அந்த கட்டழகனை சந்திக்க நேர்ந்தது. அழகிற் சிறந்த இருவர் கண்களும் ஒன்ருெடொன்று சந்தித்து உறவாடின. இருவர் மனமும் ஒன்றுபட்டன, பிலிப் சோபியாவை முத்தமிட்டுத் தன் அடங்கா காதலை தெரிவித்தார். பாவம், சோபியா, 'எனது கணவன், தந்தை, மாமனர் முதலியவர்கள் களவின்பம் அனுபவிக்க, நான்மட்டும் ஏன் அதனை அனுபவிக்ககூடாது? இன்பம் அனுபவிப்பதில் கூட பெண்களுக்கொரு விதி; ஆண்களுக்கு ஒரு விதி ஏன் இருக்க வேண்டும்?'' என்று நினைத்தாள். களவின்பம் அனுபவித்ததும் பிலிப்பிற்கு அடிமையாகி பதிதையானள். சிறிது காலம் பிலிப்பும் சோபியாவும் இந்திரன் இந்திராணிக்கு ஒப்பாக இன்பம் அனுபவித்தனர். பிலிப் வரமுடியாத சமயா சமயங்களில் சோபியா அவருக்கு காதல்கனிந்தொழுகும்படியான கடிதங்களெழுதி தன் ஆவலைத் தீர்த்து கொள்வாள்.

சோபியா தனது கணவர் ஜார்ஜ் பர்லினுக்கு சென்றிருந்தபோது பிலிப்புடன் பிரான்சுக்கு ஓடிப்போய் இன்பமாய் வாழ வேண்டிய ஏற்பாடுகளை செய்து முடித்தாள். இவளது சாரட்டு இதற்கு தயாராகியது. ஆனல் பிளாடின் சீமாட்டி, இவளுக்கு சனியனக வந்து சேர்ந்தாள்.

அவள் தன் ஒற்றர்கள் மூலம் சோபியா, பிலிப்பிற்கு எழுதிய கடிதங்களைப் பெற்று ஹனேவர் அரசனிடம் பிலிப்பைக் கைதுசெய்ய உத்தரவு பெற்ருள். சீமாட்டி, பிலிப் வரவேண்டிய வழியில் நான்கு போர் வீரர்களை நிறுத்தி இருந்தாள். பிலிப் அஞ்சாத வீரரல்லவா? இவர்களை லக்ஷியம் செய்யாமல் தன் காதலி குறித்த இடத்தை யடைய முயன்ருர். அப்போது ஏற்பட்ட சண்டையில் அவர் எதிரிகளில் சிலரைக் காயப்படுத்தினர். ஆனல் முண்டனுக்கு இரண்டாள் போதுமன்ருே? நான்கு வீரர்களும் பிலிப்பின்மீது பாய்ந்து அவரை வெட்டி எமலோகத்துக்கு டிக்கட் கொடுத்தனுப்பினர்கள். பிலிப்பின் சவம் மறுநாள் தகனம் செய்யப்பட்டது. இது 1694-ம் ஆண்டில் நடந்த நிகழ்ச்சியாகும். ஹனேவரிலிருந்து 7 மைல் தூரத்திலுள்ள ஆஸ்டன் கோட்டையில் 'சோபியாவை, அவளது கணவர் 1694-ம் வருஷம் சிறை வைத்தார். அவள் தப்பி ஓடாதபடி காவலர்கள் நியமிக்க பட்டார்கள். காவலாளிகளை தவிர வேறு எவரையும் காண, அவளுக்கு அனுமதியளிக்கப்படவில்லை. பல வருஷங்கள் ஒன்றன் பின் ஒன்ருய் ஓடிமறைந்தன. தனது கணவனுக்கு இங்கிலாந்து அரசர் பதவியளிக்கப் பட்டு தனது குமாரனுடன் இங்கிலாந்துக்கு அதனை ஏற்கச்செல்வதாக வதந்தி உலாவியது. முதலாவது ஜார்ஜுக்கு மகுடாபிஷேகம் ஆகி விட்டதாயும் கேள்விப்பட்டாள். தனக்கு இனியாவது விடுதலை நிச்சயம் கிடைக்குமென்று கருதினள். சிலர், சோபியா, இதுவரை அனுபவித்த தண்டனை போதுமென்றும் அவளைத் திரும்ப மனைவியாக அங்கீகரிக்க வேண்டுமென்றும் ஜார்ஜிடம் விண்ணப்பித்து கொண்டார்கள். ஆனல், ஜார்ஜ் புனராலோசனை' செய்ய மறுத்து விட்டார். அவர் 2 ஜெர்மன் வைப்பாட்டிகளுடன் இங்கிலாந்தில் காலத்தைக் கழித்தார்.

சிறை வாசத்தால் வாடி வதங்கிய சோபியா அழகு குன்றினள். தனது இன்னல்கள் தீர யமனை அனுப்பி உதவி செய்ய கூடாதா என்று கடவுளை வேண்டினள். உயிருடன் அவள் 32 வருஷம் சிறையிலிருந்ததே போதுமென கருதி அந்த கருணு நிதியான கடவுளுங் கருதினர் போலும். 1726-ம் வருஷம் இச் சித்திரவதையி லிருந்து யமதர்மராஜன் சோபியாவை விடுதலை செய்தான். ஆணுக்கொரு நீதி, பெண்ணுக்கொரு நீதி என்ற மிக பிற்போக்கான உணர்ச்சி ஆங்கில நாட்டிலும் இருந்திருக்கிறது.






ஆண் மக்களுக்கு நீல நிறத்திலும், பெண்மணிகளுக்குச் செந்நிறத்திலும் ஆசையதிகமாம்.

*　　*　　*　　*

சிவப்பும், நீலமும் கலந்த நிறம் ஆண்களுக்கோ, பெண்களுக்கோ பிடிப்பதே யில்லையாம்.

*　　*　　*　　*

கிரேட் பிரிட்டனில் 25,11,117 டெலிபோன்களும், ஜெர்மனியில் 32,69,952 டெலிபோன்களும் இருக்கின்றனவாம்.

*　　*　　*　　*

அமெரிக்காவில் உலகிலுள்ள டெலிபோன்களில் பாதி அதாவது 1,74,23,871 டெலிபோன்கள் இருக்கின்றனவாம்.

*　　*　　*　　*

இந்தியாவில் 1925-ம் ஆண்டில் 60 இன்ஷியூரன்ஸ் கம்பெனிகளே இருந்தனவாம். அதற்குப் பின் இந்த பத்து ஆண்டுகளுக்குள் 150 கம்பெனிகள் ஏற்பட்டு விட்டனவாம்.

*　　*　　*　　*

உலக முழுவதிலும் 3,50,28,682 டெலிபோன்கள் இருப்பதாக அமெரிக்க டெலிபோன்கம்பெனி புள்ளி விவரம் ஒன்றில் வெளியாகியிருக்கிறது.

*　　*　　*　　*

பதின்மூன்று கோடியே எழு லட்சம் ஜனங்கள் வாழும் அமெரிக்காவில் ஏறக்குறைய 9 கோடி பேர் ரேடியோ சங்கீதம் கேட்கின்றனராம்.

*　　*　　*　　*

ருஷிய மக்கள் ஸார் சக்கரவர்த்தி காலத்தில் எவ்வளவு சோப் உபயோகித்தார்களோ அதைப் போல மும்மடங்கு சோப்பை இப்போது உபயோகிக்கிறார்களாம்.

*　　*　　*　　*

சமீபத்தில் ஜெர்மனிக்கு விஜயஞ் செய்த இத்தாலி சர்வாதிகாரி முஸோலினியை வரவேற்பதற்கு 5 லட்சம் பவுன் செலவாயிற்று என்றும் அவர் போகும் வழியெங்கும் ஆயுதபாணிகளாக வீரர்களை நிறுத்தி வைப்பதற்கு மட்டும் $1\frac{1}{2}$ லட்சம் பவுன் செலவாயிற்று என்றும் கூறப்படுகிறது.

*　　*　　*　　*

நியூயார்க்கில் வாலிபர்களோ மங்கைகளோ தூர தேசத்திலுள்ள தங்கள் காதலிகளுக்கோ அல்லது, காதலர்களுக்கோ தங்களுடைய அடங்காக் காதலைத் தெரிவிக்க வேண்டி, தந்தி மூலமாக முத்தமளிப்பதாகத் தெரிவிப்பார்களாம். அவர்கள் அளிப்பதாகக் கூறிய முத்தங்களைத் தந்தியை யெடுத்துச் செல்லும் தந்திச் சேவகனே உரியவர்களுக்கு முத்தமளிப்பானும். ஐரோப்பாவில் நடைபெறும் நவநாகரீகக் கூத்துக்கு இந்த ஒரு சிறு உதாரணமே போதுமல்லவா !




டாக்டர்:—“நீ சைவ உணவைக் கண்டிப்பாய்க் கடைப்பிடிக்க வேண்டுமென்று நான் உனக்குப் புத்திமதி சொல்லி யிருக்கிறேன். ஆனால், நீ ஆட்டுமாமிசம் சாப்பிட்டதாகச் சொல்லுகிறாய்?”

நோயாளி.—ஆனால், நீங்கள் பாருங்கள் டாக்டர்? ஆடுகள் வெறும் புல்லைத்தான் தின்கின்றன.

***



தகப்பனார்:-ஏண்டா பய்லே, குழந்தை அழுரான்.

பையன்:—நீ வாங்கிக் கொடுத்த ஜிலேபியே அவனுக்குத் தின்க தெரிலே. அதே! நான் தின்னு காண்பிச்சேன் அப்பா!

***

சாரண உபாத்தியாயர்:—(சாரண சிறுவர்களைப் பார்த்து) பிள்ளைகாள்! நீங்கள் உமது சொந்த சகோதரி, தாய் தந்தையர்களிடம் எப்படி நடந்து வருகின்றீர்களோ அது போல பிறரிடமும் நடக்க வேண்டும்.

ஒரு சாரணன்:—சார்! நான் எப்பொழுதும் வீட்டிலுள்ளவர்களை அதட்டுவேனே, சார்!

***

நாடக கொட்டகை சொந்தக்காரர்.—நேற்றைய தினம் ஆட்டத்திற்கு வந்த இருபது, முப்பது பேர்வழிகளும் திரும்பிச்செல்ல நேர்ந்தது.

அவர் சிநேகிதரில் ஒருவர்:—என்ன! இடமில்லையென்று சீட்டுக் கொடுக்க வில்லையா?

நாடகக் கொட்டகை சொந்தக்காரர்:—நல்ல வெட்கக்கேடு. வந்திருந்தவர்களே அவ்வளவுதான். அவர்களுக்காக ஆட்டம் நடத்த இஷ்டமில்லை. ஆகவே துட்டைக் கொடுத்து திருப்பிவிட்டோம்.

உபாத்தியாயர்:—கோபாலா! நம் கிளாசில் எத்தனை 'பாய்ஸ்' இருக்கிறார்கள்.

கோபால்.—ஸார்! இருபது 'பாய்ஸ்' இருக்கிறார்கள்.

உபாத்தியாயர் :—அடே! மூன்று பெண்கள் இருப்பது தெரியவில்லையா?

கோபால்:—கமலாபாய், ரெத்னுபாய், ரமாமணிபாய் மூன்றுபேரும் 'பாய்ஸ்'தானே ஸார்!

***

டிக்கெட் பரிசோதகர்:—என்ன பாட்டி, தெற்கே மாயவரத்திற்கு டிக்கெட் வாங்கிக்கொண்டு வடக்கே பட்டினம் போகும் ரயிலில் ஏறிவிட்டீர்களே.

பாட்டி:—அப்பா, என் கண்ணே! தயவுசெய்து டிரைவரிடம் சொல்லி ரயிலைத் திருப்பி ஓட்டச்சொல்லு.

***





விருந்தாளி:—ஹாலில் இருக்கும் கடிகாரம் பார்ப்பதற்கு விசித்திரமாய் இருக்கிறது.

விருந்தளிப்பவன் :—ஆமாம்; அதை நாங்கள் 'விருந்தாளி' என்று அழைக்கிறோம்.

விருந்தாளி:—ஏன்?

விருந்தளிப்பவன் :—அது போகவே மாட்டேன்கிறது.

***

மனைவி:—'நாதா! நீங்கள் என்னைக் கலியாணம் கொண்டிருக்காவிடில் எந் நிலையிலிருப்பீர்?'

புருஷன்:—'இது தெரியாதா! வேறொருவளைக் கலியாணம் செய்து கொண்டிருப்பேன்?'

***

இலக்கண உபாத்தியாயர்:—மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்கள் யாவை?

கோபாலன்:—பன்னிரெண்டுயிரும், க, ச, த, ந, ப, ம, வ, ய, ஞ, ங, என்னும் இருபத்திரெண் டெழுத்துக்களும் முதலில் வரும் சார்.

பிரகஸ்பதி:—இல்லீங்க சார்! மொழிக்கு முதலில் "மொ" வரும் சார்.

ராமு (தன் தகப்பனுரைப் பார்த்து):—அப்பா! எனக்கு ஏரோப் ளேன் வாங்கித் தரேன்னியே. எப்போ அப்பா வாங்கித் தரே?

தகப்பனுர்:—ஏண்டா ராமு! டாக்டர் ரங்காச்சாரியார் வெச்சிண்டு இருந்தாரே அந்தமாதிரி நெஜ ஏரோப்ளேனு? இல்லாப்போனு நவராத் திரி கொலுவன்னிக்கு கோபாலய்ய ராத்திலே பாத்தியே அந்தமாதிரி வெளேயாட்டு ஏரோப்ளேனு?

ராமு:—ஏம்பா! நேத்திக்கு நீ எதிராத்து வேம்புகிட்டே "நானே லிருந்து எனக்குத் தினமும் 'மெயிலே உன் வேலேக்காரனிடம் கொடுத் தனுப்பு; அதுக்குக் கொடுக்க வேண்டிய சில்லரையே அடுத்த மாதம் மொதல்தேதி தரேன்" னியே. அது ஸ்டேஷனிலே இருக்கே அந்தமாதிரி நெஜ ரெயில் வண்டியா? இல்லாப்போனு அன்னிக்கு எக்ஸிபிஷனில் பாத் தோமே அந்தமாதிரி வெளேயாட்டு ரெயிலா?

***

தாய்;—மகனே! ஏன் இவ்வளவு கூச்சல் போட்டழுகிறுய்? உனக்கு என்ன நேர்ந்தது?

மகன்:—அம்மா! எ—எ—ன்—ன்—வாத்—தி—யார்—ர்—அம்மா— ஆங்—ஆங்—(தேம்பித் தேம்பி யழுதுகொண்டு) ஒரு—ஒரு—ஒரு—மாத மாக அதிக வியாதியா யிருந்தார். அப்பால் எனக்கு பேச நா எழவில் லேயே. (என்று அதிகமாக தேம்பி யழுதான்.)

தாய்:—ஏன் சாமி! உன் வாத்தியார் காலகதி அடைந்து விட்டாரா! ஆஹா! வெகு நல்ல மனிதராயிற்றே!

மகன்:—இல்லே அம்மா இல்லே. சவுக்கிய மடைந்து இன்று காலேயில் பள்ளிக் கூடத்துக்கு வந்து விட்டாரே—என்று சொல்லி மறுபடியும் அழு தான்.

***

வக்கீல்:—(வைக்கோல்காரனே) அடே ரூபாய்க்கு எத்தனே புரியடா.

வைக்கோற் காரன்:—ரூபாய்க்கு 62 புரிங்க. நல்ல வைக்கலுங்க வேண்டும்னா இரண்டுபுரி மாதிரிக்கு கொண்டு வரேங்க.

வக்கீல்:—அடேய்! என்னே நீ மாடுன்னு நினேச்சுண்டே.

***

குறும்பன்:—ஏண்டா இடும்பா? ஸ்திரீகளுக்கு ஏன் பொம்மனுட்டி என்று பெயர் வந்தது?

இடும்பன்:—இது தெரியாதா! அவர்கள் வருஷா வருஷம் புரட்டாசி மாசம் நவராத்திரி கொலுவின் பொழுது பொம்மையை நாட்டுவதால் (வைப்பதால்) தான் அவர்களுக்கு பொம்மைநாட்டி (பொம்மநாட்டி) என்று பெயர் வந்தது.

---

# ஆசிரியர் குறிப்புக்கள்

## கல்வி முறையில் மாறுதல் தேவை

சென்ற நூற்றைம்பது ஆண்டுகளுக்கு மேலாகப் பிரிட்டிஷ் ஆட்சி நடந்து வந்தும் நம் நாட்டில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களின் தொகை மிகக் குறைவாகவே இருக்கிறது. நூற்றுக்கு ஏழு அல்லது எட்டு பேருக்குத் தான் சாதாரணமாக எழுத்து வாசனை உண்டு. ஆனால் உண்மையில் நல்ல நாகரிகமும் முன்னேற்றமும் அடைந்துள்ள ஒவ்வொரு தேசத்திலும் குறைந்தது 80 சதவிகிதம் பேருக்காவது எழுதப் படிக்கத் தெரிந்திருக்க வேண்டும். மக்களில் பெரும்பாலோருக்கு எழுத்து வாசனை கூட இல்லையென்றால் அந்த தேசம் இதர துறைகளில் முன்னேறுவ தெப்படி? அதிலும் இந்தியர்களாகிய நாம் சுதந்தரக் கோட்டையை நாடி வெகு வேகமாகச் சென்று கொண்டிருக்கிறோம். அக் கோட்டையில் நுழையும் போதேனும் நம்மில் பலரும் கற்றிருந்தால் தானே அக் கோட்டையைச் சரிவரப் பிடித்து அதை ஒழுங்காக நிர்வகிக்க முடியும். ஆகவே புதிய அரசியல் முறைப்படி ஏற்பட்டுள்ள மாகாண சுய ஆட்சியில், அதிலும் காங்கிரஸ் மந்திரிகள் ஏழு மாகாணங்களில் அதிகாரம் பெற்றிருக்கையில் முதலில் கவனிக்க வேண்டிய விஷயம் இந்தக் கல்வி வாசனையைப் பெருக்கும் விஷயமே யாகும். மேலும் கல்வியைப் பரப்புவதாகச் சொல்லிக் கொண்டு இப்போதைய கல்வி முறையையே பின் பற்றுவதிலும் பயனில்லை. இன்றைய கல்வி முறையானது பிரிட்டிஷ் சர்க்காருக்குக் குமாஸ்தாக்களை உண்டாக்குவதற்காக ஏற்பட்டிருக்கிற தென்பது உண்மையே யாயினும், இம் முறையானது நமது தேசத்தின் நிலைமைக்கேற்ற தேசீயக் கல்வித் திட்டமாகாது. இப்போதைய கல்வி முறையால் படித்தும் வேலையில்லாதார் திண்டாட்டம் அதிகரிக்கின்றது. மக்களுக்கு வேறு கைத்தொழில்கள் ஒன்றும் தெரிவதில்லை. அன்றியும் படித்தவர், படிக்காதவர் என்னும் ஒரு நூதன ஜாதியை உற்பத்தி செய்து விடுகின்றது. ஆதலின் காங்கிரஸ் சர்க்கார் இப்போது தற்கால கல்வி முறையை மாற்றித் தேசீய முறையில் அதை அமைத்து அம் முறையின் மூலம் எழுதப் படிக்கத் தெரிந்தவர் தொகை அதிகமாகும்படி செய்ய வேண்டும். அறியாமையைப் போக்கி அறிவுச் சுடர் பாமர மக்களிடையே பிரகாசிக்கும்படி செய்தால் தான் நாம் அரசியலிலும் மற்றத் துறைகளிலும் விரைவில் முன்னேற்ற மடைதல் சாத்தியமாகும்.

***

## வார்தா கல்வி திட்டப் பரிசீலனை

கல்வி அறிவை நாட்டில் பரவச் செய்து மக்களிடையே வாழ்க்கைக்கு அவசியமான அறிவைப் பரப்ப வேண்டு மென்பதற்காக மகாத்மா காந்தியடிகள் சரியான திட்டம் போட்டு வருகின்றார். சமீபத்தில் அவர் வார்தாவில் ஒரு மகாநாட்டைக் கூட்டினார். எல்லா காங்கிரஸ் மாகாணங்களிலுமுள்ள கல்வி இலாகாமந்திரிகளும் மற்றும் பல கல்வி ஸ்தாபனங்களைச் சேர்ந்த அறிஞர்களும் கூடி ஆலோசித்தார்கள். கடைசியாக அவர்களனைவரும் சேர்ந்து ஒரு முடிவுக்கு வந்தனர். அதாவது ஆரம்பக் கல்வியை இலவசமாகவும் கட்டாயமாகவும் முதல் ஏழு வருஷங்களுக்கு நாட்டு மக்க

ளனைவருக்கும் கொடுப்பதென்றும், கல்வி முழுதும் தாய் பாஷையிலேயே போதிப்பதென்றும், சாதாரண எண், எழுத்து இவற்றுடன் ஆங்காங்கு முக்கியமாகவுள்ள கைத்தொழில்களையும் போதிப்பதென்றும், மாணவர்கள் செய்யும் சாமான்களை விற்று அதன் மூலம் கிடைக்கும் பணத்தைக் கொண்டே இந்த ஆரம்பக் கல்விக்கான செலவை சரிக் கட்டிக கொள்வதென்றும் தீர்மானித்தார்கள். அதற்கான திட்டங்களை வகுக்கவும் ஒரு கமிட்டியை நியமித்திருக்கிறார்கள். இந்த வார்தா திட்டத்தைப் பற்றித் தான் இப்போது கல்வி உலகில் எங்கும் பேச்சாக இருக்கிறது. மகாத்மாவும் மற்ற அறிஞர்களும் சேர்ந்து இத் திட்டத்தை வகுத்திருப்பதால் இது தேசத்திற்கு நன்மையைச் செய்யக் கூடியதாகவே இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் பலரும் அதைப்பற்றிப் பரிசீலனை செய்து தங்கள் அபிப்பிராயங்களைத் தெரிவிப்பது வரவேற்கத் தக்கதே. சில கல்விமான்கள் தங்கள் கருத்துக்களைத் தெரிவித்தும் வருகிறார்கள். ஆரம்பக் கல்வியை ஏழு வருஷ காலத்துக்கு இலவசமாகவும் கட்டாயமாகவும் தாய் பாஷையிலேயே அளிக்க வேண்டும் என்பதையும், கைத்தொழில்களையும் கற்பிக்க வேண்டுமென்பதையும் எவரும் ஆக்ஷேபிக்கவில்லை. தேசீய முறையில் பாடங்களை அமைத்து கட்டாயமாக ஆரம்பக் கல்வியைப் போதிக்க வேண்டியது அவசியம். கைத்தொழில்களும் கற்பிக்கப் படவேண்டியதுதான். ஆனால் ஆரம்பக் கல்வி தன் செலவைத்தானே சரிக் கட்டிக் கொள்ளும்படி மாணவர்களிடமிருந்து வேலை வாங்க வேண்டும் என்னும் கொள்கையைத் தான் பலரும் ஆதரிக்கவில்லை. இதனால் கல்வியே ஒரு வியாபார முறையாகப் போய்விடுமே என்பதுதான் அவர்களுடைய கவலை. ஆரம்பக் கல்வியின் செலவை அரசாங்கமே ஏற்றுக் கொள்ளவேண்டும். ஆனால் இப்போதைய காங்கிரஸ் சர்க்காரோ, மதுவை விலக்கியும் வரிகளைக் குறைத்தும் வருவாயைக் குறைத்துக் கொள்வதால் கல்விக்காக அதிகம் செலவிட முடியாது என்பதும் சிந்திக்கத்தக்க விஷயமே. ஆகவே வருமானத்தை அவர்கள் செல்வர்களுக்கு அதிக வரி விதித்தல், நிர்வாகச் செலவைக் குறைத்தல் முதலியவற்றால் சரிப்படுத்திக் கொண்டேனும் ஆரம்பக் கல்வியை இலவசமாகவே கல்ல முறையில் அளித்தல் சர்க்காரின் கடமையாகும்.



## சென்னை நகரசபையிலும் ஊழல்

சென்னை நகரசபையைப் பற்றிச் சில நாட்களாகப் பத்திரிகைகளில் அடிபட்டு வருவதை வாசகர்கள் அறிந்திருப்பார்கள். சமீபத்தில் அச்சபை கல்வி யதிகாரி யொருவரை நியமிக்கும் விஷயத்தில் நடந்து கொண்ட விதத்தால் தன்னை இன்னும் அதிகமாகப் பிரபலப்படுத்திக் கொண்டது. காங்கிரஸ்காரர்கள் பெரும்பான்மையாக இருக்கும் இந் நகர சபையிலும் லஞ்சப்பேய் தாண்டவமாடி வருகிறதென்பதைக் கேட்க வாசகர்கள் ஆச்சரியப்படாமலிருக்க முடியாது. காங்கிரஸ்காரர்கள் என்று கருதப்படுபவர்களில் ஒரு சிலரே நகர சபையில் நடைபெறும் ஊழல்களுக்கும் மூலகாரணர்களாய் இருக்கிறார்கள் என்பதை அறியும்போது நாம் வருந்தமாலிருக்க முடியவில்லை. கல்வி யதிகாரியைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் காங்கிரஸ் கட்சியிலுள்ள ஒரு சிலர் நேர்மையாக நடந்து கொள்ளாததுடன், காங்கிரஸ் கொள்கைக்கே முரண்பாடாகவும் செயலாற்றியது கண்

டிக்கத் தக்கதாகும். இவ்வித ஊழல்களை யெல்லாம் கண்டு சகியாமலே நகரசபையில் டிப்டி மேயராக விருந்துவந்த ஸ்ரீ. எம். பக்தவத்சல முதலியார் தமது பதவியை உடனே ராஜிநாமா செய்து விட்டார். இவ் வூழல்களுக்கெல்லாம் காரணகர்த்தாக்களாய் இருப்பவர்கள் நாலைந்து நபர்களே எனத் தெரிகிறது. தங்களது சுயநலங் காரணமாக, தேச மகாசபையாகிய காங்கிரஸுக்குக் களங்கத்தை யுண்டு பண்ணிய அந் நபர்கள்மீது உடனே ஒழுங்கு நடவடிக்கை யெடுத்துக் கொள்ளவேண்டிய தவசியம். இவ்வகையில், தமிழ்நாடு காங்கிரஸ்கமிட்டித்தலைவர் ஸ்ரீ முத்துரங்க முதலியார் ஒரு விசாரணைக்கமிட்டி யேற்படுத்தி விசாரணை செய்து அதில் குற்றவாளிக ளெனக் கருதப்பட்டவர்கள்மீது நடவடிக்கை யெடுத்துக் கொள்ள முன் வந்திருப்பது பாராட்டத் தக்கதாகும். மேற்படி ஊழலைப் பத்திரிகைகளிலும், கூட்டங்களிலும், வெளிப்படுத்தி வருவதும், தமிழ்நாடு காங்கிரஸ்கமிட்டி நடவடிக்கை யெடுத்துக் கொள்ளுவதும் அவசரப்பட்டுச் செய்வதாகவும், அவ்விதஞ் செய்து பகிரங்கப் படுத்தாது இரகசியமாகவே வைத்துவர வேண்டுமென்றும் ஒரு சிலர் கூறி வந்தது விந்தையாக இருக்கிறது. அவ் வபிப்பிராயத்தை ஆதரிக்கும் முறையில் சென்னை ஜில்லா காங்கிரஸ்கமிட்டி தீர்மானஞ் செய்திருப்பதும் நமக்கு ஆச்சரியத்தைத் தருகிறது. நகரசபையில் சில காங்கிரஸ்காரர்கள் செய்து வரும் ஊழலை என் வெளிப்படுத்தி கண்டிக்கக் கூடாது என்று நமக்குத் தெரியவில்லை.

***

## ஸ்தல ஸ்தாபனங்களைக் கைப்பற்றியதன் நோக்கம்

காங்கிரஸ்காரர்கள் எதற்காக முனிசிபாலிடிகளையும், ஜில்லா போர்டு முதலியவைகளையும் கைப்பற்றினார்கள்? மாகாண சட்டசபை, இந்தியா சட்டசபைகளில் சர்க்காரின் தவறான கொள்கைகளை எடுத்துப் போராடுவதற்காக அங்கம் வகித்து வருகிறார்களே; அதுபோல இந்த ஸ்தாபனங்களிலும் செய்யவா? அல்லவே அல்ல. முனிசிபாலிடிகளும், ஜில்லா போர்டுகளும் பொதுஜனங்களுக்கு நன்மை செய்வதற்காக ஜனநாயக முறையில் ஏற்பட்ட ஸ்தாபனங்களாகும். அவைகளில் சுயநலமிகள் பலர் புகுந்துகொண்டு, கண்டிராக்டு ராஜ்யத்தை நடத்தி லஞ்சம் முதலியன வாங்கி ஊழல்களைச் செய்து பாழ்படுத்தி விட்டனர். இதனால், பொதுமக்களுக்கு நன்மை யேற்படுவதற்குப் பதிலாக தீமையே அதிகமாக உண்டாயிற்று. ஆகவே, அந்நிலைமையை நீக்கிப் பொதுமக்களுக்கு நன்மை செய்யவே, காங்கிரஸ் மகாசபை, காங்கிரஸ்காரர்களை முனிசிபாலிடி, ஜில்லா போர்டுகளிலும் ஈடுபடச் செய்தது. அவ்விதமிருக்க, பொதுநல சேவைக்கென அனுப்பப்பட்ட காங்கிரஸ்காரர்களில் சிலர் சுயநல மேலீட்டால் லஞ்சம் வாங்குதல் முதலிய ஊழல்களைச் செய்து காங்கிரஸ் மகாசபைக்கு அபகீர்த்தியை யுண்டு பண்ணுவார்களானால், அவர்கள் செயலைக் கண்டிக்காமலோ, தக்கபடி செய்யப்படும் விசாரணையில் குற்றவாளிகளாகக் கருதப்படுபவர்கள் மீது ஒழுங்கு நடவடிக்கை யெடுத்துக் கொள்ளாமலோ எப்படி இருக்க முடியும்? இதற்கு முன் ஸ்தலஸ்தாபனங்களிலும் சட்டசபைகளிலும் இருந்து வந்தவர்கள் பலவிதமான ஊழல்களைச் செய்து வந்தார்கள் என்ற காரணத்திற்காக அவர்களைப் பொது மக்களும் நாமும் தூற்றி வந்தோம்? வெறுத்தோம்? அதே காரியங்களை காங்கிரஸ்காரர்கள்

செய்தால் மட்டும் பொது மக்கள் எப்படி விரும்புவார்கள்? நாம்தான் எப்படி அநுமதிக்க முடியும்? பிறகட்சியார் செய்தால் மட்டும் குற்றம்? காங்கிரஸ்காரர் செய்தால் குற்றமில்லையா? குற்றஞ் செய்தவர்கள் யாராயிருப்பினும், அவர்களைக் கண்டிப்பதுதான் முறை? அவர்கள் மீது தக்க நடவடிக்கை யெடுத்து, மேலும் அவ்வித குற்றங்களை அவர்கள் செய்யாதவாறு தடுப்பதுதான் நியாயமாகும். இவ்விதஞ் செய்வது மற்றவர்களும் தவறான காரியங்களைச் செய்யாது தடுப்பதற்கு ஒரு மார்க்கமாகும். ஆகவே தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டியார் சென்னை நகரசபை ஊழல்களைப் பாரபட்சமற்ற முறையில் விசாரணை செய்து, அதற்குக் காரணஸ்தர்களாயிருந்தவர்கள்மீது தயவு தாட்சண்யமின்றி ஒழுங்கு நடவடிக்கை யெடுத்து பொதுநல வாழ்க்கையில் பரிசுத்தந்தை நிலைநாட்ட முன்வந்ததைப் போற்றுகிறோம்.



## இன்ஷியூரன்ஸ் முறையும் ஏழைகளும்

மரணபண்டு என்று சாதாரண மக்களால் சொல்லப்படும் இன்ஷியூரன்சு முறையால் மக்களுக்கு நல்ல பலன் உண்டு. ஒரு யானை இருந்தாலும் ஆயிரம் பொன்; இறந்தாலும் ஆயிரம் பொன் என்பதுபோலத் தமது ஜீவியத்தை இன்ஷியூர் செய்தவர்கள் இருந்தாலும், இறந்தாலும் இன்ஷியூர் தொகையைப் பெறுவார்கள். ஒருவரது மரணத்தால் அக்குடும்பத்துக்கு ஏற்படும் துக்கத்தையும் பொருளாதாரக் கஷ்டத்தையும் நிவர்த்தி செய்யக் கூடியது இந்த இன்ஷியூரன்ஸ் திட்டமே. இம்முறையானது பணக்காரர்களைவிட ஏழைகளுக்குத்தான் மிக அவசியமானது. ஆனால் இப்போது உள்ள இன்ஷியூரன்ஸ் முறைகளையும், இதர நிர்ப்பந்தங்களையும், விதிகளையும் பார்க்கும்போது சாதாரணமாக ஏழைகள் இந்த திட்டத்தால் தக்க பலன் அனுபவிக்க முடியாமல் இருக்கின்றனர். இதனால் தேசத்தில் உள்ள பெரும்பான்மையோரான பாமர மக்கள் இந்த வசதியைப் பயன் படுத்திக் கொள்ள இன்னமும் துணிந்து முன்வரவில்லை. ஆகவே இன்ஷியூரன்ஸ் இயக்கம் அபிவிருத்தியடைய வேண்டுமென்றும், அதனால் மக்கள் நன்மை பெற வேண்டுமென்றும் விரும்புவோர் அனைவரும் எளிய முறைகளையும் சௌக்கியமான விதிகளையும் ஏற்படுத்துவதுடன் அவற்றைத் தாய்ப் பாஷை பிரசுரங்கள் மூலம் பிரசாரம் செய்யவேண்டும். இவ்விஷயத்தில் இந்தியா சட்டசபை மெம்பர் ஸ்ரீ. சத்தியமூர்த்தி கூறியுள்ள யோசனையை இன்ஷியூரன்ஸ் கம்பெனிகள் கவனித்தல் நலம். இந்தியா சட்டசபையில் நிறைவேறியுள்ள இன்ஷியூரன்ஸ் மசோதாவைப்பற்றி அவர் சமீபத்தில் சென்னையில் ஓரியண்டல் இன்ஷியூரன்ஸ் கம்பெனி கட்டடத்தில் பேசியபோது தெரிவித்த அபிப்பிராயம் வரவேற்கத் தக்கது. இக் கம்பெனிகாரர்கள் பலரும் கூடி யோசித்து ஏழைகளிடமிருந்து மாதம் ஒரு ரூபாய் வீதம் வாங்க அவர்களுக்கு 500 ரூபாயைப் பாலிசியாகக் கொடுக்கத்தக்க சுலபமான முறையைக் கண்டு பிடிக்கவேண்டும். மேலும் தாங்கள் செலுத்தும் பணம் எவ்வகையிலும் விரயமாகாமல் தங்களுக்குக் கிடைக்கும் என்னும் நம்பிக்கை அவர்களுக்கு ஏற்படும்படியான விதிகளை நிர்ணயிக்கவேண்டும். இன்ஷியூரன்ஸ் சட்டத்தை எல்லா பாஷைகளிலும் மொழி பெயர்த்து வெளியிட்டு மகாஜனங்களுக்கு இலவசமாக வினியோகிக்க வேண்டும். பாலிசி எக்காரணத்தைக் கொண்டும் பறிமுதல் ஆகக்கூடாது. 'சர்ரெண்

டர் வால்யூ' என்று சொல்லப்படும் தொகை மிகக் குறைவாக இருக்கக் கூடாது. மரணத்துக்குப் பின் வீண் சிக்கல்களைக் கிளப்பாமல் எளிதில் பணத்தைக் கொடுக்கவேண்டும். இத்தகைய முறைகள் ஏற்பட்டால் தான் ஏழைகள் இன்ஷியூரன்ஸ் இயக்கத்தால் நன்மையடைய முடியும்; அந்த இயக்கமும் நாட்டில் வலுக்கும் இன்ஷியூரன்ஸ் கம்பெனிக்காரர்களும், ஏஜெண்டுகளும் ஸ்ரீ சத்தியமூர்த்தியின் யோசனையை அமுலில் கொண்டுவர முயற்சிப்பார்களென்று நம்புகிறோம். முடிவாக இன்ஷியூரன்ஸ் திட்டத்தையே அரசாங்கம் ஏற்று நடத்தினாலன்றி அனைவரும் அதனால் பயன்பெற முடியாதென்பது உலகறிந்த விஷயம்.



## சுகாதார இலாகா மந்திரியின் உபதேசம்

நமது சுகாதார இலாகா மந்திரி கனம். ராஜன் எப்போதுமே துணிச்சல் உடையவர். தாம் சரி என்று நினைப்பதை எப்படிப்பட்ட சந்தர்ப்பத்திலும் தைரியமாக எடுத்துக் கூறுவதுடன் அவசியம் நேரும்போது காரியத்திலும் சாதித்து விடுவார். இந்த இருபதாம் நூற்றாண்டில், மேல்நாட்டு நாகரிகம் ஓங்கியிருக்கும் இச்சமயத்தில், சென்னை சர்வகலாசாலை மாணவர்களிடையே அவர் கேழ்வரகுக் கஞ்சியைப்பற்றியும் மோரின் மகிமையைப் பற்றியும் பிரசாரம் செய்யத் துணிகிறாரென்றால் அவரது மனோ உறுதியைப் பாராட்டாமல் இருக்க முடியுமா? பிரதமமந்திரி கனம். ராஜாஜி தினசரி விடியற் காலையில் துணி தோய்ப்பதை வீண் வேலையென்று கருதும் மாணவர்கள், டாக்டர். ராஜனின் இப்பிரசங்கத்தைக் கண்டதும் அவரை பதினேழாம் நூற்றாண்டுப் பேர்வழி என்றுதான் எண்ணியிருக்க வேண்டும். சுகாதார இலாகாவைத் தமது நிர்வாகத்தில் வைத்துக்கொண்டிருக்கும் அவர் மக்களுக்குச் சுகாதாரத்தைப் போதித்து அவர்கள் வியாதிகளால் அவதியுறாதபடி எச்சரிக்கையுடன் இருக்கும்படி செய்ய வேண்டியது அவருடைய கடமையாகும். ஆதலின் அவர் மாணவர்களிடையே இப்போது சகஜமாகப் பரவிக்கிடக்கும் பல தீய பழக்கங்களைப் பற்றியும் பிரஸ்தாபித்து அவர்கள் நற்குண நற்சீலர்களாக வாழவேண்டும் என்று உபதேசித்தார். புகையிலை உபயோகிப்பதன் தீமையை அவர் நன்கு விளக்கினார். மாணவர்களும் மற்றவர்களும் புகையிலையாகவும், சுருட்டாகவும், பொடியாகவும் அப்பாஷாணத்தை உட்கொள்கிறார்கள். அதனால் ஏற்படும் தீமைகளை அனைவரும் உணரவேண்டுவது அவசியம். நம் நாட்டு மாணவர்கள் பலவிதத்திலும் மேனாட்டு மாணவர்களைவிடக் கேவலமான நிலைமையில் இருக்கிறார்களென்றும், இதற்குக் காரணம் சுகாதார விஷயத்தில் சரியான சிரத்தை எடுத்துக் கொள்ளாததே காரணமென்றும் கனம் மந்திரி கூறுவது கவனிக்கத்தக்கது. தற்காலீக உற்சாகத்தைக் கொடுக்கும் மேனாட்டு ஆகாரவகைகள் பானங்கள் ஆகியவை நமக்குக் கூடாதென்றும், கேழ்வரகுக் கஞ்சி, மோர் ஆகியவையே உபயோகிக்க வேண்டுமென்றும் கூறுகிறார். இவை சாப்பிடுவது ஏழைகளின் வேலை என்று பலர் தவறாகக் கருதுகின்றனர். நாகரிகம் என்னும் பெயரால் நம் மாணவர்களும் இதரர்களும் பல துரப்பியாசங்களையும், தகாத முறையில் அனுஷ்டிக்கும் விஷயத்தில் டாக்டர் ராஜன் தக்க எச்சரிக்கை செய்துள்ளார். நம் நாட்டு உணவுகளும், சுகாதார முறைகளும் சத்துள்ளவை என்பதை நாம் அறியவேண்டும்.

## கிராமப் பஞ்சாயத்துகளுக்கு உயிர்

பண்டைக்காலத்தில் நமது நாட்டில் கிராமப் பஞ்சாயத்துகள் மிக அதிகாரத்துடனும் செல்வாக்குடனும் விளங்கியதால் தேசத்தின் நிர்வாகம் செலவு அதிகமில்லாமல் அந்தந்த கிராமத்தின் வருமானத்தில் பெரும்பாகம் அங்கே யிருந்ததால் கிராமவாசிகள் சுபீட்சத்துடன் இருந்தனர். கிராமப் பஞ்சாயத்து சபைகளுக்கே சகல அதிகாரங்களும் இருந்தன. அந்தக் காலப் பஞ்சாயத்து முறைகளின் சிறப்பை ஸ்ரீமதி. அன்னிபெசன்ட் அம்மையார் முதலிய பல அறிஞர்களும் பாராட்டி இருக்கிறார்கள். இப்போதும் மிகப் புகழுடன் கூறப்படும் ரஷ்யாவில் சோவியத் ஆட்சி நடைபெறுகிறதல்லவா! ஒவ்வொரு சோவியத்தும் ஒவ்வொரு கிராமப் பஞ்சாயத்து போலத்தான் இருக்கிறது. உண்மையில் சமதர்ம ஆட்சிக்கு அஸ்திவாரம் கிராமப் பஞ்சாயத்துகளுக்கு உயிர் அளிப்பதேயாகும். பிரிட்டிஷ் அரசாங்கம் நிலைத்த பிறகு கிராமப் பஞ்சாயத்துகளுக்கு மதிப்பு இல்லாமற் போனதால் அவை சீரழிந்துவிட்டன. கிராமங்கள் வரிப்பணத்தின் மூலம் சர்க்கார் நிர்வாகத்திற்கு வேண்டிய வருமானத்தை அளிக்கின்றனவே யொழிய அவை ஒன்றும் திரும்பப் பெறுவதில்லை. கிராமங்களே தேசத்தின் முதுகெலும்பாக இருந்தும் அவற்றைக் கேட்பார் யாருமில்லை. தேசத்தின் சுபீட்சத்திற்கும் சுகவாழ்வுக்கும் காரணர்களான கிராமவாசிகள் இன்று தாங்க முடியாத வரிப்பளுவாலும், கோரமான வறுமையினாலும் அவஸ்தைப் படுகிறார்கள். கிராமவாசிகள் இவ்வளவு மகத்தான சங்கடத்தில் இருக்கும் போது தேசம் எப்படி முன்னேற்றமடைய முடியும்? சர்க்காரின் நிர்வாகச் செலவு அதிகமாக இருக்கின்றது. சர்க்கார் வருமானத்தில் பெரும்பாகம் நிர்வாகத்துக்கே செலவாகி விடுவதால் தேசோத்தாரண வேலைகள், பொது ஜன வசதிகள் இவைகளுக்காகச் செலவிடப் போதுமான பணம் இருப்பதில்லை. இதனால் ஏதோ அரசாங்கம் பெருமையாகவும், ஆடம்பரமாகவும் நடக்கிறதே யொழிய தேசம் சரியான பலனை அடையாமல் நாளுக்கு நாள் வறுமையிலும் மூழ்கிக் கொண்டிருக்கிறது. ஆதலினால்தான் பக்தர்கள் ஜனநாயக ஆட்சி ஏற்படவேண்டும் என்று கூறுகிறார்கள். சரியான ஜனநாயக ஆட்சிக்கு அஸ்திவாரம் கிராமப் பஞ்சாயத்து சபைகளை உயிர்ப்பிப்பதேயாகும். இதனால் நிர்வாகச்செலவும் குறையும்; பொதுஜனங்கள் ஆட்சியில் பங்கெடுத்துக் கொள்வது அதிகமாகும். காங்கிரஸ் மந்திரிகள் அதிகாரத்தில் வந்திருப்பதால் இச்சமயத்தில் கிராமப் பஞ்சாயத்து சபைகளை நல்ல முறையில் அமைத்துவிட வேண்டியது அவசியமும் அவசரமுமான வேலையாகும். கிராமத்தின் வருமானத்தில் பெரும்பாகம் அங்கேயே தங்கி அவர்களுக்கே உபயோகப்பட வேண்டும். கிராமத் தொழில்களும் விவசாயமும் அபிவிருத்தி யடையவேண்டும். காங்கிரஸ் மந்திரிகளும் இதை உணர்ந்திருப்பதாகவே தெரிகிறது. நமது மாகாண ரெவினியூ மந்திரி கனம். பிரகாசம் அவர்கள் விருதுநகரில் பேசுகையில் கிராமப் பஞ்சாயத்துகளுக்கு உயிர் அளிப்பதுபற்றிப் பேசி யிருக்கிறார். இதை நாம் மனமார வரவேற்கிறோம். பண்டை முறையில் நல்ல பஞ்சாயத்துகளை அமைத்தல் நாட்டு முன்னேற்றத்திற்கு மிக அவசியமாகும்.

---

தொடர் கதை.

# மாயா விரோதி

(ஸி. எஸ். இராமன், எம். ஏ., எல். டி.)



(319-வது பக்கத் தொடர்ச்சி.)

அம்மாளிகையின் ஒரு பெரிய அறையில் செங்கோட்டை ஜெமீந்தாரினி இந்திரா தனது சிறிய பையனுடன் விளையாடிக்கொண்டிருந்தாள். அம் மோகனவல்லியின் எழில் வெள்ளம் கரைபுரண்டோடுவது போல் அவள் குழந்தையுடன் பேசும் பொழுதெல்லாம் அழகோடு பிரகாசித்துக் கொண்டிருந்தது. அந்த மின்னற் கொடியாளுடைய முகம் சௌந்தரியமும் புத்தி நுட்பத்தையும் தோற்றுவித்துக் கொண்டிருந்தது. முப்பத்து நான்கு ஆண்டுகள் ஆகியும் அம்மாது அப்பொழுது ரதிதேவி போல் தோற்றினாள். அவளுடைய நீண்ட கருமையான கூந்தல் மிகவும் சிறப்பாக வாரி வைக்கப்பட்டு, பிரகாசித்துக் கொண்டிருந்தது. அவள் போட்டுக்கொண்டிருந்த பின்னலில் சில வாசனை தரும் புஷ்பங்கள் அழகு செய்துகொண்டிருந்தன. பரந்த நெற்றியும் கெம்பீரமான புருவங்களும் பார்ப்போர் உள்ளத்தைக் கவர்வனவாக இருந்தன. கண்கள் அவளுடைய தயாள குணத்தையும் அறிவின் விசாலத்தையும் தோற்றுவிக்கும் கண்ணாடி போல் பிரகாசமாய் இருந்தன. அவளுடைய நீண்ட நாசி அம்மாதினைக் கண்ணுறும் காமுகர்கட்கும் ஏனையோர்க்கும் ஒருவகையான இன்ப மகிழ்ச்சியைக் கொடுத்தது. அவளுடைய சிவந்த அதரங்களும் நல்ல முத்துப் போன்ற பற்களும் சிறந்து விளங்கின. அம் மகா லட்சுமியின் பற்களைக் கண்டோர் தமக்கும் அத்தகைய தந்த வரிசைகள் இல்லாமற் போயினவே என்று ஏக்கங் கொள்ளுவர். சுருங்கச் சொல்லில் அவ்வடிவழகியின் சுந்தரவதனம் கம்பீரமாகவும் சோபையோடும் இருந்தது. அவள் தனது இரண்டு காதுகளிலும் வைரக் கம்மல்கள் அணிந்திருந்தாள். சூரிய ஒளியில் அவை பல வருணங்களை வாரியிறைத்தவாறு டால் வீசிக் கொண்டிருந்தன.

அந்த ஸ்திரீகள் ரத்தினம் கழுத்தில் ஒரு சிறிய பொற் சங்கிலியை மட்டும் அணிந்திருந்தாள். தற்காலத்திய "ஜாகெட்"டையும் பம்பாய் சேலையையும் தரித்திருந்தாள்.

அத்தகைய சுந்தரவதியின் எழில் மிக்க வதனத்தில் கொஞ்சம் விசனம் குடிகொண்டிருப்பதாகத் தோன்றிற்று. காரணம் என்ன? கலியாணம் ஆன நாள்முதல் இந்திரா தனது புருஷனுடைய நடத்தையை மனமார வெறுத்து வந்தாள். ஜெமீந்தார் உள்ளன்போடு இந்திராவை நேசிக்கவில்லை. அவளுடைய பணத்தின் பொருட்டு அவர் அவளைக் கலியாணம் செய்துகொண்டிருந்தார். அதை அந்தப் பேரழகி அறிந்திருந்தாள். விசனம் அடைந்தாள்.

# ஆசிரியர் குறிப்புக்கள்

## அருணோதயம் சூர்யோதயமாகுக!

சென்னை காங்கிரஸ் சர்க்கார் செய்துள்ள காரியங்களில் தலை சிறந்தது சேலத்தில் அனுஷ்டிக்கும் மதுவிலக்குத் திட்டமேயாகும். குடிப் பழக்கம் நீண்ட காலமாக மக்களிடையே ஊன்றிப் போயிருப்பதால் அந்தத் திட்டத்தை வெற்றிபெற நிறைவேற்றுவது மிகக் கஷ்டமென்று பலர் கருதியிருந்தனர். இன்னமும் அதே எண்ணத்துடன் சிலரேனும் இருந்துவருகின்றனர். ஆனால் சேலம் சம்பந்தப்பட்ட வரையில் மதுவிலக்குத்திட்டம் அமலுக்கு வந்தபின் அது வெற்றிகரமாகவே நடைபெற்று வருகிறதென்றுதான் கூறவேண்டும். திருட்டுச் சாக்குகள் காய்ச்சுதல், திருட்டுத்தனமாக மரத்தைக் கள்ளுக்கு விடுதல் முதலியன அபரிமிதமாக நடக்குமென்று சிலர் நினைத்தது வெறும் கனவாய்விட்டது. ஏதோ உபாயமாகச் சிற்சில குற்றங்கள் நடைபெற்றாலும் பொதுவாக ஜில்லா பூராவின் நிலைமையையும் கவனித்தால் மதுவிலக்கு இயக்கம் வெற்றி யடைந்துகொண்டே வருகிறது என்றுதான் கூறவேண்டும். இதனால் எவ்வளவோ ஏழைகள் பலவித நன்மைகளை யடைந்திருக்கிறார்கள். ஏழைக் குடும்பங்கள் சுபீட்சமாகவும் சண்டை சச்சரவின்றியும் இன்பம் அனுபவிக்கின்றன. சமீபத்தில் சேலம் ஜில்லாவில் சுற்றுப் பிரயாணம் செய்துவிட்டுத் திரும்பிய பார்லிமெண்டரி காரியதரிசி ஸ்ரீ. பாபி நீடு, 'முன்பு குடியில் மூழ்கிக்கிடந்து இப்பால் அதை விட்ட பலரை நான் சந்தித்து அவர்களது நிலைமையைப்பற்றி விசாரித்தேன். கூலிகள், பெயர்பெற்ற குடிக்காரர்கள் மனைவியர், சில்லரைக் கடைக்காரர்கள் ஆகியோரை நேரில் சந்திந்துப் பேசினேன். இதிலிருந்து மதுவிலக்கு மிகுந்த வெற்றிகரமாக நடந்து வருகிற தென்பதே எனது அபிப்பிராயம்' என்று கூறி யிருப்பது கவனிக்கத்தக்கது. இவ்வளவு நல்ல நிலைமை அங்கு ஏற்பட்டுக் கொண்டிருந்தாலும் அந்த ஜில்லா வாசியும், நமது மாகாண சர்க்காரின் பிரதம மந்திரியும், மதுவிலக்கு இயக்கத்தில் அளவிலா ஆர்வமும் அனுபவமுங் கொண்டவருமான கனம். ராஜாஜி மட்டும் பூரண திருப்தி யடையவில்லை யென்று பிரசார இலாகா மந்திரி ஒரு அறிக்கையின் மூலம் தெரிவித்துள்ளார். இப்போதுள்ள நிலைமையை காங்கிரஸ் சர்க்கார் அருணோதயமாகவே கொள்கின்றனர். இந்த அருணோதயம் விரைவில் சூரியோதயமாக மாறி அதிக ஒளி எங்கும் வீசவேண்டும் என்பதே அவர்கள் ஆவல். இதற்குப் பொது ஜனங்களும் சர்க்காருடன் ஒத்துழைக்க வேண்டியது அவசியம். சேலம் ஜில்லா இன்று நன்மை அடைந்து வருவதுபோலவே விரைவில் இம்மாகாணமும் பிறகு இந்தியா பூராவுமே மது அரக்கன் கொடுமையினின்றும் விடுபட்டு இன்பமாகவும் பரிசுத்தமாகவும் வாழக்கூடிய நிலைமை ஏற்படவேண்டும். குடியை விட்டவர்கள் தங்கள் பணத்தை சேவிங்ஸ் பாங்கில் போட்டு வைத்தும், அதைக்கொண்டு சிறு தொழில்களை ஆரம்பித்தும் தாங்களும் தேசமும் முன்னேற்ற மடையும்படி செய்யவேண்டும். எல்லாரும் தங்கள் தங்கள் பொறுப்பை உணர்ந்து வேலை செய்தால் இன்று அருணோதய நிலையில் இருக்கும் மதுவிலக்கு இயக்கம் விரைவில் சூரியோதய நிலையைப் பெற்று இன்ப ஒளியை எங்கும் வீசும் என்பது நிச்சயம்.

---

## உலக அமைதிக்கு மார்க்கம்

உலகம் போற்றும் உத்தமரான மகாத்மா காந்தியடிகள் அரசியல் உலகில் இருந்துகொண்டு சேவை செய்துவருவதன் காரணமே உலகில் உள்ள மிருகபலத்தையும் பலாத்கார உணர்ச்சியையும் ஒழித்து எங்கும் சாத்வீகமும் சமத்துவமும் அன்பும் நிலவும்படி செய்வதற்கே யாகும். மகாத்மா தமது சத்தியாக்கிரக இயக்கத்தின் மூலம் மக்களிடையே சத்தியம், சாத்வீகம், அன்பு ஆகியவற்றை நிலைநிறுத்தி வருகிறார். ஆன்ம உணர்ச்சியும் ஆத்மீக பலமும் நாளுக்குநாள் உலகில் மறைந்து எங்கும் மிருகபலம் தோன்றுவதற்கு பேராசை, அடக்கியாளும் சுபாவம், ஏகாதிபத்ய உணர்ச்சி இவைகள்தான் காரணம். சமீபத்தில் ரீடிங் சர்வ கலாசாலையில் பேசியபோது சர். சாமுஹேல் ஹோர் எங்கும் மிருகபலமே ஓங்கி யிருக்கிறதென்றும், பல நாடுகளில் சுதந்தரமும் நீதியும் குலைக்கப்பட்டு விட்டனவென்றும் சகிப்புத் தன்மையின்றிச் சீறுவதே ஒரு உன்னத குணமாக மதிக்கப்படுகிறதென்றும் கூறி வருத்தப்பட்டார். வாஸ்தவம்தான்; உலகத்தின் நிலைமை அப்படித்தான் இருக்கிறது. ஆனால் சர். சாமுவேல் ஹோரைப்போன்ற பொறுப்பு வாய்ந்த ஐரோப்பியர் வாயினால்மட்டும் இவ்வாறு கூறிக்கொண்டிருப்பதில் பயனில்லை. மிருகபலம் ஓங்கி நிற்பதற்கு என்ன மூல காரணமோ அதை ஒழிக்க முற்படவேண்டும். ஏகாதிபத்ய ஆசையும், அடக்கியாளும் சுபாவமும் ஒழியவேண்டும். பல நாடுகளில் நீதியும் சுதந்தரமும் இல்லை என்கிறார். உலகில் பண்டைச் சிறப்பு வாய்ந்த இந்தியா எந்த நிலையில் இருக்கிறது? உலகத்துக்கு ஆன்மார்த்த தத்துவத்தை போதிக்கக் கூடிய சக்தி வாய்ந்தது இந்தியா ஒன்றுதான். ஆகவே இந்தியா விடுதலையடைந்து சுதந்தரம்பெற்று உலக மதிப்பைப் பெற்றால்தான் உலகில் சாந்தியும் சமாதானமும் நிலவும். ஆதலின் பொறுப்புள்ளவர்கள் எதை எதையோ வாயினால் பேசிக்கொண்டிருப்பதைவிட இந்திய சுதந்தரம் பெறும் வழியில் உதவி புரிவதுதான் உலக அமைதிக்குச் சரியான மார்க்க மாகும் என்பதை உணரவேண்டும் என்பது எமது அவா. சர். சாமுவேல் ஹோர் தாம் உணர்வது உண்மையானால் இந்திய விடுதலைக்குத் துணை புரிவாரா?

---

## விவசாயிகளுக்கு சர்க்கார் உதவி

நமது மாகாணத்தில் இப்போது அதிகாரத்தில் இருப்பது காங்கிரஸ் கட்சி. ஆகவே பொதுஜன ஆட்சி நடக்கிறதென்றுதான் கூறவேண்டும். ஏனெனின், இன்னமும் பிரிட்டிஷ் ஆதிக்கமும் இருந்துகொண்டே இருப்பதால் அதிகாரத்திலுள்ள காங்கிரஸ் மந்திரிகளும் தாராளமாக ஒன்றும் செய்துவிட முடியாது; என்றாலும் மாகாண சுயஆட்சி என்று சொல்லப்படுகிற ஒருவித அரசியலைப் பிரிட்டிஷார் ஏற்படுத்தி யிருப்பதால் தைர்யமும் ஆர்வமும் உடையவர்கள் சட்ட வரம்புக் குட்பட்டே ஏதேனும் நன்மையைச் செய்யக்கூடும். இந்த உண்மையை இப்போது நமது சென்னை காங்கிரஸ் மந்திரி சபையினர் காண்பித்து வருகின்றனர். அவர்கள் பதவி ஏற்றுச் சொற்ப காலத்துக்குள் பலவித நன்மைகளைச் செய்திருக்கிறார்கள். சேலத்தில் மதுவிலக்கு இயக்கம் ஆரம்பித்ததும், நீல்சிலையை அப்புறப்படுத்தியதும், கதர் தொழிலுக்குப் பாதுகாப்பு அளித்ததும் அவற்றில் முக்கியமானவை யாகும். இப்போது விவசாயிகளுக்கு உதவி செய்யும் பொருட்டு

அவர்களுடைய கடன் பளுவைக் குறைப்பதற்காக ஒருவித சட்டம் கொண்டு வரப் போகிறார்கள். அதற்கு சென்னை விவசாயிகள் கடன் நிவாரணச் சட்டம் என்று பெயர். அம் மசோதாவின் நோக்கத்தையும் ஷரத்தையும் இப்போது வெளியிட்டிருக்கிறார்கள். காங்கிரஸ் மந்திரிகளின் நோக்கம் சரியானது என்பதில் ஆக்ஷேபமில்லை. இம் மாகாணத்தின் மூலாதாரமாக விளங்கும் விவசாயத் தொழிலுக்குப் புத்துயிர் ஊட்ட வேண்டியது அவசியம் தான். மகாஜனங்களுக்கு வேண்டிய உணவைத் தயாரித்துக் கொடுக்கும் விவசாயிகள் நல்லநிலையில் இருந்தால் தான் பொதுவாகவே எல்லா வகுப்பினரும் சுபீட்சமாக இருக்க முடியும். விவசாயிகளின் தற்போதைய நிலைமை அரசாங்கத்தார் தங்கள் நோக்கத்தில் தெரிவித் திருக்கிறபடி மிக்க பரிதாபகரமானதாக இருக்கிற தென்பதில் சந்தேகமில்லை. இப்போது விவசாயிகள் படும் துயரத்திற்கு முக்கிய காரணம் கடன் சுமைதான். இந்த நிலைமையில் தனது பொறுப்புகள் பூராவையும் உணர்ந்துள்ள எந்த அரசாங்கமும் இந்த விவசாயிகளுக்கு உதவி செய்யாமல் இருக்க முடியாது. ஏழைகளின் நன்மைக்காகவே பாடுபடும் காங்கிரஸ் மந்திரிகள் விவசாயிகளின் துயரத்தைப் பார்த்துக்கொண்டு சும்மா இருக்க முடியுமா? ஆகவே தக்க ஆராய்ச்சியின் மீதுதான் இந்த மசோதாவைக் கொண்டுவந் திருக்கிறார்கள். ஆதலின் இம் மசோதாவைக் கொண்டுவந்ததன் நோக்கத்தை அனைவரும் பாராட்டவேண்டிய தென்பதில் சந்தேகமில்லை.

---

## கஷ்ட நிவாரணச் சட்டத்தின் பலன்

சர்க்கார் கொண்டு வரப்போகும் இச் சட்டத்தால் ஏற்படும் பலாபலன்களையும் அனைவரும் அறிய வேண்டியது அவசியம். இச் சட்டத்தால் சிலருக்கு கஷ்ட நஷ்டங்கள் ஏற்படலாம். ஆனால் பொதுவான சமூக நன்மையை உத்தேசித்து அந்த ஒரு சிலரும் இந்த நிவாரண மார்க்கங்களை வரவேற்பதே நியாயமாகும். சர்க்கார் அறிவித்துள்ள இந்த மசோதாவினால் கடன் பட்டுள்ள விவசாயிகளுக்குச் சில நன்மைகள் ஏற்படுகிறதென்பது திண்ணம். கடனாளி கொடுக்கவேண்டிய அசல் பாக்கியைக் கொடுத்து விட்டால் கடன் தீர்ந்து போகிறது. கொடுபடாமல் பாக்கி இருக்கும் வட்டித்தொகை அடிபட்டு விடுகிறது. இரண்டாவதாக கடன் பாக்கிக்காகச் செலுத்தி யிருக்கும் தொகையானது அசலுக்கு இரண்டு மடங்குக்கு அதிகமாகி விட்டிருக்கும் பக்ஷத்தில் அக்கடன் தீர்ந்து போன மாதிரியே கருதப்படும். மூன்றாவது, கடன் வாங்கியவர்கள் திருப்பிக் கொடுத்துள்ள தொகை அசலின் இரண்டு மடங்குக்குக் குறைவானதாக இருக்குமாயின் அந்த எல்லைக்குள் பாக்கியுள்ள தொகையைக் கொடுத்து விட்டால் அக்கடன் தீர்ந்து போகிறது. இனி 100-க்கு வருஷத்துக்கு 6 ரூபாய்க்கு அதிகமாக வட்டி வாங்கக் கூடாது. 1345-ஆம் பசலிக்கும் அதற்கு முந்தியும் பாக்கி இருக்கும் வார பாக்கியும் ரத்து செய்யப்படுகிறது. இவைதான் கடன் பட்டவர்களுக்கு ஏற்படும் அனுகூலம். கடன் ரொக்கமாகவோ, இனமாகவோ, ஜாமீன் பேரிலோ, ஜாமீன் இல்லாமலோ இருக்கலாம். ஆனால் வட்டியில்லாத அனுபவ ஒத்திகளை இச்சட்டத்தில் கண்ட எதுவும் பாதிக்காது. ஏழை விவசாயிகளுக்கு ஏற்படும் இந்த நன்மைகளைக் கடன் கொடுத்தவர்களிலும் பெரும்பாலோர் ஆக்ஷேபிப்பதற்கில்லை. ஏனெனின் பல சந்

தர்ப்பங்களில் இப்போதும் கிராமங்களில் நடந்து வருவது இந்த முறையே தான். கடன் வாங்கியவர்கள் பலர் வட்டியும் கொடுக்க முடியாமல் கஷ்டப்படும்போது வட்டியில்லாமல் அசல்மட்டும் கொடுத்தால் போதுமென்று தான் கேட்க வேண்டியதாக இருக்கிறது. ஆதலின் அசல் கிடைத்து விட்டால் போதும். இரண்டாவதாக கடன் பாக்கிக்காகச் செலுத்தியிருக்கும் தொகை அசலுக்கு இரண்டு மடங்குக்கு அதிகமாகி விட்ட பின்னரும் விவசாயியைக் கசக்கிக் கொண்டிருப்பதில் பயனில்லை தான். இனி நூற்றுக்கு வருஷவாரி ஆறு வட்டியே வாங்க வேண்டுமென்பதும் தர்ம நியாயமானதே. ஆயினும் இதில் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயம் யாதெனின், இச்சட்டப்படி ஏற்படும் அசல் தொகையையேனும் உடனே தீர்த்துவிடக் கூடிய நிலைமையில் விவசாயிகள் இருக்கிறார்களா என்பது தான். அசல் கடனையேனும் விவசாயிகள் தீர்க்க அரசாங்கத்தார் இச்சட்டத்தில் எந்த வகையும் செய்திருப்பதாகத் தெரியவில்லை. விவசாயிகளின் அக் கடனை அரசாங்கத்தாரே ஏற்றுக் கொண்டு தீர்த்து விடுவார்களா? வட்டியெல்லாம் போன பிறகு அசல் தொகையேனும் விரைவில் கிடைத்தால் தானே கடன் கொடுத்தவர்களும் திருப்தியுடன் இருக்க முடியும்? மற்றொரு முக்கிய விஷயம் யாதெனின், இனி கிராமங்களில் விவசாயிகளுக்கு எளிதில் கடன் கிடைக்காது. ஆதலின் அதற்கும் அரசாங்கத்தார் ஏதேனும் வகை செய்ய வேண்டும். இந்த இரண்டு முறைகளையும் பரிகரித்து விட்டாலொழிய அரசாங்கம் கருதும் லக்ஷியம் இம் மசோதாவினால் நிறைவேறி விடாது என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறோம்.

---

## தொழிலாளரும் வேலை நிறுத்தமும்

இந்தியா சட்டசபையில் அங்கத்தினராக இருக்கும் ஸ்ரீ. என். எம். ஜோஷி இந்தியத் தொழிலாளர் முன்னேற்ற விஷயத்தில் அதிக ஆர்வமுடையவராக இருப்பதுடன் தொழிலாளர் இயக்கம் சம்பந்தமான எல்லா விஷயங்களையும் நன்கு அறிந்தவராகவும் இருக்கிறார். இன்று தொழிலாளர் தலைவர்களாகவும், தீவிர வாதிகளாகவும், தொழில் இலாகா மந்திரிகளாகவும் இருப்பவர்களுக் கெல்லாம் அவர் ஒரு தலைவர் என்று கூறுவது மிகையாகாது. அதைக் கனம். கிரி அவர்களும் ஒப்புக் கொண்டிருக்கிறார். அவர் அரசியல் விஷயங்களில் மிதவாதியே யானாலும் தொழிலாளர் நன்மை விஷயத்தில் எந்த தீவிர வாதிக்கும் பின் தங்கியவரல்ல. இந்தியா சட்டசபையில் அவர் நியமன மெம்பராக இருந்தாலும் தொழிலாளர் பிரச்னைகளில் தைரியமாகச் சர்க்காரை எதிர்த்தே ஓட் செய்வார். இப்படிப்பட்ட தலைவர் சென்ற வாரம் சென்னைக்கு விஜயம் செய்து, இப்போது இங்கு அதிகாரத்தில் இருக்கும் காங்கிரஸ் சர்க்கார் தொழிலாளர்களுக்கு அளிக்க வேண்டிய வசதிகளைப் பற்றி மந்திரிமாரிடம் பேசினார். தொழிலாளர் முன்னேற்ற விஷயத்தில் கருத்துடைய நமது மாகாண சர்க்காரும், முக்கியமாக கனம். கிரி அவர்களும் ஸ்ரீ. ஜோஷியின் யோசனையை ஏற்று அதன்படி தொழிலாளர்களுக்கு வசதிகளைச் செய்து தருவார்களென்று நம்புகிறோம். பழுத்த அனுபவமும், பரிசுத்தமான நல்லெண்ணமுமுடைய தொழிலாளர் தலைவரான அவர் வேலைநிறுத்தம் சம்பந்தமாகத் தெரிவித்துள்ள அபிப்பிராயத்தைத் தொழிலாளர்கள் கவனிக்கவேண்டியது அவசியம். வேலை

# பாலர்கள் பக்கம்




## அறிவு விளக்க விஞ 3.

—:0:—

வேலூரில் ஒரு அழகிய சிங்காரத் தோட்டம் இருக்கிறது. அதில் பல வகைப்பட்ட பழச்செடிகளும் புஷ்பச் செடிகளும் உண்டு. சமீபத்தில் நேர்ந்த காற்று மழையின் காரணமாக அத்தோட்டத்தில் அனேக செடிகள் விழுந்துவிட்டன. மறுநாள் காலே அத் தோட்டக்காரன் மானேஜருக்கு சங்கதி தெரிவித்தான். அவர் நேரில் வந்து பார்த்து மிக்க விசனமுற்ருர். நேராகத் தபாலாபீசுக்குப் போய் உடனே 2 டஜன் செடிகளே அனுப்பும்படி பெங்களூரில் உள்ள செடிகளே வளர்த்து விற்கும் ஒரு கம்பெனிக்குத் தந்தி கொடுத்தார். மறுநாளே செடிகளும் வந்து சேர்ந்தன. உடனே மானேஜர் தன் தோட்டக்காரனே யழைத்து "ஐயா! இந்த 2 டஜன் செடிகளே ஒவ்வொரு வரிசையில் 4 செடிகள் வீதம் 28 வரிசைகளாக நடவேண்டும் தெரியுமா. எடுத்துப் போ" என்ருர்.

தோட்டக்காரனுக்கு ஆச்சரியம் உண்டாயிற்று. மானேஜர் தவருகப் பேசுகிருர் என்று அவன் நினைத்தான்.

தோட்ட:—எஜமானே! நீங்கள் எதையோ நினைத்துக் கொண்டு எதையோ பேசுகிறீர்கள் போலிருக்கிறது. இருப்பது மொத்தம் 24 செடிகள் தானே; இவைகளே வரிசைக்கு 4 வீதம் 28 வரிசைகளாக எப்படி நடமுடியும்?

மானே:—நான் ஒன்றும் தவருகச் சொல்லவில்லே. என்ன சொல்கிறேன் என்பதைத் தெரிந்து தான் பேசுகிறேன். இந்த 24 செடிகளே நான்

---

நிறுத்த உரிமை தொழிலாளர்களுக்கு உண்டு. ஆனல் அது கடைசி பாணமாக இருக்கவேண்டும் என்பதுதான் மகாத்மாஜி, ஜவஹர்லால், கிரி போன்றவர்களுடைய அபிப்பிராய மாகும். இந்தக் கருத்தைத்தான் ஸ்ரீ. ஜோஷியும் வற்புறுத்தி யிருக்கிருர். அவர் பெரம்பூர் வாடியா பார்க்கில் செய்த பிரசங்க மொன்றில், உங்கள் கோரிக்கைகளே நிறைவேற்றிக் கொள்ளவும் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக்கொள்ளவும் வேலே நிறுத்தம் செய்ய உங்களுக்குச் சகல உரிமையும் உண்டு. ஆனல் வேலே நிறுத்தங்களின் காரணமாக முதலாளிகளே விடத் தொழிலாளர்தான் அதிக கஷ்டப்படுகின்றனர். இதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு நீங்கள் வேலே நிறுத்தத்தைக் கடைசி ஆயுதமாகவே அனுஷ்டிக்கவேண்டும்' என்று வற்புறுத்தி யிருப்பதை எல்லாத் தொழிலாளர்களும் கவனிக்கவேண்டும். அவசரப்பட்டு வேலே நிறுத்தம் செய்வதால் வீண் தொல்லேயே யொழிய எவ்வித லாபமும் இல்லே என்பது உணரத் தக்கது.

சொன்னபடி ஒவ்வொரு வரிசைக்கும் 4 செடிகள் வீதம் 28 வரிசைகளாக நடமுடியாதா ?

தோட்ட:—அது எப்படி முடியும் சாமி !

மானே:—என் முடியாது? நான் சொல்கிறபடி செய். செடிகளை எடுத்துக் கொள்.

இருவரும் தோட்டத்திற்குச் சென்றனர். மானேஜர் தாம் சொன்ன படியே அவற்றை நடச் செய்தார். தோட்டக்காரன் அதைப் பார்த்து ஆச் சரியப் பட்டான்.

அந்த மானேஜர் அவற்றை எப்படி நட்டிருப்பார் ?

---

## அறிவு விளக்க வினு 2.

### சரியான விடை.

அப்பாதுரை தன் தம்பிக்கு அந்தக் கணக்கை.

```
215) 3 7 1 9 5 (173
     2 1 5
     -----
     1 5 6 9
     1 5 0 5
     -------
       6 4 5
       6 4 5
       -----
```

இவ்வாறு போட்டுக் கொடுத்தான்.

இதன்படி, கீழ்க்கண்டவர்கள் சரியான விடைகளை அனுப்பியிருக் கிறார்கள்:—

7046. சி. கிருஷ்ணன், கரூர்.
13534. ஏ. கருப்பண்ண உடையார், பேரூர்.
4909. T. N. R. கிருஷ்ணசாமி படையாச்சி, செம்மங்காடு, சீகாழி.
சி. தம்பிராசா. திருகோணமலே, சிலோன்.
121. K. பாலசுப்பிரமணியம், ஆத்தூர், திருவாங்கூர்.
அ. சொக்கலிங்கம் பிள்ளை, செவ்வாப்பேட்டை, சேலம்.
17675. ஆ. ராமலிங்கம், மதுரை.
48. அ. சங்கர், பட்டதெபாழை, சிலோன்.
V. வடிவேலு, குஞ்சிகுலாமா, சிலோன்.
உ. அலிமலுக்கு, வெள்ளவத்தை, கொழும்பு.
2154. ஆர். சத்தியபாமா, கும்பகோணம்.

17405. P. வீரப்பன் செட்டி, பெரியகுளம்.
16163. S. V. லக்ஷ்மி வெங்கடரமணன், சத்தியமங்கலம்.
தி. சிதம்பரநாதன், வட்டுக்கோட்டை, சிலோன்.
ப. முனிரத்தினம், வந்தவாசி.
வெங்கடேசன், திருப்பள்ளித் தெரு, சென்னை.
க. தியாகராசா, வட்டுக்கோட்டை, சிலோன்.
16183. A. V. ராமநாதன், மைலாப்பூர், சென்னை.
225. கொ. மு. தங்கவேலன், பெண்ணுகடம்.
சு. சுருதி, வட்டுக்கோட்டை, சிலோன்,
5128. நந்தகோபால் பிள்ளை, பொன்விளைந்த களத்தூர்.
17226. சி. கார்த்திகேசு, சாவகச்சேரி, சிலோன்.
S. A. கனகசபை, யாழ்ப்பாணம்.
S. கமலம், திருவனந்தபுரம்.
5463. S. ஆறுமுகம், முன்னூர்.
ஏ. வரதன், வளவனூர்.
15952. T. M. வேலாயுதம், திருவல்லிக்கேணி, சென்னை.
6675. அ. ராமசாமி, விழுதியூர்.

குறிப்பு:—மேற் குறிக்கப்பட்டுள்ளவர்களில் பெரியவர்களும் இருப்பதாக அறிகிறோம். நாம் இவ் "அறிவு விளக்க வினு" பகுதியை ஏற்படுத்தியதன் நோக்கமே, இவ்வினுக்களுக்கு விடையளிக்க முயல்வதன் வாயிலாக மாணவர்கள் அறிவு விளக்கம் பெற வேண்டுமென்பது. ஆதலால் நமது சந்தா நேயர்கள் தங்கள் குமாரர்களையும், குமாரத்திகளையும் மாதந்தோறும் வரும் வினுக்களுக்கு விடை கண்டுபிடித்து அனுப்பும்படி செய்ய வேண்டுமே யொழிய, தாங்களே கண்டுபிடித்து அனுப்பக்கூடாதென்று கேட்டுக் கொள்ளுகிறோம். அத்துடன், விடையனுப்பிய சில மாணவர்கள் தங்கள் சந்தா எண்ணைக் குறித்தனுப்ப மறந்து விடுகின்றனர். இனியேனும் விடையனுப்புவோர் தங்கள் சந்தா எண்ணையும் தவருது குறித்து அனுப்புவார்களாக.

---

## பிழை திருத்தம்.

கடந்த (கார்த்திகை மாத) இதழில், 335-ம் பக்கம் "அறிவுவிளக்க வினு சரியான விடை"யில், "$\frac{1}{4}$ பாகத்திற்கு $\frac{4392}{17567}$ ஆகவும்; 1/5 பாகத்திற்கு $\frac{2769}{15845}$ ஆகவும்" என்றிருப்பதை "$\frac{1}{4}$ பாகத்திற்கு $\frac{4392}{17568}$ ஆகவும்; 1/5 பாகத்திற்கு $\frac{2769}{13845}$ ஆகவும்" என்று திருத்திக் கொள்ளக் கோருகிறோம்.

தொடர் கதை.

# மாயா விரோதி

(ஸி. எஸ். இராமன், எம். ஏ., எல். டி.)



(398-வது பக்கத் தொடர்ச்சி.)

"நீ எப்படி வேண்டுமானாலும் சொல்லிக்கொள். நாம் இருவரும் ஒருவரையொருவர் நன்றாகஅறிந்துகொண்டிருப்பதால் நீ என்னை வைதாலும் எனக்கு லட்சியமில்லை. நான் உண்மையை உடைத்துச் சொல்கிறேன். இந்திரா, நீ கற்புள்ள ஸ்திரீயல்ல," என்று வக்கீல் மோகனரங்கம் கூறினர்.

இந்திரா தன் ஆசனத்திலிருந்தும் எழுந்து, "நீ பெரிய அயோக்கியன்!" என்றாள். அதை மோகனரங்கம் பொருட்படுத்தவில்லை.

"நீ கற்பிழந்தவள் என்பதை மறுபடியும் சொல்கிறேன். ஜெமீந்தாருக்கு நீ தவறு செய்துவிட்டாய்."

"கோழை!.........கோழை!.........நீ சொல்வது சுத்த முழுப்பொய் என்று உனக்குத் தெரியும். நான் உதவியின்றித் தனிமையில் இருப்பதை ஒரு காரணமாகக்கொண்டு என்னை எப்படி வேண்டுமானாலும் பேசலாம் என்று நினைத்தாயோ?......இதைவிட்டுப் போ.........போ......"

"நான் போகமாட்டேன்."

"தூர்த்தனே, போய்விடு, சீக்கிரம்!" என்று இந்திரா சொல்லிக்கொண்டே வேலைக்காரனைக் கூப்பிடுவதற்கு மேஜைமீது இருந்த மணியையடிக்கப் போனாள்.

"ஆளைக் கூப்பிடு......எல்லோரும் இங்கேவந்து உண்மையை அறிந்துகொள்ளட்டும். உனது புதல்வன் சொந்த புருஷனுக்குப் பிறந்தவனல்ல என்பதைத் தெரிந்துகொள்ளட்டும்," என்று சிரித்துக்கொண்டே மோகனரங்கம் மொழிந்தார்.

அதைக் கேட்டதும் இந்திரா தைரியத்தை இழந்து, சோபாவில் உட்கார்ந்து விட்டாள். பார்ப்பதற்கு இறந்தவள்போல் காணப்பட்டாள்.

"பார்த்தாயா, நான் சொல்வதை நீ மறுக்கமுடியாது," என்று நகைத்துக்கொண்டே வக்கீல் சொன்னார். தாம் அப்பெண்மணியின் மீது ஜயம் பெறுவதாக நினைத்துப் பெருமகிழ்வு பெற்றார்.

"நீ கண்டவாறு பிதற்றினல் அபலை நான் என்ன சொல்லக்கூடும்?" என்று வாய் குழறிக்கொண்டே இந்திரா பேசினாள்.

"நீ கடுமையான சொற்களைக் கொண்டு என்னைத் தாக்கினை. மரியாதையாகப் பேசு. நான் சொல்வதை ஒரு நல்ல பெண்போல் கேள். தைரியம் கொள். யாராவது நாம் பேசுவதைக் கேட்கப் போகிறார்கள்?" என்று முதலியார் மொழிந்தார்.

பின்பு அவர் அவ்வறையில் இருந்த நிலைக்கண்ணாடி முன்பு நின்று கொண்டு, தமது தலையைச் சரிப்படுத்திக் கொண்டார். "டை"யின் முடிச்சை சரியாகப் பண்ணிக்கொண்டார். மறுபடியும் கன்னத்தில் கொஞ்சம் உதிரம் வருதலைக் கண்டு, அதைக் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டார். பின்பு அவள் அருகில் அமர்ந்து, அதிக மரியாதையான அன்பு ததும்பும் குரலில் பேசினார்.

"என்னைக் கொன்றுவிட முதலில் யோசித்தாய்!"

அதைச் சொல்லியதும் அவளைப் பார்த்தார். அவள் பயத்தால் நடுங்குவதைக்கண்டு, வருத்தமடைந்தார்.

"இந்திரா, நான்கு வருஷங்களுக்கு முன் இந்திய ராணுவத்தில் காப்டன் பதவியில் இருந்த மார்க்கபந்து இறந்துபோனதை நீ அறிவாய். அவர் உனக்கு அத்தான் ஆகவேண்டும். நான் சொல்வதைக் கேள். நான் உன்மீது வஞ்சம் தீர்த்துக்கொள்ள அதைச் சொல்லுகிறேன் என்று நினைக்காதே. மார்க்கபந்து எட்டு ஒன்பது வருஷங்களுக்கு முன்பு இங்கே வந்தார். அப்பொழுது உன் புருஷனும் நானும் அமெரிக்காவிற்குப் போயிருந்தோம். மார்க்கபந்து ஜெமீந்தாரினியைக் கண்டு சந்தோஷமும் காதலும் கொண்டார். பிறகு வளர்ப்பானேன். நீ அவரைக் காதலித்தாய்." என்றார் மோகனரங்கம்.

கற்சிலைபோல் அசைவற்று இருந்தாள் இந்திரா. அவளுடைய கண்கள் இமை அசையாமல் மோகனரங்க முதலியாரைப் பார்த்தன. உயிர் இருப்பதாக அவை தோன்றவில்லை. வக்கீல் ஏதோ சொல்வதைக் கேட்க வேண்டுமே என்ற கருத்தைக் கொண்டவள்போல் தோன்றினாள். தன்னை உயிருடன் கொல்வதற்கு அவர் அப்படிப் பேசுகிறார் எனக்கொண்டாள்,

மேலும் மோகனரங்கம் சொல்லுவதாயினர் :—"மார்க்கபந்து உனது புருஷன் வரும்வரையில் இருந்தார் இம்மாளிகையில். பிரபு வந்த இரண்டு மாதங்களுக்குப் பின் நீ கர்ப்பமாய் இருப்பதாகச் செய்தி வந்தது. உன் புருஷன் அதை நம்பினான். தனக்கு ஒரு குழந்தை, பிறக்கப் போவதாக எண்ணினான். உன் குழந்தையைத் தன் குழந்தையென்று எண்ணி ஏமாந்து போனான். உன்னை அவன் நேசிக்கவே இல்லை. பாலகிருஷ்ணனைத் தனது வார்சு என்று கொண்டு மகிழ்வு பெற்றான். நான் சொல்வது உண்மைதானே?"

"என்ன உண்மை?" என்று கற்சிலை வாய் திறந்து பேசுவதாயிற்று.

"நான் சொல்வது முழு உண்மை. ஜெமீந்தார் உன்க்கும் மார்க்கபந்துவிற்கும் ஜனித்த பாலகிருஷ்ணனைத் தனக்குப் பிறந்தவன் என்று நினைத்துக் கொண்டிருக்கிறான். உண்மையை எனது சிநேகிதன் அறிவானேயானல் அவன் உன்னை உயிரோடு வைக்கமாட்டான். நீ அவனுக்கு பெருத்த துரோகம் செய்து விட்டாய். உன்னைக் கொல்லாவிட்டால் நீதிபதி முன்பு கலியாண விடுதலை பெறலாம்; உன்னையும் பாலகிருஷ்ணனையும் வீதிகளில் ஓட்டைசட்டிகள் எடுத்துச் செல்லுமாறு செய்யலாம்; வேறு பெண்ணை மணம் புரிந்து குட்டி குழந்தைகளைப் பெறலாம். இந்திரா, உனனுடைய இரகசியத்தை நான் மட்டும் நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கிறேன். நாம் இருவரும் மனம் ஒருமித்த நண்பர்களாய் இருப்போம்;

அப்பொழுதுதான் இந்த இரகசியம் அந்தரங்கமாகவே இருக்கும்," என்று மோகனரங்கம் கூறிவிட்டு, அவளுக்கு வந்தனம் செய்து, கதவருகே சென்றார். இந்திரா பதில் வார்த்தைகள் பேசுவது தெரிந்தமையால் அவர் போகாமல் நின்றார்; அவள் மொழியைக் கேட்டார்.

"ஐயா, மரியாதையாகக் கூப்பிடுவது பிசகு. நீ ஒரு பெரிய சைத்தான். உன்னுடைய துர்குணம் என்ன வேணுமானாலும் சொல்லும். நீ கூறும் கதையை யாராவது நம்புவார்களா ?" என்று கேட்டாள் இந்திரா.

"எனது நண்பன் ஜெமீந்தார் கூட நான் சொல்லுவதை நம்பமாட்டானா ?" என்று மோகனரங்கம் கேட்டார்.

"மாட்டார். தக்க ருஜா வேண்டாமா ?"

"நீ கெட்டிக்காரி என்று எனக்குத் தெரியும். நான் மூடன் அல்ல. என்னிடம் ருஜாக்கள் இருக்கின்றன. கார்ப்டன் மார்க்கபந்துவின் கடிதங்கள் உள."

"கடிதங்களா !" என்று ஆச்சரியத்தோடு இந்திரா கூறினாள். கீழே விழாபடி ஒரு நாற்காலியின் முதுகைப் பிடித்துக் கொண்டாள்.

"ஆம். உன்னுடைய ரகசியப் பெட்டியில் கடிதங்கள் இருப்பதாக நீ நினைத்துக் கொண்டிருக்கிறாய்."

"அயோக்கியனே !"

"வைவதால் உனக்குப் பலன் ஒன்றும் ஏற்படாது. சரி. நீ என்னிடம் சிநேகமாகத்தான் இருக்க வேண்டும். நான் ஒரு புதிய பங்களாவை விலைக்கு வாங்கி யிருக்கிறேன். நாளைக்கு எட்டாவது நாள் மத்தியானம் மூன்று மணிக்கு நீ அங்கு வந்து என்னைக் காண வேண்டும். இந்த மாளிகையின் மேற்குப் புறத்தில் கால் மைல் தூரத்தில் என் வீடு."

"நான் அயோக்கியர்களைக் காணச் செல்லும் வழக்கம் கொண்டிருக்கவில்லை."

"நீ எதற்கும் யோசனை செய்வாய்."

"ஒருகாலும் முடியாது...............பாவி! உன்னை நான் வெறுக்கிறேன்............உன்னைக் காண்பதை விட இறந்து போவதே மேல்."

"அப்படிச் செய்தாலும் அது பாலகிருஷ்ணனைக் காப்பாற்றாது. இளைய ஜெமீந்தாரன் ஆன பாலகிருஷ்ணனுடைய கதியை யோசிக்க வேண்டும் நீ."

"உனக்கு என்மீது இரக்கம் கிடையாதா ?"

"நான் உன்னை நேசிக்கிறேன். அதுதான் நான் சொல்ல முடியும்."

"ஐயோ !............நான் என்னையும் என் மகனையும் கொன்று விடத்தான்,..............."

"நீ அதை செய்ய மாட்டாய். நீ வருவதாக உறுதி மொழி கொடு; இல்லாவிட்டால் கடிதங்களை ஜெமீந்தாருக்கு அனுப்பி விடுவேன்."

"பாவி! அயோக்கியா !" (தொடரும்)

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

ஈசுவர௵ மார்கழி௴—கலியுகாதி 5039, சாலிவாகனம் 1860,
பசலி 1347, கொல்லமாண்டு 1113, ஹிஜரா 1356,
இங்கிலீஷ் 1937௵ டிசம்பர்௴—1938௵ ஜனவரி௴

| மார்கழி௴ | டிசம்பர்௴ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 15 | புதன் | து11-20 | ப✻22-10 | சி22-10அ | கி✻, பிரதோஷம், மூலா கார்த்திகை நா-12-23 |
| 2 | 16 | வியா | திர3-8 சது54-5 | கிரு15-33 | மர60 | பாஷாண சதுர்த்தசி, மாச சிவராத்திரி, அவமாகம் |
| 3 | 17 | வெள் | ○44-45 | ரோ8-20 | மர8-20சி | ○, நடராஜாபிஷேகம்(இர |
| 4 | 18 | சனி | பிர35-23 | மிரு0-48 திரு53-23 | சித்60 | மார்க்கசிரபகுளம், [வில்) ஆருத்திரா தரிசனம் |
| 5 | 19 | ஞா | துதி26-38 | புன46-43 | சித்60 | |
| 6 | 20 | திங் | திரி18-43 | பூச41-8 | சித்60 | |
| 7 | 21 | செவ் | சது12-0 | ஆயி36-58 | சித்60 | |
| 8 | 22 | புதன் | பஞ்6-55 | மக34-30 | சி34-30அ | |
| 9 | 23 | வியா | சஷ்3-55 | பூர34-3 | சி34-3மர | |
| 10 | 24 | வெள் | சப்2-55 | உத்35-38 | சி35-38அ | |
| 11 | 25 | சனி | அஷ்4-8 | அஸ்39-43 | மர60 | |
| 12 | 26 | ஞா | நவ7-13 | சித்44-23 | சித்60 | |
| 13 | 27 | திங் | தச11-58 | சு50-58 | அ50-58ம | |
| 14 | 28 | செவ் | ஏகா17-53 | வி58-25 | ம58-25சி | |
| 15 | 29 | புதன் | து24-33 | அனு60 | சித்60 | கதிரறுக்க, களஞ்சியம் வை |
| 16 | 30 | வியா | திர31-28 | அனு6-15 | சித்6-15பி | மாசசிவராத்திரி [க்க |
| 17 | 31 | வெள் | சது38-10 | கே14-8 | மர14-8அ | குளம், கிணறு வெட்ட |
| 18 | 1938௵ ஜனவரி௴ 1 | சனி | ●44-43 | மூல21-43 | சித்60 | சர்வந்திர அமாவாசை |
| 19 | 2 | ஞா | பிர50-25 | பூரா28-43 | சி28-43அ | புஷ்யசுத்தம், கடன் தீர்க்க |
| 20 | 3 | திங் | துதி55-23 | உத்35-3 | மர35-3அ | சந்திரதெரிசனம் |
| 21 | 4 | செவ் | திரி59-25 | திரு40-30 | சித்60 | எருவிட, விதை விதைக்க |
| 22 | 5 | புதன் | சது60 | அவி45-5 | பிர45-5சி | மாச சதுர்த்தி விரதம் |
| 23 | 6 | வியா | சது2-18 | சத48-30 | ம48-30சி | மருந்துண்ண மாடுவாங்க |
| 24 | 7 | வெள் | பஞ்4-8 | பூர50-45 | சித்60 | சஷ்டி, ஏற்றம் ஸ்தாபிக்க |
| 25 | 8 | சனி | சஷ்4-35 | உத்51-38 | சி51-38ம | யாத்ரை, பிராணம் செய்ய |
| 26 | 9 | ஞா | சப்3-40 | ரே51-0 | அ51-0சித் | உழவு செய்ய, கதிரறுக்க |
| 27 | 10 | திங் | அஷ்1-13 நவ57-25 | அஸ்49-0 | சித்60 | அவமாகம், கெற்போட் டம் நிவர்த்தி நா-21-45 |
| 28 | 11 | செவ் | தச52-0 | பர45-38 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 29 | 12 | புதன் | ஏகா45-18 | கி✻40-45 | அ40-45சி | வைகுண்ட ஏகாதசி, முக் கோட்டி ஏகாதசி, கி✻ |
| 30 | 13 | வியா | து37-43 | ரோ35-0 | மர60 | போகி பண்டிகை |

| | | | |
|---|---|---|---|
| சனி | | கே | |
| செ | 10-தனு-சுக் | | |
| குரு | | | |
| சூ-பு | சுக் ராகு | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| தொகுதி 23 | ஈசுவர௵ தைமீ ௧௳<br>1938௵ ஜனவரிமீ 14௳ | பகுதி 7 |
| --- | --- | --- |

## கடவுள் வணக்கம்.

நினைந்துநினைந்து உணர்ந்துஉணர்ந்து நெகிழ்ந்துநெகிழ்ந்து அன்பே
நிறைந்துநிறைந்து ஊற்றுஎழு கண்ணீரதனால் உடம்பு
நனைந்துநனைந்து அருள்அமுதே! நன்னிதியே! ஞான
நடத்துஅரசே என்உரிமை நாயகனே என்று
வனைந்துவனைந்து எத்துது(ம்)நாம் வம்மின்உல கியலீர்!
மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாங் கண்டீர்!
புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியஞ்சொல் கின்றேன்
பொற்சபையிற் சிற்சபையிற் புகுந்தருணம் இதுவே. (1)

புகுந்தருணம் இதுகண்டீர் நம்மவரே! நான்தான்
புகல்கின்றேன் என்மொழிஓர் பொய்மொழி என்னாதீர்!
உகுந்தருணம் உற்றவரும் பெற்றவரும் பிறரும்
உடைமைகளும் உலகியலும் உற்றதுணை அன்றே!
மிகுந்தசுவைக் கரும்பே! செங்கனியே! கோற்றேனே!
மெய்ப்பயனே! கைப்பொருளே! விலையறியா மணியே!
தகுந்ததனிப் பெரும்பதியே! தயாநிதியே! கதியே!
சத்தியமே என்றுஉரைமின் பத்தியொடு பணிந்தே. (2)

பணிந்துபணிந்து அணிந்துஅணிந்து பாடுமினோ உலகீர்!
பரம்பரமே! சிதம்பரமே! பராபரமே! வரமே!
துணிந்துவந்த வேதாந்த சுத்தஅனு பவமே!
துரியமுடி அனுபவமே சுத்தசித்தாந் தமதாய்த்
தணிந்தநிலைப் பெருஞ்சுகமே சமரசசன் மார்க்க
சத்தியமே இயற்கைஉண்மைத் தனிப்பதியே என்று
கணிந்துஉளத்தே கனிந்துநினைந்து உரைத்திடில்அப் பொழுதே
காணாத காட்சியெலாங் கண்டுகொள லாமே. (3)

# அரும்பொருள் விளக்கம்

(இ-ள்.) உலகப் பெருஞ்சுழலில் சிக்கி யுழலும் ஆன்ம நேயர்களே! இறைவனைச் சிந்தித்தும் உணர்ந்தும் மனம் உருகியும் அன்புருவாய் நின்றும் கண்களிலிருந்து ஊற்று நீர்போல் சுரக்கும் கண்ணீரால் தேக முழுதும் நனைந்தும் நின்று, 'கருணாமிர்தமே! சிறந்த ஞான பொக்கிஷமே! ஞான நடனம் புரியும் நடராஜப் பெருமானே! என் ஆருயிர்த் தலைவனே; என்று கற்பனை செய்து பாராட்டிப் புகழ்ந்து நாம் துதிப்போம்; வருவீர்களாக! சாவில்லாத அமரத்துவ உயர்வாழ்வை நடத்தலாம். இதைக் கற்பனை செய்து சொல்லவில்லை; பொய் கூறவுமில்லை; உண்மையையே கூறுகின்றேன்; கனகசபையாகவும் சிதாகாச சபையாகவுமுள்ள ஞான சபையில் நாம் எல்லாரும் போய்ச்சேருவதற்கு இதுவே சிறந்த சமயமாகும். (எ-று.)

மரணமிலாப் பெருவாழ்வைப் பெறலாம் என்று உலக மக்களையெல்லாம் இராமலிங்க சுவாமிகள் அழைக்கிறார். 'சேரவாரும் ஜெகத்தீரே!' என்று தாயுமானாரும் கூப்பிடுகிறா ரல்லவா! (1)

(இ-ள்.) எனது ஆன்மநேய சகோதரர்களே! நாம் சிற்சபையில் நுழையுஞ் சமயம் இதுவே யாகும்; நான் உறுதியாகக் கூறுகிறேன்; எனது இவ் வார்த்தையைப் பொய்யுரை என்று கருதி அலட்சியப்படுத்தாதீர்கள். நாம் இவ்வுலகை விட்டு—இத் தேகத்தைவிட்டு நீங்கும் காலத்தில் உற்றாரோ, பெற்றோரோ, மற்றவர்களோ, சொத்துகளோ உலகிலுள்ள இயல்புகளோ எதுவும் நமக்கு உற்ற துணையாக நம்முடன் வரப்போவதில்லை. ஆதலால் ஆண்டவனை மெய்யன்போடு வணங்கி, 'சுவை மிகுந்த கரும்பே! பழுத்த பழமே! கோற்றேனே! உண்மையான பயனைத் தரும் பெருமானே! உயிர் வாழ்க்கைக்கு இன்றி யமையாததா யிருக்கும் கைப்பொருள் போன்றவனே! விலையில்லா மாணிக்கமே! தகுதி வாய்ந்த ஒப்பற்ற மாபெருந் தலைவனே! கருணாநிதியே! உயிர்களுக்கெல்லாம் வீடு பேற்றை யளிப்பவனே! சத்திய சொருபியே!' என்று வாழ்த்துரை கூறுவீர்களாக. (எ-று.)

'காதற்ற ஊசியும் வாராது காணுங் கடை வழிக்கே!'' என்று பட்டினத்துப் பிள்ளையார் கூறுவதுபோல், 'உகுந் தருணம்........... உற்றதுணை அன்றே' என்று இராமலிங்க வள்ளலாரும் கூறுகிறார். (2)

(இ-ள்.) உலக மக்களே! இறைவனை வணங்கியும் அவனது திருவடிகளைத் தலைக்கணியாக அணிந்தும் அவன் புகழைப் பாடுவீர்களாக! பரம்பொருளே! சிதாகாயத்தில் நடனமிடுந் தேவே! பராபர வஸ்துவே! அடியார்க்கு அஞ்சலென்று அபயமளிக்கும் அருட் சோதியே! திடங்கொண்டு ஆராய்ந்த வேதங்களின் முடிவில் கண்டறிந்த சுத்த அநுபூதி நிலையே! துரியாதீதப் பழம்பொருளே! சுத்த சித்தாந்த தத்துவமாய் அமர்ந்த உயர் நிலை யளிக்குஞ் சுகோதயமே! சமரச சன்மார்க்க சத்தியப் பொருளே! இயற்கையாகவும் உண்மையாகவும் ஒளிரும் ஒப்பற்ற தலைவனே' என்று உருவேற்றி நெஞ்சங் கரைந்து நினைந்து துதித்தால், அக் கணத்திலேயே இதுவரை காணாத அற்புதக் காட்சிகளையெல்லாம் தரிசித்து மகிழலாம். (எ-று.)

'அழுதால் உன்னைப் பெறலாமே' என்று மாணிக்கவாசகப் பெருந்தகையார் இறைவனை யடையும் இரகசியத்தைக் கூறி யிருப்பதை இராமலிங்க வள்ளலாரும் இப் பாட்டுகளால் வலியுறுத்துகிறார். (3)



# இந்தியாவில் விஞ்ஞான கலையின் நிலை

—:0:—

இன்று உலகில் மக்கள் அறியாமையைப் போக்கும்—மக்களை வளம் படுத்தும்—கலைகள் பல தோன்றி நிலவி வருகின்றன. நம் பாரத தேசத்தில் பண்டைக்காலத்தில் 64 அருங் கலைகள் இருந்து வந்ததாகக் கூறப்படுகிறது. ஆனால் தற்போதைய உலகில் நிலவிவரும் கலைகள் கணக்கற்றனவா யிருக்கின்றன. அவைகளெல்லாவற்றிலும் சிறந்து விளங்குங் கலை விஞ்ஞான கலை யாகும். இவ் விஞ்ஞான கலையே மற்றெல்லாக் கலைகளுக்கும் புத்துயிரளிக்கக் கூடியதாக இருக்கிறது. மற்றக் கலைகளுக்கெல்லாம் தாய்க் கலையாகக் கூட இவ்விஞ்ஞான கலையைக் கூறலாம் இத்தகைய விஞ்ஞான கலை எப்போது ஏற்பட்டது? எத் தேசத்தில் உண்டாயிற்று? யாரால் கண்டு பிடிக்கப்பட்டது? இவ்வித கேள்விகளுக்கு விடை யளிப்பது சிறிது சிரமமான காரியமேயாகும். ஆயினும், ஒரு சிலர் 'இவ் விஞ்ஞான கலை ஐரோப்பா உலகுக்கு அளித்த நவீன கலைச் செல்வம்' என்று கூறி வருகின்றனர். நம் நாட்டில் உள்ள பெரும்பாலரர் இதை உண்மையென்றே நம்பி வருகின்றனர்.

இக் கூற்று உண்மையா? இது ஆராய்ச்சிக்குரிய விஷயம். விஞ்ஞான கலையை ஐரோப்பியர்தான் முதன் முதலாகக் கண்டுபிடித்து உலகில் பரவச் செய்தனர் என்பதை நாம் ஒப்புக் கொள்வதற்கில்லை. ஐரோப்பியப் பேரறிஞர்கள் தங்கள் ஆராய்ச்சி வாயிலாக இவ் விஞ்ஞானகலையைக் கண்டுபிடிப்பதற்கு வெகு காலத்துக்கு முன்பே, நம் முன்னோர்கள் விஞ்ஞான கலை நுட்பங்களையும், இயற்கையின் இரகசியங்களையும் உண்மைகளையும் கண்டுபிடித்துத் தங்கள் வாழ்க்கையில் பயன்படுத்தி வந்திருக்கின்றனர். இதை நாம் தேசப்பற்று காரணமாகக் கூறவில்லை தக்க ஆதாரத்தின் மீதே எடுத்துக் கூறுகிறோம்.

"விஞ்ஞான கலையில் தற்காலத்திற்கேற்ற வழியில் ஆராய்ச்சி செய்யும் முறையில் இந்தியா சமீபகாலத்திலேயே கவனஞ் செலுத்தி வேலை செய்து வருகிறதாயினும், இந்தியாவில் விஞ்ஞான சாஸ்திரப் பயிற்சி மேனாட்டுத் தொடர்பினாலேயே சிறிது சிறிதாக உருவாகி வரு

றதாயினும், அதாவது அந்த ஆராய்ச்சியிலும மேனாட்டு வழிகளையே அது பின்பற்றி வருகிறதாயினும், பண்டைக்காலத்தில் இந்தியா விஞ்ஞான கலையறிவை மிகுதியாகப் பெற்றிருந்தது என்பதையும், சில துறைகளில் உலகின் மற்ற தேசங்களைவிட இந்தியா மிகுந்த முன்னேற்ற மடைந்திருந்தது என்பதையும் நாம் நினைவுபடுத்திக்கொள்ள வேண்டும்."

இது நாம் கூறுவதல்ல; மேனாட்டுப் பிரபல விஞ்ஞான சாஸ்திரியான லார்டு ரூதர்போர்டு கூறுவதாகும்.

சமீபத்தில் கல்கத்தா சர்வகலா சங்கத்தைச் சேர்ந்த விஞ்ஞான சாஸ்திரக் கலாசாலையில் இந்திய விஞ்ஞான சாஸ்திர மகாநாட்டின் வெள்ளிவிழாக் கூட்டம் நடைபெற்றது. அதற்குப் பல தேசங்களிலு மிருந்து விஞ்ஞானசாஸ்திர நிபுணர்கள் வந்து கலந்துகொண்டனர். ஐரோப்பிய விஞ்ஞான சாஸ்திர நிபுணர்களும் இவ் விழாவுக்கு விஜயஞ் செய்திருந்தார் என்று குறிப்பிடுவது அவசியம். மேற்படி மகாநாட்டு வெள்ளி விழாக் கூட்டத்துக்குச் சிறந்த விஞ்ஞான சாஸ்திர நிபுணரான லார்டு ரூதர்போர்டு தலைமை வகிக்க இருந்தார். அவர் தமது தலைமைப் பேருரையையும் எழுதி விட்டார். ஆனால் இதனிடையே துரதிர்ஷ்ட வசமாக லார்டு ரூதர்போர்டு காலமாய் விட்டார். எனவே, அவருக்குப் பதிலாக, மற்றொரு பிரபல விஞ்ஞான சாஸ்திரியான ஸர். ஜேம்ஸ் ஜீன்ஸ் தலைமை வகித்து மகாநாட்டை நடத்த நேர்ந்தது. அப் பெரியார் முன்னுரையாகச் சில வார்த்தைகள் கூறிவிட்டு, பின்னர் லார்டு ரூதர்போர்டு எழுதி வைத்துச் சென்ற அரிய பிரசங்கத்தைப் படித்தார். அப் பிரசங்கத்தில் தான் லார்டு ரூதர்போர்டு மேற்கண்டவாறு குறிப்பிட்டிருக்கிறார். ஆகவே நம் கூற்றை இனி யாரும் மறுப்பதற்கில்லை. நம்மவர் கூறுவதை விட, மேனாட்டார் கூறுவதையே வேத வாக்கென நம்பும் மனப்பான்மை கொண்ட நண்பர்கள் கூட அன்னிய நாட்டாரான—அதிலும் விஞ்ஞான சாஸ்திரியான—லார்டு ரூதர்போர்டின் வாசகத்தைப் படித்த பிறகு நம் வார்த்தையில் நம்பிக்கை வைப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. நம் நாட்டின் பழமையையும் பெருமையையும், நம் முன்னோர்களின் அறிவாற்றலையும் நாம் அறிந்து பாராட்டுவதில்லையே யொழிய, நம் முன்னோர் நமக்கு—நம் வாழ்க்கைக்கு—இன்றியமையாததான கலைச் செல்வங்களைச் சேம நிதியாக் வைத்து விட்டே சென்றிருக்கிறார்கள். அவைகளைப் பழையபடி உயிர்ப்பித்து இந்தியா இணையற்ற பெருமை வாய்ந்தது என உலகுக்குக் காட்டவே, நம்மில் நம்மில் அறிஞர்களா யிருப்போர் முன் வரவேண்டும். அத்துடன் அரசாங்கத்தின் உதவியும், நம் நாட்டுப் பெருஞ்செல்வக் கொடையாளிகளின் உதவியும் இருந்தால் இந்தியாவின் உயர்வு இமாலயத்தின் சிறப்பைவிட அதிகமாக பெருமையடையச் செய்யலாம். அத்தகைய பெருமையை யுண்டு

பண்ணக் கூடிய பேரறிஞர்கள் நம் நாட்டில் ஏற்படாமலில்லை. சமீபத்தில் இவ்வுலகை விட்டு மறைந்த ஸர். ஜகதீச சந்திர போஸ், ஸர். பிரபுல்ல சந்திரராய், ஸர். ஸி. வி ராமன் போன்ற ஒரு சில அறிஞரேனும் இப்போது தோன்றி இந்தியாவின் பழம் பெருமையைக் காத்து வருகின்றனர். அப் பெரியார்கள் கண்டு பிடித்த அரிய பெரிய விஞ்ஞான ஆராய்ச்சிகளைக் கண்டு ஐரோப்பிய அறிஞர்கள் மட்டுமல்ல; உலகமே பிரமித்து விட்டது.

சமீபகாலம் வரை கூட மற்ற தேசங்க ளெல்லாம் இந்தியாவையும், இந்திய மக்களையும் பற்றி வெகு அலட்சியமாகக் கருதி வந்தன. 'இந்தியா அடிமை தேசம்; அங்கு எவ்வித அபிவிருத்திக்கும் இடமில்லை. இந்தியர்கள் வெறும் வாய் வேதாந்தம் பேசிக் கொண்டு காலங் கழித்து வருபவர்கள்; உணர்ச்சியில்லாத மக்க ளென்றால் அவர்களைத் தான் கூற வேண்டும்' என்றெல்லாம் பிறநாட்டார் ஏளனமாகக் கூறி வந்திருக்கிறார்கள் அத்தகைய அயல் நாட்டாருக்கு ஸர். ஜகதீச சந்திர போஸ் போன்ற பெரிய விஞ்ஞானிகள் தோன்றிச் சரியான பதிலளித்து விட்டார்கள்

"இந்தியர்கள் சதா தத்துவ சிந்தனையிலேயே காலத்தைக் கழித்து வருபவர்கள்; ஆதலால் தான் விஞ்ஞான சாஸ்திரம் போன்றவைகளுக்கு ஆக்கந் தேட முயல்வதில்லை என்ற அபிப்பிராயம் மேனாட்டாரிடையே இருந்து வருகிறது இது தவறான அபிப்பிராயமாகும். இந்தியா வெறுஞ் சொப்பனங் கண்டு வந்த நாடன்று. பண்டைக் காலத்தில் பெருமை மிகுந்த இந்தியாவின் தூதர்கள் வெளி நாடுகளிலும் இந்திய நாகரிகத்தைப் பரப்பி வந்தனர். சரகன், சுஸ்ருதன், நாகார்ஜுனர், பாஸ்கராச்சாரியார், ஆர்யப்பட்டர், லீலாவதி முதலியோர் இயற்கையின் ரகசியங்களைக் கண்டு பிடித்துப் பிற்கால அறிவு வளர்ச்சிக்கு பெரிதும் உதவினர்" என்று இந்திய விஞ்ஞான சாஸ்திரிகள் மகாநாட்டு வெள்ளிவிழாக் கூட்டத்தில் வரவேற்புக் கழகத் தலைவரான கல்கத்தா சர்வகலாசாலை வைஸ் சான்ஸலர் ஸ்ரீயுத சியாம பிரசாத் மூக்கர்ஜி தமது பிரசங்கத்தில் குறிப்பிட்டது இங்கு கவனிக்கத் தக்கதாகும்.

மேலும் ஸ்ரீயுத மூக்கர்ஜி கூறுகிறபடி, இதற்குப் பிறகு வெகு காலம் வரை இந்தியாவில் முற்போக்கு இல்லாமலிருந்தது. மீண்டும் சமீபகாலத்தில தான் இந்தியா தலையெடுத்து உலகத்தின் அறிவிற்கு உதவி வருகிறது. நம் நாட்டுக் கலைவாணர்கள் சிலர் சர்வதேசப் புகழைப் பெற்றிருக்கிறார்கள். மற்றும் சிலர் உலகப் பிரசித்தி யடையாவிடினும், அரிய ஆராய்ச்சிகளைச் செய்து வருகின்றனர். இன்று உயரிய கலைஞானத்திற்குப் பேராதரவு தரத்தக்க திட்டத்தைக் கலகத்தா சர்வ கலாசங்கத்தைச் சேர்ந்த விஞ்ஞான சாஸ்திர கலாசாலை தான் முதல் முதலாக ஏற்படுத்தியது, வங்காளத்தில் பிரபலஸ்தர்களான

ஸர். ஆசுதோச மூக்கர்ஜி, ஸர். தாரகா நாத் பாலித், ஸர். ராஷ்பிஹாரி கோஷ் முதலியவர்களின் முயற்சியும் நன் கொடையுமே மேற்படி சர்வ கலாசங்கத்தின் நன்னோக்கத்தை நிறைவேற்றி, இப்போது இந்தியாவின் பல மாகாணங்களிலும் விரிவடையும் படியாகச் செய்தன. சென்ற 25 வருஷ காலமாக வங்காளத்தில் நடைபெற்று வரும் ஆராய்ச்சிகளால் தாய் நாட்டுக்கும் உலகுக்கும் பல வகையிலும் முற்போக்கு ஏற்பட்டிருக்கின்றன. சாதாரணமாக கல்கத்தா சர்வ கலாசாலை சார்பில் துவக்கப்பட்ட விஞ்ஞான சாஸ்திர சங்கம் சர்வ தேசத்தின் பிரக்கியாதியைப் பெற்று விட்டது. மேற்படி சங்கத்தின் இருபத்தைந்து வருடகால அரிய சேவையால் தான், இவ் வெள்ளி விழாவுக்கு ஐரோப்பாவிலிருந்தும் விஞ்ஞான சாஸ்திரிகள் பலர் விஜயஞ் செய்து சிறப்பித்தனர். அவர்களெல்லாம், கணித சாஸ்திர மேதாவி ராமாநுஜம், ஸர். வெங்கடராமன், வான சாஸ்திரி டாக்டர். ஸாஹா, ஸர் ஜகதீச சந்திரபோஸ், ஸர். ஸி வி. ராமன், பி. ஸி. ராய், சந்திர சேகரர், கோத்தாரி போன்ற இந்திய விஞ்ஞான சாஸ்திர நிபுணர்களை வெகுவாக மதிக்கின்றனர் என்பது அவர்களது பேச்சுகளால் விளங்குகிறது.

"இம் மகா நாட்டுக்குப் பல ஐரோப்பிய விஞ்ஞான சாஸ்திர நிபுணர்கள் விஜயஞ் செய்திருப்பதிலிருந்தே உலகத்தார் விஞ்ஞான கலைத் துறையில் இந்தியா அடைந்திருக்கும் தகுதியை அங்கீகரிப்பதைக் காட்டுகிறது அத்துடன். இந்தியாவில் ஏற்படும் அபிவிருத்தி விஷயத்தில் மேனாட்டுக் கலைவாணர்கள் கொண்டுள்ள சிரத்தையையுங் காட்டுகிறது" என்று மேற்படி மகாநாட்டு வெள்ளி விழாவை ஆரம்பித்து வைத்த வைஸ்ராய் லின்லிதோ பிரபு கூறியிருப்பதும் இங்கு ஒப்பிட்டு நோக்கத் தக்கதாகும்.

இனி, இந்த அற்புதக் கலையான விஞ்ஞானம் மக்கள் சமூகத்துக்கு எவ்வளவுதூரம் நன்மையை விளைவிக்கிறது அல்லது தீமையைப் பரப்புகிறது என்று பார்ப்போம் எல்லா கலைஞானங்களைப் போலவே விஞ்ஞான கலையும் மக்கள் சமுதாயத்தின் நன்மைக்காகவே ஏற்பட்டது. ஒவ்வொரு விஞ்ஞானியும் இந் நன்னோக்கத்தோடேயேதான் தமது அற்புத ஆராய்ச்சிகளையும், அரிய உண்மைகளையும் கண்டு பிடித் திருக்கவேண்டு மென்பதில் சந்தேகமில்லை ஆனால் அக் கலை நடைமுறையில் மக்கள் நன்மையை விடத் தீமைக்கே அதிகமாகப் பயன் படுத்தப்பட்டு வருகிறது. இவ் வுண்மையைக் கல்கத்தா சர்வ கலாசாலை வைஸ்சான்ஸலர் ஸ்ரீயுத மூக்கர்ஜியின் பிரசங்கமும் வலியுறுத்தும். விஞ்ஞான சாஸ்திர ஆராய்ச்சியால் மக்களுக்கு விளையும் விபரீதங்களைக் கண்டே, பெரும்பாலார், விஞ்ஞானகலை மக்களையும் உலகையும் நாசமாக்கி அழிக்க ஏற்பட்ட தூமகேது போன்றது என்று கூறிப் பரதவிக்கின்றனர். தற்போதைய விஞ்ஞான சாஸ்திரத்தின் விபரீதப் போக்கு அவர்களது பயத்துக்கு ஒருவிதத்தில் ஆதா

வளிக்கக் கூடியதா யிருக்கிறதாயினும், உண்மை நிலை அது வன்று. மனிதன் உலகில் இன்பவாழ்க்கையை நடத்துவதற்கு அடிகோலு வதே விஞ்ஞான கலையின் பெரும்பயனாகும் என்பதுதான் மறுக்க முடியாத உண்மை. இதுவரை கிடைத்துள்ள விஞ்ஞான ஆராய்ச்சி யுண்மைகள் பெரும்பாலானவற்றை மக்கள் நன்மைக்காக இன்னமும் உபயோகிக்கப் படவில்லை. மேற்படி கலையும், அதன் வாயிலாக ஏற் படுந் தொழில்களும் உலகுக்கு அழிவைத் தேடக்கூடிய விதமாக உப யோகிக்கப்பட்டு வருகிறது. இப்போதிருக்கும் நிலையைக் கவனிக் கும்போது, இனியும் அவ்வாறே அழிவு வேலைக்கு உபயோகிக்கப் படும் என்பதை யுணருகையில் நமக்கு மனக் குழப்பத்தை யுண்டு பண்ணுமென்பது திண்ணம். இதனால் தேசங்களுக்கு ஏற்பட்டு வரும் தீமைகள் கணக்கற்றவை. இது விஞ்ஞான கலையின் குற்றமா? அதைப் பயன் படுத்துவோர் குற்றமா? என்று கேட்டால், அவ மானமின்றிச் சுயநல நோக்கோடு உபயோகிப்பவர்களுடைய குற்றந் தான் என்று நாம் துணிந்து கூறுவோம். விஞ்ஞான கலை நெருப்பு போன்றது. இதை நன்மைக்கும் உபயோகிக்கலாம்; தீமைக்கும் உபயோகிக்கலாம். ஆகவே, இதை நாம் பொதுநலத்துக்கான சிறந்த முறையில் உபயோகிக்க வேண்டும். மக்கள் நன்மைக்கெனவே அது உபயோகிக்கப்பட்டால் எதிர்பாராத அளவு நன்மையும் க்ஷேமமும் தேசங்களுக்குக் கிடைக்கும்.

மேற்படி மகாநாட்டில் கலந்துகொண்ட விஞ்ஞானிகளெல் லாம் இதற்கு ஒரு நல் வழி காணவேண்டும். விஞ்ஞான கலையி னால் ஏற்படும் ஆராய்ச்சி உண்மைகளை இன்னின்ன காரியத்துக்காக இன்னின்ன விதமாகத் தான் மக்கள் உபயோகிக்க வேண்டும் என்று வரையறுக்க வேண்டும். மேலும் விஞ்ஞான சாஸ்திரிகள், நாடு பிடிக் கும் பேராசை கொண்ட அரசர்கள், சர்வாதிகாரிகளுக்கு அடிமைக ளாக அல்லது கருவிகளாகக் இருக்க கூடாது இவ்விதஞ் செய்தால் தான் உலகில் அமைதி யேற்படும். உலகில் தற்போதிருக்கும் குழப்ப நிலைமைமாறி அமைதி யேற்படுவது இவ் விஞ்ஞானிகளின் கையில்தான் இருக்கிறது.

விஞ்ஞான கலை யாராய்ச்சியின் உண்மைகளை மனித சமூகத்தின் மேம்பாட்டிற்காகப் பயன் படுத்துவதற்கு இந்தியாவில் அளவற்ற சந்தர்ப்பங்க ளிருக்கின்றன. விவசாயிகளின் வாழ்க்கை சுதந் தரத்தையும் நிலைமையையும் உயர்த்துவதே தமது முக்கிய நோக்கமாகக்கொள்ள வேண்டுமென்று நமது இந்திய விஞ்ஞான சாஸ்திரிகளை முக்கியமாகக் கேட்டுக் கொள்ளுகிறேம். உலகிலேயே மறக் கொடுமைகளை யொழித்து அமைதியை நிலை நாட்டிப் புதிய சகாப்தத்தை உண்டுபண்ணும் பெருமை நம் இந்திய விஞ்ஞான சாஸ் திரிகளுக்கு ஏற்படும் என்று நாம் பிரார்த்திப்போமாக.

# புது வருஷம்

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

நமது பரதகண்டத்தில் பல பல சகாப்தங்கள் அனுஷ்டானத்தி லிருக்கும் முறையிலும், சுமார் 200 ஆண்டுகளுக்குள்ளேயே பாரத தேசமக்களை, நடை, நொடி, பாவனை, பழக்கம், நாகரீகம், நினைப்பு பலவிதத்திலும் கொள்ளை கொண்டுவிட்ட இங்கிலீஷ் 1938-க்கும் பொருந் தலாம் என்றதால் அப்படி யுணர்ச்சி தோன்றியதோ என்னமோ? பல ருடைய சிந்தையிலும், "இன்று தேதி யென்ன?" என்று கேட்கப்படக் கூடிய கேள்விக்கு இங்கிலீஷ் முறை தேதிதான் பிரக்ஞையில் இருப்பது அனுபவமும், அனுஷ்டானமும் என்றால் அது மிகையாகாது! தவிரவும் பாட்டி காலத்தியதென்று இளக்கமாகக் கூறப்படும் பிரபவாதி வருஷங்கள், நவீன, யுவ உலகத்தில் காணப்படுவது அருமை என்பதும் அனுபவமும் அனுஷ்டானமும் ஆகும்!! இந்த விசேஷ விபரீதங்கள் தமிழரிடையில் தான் அதிகம் என்றால் பலருக்கும் வருத்தம் கொடுக்கக்கூடியதே யானாலும் உண்மை உண்மைதான். சமூகத்தில் பழகும்போதும், ஆந்திரர் ஆந்திர ருடன் ஆந்திரத்திலேயே பேசுவது பார்க்கிறோம். மலையாளிகள் மலையாளி களுடன் பேசுவது மலையாளத்து பாஷையிலேதான் பேசுவதைக் கேட்கி றோம். ஆயினும் நம் தமிழன்பர் மட்டும், "ஹலோ மிஸ்டர்" என்றே விளிப்பதையும் உரையாடுவதையும் அறிகிறோம். இதை யெல்லாம் தீர்க்க தரிசனத்தில், முடிவு கட்ட விரும்பிய நம் பாரதியார்,

> "வாழிய செந்தமிழ்! வாழ்க நற்றமிழர்!!
> வாழிய பாரத மணித் திருநாடு!!!"

என்று ஆரம்பிக்கிறார். கீர்த்தனைகளில் பாடும் "பல்லவி"யைப் போன்று இந்த இரண்டு முதலடிகளையும் வைத்துக் கொண்டு, பாடும் அன்பர்கள் பாடிக் களித்து, உற்சாகம் தாங்களும் கொண்டு, பிறருக்கும் உற்சாகம் ஊட்டுவார்களாக! அடுத்த இரண்டு அடிகளில்:—

> "இன்றெமை வருத்தும் இன்னல்கள் மாய்க!
> நன்மை வந்தெய்துக!! தீதெலாம் நலிக!!!"

என்று அமைத்தார். யாரும் விரும்புவது "நமது கஷ்டங்கள் இன்றோடு ஒழியட்டும். புது வருஷத்திலாவது நல்லது வரட்டும். உலகத்திலேயே நன்மைகள் வந்து நுழையட்டும். தீமையெல்லாம் தொலைந்து ஒழியட்டும்" என்பதுதான். ஆக அதையே ஒவ்வொரு பாரத வாசியினுடையவும் உளங் களிந்த கோரிக்கையும் பிரார்த்தனையும் ஆகட்டும் எந்த உண்மைத் தேசாபி மானியும் விரும்பவேண்டியது இயற்கையே யன்றோ? இரண்டடிகளையும் சங்கீத ரஸிகர்கள் அனுபல்லவியாக வைத்துப் பாடலாமோ என்றும் தோன்றுவது உணர்ச்சியின் காரணம். அடுத்தாற்போல்,

> "அறம் வளர்ந்திடுக! மறம் மடிவுறுக!
> ஆரிய நாட்டினர் ஆண்மையோ டியற்றும்
> சீரிய முயற்சிகள் சிறந்து மிக்கோங்குக!
> நம் தேசத்தினர் நாள்தோறும் உயர்க!"

என்று பாட்டு முடிவு நிலைமைக்கு வருகிறதை அன்பர்கள் படித்துணர்வார் களாக.

பாரதியாரின் பாட்டுக்கு அகராதி வேண்டுவதில்லை. சிறந்த இலக்கணஞானம் வேண்டும் என்பது இல்லை. பாடவேண்டுமானுல், சங்கீத சாமர்த்தியமும் வேண்டுவதில்லை என்பது பலருடைய உண்மையான ஆத்மார்த்தமான அபிப்ராயம் என்பதைக் கேள்விப்பட்டதன் பேரில் இதில் அக்தப்படி எழுதப்பட்டிருக்கிறது.

"எதோ கோணக் கோண கோயிந்தா'' என்றபடி வாயில் முடிந்தபடி இழுத்தாலும் அதனுடைய சுவையோ, உணர்ச்சியோ, பொருளோ குறைவதில்லை என்பது மட்டும் அனுபவம். அதற்காக சங்கீத சுவைக்காக சாஹித்யத்தைக் கொலை செய்வது அடாத பெரும் பழியேயாகும் என்று பலரும் ஒப்புக்கொள்ளக்கூடிய விஷயமாகும். சாஹித்யத்தையும் கொலை செய்யாமல், சங்கீதத்தையும் செம்மையுறச் சேர்த்து, உணர்ச்சி ததும்பும் முறையில் பாடினுல், எவ்வளவு பெரிய சமூகத்தையும் பரவசப்படுத்திவிடலாம். ஸ்ரீரங்கத்தில் கற்சிலை சிரக்கம்பனம் செய்ததென அரங்கேற்று கதைகளில் கேட்பது, பாரதி பாடல்களின் மூலம் உண்மையாகலாம். உண்மையாகும் என்பது நிச்சயம்.

மேலே சொன்ன நான்கு அடிகளையும் சரணங்கள் என்பார்களே அவற்றைப்போல பாடலாம். எழுதுபவர் "சங்கீத கோடறி'' வாயைத் திறந்தால் பேய் பிசாசுகள் சொல்லாமலே ஓடிவிடும். சாஸ்திர பிரக்ஞையும் அதற்கு அப்பன்தான். எதோ பாரதி பாடல்களிலுள்ள ஆசை காரணமாக இவ்வாறெல்லாம் "அப்படிப் பாடலாம். இப்படிப் பாடலாம்'' என்று எழுதிய குற்றத்திற்கு அறிஞர் மன்னிக்கவும்.

கடைசியாக மனதிற்கு ஒரு அமைதியும் சந்தோஷமும், சமாதானமும் வரவேண்டி "வந்தே மாதரம்! வந்தே மாதரம்! என்று பாட்டு முடிகிறது. ஆனுல் கடைசியாக உள்ள இரண்டு "வந்தே மாதரம்''களை நான்கு "வந்தே மாதரம்''களாகப் பெருக்கிச் சொல்லும் போது கர்ணாமிருதமாக இருப்பதுடன் பாடுபவரையும், கேட்பவரையும் பரவசப்படுத்தி, தன்னை மறந்த நிலைமைக்கு உயர்த்திவிடுகிறது உணரற்பாலது.

இதில் "அனுபல்லவியாகப் பாடலாம்'' என்று சொல்லப்பட்ட அடிகளுக்குப் பிறகு, "வாழிய செந்தமிழ்'' என்று பல்லவியாக வைக்கலாம் என்பதும், நம் தேசத்தினர் நாள்தோறும் உயர்க!'' என்பதற் கடுத்தும் அந்தப்படி செய்யலாம் என்பதும், கடைசியிலுள்ளதை இரண்டு "வந்தேமாதரங்கள் நான்கு "வந்தேமாதரம்''களாகப் பாடிய பின், மறுமுறையாக "வாழிய செந்தமிழ்'' பல்லவியைப் பாடலாம். பாடவேண்டும் என்று சொல்லுவது, சங்கீத ரஸிகர்களுக்குத் தேவையில்லை. இதை எழுதுபவர் போன்றவர்களுக்கு என்று எழுதப்பட்டிருக்கிறது, குறிப்பிட வேண்டியிருக்கிறது.

மேலே சொல்லப்பட்ட இந்தப் புதுவருஷப் பாட்டில், எந்த மதத்தினருக்காவது வெறுப்பைக் கொடுக்கக்கூடிய விஷயம் இருப்பதாக புலப்படவில்லை. யாவரும் ஆத்மார்த்தமாக விரும்பித் துதித்து, சிந்தித்து பிரார்த்திக்கும் விஷயங்களாகவே இருப்பது கண்கூடாகும். இம்மாதிரியான பாடல்கள் பல உண்டு.

---

# கம்ப சூத்ரமும், சூத்ர நிலைகளும்



(கவிராஜ பண்டிதர்-ரா திம்மப்ப ஐயர்.)

எந்த மொழியா யிருப்பினும் சுருங்கிய சொற்றொடர்களும் விரிந்த கருத்துக்களும் கொண்டு வருவனவாகிய வாக்கியங்களையே யாவரும் விரும்புவ ரென்பதை ஒவ்வொருவரும் அனுபவத்திற் காணலாம். இலக்கணங்களிலும் இலக்கியங்களிலும் இவ்வாறு பயின்று வருதலை ஆன்றோர் 'சூத்திரம்' என்ற பெயரால் வழங்குவர். பெரிய வடிவங்களின் பிரதிபிம்பங்களைத் தன்னுள்ளே திருந்த அடக்கி இனிதாகக் காட்டுகின்ற சிறிய பளிங்கு போலச் சிலவகை யெழுத்துக்களாலாகிய சொற்களில் பல்வகைய அகன்ற பொருள்களைச் செவ்வையாக அடக்கி, நோக்குவார்க்கு இனியதாக அப்பொருளை விளங்கச் செய்து, குற்றமில்லாமையாற் சொல் வலிமை, பொருள் வலிமைகளும், அழகுடைமையாற் பொருள் நுணுக்கங்களும் சிறந்து வருவனவே சூத்திரங்களாம் என்னுங் கருத்தமையப் பவணந்தி முனிவர்.

'சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச்
செவ்வ னாடியிற் செறித்தினிது விளக்கித்
திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம்'

என்று நன்னூலில் இதனிலக்கணத்தைத் தெளிவாகக் கூறியுள்ளார்.

மேற்குறித்த சூத்திரங்கள் ஒன்றோடொன்று பொருளால் தொடர்ந்து நிற்கும் நிலைகள் நான்கு வகையினவாகும். அவை இடையறாது ஒரு முகமாகவே செல்லுகிற ஆற்று நீரோட்டத்தையும், முன்னும் பின்னும் பார்த்துச் செல்கின்ற சிங்கத்தின் பார்வையையும், நடுவே சிறிது இடம் விட்டுக் குதிக்கின்ற தவளையின் குதிப்பையும், சேணிற் செய்மைக்கணின்று இறங்கி ஒன்றைக் கௌவிப் போதற்குத் தலை கீழாக விழுகின்ற பருந்தின் வீழ்ச்சியையும் போல்வன என்ற கருத்தால் (1) ஆற்றொழுக்கு, (2) அரிமா நோக்கம், (3) தவளைப் பாய்த்து, (4) பருந்தின் வீழ்வு என்று பெயர் பெற்று வருவனவாம். இதனை,

'ஆற்றொழுக் கரிமாநோக்கந் தவளைப்
பாய்த்துப் பருந்தின்வீழ் வன்ன சூத்திரநிலை'

என்ற நன்னூற் சூத்திரங் கொண்டறியலாம்.

இந் நால்வகைச் சூத்திர நிலைகளும் ஆன்றோரியற்றியுள்ள இலக்கண இலக்கியங்களில் ஆங்காங்குப் பயின்று வழிவனவற்றை நூலாராய்ச்சியாளர் செவ்வனே யறிவர்.

கல்வியிற் பெரிய கம்பநாட்டாழ்வார் தமது அரிய பெரிய காவியமாகிய இராமாயணத்தி லிவற்றை யமைத்திருக்கும் மாண்பு கவிவல்லோரிதயத்தைக் கவருந் தகைமைத்தாகலின், அவ்வின்பச் சிறப்பை யுலகுணருமாறு ஈண்டொரு சிறிது விள்ளலுற்றேம்.

செய்யுட்கள், சொல்லால் தொடர்ந்து வருதலும், பொருளால்

தொடர்ந்து வருதலுமாகிய இரண்டு தன்மைகளைப் பெற்று வரும். முன்னதனைச் சொற்றொடர் நிலையென்றும், பின்னதனைப் பொருட்டொடர் நிலையென்றும் நூலோர் புகல்வர். அந்தாதி, கலம்பகம், மும்மணிக் கோவை முதலான தமிழ்ப் பிரபந்தங்களில் சொற்றொடர் நிலைகட் குதாரணங்களைக் காணலாம். செய்யுட்கள் அணியணியாகக் கதைத் தொடர்ச்சி குறித்தும் வேறு காரணங் கருதியும் பொருட்டொடர்பு பற்றித் தொடர்ந்து வருதல் பொருட்டொடர் நிலையாகும். நூல்களிற் பெரும்பான்மையான செய்யுட்கள் இங்ஙனமே வருமாகலின், முன்பின் முறை பிறழாது இவ்வண்ணம் வருகின்ற செய்யுட்களை 'ஆற்றொழுக்கு' என்னும் சூத்திர நிலைக்கு உதாரணமாகக் கண்டு கொள்க.

இனி, அரிமா நோக்கத்திற் கெடுத்துக் காட்டாக வரும் பாசுரத்தைக் காண்போம். குகன் பரதனைச் சந்தித்துச் சம்பாஷணை புரிந்த போது, கம்பநாட்டாழ்வார்,

'உண்டிடுக்க ணொன்றுடையான் உலையாத அன்புடையான்
கொண்டதவ வேடமே கொண்டிருந்தான் குறிப்பெல்லாங்
கண்டுணர்ந்து பெயர்கின்றேன் காமின்கள் நெறியென்னாத்
தண்டுறையோர் நாவாயி லொருதனியே தான்வந்தான்'
'வந்தெதிரே தொழுதானை வணங்கினான் மலரிருந்த
அந்தணனுந் தனைவணங்கு மவனுமவ னடிவீழ்ந்தான்
தந்தையினுங் களிகூரத் தழுவினான் றகவுடையோர்
சிந்தையினுஞ் சென்னியினும் வீற்றிருக்குஞ் சீர்த்தியான்'
'தழுவின புளிஞர் வேந்தன் றாமரைச் செங்கணானை
எழுவினு முயர்ந்த தோளாய்! எய்தியதென்னை' யென்ன
முழுதுல களித்ததந்தை முந்தையோர் முறையினின்றும்
வழுவினனதனை நீக்க மன்னனைக் கொணர்வா' னென்றான்
'கேட்டனன் கிராதர் வேந்தன் கிளர்ந்தெழு முயிர்ப்பனாகி
மீட்டுமண்ணதனில் வீழ்ந்தான் விம்மினனுவகை வீங்கத்
தீட்டரு மேனிமைந்தன் சேவடிக் கமலப் பூவில்
பூட்டிய கையன் பொய்யி லுள்ளத்தன் புகலலுற்றான்'

என்று பாசுரங்களைக் கூறியுள்ளார்.

பரம பாகவதனான குகன் கப்பலில் தன்னந் தனியனாய் வந்து தன் எதிரே இராமர் சென்ற திசையை நோக்கித் தொழுதவனாகிய முதற் கண் திரியாங்க நமஸ்காரம் புரிந்து அதன் பின் அவனது திருவடிகளில் ஸாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினான்; அங்ஙனம் வணங்கிய குகனைக் கல்வியறி வொழுக்கங்களாகிய பெருமைக் குணமுடையோரது மனத்தினும் சிரத்தினும் சிறப்பாகத் தங்குகிற பெரும் புகழையுடையவனாகிய திருமாலின் நாபித் தாமரையிலே வீற்றிருக்கிற பிரமதேவனும் தன்னை வணங்கத் தக்க மேன்மையை யுடைய பரதனும் மைந்தனைக் கண்ட தந்தையைக் காட்டிலும் தன் மகிழ்ச்சி மிகும்படி யணைத்துக் கொண்டான். இங்ஙனம் பரதனால் தழுவப்பட்ட வேடர் வேந்தனாகிய குகன் பரதனை நோக்கி, நீ யிங்

செய்தியமைக்குக் காரணமென்னை? யென்று வினவ, அதற்கு விடையாகப் பரதன், உலக முழுதும் பாதுகாத்தற் கமைந்து நின்ற தன் தந்தை முன்னைய சக்கரவர்த்திகளது நியாய முறையினின்று தவறி விட்டானென்றும், அத்தவற்றை நீக்கும் பொருட்டு இராமனை வனத்தினின்றும் அயோத்திக் கழைத்துப் போகத் தான் வந்ததாகவுங் கூறினன். பொய்ம்மையற்ற கருத்தையுடையவனாகிய வேடர் வேந்தன் குகன் அதனைக் கேட்டு மிகுதியாகத் தோன்றுகிற பெருமூச்சை யுடையவனாய் மகிழ்ச்சி பொங்க மறுபடியும் தரையில் விழுந்து, சித்திரத்திலும் பொறித்தற்கரிய திருமேனி யழகனாகிய பரதனது சிவந்த திருவடிகளாகிய கமலங்களிற் சேர்த்தின கைகளை யுடையவனாய்ச் சில வாசகங்களை மொழிவானாயினன் என்பது, மேலே குறிக்கப் பட்ட கவிகளிலடங்கிய விஷயமாகும்.

இங்கே குறிக்கப்பட்ட நான்கு பாக்களில் இரண்டாவது பாசுரம் தனக்கு முன்னுள்ள முதற் பாசுரத்தையும், பின்னுள்ள மூன்றாம் பாசுரத்தையுந் தழுவி நிற்கின்றது. இதன் விவரத்தை நன்கு குறிப்பிடுவாம். இரண்டாவது பாட்டின் முதற்கண் உள்ள வந்து என்னும் வினை யெச்சம் முன் பாசுரத்திலுள்ள வந்தான் என்ற வினைமுற்றோடு பொருளைத் தழுவி நிற்கின்றது. இந்த இரண்டாம் பாட்டின் மூன்றாம் வரியிலுள்ள 'தந்தையினுங் களிகூரத் தழுவினன்' என்ற தொடர், மூன்றாம் பாட்டின் முதல் வரியிலுள்ள 'தழுவின புளிஞர் வேந்தன்' என்னுஞ் சொற்றொடரோடு பொருந்தி விவரமான கருத்துப் பெறச் சாதகமாகி நிற்றல் ஊன்றி யுணரற் பாலதாம். சிங்கந்தான் இயங்கும்போது முன்னும் பின்னும் நோக்கி நடத்தல்போல. 'வந்தெதிரே தொழுதானை' என்ற இச் செய்யுள் தனக்கு முன்னும் பின்னுமுள்ள செய்யுட் கருத்துக்களைத் தழுவிய வண்ணமாய்த் தான் இடையே யமைந்து நிற்றலால் இது 'அரிமா நோக்கத்'திற் குதாரண மாயிற்று.

நான்காம் செய்யுட்கண் இரண்டாவது அடியின் முதற்கணுள்ள 'மீட்டு மண்ணதனில் வீழ்ந்தான்.........பூட்டியகையன்' என்ற தொடர் இரண்டாவது பாட்டின் அமைந்த 'வந்தெதிரே தொழுதானை வணங்கினன் [வணங்கி] அவன் (இராமன் சென்ற திசையை நோக்கி எதிரே தொழுத அப் பரதனது) அடி வீழ்ந்தான்' என்ற தொடர்களோடு தொடர்புற்று நுணுகிப் பொருளுறக் கிடத்தலான் இந் நான்காம் பாட்டு, 'தவளைப் பாய்த்து'க் குதாரண மாயிற்று. தவளை குதிக்குங்கால் இடைவிட்டுக் குதித்த வியல்பு. அதுபோல், நான்காம் பாட்டு, தனக்கு முன்னுள்ள மூன்றாம் பாட்டின் கருத்தைத் தழுவாது இரண்டாம் பாட்டின் முன்னிரண்டடிகளிலுள்ள விடயங்களைத் தழுவி நின்றமையால் இது 'தவளைப் பாய்த்து'க் குதாரணமாக அமைந்தது.

இராவணன் சீதாபிராட்டியை யிலங்கையிற் சிறைக் கோட்டத் திடுவதன் முன்னர்த் தன் இதயமாகிய சிறையில் வைத்தான் என்று ஆரணிய காண்டத்திற் கம்பர் குறித்தனர்.

பின், அக் கவிஞரே இராமாயணம் இராவணனது மார்பகம் புக்க போது, மலர்க்கூந்தற் சானகியை மனத்தகத்தே மறைத்து வைத்த இடத்தைத் தேடுவதன் பொருட்டு உட்புகுந்து தடவிற்றே? எனச் சமத்காரமாக மறவாது கிளந்து போயினர். சேணிற் பறக்கின்ற பருந்தொன்று இடையே பல் பொருள்க ளிருப்ப, அவற்றின் கண் தன் பார்வையைச் செலுத்தாது

# பொருந்தா உணவு

———:0:———

ப்போது சென்ற பல ஆண்டுகளாக சில நச்சுப்பண்டங்கள் உணவுப் பொருள்களாய்க் கிளம்பி யிருக்கின்றன. அவை: காப்பி, தேயிலை, கொக்கோ, சாராயம் என்பனவாம். காப்பிக்கொட்டை தேயிலை கொக்கோ என்னும் இவற்றுள் ஒன்றைக் காய்ச்சி இறக்கிய சாற்றைக் காலை, நண்பகல், மாலை, இரவும் என்னும் நான்கு வேளைகளினும் முதன்மையான குடிநீராய்ப் பெரும்பாலும் எல்லாரும் பருகுதற்குத் தலைப்பட்டு விட்டார்கள். இவற்றை முன் குடித்தறியாத நாடுப்புறத்தாரும் கூட இப்போது இவற்றைக் குடிக்கக் கற்றுக்கொண்டு, இவை இல்லாமல் தாம் உயிர்வாழ முடியாதென்று சொல்லுகிறார்கள்! கல்வி செல்வம் நாகரிகம் என்னும் இவற்றில் தம்மை மேலாக எண்ணியிருக்கும் பலர் நாள் முழுவதும் இவற்றைப் பருகுவது தமக்கு இன்றியமையாததாகவும் பெருமையாகவும் எண்ணி நடந்து வருகிறார்கள்! தமக்கு முதன்மையாகவும் பெருமையாகவும் பிழைபட எண்ணி இந் நஞ்சை எந்நேரமும் பருகி இறுமாந்திருக்கும் இவர்களின் கல்வியையும் செல்வத்தையும் நாகரிகத்தையும் என்னென்போம்! உணவுக்காக எடுக்கும் வேறு சில பண்டங்களில் உள்ள நச்சுநீரை காட்டிலும் காப்பி தேயிலை கொக்கோ இறைச்சிச்சாறு என்னும் நான்கிலும் அது மிகுந்திருத்தலால் அது தெரியாமல் அவற்றை விரும்பிக் குடிப்போர் கல்வியும் நாகரிகமும் உடையவராவரா! பதின்மூன்றே காற்பலம் எடையுள்ள காப்பிக்கொட்டையில் எழுபது குன்றிமணி எடையுள்ள நஞ்சுநீரும், அவ்வளவே எடையுள்ள தேயிலையில் நூற்று எழுபத்தைந்து குன்றிமணி நஞ்சுநீரும், கொக்கோவில் ஐம்பத்தொன்பது குன்றிமணி நஞ்சுநீரும், இறைச்சியை அவித்து இறக்கிய சாற்றில் அறுபத்து

---

தன் இரைப்பொருளை நாடி நிலத்தகத்தே தாழப் பார்வையைச் செலுத்துதல்போல், யுத்த காண்டத்திலுள்ள

'வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த திருமேனி மேலுங்கீழும்
எள்ளிருக்கு மிடனின்றி யுயிரிருக்கு மிடனாடி யிழைத்தவாறோ
கள்ளிருக்கு மலர்க்கூந்தற் சானகியை மனச்சிறையிற் கரந்தகாதல்
உள்ளிருக்கு மெனக்கருதி யுடல்புகுந்து தடவியதோ ஒருவன் வாளி.'

என்னும் பாசுரம், ஆரணிய காண்டத்துள்ள

'மயிலுடைச் சாயலாளை வஞ்சியாமுன்னம் நீண்ட
எயிலுடை யிலங்கை நாதன் இதயமாஞ் சிறையில் வைத்தான்
அயிலுடை யாக்கையுள்ள மவ்வழி மெல்லமெல்ல
வெயிலுடை நாளிலுற்ற வெண்ணெய்போல் வெதும்பிற்றன்றே.'

என்னும் பாசுரக் கருத்தைத் தழுவி நிற்றலால், இது 'பருந்தின் வீழ்வு'க் குதாரண மாயிற்று.

மூன்று குன்றிமணி நச்சுநீரும் இருக்கின்றனவென்று அவற்றை நன்கு ஆராய்ந்து பார்த்த புகழ்பெற்ற ஆங்கில மருத்துவர் ஒருவர் கணக்கிட்டுக் காட்டி யிருக்கின்றார். இவைகளைக் குடிநீராக்கிப் பருகுவதால் இவற்றில் மிகுதியாயுள்ள நச்சுநீர் செந்நீரிற் கலந்து பல வகை நோய்களை வருவிக்கின்றது; ஆகவே, இவற்றைப் பயன்படுத்துவது நோய்களை உண்மையாகவே விலைகொடுத்து வாங்குவதாய் முடிகின்றது. நோய் கொண்ட காலங்களிலும் கூடக் காப்பியும் தேத்தண்ணீரும் விடாமற் பருகுகிறார்கள்; இவர்கள் நோய் கொண்டபொழுது அதனை நீக்குதற்கும் உடம்பினை வலி வேற்றுதற்கும் பெரிதும் உதவி செய்யுமென்று பிழைபட நினைத்து அவித்த இறைச்சிச்சாற்றையும் முட்டைக்கருவும் கொடிமுந்திரிச் சாறுங் கலந்த கலப்பினையும் உட்கொள்ளுகிறார்கள்; ஆனால், அவர்கள் நினைத்தற்கு மாறாக அவற்றின்கண் உள்ள நச்சுநீர் அவருக்கு மேலும் பல கொடுநோய்களை வருவித்து அவர்களைத் துன்புறுத்தி மாளச் செய்கின்றது. அங்ஙனமாயின், இவற்றை உட்கொள்ளும் பலர் நோய் நீங்கி நலம்பெறக் காண்கின்றோமே யெனின், இவற்றின் நச்சுநீர் நோயைச் சிலகாலம் உடம்பினுள்ளேயே அடக்கிவைத்து அதனைப் பெருநோயாகப் பின்னர் வளர்த்து வெளிப்படுத்துகின்றதென நுண்ணிய ஆராய்ச்சியிற் சிறந்த ஆங்கில மருத்துவர் உறுதி கூறுகின்றமையால், முன்னர்ச் சிறுநோயை நீக்கும் அப்பொருள்கள் பின்னர்ப் பெருநோயை வருவிக்குமென உணர்ந்து கொள்க. ஆதலால், நச்சுநீர் உள்ள காப்பி தேயிலை கொக்கோ இறைச்சிச் சாறென்னும் இவற்றை அறவே விட்டொழித்தல் நலமுடன் வாழ்தற்கு ஒரு சிறந்த வழியாமென்க.

இனிப் புகையிலை கஞ்சா அபின் சாராயம் முதலான மயக்கந் தரும் பொருள்களிற் கொடியதொரு நஞ்சு இருத்தலால் இவற்றைப் பயன்படுத்துகின்ற உட்கொள்பவர்களைப் போலவே நோயாற் பற்றப்பட்டு விரைவில் மாளுகின்றார்கள். காப்பி முதலான குடிநீரைப் பருகுகின்றவர்களுக்கு அறிவு மயங்குவதில்லை; மற்று இந்தப் பண்டங்களை உட்கொள்பவர்களுக்கே அறிவு மயக்கமும் உடன் வந்து சேருகின்றது. உடம்பை வளர்த்தற்கு வேண்டும் பொருட் பகுதிகள் சிறிதும் இல்லாத காப்பி, தேயிலை, கொக்கோ, இறைச்சிச் சாறு முதலியவற்றையும், மயகந்தரும் புகையிலை கஞ்சா அபின் சாராயம் முதலியவற்றையும் மக்கள் தம் அறியாமையாலும் பிழைபட்ட எண்ணத்தாலும் உட்கொண்டு இறைவன் தந்த அரிய உடம்பைப் பாழாக்குதல் ஐயோ! எவ்வளவு வருந்தத்தக்கதாயிருக்கின்றது.

புகையிலை தின்பவர்களும் புகைச் சுருட்டுப் பிடிப்பவர்களும் நரம்பு வலிவிழந்து இரத்தங்கெட்டு மூளை மங்கலுற்று விரைவில் மாளுகின்றார்கள் என்று ஆங்கில மருத்துவரிற் பலர் செவ்வையாக ஆராய்ந்து பார்த்துச் சொல்லுகிறார்கள். இதனாற்றான் அமெரிக்காவில் மிகச்சிறந்த ஒரு கல்விக் கழகத்தின் தலைவர் வீட்டிலாவது வேறிடத்திலாவது புகைச்சுருட்டுப் பிடிக்கும் எந்தப் பையனையும் தமது கழகத்தினுட் சேர்ப்பதேயில்லை. புகையிலையிலுள்ள நஞ்சு மூளையைக் கெடுப்பதால் அதனைப் பயன்படுத்துகின்றவனுக்குக் கல்வியும் நல்லறிவும் உண்டாதல் அரிது. அதுவல்லாமலும், புகையிலை தின்பவர்கட்கும் புகைச்சுருட்டுப் பிடிப்பவர்கட்கும் புகையிலைத்தூளை மூக்கினுட் செலுத்துபவர்கட்கும் நாளேற நாளேற உடம்பி

லுள்ள வலிமை கெடுதலால், அவர்களில் ஆண்மக்களாவார் ஆண்டன்மை இழந்தும் பெண்மக்களாவர் பெண்டன்மை இழந்தும் உலகின்கண் வெறிய நடைப் பிணங்களாகவே திரிகின்றனர் என்றும் இவ்வுண்மையை ஆராய்ந்து கண்ட மருத்து நூலார் உறுதி கூறுகின்றார்கள். புகையிலையை எந்த வகையிலாயினும் பயன் படுத்துகிறவர்கள் அருகிருந்தால் மற்றவர்கள் அவர்களிடத்து அன்புடையவர்களாயினும் அவர்களிடத்து அக்கோரத்தி லும், பிறகு அவர் தன்மையை நினைக்கும் போதும் அருவருப் படையாமல் இருக்கமுடிவதில்லை. அவர்கள் இதழ்களில் இறைவன் அமைத்த அழகிய சிவப்புநிறம் மாறி அழகற்ற கருப்புநிறம் ஏறியிருப்பதுடன், அவர்கள் வாயி லிருந்து புகையிலையின் தீய நாற்றம் அருகிருப்பவர் பொறுக்கக் கூடாமல் வீசுகின்றன; மூக்குத்தூளை மூக்கினுள் அடைப்பவர்களைப் பார்த்தாலோ மிகுந்த வெறுப்பு உண்டாகின்றது; அவர்கள் மூக்குத் தொளையில் சளியும் மூக்குத் தூளுங் கலந்து ஒழுகுதலும், ஒழுகும் அது மேலணிந்த உடை களில் வடிந்து கறையாகி நாற்றம் வீசுவதும் எவர்க்குத் தாம் அருவருப் பைத் தரா! இனிப் புகையிலையை வெற்றிலையோடு கூட்டிக் கூட்டி மெல் பவர்களின் பற்கறையும், அதனை வாயில் மென்றபடி வாய்ப் பேசும் பேச் சும், இடையிடையே புறத்தே போய் எச்சில் உமிழ்ந்து வரும் வகையும் எவ்வளவு வெறுப்பைத் தோற்றுவிக்கின்றன! இவற்றையெல்லாம் எண் ணிப் பார்க்குந் திருத்தமான அறிவுந் தூய்தன்மையும் வாய்ந்தவர்கள் புகை யிலையைக் கனவிலும் நினைவார்களோ! கல்வி கற்குஞ் சிறுர் இக்காலத்தில் எங்கே பார்த்தாலும் புகைசுருட்டுப் பிடிப்பதைக்கண்டு தூயதன்மையுடைய வர்கள் எவ்வளவு வருத்தமுறுகின்றார்கள்! ஆகையால் சிறியோர் முதற் பெரியோர் ஈறான எஃதிறத்தவரும் புகையிலையைத் தாம் தொடாமல் தூய ராயிருப்பதோடு, பிறரும் அதனைத் தொடாதபடி செய்வது இன்றியமை யாத கடமையாமென்க.

இனிக் கஞ்சா இலை புகையிலையினுங் கொடியதாய் உடம்பின் வலி வைக் குறைத்து இரத்தத்தை நஞ்சாக்கி அறிவை மயக்குதலால் அதனைப் பயன் படுத்தலும் சிறிதும் ஆகாது. கஞ்சாப் புகை பிடிப்பவர் துறவிகள் எனவும், அதனால் அவர்க்குப் பேரின்பக் காட்சிகள் புலனுமெனவும் தவறாக எண்ணி நடப்பவர் பலர் உண்டு. கஞ்சாப் புகை பிடிப்பவர் முகத்தைப் பார்த்தால் அவர் உயர்ந்தவராகக் கருதப்படுவதற்கு உரிய அடையாளம் எள்ளளவும் இலாதல் நன்கு விளங்கும். இயற்கைக்கு மாறாய்க் கண்கள் இரத்தம்போற் சிவந்து கன்னம் ஒட்டி மயக்கத்தாற் தடுமாறிய சொற்கள் உடையவராய், அருகிற் செல்வார்க்குப் பொறுக்கமுடியாத தீர்நாற்ற மும் அழுக்கும் நிறைந்த அவர்களைப் பெரியோரென்றல் வேறு எவ்வகை யாலோ அறிகிலம்! அது நிற்க.

இனிக் கஞ்சாவைவிடத் தீயதன்மை வாய்ந்தது அபின். அபின் தின் பவர் தூக்கமும் அறிவு மயக்கமும் மிகுதியும் உடையர். அவரது தீனிப்பை அபின் நஞ்சாற் செயலிழந்து போக, உண்ட உணவு செரிமானத்திற்கு வராமல் அவர் வயிற்றுவலியால் துன்புறக் காணலாம். அத்துன்பம் பொறுக்கமாட்டாமல் அவர் மறித்தும் மறித்தும் அபின் உண்டு மயங்கிக் கிடந்து சடுதியில் உயிரைத் துறக்கின்றார்கள். ஆதலால், இந்தக் கொடிய நஞ்சும் முற்றும் விலக்கற் பாலதொன்றும்.

இனி இவை யெல்லாவற்றினுங் கொடிய நஞ்சாகிய சாராயத்தின் பொல்லாங்கை உணராமல் அதனைக் குடிப்பவர் இவ்வுலகத்திலேயே நிரம்பத் துன்பத்தை உழப்பவர் ஆவர். அவர்கள் தம் உடம்பையும் அறிவையும் பாழாக்கி, உண்ணச் சோறும் உடுக்க உடையும் இருக்கக் கூறையும் இன்றி வறியராய் உழல்வதோடு தம்மைச் சேர்ந்தவரையும் தம் வயிற்றிற் பிறக்கும் பிள்ளைகளையும் அத் துன்பத்திற்கு ஆளாக்குகின்றமை எல்லாரும் அறிந்த உண்மையன்றோ ? ஆனல், மருத்துவரிற் சிலர் மட்டும் இதன் தீங்கினை நோய் நீக்கும் மருந்தாகப் பயன்படுத்தலாம் என்று சொல்லி, தம்பால் வரும் நோயாளிகட்கு அருந்தக் கொடுக்கின்றார்கள்; இதனை உண்ண வேண்டாதவர்களையும் உண்ணும்படி வற்புறுத்துகின்றார்கள். ஆனல் இதனை ஆராய்ந்து பார்த்து இதில் கலந்துள்ள பொருள்களைப் பகுத்துக் கணக்கிட்ட இயற்கைப் பொருள் நூலாரோ கொடி முந்திரிச் சாராயத்தில் தண்ணீர், மயக்க நஞ்சு, சர்க்கரை, புளிப்பு என்னும் நான்குமே யன்றி, மற்று நோய் நீக்குங் கரு எதுவுமே யில்லையென்று முடிவு கட்டியிருக்கின்றார்கள். இன்னுஞ் சாராயத்தின் வகைகளான பீர், பிராந்தி, ஜின், உவிசிக்கி, இரம் என்பவைகளும் மயக்க நஞ்சும் தண்ணீரும் பல அளவாய்க் கலப்பதனல் உண்டாவனவே யல்லாமற் பிற அல்ல எனவும் உறுதி கூறுகின்றார்கள். கொடி முந்திரிச் சாராயத்திலுள்ள நான்கு பொருள்களில் தண்ணீரும் சர்க்கரையும் புளிப்பும் மற்ற உணவுப் பண்டங்களில் ஏராளமாயிருக்கின்றன. ஆதலால், அவற்றிற்காகச் சாராயத்தைப் பருகவேண்டுவதில்லை. மற்று உணவுப் பொருள்களில் இல்லாத மயக்க நஞ்சு மட்டுமே இதன் கண் இருப்பதால், இது மக்கள் உடம்பையும் உணர்வையும் பாழாக்கும் இயல்பினதன்றி வேறொரு பயனுந் தருவதன்று.

சாராயம் மூளையைக் கெடுப்பது எவ்வாறெனில், அருந்தியவுடனே அது மூளையிலே தீங்கு விளைத்தலைச் சிறந்த ஓர் ஆங்கில மருத்துவர் பல படியாலும் நன்காராய்ந்து கண்டிருக்கின்றார். அவர் ஒரு முறை இரண்டு பலஞ் சாராய நஞ்சை நல்ல ஒரு நாய்க்கு அருத்த, அது தடியால் தலையடியுண்டதுபோல் உடனே செத்துப்போயிற்று. அவர் அதன் பின் ஒரு நொடிப்பொழுதுந் தாழாமல் அதன் மூளையை அகற்றி ஓர் ஏனத்தில் வைத்துக் காய்ச்சி வடிக்கவே அதிலிருந்து அச்சாராய நஞ்சின் பெரும் பகுதி இறங்கிற்று. அங்ஙனமே, இன்னுஞ் சில நாய்களுக்கு அவர் அச்சாராய நஞ்சைக கொடுத்து, அவை செத்தபின் அவற்றின் மூளை, செந்நீர், பித்து, ஈரம் முதலான உடம்பின் உறுப்புகளையெல்லாம் தனித்தனியே பிரித்தெடுத்துக் காய்ச்சி வடிக்க, மற்றவைகளைவிட மூளையிலேயே அந் நஞ்சு மிகுந்து இறங்கக் கண்டார். இங்ஙனமே இவர் செய்த ஆராய்ச்சிகளிலிருந்து சாராயமானது குடித்தவுடனே இரத்தத்திற் கலந்து மூளைக்குச் சென்று அதனைக் கெடுக்கும் உண்மை தெரியப்பட்டது.

(நல்வழி.)

---




# மதத்தின் அடிப்படை

(பண்டித-பூ. ஸ்ரீநிவாசன்.)

## மதமாவ தென்ன ?

மதமாவது என்ன? என்னும் விடைக்குத் "தெய்வக் கொள்கை" என்பது சுருங்கிய விடையாகும். உலக முதற்காரணப் பொருள் ஒன்று உண்டு என்பதில் அபிப்பிராயத்திற்கே இடமில்லை. ஆனால் அது எத்தகைய பொருள் என்பதில்தான் வெவ்வேறு முரண்பட்ட அபிப்பிராயங்கள் தோன்றுகின்றன. இயற்கை அல்லது பிரகிருதி என்பர் ஒரு சாரார். இயற்கை அல்லது பிரகிருதி எனப்படுவது அறிவற்ற பொருள்களாகலின் அதுவே உலக முதற்காரண வஸ்துவெனல் தவறு; ஏனெனில், அது அறிவுடைப் பொருளா யிருத்தல்வேண்டும். அதனோடு சர்வ சக்தி வாய்ந்ததாகவு யிருத்தல் வேண்டும் என்பர் மற்றோர் பிரிவினர். இந்த வாதம் நமக்கு வேண்டுவதில்லை. எவ்வளவோ எதிர்ப்புச் சக்திகள் தோன்றியும் அவையனைத்தினையும் பொருட்படுத்தாது "உலக முதற்பொருள்; அறிவுடைப் பொருள்; அதனினும் பேரறிவுடைப் பொருள்; சர்வ வியாபகப் பொருள்; சர்வ சக்தித்துவப் பொருள்" என்னும் நம்பிக்கையின் உறுதி சிறிதும் தளர்ச்சியுறவில்லை; மேன்மேலும் வளர்ந்துகொண்டே யிருக்கின்றது. அந்தப் பொருள்—பலவகைப் பெயர்களால் அழைக்கப்படினும்—பொதுவாக, தெய்வம்—கடவுள் என்னும் பெயர்களா லழைக்கப் படுகின்றது. "தெய்வம் ஒன்றுண்டு" என்னும் இக்கொள்கையே மதம் எனப்படும்.

"அத்தகைய பொருள் ஒன்று எனிருக்கவேண்டும்? அதற்கென்ன வேலை? அது சிந்தைக்கும் மொழிக்கும் எட்டாதது என்று சொல்லப்படுகிறதே. அத்தகைய வொன்றினை உண்மைப் பொருள் எனக் கொள்வதேன்? இருப்பினும், அதனால் நமக்கென்ன பயன்?" என்றெல்லாம் அதனை நம்பாதவர்கள் வினவுவர். இவ் வினாக்கள் தெய்வ நம்பிக்கை யுடையவர்களின் மனத்தை மாற்றுதலும், இவ் வினாக்களின் நியாயமான விடைகள் அந்நம்பிக்கை யில்லாதவர்களின் மனத்தை மாற்றுதலும் எதிர் பார்க்கக் கூடிய காரியங்களாகா.

## மதம் அவசியமா ?

எனினும், மனித வாழ்க்கை செவ்வனே நடைபெறுதற்கு மதம் அத்யாவசியமாகும். மதமின்றி மனிதன் வாழ முடியாது; ஒரு வகையில் அவன்

அதனைப் புறத்தே தள்ளினும் வேறு வடிவத்தோடு அது அவனிடத்தில் இருக்கவே செய்யும். மனிதத் தன்மையின் இயல்பிற்கு மதம் இன்றியமையாதது. மதமின்றிய வாழ்க்கை மனித வியற்கைக் குரியதன்று. கடவுள் இன்மைப்பொருள் என வழக்கிடுவோரும் தெய்வக்கொள்கை யுடையோரே யாவர். தெய்வக் கொள்கையுடைய ரல்லாதா ரொருவர் சத்தியத்தைக் கடைப்பிடித் தொழுகுவோரா யிருக்கலாம்; பரோபகார குணமுடையவரா யிருக்கலாம். இவை ஆஸ்திக (கடவுளுண்டு என்னும்) மதத்தின் வேற்று வடிவங்களே யாகும் .ஆனால், தெய்வ நம்பிக்கையின்றி நன்னெறியி லொழுகுவோர் வெகு அரியராதலோடு அந் நன்னெறியின் மேம்பட்ட நிலைகளை யெய்தப் பெறுதவராவர். ஆகலின், மனித வாழ்க்கையின் உன்னத இலட்சியத்தை யெய்துதற்கு ஒருவனுக்கு மதமானது இன்றியமையாத தாகின்றது.

உலகமானது மக்களை யொருவழிப் படுத்தாது பல வழிகளிலும் இழுத்து அலைக்கழிக்கும் ஆற்றல் வாய்ந்தவோர் இந்திரஜாலத் தன்மை யுள்ளது. அதன் வழிப் படாமல் மீளுதலே மக்களின் முதற்கடமை யாகின்றது. ஆனால், அதே சமயத்தில் அவ்வுலக வழிச் செல்வதும் அத்தியாவசியமாகின்றது. இவ்விரண்டையும்—உலக வழியில் செல்லுதலும் செல்லாமையுமாகிய இரண்டையும்—ஒரே காலத்தில் செய்யும் சக்தி வாய்க்கப் பெற்றாலன்றி, மக்கள் இவ்வுலகச் சுழற்சியினின்றும் மீளுதல் அரிது. இச் சக்தியைப் பெறுதற்கு மதம் அவசியமாகும். மத மின்றேல் மக்கள் இழி நிலையாகிய மிருகத்தன்மையை யெய்தாது தமக்குரிய மனிதத்தன்மையில் நிற்பதும், அதனினும் உயர் நிலையாகிய தெய்வத்தன்மையை நோக்கிச் செல்லுதலும் சாத்திய மாதலில்லை. இவற்றாலும் இவை போன்ற பிற காரணங்களாலும் மாந்தரின் உயிர் வாழ்க்கைக்கு மதம் அத்தியாவசிய மானது என்பது தெள்ளிதின் உணரப்படும்.

### பலவகை மதங்கள்

உலக முதற்பொருளைப் பற்றிய—கடவுளைப்பற்றிய—ஆராய்ச்சியில் அதன் நிலை அல்லது வடிவம் நிர்க்குணம் நிராகாரம் என்ற சொரூபலக்ஷணம் அறியப்பட்ட வரையில் பல என்னும் அபிப்பிராயத்திற்கே இடமில்லை. இந்த நிலையைவிட்டு சகுணம் சாகாரம் என்ற தடஸ்த லக்ஷணத்தினிடத்து வந்தபோதும், வழிபாட்டு முறைகளை வகுத்துக்கொள்ளத் தொடங்கிய போதுமே பலவித அபிப்பிராயங்கள் தோன்றி மதமும் பலவாகப் பிரிந்தது. இதில் ஆச்சரிய மெதுவுமில்லை. மக்களியல்பு—கொள்கை—மனம்—பல வகைப்பட்டிருக்கிற வகையில் ஒரு பொருளைப்பற்றிய அபிப்பிராயமும் பல வகைப்பட்டே யிருக்கும். இவ்வாறிருப்பதே ஒழுங்கு மாகும். ஒரு கொள்கையே யாண்டும் கொள்ளப்படுதல் வேண்டுமென்பது இயற்கைக்கே முரண்பட்டதாகும். ஆனால்,

### எல்லாம் ஒன்றிற்கே

கடவுள் நிலை, வழிபாட்டு நெறி இவற்றின் காரணமாகப் பலவாகப் பிரிவுபட்டுப் பல பெயர்களால் வழங்கி வரும் மதங்களில் எதனைக் கடைப் பிடித் தொழுகினும், எப் பெயரால் அப்பொருளை யழைப்பினும், எந் நெறி

யில் வழிபடினும் எல்லாம் அவ்வொரு பொருளினுக் குரியனவே யாம். வேறொரு பொருளில்லாமையின் பற்பல விடங்களிற் றோன்றும் ஆறுக ளனைத்தும் சாகரத்தையே சரணென வடைதல்போல, எல்லா—எவ்வகை—வழிபாடுகளும் அவ்வொன்றினையே சாரும். மதவேறுபாடுகளுக்குக் காரணம் மனவேறுபாடுகளே யாகலின் மதத்தில் ஏற்றத்தாழ்வுகளில்லை. ஆகவே, மதவாதங்களுக்கு—என் மதம் உயர்ந்தது, உன் மதம் தாழ்ந்தது என்னும் போருக்கு—இடம் சிறிதுமில்லை. ஏனெனில்,

அது, சமயநெறி காணாத சாக்ஷி.

எந்த மதமும் அந்தப் பொருளினியல்பை முழுதும் அறிந்ததில்லை; அறியவு முடியாது. மதமானது மக்களது அறிவாலும் ஆராய்ச்சியாலும் யுக்தியாலும் அமைக்கப்பட்டது. பொருள் அறிவினுக்கு எட்டாதது; அறிவினுக்கு மறிவாய் மிளிர்வது. ஆகவே, மதவாதிகளனைவரும் யானை கண்ட குருடரோ டொப்பவரேயாவர். யானை கண்ட குருடர்களின் வாதம் தவறல்ல; ஆனால் சரியுமல்ல. அவைகள் கூறியவை யனைத்தும் பொருந்தியதும் அவற்றிற்கு மேம்பட்டதுமே யானை. சமயங்க ளனைத்தாலும் கூறப்படுவதும் அதற்கும் மேற்பட்ட இயல்புகளையுடையதுமாகும் அப் பொருள். தானே தானாய் நின்றறியப்படுவதே யன்றி சொல்லிற்கும் மனத்திற்கு மடங்கியதன்று. மதம் சொல்லுக்கும் மனத்திற்கும் அடங்கியது. மனங்கடந்த நிலையில் மதமில்லை.

மதத்தின் அடிப்படை.

எல்லா மதங்களும் ஓர் சிறந்த அஸ்திவாரத்தின் மேலமைக்கப்பட்டிருக்கின்றது. அதனை யறிந்து அந்த அஸ்திவாரத்தைத் தகர்ந்து ஒழியாவாறு காப்பாற்றுவிடத்து மதம் யாதொரு பயனையும் தருவதில்லை. அந்த அஸ்திவாரம் எது? அதுதான் சன்மார்க்கம் அல்லது நல்லொழுக்கம் எனப் படுவது. ஒழுக்கத்தைக் கைவிட்டு மதவாதம் செய்வதோ, அல்லது தன் மதத்தைப் பெரிதெனப் புகழ்வதோ, அல்லது தான் கடவுளை வழிபடுபவன் எனக் கருதுவதோ வெறும் பொருளற்ற காரியங்கள். மதபோதனையின் வாயிலாகப் பரம் பொருளையடைந்து நல்வாழ்க்கையுற விரும்புவோர் முதலில் தம்மைத் தீமைகளினின்று விலக்கிக் கொள்ளுதல் அவசியம். இதற்குப் பின்னரே மற்ற பூசை தொழுகை தியானம் முதலிய அனுஷ்டானங்கள் வேண்டப்படுவனவாகும். பொய் பொறாமை வஞ்சனை முதலியன மதப் பயிரை அரித்தொழிக்கும் கொடிய கிருமிகளாகும். துர்க்குணமும் மதமும் ஓரிடத்திலிருப்பவை யன்று.

"கொலைகளவுகள் காமம் கோபம் விட்டார்க்கன்றோ
மலையிலக்கா நின்னருள்தான் வாய்க்கும் பராபரமே."

"பொய்வளரு நெஞ்சினர்கள் காணாத காட்சியே
பொய்யிலா மெய்யரறிவில்
போதபரி பூரண வகண்டிதா காரமாய்
போக்குவர வற்ற பொருளே."

"களம்பெறு வஞ்ச நெஞ்சினர் காணாக் காட்சியே."

"புலையும் கொலையும் களவுமிலாப்
புனிதத் தவத்தோர் தொழுதேத்தும்
புராரி குமாரா உமை சிறுவா
போரூர் முருகப் பெருமானே."

என்பனபோன்ற ஆன்றோரமுத மொழிகளின் கருத்து ஆராய்ந்தறிதற்பாலதாம். பரம்பொருளினருளைப் பெறு நெறியைக் காட்டும் மதத்தைக் கைக்கொண்டிருப்போர் அப்பரம்பொருளி னருளைப் பெற்ற பெரியாரது இத்தகைய அறிவு மொழிகளை யகத்திட் கொண்டொழுகுதல் அத்தியாவசியமாகும். எல்லா மதத்தைச் சேர்ந்த பெரியார்கள் அனைவரும் ஒழுக்கத்தையே அடிப்படையாகக் கொண்டிருந்தது மன்றி, அம்மதத்தினர்க்கும் அறிவுறுத்திப் போந்தனர். காலத்திற்கும் தேசத்திற்கும் ஏற்றவாறு கட்டடங்கள் வெவ்வேறு வகையில் அமைக்கப்படினும் அவ்வெல்லாவற்றிற்கும் கால்கோள்கள் ஒருவிதமாகவே அமைக்கப்படுதல்போல, வழிபாட்டு முறை முதலியவை பல்வேறு வகைப்படினும், அடிகோலியாகிய இவ்வொழுக்கத்தைப் பற்றிய மட்டில் யாதொரு வித்தியாசமும் கிடையாது. ஆகவே, ஒவ்வொரு மதத்தினரும் மதானுஷ்டான விஷயத்தில் எவ்வாறு நடந்துகொள்பவராயினும் முக்கியமாக இவ்வொழுக்கத்தின் விஷயத்தில் வெகு எச்சரிக்கையோடிருத்தல் வேண்டும்; இன்றேல் அம்மதத்தால், தங்கள் மதத்தின் மற்ற அனுஷ்டானங்களால் யாதொரு பயனையுமடையா ரென்பது திண்ணம். இது எம்மதத்தினர்க்கும் உடன்பாடான விஷயமாகும்.

புண்ணியமாம் பாவம்போம் போனநாள் செய்தவவை
மண்ணிற் பிறந்தார்க்கு வைத்தபயன்—எண்ணுங்கால்
ஈதொழிய வேறில்லை எச்சமயத்தார் சொல்லும்
தீதொழிய நன்மை செயல்.



# விதியோடு போரிட்ட மதிசூடி

:(o):

("சமூகத் தொண்டன்.")

தமிழகத்தை அரசுபுரிந்த மூவேந்தர்களில் பாண்டிய மன்னரும் ஒருவர். அவர்கள் மதுரையைத் தலை நகராகக் கொண்டு செங்கோலோச்சினர். அவர்கள் ஆட்சியை அன்பு, நீதி, வீரம், செல்வம் ஆகிய அரும் பெரும தன்மைகள் அரண் செய்து ஒளிர்ந்தன. அம் மன்னர்கள் தம் தாய் மொழி வளர்ச்சியையும், இலக்கியங்களையுந் தம் உயிர்நாடியாகக் கருதி வந்தனர். அவர்களில் இன்றைக்குச் சுமார் 1700 ஆண்டுகட்கு முன்னர் அரிமர்த்தன பாண்டியன் என்னும் மன்னர் ஆண்டுவந்தார்.

அவர் காலத்தில் ஒரு இளவேனிலில் பொழுது புலர இன்னும் அரை யாமம் இருக்கலாம். மன்னன் வாழ்கோயிலில் மங்கலப்பறை ஆர்த்துக் கொண்டிருந்தது. வீதிகளில் ஒருவர் இருவர் நடமாட்டத்தில் முகம் தெரியாது மறைத்துக் கொண்டிருந்த இருள் நல்லோரைக் கண்டு அஞ்சி ஒதுங்கும் வன்னெஞ்சர்போல் மெல்ல மெல்ல நழுவிக்கொண்டிருந்தது. தமிழகத்துக்கென தனிச் சிறப்பளிக்கும் முல்லை மல்லி முதலான மலர்களும், பாதிரி சண்பகம், தாமரை செங்கழுநீர் ஆகிய மலர் வகைகளும் "கும்" மென்று நறுமணங்களை ஏந்தி நின்றன. வைகறையாதலால் மெல்ல அசைந்த இளந்தென்றல் அப் பூமணங்களை வாரி வாரி வீசிக்கொண்டே உலவிற்று. கோழிக்குலங்களும், புள்ளினங்களும் அன்றையக் கடனை மறவாது ஆற்றுமாறு மக்களினத்திற்கு ஊக்கம் ஊட்டுவான் போன்று களிகுரல் காட்டி உணர்த்துவ தாயின.

மறையோதலும் திருப்பள்ளி யெழுச்சி பாடலும் ஆங்காங்கு நிகழ்ந்து கொண்டிருந்தன. உழவர்கள் நுகம்பூட்டிய காளைகளின் பின்னே உழவுக் கருவிகளுடன் வயல் நோக்கி சென்று கொண்டிருந்தனர். மற்றும் சாலிய வீதிகளிலும், குலாலர் வீதிகளிலும், செக்கார் வீதிகளிலும் மற்றும் பல தரத் தொழில் செய்வார் வீதிகளிலும் உள்ள எல்லா மக்களுமே களைப் பின்றி தொழிலாற்றக் காலை வேளையைப் பயன்படுத்துவா ராயினர்.

அருளே திருமேனியாக் கொண்ட சொக்கலிங்கப் பெருமான் திருக் கோயிலிலும் காலைப் பூசனைக்காவனவற்றை ஆதி சைவர்களும், அடியார்களும் ஆயத்தம் செய்து கொண்டிருந்தனர். அரண்மனையிலும் அந்தப் புரங்களில் அரசியர் உட்பட எல்லாருமே தத்தமக்குரிய அன்றாட் கடனை ஆற்றுவா ராயினர். அங்கு சிறப்பாய் அரண்மனை இளைஞர்கள் சிலம்பம் பயிலுதலைக் குறிப்பிடலாம். இங்ஙனம் தமிழகத்தின் தலைமைப் பட்டினத்தை அன்று நோக்குங்கால் தமிழரின் வாழ்க்கைச் சிறப்பும், அவற்றின் குறிக்கோளும் புலப்படாமல் இருந்திரா.

பாண்டிய மன்னனும் காலைக்கடன் தீர்த்து, திருவின் மிக்கத் தம் தேவியாருடன், பாண்டிய மன்னர்கள் வழி வழியாக வழிபட்டுவரும், தமது குலதெய்வமாகிய சொக்கலிங்கப் பெருமானை வணங்குவான் வேண்டி. வழக்கம்போல் புறப்பட்டு, அரண்மனை வாயில்கள் அனைத்தையுங் கடந்து கடைவாயிலையும் கடக்குந் தருணம்.—ஓடி வந்து மன்னர் திருமுன் நின்ற சாரணர் சிலர் கைகுவித்து, "வாழிய செந்தமிழ்; வாழிய செங்கோல்! வாழிய பாண்டியர் பெரும! வணக்கம்" என்று நெட்டுயிர்ப்புடன் மன்னனை வணங்கினர். அவர்கள் வார்த்தைகள் தெளிவுபட வில்லாமல் குழறிக் குழறி வெளிப்பட்டன. மன்னன் நோக்கினான் வியப்போடு உணர்ந்தான் குறிப்பால். "சாரணர்காள்! செய்தி என்ன? விளக்குங்கள் சுருக்காய். பகையரசர் எவரேனும் படையெடுத்து வருகின்றனரோ?" என்று பரபரப்போடு வினவினான். அவன் குரல் வீரமும், தெளிவும் தொக்கி ஒலித்தது. பாண்டிமாதேவியும் ஒரு பெண் தெய்வம்போல் அசைவற்று நின்றாள். சாரணர்கள் விடை கூறத் தொடங்கி "அரச ரேறே! அங்ஙனம் ஒன்றுமில்லை. பாண்டிய நாட்டின்மீது பகை கொண்டு படை யெடுக்கும் பார்த்திபர் பாரிலும் உளரோ? "ஆனால்" என்று அச்சம் தோய்ந்த குரலில் "வையையாறு எக்காலத்துமில்லாதபடி பேரிரைச்சலுடன் பெருக்கெடுத்து வருகிறது. இனியொரு விநாடியும் தாமதித்தால் இப்பதி பாழ்பட்டுப் போய்விடும்" என்று அரற்றினர். இங்ஙனம் இருக்கும் போதே அலங்கோலமாய் வீழ்ந்தடித்து ஓடிவந்த வேறு சிலர், "வாழிய மன்ன! வணக்கம்" என்று மன்னனை வாழ்த்தி பின்வருமாறு பகர்ந்தனர்.

"நாங்கள் வையைக்கு நீராடப் போனோம். பெரு வெள்ளம் வீறிட்டுக் கொண்டு வந்து வையைக்கரை மீதுள்ள வீதிகளெல்லாம் புகுந்து விட்டது. அவ் வீதிகளிலுள்ள மக்களும் தலைவிரி கோலமாய் தத்தம் உடைமைகளைப் பத்திரப்படுத்தும் வேலையில் பரபரப்புடன் முனைந்துள்ளார்கள்" என்று பகர்ந்தனர். பாண்டிமா தேவியும் தமது நாட்டின் மீதுள்ள அன்பின் மிகுதியால் கவலையுற்று திரும்பி அரண்மனைக் கேகினாள். மன்னன், நெஞ்சு பிளக்கும் இச் செய்தி கேட்டு ஒரு கணப்போது பதுமை போல் அசைவற்று நின்றான். ஆயினும் அக் கணமே பட்டின மக்களுக்கு ஆணைவிடுத்து ஆற்றின் கரைக்கு விரைந்தேகினன். அடுத்த நாழிகைக்குள் கடலோ வென்று அதிசயிக்கும்படி நகர மக்க ளெல்லாம் திரண்டு வந்து வேலை துவக்கி விட்டனர். வையையும், கணவனை யிழந்த கற்புத் தெய்வமாம் கண்ணகியின் வீர வெறி போல் சீறிப் பெருகிற்று. மக்களும் தளர்ந்தாரில்லை.

இப் பெருங் கூட்டத்தில் ஓர் வாலிபன்; சிவந்த மேனியன்: திரண்ட வடிவினன்; அழகு ஒளிரும் அகன்ற கண்ணினன்; முப்பது பிராயத்தினன் என மதிக்கக் கூடியவன். இடையில் ஓர் அழுக்கடைந்த கிழிந்த உடை. தலையில் ஓர் கூடை; கையில் ஓர் மண்வெட்டி ஆகிய இத்தகைய கோலத்துடன் தோன்றினான். அவனது தோற்றம் அங்குள்ளோர் அனைவரையும் மயக்கி விட்டது. அவர்கள் அக் கூலியாளனின் மோகன உருவத்தில் உள்ளத்தைப் பறிகொடுத்து நின்றனர். வேறு சிலர் "இவன் என்ன விஞ்ஞையனோ" வென்று அதிசயிப்பராயினர்; "இவ் வழகன் ஏனோ இக் கடுமையான வேலையை மேற்கொண்டான்? இவன் ஊர் இம் மதுரைப்

பதி தானோ?'' வென்று அனுதபித்தனர் மற்றும் சிலர். இன்னும் சிலர், ''இவன் யாராகத்தா னிருப்பான்? நாம் சென்று அவனது வரலாறு யாதென அறிவோம்'' என்று வேலையையும் விட்டு நமது ஆணழகனை அணுகி, ''அப்பா உன்னைப் பார்த்தால் எங்களுக்கு ஓர் வித அன்பு தோன்றுகிறது. உள்ளம் குழைகிறது. நீ யாரென்பதை யறியலாமோ'' வென்றனர்.

அவ் வாள் முகத்தில் இளநகை தவழ ''அப்படியானால் சொல்லுகிறேன். என் குறையைக் கேளுங்கள்'' என்று பின்வருமாறு பாடத் தொடங்கினான்.

(நொண்டி சிந்து.)

* கேளுங்கள் தம்பிமாரே—என்
வாழ்வு கெட்டுக் கூலியாளாய் வந்தவிதத்தை
என்னென் றெடுத்துப் புகல்வேன்—நான்
இருப்பது வடதேசம் அதிலேயொரு
வெள்ளிமலையது உண்டு—பார்க்க
வியப்புறுதலமது எமதுவீடு
குபேரனும் சுந்தரனும்—என்மனம்
கோணாமல் நடக்கின்ற தோழர்களாம்
எனக்கோ இருமனைவி—பார்வதி
ஏந்திழை கங்கையென்றிருவர்களாம்
விரும்பிய மக்கள் மூவர்—அவர்கள்
விநாயகன், வேலவன், வீரபத்திரன்
இவர்களோடிருந்து கொண்டு—குடும்பம்
இயல்பாய் நடத்திக்கொண்டெல்லோரு மதிக்க
தானவர் வானவர் வணங்க—தாணியாள்
தார்வேந்தரும் பணிய இருந்துகொண்டு
ஏக சக்ராதிபதியாய்—பலகாலம்
இடரின்றிச் சுகமாக வாழ்ந்துவந்தேன்
பார்வதி மலைநீலி—என்னைப்
பலவிதமாகவும் அலக்கழித்துப்
பேசாததெல்லாம் பேசினாள்—அதனால்

---

* இக் கட்டுரையில் அமைந்துள்ள பாட்டு, மதுரையம் பதியில் ஓர் பெருங் குடியிற் பிறந்து, அருணகிரியாரிடத்தும், அவர் தம் அருட்பாவாம் திருப்புகழிடத்தும் பேரன்பு பூண்டு, இளமை தொட்டே தமது வாழ்வைப் பெருவாழ்வாக மாற்றிக்கொண்டு, தேசீயப் போராட்டத்தில் சிலகாலம் கலந்து உழைத்துப் பின் அண்ணாமலையிலுள்ள ரமண ஆசிரமத்திலிருந்து, பிறவிப்பயன் யாதென அறிந்து கொண்டு, அவ்வழியிலேயே நின்று வாழ்க்கை நடத்தும் திருமதி அலுமேலு அம்மையார் அவர்களால் உதவப்பட்டது.

பிரிந்திட மனம்நொந்து துணிவடைந்தேன்
மக்கள்நடத்தையும் பார்த்தேன்—ஒன்றும்
மதிப்பில்லை கணபதி என்னசெய்கிறான்
எந்தெந்த காரியத்திலும்—என்னை
முந்திக்கொண்டு சென்றங்கு குந்திவிடுவான்
வேலவன் சேதிகேளும்—பெண்களை
விரும்பித் தொடர்ந்தலைவான் நானதுகண்டு
குடும்பத்தைக் கவனியாமல்—இந்தக்
கோலாகலம் செய்திடுதல் நியாயமோ வென்றேன்
புத்தி எனக்குப் போதித்தான்—என்னடா
புகலுகின்றாய் என்றதற்குக் கோபாவேசனாய்
ஆண்டிபோல் வேடம் பூண்டு—வீடுவிட்டு
அகன்றுவிட்டான்; மற்றொருவன் வீரபத்திரனோ
சண்டைக்குத் தோள் தட்டுறான்—சற்றும்
சாந்தமென்பதில்லை, இல்லை, சன்மார்க்கனல்ல
இத்தனை தொல்லை கண்டு—நானும்
ஏங்கி யாய்த்துறந்து விட்டேன் பிழைப்பதற்கு
நான் துறந்த சேதியறிந்து—மைத்துனன்
நாராயணன் கடலிலே போய் விழுந்தார்
மாமன்மார் இருவரிலே—ஒருவர்
மனம்நொந்து மலைதனில் தங்கிவிட்டார்
இன்னொருவர் தன் தலையை—யிழந்து
இறந்து விட்டார் இந்த வேதனையினால்
அது கண்டு நான்சாக—விடத்தை
அள்ளியுண்டும் சாகவில்லை, பிழைத்திருக்கின்றேன்
பொல்லாத காலத்தாலே—பெண்டுபிள்ளை
பொருள் மனையாவையும் விட்டு பித்துகொண்டேன்
ஒருவன் சிரம் கிள்ளிவிட்டேன்—உலகோர்
என்ன இவன் பித்தனோ பேயனோ வென்றார்
கல்லாலும் வில்லாலும் அடித்தார்—ஒருவன்
காலினால் உதைத்ததையும் பொறுத்துக் கொண்டேன்
பித்து தெளிந்தவுடனே—மதுரையில்
பெண்ணொன்றைக் கண்டுமணம் செய்துகொண்டேன்
வயிறு வளர்ப்பதற்கு—மன்னவன்
வாழ் மதுரைப்பதியில் வளையல் விற்றேன்
மாணிக்கக் கோவையும் விற்றேன்—வறுமை

மட்டடங்க மாட்டாமல் கெட்டலைந்ததால்
குதிரைச் சேவக ஞனேன்—கஷ்டங்கள்
கொஞ்சமல்ல விறகுகட்டு விற்றும் பிழைத்தேன்
தேவர்கள் அவிர்ப்பாகம்—புசித்தும்
தீராப்பசியால் சிறுபிள்ளை கறியும்
வேடன் கொடுத்த ஊனும்—உண்டும்
விடவில்லை கொடும்பசி ஆகையினாலே
வந்தியின் பிட்டுக்காக—கூலியாளாய்
வந்தேனிந்த வைகையில் மண்ணும் சுமக்க
என்பேர் சொக்கலிங்கம்—எழில்
இசைந்த என் மனைவிபேர் மீனாட்சி
என்ற என் வரலாற்றை கூலிகளாம்
உங்களுக்குச் சொல்லியிங்கு வேலை பார்ப்பேன்

(கேளுங்)

அந்த ஆள் தன் வரலாற்றைச் சொல்லிமுடிக்கு முன்னரே பாண்டிய மன்னன் வெள்ளம் அடைபடா திருப்பதையும், ஆட்கள் கதை கேட்டுக் கொண்டு காலம் போக்குவதையும், இவைகளுக்கு யாது காரணமென்பதை அறிந்துணர்ந்தவனாய்ப் பெருஞ்சினங் கொண்டு தமது கைப் பிரம்பால், வரலாறு சொல்லிவந்த அழகனை விளாசினான். அக்கணமே பேரதிசயம் தோன்ற எல்லோர் உடம்பிலும் அந்த அடி விழ, அனைவரும் "ஜயகோ" வென்று வீறிட்டனர். அவ்வாளும் மாயமாய் மறைந்தான். வெள்ளமும் கட்டளையிட்டதுபோல் நின்றுவிட்டது. இவ்வதிசயங் கண்டு மன்னன் முதல் மக்கள் எல்லோரும் திகைப்புற்றனர்.

அப்போது வான வீதியில் சோமசுந்தரக் கடவுள், "செழியர் பிரான் திருமகளாய், கலைபயின்று, முடிபுனைந்து, தழைவுறு தண்ணரசளித்த," மீனாட்சியுடன் காட்சியளித்து, எல்லோரும் அதிசயிக்க "தமிழ் வளர்க்கும் மன்னா! யாமே உனக்கு, அப்பன் வாதவூரன் பெருமை யுணர்த்த வேண்டியும், வந்தியென்னும் முதியாளை ஆட்கொள்ள வேண்டியும் வைகையைப் பெருக்கி கூலியாளாக வந்தோம்" என்று திருவாய் மலர்ந்தார். மக்களும் மன்னனும் வாதவூரரையும், வந்தி பெருமாட்டியையும் வாழ்த்தி வணங்குவாராயினர்.



# தாயும், மகளும்

(வித்வான்-சீ. க. அன்னக்கிளி.)

"தமிழ் நாட்டினர் கல்வியின் சிறப்பையும், கற்பனு சக்தியின் நுட்பத்தையுங் கண்டறிந்தவர்கள்" என்று கூறி வாதம் புரிவோர் பெரும்பாலோர். இதற்கு மாருக "அவர்கள் ஒற்றுமைக் குணம் இல்லாதவர்கள்; இன்பத்தையே பெரிதாகக் கருதுபவர்கள்" என்று கூறுபவர்களும் இருக்கிருர்கள். அதற்கிடையில், "மனித வாழ்க்கையின் அடிப்படையான தத்துவங்கள் அவர்கள் மனதைக் கவர்ந்தனவா அல்லது தமிழ் நாட்டுக் கவிகளின் வெறுங் கற்பனையா?" என்பன போன்ற தீவிர ஆராய்ச்சிகளில் இறங்கி, மூளைக் கோளாறு அடைபவர்களும் உண்டு. யார் எப்படிச் சொன்னலும், "தமிழர்கள் வாழ்க்கைப் பரிசோதனையில் உயிரை ஆகுதி பண்ணும் வரை, தருமத்தினின்றும் சிறிதும் விலகாத திடசித்தர்கள்" என்று கூறுவது மாத்திரம் உண்மையிலும் உண்மையாகும்.

"முள்ளூர்க் கானம்" என்பது தமிழ் நாட்டிலுள்ள ஒரு சிறிய நிலப் பகுதி. அது பாண்டிய ராஜ்யத்திலிருந்தது. ஆனல், அது ஒரு தனிக் குறு நில மன்னன் பாதுகாப்பில் இருந்து வந்தது. கதை நிகழ்ந்த காலத்தில் அதற்குத் தலைவனு யிருந்தவன் "அவினி" என்பவன். அவனை வீரத்திற்கு உதாரணமாக அந் நாட்டினர் கூறிக் கொள்வது வழக்கம்.

"பர்வதகுமாரி" அவனுடைய ஏகப்பெண்; சிருஷ்டியின் பரிபூரணத் தன்மை அவள் வடிவில் நிரம்பி யிருந்தது. தந்தையின் குணங்களெல்லாம் மகளிடம் அப்படியே படம் பிடித்தது போல் காணப்பட்டன. அவள் தமக்கு இளவரசியாய் வாய்க்கப் பெற்றதை அந் நாட்டினர் தமக்கு ஒரு கௌரவமாகவே கருதினர்.

மாலை மயங்கும் நேரத்தில் பர்வ்தகுமாரி பூங்காவில் உலாவிக்கொண்டிருந்தாள். சூரியனின் மறைந்த கதிர்கள் ஜீவ ஒளியை உலகில் பரப்பியது. நகைச்சுவை ததும்பத் தோழிகளுடன், உரையாடிக் கொண்டிருந்தாள் அந் நங்கை; இங்ஙன மிருந்தால் வெளியில் நின்று தன்னையே கவனித்துக் கொண்டிருக்கும் வாலிபனை அவள் எங்ஙனம் உணர முடியும்?

வெளியில் நின்ற குதிரையின் மீது சுந்தர பாண்டியன் ஆரோகணித்திருந்தான். குதிரையின் கடிவாள வார் அவன் கைகளினல் இழுத்துப் பிடிக்கப்பட்டிருந்தது. அவனுடைய இரண்டு கூரிய கண்களும் நந்தவனத்தின் உட்புறத்தை நோக்கி யிருந்தன. அந்திமாலையின் வெண்ணிலவொளியில் பர்வத குமாரி அவனுக்குச் சுவர்ண விக்கிரமாகக் காட்சி கொடுத்தாள். இடை யிடையே தோன்றி மறையும் குயிலின் தொனி, அவனுடைய குரலுக்கு ஒப்பாகக் கருதி, முயற்சி செய்து, தோல்வி

யடைந்து வாய் மூடி யிருக்கின்றனவோ'' என்று அவனைச் சந்தேகிக்கும் படி செய்தது.

மறுநாள் மாலை சோலையினின்று வீட்டிற்குத் திரும்பினள் பர்வத குமாரி. வீட்டிற்குள் யாரோ உரத்துப் பேசும் சப்தம் கேட்டது. உற்றுக் கவனித்தாள். தன் தந்தை தாயினிடம் கோபமாய் பேசுவது போன்று தெரிந்தது; அவர்கள் சம்பாஷணையின் மூலம் அவள் அறிந்து கொண்ட விஷயம் பின்வருமாறு:—

''சுந்தரபாண்டியன்'' என்னும் பாண்டிய அரசன் பர்வத குமாரியைச் சோலையில் கண்டு அவள் அழகில் மதிமயங்கி, அவளை விவாகம் செய்ய விரும்பி, அவள் தந்தைக்குத் தூது அனுப்பினன். வாழ்வின் உயர்வு, தாழ்வை நன்குணர்ந்த அவினி, பாண்டியனது சம்பந்தத்தை விரும்பவில்லை. தூதுவன் பாண்டியனுடைய பெருமையையும் பலத்தையும் எடுத்துக் கூறினன். மன வெறுப்புடன் அவினி, பாண்டியனையும் அவனுடைய அரசாட்சியையும் பலவாறு இழித்துக் கூறினன். அதனல் கோபங் கொண்ட தூதுவன், ''நன்ருக ஆலோசனை செய்து விவாகத்திற்குச் சம்மதி; இல்லையேல், இன்றைக்கு மூன்ரும் நாள் நடக்கும் போர்க்களத்தில், பாண்டியனுடைய பிரகாசிக்கும் வாள் முனைக்குப் பதில் சொல்லத் தயாராயிரு'' என்று சொல்லி விட்டுப் போய் விட்டான்.

மூன்ரும் நாள் போர் நடந்து கொண்டிருந்தது. காதல் பரிட்சையில் தோல்வி யடைவதென்ருல், அதனல் உண்டாகும் துன்பத்தை எழுத்துக்களால் எப்படி வருணிக்க முடியும்? ''ஆசையுற்ற பொருளை அடைந்தே தீர வேண்டும்'' என்ற வீரா வேசத்துடன் போர் புரிந்தான் பாண்டிய மன்னன்.

''நான் என்னுடைய கடமையைச் செய்கிறேன்; பலன் ஆண்டவன் கொடுப்பார்'' என்ற நம்பிக்கையோடிருந்தான் அவினி. அவனது வீரர்களும், ''தலைவனுக்குச் செய்யும் மரியாதை தமது உயிரைப் பலி கொடுப்பதே'' என்பதை உணர்ந்திருந்தனர். பன்னூறு வீரர்கள் பூமியில் விழுந்தனர். சினங் கொண்ட பாண்டியன் தன் படையை முன் செலுத்தி அவினியின் படை பின்னடையச் செய்தான். அப்பாதகனது வாள் அவினியின் தலையை அறுத்துக் கீழே தள்ளியது. வீரர்கள் பின்னும் சளையாது போர் புரிந்து கொண்டிருந்தனர்.

அவனியின் துண்டிக்கப்பட்ட பிணத்தை நான்கு வீரர்கள் சுமந்து கொண்டு வந்தனர். அந்த உயிரற்ற உடலுக்கு உயிருணவு கொள்ளும் வாள் முனையினல் தாயும் மகளும் மரியாதை செய்தனர். அவர்கள் கண்களிலிருந்து ஒழுகிய நீர் மழை அவர்கள் மனத்துயரத்தை ஒருவாறு அலம்பியது. அவினியின் மனைவி கோசலை சவத்தின் முன்பு ''தனி மனிதனின் சுதந்திர வாழ்க்கைக்குப் பாதுகாப்பில்லாத நாட்டில் இனி ஒரு நிமிஷமும் நிற்க மாட்டேன்'' என்ருள். இதற்குள் மகள் ''என் தந்தையின் முடிவைப் பயன்படுத்தியே தீருவேன்; எனக்கும் கல்யாணம் கிடையாது'' என்ருள்.

போர் முடிந்த பின்பு நகருக்குள் நுழைந்தான் பாண்டியன்; நேரே அவினியின் அரண்மனை சென்ருன். அவன் நேத்திரங்கள் பர்வத குமாரியைத் தேடின.

ஆகாய மளாவ வளர்ந்த நெருப்புக்குன்றம் ஒன்று அவன் கண்களில் தென்பட்டது. "பர்வத குமாரி எங்கே" என்ற கேள்வி பாண்டிய னிடத்திலிருந்து கிளம்பியது. "அவினியின் பிரிவைச் சகிக்காமல் இந்த நெருப்புக்குன்றத்தில் குளித்துத் தாயும் மகளும் உயிர் நீத்தனர்" என்று அங்கிருந்தோர் பதில் கூறினர். பாண்டிய வீரர்கள் நாலாதிசையிலும் சென்று தேடினர். அவனுடைய எண்ணம் சித்தியாகவில்லை. ஏமாற்ற மடைந்த முகத்துடன் வெளிக்கிளம்பினான் பாண்டியன்.

"நகருக்குள் நுழைந்தால் பாண்டியன் தமக்குத் தீங்கிழைப்பான்," என்று தாய்க்கும் மகளுக்கும் தெரியும். வெற்றிக்கும் பிரதியாகத் தம்மை விலைப்படுத்த அப் பெண்கள் நாயகங்கள் விரும்பவில்லை. வேற்றுடைகளை அணிந்துகொண்டு தங்கள் உருவத்தைப் பாண்டிய சேவகர்களைப்போல் மாற்றிக் கொண்டனர்.

திட்டம் செய்து வைத்தபடி எல்லாக் காரியங்களும் நிறைவேறின. சைனியத்தோடு வெளிக்கிளம்பினர் மாதரிருவரும்.

"தழைக்காடு" என்பது ஆதித்த சோழனுடைய ஆக்ஷிக் குட்பட்டிருந்த ஒரு சிற்றூர். அது "பராக்கிரமன்" என்னும் சோழசேனாதிபதியின் பாது காப்பி லிருந்தது. அவ்விடத்திற்கு வந்து சேர்ந்தனர் இருவரும்.

தழைக்காடு என்னும் அவ்வூர் காவேரிக்கரையி லிருந்தது. "தரும லிங்கம்" என்பவர் அவ்வூரினர். மாதர்களின் துயர மெழுகிய முகங்கள் அவர் மனத்தை உருக்கியது. அவர்களுடைய வரலாறு முழுவதையும் அறிந்து கொண்டு அவர்களை அன்புடன் ஆதரித்து வந்தார்.

நீர் மிகுதியினால் தழைக்காடு எல்லாவித வளங்களும் நிரம்பி யிருந்த தில் ஆச்சரியமில்லை யல்லவா ? இன்னும் இத்தகைய பிரதேசத்தின் மீது, அப்பொழுது அந்நியப் பிரதேசங்களைத் தன் வசப்படுத்தப் பெருமுயற்சி கொண்டிருந்த சுந்தர பாண்டியனுக்கு ஒருகண் விழுந்தது இயற்கை தானே !

ஒற்றர்கள் பறந்தனர்; பாண்டியன் நினைத்தபடி பராக்கிரமன் அவன் சொல்லுக்குக் கீழ்ப்படியச் சம்மதிக்கவில்லை. அத்துடன் பாண்டியனுடைய போர்த்துவக்கத்தைப் பிரமாதமாக எண்ணவுமில்லை. அதனால் தன் தலைவ னாகிய சோழனுக்குச் செய்தி சொல்லி யனுப்பவுமில்லை.

வழக்கம்போல் போர் ஆரம்பமாயிற்று; பராக்கிரமனிடம் உள்ள போர் வீரர்கள் ஒரு நூற்றுவரே. வரிசைக்குப் பப்பத்துப் பேராகப் பத்து வரிசையாக நின்றனர் தழைக்காட்டு வீரர்கள். அவர்கள் முகத்தில் விளங் கும் போர் வெறியைக் கண்டு வீரநகை புரிந்தான் பராக்கிரமன்.

பாண்டிய வீரர்களின் தொகை ஒரு ஆயிரம். "இலகுவில் வென்று விடலாம்" என்ற எண்ணத்தினால் அவர்கள் தாறுமாறாய் நின்றனர்.

தோல்வியால் ஏற்படும் அவமானப் பெருக்கை, நினைத்துப் போர் புரிந்தனர் பாண்டியவீரர்கள். உரிமைக்காகப் போராடினர் தழைக்காட்டு வீரர்கள்.

வாட்கள் சுழன்றன; ஈட்டிகள் பாய்ந்தன; குந்தங்கள் அறுத்தன; வீரர்கள் தலையறுந்து தரையில் உருண்டனர்; மிருகங்கள் அடிபட்டு விழுந்தன; பிணக்குவியல் தோன்றியது; தரையை இரத்தப்போர்வை கொண்டது.

பாண்டிய வீரர்கள் ஒரு நூற்றுவர் உயிரிழந்தனர். பாண்டியன் படையை மேலும் மேலும் ஊக்கிக் கொண்டிருந்தான். மேலும் படைகள் வருவதற்குத் தூதனுப்பப்பட்டது.

தழைக்காட்டு வீரர்கள் ஐம்பதின்மர் மண்ணில் சாய்ந்தனர். அஞ்சா வீரனாகிய பராக்கிரமன் மனதில் சிறிது ஆலோசனை உண்டாயிற்று; சோழ ராஜனுக்குச் செய்தி சொல்லி யனுப்ப வேண்டுமென்று தீர்மானித்தான். "நம்பிக்கையுடன் அதைச் செய்பவர் யார்?" என்று அவன் மூளை வேலை செய்தது. அதனால் அவன் முகம் சிறிது சோர்ந்து காணப்பட்டது.

பக்கத்திலிருந்த தருமலிங்கம் அதை உணர்ந்தார். விஷயத்தைப் பராக்கிரமன் கூற அறிந்து கொண்டார். உடனே அவ்விடத்திலிருந்து மெதுவாக நழுவி நேரே தன் வீடுபோய்ச் சேர்ந்தார்.

கோசலையும் பர்வத குமாரியும் அவரை வரவேற்றனர். "எனக்காக உங்களால் ஒரு காரியம் செய்ய முடியுமா?" என்றார் அவர்களிடம். "இப்பொழுதே செய்து முடிக்கிறேன்" என்று எழுந்தாள் பர்வதகுமாரி. விஷயத்தைக் கூறிவிட்டு மகிழ்ச்சியுடன் திரும்பினார் தருமலிங்கம்.

பழைய பாண்டிய வீரர்கள் உடையை எடுத்து அணிந்துகொண்டாள் பர்வதகுமாரி. சோழனிருப்பிடம் தஞ்சாவூர். விரைந்து செல்லத்தக்க குதிரையின்மீது ஏறி உட்கார்ந்து கொண்டாள். "கண்மணி! உன் உயிரையேனும் இழந்துவிடலாம்; விஷயத்தை மட்டும் பாண்டிய வீரர்கள் அறிய வெளிப்படுத்தக் கூடாது" என்று புத்திமதி கூறினாள் தாய் கோசலை.

வடக்குத் திசையை நோக்கிக் குதிரை சென்று கொண்டிருந்தது. வேற்றுப்படையின் வருகையை உளவறியும் பொருட்டுச் சுற்றித் திரியும் பாண்டிய வீரர்கள், "எங்கே போகிறாய்?" என்று அதட்டினர். "சுந்தர பாண்டியர் ஒரு காரியார்த்தமாக என்னை அனுப்பியிருக்கிறார்; "விஷயத்தை யாரிடமும் வெளிப்படுத்தக்கூடாது" என்பது அரசரின் கண்டிப்பான உத்திரவு" என்று கூறினாள் தைரியமாக. அவளுடைய வெடித்த மொழிகளைக் கேட்டு நம்பி வழிவிட்டனர் அவர்கள்.

அவளது மனோவேகத்தை விடக் குதிரை அதிவேகமாய்ச் சென்றது. பரபரப்புடன் தஞ்சாவூர் வந்து சேர்ந்தாள். அரசன் செய்தியை அறிந்து திடுக்கிட்டான். "பாதுகாப்பிற்காக முன்னால் ஆயிரம் வீரர்களை அனுப்புகிறேன். பின்னால் நானும் வருகிறேன். நீயும் வீரர்களுடன் போ" என்றார் அரசர்.

"வீரர்களைச் சீக்கிரம் அனுப்புங்கள். நீங்களும் உடனே வந்து சேருங்கள். நான் முன்னால் போகிறேன்" என்று கூறி விடை பெற்றுக்கொண்டு கிளம்பினாள்.

தழைக்காடு வந்து சேரும்பொழுது இரவு மணி பன்னிரண்டு. போர்க்களத்தில் அரவம் ஒடுங்கியிருந்தது. குதிரையை விட்டுக் கீழிறங்கினாள். உயிரிழந்த போர்வீரர்களின் பிணங்கள் அவள் கால்களை இடறின. "போர் எவ்விதம் முடிவுற்றது" என்பதை யறிய விரும்பினாள். சொல்லுபவர் யாருங் காணப்படவில்லை. ஒரு மூலையிலிருந்து "அப்பா! அம்மா!" என்று முனகும்சப்தம் கேட்டது. திடுக்கிட்டு அருகில் சென்று பார்த்தாள். அடிபட்ட மண்டைக் காயத்தோடு கீழே விழுந்து கிடந்தார் தருமலிங்கம். "என்ன நடந்தது?" என்றாள் பரிதாபகரமாக.

"கண்ணே! நீ சென்றபிறகு பாண்டிய வீரர்கள் ஆக்கிரமித்து நம் வீரர் அனைவரையும் கொன்றுவிட்டனர். எஞ்சியவர் பராக்கிரமனும் நானுமே. பராக்கிரமனையும், போர் முடிவைக் குறித்து அறியவந்த உன் தாயையும் பாண்டிய வீரர்கள் கைதி செய்துகொண்டு போய்விட்டனர். உன் தாயைத் தடுக்கச் சென்றமையினால் எனக்கும் இக்கதி நேர்ந்தது" என்றார் தருமலிங்கம்.

அவரைக் கைலாகு கொடுத்து வீட்டில் கொண்டுபோய்ச் சேர்த்தாள். "தன் தாயை எப்படி மீட்பது?" என்ற யோசனை அவளுக்கு உண்டாயிற்று. சட்டென்று அவள் மனதில் ஒரு யோசனை தோன்றியது. போர்க்களத்தில் புகுந்தாள்.

பாண்டியனுடைய பாசறையை அடைந்தாள். போர் புரிந்த களைப்பினால் வீரர்கள் அயர்ந்து நித்திரை செய்து கொண்டிருந்தனர்.

மூன்று கூடாரங்களில் மங்கலான தீபவெளிச்சம் தெரிந்தது. மெதுவாக ஒரு கூடாரத்தின் பக்கத்தில் சென்று பார்த்தாள். அவள் கண்கள் யாரைக்கண்டு அப்படி மிரளுகின்றன? சுற்றிலும் பத்து வீரர்கள் படுத்திருந்தனர். நடுவில் கோசலை உட்கார்ந்திருந்தாள். மகளைக் கண்டவுடன் 'ஆ' வென்று கூவ வாயெடுத்தாள். மகள் செய்த சைகையினால் வாயைப் பொத்திக் கொண்டாள். உறங்குகின்ற வீரர்களைத் தாண்டி மெதுவாக வெளியே வந்தாள் கோசலை. தாய்க்கும் மகளுக்கும் கீழ்வருமாறு சம்பாஷணை நடந்தது:—

"தஞ்சாவூர் சென்ற விஷயம் என்னவாயிற்று?"

"பின்னால் சொல்லுகிறேன்."

"இப்பொழுது எங்கே போகிறாய்?"

"சுந்தர பாண்டியனிடம்."

"ஆ! எதற்காக?"

"பர்வதகுமாரி சுந்தர பாண்டியனைக் கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதித்தாள்" என்று அவனிடம் தெரிவிக்க."

"அடி! சண்டாளி! உன் தந்தையின் பிணத்தின் முன்பு செய்த சபதங்களை மறந்துவிட்டாயா?"

"மறக்கவில்லை. அதனால் என் வாழ்க்கையைக் கெடுத்துக் கொள்ளலாமா?"

"உனக்கு எங்கிருந்து இந்தச் சபலம் வந்தது? நீ ஒரு வீரரின் இறந்து போன மனைசக்தி" என்பதை எண்ணிப் பார்."

"நன்றாக எண்ணிப் பார்த்துத்தான் இந்த முடிவுக்கு வந்திருக்கிறேன்."

"அப்படியானால் உன் எண்ணத்தை மாற்றப்போவதே யில்லையா?"

"இல்லவே இல்லை! ஒருநாளும் இல்லை."

"பாதகி! பித்ரு துரோகி!" தாயின் சரீரம் நிலத்தில் சாய்ந்தது.

அடுத்த வினாடி மற்றொரு கூடாரத்திற்குச் சென்றாள். சுந்தர பாண்டியன் விழித்துக் கொண்டிருந்தான். அவனைச் சுற்றிலும் வீரர்கள் படுத்திருந்தனர். அரவங்கேட்டு "யார் அது?" என்றான்.

"மண்டலேசுவரா! நான்தான்! தயை செய்து மெதுவாகப் பேச வேண்டுகிறேன்" என்றாள் மெதுவாக.

"என்ன சமாசாரம்?'

"பர்வதகுமாரியி னிடத்திலிருந்து செய்தி கொண்டுவந்திருக்கிறேன்."

"நீ எங்கிருந்து வருகிறாய்?"

"மதுரையிலிருந்து"

"செய்தி யென்ன?"

"இதோ இந்தக் கடிதத்தி லிருக்கிறது."

கடிதம்:—பார்த்திப! என்னை மன்னிக்க! நான் இன்னும் இறந்து போகவில்லை. "நீண்ட காலம் யோசனை செய்து பார்த்ததில் தங்களைக் கல்யாணம் செய்து கொள்வதைத் தவிர வேறு வழியில்லை" யென்று தெரிந்தது. விஷயத்தை யாரிடமும் வெளியிடாமல் நாளைக் காலையில் புறப்பட்டு வரவும்.

பர்வத குமாரி

படித்தவுடன் பரம சந்தோஷத்தை யடைந்தான் பாண்டியன். அங்கும் இங்கும் உலாவினான். அப்பொழுது ஒருதரம் அவன் முதுகுப் புறமும் மற்றொருதரம் அவன் மார்புப் புறமும் பர்வத குமாரிக்குத் தெரிந்தன. முன்புறம் நோக்கி அவன் போகும்பொழுது பர்வத குமாரி, தீர்மானித்திருந்தபடி இடுப்பிலிருந்த வாளை உருவி தன்பலம் கொண்டமட்டும் ஓங்கி அவன் முதுகில் குத்தினாள்.

"ஐயோ! மோசம் போனேன்!" என்று விழுந்தான் பாண்டியன். அகஸ்மாத்தாக இருந்த சமயத்தில், வாள் முனை முதுகின் சரியான இடத்தில் பாய்ந்து வெளிப்பட்டதால், அடுத்த நிமிஷம் அவன் ஆவி நீங்கியது.

"எங்கே கொலேகாரன்! எங்கே கொலேகாரன்!!" என்று ஆர்ப்பரித்தனர் பாண்டிய வீரர்கள். ஒரு பர்லாங்கு தூரத்தில் வந்துகொண்டிருந்த சோழ வீரர்களின் "இதோ வந்துவிட்டோம்! இதோ வந்துவிட்டோம்" என்ற சப்தம் அதற்கு எதிரொலி செய்தது.

. போர் முடிந்தது; போரில் உதவி செய்தவர்களுக்கு மரியாதை செய்யும் பொருட்டு அரசர் ஒரு சபையைக் கூட்டியிருந்தார். பர்வதகுமாரி, கோசலே, தருமலிங்கம், பராக்கிரமன் முதலியோரும் அங்கிருந்தனர்.

சபை அமைதியாயிருந்தது. அரசர், "நடந்த யுத்தத்தில் சுந்தர பாண்டியனே நேருக்கு நேர் வென்றவள் பர்வதகுமாரி" என்பதை நீங்கள் அறிவீர்கள். ஆகையால், எல்லோரையும் விட அவளுக்கே அதிகப் பரிசளிக்கப் போகிறேன்" என்றார் அரசர்.

"அது என்ன" என்பதை அறிய சபையினர் ஆவலோடிருந்தனர்.

"எனது சேனாதிபதி பராக்கிரமனே அவளுக்கு அளித்துவிட்டேன்" என்றார் அரசர்.

திடுக்கிட்டவளாய் "எங்கள் மன எண்ணத்தை உள்ளபடி நீங்கள் அறிய மாட்டீர்கள்" என்றாள் கோசலே.

"அது மட்டுமல்ல! முள்ளூர்க்கானத்தையும் அவர்களுக்கே அளித்துவிட்டேன்" என்றார் மறுபடியும் அரசர்.

ஏதோ சொல்ல வாயெடுத்த கோசலேயின் மெல்லிய குரல், "அரசன் சொல்லுக்கு இரண்டு கிடையாது" என்ற கூக்குரலில் வெளித்தோன்றாமல் மறைந்தது.

---

# செந்நெல் தொண்டர்களும் அன்னக் காதலர்களும்

——— 0) ———

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

கண்ணுக் கெட்டியதூரம் எங்கும் ஒரே பசுமை மயமான குளிர்ந்த காட்சி! கீழ்த்திசையில் தோன்றிய செங்கதிரோன் எங்கும் தனது தங்க வண்ணக் கிரணங்களைப் பரப்பி எல்லாப் பொருள்களின் மேலும் தங்க முலாம் பூச முயன்று கொண்டிருக்கிறன். காவேரித் தண்ணீரின் மகிமையே ஒரு தனி மகிமைதான்! இப்பொழுது கூட, நீ என்ன காவேரித் தண்ணீர் குடித்து வளர்ந்தவனே என்று கேட்பதை, தற்காலத் தமிழர்களிடத்திலும் சர்வ சாதாரணமாகப் பார்க்கிறே மல்லவா? காவேரித் தண்ணீர் குடித்து வளர்ந்தவனென்றால், அவனது மூளை மற்றவர்களது மூளையைக் காட்டிலும் பன்மடங்கு சிறந்த சக்தி பொருந்தியதாக இருந்தே தீர வேண்டுமென்பது, பெரும்பான்மையோரான தமிழர்களின் சித்தாந்தம். அந்த சித்தாந்தம் மனிதர்கள் விஷயத்தில் மட்டுமன்றி, பசும் பயிர்கள் விஷயத்திலும் நன்கு பொருந்து மென்பது உறுதியன்றே! காவிரி நீரைக் குடித்துக் குடித்து தாள்கள் செழித்துக் கதிர் பெருத்துச் சாய்ந்து கிடக்கும் அந்த செந்நெற் பயிரை உற்று நோக்குங்கள்! அவை செங்கரும்பைப் போலல்லவா, செழித்தோங்கி வளர்ந்திருக்கின்றன! அவை அவ்வளவு ஓங்கி வளர்ந்திருந்துங் கூட, காவிரி நீரின் மகத்தான சக்தி எப்படிப்பட்ட தென்பதை எல்லோருக்கும் விளம்பரப் படுத்துவன போல் கம்பீர—கர்வத்துடன் ஏன் தலை நிமிர்ந்து நிற்கவில்லை? "எல்லார்க்கும் நன்றாம் பணிதல்; அவருள்ளும்—செல்வர்க்கே செல்வம் தகைத்து"—எனும் நாயனாரது அருள் மொழியை நினைவூட்டிக் கொள்ளுங்கள். எல்லா உலகிலுமுள்ள எல்லாச் செல்வர்களுக்கும் தனிப்பெருந் தலைமை படைத்த தனிப்பெருஞ் செல்வராகிய செங்கோலுடைய திருவரங்கச் செல்வனரது சிந்தைக்கினிய செல்வத் திருவரங்கத்திலே பிறந்து வளர்ந்து தானியச் செல்வத்தைத் தாங்கி நிற்கும் அந்த செந்நெற் பயிர்கள், தமக்குக் கிடைத்த அரும் பெருஞ் செல்வத்தைப் பற்றிய செருக்கு சிறிதளவும் கொள்ளாமல் அவ்வாறு 'தாள் சாய்த்துத் தலை வணங்கி' நிற்பானேன்? எவ்வளவுக் கெவ்வளவு கல்விச் செல்வம் வளர்ந்து பெருகப் பெறுகிறார்களோ, அவ்வளவுக் கவ்வளவு அந்த உத்தம பக்தர்களது உள்ளத்திலும் தன்னடக்கமும் பணிவும் வினயமும் சாந்தமும் வளர்ந்து பெருகுவது இயல்பே யன்றே! கங்கையினும் புனிதம் மிகுந்த காவிரித் தேவி தனது குளிர்ந்த நீரை அப் பயிர்களுக்கு ஊட்டி வளர்த்த போதே, அந் நீருடன் ஞான நீரையும் சேர்த்து ஊட்டி வளர்த்து விட்டாள் போலும்! அதனாலேயே, ஞானத்தில் பழுத்து விட்ட அந்த செந்நெல் தொண்டர்கள், 'தாள் சாய்த்துத் தலை வணங்கி'த் தண்டனிட்டுக் கிடக்கிறார்கள் போலும்!

அந்த பசும் பயிர்கள் வளர்ந்துள்ள வயல்களின் இடையிடையிலே, சின்னஞ்சிறு வாய்க்கால்களும் காணப்படுகின்றனவல்லவா? அவ் வாய்க்காலிலே, செழித்து வளர்ந்து உயர்ந்து நிமிர்ந்து செல்விதழ் விரித்துச் சிரித்து நிற்கும் அந்த செந்தாமரை மலர்களை உற்று நோக்குங்கள்! நீல வானை நோக்கி நிமிர்ந்து நிற்கும் அந்த அழகிய மலர்கள், முற்காலத்தில் மாவலியிடம் மூவடி மண் பெற்று விண்ணுலகம் முழுவதையும் ஒரே அடியால் அளந்து கொண்டு விட வளர்ந்து நின்ற திருவரங்கச் செல்வனாரது வலது திருவடியை நமக்கு நினைவூட்டுகின்றன வல்லவா? அவ் வண்ணமே, அந்த செந்தாமரை மலர்கள் அந்த செந்நெல் தொண்டர்களுக்கும் செங்கோலுடைய திருவரங்கச் செல்வனாரது செங்கமலவண்ண மென்மலர்த் திருவடிகளை போல் காட்சி யளித்து நிற்கின்றன போலும்! திருவரங்கப் பெருநகரில் பிறந்து வளரும் அரும் பெரும் பேறு பெற்ற அந்த செந்நெல் தொண்டர்கள், இரண்டாறுகளின் இடையிலே பைந்நாகப் பள்ளியின் மேலே அறிதுயில் கொண்டு கிடக்கும் அரங்கநாயகனது அடிமலர்களைக் கண்டு களிக்க, நிலத்தில் பிறந்த நாளிலிருந்தே பேரார்வம் கொண்டு பெரிதும் ஏங்கி நின்றன போலும்! உண்மையன்பர்களின் உள்ளக் கவலையை உணர்ந்து அதனை விரைந்து விலக்கித் திருவருள் பொழிந்தருள்வது, கருணைக் கடலாகிய திருவரங்க கேசரின் இயல்பே யன்றோ! அதிலும், தாம் தினந்தோறும் அமுது செய்தருளும் திவ்யான்னங்களுக்கு வேண்டிய தானியத்தைத் தாங்கிநிற்கும் செந்நெல் தொண்டர்களிடம் திருவரங்கச் செல்வனருக்கு விசேஷ அபிமானம் ஏற்படுவதும் இயல்பேயன்றோ! அவ்வபிமான விசேஷத்தின் பலனாக, எழு சுற்று மதிள்களுக்குள்ளே, இருண்ட கர்ப்பக் கிருகத்தில் அரவணையின் மேல் படிந்து தினந்தோறும் நூற்றுக் கணக்கான அன்பர்களால் துதிக்கப் பெற்றுக் கிடக்கும் திருவடிகள், எல்லாக் கட்டுக் காவல்களையும் கடந்து, செந்நெல் தொண்டர்களைத் தேடி ஓடி வந்து காட்சியளித்து நிலைத்து நிற்கின்றன போலும்!

எழு சுற்றுக் கோட்டை மதிள்களையும் தாண்டிச் சென்று, சந்நிதி வாசலில் காவல் காத்து நிற்பவர்களையும் ஏமாற்றி விட்டு, கோயிலாழ்வாருக்குள்ளே புகுந்து, அரவணையின் மேல் பள்ளி கொண்டு கிடக்கும் அரங்க நாயகனை ஆசை தீரச் சேவித்து, அப் பெருமானது திருவுள்ளம் பெரிதும் குளிரும்படி தமது மணிக் கதிர்க் கைகளால் மெள்ள மெள்ளக் கவரி வீசிக் களிக்கும் பாக்கியம் தங்களுக்கு வாய்க்க வில்லையே யென்று ஏக்கம் கொண்டிருந்த செந்நெல் தொண்டர்களுக்கு, அவர்கள் இருந்த விடத்திலேயே அரங்கனின் அடிமலர்கள் காட்சி யளித்தால், அவர்கள் எத்தகைய பேரானந்தத்தை அனுபவிக்கக் கூடு மென்பதை வருணிக்கவும் முடியுமோ? அவ் வடிமலர்களைச் சேவித்துக் கொண்டே வாயார வாழ்த்தி ஆனந்திக்க அந்த செந்நெல் தொண்டர்களுக்கு எவ்வளவோ ஆசைதான்! தமக்குக் கொடுக்கப்பட்ட வாயைக் கொண்டு ஊர்வம்புகளை யெல்லாம் அளந்து தினந்தோறும் கணக்கிலடங்காத சண்டைகளை உண்டாக்கும் சண்டிப் பெண்களுக்கு வாயைப் படைத்த பாழும் பிரமன், அரங்கநாயகனைத் துதித்துக் களிக்கத் துடி துடித்து நிற்கும் இந்த செந்நெல் தொண்டர்களுக்கு வாயைக் கொடுக்காமல் விட்டு விட்டானே! எனவே, தாங்கள் நெடுங்காலமாகத் தரிசிக்கக் கருதி எதிர்பார்த்திருந்த திருமாலது திருவடிகளைக் கண்ட அந்த செந்

நெல் தொண்டர்கள், பக்தி மேலீட்டினால் தமது தாள்களை நீட்டித் தலையை வணங்கிச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து நிற்கின்றனர்.

அரவணை மேல் அறிதுயில் கொண்டு கிடக்கும் அரங்கநாயகனது அடி மலர்களை வருடி மகிழும் ஆசைப் பெருக்கினால் தன்னையே இருகூறு படுத்திக்கொண்டு, அலைகளாகிய கைகளினால் அப்பெருமானது திருவடிகளை இடையறாமல் வருடி மகிழும் காவிரித் தேவி, திருவரங்கத்து வயல்களில் வளரும் பயிர்களுக்கு நீரூட்டி வளர்ப்பதற்காக பற்பல சின்னஞ் சிறு கால் வாய்களாக வடிவெடுத்துப் பசும் புலங்களினிடையில் ஓடிக்கொண் டிருக்கும் போதும் அடி வருடும் தொழிலை மறக்க முடியவில்லை போலும்! அதனாலேயே, அரவணையின் மேல் படிந்து கிடக்கும் திருவரங்கேசரது திருவடிகளை வருடுவதோடு திருப்தியடையாத அந்த காவிரி மங்கை, பசும் புலங்களில் பாயும் போதும் அப்பெருமானது அடிகளை நினைவூட்டி நிமிர்ந்து நிற்கும் செந்தாமரை மலர்களையும் அடிக்கடி வருடி மகிழ முயல்கின்றாள். அடிவருடும் பணியில், அவள் கொண்டு நிற்கும் பேராசையை என்னென்பது?

இவ்வற்புதக் காட்சியை, இன்றும் நமது மனக்கண் முன்பு கொண்டு வந்து நிறுத்தும் பெரியாழ்வாரின் மணி மொழிகளைப் பாருங்கள்:—

"உரம் பெற்ற மலர்க் கமலம் உலகளந்த
சேவடி போல் உயர்ந்து காட்ட,
வரம்புற்ற கதிர்ச் செந்நெல் தாள்சாய்த்துத்
தலை வணக்கும் தண்ணரங்கமே!"

அதோ பாருங்கள்! கிழக்கிலிருந்து, பால்போன்ற வெண்ணிற மேனியுடைய அன்னப் பறவைகள் இரண்டு, உல்லாஸ ஜோடியாகக் கூடி உற்சாகத்துடன் பறந்து வருகின்றன! கருத்தொருமித்த காதலின்பத்தில் மூழ்கிய அவையிரண்டும், காதற் பித்தம் தலைக்கேறி மதி மயங்கிப் பெரிதும் செருக்கடைந் திருக்கின்றன போலும்! அந்த காதற் பித்தர்களுக்கு சுய அறிவு சிறிதேனும் இருப்பின், அரங்கநாயகனது திருவடிகளை நினைவூட்டும் செந்தாமரை மலர்களின் மேல் கால் வைத்து ஏறத் துணிவார்களா? ஏறியதுதான் ஏறினார்களே, அமைதியாகவாவது அமர்ந்திருக்கக் கூடாதா? பூஞ்சோலையை அடைந்த காதலர்கள், அங்குள்ள மரங்களில் வளர்ந்து பின்னிக்கொண்டு அசைந்தாடும் பூங்கொடியை ஊசலாக அமைத்துக்கொண்டு உல்லாஸமாக ஊசலாடுவது போல, ஊசலாடிக் களிக்க வேண்டுமென்னும் பித்து அந்த அன்னக் காதலர்களுக்கும் தோன்றிவிட்டது போலும்! காதற் பெரும் பித்தினால் சுய உணர்வு முழுவதையும் பறி கொடுத்துவிட்ட அவர்கள், தன்மேல் அமர்ந்து வேகமாக ஊசலாடுபவர்களைத் தாங்கக் கூடிய சக்தி சிற்சில கொடிகளுக்கிருப்பது போல் மென்மையிற் சிறந்த செந்தாமரை மலருக்கு உண்டா என்பதை சிறிதும் சிந்தித்துப் பார்க்கவேயில்லை. அத்தகைய காதற் பித்தர்கள் அவ்வழகிய மலர்களை ஆட்டி அசைத்து ஊசலாடத் தொடங்கியவுடனே, அம்மலர்களின் அழகிய செவ்விதழ்கள் பலபலவென உதிர்ந்து கீழே ஓடிக்கொண் டிருக்கும் கால்வாய் நீரில் அடித்துக்கொண்டு போகப்படுகின்றன. அக் காதலர்களின் சிங்கார

லீலைகள், அதன் பின்னும் அடங்கக் காணோம். அதற்குப் பதிலாக, அதன் பின்பே அவர்களது மோகவெறி உச்ச நிலையை அடைந்து விடுகிறது! ஐயோ, அதென்ன கூத்து? பட்டப் பகலிலே—பலர் முன்னிலையிலே—அந்த காதற் பித்தர்கள் ஊசல் விளையாட்டை விட்டு சம்போக லீலையில் இறங்கி விடுகிறார்களே! சீச்சீ! அந்த பித்தர்களுக்கு எத்தகைய வெட்கமு மில்லையா? அந்த அன்னக் காதலிதானகட்டும், தனது இனத்திற்கு உரிய நாணத்தைச் சிறிதேனும் வெளிப்படுத்தக் கூடாதா? தனது காதலன் மோக வெறிகொண்டு தன்னிடம் நெருங்கியதும், அவனுடன் சிறிதளவேனும் ஊடல் கொள்ளாமல்—எத்தகைய வெட்கமும் இல்லாமல்—அவனுடன் கலந்து குலவத் துணிந்துவிட்ட அந்த அன்னப்பேடை, பறவைக் குலத்தி லேயே மிக மிக உயர்ந்த குலத்திற் பிறந்திருந்தும் பயனென்ன? உள்ளத் தில் போக இச்சை உதிக்கும் போது, கள்ளிரவையும் இருட்டறையையும் எதிர்பார்த்து ஏங்க வேண்டிய நிர்ப்பந்தம், அப்பறவைக் குலத்தினருக்கே இல்லை போலும்! மானத்தைக் காக்கும் துணி கட்டவேண்டிய நிர்ப்பந்தங் கூட இல்லாத அப்பறவைகள் எப்படி நடந்து கொண்டாலும், அவற்றின் சரச லீலைகளுக்குத் தடையுத்தரவு போடவோ பரிகசித்துப் பேசவோ மனம் துணிந்து மார்பு தட்டி முன்வரக் கூடியவர்கள் யார்? மோகவெறி தலைக்கேறி தம்மை மறந்து மதி மயங்கிச் செருக்கிக் கிடக்கிற அக்காதற் பித்தர்களின் அகத் திமிரை அடக்குவதற்கு, இப்பொழுது இங்கே காவற் சேவகர்கள் கூட இல்லை போலும்!

அடடாவோ! என்ன விந்தை இது? வெள்ளை வெளேலென்ற வெண் ணிற முடையவர்களாக வந்தமர்ந்த இவ்வன்னக் காதலர்கள், திடீரென்று இப்பொழுது செக்கச் செவேலென்ற செந்நிற மடைந்து தோன்றுவா னேன்? அந்த காதலர்களின் லீலைகளைச் சகிக்க முடியாமல் தமது செவ் விதழ்களைப் பறி கொடுத்து உருச் சிதைந்து அழகு குலைந்த செந்தாமரை மலர்கள், தங்களுக்குள் ஒளித்து வைத்துக்கொண் டிருந்த செந்நிறம் பொருந்திய சுண்ணப் பொடியை அவர்களின் மேல் வாரி வீசிவிட்டன போலும்! பழிக்குப் பழி வாங்க வேண்டுமென்னும் நோக்கங் கொண்ட செந்தாமரை மலர்கள், தங்களது மெல்லிதழ்களைச் சிதைத்துக் குலைத்துச் செருக்கியிருக்கும் அன்னக் காதலர்களின்பால் வண்ண மேனியின் மேல் செஞ்சாயம் பூசி விகாரப்படுத்த முயன்றன; அவ்வன்னக் காதலர்களோ, முன்னிலும் சிறந்த சிவந்த மேனியினராய்ப் புத்தழகு பெற்று மோகவெறி யில் சிறிதும் குறையாது மிகுந்த உற்சாகத்துடன் சரஸ—லீலைகள் செய்து கொண்டுதா னிருக்கின்றனர். அவ் விநோதக் காட்சியை, பின்வரும் பெரியாழ்வாரது 'சொற் சித்திரம்' இன்றுங்கூட நமது மனக்கண் முன்பு தோற்றுவிக்கின்றதன்றோ?:—

"சேவலொடு பெடையன்னம் செங்கமல
மலர் ஏறி ஊசல் ஆடிப்
பூவணைமேல் துதைந்(து) எழு செம்பொடியாடி
விளையாடும் புனல் அரங்கமே!"

---

# விதவை!

(சின்னஸ்வாமி.)

ராமகிருஷ்ணனின் மரணத்தால் அவனுடைய தகப்பனாருக்கும் தாயாருக்கும் அளவிலா துக்கம் ஏற்பட்டது. ஆனால் கமலாவிற்கோ இந்த உலகமே இருண்டு விட்டது. அவளுக்கு இவ்வுலக வாழ்க்கையிலிருந்த நம்பிக்கை, உற்சாகம், எதிர்காலத்தைப்பற்றிக் கண்டு கொண்டிருந்த கனவுகள் எல்லாம் மண்ணாய்ப் போய்விட்டன. ஹிருதயம் உடைந்து விட்டது. அவருடைய மனதில் "நான் என்ன இப்பொழுதிருந்தே விதவையா யிருப்பதா ? இப்பொழுதே மஞ்சளையும் புஷ்பத்தையும் தியாகம் செய்வதா ?" என்ற கேள்விகள் எழும்போதே அவள் ஹிருதயம் துக்கத்தால் நிறைந்து விடுகிறது ! ஹா ! இந்து சமுகமே! நீ எத்தனை பாலிகைகளை விழுங்கி விட்டாய் !

பற்பல எண்ணங்களில் மூழ்கி எண்ணி எண்ணி அழுதுகொண்டே இருந்தாள். தன் சிற்றன்னை (தகப்பனாரின் 5-வது மனைவி) படுத்தும் துன்பம் வேறு ! தினமும் காலமே எழுந்து வாசற்கூட்டல் நீர் நிறைத்தல் சமயல் செய்தல் எல்லாம் கமலாவே செய்யவேண்டி யிருந்தது. இதில் குற்றங் கண்டு பிடிப்பதிலேயே அவளது சிற்றன்னை அடிக்கடி முயற்சித்து திட்டிக்கொண்டிருந்தாள்.

*　　*　　*　　*

"என். உங்களைத்தான் ! கமலா என்ன செய்கிறாளென்று உங்களுக்கு தெரியுமா ? இந்த வீட்டில் எனக்கு இருப்பதற்கே பிடிக்கவில்லை. இங்கு நடப்பவற்றைப் பார்க்கவும் சகிக்கவில்லை. ஒரு கைம்பெண் எந்நேரமும் குங்குமம் வைக்கவும் பூ முடியவும் கண்ணாடி பார்க்கவும் என்ன தைர்யம் ? இவளால் அக்கம் பக்கம் எல்லாம் என்னை ஏளனமாகப் பேசுகிறார்கள். நான் இப்பொழுதே போய் விடுகிறேன். எனக்கு வேண்டாம் இப்பிழைப்பு" என்று லக்ஷ்மியம்மாள் தன் கணவர் கிருஷ்ணய்யரிடம் சொன்னாள்.

"குழந்தை ஏதோ தெரியாமல் செய்தால் அதற்காக நீ இவ்வளவு கோபித்துக் கொள்ளலாமா ? குழந்தைக்கு நீ பெரியவள் புத்தி யல்லவோ கற்பிக்க வேண்டும்" என்றார் கிருஷ்ணய்யர்.

"உன் குழந்தையாச்சு மண்ணாங்கட்டி யாச்சு. நான் என்ன விலைக்கு வாங்கின தாசியா ? காலையிலிருந்து மாலை வரையிலெ ஒவ்வொரு வேலையா செய்யணும். அச் சிறுக்கி உல்லாசமா ஊர் சுற்றணும் எனக்கு வேண்டாம் இந்த பொழப்பு. ஒண்ணு இப்பொழுது நான் போயிடரேன் இல்லாட்டா அவ போயிடணும்" என்று புறப்படுவதற்கு லக்ஷ்மி தயாரானாள்.

லக்ஷ்மி தன் கணவனை அவளுடைய ரூபலாவண்யத்தால் வசியப் படுத்தி யிருந்தாள். ஆம். 50 வயதே ஆகிய சின்னஞ்சிறு வாலிபனின் 5-வது மனைவி அவரை மோகிக்கச் செய்ததில் ஆச்சர்ய மொன்றுமில்லை. மன்மதன் இவளைப் பார்த்தாற்கூட ரதியை த்யாகம் செய்து விடுவான். நம் எட்வர்ட் VIIIம் Mrs. ஸிம்ஸனைப் பார்க்குமுன் இவளைப் பார்த்திருந்தால்

கண்டிப்பாய் ஒரு ராஜ்யத்தை தியாகம் செய்தே இருப்பார். ஏறக்குறைய 3½ அடி உயரம் காக்காய் கூட வெட்கித் தலை குனியும் நிறம், (ஏன் ஒரு தடவை கிருஷ்ணய்யரே அக்கினியைக் குளிப்பாட்டினால் கூட தன் மனைவியின் வெண்மை நிறம் வராதென்று சொல்லி யிருக்கிறார்.) பெருச்சாளி வால் போன்ற கேசபாரம் குந்தாணி போன்ற இடுப்பு யானைக்கால் போன்ற துடைகள், அதன் பளுவைத் தாங்குவதற்கு வேண்டிய பாதங்கள், எவ்வளவு தான் அடக்கியபோதிலும் ஒரு பல் உதடுகளின் அதிகாரத்தில் அடங்காமல் நீட்டிக் கொண்டிருக்கும் அழகு; இவைகளைப் பார்த்து யார்தான் வசியமடையமாட்டார்கள்! கிருஷ்ணய்யர் லோபி தனத்தை எவ்வளவு விரும்பி போற்றுவானோ அதேபோல் நினைத்திருந்ததில் யாதொரு ஆச்சர்யமுமில்லை.

2

மார்கழிமீ ராத்திரி 10½ மணிக்குமேல் இருக்கும். அமாவாசை இருட்டு கார் மேகங்களும் சூழ்ந்து கட கட என்று கர்ஜிக்கின்றன. பார்த்தால் பயங்கரமே உருவெடுத்து வந்தாற்போல் இருக்கின்றது. மெல்லிய தூரலும் காற்றும் பலமாக அடிக்கிறது. 4 கம்பிளி போர்த்துக் கொண்டிருந்தாலும் ஹிருதயத்தில் ஜில்லென் றிருக்கிறது. இந் நள்ளிரவில் வஜ்ரத்திலும் கடூர ஹிருதயமுடைய கிருஷ்ணய்யர் கமலாவை வெளியேற்றிவிட்டார். பாவம்! அநாதை கமலா எங்கு செல்வாள்? என் செய்வாள்? குளிரினால் உடம்பு உணர்ச்சி யற்றுவிட்டது. அவளுடைய தாமரை போன்ற பாதங்கள் பனியின் கொடுமையால் வெல வெலத்து விட்டது. ஆ! ஹிந்து சமூகமே! உன் குரூரத்தன்மையால் எத்தனை சகோதரிகள் கள் இம்மாதிரி பலியாகின்றனர்? உன் குரூரமான குரீதி நெருப்பில் எத்தனை சகோதரிகள் எரிந்து சாம்பலாகின்றனர்? ஏ ஹிந்து சமூகமே! ஹே ராக்ஷசி! இன்னும் உன் வயிறு நிறையவில்லையா? என் சகோதரிகள் அழும் கண்ணீரால் உனக்கு நெஞ்சம் கரையவில்லையா? உன் அத்யாசாரத்தாலும் அந்த விஸ்வாசத்தாலும் உன் அசட்டுத் தனத்தாலும், உன் நிர்தயா குணத்தாலும் எத்தனை சகோதரிகள் உயிரை யிழக்கின்றனர்?

கமலா இன்று ஒரு பொட்டு வைத்து தலையில் ஜடை பின்னி பூ முடிந்து நல்லசேலை கட்டி கண்ணாடியில் ஒரு தடவை பார்த்ததற்கு இத் தண்டனை! 8 வயதிலேயே கல்யாணம் நடந்துவிட்டது. பிறகு 2 வருஷத்திற்குப்பின் பதியும் இறந்து விட்டான். இதனால் அவருக்கு நல்ல புடவை கட்டவும் கண்ணாடி பார்க்கவும் சமூகம் அனுமதிக்கவில்லை. விருத்த பிதா தன் இளமனைவியுடன் கொஞ்சி குலாவி பொழுது போக்குங்கால் ஒரு இளம் பெண் ஒரு தடவை கண்ணாடி பார்ப்பது பெருங் கொடுமை!

இவ்வளவு குளிரிலும் ஒன்றும் பொருட்படுத்தாமல் ஒரே யடியாகப் போகின்றாள். இவ்விந்து சமூகமான சாக்கடைதான் வேண்டாமென்று தள்ளிவிட்டது. வங்காளக் குடாக்கடல் கூடவா தன்னை அன்புடன் ஏற்றுக்கொள்ளாது? என்ற ஒரே தைர்யத்துடன் போகிறாள். தன் விதியை நினைத்து, அழுது மனம் புண்ணானாள்.

* * * *

3

டாக்டர் ராமநாதன் மதராஸில் பிரசித்த தேசத்தலைவர். ஒரு பெரிய மிராசுதாரின் புத்திரர். டாக்டர் தொழிலிலிருந்து பிழைக்க

வேண்டுமென்று இல்லை. மதராஸ் ஆர்ய சமாஜ சங்கத்தின் காரியதரிசி கூட அன்று கலப்பு மணத்தைப்பற்றியும் விதவா விவாஹத்தைப்பற்றியும் ஒரு லக்சர் செய்துவிட்டு ஜனங்களும் இல்லாத காரணத்தால் காரை வேக மாகவிட்டு விர்ரெனவந்து கொண்டிருக்கிறார். திடீரென ஒரு மூலையில் திரும்பினார். எதிரில் ஒரு உருவம் தென்பட்டது. பிரேக் போட்டு போட் டுப் பார்த்தும் கார் நிற்கவில்லை. மோதிவிட்டதால் அவ்வுருவம் கீழே விழுந்து விட்டது. உடனே டாக்டர் இறங்கினார். தலையில் ஒரு மாதிரி யான அடிபட்டு உடைந்து விட்டதால் ரத்தம் பெருகுகின்றது. அவ் வுருவம் ஒரு பெண். மூர்ச்சித்து விட்டாள். எடுத்து காரில் போட்டுக் கொண்டு தன் வீட்டிற்குப் போனார். அங்கு போலீசுக்கு போன் செய்து விட்டு ஒரு கட்டிலின் மேல் படுக்கவைத்து சிகிச்சை செய்தார். பின் சாப் பிட்டு விட்டு தானும் பக்கத்தறையில் படுத்துக் கொண்டார்.

கமலா தன் உணர்ச்சியில் வந்து சுற்றிலும் பார்த்தாள். அளவிலா ஆச் சர்ய மடைந்தாள். தான் எங்கிருக்கிறோ மென்று தெரியவில்லை. அறை யின் அலங்காரம் ஸ்பிரிங் காட்டும் தனக்கு எப்படி கிடைத்தன என்று நினைத்துக்கொண்டே யிருந்தாள். ஏதாவது கனவு தானோ என்று சந்தேகம் ஏற்பட்டது. பிறகு இரவு நடந்த விஷயங்கள் ஒன்றன்பின் ஒன்றாக சினிமா காட்சிகள்போல் தென்பட்டன. அப்படியும் இப்படியும் காலை எட்டுமணி யாய்விட்டது. ஒரு வாலிபன் கதவைத்திறந்து கொண்டு வந்தார் வாலிபனைப் பார்த்ததும் சங்கோசத்தால் எழுந்து உட்கார முயன்றாள்.

"ஒன்றும் பரவாயில்லை படுத்துக்கொள்ளுங்கள். வலி எப்படி இருக் கிறது" என்று டாக்டர் கேட்டார்.

கமலா "நான் எங்கிருக்கிறேனென்று தயவுசெய்து சொல்லுங்கள்."

"நீங்கள் டாக்டர் ராமன் வீட்டி லிருக்கிறீர். சிகிச்சை செய்யவே நான் வந்திருக்கிறேன்" என்றார். "ராத்திரி என் அஜாக்ரதைக்காக மன் னிக்கவும்" என்றும் சொன்னார்.

டாக்டர் சிகிச்சை செய்தபிறகு "தங்களுக்கு யாராவது உறவினர் இருந்தால் சொல்லுங்கள்; வர வழைக்கிறேன்" என்றார்.

கமலா தன் ஹிருதயத்தை உருக்கும் விருத்தாந்தத்தை அவரிடம் சொல்லி முடித்தாள். டாக்டருக்கு கமலா மேல் இரக்கமும். தயையும் ஏற்பட்டது. மேலும் அவளுடைய ரூபலாவண்யத்தால் டாக்டர் மயங்கி விட்டார். கமலாவைப் பார்த்தது முதல் டாக்டரின் மனதில் ஒருவித மின் சாரம் போன்று ஓடிற்று. ஆம். டாக்டர் கமலா பேரில் காதல் கொண் டார். கமலாவுக்கும் அதேமாதிரி ஏற்பட்டது. ஆனால் டாக்டரிடம் எப்படி அவள் எண்ணத்தைச் சொல்ல முடியும்? டாக்டர் தன்னை எப்படி மணக்கக் கூடும் என்று ஏங்கினாள்.

ஒருநாள் மாலை கமலாவுக்கு டாக்டர் சிகிச்சை செய்துகொண்டிருந்தார். டாக்டர் "இவ்வளவு சிரமப்பட்டு நான் உனக்கு சிகிச்சை செய்தேனே! என க்கு ஏதாவது பரிசளிக்க கூடாதா?" என்று கெஞ்சும் குரலில் கேட்டார்.

"என்னைத் தாங்கள் மோட்டாரால் காயப்படுத்தியதற்காக நஷ்ட ஈடு செய்யமாட்டீர்களா" என்றாள் கமலா.

"உனக்கு என்ன நஷ்ட ஈடுவேண்டும்?"

"உங்களுக்கு என்ன இனும் வேண்டும் ?"

இருவரும் ஒருவர் கருத்தை ஒருவர் உணர்ந்தனர்.

"உனக்கு இதோ நஷ்டஈடு" என்று டாக்டர் ஒரு முத்தம் கொடுத்தார். டாக்டருக்கும் இனும் பழிக்குப் பழி கொடுத்து விட்டாள் கமலா. இனி இருவருக்கும் கல்யாணமாய் விட்டது என்று சொல்லவும் வேண்டுமா ?

* * * *

4

இரு வருஷங்கள் கழிந்தன வாயிலில் ஒரு பிச்சைக்காரன் வந்து நின்றான். கமலாவுக்கு எங்கோ அந்த ஆசாமியைப் பார்த்தமாதிரி இருந்தது. மறுநாளும் அதே பிச்சைக்காரன் வந்தான். கமலா.

"நீ ஏன் இந்த கிழவயதில் பிச்சை வாங்குகிறாய் ? உன்னைக் காப்பாற்று பவர்கள் யாருமில்லையா ?

"மாதா ! நான் என் சொல்வேன். யாருமில்லாத அநாதை. ஒரு புத்ரி யிருந்தாள். அவளும் எங்கிருக்கிறாளோ அல்லது இறந்து விட்டாளோ தெரியவில்லை. வேறு யாரும் எனக்கில்லை."

"ஏன் ? மனைவி என்ன ஆனாள் ?"

"தாயே; நான் என்ன சொல்வேன் அவள் கதையை. 45-வது வயதில் கல்யாணம் செய்தேன். அவள் பேரில் அளவிலா அன்புகொண்டு அவ ளுக்கு அடிமையானேன். அவள் கொடுமையால்தான் நான் பாவி என் குழந் தையை வெளியேற்றினேன்" என்று சொல்லி அழ ஆரம்பித்தான்.

"அழுது என் செய்வாய் ? உனக்கு ஏதாவது சொத்து இல்லையா ?"

"தாயே! அதைப்பற்றி யெல்லாம் கேட்கவேண்டாம். எனக்கு நினைக் கும்போதே பகீரென்கிறது."

"இருந்தாலும் கொஞ்சம் சொல்லேன் !"

"ஒருநாள் என் வாலிபபத்தினி 'நீயோ கிழவனாய் விட்டாய். இன் றைக்கோ நாளைக்கோ இறந்து விட்டால் நான் தெருவில் பிச்சை யெடுக்க வேண்டும்' என்று சொல்லி பொய் அழுகை அபிநயம் செய்தாள். என்க்கு இந்த சூது வாது ஒன்றும் தெரியவில்லை. பாங்கில் இருந்த பணத்தை அவள் பேரில் மாற்றினேன். இரண்டு நாளுக்குள் அவள் ஒரு சாயபுடன் எங்கோ ஓடி விட்டாளென்று தெரிய வந்தது" என்று சொல்லி தேம்பி தேம்பி அழுதான்.

இக் கிழவனின் சரித்திரமும் தோற்றமும் ஏறக்குறைய ஒரேமாதிரி யிருந்தது. ஆனாலும் சந்தேகம் தீர்த்துக்கொள்ள வேண்டி,

கமலா:—"உன் பெயர்."

"கிருஷ்ணய்யர்."

ஆச்சர்யத்துடனும் துக்கத்துடனும் கமலா, "எந்த ஊர்.";

"இதே ஊர்தான் அம்மணி. திருவல்லிக்கேணியில் வசித்து வந்தேன்" என்றான்.

"ஆ ! பிதா உனக்கா இக்கதி" என்று என்று சொல்லி கமலா விம்மி அழ ஆரம்பித்தாள்.

# பொருள் நூல்

ஸ்ரீகண்ட இராமன், எம். ஏ., எல். டி.,



(256–வது பக்கத் தொடர்ச்சி.)

## * செலவழிப்பவரின் பாக்கி (Consumer's Surplus)

மேற் கூறிய கருத்து அல்லது கொள்கை பொருள் நூல் விற்பனர்களுக்கு இடையில் பெரிய தர்க்கத்தைக் கொடுத்து வந்தது. இந்த சிறிய வியாசத்தில் முக்கியமாக அக் கருத்து என்ன, எப்படி நன்மை பயக்கிறது? என்பதை மட்டும் கவனிப்பது உசிதம். சிலர் செலவழிப்பவரின் பாக்கி (Consumer's Surplus) என்பதை ஒரு வகையான குத்தகை என்று கொள்கிறார்கள். இது பிசகு.

இந்தக் கருத்தைப் பின்வரும் திருஷ்டாந்தத்தினால் விளக்கலாம்:— கோவிந்தன் வாரம் ஒரு முறை நான்கு பவுண்டு சர்க்கரை வேண்டும் என நிச்சயிக்கிறான்; அந்த நான்கு பவுண்டுகட்கும் 2 ரூபாய் கொடுக்க முன் வருகிறான்: சர்க்கரை இல்லாமல் அவனால் இருக்க முடியாது. ஆனால் அவனுக்கு ஒவ்வொரு பவுண்டு சர்க்கரையும் ஆறு அணா வீதம் கிடைப்பதால் அவன் மொத்தம் ரூ. 4—8—0 தான் கொடுக்கவேண்டும். பாக்கி இருக்கும் எட்டணாவை அவன் தன் பிரியப்படி வேறு சாமான்கள் வாங்குவதில் உபயோகிக்கலாம். இந்த மிச்சமே பொருள் நூலில் **செலவழிப்பவரின் பாக்கி** என்று சொல்லப்படும்.

இந்தக் கொள்கை "மார்ஜினல்" உபயோகத்தில் அதிகமாக உபயோகப் படுத்தப் படுகிறது. ஒரு சாமானை வாங்குபவருடைய பிரியம் அவர் வாங்கும் சாமானின் "மார்ஜினல்" உபயோகத்தைத் தழுவி நிற்கிறது. கடைசியில் கொடுக்க விரும்பும் சாமானின் விலையை முதலில் விரும்பிய அதே சாமான்களுக்குக் கொடுக்க விழைந்தாலும், முதலில் சிறிது உயர் விலையைக் கொடுத்தாலும், அவர் "மார்ஜினல்" உபயோகம் குறைந்து வந்து நிற்கும் என்பதை வாசகர்கள் முன்னரே படித்திருக்கிறார்கள். ஒவ்வொரு சாமான் அதிகமாக வாங்கப்பட்டால் அச் சாமான்களுடைய "மார்ஜினல்" உபயோகம் குறைந்து கொண்டே வரும்.

நாம் ரொட்டி வாங்குவதில் பணம் செலவழிப்பவருடைய செய்கையைக் கவனிப்போம். ரொட்டிகள் அவருக்கு விற்கப்படுகையில் இன்னும்

---

* Consumer's Surplus என்பதற்குச் சரியான பதங்கள் இல்லாமையால் தாற்காலிகமாக "செலவழிப்பவரின் பாக்கி" என்று எழுதுகிறோம்.

ரொட்டிகள் வரும் எனும் விஷயம் அவருக்குத் தெரியாமல் இருக்கிறது என்றும் கொள்வோம். அப்படி வைத்துக் கொள்வோமானால், பணம் செலவழிப்பவருடைய செய்கைகளும் எண்ணங்களும் நமது ஆராய்ச்சிக்கு பயன்படும்.

கடைசியில் ஒரே ஒரு ரொட்டி மட்டும் இருந்தால் அதை வாங்குபவர் 3 அணா கொடுத்து வாங்கி விடுவார்; அதை வாங்காமல் போக மாட்டார்; அதாவது அவருடைய மொத்த உபயோகம் அந்த ரொட்டியைப் பொறுத்த மட்டில் மூன்றணாவாக இருக்கிறது; மூன்றணா அவருடைய பிரியத்தை அளக்கிறது. அவர் அதற்கு இன்னமும் சிறிது அதிகமாகவே விலையைக் கொடுக்கப் பிரியப்படுகிறார். அதனால் இப்பொழுது அவருடைய ரொட்டியின் மொத்த உபயோகம் மூன்றணாவாக உளது. முதல் ரொட்டி அவருக்குப் பூரணமான திருப்தியைக் கொடுப்பதில்லை; இன்னும் சில கிடைப்பதானால் வாங்குவார். இருந்தாலும் அவருக்கு முதலில் இருந்த உபயோகம் அல்லது பிரியம் கொஞ்சம் இப்பொழுது வாங்குவதில் குறைந்து காணப்படும். அதனால் அவர் வாங்கப் பிரியப்படும் இரண்டாவது ரொட்டிக்கு அவர் முன்பு முதல் ரொட்டிக்குக் கொடுத்த விலையைக் கொடுக்கப் பிரியப்படார். அந்த இரண்டாவது ரொட்டி 2 அணாவுக்குக் கிடைப்பதானால் அதை வாங்குவார். அதே மாதிரி அவர் மேன் மேலும் வாங்கும் ரொட்டிகளுக்கு முதல் ரொட்டியின் விலையைக் கொடுக்க மாட்டார்; விலைகள் குறைந்தாலொழிய ரொட்டிகளை வாங்க மாட்டார்கள். என்? வாங்குவதின் அவசியம் ரொட்டிகளை ஒவ்வொன்றாக வாங்கும் பொழுது ஒவ்வொன்றின் "மார்ஜினல்" உபயோகமும் குறைந்து கொண்டே போவதால் தான் என்பதை நேயர்கள் அறிந்திருப்பார்கள்; ரொட்டிகள் அதிகப்பட அதிகப்பட அவற்றின் உபயோகம் குறைந்து விடுகிறது. அவர் நான்காவதாக வாங்கும் ரொட்டியின் விலை 1 அணாவாக இருக்கலாம்; ஐந்தாவது ரொட்டிக்கு அவர் ஒன்பது பைசாக்கள் தான் கொடுப்பார். அதற்கு மேல் ரொட்டிகள் மிகவும் கொஞ்ச விலைகளுக்கு கொடுக்கப்பட்டாலும் அவர் வாங்கவே மாட்டார். என்? அவருக்கு ரொட்டியின் பிரியம் ஐந்தாவது ரொட்டியுடன் பூர்த்தியாகி விட்டது.

அதன் நிலைமை பின்வருமாறு சொல்லலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| முதல் ரொட்டிக்கு அவர் கொடுக்கும் விலை | | | | | 36 பை |
| இரண்டாவது | ,, | ,, | ,, | ,, | 24 பை |
| மூன்றாவது | ,, | ,, | ,, | ,, | 12 பை |
| நான்காவது | ,, | ,, | ,, | ,, | 10 பை |
| ஐந்தாவது | ,, | ,, | ,, | ,, | 9 பை |
| | | | | மொத்தம்............ | 91 பை |

(7 அணா 7 பை.)

ஒவ்வொரு ரொட்டியின் விலையும் அவர் விருப்பத்தையும் ஒவ்வொன்றின் "மார்ஜினல்" உபயோகத்தையும் குறிப்பிடுவதால் அந்த ஐந்து ரொட்டிகளின் மொத்த உபயோகம் 7 அணா 7 பைசாக்களால் அளக்கப்பட்டு நமக்குத் தெரிகிறது. மேற் கூறிய உதாரணம் ஒரு திருஷ்டாந்தமே தவிர வேறு இல்லை. பிரத்தியட்சமாக இந்த மாதிரி நாம் அறிவது மிகவும் கஷ்டமாகும். ஆனால் ஒரு ஊரை ஒரு விரோதி சர்க்கார் முற்றுகையிட்டால் மேல் சொன்ன வகையில் உணவு பகிர்ந்து கொடுக்கப்படும் என்பதை ஊகிக்கலாம். உண்மை இருப்பது புலப்படுகிறது. குறையும் உபயோகச் சட்டத்தை மேல் சொன்ன திருஷ்டாந்தம் ஊர்ஜிதப் படுத்துகிறது. செலவழிப்பவருடைய சாமான்கள் அதிகப்பட்டால் ஒவ்வொரு அதிகப்பட்ட சாமானின் அல்லது வஸ்துவின் உபயோகம் வாங்குபவருக்கு குறைந்து கொண்டே வருகிறது.

எப்பொழுதும் போல் ஒரு "மார்க்கெட்"டில் ரொட்டிகள் விற்கப்படுவதாக வைத்துக் கொண்டால் அவர் வாங்கும் எல்லா ரொட்டிகளின் விலை "மார்ஜினல்" ரொட்டியால் (கடைசி ரொட்டி) அளக்கப்படும். இங்கு எல்லா ரொட்டிகளையும் எப்படி வேண்டுமானாலும் மாற்றிக் கொள்ளலாம்; ஒவ்வொன்றிற்கும் அவர் உபயோகத்தைக் காண்பிக்க முடியும்; அதாவது செலவழிக்க முடியும். ஒவ்வொரு ரொட்டியும் அவருடைய சுக வாழ்க்கைக்குப் பயன்படுகிறது. முதல் திருஷ்டாந்தத்தில் நாம் ஊகித்தபடி, ஒவ்வொரு ரொட்டிக்கும் வேறு படுவதும் குறைவதும் ஆன உபயோகம் இருப்பதைக் கண்டோம். ஆனால் கிடைக்கக் கூடிய மொத்தத்தில் அவை பயன் கொடுக்கும் முக்கிய நிலையைக் கொண்டிருக்கின்றன. "மார்ஜினல்" ரொட்டியை வாங்கும் விலை தான் இருக்கும் ரொட்டிகளை எல்லாம் வாங்கும் விலையை நிர்ணயிக்கிறது. அதனால் விலையானது சப்ளையின் "மார்ஜினல்" உபயோகத்தை அளக்கக் கூடிய கருவியாக, ஆதாரவாக, இருக்கிறது. (The price at which the marginal loaf would be bought is the price at which any of the stock will be bought so that price is the measure of the marginal utility of the supply). இதனால் சாதாரண "மார்க்கெட்"டில் பணம் செலவழிப்பவர் தமது ஐந்து ரொட்டிகளை 9 பை வீதம் வாங்குகிறார்; அதாவது 3 அணா 9 பை. இந்த 3 அணா 9 பைசாக்களுக்கு அவர் வாங்கும் ரொட்டிகளுக்கு வாங்காமல் போகக் கூடாது எனும் எண்ணத்தினால், முன்பு, 7 அணா 7 பை கூட கொடுத்திருப்பார். அதனால் அவர் கொடுக்கத் தயாராக இருந்த விலைக்கும் உண்மையாகக் கொடுக்கும் விலைக்கும் உள்ள வித்தியாசத் தொகையே பொருள் நூலில், செலவழிப்பவரின் பாக்கி (Consumer's surplus) என்று சொல்லப்படுகிறது. நமது உதாரணத்தில் அவர் கொடுக்கத் தயாராக இருந்த விலை (7 அணா 7 பை)க்கும் அவர் கொடுத்த விலை (3 அணா 9 பை)க்கும் உள்ள வித்தியாச, மிச்சத் தொகையே வாங்குபவருடைய அல்லது பணம் செலவழிப்பவருடைய பாக்கி என்று சொல்லப்படும். இதனால் அவருக்கு லாபம் ஏற்படுகிறது. இது அவருக்கு சந்தோஷத்தைக் கொடுக்கிற தன்றோ? வாங்கும் விலை காரணமாக இது நிகழும். (Consumer's Surplus can be said as the excess of the price which the consumer would be willing to pay for a commodity

rather than go without it, over that which he actually does pay.) இந்த செலவழிப்பவரின பாக்கி வாங்குபவருடைய லாபத்தினுல் அடையும் அதிக சந்தோஷத்தை அனக்கும் பொருளாதார அதிகம் அல்லது மிச்சம் என்று கொள்ள வேண்டும்.

ப்ரொபசர். ஆல்Fரெட் மார்ஷல் இந்தக் கொள்கையின் ஆசிரியர் இதை நாம் நமது தினவாழ்வில் காணலாம் என்று உதாரணங்களைக் காண் பித்திருக்கிறுர். அதை அளவிடுவது தான் கொஞ்சம் கஷ்ட சாத்திய மானது.

(1) புஸ்தக விற்பனையில் இதன் உண்மை தெளிவாக விளங்குகிறது. சிலர் புதிய புஸ்தகங்கள் வெளி வந்ததும் வாங்கி விட வேண்டும் எனும் ஆசையைக் கொண்டிருக்கிறுர்கள். புஸ்தகம் பிரசுரம் செய்யும் மனிதர் கள் பிரபல நாவலாசிரியர்களுடைய நாவல்களை முதல் பதிப்பில் வெளியிடு கையில் ஒரு புஸ்தகத்திற்கு பதினைந்து ரூபாய் விலை கூட வைத்து விற் கிறுர்கள். இது இங்கிலாந்தில் கண்கூடாகக் காணலாம். இத்தகைய புஸ்தகங்களை ஒரு சிலர்தான் அதிக விலை கொடுத்து வாங்க முடியும். மற் ருெரு பதிப்பு சுமாரான விலைக்கு எப்படியும் வரும் என்று சிலர் காத்திருப் பர். இந்த அதிக விலையில் அதிக விற்பனை ஏற்படாது. அதனுல் பிரசுரிப் பவர்கள் புஸ்தகங்களைக் குறைந்த விலைக்கு விற்க முயற்சிப்பார்கள். அது அதிக விற்பனையைக் கொடுக்கும். பதினைந்து ரூபாய் புஸ்தகத்தை பத்து ரூபாய் என்று விலையிட்டு விற்ருல், அதிக விலையைக் கொடுத்து வாங்குப வர்கள் பத்து ரூபாய் கொடுத்து வாங்குவர்; இவர்கள் முதலில் பதினைந்து கொடுத்து வாங்க விழைந்தவர்கள். இதனுல் இவர்கள் ஒரு ஐந்து ரூபாய் லாபத்தை யடைகின்றுர்கள்.

பிரசுரிப்பவர்கள் அதிக பிரதிகளை விற்க வேண்டுமென்று ஒரு புஸ் தகத்தை இரண்டரை ரூபாய்க்கு விற்க ஏற்பாடு செய்கிறுர்கள். முன்பு பதினைந்து ரூபாய் கொடுத்து வாங்கப் பிரியப்படுவர்கள் இதைக் குறைந்த விலைக்கு வாங்குகிறுர்கள். இதில் அதிக லாபத்தை அவர்கள் பெறுகின்றுர் கள். "Consumer's surplus" அவர்களுக்கு அதிகமாக நிற்கும்.

இதே மாதிரி இன்னும் பல சாமான்களுக்கும் "செலவழிப்பவரின் பாக்கி" கிடைக்கிறது. தினசரிகள், நெருப்புப்பெட்டிகள்: மின்சார சக்தி மற்றும் பலதிறப்பட்ட வாழ்க்கைக்கு அத்தியாவஶ்யமான வஸ்துக்களில் இருந்து ஒருவன் சுலபத்தில் வாங்கி, அதிக சந்தோஷத்தை யடையலாம். இந்த கருத்து வரி போடுவதில் தெரியும். மனிதனுக்கு முக்கியமாக வேண்டிய சாமான்களில் "செலவழிப்பவரின் பாக்கி" அதிகமாக இருப்ப தால் ராஜீய நிபுணர்கள் வரிகளை அவற்றின் மீது விதிக்கின்றுர்கள். சுக போக வாழ்க்கையில் ஆடம்பரமான வஸ்துக்களின் மீது விதித்தால் அங்கு "Consumner's surplus" கொஞ்சமாக இருப்பதால், சர்க்காருக்கு அதிக பணம் கிடைக்காது. மேலும் இந்த "பொருளாதார அதிக சந்தோ ஷம்" அதிக வரி போட்டால் மறைந்து போய் விடும். ஜனங்கள் வேறு சாமான்களை வாங்கப் பிரயத்தனம் செய்வார்கள்.

(தொடரும்.)

# காந்திஜியின் உயர்ந்த மார்க்கம்

---

விசுவபாரதி சஞ்சிகையில் கவி ரவீந்திரநாத தாகூர் மஹாத்மா காந்தியைப் பற்றி எழுதுவதாவது:—

"ஆதிகாலமாகவே இந்தியர்கள் ஐக்கியமாக இருக்கவேண்டும் என்ற நோக்கம் இருந்து வந்திருக்கிறது. மஹாபாரதத்தில் நமது தேசத்தின் சம்பவங்கள் ஒன்று சேர்க்கப்பட்டிருக்கின்றன; தவிரவும் பல புனித க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை செய்யவேண்டும் என்ற வழக்கமானது இந்த ஒற்றுமை நோக்கத்தைக் கோஷிக்கிறது. மஹா பாரதத்தில் இருக்கும் பகவத்கீதை இந்த ஒற்றுமையைத் தெளிவாக்குகிறது. குருக்ஷேத்திர யுத்த சமயத்தில் இந்த தத்துவ போதனை அநாவசியம் எனப் பலர் கருதக்கூடும்; ஆதலால் இது பின்னர் சேர்க்கப்பட்டது எனக் கூறுவாருமுண்டு; ஆயினும் கீதை இந்தியாவின் ஐக்கியத்தை விரும்புகிறதாகும் என்பதை ஒருவரும் ஆட்சேபிக்க முடியாது. மஹாபாரதப் படிப்பு ஒரு மதபோதனையாக மட்டுமிராமல் தேசீய ஒற்றுமைக்கு சாதனமாகவும் கருதப்பட்டதாகும்; இது தவிர பல பிரதேசங்களுக்கும் யாத்திரை செய்து ஜனங்கள் ஆங்காங்கு இருக்கும் நிலைகளை அறிவதும் வற்புறுத்தப்பட்டது. இது பழைய கால வழக்கம்.

மேற்குப் பக்கமாக ஆரியர்கள் இங்குவந்து 5 நதிகளின் பிரதேசத்தில் குடியேறினர்; பின்பு கொஞ்சங் கொஞ்சமாக தேசம் முழுவதிலும் பரவிவிட்டனர்; இவ்வாறு ஒரேமாதிரியான நாகரிகம் எங்கும் வியாபித்துவிட்டது. பின்னர் அதே மேற்கு திசையிலிருந்து பிற சமயத்தவர் இங்கு படையெடுத்தனர்; அப்போதுதான் இத்தேசமக்கள் தாங்கள் இதுவரை ஒன்றாக வசித்துவந்த போதிலும் ஒற்றுமையுடன் இருக்கவில்லை என்பதையுணர்ந்தனர். இவ்வாறு ஒற்றுமையிராததால் நம்மவர் பிறரை எதிர்க்க முடியவில்லை. அப்புறம் தேசத்தில் வகுப்புச் சண்டையும் அதிகாரத்திற்குப் போராட்டமும், அந்நியருடன் சேர்ந்து நம்மவரையே எதிர்ப்பதும் அதிகமாகியது.

அது முதற்கொண்டு இடையே சிலகாலம் தவிர, இந்திய சரித்திரத்தில் துயரமும் பிற்போக்கும் ஜாஸ்தியாகி வந்தது. இங்கிருந்து பொருள் அப்புறப்படுத்தப்பட்டு நமது நிலை கேவலமாகி வந்தது. வெளியே ஏழ்மை காணப்பட்டால் உள்ளேயும் ஏழ்மை இருக்கும். இதற்கு ஆதியிலிருந்தே நாம் ஒற்றுமையாக விராதது காரணம் என்பதை உணர பல நூற்றாண்டுகள் ஆகியது.

## மதக் குருக்களும் பணம் பறித்தலும்

இத்தகைய நிலைமையிலும் இந்தியாவிற்கு அதிர்ச்சி அதிகமாக ஏற்படவில்லை. இத்தேசத்தில் இஸ்லாமியப் பிரசாரம் தீவிரமாக நடந்தபோதும் அந்த சமயத்தின்மூலமும் ஒரு புதுபலம் ஏற்பட்டது. பின்பு சரித்திர மத்திய

காலத்தில் இருந்த ஹிந்து முஸ்லிம் பெரியார்கள் மஹாபாரதத்தில் காணப் பட்ட ஒற்றுமை சக்திகளை வளர்த்து வந்தனர். ஆயினும் இதனால் அதிக நலன் ஏற்படவில்லை. பொது மக்களிடமிருந்து அவர்களது மதக் குருக்கள் அதிகம் பணம் பறிக்கலாயினர்.

மக்கள் ஏழ்மையால் வருந்தும்போதும் நம்மிடையே பல சந்யாஸிகள் அதிகமாகி வருகின்றனர்; இவர்கள் தங்களுடைய விஷயங்களில் மட்டுமே அதிக சிரத்தை கொண்டிருக்கின்றனர். ஒரு சமயம் நான் ஒரு சந்நியாசி யைப் பார்த்து பொது மக்களுக்கு ஏன் உதவக்கூடாது? எனக் கேட்ட போது அவர் 'எல்லாவற்றையும் துறந்த தாம் எவ்வாறு பிரபஞ்ச மாயை யில் கலக்க முடியும்' எனக் கேட்டார்.

## மேனாட்டு ஏகாதிபத்தியம்

இவ்வாறு சுய லட்சியங்கள் காரணமாக இந்தியா நசுக்கப்பட்டுக் கிடந்தபோது சரித்திரத்தில் மிக முக்கியமான நிகழ்ச்சி ஏற்பட்டது. அதா வது மேனாட்டு ஏகாதிபத்தியம் இங்கும் படையெடுத்தது. இப்போது புதிதாக ஏற்படுத்தப்பட்ட ஆட்சியானது நம்முள் சேராமல் நம்மை அடக்குபவருடையதாக ஆகியது. இம்மாதிரி ஒரு காலத்திலும் இந்தியா தீங்கான விதமாகப் பாதிக்கப் பட்டதில்லை. மேனாட்டினர் காரணமாக நமது இந்து கலைகள் சிதறுண்டு, தீண்டாமை எனும் கொடிய வியாதி வெளியாகியது. அதிகாரிகளிடமிருந்து சில பதவிகளைப் பெறுவதற்காக இந்துக்களும், முஸ்லிம்களும் ஒருவரோடொருவர் சண்டை போடத் தொடங்கினர்.

இவ்வாறிருந்துவந்த மக்கள் மீண்டும் உன்னத ஸ்தானத்தை அடைய முடியுமா என ஏங்கி வந்தபோது, பழைய ரிஷிகளுக்கு ஒப்பான ஒரு உயர் புருஷர் மானிட கோஷ்டியின் தலைவர் மகாத்மா காந்தி தோன்றினர்.

இப்போது எதிர்காலத்தைப் பற்றி நாம் சிந்திக்க வேண்டியதில்லை; ஏனெனில் கிரியாசக்தி வெளியாகி யிருக்கிறது. நமக்காகவும், பிற மக் களுக்காகவும் மகாத்மா ஒரு உயர்ந்த மார்க்கத்தைக் காட்டியுள்ளார்.

## அரசியல் வாதிகளும் மகாத்மாவும்

மகாத்மாஜியின் சிறப்பு சுயலாபத்தையும் கருதாததேயாகும். தேசீய லாபமும், சுய லாபம்போல் தீங்கானது. பொதுவாக அரசியல் வாதிகள் பின்பற்றும் நடத்தை முறை உயர்ந்ததல்ல; சுய லாபத்திற்காக அவர்கள் பொய் சொல்லி பிறரைப் புண்படுத்தவும் தயங்குவதில்லை. மேனாட்டில் சில தேசீயவாதிகள் தேசத்திற்குத் தியாக புத்திகொள்வதுடன் குற்றங் களைப் புரியவும் துணிகின்றனர். இத்தகையதான அவர்களது தேச பக் திக்கு விநாசம் ஏற்படும்போது அவர்கள் நம்மவர்போலிராமல் பலாத்காரத் திலும் இறங்குவார்கள். அரசியல் வாதிகள் சமயோசிதமாகச் செய்யும் காரியங்களுக்காக அவர்களது புத்தி கூர்மையை நாம் மெச்சுவோமே தவிர அவர்களைப் பூஜிக்கமாட்டோம். சதா சத்தியத்தையே கடைப்பிடித்து வரும் மகாத்மாவிற்குத்தான் நமது மரியாதை உரியது. ஒரு சமயத்திலும் அவர் எக்காரணத்தையும் உத்தேசித்து நன்னடத்தையை விட்டுவிடுமாறு நமக்குப் போதனை செய்தது கிடையாது.

விடுதலையை எப்படி அடைவது என்பதை அவர் இலகுவாகக் காட்டியுள்ளார். பலாத்காரமின்றி வெற்றி பெறமுடியாது என நம்மிடையே பலர் எண்ணுவது திண்ணம். தற்போதைய மேனாட்டு "நாகரீக" முறையை விட்டு விட்டு மஹா பாரதத்தை நாம் கவனிப்போமாயின், தர்ம யுத்தத்திலும் பலாத்காரமும் கொடுஞ்செயலும் இருந்து வந்தது தெளிவாகிறது. இப்போதுதான் முதலாவது முறையாக நாம் உயிரை யிழந்தாலும் எதிரியைக் கொல்லக்கூடாது எனவும், பின்பு நாம் நிச்சயமாக ஜயம் பெறுவோம் எனவும் போதிக்கப்படுகிறது. இந்த செய்தி மகோன்னதமானது. அதர்ம யுத்தத்தில் மரணம் நாசமாகும்; தர்ம யுத்தத்தில் அபஜயத்திற்குப் பின்னர் வெற்றியும், மரணத்திற்குப் பின்பு அழியாப் புகழும் இருக்கின்றன. இதைத் தமது வாழ்க்கையில் உணர்ந்த மகாத்மா, இவ்வுண்மையை நம்புமாறு நம்மையும் வற்புறுத்துகிறார்.

எப்போதும் போலவே இந்திய மக்கள் தங்களது எதிரிகளின் சமயங்களில் காணப்படும் உயர்ந்த கொள்கைகளைக் கிரஹித்துக்கொண்டு மானிட சமூகத்துக்கு நம்பிக்கை மிகுந்த செய்தியை விடுத்து வருகின்றனர்.

## இயேசுநாதரும் காந்திஜீயும்

கிறிஸ்தவ மதத்தில் இயேசுநாதர் மானிடரூபம் பூண்டு இந்தப் பிறவியிலேயே அக் கோஷ்டியினரின் துயரங்களைத் தாமே சுமந்து அவர்களுக்கு நன்மை புரிந்தார் என்பதே முக்கியாம்சமாகும்; ஏழைகளுக்கும், எளியவர்களுக்கும் நன்மை புரியவேண்டும் என்பது மற்றவைகளைவிட கிறிஸ்தவ மதத்தில் அதிகமாக வற்புறுத்தப் பட்டிருக்கிறது.



நமது அதிருஷ்ட வசமாக காந்தி இயேசுநாதரின் போதனையைத் தமது ஜீவியத்தின் மூலம் நிரூபித்து வருகிறார்.

அவர் பாதிரிகளிடமிருந்து போதனை யடையாமல் அஹிம்சா தர்மத்தின் சிறப்பை அனுபவத்தால் அறிந்த டால்ஸ்டாய் என்ற அறிஞரிட மிருந்து அறிந்தார். ஐரோப்பாவிலிருந்து இதற்காகத்தான் இவ்வளவு காலமாக நமது தேசம் காத்துக் கொண்டிருந்தது.

## இஸ்லாமிய மத சம்பந்தம்

சரித்திர மத்ய காலத்திலும் நமக்கு முஸ்லிம்கள் மூலம் நன்மைகள் ஏற்பட்டுள்ளன. சாது கபீர் முதலிய ஞானிகள் பரிசுத்தியும் மோட்சமும்

ஆலயங்களில் பூட்டி வைக்கப்படுவதற்காக இல்லை என்பதையும் அவைகளில் மானிட சமூகத்துக்கு உரிமை யுண்டு என்பதையும் முழங்கி வந்துள்ளனர். இஸ்லாமிய மதத்துடன் ஏற்பட்ட சம்பந்தம் தான் இச் செய்திக்குக் காரணம் என்பதை நாம் தயக்கமின்றி கூறலாம். சிரேஷ்ட புருஷர்கள் எப்போதும் எங் கிருந்தாயினும் சிரேஷ்டமான தத்துவங்களைக் கிரஹித்துக் கொள்ளுகின்றனர். இப்போது நாம் ஒரு புதிய சகாப்தத்தில் இருக்கிறோம். புருஷ சிரேஷ்டரான மஹாத்மாகாந்தி மேனாடு கொடுக்கக் கூடிய சிரேஷ்டமான பரிசுடன் நம்மிடம் வந்திருக்கிறார்.

இயேசு கிறிஸ்து பொறுமை யுடையவர்கள் பூமியை ஆள்வார்கள் எனக் கூறியபோதிலும் கிறிஸ்துவர்கள் பலாத்காரம் மூலம்தான் வெற்றி பெறலாம் என்பதை முழங்கி வருகின்றனர். இதில் ஆச்சர்யமில்லை!

## "பொறுமை"யின் அம்சம்

"பொறுமை" என்பது ஸத்தியாக்கிரஹிகள் அனுசரிக்கும் அன்பும் தர்மமும்தான் என்று போதிக்க மற்றுமொரு ஞானிவர வேண்டும், சாத்வீகமாக ஒரு தீங்கைப் பொறுத்துக் கொண்டிருப்பது "பொறுமை" யல்ல; இது பயந்த சுபாவத்தையும் ஒத்துழைப்பையும் காண்பிப்பதாகும். இந்தப் பொறுமை அதாவது அஹிம்ஸையானது ஒரு உயர்ந்த தீரம்; வலியோரின் திமிருக்கு நிரந்தரமான எதிர்ப்பு என்பதாகும் என்று காந்திஜி காட்டுகிறார்.

இந்த முரண்பாடான கொள்கைகளில் நீடித்திருக்கும் எனக் கூற முடியாது. நம்மை அதர்மம் சூழ்ந்திருக்கையில் தர்மம் தலை ஓங்குவது கடினமாகும். சாத்யமாயினும் இல்லாவிட்டாலும் நாம் அஹிம்சாதர்மத்தை நம்பாம லிருக்கக்கூடாது. இதற்கு தமது வாழ்க்கைமூலம் தற்போது ஒரு உயர்புருஷர் நமக்கு உதாரணமாக விருக்கிறார். நாம் எவ்வளவு மெதுவாக அவரது மார்க்கத்தைப் பின்பற்றினாலும் இறுதியில் மகாத்மாவின் செய்தியின் உண்மையை நாம் உணருவோம்."



# ரஷ்யாவின் கல்வி முறை

**1917**-ல் ரஷ்யாவில் கலகம் உண்டாயது. அதன் பயனுக அங்கு பல வகையிலும் பெரிய மாறுதல் ஏற்பட்டது. அதற்கு முன் ரஷ்யா அறியாமையிலும், அதிகாரத்திற்குப் பணிதலிலும் ஒரு திடநம்பிக்கை கொண்டிருந்தது. கடந்த 20 வருஷங்களாக அங்கு ஏற்பட்ட முன்னேற்ற நிகழ்ச்சிகள் கணக்கில. அவ்வளவு அபிவிருத்தி உண்டாவது சாமானியமன்று. கலகத்தின்போதாவது அதற்கு முன்னுவது இப்படி ஏற்படுமென்று யாரும் மனத்தினுலும் சிந்தித்திருக்க முடியாது. அத்தகைய பிரமிக்கத்தக்க மாறுதல்களில் பெரும்பாகம், பொதுவுடைமைக்காரர்கள் ஆட்சிக்கு வந்தது முதல், நாட்டில் பரவியிருக்கும் விசேஷ கல்வி முறைக்கே உரியது. இந்த குறிப்பிடத்தக்க கல்விமுறை மாறுதல் "கல்வியறிவில்லா ஜனங்கள் பொதுவுடமையுடைய ராஜ்யத்தை ஸ்தாபிக்க முடியாது" என்ற லெனின் கொள்கையை அடிப்படையாகக் கொண்டுள்ளது. கட்டாய பாடமும் புதிய முறையில் ஆரம்பிக்கப்பட்டது.

இந்தப் பிரச்சினை உண்மையிலேயே பயத்தை விளைவிக்கக் கூடியது. ரஷ்யாவின் ஜனத்தொகை 16 கோடி. அவர்களில் 100-க்கு 30 பேர்தான் கல்வியறிவுள்ளவர்கள். மற்ற 70 பேர்கள் எழுத்தின் வாசனையையே அறியாதவர்கள். அதுவுமன்றி வேண்டிய அளவு உபாத்தியாயர்களும் கிடையாது. மேலும் பள்ளிகளும் இல்லை. புத்தகங்களும் போதா. மேற்சொன்ன கஷ்டங்கள்கூட சமாளிக்கக் கூடியனவே. அதைவிடப் பெரிய கஷ்டம் ஒன்று ஏற்பட்டுவிட்டது. படித்தவர்களிலேயே சிலர் இந்த புதிய முறைக்கு ஆதரவு காண்பிக்காமலிருந்ததன்றி எதிரிடையாகவும் வேலை செய்து வந்தார்கள். பழைய ராஜ்யம் கவிழ்க்கப்பட்ட பிறகு, அவர்கள் புது ராஜ்யத்தில் இருந்த வண்ணமே, இப் புதிய முறையின் உண்மைத் தத்துவத்தை அறியும்வரையில் அதை எதிர்த்து வந்தார்கள்.

முன் ஆட்சியில் உபாத்தியாயர்களுக்கும், பள்ளிப் பிள்ளைகளுக்கும் இருந்த சம்பந்தம் வேறு. இப்போதைய சம்பந்தம் வேறு. இப்போது உபாத்தியாயர்களும் அவர்களது மாணவர்களும் தங்களது சொந்த ஜன சமூகத்தை பலப்படுத்துவதாகவே கருதுகிருர்கள். அவர்களது வேலை மற்றெல்லாவற்றையும் விட சிறந்ததென்றும், செய்யத் தகுந்தது என்றும் உணர்ந்திருக்கிருர்கள். ஆகையினுல், ஸோவியத் கல்வி முறையின் பல சிறப்பான அம்சங்கள், அந்த முறையின் சாதாரண மாறுபாடுகளும், சீர்திருத்தங்களுமேயன்றி, அந்த தேசத்தின் வாழ்க்கையில் எல்லாப் பக்கங்களிலுமே இப்போது ஊடுருவிப் பாயும் ஒரு புது உற்சாகத்தின் அம்சங்களே யாகும்.

## சிசு பாதுகாப்பு.

இந்த உற்சாகம் இனிமேல் வருகிற தலைமுறைகளுக்காக எடுத்துக் கொள்ளப்படும் சிரத்தையிலும், ஜாக்கிரதையிலும் மிகுதியாக இருக்கிறது. ரஷ்யாவில் குழந்தைகளின் நலனுக்காக எடுத்துக்கொள்ளப்படும் சிரத்தையைப்போல் மற்ற எந்த தேசத்திலும் இல்லை. எங்கே போனுலும் சரி, பூர்

தோட்டங்கள், விளையாடுமிடங்கள், சிசு போஷணை சாலைகளுமேதான். இவைகள் தேசநலனுக்கு அவசியம் என்று கருதப்பட்டிருக்கின்றன. கல்வி முறையில் ரஷ்யாவின் போக்கே வேறு. அப்போக்கின் மூதற் சார்புதான் மற்ற தேசங்களில் காணக்கிடக்கின்றன. குழந்தைகள் பள்ளிகளில் சேர்க்கப்படுவதற்காக உற்சாகப்படுத்தப் படுகிறார்கள். அங்கு பள்ளிகள் நாம் மனதில் சித்திரித்திருக்கிறபடி இல்லவேயில்லை. மிகச் சிறுவயதிலேயே அவர்கள் பள்ளிக்குச் செல்கிறார்கள். அரசாங்கத்தார் பெண்களையும் ஆண்களைப்போல் சம சேவையில் ஈடுபடுத்தக் கருதுகிறார்கள். குழந்தைகளைப் பாதுகாக்கும் பொறுப்பு பெண்களுக்குக் கிடையாது. குழந்தைகள் அரசாங்கத்தால் நிர்மாணம் செய்யப்பட்டிருக்கும் பல சிசு ஸம்ரக்ஷணை சாலைகளில் மிகுந்த சிரத்தையோடு கவனிக்கப்படுகிறார்கள் என்பது கவனிக்கத்தக்கது. அவர்களது தாய்மார்களோ உத்தியோகம் செய்வதற்குச் சென்று விடுகிறார்கள்.

ஸோவியத் கல்வி இலாகா அதிகாரிகள் குழந்தைகளின் படிப்பு வளர்ச்சியில் உண்டாகக்கூடிய பலன் அளவற்றது என்பதை திடமாக நம்புகிறார்கள். ஆதலின் ஒவ்வொரு சிசு சம்ரக்ஷணைசாலையிலும் இணைக்கப்பட்டிருக்கும் சிசு பள்ளிக்கூட சங்கங்களில் குழந்தைகள் பயிற்சி கொடுக்கப்படுகிறார்கள். ஐக்கிய சங்கத்தில் இருக்கும் ஒவ்வொரு குழந்தையும் அழகையடையப்பெற்று, வாழ்க்கையில் எல்லா வகைகளிலும் அவசியமான அபிவிருத்திக்கு தருணம் கொடுக்கவேண்டிய சமயம் இதுதான் என்பதையும் நம்புகிறார்கள். இக்காலத்தை ஆரம்பப் பள்ளிக்குப் போகுமுன் எல்லாக் குழந்தைகளும் கழிக்கவேண்டியது அவசியம்.

## ஆரம்பப் பள்ளிக்கூடம்

பிறகு குழந்தை ஆரம்பப் பள்ளியில் சேர்க்கப்படுகிறது. அங்கு 4 வருஷங்கள் புத்தியை விசாலப்படுத்தக்கூடிய வகையில் செலவிடுகிறது. கல்வி பயிற்சியில் ஸோவியத் சர்க்கார் கையாளும் முறையும், கலைக்குரிய செயலும் ரொம்பவும் முற்போக்குடையது. உலகத்தில் மற்ற நாடுகளில் புதுமுறை கல்வி பயிற்சி இணக்கத்தை ஆதரிப்பவர்களெல்லாம் இத்தகைய முறைக்கு முயன்றுகொண் டிருக்கும்போது ரஷ்யா அதைச் செயலளவில் அனுஷ்டித்தே காண்பிக்கிறது. விளையாட்டுக் கருவிகளும் அறிவை வளர்க்கக்கூடியனவா யிருக்கின்றன. அவர்கள் பெரியவர்களாகும்போது வாழ்க்கையில் நடக்கும் ஏதாவதொன்றை அறிவுறுத்துவதாக இருக்கும். அவர்களுக்கு சொல்லப்படும் கதைகளும், சரித்திரங்களுங்கூட வாழ்க்கைக்கு உரியதாய் இருக்கும். ஒரு குழந்தை தன் 8-வது வயதில் நடுத்தரப் பள்ளிக்கூடம் செல்லும்போது, மொத்த பாடக்கிரமமும், ஜனங்களின் பொருளாதார நிலைமையையும், தேசாசாரத்தையும் ஆதாரமாகக் கொண்டவைகளாக இருக்கின்றது.

குழந்தையின் 12-வது வயதில் செகண்ட்ரி பள்ளிக்கூடத்தில் சேர்க்கப்படுகிறார்கள். சில பள்ளிக்கூடங்களில் பிரத்தியேகப் பயிற்சி 15-வது வயதிலும், சிலவற்றில் 18-வது வயதிலும் கொடுக்கப்படுகிறது. 18-வது வயது வரையில் உயர்தரப் பள்ளியில் இருக்காதவர்கள் தொழில் பயிற்றுவிக்கும் பள்ளிக்கூடத்தில் சேருகிறார்கள். அந்த தொழிற்பயிற்சி முடிந்ததும்

ஏதாவது தொழிற்சாலையில் வேலைக்குச் சென்று விடுகிறார்கள். அல்லது அந்த தொழிற் கல்வியில் தனிப்பயிற்சி அடையச் சென்று விடுகிறார்கள். அரசாங்கம் எல்லோருக்கும் 8 முதல் 18 வயதுவரை கட்டாய பாடத்தை பயிற்சி செய்வதில் முனைந்து நிற்கிறது. உயர்தரப் பள்ளிக்கூடப் படிப்பை முடித்தவர்கள் சர்வ கலாசாலைகளில் சேர்ந்தோ, அல்லது உயர்தர தொழிற் கல்வி சாலைகளில் சேர்ந்தோ படிக்கிறார்கள். ஏதாவது தொழிற்சாலை மூலமாக அதில் மூன்று வருடங்கள் வேலை செய்த பிறகும் உயர்தர தொழிற்கல்வி பயிற்சிக்குச் செல்லலாம். கல்வியின் எல்லா பிரிவிலும் ஆராய்ச்சிக்குரிய கல்லூரிகள் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன.

### அறியாமையின் வீழ்ச்சி.

உயர்தர படிப்பு ஒருபுறமிருக்க, மற்றொருபுறம் வயதானவர்களுக்கும் கல்வி போதிக்கப்படுகிறது. இதற்காக, "அறியாமையை அழிக்கும் சங்கத்"தின் மூலம் எத்தனையோ பள்ளிக்கூட மாணவர்களும், சர்வ கலாசாலை மாணவர்களும் உதவி பெற்று வருகின்றார்கள். ஸோவியத் ரஷ்யாவில், சுயமரியாதைக்காகப் பாடுபடும் ஒவ்வொருவரும் ஜன சமூகத்திற்குரிய ஏதாவது ஒரு வேலையை மேற்கொண் டிருக்கிறார்கள். இவற்றில் அறியாமையால் பீடிக்கப்பட்டவர்களுக்கு கல்வி யறிவூட்டுவதுதான் அவர்கள் முதலில் தங்கள் தேசத்திற்குச் செய்யக்கூடிய உபகாரமாகக் கொண்டிருக்கிறார்கள். அறியாமையை அழிக்கும் சங்கத்தார் பலதிறப்பட்ட கல்வி இலாகாக்களுடனும் அந்தந்த ஊர் கல்வியதிகாரி யுடனும் சேர்ந்து உழைக்கிறார்கள்.

இவ்வளவு கல்வி பயிற்சியும் இலவசமாக அளிக்கப்படுகிறது. ஆரம்பக் கல்விக்குமுன் சிசு போஷணை சாலைகளில் குழந்தைக்கு ஏற்படுத்தப் பட்டிருக்கும் சிசு பாடசாலைகள் முதல் அது மனிதனுகி படிப்பை நிறுத்தும் வரை எல்லாம் இலவசமே. சர்வ கலாசாலைகளிலும் சரி, தொழிற் கல்வி பள்ளிக்கூடங்களிலும் சரி, ஆராய்ச்சி கழகங்களிலும் சரி, மற்ற எந்தவிதமான பள்ளிக்கூடங்களானாலும் சரியே சம்பளமென்பதே கிடையாது. மாணவர்களுக்குக் கலியாணமாகியிருந்து, அவர்கள் குடும்பத்தில் ஈடு பட்டிருந்தால் அவர்கள் குழந்தைகளுக்கும், அவர்களது படிப்பு முடியும் வரையும் அவர்களுக்குப் பிரத்தியேக சம்பளம் கொடுக்கப்படுகிறது. முற்றிலும் இலவசமான இந்த படிப்பு மற்ற நாடுகளில் ஏற்படுத்தப் பட்டிருக்கும் ஸ்காலர்ஷிப் முறைக்கு மாறானது. மற்ற நாடுகளில் கையாளப்படும் அந்த முறை தொழிலாளர் பிள்ளைகள் சிலருக்குத்தான் உயர்தரப் படிப்பைக் கொடுக்கமுடியும். பொதுவாக ஸ்காலர்ஷிப் மூலம் அவர்கள் உயர்தரப் படிப்பை முடித்தபிறகு, தேக கஷ்டமுள்ள ஜீவனங்களுக்குச் செல்வதில்லை. ஆனால் ஸோவியத் ரஷ்யாவில் அப்படியல்ல. ஒரு மனிதன் எவ்விதமான படிப்பின் கௌரவத்தை அடைந்திருந்தாலும் சரி, அவன் உடற் கஷ்டப்பட்டு ஜீவிப்பவனைச் சேர்ந்தவனே. ஆகையினால் அவன் மாத்திரம் உயர்ந்த நிலையை அடைவதில்லை. அவனைச் சார்ந்த மற்ற எல்லோர்களும் உயர் நிலையை அடைகிறார்கள். அங்கு ஒவ்வொருவராலும் கல்வி பயிற்சியில் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கும் அக்கரைக்குக் காரணம் இது ஒன்றே. உதாரணமாக Kharkhov என்னுமிடத்திலுள்ள Red Army Clubன் மேல் அதிகாரி யொருவர் நீர் தேக்கும் முறையைப்பற்றி விவ

கரிக்கிறார். அவரது அந்தஸ்து ஒரு (General) ஜனராலுக்கு சமானமானது. அப்படியிருக்க அவர் மற்ற விஷயங்களில் தலையிடுவதில் பலன் என்ன? அதுவே ரஷ்யா இவ்வளவு சீக்கிரத்தில் முன்னேற்ற மடைந்ததற்குக் காரணம். ஸோவியத் கல்வி முறை, சந்தேகமின்றி தொழிலாளர்களிடை மறைந்து கிடந்த புத்தி கூர்மையையும், சிறந்த வித்தைகளையும் வெளிப்படுத்தி யிருக்கிறது.

## சமத்துவம்

மேலும் இந்த ஸோவியத் முறையில் வகுப்பு பேதமின்றி கொடுக்கப்படும் கல்விபயிற்சி, நம் கவனத்தைக் கவரக்கூடியது. எல்லாக் குழந்தைகளும் ஒரு மாதிரியான பள்ளிக்கூடத்திற்குத்தான் போகிறார்கள். ஒரு பள்ளிக்கூடத்தில் இருக்கும் வசதி மற்றொரு பள்ளிக்கூடத்திலும் இருக்கிறது. ஒன்றிற்குத் தாழ்ந்தும் மற்றதிற்கு உயர்ந்தும் இல்லை. ஆனால் சில பேதங்களே தற்காலிகமாக இருந்து வருகின்றன. அவைகளும் நாளடைவில் மறைந்துவிடும். அதுவுமன்றி ஸ்திரீ புருஷ பேதமின்றி இரு பாலாரும், உலகாசாரத்திற்கு தகுதியான முறையில் கூட்டுப்பயிற்சி அளிக்கப்படுகிறார்கள். உபாத்தியாயர்கள் மாட்டும்; ஸ்திரீ புருஷ பேதமில்லையென்பது பின் வருவனவற்றால் அறியப்படும். சமவேலைக்கு இரு பாலார்க்கும் சமசம்பளமே கொடுக்கப்படுகிறது. ஆணாயிருந்தால் அதிகம், பெண்ணாயிருந்தால் குறைவு என்பதே கிடையாது. எதாவது நன் தருணம் வாய்த்தால் இரு பாலார்க்கும் சமசந்தர்ப்பம், அத்தருணத்தை பயன்படுத்திக் கொள்ள அளிக்கப்படுகிறது. கல்வி யிலாகாவில், மிகப் பொறுப்புவாய்ந்த ஸ்தானங்களைப் பெண்கள் வகித்திருக்க, அவர்களிடம் எத்தனையோ ஆண்கள் மிகுந்த விசுவாசத்தோடும் பணி செய்கிறார்கள்.

ஆண் பெண்களிடம் காணப்படும் இந்த சமத்துவம், சோவியத் ரஷ்யாவில் வசிக்கும் 160க்கு மேற்பட்ட ஜாதியார்களிடை (Nationalities) யும் காணப்படுகிறது. ஐக்கிய அரசியலுக் குட்பட்ட எந்த ஜாதியினரும், யார் ஆட்சிக்கும் உட்பட்டவர்களில்லை யாதலால், அவர்களுக்கு அளிக்கும் கல்வி பயிற்சியிலும் வேறுபாடு இல்லை. எல்லா சிறுபான்மை வகுப்பினரிடையிலும், கல்வி பரவுவதற்கு இருக்கும் இந்த உற்சாகம் அளவற்றது. 74 புது எழுத்துகள் உற்பத்தி செய்யப்பட் டிருக்கின்றன. அதனுடைய பலனும் அளவற்றது. அதன் பயனாக கல்விப்பயற்சி அளிக்கப்படாத 8 முதல் 12 வயது வரை இருக்கும் குழந்தைகளே அந்நாட்டில்இல்லை.

## சோதனைகளைத் தவிர பரீக்ஷைகள் இல்லை.

மற்ற நாடுகளில் ஒருவனது வாழ்க்கை அவன் தேரும் பரிக்ஷைகளை நாடியிருக்கிறது. பரிக்ஷைகளில் தேறினால் தான் அவன் வாழ்க்கையில் நல்வழியை அடைய முடியும். ஆனால் ரஷ்யாவின் உத்தேசம் துரதிர்ஷ்டரிடத்தினின்று அதிர்ஷ்ட முள்ளவர்களை பொறுக்கி யெடுப்பதற்கு அல்ல. அதற்குப் பதிலாக எல்லோர் அறிவையும் சோதனை செய்வதே யாகும்! பரிக்ஷை யென்பதற்கு ரஷ்யாவில் ஒரு வார்த்தை இருக்கிறது. அதை நாம் நேராக மொழி பெயர்த்து பார்த்தால் ரஷ்யா கல்வியதிகாரிகளின் பரிக்ஷை யென்பதை பொறுத்த நோக்கம் இன்னதென்பது வெளியாகிறது— அது ஒரு சோதனை. மாணாக்கன் பெற்றுள்ள அறிவின் அளவை சோதிப்ப

தாகும். ஒரு வகுப்பிலிருந்து மற்றொரு வகுப்பிற்கு உயர்த்தல் அந்த அளவைப் பொறுத்தது. அந்த சோதனைகள் மாத்திரமே ஒரு மாணாக்கனின் ஆற்றலை அளக்கும் கருவிகள் அல்ல. வருஷ முழுதும் அவன் பள்ளியில் கிரமமாக செய்த ரிகார்டுகளும் சோதனைகளுக்கு உதவியாயிருக்கின்றன. சோதனைகள் மற்றொரு வழியிலும் பயன் படுகின்றன. அவைகள் சர்வஜன சங்கத்திற்குரிய முறையில் ஒருவித கட்டுப்பாட்டில் பள்ளிக்கூடத்தையும் அதனது உபாத்தியாயர்களையும், வைப்பதற்கு உதவியாயும் இருக்கிறது. மேலும் இத்தகைய பரிக்ஷை காலங்களில் பிள்ளைகள் பயமின்றி, சாதாரண முறையில் இருப்பதற்காக அதிக சிரத்தை எடுத்துக்கொள்ளப் படுகிறது. இதற்காக சோதனைகளின் நோக்கத்தையும், போக்கையும்பற்றி விரிவாக, பள்ளிப்பிள்ளைகளுக்கே யன்றி, அவர்களது பெற்றோர்களுக்கும் எடுத்துக் காட்டப்படுகின்றன. இதனால் ஒருவித கூட்டுறவு நிலைமை எல்லா வழிகளிலும் ஏற்படுகிறது. அபேத அரசியலை நிலை நாட்டுவதற்கு அத்யாவசியமான சரியான அறிவைப் பெறுவதற்காக பாடுபடும் கஷ்டத்தில் சோதனைகள், ஆயுதங்களாக உதவுகின்றன என்பதை அவர்கள் மனதில் பதியும்படி சொல்லப்படுகிறது. கேள்விகள் ஒவ்வொரு மாணாக்கனின் ஆற்றலுக்குத் தகுந்தபடி கேட்கப்படுகின்றன. கெட்டிக்காரனாக இருப்பவன் கஷ்டமான கேள்விகளைக் கேட்கப்படுகிறான். பரிக்ஷை முடிவுகள் யோக்யமாகவே பெறப்படுகின்றன. மாணாக்கன் எந்த நிலையை யடைந்திருக்கிறான் என்பதை கண்டுபிடிப்பதன் பொருட்டு பரிக்ஷைகள் நடத்தப்படுவதால், எவ்வித அயோக்யத்தனமும் பரிக்ஷை முடிவுகள் வெளியிடும் போது கையாளப் படுவதில்லை. மேலும் சோதனைப் பரிக்ஷைகள், வாய் பரீக்ஷை, எழுத்து பரிக்ஷைகளில் நேர்மையான வற்புறுத்தலோடு, அந்தந்த வகுப்பின் நிலைமைக்கு ஏற்றபடி, ஜாக்கிரதையாக நடத்தப்படுகின்றன.

## ஆராய்ச்சி (Research)

கல்விப் பயிற்சியில் முன்னேறிவரும் கொள்கைகளின் அநுபவசித்தி, சோவியத் ரஷ்யாவில் இப்போது கல்வித் துறைகளில் செய்யப்படும் ஆராய்ச்சிக்கே உரியது. சோவியத் யூனியனில் கல்வித் துறையில் செய்யப்படுகிற ஆராய்ச்சிகளைப் போல், உலகத்தில் எந்த நாட்டிலுமே செய்யப் படுவதில்லை என்று நாம் தயக்கமின்றிக் கூறலாம். ஆராய்ச்சியில் மிக உன்னத மேம்பாட்டை அடைந்த அமெரிக்காவும் சோவியத் ரஷ்யாவிற்குத் தான் இப்போது முதன்மை ஸ்தானத்தைக் கொடுக்கவேண்டும். ஒவ்வொரு போதனா சாஸ்திர கலாசாலைகளிலும் அநேக பட்டதாரிகள் கூடி வேலை செய்கிறார்கள். அவர்களில் சிலர் பரிசீலனை செய்வதிலும், சிலர் ஆராய்ச்சியிலும் ஏற்பாடு செய்யப்பட் டிருக்கிறார்கள்.

பிரஜாதிபத்தியமுள்ள ஒவ்வொரு யூனியனிலும் ஒரு மத்திய ஆராய்ச்சி சாலையை ஸ்தாபிக்கப்பட் டிருக்கிறது. யூனியன்கள் பரிணமித்தும், முன்னேற்றமடைந்து மிருந்தால் ஒவ்வொரு (region) ஜில்லாவிலும் ஒவ்வொரு சாலை ஏற்படுத்தியிருக்கிறது. ஏதாவது ஒரு விருத்தாந்தம் (report) விமரிசையாக ஆராய்ச்சி செய்யப்பட்டு விவாதிக்கப் பட்ட பிறகு, அந்த ஆராய்ச்சி சாலையைச் சேர்ந்த உபாத்தியாயர்களின் உதவிக்காக அது பிரசுரிக்கப்படும். ஆனால் அவர்கள் அந்த ஆராய்ச்சி விருத்

தாந்தத்தில் இருப்பதை அப்படியே அடிமைத்தனமாக கையாளுவது கூடாது என்று அவர்கள் எச்சரிக்கப் படுகிறார்கள். பல்வேறு இடங்களில், உள்ள 'demonstration' ருஜுவாக்கி வெளிப்படுத்தும் பள்ளிக்கூடங்களில் அந்த ஆலோசனைகள் நிரூபிக்கப்படுகின்றன. அதன் பொருட்டு சுற்றியுள்ள ஜில்லாக்களில் உள்ள உபாத்தியாயர்கள் உதவி செய்யும் பொருட்டும் உற்சாகத்தினாலும் அங்கு கூடுகிறார்கள். மேற்சொன்ன அந்த 'Demonstration பள்ளிகளும் கூட ஆராய்ச்சி வேலைகளை நிரம்பவும் செய்கின்றன. பள்ளிக்கூடத்தின் உள்ளும் புறமும் அவ்வாராய்ச்சி வேலைகள் தெளிவாகச் சித்திரிக்கப்பட்டு, வாழ்க்கைக்கு அவை எவ்வளவு பயன்படும் என்பதை இவைகள் நன்ருக எடுத்துக் காண்பிக்கின்றன.

## பல்கலைப் பயிற்சி (Polytechnisation)

உண்மையிலேயே பள்ளிக்கூடங்களிலும், சர்வ கலாசாலைகளிலும், கற்பிக்கப்படுவன வாழ்க்கையைச் சார்ந்தும், அங்கு படிப்பவர்களின் சுற்றியிருக்கும் நிலைமைக்கும் தகுந்தவாறு மிருக்க வேண்டுமென்கிற நோக்கம் சோவியத் கல்வி முறையிலேயே உயரியது. ஒரு அரசாங்கத்திலிருப்பவர்கள் சர்வ ஜனசங்கத்திற் குரிய வாழ்க்கை முறையில் ஈடுபட்டாலன்றி அவர்கள் சரியான நகரவாசிகள் என்று சொல்ல முடியாது. இந்த கருத்துக்குத் தான் 'polytechnisation' என்று பெயரிடப்பட் டிருக்கிறது. ஆகையினால் மனிதனுக்கும் இயற்கைக்கு முள்ள சம்பந்தத்தின் ஞானம், அந்த சம்பந்தம் கல்வியிலும் தொழிலிலுமே உறவாடுகிறது. ஏன்? அப்போது தான் கோட்பாடும் அதன் அநுஷ்டானமும் ஒன்று சேர்க்கப்பட முடியும். பள்ளிக்கூடங்களில் கைத்தொழில்களான களிமண் வேலை, மர வேலை, காகித வேலை, சமயல் வேலை முதலியனவெல்லாம் பல்கலைப் பயிற்சியின் பாற்படும். அந்த வேலைகளின், ஜனசமூகத்திற் குரிய உட்பொருளை எடுத்து காட்டப்பட்டு, அவைகள் பள்ளிக்கூடத்தின் புறம்பேயுள்ள பொருளாதார நிலைமையினாலும் அரசியல் வாழ்க்கையினாலும் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஆதலின் பள்ளியை விட்டு வெளியேறும் பிள்ளைகள் வாழ்க்கையில் பல துறைகளைப் பின் பற்றுகிறார்கள்.

## கல்வி பயிற்சிக்குரிய சாதனங்கள்

எவ்விதக் கல்வி பயிற்சியா யிருந்தாலும் சரி அதற்குரிய சாதனங்கள் அபரிமிதமாக இருக்கின்றன. கிளப்புகள், வாசக சாலைகள், சலனப் படங்கள், சொற் பொழிவுகள், சங்கீதக் கச்சேரிகள், சமாச்சாரப் பத்திரிகைகள், மியூசியங்கள், பொருட் காட்சிகள், ஒலிபரப்பு சாதனங்கள், இன்னும் பல கணக்கில.

ஒவ்வொரு பள்ளியிலும், ஒரு பிரத்தியேக பயிற்சி அடைந்த 'Supervisor' இருக்கிறார். பள்ளிக்கூடத்திற்கு வெளியே உள்ள மேற்சொன்ன அலுவல்களை அப்பள்ளிக்கூடத்தின் பிள்ளைகளுக்காக இவர் கவனிக்க வேண்டும். படித்த கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் நாடக கோஷ்டியைச் சேர்ந்தவர்களுக்காக ஒரு டிராமா எழுதுகிறார்கள். சீன்களும், வேஷத்துக்குரிய சாமான்களும் கலைக்கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் செய்து கொடுக்கிறார்கள். இன்ஜினீயரிங் சர்க்கிளைச் சேர்ந்தவர்கள் நாடக மே

டையை விளக்கு முதலியவற்றால் அலங்கரித்து விடுகிறார்கள். இத்துடன் பள்ளிக்கூடத்து பிள்ளைகளும் மேற்சொன்ன எல்லா கோஷ்டியினரிடமும் கலந்து வேலை செய்கிறார்கள். அதற்காக அப்பிள்ளைகளுக்கு கூட்டுறவு ஸ்தானங்கள், கிளப்புகள் இருக்கின்றன. இந்த கிளப்புகள் பெற்றோர்களின் கமிட்டிகளின் மூலம் வீடுவரை சம்பந்தப்பட்டிருக்கிறது. பிள்ளைகளின் பெற்றோர்கள் வேலைசெய்யும் தொழிற்சாலைகளுக்கும் (Factory) சம்பந்தம் ஏற்படுகிறது. அதுவன்றி ஸ்பெஷலாக சிறு பிள்ளைகளுக்காக சிருங்கார கலைகள் பயிற்சி செய்யக் கூடிய பள்ளிகள் பல இருக்கின்றன. அந்த பள்ளிகள் பெரிய நாடகம், சங்கீதம் முதலிய சிருங்காரக்கலை கழகங்களுடன் சம்பந்தப்பட் டிருக்கின்றன. சிறு பிள்ளைகளின் தியேட்டர்களையேபற்றி ஒரு புஸ்தகமாக எழுதிவிடலாம். ஏனெனில் அவைகளின் செல்வாக்கு அவ்வளவு பரந்து இருக்கின்றன. இந்த இயக்கத்தின் போக்கு இருவிதம். ஒன்று குழந்தைகளாலேயே நடத்தப்படும் தியேட்டர்கள். நடித்தல் அதற்குரிய வேலைகளைச் செய்தல் எல்லாம் அவர்களே. அதுவன்றி உலகத்திலேயே எங்குமில்லாத இரு ஸ்தாபனங்கள் இருக்கின்றன. அவை யாவன:—குழந்தைகளின் புத்தகங்களைக் கொண்ட ஒரு மியூசியமும், நாடகசாலை விஷயமாக குழந்தைகளுக்குப் போதிக்கும் புத்தகங்களைக் கொண்ட ஒரு பெரிய ஸ்தாபனமும்.

கல்வி பயிற்சி முறையி லிருந்தாலும் சரி, கூட்டுறவு முறையிலிருந்தாலும் சரி, அல்லது, உழவுத் தொழிலுக்குரிய முறையி லிருந்தாலும் சரி. எல்லாம் ஸ்தல ஸ்தாபனங்களும் குழந்தைகளின் முன்னேற்றத்திற்காகவும் அமைக்கப்பட் டிருக்கவேண்டும். யூனியனில் எந்தக் குழந்தையும் தனது அறிவு விர்த்திக்காக கல்வி பயிற்சி பெறாம லிருக்கக் கூடாது என்பது ஸோவியத் அரசாங்கத்தின் முக்கிய நோக்கமாகும்.

இதன் பயனாக சென்ற 20 வருட காலங்களில் 100க்கு 93 பேர்கள் படித்தவர்களா யிருக்கிறார்கள். இதற்காக உபாத்தியாயர்கள் தேவை மிகுந்திருக்கிறது. இன்றைய ஸோவியத் யூனியனின் நோக்கம் லெனினின் வார்த்தைகள் மூலம் வெளியாகிறது. "பள்ளிக்கூடத்து வாத்தியார் இதுவரையில் அவர் இருந்த நிலைமையைக் காட்டிலும் உன்னத நிலைக்கு உயர்த்தப்பட வேண்டும். எந்த ஜனசமூதாயக்கொள்கையை யுடைய சங்கத்திலும் அவர்கள் அத்தகைய உன்னத ஸ்திதியை அடைய முடியாதிருக்க வேண்டும்". உபாத்தியாயர்களிட மிருந்த ஒருவித அவநம்பிக்கை இப்போது மறைந்து விட்டது. அவர்கள் வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் சௌகரியங்களைப் பெறுகிறார்கள். உபாத்தியாயர்களுக்கு இப்போது தேவை அதிகமிருப்பதால் அவர்களது ஸ்தானத்திற்கு எதுவும் கேடு இல்லை. உபாத்தியாயர்களின் சங்கங்களுக்கும், ஜனங்களின் மற்ற சங்கங்களுக்கும் உள்ள சம்பந்தத்தின் பயனை அவர்கள் பெற்றிருக்கிறார்கள். அவர்களது வேலையின் அபிவிர்த்திக்காகவும், அவர்களது பொருளாதார உரிமைக்காகவும் அல்லது மற்ற எந்த நலனைக் கோரியாவது அவர்கள் சண்டை போடுவதில்லை. தங்களது ஆவியைச் செலவிட வேண்டியதில்லை. அவர்கள் மற்ற ஜனசமூதாயங்களுடன் ஒற்றுமைப்பட்டு அவர்களைச் சேர்ந்தவர்களாகவே இருக்கிறார்கள்.



# இரண்டு சாம்பார் பண்டிதர்கள்

(ஆலவாய்—ஆர். ஆறுமுகம்.)

எங்கள் தமிழ்ப் பண்டிதரைச் சந்திக்கும் எவரும் அவர் நிறத்தைக் கொண்டே இவர்தான் நீலமேகம் பிள்ளை என்று சந்தேகமின்றிச் சொல்லிவிடுவார்கள். ஆஹா! அந்தக் கார்வண்ணனையும் பழிக்கும் கார்மேக நிறமும், ஒட்டகத்துக் கிருப்பதுபோன்ற கழுத்தும், இவர் குடுமிதான் தேங்காய் குடுமியா அல்லது தேங்காய் குடுமிதான் இவருடையதாவென்று ஐயமுண்டுபண்ணும். இவருடைய அங்கங்கள் ஒவ்வொன்றையும் பிரித்துப் பிரித்து விரிக்கப் புகுந்தால் விரியும்; சுருங்காது.

அவருக்கு ஏற்ற பெயரை அவர் பெற்றோர்களே தேடிப் பிடித்துக் கொடுத்திருந்தும், அவர்மேல் அன்பு கொண்ட மாணவன் ஒருவன் தன் வீட்டில் காய்த்த சில நல்ல முருங்கக்காய்களைப் பறித்து அவருக்குக் கொண்டுபோம்பொழுது அந்தத் துஷ்டப் பயல் துளசி இதைப் பார்த்து அவருக்கு "முருங்கக்காய்" என்ற நாமம் இட்டான். அது முதல் நீலமேகம் பிள்ளை என்ற பேரைக் காட்டிலும் "முருங்கக்காய்" தான் பிரபல்யமாக அடிபட்டது.

இங்கிலீஷ், கணக்கு உபாத்தியாயர்களிடமெல்லாம் அவதிப்பட்டு மூஞ்சியை இஞ்சிதின்ற குரங்குபோல் வைத்திருந்த மாணவர்களெல்லாம் 'முருங்கக்காய்'' வகுப்பிற்குள் நுழைந்ததும் தங்களை யறியாமலே ஒரு குதி குதித்து எழுந்து மரியாதை செய்வார்கள்.

தமிழ் பண்டிதரிடம் செந் தமிழில்தான் பேசவேண்டும் என்ற கொள்கைப்படி அவரை "சார்" என்றழைக்காமல் "ஐயா" என்றுதான் நாங்கள் கூப்பிடுவோம். அவர் நாற்காலியி லமர்ந்ததும் "ஐயா, ஐயோ" என்ற சப்தம் கிளம்பிவிடும். அவர் மாத்திரம் தனக்குத் தெரிந்த இரண்டொரு ஆங்கில வார்த்தைகளைத் தாராளமாய் உபயோகித்து "நான்சென்ஸ்! யார்டா அது. வந்தும் வராது முன்னே ஐயோ, ஐயோ என்று அலறுவது? ஸ்டுபிட் கூஸ்" என்று தன் பலம் கொண்ட மட்டும் மேஜையில் ஒரு குத்து வைத்தவுடன் வகுப்பு சிறிது நேரம் அமைதியாயிருக்கும்.

உடனே ஒருவன் எழுந்து "ஐயா! அந்த கும்பகர்ணப் படலத்திலே சொல்லியிருப்பதுபோல் அவன் அவ்வளவு நீண்ட காலம் தூங்கினான் என்

றால் அவனுக்கு வயிறே பசிச்சிருக்காதாய்யா?'' என்று கேட்டான். இன்னொருவன் எழுந்து ''ஐய்யய்யா! ஒரு சந்தேகம். 'கோவலனுக்கும் கண்ணகிக்கும் மணம் முடிந்த பின்பு இல்வாழ்க்கையில் அவன் மனைவியிடம் அன்பாகவே இருந்தானென்று இளங்கோ அடிகள் கூறியிருக்கிறாரே! அதற்கப்புறம், எப்படி ஐயா அவன் மனம் மாதவியை நாடியது?'' என்று ஒரு பெருத்த கேள்வியைக் கேட்டான்.

''இடியட் மடயன்கள். இப்படி அசம்பாவிதமான கேள்விகளை இனிமேல் கேட்டால் வெளியில் அனுப்பிவிடுவேன். ஜாக்கிரதை'' என்று ஒரு முழி முழித்து நாலுபக்கமும் சுற்றிப் பார்ப்பார் 'முருங்கக்காய்.''

எங்கள் துளசி இவரைக் காட்டிலும் படேபடே பண்டிதர்களையெல்லாம் பார்த்தவன்; இதற்கா அஞ்சுபவன்? மெதுவாய் எழுந்து மிக்க வணக்கமாய், சாதுவைப் போல நடித்து ''ஐயா! எனக்கு உண்மையாகவே ஒரு சந்தேகம் வந்து நேற்று இரவெல்லாம் தூக்கமே இல்லையய்யா! கோபிக்காமல் சொல்லுவீங்களா? ஒரு மனிதனுக்கு வேண்டிய உணவுப் பொருள்களில் 'முருங்கக்காய்' மிக முக்கியமானதா?......'' 'முருங்கக்காய்' என்றதுமே பையன்கள் கொல்லென்று சிரித்துவிடுவார்கள். பண்டிதருக்கும் காரணம் தெரிந்து கோபம் பொங்கி வழிய நாற்காலியிலிருந்து எழுந்து கையை ஓங்கிக் கொண்டே துளசியிடம் வருவதற்குள் அவன் பள்ளிக்கூட வாசலுக்கு ஓடிவிடுவான். அதன் பின் அவனை அடுத்த நாள் தமிழ் வகுப்பில்தான் காணலாம்.

மறுபடியும் நாற்காலியில் வந்து அமர்ந்து ''இந்தமாதிரி நாலு அசட்டுக் கழுதைகள் இருந்தால் எப்படி வகுப்பு உருப்படப்போகிறது? எடுங்கள் புத்தகத்தை. இன்று ''மணிமேகலை''யைத் தொடங்குவோம்'' என்று புத்தகத்தை விரித்ததும் மணியும் அடித்துடும்.

ஆண் 'சிங்கங்கள்' தான் இப்படி தமிழ்ப் பண்டிதர்களை சுண்டைக்காய் என்று நினைத்துவிட்டார்களா அல்லது 'சேலை கட்டிய மாதரும்' (கவுன் போட்டவர்களும்தான்) இப்படித்தானா வென்று அறிய நான் வெகு நாளாய் ஆவல் கொண்டிருந்தேன். இந்த ஆவல் சமீபத்தில்தான் பூர்த்தியாயிற்று. இதற்கு உதவியாயிருந்தவர் ஒரு பெண்பாடசாலை பெண் ஆசிரியர்தான். (ஊரும், பேரும், பள்ளியும் கேட்டுவிடாதீர்கள்.)

என்னை அந்த அம்மாள் ஒரு 'ஸ்டோர் ரூ'மிற்குள் அடைத்துவிட்டார்கள். அதற்கும் தமிழ் வகுப்பிற்கு மிடையில் ஒரு கதவு. அதில் ஒரு துவாரம். இதன் வழியாக அங்கு நடக்கும் விஷயங்களெல்லாம் நன்றாய்த் தெரியும். அங்கு நான் அடைபட்டுக் கிடந்தது எனக்கும் என்னையழைத்துச் சென்ற அந்த அம்மாளுக்கும் தான் தெரியும்.

சரித்திர (தரித்திரமல்ல) 'டீச்சர்' வெளியேறிவிட்டார். அடுத்த பீரியட் தமிழ் பண்டிதர் வரும் சமயம். மாணவிகளெல்லாம் தங்கள் புத்தகங்களை 'டெஸ்க்'கினுள் வைத்துவிட்டு ஆவலாய் அவர் வருகையை எதிர்பார்த்திருந்தார்கள். எதற்கு? கதை கேட்பதற்குத்தான். இரண்டாம்

மணியும் அடித்தது. பண்டிதரும் நுழைந்தார். "மரியாதை மாணவி"களெல்லாம் எழுந்து மரியாதை செய்தனர். டீச்சரும் நாற்காலியி லமர்ந்தார்.

ஒரு நெட்டை மாணவி எழுந்து, "அம்மா நேற்று கதை முடிவதற்குள் மணியடித்து விட்டது. இன்று பாக்கியைச் சொல்லுங்க ளம்மா" என்று கெஞ்சினாள்.

"உக்காருடி கழுதை. தினம் கதையே கேட்டுவிட்டு நாளைக்குப் பரீக்ஷையிலே என்னத்தை எழுதப்போறே. இன்றைக்கு "கலிங்கத்துப் பரணி"யை முடித்துவிட வேண்டும்" என்று கூறிக்கொண்டே புத்தகத்தை விரித்தார்.

அதற்குள் மற்றொரு மாணவி எழுந்து, "எம்மா! இந்தப் பரணிக்கும் நம் வீட்டிலுள்ள பரணிக்கும் உள்ள வித்தியாசம் என்னம்மா?" என்று தனக்கு வந்த சிரிப்பை யடக்கிக்கொண்டே கேட்டாள்.

"உனக்குக் கலியாணமாகி விட்டதாடி?........" என்று பண்டிதர் முடிப்பதற்குள் "ஆயிட்டதம்மா" என்று ஒரு அநாதைக்குரல் கேட்டது. "சரி. அப்படியானால் உன் கணவரைப் போய்க் கேள். பரணியிலுள்ள விறகுக் கம்பால் அந்தச் சந்தேகத்தைத் தீர்த்துவிடுவார்" என்று பண்டிதர் பகன்றார். பரணி வித்தியாசம் கேட்ட மாணவி பல்லைக் காண்பித்துக் கொண்டே உட்கார்ந்து விட்டாள்.

"எம்மா, தெய்வப்புலவர் திருவள்ளுவரின் மனைவி வாசுகி யம்மையாரைப்பற்றி பல கதைகள் வழங்குகின்றதே; அந்த அதிசயச் செயல்களை அந்தம்மாள் எப்படியம்மா செய்ய முடிந்தது?" என்று பதிபக்தி விரதம் இனி அனுஷ்டிக்கப் போகும் ஒருபெண் கேட்டாள்.

"அதெல்லாம் கற்பின் சக்தியால்தான் செய்ய முடியும். இக் காலத்தில் அப்படிப்பட்ட பெண்கள் யாரிருக்கிறார்கள். லக்ஷத்தில் ஒருவரைக்கூட காண முடியாது."

"உங்களால்கூட அப்பேர்ப்பட்ட காரியங்கள் செய்ய முடியாதாம்மா?"

"அதெப்படியடி முடியும்?"

"அப்படியானால் நீங்கள் கற்புள்ள......"

"சீ! தடி நாயே! வாயை மூடு! போ வெளியே. கேள்வியைப் பார்; கேள்வி" என்று அதட்டி உட்காரவைத்தார் பண்டிதர்.

"இன்றைக்கு தேவிகா வரவில்லைபோலிருக்கிறதே. யாருக்காவது காரணம் தெரியுமா?" என்று பொதுவாகக் கேட்டார் பண்டிதர். "அவள் போன 'பீரீட்' இருந்தாம்மா. சற்று நேரத்துக்கு முன்புதான் அவளை யாரோ வந்து தேடுவதாகப் பியூன் அழைத்துச் சென்றான்" என்று ஒருத்தி பதிலளித்தாள்.

"சரி; சரி. அவள் ஒருத்திதான் நல்லவள் என்று கருதியிருக்க அவளும் ஆரம்பித்துவிட்டாளா? எல்லாம் பள்ளிக்கூடத்திலிருந்து கொண்டே

ஜோடி தேடுராப்போலிருக்கிறது......" என்று ஆசிரியர் கூறி முடிக்கு முன் வெளியிலிருந்து ஒரு பெண் வகுப்பிற்குள் நுழைந்தாள். மற்ற மாண விகளெல்லாம் அவளைப் பார்த்துச் சிரிக்கவே அவள் காரணம் தெரியாமல் பண்டிதரைப் பார்த்தாள். அவரும் சிரித்தார். இவளும் ஒரு அசட்டுச் சிரிப்போடு தன் இடத்தில் போய் அமர்ந்தாள். இவள்தான் அந்தத் தேவிகாபோலும். நான் பள்ளியில் நுழையும்போதே வாசலில் இவளும், இன்னொரு தற்கால நாகரிக மாணவனும் பேசிக்கொண்டிருப்பதைப் பார்த்துவிட்டுத் தான் வந்தேன். அவளைப் பற்றி பண்டிதர் சற்று முன்பு சொன்னதும் சரியாய்த்தானிருந்தது. ஏனென்றால் பண்டிதரும் அவர் படிக்குங் காலத்தில் இப்படித்தானே......அந்த அநுபோகத்தால் தான் மற்றவர்களையும் அப்படிச் சொல்லுகிறார் போலும் என்று நினைத்துக் கொண்டிருக்கையில் நானிருந்த அறைக்கதவை யாரோ திறக்கும் சப்தம் கேட்டு அங்குள்ள மேஜைக்கடியில் தலையைவிட யத்தனித்தேன். என்னை யழைத்துச் சென்ற அந்த அம்மாள் பார்த்துச் சிரித்துவிட்டு "வேடிக்கை பாத்தாச்சா? வகுப்பு முடியும் நேரமாகிவிட்டது. மாணவிகளெல்லாம் வெளியேறுவதற்குள் நீயும்........." என்று கூறி என்னைத் தோட்டத்து வழியாக அனுப்பிவிட்டார்கள். நல்ல வேளையாக ஒருவர் கண்ணிலும் படவேயில்லை.

அன்று மாலை அந்தஅம்மாளை சந்தித்தபோது "எங்கள் தமிழ்ப் பண்டி தர்க்கெல்லாம் நாங்கள் ஒரு புதுப்பெயர் வைத்திருக்கிறோமே. உங்கள் தமிழ்ப் பண்டிதர்க்கும் அப்படி ஏதாவது உண்டா?" என்று வினவினேன்.

"ஓ! அது தெரியாதா? அந்த அம்மாளுக்குப் பருப்பின்மேல் பரம பிரியமாம். மாணவிகள் அவரை "பருப்பு" என்றுதான் பட்டம் கட்டி யிருக்கிறார்கள்" என்று சொல்லிவிட்டுப் போனார்கள்.

"முருங்கக்காய்! பருப்பு!! ஆஹா இரண்டையும் சாம்பார் செய்தால் எப்படி இருக்கும்!" என்று எண்ணும்போது நாக்கில் மள மளவென்று ஜலம் ஊறிற்று.

நாம் வேண்டுமென்றே சேர்த்துச்செய்யும் இந்தச் சாம்பாரே இவ் வளவு ருசி என்றால் அந்த "முருங்கக்காயும்" அந்தப் "பருப்பும்" மனம் ஒன்றுபட்டு ஒரு காரியத்தை செய்துகொண்டால் எப்படி இருக்கும்?

இதைப்போய் யாரும் அவர்களிடம் சொல்லி விடாதீர்கள். ஒரு சம யம் அவர்கள் அப்படி ஏதாவது செய்தாலும் செய் துவிடக்கூடும். ஏனென் றால் அவர்க ளிருவருக்கும் இன்னும் விவாகமில்லை.



# விதியும் மதியும்

(S. கிருஷ்ணன்.)

வீரர் வணக்கம் தமிழ்நாட்டிற்கு புதியதல்ல. பண்டை நூற்களில் இதைப் பரக்கக் காணலாம். வீரர் மாத்திரமல்ல வீர வனிதைகளும் தமிழர்களால் வணங்கப்பட்டு வந்தார்கள். வீராங்கனை ஒருத்தியின் சரிதை இங்கு தரப்படுகிறது. இவள் இன்றும் குமரிநாட்டுப் பெண்மணிகளால் பாடப்பட்டு வருகிறாள்.

பரத கண்டத்தின் தென்பாகத்திலுள்ளது குமரிநாடு. இப்பொழுது, கடல்கோளால் அந்நாட்டின் பெரும் பகுதியும் அபகரிக்கப்பட்டு போய் விட்டது. பஃறுளியாறும், குமரி மலையும் அப்பொழுது இருந்ததென்றும், கடல் கோளால் அவை அழிந்து போயிற்றென்றும் பண்டை நூற்கள் பகர்கின்றன. தற்போதைய கன்யாகுமாரி பண்டைய சுவடிகளில் கூறப்படும் கன்னியாகுமாரி அன்று என்பது சிலர் கொள்கை. பஃறுளியாறு என்பது இன்றைய பரலியாறே என்றும், குமரிமலை என்பது தாடகை மலையைக் குறிப்பிடுகிறதென்றும், பஃறுளியாறு, குமரியாறு, பரலியாறு என்பன ஒரு பொருளையே தெரிவிக்கின்றதென்றும், கடல் கோளால் இவை அழிந்தன என்பது ஏற்றுக்கொள்ளத் தக்கதென்றும் ஒரு சாரார் கூறுகிறார்கள். இவை எப்படியாயினும், குமரி நாட்டின் பெருமைக் கறிகுறியாக குமரியம்மன் கோயில் இன்றும் இருந்து வருகின்றது.

குமரிப்பதியை குந்தளப்ப ராஜன் என்பவன் சில ஆண்டுகளுக்கு முன் ஆண்டு வந்தான். அவன் சகல சாஸ்திரங்களுமுணர்ந்தவன். அழகிலும், வீரத்திலும், அரசாளும் தன்மையிலும் ஒப்பற்றவன். அவனது மனைவி திருமாதேவி என்பவள். சதிபதிகள் பூவும் மணமும்போல, நகமும் சதையும்போல ஒற்றுமையுடன் இல்லறம் நடாத்தி வந்தனர். அவர்களுக்கு நெடுங்காலமாக புத்திர சந்தானம் உண்டாகவில்லை. கோயில்கள் தோறும் ஆறுகால பூஜைகள் நடத்தினர். ஏழைகட்கு அன்னதானம், சொர்ண தானம் செய்தனர். பிரார்த்தனைகள் செய்து கொண்டனர். விரதம் அனுஷ்டித்தனர். எனினும் சந்தானம் மாத்திரம் உண்டாகவில்லை.

திருமாதேவி குழந்தை இனிமேல் பிறக்கும் என்ற நம்பிக்கையை இழந்து விட்டாள். அவள் மனது பெருந்துயரை அடைந்திருந்தது. அப்படியிருக்க, ஒருநாள் ஒரு குறத்தி வந்து அவளுக்கு கூடிய சீக்கிரம் ஒரு புத்திரி பிறப்பாளென்றும், அவளுக்கு தோட்டுக்காரி என பெயரிட்டு வளர்க்க வேண்டுமென்றும் குறி சொல்லிச் சென்றாள். குறத்தியின் குறி பொய்த்துப் போகவில்லை. சிலநாளில் தேவி கருப்பமுற்றாள். ரதியைப் போன்ற அழகிய பெண்குழந்தை ஒன்று பிறந்தது. குறத்தியின் கருத்தின்படி அக் குழந்தைக்கு தோட்டுக்காரி என பெயரிடப் பட்டது.

அரசகுமாரி நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வரலானாள். வயதும் பதினான்கு ஆயிற்று. அழகில் இணை யாருமில்லை எனக் கூறும்படி தெய்வீகமான அழகுடன் அவள் தோன்றினாள். துடி யிடையும், கொவ்வைச் செவ்வாயும், மாந்தளிர் மேனியுமுடையவள் அவள். நற்குண நற்செய்கைகளையுடைய அந்த நாரீமணியை பலர் மணஞ்செய்துகொள்ள ஆசித்தனர்.

தனது ஒரே மகளாகிய தோட்டுக்காரியை உரிய சமயத்தில் மணஞ் செய்து கொடுத்து இன்பம் அனுபவிக்க வேண்டுமென்று அரசன் எண்ணினானில்லை. அப்பொழுதும் தனது மகளை சிறு குழந்தை யெனவே அவன் கருதினான். ஆதலின் மணம் பேசவந்த பலரை கோபித்து அனுப்பி விட்டான். இதனை அறிந்த அரசர்கள் அவனது கோபத்திற்கஞ்சி பெண் கேட்கத் துணியவில்லை.

அடுத்த பக்கத்தில் ஒரு மலைநாடு இருந்தது. அதனை குமரப்ப ராஜன் என்பவன். அரசு புரிந்து வந்தான். அவனது புத்திரன் கோனாண்டி ராஜன் என்பவன். அவனுக்கு அப்பொழுது வயது இருபது. அரசர்க்கு வேண்டிய சகலவித்தைகளும் கற்று அவன் கீர்த்தி பிரதாபத்துடன் விளங்கி வந்தான். ஒரு தடவை தீர்த்த யாத்திரையாக கன்யா குமாரிக்கு அவன் போக நேர்ந்தது. அப்பொழுது அரசனது சிங்காரவனத்தில் சில பெண்மணிகள் பந்தாடி நிற்பதை அவன் கண்டான். மகா அற்புதமாக இருந்த அந்தக் காட்சி அவன் மனதைக் கவர்ந்தது. ஆகவே, அதனைக் கவனித்த வண்ணம் அவன் தோட்டத்தின் ஒரு பக்கத்தில் நின்று கொண்டிருந்தான்.

பந்தாடி நின்றவர்கள் தோட்டுக்காரியும் அவள் தோழிகளுமே. நக்ஷத்திரக் கூட்டங்களுக் கிடையில் சந்திரன் கம்பீரமாக பிரகாசிப்பதுபோல் பாங்கியர்க் கிடையில் அரசகுமாரி பிரகாசித்தாள். ஓடியும், குதித்தும், அசைந்தும் அவள் பந்தாடியது ஆச்சரியகரமாகவும், காணக் கிடைக்காத காட்சியாகவும் காணப்பட்டது. அவள் அசைந்தசைந்து பந்தாடும்போது அவள் துடியிடை முறிந்து விடுமோ என்ற பயத்தையும், குதித்து குதித்து அவள் பந்தாடுகையில் செம்பஞ்சுக் குழம்பை யொத்த அவள் பாதங்கள் நோகுமே என்று இரங்கியும் கோனாண்டிராஜன் பிரேமையுடன் அதே காட்சியில் ஈடுபட்டு மெய்மறந்து நின்று விட்டான். அவளைப் பார்த்தவுடனே இன்னாரென்று அவன் அறிந்து கொண்டான். "தன் அம்மான் மகளே அவள்" என்று மனதில் கூறிக் கொண்டான். "அடைந்தால் இவளை யடைவேன். இன்றேல் தற்கொலை செய்து இறந்து விடுவேன்" என்று சங்கற்பம் செய்து கொண்டான்.

இவ் வேளையில் அரசகுமாரி அடித்த பந்து தடுப்பாரின்மையால் எழும்பி வந்து கோனாண்டிராஜன் காலடியில் வந்து விழுந்தது. பந்து விழுந்த சப்தம் கேட்டதும், அவன் தான் கண்டு கொண்டிருந்த சிந்தனையுலகத்திலிருந்து விழித்தான். குனிந்து பந்தை யெடுத்து "ஹா! இந்த பந்து செய்த புண்ணியம் கூட நான் செய்யவில்லையே" என்று பொறாமைப்பட்டான். அந்தப் பந்தை மார்போடு சேர்த்தணைத்து மாறி மாறி முத்தமிட்டான்.

பந்தை தேடிக்கொண்டு வந்தனர் சேடியர். அயல் மனிதன் ஒருவன் அதனை எடுத்து முத்தமிட்டு நிற்பதைக் கண்டனர். "யாரையா நீர்? ஆண்கள் வரக்கூடாது இத் தோட்டத்தில் என்பது உமக்குத் தெரியாதோ? எங்கள் தலைவி கண்டால் தண்டிப்பாள். அதற்குள் பந்தைத் தந்துவிட்டு ஓடிச் சென்று விடும்" என்று சேடியர்கள் கூறினார்கள்.

"பெண்களே! கோபம் வேண்டாம். நான் அயலானல்லன். உங்கள் அரசனின் மருமகன். என்னை கோண்டிராஜன் என்பார்கள். தீர்த்த யாத்திரை சென்று வழி தவறி வந்து விட்டேன்." என்று அவன் பதில் கூறினான். தம் அரசனின் மருமகன் என அறிந்ததும் தோழிகள் யாது செய்வது என திகைத்து நின்றனர். சேடியர் சென்று நெடுநேரமாகியும் வாராததைக் கண்ட அரசகுமாரி அவர்களைத் தேடியவண்ணம் அவர்கள் சம்பாஷித்து நின்ற இடம் வந்தாள். தலைவியைக் கண்டதே தோழிகள் மரியாதை செய்து அகன்று நின்றார்கள்.

தோட்டுக்காரியை சமீபத்தில் கண்டதும் கோண்டிராஜன் தேவாமிர்தம் உண்டவன்போல் களிப்படைந்தான். தான் கண்டது கனவோ நனவோ என கண்களைத் துடைத்துப் பார்த்தான். சந்தேகமில்லை. அரசிளங்குமாரிதான் வந்திருக்கிறாள் என ஆனந்தம் கொண்டான். அவளிடம் தனது காதலை வெளிப்படுத்தி அவள் கருத்தையறிய நினைந்து, "அரசகுமாரி! என்னை நீ அறிந்திருக்கலாம். உன் சொந்த அத்தான் நான். தீர்த்த யாத்திரை சென்று வரும்போது நீ பந்தாடி நின்ற காட்சியைக் கண்டு வியந்தேன். உன்னை நெருங்கிப் பேசவேண்டுமென்று ஆசைப்பட்டேன். அதற்குள் கடவுள் இந்த பந்துமூலம் நம்மை சந்திக்கச் செய்துவிட்டார்" என்று கூறினான்.

"சந்தோஷம். பந்தைத் தாருங்கள். விளையாடச் செல்லவேண்டும்" என்று அரசகுமாரி அவன் வார்த்தைகளைப் பொருட்படுத்தாது பதில் கூறினாள்.

"பந்தைத் தருகிறேன். அம்மா அப்பா எல்லோரும் சுகமாக இருக்கிறார்களா?"

"சுகம். நேரமாகிறது. பந்தைத் தந்துவிடுங்கள்."

"கண்மணி! என் ஆத்திரப்படுகிறாய்? இன்றில்லாவிட்டால் நாளை விளையாடக்கூடாதா என்ன?"

"இன்றில்லா விட்டால் நாளை பேசக்கூடாதா என்ன?"

"சரி. ஒரே வார்த்தை கேட்கிறேன். பதில் கூறினவுடன் பந்தைத் தந்து விடுகிறேன்."

"சொல்லும் சீக்கிரம்."

"நீ என்னைக் காதலிப்பாயா?"

"என்ன ஐயா! பந்தைக் கேட்டால் 'காதல் கீதல்' என்று பிதற்றுகிறீரே. பந்தைத் தருவீரா என்ன?"

"அரசகுமாரி! நீ என்னை அவமதித்து பேசுகிறாய்? நான் யார் என்பதை நீ அறிந்து கொள்ளாவிட்டாலும் இன்னும் சில நாளில் அறிந்து

கொள்வாய்! உன்னைக் கூடியசீக்கிரம் நான் கலியாணம் செய்வேன். இது சத்தியம்.''

"அடி தோழிகளே! இவன் வாய்க் கொழுப்பால் ஏதேதோ உளறுகிறான். மரியாதை செலுத்தி பந்தை வாங்குங்கள்."

தோழிகள் தலைவியின் கட்டளைப்படி கோணண்டி ராஜனை நெருங்கியதும் அவன் பந்தை எறிந்து தோட்டத்தை விட்டுச் சென்றான்.

* * * *

அடுத்தநாள் குந்தளப்ப ராஜனுக்கு ஒரு நிருபம் அனுப்பினான் கோணண்டிராஜன். அதில் அவர் தனது மகளை மணஞ்செய்து தரவேண்டுமென்று அவன் கேட்டிருந்தான். நிருபத்தைக் கண்டதும் குந்தளப்ப ராஜனுக்கு அளவுக்கு மீறிய கோபம் உண்டாயிற்று. "என்ன! நான் யார்? எப்பேர்ப் பட்டவன் என்பதைக்கூட நினையாது எனக்கு அடிமையாவதற்குக் கூட யோக்கிதை யில்லாத இந்தப்பயல் நிருபம் அனுப்பி பெண் கேட்கத் துணிந்து விட்டானே? குழந்தை யில்லை என்று கடுந்தவஞ் செய்து பெற்றெடுத்தேன், என் கண்மணியை. பிள்ளையாசை எனக்கு இன்னும் தீரவில்லை. அதற்குள் பெண் பேசவந்தானே மடையன்?'' என்றிவ்விதமாக வாயில் வந்தவிதம் பேசி நிருபம் கொண்டுவந்த தூதனை வெருட்டி அனுப்பிவிட்டார்.

நடந்த சங்கதிகளை கோணண்டிராஜன் அறிந்தான். "கிட்டாதாயின் வெட்டென மற'' என்னும் முதுமொழி அவன் ஞாபகத்திற்கு வரவில்லை. முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப் படுவதைப்போல் தோட்டுக்காரியை அவன் அடைய எண்ணினான். "அவளை எப்படியும் அடைவேன். அவள் எனக்கே சொந்தம்'' என சபதம் செய்தான்.

* * * *

குமரியம்மன் கோயிலையடுத்த சுனை ஒன்று இருக்கிறது. தினம் அதில் நீராடுவது அரசகுமாரியின் வழக்கம். மேற்படி சம்பவங்கள் நடந்த இரண்டு மூன்று நாளைக்குப் பின் ஒருநாள் அவள் தோழிகளுடன் நீராடப் புறப்பட்டாள். அதையறிந்த அரசன் "கண்ணே! கோணண்டிராஜன் உன்னை எப்படியும் கவர்ந்தாவது மணஞ் செய்துவிடுவேன் என்று சபதம் செய்திருக்கிறானாம். ஒற்றர்கள் இப்போதுதான் வந்து கூறினார்கள். ஆகவே நீ அங்கு சென்று நீராடுவது அழகல்ல. அரண்மனையிலேயே நீராடிவிடு'' என்று தடுத்துக் கூறினான்.

"விதி'' யாரை விட்டது. விதியின்படி மதியும் செல்லும். அரசிளங்குமரி தந்தையின் வார்த்தையைக் கேட்டாளில்லை. "எவனோ ஒரு மடையன் ஏதாவது உளறினால் அதற்குப் பயப்படுவதா?'' என்று மறுத்துக் கூறிவிட்டாள். வேண்டா வெறுப்போடு அரசனும் சம்மதித்தான்.

நீராடிக்கொண் டிருக்கும்போது ஒரு வேலைக்காரன் வந்து "தாயே! கோணண்டிராஜன் சமீபத்தில் வந்திருக்கிறார். தாகமாக இருப்பதால் தண்ணீர் வாங்கிவரும்படி இந்த செம்பு பாத்திரத்தைத் தந்தனுப்பினார்'' என தோட்டுக்காரியை நோக்கிக் கூறினான். தோழி ஒருத்தி செம்பை வாங்கி நீர் மொண்டு கொடுக்க வாரம்பித்தாள்.

"இல்லை. அரசிளங்குமரி தன்கையால் நீர் மொண்டு தந்தால்மாத்திரம் வாங்கி வரும்படி என் அரசர் உத்தரவிட்டிருக்கிறார்" என்று அந்த வேலையாள் சொன்னான். இதைக் கேட்டதும் அரசகுமாரி ஆத்திரங் கொண்டாள். தோழிகளை அழைத்து அந்த வேலைக்காரனை அவமானப்படுத்தி அனுப்பச் சொன்னதுடன் செம்புப் பாத்திரத்தையும் உடைத்து கையில் கொடுத்தனுப்பும்படி ஆணையிட்டாள். அதன்படி சேடியர் செய்தனர்.

சிறிதுநேரம் சென்றிருக்கும். அதற்குள் தனது அரண்மனையிலிருந்து அண்டம் குலுங்கும்படியான பேரிரைச்சல் உண்டானதை தோட்டுக்காரி கேட்டாள். ஏதோ விபரீதம் அங்கு நடக்கிறதென்று யூகித்து, திகிலடைந்தாள். துப்பாக்கி சப்தமும், ஆயுதங்களின் பேரொலியும், வீரர்களின் ஆர்ப்பாட்டமும், ஜனங்களின் பரிதாபக் கூச்சலும், ஜே கோஷங்களும் பிரளய காலத்தை நினைவூட்டியது. ஆம்; தோட்டுக்காரி நினைத்ததுபோல் அவள் அரண்மனையில் பெரிய விபரீத சம்பவம் அப்பொழுது நடந்து கொண்டிருந்தது. தோட்டுக்காரியும், குந்தளப்பராஜனும் தன்னை அவமானப் படுத்தினதற்கு பழிக்கு பழிவாங்கவும் தோட்டுக்காரியை வலுவில் கவர்ந்து செல்லவும் அவன் நினைத்து குந்தளப்பராஜனின் படை வீரர்களை தன் கைவசப்படுத்திவிட்டு ரகசியமாக சதிசெய்து விட்டான். சதிகாரர்கள் திடீரென்று அந்த மாலைப் பொழுதில் கிளம்பி அரசனையும், அவன் சுற்றத்தார், வேலைக்காரர்கள் முதலிய எல்லோரையும் சூழ்ந்து கொன்றுவிட்டார்கள். அப்பொழுது நடந்த சண்டையின் சப்தமே தோட்டுக்காரி கேட்டது.

விபரீதமான இந்த ஒலியைக் கேட்டதும் பாங்கியர்கள் உயிருக்கு பயந்து அரசகுமாரியை தனியே விட்டு ஓடிப்போய் விட்டார்கள். தோட்டுக் காரி மாத்திரம் தனித்து ஸ்நானம் செய்துகொண் டிருந்தாள். அவள் அரண்மனையில் நடந்தவைகளை யூகத்தால் பெரும்பாலும் அறிந்துகொண்டாள். அவள் மனதில் பயம் இல்லாமல் ஓடிப் போய்விட்டது. தைரியம் குடிகொண்டது. இவ்வேளையில் யானைமேலேறி கோனுண்டி ராஜன் தன்னை நோக்கி வருவதை அவள் கண்டாள். அவனைக் கண்டதும் தன் யூகம் உண்மையென்று அவள் நினைத்துக் கொண்டாள். தன்னை தூக்கிச் செல்லத்தான் அவன் வந்திருக்கிறான் என்று அவள் புத்திக்குப் பட்டது. எனினும் அவள் பயமடையவில்லை.

சுனையை சமீபித்ததும் கோனுண்டி ராஜன் யானையிலிருந்தும் இறங்கி அரசகுமாரியைத் தூக்கி வரும்படி யானைக்கு உத்தரவிட்டான். பழகிய யானையாதலால் அது அவன் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து அவளைத் தூக்கும் கருத்துடன நெருங்கியது. "யானையே! தொடாதே என்னை. ஸ்நானம் முடிந்ததும் நானே உன்னிடம் வந்து விடுகிறேன்" என்று அவள் கம்பீரமாகக் கூறினாள். யானை தூர விலகி நின்றது. ஸ்நானம் முடிந்த பிறகு அவள் தானாகவே யானைமேலேறினாள். யானை அரண்மனையை நோக்கிப் புறப்பட்டது.

கோனுண்டி ராஜன் அரண்மனையிலிருந்த சகல உயிர்களையும் மாய்த்து விட்டானாதலால் பயங்கரமான காட்சியுடன் அந்த பாழடைந்த அரண்மனை

தோன்றியது. அரண்மனை அடைந்ததும் தைரியசாலியான அரசகுமாரி யானையிலிருந்து குதித்தாள். ஓடிச்சென்று கோட்டை வாயிலை அடைத்து விட்டாள். கோணாண்டி ராஜன் திகைப்படைந்து விட்டான். அவள் அவ்வாறு நடப்பாள் என்று அவன் நினைக்கவேயில்லை. அவன் யானையின் பின்னர் கால்நடையாக வந்துகொண்டிருந்தான். கண்மூடி விழிப்பதற்குள் இந்த நிகழ்ச்சி நடந்து விட்டதால் அவனால் அதைத் தடுக்க முடியவில்லை.

அரசிளங்குமரி அரண்மனை முற்றும் சுற்றிப் பார்த்தாள். தன் தாயும் தந்தையும் கழுத்தறுபட்டுக் கிடக்கும் கோரமான காட்சியைக் கண்டாள். சுற்றத்தார்களும், நண்பர்களும் இறந்து கிடக்கும் பரிதாப நிலையைப் பார்த்தாள். அவள் நேசத்துடன் வளர்த்து வந்த கிளி ஒரு பக்கத்தில் கழுத்தறுபட்டு கிடந்தது. அவள் காலை நக்கி சமீபத்தில் கிடந்து வரும் வேட்டை நாய் ஒரு பக்கம் இறந்து கிடந்தது. அவள் தன் கைப்பட புல் பறித்து கொடுத்து வளர்த்துவந்த மான்குட்டி இன்னொரு பக்கம் உயிரை யிழந்து கிடந்தது. தன்னந்தனியே அந்த இரவில் அரசகுமாரி இவைகளைப் பார்த்தாளென்றாலும் அவள் சிறிதும் அச்சமடைந்தாளில்லை. அவள் மனம் கல்லைப்போல் இறுகிவிட்டது. கண்ணீர் விடுவதை நிறுத்தினாள். அவள் முகம் கோபாக்கினியினால் சிவந்து பார்க்க பயங்கரமாக யிருந்தது.

வாயிலைத் தட்டி திறக்கும் வண்ணம் கெஞ்சிக்கொண்டு நின்றான் கோணாண்டி ராஜன். ரத்த வெறி பிடித்த அவனுக்கு அப்பொழுது தான் புத்திவந்தது. தானாகப் பழுக்காத பழத்தை தடிகொண்டடித்து பழுக்கும்படி செய்வது பிசகு என்பதை அவன் அப்பொழுதுதான் அறிந்தான். கோபத்தால் தன் மாமன், மாமி முதலியவர்களைப் படுகொலை செய்ததை நினைந்து வருந்தினான். அவளை நயத்தால் தான் தன்வழி திருப்ப முடியும் என்பதை அவன் அறிந்து கொண்டான். "அரசிளங்குமரியே! நடந்தவைகளை மறந்துவிடு; என்னை மணஞ்செய்துகொள்" என்று அவன் கூறினான்.

"அப்படியா! முதலாவது எனது கிளியைக் கொண்டு வா. அதன் பிறகு ஆலோசிக்கலாம்" என்று அரசிளங் குமரி உரைத்தாள்.

"இதோ கொண்டு வந்து விடுகிறேன்" என்று கூறிவிட்டு கிளி கொண்டுவர கோணாண்டி ராஜன் ஓடினான். தன் கிளி கொல்லப் பட்டதைக் கண்ணால் கண்ட பிறகும் ஏன் தோட்டுக்காரி மீண்டும் அதனைக் கொண்டுவரச் சொன்னாள்? கோணாண்டி ராஜனை அந்த இடத்தில் காண அவள் மனம் சம்மதிக்கவில்லை. அவனை எந்த வழியிலாவது அப்புறப் படுத்த நினைத்தே அந்த கேள்வியைக் கேட்டாள்.

கோணாண்டி ராஜன் உடனே தன் அரண்மனை சென்று தான் வளர்த்து வந்த கிளியை கொண்டு வந்து "இதோ கிளி கொண்டுவந்திருக்கிறேன். கதவைத் திற" என்றான்.

"நான் வளர்த்த கிளியானால் என் பெயரைச் சொல்லி அழைக்குமே" என்று அவள் கூறினாள். கிளி 'கோணாண்டி ராஜன், கோணாண்டி ராஜன்' என்று தன்னை வளர்த்தவன் பெயரைக் கூறியது.

"உன் கிளியைக் கொண்டு வந்து என்னை ஏமாற்றவா பார்க்கிறாய்?" தோட்டுக்காரி இப்படி கூறியதும் வேறொரு புதிய கிளி ஒன்று வாங்கி வந்து, அதைப் பழக்கி அவளை ஏமாற்ற நினைத்து கிளி கொண்டுவர மதுரை சென்றான்.

அவன் சென்ற எட்டாம் நாள் அன்று அவன் எப்படியும் கிளி கொண்டு வருவதாகக் கூறியிருந்தான். ஆகவே, அவன் வருவதற்குள் தற்கொலை செய்துகொள்ள வேண்டுமென்று அரசிளங்குமரி நினைத்தாள். உடனே தீ வளர்த்து அதில் விழுந்து மாண்டாள்.

கிளி கொண்டுவரச் சென்றவன் நல்ல ஜாதி கிளியொன்றை வாங்கி, அதனை தோட்டுக்காரி என்று கூறும்படி பழக்கி, சந்தோஷத்துடன் குமரிப் பதியை குறுகினான். அப்பொழுது தான் தோட்டுக்காரி அக்கினிப் பிரவேசம் செய்தனள். அவள் காதில் கிடந்த பொன் தோடுகள் அக்கினியில் தெறித்து கோணண்டி ராஜனின் காலடியில் போய் விழுந்தன. உடனே தீ உண்டாகி அதில் விழுந்து அவனும் மாண்டான். அப்பொழுது பெரும் மண்மாரி உண்டாகி குமரி நாடும், கோட்டையும் அழிந்தன.

இன்னும் கன்யாகுமரியைச் சுற்றி பாழடைந்த கோட்டைகள் காணப் படுகின்றன. தோட்டுக்காரி மடம் அரசாங்கத்தினரால் கைப்பற்றப்பட்டு அவளுக்குப் பூஜையும் நடைபெறுகிறது.

---

## அறிவு விளக்க வினா 3.

**மாணவர்கள் கவனிக்க:**—இம் மூன்றாவது அறிவு விளக்க வினாவுக்கு இதுவரை மிகக் கொஞ்சமான விடைகளே வந்திருக்கின்றன. இதிலிருந்து, மாணவர்களுக்கு விடை கண்டு பிடிப்பது சிறிது சிரமமாக இருப்பதாகத் தெரிகிறது. ஆகவே, இன்னும் ஒரு மாதம் அவர்களுக்கு அவகாசந் தரத் தீர்மானித்திருக்கிறோம். வருகிற தை மாதம் 20-ந் தேதிக்குள் மாணவர்கள் தங்கள் விடைகளை அனுப்பி வைக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறோம். ஏனென்றால், நமது பத்திரிகை மாதம் பிறப்பதற்கு ஒரு வாரத்துக்கு முன்னதாகவே தயாராகிவிடுவதால், தாமதித்து அனுப்புபவர்கள் சரியான விடையனுப்பினாலும் அவர்கள் பெயர்களை வெளியிட இயலாது போய் விடும். சென்ற இதழில் 2-வது வினாவுக்குச் சரியான விடைகளை யனுப்பியவர்கள் பலரது பெயர்கள் மிகவுந் தாமதித்து அனுப்பியதன் காரணமாகவே வெளியிடப்படாது போய்விட்டதென்று தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

# ஆநந்தம்

(டர்பன்-திரு. ச. முனிஸ்வாமி பிள்ளை.)

உலகில் வாழும் உயிர்கட்கெல்லாம் பொது குண மொன்றுண்டு. நிறம், தோற்றம், உருவம், தன்மை, செய்கை முதலியவைகளால் இனம் வேறுபட்டிருப்பதைக் காணலாம். எனினும், வேற்றுமைகளினிடையே, எவ் வுயிருக்கும் ஒரு பொது வுணர்ச்சி யுண்டு. அதாவது, துன்பத்தைத் தவிர்த்தல், இன்பத்தை நாடுதல் ஆம்.

நீரிலிட்ட மண் வர்க்க உப்பாயினும், நீண்டு வளர்ந்த மரத்தைச் சுற்றிப் படர்ந்து போகும் கொடியேயாயினும், மலையினுச்சியில் தனித்து வாழும் பறவை யாயினும், காட்டாற்றின் கரையில் நின்று நாற்புறமும் ஜலத்தை வாரி யிறைக்கும் யானையாயினும், கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்று, உலக போகமே பரம யோகமெனக் கருதும் வாலிபனாயினும் சுகத்தையே நாடியுள்ளார். காரணம், உயிர்க ளெல்லாம் ஈசுவரத் தோற்றம்; ஈசுவரனே ஆநந்தஸ்வரூபி. அவருக்கு பரம ஆநந்த நாட்டுக்கரச னென்று ஒரு பெயருண்டு.

ஆகவே மனிதர்கள் அனைவர்க்கும் ஆனந்தத்தில் நாட்டமும், அதை அடைந்தனுபவிக்க வேண்டும் எனும் சுயேச்சையும் உண்டு. அந்த ஆனந்தத்தை அடையாத காலத்தில், உயிர்கள், இருட்டில், மறைந்த பொருளைத் தேடுவது போல், அதை ஒவ்வொன்றிலும் தேடிப் பார்க்கிறார்கள். மண், பெண், பொருள், சாதி, குலம் முதலியவற்றைப் பெரியதெனப் போற்றி அவற்றில் சுகமடையலா மென்று எண்ணுகிறார்கள். முடிவில் அவைகளை அடைந்தும், திருப்தி எற்படாததால், மனிதர் மனச் சஞ்சலம் அற்றிலர்.

ஜார்ஜ் ஹெர்பர்ட் என்பார் இக் கருத்தை—திருப்தியை ஒரு கொடையாக உயிர்களுக் களித்தால், அவர்கள் தன்னை மதியார்க ளெனக் கருதியே ஈசன் அளிக்க வில்லை யென்று தமது கவி யொன்றில் வெளியிட்டுள்ளார். ஆயினும் திருப்தி என்ற செல்வம் எல்லோர்க்கும் கிட்டும் காலமொன்றுண்டு.

எவனொருவன் "உன்னை அறிவாயாகில் உனக்கொரு கேடு மில்லை" என்ற யதார்த்த நிலையை யறிந்து, தனக்கும் உலகிற்கும் உள்ள சம்பந்தத்தைத் தெரிந்து கொண்டு வாழ்கின்றானோ, அவனே நிஜ, சாசுவத, களங்கமற்ற ஆநந்தத்தை யடைகின்றான்.

மனிதன் இந் நிலையை அடைவதற்கு முன், உலகத்தினிடத்தில் சில விபரீதப் போக்கால் மெலிந்து வாடுகின்றான். உதாரணமாக, பிறரை வருத்தியே தான் சுகமடையலாகும் என்பது ஒரு போக்கு. பிறர் கவர்ந்திழுப்பதால் தான் சுகத்தை இழவாதபடி காத்துக்கொள்ள வேண்டு மென்

பது மற்ெறாரு போக்கு. இவ்விதம் சில காலங் கழிக்கின்றான். இவ்வாறு பெரு முயற்சி செய்தும், பாடுபட்டும் அடைந்த சுகம் கானல் நீராவதைப் பார்க்கின்றான். எனவே, உலக வெறுப்பு முடிவில் உயிர்களின் மனதைக் கலக்கின்றது.

இவ்விரு போக்கும் உண்மையல்ல. ஆனந்தத்தை அடைய சிறிதும் பயன் படுவதல்ல. ஆயின் உயிரின் யதார்த்த நிலை யாது? அதை அறிவோமாகில் நீடித்த ஆனந்தம் நிலைபெறும். உயிரின் யதார்த்த நிலையையறிந்த பெரியோர்களில் ஒருவர், தமது ஆன்ம உணர்ச்சியைப் பின்வருமாறு வெளியிட்டுள்ளார்.

"எவ்வுயிர்த் திரளும் உலகில் என்னுயிரெனக் குழைந்துருகி........." இதிலிருந்து "என்னுயிர்" என்றது "எவ்வுயிர்த் திரளும்" ஆம் என்றது வெளியாகின்றது.

மற்றோரிடத்தில் "ஈசனெனக்கருதி எல்லா உயிர்களையும் நேசத்தால் நினைந்துகொள்" என்றும் கூறியுள்ளார். இவ்விரு உண்மைகளையும் ஒப்பிட்டு நோக்குமிடத்து, ஒரு பெரும் இரகசியம் வெளியாகின்றது. அதாவது, 'எவ்வுயிர்த் திரள் வேறில்லை, என்னுயிர் வேறில்லை, ஈசன் வேறில்லை. இவை மூன்றும் ஒன்றே' என்பதேயாம்.

உலகில், தற்காலத்தில் நூற்றுக்கணக்கான குருமார்களும், சமயங்களும், மதங்களும், கோயில்களும், சம்பிரதாயங்களும், விரதங்களும் நோன்புகளும், தெய்வங்களும் இருந்தும் மானிடர்கள் அவைகளிடம் பெரும் நம்பிக்கை கொண்டிருந்தும், அவை யொன்றும் நிஜ ஆனந்தத்தை அளியாமல் இருப்பதற்குக் காரணம் ஒன்றுண்டு. அதாவது மேற்கூறிய உண்மை உயிர் நிலையை யறியாது, உயிர்த்திரள் நிறைந்த உலகை வேறாகவும், என்னுயிர் என்றதை வேறாகவும், ஈசனை வேறாகவும் பிரித்து, ஒவ்வொன்றைப்பற்றி விபரீதமான அபிப்பிராயம் உலகில் பல மதங்களிலும் தற்காலத்தில் காணப் பெறுவதேயாகும்.

சுருங்கச் சொல்லின், அநேகருடைய அபிப்பிராயத்தில், உலககார்யம் பெரிதெனில், ஈசனை மறத்தல் வேண்டுமென்றும், ஈசனைப் பெரிதெனப் போற்றி உலகத்தை வெறுக்கவேண்டு மென்பதேயாம். இதன் பயனாகப் பெரு வழக்கும், பெருந்துன்பமும் உலகிலெங்கும் காண்கின்றோம். மதங்களும் கீழ்மைப் பட்டுள்ளன.

அஃதின்றி, உலகமும், உயிரும், ஈசனும் ஒன்றெனை அறிவோமாகில் நாம் ஒவ்வொருவரும் நம்மிடத்தில் எவ்வாறு நிஜ அன்பு கொண்டுள்ளோமோ, நம்மையே நாம் வெறுப்பதில்லையோ, அவ்வாறே உலகத்தினிடமும் அன்பு கொள்வோம். ஆனதுபற்றி நாம் ஒவ்வொருவரும் ஆனந்த வாழ்வடைய வேண்டின் "உலகியலும் அருளியலும் ஒன்று" பெருவாழ்வு என அறிவோம். அன்பு வழியே ஆன்ம வழியாம்; ஆன்ம வழியே ஆனந்த வாழ்வாம். இவ்வுண்மையை வெளிப்படுத்தியே, "திவ்ய அன்புருவமாகி, அன்பரொடும் இன்ப வீடடைவனே என்றொரு பெரியார் கூறியுள்ளார்.




இங்கிலாந்தில் வருஷந்தோறும் சராசரி பிரம்மசாரிகளாக இருப்பவர்களில் லட்சத்துக்கு 1218 ஆடவரும், 1039 மகளிரும், விவாக மானவர்களில் லட்சத்துக்கு 856 ஆடவரும், 857 மகளிரும் இருக்கிறார்களாம். தற்கொலை செய்வதிலோ, விபத்துக் காளாவதிலோகூட பிரம்மசாரிகள் தொகைதான் அதிகமாக இருக்கிறது. இதிலிருந்து இயற்கைக்கு மாறாகச் செல்ல விரும்பும் பிரம்மசாரிகளுக்கு ஆயுள் குறைகிறது என்று ஏற்படுகிறதல்லவா!

* * * *

அமெரிக்காவில் கன்னிப் பெண்கள் சங்கமொன்று சமீபத்தில் ஏற்பட்டிருக்கிறதாம். விவாகமான ஆடவர் பிரம்மசாரிகளைப்போல நடித்து கன்னிப் பெண்களை ஏமாற்றுவதைத் தடுப்பதே இச்சங்கத்தின் முக்கிய நோக்கமாம்.

* * * *

நியூயார்க்கில் அப்பொலோனியா பெக்கர் என்னும் மாது 504 பவுண்டு எடை யுடையவளா யிருக்கிறாளாம். அவளுக்குச் சமீபத்தில் ஜுரங் கண்டு ஸ்மரணை யற்றவளாய்ப் போய் விட்டாளாம். டாக்டர்கள் யோசனைப்படி அவளை ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப் பட்டபாடு பஞ்சு படாத பாடாய் விட்டதாம். லாரி போன்ற பெரிய காரொன்றைக் கொண்டுவந்து 9 பேர் சேர்ந்து தூக்கியும் முடியாமல் கடப்பாறைகளைக் கொண்டு கிளப்பிய பிறகு அவள் தேகத்தை நகர்த்திக் காரில் வைக்க முடிந்ததாம்.

* * * *

உலகில் இன்றுவரை 3 கோடிக்கு மேற்பட்ட புத்தகங்கள் வெளி வந்திருக்கின்றனவாம். வருஷந்தோறும் சராசரி 2 லட்சம் புஸ்தகங்கள் புதிதாக வெளியாகிக் கொண்டிருக் கின்றனவாம்.

* * * *

ஐஸினாலான புதிய நகைப் பெட்டிகள் இப்போது செய்யப் படுகின்றனவாம். அப்பெட்டியினுள் உயர்ந்த எஃகினால் ஆன அறைகள் இருக்கின்றன. அதனுள் நகைகள் வைக்கப்பட்டால், தீ விபத்தோ மற்ற விபத்துக்களோ எதுவும் அவைகளுக்கு நேராவாம். பத்திரங்கள், தஸ்தாவேஜுகளைக்கூட அவற்றுள் வைத்துக் காப்பாற்றலாமாம்.

* * * *

ஹங்கேரிய நாட்டு விஞ்ஞானிகள் அவசியமானபோது மழையைப் பெய்யவைக்க முயன்று வருகிறார்கள். நீர் நிலைகளுக்குப் பக்கத்தில் வெப்பமுண்டாக்கினால் மழையை வருவிக்க முடியுமென்றும், ஒரு ஏக்கர் நிலத்துக்குப் போதுமான மழையை உண்டாக்க இரண்டணாவே செலவாகிறதென்றும் அவர்கள் கூறுகிறார்கள்.

# ஆசிரியர் குறிப்புக்கள்

## இயந்திரங்கள் நம்மை விழுங்குவதா?

உலக நாகரிகத்தில் ஒரு காலத்தில் கற்காலமென்றும், இரும்புக் கால மென்றும் காலங்கள் மாறிவந்தன. இப்போது இயந்திர காலமாக இருக் கிறது. எதற்கும் இயந்திரத்தைக் கண்டுபிடித்து விடுகிறார்கள். இப்போது சர்வம் இயந்திர மயமாக இருக்கிறது. இதனால் பல நன்மைகள் இருந்தா லும் எடுத்ததற்கெல்லாம் இயந்திரம் என்று ஆரம்பிப்பதால் பல தொல்லை களும் விளைகின்றன. பெரிய இயந்திரங்களால் சாமான்கள் தேவைக்கு அதிகமாக உற்பத்தி செய்வதால் அவற்றை விற்பதற்கு ஒவ்வொரு தேசத் தாரும் மார்க்கெட்டுகளுக்குப் போட்டி போட்டுக் கொள்வதால் ஏகாதிபத்ய ஆசையும் அதனால் பல ராஜீயத் தொல்லைகளும் ஏற்படுகின்றன. இதனா லேயே இயந்திரங்கள் கூடாது என்று எவரும் கூறமாட்டார்கள். அவ சியமான பெரிய தொழில்களுக்கு மட்டுமே இயந்திரங்கள் தேவை. பெரிய தொழில்களுடன் கையால் செய்யப்படும் சிறிய தொழில்கள் பலவற்றையும் ஆதரித்தால்தான் நாட்டின் பொருளாதார நிலைமை நல்ல முறையில் அபி விருத்தியடையும். இதையெல்லாம் உத்தேசித்தே மகாத்மா காந்தியடிகள் இயந்திரங்களை ஒரு எல்லைக் குட்படுத்தவேண்டும் என்று கூறுகிறார். நவீன நாகரிக மோக முடையவர்களும், சரியான பாரபட்சமற்ற ஆராய்ச்சி இல் லாதவர்களுமான சிலர் மகாத்மாஜி பழைய காலத்துக்குத் திரும்புவதாகச் சொல்லி பரிகசித்தனர். ஆனால் இன்று உலகத்தின் நிலைமையை ஆராய்ந்து பார்க்கும் ஒவ்வொருவரும் மகாத்மாவின் கொள்கையே சரி என்பதை ஒப் புக் கொள்கிறார்கள். சமீபத்தில் ஹைதராபாத்தில் இந்தியப் பொருளாதார மகாநாடு கூடியபோது அதில் தலைமை வகித்த சென்னை சர்வகலாசாலை பொருளாதார ஆசிரியரான டாக்டர் பி. ஜே. தாமஸ் என்னும் அறிஞர் இவ் விஷயத்தில் மகாத்மாஜியை ஆதரித்துப் பேசியிருப்பது குறிப்பிடத்தக்கது. அவர் தமது பிரசங்கத்தினிடையே, 'சில முக்கியமான தொழில்கள் விஷய மாக மட்டும் இயந்திரங்கள் வேண்டும். இவ்விஷயமாக மகாத்மா காந்தி யின் யோசனைகள் பிற தேசங்களிலும் பின்பற்றப் படவேண்டும். இது வரை இயந்திரங்கள் மனிதர்களை விழுங்கி யிருக்கின்றன. இனிமேல் நாம் இயந்திரங்களை அடக்கவேண்டும். ஜப்பானைப்போல் இங்கும் வீடுகளில் செய்யக்கூடிய சிறு தொழில்களை அபிவிருத்தி செய்ய வேண்டும்' என்று கூறியுள்ளார். நமது நாட்டிலுள்ள பெரும் பான்மையோரான விவசாயிகள் கைராட்டை, கைத்தறி, மற்றும் சில சிறு தொழில்கள் இவற்றைக் கைக் கொள்ளும்படி சர்க்கார் அவர்களை ஆதரிப்பதுடன் தேச மகா ஜனங்களும் அவர்களால் உற்பத்தி செய்யப்படும் சாமான்களையே வாங்கினால்தான் அவர் களுடைய பொருளாதார நிலைமை உயரும். அவர்களுடைய வாங்கும் சக்தி அதிகரிக்கும். இதர தொழில்களும் பெருகும். ஆகவே இயந்திரங்கள் மனிதர்களை விழுங்காதபடி பாதுகாத்துக் கொள்ளவேண்டியது அவசியம். இயந்திரங்களை நாம் அடக்கியாள வேண்டும்.

---

## தமிழ் மொழி அபிவிருத்திக்கு வழி

நாட்டில் சுதந்தரதாகம் அதிகரித்து வருகிறது. இச் சமயத்தில் பாமர மக்களனைவர்க்கும் கல்வி அறிவு ஏற்பட வேண்டியது அவசியம். தாய் மொழியின் மூலம் தான் அந்த அறிவை எளிதில் மக்களுக்குப் புகட்டக் கூடும். இப்போது தாய் மொழியின் மூலமே பாடங்களைக் கற்பிக்க வேண்டுமென்னும் உணர்ச்சி அதிகரித்திருப்பது சந்தோஷிக்கத் தக்கதாகும். இவ்வாறு பாடங்களைப் போதிப்பதற்கும், கல்வி யறிவைப் பரவச் செய்வதற்கும் அபரிமிதமான நல்ல பிரசுரங்கள் தேவை. இதற்கு இதர பாஷைகளிலுள்ள வார்த்தைகளுக்குச் சரியான தமிழ்ப் பதங்களைக் கண்டு பிடிக்க வேண்டியது அவசியம் தான். ஆனால் செந்தமிழ் பாஷையிலேயே பேச வேண்டும்; எழுத வேண்டுமென்பதற்காக மக்களுக்கு அர்த்தமேயாகாத பாஷையில் பேசுவதும் எழுதுவதும் சரியல்ல. இக் காலத்தில் ஒரு சில தமிழ் அறிஞர்கள் பிரசங்கங்களைக் கேட்டு அர்த்தம் புரிந்து கொள்ள ஒரு சில நூல்களை யேனும் படித்தவர்களால் தான் முடியும். இவ்வாறு செய்வதால் பாமர மக்களுக்கு அப்படிப்பட்ட பிரசங்கங்களால் எவ்வித பயனும் ஏற்படாது. ஆனல் இதற்காகவே சிறிதும் சிரமப்படாமல் அன்னிய பாஷைகள் பலவற்றையும் அப்படியே ஏற்றுக்கொண்டு தமிழை ஒரு கதம்ப பாஷையாக்கி விடுவதையும் தமிழர் எவரும் ஒப்புக் கொள்ள முடியாது. ஆதலின் நிர்மாண முறையில் சொல்லாக்க வேலை நடை பெற வேண்டியது அவசியம். திருநெல்வேலியிலுள்ள சென்னை மாகாண தமிழ் சங்கத்தார் இப் பணியை 1934-ல் ஆரம்பித்தார்கள். 1936-ல் ஒரு மகாநாடு சென்னை பச்சையப்பன் மண்டபத்தில் சர். சி. பி. ராமஸ்வாமி ஐயர் தலைமையில் கூடியது. அம் மகாநாட்டின் பயனாகச் சொல்லாக்க வேலை நடைபெற்று வருகிறது. சென்ற வாரம் சென்னை தியாகராய நகரிலும் ஒரு மகாநாடு கூடியது. அதில் காரியதரிசி தமது வருஷாந்தர அறிக்கையில் கூறியதுபோல இவ் வேலை மிகச் சிரமமானது என்பதில் ஆக்ஷேபமில்லை. தமிழ் அறிஞர்கள் அனைவரும் இதில் ஒத்துழைக்க வேண்டும். அம் மகாநாட்டைத் திறந்து வைத்த சென்னை சர்க்கார் கல்வி இலாகா மந்திரி டாக்டர் சுப்பராயன் அவர்களும், தலைமை வகித்த சென்னை சர்வகலாசாலை உப அத்தியக்ஷகர் திவான்பகதூர். எஸ். இ. ரங்கநாதன் அவர்களும் நம் மேலே கூறியது போன்ற யோசனையைத்தான் தமிழ் சொல்லாக்க விஷயத்தில் கூறி யிருக்கிறார்கள். பிற பாஷைகளிலோ வேறு பாஷைச் சொற்கள் சில சேர்ந்திருக்கின்றன. அதனல் அப் பாஷைகளின் கௌரவமோ, அபிவிருத்தியோ கெட்டு விடவில்லை. ஆதலின் தமிழும் அவ் வழியையே பின்பற்ற வேண்டும் என்பதே நமது ஆவல்.

---

## கிறிஸ்தவ தர்மமும் மகாத்மாஜியும்

மகாத்மா காந்தியடிகளைப்பற்றி நமது ஹிந்து வைதிகர்கள் எவ்வாறு நினைத்தபோதிலும் அவர் எக்காலத்தும் இறைவனை மறவாத அத்யாத்மிக உணர்ச்சி கொண்ட மகான் என்பதில் சந்தேகமே இல்லை. மக்களின் ஆசாரங்களும், பழக்க வழக்கங்களும், மத அனுஷ்டானங்களும், நடை உடை பாவனைகளும் வாழ்க்கை முறைகளும் காலத்திற்கும் இடத்திற்கும்

சமயத் தலைவர்களின் கொள்கைகளுக்கும் தக்கபடி பலவிதமாக மாறக்கூடியதேயாயினும் உலகத்தைப் படைத்து ரக்ஷிக்கும் எல்லாம்வல்ல ஆண்டவனிடம் பக்தி கொள்வதிலும், அன்பு, சத்தியம், அஹிம்சை ஆகிய முக்குணங்களையும் கைப்பற்றுவதிலும் எக்காலத்திலும் எந்த இடத்திலும் எந்த மதத்திலும் அபிப்பிராய பேதம் ஏற்பட்டதில்லை. மேலே கூறிய இந்த முக்கிய அம்சங்கள்தான் மனித சமூகத்தை அத்யாத்மிகத் துறையில் முன்னேற்றமடைவிக்க உதவி செய்வதாக இருக்கின்றன. இவை எல்லா மதங்களினுடையவும் அடிப்படையான தத்துவங்களாகும். மகாத்மாகாந்தி உலகம் போற்றும் உத்தமராயும், பலவிதங்களிலும் குழப்ப மடைந்திருக்கும் உலகத்துக்கே ஒருவித வழிகாட்டியாயும் இருப்பதால் எல்லாத் தேசங்களுக்கும் சமயங்களுக்கும் ஏற்றவாறுன பொது அத்யாத்மிகக் கொள்கைகளை மட்டும் வற்புறுத்தி வருவதால் எல்லா மதங்களின் பெரியோர்களும் அவரைப் பாராட்டுகின்றனர். ஹிந்து வைதீகர்கள் வேண்டுமாயின், முக்கிய அம்சங்களைவிட்டு ஆசார அனுஷ்டானங்களும் பழக்க வழக்கங்களுமே பெரிதெனக் கருதி அவற்றைக் காலத்துக்கேற்றவாறு புத்திசாலித்தனத்துடன் மாற்ற விரும்பும் மகாத்மாவை எள்ளி நகையாடலாம்; குறை கூறலாம். ஆனல் தெய்வபக்தியினல் ஏற்படும் அத்யாத்மிக ஜோதியையே பெரிதாகக் கருதுபவர்கள் எவரும், இந்த நவீன காலத்திலும் அதையே வற்புறுத்திவரும் மகாத்மாஜியைப் புகழாமல் இருக்க முடியாது. சமீபத்தில் சென்னையில் கூடிய தேசீய கிறிஸ்தவர்கள் மகாநாட்டில் தலைமை வகித்த போப்பாண்டவரின் தூதரான மேன்மை தங்கிய கிரிஸ்கெல்ஸ் அவர்கள், 'கிறிஸ்தவ உலகத்திற்குப் புறம்பே கிறிஸ்தவ அத்யாத்மிக தத்துவங்களைக் காந்தியைவிட விசேஷமாக வலியுறுத்திப் போதிப்பவர் எவருமில்லை. அவர் இந்தியாவின் பொருளாதார முன்னேற்றத்திற்காக இடைவிடாது உழைத்து வருகையில் அத்யாத்மிக நெறியை ஒருபோதும் மறந்துவிடவில்லை' என்று கூறி மகாத்மாவின் லட்சியங்களைப் பாராட்டி இருக்கிறுர். இவ்வாறே அவரை எல்லா மதத்தலைவர்களும் பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறுர்கள். ஏனெனின் எல்லா மதங்களின் அத்யாத்மிக நெறியின் முக்கிய அம்சமும், மூலதத்துவமும் ஒன்றுதான். அதையே மகாத்மா வற்புறுத்தி வருகிறுர். ஆதலின் பொதுவாக உலகமும் சிறப்பாக இந்தியாவும் அவரது உபதேசத்தைத் தினசரி வாழ்க்கையில் பின்பற்றினல்தான் இந்தியாவுக்கும் உலகத்துக்கும் விமோசனத்துக்கு வழியுண்டு. இந்த உண்மையை அனைவரும் அறிய வேண்டியது அவசியம்.

---

## மானிடவர்க்க எதிர்கால நிலை

இன்றைய உலக நிலைமை என்ன என்பதை ஒவ்வொருவரும் சிந்திக்க வேண்டும். நாகரிகம் முன்னேற்ற மடைந்திருப்பதாகக் கூறப்படுகிறதேயொழிய உலகில் அமைதியும் சமாதானமும் இல்லை. எங்கும் மிருக சக்தியே தாண்டவ மாடுகிறது. பாமர மக்களும் ஒன்று மறியாத ஜனங்களும் ஏகாதிபத்ய ஆசை, மிருகபலம் முதலியவற்றிற்குப் பலியாக்கப்பட்டு வருகின்றனர். இதைக் காணும் போது மானிட வர்க்கத்தின் எதிர்கால நிலை எவ்வாறுகுமோ என்று வருத்தப்பட வேண்டியதாக இருக்கிறது. கவி சிரேஷ்டர் ரவீந்திரநாதர் போன்ற பெரியார்களும் இதைப் பற்றியே அதிகம்

கவலை கொண்டிருக்கின்றனர். இவர்கள் எத்தகைய பேதமுமின்றி மானிட வர்க்கத்தினிடம் அனுதாபமும் அபிமானமும் கொண்டவர்கள், ஆதலின் நிலைமையைச் சிந்தித்துப் பார்த்து இக் கொடுமைகளினின்றும் உய்வதற்கான சில வழிகளைக் கூறுகின்றார்கள். அவற்றைக் கடைப்பிடிக்க வேண்டியது நமது கடமை. சமீபத்தில் சாந்தி நிகேதன ஆசிரமத்தின் ஆண்டு விழா நடந்தபோது உலக சமாதானம், மானிட வர்க்கத்தின் எதிர்கால நிலை ஆகியவை சம்பந்தமாகக் கூறிய ஒவ்வொரு வாக்கியமும் இந்தியர்களனைவராலும் கவனிக்கத் தக்கதாகும். அவர், 'இந்தப் பைத்தியக்கார உலகில் தற்போது மனிதர்களின் உயிர் விளையாட்டுப் பொருள்களைப் போலக் கருதப் படுகிறது. ஜப்பான் சீனாவில் நடத்திவரும் கொடுமைகளைக் கவனிக்கும்போது மானிட வர்க்கத்தின் கதியைக் குறித்து கவலைப்பட வேண்டியதாக இருக்கிறது. மானிட வர்க்கமே அழிந்து விடும்போலிருக்கிறது. ஆயினும் நாம் அதைர்ய மடையக் கூடாது. கடவுளிடம் பூர்ண நம்பிக்கை வைத்திருக்க வேண்டும். உயிரையும் மதியாமல் இக் கொடுமையை எதிர்த்து நிற்பவர்கள் தீரர்களே யாவர். அவர்கள் தற்காலம் தோல்வி யடைந்ததாகத் தோன்றலாம். இந்தியர்களாகிய நாம் என்ன செய்யக் கூடும்? கஷ்டப்படும் சீனர்களிடம் அனுதாபம் கொள்கிறோம். ஆனால் அவர்களுக்கு வேறு வித உதவி செய்யக் கூடிய நிலைமையில் நாம் இல்லை. ஆயினும் மிருக சக்தி என்னும் அரக்கனைப் போற்ற மறுப்பதாலும் தீரமாகப் போராடுகிறவர்களை ஆத்ம பூர்வமாக ஆதரித்து நிற்பதாலும் நாம் சமாதானக் கட்சிக்கு உதவியவர்களாவோம்' என்று கூறினார். அது தான் உண்மை. நாம் மிருக பலத்தின் ஆதிக்கத்தை ஏற்றுக் கொள்ளலாகாது. துயரப் படுவோரையே ஆதரிக்க வேண்டும். என்றைக்காயினும் உலக சமாதானம் ஏற்படுவது நிச்சயம். அப்போது அதை நிறுவியதில் நமக்கும் பங்கு ஏற்படும்.

---

## தேசத்தின் உண்மையான செல்வம்

இப்போது விஞ்ஞான அறிவே எங்கும் செல்வாக்கு பெற்றிருக்கிறது. மனிதன் உண்மையையும் பகுத்தறிவையும் காண வேண்டுமாயின் விஞ்ஞானத்தின் மூலங் காண முடியும் என்பது பிரசித்தம். நம் இந்திய விஞ்ஞான சாஸ்திரியான சர். சி. வி. ராமன் சமீபத்தில் சென்னையில் தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டியினர் ஏற்படுத்தியுள்ள சுதேசிப் பொருட் காட்சியைத் திறந்து வைத்தபோது தேசத்தின் உண்மையான செல்வம் எது என்பது பற்றிய ஒரு உண்மையை வெளியிட்டார். அவர் தேசியக் கொடியை சத்திய த்வஜ மென்றும், அதன் தலைவரான மகாத்மா காந்தி சத்தியத்தின் அவதார மென்றும் ஒப்புக் கொண்டது குறிப்பிடத் தக்கது. இவ்வாறு பேசுகையில் அவர் ஒரு தேசத்தின் உண்மையான செல்வம் அத் தேசத்து மனிதர்களின் தேகாரோக்கியம், மனோதிடம், ஆத்மசக்தி ஆகியவையே என்று கூறி யிருக்கிறார். நம் இந்தியா பல துறைகளிலும் முன்னேற்ற மடைய வேண்டுமானால் சர். சி. வி. ராமன் கூறிய செல்வத்தை நாம் அபிவிருத்தி செய்ய வேண்டும். நம் இந்திய மகாஜனங்களின் தேகாரோக்கியமும், மனோ திடமும், ஆத்மசக்தியும் அதிகப் படும்படி செய்வதையே சர்க்கார் தன் கடமையாகக் கொள்ள வேண்டும். அத்தகைய

பொறுப்பை பொதுஜன செல்வாக்குள்ள சர்க்கார் தான் ஏற்றுக் கொள்ள முடியும். இன்று பல மாகாணங்களிலும் காங்கிரஸ் சர்க்கார் ஏற்பட்டிருக்கிறது. மகாத்மாஜி காங்கிரசில் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அவரே அம் மகாசபையின் நடுநாயகமாக விளங்குகிறார் அவர் சர். சி. வி. ராமன் கூறியபடி சத்தியத்தின் அவதாரமாக விளங்குகிறார். ஆதலின் அவரது தலைமையில் காங்கிரஸ் சர்க்கார்கள் தேசத்தின் இந்த உண்மையான செல்வத்தை அபிவிருத்தி செய்ய முற்படுமென்றே நம்புகிறோம். இந்த செல்வத்தை அபிவிருத்தி செய்த பிறகு அரசியல், சமூக சீர்திருத்தங்களைப் பற்றி நாம் யோசிக்கக் கூடும். அதைச் செய்வதற்கு முன்னரே இந்த சீர்திருத்த சம்பந்தமான அபிப்பிராயத்துக்காக கருத்து வேற்றுமைகளை ஏற்படுத்திக் கொண்டு தேசீயத்தின் ஆக்க வேலைக்குப் பலஹீனம் ஏற்படுத்தக் கூடாது. சர். சி. வி. ராமன் குறிப்பிட்ட தேசத்தின் உண்மையான செல்வம் அபிவிருத்தி யாகவேண்டும்.

---

## நடைமுறை பசலியில் நிலவரி வஜா

சென்னையில் காங்கிரஸ் சர்க்கார் அதிகாரம் ஏற்றதும் பிரதமமந்திரி கனம். ராஜகோபாலாசாரியார் 1937-38 ஆம் வருஷத்திய வரவு செலவு திட்டத்தை ஆஜர் செய்தபோது இந்த நடைமுறை பசலியில் அதாவது 1347 ஆம் பசலியில் 75-லக்ஷம் ரூபாய் நிலவரி வஜா அளிக்கப் போவதாகத் தெரிவித்தது நேயர்களுக்கு ஞாபக மிருக்கும். அதற்கு முன்பு இருந்த இடைக்கால மந்திரிகளும் இத் தொகையையே ஒதுக்கினார்களென்றாலும் சரியான வகையில் விகிதாசாரம் செய்யாமல் அதற்கென ஒரு கமிட்டியை நியமித்து விட்டுப் போய்விட்டனர். காங்கிரஸ் மந்திரிகள் ஆரம்ப வருஷத்திலேயே வேறு பல திட்டங்களையும் அனுஷ்டிக்க வேண்டி யிருந்ததால் அதிகமான தொகையை வஜா செய்யா விட்டாலும் இந்த 75 லக்ஷத்தில் சிறிதும் குறைக்காமல் இருப்பதென்று முடிவு செய்ததுடன் இதில் யாருக்கும் குறை ஏற்படாதபடி விகிதாசாரம் ஏற்படுத்தவும் முயன்றனர். இடைக்கால மந்திரிகள் நியமித்த மார்ஷ்பாங்ஸ் கமிட்டியின் முடிவில் பல ஜில்லாவாசிகளும் அதிருப்தி கொண்டிருந்தனர். அப்படிப்பட்டவர்களெல்லாம் காங்கிரஸ் மந்திரிகளைப் பேட்டி கண்டு தங்கள் நிலைமைகளை விளக்கினார்கள். இவற்றையெல்லாம் வைத்துக்கொண்டு காங்கிரஸ் சர்க்கார் நிதானமாக ஆராய்ச்சி செய்து இப்போது ஒருவித முடிவின்படி சர்க்கார் அளிக்கும் நிலவரி வஜா போதுமானதாக இல்லை என்பது வாஸ்தவமாயினும் முன்னரே வகுத்து விட்ட திட்டத்தின்படிதான் இந்த விகிதாசாரம் ஏற்படுத்தப் பட்டிருக்கிறதேயொழிய இதுவே சர்க்காரின் கடைசியான நிலவரி வஜாக் கொள்கை என்று எவரும் கருதலாகாது. கவர்ன்மெண்டின் நிலவரிக் கொள்கை எதிர் காலத்தில் எவ்வித மிருக்குமென்பதை இந்த ஏற்பாட்டைக் கொண்டு முடிவு செய்யலாகாதென்று கவர்ன்மெண்டாரே சொல்லி யிருப்பதால் அடுத்த பசலியிலிருந்து அவர்கள் போதிய அளவு அளிப்பார்களென்று நம்ப இடமிருக்கிறது. நடைமுறை பசலி சம்பந்தமாகச் சர்க்கார் வெளியிட்ட அறிக்கையிலிருந்து ஏற்படும் முடிவைக் கவனிப்போம். இதில் சில ஜில்லாக்களில் மறு பைசல் காலத்தில் உயர்த்திய தீர்வையை ரத்து செய்து விடுவதென்றும், இதர இடங்களில் நஞ்செய்

நிலங்களுக்கு மட்டும் ரூபாய்க்கு இரண்டணு வீதம் வஜா அளிக்க வேண்டு மென்றும், கோதாவரி கிருஷ்ணு டெல்டாக்களில் தண்ணீர் தீர்வையை ஏகர் 1-க்கு $6\frac{1}{4}$ ரூபாயிலிருந்து $5\frac{3}{4}$ ரூபாயாகக் குறைக்கவேண்டும் என்றும் கூறப்பட்டிருக்கிறது. இம் மூன்று விதங்களிலுமாக 75 லக்ஷம் ரூபாய் சரிப்படுத்தப் படுகிறது. இந்த வஜா இப் பசலியை மட்டும் சேர்ந்தது. இதற்காக நாம் சர்க்காரைப் பாராட்டுவோம். ஆனல் அடுத்த பசலி முதல் நிலவரிக் கொள்கையையே மாற்றி யமைத்து விவசாயிகள் தாங்க முடியாத வரிப்பளுவினின்றும் விடுதலை யடையும்படி காங்கிரஸ் மந்திரிகள் செய்யவேண்டு மென்பதையும் ஞாபகப்படுத்த விரும்புகிறோம்.

---

## ஆசாரமும் சுகாதாரத் தத்துவமே

அசுத்தத்தை யொழித்து சுத்தமான முறையில் நமது தினசரி வாழ்க்கையை நடத்தவேண்டு மென்பதற்காகத்தான் நமது பண்டைப் பெரியோர்கள் ஆசாரங்களை ஏற்படுத்தினர்கள். எனவே ஆசாரம் என்னும் நித்தியக் கடமைகள் சுத்தத்துக்காக ஏற்பட்டதே யொழிய உபத்திரவத்துக்காக அல்ல. இக்காலத்தில் பலர் ஆசாரத்தை ஒரு சகிக்கமுடியாத உபத்திரவமென்று கருதுகின்றனர். வேறு சிலர் ஆசாரத்துடன் நடப்பதுபோல் காட்டிக்கொண்டு வைதிகப் பேச்சுக்களை அதிகம் பேசினலும் அந்தரங்கத்தில் மிக்க அசுத்தமான முறையில் தங்கள் வாழ்க்கையை நடத்துகின்றனர். இவ்வாறு அறியாமையும் போலித்தனமும் அதிகரித்து விட்டபடியால் ஆசாரத்தின் மதிப்பும் கெட்டுப்போய் நம்மவர்கள் சரியான முறையில் சுகாதார வாழ்வை அனுஷ்டிக்கத் தெரியாதவர்களாகி இப்போது புதிதாக எல்லாம் மேல்நாட்டா ரிடமிருந்தே கற்றுக் கொள்ளவேண்டிய கதியை அடைந்திருக்கிறோம். இந்தியாவில் பண்டைக் காலத்தவர் அறிந்திருந்த பல விஷயங்களையே இப்போது நாம் மேல்நாட்டார் மூலமாகக் கேட்டு அறிய வேண்டியதாக இருக்கிறது. இதற்கு முக்கிய காரணம் நம் நாட்டார் அன்னிய ஆட்சிக்கும் அன்னிய நாகரிகத்துக்கும் அடங்கி இருப்பதுதான். சுய சரிதத்தையும் பெருமையையும் அறியவும் நம்மால் முடியாதபடி மாயையில் கிடக்கின்றோம். சமீபத்தில் சென்னையில் ஒரு நந்தவனத்தைத் திறந்து வைத்தபோது சுகாதார மந்திரி டாக்டர். டி. எஸ். எஸ. ராஜன் அவர்கள் இந்த ஆசாரத்தின் தத்துவத்தை விளக்கிக் கூறினர். அவர் தமது பிரசங்கத்தில் 'ஆசாரம் பிறந்து வளர்ந்த இப்புனித நாட்டில் இப்போது சுகாதாரத்தைப்பற்றிப் போதிக்க வேண்டியிருப்பது நமது துர்ப்பாக்கியமே. நாம் சுத்தமாக வாழவே நம் முன்னோர்கள் சில வரம்புகளை ஏற்படுத்தி ஆசாரங்களைச் சிருஷ்டித்தார்கள். இப்போது நாம் அவர்களை அவமானப் படுத்துகிறோம்; இது தவறு' என்று கூறியது ஒவ்வொருவராலும் கவனிக்கத்தக்கதாகும். மேல்நாட்டு நாகரிகத்தில் மோகங் கொண்டவர்களும் ஆசாரத்தின் பெயரால் போலி வைதிகம்மட்டும் அனுஷ்டிப்போரும் ஆசாரத்தின் உண்மையான சுகாதார தத்துவத்தை உணர்ந்து நமது ஆசாரங்களைச் சரியான முறையில் அனுஷ்டித்தால் நாம் சுகாதார வாழ்வை எளிதில் அடைவோம் என்பது நிச்சயம்.

---

தொடர் கதை.

# மாயா விரோதி

(ஸி. எஸ். இராமன், எம். ஏ., எல். டி.)



(479-வது பக்கத் தொடர்ச்சி.)

இந்திரா தன் கரங்களைப் பிசைந்து கொண்டு துக்கத்தால் மனம் நொந்தாள். தன்மீது இரக்கம் காண்பிக்குமாறு அவள் அவன் கால்களில் விழ யோசித்தாள்; மிகவும் உருக்கத்தோடு அவனைக் கேட்டுக் கொண்டாள். தன்மீது இரக்கம் இல்லாவிட்டாலும் தன் குழந்தையிடமாவது அன்பும் தயையும் காண்பிக்குமாறு கேட்டாள். அவளது அழகும் பேச்சும் ஒரு புலியின் இருதயத்தில்கூட இரக்கத்தை உண்டாக்கியிருக்கும். ஆனால் மோகனரங்கம் ஒன்றிற்கும் அசையவே இல்லை. வருத்தமும் விசனமும் அவளுடைய அழகை எடுத்துக் காண்பிப்பதாக அவர் சொன்னார்.

"பதில் சொல். இப்பொழுது நீ ரதிதேவியை விட அழகு அதிகமாகப் பெற்றிருக்கிறாய். யாரோ ஆள் வருகிற சப்தம் கேட்கிறது. சீக்கிரம். நீ என்னைப் பார்க்க வருகிறாயா, சொல்."

தனது துக்கத்தை மறைத்துக்கொள்ள இந்திரா ஒரு ஜன்னலருகே போய் நின்று கொண்டாள்.

அச் சமயம் ஒரு வேலைக்காரன் உள்ளே வந்தான். "எஜமானியே! ஜெமீந்தார் பிரபு தங்களைப் பார்க்க வரலாமா என்று கேட்கிறார்," என்றான்.

"எந்த பிரபு?"

"நமது எஜமானர்."

ஒரு இடி அந்த அறையில் விழுந்தால் எப்படி இருக்குமோ அப்படியே அவள் காணப்பட்டாள். பேசவே இல்லை. மோகனரங்கம் பேசினார்.

"பிரபுவா? என் சிநேகிதன். அவருடைய வீட்டில் அவருக்கு எதற்கு உத்தரவு? வரச் சொல். நான் பார்க்கிறேன்," என்றார் வக்கீல். அவர் சந்தோஷம் மிகுதியாகக் கொண்டார்.

"அவரை வரச் சொல்," என்று செங்கோட்டை ஜெமீந்தாரினி கூறினாள்.

வேலைக்காரன் போய்விட்டான், "நீ வருகிறாயா?" என்று மோகனரங்கம் கேட்க, "ஆகட்டும்," என்று இந்திரா ஒப்புக்கொண்டாள். "நான் என் மகனைக் கூட்டிக்கொண்டு வருவதாக என் புருஷரிடம் சொல்," என்று சொல்லிவிட்டு இந்திரா அங்கு நின்றும் அகன்றாள். சிறிது தனிமையில் இருந்தால் மனதைத் திடப்படுத்திக் கொள்ளலாம் என்று அவள் கருதினாள்.

மோகனரங்கம் சந்தோஷம் கொண்டார். அவர் ஜயித்து விட்டார். பிரபு அச் சமயத்தில் வந்தது நல்லது என்று ஆனந்த மடைந்தார். இப்

பொழுது இந்திரா தம்மோடு சண்டை செய்யமாட்டாள். அப்படி அவர் எண்ணிக்கொண்டிருக்கையில் மாயா விரோதி உள்ளே வந்தான்.

அவன் நல்ல உடை தரித்திருந்தான். காண்பதற்கு நன்றாக இருந்தான். ஜெமீந்தார் அல்லவா இப்பொழுது? பிரபு ஒரு கண்ணாடியும் கண்களுக்குப் போட்டுக் கொண்டிருந்தார்.

இந்திராவைக் காண்போம் என்று பிரபு ஆவலோடு வந்தார். அவள் அப்பொழுது அங்கு இல்லாதது கொஞ்சம் சந்தோஷமே. தமது எண்ணங்களைச் சரிப்படுத்திக் கொள்ளலாம் அல்லவா? ஆனால் அங்கு ஒரு ஆடவன் சிரித்துக்கொண்டே தம்மை நோக்கி வருதலைப் பார்த்து, வெறுப்படைந்தார்.

"என்ன ராஜம் இது? சிநேகிதர்களை இப்படி வெறுப்புடனா பார்ப்பது? மேலும் வீட்டிற்கு வருவதைச் சொல்லாமலா வருவது?" என்று கேட்டார் மோகனரங்கம்.

"என்ன செய்வது?" என்றார் ஜெமீந்தார். "நீ ரொம்பவும் மாறிவிட்டாய்," என்றார் வக்கீல்.

"ஜெமீந்தாரினி எங்கே?" என்றார் ஜெமீந்தார்.

"நீ என்ன சொன்னாய்?"

"ஜெமீந்தாரினி எங்கே என்று உன்னைக் கேட்டேன்,"

"ஓ! ஆமாம்!.........நான் நினைத்தது சரிதான்......நீ ரொம்பவும் மாறிவிட்டாய்......குரலும் அப்படித்தான்."

"என்ன பண்ணுவது? இருமலால் அவஸ்தை...தொண்டை வியாதி தேகத்தையே கெடுத்து விடுகிறது."

"நீ சொல்வதை நான் நம்புகிறேன்......பாக்கி விஷயத்தில் நீ சரியாக இருக்கிறாய். ஸ்திரீலோலன் நீ; இன்னமும்...உன் தேகம் திடமாகத்தான் இருக்கிறது. ஆனால் கொஞ்சம் பெரிதாகக் காண்கிறாய். தொந்தி வராமல் பார்த்துக்கொள். நான் மிகவும் குறைவாகச் சாப்பிடுகிறேன்."

"மோகனரங்க முதலியார்........."

"என்ன? முதலியாரா? பிரபுவே என்று என்னை ஏன் அழைக்கலாகாது?"

"மோகன், நீ எனக்கு ஒரு காரியம் செய்வாயா?"

"என்ன இருந்தாலும் நீ பழையமனிதன் அல்ல. வித்தியாசம் இருக்கிறது. என்ன காரியம் உனக்கு ஆகவேண்டும்? நீ ஆச்சரியம் கொடுக்கிறாய்; எனக்கு காரியமாம்!"

"நீ இங்கிருந்தும் போய்விட வேண்டும்."

"நான் போகவேண்டுமோ?"

"ஆம்...உனக்குத் தெரிகிறதா நான் கூறுவது? இந்திராவைக்கண்டு ரொம்ப நாட்கள் ஆயின."

"நீதான் இந்திராவை...சரி...அவளிடம் பேசவேண்டுமா? உனக்கு பைத்தியம் கொஞ்சம் வந்திருக்கிறது......நான் போகிறேன். நான் மற்ருெருநாள் சாப்பிட வருகிறேன்."

"நாம் இருவரும் மற்ருெருதினம் சந்திக்கும் வரையில் நீ வரவேண்டாம்."

"நீ இப்பொழுது புது மனிதன் போல் ஆகிவிட்டாய். சரி," என்று வக்கீல் மோகனரங்கம் சொல்லிக் கொண்டே செலவு பெற்றுச் சென்ருர். போகும் பொழுது தமக்குள், "பிரபு என்னிடம் பற்று அற்றவனுகக் காண்கிருன். நான் அவனுடைய மனைவி இந்திராவைக் காதலிப்பதை யாராவது சொல்லியிருக்க வேண்டும். என்ன விநோதமான மனிதன் அவன்! கைதிகளுடன், முக்கியமாக மாயா விரோதியின் சகவாசத்தில் பழகியதால், ஒரு முரட்டுத்தனம் ஏற்பட்டு விட்டது போலும்!" என்று எண்ணமிட்டுக் கொண்டே செங்கோட்டை ஜெமீந்தாருடைய மாளிகையை விட்டும் நீங்கினர்.

வக்கீல் போனதும் மாயா விரோதி மகிழ்வோடு அந்த அறையில் இந்திரா சிறிய மங்கையாக இருந்த பொழுது எழுதிய படத்தைக் கண்டு, பழைய விஷயங்களைப்பற்றி சந்தோஷமும் விசனமும் ஒருங்கே சேர, யோசனை புரிந்தான். மேகவர்ணப் புடவையைத் தரித்திருந்த அந்த ஓவியத்தின் அழகை—பேரழகை——நினைத்துக் களித்தான். "என்ன ரூபலாவண்ய முடைய ஸ்திரீ!" என்று தன் மனதினுள் ஆச்சரியங் கொண்டான்.

அப்பொழுது ஒரு ஆள் கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்ததைக் கண்டு சிறிது மனம் திடுக்கிட்டான். அவன் சில தினசரிகளை மேஜை மீது வைத்தான். மாயாவிரோதிக்கு ஆட்களைப்பற்றி பயம் கிடையாது. ஜெமீந்தாரை எவரும் மனதார நேசித்ததில்லை என்பதை முத்தைய செட்டி நன்கறிந்திருந்தான். அதனுல் ஆட்கள் தன்னிடம் மரியாதையாக இருப்பார்கள் என்றும் தன்னை ஒரு வேஷதாரி என்று அறியமாட்டார்கள் என்றும் உறுதியான எண்ணம் கொண்டிருந்தான். ஆனுல் செங்கோட்டை ஜெமீந்தாருடைய மனைவியை—தனது பழைய காதலி இந்திராவை—எப்படி சந்திப்பது என்று ஒரு வகையான கிலேசங் கொண்டான்.

சிறிது நேரமானதும் ஜெமீந்தாரினி இந்திரா அங்கே வந்தாள்.

மாயாவிரோதி அவளுடைய அன்ன நடையைக் கண்டு களிப் பெய்தினுன்; தன்னை ஒரு மாதிரி பார்ப்பதைக் கண்டான்; கதைகளில் வரும் பேரெழில் மிக்க தேவதைக்கு அவளை ஒப்பிட்டான். ஏதும் உடனே பேசாமல் அவளை நோக்கிய வண்ணம் நின்ருன். அவளும் பேசவில்லை; இருவரும் இரண்டு சிலைகள் போல் நின்றுகொண் டிருந்தனர். மௌனம் அங்கே நிரந்தரமாக நின்று விடுமோ என்று ஐயங்கொள்ள வேண்டிய நிலைமையில் அவர்கள் காணப்பட்டனர். ஏதோ சில வார்த்தைகள் பேச வேண்டுமென்று வேஷதாரியகிய மாயாவிரோதி முயற்சி செய்தான்.

மனது மாட்டேன் என்று மறுத்துக்கொண்டிருந்தது. "நீ சௌக்கியமா?" என்று இந்திராவைக் கேட்க முடியாமல் திகைத்தான். அவளுடைய கேசத்தில் அழகு செய்து கொண்டிருந்த வாசனைப் புஷ்பங்களின் நறுமணம் அவனுக்கு சந்தோஷ மயக்கத்தைக் கொடுத்தது; தலை கிறுகிறுவென்று சுழன்றது; தான் மயக்கத்தோடு விழுந்துவிட்டால் என்ன செய்வது என்று மாயாவிரோதி திகிலடைந்தான். அவனுடைய இருதயம் அடித்துக் கொள்வதை நிறுத்திக் கொள்வது போல் இருந்தது. ஒரு பயம் அவனைப் பிடித்துக் கொண்டதலால் அந்த அலங்காரமான அறையை விட்டு ஓடி விடலாமா என்று யோசித்தான்.

அவனை நாயகனென்று நம்பிய நற்கோதை இந்திரா ஒரு ஆசனத்தில் உட்கார்ந்து கொள்ளுமாறு சைகை செய்தாள். ஜெமீந்தார் உட்கார்ந்து கொண்டார். சில வார்த்தைகள் அவளுடைய அழகிய அதரங்களுக்கு நடுவில் வருவதைக் கேட்டதும் மாயாவிரோதிக்குப் பைத்தியம் பிடித்துவிடும் போல் இருந்தது.

"உமது மகனைக் கூட்டிக்கொண்டுவரச் சென்றேன். கைதிகள் கூட்டத்தில் சிக்கிய உமக்கு ஆபத்தாவது வேறு கோளாறுவது உண்டாகவில்லை என்று நினைக்கிறேன்" என்று சொன்னள் ஜெமீந்தாரினி.

"என்ன கஷ்டம், இந்திரா!"

அவளை இந்திராவென்று கூப்பிட்டுவிட்டான்—அவளை! பிறகு அவளைப் பெயரால் கூப்பிடக்கூடாது என்று எண்ணங் கொண்டான்.

இந்திரா ஆச்சரியம் அடைந்து, "நீர் என்னை எப்பொழுதும் இந்திரா என்று கூப்பிட்டதில்லையே! உமக்குப் புதிய குரலும் புது மாதிரி அன்பும் உண்டாகியிருக்கிறதே! கைதிகளுக்கு இடையில் சிக்கியதால் இப்படியா?" என்று கேட்டாள். "மேலும் நீங்கள் இந்திரா என்று அழைக்கமாட்டீர்களே," என்று திரும்பவும் சொன்னள்.

"என்ன தப்பு செய்துவிட்டேன்! சமூகத்தில் செங்கோட்டை ஜெமீந்தாரும் இந்திராவும் எப்படி ஒருவரை ஒருவர் அழைத்துக்கொண்டனர்? எப்பெயர்களால்? மாது! ஜெமீந்தாரினி! ஆனல் இவளும் அவனும் பகைத்துக்கொண்டிருந்தார்களே!" என்று மாயாவிரோதி வழி தெரியாமல் பலவாறு யோசனை செய்து, தன்னை நொந்துகொண்டான்.

பின்பு தைரியம் கொண்டு அவளை நெருங்கினன்; அவளுடைய அழகிய கையைப் பற்றினன். ஆனல் இந்திரா தனது கையை விடுவித்துக்கொண்டாள். அதனல் புதிய ஜெமீந்தாருக்கு மிக்க வெட்கமுண்டாயிற்று. அவள் மீது அவர் கொண்டிருந்த காதல் தைரியத்தை அப்பொழுது அளிக்கத் தொடங்கியது.

"அன்பே, நாம் இருவரும் சந்தித்து பலவாரங்கள் ஆகவில்லையா?... .........கைதிகள் கையில் நான்.........அகப்பட்டுக் கொண்டேன்," என்று சிறிது பயத்தோடு ஜெமீந்தார் பேசினர்.

(தொடரும்.)

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

ஈசுவரஞு தைமீ—கலியுகாதி 5039, சாலிவாகனம் 1860,
பசலி 1347, கொல்லமாண்டு 1113, ஹிஜரா 1356,
இங்கிலீஷ் 1938ஞு ஜனவரிமீ—பிப்ரவரிமீ

| தைமீ | ஜனவரிமீ (1938ஞு பிப்ரவரிமீ) | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | வெள் | திர29-18 | மிரு28-33 | சித்60 | உத்தராயண புண்யகாலம், போங்கல் பண்டிகை, சங்காந்தி பண்டிகை, கரிநாள் |
| 2 | 15 | சனி | ச○20-35 | திரு21-40 | சித்60 | மாட்டு பொங்கல், கரிநாள் |
| 3 | 16 | ஞா | பவு11-53 | புன14-50 | சித்60 | தைபபூசம், கரிநாள் |
| 4 | 17 | திங் | பிர3-33 துதி56-10 | பூச8-25 | சித்60 | |
| 5 | 18 | செவ் | திரி50-10 | ஆயி2-53 மக58-45 | சித்60 | |
| 6 | 19 | புதன் | சது45-58 | பூர56-25 | அமி60 | |
| 7 | 20 | வியா | பஞ்43-45 | உத்56-10 | ம56-10சி | |
| 8 | 21 | வெள் | சஷ்43-43 | அஸ்58-3 | அ58-3சித் | |
| 9 | 22 | சனி | சப்45-45 | சித்60 | மர60 | |
| 10 | 23 | ஞா | அ49-50 | சித்2-0 | சித்60 | |
| 11 | 24 | திங் | நவ55-25 | சுவா7-45 | அ7-45மர | |
| 12 | 25 | செவ் | தச60 | வி14-50 | ம14-50சி | திருதினஸ்பிருக் |
| 13 | 26 | புதன் | தச2-0 | அ22-40 | சித்60 | விவாகம்,சர்வ முகூர்த்தம் |
| 14 | 27 | வியா | ஏகா8-58 | கே30-35 | பி30-35சி | சர்வ, மத்வ ஏகாதசி |
| 15 | 28 | வெள் | து15-43 | மூல38-13 | அ38-13பி | பிரதோஷம், விவாகம் |
| 16 | 29 | சனி | திர21-48 | பூரா45-8 | சித்60 | மாச சிவாத்திரி, கணிதா [ரம்பம் |
| 17 | 30 | ஞா | சது26-55 | உத்51-8 | அமி60 | கரிநாள் |
| 18 | 31 | திங் | ●31-5 | திரு55-55 | அ55-55சி | சர்வத்திர அமாவர்சை |
| 19 | 1 | செவ் | பிர33-50 | அவி59-43 | சி59-43ம | வியாதியஸ்தர் குளிக்க |
| 20 | 2 | புதன் | துதி35-43 | சதை60 | சித்60 | சுப முகூர்த்தம் செய்ய |
| 21 | 3 | வியா | திரி36-33 | சதை2-28 | மர2-28சி | ஏற்றம் ஸ்தாபிக்க |
| 22 | 4 | வெள் | சது36-23 | பூர4-18 | சித்60 | மாச சதுர்த்தி விரதம் |
| 23 | 5 | சனி | பஞ்35-20 | உத்5-13 | சி5-13மர | மதன பஞ்சமி, ஸ்ரீ பஞ்சமி |
| 24 | 6 | ஞா | சஷ்33-15 | ரே5-15 | அ5-15சித் | சஷ்டி, சர்வ முகூர்த்தம் |
| 25 | 7 | திங் | சப்30-15 | அஸ்4-18 | சித்60 | தசப்தமீ, மஹா சப்தமி |
| 26 | 8 | செவ் | அ25-15 | பர❊2-23 கிரு59-35 | சித்60 | தை க்ருத்திகை, சுரங்கம் வெட்ட,அடுப்பு வைக்க |
| 27 | 9 | புதன் | நவ21-20 | ரோ55-48 | அ55-48சி | ஆபரணப்பூண, கதிறுக்க |
| 28 | 10 | வியா | தச15-30 | மிரு51-13 | மர60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 29 | 11 | வெள் | ஏகா8-58 | திரு45-58 | சித்60 | சர்வ,மத்வ ஏகாதசி,பீஷ்ம பஞ்சகம், பீஷ்ம ஏகாதசி |

| | | | |
|---|---|---|---|
| சனி | | கே | |
| செ | 4-மகர-சுக் 7-மீன-செ 21-மகா-புத 28-கும்-சுக் | | |
| சூரி குரு | | | |
| புத சுக் | ராகு | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE " ANANDA BODHINI " PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 23 | ஈசுவரஞு மாசிமீ கஉ | 1938ஞு பிப்ரவரிமீ 12உ | பகுதி 8

## கடவுள் வணக்கம்.

பொய்யனேன் அக(ம்)நெகப் புகுந்து அமுதூறும்
புதும லர்க்கழல் இணையடி பிரிந்தும்
கையனேன் இன்னுஞ் செத்திலேன் அந்தோ!
விழித்திருந்து உள்ளக் கருத்தினை யிழந்தேன்
ஐயனே அரசே அருட்பெருங் கடலே
அத்த னேஅயன் மாற்குஅறி யொண்ணுச்
செய்யமே னியனே செய்வகை யறியேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. (1)

புற்று மாய்மர மாய்ப்புனல் காலே
உண்டியாய் அண்ட வாணரும் பிறரும்
வற்றி யாரு(ம்)நின் மலரடி காணு
மன்ன! என்னையோர் வார்த்தையுட் படுத்துப்
பற்றிஞய் பதையேன் மனமிக உருகேன்
பரிகி லேன்பரி யாவுடல் தன்னைச்
செற்றிலேன்இன்னுந் திரிதரு கின்றேன
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. (2)

புலைய னேனையும் பொருளென நினைந்துஉன்
அருள்பு ரிந்தனை புரிதலுங் களித்துத்
தலைபி ஞல்நடந் தேன்விடைப் பாகா!
சங்கரா எண்ணில் வானவர்க் கெல்லாம்
நிலைய னேஅலை நீர்விடம் உண்ட
நித்த னேஅடை யார்புரம் எரித்த
சிலைய னேஎனைச் செத்திடப் பணியாய்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. (3)

# அரும்பொருள் விளக்கம்

(இ-ள்.) திருப்பெருந்துறை என்னுந் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளி யிருக்கும் சிவபெருமானே! பொய்யையே பெரிதாகக்கொண்ட என் உள்ள முருகக் குடிகொண்டு அமிர்தத் தேன் துளி துளும்பும் அன்றலர்ந்த மலர்போன்ற திருவடிகளைப் பிரிந்தும், சிறுமைக்குணமுடைய நான் இன்னும் சாகவில்லை; கண் விழித்திருந்தும் மனக் கருத்தை யிழந்து விட்டேன். தலைவனே! மன்னனே! கருணை மாகடலே! தந்தையே! பிரமனும் விஷ்ணுவும் அறிய முடியாத செம்மேனிஅம்மானே! இனி செய்ய வேண்டிய வகை இன்னதென அறியாது தியங்குகிறேன். (எ-று.)

பெறற்கரிய பெம்மான் தானே புகுந்து மனதைக் கோயிலாகக் கொண்டும் அவரைப் பிரிந்து போகும்படியாகச் செய்ததோடு, அப் பிரிவாற்றாமையால் சாகத் துணிந்திலேன் என்று மாணிக்கவாசகப் பெருந்தகையார் வருந்துகிறார். (1)

(இ-ள்.) திருப்பெருந்துறை என்னுந் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளி யிருக்கும் சிவபெருமானே! புற்று, மரம், நீர், காற்று, உணவு ஆகிய எல்லாமாய் நீ பரிணமித்திருந்தும் விண்ணுலக தேவர்களும், மற்றவர்களும் உடல்மெலிய தவமிருந்து எங்கும் மலர்ந்த உனது திருவடிகளைக் காண முடியாத மன்னனே! அடியேனை ஒரு மொழியில் சிக்கவைத்து ஆட்கொண்டாய்; அப்படி யிருந்தும், நான் உன் பெருங்கருணையை நினைந்து துடிக்கவில்லை; நெஞ்சு நெக்குருகவில்லை; பரிவு கொள்ளவில்லை; தாங்க முடியாத தேகத்தை வாட்டி வொறுக்கவில்லை; இன்னும் நடைப்பிணம் போலவே திரிந்து வருகிறேன். (எ-று.)

ஆண்டவனது கருணைத் திறத்தை நினைத்து எவ்விதத்திலும் நன்றி செலுத்தவில்லையே என ஏங்குகிறார். (2)

(இ-ள்.) திருப்பெருந் துறை என்னுந் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே! மால்விடையூரும் பார்வதிபாகனே! சர்வ சங்கார காரணனே! கணக்கில்லாத் தேவர்களுக்கெல்லாம் நிலைக்களமான பரம்பொருளே! அலைகடலினின்று எழுந்த விஷத்தைப் பருகிய மன்னனே! பகையரக்கர்களுடைய திரபுராதிகளை எரித்துச் சாம்பாக்கிய மேருவில் வீரனே! புலைத்தொழிலை யுடையவனினுங் கேவலமான என்னையும் ஒரு பொருளாக மதித்து உனது திருவருளைப் புரிந்தாய்; புரிந்ததும் களிப்பால் செருக்கடைந்து தலையாலேயே நடக்கத் தொடங்கினேன்; எனவே, என் அறியாமை நீங்க என்னைச் சாக்காடு வந்தடையும்படி செய்வாயாக. (எ-று.)

இப் பாட்டிலும் இறைவனின் அருட்பெருக்கையே வலியுறுத்துகிறார். (3)




# விவசாயிகளுக்கு விமோசனம்

ஒரு தேசத்துக்கும் மக்களுக்கும் ஜீவாதாரமாக வுள்ள வர்கள் உணவுப் பொருள்களை உற்பத்தி செய்து தரும் விவசாயிகள் என்பதை அனைவரும் அறிவர். இவ்வுலகி லுள்ள தேசங்களை யெல்லாம் எடுத்துக்கொண்டால், விவசாயத் தொழிலுக்குப் பூரண தகுதியுள்ள தேசம் நம் இந்தியாவைவிட வேறெத் தேசமும் இருக்க முடியாது என்பது நம் அபிப்பிரா யம்; அவ்வளவு நீர்வளம் நிலவளமுடைய தேசம் நம் தாய்நாடு ஒன்றே யாகும். பண்டைக்காலத்தில் நம் நாடு, பழமைக்கும், நாகரிகத்துக்கும் பேர்போன ரோம், கிரீஸ் போன்ற நாடுக ளோடு சரி சமானமாய் உன்னத நிலையி லிருந்ததற்கு முக்கிய காரணம் நாட்டின் விவசாயத்தொழிலின் செழிப்பே யாகும் என்றால் மிகையாகாது. அக் காலத்தில் நம் நாட்டில் விளைந்த அபூர்வமான விளைபொருள்களைப் பல நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்தும், வியாபார முறையில் பல நாடுகளோடு தொடர்பு வைத் துக்கொண்டு கப்பல் வாயிலாகப் பல தேசங்களிலும் போய் வியாபாரஞ் செய்தும் வந்தனர் நம் மூதாதையரென்றால், நம் நாட்டின் நிலவளப்பத்துக்கு வேறு சான்று கூறவும் வேண் டுமோ! ஏன்? விவசாயத்தொழில் பலவித காரணங்களால் மிக வும் க்ஷீணதசையை யடைந்திருக்கும் இக் காலத்திலும், நம் நாட்டிலிருந்து பல விளைபொருள்கள் இன்னமும் ஐரோப்பா முத லிய வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாய்க் கொண்டிருக்கின்றன வென்றால் அதிகங் கூறுவானேன்!

ஒரு காலத்தில் உன்னத நிலையிலிருந்த விவசாயத்தொழில் இன்று மிகவுந் தாழ்த்தசையை யடைந்ததற்குக் காரணம் யாது? விவசாயத்தொழில் அபிவிருத்தியைப் பொதுமக்களும் அரசாங் கமும் நன்கு கவனிக்காமையும், விவசாயத்தொழிலில் ஈடுபட் டிருக்கும் விவசாயிகளுக்குப் போதிய ஆதரவும், உதவியும் அளிக்காமையுமே முக்கிய காரணங்களாகும். அதுவன்றி, விவ சாயக் குடிமக்களிலேயே பலர் நவநாகரிக மோகங்கொண்டு

உழவுத்தொழிலை விட்டு, நிலபுலங்களை விற்றுவிட்டு, கிராமங்களை விட்டு நகரங்களுக்கு வந்து விடுகின்றனர்.

இந்தியாவின் சிறப்புக்குக் கிராமங்களே ஜீவநாடி போன்றவைகளாகும். நகரமக்களின் நல்வாழ்வுக்கும், அரசாங்கச் சிறப்புக்கும் கிராமங்களிலுள்ள விவசாயக் குடிமக்களே காரண பூதர்க ளாவர்.

இத்தகைய விவசாயிகள் இன்று எந்நிலையி லிருக்கின்றனர்? குழிந்த கண்களும், ஒட்டிய தாடைகளும், சூம்பிய தோள்களும், எலும்புகள் தெரியும்படியான மார்புமுடையவர்களாய் காட்சி தருகின்றனர். இந்திய விவசாயிகள் என்று அடையாளந் தெரிந்துகொள்ள வேண்டுமென்றால், மேற்குறித்த எளிய தோற்றங்களைக் கொண்டு தெரிந்து கொள்ளலாம்.

விவசாயிகளின் இவ்வித பரிதாப நிலைமைக்கு மூலகாரண மென்ன? விவசாயிகள் நாட்டின் வளத்துக்கும், பொது மக்களின் செழிப்புக்கும் ஆதார புருஷர்களா யிருப்பினும், அவர்களது சுக சௌகரியங்களுக்கு அவர்களுடைய பேருழைப்பு பலன் தருவதில்லை; பேருழைப்பு அவர்களுக்குப் பலன் தராது போய் விடினும் பரவாயில்லை. இத் தேக உழைப்போடு தாங்க முடியாத கஷ்டங்களும், கவலைகளும் அவர்களை ஒவ்வொரு கணமும் நசுக்கி உயிரோடு சித்திரவதை செய்து வருகின்றன. மற்ற மக்கள் உண்பதற்கு வேண்டிய உணவுப் பொருள்களை யளித்து வரும் இந்த விவசாயிகளுக்கு, தாங்களும், தங்கள் மனைவி மக்களும் ஒரு வேளையாகிலும் வயிறார உண்பதற்கும் உணவு கிடைப்பதில்லை. இந் நிலைமைக்குக் காரணம் யாது? விவசாயிகள் செய்யும் உழவுத் தொழில் அவர்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களைத் தருவதில்லையா? கால மழை யில்லாமையாலும், போதிய எரு இல்லாமை முதலிய மற்றும் பல காரணங்களாலும் சில சமயங்களில் நிலங்கள் சாவியாய்ப் போய் விட்டாலும், அநேகமாகப் பலன் தரத் தவறுவதில்லை. இவ்வித மிருந்தும் விளைபொருள்கள் சர்க்கார் விதிக்கும் வரிப்பணத்தைக் கட்டுவதற்கே இருப்பதில்லை. நெல் முதலியவைகளின் விலைவாசி பல சமயங்களில் மிகவுங்குறைந்து போகின்றன. அவ் வரிப்பளுவைச் சமாளிக்க விவசாயிகள் கடன் வாங்குகிறார்கள். இதுவன்றி விவசாயத் தொழில் வளர்ச்சிக்காக வேண்டி, ஏற்கனவே, அவர்கள் கடன் வாங்கியிருக்கிறார்கள். சர்க்கார் வரிப்பளுவாலும், கடன் பளுவாலும் விவசாயிகள் மூச்சுவிடக் கூட முடியாது திணறுகிறார்கள். இவ்வித பரிதாப நிலையிலிருக்கும் விவசாயிகளை அரசாங்கமோ பொது மக்களோ சரியாகக் கவனிப்பதில்லை.

'பேருழைப்பாளிகளான விவசாயிகள் ஏன் கஷ்டப்படுகிறார்கள்? அவர்களுக்குக் கடன் எவ்விதம் ஏற்படுகிறது? அவர்களது

கஷ்டத்துக்கும் கடனுக்கும் மூல காரண மென்ன?' என்று எவருஞ் சிரத்தையோடு ஆராய்ந்து பார்ப்பதே யில்லை. விவகாரதசையில் ஒரு சிலர் விவசாயிகள் நிலைமையைப்பற்றி மேல்போக்காகப் பேசி விட்டுச் சென்று விடுகின்றனர். இதனல் விவசாயிகளுக்கு ஏதாயினும் நன்மை யேற்படுமா?

நாம் சிறிது நேரம் சிந்தித்துப் பார்த்தாலும், விவசாயிகள் கடன் காரர்களாய் விடுவதற்குப் பல காரணங்கள் புலப்படும். விவசாயிகள் அநாவசிய செலவுகளுக்குக் கடன் வாங்குவதில்லை. தங்கள் நில புலங்களைப் பண்படுத்துவதற்காகவே—தாங்கள் செய்யும் விவசாயத் தொழிலின் அபிவிருத்திகளுக்காகவே பெரிதும் அவர்கள் கடன் வாங்குகின்றனர். கட்டுப்படியாகாத அளவு குறுகிய நிலத்தில் விவசாயத் தொழிலைச் செய்வதால் எதிர்பார்த்த பலன் ஏற்படாது போய் கடன் வாங்கும் நிலை ஏற்படலாம்; விளைவில்லாமல் மகசூல் தீய்ந்து போனதால் கடன் ஏற்படலாம். விவசாயத் தொழிலுக்கு மிக இன்றியமையாததான ஆடுமாடு முதலிய கால் நடைப் பிராணிகள் பெருவாரியாக இருப்பதால் கடன் பெருகலாம். இவற்றுடன் விவசாயிகளின் கடன் அளவின்றிப் பெருகுவதற்கு மற்ருெரு முக்கிய காரணமுண்டு. அதாவது லேவாதேவி முறையிலுள்ள ஒழுங்கீனங்களேயாகும். ஆகவே, இது போன்ற பல காரணங்களால் தாங்கமுடியா கடன்பளுவால் அவதிப்படும் விவசாயிகளுக்கு விமோசன முண்டு பண்ண வேண்டியது அனைவருடைய கடமையுமாகும். முக்கியமாக, அரசாங்கம் விவசாயிகள் பரிதாப நிலைமைக்கு உடனே பரிகாரந் தேடவேண்டும்.

விவசாயத் தொழிலின் வீழ்ச்சிக்கு நம் நாடு அன்னிய அரசாங்கத்துக்கு அடிமைப்பட்டிருப்பதும் ஒரு முக்கிய காரணம்; ஆயினும், அன்னிய அரசாங்க ஆதிக்கத்தில் இதுவரை பதவி வகித்து வந்த நம் அரசியல் வாதிகளும் விவசாயிகளின் இக்கஷ்ட நிலைமையையோ, விவசாயத் தொழில் அபிவிருத்தியையோ சிறிதுங் கவனிக்கவேயில்லை. தாங்கமுடியாத நிலையில் விவசாயிகளின் அழுகை மேலோங்கிக் கேட்குஞ் சமயத்தில் அரசாங்கத்தார் தற்கால சாந்தியாக ஏதோ பரிகாரஞ் செய்து அவர்கள் கண்களைத் துடைத்து வந்தனர். ஆனல், அவையெல்லாம் விவசாயிகளின் கடன் பளுவை உண்மையாக நீக்கவில்லை. எனவே, விவசாயிகள் நிலைமை நாளுக்குநாள் மிகவும் மோசமாகிக் கொண்டே வருகிறது. இவ்வித நிலைமையால், எங்கு விவசாயத் தொழிலே மறைந் தொழியுமோ என்று அஞ்சக்கூடிய நிலை ஏற்பட்டுவருகிறது. விவசாயத் தொழில் க்ஷீணித்தால் தேசப் பொருளாதாரமும், வியாபாரமும் துர்த்தசையை யடையும். நம் தேசமும் ஏழை மக்களுமேயன்றி, விவசாயிகளது உழைப்பாலும்

கூட்டுறவாலும் வியாபாரத்தாலும் பொருள் சேர்த்து செழிப்புடன் வாழும் உயர் வகுப்பினரும் அழிந்துபோகவே நேரும். ஆகவே, நம் தேசத்துக்கும், சமூகத்துக்கும் முதுகெலும்பு போன்றுள்ள விவசாயிகளுக்கு அவர்களது கடன் பளுவைத் தீர்த்து விமோசனத்தை யுண்டுபண்ண வேண்டியது அத்தியாவசியமும் அவசரமுமானதாகும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

இந்திய அரசியலில் தற்போது ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டிருப்பதை அனைவரும் அறிவர். தேச விடுதலைக்கும், பொதுஜன நன்மைக்கும் பாடுபடும் காங்கிரஸ் மகாசபையைச் சேர்ந்தவர்கள் இப்புதிய அரசியலில் பதவியேற்று ஆட்சி செலுத்திவருகிறார்கள். பிரிட்டிஷ் சர்க்கார் இந்தியாவுக்கு வழங்கியிருக்கும் மாகாண சுயாட்சி இந்திய மக்களுக்குப் போதிய சுதந்தரத்தையும், நன்மையையும் அளிப்பதாயில்லை; ஆயினும், அதை ஸ்தம்பிக்கச் செய்யும் முன், அம்மாகாண சுயாட்சி வாயிலாய் எவ்வளவு தூரம் நம்மக்களுக்கு நன்மை செய்யும் வகையில் பயன்படுத்திக் கொள்ள முடியுமோ, அவ்வளவு தூரம் பயன்படுத்திக் கொள்வது என்ற பெரு நோக்கோடேயே காங்கிரஸ்காரர்கள் இன்று மாகாண சட்ட சபைகளைக் கைப்பற்றியதோடு ஏழு மாகாணங்களிலும் பதவியேற்று ஆட்சி செலுத்தி வருகிறார்கள். சென்னை மாகாணத்தில் ஸ்ரீஜத். இராஜகோபாலாசாரியாரைப் பிரதம மந்திரியாகக் கொண்ட காங்கிரஸ் மந்திரி சபையார் இந்த நான்கு மாதகாலமாகப் பொது மக்களுக்குச் செய்து வரும் நன்மைகளையும் யாவரும் அறிவர். அவைகளுக்குள்ளே தமிழ் நாட்டிலுள்ள ஏழை மக்களுக்குப் பெரிதும் உதவிபுரியக் கூடிய காரியங்கள் கைத் தொழில்களுக்குப் பாதுகாப்பளித்து 2 லட்ச ரூபாய் உதவியதும், மதுவிலக்கைச் சட்டமாக்கி அமுலுக்குக் கொண்டுவந்திருப்பதும், விவசாயிகள் கடன் நிவாரண மசோதாவைக் கொண்டுவந்து நிறைவேற்றிச் சட்டமாக்கியிருப்பதுமேயாகும்.

கனம் இராஜகோபாலாரியார் விவசாயிகளுக்கும் விவசாயத் தொழிலுக்கும் ஒருவித விமோசனத்தை யுண்டுபண்ண வேண்டுமென்று எண்ணினார். முக்கியமாக, விவசாயத் தொழிலுக்குப் பாதுகாப்பு அளித்துவிட்டால், அதன் வாயிலாக, விவசாயிகள் நன்மை யடைவார்கள் என்ற பெரு நோக்கத்தோடு, மற்றெல்லா வேலைத் திட்டங்களையும் விட்டுவிட்டு முதன்முதலாக 'கடன் வாய்தா மசோதா'வைச் சட்டசபைகளில் கொண்டுவர முயன்றார். அது உத்தேசத்திலிருக்கும் போதே வக்கீல்களும் லேவாதேவிக் காரர்களும், மற்றும் சிலரும் பலமாக எதிர்த்துக் கூப்பாடு போடத் தொடங்கினர்.

எனவே, கனம் ஆச்சாரியார் தமது முதல் உத்தேசத்தைக் கைவிட்டு, அடுத்தபடியாக "விவசாயிகள் கடன் நிவாரண மசோதா"வைக் கொண்டுவந்து சட்டசபைகளில் பிரரேபித்தார். இக்கடன் நிவாரண மசோதாவின் முக்கிய நோக்கம், "விவசாயத் தொழிலில் ஈடுபட் டிருப்பவர்களுக்கு அநுகூலத்தைச் செய்வதும், அவ்விவசாயிகளுக்குச் சொத்து அடமானத்தின் மீதோ வேறு வழிகளோ ஏற்பட்டுள்ள கடன் பளுவை சட்ட பூர்வமாகக் குறைத்து விடுவது"மேயாகும். இம் மசோதாவின் இப் பிரதான நோக்கத்துக்கு மாறுபடாத வகையில், அதன் ஷரத்துகளிலும் பிரிவுகளிலும் ஏதேனும் மாற்றஞ் செய் வேண்டுமென விரும்புபவர்களின் திருத்தங்கள் ஏற்றுக் கொள்ளப்படுமென்றும் கூறிப் பிரதம மந்திரி நிலைமையை விளக்கினர்.

இம் மசோதாவுக்குஞ் சிலர் எதிர்ப்பா யிருந்தனர். இவர்களெல்லாம் இம் மசோதாவால் லேவாதேவிக் காரர்களைப்போல் ஏதோ ஒரு வகையில் பாதிக்கப்பட்டவர்களேயாவர். அவர்கள் தங்கள் சுயநலத்தைப் பெரிதாகக் கருதினர்களே யொழிய, விவசாயிகளின் நலத்தைச் சிறிதுங் கருதவேயில்லை.

இம்மசோதா சென்ற டிசம்பர் மாதத்தில் முதலாவதாகச் சட்ட சபைகளில் விவாதத்துக்கு விடப்பட்டது. எதிர்க் கட்சியினர் இம்மசோதாவைத் தொலைத்துவிடுவதற்குரிய முறைகளை யெல்லாம் கையாண்டனர். மசோதா நோக்கத்தைக் குழி தோண்டிப் புதைக்கும் வகையில் பல திருத்தங்களைக் கொண்டு வந்தனர். இவற்றிற்கெல்லாம் பிரதம மந்திரி இடங்கொடாது இம்மசோதாவைக் கூட்டுக் கமிட்டியின் பரிசீலனைக்கு விட்டார்.

மீண்டும் ஜனவரிமாதக் கடைசியில் சட்டசபையில் இப் மசோதா கூட்டுக் கமிட்டி செய்த சிபார்சுகளோடு ஆலோசனைக்கெடுத்துக் கொள்ளப் பட்டது. இம்முறையும் எதிர்க்கட்சியினர் விதண்டாவாதஞ் செய்து மசோதாவே நிறைவேற வொட்டாதவாறும், உருக்குலைக்கவும் முயன்றனர்.

பொதுநலத்திலேயே பெரிதுங் கருத்துடைய பிரதம மந்திரி கனம் ஆச்சாரியார் ஒரே பிடிவாதமா யிருந்து, எதிர்க்கட்சியினர் கிளப்பிய ஆட்சேபங்களுக்கெல்லாம் தகுந்த பதிலளித்து, ஜனப் பிரதிநிதி சபையிலும் அரசாங்க சபையிலும் முறையே நிறைவேற்றிக் கடைசியாகச் சட்டமாக்கி விட்டார். இக் கடன் நிவாரணசட்டம் ஏழை விவசாயிகளுக்கு ஒரு வரப்பிரசாதமாகும். நீண்ட காலமாக, கடன் என்னும் முதலை வாயில் அகப்பட்டுத் தப்பமுடியாது தத்தளித்துக்கொண்டிருந்த விவசாயிகளை இக் கடன் நிவாண சட்டம் விடுவித்து விமோசன மளிக்குமென்பது நமது நம்பிக்கை. இச் சட்டத்தால் ஏழை விவசாயிகள் வாழ்க்கையில் புதிய சகாப்தம் ஏற்படுமென்பது திண்ணம்.



# கல்விப் பயிற்சி



(T. R. ராஜகோபால்.)

மாந்தர்தம் குண விசேஷத்தைப் பற்றி நிர்ணயித் தறிதலானது அரும்பெரும் பிரச்னைகளுள் முதலாவதாகும். உலகம்-உலகாதிகளின் அமைப்பையும் போக்கையும், மானுடரின் குண நடத்தைகளின் தராதரத்தையும் ஒரு சமயத்தில் தாழ்த்தி மற்றொரு சமயத்தில் உயர்த்தியும், ஒரு சமயத்தில் ஒரு பொருளையும் வழியையும் சிலாகித்துப் பற்றி நடந்து மற்றொரு சமயத்தில் அதே பொருளையும் வழியையும் வெறுத்துத் துறந்தும், ஒரு சமயத்தில் ஒரு சித்தாந்தத்தைக் கற்பித்து மற்றொரு சமயத்தில் அதே சித்தாந்தத்தைத் தூஷித்தும் வருவதை அறியாதவர் இலர். எஞ்ஞான்றும் இவ்வாறு மாறிக்கொண்டிருப்பதனால் மனிதனின் மெய்ச் சுபாவத்தைப் பற்றி அறுதியிட்டு உறுதி கூறுவதற்கியல்வதில்லை. எனினும், அம்மாற்றங்களின் காரணத்தை ஒருவாறு ஆராய்ந்தறிதல் அவசியமாகும். பொருளாளிகளும், சுயநலச் சிந்தனையாளரும், போலி வித்தகர்களும், கைதவ மதாசாரிகளும், மூடச் சமூக நிர்வாகிகளும் அவ்வவரின் சுயநன்மைக்கும் சுக ஜீவனத்திற்கும் சிறப்பிற்குமானபடிக்கு மானுடராசியின் இயல்பைப் பற்றி விதம் விதமான கோள்களைக் கற்பித்துவந்தனர். இன்னமும் அவ்வாறு செய்துவருகின்றனர். எனினும், நாம் கவனித்தறிய வேண்டிய விஷயம் யாதெனின், உயர்வு தாழ்வு—நன்மை தீமை—அறம் மறம் என்பன வாதிகளெல்லாம் அக்கயவர்களால் தம்முடைய மேலேற்றத்திற்காகவேதான் விதிக்கப்பட்டு, அவர்களிஷ்டப்படிக்கு அவைகள் மாற்றப்பட்டு வருவன என்பதாகும்.

பல்வேறு ஆசாபாசங்களும், வலிவருத்த மேக்கங்களும், பொறாமை—கபடம்—வெறுப்புக்களும், ஐயம்—அச்சம்—கவலைகளும், அவநம்பிக்கையும் பகைமையும் நிரம்பப்பெற்ற ஓர் கொடிய குகையாக மாந்தரின் உள்ளமானது தோன்றியபோதிலும், ஒவ்வொருவரின் நிலைமையையும் சமூக அமைப்பையும் ஊன்றிப் பார்த்து ஆராய்வோமாயின், எவனையும் இகழ்வதற்கும் புகழ்தற்கும் இடமில்லை. சமூக வாழ்க்கையில், மாந்தரனைவர்க்கும் பொதுவான மூலதனங்களைச் சில வீணர்களும் மூர்க்கர்களும் நயவஞ்சகத்தினாலும் தோள்வலிமையினாலும் கைப்பற்றி, அந்நாள் தொட்டு இந்நாள் வரையிலும், ஏனையோர்களை வெகு துன்பத்திற் குள்ளாக்கினார்கள் ; இன்னமும் அவ்வாறு செய்துவருகின்றனர், நாள் செல்லச் செல்ல பூஸ்திதியும்

தொழிற் சாமான்களும்—கருவிகளும்—சாலைகளும், இவைகளி னின்றுண்டாகும் பெரு லாபமும் மிக்க சிலரையே அடைந்திருந்தமையால், விவேகம் வளர்ந்து—அநுபவம் முதிர்ந்து—ஞானம் சுரந்து—உள்ளம் விரிந்து—மாநுட வாழ்க்கையை ஓர் ஒப்புயர்வற்ற மாண்புற்ற வாழ்க்கையாக உயர்த்துதற்கு வேண்டிய கல்விப் பயிற்சிகளையும், மனத்தேர்ச்சியையும், இவைகளுக்கு இன்றியமையாத பொருளையும் வசதியையும் இதரச் சாதகங்களையும் மாந்தரனைவரும் பெற்று அநுபவிக்க முடியாமற்போகவே, மனங்குவிந்து—தேகம் ஒடுங்கிக் கெட்டு—நெஞ்சம் பாழ்த்து விலங்குகளுக்குங் கடையராக மாந்தரிற் பெரும்பாலோரும் தாழ்ந்தனர்! நாடெங்கணும், அவிவேகமும், வறுமையும், பிணியும், இவைகளின் காரணத்தால் பழிதீர்க்குங் குணமும், களவுங் கொலையும், அசூயையும், விரோதமும் போரும் உண்டாகி அதிகரித்தன.

மாந்தரின் குற்றங் குறைகளுக்கும், இன்னலிடர்களுக்கும் காரணமான அவிவேகத்தை அகற்றுவதற்கான உபாயங்களை ஆராய்ந்தறிந்து தக்கன செய்தல் சமூக நிர்வாகிகளின் முழுமுதற் கடமையன்றோ? தேகாரோக்கியத்திற்கும், மனோ வளர்ச்சிக்கும்—பலத்திற்கும் மிக்க பிரதானமான உணவையும்—உடுப்பையும்—கல்வியையும்-ஒழிவையும் பதினாயிரத்தில் ஒருவன் தவிர ஏனையோர் பெற்று அநுபவித்தற்கியலாமை பரிதபிக்கத்தக்க விஷயமன்றோ?

"நாகரீகம்" எனப்படுவது மேன்மேல் ஓங்கி வளர்கையில், வறுமையும் வியாதிகளும் அகால மரணமும், துர்ச்சாவும் பன்மடங்கு அதிகமாகப் பெருகிவருகின்றன! கலைகளும், வித்தியாலயங்களும், கற்கு முறைகளும் நாளுக்கு நாள் அதிகரித்துவந்தபோதிலும், பேதைமையும்—பிடிவாதமும்-இடுங்கிய நோக்கமும்—குறுகிய மனப்பான்மையும் கிஞ்சிற்றேனும் குறையவில்லை! நீதிஸ்தலங்களும், நியாயச் சட்டங்களும், சமூக நிர்வாக முறைகளும், ராஜ தந்திரங்களும் செழித்து வளர்ந்தபோதிலும், அகப்புறப் பற்றுக்களும்—சிறு தொழிலும்-துவேஷமும்—போர்களும் விருத்தியடைந்தே வருகின்றன! இவ்விபரீதங்களுக்குக் காரணமென்னை?

இதுவரையிலும் கையாளப்பட்ட கல்வி நோக்கமும் முறைகளும் தொழில்களின் பிரதானத்தையும் சிறப்பையும், உலக வாழ்க்கையின் மேன்மையும் உணர்த்தி, ஒற்றுமை உணர்ச்சியையும் பரோபகாரச் சிந்தனையையும் பரஸ்பர நம்பிக்கையும் தைரியத்தையும் ஊட்டி உதவினவன்று. இலட்சியமும் அநுஷ்டானமும், அல்லது சித்தாந்தமும் கர்மமும், அல்லது சிந்தனையும் தொழிலும் ஒன்றையொன்று, பருந்தும் நிழலும்போல், பிணைந்து செல்லவேண்டுமென்ற விஷயத்தை வற்புறுத்தி, வாணாட்போக்கில், அதாவது அநுபவ உலகில், அவ்வுண்மையைக் கடைப்பிடித்து ஒழுகுதற்கான தருணத்தையும் மனோவுறுதியையும் வீரியத்தையும் பெருக்கினவன்று. கல்லூரிகளிலும்—மதச் சாலைகளிலும்—பொதுஜனக் கழகங்களிலும் மாந்தரின் அறிவு விசாலித்தற்கும் மேலேற்றத்திற்கும் அநுகூலமானவை யெனப் பாவித்துப் போதித்துவருவன வெல்லாம் கபட நடத்தைகளையும் பொய்ம் மொழிகளையும்—வெறுப்பையும்—பிளவுகளையுமேதான் விருத்தி செய்துவருகின்றன. சமூகத்தின் அமைப்பு—போக்குகளின் காரணத்தினாலும், அயலவர்களின் நடத்தைகள் காரணத்தாலும், மேற் சொல்லிய இடங்களில்

கற்றுக் கேட்ட அரும்பெரும் உண்மைகளை, நம்முடைய வாழுட் போக்கில் சரியாக அநுசரித்து நாம் ஒழுகுவதற் கியல்வதில்லை.

“பொய் பேசக்கூடாது; பொறாமையும் கோபமும் உயிர் நாடிகளில் அதிர்ச்சியை யுண்டாக்கி, மன ஹிருதயங்களை அரித்துப் புண்படுத்தும்” என்ற பாடங்களைக் கேட்டு வெளிவந்த மறு விநாடியே, வயதிலும் அறிவிலும் அநுபவத்திலும் தன்னைவிட முதிர்ந்தவர்கள் அங்கீச குண வொழுக்கங்களி லீடுபட்டு உழல்வதை ஒவ்வொரு மாணவனும் பார்க்கின்ருன். மதப் புத்தகங்களிலும்—சங்கங்களிலும் “ஒவ்வொருவருடைய மனோவாக்குக் காயங்கள் தூய்மையும் வாய்மையும் நிரம்பப் பெற்று விளங்கவேண்டும். அகப்புறப் பற்றுக்களை விடுத்து, நிட்காமப் பணிகளை யேற்று, ஞானத்திலும் நடத்தையிலும் மக்களின் மேல்வரிச் சட்டமாகத் திகழும் வாழ்க்கையே சுகிர்த வாழ்க்கையாவது. பரஸ்பர விசுவாசமும்—செய்நன்றி யறிவும்—அன்பும்—இணக்கமும்—நிஷ்கபடமுமேதான் உயிர் ஒளியை மழுங்கிப்போகாமல் காப்பாற்றக்கூடியன.” இவ்வித ஹிதோபதேசங்களைக் கேட்டுவந்த “பாமரர்கள்” தினசரி வாழ்க்கையில், தம்மைப்போன்றவர் மாத்திரமன்று, பிரபல மததர்மிகளும்-வித்வச் சிரோமணிகளும்-ராஜாங்க நிபுணர்களும் அப்போதனைகளுக்கு நேர் எதிரான கொள்கைகளை உடைத்தாய்த் தகாத தொழில்களில் பிரவிர்த்தித்து உஜ்ஜீவித்தலை நோக்குகின்றனர். “பிணக்கமும்-பகைமையும்—கொலையும்—களவும்—யுத்தமும் இழிந்தன” என முழக்கி, உண்மையில், அவைகளையே பரப்பக்கூடிய உபாயங்களைச் சமூக நிர்வாகிகள் தேடித்துருவி வெளிப்படுத்திவருவதை அறியாதவர் இலர். “உலகம் ஒரு பொய்ச் சாயை; உலகவாழ்க்கை வெறுத்தற்குரியது; பெண்ணாசை மறலிவிட்ட தூதன்; பொன்னாசை விஷத்தினுங் கொடியது; மண்ணாசையோ பல்வேறு தீமைகளின் பிறப்பிடமும் முடிவிடமுமாவது,” எனக் கழறிவருபவர்களின் மெய் வாழ்க்கைப் போக்கின் தன்மையை அறியாதவரிலர். சிந்தனை செயற்களுள்ளும்—போதனை அநுஷ்டானங்களுள்ளும் இத்தகைய பரஸ்பர முரண்பாடுகளை வளர்க்கும் கல்வி கல்வியாமோ? அக்கல்வியைச் சிறிதும் ஆலோசனையில்லாமல் போற்றிவரும் சமூகம் புகழ்ச்சிக்குரியதாமோ? பயனற்ற—அபாயங்கள் நிரம்பிய கல்வி முறைகளையும் சமூக அமைப்பையும் நிர்வாகத்தையும் எதிர்த்து எவ்விதத்திலாயினும் காலதாமதமின்றி மாற்றுதல் அதி உன்னத கர்மமன்றோ?

பாடசாலைகளையும் நியாய ஸ்தலங்களையும் சத்சங்கங்களையும் ஸ்தாபித்துக் கணக்கற்ற நூல்களைப் பிரசுரித்துவருவதினால் மட்டும் மாந்தர் திருந்தி உயர்வடையமாட்டார்கள். நல் விதையானாலும் பாறைகளிலும் சேற்று நிலங்களிலும் முளைக்குமோ? பூமியைச் செப்பனிட் வேண்டும்; தண்ணீரும் சூரிய ஒளியும் வேண்டிய அளவு பெறவேண்டும். இன்றேல் எவ்விதையும் வேரூன்றி ஓங்கிவளராது. இதுபோலவே, சமூகமாகிய பூமியைத் திருத்தி, அல்லது மாற்றி, நீரையும் சூரிய ஒளியையும் ஒத்த தன்னலமற்ற—பிரதி உபகாரத்தை இச்சியாத பேரான்மாக்களால் பராமரிக்கப்படின், உயரிய—புதிய ஆதர்சங்களும் சீர்திருத்தங்களும் சமூகத்தினரின் மனத்துள் ஊடுருவிப் பாய்ந்து வளர்ந்து பரவி யாவரையும் உயர்வடையச் செய்யும். ஆனால் சமூகத்தை ஒழுங்குபடுத்தல் கஷ்ட சாத்தியமானது; தீவிரமாக முயன்றால் தான் அதைச் சீர்ப்படுத்தற் கியலும்.

இடையூறிடுக் கண்களும் பசிபிணி வறுமைகளும் மலியப்பெற்ற வாழ்க்கைக் கடலில் "சுசீலர், மதாசாரிகள், ஞானிகள், தேவ அவதாரிகள்" எனப்பட்டவர்களின் பெரும்பாலரும் மூழ்கி அவதிப்பட்டிருந்தாலன்றோ உள்ளதை உள்ளவாறு உணர்வார்கள். அச்சாகரத்தில் மூழ்கி, மேற்சொல்லிய விபத்துக்களான பேரலைகளால் மோதப்பட்டுத் துடிக்கும் பாமரர்களுக்கு மேலாகப் பாவித்து இறுமாந்து, பிரபஞ்ச அமைப்பில் தாம் மாத்திரம் உன்னதப் பதவிபெற்று ஆக்ஞா சக்கிரம் உருட்டுதற்கான திறனுடையவரெனத் தற்புகழ்ச்சி செய்து, கோடிக்கணக்கான மன்பதைகள் அப்பதவிக்கு உரியரன்றென முழக்கிப் பின்னவர்களை முன்னவர்கள் இதுவரையிலும் அடக்கிவருகின்றனர்! சுய விசாரிப்பையும்—தன்னம்பிக்கையையும்—சுயமதிப்பையும்—வீரிய உணர்ச்சியையும்—அறிவையும் பெருக்கக் கூடிய கல்வியை யளிக்காது, பயம்—வணக்கம்—ஒடுக்கம்—மூடபக்திகளையே செழிக்கச் செய்யும் உபாயங்களை ஆராய்ந்து புகட்டிவருகின்றனர்!

உதர நிமித்தம் ஒருவனை வாணாள் முழுதும் இடுப்பொடிய உழைக்கச் செய்து, "நீ மடையன்; உன்னுடைய தலையெழுத்து அத்தகையது; அதை மீறி நடத்தற்கும் மாற்றுதற்குமான யோக்கியதை உன்னிடமில்லை. ஆதலால், முகங்கோணாமல் மனமுவந்து இட்ட பணிகளைப் பணிவுடன் ஏற்றுச் சரியாகச் செய்து முடித்தலே உன் கடமை. இவ்வாறு செய்தால், மரித்தபின், கடவுள் அனுக்கிரஹம் பெற்று நீ உய்வாய். ஆனால், எங்களைப் பழித்துப் பகைத்து முரட்டுத்தனமாய் எதிர்ப்பாயானால் உன்னை அக்கடவுள் மீளா நரகத்துள் உருட்டிவிடுவார்!" எனச் செல்வாக்கினரும் பொருளாளரும் அறவோர்களும் இடைவிடாமல் ஓதுவதால் ஏனையோர்கள் தன்மதிப்பையும்—தன்னம்பிக்கையையும்—மதியூகத்தையும்—வாழ்க்கை உற்சாகத்தையும்—தோள் வலிமையையும்—மனோதிடத்தையும்—தைரியத்தையும் இழந்து, கோழைத்தனம்—அடிமை யுணர்ச்சி—ஏக்கமாகியவைகளால் பீடிக்கப்பட்டு நடைப்பிணங்களாகின்றனர்! வாணாள் முழுதும் ஒருவனைப் புல்லியனெனவும் அடிமையெனவும் பழித்து மிதித்துப் பல்வேறு இன்னவிடர்களுக் குட்படுத்தி, அவன் தலைவிதியே அவனுடைய அல்லல்களுக் கெல்லாம் காரணம் எனப் பன்முறை ஓதிவருவதுடன், அக்கற்பனைகளின் உண்மைச் சுயாநுபவ மூலமாக அவன் உணர்ந்தறியும் படிக்குச் சமூகக்கட்டுப் பாடுகளையும் போக்கையும் அமைக்கவே, அவனும் அவனைப்போன்ற எண்ணிறந்த பேதையர்களும் "வாழ்க்கைப் போரில்" படாதபாடுகள் பட்டுத் தோல்வியுற்று அவ்வஞ்சகரின் கூற்றுக்களை ஆப்த மொழிகளென நம்பி வாளா விடுகின்றனர்!

மானுடராசியைப் பற்பல வகுப்புக்களாகப் பிரித்துச் சிற்சில வகுப்பினர்க்கு மாத்திரம் பொருள்—கல்வி—உன்னதபதவிகளை அளித்து, ஏனையோர்க்கு ஆச்சாதனங்களை மறுத்து, அவைகளைப் பின்னவர் எஞ்ஞான்றும் எவ்விதத்திலும் எள்ளளவும் பெறாதிருக்கும் வண்ணம் சூழ்ச்சிகள் பல செய்து, பின் அவர்களை 'மௌட்டியர்,'' "துர்ப்பாக்கியர்,'' "பாபிகள்," "அதமர்கள்'' எனத் தூற்றிப் பரிகசித்தல் துரோகச் செயலன்றோ? தேக பலமும் நுட்பபுத்தியும் நிரம்பியவர்கள் வேலையும் தக்க கூலியும் வேண்டிய உணவும் உடையும் வசதியும் கிடைக்கப் பெறாது, துர்ப்பலவுணர்ச்சி-திகில்-

துவேஷங்களால் கவரப்பட்டு, கொலை—களவு—குடிகளுக் கிலக்காகிக் கெடுகின்றனர்! இக்குற்றத்திற்கு உத்தரவாதி எவராவர்? பிறவியை யொட்டிய வரையிலும் மாந்தர்க்குள் எவ்விததியாசமுமின்று, எவ்வெவ் வகுப்பினரிடையில் ஒருவன் பிறக்கின்றானோ, அவ்வவ் வகுப்பினரின் விதி விலக்குகளையும் கட்டுப்பாடுகளையும் நோக்கங்களையும் போக்கையும் அநுசரித்து ஒழுக நேரிடுகின்றது. அவைகளுக்கு மாறாகை நடப்பவன் தண்டித்து அடக்கப்படுவதால், நாட்குநாள் பயவுணர்ச்சியும்—கபட நடிப்பும்—வெறுப்பும்—பகைமையும் அவனுள் எழுந்து வளர்கின்றன. விஷயம் இவ்வாறிருக்கையில், "எல்லாம் விதிப்பயன்," "பிரபஞ்சப் போக்கு," "ஜகத்பிதாவின் லீலை" எனச் சாதிப்பதன் பொருளும் பொருத்தமு மென்னையோ?

"மனோ வளர்ச்சிக்கும் சமூக வாழ்க்கைப் போக்குகளுக்கு மானவாறு மாந்தர்களின் குணவொழுக்கங்கள் மாறுகின்றன; நாளாவட்டார்த்தில், அக்குண நடத்தைகள் சமூகத்தினுள்ளும் பற்பல மாறுதல்களை உண்டு பண்ணி, ஒன்றை யொன்று தாக்கி, பழையனவற்றில் பயனற்றுப் போனவைகளை ஒழித்துப் புதியனவற்றைப் புகுத்தி முன்போகச் செய்கின்றன," என்ற விஷயங்களை அறியாமையினால், அல்லது, அறிந்தும் தக்கன செய்யாமையினால், குறுகிய நோக்கமும் இழிதொழில்களும் பிரபல மாகின்றன. குழவிப் பருவத்தில் உட்கொண்ட உணவையும், பாலப் பிராயத்தில் தரித்த உடைகளையுமேதான் ஒருவன் தன் வாணாள் முழுதும் உபயோகிக்கவேண்டுமென எவரேனும் போதிப்பின் அவர் மனப்பாங்கைப் பற்றி யாது நாம் நினைப்பது?

கல்வி ஆதர்சங்களையும் வழிகளையும், மதாசாரங்களையும்—போதனைகளையும்—கற்பனைகளையும், குருட்டுபக்தியையம் ஒருவன் சுட்டி யறிவித்து, அவைகளின் இழிவையும் அபாயத்தையும் அவன் பகிரங்கப் படுத்தினால், ஞானச் செழிப்பிற்கும்—மதநிலைப்பிற்கும்—தெய்வபக்திக்கும் தர்ம நீடிப்பிற்கும் பங்கம், அல்லது ஆபத்து ஏற்பட்டு விட்டதாகச் சிலர் மருண்டு சீறி எழலாகும். தெய்வமும்—மதமும்—தர்மமும் நிரந்தரமானவை யாயினும் அவைகளை நம்பிக் கடைப்பிடித்து ஒழுகும் முறைகள் விவேக விரிவையும் சமூக வளர்ச்சி—தேவைகளையும் ஒட்டிச் சதாகாலமும் மாறுவன என்ற விஷயத்தை அவ்விபரீத மனப்பாங்கினர் கவனிப்பதில்லை போலும்! வியாதியினால் பீடிக்கப்பட்டு ஒருவன் வருந்துகையில், தக்க சிகிச்சையினால் அந்நோயைத் தீர்ப்பதற்கான உபாயத்தை ஒருவன் போதிப்பின், அவனைத் துஷித்து, அவனுடைய போதனையைப் பின் பற்றினால் உயிர்க்கே ஆபத்து நேரிட்டு விடுமெனக் கூறுபவரின் மனப்பான்மையானது பரிதபிக்கத்தக்கதாகும்: உயிர்த் தோற்றங்களைப்போல், மேற்சொல்லியவைகளும் கால தேச வர்த்தமானங்களுக் குட்பட்டிருத்தலால், பற்பல விதங்களில் சீர்குலைந்து போக நேரிடுகின்றன. தேகத்தி னுறுப்புக்களி லேதேனுமொன்று அழுகிச் சீவடியும் நிலைமையிலிருந்தால், அவ்வுறுப்பைக் கவனித்து உடனே சொஸ்தப்படுத்தல் தகாத காரியமாமோ?............

---

# மாயையின் மனவேதனை

K. V. சிவசுப்ரமணியன், B. A.,

கதிரவன் தனது செங்கதிர்களைப் பரப்பி வான வீதியில் வனப்புறத் தோன்றும் காலை வேளை. மக்கள் யாவரும் காலைக் கடன் முடித்து சிற்றுண்டி யருந்தி தத்தம் தொழில் முறையை நாடிச் செல்லும் நேரம். நாண் மலர்கள் எம்மிடமுள்ள தேனை வந்து உண்டு போங்கள் என வண்டுகளை அழைப்பது போல் தலையசைக்கும் நேரம். புள்ளினங்கள் மணற் குன்றுகளிலும், மலர் மரங்களிலும் பேரொளி எழுப்பும் நேரம்.

அனைய காலையில் வனவசைமா நகரில் அரசனது அந்தப்புரத்தில் ஆடவரும் மகளிரும் அவசர அவசரமாகத் தத்தம் தொழிலைச் செய்வாராயினர். அரசகுமாரி மாயை என்பாள் மஞ்சன சாலையை யடைந்து நன்னீராடி, நறுமலர் சூடி, விலை மிக்க ஆபரணங்களணிந்து மறுவிலா நகைமதிய மென விளங்கினாள்.

அதே சமயம் வனவசை மாநகரில் வடபால் மதுகை நாயகன் திருக்கோயிலில் மணி முரசார்த்தன. மதுகைநாயகன் அருச்சனைக்குரிய பொருள்களோடு தாதியர் புடை சூழ மாயை அக் கோயிலை யடைந்தாள். பின்னர் எண்ணெய், பஞ்சகவியம், பஞ்சாமிர்தம், நெய், பால், தயிர், தேன், கருப்பஞ்சாறு, முக்கனிச்சாறு, இளநீர், சந்தனம், தபனம் முதலியவற்றால் இறைவனுக்கு முறையின் வழாது அபிடேக மாட்டினாள். மற்றும் இறைவன் பால் பேரன்பு பூண்டு ஐந்தெழுத்தறைந்து வலம் வந்து வணங்கி நின்றாள். பின்னர் திருநீறு பெற்று அணிந்து மங்கையர் குழாம் புடைசூழ மன்னரின் மாளிகையை நோக்கிப் புறப்பட்டாள். சின்னேரத்தில் கோயிலின் வாயிலை யடைந்தாள். அங்கே அழகின் மிக்க ஆடவனொருவன் மன்றிடைக் கூத்தாடி மத்தள மடிப்பதைக் கண்ணுற்றாள் மாயை. அவனது படிவம் மாயையின் மனதில் கறைமிடற் றண்ணலின் கவினுருவமாகத் தோன்றியது. இருபதாண்டைப் பிராயத்தான். தலையில் மிதியினும் மிக்க வெள்ளிய பாகை; நெற்றி நிறைய திருநீறு; அரையில் விலைவரம் பறியா ஆடை; கழுத்தில் முத்தாரம்; விரல்கள் நிறைய மோதிரம்; உடல் மேல் மான்மதமும் சந்தனமும் காதம் வீசுகின்றது; முருகனையும் வெல்லத்தக்க இளமையோடு கூடிய அழகு. உடனே மாயாதேவியின் மனம் பற்றுக் கோடின்றி அவன் பாலோடி அவன் உருவத்தைக் கவ்வி

---

[இக் கட்டுரை, வீரசைவ சிகாமணியாகிய துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய பிரபுலிங்க லீலையைத் தழுவி எழுதப்பட்டது. இக் கதையுள் மாயையின் தமோகுண வடிவத்தை மாயை எனவும், இறைவனது சிற்சத்தியை அல்லமன் எனவும் உருவகப்படுத்தப் பட்டது.]

மீண்டது. உடனே மாயை "இத் தரையில் மானிடர் கையால் எஞ் செவிப்படாத புத்தொலி இது!" என்றுள்ளம் வியந்து, அவ் வாடவனது பெயர் இருப்பிடம் முதலானவற்றை யறிந்து வருமாறு தன் தோழியை விடுத்தாள். அவள் அரசகுமாரியின் ஆணையை சிரமேற்றாங்கிச் சென்று வினவி அவன் பெயர் அல்லமன் என அறிந்து வந்து தலைவிபாற் கூறினாள். அச் சொல்லை செவியேற்ற மாயையின் மனதில் ஓர் புத்துணர்ச்சி தோன்றியது. பின்னர் சிவிகை யூர்ந்து தன் மணிமாடம் சென்றடைந்தாள்.

அன்று முதல் மாயைக்கு ஒரு நாள் ஒரு யுகமாய்க் கழிந்தது. அவளது சிந்தையும் சொல்லும் கோயிலிற் கண்ட ஆடவனாகிய அல்லமன்பா லடிமைப் பட்டுக் கிடந்தன. இதைக் குறிப்பாலுணர்ந்த மதமானி எனும் தோழி அல்லமனையடைந்து, "பெருந்தகாய்! நீர் இவ்வூர்க்குப் புதியவராகையால் கொற்றவைக் குடிமக்களாகிய நாங்கள் உமக்கு உண்டி வீடுமுதலியன நல்குவது கடமை. மற்றும் எமது தலைவி உமது தண்ணுமைத் தொழில் வல்லமையைக் கண்டநாள் முதல் நும்பால் பேரன்பு பூண்டனள். உம்மோடு பிரிவின்றிக் கூட உறையும் விருப்புள்ளாள். ஆகையால் எனைப் பின் தொடர்க" எனக் கூறி அல்லமனது சம்மதம் பெற்று அரண்மனையின் அந்தப்புரத்தை யடைந்து தனது வெற்றியைக் கூறினாள். அனைவரும் அல்லமனது வரவை எதிர்பார்த்திருந்தனர்.

இரவி விழுந்து மதிய மெழுந்தது. நிலாவொளி எங்கும் நிரம்பியது மாயை மதமானி முதலிய சேடியரோடு மலர் வனம் புகுந்தாள். இயற்கையின் வனப்பைக் கண்டு இனிது மகிழ்ந்தாள். காமமலர் காலையரும்பிப் பகலெல்லாம் போதாயிருந்து மலரும் மாலை நேரமன்றோ! மாயை மன்மதனின் கொடுமைக் காற்றாதவளாகி மனஞ்சோர்ந்து பின்வருமாறு பிதற்றலுற்றாள்:—

"மதியமே! தக்கன் வேள்வியில் ஒரு நாள் நீ தாளிலகப்பட்டுக்கொண்டு அவதியுற்ற காலம் போய் சிவபெருமானது சிரசிலிருக்கும் சிறப்பினைப் பெற்றாய். முனிவர் மந்திர நீரிரைப்ப இன்னும் நீ மீண்டிலாய். இறையனார் கண்டத்தில் தங்கியுள்ள ஆலகாலவிடம் நின்னையொக்கும் என்பதை யறியாது நின்னைத் தண்மதியம் என்றழைப்பது பேதமையன்றோ? சிவபெருமான் பாற்கடலி லெழுந்த நஞ்சைத் தம் முடலுள் வைத்தார். அந்நஞ்சினும் நீ கொடியை என்பதை யுணர்ந்துதான் நின் வெப்பம் தணியுமாறு தனது சடாபாரத்தில் கங்கையின் பக்கத்தில் வைத்திருக்கிறார் போலும். அத்தகைய முழுமுதற் கடவுளின் முன் நினதாற்றல் செல்லாதாயின் எம் போன்ற எளிய கன்னியர் பால் நினதுவலிமையைக் காட்டுவதும் ஆண்மையோ? ஆகையால் இவ்வுலகமக்கள் உன்னை அமுதகலை என்று கூறுவது காராட்டை வெள்ளாடெனக் கூறுவதை யொக்கும். மற்றும் எம்போன்றாரை நீ வருத்துதலின் அவர்கள் நினக்கிடும் சாபத்தினாலன்றோ நீ நினது இருபத்தேழு மனைவியரையும் ஒரே சமயத்திற்கண்டு களிக்க இயலாது நாடோறும் தேய்ந்து தேய்ந்து துன்புறுகின்றனை. எளியாரை வலியார் வாட்டின் வலியாரை தெய்வம் வாட்டும் என்பதை நீ யுணராயோ? ஆகையால் இனியாகிலும் காதலரோடுறையும் காரிகையர்க்கு இன்பத்தையும் எனைப்போல் தனித்திருப்போர்க்குத் துன்பத்தையும் செய்யாது நியாய வழியில் நடப்பாயாக."

" தூயமென் காற்றே ! நீ, கொல்லா விரதம் நிலை பெற்றுள்ள பொதிய மலையிலே தோன்றி என்னைக் கொல்கின்றாய். ஆலகாலம் பாற்கடலில் தோன்றியும் அதன் இயற்கைக்குணம் மாறாதது போல, நீயும் தமிழ்ப் பொருப் பிற்றோன்றினும் நினது கொடுமைக் குணம் நின்னை நீங்கிற்றில்லை. நீ மாலைப் பொழுதில் வீசா திருப்பாயாயின் பருவப்பெண்கள் பருவரலின்றி பெரிதும் மகிழ்வார்கள். நினக்கே அக்கருணை யில்லையாயின் யான் உன்னை நொந்தென்ன பயன் ?"

" குயிலே! புள்ளினங்களுள் நீ மிகவும் கொடியை. நினது கொடு மையைக் கருதியன்றோ நினது தாய் நின்னைப் பெற்றெடுத்த பொழுதே நின்னைப்பிரிந்து சென்றுவிட்டது. உன் வளர்ப்புத் தாயாகிய காகம் நினது குரலைக் கேட்டு பயந்தோடிவிட்டது. நீயோ நினது வாழ் நாள் முழுவ தும் கூவிக் கூவி காதலர்க்கு ஆராத்துன்பம் மூட்டுகின்றனை. அதனால் நானும் நினது குரலுக்கு ஆற்றகில்லேன்.

"மலர்க்கணை தொடுக்கும் மன்மத! என் காதலராகிய அல்லமப் பெருந்தகையின் முன் நின் அம்பு வலி யிழந்தமையின் நின்வீரம் அவர்பாற் செல்லா தாயிற்று. அதுபற்றி நினது கணைகளை எம்போன்ற மெல்லிய லார்மீது தொடுப்பதும் ஆண்மையோ ? நீ இங்ஙனம் செய்வது பிற ஆட வர்க்கு இழிவைத் தரும். ஆகையால் ஆராய்ந்து செய்க" என்றிவ்வாறு கப் பல பிதற்றி மனம் நொந்து அந்தப்புரத்தை யடைந்தாள்.

அன்று முதல் அல்லமர் மதமானிக்கு வாக்களித்தபடியே அரண் மனைப்புற வெல்லையில் தனக்கென அமைத்ததோர் வீட்டிலிருந்து கொண்டு தண்ணுமை யார்க்குந் தொழிலினை இறைவர்க் கிடைவிடாது செய்து வந் தார். இரண்டொரு தினங்களில் தன் ஆவலை முற்றுவிக்கலாமென மாயை யும் மனமகிழ்ந்திருந்தாள்.

அல்லமன் அரண்மனைப்புறத்தே வசித்து வருவதும், மாயை அவரைக் காதலிப்பதும், மாயையின் நற்றாயாகிய மோகினியின் செவிகளுக் கெட்டி யது. உடனே மானம் மீக்கூர துன்பக்கடலிடைப் படிந்து மகளின் மாளிகையை யடைந்து "ஐயகோ ! பேதாய் ! என் செய்தாய்" என்று பின் னும் கூறுவாள்:—

'மானம்வரின் உயிர் நீக்கும் இயல்பமைந்த நின் தந்தையினது செவிப் படின் என்னும் ? இரவியும் மதியும் இயங்குநாள் வரையில் நீங்காத பழி யன்றோ தோன்றும் ? யானுனை வருந்திப் பெற்றதும் இதற்குத்தானே ? தாய் தந்தையரின் ஆணையைத் தலையாய அறமாக மதிக்கும் கன்னியர், குரவர் இயைந்து கொடுத்திலராயின், குமரவேளனைய காளையரேனும் கணப்பொழு தும் மனதிற் கொள்ளார். கன்னிப் பருவத்தில் பெற்றோர் ஆணையிலும், மணமுற்றிய பின் கணவனாணையினும் இருத்தல் வேண்டும் என்ற ஆன்றோ ரின் அமுதமொழியினை அடியோடு மறந்தனையோ ? தோழிகாள் ! நீங்க ளெல்லோரும் இவளது காவலுக்குரியரா யிருந்தும் வேலியே பயிரை மேய்ந்தாற் போன்று வழிவழி நீங்காப் பழிச்சொல் வருமளவும் பார்த்திருக்கலாமா ? உங்கள் கடமையும் இதுதானோ ? இனி, அவட்கு விரைவில் மணம் முடிக்க வேண்டிய முயற்சி எடுத்துக் கொள்ளுமாறு அரசர்க்கு அறிவிக்கிறேன். அது வரையில் அவளை நல்

வழிப் படுத்தி மத்தளிகனே அரண்மனையி னின்றும் நீக்குவீராக" எனக் கூறிப் போயினுள். பின்னர் சேடியர் யாவரும் ஒருங்குகூடி "நமது தலைவி யின் ஒழுக்கம் ஊரார்க்குத் தெரியுமாயின் அலர் தூற்றுவர். ஆகையால் இனி அல்லமனை அரண்மனையினின்றும் நகர்ப்புறத்தே போகச்செய்வதே நலம். இன்றேல் இது அரசர்க்குத் தெரியுமாயின் பெருங்கேடாய் முடியும்" எனத் தீர்மானித்து அல்லமனை அரண்மனையினின்றும் அப்புறப் படுத்தினர்.

இங்ஙனம் சிலநாள் செல்ல, மாயை வழக்கம்போல் ஆலயத்திற்குச் சென்றுவந்தாள்; அல்லமனும் தனது தண்ணுமைத் தொழிலை இடைவிடாது செய்துவந்தார். மதுகை நாயகன் திருவருளினுல், அல்லமன் என்பான் முழுமுதற் கடவுளாகிய முக்கண் வள்ளலாரின் அவதாரமே என்று அறிந் தனள் மாயை. ஆகையால் அவள் அல்லமன்பால் வைத்திருந்த சிற்றின்பக் காதல், பேரின்பக் காதலாக மாறியது. இருவரும் இறைவன்பாற் கொண்ட பக்தியால் பரவசமாயினர்.



# தலைவனின் பிரிவாற்றாமை

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை)

நீல வானத்தில் கரு முகில்கள் கூட்டங் கூட்டமாகச் சென்று கொண்டிருக்கின்றன. செஞ்சுடர்க் கதிரோன் அக் கரு முகில்களுக்குள் ஒளிந்து கொண்டு விட்டான். செங்கோலுடைய திருவரங்கச் செல்வனாது திருக்கோயிலை அடுத்துள்ள சந்திர புஷ்கரணியிலே, செங்கழுநீர் செந்தாமரை அல்லி நீலோற்பலம் முதலிய பலவகை நீர்ப்பூக்கள் வெகு அழகாக மலர்ந்திருக்கின்றன. பின்னே வரும் மழையை முன்னே தெரிவிப்பது போல், குளிர்ந்த இளங்காற்று வீசிக் கொண்டிருக்கிறது. அக் காற்றினால் எழுந்த சின்னஞ் சிறு அலைகள், அத் திருக்குளத்திலே மெள்ள மெள்ளப் பரவி மோதிக் கொணடிருக்கின்றன. காகம்—குருவி—கிளி முதலிய நிலப் பறவைகள் குளிருக்கு அஞ்சி மரக் கிளைகளில் அடங்கி ஒடுங்கி அமர்ந்திருப்பினும், கொக்கு—மீன் கொத்தி முதலிய நீர்ப்பறவைகள் குளக்கரையில் மிகுந்த குதூகலத்துடன் உலவிக் கொண்டிருக்கின்றன. அப் பறவைகளுடன் சிற்சில நாரைகளும் அங்கு உலவிக் கொண்டிருக்கின்றன. நாரைகளும் மற்ற பறவைகளும் கலந்து பழகிக் குளக்கரையில் திரிந்து கொண்டிருப்பது, கண்ணுக்கினிய காட்சியாக விளங்குகிறது. 'ஆரியக் கூத்தாடினாலும், காரியத்திலேயே கண்' என்பது போல், நாரைகள் மற்ற பறவைகளுடன் கலந்து திரிந்து கொண்டிருப்பது போல் காணப்படினும், அவற்றின் நாட்டம் வேறு விஷயத்தில்

பதிந்திருக்கிறது. உற்சாக மிகுதியினால் குளத்திலிருந்து துள்ளி எழுந்து அவ்வப்போது கரையில் விழும் மீன்களை, உடனுக்குடன் கொத்தித் தின்பதிலேயே அந் நாரைகள் கண்ணுங் கருத்துமா யிருக்கின்றன. பல விடங்களிலும் திரிந்து இரை தேட வேண்டிய சிரமமின்றி, தாமாகவே கரையில் வந்து விழும் மீன்களை குளக்கரையில் உல்லாஸமாக உலவிக் கொண்டே கொத்தித் தின்பதில், அந்த நாரைகள் எவ்வளவோ உற்சாகம் கொண்டு நிற்கின்றன.

அவ் வேளையிலே, அவ் விடத்திலே, சுமார் இருபது வயதுடைய எழில் மிகுந்த இளமங்கை ஒருத்தி வந்து சேர்கிறாள். தத்தம் காதலர்களுடன் கலந்து குலவிக் கொண்டிருக்கும் பேடை நாரைகளைக் கண்டவுடன் அவ் விளமங்கையின் அகத்தில் அவளைப் பிரிந்து சென்ற அவளது காதலனைப் பற்றிய நினைவு தோன்றுகிறது. அப் பறவைகள் அனுபவிக்கும் இன்பங் கூட தனக்குக் கிட்ட வில்லையே என்பதை நினைக்க நினைக்க, அவளது நெஞ்சம் பெரிதும் புண்படுகிறது. மனோகரமான மலர்களால் பேரழகு பெற்று விளங்கும் குளத்தின் நீல நீரும் மெல்லிய பூங்காற்றால் உல்லாசமாக அசைந்தாடிக் கொண்டிருக்கும் கரையிலுள்ள பலவகைப் பூங்கொடிகளும் கருமுகில்கள் நிறைந்த நீல வானமும் பெரிதும் குளிர்ந்திருக்கின்றன. ஆயினும், தனது தலைவனது பிரிவாற்றாமல் தனித்துத் தவித்து நிற்கும் அந்த சுந்தரியின் உள்ளம், விரக வேதனையால் பெரிதும் துடிதுடித்துக் கொண்டிருக்கிறது. காதல் நோயாகிய கொடிய தீ, அவளது உடலையும் உள்ளத்தையும் ஒருங்கே எரித்துக் கொண்டிருக்கிறது. அக் காதல் தீயின் கொடிய வெப்பத்தைத் தணிக்கக் கூடிய சக்தி, கருமுகில் மிகுந்த நீல வானத்திற்கேனும் மென்மையாக வீசிக் கொண்டிருக்கும் பூங்காற்றுக்கேனும் குளிர் நீர் நிறைந்த குளத்திற்கேனும் இல்லை. அங்கு உலவிக் கொண்டிருக்கும் பெண் நாரைகளை நோக்கி, அவள் பின்வருமாறு கூறுகிறாள்:—

''நாரைச் செல்விகளே! உங்கள் பாக்கியமே பாக்கியமே! உங்கள் காதலர்கள் உங்களை விட்டுப் பிரியாமல் எப்பொழுதும் உங்களுடனேயே சுற்றிக் கொண்டு திரிகிறார்கள்! உங்களது அருமையை உணர்ந்து உங்களுடன் கூடிக் குலவும் காதலர்கள் உங்களுக்கு வாய்த்திருப்பது, முற்பிறப்பில் நீங்கள் செய்த புண்ணிய பலனாகும். பிரிவின் பயனாக விளையக் கூடிய பெருந்துயரம் எத்தகையதென்பதை, அவர்கள் நன்கு உணர்ந்து கொண்டிருக்கிறார்கள். அதனாலேயே, அவர்கள் உங்களை விட்டுச் சிறிதும் பிரியாமல் உங்களுடன் கூடவே எங்கும் உலவிக் கொண்டிருக்கிறார்கள். எனக்கும் வாய்த்திருக்கிறாரே ஒரு காதலர்! அவரது இரும்பு மனத்தின் கொடுமையை, பேதையேன் எவ் வண்ணம் எடுத்துச் சொல்ல வல்லேன்?

அன்றொரு நாள், அதோ தோன்றும் அந்த மாஞ்சோலையிலே—மரகதக் கம்பளம் பரப்பப்பட்டதே போன்ற அந்த பசும் புல் தரையிலே, அவரும் நானும் அமர்ந்து கொண்டிருந்தோம். அவர் என் அருகிலேயே அமர்ந்து கொண்டிருந்த போது கூட, எனது உள்ளம் அமைதி அடையவில்லை: அவர் என்னை விட்டு எங்கே பிரிந்து போய் விடுவாரோ என்றே எளியேன் மனம் பெரிதும் திகில் கொண்டிருந்தது. அந்த கட்டழகர்,

என் வலக்கரத்திலிருந்த பொன் வளையை மெதுவாகப் பற்றிய வண்ணமே, வீணைக் குரலிலே மெதுவாக "என் கண்ணே!"—என்று பேச ஆரம்பித்தார். சரிதான், என்னை விட்டு எங்கேனும் புறப்பட்டுப் போவதற்குத்தான் மிக நயமாக அடி போடுகிருரென்பதை எளிதில் உணர்ந்து கொண்டு விட்டேன் நான். எனது நெஞ்சினின்றும் பொங்கி யெழுந்த பெருந்துயரம் முழுவதும் வெளிப்படும்படி, என் கண்கள் மிகுந்த இரக்கத்துடன் அவரது திருமுகத்தைக் கூர்ந்து நோக்கின.

"என் செல்வமே! நான் ஓரிடத்திற்குச் சென்று வரவேண்டியது, மிகவும் இன்றியமையாததா யிருக்கிறது. என் உடல் மட்டும் கொஞ்ச காலத்திற்கு உன்னை விட்டுப் பிரிந்திருக்குமேயன்றி, எனது உள்ளம்—என்றென்றும்—எப்பொழுதும் உன்னிடமே தங்கி யிருக்கும். எனது பிரிவின் கொடுமையைப் பொறுக்க முடியாமல் உனது கோமளமான ஹிருதயம், எவ்வளவு வருந்தக் கூடுமென்பதை நான் நன்கு அறிவேன். ஆதலின் இம் முறை செல்லுமிடத்தில் நான் நீண்ட காலம் தங்கி விட மாட்டேன். பனிக்காலம் தொடங்கும் மார்கழி மாதத் தொடக்கத்திலே, நான் எங்கிருப்பினும் புறப்பட்டு இங்கு வந்து சேர்ந்து விடுவேன். இம் முறை நீ எனது மொழிகளை உறுதியாக நம்பி, நாட்களை ஒவ்வொன்ருக எண்ணிக் கொண்டிரு. மார்கழி மாதம் எனக்குப் பெரிதும் உகந்த மாதமென்பதை நீ நன்கறிவாயன்ரோ? அம் மாதத்தில் என் சிந்தைக்கினிய செல்வியாகிய உன்னை, தனித்துத் தவித்து நிற்கும்படி விட்டு விட என் உள்ளம் ஒருப்படுமோ? எங்கிருப்பினும் பனிக்காலத் தொடக்கமாகிய மார்கழி மாதத்தில் நான் உன்னிடம் வந்து சேர்ந்து விடுவேனென்பதை உறுதியாக நம்பி, மனமார்ந்த மகிழ்ச்சியுடனும் மலர்ந்த முகத்துடனும் எனக்கு விடை கொடு என் கண்ணே!"—என்று தேனினுமினிய மொழிகளால் விடை கேட்டார் அவர்.

அவரது அம் மொழிகளைக் கேட்டவுடனே; எனது விழிகளினின்றும் பெருகிய கண்ணீர் இரு கன்னங்களின் வழியே இழிந்து என் கையைப் பற்றி யிருந்த அவரது திருக்கரத்தில் விழுந்தது. அது கண்டு பெரிதும் திடுக்கிட்டவரைப்போல் நடித்த அவர், என் கண்ணீரைப் பேரன்புடன் துடைத்து, "அடி, அசடே! இதற்கெல்லாம் நீ அழலாமோ? ஒரு வீரனின் காதலியாகிய நீ, இவ்வளவு கோழையா யிருக்கலாமோ? என்ன பைத்தியம் இது? சிறிதும் நீ கவலைப்படாதே! நான் எங்கிருப்பினும், பனிக்காலம் தொடங்குமுன்பே—மார்கழி மாதத் தொடக்கத்திற்கு முன்பே—இங்கு வந்து சேர்ந்து விடுவேன். அதுவரை, ஒவ்வொன்ருக எண்ணி நாட்களைக் கழித்துக் கொண்டுவா. 'சென்று வாருங்கள்'-என்று உன் செம்பவள வாயினுல் விடை கொடு என் செல்வமே!"—என்று அன்பு பொங்கித் ததும்பும் இனிய குரலில் கூறினர் அந்த சுந்தரர். அவரது பேச்சின் இனிமையில் மயங்கி விட்டது என் மனம்; என் விழிகளிலிருந்து நீர் பெருகி வழிந்து கொண்டிருக்கும் போதே, என்னையு மறியாமல் என் வாயினின்றும் "சென்று வாருங்கள்"—என்ற சொல் வெளிப்பட்டு விட்டது. உடனே, அவர் என்னை இறுகத் தழுவிக்கொண்டு என்றென்றும் மறக்க முடியாதது ஒரு செங்கனிவாய் முத்தம் அளித்துவிட்டு, என்னைப் பிரிந்து சென்று விட்டார்.

அவர் குறிப்பிட்டுச் சென்ற மார்கழிமாதத் தொடக்கம் போய், மார்கழியும் தையுமாகிய முன்பனிக்காலமும் மாசியும் பங்குனியுமாகிய பின்பனிக்காலமும் வந்து போய்விட்டன; அவை கழிந்த பின்னர், சித்திரையும் வைகாசியுமாகிய இளவேனிற் காலமும் ஆனியும் ஆடியுமாகிய முதுவேனிற் காலமும் வந்து போய்விட்டன. அவையுங் கடந்து, ஆவணி மாதமும் பிறந்து, இப்பொழுது பசுமையான கார்காலமும் வந்து விட்டது. அடிக்கடி கருமுகில்கள் மின்னி இடித்து 'சோ' வென்று மழை பொழிகின்றன. இக் குளத்தைச் சுற்றிக் குதூகலமாகக் கும்மாளம் போடும் உங்களுக்கு, என் மனத்தில் பொங்கிப் பெருகிக் கொண்டிருக்கும் கொடுந்துயர் எப்படித் தெரியும்? பனிக்காலத் தொடக்கத்திற்கு முன்னரே வந்து விடுவதாகக் கூறிச் சென்றவராகிய 'பாதகர்', கார்காலம் தொடங்கிய இது வரையிலுங் கூட வந்து சேர்ந்தபாடில்லை. ஆம்; அவர் 'பாதகர்'தான்; அவரைப் 'பாதகர்' என்று கூறுவதில் என்ன தவறு? எனது நெஞ்சினின்றும் பொங்கி யெழுந்த பெருந்துயரின் பயனாக விழிகளினின்றும் பெருகி வழிந்த கண்ணீரைக் கண்ணாரக் கண்ட பின்னுங் கூட, என்னை விட்டு விட்டுப் பிரிந்து செல்லத் துணிந்த அவரைப் 'பாதகர்' என்று சொல்வதில் என்ன தடை? அவரது திருவுள்ளத்தில் 'இரக்கம்' என்பது சிறிதேனும் இருந்திருப்பின், அந்நிலையில் என்னை விட்டுப் பிரிந்து செல்ல அது எப்படித் துணிந்திருக்க முடியும்? குறிப்பிட்டுச் சென்ற காலத்தில் திரும்பி வராத ஒருவரை—சொன்ன சொல்லைக் காப்பாற்றுவதில் கவலை கொள்ளாத ஒருவரை—பிரிவின் கொடுமையால் என் மனம் எத்தகைய சித்திரவதைக்கு உட்பட்டிருக்கக் கூடுமென்பதைச் சிறிதளவும் சிந்தித்துப் பாராத ஒருவரை—தம்மிடம் யான் கொண்டுள்ள பேரன்பு எவ்வளவு மகத்தான தென்பதைச் சிறிதும் எண்ணிப் பாராத ஒருவரை—கொடுத்த வாக்குறுதியை முற்றிலும் மறந்துவிட்ட ஒருவரை—'பாதகர்' என்று குறிப்பிடுவதில் என்ன குற்றம்? அது மட்டுமா? தமது ஜகன்மோகன சௌந்தர்யத்தினாலும் சாதுர்ய காதற் பேச்சுகளினாலும் என்றென்றும் மறக்க முடியாத அமிர்தத்தினும் பன்மடங்கு சிறந்த அன்பு முத்தங்களினாலும் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விட்டவர்—கருமுகில்களையும் நீல நீரையும் நீலோற்பல மலர்களையும் காணுந்தோறும், தமது இந்திர நீலமேனியின் எழில் வண்ணத்தை நினைவூட்டி என் உடலையும் உள்ளத்தையும் ஒருங்கே துன்புறுத்தி வருபவர், சிறிதும் கருணையற்ற கொடிய 'பாதக'ரே என்பதில் என்ன ஆட்சேபம்? அது என்ன மாயமோ, அறியேன்! அவர் எவ்வளவுதான் கருணையற்ற கொடிய பாதகராகவே இருப்பினும், எனது நெஞ்சு அவரைச் சிறிது நேரமும் மறக்கமாட்டேனென்கின்றதே! அவர் அருகில் இல்லாத இவ் வேளையிலே இக் குளமும் இச் சோலையும் கொடிய வனவிலங்குகள் வாழும் கடிய காட்டைக் காட்டிலும் மிகக் கொடியனவாகவன்றோ காணப்படுகின்றன! இந் நிலையிலே, இவ்விடத்திலே, எனது கொடுந் துயரை மாற்றி ஆறுதல் மொழி கூறித் தேற்றக்கூடிய துணைவர்கள் யாரிருக்கிறார்கள்? எவரிடத்தில் நான் என் குறைகளை முறையிட்டு ஆறுதல் பெறக்கூடும்? காதல் நோயால் பெரிதும் வெம்பி நிற்கும் என் உள்ளத்தில் பொங்கித் ததும்பிக் கொண்டிருக்கும் கொடுந்துயரை, ஆறுதல் மொழிகளால் தணிக்கக்கூடிய அருளாளர் எவரையும் இங்கு காணேனே! என் துயரப் பேரிரு

ளுக்கு, என்றும் விடிவே இல்லையா என்ன? நான் ஒருத்தி மட்டும் என் காதலரைப் பிரிந்து, பிரிவாற்றுமையின் கொடுமையினல் பெரிதும் வருந்தி நிற்கும்போது, என்னிடம் சிறிதளவும் அநுதாபம் காட்டாமல் நீங்கள் மட்டும் உங்கள் காதலர்களுடன் இக் குளக்கரையில் உல்லாஸமாக உலவிக் கொண்டிருப்பது தர்மமா? அடியாள் மீது சிறிது கருணை கொண்டு எனது காதலர் இருக்குமிடத்தைத் தேடிச்சென்று, அவரிடம் எனது நிலையை அறிவித்து, அவரை இங்கு கூட்டிக்கொண்டு வர மனம் இரங்குவீர்களாயின், உங்களுக்குப் பெரும் புண்ணியமுண்டு. நாரைச் செல்விகளே! எனது வேண்டுகோளை நிறைவேற்றி வைக்கச் சிறிது மனம் இரங்குவீர்களா?''



— இவ்வாறு தனது தலைவனது பிரிவாற்றுமல் பெரிதும் தவித்து நின்ற தலைவியின் காட்சியை, இன்றும் நமது மனக்கண் முன்பு தோற்றுவிக்கும் பின்வரும் அற்புதச் சொற்சித்திரத்தை நன்றாய்க் கவனித்துச் சிந்தித்துப் பாருங்கள்:—

''செம்பொன் அரங்கத் தரங்க நீர்ச் சீதள சந்திரவாவி சூழ்
கம்புளுடன் பயில் நாரைகாள்! காதலை என் சொலி ஆறுவேன்?
வெம்பனி வந்தது; வந்த பின் வேனிலும் வந்தது; வேனில் போய்ப்
பைம்புயல் வந்தது; சென்ற நம் பாதகர் வந்திலர் காணுமே!''





# தமிழ் மொழி

(டர்பன்-திரு. ச. முனிஸ்வாமி பிள்ளை.)

தற்காலத்தில் நமது தமிழ்மொழி ஆதரிப்பாரின்றி தத்தளிக்கும் நிலைமையில் அதன் பாதுகாப்புக்கும், வளர்ச்சிக்கும் இம் மாதிரி சங்கங்கள் ஆங்காங்கு பல வேண்டப் படுகின்றன.

நமது தென்மொழி யாகும் தனித் தமிழ்மொழி யானது நேற்று இன்று தோன்றியதன்று. பல்லாயிர வருடங்கட்கு முற்பட்டு மக்கள் தொகுதியில் முதலில் குறிவடிவாகி நின்று ஒலிவடிவாகி, அதினின்றும் வரிவடிவாகி நின்று நிலவி வருகின்றது. பிறமொழியின் உதவியின்றி இயங்கும் ஆற்றலுடையது. பின்னர் வடமொழி முதலிய சில மொழிக் கலவை பெறினும் தன்னியல்நலங் குன்றா தொளிர்கின்றது இச்செம்மொழி. இம்மொழியைத் தமிழுலக மட்டுமின்றி ஏனைய நாடும் புகழ்ந்து போற்றிக் கொள்ளுமெனின் நம் தாய் மொழியின் இயல் இன்னதென வரை யறுத்த லியலுமோ ?

இம்மட்டோ! இலக்கண இலக்கியவளம் மிகவும் பொலிவுற்றது. ஆத்ம லாபத்துக் குரிய உண்மைகளை உணர்த்தா நிற்கும் அநேகம் அரிய பெரிய நூல்களை யுடைத்தாயுள்ளது. மலையாளம், கன்னடம், தெலுங்கு, துளுவம் இம்மொழிகளின் தோற்றத்துக்கு நிலைக்களனா யுள்ளது. சகல பாஷைகளி லும் ஏற்ற முடையது. ஏனைய இறந்தொழிந்த சில பாஷைகள் போலா காது இன்றும் என்றும் குன்றாது வழங்கி வருவது. இவ்வித பழமை அருமை பெருமை வாய்ந்த தமிழ்மொழியை தாய் மொழியாகப் பெற்ற நம் முடைய பாக்கியமே பாக்கியம். நாம் தமிழராகப் பிறந்ததற்குச் செய்த புண்ணியமே புண்ணியம்.

தமிழ்ப் பாஷையானது பண்டைக் காலந்தொட்டு பற்பலர்களால் மிகுந்த அன்புடன் ஆதரிக்கப்பட்டு வந்தது. தமிழ் மூவேந்தர்களும், முச் சங்கங்களும், புத்தர்களும், சமணர்களும், மடாதிபதிகளும், ஐரோப்பிய பாதிரிகளும், தமிழ்ப் பாஷைக்குச் செய்திருக்கும் ஆதரவுகள் அளவற்றன.

குறித்த ஆதரவுகளின் மாட்சியானும், தெய்வமணம் செவ்விதில் வீசப் பெறுதலானும் ஏனைய மொழிகள் போல் வழக்கொழியாது தன்னுடன் எதிர்த்த பல்வேறு மொழிகளையும் வென்று தமிழ் மொழி யுயர் நிலை நின்று தமிழகத்தை விளக்கஞ் செய்கின்றது.

இனி, தத்தமக்கு வேண்டியவைகளைப் பெறுதற்கு முயற்சி செய்யும் கடப்பாடு அவர் தம்மையே சார்ந்துள்ளதென்பது எவர்க்கும் ஒப்ப முடிவதாகும். ஆதலின் தமிழ்மொழியின் சீர்பாட்டினை தமிழ் மக்களே செய்தற்குக் கடமைப்பட்டுள்ளார். அவர் தலைமீது தான் அச்சுமை பொறுத்திருக்கிறதென்பதில் ஐயமின்று. ஆகவே நன் மக்கள் தமிழ்மொழி வளர்ச்சிக்காகச் செய்வன யாதெனின் தாய்மொழியைப் புறக்கணித்தலன்றி பிறிதொன்றுமில்லை. நம்மருமைச் சிறார்க்கு "இளமையிற் கல்" "பருவத்தே பயிர் செய்" என்றபடி தமிழ்க் கல்வி புகட்ட நாம் முயல்வதில்லை. "தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்" ஆதலின் நம் செல்வச் சிறுமக்கள் கல்வி பயிலும் காலத்தில் தமிழ்மொழி ஒரு மொழியோ வென்று புறக்கணிக்கின்றமையால், தமிழ் மக்களென்று பெருமை பாராட்டிக் கொள்கிற நாம், நம் மொழி வழக்கில் பேசிக் கொள்ளுதற்குக் கூடச் சிறிதும் தேர்ச்சியற்றவர்களா யிருக்கிறோம். சில சொற்றொடரிற்றானே பல பாஷைச் சொற்களையும், இலக்கணப் பிழைகளையும் நிறைய ஏற்றி விடுகின்றோம்.

இஃதிங்ஙன மாம்பொழுது வளம் படைத்த தமிழ் இலக்கியங்களில் அமைந்து கிடக்கும் நமது மூதாதைகளின் சரித்திர—பொருள்—நுட்பங்களை நாம் எவ்வாறு அறிந்துகொள்ள முடியும்? இக்கேடுகள் யாவும் நம் அருமைத் தமிழ்மொழியின் பால் நம் சிறார்க்கும் நமக்கும் தகுதியற்ற அருவருப்புத் தோற்றம் உண்டாயினமையின் என்க. இப்பொழுதுள்ள இந்நிலையைச் சற்று ஊன்றிச் சிந்திக்கும் பொழுது இன்னும் சில்லாண்டுகளில் நம் தாய் மொழி தமிழ் என்று சொல்லவும் கூசிப் பின்வாங்குவோ மென்பது தோன்றுகின்றது.

தமிழ் நண்பர்களே! இதுவரை சொல்லியவைகளால் தமிழ்மொழியின் பண்டைக்காலச் சீர்மைகளும் அக்காலத்து முன்னோர் பெருமைகளும், அம்மொழியின் நாமம் தற்காலத்தில் நிற்கின்ற மிக்க கீழ் நிலைமையும் விளங்கும். நம் தாயின் பெருமையை ஓங்கச் செய்வதும், நம் முன்னோர் பெருமைக்கிலக்காய் நாம் உயர்நிலை யெய்துவதும் இன்றியமையாதவை. அவ்வின்றியமையாத நம் தலைமைச் சுமையாயுள்ள திருத்தச் செயல்களை யார் செய்து முடிப்பது? ஆங்காங்கு தமிழ் நன்மக்கள் கூடிய சங்கங்களே என்பேன்.

---

சிறு கதை.

# வீ ர — ல க்ஷ் மி

(எஸ். சீனிவாஸன்)

சோழ அரசர்கள் தஞ்சையை ஆண்டுவரும் காலத்தில் தஞ்சையில் ஓர் ஏழைப் பெண்மணி வசித்துவந்தாள். அவள் இருபத்தைந்து வயது நிரம்பாத ஓர் வநிதை. அவள் தஞ்சையில் ஓர் பிரபுவின் வீட்டில் வேலை செய்து வயிறு வளர்த்துவந்தாள். அவ்வீட்டில் பிரபுவின் குழந்தைகளைக் கவனித்துக் கொள்வதே அவளது வேலை. அவள் அவ்வேலையைத் தன் எஜமானன் மனம் கோணுதபடி சரியாகவே செய்து வந்தாள்.

அவள் பிறந்தது மதுரை. அவள் பெற்றோர்கள் அவள் சிறியவளாயிருக்கும்போதே விண்ணுலகேகி விட்டனர். ஆகையால் அவள் ஆதரிப்பார் யாருமின்றி மதுரையில் அலைந்து கொண்டிருந்தாள். கடைசியில் மதுரைக்கு வந்திருந்த இச்சோழ பிரபுவினிடம் வேலைக்கமர்ந்தாள். இவளது குணத்தைக்கண்ட பிரபு அவர் தஞ்சை திரும்பும்போது அப்பெண்ணையும் அழைத்துச் சென்றார். அவள் பெயர் லக்ஷ்மி. லக்ஷ்மி தஞ்சை வந்த பிறகு மதுரையை மறந்துவிட்டாள். ஆனல் அவள் குழந்தைகளைத் தாலாட்டும்போதும், கடவுளை வணங்கும்போதும் மாத்திரம் மதுரையில் பாடப்படும் பாட்டுகளைப் பாடுவாள்.

இவ்வாருக அவள் தன் வாழ்நாட்களை அமைதியாகவும், கஷ்டமில்லாமலும் கழித்து வந்தாள். ஒருநாள் அவள் ஒரு குழந்தையைத் தொட்டிலிலிட்டு தாலாட்டிக் கொண்டிருக்கும் சமயத்தில், வெளியே பறைசாற்றும் சப்தத்தைக் கேட்டாள். உடனே அது என்னவென்று அறிய ஆவல் கொண்டு வெளியே சென்றாள். பறை சாற்றுபவன், "இதனுல் சகலமான ஜனங்களுக்கும் அறிவிப்பதென்னவென்றால், நம் அரசர் பாண்டிய நாட்டின் தலைநகராகிய மதுரையை நம்வசமாக்கப் படை எடுக்கப் போவதால் அதைப்பற்றி ஜனங்கள் அபிப்பிராயத்தை அறிய ஆவல் கொண்டிருக்கிறார். ஆகையால் எல்லோரும் அரண்மனை வாயிலில் நடக்கும் கூட்டத்திற்கு விஜயம் செய்ய வேண்டுமென மந்திரியார் கட்டளை" எனச் சொல்லி முடித்தான். அவ்வார்த்தைகளைக் கேட்ட லக்ஷ்மி திடுக்கிட்டாள்.

அன்று சாயுங்காலம் கூட்டம் நடைபெற்றது. அந்நகர்வாசிகளெல்லோரும் விஜயம் செய்திருந்தார்கள். நகர் மிகவும் பரபரப்பாக இருந்தது. வாலிபர்கள் சந்தோஷத்தால் ஆரவாரம் செய்து கொண்டிருந்தனர். சில சோம்பேரிகள் "ஐயோ! யுத்தமா?" என முணகிக் கொண்டிருந்தனர். கிழவர்கள் "எதற்கு வெட்டியாக சண்டையும், தொல்லையும்?" என சொல்லிக் கொண்டிருந்தனர். கூட்டத்திற்கு பிரபுக்களும், ஜமீந்தார்களும் மேலும் அநேக வாலிப சிப்பாய்களும் வந்திருந்தார்கள். கூட்டத்திற்கு தலைமை வகித்த மந்திரியார் எழுந்து "மஹாஜனங்களே! இரண்டு வரு

டத்திற்கு முன் பாண்டியர்கள் நம்மீது படை எடுத்து நம்மை அடிமை யாக்கியது நீங்கள் அறிந்ததே. மேலும் ஏதோ தெய்வ கிருபையால் நாம் மீண்டும் சுயேச்சை அடைந்து விட்டோம். நாம் இப்பொழுது பழிவாங்க வேண்டு மாதலால் நம் படையுடன் நாளை காலையே திடீரென்று எதிர்த்து மதுரையை கைக்கொள்ளல் வேண்டும். ஆகையால் உங்கள் அபிப்ராயத்தை கேட்கவே இக்கூட்டம் கூட்டப்பட்டது. உங்கள் அபிப்ராயத்தைத் தெரிவி யுங்கள்'' என்றார்.

உடனே பெருத்த ஆரவார முண்டாயிற்று. எல்லோரும் "நாங்கள் ஆமோதிக்கிறோம்'' என்றனர். வாலிபர்கள் "பழி வாங்குதல் வேண்டும்'' என்றனர். மறுபடியும் மந்திரியார் எழுந்து "உங்கள் இஷ்டப்படியே நாமும் யுத்தம் செய்யத் தீர்மானிக்கிறோம். எல்லா வாலிபர்களும் படை யில் இன்றிரவே சேர்ந்து கொள்ளவேண்டும்; மேலும் சண்டையில் வெற்றி பெற்று மதுரையை நம் வசமாக்கவேண்டும்'' என்றார். பலத்த காகோஷம் உண்டாயிற்று. கூட்டம் முடிவடைந்தது. இரவில் ஆயுதம் சேகரிப் பதற்காக வாலிபர்கள் அங்கு மிங்கும் அலேந்து கொண்டிருந்தனர். பெண் கள் தங்கள் கணவர்கள் சண்டை செய்யப் போகிறார்கள், அவர்கள் வெற்றி யடைய வேண்டும் எனக் கடவுளை வணங்கிக் கொண்டிருந்தனர்.

ஆனால் மேற்சொன்ன தீர்மானத்தைக் கேட்ட லக்ஷ்மி திடுக்கிட்டாள். ஏதோ துன்பத்தை மனதினுல் அறிந்தாள். அவள் கண்முன் மதுரையில் கோபுரமும் தோன்றி, தோன்றி மறைந்தன. அவள் தன் மனதினுள் ஏதோ "போ! மதுரையைக் காப்பாற்று! உன் பிறந்த நாட்டை அன் னியர் கைப்பற்றுவதி னின்றும் காப்பாற்று'' எனச் சொல்வதை அறிந் தாள். மதுரையைக் காப்பாற்ற வேண்டியது தன் கடமை என எண்ணி னாள்.

2

அன்றிரவு ஊசிகுத்த முடியாதபடி அவ்வளவு இருட்டா யிருக்கிறது. எதிரில் இருக்கும் உருவமும் தெரியவில்லை. மேலே மேகங்கள் நக்ஷத் திரத்தின் ஒளியையும் தெரியாதபடி மறைத்துக்கொண் டிருக்கின்றன. லக்ஷ்மி தன் படுக்கையில் தூக்க மில்லாமல் புரண்டுகொண் டிருக்கிறாள். அவள் திடீரென்று எழுந்தாள். மெதுவாக சப்தமின்றிக் கதவுகளைத் திறந்துகொண்டு குதிரை லாயத்தை அடைந்தாள். தன் எஜமானின் குதி ரையை அவிழ்த்தாள். சேணத்தைப் பூட்டினாள். அதன்மீ தேறிகொண்டு மதுரையை நோக்கிச் செலுத்தினாள் வெகு விரைவாக.

அக்குதிரை வெகு வேகமாகச் செல்லுகிறது. அது வெகு சீக்கிரத்தில் ஒன்று, இரண்டு என மைல்களைத் தாண்டிக்கொண்டு குன்று, காடு, மேடு முதலியனவை மீது ஏறிச் செல்கிறது. சுமார் பாதி தூரம் வந்த பிறகு அவள் செவ்வதரத்தில் ஓர் மழைத்துளி விழுந்தது. உடனே அவள் உணர்வு பெற்றவள் போல் மேலே நோக்கினாள். வானம் கருத்து, இடை இடையே மின்னிக்கொண் டிருப்பதைக் கண்டாள். குதிரையை இன்னும் வேகமாக நடத்தினாள். குதிரையும் இன்னும் வேகமாக ஓடியது. ஆனால் அது மெதுவாகப் போவதாகவே தென்பட்டது. அவள் "ஆ! நாம் ஓர் பெண் நள்ளிரவில் தனியாக..................'' என நினைப்பாள். அதற்குள்

"பழி வாங்குவோம்! மதுரையம்பதியை வீழ்த்துவோம்" என்ற வார்த்தைகள் தொனிக்கும். உடனே "எங்கு நாம் மதுரையைக் காப்பாற்ற முடியாமல் போய் விடுகிறதோ" என நினைப்பாள். உடனே குதிரையை இன்னும் வேகமாக நடத்துவாள். இவ்வாறாக அவள் வெகு தூரம் தாண்டி விட்டாள். அப்போது அவளுக்கு குதிரையின் கால் சப்தமும் அது மூச்சு விடும் சப்தமுமே கேட்டதேயன்றி வேறொரு சப்தமுமில்லை. இவ்வாறு வெகு தூரம் கடந்த பின்பு வெகு தூரத்தில் உயரமான இடத்தில் ஓர் வெளிச்சம் இருப்பதைக் கண்டாள். அவள் அது மதுரை கோபுரத்தில் உச்சியிலிருந்த விளக்கென்று அறிந்தாள். உடனே வெகு சந்தோஷத்தோடு குதிரையை நடத்தினாள்.

சிறிது தூரம் சென்றபின் அவள் "ஓ" என்ற ஓர் பெரிய இரைச்சலைக் கேட்டாள். உடனே அவள் "என்ன சேனையுடன் வந்துவிட்டார்களா?" என்று திகைத்தாள். ஆனால் பிற்பாடு அது வைகை நதியில் வெள்ளம் கரை புரண்டு ஓடுவதால் உண்டாகும் சப்தம் என அறிந்தாள். உடனே "எ! மீனாக்ஷி! நான் மதுரையை எவ்வாறு காப்பாற்றப் போகிறேன், ஆ! என் செய்வேன்?" என வாய் விட்டு அலறினாள். மீண்டும் தைர்யத்தை கைவிடாமல் குதிரையைச் செலுத்தினாள். வைகையின் கரையை அடைந்தாள். வெள்ளம் கரை புரண்டு ஓடுவதைக் கண்டாள். "ஆ.........! இவ்வெள்ளத்தையா கடக்கவேண்டும்?" என நடுங்கினாள். பின்னர் அவள் கண்களில் தைர்யம் ஜொலித்தது "எ மீனாக்ஷி! இதுவும் உன் சோதனை போலும். ஆ! என்ன நம் நாட்டைக் காட்டிலும் உயிர் பெரிதோ. உயிர் போனாலும் மதுரையைக் காப்பாற்றவேண்டும்" என தீர்மானித்தாள். உடனே குதிரையை ஈவு, இரக்கமின்றி நதியினுள் செலுத்தினாள். முதலில் அவ்வெண் குதிரை சற்று மிரண்டது. பின் அவ்வீர மிருகமும் நதியினுள் தன் எஜமானியுடன் புகுந்தது. குதிரைக்குச் சௌகர்யமாக கடிவாளத்தை சற்று தளர்த்திக் கொடுத்தாள். அக்குதிரையானது, 'ஹே' என்று இரைச்சலோடு கடலை நோக்கி ஓடும் வைகையின் பலத்தையும், அலைகளையும் எதிர்த்து நீந்தி, அக்கரையைச் சிறிது நேரத்தில் அடைந்தது. என்னே அக்குதிரையின் வீரம்! என்னே அப்பெண்ணின் தேசபக்தி!

சிறிது நேரம் கரையில் இளைப்பாறினாள். பின்பு குதிரை மீதேறி மதுரையினுள் செல்லும் வாயிலை அடைந்தாள்: சூரியனும் அப்பெண்ணின் வீரத்தைக் கண்டு அதிசயித்தவன் போல் கிழக்கே யிருந்து எட்டிப் பார்த்தான்.

3

லக்ஷிமியிட மிருந்து சமாசாரத்தைஅறிந்த பாண்டிய அரசர் முதலில் நம்பாவிடினும் பின்பு சேனையைத் தயார் செய்து விட்டார். சிறிது நேரத்தில் சோழசைன்யங்கள் வருவதைக் கண்டு, அதை எதிர்த்துப் போராடினர். பாண்டியர் வெற்றி பெற்றனர். என்னே அப்பெண்ணின் வீரம்! அப்பெண்ணாலன்றோ மதுரை சோழர்களிடம் வீழ்வதினின்றும் காப்பாற்றப் பட்டது.

அவ்வாறு பெண்கள் வாழ்ந்த நாட்டில், ஆண்களாகிய நாம் அன்னியருக் கடிமையா யிருப்பது பரிஹசிக்கத் தக்கதன்றோ!

# ஆரண்ய அரசு

(எஸ். ராமஸாமி ஐயங்கார்)

இங்கிலாந்து தேசத்தில் அரசர் பெருமானின் மூத்த மகனுக்கு வேல்ஸ் தேச இளவரசுப் பட்டம் சூட்டி வருவது வழக்கமாக இருந்து வருகிறது. வேல்ஸ் மலைகளும் காடுகளும் அடர்ந்த பிரதேசம். இப் பிரதேச இளவரசுப் பட்டம் அரசிளங் குமரனுக்கு அரசியல் அனுபவம் ஏற்படுவதற்கென அமைந் துள்ளதாம். எனவே இளவரசனுக்கு அரசியல் பயிற்சி யிடமென வேல்ஸைக் கூறுதல் சால் புடைத்தாம். மலைப் பிரதேசமாகிய இவ்விடத் தரசாளுகையாற் பெறும் பயிற்சி தேச செங்கோலாட்சி பெறுங்காலத்து அரசற்குப் பெரிதும் உதவி யளிக்குமெனக் கொள்ளுதல் பொருந்தும்.

இதை நோக்குமிடத்து தசரத மஹாராஜனின் மூத்த குமாரன் இராமனைக் காட்டிற்கு அனுப்புமாறு கைகேயி கேட்டன ளென்பது அவளது நல்லெண்ணத்தினாலாயதே எனக் கூறுதலும் இழுக்காகா. இவ்வாறு கொள்ளின் கைகேயி குணவதி யென்றும், கெடுமதியால் இராகவனைக் காட்டிற் கனுப்பினாளென்பது பொருந்தாவென்று கூறுதலு மமையும்.

ஆரண்ய வாசிகளில் ஒருவராகிய விஸ்வாமித்திர முனிவன் அயோத்திமாநகர் போந்து அரசனை யண்மி,

'என்னனைய முனிவரு மிமையவரு மிடையூறொன் றுடையரானால்
பன்னகமு நகுவெள்ளிப் பனிவரையும் பாற்கடலும் பதுமபீடத்
தன்னகருங் கற்பகநாட் டணிநகரு மணிமாட வயோத்தியென்னும்
பொன்னகரு மல்லாது புகலுண்டோ இகல்கடந்த புலவுவேலோய்.'

என்று கூறுவது கவனிக்கற்பாலதாம். வனத்தில் வதியும் முனிபுங்கவர்கள் தமக்கேதேனும் இடையூறு நேருங்காலத்து அடைக்கலமாகப் புகுந்து உதவி பெறுமிடங்கள் கைலயங்கிரி, திருப்பாற்கடல், பிரமனது உலகம், ஸ்வர்க்க உலகம், ரத்னகசிதமான மாளிகைகள் சூழ்ந்த அயோத்திமாநகர் ஆகிய இடங்களே என்று கூறி தசரத மஹாராஜனிடத்து ஓர் பெரும் உதவியை நாடித் தான் வந்திருப்பதை மிக்க நாகரீக முறையில் தெரிவித்துக் கொள்கின்றார். பன்னகமெனத் தொடங்கி மணிமாட அயோத்தி யென்னும் பொன்னகர் என்று முடித்த முறை வைப்பு இங்கு கவனிக்கற்பாலது. கைலாய முதலிய இடங்களில் அயோத்தி சிறப்புற்றது என்பது இதனாற் றெளிவாகிறது. கைலயங்கிரி முதலிய இடங்களிற் சென்றும்

நீங்காத துன்பம் இந்நகரை யடைவதால் நீங்குமென்ற பொருளும் தொனிக்கின்றது. இவ்வுலக மாந்தர்க்கு முறைசெய்து காப்பாற்று மன்னனே இறையாகின்றான். எனவே மிகுந்த கஷ்டமெடுத்து மனோவாக்குக் காயங்களுக்கு மெட்டாத தூரத்தே நிலவிவரும் சேய்மையிலுள்ள இடங்கள் செல்லுவதினும் அண்மையி லுள்ளதும் மற்ற மேற்கூறிய இடங்களுக்கு மேலானதுமாய அயோத்திமா நகராசன் உதவி பெறுதல் எத்துணை சிறப்பினதாம் என்பதையும் இது எடுத்துக் காட்டுகின்றது.

முக்கண் மூர்த்தி நக்கீரரை விளித்து நீ கைலை காணுதியாயின் நின் துன்பம் துடைப்பேனெனக் கூறிய காலத்து நக்கீரர் அம்மொழி சிரமேற் கொண்டு கைலை போக மதுரைமாநகர் விடுத்தனர். அதுகாலை தன்னகர் விட்டு நீங்கும் பிரிவு ஆற்றாமையால் என் நகர் இனி யான் எப்பொழுது காணப் போகின்றேனென்றிரங்கிப் பரிதபிக்கின்றார். இவர் மதுரை வாழ் புலவர்களை யெல்லாந் தனித்தனி விளித்து நுங்களோடு உடனுறை வாழ்வு நீங்கும் ஒரு பெரும்பாவியேனை மறவன்மின் என்று சொல்லி அவரை யெல்லாந் தனித்தனி மார்புட னிறுகப்புல்லி, கண்ணருவி சொரிந்து, உளங்குழைந்து அழுது, அவர்ப் பிரிந்து வைகையின் வடகரை போந்தார். அவ்வாறு அடைந்தவர்,

"என்றினி மதுரை காண்பேம்! எப்பகல் சவுந்த ரேசன்
தன்றிரு வடிகள் காண்பேம்! தாயை யெஞ்ஞான்று காண்பேம்!
வென்றிவேல் தருமவேந்தர் வேந்தனை யெந்நாட் காண்பேம்!
ஒன்றுயிர்த் துணையாஞ் சங்கத்துறவை யெப்பொழுது காண்பேம்!"

என்று கதறுகின்றார். அறிவிற் சிறந்த புலவ ரெல்லாம் தம்மை மறந்து விடுவாரோ? அரசர்கோமானும் தம்மை மறப்பனோ? சங்கப்புலவர் நாற்பத் தெழுவரென்று உலகம் கூறுமோ? என்றெல்லாம் எண்ணி வருந்திச் சென்றார்.

மேற்கூறிய வரலாறை நோக்குங்கால் கைலை செல்லுவது எத்துணை கடினமென அறியலாகும். கைலையைப்பற்றிக் கூறியது மற்ற இடங்களுக்கும் பொருந்தும். எனவே விஸ்வாமித்திர முனிவன் தசரத னுதவி நாடினன் என்ற பொருள் நயமும் இங்கு காணப்படுகின்றது.

பகைஞ ரிழைத்து வரும் இன்னல்களினின்று தங்களைக் காப்பான் வேண்டி தசரதனது புதல்வர் நால்வரில் கரிய செம்மலாம் இராமனைக் காட்டிற்கு அனுப்புமாறு அரசனை முனிவன் வேண்டுகின்றார். இவர் தசரதனைக் காட்டிற்கு வருமாறு வேண்டவில்லை. இராமனையே வேண்டுகின்றார். ஆரண்யவாசிகளின் துன்பம் துடைத்தற்பொருட்டு இராகவனை அனுப்புதல்தான் சாலச் சிறந்த கடமை என்பதை அரசன் அறியாமலில்லை. எனினும் புத்ர வாத்ஸல்யத்தால் தன் மகனை அனுப்ப மனம் துணியவில்லை. எனவே முனிவனைப் பார்த்து,

"படையூற்ற மிலன் சிறியனிவன் பெரியோய்
பணியிதுவேற் பனிநீர்க் கங்கை

புடையூற்றுஞ் சடையானும் நான்முகனும்
புரந்தரனும் புகுந்துசெய்யும்
இடையூற்றுக் கிடையூறு யான்காப்பன்
பெருவேள்விக் கெழுக"

வென்று கூறித் தான் செல்ல முனைகின்றார். இக்கூற்றை முனிவன் ஏற்க வில்லை. அரசிளங் குமரனுக்குரிய வேலையை அன்னவனுக்கே கொடுத்தல் வேண்டுமென்பது அவர்தங்கருத்து. ஆரண்ய இளவரசுப் பட்டம் இராம னுக்கே உரித்தென்பதை எடுத்துக் காட்டுவதுபோன்று முனிவன் காணப் படுகின்றார். தசரதன் குலகுருவாம் வசிட்டனும் இதை ஆதரிக்கின்றார். இராமன் காட்டிற்குச் செல்லுவதால் நல்ல வித்தை இராமனைச் சாருமென கூறுகின்றார். 'அளவில் விஞ்சை வந்தெய்து காலமின்றெதிர்ந்தது' என் பது வசிட்டன் கூற்று. அரசபதவிக் கமையவேண்டிய பல விஷயங்கள் காடு செல்லுவதால் உண்டாகலாம் எனக் கூறுவதுபோன்றிருக்கின்றது. தசரதனும் இதை ஒத்துக் கொள்கின்றார். எனவே இராமனையும் இலக்ஷ் மணனையும் காட்டிற்கு அனுப்புகின்றார். இச்செய்கை இராமனுக்கு முதன் முதலாக ஆரண்ய இளவரசுப்பட்டம் கட்டியதுபோலாகின்றது. இதை யொட்டியே பின்பு இராமன் பதினான்கு வருடங்கள் காட்டில் வதிந்து ஆரண்ய அரசு செலுத்துகின்றான். கைகேயி இராமனை நிரந்தரமாக காட்டி லேயே வதிய வேண்டுமென்று கூறவில்லை.

"ஆதிரு முலகமெல்லாம் பரதனேயாள நீபோய்
தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கருந் தவமேற்கொண்டு
பூழிவெங் கானநண்ணிப் புண்ணியத் துறைகளாடி
ஏழிரண் டாண்டில் வா"

என்று கூறுகின்றாள். முதலடியில் 'போய்' என்று தொடங்கி கடைசி யடியில் 'வா' என்று சொற்கள் அமைந்திருப்பதைப் பார்க்குங் காலத்துக் கம்பர்தம் கருத்தும் நமக்குத் தெள்ளிதில் புலனாகிறது. உனக்குரிய கட மையைச் செய்ய சௌக்கியமாகப் போய்வா என்று கைகேயி ஆசீர்வதித்து அனுப்பி யிருக்கின்றாள். காட்டினின்று நீ திரும்பிவரும் வரையில் உன் தம்பி உத்தம பரதனே அரசாட்சியை நன்கு கவனித்து வருவான் என்ற பொருள் 'பரதனேயாள' என்பதனாற் பெறப்படுகின்றது. ஆரண்ய வாசி களின் நடையுடை பாவனையை அனுசரித்தே நீயுமிருந்தால் நலம் என்ற புத்திமதியைக் கூறுவான் எண்ணி 'தாழிருஞ் சடைகள்தாங்கி தாங்கருந் தவமேற்கொண்டு' என்ற சொற்களை உபயோகிக்கின்றாள். பூழி வெங்கான மாயிற்றே என்ற எண்ணம் உதித்தமையால் சிறிது மனம் வருந்திப் பின்பு நல் நீரோடைகள் இருக்கின்றன வென்பதால் மனந்தேறி 'பூழிவெங் கானம் நண்ணிப் புண்ணியத் துறைகளாடி' என்று கூறுகின்றாள். குழந்தையைக் காட்டிற்குப் போ என்று எவ்வாறு தான் கூறுவது என்று மயங்கி 'இயம்பி னன் அரசன்' என்று முடிக்கிறாள். எனவே சிறிதுகாலம் இராமன் ஆரண்ய அரசு நடத்திப் பின்பு அயோத்திமா நகர்போந்து அரசாட்சியைக் கொள்ளவேண்டும் என்று கைகேயி விரும்பினாள் என்பது புலனாகிறது.

தசரதன் இராமன்மேல் கொண்ட அன்பு மிகப்பெரிது. எனவே தன்

மகன் இராமன் காடு சென்றமையால் பிரிவாற்றாமை பொறுது உயிர் நீத்தனன். தன் மகன் அம்பிகாபதி இறந்தபொழுது புத்திர சோகம் பொறுது கம்பர்,

"பரப்போத ஞாலம் ஒருதம்பியாளப் பனிமதியம்
துரப்போன் ஒருதம்பி பின்வரத்தானும் தன் துணைவியுடன்
வரப்போன மைந்தர்க்குத் தாதைபொறுது உயிர்நீத்தனனெஞ்
சுரப்போ வெனக்கிங் கினியாவெமை யுரைப்பதற்கே'

என்று வருந்திக் கூறுகின்றார். பரதன் அரசாளவும், இலக்ஷ்மணன், சீதை ஆகிய இருவருடன் இராமன் காட்டிற்குச் சென்று மறுபடியும் நாட்டிற்குத் திரும்பிவரவிருந்தும் தசரதன் புத்திரர் பிரிவாற்றாமையால் உயிர் நீத்தார். என் மகன் இறந்தும் நான் உயிர் நீத்தேனில்லை என்று கூறி தசரதன் இராமன்மேல் கொண்ட உண்மையன்பை வெளிப் படுத்துகின்றார். தசரதன் இறந்தமையால் கைகேயியின் நல்லெண்ணம் மறைந்ததுட னமையாது அவள் பழிச்சொல்லுக்கு மானாள்.

காட்டில் இராமன் படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆகிய அரசர்க் குரிய ஆறு அங்கங்களைக் கொண்டனன். முனிபுங்கவர் அரசனுடைய குடிகளாவர். அவர்களுடைய துன்பம் துடைத்தற்காவன செய்தற்கு இராமன் எப்பொழுதும் சித்தமா யிருந்தனன். கிஷ்கிந்தாபுரி வானர சேனைகள் அரசனது படையாக அமைந்தது. அரசர்க்குரிய அமைச்சரும் வானரக் குழாத்துள் இருந்தனர். குகனிடம் நட்புக் கொண்டதும் சுக்கிரீவ ஸக்யமும் 'நட்பு' என்ற அங்கத்தின் பாலதாம். இராமன் ஒற்றர் வேவுகாரர் இவர்களையு முடைத்தாயிருந்தனன். ஹனுமான் இலங்கைமாநகர் புகுந்து சீதை யிருக்கின்றாளாவென்று வேவு பார்க்கின்றான். தன் பெரிய உருவுடன் ஊர் புகுந்து தேடுதல் சிறப்பினதன்றாகலின் தன் மேனி சுருக்கி மாளிகையின் சாரற் சென்றனன். இதைக் கவி,

'..........வீதியேகுத விழுக்க மென்னாத்
தன்றகை யனைய மேனிசுருக்கி மாளிகையின் சாரற்
சென்றன னென்ப மன்னோ தேவருக் கமுதமீந்த
குன்றென வயோத்தி வேந்தன் புகழெனக் குவவுத்தோளான்'

என்று கூறுகின்றார்.

அங்கதன் தூதும் அதன் சிறப்பும் கம்பராமாயணம் தெள்ளிதிற் காட்டுகின்றது. குடியோம்புதலும் ஒன்னார் தெறலும் முனிபுங்கவர் துன்பம் துடைத்தலிலும் இராவணாதி யரக்கர் அழித்தலிலும் காணப்படுகின்றன.

இவ்வாறாக இராமன் பதினான்கு வருஷம் நெறிதவறாது ஆரண்ய அரசு செலுத்திப் பின்பு அயோத்தியடைந்து பட்டாபிஷேகங் கொண்டார். இராமனது உயரிய குணங்கள் வெளிப்போந்து விளங்கியதை இப்பதினான்கு வருஷ ஆட்சியில் பரக்கக் காணலாம். எளிய வாழ்க்கையி லின்பம் கொண்டாரென்பது பரந்த வெளியில் தன்னுயிர்த் துணைவியின் மடிமேற் படுத்து ஆனந்தத்துயில் கொண்டாரென்ப தொன்றினாலேயே அறியலாகும்.

'தோழமை யென்றவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றே
ஏழமைவேட னிறந்ில னென்றெனை யேசாரோ'

என்ற குகன் கூற்று இராமனது நட்புத் தன்மையைப் பெரிதும் காட்டி நிற்கின்றது. சுக்கிரீவனது துயர் துடைத்து அவனுக்குரிய அரசாக்ஷி நல்கியது பிறர்க்குறும் துன்பம் சகியாத் தன்மையும் பிறர்க்குதவி செய்யும் பான்மையும் இராமனது குணங்களாம் என்பதும் அறியற்பாலது. கிஷ்கிந்தாபுரி வாசிகளும் ஆரண்ய வாசிகளாம் முனி சிரேஷ்டர்களும் இராமன் பால் மிகுந்த பிரேமை கொண்டனர் என்பதால் இராமனது சௌலப்ய குணம் நன்கு விளங்குகின்றது. செருக்களத்தில் தன் படைகள் அழிந்துபட்டு பிற உதவியின்றி இராவணன் தனித்து நிலை கலங்கி நிற்பதைக் கண்ட இராமன் இராவணனை நோக்கி 'இன்று போய் நாளை வா' என்று கூறியது இராமனுடைய உயரிய வீர லக்ஷணத்தைக் காட்டி நிற்கின்றது. விபீஷணன் பகைவர் கூட்டத்தினன். வஞ்சனை சூழ் குழாத்தினன். பகைவனது சகோதரன். இவ்வாறிருந்தும் அவன் இராமனை யணுகி சரண் கோரியபொழுது இராமன் சிறிதும் யோசியாது அவனைத் தன் நண்பருள் ஒருவராக ஏற்றுக் கொண்டார். இச்செய்கை இராமனது தூய உள்ளத்தையும் பகைவனேயாயினும் தம்மை வந்தடைந்தாரைப் புறக்கணித்தல் கூடாது என்ற குணத்தையும் தெளிவாகக் காட்டுகின்றது.

இராமாயணம் ஓர் அரிய நீதி பொக்கிஷம். அதைத் தொட்ட தொட்ட இடமெல்லாம் நீதி மிளிர்கின்றது. பெரியோர்கள் எழுதிவைத்த இத்தகைய நூல்களைத் தூய உள்ளத்துடன் துருவித் துருவி ஆராய்ந்து அவைகளில் காணப்படும் நீதிகளை நன் கோர்ந்து அவைகளுக்குத் தக நிற்றல் நம் கடனும்.

# ஜீவகாருண்யம்

(அரியலூர். சி. மணவாள தாசன்.)

ஜீவன் என்றால் உயிர்கள். காருண்யம் என்றால் அன்பு, தயை. ஜீவகாருண்யம் என்றால் ஜீவராசிகளிடத்து அன்பு வைக்க வேண்டும்.

இப்பரந்த உலகில் ஆக்கல், அழித்தல், காத்தல் என்ற முத்தொழிற்கு முதல்வோனாகிய பரம்பொருளால் ஆக்கப்பட்ட சகல ஜீவராசிகட்கும் எவ்வித இடையூறும் அவைகட் கிழைக்காமல் கருணை காட்டுவதே ஜீவகாருண்யம்.

'நாற்புறமும் நீரினால் சூழப்பட்ட பல்வகை வளங்களும் நிரம்பப் பெற்ற இவ்வையத்து பிரமனின் படைப்பில் வாழும் உயிர்கள் எல்லாம் ஒன்றே. ஆனால் உருவிலும் ஆகார வகைகளிலும், பிறப்பிலும் வெவ்வேறு உருவங்களை அடைந்தாலும் அவற்றின் உள்ளிருக்கும் உயிர்கள் எல்லாம் ஒன்றேயல்லாது வேறல்ல' என கல்வியிற் சிறந்த பண்டைப் புலவர்கள் அருளிப்போந்துளர்.

உதாரணமாக யானை, எறும்பு என்ற இரு ஜீவன்களை எடுத்துக் கொள்வோம். யானை ஏனைய ஜந்துகட்கும் பெரிது. எறும்பு யாவற்றிற்கும் சிறிதாகும். ஆகவே இவை யிரண்டிற்கும் 'உருவில் வித்தியாச மிருப்பினும் உயிரில் வித்தியாசம் கிடையா' என்ற பொன்மொழி பொய்யாமோ!

இரண்டாவதாக 'காருண்யம்' என்பதை எடுத்துக் கொள்வோம். இப்பரந்த உலகின்கண் கடவுளால் படைக்கப்பட்ட சகல உயிர்களிடத்தும் நாம் கருணை காட்டுவ தெவ்வாறெனில் மானிடப் பிறவியல்லா மற்றப் பிராணிகளில் நடப்பன, பறப்பன, ஊர்வன, நீர்வாழ்வன முதலிய ஜீவராசிகள் எல்லாவற்றிற்கும் மானிடர்களாகிய நாம் அன்பு காட்டுவதே காருண்யமாகும். ஏனெனில் மற்றவைகளைக் காட்டிலும் மக்களாகிய நம்மிடத்தில் அறிவுகளுள் பகுத்தறிவு என்ற ஓர் அறிவு குடிகொண் டிருத்தலே காரணமாகும். எவ்வாறெனில் நாம் கற்றிருந்தாலும், கற்றிராவிடிலும், நன்மை தீமைகளையும், பாப புண்ணியங்களையும் அறியும் ஆற்றல் படைத்திருக்கின்றோம். இவ்வறிவினால் 'கடவுள் ஒவ்வொரு படைப்பிலும் வியாபித்திருப்பதை அறிந்து அப்பிராணிகட்குக் கருணை காட்டினால் கடவுளிடம் அன்பு காட்டியதாகக் கருதப்படும்' என்பது ஆன்றோர் பொய்யா மொழியாகும். நமது உலகின்கண் அநேக மனித வர்க்கங்களில் கீழ்ப்பட்டோர் புலால் உண்ணுவது என்ற கொடிய வழக்கத்தை மேற்கொண் டுள்ளார்கள். அது மிகத் தவறு. அவற்றை நாம் அறவே ஒழிக்கவேண்டும். இதுபற்றித்தான் பூவுலகம் புகழும் மஹாத்மா காந்தியடிகள் ஜீவ ஹிம்சை கூடாது என்று

அடிக்கடி அவரது அன்பார்ந்த சிஷ்யர்களாகிய நமக்கு அடிக்கடி தெரிவிக்கிறார். ஜீவ ஹிம்சை தடுப்பதற்காகவே 'சன்மார்க்க சபை' ஒன்று கற்றுணர்ந்த மஹான்களால் நிறுவப்பட்டுளது. ஆகையால் நம் பாரதநாட்டு தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் அவர்களின்,

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்"

என்ற பொன்மொழி பொய்யா மொழியின் கூற்று.

அஃதாவது ஜீவராசிகளைக் கொன்று நமது தேகத்தை வளர்ப்பதற்காக அவைகளின் மாமிஸத்தை உண்டு வாழும் மக்கள், இப்பொழுதாயினும் கொல்லாமலும், புலாலைத் தின்னாமலும் இருப்போர்களை உலகில் வாழும் எவ்வுயிர்களும் 'காருண்யவான்' எனப் போற்றிடும் என்பதற்கோர் ஐயமில்லை. மேலும் ஆடுகளைப் பிதுர் தேவதைகட்குப் பலி கொடுக்கும் வழக்கமும் இன்றும் நம் பாரதநாட்டின் கண் நிலவி வருகிறது. அதுபற்றியே,

"உங்கள் மக்களும், நீங்களும் துன்புற
எங்கள் மக்களும், நாங்களும் என் செய்தோம்"

என சிவபெருமானைக் குறித்து துதிபுரிகின்றன என பொதுஜனங்களின் வாயிலாக நாம் அறிகின்றோம்.

மேலும் 'மாமிஸம் உண்பதினால் தான் தேகபுஷ்டி உண்டாகுமென்றும், இல்லையேல் பலம் குன்றிவிடும்' என்றும் சிலரது அபிப்பிராயம். அது கிடையாது. இதை நிரூபிக்க ஓர் உதாரணம் காட்ட விரும்புகிறேன்.

"சமீபத்தில் இங்கிலாந்தில் ஓர் வாலிபன் காய்கறிகளையே உண்டு (மாமிஸம் உண்ணாது) கடலை நீந்திச் சென்றனன்" என பத்திரிகை வாயிலாக அறிகின்றோம்.

இன்றும் பாரதநாட்டின் அருந்தவப் புதல்வராகிய மஹாத்மா காந்தியடிகள் அவர்கள் நம்மால் ஒதுக்கப்பட்ட ஆதிதிராவிடர் என்ற வகுப்பினர்களிடத்தில் கருணை காட்டுகிறார். ஆகையால் மனித வர்க்கங்களுள் அஹிம்சா தர்மத்தை நிலைநிறுத்திய மஹான் மற்றைய சிற்றுயிர்களிடத்து எவ்வளவு அன்பு காட்டுவாரென்று வாசகர்கள் யான் உரைக்காமலே யூகித்துக் கொள்ளலாம்.

ஜீவகாருண்யத்திற்கு இன்றியமையாதது சாந்தமே யாகும். பண்டைக் காலத்தில் நம் தாய்நாடு புகழ் பெற்றிருந்ததற்குக் காரணம், 'அருட்செல்வம் (ஜீவகாருண்யம்) இக்காலத்தில் இவ்வாறு க்ஷீணதசை யடைந்ததற்குப் பிரதான காரணம் ஜீவகாருண்ய மின்மையே. கடவுளியற்கை விளக்கத்திற் கிருப்பிடமாகிய ஜீவ தேகங்களென்கிற ஆலயம் ஆகாரமின்று பாழாகும் தருணத்தில் ஆகாரத்தால் அவ்வாலயத்தை நிலைபெறச் செய்வதே ஜீவகாருண்யமாகும். ஏழைச் சீவர்களாகிய இரவலரைத் தாக்குவது ஜீவகாருண்யமல்ல.

ஜீவகாருண்யம் என்பதை விளக்கிக் கூறவேண்டுமாயின் நம் குடும்பங்களி விருக்கும்படியான ஒவ்வொருவருக்கும் இருக்கும் காருண்யம் போலவே பிற உயிர்களிடத்தும் இருத்தல் ஒக்கும். நம் குடும்பங்களி

டையே உள்ள அன்பு, தயை, தாக்ஷண்யம் முதலியவைகளைப் பிற உயிர்களிடத்து காட்டுவது கிடையா. எவ்வாறெனில் நாம் தெருவினூடே செல்லுங்கால் நமது குழந்தைக்கு ஆபத்து நேரின் நம் தொழிலும், எண்ணங்களும் மாறி எவ்வாறு நம் குழந்தை என்ற அன்பைக் காட்டுகிறோமோ? அவ்வாறே பிறர் குழந்தைக்கு ஆபத்து நேரின் அன்புகாட்டி உதவி புரிவதில்லை; சாதாரணமாகப் பார்த்துவிட்டுச் செல்லுகின்றோம். இதுவே ஜீவகாருண்ய மின்மை. ஆகவே சீரும், சிறப்பும் பெற்ற நம் ஞாலத்தில் மக்களிடை 'அஹிம்ஸை' நிலவ வேண்டுமென்று ஸ்ரீஜக் லோகமான்ய பால கங்காதா திலகர், மஹாத்மா காந்தியடிகள் அவர்களும் அரும்பாடு பட்டதின் நிமித்தம் சில பெரியார்களுக்குக் காருண்யம் என்பது கருணையங் கடலான கடவுளின் கருணையால் ஏற்பட்டுளது.

ஆகையால் நம் பாரதநாட்டில் ஜீவகாருண்யம் நிலவுவதற்கு அரிய தொண்டு செய்துவருகின்ற மஹாத்மா காந்தியடிகட்கு எல்லாம் வல்ல பரம்பொருளை சகல நன்மைகளையும் ஆயுள் விருத்தியையும் ஈந்தருளப் பிரார்த்திப்போமாக!

ஆகையால் எனதன்பார்ந்த சகோதர, சகோதரிகாள்! நாம் அஹிம்சையை அறவே ஒழித்து கருணையங்கடலின் திருவருளைப் பெறும்பேற்றை எய்துவோமாக!

---



# வீர வநிதை

(S. கிருஷ்ணன்.)

நாஞ்சிநாட்டு அரசன் வீரவர்மன். வயது இருபத்தைந்துதான் ஆகியிருந்த தென்றாலும் அறிவில் மிகுந்தவனாக அவன் இருந்தான். அவன் தந்தை ராகவர்மனைப்போல் குடிகளின் துயரையே தன் துயராகக்கொண்டு செம்மைப்பட செங்கோல் செலுத்தி வந்தான். வீரவர்மன் சிறந்த ராஜதந்திரி. அவனது அரண்மனை பரிசிலர்கட்கும் பாவலர்கட்கும் அறிஞர்கட்கும் இருப்பிடமாக இருந்து வந்தது. அவன் சபையில் பல்வேறு சாஸ்திர விற்பனர்கள் குழுமியிருப்பர். அவன் புகழ் எல்லா நாடுகளிலும் பரவியிருந்தது. மகிபாலன் திருநெல்வேலி சீமையை ஆண்டு வந்தான். வீரவர்மனைப் போன்ற வீரர்களையும், அறிஞர்களையும் பிறப்பித்த தமிழ்நாடு மகிபாலனைப் போன்ற கோழைகளையும் வஞ்சகர்களையும் பிறப்பித்துத்தான் இருக்கின்றது. மகிபாலன் இழிந்தவன். குடிகளைக் கொடுங்கோல் ஆட்சி செலுத்தி வந்தான். பக்கத்து நாட்டு அரசன் வீரவர்மனை தனது நாட்டுமக்கள் புகழ்வது அவனுக்குப் பிடிக்கவில்லை. ஆகவே, வீரவர்மனைக் கொல்வதற்கு வழி தேடினான்.

போர் செய்ய அந்தப் பேடிக்கு சக்தியில்லை. ஆகவே, வஞ்சகமாக வீரவர்மனைக் கைது செய்து இருட்டறையில் சிறையிட்டான். தங்கள் அரசன் கைது செய்யப்பட்டதை அறிந்ததும் நாஞ்சில் மக்கள் கொதித்தெழுந்தனர். உடனே சென்று திருநெல்வேலி சீமையை முற்றுகையிட்டு தங்கள் அரசனை விடுவிப்பதுடன் மகிபாலனைப் பழிக்குப் பழி வாங்க வேண்டுமென்று அவர்கள் எண்ணினர். இதனை அறிந்து கொண்ட மகிபாலன் "போருக்கு வந்தால் வீரவர்மனைக் கொன்று விடுவேன்" என பயமுறுத்தினான். ஜனங்கள் யாது செய்வது என்று திகைத்தனர். "கூடிய சீக்கிரம் வீரவர்மர் விடுவிக்கப்படுவார். அதுவரை பொறுமையாக இருங்கள்" என்று சாந்தகுமாரி பொதுமக்களை வேண்டிக் கொண்டாள். அவள் அரசனின் காதலி என்பது பொதுஜனங்களுக்கு நன்கு தெரியுமாதலால் அவள் கட்டளைக்கு பொதுமக்கள் கீழ்ப் படிந்தனர். அவள் பூதப்பாண்டியிலுள்ள சங்கரபாண்டிய பிரபுவின் ஏகபுதல்வி. வயது பதினாறே அவ

ளுக்கு ஆகி யிருந்தது. நற்குணமும் அழகும் உடையவள். வீரவர்மன் அவளைக் காதலித்து வந்தான். அவர்களுக்குள் காதல் உண்டான கதை வெகு விசித்திரமானது. வீரவர்மன் மாறு வேடம்பூண்டு நாட்டைச் சுற்றிப்பார்ப்பது வழக்கம். ஒரு தடவை அவன் வயது முதிர்ந்தவனைப் போன்று வேஷமிட்டு நாட்டைச் சுற்றிப் பார்த்து வந்தான். பூதப் பாண்டியில் அவன் போய்க் கொண்டிருக்கும்பொழுது இரவு 9-மணி இருக்கும். நல்ல நிலா, சங்கரபாண்டிய பிரபுவின் தோட்டத்தில் இருவர் பேசிக் கொண்டிருந்ததை அவன் கண்டான். அவர்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்பதை அறிய செடி மறைவில் ஒளித்து நின்றான். பேசிக் கொண்டிருந்தவர்களில் ஒருத்தி சுந்தராங்கி யாகவும், புத்திசாலியாகவும், பிரபு வீட்டுப் பெண் போன்றும் இருந்தாள். அவளை பார்த்தவர்கள் அவளை கன்னிகை என்று கூறி விடுவர். மற்றவள் அவளது தோழி.

"மணஞ் செய்தால் வீரவர்மனை மணஞ் செய்வேன். இன்றேல் கன்னிகையாகவே யிருப்பேன்" என்று அந்த நங்கை—சாந்த குமாரி கூறினாள்.

"வீரவர்மர் உன்னைக் கலியாணஞ் செய்ய இசைவாரா? அவருக்கு பெரிய ராஜகுமாரிகளன்றோ மனைவியாக வருவார்கள்" என்று தோழி கூறினாள்.

"அவர் சம்மதிக்காவிட்டால் கன்னிகையாகவே யிருந்து இறந்து விடுவேன். இது நிச்சயம்" என்று சாந்தகுமாரி கூறினாள்.

வீரவர்மன் இந்த வார்த்தைகளைக் கேட்டதும் புளகாங்கிதம் அடைந்தான். அவன் இதுவரை எவர்மீதும் காதல் கொண்டவனல்ல. தன்னைத் தான் மணஞ்செய்வேன் என்று உறுதியாக அந்த காரிகை கூறினது அவனுக்கு அளவிலாத ஆனந்தத்தை அளித்தது. அவளைக் கூர்ந்து நோக்கினான். நோக்க நோக்க அவளின் தெய்வீக அழகு அதிகப்பட்டு அவனுக்குத் தோன்றியது. ஆகவே அவன் "உண்மைதானா? வீரவர்மன் சம்மதியளிக்காவிட்டால் கன்னியாகவே யிருப்பாயா?" என்று சப்தமிட்டு கூறிக் கொண்டே அந்த நங்கையர் இருவரின் முன்போய் நின்றான்.

தாங்கள் இரகசியமாக பேசிக்கொண்டு நின்றதை மூன்றாவது மனிதன் ஒருவன் கேட்டு தங்களிடம் "உண்மைதானா?" என்று வினவியது அந்தப் பெண்களுக்கு அச்சத்தையும் வியப்பையும் அளித்தது. வந்த மனிதனைக் கூர்ந்து நோக்கி அவன் ஒரு கிழவன் என்று நினைத்துக் கொண்டார்கள். ஆண்களே வரக்கூடாத இந்த இடத்தில் இந்தக் கிழவன் எப்படி வந்தான்? என்று நினைத்து கோபங் கொண்டார்கள். "பெரியவரே! யார் நீர்? இங்கு எப்படி வந்தீர்?" என்று சாந்த குமாரி படபடப்புடன் கூறினாள்.

"நான் ஒரு கிழவன்; பொழுது போக்காக இங்கு வந்தேன். நீ அரசன் மேல் காதலால் பேசிய வார்த்தைகளைக் கேட்டேன். அது உண்மைதானா? கூறுவாயாக" என்று சாவதானமாக அந்தக் கிழவன் பதில் கூறினான்.

"யாரையா நீர்? எங்கள் தோட்டத்தில் நீர் எப்படி வரலாம்?

பொழுது போக்குக்கு வேறு இடம் இல்லையா? காவற்காரன் கண்டால் முதுகுத்தோலை உரித்து விடுவான். போம்."

"என்னம்மா! நான் கேட்ட கேள்விக்குப் பதில் கூறுது ஏதோ வளைத்து வளைத்து பேசுகிறுயே! ராஜன்மீது காதல் கொண்டது உண்மை தானு? முதலில் கூறு. நான் போய் விடுகிறேன்."

"ஓஹோ! நான் சொல்லாவிட்டால் போகமாட்டீரோ! இந்த இரவில் நீர் இங்கு வந்ததை நோக்குமிடத்து களவு செய்ய வந்தவர்போல் தோன்று கிறது."

"நானு கள்ளன்? இல்லை. நீதான் கள்ளி."

"ஓய்! மரியாதையாகப் பேசும். யாரை திருடி என்கிறீர்! நான் யார் தெரியுமா?"

"தெரிந்துதானே கூறுகிறேன். சங்கரபாண்டிய பிரபுவின் மக ளென்று யூகிக்கிறேன். சாந்தகுமாரியின் அழகைப்பற்றி பேசாதவர்க ளுண்டா? நான் சொன்னது சரிதானே."

"அதுவும் தெரிந்திருக்கிறதா? தெரிந்த பிறகுமா இங்கு இன்னும் நிற்கிறீர்! ஓடிப்போம். வேலைக்காரர்களை அழைத்து உம்மை அடித்து வெருட்ட வேண்டுமா? என்ன!"

"சாந்தகுமாரி! நீ பயமுறுத்தினவுடனே நான் ஓடி விடமாட்டேன். அதை முதலாவது அறிந்து கொள். நான் கேட்ட கேள்விக்கு மாத்திரம் பதில் கூறி விடு. நானே சென்று விடுவேன்."

"வர வர மிஞ்சுகிறதே! உம் கேள்விக்கு பதில் கூற நான் உமது அடி மையா? என்ன!"

"ஆம். அடிமை. கள்ளி."

"ஓய்! நாவடக்கிப் பேசும். இதற்கு என்னிடம் மன்னிப்பு கேட்காது நான் விடேன்."

"யார் மன்னிப்பு கேட்கப் போகிறுர்கள் பார்ப்போம். நான் யார் என்பதைப் பார்" என்பதாகக் கூறிவிட்டு வீரவர்மன் தனது மாறு வேடத் தைக் களைந்தான். சாந்தகுமாரி அரசன் என்று கண்டு திடுக்கிட்டாள். அதி கப் பிரசங்கித்தனமாக தான் எதிர்த்துப் பேசியதற்குப் பயந்தாள்.

"சாந்தகுமாரி! இப்பொழுது கூறு! நீ எனது அடிமைதானே" என்று வீரவர்மன் கேட்டான். பதிலில்லை.

"அது மாத்திரமா? என் மனதைக் கவர்ந்த திருடி உண்மைதானே" அதற்கும் பதிலில்லை. இதற்குள் தோழி சந்தர்ப்பத்தை யறிந்து நழுவி விட் டாள்.

"நான் மன்னிப்புக் கேட்கவேண்டுமா சொல்? ஏன் மவுனம் சாதிக் கிருய்?" என வீரவர்மன் கேட்டான். சாந்தகுமாரி தலைகுனிந்து வணங்கி

"அரசே! பேதையாகிய யான் அறியாது செய்ததை மன்னித்தருளும்படி பிரார்த்திக்கிறேன்" என்று தழதழத்த குரலில் கூறினாள்.

"மன்னிப்பா! அந்தப் பேச்சே என்னிடம் கூடாது! என் மனதைக் களவு செய்துவிட்டு மன்னிப்புக் கேட்டால் விடுவேனா" என வீரவர்மன் கூறி சாந்தகுமாரியைத் தழுவி முத்தமிட்டான்.

* * * *

வீரவர்மன் தன்னை வஞ்சகமாக சிறைச்சாலையில் மகிபாலன் அடைத்துவிட்டது பற்றிக் கொதிப்படைந்தான். கட்டுக் கடங்காத மதயானையை சிறிய வாழைத்தண்டால் கட்டியது போன்று ஒப்பற்ற வீரனாகிய வீரவர்மன் சிறைச்சாலையில் அடைக்கப்பட்டிருந்தான். நாடிழந்ததையும், சினேகிதர்களை இழந்ததையும் வீரவர்மன் பொருட் படுத்தவில்லை, கன்னி சாந்தகுமாரியைப் பிரிந்திருப்பதுதான் அவனுக்குப் பெருந்துயரமாய் இருந்தது. சாந்த குமாரிக்கும் தனக்கும் ஏற்பட்ட காதல், கூடிய சீக்கிரம் மணம் புரிந்துகொள்ள அவர்கள் தீர்மானித்திருந்தது, நாட்டார்கள் அதையறிந்து சந்தோஷப்பட்டது முதலிய பல சம்பவங்களை மனதில் நினைத்துக் கொள்வான். அவளை மீண்டும் ஒரு முறை பார்ப்பதற்கு எதையும் தியாகம் செய்யக் கூட அவன் தயாராயிருந்தான். சிறைச்சாலையை விட்டு தப்பித்து ஓடிவிட வேண்டுமென்பது அவனது ஆவல். வரும் அமாவாசையன்று இரவில் சிறையிலிருந்து தப்பி ஓட அவன் தீர்மானித்து அதற்கான வேலைகள் செய்து வந்தான்.

சில நாட்களுக்குப் பிறகு ஒருநாள் காலைப்பொழுது வீரவர்மன் படுக்கையைவிட்டு அப்பொழுதுதான் எழுந்து இருந்தான். காவலன் ஒருவன் காலை ஆகாரத்தைக்கொண்டு வைத்தான். "அடே! மதுரை! நான் கைந்து நாளாகக் காணவில்லையே! எங்கு போயிருந்தாய்!" என்று வீரவர்மன் கேட்டான்.

"என் மாமன் வீடு பணகுடியில் இருக்கிறது. லீவ் எடுத்துக்கொண்டு போயிருந்தேன்" என்று காவலாளன் கூறினன்.

பணகுடி என்ற வார்த்தை காதில் விழுந்தவுடவே வீரவர்மன் தன் நாட்டு விசேஷங்கள் அவனுக்குத் தெரிந்திருந்தால் அறிந்து கொள்ள வேண்டுமென்ற ஆசைகொண்டு "ஆம். அங்கு போயிருந்தாயே! ஏதாவது விசேஷ சமாச்சாரங்கள் உண்டா?" என்று வினவினன்.

"விசேஷங்கள் இல்லாமல் என்ன! பூதப்பாண்டி பிரபுவின் புத்திரி சாந்தகுமாரி கடலில் விழுந்து தற்கொலை செய்து இறந்து விட்டாளாம். அவளை நாஞ்சினாட்டு அரசன் மணஞ்செய்ய ஆசை கொண்டிருந்தானாம். பாவம். காதலனை திருநெல்வேலி அரசன் கைது செய்ததைக் கேட்ட அவள் தற்கொலை செய்து இறந்துபட்டாள். அவளைப்பற்றிய பேச்சே பணகுடி பூராவும் பேசப்படுகிறது."

சாந்தகுமாரி இறந்து விட்டாள் என்று கேள்விப்பட்டதும் வீரவர்மன் திடுக்கிட்டு மூர்ச்சித்து விழுந்து விட்டான். அதைக்கண்ட காவலன்

ஆச்சரியப்பட்டு விட்டுப்போய் விட்டான். அவனுக்கு வீரவர்மன் யார் என்பதாகத் தெரியாது. சிறிது நேரத்தில் மூர்ச்சை தெளிந்தது.

"சாந்தகுமாரி இறந்து விட்டாளா! ஹா! நான் துர்பாக்கியன். நாடி ழந்தேன். சுற்றத்தா ரிழந்தேன்; கடைசியில் காதலியையும் இழந்தேன். இனியேல் எனக்கு ராஜ்யம் வேண்டாம். ஒன்றும் வேண்டாம்; பட்டினி கிடந்து இச் சிறையில் மடிவதேமேல்" என்று வீரவர்மன் மனதில் சங் கற்பம் செய்து கொண்டான்.

நாட்கள் ஓடி மறைந்தன. ஒருநாள் இரவு அமாவாசை இருட்டு. சில நாளைக்கு முன் அன்று சிறையிலிருந்து தப்பி ஓடிவிட வேண்டுமென்று வீர வர்மன் எண்ணினான். ஆனால் அமாவாசையாகிய இன்று வாழ்க்கையில் விரக்தி யடைந்தவன்போல் சோர்ந்து ஒரு மூலையில் கிடக்கின்றான். அவனுக்கு வந்த ஆகாரம் அப்படியே ஒரு பக்கத்தில் கிடந்தது. சாந்தகுமாரி இறந்து விட்டாள் என்று கேள்விப் பட்டது முதல் அவன் ஆகாரத்தைக் கண்ணால் கூட பார்க்க வில்லை. இந்த நாட்களுக்குள் அவன் வாடி வதங்கி கிழவ னைப் போல் தோற்ற மளித்தான். பற்றற்ற பரதேசி போல் அவன் காணப்பட்டான். அவனை இப்பொழுது யாராவது பார்த்தால் வீரவர்மன் அல்ல என்று சத்தியம் கூட செய்து விடுவார்கள் என்பது நிச்சயம். அவ் வளவு கேவலமாக அவன் தோன்றினான்.

அன்று இரவு நடுநிசி. காவலாளர் தூங்கி விழுந்து கொண்டிருக்கும் சமயம் வீரவர்மன் எண்ணுதன வெல்லாம் எண்ணி பெரு மூச்சு விட்டுக் கொண்டிருந்தான். அப்பொழுது சிறைச்சாலைக் கதவை எவரோ ஓசைப் படாமல் திறந்தது போல் இருந்தது. ஒரு நாளு மில்லாதபடி அந்த நடு நிசியில் கதவு திறக்கப்பட்டது சிறிது வியப்பை அளித்த தென்றாலும் அவன் அதில் கவலை யற்றவன் போல் பெருமூச்சு விட்டுக் கொண்டு உருண் டுப் படுத்துக் கொண்டான். அவன் பித்தன் போல் தனக்குள் ஏதேதோ பிதற்றிக் கொண்டான்.

சிறிது நேரத்தில் ஒருவர் நடந்து தன் சமீபம் வருவதான ஓசை அவ னுக்குக் கேட்டது. வீரவர்மனுக்கு அதைப் பற்றி என்ன கவலை? அவன் தன் உயிரை பலி கொடுக்க எண்ணி விட்ட பிறகு அவன் என் தப்பி ஓட கவலைப்படப் போகிறான்? "யார் அது? வீரவர்மா! எழுந்திரும். தூக் கமும் வருகிறதா உமக்கு" என்று யாரோ ஒருவன் மெதுவாகக் கூறிய வண்ணம் வீரவர்மனை எழுப்பினான்.

"காவற்காரா அப்பா! தூங்குகிறேன் என்றா சொல்லுகிறாய்! தூக் கத்தைக் கண்டே எத்தனையோ நாட்களாயினவே" என்று கொட்டாவிவிட் டுக் கொண்டே படுத்தபடி வீரவர்மன் பதில் கூறினான்.

"நான் காவற்காரனல்ல. உமக்கு சப்தம் கூட பிடி படுகிறதில்லையா? எழுந்திரும். வந்த காரியத்தைக் கூறுகிறேன்" என்று அந்த மனிதன் சொன்னான்.

"காவற்காரனல்ல என்றால் நீ யார்? எதற்காக வந்தாய்?" என்று உருண்டு கொண்டே வீரவர்மன் கேட்டான்.

வந்தவன்:—"உம்மைக் காப்பாற்ற, வந்தேன் எழுந்திரும்."

வீரவர்மன்:—"ஹா! ஹா! ஹா! என்னைக் காப்பாற்றவா? பேஷ்! நன்று யிருக்கிறது! என்னைக் காப்பாற்ற கடவுளால் கூட முடியவில்லை! பேதை மனிதனுகிய உன்னுல் முடியுமோ!"

வந்தவன்:—"என்னுல் முடியும். உடனே புறப்படும். காவற்காரர்களுக்கு மயக்கமருந்து கொடுத்து போட்டிருக்கிறேன். அவர்களுக்கு மயக்கம் தீருவதற்குள் ஓடிப் போக வேண்டும். என் பின்னுல் வாரும். தாமதம் செய்யாதேயும்"

வீரவர்மன்:—"எங்கு போக வேண்டும்."

வந்தவன்:—"எங்கா? உமது நாட்டிற்கு, உமது குடிஜனங்கள் உம்மைக் காணுது கதறுகிறுர்கள். ஏன் படுக்கையில் படுத்து உருண்டு கொண்டிருக்கிறீர்! எழுந்திரும்."

வீரவர்மன்:—"நாடு! நாடு! நாடும் வேண்டாம். வீடும் வேண்டாம். எல்லாம் பொய். உலகமே பொய். பொய் வாழ்க்கைக்கு முற்றுப் புள்ளி வைத்து விட துணிந்து விட்டேன்."

வந்தவன்:—"வீரவர்மரே! இந்த வேதாந்தம் உமக்கு எப்பொழுது உண்டாயிற்று? சாந்தகுமாரியைக் கண்டு மோகித்த போது உண்டாகவில்லையே!"

சாந்தகுமாரி என்ற பெயரைக் கேட்டவுடனே வீரவர்மன் திடுக்கிட்டு படுக்கையிலிருந்து எழுந்தான். "அடே! என்ன கூறிஞய்! சாந்தகுமாரி ஆம் சாந்தகுமாரி இறந்து விட்டாள். என்னைத் தனியே விட்டுச் சென்று விட்டாள். அவளைப் பற்றி இப்பொழுது என்ன? அனுவசியமாக ஒரு வார்த்தை கூட கூறிஞல் மண்டையை உடைத்து விடுவேன்" என்று படபட வென்று பேசினன்.

வந்த மனிதன் சாந்தகுமாரி இறந்து போனது இவனுக்கு எப்படி தெரிந்தது என்று வியப்படைந்து "சாந்தகுமாரி இறந்து விட்டாளென்று உமக்கு எப்படித் தெரியும்" என்ருன்.

வீரவர்மன்:—"காவற்காரன் கூறினன். சாந்தகுமாரியை உனக்குத் தெரியுமா அப்பா? அவள் இறந்து போனது உண்மைதானு?"

வந்தவன்:—"இல்லை. அப்படி யிருக்க முடியாது. அவள் இறந்திருக்க மாட்டாள்."

வீரவர்மன்:—"நண்பனே! அவளை ஒரு முறையேனும் என் கண்ணில் காட்டி விடு. நீ என்ன கேட்டாலும் தருகிறேன்."

வந்தவன்:—"தருவீரா? சரி. காட்டுகிறேன் வாரும்."

* * * *

அகஸ்தியர் கூடம் மலையை அடுத்த ஓர் இருண்ட காடு. சூரிய வெளிச்சம் புகமுடியாதபடி எங்கு பார்த்தாலும் ஆகாய மளாவிய விருக்ஷங்கள் அடர்ந்திருந்தன. வாழை, மா, பலா, கொய்யா முதலிய மரங்கள் ஒரு புறம். செறிந்திருந்தன. தாமரை தடாகம் ஒன்றின் கரையில் ஆடவன் ஒருவன் வீற்றிருந்தான். அந்த மாலைப் பொழுதில் அந்த மனிதன் மிகவும் அழகுடையவனாகக் காணப்பட்டான். அவன் மன்மதனைப் போன்று தோன்றினான். உருண்டு திரண்ட ஆஜானுபாகுவான தோள்களும், வீரத் தன்மை செறிந்த முகமும், கட்டுமஸ்தான தேகமும், பிரகாசம் பொருந்திய கண்களும் அவனை ஒரு சிறந்த வீரனென்று எடுத்துக் காட்டின. அவன் அறையில் ஒரு வாள் சொருகப் பட்டிருந்தது. அவன் தேகத்தை இரும்புக் கவசம் மறைத்திருந்தது. அவன் தலையில் ஒரு சிறந்த கிரீடம் மயிற் பீலி சொருகப் பெற்று கம்பீரமாகக் காட்சி யளித்தது. வீரவர்மன்தான் இவன். சிறையிலிருந்து விடுவிக்கப் பட்டதும் அவன் தன் நாடு வந்து சேர்ந்தான். ஜனங்கள் பெரிதும் சந்தோஷங் கொண்டார்கள். வீரவர்மன் ஆட்சியை மீண்டும் ஏற்றுக் கொண்டான். யாரையோ எதிர் பார்த்து தன்னந்தனியாக அவன் காத்திருந்தான்.

"இன்னும் ஏன் வரவில்லை? இன்று மாலைப் பொழுதில் இதே இடத்தில் சாந்தகுமாரியை கூட்டிக் கொண்டு வருவதாக வல்லவா அந்த மனிதன் கூறினான்? இன்னும் அவன் வந்தானில்லையே!............அவன் தன் பெயரை என்ன வென்று கூறினான்? சாந்தகுமாரன் என்று.........அந்த இருட்டில் அவன் முகத்தைக் கூட சரியாக கண்டு கொண்டே னில்லையே ............அவன் சாந்தகுமாரி உயிரோ டிருப்பதாகப் பொய் கூறி யிருப்பானோ.........ஒன்றும் விளங்க வில்லையே! அவன் ஏன் என்னை சிறையிலிருந்து மீட்டான்? அவனுக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்? என்னை மீட்பதில் அவனுக்கேன் அவ்வளவு அக்கரை?............சாந்தகுமாரி இறந்தது வாஸ்தவன் தானென்று சங்கர பாண்டியர் கூட கூறினரே! அது தான் உண்மையா? பின் அவன் ஏன் சாந்தகுமாரி இறக்கவில்லை யென்று கூறினான்?" என்று பலவாறாக அவன் நினைத்துக் கொண்டான்.

அப்பொழுது பனாரிஸ் சேலை ஒன்றால் முக்காடிட்டுக் கொண்டு ஒரு நங்கை வீரவர்மனை நோக்கி வந்து கொண்டிருந்தாள். அவள் நடையும் உயரமும் வீரவர்மனுக்கு சாந்தகுமாரியோ என்ற சந்தேகத்தை அளித்தது; ஆனால் உறுதி செய்ய முடியவில்லை. அவனைச் சமீபித்ததும், அந்த நங்கை அவனை நமஸ்கரித்து விட்டு முகத்தில் மறைத்திருந்த துணியை விலக்கினாள். ஆம். அவள் சாந்தகுமாரியே. சாந்தகுமாரியைக் கண்டதும் வீரவர்மன் அவளை அணைத்து முத்தமிட்டு மகிழ்ந்தான். பின் அவளை நோக்கி "சாந்தகுமாரி! நீ இறந்து போனதாக அல்லவோ கேள்விப்பட்டேன். சாந்தகுமாரன் வந்து உண்மை கூறியிரா விட்டால் இதற்குள் நான் பட்டினி கிடந்து இறந்திருப்பேன். உன் தந்தை கூட நீ இறந்ததாகச் சொன்னாரே" என்றான்.

சாந்தகுமாரி:—"ஆம். நான் இறந்ததாகத் தான் எல்லோரும் நம்பினார்கள். என் தந்தையும் கூட அப்படித்தான் நினைத்திருந்தார். நான் இறக்கவில்லை யென்று சாந்தகுமாரன் மாத்திரம் அறிவான்."

வீரவர்மன்:—"குமாரி! சாந்தகுமாரன் எங்கே? அவன் உன்னுடன் வருவதாக வல்லவோ என்னிடம் கூறி யிருந்தான்."

சாந்தகுமாரி:—"அவன் இனிமேல் வரமாட்டான்."

வீரவர்மன்:—"என்? நான் அவன் செய்த உதவிக்குத் தகுந்த கைம்மாறு செய்ய மாட்டேன் என்று சந்தேகிக்கிருய்? கண்ணே! உண்மையைச் சொல்."

சாந்தகுமாரி:—"இல்லை. என்னைக் காணுமிடத்தில் அவனைக் காண முடியாது. அவனைக் கண்ட இடத்தில் என்னைக் காண முடியாது."

வீரவர்மன்:—"என்? நீ சொல்வது ஒன்றும் எனக்கு விளங்க வில்லையே! விளக்கிச் சொல்."

சாந்தகுமாரி:—"அப்படியானல் முதலிலிருந்தே சொல்ல வேண்டும். சொல்லுகிறேன் கேளுங்கள். உங்களை மகிபாலன் கைது செய்து விட்டான் என்று அறிந்து கலங்கினேன். மக்கள் கொதித்தெழுந்தனர். அவர்களைச் சமாதானப் படுத்தி விட்டு உங்களை மீட்க எண்ணினேன். நானே என் கையால் மீட்க வேண்டும் என்பது என் ஆசை. அதற்கு என் தகப்பனார் சம்மதிக்க மாட்டார் என்று எனக்குத் தெரியும். ஆகவே என் தோழியுடன் ஆலோசித்து நான் கடலில் விழுந்து இறந்து போனதாக ஒரு கடிதம் எழுதி வீட்டில் வைத்து விட்டு ஆண் வேடமிட்டு வீட்டை விட்டு வெளியேறினேன். திருநெல்வேலி போய் சிறைச்சாலை காவலாளர்களுடைய சினேகிதத்தைச் சம்பாதித்துக் கொண்டேன். அமாவசை அன்று அவர்கட்கு பாலில் தூக்கமருந்து போட்டுக் கொடுத்து விட்டேன். அவர்கள் அயர்ந்து தூங்கினதும் திறவுகோலை எடுத்து கதவைத் திறந்து உங்களைத் தட்டி எழுப்பினேன். நீங்கள் நான் இறந்ததாகக் கேள்விப்பட்டு விசனமுற்றிருந்தீர்கள். கடைசியில் உங்களைத் தேற்றி சிறையிலிருந்து மீட்டேன். என்னை யார் என்று வினவினீர்கள். உண்மையைக் கூற வெட்கமடைந்து என் பெயரைச் சாந்தகுமாரன் என்று கூறினேன். நீங்கள் நம்பி விட்டீர்கள். பொய் கூறியதற்கு என்னை மன்னித்து விடுங்கள்."

"இதோ மன்னித்தேன்" என்று அவளை இழுத்து கட்டி யணைத்து வீரவர்மன் அவள் கன்னத்தில் ஒரு முத்தமிட்டான். சில நாளில் இருவருக்கும் சிறப்பாக திருமணம் நடைபெற்றது.



# சைவ சித்தாந்தத்தின் சிறப்பு

—:0:—

இந்தியாவுக்குத் தெற்கே லெமூரியா என்று ஒரு கண்டம் இருந்த தென்பதைப் பண்டைத் தமிழ் நூல்கள் கூறுகின்றன. இதனைத் தற்கால அறிவியல் அறிஞர் பலரும் ஒப்புக்கொள்ளுகின்றனர். தமிழ் மக்கள் அப்பெரு நிலப்பாகத்தில் வசித்திருந்தனர் என்றும், ஒரு பெரிய கடல் பெருக்கத்தினாலே அக்கண்டம் விழுங்கப்பெற்றதென்றும், பொறுப்பான தமிழ் நூற்கள் சிலவும் கூறுகின்றன. ஆசியா கண்டத்தின் கடல் ஓரமாயுள்ள சுண்டா தீவுகளில் தொடங்கி, ஆப்ரிக்கா கண்டத்துக் கீழ்க் கடலோரம் வரை இந்து மகா சமுத்திரமானது ஒரு பெரிய கண்டமாகப் பரந்து இருந்தது என்றும், அவ்விடத்தில்தான் மனிதவர்க்கம் முதன் முதலில் தோன்றி யிருக்க வேண்டுமாதலினால் அது மிக முக்கியமானது என்றும் ஆசிரியர் ஹெக்கல் என்பார் ஆராய்ந்து முடிபு கட்டுகிறார். தற்கால ஆராய்ச்சியின்படி மக்கள் பகுதியின் முதல் தோற்றம் உண்டான இடம் இந்துமகா சமுத்திரத்தின்கீழ் இப்போது அமிழ்ந்து கிடக்கும் நிலப்பரப்பே என்று மற்றொரு அறிவியல் அறிஞர் எழுதுகிறார். இவ்விடத்திலேயே மனிதத் தோற்றம் ஏற்பட்டிருக்க வேண்டும் என்பதையும், மகாப் பிரளயத்திற்குப் பிறகு மக்கள் வசிக்கத் தொடங்கியதும் செடி கொடிகள் முளைக்கத் துவங்கியதுமான இடம் இந்தியாவே என்பதையும் சர் வால்டர் ராலே என்னும் ஆசிரியருடைய 'உலகத்தின் வரலாறு' என்னும் நூல் வலியுறுத்துகின்றது.

கடலுக்குள் மறைந்த லெமூரியா கண்டத்திலே, குமாரிநாடு என்னும் பாகத்திலே இருந்த மகேந்திர மலையே தமிழ்ப்போறிஞர்கள் வாழ்தற்குரிய இடமாக இருந்தது. அம்மலையின் கண்ணேயே நான்கு தமிழ் மறைகள் அல்லது தெய்வப் பனுவல்கள் என்பன நான்கு, நீத்தார்க்கு நல்கப் பெற்றன. இம்மறைகள் வேறு. பிற்காலத்துத் தோன்றிய வடமொழி நான்கு வேதங்கள் வேறு என்பதைக் குறிக்கவே, அத்தமிழ்ப் பனுவல்கள் 'பண்டை நான்மறை' என்னும் பெயரால் வழங்கப்பெற்றன. இந்நான்கு மறை நூல்களும் கடல்கோள் வெள்ளத்திலே மறைந்தன வாயினும், அவற்றின் கண் பொதிந்திருந்த உண்மைகள், வாயினால் ஒருவர்க்கு ஒருவர் சொல்லியே, வழிவழியாக வழங்கப் பெற்று வந்தன. திராவிடப் பெரியார்களது பாடல்களிலும் நூல்களிலும் அவை இன்றைக்கும் மிளிர்ந்து கொண்டிருக்கின்றன.

## சைவ சித்தாந்தக் கோள்கை

லெமூரியாவிலும் தென்னிந்தியாவிலும் வதிந்துவந்த தமிழ்மக்களது சமயக் கொள்கை- சைவசித்தாந்தக் கொள்கையேயாகும். எனவே, தமிழர்களது நான் மறையின் கருத்தே பண்டைய உலகம் அல்லது அந்த

---

வேலூரில் கூடிய சைவர் மகா நாட்டைத் திறந்துவைத்த வடஆர்காடு ஜில்லா கூட்டுறவு அதிகாரி ஸ்ரீமான் கி. நாராயணசாமி முதலியார் செய்த பிரசங்கத்தின் சாரம்.

உலகத்தின் ஒரு பகுதியினது தத்துவக் கருத்தாகும். படகுகளின் துணை கொண்டு ஐரோப்பாவிற்குத் தப்பி ஓடிய மக்கள் இக்கருத்துக்களடங்கிய மறைகளைத் தங்களோடு கொண்டு சென்று பண்டைய உலகத்தினுக்கு அடிகோலியிருப்பார்கள். பின்னர் அக்கருத்து மற்ற நாடுகளுக்கும் பரவியிருத்தல் வேண்டும்.

தப்பியோடிய தமிழ் மக்களில் சிலர் பழைய பிரிட்டன் தேசத்திற்குச் சென்று குடியேறினவர். அவர்கள் இக்கொள்கைகளை அந்நாட்டிற்குக் கொண்டுபோ யிருத்தல் வேண்டும். பண்டைய பிரிட்டிஷ் மக்களின் கொள்கை சைவ சித்தாந்தமே என்றும் அவர்களது சமயம் சைவசமயமே என்றும் சொல்லுவதற்குப் போதிய சான்றுகள் இருக்கின்றன. இதுபற்றிக் கடைசியாக வந்துள்ள நூலின் பெயர் "பழைய பிரிட்டிஷாரது சமயம் சைவ சமயமே" என்பதாகும்.

சிந்துவிலும், பஞ்சாப்பிலும் முறையேயுள்ள இறந்தவர் குன்றம் என்று பொருள்படும் "மோஹன்ஜோ டேரோ"விலும் ஹாரப்பாவிலும் தோண்டி யெடுக்கப்பெற்ற பலபொருள்களிலிருந்து, கிறிஸ்து பிறப்பதற்கு மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்னேயே ஆரியர்கள் இந்நாட்டில் குடி புகுதற்கு முன்பே, இங்கு ஒரு சிறந்த நாகரிகமுள்ள மக்கள் வஸித்து வந்தார்கள் என்றும் வெளிப் படையாகத் தெரிகின்றது. "மோஹன்ஜெடேரோவும்: ஹாரப்பாவும் பொதிந்து வைத்துக்கொண்டிருந்த பல உண்மைகளிலே மிகவும் குறிக்கத்தக்கது என்னவென்றால் சைவ சமயமானது செம்புக் காலத்தினது, இன்னும் சொல்லப் போனால், உலகில் தோன்றியுள்ள எல்லா சமயங்களுக்கும் மிகப் பழைமையானது" என்று இந்திய அரசாங்கக் கல்வெட்டு இலாகாவின் தலைவரான சர் ஜான் மார்ஷல் என்பார் விதந்து ஓதுகின்றார்.

பௌத்த சமண சமயங்கள் எழுந்து மற்ற மதங்களை வீழ்த்தி வந்த காலத்திலே சைவ சமயமே அவற்றின் தாக்கையும் மீறி வெற்றியோடு மேலோங்கி விளங்கியது. அக்காலத்திலே தான் சமயகுரவர்களாகிய திருஞான சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் இந் நால்வரும் தோன்றினர். சைவசித்தாந்த கொள்கையினை பிற்காலத்தில் விளக்கிய பெருமை முற்றும் மெய்கண்ட தேவரதாகும் அவரைப்பின்பற்றிச் சந்தானகுரவர்களாகிய அருணந்தி சிவாசாரியார், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாசாரியார் மூவரும் தோன்றினர். தற்கால சைவசமயம் அவர்கள் காலத்திற்றான் தொடங்கிற்று என்று கூறுதல்வேண்டும், இந்நால்வரும் ஆகமக் கலையைப் பெரிதும் வளர்த்து ஒழுங்குபடுத்தினர்.

சைவ சித்தாந்தக் கொள்கையைப் பாராட்டும் மேனாட்டுக் கலைவாணர்களிலே டாக்டர் ஜி. யூ. போப், திரு எச். ஆர். ஹாவிஸ்டன், டாக்டர் கிராண்ட் திரு ஜி. எம் காப்பன், திரு டப்ளியூ எச். ஷோமோஸ், டாக்டர்–பாரன்ட் முதலியோர் சித்தாந்த நூற்களை ஆங்கிலத்தும் பிற ஐரோப்பிய மொழிகளிலும் மொழி பெயர்த்திருக்கின்றனர். டாக்டர் பால்டுயெசன், டாக்டர் உவில்யம் ஜான், டாக்டர். எப். ஆட்டோ ஸ்ரேடர், திரு எச். ஏ. பாப்லி ஆசிரியர் ஆர். டப்ளியூ. ப்ரேசர். திரு எப். கௌதி, திரு- டி. ப்ரௌக்ஸ், திரு ஜி. இ. பிலிப்ஸ், திரு ஏ. எல் கிளேடம் முதலிய பலர் சித்தாந்தக் கொள்கையில் வல்லவர்களா யிருக்கின்றனர்.

சைவசித்தாந்தைப்போல் சமரசமானதாயும் மற்ற எல்லாச் சமயங்களுக்கும் இடங் கொடுப்பதாயும் இருக்கும் கொள்கை உலகத்தில் வேறு எதுவும் இல்லை என்னலாம். அதனுடைய நோக்கமே,

"யாதொரு தெய்வம்கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே
மாதொரு பாகனுர்தாம் வருவர்" என்பதாகும். சமயங்கள் படிப் படியாக உயிரினது உண்மையுணர்தற்குத் துணையாக நிற்பன.

## சைவசித்தாந்தத்தின் வளர்ச்சி.

சமய நூல்களிலேயே சமய உண்மைகள் பல கூறப்பெற்றிருக்கின் றன. மாறிக்கொண்டே செல்லும் காலநிலைக்கு ஏற்ப அவ்வுண்மைகள் வளர்ந்துகொண்டே செல்ல வேண்டும். அறிவியல் ஆராய்ச்சி இல்லாத காலத்திலே தவத்தால் சிறந்த பெரியோர்களால் எழுதப்பட்ட கொள்கை கள் இக்காலத்துக்கு ஏற்றவகையிலே விளக்கம் செய்யப் பெறல் வேண்டும். இன்றைய மக்களது உள்ளங்களில் சென்று பாய்தற்கு உரிய முறையிலே கொள்கையை விளக்குகின்ற சமயங்கள் நம் நாட்டில் இப்போது இல்லை யென்றே சொல்லுதல் வேண்டும். எதற்கெடுத்தாலும் 'ஏன் அப்படி?' என்று கேள்வி கேட்கும் இக்காலத்துக்கு ஏற்றமுறையில் சமய உண்மை களை விளக்கவேண்டுவது அறிஞர் கடமை.

இறைவனது திருவிளையாடல்களின் உட்கருத்தைப் பற்றி எவரும் இதுவரை விளக்க வராமல் இருப்பது ஒரு பெரிய குறையாகும். பெரும் புகழ்படைத்த எத்தனையோ புலவர்கள் உள்ள இந்த நாட்டிலே இதை விளக்குவதா கடினம்? பல நூற்றாண்டுகளாகியும், திருமூலரது திருமந்திரத் திற்கு உரைகாணும் அறிஞர் ஒருவர் தோன்றுதிருப்பது ஆச்சரியமே!

இப்படியே சென்றால் நமது சமயம் தற்கால முறையில் வளரும் மற்ற சமயங்களாகிய கடல் வெள்ளத்தில் மூழ்கிப்போக வேண்டியதாய் விடும். எனவே, நாம் தமிழ்க் கலைவாணர்களையும் சமயப் பெரியார்களையும் கேட் டுக் கொள்வது என்னவென்றால் 'உறக்கத்தை விட்டு விழியுங்கள்! எழுங்கள்! அறிவியல்முறையிலேயே தற்காலத்திற்குத் தகுந்த வகையிலே சமயத்தை வளருங்கள்!' என்பதேயாகும்.

சைவசித்தாந்தக் கலையெல்லாம் பனை ஓலைகளில் இருந்த காலம் எப் போதோ போய்விட்டது. சைவ மடாதிபதிகள் இனி அவற்றை மூடிமூடி வைக்க முடியாது. எத்தனையோ சித்தாந்த நூற்களும் உரைகளும் வெளி யாகி விட்டிருக்கின்றன. சைவ சித்தாந்தத்தில் உண்மை யன்புடைய ஒவ் வொருவரும் இனிச் சும்மா இருத்தல் ஆகாது. அறிவுடையவர்கள் பலரும் ஆராய்ச்சி செய்தல் வேண்டும். நூதன நூல் பல இயற்றவேண்டும்.

பணம் படைத்தவர்கள் பலரும் நமது சமய உணர்ச்சிக்குத் தங்கள் பணம் செலவாவதில் வேட்கையுடையவர்களாக இருத்தல் வேண்டும். மற்ற சமயக்காரர்கள் செய்யும் சூழ்ச்சியில் சிக்கித் தங்கள் மதம் சாகவும், அவர் கள் மதங்கள் வளரவும் பெருந்தொகைகள் வழங்கும் வழக்கம் செல்வந்தர் களை விட்டு ஒழியவேண்டும்.

நமது மடாதிபதிகளும் விழித்து எழுந்து நிலையறிந்து சமயத்தைக் காக்க முன்வருவார்களாக! சைவசித்தாந்தத்தை வளர்த்தற்குரிய வழி களைக் கோலுவார்களாக.

# நவநாகரீகமும் ஆரோக்கியமும்

—:(o):—

(வீ. சங்கரய்யர்.')

மனிதன் ஆயுள்காலம் நூறுவருஷம் என்று ஹிந்து சாஸ்திரம் கூறுகிறது. 'சதாயுஷ்மான் பவ' எனப் பெரியோர் ஆசீர்வதிக்கின்றனர். இப்படியிருக்க தற்காலம் அகால மரணத்தொகை யதிகப்பட்டுக்கொண்டே வருகின்றன. இக்காலத்தில் வசிப்பதற்கு நல்ல வீடுகள், நல்ல வசதிகள், சுகாதார ஏற்பாடுகள், ஆரோக்கிய சாஸ்திர பாடங்களைக் கற்பித்தல், முதலிய பல வசதிகள் இருந்தும் இப்படி ஏற்படக் காரணமென்ன? இதைக் குறித்து ஆழ்ந்து யோஜிக்கவேண்டியது அவசியமே.

நவநாகரீகத்தால் பல நாகரீக வியாதிகள் சம்பவிக்கின்றன. வைத்தியர்களுக்குக் கூட கண்டுபிடிக்க முடியாததும் முன் வைத்திய நூல்களில் இல்லாததுமான பல நோய்களும் உண்டாகின்றன. இதற்குள்ள காரணங்களை இங்கு கூறுகிறேன்.

இது இயந்திரக் காலம். சகல காரியங்களும் இயந்திரங்களால் செய்ய முடியும். இனி ஆகாரத்தைக்கூட வாயில் கொண்டு போடவும் ஒரு இயந்திரம் வரக்கூடும். கை கால்கள் செய்யும் வேலைகளை யெல்லாம் இயந்திரங்கள் செய்கின்றன. இவ்வித இயந்திரங்களால் நாம் நாளுக்குநாள் சோம்பேறிகளாகவும் நொண்டிகளாகவும் ஆகிறோம். தேக உழைப்புதான் தேக ஆரோக்கியம். உழைப்பில்லையேல் ஆரோக்கியமும் இல்லை. முன் காலத்தில் பாதசாரிகளாக காசிக்குக் கூட பலர் தேசாடனம் செய்திருக்கின்றனர். இக் காலத்திலோ மோட்டார் பஸ் விபத்து, டிராம் கார் விபத்து ஆகாய விமான விபத்து முதலியன சர்வசாதாரணம். இவைகளில் பிரயாணம் செய்வதால் பல தொத்து வியாதிகள் இலகுவாகப் பரவுகின்றன. தூசியால் காச வியாதியும் பரவுகின்றன.

நெல் குத்தல், மாவரைத்தல் முதலியன மிஷின் மூலம் செய்வதால் அவைகளிலுள்ள ஜீவசத்துப் பொருள் நசித்து விடுகிறது என்பது யாவரும் அறிந்த விஷயமே. கைக்குத்து அரிசி யுண்பது அதிக தேக ஆரோக்கியம் என்று நன்கு தெரிந்திருந்தும் நாம் அந்த மாயாவியான இயந்திர ராக்ஷஸன் வசப்படத் தயாராகயிருக்கிறோம். இந்த இராக்ஷஸன் நமக்கு பெரிய பெரிய வியாதியை உண்டாக்குகிறது.

இந்திய சீதோஷ்ண நிலைமைக்கு ஒரு வேஷ்டியும் அங்க வஸ்திரமுமே போதுமானது. இவைகளை மாத்திரம் நம் முன்னோர் அணிந்து வந்ததனால் அவர் தேகத்தில் சூரியவெளிச்சம் தாராளமாக பட்டு ரோகபீஜங்கள் அணுகாம லிருந்தது. நமது நவநாகரீகர்களோ தனது சரீரம் பூராவும் கோட், ஷர்ட், நிஜார், தொப்பி, பூட்ஸ் முதலியவைகளால் மூடி தேகத்

தில் சூரியவெளிச்சம் படாமல் செய்கிறார்கள். அதனால் சரீரத்துக்கு வியாதிக் கிருமிகளை எதிர்த்து சம்ஹரிக்கும் சக்தி யில்லாமல் போய் விடுகிறது. நுரையீரல் வியாதிகளும், சர்ம வியாதிகளும் அவனைப் பீடிக்கின்றன. இந்தியாவிற்கு ஒரு வேஷ்டியும் அங்க வஸ்திரமுமே போதுமானது என்பதைத் தெரிந்து பலர் அனுஷ்டானத்தில் கொண்டு வர இப்பொழுது பாடுபடுகின்றனர்.

நவநாகரீகமக்கள் தங்கள் புராதனத் தொழில்களான பயிரிடுதல் முதலியவைகளைச் செய்யாமல் படித்த மமதையினால் குக்கிராம வாழ்க்கையை விட்டு பட்டணத்தை அடைந்ததால் பல குக்கிராமங்கள் பாழடைந்து விட்டன. தவிர பட்டணங்களிலுள்ள காற்றோட்ட மில்லாத வீடுகளிலும், குறைந்த வாடகைக்காக அனாரோக்கிய ஸ்தலங்களிலும் வசிக்கவும் செய்கின்றனர். நிற்க, பட்டணவாசம் பேசும் படக்காட்சி, சங்கீதக் கச்சேரி, முதலியவைகளைப் பார்க்கச் செய்கின்றன. அதனால் இரவு அதிக நேரம் கண் விழித்தலும் காலை 7-மணி வரை தூக்கமும், காப்பிகுடியும், இன்னும் பல துன்மார்க்க வழக்கங்கள் நமது நவநாகரீகர்களை யணுகி அனேக நவநாகரீகர்கள் பல நவ ரோகங்களுக் கிரையாகின்றனர். தற்கால நவநாகரீகர்கள் உபயோகிப்பன பின்வருமாறு இருக்கலாம்.

1. இயந்திரத்தில் தீட்டிய அரிசி.
2. இயந்திரத்தில் தீட்டிய தானியங்கள்.
3. கலப்பு நெய்.
4. ஏடு எடுக்கப்பட்ட மோர்.
5. வெள்ளைச்சர்க்கரை தித்திப்புகள்.
6. உலர்ந்த காய்கறிகள்.
7. அதிக மிளகாய் புளி.
8. காப்பி தேயிலை முதலிய பானங்கள்.
9. புகையிலை பொடி சுருட்டு.
10. நாட்பட்டு அழுகிக் கெட்ட மாமிச வகைகள் முதலியன.

இவைகளைக் குறித்து விஸ்தரிக்க வேண்டியதில்லை. இவைகளில் குணாகுணங்கள் யாவருக்கும் தெரிந்ததே. இவைகளெல்லாம் ஆள் கொல்லிகளே யாம்.

காப்பிக்கிளப்புகள் பல வியாதிகளுக்கு முக்கிய காரணமாக இருக்கின்றன. காசநோய்க்காரர்கள் முதலிய பேர்கள் உபயோகித்த பாத்திரங்களையே மற்ற பேர்களும் உபயோகிக்கின்றனர். இதனால் தொத்து வியாதிகள் பரவுகின்றன. நவநாகரீகர்கள் கிளப்புகளுக்குப் போகாமல் இருப்பதுமில்லை. நம் முன்னோர் பரான்னம் சாப்பிடுவதில்லை. அன்ன விக்ரயம் மஹா பாபமாகக் கருதி வந்தனர். இவ்விரு கொள்கைகளும் கைவிடப்பட்டதால் பல நூதன வியாதிகள் உற்பவிக்கின்றன. சாஸ்திரமே சுகத்திற்காக ஏற்பட்டது என்று அறியார். பாவம்!

பல் பிரஷினால் துலக்கிப் பயோரியா வியாதிகள் உண்டாகின்றன. ஸ்திரீகள் மாவரைத்தல் முதலியவைகளை விட்டு விட்டதனால் தேக உழைப்

பின்றி கஷ்டப் பிரசவம், மாதவிடாய்க் கோளாறுகள் முதலிய வியாதிகள் காசுச் செலவே யில்லாமல் விலக்கு வாங்குகிறார்கள். பிள்ளைகள் மின்சார விளக்குகளிலும், மண்ணெண்ணெய் விளக்குகளிலும் படித்துக் கூடிய சீக்கிரம் கண் பார்வை மங்கினவர்களாகி கண்ணாடியை ஆபரணமாக அணிகின்றனர். விளக்கெண்ணெய் விளக்கு கண்ணுக்கு என்ன குளிர்ச்சி என்பதை இவர் என் தெரிந்துகொள்ளப் போகின்றனர்?

கிரகஸ்தாசிரமத்திலும் கூட பிரம்மசாரியாக இருக்கவேண்டும் என நமது சாஸ்திரம் கூறுகின்றது. அப்படியானால் பிரம்மசாரி (விவாஹமாகாதவன்) எப்படி யிருக்கவேண்டும். இந்துக்களுக்கு பிறந்தது முதல் மரணகாலம் வரை வாழ்நாள் முழுதும் மதத்தோடு இணைக்கப்பட்ட பல சடங்குக ளிருக்கின்றன. மதாசார சடங்குகளெல்லாம் சுகாதாரத்திற்காகவேயன்றி வேறில்லை. இச் சட்டப்படி நடந்துவந்தால் ரோகமென்பதே யில்லை யெனலாம். இச் சட்டங்களை நவநாகரீகர்கள் புறக்கணிக்கின்றனர்.

ஆரோக்கியமென்பது ஒரு மனிதனுடைய தேகம், மனம், ஆத்மா இம்மூன்றும் ஒன்றுகூடி ஆரோக்கியமா யிருப்பதே. ஆரோக்யவான் முகம் தேஜஸ்ஸோ டிருக்கும்.

"மருந்தென வேண்டாம் யாக்கைக் கருந்தியது
அற்றது போற்றி யுண்." —குறள்.

அதாவது சாப்பிட்டது பூராவும் ஜீரணமாய் வெளியே வந்து விட்டது என்று நன்றாகத் தெரிந்து கொண்ட பிறகே அடுத்து உணவு உண்ண வேண்டும்.

நமது முன்னோர் ஜபம், தபம், தியானம், கவித்வம், சித்திரம், வேதாத்யயனம் முதலியன செய்துவிட்டே உண்பது வழக்கம். நூதன பிரம்மசாரிக்கு உபநயன சமயமிடும் கட்டளையான 'ஜலம் மட்டும் பருகி விட்டு உண்; தினசரித் தொழில்களைப் புரி' என்பதைக் கவனிக்கவும். கூடுமான வரையிலும் எல்லா தொழில்களும் சாப்பிடும் முன் செய்வதே நலம். சாப்பிட்ட பிறகு செய்வதால் தேகாரோக்கியம் குன்றும்.

"அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றான் நெடி துய்க்குமாறு." —குறள்.

அதாவது நல்ல பசி யெடுத்தவுடனே தான் ஒருவன் உண்ணவேண்டும்; அதுவும் மிதமாய் உண்ணவேண்டும்.

"மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணின்
ஊறு பாடில்லை யுயிர்க்கு." —குறள்.

அதாவது பசியா யிருக்கும்போதுதான் சாப்பிடவேண்டும். அந்த ஆகாரம் சரியானதாக இருக்கவேண்டும்.

தற்கால நாகரீகத்தின் பலனாக பல புது வியாதிகள் உண்டாகி ஜனங்களின் ஆரோக்கியம் குன்றி விடுகிறது என்பதில் சிறிதும் சந்தேகமே யில்லை. வியாதிகளுக்கு மூலகாரணங்கள் கூடுமான வரையிலும் காளடைவில் விட்டொழிக்க யாவரும் பாடுபட்டு அரோக திடகாத்திரர்களாக இருக்கும்படி கடவுள் நவநாகரீகர்களுக்கு நற்புத்தி கொடுத்தருள்வாராக!



# பெண் விடுதலைக் கும்மி

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

தை மாதம் தமிழர்களுக்கும் ஏனையவர்களுக்கும் புது சகாப்த ஆரம்பமே. அது "பொங்கல் மாதம்." ஜனங்களின் உழைப்பின் பலனை புது நெல், புது வெல்லம், புதுப்பயரு, வழுக்கை இளநீர், புது காய்ப்பு வாழைப்பழம், கரும்பு, மஞ்சள் கொத்து, இஞ்சிக்கொத்து இவைகளை வைத்து, வீட்டுக்கு வீடு, பொங்கல் புதுப்பானைகளில் பால் பொங்கும் சமயம். "பால் பொங்கிற்று?" என்று பரஸ்பரம் குசலப்ரச்னம் செய்யும் வழக்கம் ஞாபகப்படுத்தப் படுகிறது. அடை மழையும், சீரல் காற்றும், மூடுபனியும் நிறைந்து, அதன் உன்னத நேரமான பீடை மார்கழி மாதம் ஒழிந்த நேரம். தெய்வீக விஷயமாக அவ்வளவு நல்லதல்ல வென்று சொல்லக் கூடிய தக்ஷிணயனம் தீர்ந்து புண்யமான உத்தராயனம் உதிக்கும் சமயம். பிரம்மசாரிகளுக் கெல்லாம், "தை பிறந்தால் வழி பிறக்கும்" என்று ஒரு நம்பிக்கை ஏற்படக் கூடிய காலம். நல்ல உத்ஸவாதிகள் எல்லாம் ஆரம்பிக்கப்பட்டு, ஜனங்கள் சாகுபடியான சாமான்களை நிறைய வைத்துக் கொண்டு, விடு முறையாகவும், ஓய்வு நேரமாகவும், களிப்புகளில் காலத்தைக் கழிக்க ஹேதுவான காலம். சர்க்கார் கிஸ்திக்கோ, இதர செலவுகளுக்கோ கண்டு முதல், விற்று முதல் செய்யப்பட்டு, ஏதாவது நிர்வாகம் கொஞ்சமாவது செய்ய முடியும் என்ற அல்ப நம்பிக்கையாவது அமைதியைக் கொடுக்கக் கூடிய காலம். இவ்வளவுக்கும் காரணமாக உள்ள "சூரிய நாராயணப் பிரபுவுக்கு" ஜனங்கள் தங்கள் நன்றியறிதலை பூஜைகள் மூலமாக தெரிவித்து, இதர க்ஷேமங்களுக்கும் பிரார்த்தனை நடத்தும்

காலம். பிரத்தியக்ஷத்தில், மனிதனுடன் சமபாடுபட்டு, உழைத்து, தானியங்களும், பயிர்களும் காய்களும் கனிகளும், பால்களும் பொங்க உதவி செய்யும் கால் நடைகளும் பூஜைகள், ஆராதனைகள் நடத்தி, நன்றியறிதலைத் தெரிவித்து, களித்து, மாட்டுப் பொங்கல், மாட்டு அலங்காரம், மாட்டு வேடிக்கைகள் நடத்தப்படும் காலம். "பொங்கும் மங்களம் எங்கும் தங்குக" என்று வேண்டும், பொங்கல் புண்ணிய காலத்திற்குக் காரணமான புது வருஷத்தின் தன்மையை விரும்பும் பாரதியாரின் பாட்டுக்கு, அடுத்த பாட்டாக, கிருஹ லக்ஷ்மிகளான பெண்களின் தன்மையையும், அவர்களுக்கு விடுதலையின் அவசியத்தையும் பற்றி எழுதப்பட்ட பாரதி பாட்டுகளில் ஒன்றான "பெண் விடுதலைக்கும்மி" இக் கட்டுரையின் விஷயம், அதனுடைய பொருத்தமும் உணரற்பாலது!

பாரதியார் "பெண்மையை"ப் பற்றிப் பல அபூர்வமான கருத்துகளை வெட்டெனச் சொல்லிக் கதறி யிருக்கிறார். பெண்களின் நிலையை உயர்த்த ஊக்கங் கொண்டு கோபமும் கொள்ளுகிறார். "மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம்!" என்கிறார். "பெண்கள் தங்களுடைய விடுதலைக்கு ஆர்வமாக இருக்கிறார்கள்! அவர்கள் விடுதலையில் களிக்கிறார்கள்" என்பதை முதல் பாட்டில்,

"கும்மியடி தமிழ்நாடு முழுவதும் குலுங்கிடக்
கைகொட்டிக் கும்மியடி!
நம்மைப்பிடித்த பிசாசுகள் போயின
நன்மை கண்டோமென்று கும்மியடி!" 1.

என்று குறிப்பிட்டு அடுத்த மூன்று பாட்டுகளில் பெண்களின் தளைகள் எவ்விதங்களில் அமைக்கப்பட் டிருக்கின்றன என்பதைக் கல்லும் உருக கனிந்துரைக்கும் போக்கு வெகு அருமை யென்பது உணரப்படும்.

ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமை
என்றெண்ணி யிருந்தவர் மாய்ந்து விட்டார்!
வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டிவைப்போமென்ற
விந்தைமனிதர் தலை கவிழ்ந்தார்! 2.

மாட்டையடித்து வசக்கித் தொழுவினில்
மாட்டும் வழக்கத்தைக் கொண்டுவந்தே
வீட்டினி லெம்மிடம் காட்டவந்தாரிதை
வெட்டி விட்டோ மென்று கும்மியடி! 3.

நல்லவிலை கொண்டுநாயை விற்பா ரந்த
நாயிடம் யோசனை கேட்பதுண்டோ?
கொல்லத் துணிவின்றி நம்மையும் அந்நிலை
கூட்டிவிட்டார் பழி கூட்டிவைத்தார்! 4.

இந்த சந்தர்ப்பத்தில் "பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான்; புவி பேணி வளர்ந்திடும் ஈசன்! மண்ணுக்குள்ளே சில மூடர் நல்ல மாதர் அறிவைக் கெடுத்தார்!—கண்களி விரண்டினில் ஒன்றைக் குத்தி, நல்ல காட்சி கொடுத்திடலாமோ?" என்று முரசு என்ற பாட்டில் முறையிடுவதும் படித்துணர வேண்டியதே யாகுமன்றோ? அடுத்தபடியாக,

கற்புநிலையென்று சொல்ல வந்தார் இரு
கட்சிக்கும் அதைப் பொதுவில் வைப்போம்!
வற்புறுத்திப் பெண்ணைக் கட்டிக்கொடுக்கும்
வழக்கத்தைத் தள்ளி மிதித்திடுவோம்! 5.

சட்டங்கள் செய்வதும் பட்டங்கள் ஆள்வதும்
பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்
எட்டும் அறிவினில் ஆணுக் கிங்கேபெண்
இளைப்பில்லைகாண் என்று கும்மியடி! 6.

என்ற இரண்டு பாட்டுகளில், இடைக்காலத்தில் மானிட வர்க்கத்தினிடையில் "சில மூடர் நல்ல மாதரறிவைக் கெடுத்தார்" என்ற வாறு, புகுந்த சில எண்ணங்கள் தாம் காரணம் என்று சொல்லுகிறார். அதிலும் "கற்பு நிலை யென்பதை இரு கட்சிக்கும் பொதுவில் வைக்க வேண்டும்" என்பது தான் வெகு முக்கியம். 80 வயதானவர்களும், பேரன் பேத்திமார்கள் டஜன் கணக்கிலுள்ளவர்களும் தங்கள் சரீரத்திலுள்ள மிருகத்தனம் காரணமாக 6-ம் தரம், 7-ம் தரமாக பச்சிளங் குழந்தைகளைத் தாரமாகக் கொள்ளும் கொடிய வழக்கம் இன்னும் இவ்வளவு கூக்குரல்களுக்கிடையிலும் ஒழிந்தபாடில்லை! அந்த வினோதப் போக்கிற்கு ஒரு சிலர் "சாஸ்திர சம்மதத்தையும் காட்டி வைதீக கர்மாக்களுக்கு, தானம் வாங்கும் போது தம்பதிகளாக இருந்தால் தான் கிடைக்கும்" என்ற வினோத காரணம் காட்டுவதும் விந்தையிலும் விந்தையே! இந்த விதமாகப் பொருந்தா விவாகமாக "நாயை விற்பது போல், கொல்லத் துணிவின்றி வற்புறுத்திப் பெண்ணைக் கட்டிக் கொடுக்கும் வழக்கம்," காரணமாக, எவ்வளவு பெண்கள் தற்கொலைக்கும் கொடிய மரணங்களுக்கும், ஆயுள் பூராவான அல்லல்களுக்கும் அவதிகளுக்கும் ஆளாகி யிருக்கின்றனர்? எவ்வளவு பெண்கள் கற்புக்குப் பங்கம் விளைவித்துக் கொண்டிருக்கின்றனர்? எவ்வளவு இளம் விதவைகள் இருக்கின்றனர்?

"பேதமை யென்பது மாதர்க் கணிகலம்" என்ற முறையை இடையில் புகுத்தி, அவர்களுக்கு சக்திக் குறைவு என்பதாக அபிப்பிராயம் பரவலாகி, பின்னணிக்குத் தள்ளப்பட்டனர் என்று கருதி சொல்லுவது விளக்கம்! ஆனால் ஈசுவரனே "சக்தியின் இயக்கம்" என்று கொண்டிருப்பதும் இந் நாடு தான்! சகல அம்சங்களுக்கும் அதி தேவதை பெண் தான் பூமா தேவி, தைரிய, லக்ஷ்மி வீரிய லக்ஷ்மி, விஜய லெக்ஷ்மி, தான்ய லெக்ஷ்மி, தனலக்ஷ்மி, சந்தானலக்ஷ்மி, சரஸ்வதி என்ற தேவதைகளாக வணங்கிக் கொண்டாடுவதும் இந் நாடு. வேத காலத்திலும், இதிகாச காலத்தி

லும், புராண காலத்திலும், பெண்களுக்கு சக்தியுள்ளதாகச் சொல்லிச் சிந்தித்து வந்திருப்பதும் இந் நாடு தான் ! சரித்திர காலத்திலும் பெண்மணிகளின் வீரத்திற்கு உலகத்திற்கே அணிகளாக நிற்பவர் நம் பாரதநாட்டில் பலர் உண்டு என்று பெருமை கொள்வதும் இந் நாடுதான் !

நீதிகள் சொல்லவும், வேதங்கள் செய்யவும்
வேண்டி வந்தோமென்று கும்மியடி,
சாதம் படைக்கவும் செய்திடுவோம் தெய்வச்
சாதிபடைக்கவும் செய்திடுவோம். என்றும், 7.

காதல் ஒருவனைக் கைபிடித்தேயவன்
காரியம்யாவிலும் கைகொடுத்து,
மாதர் அறங்கள் பழமையைக் காட்டிலும்
மாட்சி பெறச் செய்து வாழ்வமடி ! 8.

என்றும் அழகுறத் தெளிவுறுத்தி யிருக்கிறார். "பழமை பழமை யென்று, பாவனை பேசல் அல்லால், பழமை இருந்த நிலை-கிளியே பாமரர் ஏதறிவார்?" என்று கிளிக்கண்ணிகளில், நடிப்புச் சுதேசிகளைக் கண்டிக்கும் முகத்தால் சொல்லியபடி, பழமையை உள்ளவாறு உணர்ந்து, விளங்கிக் கொண்டு, பழமைப்படியே, உண்மையாகக் கௌரவமாக நடத்திக் கொள்வது தான் மாதர் லக்ஷணம், என்பதை அவர்கள் வாயிலேயே வைத்துச் சொல்லி, கும்மியடிக்கச் செய்யும் பான்மை எவ்வளவு நேர்த்தி ! "பூமியிலும் பொறை மிக்குடையாள் மிகப் புண்ணிய நெஞ்சினள் தாய் ! எனில், தோமிழைப் பார் முன் நின்றிடுங்கால் கொடுந் துர்க்கை யனையவள் தாய்!" என்றவாறும் "நல்லறம் நாடிய மன்னரை வாழ்த்தி நயம்புரிவாள் எங்கள் தாய்; அவர் அல்லவராயின் அவரை விழுங்கிப் பின் ஆனந்தக் கூத்திடுவள் தாய்" என்றவாறும், பெண்கள் சந்தர்ப்பத்திற் கேற்ப வீரத்துடனும், பொறுமையுடனும், அன்புடனும், ஆதரவுடனும், கற்புடனும், ஈரத்துடனும், தயையுடனும் நடந்து கொள்ளுவார்கள் நமது நாட்டுப் பெண்மணி ரத்தினங்கள் என்பதை விளக்கிப் பெண் விடுதலைக் கும்மியை இசைத்திருக்கிறார். ஒவ்வொரு பெண்மணியும் இப் பாடலையும், இது போன்ற பல பாடல்களையும் பாடி தேசிய முன்னேற்ற ஆக்க வேலைகளில் ஈடுபடச் செய்ய எல்லாம் வல்ல பராசக்தி இன்னருள் பாலிப்பாராக !



# கருணையுள்ள இரண்டு புறாக்கள்

(ஸ்ரீரங்கம்-நம்மாழ்வாரய்யா.)

முன்னொரு காலத்தில் வேடன் ஒருவன் காட்டில் வேட்டையாடச் சென்றான். அங்கு ஆணும் பெண்ணுமாக இரண்டு மாடப்புறாக்கள் விளையாடிக்கொண் டிருப்பதைக் கண்டான். அவற்றைப் பிடிப்பதற்கு அவன் வலையை வீசினான். அவ்வலையில் பெண்புறா மாத்திரம் அகப்பட்டுக் கொண்டது. ஆண்புறா தப்பி யோடித் தனது கூட்டை யடைந்தது. தனது உயிரினும் சிறந்த மனைவியை பிரிந்ததினால் அது மிகுந்த துக்கத்தை யடைந்து ஒன்றும் செய்யத் தோன்றாது தவித்துக் கொண்டிருந்தது.

அவ்வேடன் பெண்புறாவை வலையுடன் எடுத்துக்கொண்டு ஆண் புறாவைத் தொடர்ந்துச் சென்று அது தங்கியிருந்த மரத்தடியை யடைந்து அதையும் பிடிப்பதற்குத் தகுந்த முயற்சிகளைச் செய்துகொண் டிருந்தான். அந்தச் சமயத்தில் பெருமழை பெய்து குளிர்ந்த காற்று வீசிக்கொண் டிருந்தது. அவ்வேடன் மழையிலும் காற்றிலும் அகப்பட்டுக் குளிரையும் நடுக்கத்தையும் அடைந்து கைகால்கள் விரைத்து உணர் வழிந்து வேரற்ற மரம் போல் அந்த மரத்தடியில் விழுந்துவிட்டான்.

அப்பொழுது வலையி லகப்பட்டிருக்கும் பெண்புறா மரத்தின் மேல் கூட்டிலிருக்கிற ஆண்புறாவைப் பார்த்து, "என்னுயிர் காவலனே! இறைவனருளால் இது காறும் நாமிருவரும் உயிரும் உடலும்போல் பிரிவின்றிச் சுகித்து வாழ்ந்திருந்தோம். யான் எவருக்கு எக்காலத்து என்ன தீங்குச் செய்தேனோ தெரியவில்லை. அத்தீவினைப் பயனாய் இன்று இவ்வேடன் உயிரையும் உடலையும் பிரிக்கும் கொடிய எமன்போல என்னையும் உம்மையும் பிரித்துவிட்டான். இந்த வலிய வலையிலகப்பட்டு உம்மைப் பிரிந்து யான்படும் துயரத்திற்கு ஓர் முடிவில்லை. நீரோ என்னைப் பிரிந்து சிந்தை கலங்கி ஆவி திகைத்துத் தவிக்கின்றீர். நம்மிருவருக்கும் கடுந்துயரத்தை உண்டாக்கிய இக்கொடிய வேடனே நமக்கு சத்ரு ஆவான். ஆயினும் அவன் இப்பொழுது நம்முடைய இருப்பிடத்திற்கு வந்துவிட்டான். நம்மிருப்பிடத்தை யடைந்தபின் அவன் செய்த தீமைகளை அடியோடு மறந்து அவனுக்கு நம்மாலியன்ற உபகாரத்தைச் செய்வதே தருமமாகும். அதுவுமல்லாமல் குளிரால் ஒடுங்கி உணர்வற்று பிணம்போல் கிடக்கின்றான். இவனுக்கு நேர்ந்துள்ள விபத்தானது விரைவில் பரிஹரிக்கப் படாவிடில் உயிர் பிரியும் நிலையினதாக இருக்கின்றது. ஆகையால் அறத்தின் நாயக! தாமதிக்காமல் இவனைக் குளிர் காயும்படி செய்வதே தகுந்த காரியமாகும்" என்றது.

தன் மனைவியின் செவிக்கினிய செஞ்சொற்களைச் சாவதானமாக கேட்ட ஆண்புறா தன் காதலி சொன்ன சொற்கள் யாவும் நீதியும் தருமமுமாகு

மென்று கருதி மிகுந்த கவலையினின்றும் ஒருவாறு சமாதானத்தை யடைந்து, மிகவும் பரபரப்புடன் உலர்ந்த சுள்ளிகளையும் சருகுகளையும் தன் வாயலகினாலும் கால் விரல்களினாலும் இடுக்கிக் கொண்டுவந்து அக்கிராதகன் கிடந்த இடத்திற்குச் சமீபத்தில் சேர்த்தது. பிறகு அக்காட்டில் எரிகொள்ளி ஒன்றை விரைவில் தேடிக் கொண்டுவந்து அச்சுள்ளிக் குவையில் செருகித் தனது விசாலமான சிறகுகளை விரித்து செவ்வையாகத் தீபற்றி எரியும்படி விசிறியது. தீச் சுடர் விட் டெரிந்து சூடு வேடன் உடலில் உரைத்ததனால் அவனைப் பிடித்துக்கொண்டிருந்த குளிர் சூரியனைக் கண்ட பனிபோல் விலகிவிட அவனும் உறங்கினவன் உணர்ந்து எழுந்தாற்போல் எழுந்திருந்தான். குளிரின் உபாதி நீங்கியதும் அவனுக்குப் பசி மிகவும் அதிகரித்தது. உண்பதற்கு ஒன்றும் கிடைக்காதவனாய், கண்கள் சுழன்று வேர்வை மிகுந்து கைகால்கள் சோர்வடைந்து "வனதேவதையே! எனக்கு இக்கடும்பசிக்கு உணவளிப்பா ரொருவருமில்லை; நீதான் உதவலாகாதா! என்று கதறினான்.

அப்பொழுது அவன் பசியால் படும் பாட்டையும் கண்டு சகிக்கமாட்டாமல் ஆண்புறா அவனைப் பார்த்து "எனது இருப்பிடத்தையடைந்த அதிதியே! நீர் இனிக் கவலைப்பட வேண்டியதில்லை. உமக்கு ஒரு நொடிப் பொழுதில் உணவளிக்கிறேன். நீர் வயிறார உண்டு பசிதீர்ந்து சென்று உமது மனைவி மக்களுடன் கூடி சுகித்து வாழ்வீராக. நாங்கள் பக்ஷி ஜாதிகளாகையால் உணவுப்பொருள்களைச் சேகரித்து வைத்துக்கொள்ளும் வழக்கமெங்களுக்கில்லை. அதனால் உமக்கு உணவளிப்பதற்குச் சிறிது தாமதமாகின்றது. இறைவ னருளால் என்னிதயத்தில் நல்ல யோஜனை உதித்திருக்கிறது. அதாவது வெகு நாட்களாக இந்த உடலை சுமந்து இந்த உலகத்தில் சஞ்சரிக்கின்றேன். ஒரு சுகத்தையும் கண்டிலேன். இந்த உடல் எப்பொழுதும் விடும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். இந்த உடல் என்றேனும் விடப்போவது மெய். அன்று ஒருவருக்கும் பயன்படாமல் ஒழிவதைவிட்டு இன்று உன் பசிக்குதவும்படி எனது உடலை உன் முன்னிலெரிகின்ற தீயில் விழுந்து சுட்டுத் தருகிறேன்" என்று மிகவும் சந்தோஷத்துடன் உடல் பூரித்து முகமலர்ந்து தனது சிறகுகளால் அவனுக்கு வேர்வையும் களைப்பும் ஆறும்படி செவ்வையாக விசிறிப் பிறகு எரியையும் செவ்வையாக விசிறி முன்னிலும் அதிகமாக ஜொலித்து எரியும்படி செய்து தீயையும் அவனையும் மூன்றுதரம் வலம் வந்து நமஸ்காரம் செய்து சற்று உயரத்தில் பறந்து "அதிதி தேவனே, அதிதி சத்காரம் செய்யும் பாக்கியத்தை இன்றே பெற்றேன்" என்று சொல்லிக்கொண்டே அவன் காணும்படி சடசடவென்று சப்தித்துக்கொண்டு எரியும் அத்தீயில் விழுந்தது.

சத்ருவான வேடுவன் செய்த தீமைகள் யாவையும் மறந்து அவனை அதிதியாக பாவித்து அவனை உபசரிக்கத் தன்னுயிரையும் கொடுத்த புறவினது கருணையைக் கருணையங் கடலான கடவுள் கொண்டாடி அதற்கு நித்தியானந்த வீட்டை யளித்தனனாதலால் அதன் உயிர் ஒளி பொருந்திய ஓங்காரத்தேரி லேறிக்கொண்டு மோக்ஷ லோகத்திற்குச் செல்வதை அவ்வேடன் கண்டு வியப்படைந்தான். முக்தியைப் பெற்ற அந்த ஆத்மாவைக் கண்ட மாத்திரத்தில் அவனுடைய அஞ்ஞானமெல்லாம் விண்டுபோய் மெய்ஞ்ஞானத்தை யடைந்தவனானான். தான் கீழ் செய்த காரியங்களெல்

லாம் மிகவும் பாபமான காரியங்களாமென்று மிகவும் வருந்தி தன் வலையி லிருந்த பெண்புறாவை வெளியே யெடுத்து விட்டு வலையையும் சுழற்றி வீசி யெறிந்து விட்டான்.

பெண்புறா நெருப்பில் மாண்டுகிடக்கும் தனது கணவன துடலைக் கண்டு உள்ளங் கலங்கி உடல் பதறி விழுந்து புரண்டழுது,

"ஐயோ ! என் நாயகனே ! நானென்ன பிழை செய்தேன். போனவர் திரும்புதலில்லாத மோக்ஷ வீட்டையடைந்து இப்படியும் நீண்ட தூக்கத் தைக் கொள்ளலாமா? உம்மைப்பிரிந்து ஒரு நொடிப்பொழுதும் உயிர் சுமந்து இருக்க என்னால் முடியவில்லை. நீர் விழுந்த நெருப்பில் நானும் விழுந்து நமதில்லத்திற்கு வந்த விருந்தினருக்கு எனதுடலையும் சுட்டுத் தருகின் றேன். என்னையும் நீர் சென்றவிடத்திற்கே அழைத்துக்கொண்டு செல்வதே அருளுடைய உமக்கு தகுதியாகு"மென்று சொல்லிக்கொண்டே அந்த வேடனையும் தீயையும் வலம் வந்து நமஸ்காரம் செய்து "அதிதி தேவனே ! அடியாளின் உடலையும் புசித்துக் களிப்படைய" வேண்டுமென்று சொல்லிக் கொண்டே அத்தீயில் விழுந்தது.

உடன்கட்டை யேறிய பதிவிரதைகளின் தருமத்தை அனுட்டித்துக் காட்டிய பெண்புறாவின் கற்பையும் அருளையும் கண்ட சாக்ஷாத் தரும மூர்த்தியாகிய சர்வேஸ்வரன் உள் மகிழ்ந்து அப் பெண்புறாவிற்கும் பேரின்ப வீட்டை யளித்தவனாதலால் அதன் உயிரும் ஒளிமிக்க ஓங்கார விமானத்தில் எதிர்கொண்டழைக்கும் தனது காதலனுடன் சென்று அள விலா ஆனந்தத்தை யடைந்தது.

இவ்விரண்டு அழகிய புறாக்கள் கருணையே வடிவெடுத்தாற்போல் வேடனுக்கு உதவிசெய்ய தம் முயிரையும் கொடுத்த செயலைக்கண்ட அவ் வேடன் மெய்ஞ்ஞானத்தைப் பெற்று மாண்டுகிடக்கும் இரண்டு புறாக்களை யும் கண்டு "சிறந்த தம்பதிகளே ! என்னைப்போன்ற மஹாபாபியும் உம் மைப் போன்ற புண்ணியசாலிகளும் எவ்வுலகத்திலுமில்லை. நான் பெறு தற்கரிய மானிடப் பிறப்பைப் பெற்றிருந்தும் நன்மை தீமைகளை அதாவது பாப புண்ணியங்களைப் பகுத்தறியாமல் பல்லுயிர்களையும் கொன்று அவற் றின் உடலை பிணம் தின்னும் கழுகுபோல் தின்று இந்த ஊன் உடம்பை வளர்த்து பாபத்தை அதிகமாக்கிக் கொண்டேன். இறைவன் தன்னை வணங்கக் கொடுத்த இச் சரீரத்தை அவனுக்குத் தொண்டுசெய்ய உபயோ கிக்காமல் மனம்போன போக்கெல்லாம் போய் பாபமே செய்து பாவியா னேன். இத்தால் அருநரகடையும் பயனையே படைத்துக் கொண்டேன். என்னைப்போன்ற அதமாதமன் நானே யாவேன்.

அழகிய புறாக்களே ! நீங்கள் சாஸ்த்ராப்யாசத்திற்கு யோக்யதை யில்லாத பக்ஷிகளாய் பிறந்திருந்த போதிலும் சாஸ்த்ரங்களில் சிறந்த சா ணாகத தர்மம் அதாவது அடைந்தவரைக் காப்பாற்றுவதென்ற சிறந்த தரு மத்தை அனுஷ்டித்துக் காட்டினீர்! நீங்களே எனக்கு ஞானோபதேசம் செய்த சத்குருவாவீர். ஞானமும் அனுஷ்டானமும் உம்மிடத்தில் பூர்ணமாக இருந் தமை காட்டினீர். ஞானனுஷ்டான சம்பன்னர்களான ஆசாரியர்களை மெய்யடியார்கள் பக்ஷிகளாக வியவஹரித்திருக்கிறார்கள். நீங்கள் பக்ஷிக ளாகவே தோன்றி எனக்கு ஆச்சாரியராகின்றீர்.

நல்ல ஞானத்தையும் தக்க நடத்தையையும் உடைய குருவை அடைந்

# விதியின் விளைவா?
# மதியின் பிறழ்வா?

—(0)—

(பே. இராமானுஜம்.)

"என்ன சங்கரையர்வாள்! ரொம்ப யோசனையி லிருக்காப்போ லிருக்கே?"

"வாருங்கோ, வாருங்கோ! யோசனை என்ன இருக்கு? அந்த பழி காரப்பயல் என் குடும்ப கௌரவத்தைக் கெடுத்ததல்லாமே, தீராத கவலையி லல்லவா அழுத்தி விட்டான்!"

"அவன் என்னங்காணும் செய்வான்? உம்மேலே பிசகு; குட்டி சிறு சாயிருந்தா என்ன? எப்பொ புருஷனில்லியோ அப்பவே மொட்டை யடிச்சு வெள்ளை துணியெ குடுத்து மூலேயிலே உக்காரவச்சூடு மென்று நான்மட்டுமா சொன்னேன், ஊரே சொல்லித்தே, கேட்டீரா? போதாக் குறைக்கு அவள் இஷ்டப்படி யெல்லாம் வெளியே அலையும்படி விட்டீர்; அதன் பலனை யநுபவிக்க வேண்டாமோ?"

"கிருஷ்ணமூர்த்தி! என் நிலைமையில் நீர் இருந்தால் இப்படிச் சொல்லமாட்டீர். என் ஆத்துக்காரி இறந்து 14 வருஷமாகிறது; அப்பொ லக்ஷ்மி ஒரு வருஷத்துக் குழந்தை; சிறுசுலேயிருந்து கண்ணுங் கருத் துமா வளர்த்து நல்ல இடத்திலேதான் கொடுத்தேன்; என் துர்பாக்கியம் கல்யாணம் செய்த சில வருஷத்திலேயே பிள்ளையாண்டான் போய்ட்டான். என் பொண்ணு புருஷனில்லாவிட்டாலும் வீட்டோடு சௌக்யமாயிருந்தா போதுமின்னு என் ஆத்துக்காரி யிறந்ததெகூட மறந்திருந்தேன். நீர் தான் சொல்லுமே, அந்த சின்னஞ் சிறுசை லோக சுகமே தெரியாத

---

தால் தருமமூர்த்தியாகிய இறைவன் தானே வலுவில் மோக்ஷத்தை யளிப் பானன்றோ! உம்மை குருவாக அடைந்த எனக்கு மோக்ஷவீடு கிடைப்பதில் சிறிது ஐயமில்லை. நீர் செய்த உதவியை மறந்து இவ்வுடலுடன் இருக்க நான் சிறிதும் சகிக்கமாட்டேன். நீர் புக்க உலகத்திற்கு என்னை அழைத்துக் கொண்டுபோக வேண்டுமென்று அவ்வேடனும் அத்தீயில் விழுந்தான். அவனது குருபக்திக்கு வியந்து பரமகுருவாகிய பரதேவன் அவனுக்கும் அளவிலா ஆனந்த வீட்டை யளித்தான். ஆதலால் அவனுடைய உயிரும் அந்த இரண்டு தம்பதிகளும் ஓங்கார விமானத்திலேறிக் கொண்டுவந்து எதிர் கொண்டழைப்பச் சென்று நித்தியானந்த வீட்டையடைந்தது.

பெண்ணை, எப்படிங்காணும் மொட்டை யடிச்சு விகாரப்படுத்த மனசு வரும்?''

''விகாரமாக்க வேணும்; வெளியே போகாமே ஆத்திலேயே தங்கியிருக்கும்படி செய்யப்படாதோ? அப்படித்தான் போனுளே நம்பளவகி ஒருத்தர் கிடைக்கிலியா?''

''அதுதான் காணும் என் மனசையும் அறுக்கறது. எங்கேயாவது சௌக்யமாயிருக்கட்டும்; அழைச்சிண்டு போனவன் நம்மவனுயிருந்தா துக்கமில்லியே!''

''ஒரு காரியம் செய்யும்; நான் உமக்கொரு யுக்தி சொல்றேன். இத்தனைநாளா அவாளுக்கு மிரட்டியின்னு லெட்டர் எழுதினீர்; இப்போ அப்படி வேண்டாம்; பழய சம்பவத்தெ யெல்லாம் மறந்துட்டதாயும், ரெண்டு பேரு புருஷன் பெண்சாதியாக சௌக்யமா வாழ ஈஸ்வரனைப் பிரார்த்திப்பதாயும், ஆயுசுக்குள்ளெ ரெண்டு பேரையும் ஒருதரமாவது கண்ணுலே பார்த்து சந்தோஷப்படாமே ஜீவன் போகாதென்றும், கட்டாயம் புறப்பட்டு வரவேணுமென்றும் நைச்சியமாக எழுதும்; ரெண்டுபேரும் வருவா, அப்புறம் மத்ததெ சொல்றேன்''

சங்கரையர் முகம் சிறிது மலர்ந்தது.

* * * *

காவிரியாற்றங்கரையில் உள்ள செழிப்பான கிராமம் திருக்கரையூர். அவ்வூரைச்சுற்றிலும் தென்னந்தோப்பும், வாழை கரும்பு தோட்டங்களும், செந்நெல் வயல்களும் கண்ணுக்கினிய காட்சியாக இருக்கின்றன. ஒன்றிரண்டு முதலியார் குடும்பங்கள் தவிர, மற்ற வீடுகளெவ்வளவும் பிராமணர்கள் வசிப்பவை. கிராமத்தில்—அதுவும் காவிரியாற்றங்கரையில் உள்ள சிற்றூரில் விவசாயத்தைத் தவிர வேறு என்ன தொழில் இருக்கும்? அங்குள்ள அவ்வளவு பேருக்கும் நிலபலங்கள் உண்டு. சங்கரையருக்கும் அருணுசல முதலியாருக்கும் அவ்வூர் நிலத்தில் முக்கால் பாகம் சொந்தமாயிருந்தது. இப்பொழுது அந்த இரண்டு பண்ணையும் சிறிது அசைவு கொடுத்துவிட்டது. எனினும் ''யானை படுத்தால் குதிரைமட்டம் இராதா?''

அருணுசல முதலியாருக்கு இரண்டே புதல்வர்கள். மூத்த மகன் மனைவி மக்களோடு பண்ணை காரியங்களைக் கவனித்துவருகிறுன். இளையவனுக்கு மணமாகவில்லை. திருச்சி ஜோஸப் காலேஜில் பி. ஏ. பரீட்சையில் தேர்ச்சியடைந்து, லண்டன் சென்று டாக்டர் பரீட்சையிலும் வெற்றியோடு ஊருக்கு வந்தான். வந்த சில மாதங்களில் பெங்களூர் கவர்ன்மெண்டு ஆஸ்பத்திரியில் அசிஸ்டெண்ட் சர்ஜன் வேலை கிடைத்தது.

இலட்சுமி சங்கரையரின் ஏக புதல்வி. செல்வக் குடும்பத்தில் பிறந்ததற்கேற்ப கல்வி யறிவும் ஒழுக்கமும் வாய்ந்தவள். அவளை மணந்து கொள்ள பலர் முயன்றனர். அழகிற் சிறந்த அவளையும், மற்ற செல்வத்தையும் அனுபவிக்கலா மல்லவா? கிருஷ்ணமூர்த்தி ஐயர் சங்கரையருக்குத் தூரபந்து. வஞ்சம் நிறைந்த நெஞ்சர். ஏழை சங்கரையர் ஆஸ்தியைச்

தனக்கு உரிமையாக்கிக்கொள்ள விரும்பினர். துரதிர்ஷ்டசாலி. அவருக்கு ஆண்குழந்தையில்லை, ஆறு பெண் மக்கள். 60 வயதான தனக்கு இலட்சுமியைக் கொடு என்று கேட்க அவர் மனம் துணியவில்லை. தனக்கில்லாவிட்டாலும் போகட்டும் தன் மனைவியின் சகோதரன் தபுதார (தாரமிழந்தவன்) னுகிய சாமாவையனுக்குத் தரும்படி கேட்டார். சாமாவையன் பலே குடிகாரன். பிராமணர்களிலும் குடிப்பவர்களுண்டா என்று நேயர்கள் வியப்புறமாட்டார்கள். கிளியை வளர்த்துப் பூனையிடம் கொடுப்பவருண்டா? சங்கரையர் மறுத்துவிட்டார். அன்றிருந்து கிருஷ்ணமூர்த்தி ஐயருக்கு சங்கரையர்மேல் வெறுப்பு எனினும் அதை வெளியே காட்டாமல் அவரிடமுள்ள பொருளைச் சிறிது சிறிதாகக் கவர்ந்துவிட வேண்டுமென்று நயவஞ்சகமாக நட்புடையவர்போல் நடித்துவந்தார்.

சங்கரையர் பேரையூர் பெருஞ் செல்வர் கோபாலையர் புதல்வனுக்குத் தனது மகளை மணமுடித்து வைத்தார்; மணம் நடந்த சில வருஷங்களிலேயே கணவனை யிழந்து பிறந்த வீடே கதியென வந்துவிட்டாள். ஒரு வருஷ முழுவதும் துயரப் பெருக்கிலேயே தவித்துக்கொண்டிருந்தாள். தந்தையின் அன்பு மொழியினுலும், ஆதரவாலும் துயரை ஒருவாறு மறந்தாள். எனினும் மற்ற சதிபதிகளைக் காணும் பொழுதெல்லாம் அவள் நெஞ்சு குமுறும்.

பெங்களூர் அரசாங்க மருத்துவசாலையில் தலைமை யுதவி வைத்தியராக வேலை பார்க்கும் ஸ்ரீநிவாசன் சில சமயம் தனது பிறந்த வூராகிய திருக்கரையூர் வந்து பெற்றோர்களைப் பார்த்துவிட்டுப் போவது வழக்கம். அப்பொழுதெல்லாம் அவருடைய திருமணப் பேச்சு நடக்கும். சீனிவாசனே இப்பொழுது அவசரமில்லையென்று அந்தப் பேச்சுக்கு முற்றுப்புள்ளி கொடுத்துவிடுவார். ஆனுல் அவர் மனதுக்குள் சங்கரையரின் செல்வ மகள் இலட்சுமியின் இரக்கமான முகம் காட்சியளிக்கும். அப்பொழுது அவர் கண்களில் நீர் கலங்கித் துளிக்கும்.

அன்று நல்லநாள். மாலையில் திருக்கரையூர் ஆற்றங்கரையில் சீனிவாசன் பொழுது போக்குக்காகத் தனித்து வீற்றிருந்தார். தற்செயலாக லட்சுமியும் அங்கு வந்தாள். இதைத்தான் ஊழ்வினை யென்பரோ? இருவர் கண்களும் சந்தித்தன. முதல் சந்திப்பும் இதுதான். மட்டடங்கா ஆசை வெள்ளம் இருவருக்கும் கரைபுரண்டோடியது. யார் பேசுவது முதலில்? சீனிவாசன்தான் ஆரம்பித்தான்.

"லக்ஷ்மி! சில நாட்களாக உன்னைப் பற்றிய சிந்தனை எனது சிந்தையைவிட்டு அகலமாட்டேனென்கிறது. நீயும் கல்வி யறிவில் சிறந்தவள். நேர்மையற்ற சமுகப் பழக்கம் கிடக்கட்டும், நாமிருவரும் மணம் புரிந்துகொண்டு சதிபதிகளாக வாழ்ந்தாலென்ன?"

"மணம்புரிந்துகொண்டா? நன்றாய்ச் சொன்னீர்கள்! நீங்கள் யார்? நான் யார்? சமூக பழக்கவழக்கங்களென்ன? அதல்லாமல் நான் ஒரு துர்ப்பாக்கியவதி—விதவை"

"அதெல்லாம் எனக்குத் தெரியாதா? தெய்வசாக்ஷியாக, பெரியோர்கள் ஆசீர்வாதத்தோடு மணம்புரிந்து வாழலாம். உனது மனந்தான் இசைய வேண்டும்."

"ஆசீர்வாதமா? நம்மை ஜாதிப்பிரஷ்டம் செய்து விரட்டி யடிக்காம லிருந்தால் போதுமே!"

"அந்தப் பெரியோர்களை நான் குறிப்பிடவில்லை. நம்போன்றவர்களுக்கு ஓர் வரப்பிரசாதம்போல் ஆரியசமாஜம் இருக்கிறது. வேத விற்பன்னர்கள் நிறைந்தது. அவர்கள் ஆதரவில் நாம் சதிபதிகளாக நமது இந்து சமயத்திலேயே கம்பீரமாக வாழ்க்கை நடத்தலாம்."

இலட்சுமி புன் முறுவலோடு கைவளையலைத் திருத்தினுள்.

மறுநாள் பிறரறியாமல் சீனிவாசன் இலட்சுமி சமேதனுகப் பெங்களூர் சென்று ஆரிய சமாஜ ஆதரவில் ஆன்ருேர்கள் முன்னிலையில் ஆடம்பரமாகத் திருமணம் புரிந்துகொண்டான்.

* * * *

திருக்கரையூர் நிலைமையைச் சொல்லவா வேண்டும்? அவ்வூரிலும், அதற்கருகிலுமுள்ள பல சிற்றூர்களிலும் பரிகாசமும் பழியுங்கலந்த முறையில் இதே பேச்சு. "அந்த பட்டிமுண்டை என் மகனை மயக்கி என் குடும்பத்திற்கே ஹானியுண்டாக்கிவிட்டாள்" என்று சங்கரையரைத் திட்டினுர் அருணுசல முதலியார். சங்கரையர் சங்கதிதான் நேயர்களுக்குத் தெரியும். சீனிவாசனுக்குப் பல முறை கண்டித்துக் கடிதமெழுதினுர். அதைத் தம்பதிகளிருவரும் பார்த்து வாய்விட்டுச் சிரிப்பார்கள். இவ்வாறு பல வருஷம் கழிந்தன. இலட்சுமிக்கு நாளடைவில் தன் தந்தையைப் பார்க்க வேண்டுமென்ற ஆவல் உள்ளூர வளர்ந்துவந்தது. என்ன இருந்தாலும் சின்னஞ் சிறுசிலிருந்து கண்ணுங் கருத்துமாக வளர்த்த தந்தையல்லவா? ஆனுல் அதைத் தன் கணவனிடம் கூறத் துணியவில்லை. இந்நிலைமையில் கிருஷ்ணமூர்த்தி ஐயரின் தூண்டுதலால் எழுதிய கடிதம் வந்து சேர்ந்தது. அதைத் தன் கணவனிடம் காட்டி ஒருதடவை போய்வருவோம் என்று கேட்டாள். "எனக்கென்னமோ இஷ்டமில்லை; இக்கடிதம் உண்மையென்று என் மனம் ஒப்பவில்லை" என்ருர் அவர். அவ்வளவுதான்; அவள் கண்களிலிருந்து நீர்த்துளிகள் பொலபொல வென்று உதிர்ந்தன. சீனிவாசனுக்கு மனம் உருகிவிட்டது. "சரி, வேண்டுமானுல் நீ போய்வா; நான் உன்னை ஊர்வரை கொண்டுவந்துவிடுகிறேன். நான் மட்டும் ஊருக்குள் நுழையமாட்டேன்" என்ருர். அவளும் ஒருவாறு சம்மதித்தாள். இரவோடு இரவாய்க் காரில் சென்று சூர்யோதயத்திற்கெல்லாம் திருக்கரையூர் அருகில் காரை நிறுத்தி "சரி, ஜாக்கிரதையாகப் போய்வா, ஊரில் பலர் உன்னைப் பற்றி உன் காதில்விழும்படியாகவே பரிகாசமாகப் பேசுவார்கள். நீ அதைப் பொருட்படுத்தாமல் வீட்டிற்குள்ளேயே இருந்துவிட்டு நாளை இந்நேரம் இங்கு வந்துவிடு. நான் தயாராக இருக்கிறேன்" என்ருன் சீனிவாசன். இலட்சுமிக்குத் தன் தந்தையைப் பார்க்கப்போகிருேம் என்ற ஆசை ஒருபக்கமிருந்தாலும், அந்த ஒருநாள் தன் கணவனைப் பிரிந்திருக்க வேண்டுமே என்ற கவலை வருத்தியது. இரு கையையும் கூப்பிப் "போய் வருகிறேன்" என்ருள். இரண்டே வார்த்தைதான்? அதைக்கூடத் தெளிவாகக் கூறமுடியாமல் துக்கம் தொண்டையை அடைத்துக்கொண்டது. சீனிவாசனுக்கும் கண்களில் நீர் கலங்கியது. "போய்வா" என்று ஆசீர்வதித்தான். இலட்சுமி தன் கண்ணிற்குத் தெரியும் வரை இமையாமல் பார்த்துவிட்டுக் காரைப் பெங்களூருக்குச் செலுத்தினுன்.

மறுநாள் பொழுது புலர்வதற்கு முன்பே திருக்கரையூருக் கருகில் காரை நிறுத்திக்கொண்டு தனது மனைவியை யெதிர்பார்த்துக்கொண்டிருந்தான். அவள் வரவில்லை. ஊருக்குள் ஏக கூச்சலும் குழப்பமுமாக இருந்தது. சீனிவாசன் மனம் தத்தளித்துக்கொண்டிருந்தது. ஊருக்குள்ளிருந்து நாலைந்து பெயர் கூட்டமாக வந்தார்கள், சீனிவாசன் டிரைவரையழைத்து ஊருக்குள் என்ன விசேஷமென்று கேட்டுவரும்படி அனுப்பினான். அவன் அடுத்தவினாடி வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு "ஐயோ! நம்ப தங்கவிக்கிரகம்—எஜமானியம்மா இறந்துபோய்விட்டார்களாம்!" என்று கூறிக் கதறினான். சீனிவாசன் என்ன சொன்னானென்று அந்த வண்டியோட்டி காதில்கூட விழவில்லை. அப்படியே பிணமாய் விழுந்தான்!

* * * *

பழிக்குப் பயந்து இலட்சுமி தற்கொலை செய்துகொண்டாளென்றும் மாரடைப்பினால் இறந்திருப்பாளென்றும் என்னென்னமோ பேசிக்கொண்டார்கள். சங்கரையர் மிரளமிரள விழித்துக்கொண்டு வெறிபிடித்தவர் போல் வீற்றிருந்தார். கிருஷ்ணமூர்த்தி ஐயருக்கு உள்ளூர பரம சந்தோஷம். ஆனால் வெளியே மிக்க துயரமுடையவர்போல் காட்டிக்கொண்டிருந்தார். அந்த பாவி கிருஷ்ணமூர்த்தி சொன்னாலும் தன் அருமருந்தன்ன மகளுக்குத் தன் கையாலேயே பாலில் விஷங்கலந்து கொடுக்க எப்படி மனந்துணிந்ததோ சங்கரையருக்கு? இவ்விஷயம் தம் இருவருக்கும் தான் தெரியுமென்று அவர்கள் நினைத்துக்கொண்டிருக்கிறார்கள்! ஆனால் அந்த ஆண்டவன்கூடவா அறியமாட்டான்?

# மாமதி

(பி. சின்னத்தம்பி.)

கும்மி மெட்டு.

காரிகை காண கடிந்து வந்தேன்—நல்ல
காரிருள் நீக்க விரைந்து வந்தேன்
பாவலர் நாவில் பதிய வந்தேன்—நல்ல
நாவலர் நாவில் நல்க வந்தென். (1)

மாமலே தாண்டியே ஓடி வந்தேன்—பெரு
மாநதி பலவும் தாவி வந்தேன்
காடு பலவுங் கடந்துவந்தேன்—பெரு
நாட்டினைக் கண்டு களித்திடவே. (2)

புல்லியர் மனம் வாட வந்தேன்—எழில்
அல்லி மலரும் மலர வந்தேன்
மங்கையர் மனம் மகிழவந்தேன்—எழில்
பங்கய மலரும் வாட வந்தேன். (3)

அரியவையர் கும்மியடிக்க வந்தேன்—அந்த
குரவைக் கூத்தினைக் காண வந்தேன்
சிறுர் விளையாட ஓடிவந்தேன்—திரு
சிவனுர் முடிமேல் ஏறிவந்தேன். (4)

ஆலமர் கண்டன் சிவனுராம்—அவர்
பாதம் பணிந்திட்டால் பாக்யமாம்
அன்னவர் முடி மேலமருவேன்—எந்தன்
பெருமை தன்னை யறி வீரோ! (5)

ஆற்றின் மீதும் எந்தன் ஒளி! சிறு
ஊற்றின் மீதும் எந்தன் ஒளி!
ஆழி மீதும் எந்தன் ஒளி! கரு
மேரு மீதும் எந்தன் ஒளி! (6)

காரிருளாம் அரக்கனையும்—கணவர்
பிரிந்த மட வாரையும்
சிறிதுமே இரக்கமின்றி—நல்ல
சித்திரை வதையே செய்திடுவேன். (7)

ஐம்மூன்று நாள்கள் வளர்ந்திடுவேன்—மற்ற
ஐம்மூன்று நாள்கள் வீழ்ந்திடுவேன்
இத்தனை பெருமை தானடைந்தோன்—எந்தன்
குறை தன்னையும் அறிவீரே! (8)

நீரில் குமிழி இளமை—செல்வம்
நீரில் சுருட்டும் நெடுந்திரைகள்
நீரில் எழுத்தாம் யாக்கை—என்ற
நீர்மைப் புலவர் மொழி கேளும். (9)

கேட்டுச் சும்மா இருந்திடாதீர்—வாழ்நாள்
கடத் தாதீர் வீணாக
காலத்தை வீணாய்க் களித்திடாதீர்—நல்ல
கவலை மிக்கு வாழ்ந்திடாதிர்! (10)

இரப் போர்க் களித்திடுமின்—நல்ல
வறுமைப் பிணியைப் போக்கிடுமின்
அடிமை வாழ்வு வாழாமல்—நல்ல
உரிமை யோடு வாழ்வீரே. (11)

அருணன் எழுந் தனனே—யானும்
அயல் உலகை அடைதல் வேண்டும்
பெருமை சான்ற தமிழர்காள்—யான்
போகின்றேன் நீவிர் இருப்பீரே. (12)



# வீடணன் அடைக்கலம் மேன்மைத்தோ!

(கூடல்-நாவக்கரசன்.)

வீடணன்—தசக்ரீவனது இளையானுக்கு இளைய உடன்பிறந்தான். கொடிய அரக்கர் நடுவேயும் 'நூற்றில் ஒன்று, ஆயிரத்தில் ஒன்று நல்லவர் உண்டு' என்னும் வாய்மொழிக் கிணங்க ஆணி லொன்றும் பெண்ணி லொன்றுமாக அருங்குணம் பொலிய அமைந்திருக்கிறார்கள வீடணனும் திரிசடையும்.

கவிச் சக்ரவர்த்தியாகிய கம்பர் அவனது குணங்களை ராமதூதனாகிய அனுமனை தன்மனத்தில், 'குற்றமில்லதோர் குணமுளன் இவன் எனக் கொண்டான்' என்று கூறுகிறார். எனினும் தொகுத்து ஒரே சொல்லில் 'குற்றமில்லதோர் குணமுளன்' என்று கூறியது திருப்தியளிக்கவில்லை. அது போதாது; இன்னும் அந்த 'குற்றமில்லாத குணம்' என்ன என்பதை விரிவுரையாக்க வேண்டுமென எண்ணுகிறார். ஒருவன் சிலவற்றை கைக் கொள்ள வேண்டும்; சிலவற்றை கைவிட வேண்டும். அங்ஙனமாகவே 'பொய் பேசுதல், அதனின்றும் தோன்றும் திருட்டுத் தொழில், இதன் வழித் தோன்றும் கொலை முதலிய பாதகச் செயல்கள்' இன்னும் எஞ்சி நின்ற கொடிய பழக்க வழங்கங்களை எல்லாம் தொகுக்க உண்டாகும் 'பொல்லா வொழுக்கம்' இவைகளை வெறுத்துத் தள்ளினான் வீடணன் என்கிறார். பின்னர் அவன் கைக் கொண்டதைக் கூறுங்கால 'முன்னர் கூறியவற்றிற்கு முற்றும் மாறான மெய்ம்மையும், இரக்கமும், தருமத்தோடு கூடி விளங்குகின்ற பொறுமையும் தனக்கு ஆபரணமாகப் பூண்டான் என்கிறார். குணங்கள் மட்டும் இருந்தாற் போதுமா? செய்கையும் அதற்குத் தக இருக்க வேண்டுமல்லவா? ஆம்—உத்தமர்கள் செய்யும் செய்கைகளையே செய்வான் என்கிறார். பின்னரும், தொகுத்து, 'தமிழ் வேதம் சொன்ன அறவழியை பின்பற்றி நின்றவன்' எனச் செம்மைசான்ற சொற்களால்,

பொய்யும் களவும் பாதகமும் பொல்லா வொழுக்கும் அவை கடிந்து
மெய்யும் தயவும் தருமமுடன் விளங்கும் பொறையு மிவைபூண்டு
செய்யும் செயல்க ளவையெல்லாம் சிட்டர்செயும் செயலாகி
ஐயன்புகழ் வீடணன் மறைக ளறைந்த அறத்தின் வழிநின்றான்.

என்றும் பாவில் அமைத்து இன்ப முறுகிறார்.

இத்தகைய மேன்மைக் குணம் பொலிந்த வீடணன் தன் தமையன் மருளுறு மனத்தினால் 'சீதையை விடுவிக்கும்படி' தான் கூறிய வாய்மொழி மறுத்தான் என்பதால் ராமனிடத்து அடைக்கலத்தைப் பெற விழைகிறான். இது இராமர்க்கும் குரங்கினச் சேனைக்கும் தெரியவருகிறது. அன்னவர்களுக்குள்ளே சந்தேகம் எழுகிறது. அனுமன் வீடணனைப் பற்றுவதில் கெடுதி ஒன்றுமில்லை யெனப் பற்பல விதமாகக் கூறுகிறான். எனினும் குரங்குச் சேனையின் சந்தேகம் தீர்ந்தபாடில்லை. இராமனே கூற ஆரம்பிக்கிறான்.

"வெற்றி வரினும் சரி, அன்றி தோல்வி வரினும் சரி, அழிந்தாலும் சரி, அழியாது வாழ்ந்தாலும் சரி, வருவது வரட்டும். அடைக்கலம் என்பவனை காப்பாற்ருது விட்டுவிடலாகுமோ?

"வெற்றியே பெறுக; தோற்க;
வீக; வீயாது வாழ்க;
பற்றுதலன்றி உண்டோ
அடைக்கலம் பகர்கின்ருனை?"

யுத்தம் ஆரம்பிக்கு முன் வந்தானில்லையே, இப்பொழுது தானே வந்தான். அதினும் தன் தமையனையே வருத்திவந்தானே—காட்டிக் கொடுத்தானே. நம்மையும் ஒருகால் துரோகம் செய்யானே? என்றெல்லாம் சந்தேகம் கொள்ளின், அப்படியே அவன் துரோகம் செய்வதாக வைத்துக் கொள்வோம், அதனுல் நான் இறந்து போனுலும், 'நான் நாட்டைத் துறந்த நாளில் எந்துணைப் புகழுண்டோ அதனினும் மிக்க புகழ்பெற்று "சரணென்று வாழ்ந்தவன் சூழ்ச்சியால் இறந்தான். அந்தோ! அத்தகைய கொடியனுக்கும் அடைக்கலம் ஈந்தவனன்ருே" என்று உலகத்தார் போற்ற எக்காலத்தும் நிலைத்திருப்பேன் அன்ருே?

"இன்றுவந்தான் னென்றுண்டோ?
எந்தையை யாயை முன்னம்
கொன்று வந்தான் என்றுண்டோ?
..................பின்னைப்
பின்று மென்ருலும் நம்பால்
புகழன்றிப் பிறிதுண்டாமோ?"
"இன்றுவந்து
துன்னினுன் சூழ்ச்சியாலே
இறந்தநாள் அன்ருே என்றும்
இருந்தநா ளாவது என்ருன்"

அன்றியும். எம் குலத்தாதை சிபி ஓர் புருவின் அடைக்கலம் காக்க துலைபுகுந்தான் என்ருல் அவன் வழித் தோன்றலாகிய யான் அடைக்கலம் தவிர்த்தல் அழகிதோ? வேதங்கள் 'நினக்கு அபயம் என்றவன் உயிரைத் தன்னுயிர் போன்று ஓம்பாதவன் மீள்கிலாநரகில் வீழ்வான்' என்று கூறுவது அறியீரோ? அன்று தேவர்களுக்கு 'உங்களுக்கு தீமைசெய்த அரக்கரைக் கொன்று ரக்ஷிப்பேன்' என்று அபயம் கொடுத்த யான் இன்று அபயம் ஈயவில்லையாயின் அவ்வுரை கடந்ததாகுமே யன்ருே? ஆகலின் 'அபயம் என்ற பொழுதத்தே அபயதானம் ஈதலே கடப்பாடு' என்றுகூறி சுக்ரீவனை நோக்கி வீடணனை அழைத்துவர ஏவுகிருன்.

அங்ஙனமே மெய்யினுக்கு உறைவிடமான வீடணன் 'உய்ந்தனன் அடியேன்' என்று முறையொடு வணங்கி, இளையவனுகிய பரதன் முடியிற் கவித்த திருவடி மகுடம் எனக்கும் கவித்தி. ஐய' என்று வேண்டுகிருன்.

'நின்னொடும் எழுவரானேம்' எனத் திருவடி முடியிற் சூட்டுகிறான் இராமன். வீடணனும் 'கேவலம் அடிமையிலும் சிறந்த அடிமையானேன்' எனக் கூறி இன்பமுறுகிறான்.

என்னே இவனின் மனப்பான்மை! வீரர் குலத்தில் வீணைக்கொடியோனின் இளையவனாகப் பிறந்தும், அவன் மனம் அடிமைத் திறத்தையே நாடி நின்றது. தனக்கு வேண்டுவ வேண்டியாங்களித்து, பன்னெடுங் காலம் பக்கத்திருந்து காத்த தன் தமையன் செய்த குற்றத்தை எடுத்துக் காட்டி திருந்துமாறு கூற, அவன் திருந்தானாயின், அது ஒன்று கருதி, அவன் தந்த உணவுகொண்டு வளர்த்த அவ்வுடலை அவனுக்கே அர்ப்பணம் செய்யவேண்டிய யுத்த காலத்திலே, அவ்வூத்தை உடலை விரும்பி அன்னவனை வெறுத்து அயலானிடம் அடைக்கலம் புகுபவனோ ஆண்மகன்?—அவனது அச்செய்கை மேன்மைத்தோ?

துரோணர், வீட்டுமர் முதலிய பெரியோர்கள்—தவசிரேட்டர்கள், துரியன் செய்தது அக்ரமமெனத் தெரிந்துகொள்ள வில்லையா? அவனுக்கு புத்தி புகட்ட வில்லையா? அவன் அதைக் கேட்க மறுத்தான் என்று அவனை விட்டு ராமனையொத்த கிருட்டினனிடஞ் சரணமடைந்தால் மேன்மைபெறலாம் என்பதை அறியவில்லையா? அங்ஙனம் தெரிந்தும் அடைக்கலம் வேண்டினரா? அவன் பக்கலில் தானே பொருந்தினர். ஏன்?

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

என்பது அன்னவர் செவிகளில் ஒலித்ததே காரணம் அன்றோ?

'குற்றமில் குணமுளன்' என வீடணனைச் சிறப்பித்த கம்பரும் அவன் 'நன்றி கொன்ற ஒரு குற்றமுளன்' என்பது தோற்ற,

'பயப்படுகின்றாய் ஆதலால் யுத்தம்செய்ய ஆளாகவில்லை; மனிதனிடத்து தஞ்சம் என்று சார்ந்தாய்; வஞ்சித்த மனத்தையுடையாய் உடன்பிறப் பென்பதை விடுத்தாய்; நஞ்சுபோன்ற உன்னை உடன்கொண்டு வாழ்தல் நல்லதோ' என்னும் பொருள்படும்படி,

"அஞ்சினை யாதலின் அமர்க்கு மாளலை
தஞ்செ மனிதர்பால் வைத்த சார்பினை
வஞ்சனை மனத்தினை பிறப்பு மாற்றினை
நஞ்சினை உடன்கொண்டு வாழ்தல் நன்றரோ"

என்று இராவணன் வீடணனை நோக்கிக் கூறிய சொற்களாக பாடியிருப்பது காண்க.

---




**புருஷர்களுக்கு க்ஷவரஞ் செய்யும் மனைவியர்**

ஜப்பானில் பெண்பாடசாலைகளில் க்ஷவரத் தொழில் ஒரு பாடமாகக் கற்றுக் கொடுக்கப்பட்டுவருகிறது. இதனால் பிற்காலத்தில் அம்மகளிர் தங்கள் கணவன்மாருக்கு முக க்ஷவரமும், தலை க்ஷவரமும் செய்து, ஸலூனைத் தேடிப் போகும் சிரமத்தையும், பணச் செலவையும் குறைக்கின்றனராம்.

***

**கண் பார்வையால் நோய்போக்கும் இந்திய வைத்தியர்**

ஸர்தார் கான்ஸிங் என்னும் இந்திய வைத்திய ரொருவர் தம் கண் பார்வையாலேயே தம்மை நாடிவரும் நோயாளிகளின் நோயைப் போக்குகிறாராம். எனவே, தினசரி 400 நோயாளிகளுக்கு மேல் இவரிடம் சென்று சிகிச்சை பெற்று வருகின்றனராம். ஆனால் அவர் நோயாளிகளிடம் ஒரு தம்பிடியும் வாங்குவதில்லையாம். பல விஞ்ஞானிகளும், டாக்டர்களும் இவரிடம் நோய் தீர்க்கும் இச்சுலபமான முறையைக் கற்றுக்கொள்ள முயன்றனர். ஆனால் அவர்களால் ஸிங்கின் நோய் தீர்க்கும் சக்தியின் இரகஸியத்தை யறிய முடியவில்லையாம்.

***

**1400 மைல் நீளமுள்ள சீனத்தின் மதில் அரண்**

சீனத்தில் ஒரு பெரிய மதில் அரண் இருக்கிறது. அது 1400 மைல் நீளமும், 24 அடி உயரமும், 20 அடி அகலமும் உடையதா யிருக்கிறது. இம்மதில் அரண் ஷாய்ஹாய் குவான் என்னும் கடற்கரை நாட்டிலிருந்து திபேத் என்னும் நாடுவரை இருக்கிறதாம். பகையரசர்களின் காலாட் படைகளைத் தடை செய்வதற்காக, கி. மு. 200-ம் வருஷத்தில் இருந்த சீன அரசர் இம்மதில் அரணைக் கட்டத் தொடங்கினாராம். இப்பெரிய மதில் அரண் கட்டி முடிய ஏறக்குறைய நூறு வருஷங்களாயினவாம். இப்பேர்ப்பட்ட மதில் அரண்கூட ஜப்பான் விமானப்படையினர் எறியும் வெடி குண்டுகளுக்கு இரையாகாது போகுமா?

***

**800 தொப்பிகளையுடைய விதூஷகர்**

ஐரோப்பாவில் எட்வின் என்னும் விதூஷகர், சுமார் 35 வருஷமாக நாடகத் தொழிலில் ஈடுபட்டு வருகிறார். அவர் அடிக்கடி ஒவ்வொரு ஸீனிலும் நவநவமான தொப்பிகளை உபயோகிப்பாராம். இவ்விதஞ் செய்வதுவாயிலாக அவர் தற்போது 800 விதமான தொப்பிகளைச் சேர்த்துவைத்திருக்கிறாராம்.




ஒண்டாரியோவைச் சேர்ந்த ஹாமில்டன் என்னுமிடத்தில் 109 வயதுள்ள ஒரு கிழவருக்கு அடிக்கடி பல் முளைக்கிறதாம். ஆறு வருஷங்களுக்கு முன்கூட இரு பற்கள் முளைத்தனவாம்.

* * * *

எதேன்ஸ் நகரில் பார்க்குகள் எல்லாவற்றிலும் குழந்தைகளுக்கென விளையாட்டுச் சாமான்கள் வைக்கவேண்டுமெனவும், அதற்கு அவ்வூர் பள்ளிக்கூட மாணவர்களே பொம்மை முதலியவைகளைச் செய்து தரவேண்டுமென்றும் அவ்வூர் நகர சபையார் தீர்மானித்திருக்கின்றனராம்.

* * * *

வியன்னா நகரில் திருடர்களைக் கண்டுபிடிக்க ஒரு கருவியைச் செய்திருக்கிறார்களாம். ஒரு அறையில் மேற்படி இயந்திரத்தை வைத்தால் அதிலிருந்து ஒருவித கிரணம் கிளம்பி அறை முழுதும் வியாபித்திருக்குமாம். யாராவது அவ்வறையில் திருடவந்தால் அக்கிரணம் பக்கத்திலிருக்கும் அலாரம் மணிகளை அடித்து எச்சரிக்கை செய்துவிடுமாம்.

* * * *

பூமியும் மற்ற கிரஹங்களும் சூரியனை வட்டமாகச் சுற்றி வருவதில்லையென்றும், முட்டை வடிவத்தில் சுற்றிவருவதாகவும் வான சாஸ்திரிகள் கூறுகிறார்கள்.

* * * *

புடாபெஸ்ட் நகரில் ஒரு சர்க்கஸில் வேடிக்கை காட்டிக்கொண்டிருந்த 60 வயது கிழவி சமீபத்தில் இறந்துவிட்டாள். அவளுக்கு ஆடவர்களைப்போல மீசை தாடி வளர்ந்திருந்ததாம்.

* * * *

பின்லண்டு என்னுமிடத்தில் அரை பென்ஸ் விலையுள்ள க்ஷயரோக முத்திரைகள் அச்சிட்டு, அந்த ஸ்டாம்புகள் விற்பனையில் வரும் பணத்தை க்ஷயரோகத் தடுப்பு வேலைக்கு உதவுவதென ஏற்பாடு செய்திருக்கின்றனர்.

* * * *

உலகிலேயே பத்திரிகாசிரியர்களில் மிகவும் சிறியவர் சுதர்ஸன் என்னும் ஒன்பது வயதுள்ளவர்தானாம். இவர் 'வித்தல் நகர்' என்ற ஒரு தினசரிப் பத்திரிகையின் ஆசிரியர். இப்பத்திரிகை ஹரிபுரா காங்கிரஸ் நடைபெறும்போது பிரசுரிக்கப்படும். ஹரிபுரா காங்கிரஸ் நிகழ்ச்சிகளைத் தினசரி வெளியிடுவதே இப்பத்திரிகையின் நோக்கமாம்.

* * * *

சென்னை மாகாணத்திலுள்ள நகர சபைகள் எல்லாம் சேர்ந்து சகிண்டரி கல்விக்காக, மொத்தம் ஒன்பதரை லட்சம் ரூபாய் செலவு செய்திருக்கின்றனவாம்.

* * *

குவாலியர் சமஸ்தானத்தில் ஒருவர் 11 வருஷங்களுக்குமுன் எழுதிய கடிதம் அவருக்கே வந்து சேர்ந்ததாம்.

# ஆசிரியர் குறிப்புக்கள்

## ரஷ்யாவில் விவசாய அபிவிருத்தி

ரஷ்யா சோவியத் அரசாங்கத்தில் பல துறைகளிலும் முன்னேறி விவசாயத்திலும் தலை சிறந்து விளங்குகிறது. தொழில்கள் மலிந்த நாடாக அது இருப்பினும் மனித ஆகாரத்துக்காகவேனும் விவசாயத் தொழிலை ஒவ்வொரு நாடும் கைக்கொள்ள வேண்டியதாகத்தான் இருக்கிறது. அதிலும் ரஷ்யா பரந்த தேசம், அதிக ஜனத்தொகையை யுடையது. ஆகவே ரஷ்யர் நல்ல முறையில் விவசாயத் தொழிலை அபிவிருத்தி செய்து கூட்டுறவு முறையில் விவசாயப் பண்ணைகளை ஏற்படுத்தியும், உழவு தொழிலுக்கு நவீன இயந்திரங்களைப் பயன் படுத்தியும் விவசாய அபிவிருத்தியை உண்டாக்கி அபரிமிதமான பொருள்களை உற்பத்தி செய்கிறார்கள். நமது இந்தியாவோ இயற்கையிலேயே விவசாய நாடு. எல்லாவளங்களும் நிரம்பியது. ஜனத் தொகையிலும் பெரும்பான்மையோர் விவசாயிகளே; அவர்களே இந்தியாவின் முதுகெலும்பு போன்றவர்கள் என்றும் கூறப்படுகிறது. இத்தகைய நம் நாட்டில் விவசாயத் தொழிலில் தக்க அபிவிருத்தி ஏற்படும்படி செய்ய வேண்டியது சர்க்கார், பொது ஜனங்கள் ஆகிய இருதரத்தாருடைய கடமையுமாகும். சர்க்கார் நிலவரியைக் குறைத்தும், கடன் நிவாரணத்துக்கு வழி செய்தும் நீர்ப்பாசன வசதிகளை ஏற்படுத்திக்கொடுத்தும் விவசாயிகளுக்கு உதவி புரியலாம். விவசாயிகளும் எல்லாப் பொறுப்புகளையுமே சர்க்காரின் மீது போட்டு விட்டுச் சோம்பேறி வேதாந்தம் பேசிக் கொண்டிராமல் ரஷ்யாவில் செய்வது போல் கூட்டுறவு முறையில் பண்ணைகளை ஏற்படுத்திக் கொண்டும், உழவுதொழிலுக்கு நவீன இயந்திரங்களைப் பயன் படுத்திக் கொண்டும் தொழில் அபிவிருத்தியை உண்டாக்கிக்கொள்ள வேண்டும். பழைய கலப்பைகளைக் கையில் கொண்டு நாளெல்லாம் உழைத்தும் கால் ஏகராவை உழுததும் கஷ்டமாய் விடுவதில் பயனில்லை. விஞ்ஞான அறிவை நாம் நமது பண்டை விவசாயத் தொழிலின் முன்னேற்றத்துக்கு உபயோகப் படுத்திக்கொள்ள வேண்டும். வேலையில்லாமல் திண்டாடும் படித்த வாலிபர்கள் இந்த நவீன முறைகளைக் கற்றுக்கொண்டு கிராமங்களுக்குச் சென்று விவசாயிகளுடன் சமத்துவமாக வாழ்ந்து அத்தொழிலை அபிவிருத்தி செய்யவேண்டும். அப்போதுதான் நமது பொருளாதார நிலைமையும் உயரும். இதை அரசாங்கத்தாரும் பொது ஜனங்களும் அறிய வேண்டும் என்பதே நமது அவா.

---

## சக்தி இருந்தும் பயனில்லையா ?

மிஸ்டர். லாயிட் ஜார்ஜ் ஆங்கிலேய அரசியல் வாதிகளில் தலை சிறந்தவர். தக்க அனுபவமும் அறிவும் உடையவர். அவர் மனித சமூகத்தின் எதிர்கால சுகவாழ்வு ஜனநாயக தேசங்களினிடமே இருப்பதாயும், உலகில் சமாதானத்தை ஏற்படுத்தக் கூடிய சக்தி அவற்றிடமே இருப்பதாகவும் கூறுகிறார். அவர் சமீபத்தில் ஒரு பத்திரிகைப்பிரதிநிதியிடம் உலக சமாதானத்தைப் பேசுகையில் முசோலினியின் பாசிஸ்ட் ஆர்ப்பாட்டத்துக்கும் ஹிட்லரின் நாஜி இயக்கத்துக்கும், ஸ்டாலினின் போல்ஷ்விக் இயக்கத்

துக்கும் அடிப்படையான வித்தியாசம் எதுவும் இல்லை யென்றும், முசோலி னியின் வெறும் ஆர்ப்பாட்டத்தையே கொண்டு காரியங்களைச் சாதித்துக் கொள்கிறாரே யொழிய உண்மையில் அவரிடம் பலமில்லை யென்றும் கூறி னார். பொதுவாக எல்லாருமே பாசிஸ்ட், நாஜி இயக்கங்களைக் கண்டித் தாலும் போல்ஷ்விக் இயக்கத்தைக் கண்டிப்பதில்லை. அதுதான் ஏதோ உலகத்திற்குக் கிடைத்துள்ள வரப் பிரசாத மென்றும் கருதுகின்றனர் சிலர். ஸ்டாலின் இயக்கத்திலும் ஒருவித யதேச்சாதிகாரமும், பலாத்கார மும் இருக்கத்தான் செய்கிறது. ஆகவே இம் மூன்றுக்கும் அடிப்படை யான வித்தியாசமில்லை யென ஸ்ரீ. லாயிட் ஜார்ஜ் கூறுவதும் நியாயமே யாகும். ஆதலின் ஜனநாயக தத்துவம் கொண்ட சமதர்மம்தான் நல்ல ஆட்சி முறை யாகும். கூடியவரை ஜனநாயக தத்துவத்துடன் விளங்கு பவை பிரிட்டன், அமெரிக்கா, பிரான்ஸ் ஆகிய மூன்று தேசங்கள்தான் ஸ்ரீ. லாயிட் ஜார்ஜும் மனித சமூகத்தின் எதிர்காலம் பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா ஆகிய இம்மூன்று நாடுகளும் ஒரு முகமாக எடுத்துக் கொள் ளும் நடவடிக்கைகளையே பொறுத்திருக்கிறதென்றும், உண்மையில் ஜன நாயக நாடுகளே சக்தி வாய்ந்தவை யென்றும் கூறியுள்ளார். ஆனால் இம் மூன்று நாடுகளும் சக்தியைப் பெற்று இருந்தும் பயனற்றவையாக இருக் கின்றன. தங்கள் பொறுப்பைத் தட்டிக் கழித்துக்கொண்டே வருகின்றன இத்தாலி அபிசீனியாவை விழுங்கிய போதும் ஃபெயினில் குழப்பம் ஏற் பட்ட போதும், இவை மூன்றும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தன. இப்போது சீனாவில் ஜப்பான் அட்டூழியம் செய்வதையும் அவை பார்த்துக் கொண்டு தான் இருக்கின்றன. இவ்வாறு மூன்று பிரபல ஜனநாயக வல்லரசுகளும் அவற்றின் கடமையைச் செய்யாமல் இருப்பதால் மானிட சமூகத்துக்கே அபாயம் ஏற்படும் என்பது நிச்சயம். இதனால் நாளடைவில் ஜனநாயக தத்துவத்துக்கும் மதிப்பில்லாமற் போகும். ஆதலின் இம் மூன்று தேசங்களும் அவற்றின் பொறுப்பை உணர்ந்து அதை நிறைவேற்ற வேண்டியது மிக அவசியமாகும்.

---

## நமது அடுத்த ராஷ்டிரபதி

பிப்ரவரி மாத மத்தியில் ஹரிபுராவில் கூடப்போகும் காங்கிரஸ் மகாசபைக்குத் தலைவராக சுபாஷ் சந்திரபோஸ் ஏகமனதாகத் தேர்ந்தெடுக் கப் பட்டிருக்கிறார். தேசம் இப்போதுள்ள நிலைமையில் சுபாஷ் பாபுவைப் போன்ற ஒருவரே தலைவராக இருப்பது மிகப் பொருத்தமாகும். ஆதலின் அவர் ராஷ்டிரபதியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருப்பதைப் பாராட்டு கிறோம். சென்ற இரண்டு ஆண்டுகளாகக் காங்கிரஸ் தலைவராக இருந்து சிறப்பான முறையில் தொண்டாற்றிய பண்டித ஜவஹர்லாலுக்குப் பின் தொடர்ந்து வேலை செய்பவர் எவ் வகையிலும் அவரைவிடக் குறைவான அம்சங்களை யுடையவராக இருத்தல் கூடாது. இந்த அளவைக் கொண்டு பார்க்கும்போது சுபாஷ் பாபு தலைவரானதே பொருத்தமான தென்று தெரியும். சுபாஷ் சந்திரபோஸ் ஐ. சி. எஸ். பட்டம் பெற்றவர். அவர் தமது பட்டத்தையும் அறிவையும் சுயநலத்துக்குப் பயன்படுத்தாமல் தேச நலத்துக் காகவே பயன் படுத்துவதால் தான் பலவிதமான கஷ்ட நஷ்டங்களுக்கும் ஆளாக வேண்டியவரானார். அவர் நிர்மாண வேலையில் கைதேர்ந்தவர். அஞ்சா

நெஞ்சமும், திடமான மனோ உறுதியும், தீவிர மனப்பான்மையும் உடையவர். அவர் கல்கத்தா கார்ப்பொரேஷன் கமிஷனராக இருந்தபோதுதான் அவரது அறிவும் ஆற்றலும் உலகத்தாருக்கு தெரிந்தது. அவர் பயங்கர இயக்கத்தில் கலந்து கொண்டதாக வீண் பழி சுமத்தி அவரைப் பல வருஷங்கள் வரை சிறையில் அடைத்து வைத்தனர். இதனாலெல்லாம் அவரது தேகபலம் குன்றியதே யொழிய மனோ உறுதி மட்டும் அசையவில்லை. இப்போது நாட்டில் சுதந்தர தாகமும் விடுதலை உணர்ச்சியும் அதிகமாக இருக்கின்றன. அந்த சக்திகளனைத்தையும் ஒன்றாகத் திரட்டி சுதந்தரம் பெறும் வேலையை முதலில் செய்ய வேண்டியது அவசியமாக இருக்கிறது. சுபாஷ் பாபு தீவிர மனப்பான்மை யுடையவரே யொழிய, பிரிட்டிஷார் கருதுகிறபடி பயங்கர இயக்கத்தில் பற்றுள்ளவரோ, அல்லது இந்தியர் சிலர் கருதுகிறபடி நிதானமற்ற பொது வுடமைக்காரரோ அல்ல என்பது நிச்சயம். கால தேச வர்த்தமானங்களுக் கேற்றவாறு சரியான திட்டம் வகுத்துக் காங்கிரசில் பிளவு ஏற்படாதபடி சுதந்தரப் போராட்டத்தை ஒழுங்கான முறையில் அணி வகுத்து நடத்தும் ஆற்றல் வாய்ந்தவர். ஆதலின் இவரது காலத்தில் தேசம் சுதந்தரப் பாதையில் இன்னும் அதிகம் முன்னேறி விடும் என்று நிச்சயமாக நம்புகிறோம். ஆண்டவன் அவருக்கு எல்லாவித சக்திகளையும் அளிப்பானாக !

---

## நிறத் துவேஷத் தாண்டவம்

சமத்துவமும் சகோதரத்துவமும் அதிகரித்து வரும் நவீன நாகரிகம் ஏற்பட்டுள்ளதாகக் கருதப்படும் இக் காலத்திலும் நாகரிகத்தில் சிறந்தவர்களென்றும், எல்லாம் அறிந்தவர்களென்றும் கூறப்படும் மேனாட்டினரே நிறத்துவேஷங் காரணமாக மக்களை இழிவு படுத்துவதென்பது சகிக்க முடியாத குற்றமே யாகும். ஐரோப்பியர்கள் குடியேறியுள்ள தென்னாப்பிரிக்காவில் அவர்கள் வெள்ளைய ரல்லாத இதர வர்ணத்தினரை அவமதிப்பது இந்த நவீன நாகரிகத்துக்கோ அல்லது பிரிட்டிஷ் ஆட்சியின் பெருமைக்கோ சிறிதும் ஏற்றதாகாது. சமீபத்தில் நிறத்துவேஷம் எவ்வளவு தீவிரமாக இன்னமும் தாண்டவமாடுகிறதென்பதைக் காட்டும் இரு சம்பவங்கள் அங்கு நிகழ்ந்ததை ஒவ்வொருவரும் கவனிக்க வேண்டியது அவசியம். இந்தியா சட்டசபை அங்கத்தினரும், பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவருமான சேத் கோவிந்ததாஸ் ஜோஹன்ஸ் பார்க்கிலுள்ள ஸ்டாண்டர்டு பாங்கியின் மாளிகையின் மீது லிப்ட் என்றும் ஏற்றத்தின் மூலம் ஏறப் போனபோது ஐரோப்பிய சேவகன் அவரை ஏற்ற மறுத்ததோடு அவர் இன்னாரென்று தக்க ஆசாமிகளால் அறிவிக்கப்பட்ட பின்னரும் அவன் பிடிவாதமாக இருந்தானென்றால் அவனது நிறத் துவேஷத்தை என்னென்று கூறுவது? தென்னாப்பிரிக்காவின் இந்திய ஏஜன்டு ஜெனரலான சர் ரஜா அலியே நிறத்துவேஷத்தின் கொடுமையை அனுபவிக்கவேண்டியதாயிற்று. அவர் தமது மனைவியுடன் அதே ஜோஹன்ஸ் பார்க்கிலுள்ள ஒரு பெரிய கட்டிடத்தின் மாடிக்குச் செல்ல முயன்றபோது ஐரோப்பிய காவல்காரன் அவர்கள் ஏற்றத்தை உபோகிக்கக் கூடாதெனத் தடுத்து விட்டான். இந்தியாவின் ஏஜென்ட் ஜெனரலுக்கே இந்தக் கதி என்றால் மற்ற இந்தியர்களுடைய நிலைமை எப்படிப் பட்டதாக இருக்குமென்பதை நாம் கூறவேண்

டியதில்லை. கேவலம் ஒரு ஏற்றத்தை உபயோகிக்க அனுமதியா ஐரோப்பியர்கள் இதர துறைகளில் இந்தியரையோ அல்லது இதர வர்ணத்தாரையோ சமத்துவமாக நடத்துவார்களென்று எதிர்பார்க்க இடம் எங்கே இருக்கிறது? காவல்காரர்களின் தவறுதல்களுக்காகப் பொறுப்பு வாய்ந்தவர்கள் பிறகு மன்னிப்புக் கேட்கிறார்கள். ஆயினும் என்ன பயன்? ஏற்பட்டுப்போன அவமானம் எப்படி நீங்கும்? ஆதலின் நிற வித்தியாசம் கூடாதென்னும் சட்டம் ஏற்பட வேண்டியது அவசியம். எனினும் இந்தியாவில் அனுஷ்டிக்கப்படும் தீண்டாமையின் பிரதிபலனே இது என்பதையும் நம்மவர்கள் உணர வேண்டியதும் அவசியம்.

---

## பட்ட சகாப்தத்துக்கு முடிவு காலம்

கௌரவப் பட்டங்கள் அளிப்பது பொதுவாக வரவேற்கத் தக்கதே. ஆனால் பொதுஜன சேவையில் ஏதேனும் பல துறைகளில் முன்னணியில் இருப்பவர்களுக்கே, அதுவும் பொதுஜனங்களாலேயே கௌரவப் பட்டங்கள் அளிக்கப்படுவதுதான் பெருமையைத் தரத்தக்கதாகும். ஆனால் இக்காலத்தில் அரசாங்கத்தார் கௌரவப் பட்டங்களை அளிப்பதால் பல குறைகள் ஏற்படுகின்றன. பெரும்பாலும் பட்டங்கள் சர்க்காரைத் தாங்கி நிற்பவர்களுக்குத்தான் கொடுக்கப்படுகின்றன. பட்டங்கள் பெற விரும்புவோரும் அதற்காகவே தேசத்தையும் மறந்து ஏகாதிபத்ய தாசர்களாகின்றனர். இத்தகைய காரணங்களால் சர்க்கார் கௌரவப் பட்டங்களுக்கு மதிப்பு குறைந்து விட்டது. ஒரு காலத்தில் இப்பட்டங்களுக்கு அதிக மதிப்பு இருந்தது என்பது வாஸ்தவமே. ஆனால் இப்போது அக்காலம் மலையேறி விட்டது. மேலும் அரசாங்கத்தார் பட்டம் வழங்குவதே தங்கள் கட்சிக்குச் சிலரை சேர்த்துக்கொள்ளும் உத்தேசத்துடன் தான். ஆகவே இந்த பட்ட சகாப்தம் முடிவுக்கு வந்து விடுவதுதான் நல்லது. பொதுஜனங்கள் தங்களுக்குச் சேவை செய்யும் தன்னலமற்ற தியாகிகளான பொதுஜன சேவகர்களுக்கு என்றென்றும் பட்டங்களாலும் இதர முறைகளாலும் மதிப்பை அளித்து உற்சாகப் படுத்தித்தான் வருகின்றார்கள். ஆகவே அதுவே போதுமானது. ஜனநாயக ஆட்சி ஏற்பட்டுவரும் இந்தியாவில் இனி சர்க்கார் கௌரவப் பட்டங்கள் அளித்தலுக்கு அவசியமே இல்லை. பம்பாய் சட்டசபையில் பட்டங்கள் வேண்டாம் என்னும் தீர்மானம் நிறைவேறி விட்டது. அதைப் பின்பற்றி ஐக்ய மாகாண சட்டசபையும் அவ்வாறே தீர்மானித்திருக்கிறது. இதர மாகாண சட்டசபைகளும் பட்டங்கள் அவசியமில்லை என்னும் தீர்மானத்தை நிறை வேற்றுமென்று நம்புகிறோம்.

---

## உலக அமைதியும் இந்தியாவும்

பிரிட்டிஷ் பார்லிமெண்டில் தொழிற் கட்சி அங்கத்தினராக இருந்த ஸ்ரீ. பீடர் பிரீமன் என்னும் ஆங்கிலேய நண்பர் சமீபத்தில் சென்னைக்கு விஜயம் செய்து தொழிலாளர் சட்டங்களிலும் இதர இடங்களிலும் பிரசங்கம் செய்தார். அவர் ஒரு மன்னர் கூட்டத்தில் உலகத்தின் எதிர்கால நிலைமை என்பது பற்றிப் பேசும் போது எடுத்துக் கூறிய சில விஷயங்கள் அனைவராலும் கவனிக்கத் தக்கவை. உலகத்தின் நிலைமை

இன்று இருப்பது போல இவ்வளவு குழப்பமாகவும் பயங்கரமாகவும் எப்போதும் இருந்ததில்லை யென்றும், மானிட சமூகத்தின் அழிவு காலமே கிட்டி விட்டதோ என்று அச்சப்படும்படியான நிலைமை ஏற்பட்டிருக்கிறதென்றும் சகோதர மக்களை எளிதிலும் விரைவாகவும் கொல்வதெப்படி என்பதைக் கண்டு பிடிப்பதிலேயே கவனம் செலுத்தப்படுகிறதென்றும் மற்றும் பலவாருகவும் உலக நிலைமையைப் பற்றிப் பயங்கரமான முறையில் வர்ணிக்கிருர். இத்தகைய அபாயத்தினின்றும் உலகத்தைக் காப்பாற்ற வேண்டுமாயின் உலக சமஷ்டி ஒன்று ஏற்படவேண்டுமென்றும், எல்லாத் தேசங்களிலும் ராணுவமும் அந்த சமஷ்டியின் ஆதிக்கத்தில் இருக்கவேண்டு மென்றும் ஒரு யோசனை கூறுகிருர். மேலும் அவர் இந்தியா உலக சமாதானத்தைக் நிறுவுவதில் எத்தகைய உதவி செய்யக்கூடும் என்பதைப்பற்றிப் பேசுகையில் இந்தியா இன்று அன்னிய அரசாங்கத்திற் குட்பட்டு அதன் பலஞக ஒற்றுமையின்றியும், ஆயுத பலமின்றியும் இன்னும் பல குறைபாடுகளுடனும் விளங்கிய போதிலும் அதன் பண்டைய நாகரீகம் ஆத்மபலம், பரந்த அறிவு, பேச்சுவன்மை முதலிய உயரிய அங்கங்களைத் துணையாகக் கொண்டு உலகத்திலே ஒரு வழிகாட்டியாக இருக்கமுடியும் என்று தெரிவித்தார். ஒருவிதத்தில் இது உண்மை என்பதில் ஆக்ஷேபமில்லை. இந்தியாவின் உபதேசத்தினுலும், தலையீட்டினுலும் மட்டுமே உலக சமாதானம் ஏற்படுமென்பது நிச்சயம். ஆயினும் ஸ்ரீ. பீட்டர் பிரீமன் பேசிய அதே கூட்டத்தில் தலைமைவகித்த தொழில் இலாகா மந்திரி கனம் வி. வி. கிரி கூறியதேபோல் இந்தியா முதலில் சுதந்தரமடைந்தால்தான் இதர காரியங்களை மேற்கொண்டு செய்ய முடியும். ஆதலின ஸ்ரீ. பிரீமனைப் போன்ற ஆங்கிலேய நண்பர்கள் இங்கிலாந்திலுள்ளவர்களுக்கு இந்தியாவின் சிறப்பை எடுத்துக்கூறி அது விரைவில் சுதந்தர மடைவதில் உதவி செய்வார்களாளுல் உபகாரமாக இருக்கும். அதைச் செய்யாமலே இத்தகைய வாசா கைங்கரியம் செய்தால் ஏதும் பயனில்லை. மேலும் ஸ்ரீ. கிரி கூறியதுபோல் பிரிட்டிஷாரை மொத்தமாக நாம் வெறுக்கவில்லை. ஆங்கிலேயர்கள் இங்கு வரலாம், இருக்கலாம்; ஆனல் அவர்களும் இந்தியர்களென்றும், தேசத்திலே சேவகர்களென்றும் தங்களைக் கருதிக் கொள்ளவேண்டுமே யொழிய எஜமானர்களென்று கர்வங்கொள்ள முடியாது. இதையும் ஸ்ரீ. பீட்டர் பிரீமன் அவரது தேசத்தாருக்கு அறிவுறுத்துவாராக!

---

## சென்னை சர்க்காரின் சட்டங்கள்

சென்ற 27-ந் தேதியிலிருந்து இம்மாதம் முதல் தேதி முடிய கூடிய சென்னை சட்டசபைகளின் கூட்டத்திலே மூன்று முக்கிய சர்க்கார் மசோதாக்கள் சட்டமாகி விட்டன. முதலாவதும் முக்கியமானதுமான சட்டம் விரைவாகக் கடன் நிவாரண சட்டமேயாகும். இது சம்பந்தமாகத்தான் பத்திரிகைகளிலும் மேடைகளிலும் அதிகம் சர்ச்சை செய்யப்பட்டது; இரு சட்டசபைகளிலும் விவாதமும் அதிகமாகவே நடந்தது. கொண்டு வரப்பட்ட திருத்தங்களும் பல எப்படியோ சென்னை காங்கிரஸ் சர்க்கார், தாம் விவசாயிகளுக்கு நல்லதெனக் கருதிய இம்மசோதாவைச் சட்டமாகக் கொண்டுவந்து விட்டார்கள். இச்சட்டத்தின் கொள்கையையோ, பொது

வான நோக்கத்தையோ எவரும் எதிர்க்கவில்லை. இதிலுள்ள ஷரத்துகள், செக்ஷன்கள் முதலியவைகளைத் தான் இன்னமும் சிலர் ஆட்சேபித்து வருகிறார்கள். இச் சட்டம் அனுபவத்தில் வந்த பிறகும், ஏதேனும் சங்கடங்கள் தோன்றினால் அனுபவத்தின் மீது தேவையான திருத்தங்களைச் செய்து கொள்ள மந்திரிகளே தயாராக இருப்பார்கள் என்பதில் ஆக்ஷேபமில்லை. கனம். ராஜாஜி கடைசியாக ராஜாங்க சபையில் கூறியது போல சட்டத்தில் மட்டும் அதிக நன்மை ஏற்பட்டு விடாது; ஆனால் சட்டம் ஒன்று அவசியம்தான். தனது கடன்பளு சட்டத்தின் மூலம் குறைக்கப்பட்டதென்று ஒரு மனிதன் உணருவதில் நன்மை இருக்கிறது. ஆகவே இதை நாம் அனைவரும் வரவேற்போமாக! இரண்டாவதாக ஸ்தல ஸ்தாபனங்கள் சம்பந்தமாக இரு மசோதாக்கள் நிறைவேறி இருக்கின்றன. அவை இரண்டும் முற்போக்கான மசோதாக்கள் என்பதில் எவருக்குமே ஆட்சேபமில்லை. சென்னை கார்ப்பொரேஷன் நிர்வாக உத்தியோகஸ்தர்களின் உயர்ந்த பக்ஷ சம்பளத்தைத் தேசத்தின் நிலைமைக்கேற்றவாறு நிர்ணயிப்பதே முதல் மசோதாவின் நோக்கம். இரண்டாவது மசோதா முனிசிபாலிட்டி, ஜில்லா போர்டுகள் போன்ற ஸ்தல ஸ்தாபனங்களுக்கு எழுதப் படிக்கத் தெரிந்தவர்களுக்கு ஓட்டுரிமை அளிப்பதாகும். இவ் விரு மசோதாக்களும் வரவேற்கத் தக்கனவே. ஆயினும் கார்ப்பொரேஷன், முனிசிபாலிட்டி போன்ற சிறு ஸ்தாபனங்களுக் கேனும் சர்வஜன ஓட்டுரிமையை விரைவில் அமலில் கொண்டு வருவது சிலாகிக்கத்தக்கது. அதுவே காங்கிரசின் கொள்கை என்பதையும் நாம் ஞாபகப்படுத்த விரும்புகிறோம்.

---

## ராணுவப் பயிற்சியின் அவசியம்

இப்போது யுத்த பயம் எங்கும் அதிகமாக இருக்கிறது. எவ்வித யுத்தத்திலும் சேராத நாடுகளுக்கும் சேதமும் அபாயமும் ஏற்படும். மேலும் தற்கால யுத்த முறையில் யுத்த களத்தில் இறங்கியவர்களை மட்டும் தாக்குவது என்னும் தர்மமும் காணோம். சிவில் ஜனங்களையும் சுட்டுக் கொன்று விடுகிறார்கள்; யுத்தத்தில் சம்பந்தப்படாத தேசத்தின் மீதும் ஒரு வெடி குண்டை வீசி எறிந்து விடுகிறார்கள். இந்த நிலைமையில் எல்லாருமே தங்களைப் பாதுகாத்துக் கொள்ள அறிந்திருக்கவேண்டும். இதனாலேயே விஷ வாயுவிலிருந்து தப்ப முகமூடி அணிதல் போன்ற இரண்டொரு உபாயங்களை அறிந்திருந்தால்மட்டும் போதாது. எல்லா தேச மக்களுக்கும் ஆயுதம் தாங்கும் உரிமையும், அதை உபயோகிக்கும் பயிற்சியும் இருக்கவேண்டியது அவசியம். இந்தியாவில் பிரிட்டிஷ் ஆதிக்கம் ஏற்பட்டது முதல் ஆயுதம் வைத்துக்கொள்ளும் உரிமை பறிக்கப்பட்டுவிட்டது. இதனால் நம்மவர்கள் நாளடைவில் ஆண்மை இழந்தவர்களானார்கள். இப்போது உலக விஷயங்களையெல்லாம் நன்கு தெரிந்துகொண்ட பின்னர் தைரியமும் ஆண்மையும் ஏற்பட்டு வருகிறது. ஆயினும் ராணுவப் பயிற்சி பெறக்கூடிய உரிமையோ, சாதனமோ இல்லை. இந்தியாவை நாம் காப்பாற்றிக்கொள்ள வேண்டுமாயினும், இங்கிலாந்து போன்ற தேசங்களுக்குத் துணை செய்யவேண்டுமாயினும் நாமும் ராணுவப் பயிற்சி பெற்றிருத்தல் வேண்டும். கல்கத்தா கார்ப்பொரேஷனிலும், வங்க சட்ட சபையிலும் இக் கருத்துக்கொண்ட

தீர்மான மொன்றை நிறைவேற்றி இருக்கிறார்கள். கல்கத்தா கார்ப்பொரேஷன் கூட்டத்தில் சுபாஷ் பாபு இதன் அவசியத்தை நன்கு வற்புறுத்தினார். காங்கிரஸ்வாதிகள் அஹிம்சா வாதிகளாயிற்றே ராணுவப் பயிற்சி ஏன் என்று சிலர் கேட்கலாம். அஹிம்சைதான் நமது கொள்கை. அநாவசியமாக ஹிம்சையைக் கையாள்வது கூடாது. ஆயினும் பிறரால் தாக்கப்படும்போதும் கைகட்டிக்கொண்டு நின்றிருக்க முடியாது. ஆதலின் 20-வயதுக்கு மேல் 40-வயதுக் குட்பட்ட ஒவ்வொருவருக்கும் ராணுவப் பயிற்சியை அளிப்பது அவசியமாகும்.

---

## சீனத் தலைவியின் எச்சரிக்கை

யுத்தத்தில் சிக்கிக்கொண்டு அவஸ்தைப்படும் சீனமக்களை ஒன்றாகத் திரட்டி அவர்களுக்கு உற்சாகமூட்டித் தலைமை வகித்து யுத்தத்தை நடத்திவரும் ஸ்ரீமதி. சியாங். கே. ஷேக் என்னும் வீரமாது 'அமிருதபஜார்' பத்திரிகை நிருபரின் மூலம் இந்தியர்களாகிய நமக்கு ஒருவித எச்சரிக்கையைச் செய்திருக்கிறார். அதை நாம் கவனிக்கவேண்டியதுதான். ஆயினும் அதைக்கொண்டே பயந்துபோய்விட வேண்டுமென்பது அவசியமில்லை. அவ்வம்மையார், ஜப்பான், ஆசியா முழுவதிலும் தன் யதேச்சாதிகாரத்தைச் செலுத்த உத்தேசித்திருப்பதாயும், எந்தக் கிழக்கு தேசமும் சுதந்தரத்துடன் இருக்க அது இடங் கொடுக்காதென்றும், இந்தியாவை அது எப்போது கைப்பற்றலாமென்று மிக ஆவலுடன் இருப்பதாயும், ஆதலின் இந்தியா தன்னைப் பாதுகாத்துக்கொள்ளப் போதுமான சக்தி இல்லாமல் சுதந்தரம் பெற்றால் ஜப்பானுக்குச் சரியான சந்தர்ப்பம் ஏற்பட்டுவிடு மென்றும் கூறி எச்சரிக்கை செய்கிறார். ஜப்பான் இந்தியாவையும் கைப்பற்றவேண்டுமென்னும் ஆசையுடன் இருக்கலாம்; யுத்தம் என்று ஆரம்பித்துவிட்டால் ஜப்பான் எவ்வளவு கேவலமான கொடுமைகளைப் புரியுமென்பதை சீனாவில் அது நடந்துகொள்வதிலிருந்தே இந்தியர்களாகிய நாம் அறிந்துகொண்டும் இருக்கிறோம். ஆதலின் ஸ்ரீமதி. சியாங். கே. ஷேக்கின் எச்சரிக்கைக்காக நாம் நன்றி செலுத்தவேண்டியதுதான். ஆயினும் அதற்காக நாம் பயப்பட்டு நமது சுதந்தரப் போராட்டத்தை நடத்தாமல் இருக்கமுடியுமா? இந்தியா எந்த ஏகாதிபத்தியத்தின் கீழும், எந்த அன்னிய அரசாங்க ஆட்சியிலும் இருக்க விரும்பவில்லை. பூரண சுதந்தரத்துடன் இருக்கவே அது தீர்மானித்துவிட்டது. சர்வ வல்லமை வாய்ந்ததும், ராஜ தந்திரத்தில் சிறந்ததுமான பெரிய வல்லரசாகிய பிரிட்டனிடமிருந்தே சுதந்தரத்தைப் பெறும் சக்தியும் உறுதியும் நமக்கு ஏற்பட்டு அதை நாம் பெற்றுவிட்டால் பிறகு எந்தத் தேசமும் நம்மை அசைக்க முடியாது என்பது திண்ணம். எனினும் அநியாயக்காரர்களை அடக்கவேண்டியதே நியாயமாதலின் இப்போது முதல் ஜப்பானின் ஏகாதிபத்ய பேராசையையும், ஆணவத்தையும், கொடிய சுபாவத்தையும் ஒடுக்கவேனும் இந்தியாவும், இதர தேசங்களும் ஜப்பானைப் பகிஷ்காரம் செய்து சரியான பாடத்தைக் கற்பிக்கவேண்டியது அவசியமாகும். ஜப்பானின் ஆயுதப் பெருக்கையோ, இதர வசதிகளையோ குறைத்துவிட வேண்டுமாயின் இந்தியர்கள் ஜப்பான் சாமான்களைப் பகிஷ்கரிக்க வேண்டும். இவ்வாறு செய்தால் இம்முறையிலேனும் அது நம்முடன் ஒப்பந்தம் செய்துகொள்ளக்கூடிய சந்தர்ப்பம் ஏற்படக்கூடும்.

தொடர் கதை.

# மாயா விரோதி

ஸி. எஸ். இராமன், எம். ஏ., எல். டி.



(559-வது பக்கத் தொடர்ச்சி.)

"தினசரிகள் மூலமாக நான் உம்மைப்பற்றிய விஷயம் அறிந்தேன், பிரபுவே" என்று ஒருவிதமான விசனத்தோற்றத்தோடு கோபம் சேர்ந்த குரலில் அற்புத ரூபலாவண்ய சுந்தராங்கி இந்திரா அலட்சியமாக மாயாவிரோதியைப் பாராமல் கூறினாள்.

"ஓ! இவள் தனது நாயகனைப் பிரபுவே என்று அழைத்துவந்திருக்கிறாள். அவன் இவளை இந்து என்று அழைத்தானு?" என்று மாயாவிரோதி தனக்குள் யோசனை செய்தான். பின்பு அவளை நோக்கி, "எதற்கும், இந்து! உன்னை நான் மனதார வந்திக்கிறேன். நீமட்டும் வக்கீலுடன் பேசி எனக்குப் பணம் அனுப்பியிராவிட்டால் மாயாவிரோதி என்னை இத்தனை சுலபமாக விடுவித்திரான்.........பழைய விஷயத்தை நினைத்தால், நான் உனக்கு எத்தகைய துரோகத்தைச் செய்துவிட்டேன் என்பது இப்பொழுது நன்றாகத் தெரிகிறது," என்று பேசினான்.

அது இந்திராவுக்கு மிக்க கோபத்தைக் கொடுத்துவிட்டது. பழைய விஷயத்தை அம்மாது மறுபடியும் அறிந்துகொள்ளத் தருணம் அளித்தது பிசகு என்பதை மாயாவிரோதி அறிந்து, தனது தப்பிதத்திற்குப் பெரிதும் விசனங் கொண்டான். அதை அப்பொழுது ஞாபக மூட்டியது அவளுக்கு ரோஷத்தைக் கொடுத்துவிட்டது என்று வருந்தினான்.

செங்கோட்டை ஜெமீந்தார் எவ்வளவு இழிவாகத் தமது மனைவியை நடத்தியிருக்கவேண்டும் என்று முத்தைய செட்டி நினைத்துக் கொண்டதும் கங்குகரையிலாத கோபம் அவனுக்கு உண்டாயிற்று. இந்திராமீது மிக்க பரிதாபம் கொண்டான்.

இந்திரா கோபத்தோடு தலைகுனிந்து உட்கார்ந்துகொண்டிருந்த தனது புருஷனை நோக்கினாள்; தனது கணவன் பழைய தீய செயல்களுக்குத் தன்னிடம் மனம் இரங்குவதாகச் சொல்வது எதற்கு என்று ஆச்சரியமும் கொண்டாள். புருஷன் தனக்குச்செய்த துரோகத்தை அவள் மறந்துபோகக் கூடாத நிலைமையில் இருந்தாள். தனக்கு இன்னும் ஏதேனும் தீமையை உண்டாக்குவதற்கு புருஷன் அங்ஙனம் பேசுகிறார் என்று அக்கோதை நினைத்துக்கொண்டாள். பல அக்கிரமங்களையெல்லாம் செய்து, தனது மனச் சாந்தியைப் போக்கி, இப்பொழுது அவற்றைப்பற்றி ஞாபக மூட்டியதற்கு மிக்க தைரியம் வேண்டும் அல்லவா? என்று அந்த மாது நினைத்து மறுபடியும் கோபமடைந்தாள்.

மாயாவிரோதி தான் ஜெமீந்தார் வேஷத்தில் இருப்பதால் அவர் முன்பு எப்படி இந்திராவிடம் நடந்துகொண்டார் என்பதை மறுபடியும் யோசனை செய்தான்; இந்திராவின் கஷ்டங்களுக்கு அவர் காரணம் என்பதை நன்கு அறிந்திருந்தானுதலால் அவற்றைப் போக்குவதற்கான வழியைத் தேடவேண்டும் என்று கருதினுன். ஆதலால் தன்னை அவள் எப்படியாவது மன்னிக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டான். தான் கள்வன் மாயாவிரோதியிடம் சிக்கிக் கொண்டதையும் பட்ட கஷ்டங்களையும் சொன்னுன். நன்ருக கபடநாடகம் நடித்தான்.

இந்திரா அதைக் கேட்டதும் கண்ணீர் சொரிந்து, தன் புருஷன் மீது மிக்க அவநம்பிக்கையைக் கொண்டு, தூர நின்றுகொண்டாள்.

தன்மீது மனமிரங்கி விடுவாள் என்று நினைத்துக்கொண்ட செங்கோட்டை ஜெமீந்தார் அவள் அருகில் சென்ருர். ஆனுல் அவள் கோபத்துடன் மறுமுறையும் அவனைவிட்டு தூரநின்ருள்.

அதைக் கண்ணுற்ற செங்கோட்டை ஜெமீந்தார் திகைப்பும் பிரமிப்பும் கொண்டு, மனம் சிதைந்து என்ன செய்வது, எப்படி அவளுடன் பேசுவது என்று நினைத்தார். கோபத்தில் இந்திரா மிக்க அழகுடன் பொலிவதைக் கண்டு, அவளை நோக்கினுர். அப்பொழுது அம்மாது ஏதோ பேசுவதைக் கண்டு, அதைக் கேட்டு, பதில்சொல்ல நினைத்தார்.

"திடீரென்று என்மீது பிரபுவுக்கு காதல் உண்டாகியிருப்பது எனக்கு ஆச்சரியத்தைக் கொடுக்கிறது. உமக்கு ஞாபகமறதி ஏற்பட்டுவிட்டது போலும். இல்லாவிட்டால் இம்மாதிரி என்னிடம் பேசமாட்டீர். என்னை இன்னும் சிறு குழந்தை என்று நீர் நினைத்துக்கொண் டிருக்கிறீர் போலும். பரஸ்திரீகளிடம் அன்பு செலுத்திவரும் நீங்கள் அவர்களிடமே போய் சந்தோஷமாக இருக்கலாமே!...இப்பொழுது என்மீது திடீரென்று அன்பு ஏன் சுரக்கவேண்டும்? இதில் ஏதோ சூது இருக்கிறது......புலி பசுத்தோலைப் போர்த்துக் கொண்டாலும் பசு ஆகிவிடுமா? நீங்கள் இப்பொழுது நல்வார்த்தை பல புகன்ருலும் பழைய கொடுமைகளை நான் மறந்துவிட முடியுமா? கமலவேணி சீமாட்டியின் மீது இப்பொழுதும் காதலைக்கொண்டுள்ள நீங்கள், அவள் வார்த்தையை அநுசரித்து, உங்களுடைய தாயாரையும் அவர்களுடைய வேலைக்காரியையும் இந்த மாளிகையிலிருந்தும் அகற்றிவிட வில்லையா? அந்தக் காரியத்தைச் செய்ததும் தாம் கமலவேணி சீமாட்டிக்கு லட்ச ரூபாய் விலையுள்ள வைர அட்டிகையை என்னிட மிருந்தும் பிடுங்கிக் கொடுக்க வில்லையா? என்னை எத்தனை மனக்கஷ்டங்களுக்கும் துயர்களுக்கும் ஆளாக்கி, சுகம் என்பதை எனக்கு இல்லாமல் செய்துவிடவில்லையா?.........பிரபுவே! நீங்கள் இப்பொழுது கபட நாடகம் நடிக்கலாமா?" என்று செங்கோட்டை ஜெமீந்தாரிணி முகம் சிவக்கப் பேசினுள்.

கபட நாடகம் எனும் வார்த்தையைக் கேட்டதே மாயா விரோதி திடுக்கிட்டான். உண்மை நாயகன் அவளுக்குக் கொடுத்த கஷ்டங்களைத் தான் செய்து விட்டதாக அவள் நினைத்துக்கொண்டதை யோசித்தான்.

எதற்கும் இனிமேல் தான் யோக்கியமாக இருப்பதாக வாக்கு ஒரு வகையில் கொடுக்கவேண்டும் என்று முடிவு செய்தான்.

"இந்து, இனிமேல் பழைய செய்தியைப்பற்றி ஏதும் நினைக்காதே. போனது போய்விட்டது. இனி நான் உன்னை அவமானப்படுத்தாமல் பார்த்துக் கொள்கிறேன்," என்றான்.

இந்திரா கண்ணீர்த்துளிகளைத் துடைத்துக்கொண்டு, ஒரு நாற்காலி மீது உட்கார்ந்தாள். அப்பொழுது அவ் வறையின் வெளி வாசற்கதவை வேலையாள் தட்டுவதைக் கேட்டு, அவனை உள்ளே வருமாறு சொன்னாள்.

அவன் வந்ததும், "என்ன, தங்கம்?" என்று கேட்டாள்.

"கமலவேணி சீமாட்டியின் வேலையாள் எஜமானரிடம் ஒரு தகவலைக் கொடுக்குமாறு சொல்லிச் சென்றான்," என்று தங்கம் கூறினான்.

"என்ன அது?"

"கமலவேணி சீமாட்டி அவர்கள் எஜமானர் வருகையை யறிந்து சந்தோஷப் படுவதாகவும் ஏதோ ஒரு விஷயத்தைக் குறித்து எஜமானரை வரும்படி சொல்லி யிருக்கிறார்கள்," என்று தங்கம் சொல்லிச் சென்றான்.

மாயா விரோதி அப்பொழுது இந்திராவின் மனதிற்கு ஆறுதல் கொடுக்க நினைத்தானாதலால் அங்கு நின்றும் போய்விட யோசித்தான். "அன்பே, உன் மனநிலை மாறட்டும். சீமாட்டியைக் கண்டுவிட்டு, சாப்பாட்டிற்கு இங்கு வருகிறேன்," என்று சொன்னான்.

இந்திராவின் புதியகோபம் உச்சநிலையை யடைந்தது. "போம், உமது பிரியம்," என்று சொன்னதும் அவ்விடத்தை விட்டும் சென்று விட்டாள்.

அதைப் பார்த்த கபடநாடக வேஷதாரி, "இவள் பிரியப்படி நடந்தால் நான் என்ன செய்வது? எதற்கும் கொஞ்சம் யோசனை செய்ய வேண்டும். நான் காதல் ஆத்திரத்தில் அவளுக்கு கோபத்தை உண்டாக்கி விட்டேன். இப்பொழுது சீமாட்டி கமலவேணி!... .....இவளை நான் சரியாகக் கூட அறியேன்....இருந்தாலும் அங்கு சென்று, சில விஷயங்களை—பழைய பிரபுவைப்பற்றி—அறிந்து கொள்ளலாம்." என்று சொல்லிக் கொண்டான்.

---

## அதிகாரம்—5

### மாயா விரோதியின் சண்டை

அன்று மாலை அஸ்தமிக்கும் சூரியனுடைய கிரணங்கள் வானத்தை மானிடர் களிக்கும் வகையில் மகோன்னதமான காட்சியை சிருஷ்டி செய்து கொண்டிருக்கையில், செங்கோட்டை ஜெமீந்தார் மாளிகையில், ஒரு அலங்காரமான அறையில், வக்கீல் மோகனரங்க முதலியார் மிக்க அவசரத்தோடு சென்று, இந்திராவைக் கண்ணுற்றார். அவருடைய வருகையைச் சிறிதளவும் விரும்பாத ஜெமீந்தாரினி அலட்சியமான பார்வையோடு அவரை

அரைமனதோடு வரவேற்ருள். தனது கடிதக்கட்டைத் திருடிவிட்ட அந்த வக்கீலை அவள் மனதார வெறுத்திருந்தாள். அன்று காலையில்தான் அந்த மாது அவரிடம் பேசியிருந்தாள். திரும்பவும் அவர் வந்தது அவளுக்கு ஆச்சரியத்தையும் அருவருப்பையும் கொடுப்பதாக இருந்தது.

"ஜெமீந்தார் எங்கே?" என்று நாற்காலியில் உட்கார்ந்து கொண்ட வக்கீல் சிறிது கவலையோடு கேட்டார்.

"ராஜதேவரின் சகோதரர் வக்கீல் சிங்கார தேவருடன் பேசிக்கொண்டிருக்கிருர்," என்ருள் இந்திரா.

"பிரபு உன்னிடம் சண்டை சச்சரவு ஆன விஷயத்தைப் பற்றிச் சொல்லவில்லையா?"

"இல்லை. என்ன சச்சரவு?"

"அவன் சொல்லாததால் நான் அதைச் சொல்லுவது பிசகு, இந்திரா."

"இந்தமாதிரி நடப்பதைத்தான் முட்டாள்தனம் என்று சொல்லுவார்கள்."

"நீ சொல்லுவது தவறு."

"இல்லை, இல்லை. நீர் ஏன் விஷயத்தை என்னிடம் சொல்லக்கூடாது? பிரபு சொல்லாவிட்டால் என்ன?"

"உன் புருஷன் என்னிடம் மிக்க நட்பு கொண்டிருந்தான். இப்பொழுது கொஞ்சம் மாறுதலை நான் காண்கிறேன். இருந்தாலும் அவனுக்கு உதவி செய்ய நான் ஓடோடியும் வந்தேன். ராஜன் துப்பாக்கி குறி தவருமல் சுடும் விஜயபாஸ்கரப் பிரபுவுடன் நாளைக் காலையில் சண்டை போடவேண்டும். நீ கவலைகொள்ளாதே."

"நான் கவலைகொள்ளவில்லை. அவர் ஏன் சண்டையிடவேண்டும்?"

"யார் பொருட்டு என்பதைக் கேள்."

"யார் பொருட்டு?"

"உன் பொருட்டு."

"என் பொருட்டா?"

"ஆம். உன்னுடைய கௌரவத்தைக் காப்பாற்றும் பொருட்டே. ராஜன் இப்பொழுது நாம் எல்லோரும் ஆச்சரியப்படும் விதமாக நடந்துகொள்கிருன். அவனுக்கு புத்தி கொஞ்சம் மாறிவிட்டது என்றே நான் நினைக்கிறேன். அவன் தன் மனைவியின்—உன்னுடைய—மானத்தை நிலைநிறுத்தவே விஜயபாஸ்கர பிரபுவுடன் சண்டை செய்கிருன். இது மிக்க ஆச்சரியம் அல்லவா, இந்திரா?"

"எனக்கும் அவர் சண்டை பிடிப்பதற்கும் எப்படி சம்பந்தம்?"

"நானும் அங்கேயிருந்தேன். பிரபுவின் வீட்டில் இருந்தேன். அப்

போது ராஜன் அங்கே வந்தான். அவன் சில வருஷங்களாக கமல வேணி சீமாட்டிமீது காதல் கொண்டிருந்ததை நீ அறிவாய். அதை அவ ளுடைய புருஷர் விஜயபாஸ்கரர் அறியவில்லை. இன்று அவ்விஷயத்தை அவர் மறைந்து கேட்டுவிட்டார். மிக்க கோபத்தோடு அவர் உன்னைப் பற்றி கமலவேணி சீமாட்டி கூறியதைச் சொல்லி, உன்னை விபசாரி என்று சொன்னர். ஜெமீந்தார் ராஜன் கோபம் பொங்கியெழுந்த உன்னு டைய மானத்தைக் காப்பதற்காக நாளைகாலை துப்பாக்கிச் சண்டை செய்வ தாக முடிவு செய்து சென்றான்.''

''என்பொருட்டா இச்சண்டை ?''

''ஆம். இன்னொரு விஷயம். ராஜன் விஜயபாஸ்கரருடைய கன்னத் தில் பல அறைகளும் கொடுத்தான். அதனால்தான் இந்த துப்பாக்கிச் சண்டை ஏற்பட்டது,''

தன்னுடைய புருஷன் முன்பு இருந்ததுபோல் இல்லாமல் புதிய ஆளாக மாறிவிட்டதை இந்திரா மனதினுள் சந்தோஷங்கொண்டாள். தன்னை அவ மானப்படுத்திப் பேசிய சீமானுடன் சண்டை செய்ய முற்பட்டதும் சீமாட் டியைத் தன் பொருட்டுக் கைவிடுவதும் மிக்க யோக்யமான செயல்கள் என்று கருதி ஜெமீந்தாரினி மிக்க சந்தோஷமடைந்தாள்.

இரண்டு விநாடிகளுக்குப் பின் இந்திரா வக்கீல் மோகனரங்கத்தைப் பார்த்து, ''என் புருஷர் சண்டை செய்வதில் நீர் எப்படி உதவி செய்யப் போகிறீர்?'' எனக் கேட்டாள்.

அப்பொழுது செங்கோட்டை ஜெமீந்தார் வந்தார். அவருடன் சிங் காரதேவரும் வந்தார். வக்கீல் மோகனரங்கம் எழுந்திருந்து, ''ராஜம், உனக்கு சண்டையில் உதவி செய்ய நான் தயாராக இருக்கிறேன்'' என்றார். அவர் பேசுகையில் இந்திரா ஒன்றும் பேசாமல் அங்கு நின்றும் அகன்றாள்.

''சந்தோஷம். நான் பிரபுவுடன் துப்பாக்கிச் சண்டை செய்வதற்கு உதவியாக இருப்பவர்களைத் தேர்ந்து எடுத்துவிட்டேன்,'' என்று வக்கீல் மோகனரங்கத்தைக் கண்டதுண்டமாக வெட்டி யெறிந்துவிடவேண்டும் எனும் எண்ணத்தைக் கொண்டிருந்த மாயாவிரோதி சொன்னன்.

''என்ன, என்ன ? நான் உன் சிநேகிதன் அன்றோ ? மேலும் உன் மனைவியின் ஆப்த நண்பன்,'' என்று ஆச்சரியத்தோடு வக்கீல் கூறினர்.

''ஓ! எனக்குத் தெரியும்......எனக்குத் தெரியும் அது,'' என்றான் மாயாவிரோதி.

(தொடரும்.)



# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

ஈசுவர ஹு மாசிமீ—கலியுகாதி 5039, சாலிவாகனம் 1860,
பசலி 1347, கொல்லமாண்டு 1113, ஹிஜரா 1356-57,
இங்கிலீஷ் 1938ஹு பிப்ரவரிமீ—மார்ச்மீ

| மாசிமீ | பிப்ரவரி | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 12 | சனி | துவா1-48 திர54-25 | புன40-28 | சித்60 | கும்பரவி நா-10-0, விஷ் ணுபதி புண்யகாலம் |
| 2 | 13 | ஞா | சது47-13 | பூச35-3 | சித்60 | சுக்கிரன் கிழக்கே உதயம் |
| 3 | 14 | திங் | ○40-20 | ஆயி30-0 | சி30-0மர | பௌர்ணமி, மஹாமாஹி |
| 4 | 15 | செவ் | பிர34-38 | மக25-48 | சித்60 | மாகபகுளம், மாசி மகம் |
| 5 | 16 | புதன் | துதி30-8 | பூர22-45 | அமி60 | |
| 6 | 17 | வியா | திரி27-18 | உத்21-20 | ம21-20சி | |
| 7 | 18 | வெள் | சது26-25 | அஸ்21-50 | அ21-50சி | |
| 8 | 19 | சனி | பஞ்27-33 | சித்24-18 | ம24-18அ | |
| 9 | 20 | ஞா | சஷ்30-43 | சு28-43 | சி28-43ம | |
| 10 | 21 | திங் | சப்35-33 | வி34-43 | ம34-43சி | |
| 11 | 22 | செவ் | அ41-38 | அ41-30 | சி41-30ம | |
| 12 | 23 | புதன் | நவ48-20 | கே49-40 | சி49-40ம | |
| 13 | 24 | வியா | தச54-50 | மூல58-40 | சித்60 | |
| 14 | 25 | வெள் | ஏகா60 | பூரா60 | பிர60 | |
| 15 | 26 | சனி | ஏகா0-53 | பூரா4-23 | சித்60 | தில துவாதசி, கரிநாள் |
| 16 | 27 | ஞா | துவா5-38 | உத்10-18 | அமி60 | பிரதோஷம், விவாகம் |
| 17 | 28 | திங் | திர9-3 | திரு14-58 | அ14-58சி | மஹா சிவராத்திரி |
| 18 | 1 | செவ் | ச ● 11-0 | அவி18-13 | சி18-13ம | சர்வத்திர அமாவாசை |
| 19 | 2 | புதன் | அ11-45 | சதை20-8 | சித்20-8அ | மருந்துண்ண, குளிக்க |
| 20 | 3 | வியா | பிர11-0 | பூர20-53 | சித்60 | சந்திர தெரிசனம் |
| 21 | 4 | வெள் | துதி9-23 | உத்20-45 | சி20-45அ | சர்வ முகூர்த்தம் |
| 22 | 5 | சனி | திரி6-58 | ரே19-50 | ம19-50சி | மாச சதுர்த்தி விரதம் |
| 23 | 6 | ஞா | சது3-55 | அஸ்18-23 | சித்60 | சாந்த சதுர்த்தி |
| 24 | 7 | திங் | பஞ்0-18 சஷ்56-10 | ப✲16-18 | சி16-18ம | சஷ்டி, மாசி கிருத்திகை [தர் குளிக்க |
| 25 | 8 | செவ் | சப்54-3 | கிரு13-48 | சி13-48அ | கடன் தீர்க்க, வியாதியஸ் |
| 26 | 9 | புதன் | அ46-35 | ரோ10-53 | சித்60 | தானியஞ் செலவிட |
| 27 | 10 | வியா | நவ41-23 | மிரு7-33 | மர60 | சுப காரியங்கள் நீக்க |
| 28 | 11 | வெள் | தச35-45 | திரு3-58 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 29 | 12 | சனி | ஏகா30-13 | புன0-13 பூச56-23 | சித்60 | சர்வ, மத்வ ஏகாதசி, சுக்கி ரன் மேற்கே உதயம் |
| 30 | 13 | ஞா | து24-35 | ஆயி52-38 | சி52-38ம | பிரதோஷம், நவக்கிரக சாந்தி செய்ய |

(Column 2 side labels: 1938ஹு பிப்ரவரிமீ; மார்ச்மீ)

| | | | |
|---|---|---|---|
| சனி செ | | கே | |
| சுக் சூரி புத குரு | 11-கும்ப-புத 19-மே-செ 23-மீன-சுக் 28-மீன-தத | | |
| | ராகு | | |

Printed & Published by N. Munisawmy Mudaliar,
At The " Ananda Bodhini " Press,
No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Madras.

ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.


தொகுதி 23 | ஈசுவரஹு பங்குனிமீ கஉ 1938ஹு மார்ச்மீ 14உ | பகுதி 9

## கடவுள் வணக்கம்.

குறைவிலா நிறைவே கோதிலா அமுதே
 ஈறிலாக் கொழுஞ்சுடர்க் குன்றே
மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தஎன்
 மனத்திடை மன்னிய மன்னே
சிறைபெறு நீர்போற் சிந்தைவாய்ப் பாயும்
 திருப்பெருந் துறையுறை சிவனே
இறைவனே நீஎன் உடல்இடங் கொண்டாய்
 இனிஉன்னை என்இரக் கேனே. (1)

இரந்துஇரந்து உருக என்மனத்து உள்ளே
 எழுகின்ற சோதியே இமையோர்
சிரந்தனில் பொலியுங் கமலச்சே வடியாய்
 திருப்பெருந் துறையுறை சிவனே
நிரந்த ஆகாய(ம்) நீர்நிலந் தீகால்
 ஆயவை அல்லையாய் ஆங்கே
கரந்ததோர் உருவே களித்தனன் உன்னைக்
 கண்ணுறக் கண்டுகொண்டு இன்றே. (2)

இன்றுஎனக்கு அருளி இருள்கடிந்து உள்ளத்து
 எழுகின்ற ஞாயிறேபோன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
 நீஅலால் பிறிதுமற்று இன்மை
சென்றுசென்று அணுவாய்த் தேய்ந்துதேய்ந்து ஒன்றாம்
 திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்றுநீ யல்லை அன்றியொன்று இல்லை
 யார்உன்னை அறியகிற் பாரே. (3)

# அரும்பொருள் விளக்கம்

(இ-ள்.) யாதொரு குறைவுமின்றி, நிறைந்து விளங்கும் சர்வத்துவ முடையவனே! குற்றஞ் சொல்வதற்கில்லாத தேவாமிர்தமே! இறுதி யில்லாத கொழுவிய ஜோதிமலேயே! வேதங்களாய், வேதங் களின் உட்பொருளாய் வந்து என் உள்ளத்தில் பதிந்த மன்னர்மன்ன னே! கரைகோலப் பெறாத நீரைப்போல மனதில் புகுந்து குடிகொள் ளும் திருப்பெருந்துறையுறைச் சிவபெருமானே! எங்கும் தங்கிய இறை வனே! தேவரீர் அடியேனது தேகத்தை உனக்கு உறைவிடமாகக் கொண் டாய்; அப்படியிருக்க, இனி உன்னை வேறு என்ன யாசிக்க இருக்கிறது; (எ-று.)

எல்லாம்வல்ல முழுமுதற் கடவுள், உடல், பொருள், ஆவி மூன்றையும் உன் உடைமையாகக் கொண்டு வலிந்து ஆட்கொண்டுவிட்ட பின்னரே, அவரிடம் இன்னும் பிரார்த்தித்து பெறுவதற்கு என்ன இருக்கிறது என்று மாணிக்கவாசகப் பெருந்தகையார் இப்பாடல் வாயிலாகக் கடவுளையே கேட்கிறார். (1)

(இ-ள்.) உன்னை வேண்டிப் பிரார்த்தித்து அழுதால் என் உள்ளத்தி னுள்ளிருந்து மேலெழுகின்ற பரஞ்சோதியே! தேவர்களது தலைகளில் விளங்குகின்ற தாமரைமலர் போன்ற திருவடிகளை யுடையவனே! திருப் பெருந்துறை என்னுந் திவ்ய க்ஷேத்திரத்தில் கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் சிவபெருமானே! நிறைந்த ஆகாயம் நீர் நிலம் தீ காற்று ஆகிய பஞ்சபூதங்களாயும், இவை யெல்லாம் அல்லாததாயும் அவ்விடத்தே மறைந்த ஒப்பற்ற மூர்த்தியே! இன்று தேவரீரைக் கண்ணாரக் கண்டுகொண்டு களித்தேன். (எ-று.)

அஷ்ட மூர்த்தங்களாய் ஆண்டவன் விளங்குகிறான் என்னும் உண் மையை, "நிரந்த ஆகாயம் நீர் நிலந் தீ கால் ஆய்" என்று அடியில் எடுத்து விளக்கி யிருப்பது போற்றத் தக்கது. (2)

(இ-ள்.) இன்று எனக்குக் குருவாக எழுந்தருளி ஆட்கொண்டு, பாசஇருளை நீக்கி என்மனதில் உதயமாகிற சூரியனைப்போன்று விளங்கு கின்ற உன்னுடைய இயற்கையை ஆழ்ந்து யோசித்துப் பார்த்தேன்; அவ் விதம் ஆராய்ந்ததில் உன்னையன்றி வேறொருபொருள் இல்லை என்னும் படி, படிபடியாய்ச் சென்று அணு அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து முடிவில் ஏகமாய்த் திகழும் திருப்பெருந்துறையுறை சிவபெருமானே! உன்னை யன்றிவேறொன்று இல்லை; உன்னை உண்மையாக அறிவார் யார்? (எ-று.)

இறைவனின் அத்வைத நிலையை மாணிக்கவாசகப் பெருந்தகையார் இப் பாட்டில் வெகுதெளிவாக, "நீ அலால் பிறிது மற்று இன்மை சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றாம் திருப்பெருந்துறையுறை சிவனே! ஒன்று நீயல்லை அன்றி யொன்று இல்லை; யார் உன்னை அறியகிற் பாரே" என்று கூறினார். (3)




# நவயுக உதயம்

தேச மகாசபையாகிய காங்கிரஸைச் சேர்ந்தவர்கள்—தேசநன்மையையே தங்களது பிரதான நோக்கமாகக் கொண்டவர்கள்—அரசியல் பதவியேற்று ஆட்சி நடத்தத் தொடங்கினால் தங்களுக்கும், நாட்டுக்கும் பல நன்மைகள் விளையும் என்று பொதுமக்கள் எதிர்பார்த்தார்கள். அடுத்தடுத்து ஏற்பட்ட தேசியப் போராட்டங்களால் பாதக மடைந்திருக்கும் நாட்டுமக்களுக்குத் தங்களால் கூடிய நன்மைகளைச் செய்ய வேண்டுமென்ற எண்ணங்கொண்டே காங்கிரஸ் தலைவர்கள் பதவி யேற்புக்கு அநுமதி யளித்து, தற்போது பிரிட்டிஷ் சர்க்காரால் வழங்கப்பட்டிருக்கும் மாகாண சுயாட்சி வாயிலாக எவ்வளவுதூரம் நன்மை செய்ய முடியுமோ அவ்வளவுதூரம் முயன்று நன்மை செய்யும்படி பொறுப்பு வாய்ந்த காங்கிரஸ் பிரமுகர்களை நியமித்தனர். பொதுமக்கள் நம்பிக்கைக்கும், காங்கிரஸ் தலைவர்களது நம்பிக்கைக்கும் பாத்திரமான முறையிலேயே இன்று ஏழு மாகாணங்களிலும் அரசியல் நடத்தி வரும் காங்கிரஸ் மந்திரிசபையார் பொதுமக்கள் நன்மைக்குகந்த வகையில் பல காரியங்களைச் செய்து வருகின்றனர். அதிலும் நமது சென்னை மாகாண காங்கிரஸ் மந்திரிகள் பொதுஜன நன்மைக்கான காரியங்களைச் செய்வதில் மற்ற மாகாணங்களுக்கு முன் மாதிரியாய் இருக்கும்படி பல முக்கிய காரியங்களை அவர்கள் செய்திருக்கிறார்கள் என்றால், அது மிகையாகாது.

நமது மாபெருந் தலைவர் ஸ்ரீஜத் ஸி. இராஜகோபாலாச்சாரியாரைப் பிரதமமந்திரியாகக் கொண்ட சென்னைக் காங்கிரஸ் மந்திரிசபையார் இந்த ஆறு ஏழு மாதங்களாகப் பொதுமக்களுக்குச் செய்துள்ள நன்மைகள் அனைவரும் அறிந்ததே. அதுவும் கிரமமாக சென்ற வருஷ ஆரம்பத்திலேயே பதவி யேற்கவேண்டிய அவர்கள் அச்சமயம் ஏற்பட்ட அரசியல் நெருக்கடி காரணமாக அவ்வருஷப் பிற்பகுதியிலே ஆட்சியை யேற்று வரவு செலவுத் திட்டத்தைச் சரிகட்ட வேண்டிய தாயிற்று. இவ்வளவு அசந்

தர்ப்பமான நிலையிலும் அவர்கள் தங்களுக்குக் கிடைத்துள்ள அதிகாரத்தைக் கொண்டு எவ்வளவு செய்யவேண்டுமோ அவ்வளவும் செய்திருக்கின்றனர்.

அதன் பூரண அபிவிருத்தியைச் சமீபத்தில் கனம் ராஜகோபாலாசாரியார் பொக்கிஷ மந்திரி என்ற ஹோதாவில் சமர்ப்பித்த 1938-39 வருஷ வரவு செலவு திட்டத்தில் காண்கிறோம். கனம் ஆச்சாரியார், சென்ற வருஷம் 1937-38-ம் வருஷத்தின் பின் ஆறுமாத காலத்திய வரவு செலவு திட்டத்தைச் சமர்ப்பித்தபோது பொதுமக்களுக்கு நன்மை பயக்கத்தக்க வகையில் தாங்கள் செய்ய விருக்கும் காரியங்களைக் குறிப்பிட்டிருந்தார். அவ்விதம் குறிப்பிட்டபடியே காங்கிரஸ் மந்திரிசபையார் காரியங்களைச் செய்து இருக்கின்றனர். அந்தக் காரியங்களை இவ்வருஷமும் மேற்கொண்டு செய்ய பிரதமமந்திரி இவ்வருஷ வரவு செலவு திட்டத்தின் மூலம் ஏற்பாடு செய்திருப்பது பாராட்டத் தக்கதாகும்.

அதாவது, சென்ற வருஷத்தைப் போலவே, புது வருஷத்திலும் விவசாயிகளுடைய வரிப்பளுவைக் குறைத்திருக்கிறார்கள். கிராமமக்களின் குடிநீர் வசதிக்காகத் தனிநிதியொன்றை ஏற்படுத்தி அதற்காகப் பதினைந்து லட்சம் ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். விவசாயிகள் கடன் நிவாரண மசோதாவின்படி குறையக்கூடிய கடன்களைக் கொடுத்துத் தீர்ப்பதற்காக, கடன் கொடுத்து உதவி செய்வதற்கு 50 லட்சம் ரூபாய் ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். காடுகளில் கால் நடைகளை மேய்ப்பதற்காக இப்போது விதித்துவரும் மேய்ச்சல் கட்டணத்தைச் சரிபாதியாகக் குறைத்திருக்கிறார்கள். சித்தூர், கடப்பை ஜில்லாக்களில் மதுவிலக்கை அநுஷ்டானத்துக்குக் கொண்டுவர விருக்கிறார்கள். வரவு செலவு திட்டத்தில் காணப்பட்ட முக்கியாம்சங்கள் மேற்குறித்தவைகளே யாகும்.

இத்திட்டங்களில் நிலத் தீர்வை விஷயமாகத்தான் பலருக்குப் போதிய திருப்தியுண்டாகவில்லை. போன வருஷ மத்தியில் பதவியேற்றதால் நிலவரி முறையை ஒழுங்காக நிர்ணயிப்பதற்குக் காங்கிரஸ் மந்திரிகளால் இயலாதிருந்தது. இவ்வருஷமாயினும், அவ்விஷயத்தில் தகுந்த முறையை ஏற்படுத்துவார்கள் என்று பொது மக்கள் முக்கியமாக விவசாயிகள் எதிர்பார்த்தனர். ஆனால் முந்திய பசலியில்போலவே வரும் பசலியிலும் நிலவரி வஜா அளிக்கப்போவதாகவும், புதிய நிலவரிக் கொள்கையை உடனே நிர்ணயிக்கச் சாத்தியமில்லையென்றும் பிரதம மந்திரி கூறியிருக்கிறார். ஆயினும், கூடிய சீக்கிரம் நிலவரிக் கொள்கையை நிர்ணயித்து விவசாயிகளுக்கு நன்மை செய்வார்களென்று நம்புகிறோம்.

கிராம மக்களின் குடிநீர் வசதிக்குத் தனி நிதி ஏற்படுத்தியிருப்பதும், கால் நடைகளின் மேய்ச்சல் கட்டணத்தைப் பாதியாகக் குறைத்திருப்பதும் விவசாயிகள் கடன்நிவாரண மசோதாவுக்கு அநுகுணமாக, கடன் கொடுத்துதவ 50 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருப்பதும், சித்தூர், கடப்பை ஜில்லாக்களில் மதுவிலக்கை அநுஷ்டானத்துக்குக் கொண்டுவர முன்வந்திருப்பதும் காங்கிரஸ் மந்திரிகள் கிராமமக்கள் அபிவிருத்தியில் எவ்வளவு தூரம் கண்ணுங் கருத்துமாக இருக்கிறார்கள் என்பதற்குப் போதிய உதாரணங்களாகும். பல கிராமங்களில் மக்கள் குடிப்பதற்குத் தண்ணீர் கிடைக்காது வருந்துவதை நகர மக்கள் பெரும்பாலார் அறிந்திருக்கமுடியாது. நீர்வளம் மிகுந்த கிராமங்களில் கூட சுத்தமான நீர் கிடைப்பது மிகவும் அருமை. மக்கள் குடிப்பதற்குத் தகுதியற்றவிதமாய் குளங் குட்டைகளில் இருக்கும் அசுத்த நீரை அருந்த நேர்வதாலேயே கிராம மக்களிடையே பலவிதமான தொத்து நோய் பரவுவதற்கு ஏதுவாயிருக்கிறது. காங்கிரஸ் மந்திரிகள் ஏற்படுத்தியிருக்கும் குடிநீர் வசதித் திட்டம் இவ்விதக் கேவல நிலைமையை மாற்றும் என்பது திண்ணம்.

இதுபோலவே, கால் நடைகளின் மேய்ச்சல் கட்டணக் குறைப்பாலும், விவசாயிகளுக்குப் பெரிதும் அநுகூலம் ஏற்படும். கால்நடைகள் விவசாயிகளுக்கு ஜீவாதாரமாக இருப்பவையாகும். கட்டணக் குறைப்பால், முன்னைவிட கால் நடைகளுக்கு மேய்ச்சல் வசதி அதிகமாவதால் அவை செழிப்பாக வளர்ந்து அதன் மூலமாக அவை இதுவரை இருந்ததைவிட விவசாயத் தொழிலுக்குப் பேருதவியாக இருந்து அதை அபிவிருத்தி செய்யும்.

விவசாயிகள் கடன் உதவித் திட்டம், விவசாயிகள் கடன் நிவாரண சட்டத்தால் ஆரம்பத்தில் கடன் கிடைக்காது கஷ்டப்படும் நிலைமையை ஒருவாறு போக்கி விவசாயிகளுக்குப் பேருதவி யளிக்கக்கூடியதாக இருக்கிறது. ஆனால் இதுவரையில் உள்ளதுபோல், காலதாமதம் ஏற்பட இடமில்லாமல், விவசாயிகளுக்குக் கடன் வசதி கிடைக்கும்படி செய்தால், நன்றாயிருக்கும். அதற்கான முறையை காங்கிரஸ் மந்திரிகள் கடைப்பிடிப்பார்களென்று நம்புகிறோம்.

இனி. இவ் வரவு செலவு திட்டத்திலேயே முக்கியமானதும், நூதனமானதுமான மதுவிலக்குத் திட்டம் மற்றும் இரு ஜில்லாக்களில் வியாபகப்படுத்தப் பட்டிருக்கிறது குறிப்பிடத்தக்கதும், மகிழ்ச்சி கொள்ளத் தக்கதுமான விஷயமாகும். சென்ற வருஷம் தமிழ் ஜில்லாக்களில் ஒன்றான சேலம் ஜில்லாவில் மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டு வந்தார்கள். இவ் வருஷம், ஆந்திர தேசத்தைச் சேர்ந்த சித்தூர், கடப்பை ஜில்லாக்களில் மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டுவர முன் வந்திருக்கிறார்கள். அவ்

விரு ஜில்லாக்களும் சேலம் ஜில்லாவுக்குத் தொடர்ச்சியாக இருக்கின்றன. சென்ற மூன்று மாத காலத்தில் சேலம் ஜில்லாவில் மதுவிலக்கால் நன் முறையில் பலன் ஏற்பட்டிருக்கிறது. ஆதலால் இவ் விரு ஜில்லாக்களிலும், மதுவிலக்கு பூரண வெற்றியுடன் நிறைவேறு மென்றே நாம் நம்புகிறோம்.

சென்ற வருஷம் அக்டோபர் மாதத்தில் சேலத்தில் அமுலுக்கு வந்த மதுவிலக்கு எவ்வளவு தூரம் வெற்றி பெற்றிருக்கிற தென்பதற்கு, அந்த ஜில்லாவிலிருந்து அவ்வப்போது வந்து கொண்டிருந்த செய்திகளிலிருந்து அன்பர்கள் அறிந்திருப்பார்கள். அத்துடன், மதுவிலக்கு சட்டத்தால் சேலத்தில் ஏற்பட்டிருக்கும் நிலைமையையும், பலாபலன்களையும் பற்றி சமீபத்தில் சேலம் ஜில்லா கலெக்டர் விரிவான அறிக்கை யொன்றைத் தயாரித்து சர்க்காருக்குச் சமர்ப்பித் திருக்கிறார். அதைக் கவனித்துப் படித்துப் பார்க்கும் எவரும், மதுவிலக்கு சட்டத்தின் பயனாக, சேலத்திலுள்ள ஏழை மக்கள் பலரது குடும்பங்கள் நல்ல நிலைமையை யடைந்திருப்பதை நன்கு அறியலாம். தாசில்தார்கள், போலீஸ் இன்ஸ்பெக்டர்கள், ரெவின்யூ டிவிஷனல் ஆபீஸர்கள், தாலூகா மதுவிலக்கு கமிட்டி யங்கத்தினர்கள் முதலியவர்கள் தமக்கு அனுப்பிய தகவல்களை யெல்லாம் கொண்டு பார்த்தால், மதுவிலக்கினால் பொது மக்களுக்கும் சிறப்பாக ஏழை மக்களுக்கும் அதிக அநுகூல மேற்பட்டிருப்பதாகத் தமக்குத் தெரிகிற தென்று கலெக்டர் கூறுகிறார். நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபட்டுச் சம்பாதிக்கும் சொற்ப வருமானத்தைப் பெரும்பாலும் குடியில் செலவழித்துக் குடும்பத்தைக் காக்க சக்தியின்றிக் கலகமும், சண்டையும் விளைத்து வந்த ஏழைத் தொழிலாளர்களும், விவசாயிகளும் இப்போது கொடிய குடிப் பழக்கத்தை விட்டு வறுமை, கடன் இவைகளிலிருந்து தப்பி மனைவி மக்களோடு சுக வாழ்வு நடத்தி வருகிறார்கள் என்று கலெக்டர் அறிக்கையில் உறுதியாகக் கூறி யிருப்பதைப் படிக்கும்போது, நமக்கு உண்டாகும் சந்தோஷத்தை விவரிக்க முடியாது.

மேலும் கலெக்டர் தம் அறிக்கையில் மதுபான பழக்கமுடையோர் சிலர் கூறும் அநுபவங்களையும் பின் வருமாறு வெளியிட்டிருக்கிறார்:—

“கோபுத்தூர், கீரைப்பட்டி, ஆச்சான குட்டைப்பட்டி முதலிய இடங்களில் வசிக்கும் குடிப் பழக்கமுடைய மூவர் தாங்கள் தினசரி குடிப்பதற்குப் பணம் வேண்டி யிருந்த தென்றும், அதற்காக நெல்லைக் கொடுப்பதாகக் கூறிக் கடன் வாங்குவதுண்டென்றும், அறுவடை காலத்தில் குறைந்த விலையில் நெல் முழுவதையும் கடனுக்குக் கொடுத்து விடுவதுண் டென்றும்,

இந்த அறுவடையின் பொழுது கடன் வாங்கவில்லை யென்றும், குடிக்க கள் கிடைக்காததால், கடன் வாங்கவேண்டிய அவசிய நேரிடவில்லை யென்றும் நெல்லைச் சேர்த்து வைத்து விட்டதாயும் கூறினார். மேலப்பள்ளியைச் சேர்ந்த வேறொருவர் தன் வருவாய் முழுவதையுங் குடிக்கே செலவிட்டு வந்ததாயும், மனைவி மக்களுக்கு ஒருவேளை சாப்பாடு கூட இல்லாம லிருந்ததென்றும் அடிக்கடி மனைவியோடு சண்டையிட்டு அடிப்பதுண்டென்றும், தனக்குச் சொந்தமா யிருந்த ஏக்கர் நிலங்களை விற்று விட்டதாயும், தகுந்த போஷணை யின்மையால், இரு குழந்தைகள் இருந்ததென்றும், மதுவிலக்குக்குப் பிறகு 2 அல்லது 3 வேளை சாப்பாடு கிடைக்கிறதென்றும் 17 ரூபாய்க்கு ஆடு மாடுகள் வாங்கியதாகவும், மனைவி மக்களுக்கு 4 ரூபாய்க்கு ஆடை வாங்கியதாகவும் தெரிவித்தார்.

தோப்பூரைச் சேர்ந்த இன்னொரு தொழிலாளி தம் வருமானத்தை குடியில் செலவழித்து மனைவி 6 குழந்தைகள் ஆகியவர்களைப் பாதிப்பட்டினி கிடக்கும்படி செய்து வந்ததாயும், மதுவிலக்கு ஏற்பட்ட பின்னர் மனைவி மக்களோடு தினசரி திருப்திகரமாகச் சாப்பிட்டு வருவதாகவும், பொங்கலுக்கு மனைவிக்கும் தனக்கும் ஆடைகள் வாங்கியதாகவும், 15 ரூபாய் கடனில் 10 ரூபாய் தீர்த்து விட்டதாகவும் கூறினார்.''

இவ்விதமே, மற்றும் பல தொழிலாளிகளும் ஏழை மக்களும் மதுவரக்கனுக்குச் செலவழித்து வந்த தங்கள் வருமானத்தை உணவு உடைகளை வாங்கி உண்டு களிப்பதும், மீதிப் பொருளைச் சேமிப்பதுமாய் இருக்கின்றனர் என்றும், மில் ஆலையில் வேலை செய்யும் தொழிலாளிகள் முன்போல் அடிக்கடி நிற்காமல் ஒழுங்காக வேலைக்குச் சென்றுவருகின்றனர் என்றும், சண்டைகள், கலகங்கள் ஒழிந்தன என்றும் வரும் செய்திகளை அறிய யாருக்குத்தான் சந்தோஷத்தையளிக்காது! எனவே காங்கிரஸ் சர்க்கார் ஏற்படுத்தி யிருக்கும் மதுவிலக்குச் சட்டம் ஏழைகளுக்கும், தொழிலாளிகளுக்கும் ஓர் வரப்பிரசாதமாகும் என்று கூறினால் அது மிகையாகாது.

மதுவிலக்குச் சட்டத்தினால் சேலம் ஜில்லாவில் ஏற்பட்டிருக்கும் சுபிட்ச நிலைமை சித்தூர், கடப்பை ஜில்லாக்களிலும் ஏற்படவேண்டும். அவ்விடங்களை யடுத்து முறையே மற்றெல்லா ஜில்லாக்களிலும் கூடிய சீக்கிரம் இவ்வித சுபிட்ச நிலை ஏற்படும் என்பது நிச்சயம். சேலம் ஜில்லாவைப் போலவே, சென்னை மாகாண முழுவதும், ஏன் இந்தியா முழுதும் மதுவிலக்கு வெற்றி பெற்று சுபிட்ச நிலை ஏற்பட்டு அதன் வாயிலாக நவயுகம் உதயமாவதை வரவேற்போமாக.



# ஆரம்பப் பாடசாலைகளும், பாட புத்தகங்களும்

———:0:———

T. K. V.

நான்கு அல்லது ஐந்து வகுப்புகள் கொண்ட பாடசாலைகள் ஆரம்பப் பள்ளிகள் எனச் சாதாரணமாய் வழங்கப்படுகின்றன. ஆறு, ஏழு, எட்டு வகுப்புகள் உள்ள பாடசாலைகளும் உண்டு. இவற்றை உயர்தர ஆரம்பப் பாடசாலைகள் எனச் சொல்லுகின்றனர். இத்தகைய உயர்தர பள்ளிக்கூடங்கள் பெரும்பாலும் நகரங்களிலோ, ஜனத்தொகை பெருத்த கிராமங்களிலோ தான் காணப்படுகின்றன. ஆனால் முதலிற் சொல்லிய நான்கு ஐந்து வகுப்புகள் உள்ள பாடசாலைகள் அனேகமாக எங்கும் உண்டு.

இவ்வித ஆரம்பக் கலாசாலைகளுக்கு பாலர் வகுப்பு முதலாகவுள்ள எல்லா வகுப்புகளுக்கும் பாட புத்தகங்கள் பல பற்பல அறிஞர்களால் இயற்றப்பட்டு வெளிவந்துள்ளன. மொழிப் பயிற்சிக்கான—இலக்கிய அறிவு வளர்ச்சிக்கான புத்தகங்களே யன்றி, அறிவுப் பயிற்சிக்கான அதாவது பொது அறிவு சம்பந்தமான பாடபுத்தகங்களும் ஆரம்பப் பாடசாலை மாணவர்களாலும், ஆசிரியர்களாலும் கையாளப்படுகின்றன.

இப் பாட புத்தகங்கள் அனைத்தும் அரசாங்கத்தாரால் அவ்வப்போது நிறுவப்படுகிற ஆரம்பக் கல்வித் திட்டத்தை யொட்டி ஆக்கப்படுகின்றன எனில் ஒருவாறு பொருந்தும். ஏனெனில் அரசாங்கத்தாரது திட்டத்திற்கு முரண்படு வகையில் அமைக்கப்பட்டிருக்குமாயின் அவை அன்னாரது அங்கீகாரம் பெற முடியுமா?

ஆரம்பக் கலாசாலைகளில் பயிலும் மாணவர்களும், மாணவிகளும் மிக்க இளம்பிராயத்தினராவர். தம் பெற்றோருடன் வீட்டில் விளையாடித் திரியும் இச் சிறுவர்கள் பள்ளிப்படிப்பைத் தொடங்கியதே தம் சுயேச்சையில் ஓரளவு இழக்கின்றனர். சில சட்டதிட்டங்களுக்கும், கட்டுப்பாடுகளுக்கும் அவர்கள் அடங்கி நடக்க வேண்டியவர்களாகிறார்கள். இந்த நிலையில் அவர்களுக்குச் சில கவர்ச்சி தரக்கூடிய பொருள்கள் கிடைப்பின் அது பாடசாலையில் அவர்களுக்குண்டாகும் ஆயாசத்தை ஓரளவு போக்கும். இத்தகைய பொருள்களில் பாடபுத்தகமும் ஒன்று.

புதுப்புத்தகம் என்றாலே சிறுவர்களுக்கு ஒருவித உற்சாகமும் ஆசையும் உண்டாவது இயல்பு. அத்துடன் புத்தகத்தின் உள்ளும், புறமும் நல்ல

அழகிய படங்கள் காணப்படுமாயின் அவர்கள் பெறும் மகிழ்ச்சி அளவிடற்பாலது. அதை விரித்து விரித்துப் படங்களைப் பார்த்துப் பார்த்துத் தம் பக்கத்தேயுள்ள சகபாடிகளுக்குக் காட்டிக் காட்டி அவர்கள் அனுபவிக்கும் இன்பம் அம்மம்ம எத்துணைச் சீரியது? தாங்கள் உறங்கும் நேரத்திலன்றிப் புத்தகங்களைக் கீழே வைக்க அவர்கள் மனங்கொள்ளார்.

இப்படிச் சிறுவர்களுக்கு உற்சாக மூட்டிக் கல்வியில் ஆர்வத்தைப் பெருக்கவல்ல இப் பாட புத்தகங்கள் வெகுவாகத் திருந்த வேண்டும் என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயமாகும்.

முதலில் புத்தகங்களின் அமைப்பை எடுத்துக் கொள்ளுவோம். இன்றைய நாளில் வெளிவரும் பாட புத்தகங்களின் புற ஏடுகள் (மேல் அட்டைகள்) உள் ஏடுகளைப் போலவோ அல்லது சிறிது தடித்தோ தான் காணப்படுகின்றன. குழந்தைகளால் கையாளப்படும் எந்தப் பொருளும் போதுமான அளவு அழுத்தமாகவும், உரமாகவும் இல்லாவிடில் அது விரைவில் பயனற்றுப் போய்விடும். அஃதேபோல் பாட புத்தகங்களில் நல்ல மொத்தமான புற ஏடுகளாலும் அகஏடுகளாலும் அமைக்கப் பெறாவிடில் அவை சீக்கிரத்தில் கிழிந்துபோய் விடுகின்றன. முதல் வகுப்பில் படிக்கும் தம் புதல்வர்களுக்குப் பன்முறை புத்தகம் வாங்கியுதவும் பெற்றோர்கள் இவ்வுண்மையையறிவர்.

புத்தகங்களின் முகப்பில் நல்ல வர்ணப்படங்களிருக்குமானால், அவை மாணவர்களது உள்ளத்தைக் கவரும். அத்தகைய புத்தகங்களை அவர்கள சிரத்தையோடும், கவனமாகவும் பாதுகாப்பர். மேல்அடைகளைப் போலவே உள் ஏடுகளும் சந்தர்ப்பத்திற் கேற்ற சித்திரங்களால் அலங்கரிக்கப்பட வேண்டும். சித்திரங்கள் யாவும் பற்பல வர்ணங்களில் தீட்டப்பட்டிருப்பதுடன் இயற்கைக்கு முற்றிலும் பொருத்தமான வகையில் வரையப்பட்டிருப்பது நலமும் அவசியமுமாம். இதனால் இப்புத்தகங்களைப் படிக்கும் சிறுவர்களது கல்வியறிவு விரைவில் விருத்தியடையும்.

இரண்டாவதாக புத்தகங்கள் அச்சிடும் முறையைப் பற்றிக் கவனிப்போம். எழுத்துக்கள் வகுப்புக்கேற்ற முறையில் சிறியதாகவோ, பெரியதாகவோ பொறிக்கப் பட்டிருக்க வேண்டும். பாலர் வகுப்புப் புத்தகங்கள் நல்ல பெரிய எழுத்துக்களில் அச்சிடப்பட்டிருக்க வேண்டும். இன்றேல் குழந்தைகள் எழுத்துக்களின் வடிவைச் சரிவர உணர்ந்து கொள்ள முடியாது. முதன் முதலாக வரும் எந்த எழுத்தையும் மாறுபட்ட வர்ணத்தில் பொறித்தல் நலம். அதனால் அது புது எழுத்து என்பதை அவர்கள் தெரிந்து கொள்வதோடு அதைக் கற்றுக்கொள்ள வேண்டும் என்ற ஆவலை பெறுகின்றனர். இரண்டு, மூன்று வகுப்புகளில் கூட எழுத்துக்கள் சற்றுப் பெரியவைகளாகவே யிருக்க வேண்டும். இதனால் பதங்களையும், வாக்கியங்களையும் அவர்கள் சிரமமின்றிப் படிக்க வியலும்.

பாட புத்தகங்களில் வரும் பதங்கள் முன்னுக்குப் பின் தொடர்புடையனவாக விருத்தலோடு, நூதன பதங்கள் முதன் முதலாக உபயோகிக்கப் படும்பொழுது சற்றுப் பெரிய எழுத்துக்களில் பொறிக்கப்பட்டிருக்

தல் நலமாகும். இந்த முறை சில ஆங்கில பாடபுத்தகங்களில் அனுஷ்டிக்கப் பட்டிருக்கிறது. ஆனல் நம் தாய்மொழிப் புத்தகங்களில் இந்த முறை இதுவரை கையாளப் பட்டிருப்பதாகத் தெரியவில்லே.

பாடபுத்தகம் சிறுவர்களுக்கு வேதம் போல. அதிலுள்ள விஷயத்தை அவர்கள் வேத வாக்கென மதிப்பர். சந்தேகம் தோன்றும்போதெல்லாம் அதைத்தான் அவர்கள் புரட்டிப் பார்ப்பார்கள். ஆதலால் எந்தப் பாடபுத்தகமும் எழுத்துப் பிழையோ, இலக்கண வழுவோ இன்றிச் சுத்தமாகப் பதிப்பிக்கப்படவேண்டும். இந்த விஷயத்தில் பதிப்பாளர்கள் அதிக கவனமா யிருக்கவேண்டும். எந்தப் புத்தகமும் முதல் பதிப்பில் நன்கு கவனிக்கப்பட்டு அச்சேறி விடுகிறது. பாடபுத்தக சபையாரும் (Text book committee) உடனே அதை அங்கீகாரஞ் செய்து விடுகின்றனர். ஆனல் அதற்கடுத்த பதிப்புகளில் அது பிழைகள் மலிந்தும், பாட அமைப்புகள் சிதைந்தும் வெளிவருகிறது. முன்னேய அங்கீகார பலத்துடனேயே அது மீண்டும் பாடசாலேயினுட் செல்ல அனுமதிக்கப் படுகிறது. இத்தகைய புத்தகங்களேக் காண நேரும்போது ஆசிரியர்கள் மனம் வருந்தாது என் செய்வர்? எக்காரணத்தாலோ ஆங்கிலப் புத்தகங்களில் மட்டும் இந்தக் குறை காணப்படுவதில்லே. எத்தனேப் பதிப்புகள் வெளிவந்தாலும் எழுத்துப் பிழையோ, அல்லது பாட வேறுபாடோ காணப்படுவதில்லே. இங்ஙனமாக, நந்தமிழ்ப் புத்தகங்கள் மட்டும் ஏனே இந்தக் குறைக்கு ஆளாகின்றன !

மூன்ருவதாக விஷயத்தை ஆராய்வோம். பாடபுத்தகங்களில் ஒரு சில வெறுங் கதைகளால் நிரப்பப்பட்டு 'கதாவாசகம்' என்ற பெயருடன் வெளிவருகின்றன. வேறு சில மிருகங்களேப்பற்றியும், தாவரங்களேப் பற்றியும், வானநூலேத் தழுவியும் பாடங்கள் சேர்க்கப்பட்டு வெளிவருகின்றன. மற்றுஞ்சில வசனபாடங்களின் இடையிடையே எளிய நடையிலுள்ள பாக்களுடனும் தோன்றியுள்ளன. இவற்றில் தனித்தனி எந்தவகைப் புத்தகமும் சீரியதாகக் கொள்ள வியலாது. ஆனல் மேலேயுள்ள அந்த மூன்று வகையும் ஒன்றுபட்ட முறையில் பாடபுத்தகம் தயாராகுமானல், அது ஓரளவு உயரியதாகக் கொள்ளப்படும். நீதி பயக்கக்கூடிய புராணக்கதை, உணர்ச்சியூட்டக் கூடிய சரித்திர வரலாறு, பிராணிநூல், தாவரநூல் சம்பந்தமான வியாசங்கள், துரைத்தனம், நிலநூல் முதலியவற்றைத் தழுவிய கட்டுரைகள், விஞ்ஞானக் கலேயைப்பற்றிய சுலபமான விஷயங்கள் முதலான பலவும் பாடங்களாக அமைக்கப்படலாம். சீரிய கருத்தமைந்த பாக்கள் எளிய நடையில் சேர்க்கப்பட் டிருக்கவேண்டும். பாக்கள் இசையுடன் மாணவர்கள் பாடத்தக்க முறையில் அமைக்கப்பட்டிருத்தல் அவசியமாகும். ஒன்றிரண்டு பாடங்கள் உரையாடல் முறையில் தொகுக்கப்பட்டிருத்தல் நலம்.

சில புத்தகங்களில் கடின பதங்களுக்குப் பொருளும், பாடத்தைப் போதிப்பதற்கு ஆசிரியர் கையாளக்கூடிய சுலபமான முறையும் ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் கொடுக்கப்பட் டிருப்பதுண்டு. இதை எல்லாப் புத்தக உரிமையாளர்களும் கவனித்துக் கையாள்வார்களானல், புத்தகங்கள் நன்கு விற்பனேயாகும்.

புத்தகத்தின் தொடக்கத்தில் வகுப்புக்கேற்ற முறையில் தோத்திரப் பாக்கள் ஒன்றிரண்டு சேர்த்தலோடு, முடிவில் பாட திட்டத்தை யொட்டி ஆத்திச்சூடி, கொன்றை வேந்தன், மூதுரை போன்ற செய்யுட் கோவைகளும் சேர்க்கப்பட் டிருக்கவேண்டும்.

இனி அறிவு வளர்ச்சிக்காக ஏற்பட்டுள்ள பாடபுத்தகங்களைப்பற்றிச் சிறிது ஆராய்வோம். நிலநூல், வானநூல், உடல்நூல், தாவரநூல், கணித நூல், ஒழுக்கநூல், நாட்டு வரலாறு, அரசாங்க வரலாறு முதலான பலவற்றிற்கும் தனித்தனியாக பாடபுத்தகங்கள் பல வெளிவந்துள்ளன. இவையும் அரசாங்கத்தாரது அங்கீகார முத்திரை பெற்றுள்ளன.

வறுமை நோயுற்று வாடிவதங்கும் இக்காலத்துக் கிராமச் சிறுவர்கள் பலதிறப்பட்ட இப்புத்தகங்களை எங்ஙனம் விலைகொடுத்து வாங்க வியலும்? மொழிப் பயிற்சிக்கான பாடபுத்தகங்களை வாங்குவதற்கே வகைகாணாது மயங்கிநிற்கும் இச்சிறுர்களை ஏனைய அறிவு நூற் புத்தகங்களையும் வாங்க வேண்டுமென ஆசிரியர்கள் வற்புறுத்துவார்களானால் அன்னார் பள்ளியை விட்டகலாது வேறென் செய்வர்? ஆனால் இதைக் கருதியோ என்னவோ சில மாதங்களுக்கு முன்பு அரசாங்கத்தார் முதல் இரண்டு வகுப்புகளுக்குப் பாடபுத்தகங்கள் தவிர அதாவது மொழிவளர்ச்சிக்கான புத்தகங்கள் தவிர வேறு வாங்கக்கூடாது என ஒரு சுற்றறிக்கை யனுப்பியிருக்கின்றனர்.

போகட்டும். இவ் வறிவு நூற் புத்தகங்கள் செவ்விதமான முறையில் மாணவர்களுக்குப் பயனுகுமாறு வரையப்பட்டுள்ளனவா? அதுவுமில்லை. பெரும்பாலானவை ஆசிரியர்களுக்குப் பயன்தரு முறையிலே அமைக்கப்பட்டுள்ளன. ஒரு சில மட்டுமே மாணவர்கள், ஆசிரியர்கள் இருதிறத்தாருக்கும் பயனுகு முறையில் வெளிவந்துள்ளன. ஆயினும் என்ன? அத்தகைய சிறந்த பாடபுத்தகங்களை வைத்து நடத்த ஆசிரியர்களுக்கு உரிமையில்லையே!

லோக்கல் போர்டாரின் ஆதிக்கத்துக்கு கீழுள்ள பாடசாலைகளில் வைத்து நடத்தப்படும் பாடபுத்தகங்கள் யாவும் போர்டார்களது ஆக்ஞைக்கும், சர்க்கார் உதவி பாடசாலைகளில் உள்ளன யாவும் பரீக்ஷாதிகாரிகளின் ஆக்ஞைக்கும் உட்பட்டனவன்றோ!

எல்லாவற்றிலும் மேலாக ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறையே பாட புத்தகங்களை மாற்றலாம்; அதற்குட்பட்ட கால எல்லைக்குள் மாற்றலாகாது என்ற சர்க்கார் உத்தரவு ஒன்றிருக்கிறதல்லவா?

ஆரம்பக் கல்விக்கென உழைக்கும் உத்தமர்களே! உங்களது முன்னேற்ற திட்டத்தில் பாட புத்தகங்களைச் சீர்திருத்தலும் ஒன்று யிருக்கட்டும்! நாடெங்கும் ஆரம்பக் கல்வி தழைக்க உங்கள் முயற்சி வெற்றியுற இறைவன் இன்னருள் பாலிப்பானுக!

---

# அறம் மறந்த ஆரியன்

(திருமலை. இராமாநுஜன்.)

மிகப் பழய காலந் தொட்டே பாரத நாட்டின் குலதெய்வமாகி விட்ட கண்ணபிரானிடத்து ஈடுபடாத கவிகளும் பக்திமான்களும் இல்லை. வங்க நாட்டு இராமகிருஷ்ணரும் பெண்ணுடையை உடுத்திக் கோபியர்களை ஒப்ப நடித்து அவனது அழகிலே கிடப்பர் என்ப; ஆழ்வார்கள் அனைவருமே தாம் பெண்ணென நிலை அடைந்து நாயக நாயகீ பாவ முறையில் அவனிடம் அன்பு செலுத்துவர். இங்ஙனம் ஆடவரும் பெண்மை விரும்பும் அழகினை யுடையது அவன் வடிவம்.

தனது குணம் செயல் அழகு என்ற மூத்திறத்தாலும் கண்டவர் மனதைத் திறை கொள்ளும் தன்மை வாய்ந்தவன். அவன் ஆழ்வார்கள் யாவரும் அவனது குண நலத்திலே ஈடுபட்டு அழுந்தினர்; கவிஞர் அனைவரும் அவனது கரியகோலத் திருவுருவிலே மூழ்கினர்; உண்மையில் நீல மேனியும் வெண்ணெயுண்டவாயும் அரைமேல் சிவந்த பீதகவாடையும் கரிய கண்டமும் கரியவாய்ப் புடை பரந்த பெரிய கண்களும் இயற்கையில் மகிழும் தெய்வக் கவிஞர்க்கு ஒரு பெரு விருந்தாகும். இவ் வழகு புரிந்திட்ட கவிஞர் ஒருவர் 'என் கண்ணனைக் கண்ட கண்கள் பிறிதொன்றனைக் காணாவே' என்கிறார். என்னே அழகின் நிலை?

இவ் வழகினை ஒழித்துக் குண நலத்தில் மனது செலுத்தியோர் நிலையும் இத் தன்மைத்தே. அருமறைகளும் தேடரிய நிலையில் உள்ள இவனது சௌலப்பியாதி குணங்களிலே ஆழ்ந்து கிடந்தார் ஆழ்வார்கள் அனைவரும். இவன், கோவலனாய் வெண்ணெ யுண்ட ஒரு எளிய நிலையும், கண்ணிநுண் சிறுத்தாம்பினாற் கட்டுண்ணப் பண்ணிய பரிவும் அவர்களது மனதிற் குடி கொண்டன; கல்லெடுத்துக் கன்மாரிகாத்ததொரு செயலையும் நோக்க, இவன் குணம் நம்மால் அளவிட்டுரைக்கும் திறத்ததன்று என்றும் முடிவுக்கு வருகிறார்கள். 'மாயன்'—'மாமாயன்'—'பெருமா மாயன்' என்றெல்லாம் பேசிப் பேசிப் பாராட்டினர்.

நிற்க, நமது தேசீயக் கவி சுப்பிரமணிய பாரதியாரை இக் கண்ணன் தன் அளவில் செல்ல விடவில்லை. அழகாலும் குணத்தாலும் அவர்களை வஞ்சித்தது போலவே தன் செயல் காட்டி இவரைப் பணி கொள்ளுகிறான். அவனது குணமும் அழகும் இவர்க்கு ஒரு பொருளாகத் தோற்றுகிறதில்லை. தாழ்ந்தோரை உயர்த்தத் தன்னிலை மாறியும் பாடுபடும் பிரானது அத்தகைய எளிய நிலை ஒன்றே இவரைப் பெரிதும் பாராட்டும்படி செய்கின்றது.

செய்கைத் திறத்தில் ஆழ்ந்த பாரதியாரின் சிந்தனையை நாம் சிறிது பின்பற்றிச் செல்வோமாயின், பல பெரிய பொருள் நுணுக்கங்களை எல்லாம் நாம் காண நேரிடும். தன் அகவாழ்வு குன்றி, அடிமைபூண்டு, தாழ்ந்து நிற்கும் சமூகத்தில் தோன்றி, உயர்வடைய வேண்டும் என்று அல்லும் பக

னும் உழைத்திருக்கும் இவ் வடியவர்க்குத் தாழ்ந்தோர் உயரத் தான் தவம் கிடக்கும் அவனது செயலிலே நாட்டம் சென்றிருப்பது இயல்புடையதே.

அடியாரைக் காக்க அவன் செய்த பத்து அவதாரங்களுள் இராமாவதாரமும் இவ்வவதாரமுமே மிகவும் சிறந்ததென்பர். உலகத்துயிர்களை எல்லாம் பேதம் அறக்காக்கும் கடமை பூண்ட கடவுள், சாதி குலம் தாழ்வு உயர்வு கருதாது ஒப்பநோக்கும் இயல்புடையவன் என்றன்றோ எல்லா நூல்களும் முறையிடுகின்றன! இதற்கேற்ப இராமனாய்த் தோன்றி அவன் அழுக்கு வேடுவர் குரக்கினம், அரக்கர் என்றிவரோடு இழுக்கிலாது உடன் பிறப்பெனக் கலந்ததுண்டு. 'கடவுளைக் குலத்தால் உயர்ந்த ஒரு கூட்டத்தாரே அடைகுவர்; அவர்கட்கு மட்டுமே வீடடையும் உரிமையுண்டு' என்னும் போலிக் கொள்கைக்கு மாறாக 'அவன் தாழ்ந்தோரை உயர்த்தி ஆட்கொள்ளுவதிலேயே நாட்டம் உடையவன்' என்னும் தத்துவம் இங்கு சிறிது காணக் கிடக்கிறது அன்றோ!

இக் கொள்கை கண்ணன் இடத்தில் கள்ளம் கபடின்றி வெட்ட வெளியாய் விளங்குகின்றது. இத் திறத்தில் இராமனிலும் கண்ணன் சிறந்தவன்; தான் சக்கரவர்த்தி திருமகனாய்ப் பிறந்து அடியாரை ஆட்கொண்டான். நம் கண்ணனோ குலநலம் பேணாது ஆய்க்குலத்திற் பிறந்து பெற்றம் மேய்த்து உண்ணும் எளிய வாழ்வு தலைக்கொண்டு தாழ்ந்த இடைச் சனங்களோடு இழுக்கு இலாது உடன்புக்க இருந்து ஆட்கொண்டருளினான். உயர்ந்தோனாயிருந்து ஆட்கொள்ளுதலினும் அடியார்க்கு அடியனாய் தாசாநு தாசனாய் இருந்து ஆட்கொள்ளும் தன்மை மிகவும் சீரியதன்றோ! இறைவனை, வெகு எளிதில் எல்லார்க்கும் காட்டினாலும் உலகினர் அவனைத் தெய்வம் என்று அறிய மாட்டார்கள் என்று கூற வந்த ஒருவர் "கையிற் கனி என்னக் கண்ணனைக் காட்டித் தரினும்" எனக் 'கண்ணன்' என்னும் பெயரால் சுட்டுதல் இங்கு கருதற்பாலது. தொண்டர்க்கும் தொண்டனாய் இருந்தேனும் தாழ்ந்தோரை ஆட்கொள்ளும் தத்துவம், கண்ணன் பார்த்தனுக்குத் தேர்ச் சாரதியாய்த் தொண்டு பூண்டும் கீதை போதித்து ஆட்கொண்டமையில் நன்கு விளங்கும்.

தாழ்ந்துள்ள தேசத்தையும் தேச மக்களையும் உயர்த்துதற்குப் பாடுபடும் நம் தேசியக் கவி தாழ்ந்தோரை உயர்த்துதற்கெனவே பிறந்த கண்ணனை நோக்கி முறையிடுகிறார்.

நாடெங்கும், வறுமையும் நோயும்மிஞ்சி அடிமை மோகம் பூண்டு அன்னியர் ஆட்சிக்குட்பட்டு சுதந்தரமின்றி அல்லற்பட்டழுந்தும் மக்களின் நிலைக்குப் பெரிதும் இரங்கிய நம் பாரதியார் கண்ணனை நோக்கி, "என்று தணியும் எங்கள் சுதந்திர தாகம்" என்று வினவுகிறார். தாகம் உடலோடு கூடிய உயிர்க்குணம் ஆவதுபோல சுதந்திரமும் மக்களின் பிறப்புரிமை என்பது விளங்குகிறது. தாகம் ஒரே அடியாக மடிவது மனித இயற்கை அன்று. அதிகரித்தபோது மாற்றிக் கொள்ளுதல் ஒன்றே மனிதனால் இயலும்; வாழ்வும் தாழ்வும் மாறி மாறி இயல்வதே உலகியல்; உயர்வும் தாழ்வும் ஒருவழி நில்லா. தாழ்ந்த வழி உயர்த்துதற்கு முயலுதல் வேண்டும். அவ்வுயர்வு என்றும் மறுமுறை தாழாது நிலைத்திருக்கும் என்பதில்லை. ஆகையால் இப்பொழுதிருக்கும் சுதந்திர தாகம் சிறிது தணிதல் எப்பொழு

தென்பார் 'என்று மடியும் எங்கள் சுதந்திரதாகம்' என்னுது 'என்று தணி யும்' என்றூர்.

உடனே பாரதத்தாயின் அடிமைக் கோலம் அவர் கண்முன் தென்படு கிறது. பிறராட்சியுட்பட்டு கண்ணும் கண்ணீருமாய்ச் சுதந்திர மிழந்து கைவிலங்குடன் நிற்கும் காட்சி மாறவேண்டும் என அவரது மனம் விழை கின்றது. அன்னை கைவிலங்கு மாறிச் சீரிய சிங்காதனத்து வீற்றிருக்கும் நிலையை நாம் காணமாட்டோமா என்கிறூர். மனம் பதைக்கிறது. ஈன்ற தாய் இந்நிலையில் இருக்க எந்த மக்கள் மனம்தான் இசையும்? தெய்வ பலத்தை நாடுகிறூர். 'கண்ணனே! என்று எமது அன்னை கை விலங்குகள் போகும்' என்று அவனிடம் முறையிடும்போது அது எவ்வளவு தாயன் பைக் காட்டுகின்றது! இவ்விடத்து 'விலங்கு' என்று வாளா கூறுது 'கை' என வேண்டா கூறலானே போந்த பொருள்நயம் மிகவுண்டு. 'அன்னை கையில் விலங்கிடுதற்குரியவள் அல்லள்: விலங்குடன் இருக்கும் அன்னையை நாம் பார்ப்பதும் தகாது. உடனே நீக்குதற்குரியது: அன்னை விலங்குட னிருக்க அதனை நீக்க முற்படாது உயிர் வாழ்தல் கூடாது' என்றிவை எல் லாம் அதனிடைத் தொனிக்கும்.

அன்னைமட்டும் அன்றி, தம் நாட்டவர் படுந்துன்பமும் அவரை வருத் துகின்றது. நாட்டில் பஞ்சமும் நோயும் மிஞ்சியது; மக்கள் எல்லாம் ஆண்மை அற்றவராயினர்; அடிமை குடிகொண்டது: மனிதர் உணவை மனிதர் பறிக்கின்றனர்; எங்கு பார்த்தாலும் தாழ்வுணர்ச்சி, செம்மை அறிவு இல்லை. சுதந்திரத் துவசம் துளக்கிலா நாட்டின் கதி இதுவே அன்றே! இந்நிலை என்று மாறும் என ஏங்குகின்றூர். இவ் இன்னல்கள் எல் லாம் தீரவேண்டும் என நினைக்கிறூர். காலக் கொடுமையாலும் அதர்ம மேலீட்டாலும் விளைந்த பயன் இது எனக் கண்டவர், நம்மால் இது இயலு வதன்று; தன்னளவிலே காலகதியாய் மாறவேண்டும்; என்பதைக் கண்டு "என்று எமதின்னல்கள் தீர்ந்து பொய்யாகும்" என்கிறூர்! நிலை மாறு தலும், இன்மையும், பொய்யென வழங்கப்படும். துன்பம் தீர்தல்மட்டும் இன்பம் உடைமையாகாது. துன்பம் நீங்குதலோடுமட்டும் அன்றி அந்நிலை மாறி இன்பநிலை எய்துதல்வேண்டும். 'இன்னல்கள் தீரும்' என்று மட்டும் கூறுது 'இன்னல்கள் தீர்ந்து பொய்யாகும்' என்பதில் அமைந்திருக்கும் பொருட்சிறப்பு இதுவாகும்! எளிய நடையுடைய பாடல்களிலும், இத் தகைய சிறப்புகளை அமைத்துச் சொல்லும் இவரது சொல்வன்மை பன் முறை பாராட்டத்தக்கதாகும் அன்றே!

இனிக் கண்ணபிரானை 'அன்றொரு பாரதம் ஆக்கவந்தோனே' என அடை கொடுத்தழைப்பது ஆழ்ந்த கருத்துக்களை உடையதாகும். இது கருத்துடை அடை. சாபிப்பிராய விசேஷணம் என்பர் வடநூல் வல்லார். 'கருத்துடை அடை கொளி' எனும் அணியின்பாற்படும். 'மறம் மலிந்து நாடு கேடுற்று நிலை பிறழ்ந்திருந்த அக்காலத்து நீ அவதரித்து துஷ்டர் களைக் கொன்று பாரதப்போர் நிகழ்த்தினையே! அதனை ஒத்தும் இக்காலத் தும் நீ வந்து அவ்வாறுள்ளதொரு பார் அதத்தினை இயற்றவேண்டாவோ! 'மறம் ஓங்கி அறம் மடிவுற்ற காலத்தில் நான் வந்து காக்கின்றேன்' என்று கூறியவன் நீ ஒருவன்தானே! அன்றியும் ஆரியர் வாழ்வினை ஆதரிப்பவனு

கிய நீ மெய்யடியோம் வாடுதலைப் பார்த்திருத்தல் ஒண்ணாது. ஒல்லை வந்து அருள் புரிவாயாக' என்பது கருத்து.

இவ்வாறு பலவகையாலும் அவன் காக்க வேண்டியதற்குக் காரணம் கூறிய அவர், இனி 'அருள் புரியாதிருத்தல் ஒருவகையாலும் தகாது' என்பதை எதிர்மறை முகத்தால் வற்புறுத்துவது அவரது கட்டுரை வன்மையையும் வாத வன்மையையும் நன்கு விளக்குவதாகும்.

'இறைவனை நம்பினோர் இடர்ப்பட மாட்டார்கள்; கடவுள் அவர்களைக் காப்பன். இன்புறுவர்' என்பதல்லவோ நாம் கேட்பது! அவ்வாறிருக்க உன் மெய்யடியார்கள் பஞ்சத்தாலும் நோயாலும் வாடுவது தகுமா? தகாது! நாங்கள் இடர்ப்பட அவ்வித மேன்மைகளை வேறு யார்க்கெனப் பாரில் வைத்திருக்கிறாய்' என்று தாம் வருந்தத்தகாத நிலையினை வற்புறுத்துகிறார்.

"பஞ்சமும் நோயும் நின்மெய்யடி யார்க்கோ?
பாரினில் மேன்மைகள் வேறினி யார்க்கோ?"

'மெய்யடியார்கள் பெருந்துயர் அடைகுவர் என்பது எங்களது நிலையே விசதமாக்குகிறது. அவ்வாறாயின் பேரின்பம் அடைவோர் யார் எனக் கூறுவையானால் உன்னருள் பெறும் பொருட்டு அந்நிலையினையும் கைக்கொள்வோம்' என்பது கருத்துப் போலும்.

பின்பு, அவன் ஆட்கொள்ளாமைக்கு ஏதுவாகிய குற்றங்கள் ஏதேனும் இருத்தல் கூடுமோ எனச் சங்கித்து குற்றம் இருப்பினும் அவன் தன்னுதற் கொண்ணுதென்பதைச் சில அடிகளால் குறிக்கின்றார்.

"தஞ்சம் அடைந்த பின் கைவிடலாமோ?
தாயும் தன் குழந்தையைத் தள்ளிடப் போமா?
அஞ்சல் என்று அருள்செயும் கடமையில்லாயோ?
ஆரிய நீயும் நின் அறம் மறந்தாயோ?"

'தஞ்சம் என்று அடைந்த ஒருவன் எத்தகைய குற்றம் இயற்றியிருப்பினும் அவனை அடைக்கலம் கொண்டு ஆதரியா திருக்கலாமா? அடைக்கலப் பொருளைக் கைவிட்டோர் அருநரகு அடைவர் அன்றோ? 'பாவி வஞ்சனுக்கு இளைய வீடணனையும் இராமன் ஆட்கொள்ள வில்லையா? ஆகையால் நின்னையே தஞ்சம் எனக் கொண்டு நிற்கும் எங்களைக் கைவிடல் இயலாது' என்பது முதலடியின் பொருள்.

'தாயும் தன் குழந்தையைத் தள்ளிடப் போமோ' என்ற இரண்டாம் அடியால் சர்வ சாதாரணமான உலக நடையை ஒப்புக் காட்டி ஆட்கொள்ளல் வேண்டும் என்பதை மறுக்க முடியாத வகையில் நிரூபிக்கிறார். 'தம் புதல்வர் செய்த குற்றத்திற்காகத் தாய் அதனைச் சீர்திருத்துதலைச் செய்யாது கடிந் தொதுக்குதல் எங்கேனும் கண்டதுண்டோ? அவ்வாறு செய்வளாயின் அவளது அருளுக்கு யாது பயன்? 'என்னைப் பெற்றிலை எனும் மகவினுக்கும் உள் இரங்கி, உன்னைப் பெற்றிலன் (எனினும்) உண்' என ஊட்டுபவள் அன்றோ தாய்? நிற்க. நீ உலகத் துயிரனைத்திற்கும் தாய் ஆகுபவன் அன்றோ? அங்கனம் இருக்கப் புதல்வராகிய நாங்கள் படும் பாட்டைக் கண்டு உளம் இரங்கிக் காலம் தாழ்த்தாது இன்றே வந்து அருள் புரிதல் வேண்டும் என்கிறார்.

மூன்றும் அடியால் ஆட்கொள்ள வேண்டியது கடமை என்ற முறையாலும் உரியதாகும் என்பதை விளக்குகிறார். 'தனது கடமையைச் செய்யுங் காலத்து யாதொன்றனையும் கவனியா தியற்றுதல்வேண்டும் என்பது விதி. நீயோ காக்கக் கடமைப்பட்டவன்! எனவே நாங்கள் இழைத்த குற்றம் இருப்பினும் அதனைக் குணமாகக் கொண்டு ஆட்கொள்ளல் வேண்டும் என்று அவர் கூறுவது மிகவும் பொருத்தமானது.

இதனை அடுத்து 'தகுதி, கடமை, உரிமை, தலைமை' என்று எல்லாப் படியாலும், குற்றத்தையும் குணமாகக்கொண்டு காப்பாற்ற வேண்டிய அவன் தாமதம் செய்வதற்கு நியாயம் யாதெனச் சிந்திக்கிறார்? ஒன்றும் புலப்படவில்லை. ஒரு வேளை அவனது வலிமையின்மை காரணமாகுமோ ? என நினைக்கிறார்? வெஞ்செயல் அரக்கரை அவன் வீட்டிய வன்மை நினைவுக்கு வருகிறது. வலியின்மை காரணமாகாது என்று தெளிந்துவிட்டு, 'நாம் எல்லாம் அறம் மறந்தது போல அவனும் அறம் மறந்தனன் போலும்!' என்று கவல்கின்றார். மறத்தல் நம் மியல்பாகையால் ஆரியனாய அவனுக்கு ஏலாது எனத் தீர்மானித்து 'அவனையும் மறக்கும்படி நம் தீயூழ் செய்து விட்டது' என்று பரிதபித்து, இத் தீயூழும் அவனது அருள் பெருக்கின்முன் நில்லாது என்பதனை ஓர்ந்து பின்னர் அருள் வேண்டுகிறார்.

என்னே நம் புலவர் பெருமகனது மனத்திட்பம். 'எங்களது வேண்டுகோளை நீ அருளாவிடில் இறப்பதை அன்றி வேறு உபாயம் இல்லை;' நின்றன் மாமரபில் வந்து நீசர் எனப் பெயர் தாங்க நாங்கள் விழைகின்றோம் இல்லை; வெற்றியும் புகழும் தரல்வேண்டும்; இல்லையேல் இன்று எம்மை அதம்புரி' என்று விழைகின்ற அவரது மனப்பான்மை இதுவரை ஒருவராலும் கண்டறியாதது.

கண்ணன் அருள் இன்றி வாழும் வாழ்க்கையை '''வெற்று வாழ்க்கை'' எனக் குறிக்கிறார். நமது தேசீயக் கவிக்கு இத்தகையதொரு ஆன்ம ஞானமும் தலைக் கூடியிருக்கிறது.

இவ்வாறு இவர் கண்ணனிடத்தில் முறையிட்டவைகளில் ''ஆரிய நீயும் நின் அறம் மறந்தாயோ'' என்ற அடியும், 'நீயிந்த வாழ்வு மறுப்பையேல் சற்று நேரத்துள் எம்முயிர் சாய்த்தருள்' என்று கேட்ட அவரது மனோபாவமும்,

''நின்றன் மாமரபில் வந்து நீசராய்ப் பொன்றல்
வேண்டிலம்; பொற்கழல் ஆணைகாண்; கொற்றவா
இக்குவலய மீதினில் வெற்றுவாழ்க்கை விரும்பி
அழிகலேம்'

என்ற அவரது உயரிய வாழ்க்கை விரும்பும் தூயவுள்ள நிலையும், கவிகளாலும் பக்திமான்களாலும் உச்சிமேற் கொண்டு மெச்சத்தக்கவை? காவிய உலகில் தனிவாழ்வு செலுத்தியது போலவே, பக்தி மார்க்கத்திலும் பிறிதொருவர் அறியாப் புது வைராக்கிய முறை அவர்க்குத் தலைப்பட்டது போலும். இத்தகைய கவி மணியை இழந்த நம் பாரததேவி என்று மீட்டும் பெறுவளோ ? அந்நாளைத் தமிழர்களாகிய நாம் வரவேற்போமாக.

---

# ஊர்வசியின் காதல்

(S. கிருஷ்ணன்.)

பிரதிஷ்டா நகரம் பிரயாகைக் கரையில் இருக்கின்றது. அதனை புரூரவன் என்பான் அரசுபுரிந்து வந்தான். அவன் நற்குண நற் செய்கைகளுடையவன். வேந்தனுக்கு வேண்டிய சகலவும் பெற்று நாவலராலும், பாவலராலும் போற்றப்பட்டு வந்தான். ஒருநாள் அவன் சிங்காசனத்தில் வீற்றிருந்து குடிஜனங்களின் குறைகளைக் கேட்டுக் கொண்டிருந்தான். அப்பொழுது சிலர் ஓடோடி வந்து "காப்பாற்று;" "காப்பாற்று" என்று கூச்சலிட்டு அவன் காலில் விழுந்தனர். அவர்கள் பெண் மணிகள். அதிலும் தேவ கன்னிகைகள்.

அரசன் ஆச்சரியப்பட்டான். "நீங்கள் ஏன் கூக்குரலிடுகிறீர்கள்? உங்களுக்கு நேர்ந்த துன்பங்கள் என்ன? தேவேந்திரன் தேவ கன்னிகைகளாகிய உங்களை யாதொரு துன்பமும் வாராது காத்து வருவானே! நான் அவன் வேலாளனன்றோ? அப்படி யிருக்க நீங்கள் ஏன் துக்கப்படுகிறீர்கள்?" என்று அவன் கேட்டான்.

அதற்கு, அவர்கள் "மன்னனே! எங்கள் உயிரினுமினிய தோழி ஊர்வசி குபேரனிடம் சென்று திரும்பி வருகையில் இரணியபுரத்தரசன் கேசி என்பான் அவளைப் பிடித்துக் கொண்டு போய் விட்டான். அவளுடன் அவள் தோழி சித்திரலேகையும் அகப்பட்டுக் கொண்டாள். எங்களை விட்டு இவள் பிரிந்த நாள் முதல் துக்கக் கடலுள் ஆழ்ந்து விட்டோம். அவனியில் நீர் அசகாய சூரரென்றும், நினைத்ததை முடிக்க வல்லவரென்றும், அண்டினோரை ஆதரிப்பவரென்றும் கேள்விப் பட்டிருக்கின்றோம். ஆகவே, எங்களை நீர் காப்பாற்ற வேண்டும். நீரும் எங்களைக் கைவிட்டீரென்றால் நாங்கள் தற்கொலை செய்து இறந்து படுவோம்" என்று கூறினார்கள்.

"பயம் வேண்டாம். இதோ ஊர்வசியைக் கொண்டு வந்து விடுகிறேன். தைரியமாக இருங்கள். கேசி போன வழி தெரியுமா? கூறுங்கள்."

"அவன் வடகிழக்கு திசை சென்றான்."

"இதோ அவனைப் பின் பற்றிச் செல்லுகிறேன். நீங்கள் ஹேம கூட மலையில் என்னைக் கண்டு கொள்ளலாம்."

கேசியைப் பின்பற்றிச் சென்ற புரூரவன் கடைசியில் அவனைக் கண்டு கொண்டான். இருவருக்கும் யுத்தம் உண்டாயிற்று. வாயுவாஸ்திரத்

---

[மகாகவி காளிதாஸன் இயற்றிய சமஸ்கிருத நாடகமொன்றின் கதையைத் தழுவி இஃது எழுதப்பட்டது.]

தால் புரூரவன் அவனைச் சமுத்திர நடுவில் தூக்கி யெறிந்தான். அவன் மரண மடைந்ததும் ஊர்வசியையும், சித்திர லேகையையும் தன் தேரின் மேல் ஏற்றி ஹேம கூட பர்வதம் நோக்கிப் புறப்பட்டான்.

ஊர்வசி சித்திர லேகையின் மேல் சாய்ந்து கொண்டிருந்தாள். அவளுக்கு இன்னும் பயம் தெளிய வில்லை. கேசி தன்னைத் தூக்கிச் செல்வதாகவே அப்பொழுதும் நினைத்துக் கொண்டிருந்தாள். அரசன் கூறுகிறான்: "பெண்கள் நாயகமே! என் பயப்படுகிறாய்? மகா பராக்கிரம முடைய இந்திரன் உனது காவலனாக இருக்க உன்னை அபகரித்துச் சென்ற அசுரன் பிழைப்பானா? அவன் இறந்து விட்டான். கண்ணைத் திற; உண்மை விளங்கும்."

நம்பினா ளில்லை ஊர்வசி. அரசன் சித்திர லேகையைப் பார்த்து, "உன் தோழி மிகவும் திகிலடைந்து விட்டாள். அவள் உள்ளம் பதைப் பதையும், தேகம் நடுங்குகின்றதையும் பார்" என்றான்.

சித்திரலேகை "ஊர்வசி! நீ தேவலோக கன்னிகை யல்லவோ? அசுரன் பிடித்துக் கொண்டு போனால்தானென்ன? அதற்கு இவ்வளவு பயமா? அசுரன் இறந்து எவ்வளவு நேரமாயிற்று. பயப்படாதே" என தேறுதல் கூறினாள்.

ஊர்வசிக்குப் பயம் சிறிது தெளிந்தது. எழுந்திருக்க முயன்றாள். அதைக்கண்ட அரசன் "இப்பொழுது தான் இவளைப் பிடித்த பயப் பேய் ஒழிந்தது. சந்திரன் உதயமாய் இருள் நீங்கின இரவு போலவும், புகை நீக்கிய தீச்சுடர் போன்றும், கரை யிடிந்து கலங்கிப் போய் பின் தெளிந்தோடுகின்ற கங்கா நதி போலவும் தோன்றுகிறாள் பார்" என்று சித்திர லேகையைப் பார்த்து கூறினான்.

"அம்மா! அசுரர்கள் மாய்ந்து போனார்கள். எழுந்திரு" என்று அன்பாக சித்திரலேகை வற்புறுத்திக் கூறவும், ஊர்வசி எழுந்து நிமிர்ந்து பார்த்து "நம்மை கேசி பிடித்துக் கொண்டு போனானே! மீட்டுக் கொண்டு வந்தது யார்? தேவேந்திரனோ" என்று மிருதுவாகக் கேட்டாள்.

"இந்திரன் அல்ல; அவனை ஒத்த இந்த மகாராஜன்" என்று சித்திர லேகை மறுமொழி யளித்தாள்.

ஊர்வசி புரூரவனை திரும்பிப் பார்த்தாள். ஒப்பற்ற அழகுடைய அவனைக் கண்டதும் "கேசி செய்தது மகோபகாரமே. இன்றேல் நாம் இவனைக் காண்பது முடியுமா?" என்று மனதில் கூறிக் கொண்டாள். அவன் மீது அடங்காக் காதலும் அடைந்தாள்.

பயம் தெளிந்து அழகொடு விளங்கிய ஊர்வசியை புரூரவன் பார்த்து "இவளை நாராயணன் தேவலோகப் பெண்கள் வெட்கமடையும்படி படைத்தான் என்பது மிகவும் சரி. அதற்கு யோக்யதை யுடையவள் தான். ஆனால் நாராயணனுக்கு வேதங்களைப் பாராயணஞ் செய்யத் தெரியுமே யொழிய இவ்வளவு அழகிய ஆரணங்கை படைக்கத் தெரியாதே! இவளைப் படைக்கும்படியான சக்தி அவருக்கு ஏது?" என்று மனதில் எண்ணிக் கொண்டான்.

சித்திர லேகையைப பார்த்து ஊர்வசி "இப்பொழுது நம் தோழிகள் என்ன செய்கிறார்களோ!" என்று வருத்தத்துடன் கேட்டாள்.

அதற்கு உடனே புரூரவன் "துக்கக்கடலில் அமிழ்ந்து கிடக்கிறார்கள். அது என்ன ஆச்சரியமா? தற்செயலாக உன்னை ஒரு தடவைப் பார்த்தவன் கூட ஒரு நிமிஷகாலம் உன்னைவிடப் பிரிய வருந்துவான் என்றால் எந் நேரமும் உன்னுடன் கூட இருந்து சந்தோஷப்படும் உன் தோழிகள் எப்படி சகிப்பார்கள்? ஹேம கூட மலையிலிருந்து கிரஹணம் பிடித்துவிட்ட சந்திரனை யொத்த உன் முகத்தை எவ்வளவு ஆவலோடு பார்த்துக்கொண்டிருக்கிறார்கள்? அதோ பார்" என்றான்.

அங்கே, புரூரவன் ஊர்வசியை அழைத்து வருவானோ வரமாட்டானோ என்று தோழியர் அதே சிந்தனையுடன் அவன் வரவை எதிர் பார்த்து இருந்தனர். தோழிகளுள் ஒருத்தியான ஸஹஜன்யை என்பவள் "அதோ ஒரு ரதம் வருகின்றது. ஆம். மான்கொடி கூட பறக்கின்றது. புரூரவன் வந்துவிட்டான். ஊர்வசியையும் அழைத்துக்கொண்டே, வருகிறான்" என்று சந்தோஷக் கூச்சலிட்டாள். அதற்குள் புரூரவன் ஊர்வசியுடன் அங்கு வந்து விட்டான்.

ஊர்வசி தோழிகளைப் பார்த்து "நான் பட்ட கஷ்டங்களை என்ன வென்று சொல்லுவேன்? எப்போதாவது நம் தோழிகளைக் காணலாம் என்று மனதில் கூட நினைத்தேனோ! இந்த தெய்வீக புருஷனாலல்லவா நான் அசுரன் கையிலிருந்து மீளவும். உங்களைக் காணவும் நேர்ந்தது. இந்த மகோபகாரி இல்லாவிட்டால் அந்தப் பாவி என்னை என்ன பாடு படுத்துவானோ?" என்று தான்பட்ட கஷ்டங்களைக் கூறினாள்.

பின், அவள் புரூரவனைப் பார்த்து, "நாங்கள் உங்களுக்கு என்ன கைம்மாறு செய்யப் போகின்றோம்" என்றாள்.

"நான் என்ன பிரமாதமாகச் செய்து விட்டேன். எல்லாம் இந்திரனது மகிமையாலன்றி வேறொன்றுமில்லை" என்று புரூரவன் பதிலுரைத்தான்.

ஊர்வசியை கேசி தூக்கிச்சென்ற சமாச்சாரம் நாரதமுனிவருக்குத் தெரிந்தது. அதை அவர் இந்திரனிடம் தெரிவிக்க வேண்டுமென்று இந்திரலோகம் சென்று தேவேந்திரனைக் கண்டு, "ஊர்வசி கேசி என்னும் அசுரன் கைப்பட்டு கருடனிடம் சிக்குண்ட பாம்புபோல் தவிக்கின்றாள். நீயோ அதனைக் கவனிக்காது உன் காரியத்திலேயே கண்ணா யிருக்கின்றனை" என்று சொன்னார். இந்திரன் தேவகணங்களை ஊர்வசியை மீட்டுவரும்படி அனுப்பினான். தேவகணங்கள் ஊர்வசியை தேடிவரும் பொழுது அவளைப் புரூரவசக்கரவர்த்தி மீட்டு ஹேமகூட பர்வதத்தில் வைத்திருக்கிறானென்று கேள்விப்பட்டு அம்மலை சென்றார்கள்.

கந்தருவர்களின் தலைவன் சித்திரரதன் என்பான். அவன் தான் ஊர்வசியை தேடி வந்தது முதலான விபரங்களை தெரிவித்துவிட்டு, புரூரவனைப் பார்த்து "நீர் செய்தது எங்கள் அரசனுக்கு பேருதவி யாகும். ஊர்வசிக்கும் மறுபிறப்புதான். யாவரும் இப்படியே தேவலோகம் சென்று இந்திரனைத் தரிசித்து வருவது மிகவும் நல்லது" என்றான்.

"நான் என்ன உபகாரஞ் செய்தேன்? கேசியைக் கொன்றது இந்திரனுடைய மகிமையே யொழிய வேறல்ல. சிங்கத்தின் பிரதித்தொனியைக் கேட்டு யானை இறந்து போகுமானால் அது சிங்கத்திற்குப் பெருமையே

யொழிய பிரதித்வனிக்கு மகிமை யாகாது. போகட்டும்; எனக்கு இப்பொழுது இந்திரனைக் காண சந்தர்ப்பம் இல்லை. ஊர்வசியை அழைத்துச் செல்க'' என்று அரசன் பதிலுரைத்தான்.

ஊர்வசி புரூரவனிடம் விடைபெற்றுச் செல்ல நினைந்தாள். ஆனால் வெட்கம் அவளைப் பேச விடவில்லை. ஆகவே, சித்திரலேகையிடம் விடை தரும்படி தான் கேட்டுக் கொண்டதாக அரசனிடம் கூறும்படி வேண்டிக் கொண்டாள். அவளும் அவ்வாறு கூறவே, 'போய் வரலாம். ஆனால் என்னை மறந்து விடலாகாது. இன்னும் ஒருதரம் வந்து காணவேண்டிக் கொள்கிறேன்'' என்று கூறி புரூரவன் விடை கொடுத்தான்.

ஆனால் அவனைவிட்டுப் பிரிய அவள் மனம் இணங்குமா? காதலி காதலனைவிட்டுப் பிரிவாளா? பிரிந்தால் அவள் மனம் சம்மதி அளிக்குமா? ஊர்வசி என்ன செய்வாள் பாவம்? இந்திரனைக் காணச் செல்லவேண்டும். ஆனால் அரசனைப் பிரிவதா? போகும்பொழுது திரும்பித் திரும்பி அரசனைப் பார்த்தவண்ணம் செல்லலானாள். காலில் முள்தைத்து விட்டது. மரத்தில் துணி சிக்கிக்கொண்டது என்று அவள் எத்தனையோ பொய்கள் அன்று கூறவேண்டி வந்தது? அவையெல்லாம் எதற்காக? அந்த சாக்கிட்டு நின்று அரசனைப் பார்க்கலாமே என்றுதான்.

புரூரவனுக்கு ஊர்வசி பிரிந்தது உயிர் பிரிந்ததை யொத்த சோகத்தை யளித்தது. மீண்டும் காண்போமா என்று கலங்கினான். நகர் போய்ச் சேர்ந்தான். ஊர்வசியி னிடத்தே ஞாபகமாக உலக சிந்தையின்றி காலங் கழித்தான்.

புரூரவனின் தோழனாக விதூஷகன் ஒருவன் இருந்தான். அவனிடம் நடந்த விஷயங்களை விபரமாகக் கூறி "அப்பா! நான் ஊர்வசியைக் கண்டது முதல் அவள் நினைவே நினைவாக யிருக்கின்றேன். என் துயரம் எப்பொழுது நீங்கும்? என் மனதிற்கு ஒன்றும் சமாதான மில்லையே! என்ன செய்வேன்? எங்கு போவேன்'' என முறையிட்டான்.

விதூஷகன் ஹாஸ்யஞ் சொல்பவ னல்லவா? "நாம் மடைப்பள்ளிக்குப்போய் அங்கிருக்கும் இனிய பதார்த்தங்களைத் தின்று நம் துக்கத்தைத் தணிக்கலாம்'' என்று அவன் வேடிக்கையாகச் சொன்னான்.

புரூரவன்:—உனக்கு வேண்டியவைகள் மடைப்பள்ளியில் இருப்பதால் நீ அங்கு போக துடிக்கிறாய். நான் கிடைப்பதற்கரிய வஸ்துவின்மேல் காதல் கொண்டிருக்கின்றேன். மடைப்பள்ளிப் பதார்த்தங்கள் என் துயரைத் தீர்க்குமா?

விதூஷகன்:—நீயேன் துக்கிக்கிறாய்? ஊர்வசியும் உன் அழகைக் கண்டவள்தானே! ஆகவே அவள் உன்னை அடைவது அரிய காரியம் என்று நான் எண்ணவில்லை.

புரூரவன்:—இது துதி மொழியேயன்றி வேறல்ல. நீ அவளைக் கண்டவனல்ல. அவள் அழகைப் பார்க்கப் பதினாயிரங் கண்கள் வேண்டும். இவ்வுலகத்தில் அவளுக்கு ஈடுஇல்லை. நான் ஏகாந்தத்தை விரும்புகிறேன். பிரமதவனம் போவோம் வா.

வஸந்தகாலம். பிரமத வனமெங்கும் பூக்கள் மலர்ந்து, மரங்கள் தளிர்த்து காய்த்தவண்ணமாயிருந்தது. இருவரும் அந்த தோட்டத்தை அடைந்தனர். மணத்தோடு மந்தமாருதம் வீசியது. வண்டுகள் மதுவுண்டு ரீங்காரஞ் செய்தன. குயில்கள் இசை பாடின. இவையெலாம் கண்ட புரூரவன் கலங்கினன். விதூஷகனைப் பார்த்து அவன் கூறுகின்றான். "தோழனே! நான் காமதாபத்தைத் தீர்க்கலாமென்று பிரமதவனம் வந்தது, ஆற்றில் எதிர்த்து நீந்தி கரைசேர நினைப்பதுபோலாயிற்று. கிடைப்பதற்கரிய வஸ்துவின்மேல் காதல்கொண்டு மனஞ் சோர்வடைகின்ற எனக்கு இவைகளைப் பார்ப்பதால் சுகமுண்டா? துக்கமன்றோ உண்டாகிறது"

விதூஷகன்:—வருந்தவேண்டாம். அந்த தேவமாது இந்த வசந்த ருதுவில் உம்மீது ஆசைகொண்டு உம்மைத் தேடிவருவாள். இதோ பக்கத்தில் நாம் விளையாடிக் கொண்டிருக்கும் கொடி மண்டபம் இருக்கிறது. இதன்மேல் பூத்த பூக்கள் வண்டுகள் மோதுதலினால் காம்பிற்று கீழே சிதறி மெத்தைபோல் கிடக்கின்றன. அதில் உட்கார்ந்து சுகமாயிருக்கலாம். வருக.

அதன்படி அவ்விடத்தில் இருவருஞ்சென்று உட்கார்ந்தனர். விதூஷகன், இதுதான் உமக்குத் தகுந்த இடம். இதைச் சுற்றிலும் முல்லைக் கொடிகள் எவ்வளவு அழகாக இருக்கின்றன. இவையெல்லாம் கண்ணாரக்கண்டு மகிழலாம்.

புரூரவன்:—நான் என்ன செய்வேன்? பூத்துத் தளிர்த்த முல்லைக் கொடியானால்தானென்ன? தளிர்விட்டு தழைத்து நிற்கும் மரங்களானால்தானென்ன? என் காதலியைக் காணாது தவித்து நிற்கும் என் கண்கள் இவைகளைப் பார்த்து மகிழ விரும்புகின்றதில்லையே! தோழ! என்கருத்து நிறைவேறும் வழிகள் யாதாயினும் உனக்குத் தோன்றுகிறதா? கூறு.

விதூஷகன்:—(பரிகாசமாய்) அகலிகைமேல் ஆசை கொண்ட இந்திரனுக்கு அசுவினி தேவதைகள் அகப்பட்டதைப் போல் உமது கையில் நான் அகப்பட்டுக் கொண்டேன். எங்களைப்போல பைத்தியங்கள் வேறு யார் இருக்கிறார்கள்?

புரூரவன்:—நான் அதற்காகச் சொல்லவில்லை. ஆபத்து வேளையில் தோழன் கைவிடலாமா? அதைத்தான் நான் உன்னிடம் கேட்கிறேன்.

விதூஷகன்:—அப்படியா! ஆனால் கொஞ்சம் பொறுத்திரும். ஆலோசித்துச் சொல்லுகிறேன்.

அப்பொழுது நற்சகுனம் ஒன்று உண்டாயது. புரூரவன் "எனக்கு அந்த மதிமுகத்தாள் கிடைக்கப் போகின்றாளா? நான் அவ்வளவு அதிர்ஷ்டம் உடையவனா? பின் சகுனம் உண்டாகத்தான் காரணமென்ன? அவள் வருவாளா?" என்று என்னென்னமோ மனதில் யோசித்துக் கொண்டான்.

விதூஷகன்:—(பரிகாசமாய்) மகாராஜனே! செய்வது என்னவென்று எனக்குத் தோன்றவில்லை. ஆனால் அவளைப்போல் ஒரு சித்திரம் வரைந்து அதனையே பார்த்துக் கொண்டிருக்கலாம். இன்றேல் தூக்கத்தில் அவளையே னதில் தியானித்துக் கொண்டு அவள் வந்ததாயும், போனதாயும் கனவு ண்டாவது சுக மடையலாம்.

புரூரவன்:—நல்ல ஆலோசனை தோழா! எனக்குத் தூக்கம் வருமா? என் மனதும் உடலும் வெந்து பதை பதைத்துக்கொண் டிருக்கின்றதே! சித்திரம்தான் வரைய என்னால் முடியுமா? நான் அதை வரைய ஆரம்பிக்கும் முன்னரே என் கண்களில் நீர் ததும்பி விடுமே! என் செய்வேன்!

விதூஷகன்:—எனக்கு தோன்றியது இதுதான். சொல்லி விட்டேன். பிறகு உன்னிஷ்டம்.

தோழனும் கைவிடவே புரூரவன் பெரிதும் துக்கமடைந்தான். "என் துயரத்தை அவள் அறிந்தாளில்லையோ! அறிந்துதான் அலக்ஷியமாக இருக்கின்றாளோ! ஒன்றும் தெரியவில்லையே!" என அவன் புலம்பிக் கொண் டிருந்தான்.

ஊர்வசி தேவலோகஞ் சென்றவள் செய்ய வேண்டுவன செய்துவிட்டு நிமிஷங்கூட தாமதியாது புரூரவனைத்தேடி பிரதிஷ்டா நகரம் நோக்கிப் புறப்பட்டாள். சித்திரலேகையும் பின் தொடர்ந்தாள். சித்திரலேகை "என் உயிர்த் தோழியே! வாயைத்திறந்து எங்கே போகிறேன் என்று தெரிவிக்காமல் போகின்றனையே! அது எனக்கு தெரியக் கூடாதோ" என்றாள்.

ஊர்வசி:—முன் ஹேமகூடமலையிலிருந்து நாம் திரும்பி வரும்போது கிளை தடுக்கினதாக நான் மெதுவாய் வந்ததற்கு பரிஹாசஞ் செய்தனையே! ஞாபக மில்லையோ!

சித்திரலேகை:—ஆனால் அந்த சக்கரவர்த்தியைக் காண புறப்படுகிறாயோ!

ஊர்வசி:—உன் யூகம் சரி. நம் காரியத்திற்கு நாம்தானே வெட்கத்தை விட்டுப் போகவேண்டும்,

சித்திரலேகை:—போவதற்கு முன் யாரையாவது தூதனுப்பி உன் கருத்தை சக்கரவர்த்திக்குத் தெரிவித் திருக்கிறாயோ?

ஊர்வசி:—என் மனதை அனுப்பியிருக்கிறேன்.

சித்திரலேகை:—பேஷ்! நல்ல காரியஞ் செய்தாய்! உன்னை அப்படிச் செய்யத் தூண்டியது யார்?

ஊர்வசி:—மன்மதன்.

சித்திரலேகை:—அப்படியானால் நான் இனி வாயை மூடிக் கொள்கிறேன்.

ஊர்வசி:—நாம் தனித்துப் போகிறோமே. முன்போல் எவனாவது நம்மைப் பிடித்துக்கொண்டு போய் விடுவானோ என்று பயப்படுகிறேன்.

சித்திரலேகை:—பேதாய்! பயப்படாதே! தேவகுரு கற்பித்த அபராஜிதை வித்தையை மறந்தனையோ! அதைக்கொண்டு எங்கு வேண்டுமாயினும் போகலாமே! எவர் கண்ணிலும் படமாட்டோம்.

ஊர்வசி:—இப்பொழுதுதான் நினைவிற்கு வருகிறது.

(தொடரும்.)

# சிவஞான போதம்

———(0)———

(தென்னாப்பிரிகா—டர்பன்
திரு. ச. முனிஸ்வாமி பிள்ளை எழுதியது.)

சிவஞான போதம் என்பது ஒரு ஞான நூல். அந்த நூலானது ஆதியில் பரமேசுவரனால் நந்திப்பெருமானுக்கு உணர்த்தப்பட்டுப் பின் நந்திப்பெருமானால் சனற் குமார தேவருக்கு உணர்த்தப்பட்டது. அப்படி உணர்த்தப்பட்ட நூலைப் பிற்காலத்தில் ஏறக்குறைய எழுநூறு ஆண்டுகளுக்கு முன் மெய்கண்ட தேவர் அவருடைய சீடர் அருணந்தி சிவாச்சாரியாருக்கு உணர்த்தி அருளினார். இவ்வுண்மை சிவஞான சித்தியார் பரபக்கம் பாயிரத்திலும் சிவஞானபோதம் இறுதிப் பாயிரத்திலும் கூறப்பட்டிருக்கின்றது.

அந்நூலின் பெயராகிய சிவஞான போதம் என்னும் தொடர்மொழியால் பெறப்படும் பொருளை இங்கே சுருக்கமாகக் கருதுவாம். ஞான போதம் என்ற தொடர்மொழி சிவம், ஞானம், போதம் என்று மூன்று சொற்களால் ஆக்கப்பட்ட சொல்லாகும்.

சிவம் என்பது மங்கலம் அல்லது நன்மையை உணர்த்தும். சிவம், நன்மை—குறுணி—முத்தி என்பது சூடாமணி நிகண்டு. ஒருவன் பிறன் ஒருவனுடைய துன்பத்தை நீக்குதலும், அவனை அவன் அடையத்தக்க இன்பத்தை அடையச் செய்தலுமே அவனுக்குச் செய்கிற நன்மையாகும். இந்த இன்பத்தை இயல்பாக எல்லா உயிர்களும் விரும்புகின்றன. ஆயினும் இன்பம் இத்தன்மை உடையது என்றும், அதனை அடைவதற்கு வழி இன்னது என்றும் எல்லா உயிர்களும் ஒரே தன்மையாய் அறிகிறதில்லை. மக்கள் சம்பந்தப்பட்ட மட்டும் இந்த இன்பமானது உலக இன்பம் (சிற்றின்பம்) என்றும், வீட்டின்பம் (பேரின்பம்) என்றும் இருவகைப்படும். உலக இன்பமாகிய சிற்றின்பம் மாயையை (Matter)ப் பற்றியது. ஆதலின் அது நிலையில்லாததாயும் தெவிட்டுதலை யுடையதாயும் மன அமைதியைக் கொடாததாயு முள்ளது. வீட்டின்பமாகிய பேரின்பமானது கடவுளாகிய சிவத்தைப் பற்றியது. ஆதலின் அது நிலையுள்ளதாயும் தெவிட்டாததாயும் மன அமைதியைக் கொடுப்பதாயும் உள்ளது. இந்த இருவகை இன்பங்களையும் மக்களுக்கு அவரவர்களுடைய தகுதிக்குத் தக்கவாறு கொடுக்கும் பொருள் எதுவோ அது சிவம் என்று கூறப்படும்.

ஞானம் என்பது அறிவு. இந்த அறிவு உலகத்தைப்பற்றிய அறிவு. இந்த அறிவு ஆன்மாவுக்கு மனம் என்னும் உட்கருவியாலும், ஐம்புலன்கள் என்னும் புறக் கருவிகளாலும் உண்டாவது. ஆன்மா ஐம்புலன்களோடு சேர்ந்த மனதினால் உலக விடயப் பொருள்களுடன் சம்பந்தப்பட்டு, அச்

சம்பந்தத்தினு லுண்டாகும் கருத்துக்களைத் (Concepts) தன்னுள்ளே கொண்டு அளவை முறைமையில் (Logical processes) அறியும் உலக அறிவு இது. (Intellectual knowledge) இந்த ஞானமாகிய அறிவினுல் மேலே கூறப்பட்ட இன்பங்களுள் உலக இன்பமாகிய சிற்றின்பத்தை மாத்திரம் அடையலாம். இந்த அறிவினுல் ஆன்மா உலகத்தில் அச்சிவம் அல்லது கடவுள் விளங்கும் தோற்றத்தை மாத்திரம் அறியலாம். (God's energy as manifested in the world of matter). இது கடவுளுடைய தடத்த இலக்கணம் அல்லது பொது இலக்கணம் என்று கூறப்படும். இந்த உலக அறிவானது நூல்களைக் கற்றுக் கேட்டு அவ்வாறு கற்றுக் கேட்ட கருத்துப் பொருள்களை ஒருமையுடன் மனதில் சிந்தித்தலினுல் உண்டாகிறது.

இனி போதம் என்பது சிவத்தைப்பற்றி நின்று அறியும் அறிவு. ஒருவர் உலகப் பொருள்க ளிடத்திலும் உயிர்ப் பொருள்க ளிடத்திலும் பற்று நீங்கி சிவம் அல்லது கடவுளிடத்து மாத்திரம் பற்றுவைத்து அறியும் மேலான அறிவு இது. (Intuitional wisdom) இந்த மேலான அறிவு மேலே சொன்ன கற்றல் கேட்டல்களினுலும், மனதிற் சிந்தித்தலினுலும், ஒருவருக்கு உண்டான மனத் தூய்மையாலும், அறிவின் முதிர்ச்சியாலும் தன்னுள்ளே விளங்கும் தெளிந்த அறிவு ஆகும். இந்தத் தெளிந்த அறிவு ஒருவருக்கு முன்னம் ஒவ்வொரு நேரம் மின்னல் போல சிந்தையிலே தோன்றி அது வரவர வலுவுற்றுப் பின் இடையீ டில்லாமல் தோன்றும். இவ்வாறு இடையீ டில்லாமல் சிந்தையில் விளங்கும் தெளிந்த அறிவே நிட்டை அறிவு என்று கூறப்படும். போதம் என்னும் சொல் மேலே கூறிய தெளிந்த அறிவையும் நிட்டை அறிவையும் குறிக்கும். இந்தப் போதம் ஆகிய மேலான அறிவினுலே தான் ஒருவர் சிவம் அல்லது கடவுளை உண்மையில் உள்ளபடி (உலகில் தோன்றுகிற தடத்த இலக்கணமல்ல) அறியலாம். இந்த இலக்கணம் கடவுளுடைய உண்மை இலக்கணம் அல்லது சிறப்பு இலக்கணம் என்று கூறப்படும்.

ஆகவே சிவஞான போதம் என்னும் சொற்றொடர் சிவத்தினுடைய பொது இலக்கணத்தை அறிவிக்கிற உலக அறிவும் (பாசஞானம்-பசுஞானம்) (Intellectual knowledge) சிவத்தினுடைய இலக்கணத்தை அறிவிக்கிற தெளிந்த அறிவும் (Intuitional wisdom) (பதிஞானம்) என்று பொருள்படும். அச்சொல் ஆகுபெயரால் மேலே கூறியவாறு சிவத்தை உலக அறிவினுலும் தெளிந்த அறிவினுலும் அறிவிக்கிற நூலைக் குறித்தது.



# இந்தியாவின் மஹாத்மியம்

(V. சங்கர ஐயர்.)

வருஷா வருஷம் ஸர்வகலாசாலே படிப்பு முடிந்ததும் கல்விப்பட்டம் பெற்ற அத்யேதாக்களுக்கு ஒரு விஸ்தாரமான உபதேசம் சர்வகலாசாலே மண்டபத்தில் நடைபெறும் வழக்கம் இப்பொழுது வருகிறது. இது போல முன் காலத்திலு மிருந்து வந்தது என்பது அனேகருக்குத் தெரியாமலிருக்கலாம்.

குருகுல வாசம் முடிந்து ஸ்வகிருஹத்துக்குப் புறப்படும் சீடர்களே நோக்கி அத்யாபகர் கூறி வந்த உபதேச மொழிகளில் சிலவற்றை இங்கு வரைகின்றேன்.

"ஸத்யம்வத। தர்மம்சர। ஸ்வாத்யாயான்
மாப்ரமத॥
ஆசார்யாய பிரியம் தனம் ஆஹ்ருத்ய।
ப்ரஜாதந்தும் மாவ்யவசேத்ஸீ॥"

"உண்மையைக் கூறு, அறநெறிப்படி நட, வேதம் ஓதலே மறக்காதே, குரு தக்ஷிணை கொடுத்து விட்டு விவாஹம் செய்து சந்தானத்தை அடைவாய்."

"ஸத்யான் நப்ரமதிதவ்யம்,
தர்மான் நப்ரமதிதவ்யம்,
குசலான் நப்ரமதிதவ்யம்।
பூத்யை நப்ரமதிதவ்யம்,
ஸ்வாத்யாய பரவசனாப்யாம்
நப்ரமதிதவ்யம்.
தேவபித்ரு கார்யாப்யாம்
நப்ரமதிதவ்யம்."

"உண்மை, அறம், க்ஷேமமானவை, செல்வம், இவைகளேப் புறக்கணிக்காதே! ஓதல், ஓதுவித்தல் இவைகளே மறக்காதே! தேவபித்ரு காரியங்களே மறக்காதே!"

"மாத்ரு தேவோபவ, பிதிரு தேவோபவ,
ஆசார்ய தேவோபவ। அதிதி தேவோபவ।
................................."

"தாயை தெய்வமாக நினே. அப்படியே தகப்பனேயும் ஆசாரியனேயும்

அதிதியையும் நினை ...........“இதுபோல இன்னும் பல உபதேசங்க ளிருக்கின்றன.

“எது பரஹிம்சை யன்னியில் குற்றமற்றதாக உளதோ அவைகளே செய்யத் தகுந்தவை. எங்களிடமுள்ள நன்னடக்கையை மாத்திரம் பின் பற்று. பெரியோரை ஆசனம், அர்க்யம், பாத்யம் முதலியவை கொடுத்து உபசரிப்பாயாக. கொடுப்பதை மனமமாப்பிப் பிரியத்துடன் கொடு. அடக்கத்துடனும் பயபக்தி விசுவாசத்துடனும் கொடு. சந்தேகம் வந்தால் விவேகம், அறிவு, இரக்கம், அற நெறி உள்ளவரைக் கேட்டு அவர் வாக்குப்படி நட. இதுவே வேத உபதேசம்; இப்படி நீ நடப்பாயாக” என்று தான் முன் கால சர்வகலாசாலே பட்டமளிப்பு விழாவின் பொழுது கூறுவது.

விவாகம் என்னும் சடங்கினல் காமவிகாரம் தீர்த்துக் கொள்வதல்ல. இது மிருகத்தன்மையாகும். குலாபி விருத்திக்காக ஸத்ஸந்தான உற்பத்திக்காகவே விவாஹம் செய்து கொள்வது என்பது சாஸ்திரம். அதுவும் வித்யாப்யாசம் முடிந்து குருதக்ஷிணை கொடுத்த பின் குருவின் அனுமதியோடு கூடச் செய். சத்தியமாகவும் தர்மமாகவும் சம்பாதிக்கும் பணத்தை மாதா பிதா குரு அதிதி இவர்களுக்காகச் செலவு செய். அதிதிஸத்காரமே முக்கியமானது. இந்த மாதிரியான பல வேதவாக்யங்க ளிருக்கின்றன. வேதமே நமது செல்வம்.

மரணம் வரையிலும் காமப்பித்தும்; பணப்பித்தும் பிடித்து அலேயாமல்,

“சைசவே அப்ஸ்தவித்யானும்
யௌவனே விஷயைஷிணும்
வார்த்தகே முனிவிருத்தீனும்
யோகேனுந்தே தனுத்யஜாம்.”

என்று காளிதாசர் கூறி யிருக்கிறபடி கல்விப் பருவம், இல்லறப் பருவம், தவப்பருவம் என ஆயுட்காலத்தைப் பங்கிட்டு நடத்தவேண்டும்.

நாம் வசிக்கும் தென்னிந்தியா உஷ்ண மண்டலத்தி லிருக்கிறது. கன்னியாகுமரி 8° வட அக்ஷத்திலும் காஷ்மீரம் 37° வட அக்ஷத்திலுமிருக்கிறது. உத்தராயன ரேகை விந்திய மலே வழிச் செல்லுகிறது.

ஆகையால் நம் தேசத்தில் உலகத்தில் மற்ற பாகங்களேப் போல் சீதோஷ்ண மாறுதலும் (அதாவது கோடையில் அதிக உஷ்ணமும் குளிர் காலத்தில் அதிகக் குளிரும்) பகல் இரவு நாழிகை வித்தியாசமும் (இங்கிலாந்தில் சில மாதம் பகல் 18 மணி நேரமும் வேறு சில மாதங்கள் இரவு 18 மணியுமாக இருக்கும்) கிடையாது. இந்தியாவில் ஒரு மாதமும் பகல் இரவுகள் 13 மணிக்கு மேலும் 11 மணிக்குக் குறைந்தும் கிடையா. ஆகையால் சுமார் 9 மணிக்குப் படுக்கைக்குப் போய் காலே 4 மணிக்கு எழுந்திருப்பது கஷ்டமன்று. முன்னிரவில் உறங்குவதே தேகாரோக்கியம். “சேமம் புகினும் சாமத்துறங்கு” “வைகறை துயிலெழு” என ஔவைப் பாட்டி கூறி யிருப்பதைக் காண்க.

காலே விழிப்பின் பலனேக் குறித்து தேரைய மாமுனிவர் கூறி யிருப்பதைக் காண்க.

"புத்தியதற்குப் பொருந்து தெளிவளிக்கும்
சுத்தநரம்பி னற்றூய்மையுறும்—பித்தொழியும்
தாலவழிவாத பித்தம்தந்தம் நிலமன்னுமதி
காலைவிழிப்பின் குணத்தைக் காண்"

வேதாத்யனம் செய்வோர், கிராமாந்தர வாசிகள், வைதீகர்கள் முதலியோர் காலை நான்கு மணிக்கே எழுந்து தத்தம் தொழில்களைச் செய்ய ஆரம்பிக்கின்றனர். பொதுவாக இத்தகையோர்களை வியாதி அணுகுவதில்லை எனலாம்.

இவ்வாறெல்லாம் நமது சாஸ்திரங்கள் காலை விழிப்பைப் பற்றிக் கூறியிருக்க நம் நாட்டு நவநாகரீக பிரமை பிடித்திருக்கும் பல பிரமுகர்கள் நிசியில் வெகு நேரம் வரையிலும் நாடகம், பேசும் படக்காட்சிகள், சீட்டு விளையாட்டு, பாட்டுக் கச்சேரி, ஆட்டக் கச்சேரி முதலிய பலவித வேடிக்கைகள் கால விரயம் செய்து விட்டு சூரியன் உதித்த பிறகு கூட தன் உணர்ச்சியன்னியில் உறங்குவதும், பின் விழித்தவுடன் பல் துவக்காமலே படுக்கையி லிருந்தபடியே காப்பி பானமும் செய்கின்றனர். இதையே கௌரவமாகவும் அவர்கள் நினைக்கின்றனர். இவர்கள் நிலைமை அந்தோ! பரிதாபம்! என்ன பேதமை! சீக்கிரம் தென்திசைக் கதிபனை யடைய மார்க்கம் உண்டாக்குகிறார்களே! தங்களுக்கும், தங்கள் சந்ததிகளுக்கும் க்ஷேமம் உண்டாக வேண்டியாவது அவ்வாறு இரவு அதிக நேரம் விழிக்காமலும் காலை 5 மணிக்கு முன் விழிக்கும் வழக்கத்தை வளர்க்கும்படிக்கும் கேட்டுக் கொள்ளுகிறேன்.

"இங்கிலாந்து முதலிய தேசங்களில் மாந்தர்கள் காலை வெகு நேரம் துயில் கொள்ளுகிறார்களே! என் நாமும் அப்படிச் செய்யக் கூடாது?" எனச் சிலர் கேட்கின்றனர். இங்கிலாந்து அல்ல நம் தேசம். அது சமசீதோஷ்ண மண்டலத்தி லிருக்கிறது. அது குளிர்ந்த தேசம். நாம் உஷ்ணமான தேசத்திலிருக்கிறோம். அங்கு பகல் சில மாதம் 18 மணி நேரம். நமக்கு அப்படியில்லை—இவைகளை கவனித்து பிறகு அக் கேள்விகளைக் கேட்கலாம்.

அத் தேச சீதோஷ்ண நிலைமைக்கு கால் சட்டையும், குடுத்துணிகளும் அங்கிகளும் தலைக்குத் தொப்பிகளும் கிறுப்புகளும் அவசியமே. நம் தேசத்துக்கு வேஷ்டியும் அங்க வஸ்திரமும் போதுமானது என்று விதிக்கப்பட் டிருக்கிறது. நம் பெரியோர்கள் நம் தேசத்தின் நிலைமையை உத்தேசித்து நமது ஆகாரம், உடை முதலிய தினசரி நடவடிக்கைகளை ஏற்படுத்தி யிருக்கின்றனர். அந்த தேசத்து சீதோஷ ஸ்திதி முதலியவைகளை உத்தேசித்து அவர்கள் தினசரியை ஏற்படுத்தி யிருக்கின்றனர். ஆகையால் அவர்கள் உடை முதலியவைகளை நாம் பின்பற்றுவது நமக்கு அநாரோக்கியமும், பணச் செலவுமாகும் என்பதை நன்கு உணரவும். அவர்கள் நாட்டு வழக்கத்தை நம் நாட்டில் புகுத்துவது "கான மயிலாட கண்டிருந்த வான்கோழி"யின் உதாரணமே யாம்.

நம் தேச ஆசாரப்படியே மஹாத்மா காந்தியடிகளும், கனம் புலுசு சாம்பமூர்த்தி அவர்களும் இன்னும் பல பெரியோர்களும் நடக்கிறார்கள்

என்பதைக் கவனிக்கவும். இனி நம்மில் பலரும் அவர்களைத் தான் பின்பற்றி நடக்கப் போகிறோம்.

சென்னை மாகாணத்து உபாத்திமைச் சங்கங்களில் உடை விஷயமாக அனேக தடவைகளில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் இதுவரையிலும் அரசாங்கத்தாரின் அங்கீகாரம் பெறவில்லை. இப்பொழுது அதைக் கட்டாயம் அரசாங்கத்தார் அங்கீகரிப்பார்கள் என்று நம்புகிறேன். உத்தியோகஸ்தர்களும், உபாத்தியாயர்களும் இனி வேஷ்டி, குடுத்துணி, அங்கவஸ்திரம், குல்லா இவைகளுடன் தங்கள் உத்தியோக சாலைகளுக்குச் செல்ல அனுமதி வேண்டுமென்பதே எனது கோரிக்கை. நம் நாடோ அதிக ஏழை நாடு. இங்கே அங்கிக்கும், வண்ணானுக்கு காசு கொடுத்து சாத்தியப்படவில்லை. வாங்கும் சம்பளத்தின் பெரும் பாகம் இவ்வித ஆடைகளுக்கு செலவு செய்யா விட்டால் கௌரவ ஹானி யுண்டாகிறது. இவ் வுத்தரவு கூடிய சீக்கிரம் அரசாங்கத்தாரால் பிறப்பிக்கப்படும் என்று நம்புகிறேன். ஆனால் நான் உத்தியோக சாலைக்குச் செல்லும் பொழுது அங்கீகரிக்கப்பட்ட உடையோடு தான் சென்று வருகிறேன். மற்ற வேளைகளில் வேஷ்டியும் அங்கவஸ்திரமும் தான் தரித்து வருகிறேன். நம் வாலிபர்களோ சதா குடுத்துணி அணியும் வழக்க முடையவர்களாகவே யிருக்கின்றனர். தேகத்துக்கு D. E. ஜீவசத்துப் பொருளைக் கொடுக்கக்கூடிய சூரிய உஷ்ணம் தேகத்தில் படாமல் செய்து கணை நோய்க்கு இடங் கொடுக்கின்றனர். இப்பேர்ப்பட்ட பல புது நாகரீகங்களால் பல நவீன ரோகங்களும் ஆங்கில வைத்தியர்களும் சிருஷ்டிக்கப் படுகின்றனர்.

குளிர் நீரில் குளிப்பது தேகத்துக்கு நலம் என்று ஆங்கிலத் தத்வ சாஸ்திரிகளும் கூட கூறுகிறார்கள். அதிலும் சூரிய உதயத்துக்கு முன் குளிப்பது நம் நாட்டிற்கு மிகவும் நலம். சென்ற வருஷம் நான் கேரள தேச யாத்திரை செய்தேன். பல க்ஷேத்திரங்களையும் தரிசித்தேன். ஒவ்வொரு க்ஷேத்திரத்திலும் காலை 4 மணிக்கு ஸ்நானம் செய்து ஈர வஸ்திரத்துடன் தினமும் அனேக பக்தர்கள் அந்த க்ஷேத்திரங்களில் தோத்தரிப்பது வெகு ஆனந்தமாக இருந்தது. அக் காலமே நல்ல காலம் என்று நினைத்தேன். அங்கே ஒவ்வொரு கிராமத்துக் கோவில் கூட காலை 4 மணிக்கே திறக்கப்படும். பல பக்தர்களும் ஸ்நானம் செய்து அங்கு கூடியிருப்பது நேத்திரானந்தமாக இருந்தது. அங்கு பகவத் சான்னித்யம் இருக்கிறது என்பதற்குச் சந்தேகமில்லை. விருத்தர்களும், பாலர்களும், வியாதியஸ்தர்களும் வென்னீரில் ஸ்நானம் செய்யலாம். நம் நவ நாகரீகர்கள் காலை 8 மணிக்கு எழுந்து பெட்காபி சாப்பிட்டு வென்னீரில் ஸ்நானம் செய்கின்றனர். இதுகளெல்லாம் பல நவவியாதிகளுக்கு மூலகாரணமாகும்.

ஸ்நானம் செய்த பிறகு பிராணாயாமம் செய்ய வேண்டும். பிராண ஆதாரமானது பிராணவாயுவே யாகும். பிராணாயாமம் செய்வது நோயற்று வாழக் காரணமாகும். நாம் உட்கொள்ளும் வாயுவானது நமது பிராணாதாரமான இரத்தத்தை சுத்தி செய்து அதிலுள்ள அசுத்தத்தை வெளியே கொண்டு வருகிறது. ஆகையால் சரீரபலம், ரத்த சுத்தி முதலியன சுவாசோச்சுவாசத்தால் கிடைக்கிறது. சர்க்கஸ் முதலியவைகளில் பெரும் கற்களை மார்பில் ஏற்றிவைத்து உடைப்பதற்கும் வேகமாக ஓடி வரும் மோட்டார் வண்டி முதலியவைகளை நிறுத்தவும் உதவும் சக்தி சுவாச பந்தனம்

செய்தவனுக்கு முடியும். மோட்டார் ட்யூபினுள்ளிருக்கும் காற்று எவ்வளவு பாரத்தைத் தாங்குகிறது. ஆங்கில வைத்திய சாஸ்திரிகள் ஒரு நிமிஷத்துக்கு 18 முதல் 20 வரை நாம் சுவாசம் விடுகிறோம் என்கின்றனர். ஆனால் நம் சாஸ்திரப்படி தினம் நாம் 21600 சுவாசத்துக்கு மேல் விடக் கூடாது. அதாவது நிமிஷத்துக்கு 15 சுவாசத்துக்கு மேல் விடக் கூடாது. ஒரு நிமிஷத்துக்கு சுமார் 5 வீதம் அதிக சுவாசம் விடுகிறோம். இதனால் ஆயுள் குறையும். ஆகையால் காலக் கிரமத்தில் 20-லிருந்து 18, 15, 12, 10, 8, 6, 4, 2, 1, என்ற கிரமத்தில் ஒரு நிமிஷத்துக்கு ஒரு ஸ்வாசம் விட பழகவேண்டும்.

இதற்கு பிராணாயாமம் மிக உபயோகம். இதை தினம் காலை செய்து வந்தால் மிக நலம். இதனால் தீர்க்காயுள், சூட்சுமபுத்தி, சரீர பலம், ஆரோக்யம் இவைகள் உண்டாகும்.

நம் தேசத்தில் சாப்பிட்ட இடங்களிலும் எச்சில் உமிழ்ந்த இடங்களிலும் சாணம் போடுவது வழக்கம். காலை வீதியில் சாணத்தை தண்ணீரில் கரைத்துத் தெளிப்பது வழக்கம். எச்சில்பட்ட பாத்திரங்களை சாணம் போட்டு சுத்தி செய்கிறோம். நமது பெரியோர்கள் இந்தப் பிரகாரம் ஏன் செய்ய விதித்திருக்கிறார்கள். காலையில் சூரிய உதயத்துக்கு முன் பூமியில் கண்ணுக்குத் தெரியாத ஒருவித விஷப் பூச்சிகள் உற்பத்தியாகிறது என்றும் அது சூரிய ரசமி பட்டவுடன் இறக்கின்றன என்றும் மேல் நாட்டார் கண்டு பிடித்திருக்கிறார்கள். இக் கிருமிகள் மனித சரீரத்தில் பட்டால் வியாதி உண்டாகும். சாணம் கிருமி ஸம்ஹாரியாகும். ஆகையால் காலை வீதியில் சாணம் தெளிக்க வேண்டுமென்றும் எச்சிலை சுத்தி செய்ய வேண்டுமென்றும் ஏற்படுத்தி யிருக்கிறார்கள்.

இது வரையிலும் எந்த தேசத்திலும் விஷத்தைப் பரவ வொட்டாமல் தடுப்பதற்கு சாணத்தை உபயோகித்ததில்லை. இப்பொழுது இக் குணம் சாணத்திற்கு உண்டென ஆராய்ச்சி மூலம் கண்டு பிடித்திருக்கிறார்கள். இவ் விஷயம் நம் முன்னோர்கள் கண்டு பிடித்து மதத்தோடு இணைத்திருக்கிறார்கள். க்ஷயம், மேகம் முதலிய பல விஷ பீஜங்களைச் சாணத்தில் போட்டு பரீக்ஷித்திருக்கிறார்கள். இதை மாட்டின் மலம் தானே என்று அலக்ஷியம் செய்யக் கூடாது. காப்பி ஹோட்டல்களில் சூப்பிச் சாப்பிடுவதாலும் அப் பாத்திரங்களைச் சாணம் போட்டு சுத்தி செய்யாமலும் ஒரே பாத்திரத்திலுள்ள தண்ணீரிலேயே சுத்தம் செய்து எடுப்பதாலும் க்ஷயம் முதலிய பல வியாதிகள் பரவி பல உயிர்களை இக் காலங்களில் கொள்ளை கொள்ளுகின்றன.

"ஒருவேளை யுண்பவன் யோகி, இருவேளை யுண்பவன் போகி, மூவ் வேளை யுண்பவன் ரோகி" என்பது பழமொழி. இப்பொழுது காலை பெட் காபி, உடனே இட்டலி காப்பி, மத்தியான போஜனம், மாலை டிபன் காபி, இரவு போஜனம் இப்படி சதாவாய் அரைத்துக்கொண்டு ஜீரணக் கருவிகளுக்கு வேலை கொடுக்கின்றனர்.

இதை உத்தேசித்தே அமாவாசியை, பௌர்ணிமை, மாதப்பிறப்பு, வருடப்பிறப்பு, முதலிய காலங்களில் ஒரு வேளை போஜனமும், ஏகாதசி தோறும் நிர்ஜலமுமாக இருக்க வேண்டுமென்றும் சாஸ்திரம் கூறுகிறது. உபவாச மிருப்பது தேகத்தின் பல வியாதிகளைத் தீர்த்துக்

கொள்வதற்காக என்று பாச்சாத்ய நிபுணர்கள் கண்டுபிடித் திருக்கிறார்கள். உபவாசத்திற்கு மேற்பட்ட ஔடதம் இல்லை. சக்தி யளிக்கும், புண் ஆற்றும், நோய்களை சொஸ்தப்படுத்தும், கோபத்தை யகற்றும். விரத மிருப்பவர்கள் விரத காலத்தில் தண்ணீர் மட்டுமே பருகலாம். மகாத்மா காந்தியடிகள் உபவாச மிருந்ததும் அதனாலடைந்த பலனையும் இன்னும் உலகம் போற்றுகின்றது.

"மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின்."

என திருவள்ளுவ நாயனார் கூறி யிருக்கிறபடி ஜீரணிக்கத் தகுந்த பக்குவமான ஆகாரத்தையே உட்கொண்டால் மனிதர்களுக்கு மருந்தே வேண்டாம். சக்தியுள்ள வரை விரத மனுஷ்டிக்கவும். முடியாவிட்டால் தினமும் சிற்றுண்டி விலக்கி இரு வேளைக்குமேல் உணவு கொள்ளாதிருத்தல் மிகவும் நலம். மித போஜனம் தேகாரோக்கியம். விரதானுஷ்டானம் காமாதி அரிஷட்வர்க்கங்களை இல்லாமற் செய்யும்.

சூரியனுக்கும் சந்திரனுக்கும் மத்தியில் பூமி வரும்பொழுது சந்திரக் கிரக்ணமும், சூரியனுக்கும் பூமிக்கும் நடுவே சந்திரன் வரும்பொழுது சூரியக்கிரகணமும் உண்டாகிறது. அதாவது சந்திரன் மீது பூமியின் நிழல் படுவதால் சந்திரக்கிரகணமும் பூமி மீது சந்திரன் நிழல் விழுவதால் சூரியக்கிரகணமு முண்டாகின்றன. நிழல்களுக்கு ஒருவித சக்தி உண்டு என்று வைத்திய சாஸ்திரம் கூறுகிறது.—அரசமரத்தின் நிழல் பகலில் பித்தத்தை அதிகப்படுத்தும். வேப்பமரத்தின் நிழல் பித்த வியாதிகளைச் சொஸ்தப் படுத்தும். மாமரம், புளியமரம் இவைகளின் நிழல் பல வியாதிகளை யுண்டாக்கும். அரசமர நிழல் காலை அரை ஜாமம் வரையின் ஜீரணிக்கக்கூடிய பித்தத்தைத்தான் உண்டாக்கும். ஆகையால் அரசப் பிரதக்ஷணம் காலை அரை ஜாமத்திற்குள் செய்தால் நன்மை யென நமது சாஸ்திரம் கூறுகிறது. உச்சி வேளையில் அரசமரத்தடியிலும் புளியமரத்தடியிலும் யாரும் தங்கக் கூடாது. அதிலும் அபலைகளான ஸ்திரீகள் தங்கக்கூடாது. தங்கினால் அரசமரத்துப் பேய், புளியமரத்துப் பேய் பிடிக்கும் என்கின்றனர். அவர்களுக்கு மயக்கத்தை உடனே உண்டு பண்ணும். விளக்கு நிழலுக்கும் மனித நிழலுக்கும் கூட ஒருவகை துர்க்குண முண்டென்றும் மாந்தர் அந்த நிழல்களில்கூட இருக்கக்கூடாது என்றும் வைத்தியநூல் கூறுகிறது.

சூரியக்கிரணங்கள் வெப்ப முடையது. ஆகையால் அதற்கு ஒருவித விஷத்தன்மை யுண்டு. சந்திரன் அமிருத கிரணத்தைப் பொழிகிறான். பூமியால் சந்திரனுக்கு சூரியன் மறைபடும்போது சூரியகிரண சம்பந்தம் சந்திரனுக்கும் இல்லை. சந்திரனுக்கும் பூமிக்கும் மத்தியிலுமில்லை. ஆகையால் சந்திரனிலும், பூமிக்கும் சந்திரனுக்கும் மத்தியிலும் அமிருதகிரணமே நிறைந்திருக்கும். இந்த அமிருதமே சகல ஜீவராசிகளுக்கும் ஆதாரம். இயற்கையிலேயே அமிருதத் தன்மையுள்ள தண்ணீர் அதிக அமிருத மயமாகிறது. நீரின் அமிருத குணம் பல மடங்கு அதிகரிக்கிறது. அமிர்தம் பசி தாகங்களை நீக்கக் கூடியதால் அக் காலத்தில் வயிற்றினுள்ளிருக்கும் ஆகாரம் ஜீரணமாவதில்லை. விஷ மயமாக மாறுகிறது. ஜீரணசக்தி யற்று விஷத்தன்மை யடைவதால்தான் கிரகண காலத்திற் குறைந்தபக்ஷம்

இரண்டு ஜாமம் முன்னடியே ஆகாரம் செய்யவேண்டு மென்கின்றனர். இதுதான் நம் முன்னோர் கொள்கை. இங்கு வைத்தியத்தை மதத்தோடு இணைத்திருப்பது ஆச்சரியமே.

"கிரகணம் பிடிக்கும்போது நமது பித்தப்பையில் இருக்கும் நுட்பமான நரம்புகள் பலஹீனப்பட்டு விடுவதனால் அக் காலத்தில் வயிற்றில் ஜீரணமாகாத ஒரு வஸ்துவும் இருக்கக் கூடாது" என்று பிஸியாக்ரபி சாஸ்திரத்தில் பெரிய பட்டம்பெற்ற பெரியோரான தாரன்டன் என்பவர் ஸயன்ஸ் ஸிபடிங்ஸ் என்ற சாஸ்திரப் பத்திரிகையில் தன் ஆராய்ச்சியின் முடிவை எழுதி யிருக்கிறார். இவ்விஷயம் நமக்கு (இந்தியர்களுக்கு) புதிதல்ல.

அறிவைப் பிரதானமாக கொண்டொழுகுவோர்க்கு அதிக சீக்கிரத்தில் குணமோ, தோஷமோ அணுகும். இவர்களுக்கு சரீர போஷணைக்குதவு பவைகள் விலக்கப்பட்டிருக்கின்றன. சீக்கிரம் ஜீரணிக்கக் கூடியவைகளையே இவர் உண்ணலாம். பக்தி மார்க்கம், உபாஸனை மார்க்கம், யோக நிலை உள்ளவர்கள் கிரகண காலத்தை நன்றாக உபயோகப் படுத்தலாம். இவர்கள் கிரகணம் தொடுவதற்கு மூன்று ஜாமம் முன்னமேயே புசித்து விடவேண்டும். சில பதார்த்தங்கள் ஜீர்ணிக்க ஐந்து ஜாமம்கூட ஆகு மென்று வைத்தியநூற்கள் கூறுகின்றன. பசி தாங்க முடியாத பாலர், விருத்தர், நோயாளிகள் கிரகணம் தொடுவதற்கு ஒரு ஜாமம் முன் சீக்கிரம் ஜீர்ணிக்கக்கூடிய கஞ்சி முதலியவை சாப்பிடலாம்.

தண்ணீர் அமிர்தமயமாக இருப்பதால் கிரகண ஸ்பர்ச காலத்தில் ஸ்நானம் செய்யவேண்டும். விடுகிற வரையிலும் மந்திரத்தை உச்சாரணம் செய்தால் அது அதிக பல முடையதாகும். விஷ மந்திரசித்தி யுண்டாகும். தண்ணீரில் நின்று ஜபித்தால் அதிக பலனுண்டாகும். கிரகணம் விட்ட பிறகு செய்யப்படும் ஆகாரத்தையே உண்ணவேண்டும். பழைய ஆகாரம் உண்ணலாகாது. விட்டவுடன் மோசன ஸ்நானம் செய்யவேண்டும். மோசன ஸ்நானம் செய்தவுடன் தானம் செய்வேண்டும். பின் தேவாலயம் செல்ல வேண்டும். பிறகுதான் உணவு அருந்தவேண்டும்.

புண்டரம் தரிக்காவிட்டால் பிரேத காரியம் தவிர ஒன்றும் செய்ய ஒருவன் அருகனல்ல. ஸ்நானம் செய்தவுடன் புண்டரம் தரிக்கவேண்டும். புண்டரம் இரு வகைப்படும் (1) திரிபுண்டரம் (2) ஊர்த்துவ புண்ட்ரம். கோபீசந்தனம், திருமண் இவைகளால் ஊர்த்துவ புண்டர மிடப் படுகின்றன. விபூதியால் திரிபுண்டரமிடப் படுகின்றன.

புருவமத்தியமே ஞானஸ்தானம், ஆத்ம ஸ்தானம் என கூறப்படுகிறது. இங்கு இடை, பின்கலை, சுழிமுனை ஆகிய மூன்று நாடிகள் சந்திக்கின்றன. அவைகள் அசுத்தமாகி மலின் மடையாமல் புண்டரம் காக்கிறது. கோபீ சந்தனமும், திருமண்ணும் மண் வகையாகும். விபூதி சாம்பல்.

புருவமத்தியம் ஞானஸ்தானம் என்று கூறப்படுகிறது. அங்கு இடை, பின்கலை, சுழிமுனை ஆகிய மூன்று நாடிகள் கூடுகின்றன. சுவாசோச் சுவாசத்தின் வேகத்தால் மனோசக்தியின் சில அம்சங்கள் அவ்விடத்தை யடைகின்றன. ஆகையால் அந்த ஞானஸ்தானம் மலின மடைகின்றன. தியானம் ஜபம் எல்லாம் அப்புருவ மத்தியை நோக்கித்தான் செய்யவேண்

டிய தாகும். புண்டரத்துக்கு அவ் வசுத்தத்தை விலக்கும் சக்தி யுண்டு. கண் முதலியவை நீர்கோத்துக் கொண்டிருந்தால் நாமக்கட்டியை உடைத்துப் போடுகிறோம். குழந்தைகளின் தலைவலி தோஷத்திற்கு குங்கும மிடுவது வழக்கம். இதனால் திருமண், திருச்சூரணம் (குங்குமம்) இவைகளின் குணம் தெரிய வருகிறது.

விபூதியை பஸ்மம், பஸிதம், ரக்ஷை, க்ஷாரம் என்றெல்லாம் கூறுகிறோம். அது ஐசுவரியத்துக்குக் காரணம் என்பதால் விபூதி யென்றும், அசுத்தத்தை நீக்குவதால் பஸ்மம் என்றும், பரம்பொருளை யடையச் செய்வதால் பஸிதம் என்றும், ஆபத்துக்களைப் போக்கடிப்பதால் க்ஷாரம் என்றும், பூதப்பிரேதங்களை அகற்றுவதால் ரக்ஷை யென்றும் அழைக்கப்படுகின்றன. இவ்வாறு ஜாபால உபநிஷத்தில் விபூதியைக் குறித்து விளக்கமாகக் கூறப்பட்டிருக்கிறது. அபஸ்மாரரோகம் பஸ்மதாரணத்தால் தீருமென்று வைத்தியசாஸ்திரம் கூறுகிறது. தலைவலி யுடையவர்கள் சாம்பலை ஒரு துணியில் மூட்டைகட்டி தலையணையாக வைத்துக்கொண்டால் தலைவலி தீரும். திருநீற்றிற்கு நீர் முதலியவற்றைக் கிரகிக்கும் சக்தி உண்டு. இவ் விஷயங்களை யெல்லாம் உள்ளடக்கியே நமது முன்னோர் ஸ்நானம் செய்த உடன் புண்டரம் தரிக்கும்படி ஆக்ஞை யிட்டிருக்கிறார்கள்.

இவ்வளவு மகிமை பொருந்தியது நமது தேசம்; நமது மதம். இதில் மனிதனின் சகலவித க்ஷேமத்தையும் உண்டுபண்ணக் கூடிய முறையேயன்றி வேறு ஒன்றுமே காணோம். பெற்றோரோ உத்தியோக வேட்கையால் தம் மக்களை ஆங்கிலம் கற்க ஏற்பாடு செய்கின்றனர். பூர்வீக சொத்துக்களை பூராவும் இழந்து ஓட்டாண்டியும் ஆகின்றனர்.

மதக்கல்வியைப் போதிக்க வேண்டுமென்ற எண்ணமே அவர்களுக்கில்லை. இவர்கள் சொல்வதாவது, "இரண்டு கோண எழுத்துத் தெரிந்தாலல்லவோ கௌரவம். நாலு துட்டுக் கிடைக்கும்" இந்த மூடக்கொள்கையைப் பாருங்கள். படிப்பு வேண்டியது அவசியம். அதைக் குறை கூறவில்லை. நம்நாட்டு விஷயம்; மதவிஷயம் தெரியவேண்டாமா!

நமது நாடோ ஞானநாடு, ஆத்மஞானோத்பத்தியான நாடு. எத்தனை ஞானவான்கள் இருந்த நாடு, இருக்கின்ற நாடு. நமது மகாத்மாகாந்தியடிகளைத் தற்சமயம் பின் பற்றுவோம். அம் மகானின் பெருமையை யாரால் கூற முடியும்! விவேகாநந்த சுவாமிகளின் மகிமைதான் என்ன! சங்கரர், ராமானுஜர், மத்வர் இவர்கள் என்ன சாமான்யப்பட்டவர்களா! இந்நாட்டில் அனேகர் மதசம்பந்தமான அறிவு இல்லாமலிருப்பது மிகக் கேவலமே யாம்.

நாம் சுயமத ஆராய்ச்சியும் அறிவு மில்லாமல் நமது மதத்தின் உன்னதமான கொள்கைகளைத் தெரிந்து கொள்ளாமல் இருக்கின்றோம். இதற்குக் காரணம் நம் பாடசாலைகளில் மதக்கல்வி (Religious Instruction) இன்மையை யாம். ஆகையால் நம் மதத்தின் கொள்கைகளை போதிக்கக் கூடிய சிறிய புஸ்தகங்களையும் பாடசாலையில் கற்பிக்கவேண்டும். வெகு அழகாக "வேதாகம தர்மவித்யா" அல்லது இந்துமத தர்மவிளக்கம்" என்ற புஸ்தகம் ஸ்ரீவைகுண்டம் ஸம்ஸ்கிருத பாடசாலை பண்டிதர் பிரம்மஸ்ரீ

சாம்பசிவ சாஸ்திரிகள் எழுதி யிருக்கிறார். இதுபோல் அனிபெஸெண்ட் அம்மையார் பகவத்கீதை முதலிய பல புஸ்தகங்கள் எழுதி யிருக்கின்றனர்.

காசியில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் மத்திய ஹிந்துகலாசாலே சபையார் மாணுக்கர்களின் உபயோகத்துக்காக "சநாதன தர்மம்" எனப் பெயருடன் மூன்று புத்தகங்கள் எழுதி யிருக்கின்றனர்.

இவைகளைத் தவிர நமது தலைவர் ஸ்ரீமான் ஸி. ராஜகோபாலாச்சாரியார் அவர்களும் நமது மதக்கொள்கைகளை சிறு குழந்தைகள் முதல் இலகுவில் தெரிந்து கொள்ளக்கூடிய விதத்தில் பல கட்டுரைகள் எழுதி யிருக்கின்றனர். அவைகளை யெல்லாம் திரட்டி புஸ்தக ரூபமாக எழுதி அச்சிட்டு பாடபுஸ்தகங்களாக வைக்கலாம். மஹாத்மாகாந்தியடிகளும் மத விஷயமாக பல பிரசுரங்கள் வெளியிட்டிருக்கின்றனர்.

கல்வி சீர்திருத்தம் செய்யும் பொழுது அதிகாரிகள் பாடசாலைகளில் மதக் கொள்கைகளையும் கற்பிக்க ஏற்பாடு செய்தால் மிகவும் நலம்.

நம் மதமோ அநாதியானது. இதன் கட்டளைகள் பூராவும் சுகாதாரத்தை ஒட்டியே எழுதப்பட்டிருக்கின்றன. காசி சர்வகலாசாலை பிரதம ஆசிரியர் கனம் ரிச்சார்ட்ஸன் என்ற கங்காபக்தர் சாஸ்திர ஆராய்ச்சியின் மூலம் கண்டுபிடித்துக் கூறி யிருப்பதுபோல் நாம் 'ஏன் அதைச் செய்ய வேண்டும்? செய்யாவிடில் என்ன?' என்ற குதர்க்கக் கேள்விகளைக் கேட்காமல் நமது சமய நெறிகளை அனுசரித்து வந்தால் நாம் அரோக திடகாத்திரர்களாக இருப்போ மென்பதில் சந்தேகமேயில்லை. கடவுள் நமது காந்தி தாத்தா அவர்களுக்கும், ஸ்ரீமான் ராஜகோபாலாசாரியார் அவர்களுக்கும் தீர்க்காயுளைக் கொடுத்து அனுக்கிரகித்தால் நமது சிறுவர் (பவிஷ்யத்கால தேசாபிமானி)களின் க்ஷேமத்திற்காகவாவது மதக்கல்வி போதனைக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்வார்கள் என்பதில் ஐயமில்லை. கல்வியே மனிதனின் கண். கண்ணில்லாவிடில் குருடனே யாம். நமது வாலிபர்களுக்கு மதக்கல்வி யில்லாத குறை குறையே. அதை நிவிர்த்தி செய்து நமது இந்தியாவின் மாஹாத்மியத்தை உலகத்தார் அறியும்படி செய்வதற்கான அறிவையும் கல்வியையும் பாடசாலைகள் மூலம் பவிஷ்யத்கால நாகரீகர் (future citizens)களுக்குச் சர்க்கார் அதிகாரிகள் கொடுக்கும்படியாக உள்ள ஊக்கத்தை கடவுள் கொடுத்தருள் செய்வாராக!



# தமிழின் பெருமையும் நமது கடமையும்

—(0)—

(D. R. நாகராஜன்.)

"பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள்முன் னிருந்தபடி யிருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையா ளமுந்துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல வாயிடினும்
ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே"

எனப் புகழ்ந்து போற்றப்பட்டது தமிழாம். உலகத்துதித்த மாந்தர்களால் பல்வேறு மொழிகளுள், தனித்தியங்கும் ஆற்றலுடைய மொழிகளிரண்டே. அவை ஆரியமும் தமிழுமாம். ஆரியம் கற்றாரில் சிலர் அதன் பாலுள்ள அன்பு மிகுதியால் 'தமிழ்' ஆரியத்திலிருந்து பிறந்தது, ஆதலால் அதைத் தனித்தியங்கும் மொழியென்று அறைதல் பொருந்தாது என்று வீண் வழக்காடுவர். ஆனால் அவ்விரு மொழிகளிலும் ஆராய்ச்சியுடையவர்கள், 'ஆரியமும், தமிழும் தனித்தனி மொழிகளே' என்று சொல்ல சற்றும் பின்வாங்க மாட்டார்கள்.

இனித் தனித்தியங்கும் ஆற்றலையுடைய தமிழானது மிகவும் தொன்மையுடையது. பல்வேறு காரணங்களால் பல்லாயிரம் வருடங்களுக்கு முன்னே, தமிழ் எழுதப்பட்டு வந்ததாக ஊகிக்க வேண்டியிருக்கிறது. இவ்வளவு தொன்மையான தமிழை, நமது முன்னோர்கள் மூன்று சங்கங்கள் ஸ்தாபித்து வளர்த்து வந்திருக்கிறார்கள். இம் முச்சங்கங்களுள் முதலிரண்டும் கிருஸ்து சகாப்தத்திற்கு முந்தியன. தலைச் சங்கத்தில், சிவபெருமான், குபேரன், அகஸ்தியர் முதலியவர்கள் வீற்றிருந்ததாகத் தெரியவருகிறது. இதன் வாழ்வு நாள் சுமார் நாலாயிரத் தைந்நூறு வருடங்களாம். இடைச்சங்கமோ வெண்டேர்ச் செழியனால் ஏற்படுத்தப்பட்டு, சற்றுக் குறைய நாலாயிரம் ஆண்டுகள் வேலை செய்திருக்கிறது என்று பலநூல்களால் தெரிய வருகிறது. இதை மொத்தத்தில் ஆதரித்து வந்த பாண்டிய மன்னர்கள் ஐம்பத்தொன்பதின்மர்க ளாவார்கள். கடைச் சங்கத்தின் வாழ்நாளை சுமார் ஆயிரத்துத் தொள்ளாயிரம் வருடங்களெனக் கூறலாம். இச்சங்க காலத்தில் தான், திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய அரிய நூல்கள் எழுதப்பட்டன. இன்னும் பலநூல்கள் இச்சங்க காலத்தி லியற்றப்பட்டதாகக் கூறப்படினும், அவ்விதம் உறுதியாகக் கூறபோதிய ஆதாரங்கள் கிடைத்தில.

கிறிஸ்து சகாப்தம் ஒன்பதாவது நூற்றாண்டில் வைணவ நூலாகிய நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்திற் சிற்சில பாகங்களும், சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரமும் வெளிவந்தன. பத்தாவது நூற்றாண்டில் நன்னூல், நேமிநாதம் முதலியன வெளிவந்தன. பதினோராவது நூற்றாண்டில், கம்ப ராமாயணமும், புகழேந்தியார் நளவெண்பா, சேக்கிழாரது பெரிய புராணம், செயங்கொண்டாரது கலிங்கத்துப்பரணி முதலியவைகளும், விக்கிரம சோழனுலா, குலோத்துங்க சோழனுலா இராஜ இராஜ சோழனுலா முதலியவைகளும் வெளிவந்தன. பின்னர் அதிவீரராம பாண்டியர், நைடதம், கூர்ம புராணம், இலிங்க புராணம், காசிகாண்டம் முதலியவைகளை வெளியிட்டார்கள். பிற்காலத்தில் சிவப்பிரகாச சுவாமிகள், சிவஞான முனிவர் முதலியவர்கள் தங்களது அரிய நூல்களை வெளியிட்டார்கள்.

தமிழானது பண்டைக்காலத்தில் மிகவும் உன்னத நிலையில் இருந்ததென்பதை மறுப்பவர் ஒருவருமிலர். தமிழ்நாட்டு மூவேந்தர்களும் தமிழ்ப்புலவர்களைத் தங்களுடைய சமஸ்தானங்களிலிருந்திப் போற்றிவந்ததே யதற்குக் காரணம். மற்று மவ்வேந்தர்கள் புலவர் பெருமான்களுடைய அறவுரைகளைத் தட்டாது கேட்டு, அவற்றைக் கேட்டு கடைப்பிடித்து அவர்களை ஆதரித்து வந்திருக்கிறார்கள். இதனை வலியுறுத்த பற்பல உதாரணங்களை யெடுத்துக் காட்டலாமாயினும், விரிவஞ்சி சிலவற்றை மாத்திரம் எடுத்துக் கூறுதல் ஏற்புடைத்து.

தமிழ்நாட்டு மூவேந்தர்களி லொருவராகிய கோப்பெரும் சோழர் என்பார், தனது மக்களுடன் பகைமைகொண்டு, போர் தொடங்கிய காலத்துப் புலவர் பெருமான்களாகிய பொத்தியார், புல்லாற்றூர் எயிற்றியனார் முதலியவர்களின் புத்தியின்படி போரை நிறுத்தியதே, பண்டைப் புலவர்களுக்கு வேந்தர்களின்பா லிருந்த செல்வாக்கை ஒருவாறு வெளிப்படுத்தும்.

நிற்க, புலவர் பெருந்தகையாராகிய பொய்கையா ரென்பார் தமக்கு பேருபகாரம் செய்தவனாகிய சேரன் கணைக்காலிரும்பொறை என்னு மோர் அரசனை, சோழன் செங்கணா னென்பவன், பிடித்து விலங்கிட்டுக் கும்பகோணத்துக் கருகாமையிலுள்ள கொடவாயிற் கோட்டத்திற் சிறையிட்ட காலத்து, சோழன் மீது, அவனது வெற்றியையும், யுத்தகளத்தையும் புகழ்ந்து, ‘களவழி நாற்பது’ என்னும் ஒரு நூலைப் பாடி, சேரலனை விடுவிக்கச் செய்தார். ஆ! ஆ! அக்காலத்துப் புலவர்களுக் கிருந்த பெருமைதா னென்னே !!

இன்னும் சிலப்பதிகாரத்தை யருளிச் செய்த இராஜகுமாராகிய இளங்கோவடிகள், இவ்விரு குமாருள் இளையோனே மன்னனாகும் மாண்புடையன்’ என்று சொல்லக்கேட்ட மாத்திரத்தில், தமது தமயனிருக்கத் தாம் அரசாளுதல் அழகல்லவென்று நினைத்தவராய் துறவு பூண்டார்.

மற்றும் பறம்பு மலையில் வாழ்ந்து வந்த வேள்பாரியின் உயிர்த் தோழராகிய கபிலர் பெருமான், ‘பறம்புமலை’ விரோதிகளால் முற்றுகை செய்யப்பட்டதால், ‘பஞ்சம் உள்ளிருந்து வாட்டும்’ என்பதை யுன்னி, கிளிகளையும் நாகண வாய்ப் புட்களையும் ஆகாய வழியாய்ப் பறந்துசென்று, வயல்களிலுள்ள தானியக் கதிர்களைக் கொண்டுவந்து குவிக்குமாறு பழக்கி

வைத்திருந்தார். பின்னர், ஒரு காலத்துப் பறம்புமலையைத் தமிழ்நாட்டு மூவேந்தர்களும் முற்றுகை செய்த காலத்து, வேள்பாரி யுள்பட உள்ளிருந்தவர்கள் கபிலரின் முன் ஜாக்கிரதையால் இன்புற்றிருந்தார்கள். இம்மட்டுமோ? வேள்பாரி இறக்கும் தறுவாயிலிருந்த பொழுது, தன்னுடைய செல்வச் சிறுமிக ளிருவரையும், கபிலர்பால் ஒப்புவித்து உயிர் நீத்தார் என்றால் அக்காலத்துப் புலவர்கள் மணிமுடி தரித்த மன்னவர்களுக்கு உயிர் போல் விளங்கினர்களென்று கூறுதல் மிகையாகுமோ?

நிற்க பத்துப் பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க் கணக்கு முதலிய அரிய நூல்களைச் செய்தவர்கள் கடைச்சங்கத்துச் சான்றோரும் அக்காலத்துப் பிற சான்றோருமாவர். அச்சங்க காலத்தில் மதுரையம்பதியில் திருக்கோயில் கொண்டிருக்கும் ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசரும் ஓர் அங்கத்தினராய் விளங்கி வந்தாரென்றால் அக்காலத்து தமிழின் பெருமை இத்தன்மையதென்று சொல்லவும் கூடுமோ ? அக்காலத்துக்குப் பின் வந்தவர்கள் சங்க மருவிய காலத்து இயற்றப்பட்ட அரிய நூல்களைப் போல் தாங்களுமியற்ற ஆர்வங் கொண்டார்களில்லை. ஏனெனில், அவர்கள் வறுமையாலும், சிறுமையாலும், வருந்தி நாளடைவில் இயற்கை நுண்ணறிவு மங்கப் பெற்றவர்களாகி மாண்பிழந்து போனமையே யாகும். "குடை நிழலிருந்து குஞ்சர மூர்ந்தோர் நடைமெலிந்தோரூர் நண்ணினும் நண்ணுவர்' அன்றோ? மணிமுடி தரித்து அரியாசனத்திருந்த அரசர்களும் வித்துவச் சிரோன்மணிகளைச் சிவிகைகளின் மேலேற்றி, தண்டு தாங்கிச் சென்ற காலம் ஒன்றிருந்தது! அது தமிழரசிக்குப் பொங்கு காலமென்றே சொல்ல வேண்டும். இக்காலமோ தமிழரசி மங்கும் காலமாயிருக்கிறது. மற்றும்,

"சிந்தா மணியின் நந்தாப் பொருண்மையும்
மணி மேகலையின் அணிகெழு போக்கும்
சிலப்பதிகாரத் திலக்கியச் செலவும்
திருவள்ளுவரின் ஒருமொழி நயமும்
கம்பன் கவியின் சொற்பொரு ளின்பமும்
பத்துப் பாட்டின் வித்தக நடையும்
கல்லாடத்தின் எல்லா சிறப்பும்
இன்னோ ரன்ன பன்னூன் மாண்பும்
பல்லூழி காலம் பாடுகிடப் பினினும்
வருமோ மற்றவர் வாக்கின் வழித்தாய் ?"

எப்படி வரும்? வராது! வராது!

தமிழ் என்னும் பதத்திற்கே, 'இனிமை'யென்று பொருள். நமது முன்னோர்கள், இம்மொழியில் பகவானை அருமையான பாக்களால் பாடி, அநேக அற்புதங்களையெல்லாம் செய்திருக்கிறார்கள். ஆகையினாற்றான்,

"தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை
யுண்ட பாலனை யழைத்ததும் எலும்புபெண் ணுருவாக்
கண்டதும் மறைக் கதவினைத் திறந்ததும் கன்னித்
தண்ட மிழ்ச்சொல்லோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்?"

எனத் திருவிளையாடற் புராணத்தில் ஒரு வினாவும் எழுந்தது.

பண்டைக் காலத்தில் பேச்சிலும் எழுத்திலும் செந்தமிழே யுபயோகிக்கப்பட்டு வந்தது. அக்காலத்தில் ஜ, ஸ, ஷ, ஹ, க்ஷ, முதலிய வடமொழி யெழுத்துக்களைத் தமிழில் உபயோகப் படுத்துதல் (தற்காலத்தைப் போல்) குற்றமெனக் கருதப்பட்டது. ஆனால் தற்காலத்தில் வடமொழியே யன்றி பிறமொழிகளும், தமிழில் தாராளமாய்க் கலந்துகொண்டு வருகின்றன.

பண்டைக்காலத்திலிருந்து சமீபகாலம் வரையில் தமிழ் பாட்டுக்களும் நூல்களும், ஓலைச் சுவடிகளி லெழுதப்பட்டு வந்தன. ஆதலால் அக்காலத்து மாணவர்கள், தாங்கள் படிக்க வேண்டியவைகளை யெல்லாம் தங்கள் கைகளினாலேயே எழுதவேண்டியிருந்தது. அப்படியிருந்தும், அக்காலத்தில் தான் தமிழானது மிகவும் உன்னத நிலையி லிருந்திருக்கின்றது. இக்காலத்திலோ, தமிழ்மொழியானது எல்லாச் சுவைகளும் இனிதமையப் பெற்றிருந்தும் தமிழ் மக்களாலேயே ஆதரவு செய்யப் படவில்லை.

இனி, தற்கால கலாசாலைகளிலும், கல்லூரிகளிலும், ஆங்கிலமும் தமிழும் கற்றவர்களே, தமிழ்ப்போதகாசிரியர்களாக நியமிக்கப்பட்டு வருகிறார்கள். அந்தோ ! ஆங்கில மணம் கமழப்பெறாத, ஆழ்ந்த தமிழாராய்ச்சியுடைய தமிழ்ப் புலவர்கள், வறுமையென்னும் கொடிய நோய்க்காளாகி, வருந்துகிறார்கள். அவருள் கலாசாலைகளிலும், கல்லூரிகளிலும் போதகாசிரியர்களாய் நியமிக்கப்பட்டிருக்கும் ஒரு சிலரும் தங்கள் புலமைக்குத் தக்கவாறுவது, செலவிற்குத் தக்கவாறுவது, சம்பளம் பெறுகிறார்களில்லை. ஆதலால் அவர்களியற்றும்படியான நூல்கள் அச்சுவிமானம் ஏறா தொழிகின்றன. இக்காரணத்தினால் தற்கால மாணவர்களுக்குப் பெரிதும் தமிழ்ச்சுவை யூட்டும்படியான புஸ்தகங்கள் அநேகம் தமிழிலில்லாம லிருக்கின்றன.

அந்தோ ! இக்காரணங்களினால் தமிழைக் கற்போர்களில்லாமற் போனால், நமது முன்னோர்களா லியற்றப்பட்ட அரும்பெரும் நூல்களின் கதி யென்னாகும்? ஆ! ஆ!! ஆத்திசூடியும், அறநெறிச் சாரமும் அழிய வேண்டும் போலும், வள்ளுவரின் குறளைக் கொள்ளுவாரில்லாமற் போக வேண்டும் போலும்! நாலடியார் வில்லி பாரதம், பெருந்தேவனார் பாரதம் புற நானூறு, பத்துப் பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ் கணக்கு, சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய செந்தமிழ் நூல்கள் அந்தத்தை யடையவேண்டும் போலும் !!!

கடைச் சங்கத்தில் தானுமொரு அங்கத்தினனாய் வீற்றிருந்து, தமிழை வளர்த்து வந்த கங்கையார் சடை காந்தனாகிய மாதொரு பாகத்தானும், தமிழ்மாதை அவளது க்ஷீண திசையில் புறக்கணிப்பானோ? பெண்ணென்றால் பேயும் இரங்கு மன்றோ? அங்கிங்கெனாதபடி எங்கும் ஒளிர்கின்ற ஆதி மூர்த்தியாகிய ஆண்டவன், இச்சமயத்தில் ஒருவழி புகல்வானாக!

நிற்க, தமிழின் தொன்மையையும், அதன் மான்பையும் அறியாத சிலர், அதனைக் கற்பதென்றால் வேப்பிலை கஷாயம் குடிப்பதென்று நினைக்கிறார்கள். மற்றுஞ் சிலர் தமிழரிச்சுவடியைப் படித்த மாத்திரத்தில், கம்பனது கற்பனையைக் கவர நினைத்துக் காரியம் கைகூடாமல், தமிழை இகழ ஆரம்பித்து விடுகிறார்கள். அந்தோ ! என்ன பரிதாபம் !! ஆங்கிலத்தில் எ, பி, ஸி, டி,—யைக் கற்ற மாத்திரத்தில், ஷேக்ஸ்பியர் கவியின் சாதுர்யத்தைப் படித்து மகிழ நினைப்பது போலல்லவோ விருக்கிறது. என்னே ! என்னே ! இனியாவது,

"பொருப்பிலே பிறந்துதென்னன் புகழிலே கிடந்துசங்கத்
திருப்பிலே யிருந்து வைகையேட்டிலே தவழ்ந்தபேதை
நெருப்பிலே நின்றுகற்றோர் நினைவிலே நடந்தோரேன
மறுப்பிலே பயின்றபாவை மருங்கிலே வளர்கின்ற"வளும்

"நீராரும் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்ட மிதில்
தக்க சிறு பிறைநுதலும், தரித்தநறும் திலகமுமே
தெக்கணமு மதிற்சிறந்த திரவிட நற்றிருநாடும்
அத்திலக வாசனைபோல் அனைத்துலகு மின்பமுற
எத்திசையும் புகழ்மணக்க" இருந்தவளும்

தமிழணங் கென்பதை நந்தமிழ் மக்களறிந்து, ஆழ்ந்த தமிழாராய்ச்சி செய்யப் புகுவாராக.

உலகத்தில், சீரும் சிறப்பும், செல்வாக்கும் கௌரவமும் வாய்ந்த எந்நாட்டு மாந்தரும், தம் தாய்மொழியை யலக்ஷியம் செய்யாது பொன்னே போல் போற்றி வருகிறார்களென்பதைத் தமிழ் மக்கள் இன்னும் அறியாமலிருப்ப தழகன்று. இப்பொழுதாவது விழித்துக் கொண்டு, தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபட்டால் மிகவும் உன்னத நிலையை யடையலாமென்பது உறுதி.

"ஊழையு முப்பக்கங் காண்பர்; உலைவின்றித் தாழா துஞற்று பவர்"

"துன்ப முறவரினுஞ் செய்க; துணிவாற்றி யின்பம் பயக்கும் வினை"

---

# புக்கக வாழ்வின் மாண்பு

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

தொன்மையிலும் புனிதத் தன்மையிலும் இயற்கை வளங்களிலும் பூவுலகுக்குள்ளேயே தலைசிறந்து விளங்கும் நமது பாரத மணித்திருநாட்டின் தனிப்பெருஞ் சிறப்புக்கு உரிய பெருமைகள் பலவற்றிலும், உத்தம பத்தினிப் பெண்டிரின் ஒப்புயர்வற்ற கற்பொழுக்க மகிமை பெரிதும் தலை சிறந்து விளங்குவதாகும். இப் பாரத நாட்டின் பல விடங்களிலும் நவீன நாகரிகப்பேய் தலைவிரித் தாடிக்கொண்டிருப்பினும், கற்பொழுக்கத்திற் சிறந்த பாரதநாட்டு நாரீமணிகளிடம் அதன் சக்தி பெரிதும் பலிக்கவில்லை. மனித வாழ்வுக்கு இன்றியமையாத பொருட் செல்வத்தின் இறைவியாகத் திருமகளையும் கல்விச் செல்வத்தின் தலைவியாகக் கலைமகளையும் தேக—மனோ பலங்களின் அதி தேவதையாக மலைமகளையும் ஏத்திப் போற்றி வழிபடும் ஞானநாடு, நமது பாரதநாடு. மாதவர் நோன்பிலும் மடவார் கற்பிலும் சிறந்து விளங்கிய அருள்நாடு, நமது நாடு. அன்பு நெறியை வளர்க்க ஆண்டவனால் படைக்கப்பட்ட பெண்மணிகளை சிற்றின்பக் கருவிகளாகவும் குற்றேவல் செய்தற்கு உரிய அடிமைகளாகவும் கருதாமல், மனையை விளக்கவந்த மணிவிளக்குகளாகவும் வாழ்க்கையைச் சிறப்பிக்கவந்த தெய்வங்களாகவும் கொண்டு பெரிதும் சிறப்பித்த தருமநாடு, நமது நாடு.

பாரததேவியின் திருவடி நிலையிலிருக்கும் அரும் பேறுபெற்ற செந்தமிழ்நாடு, பெண் தெய்வங்களின் சிறப்பைப் பெரிதும் உணர்ந்து மதித்துப் போற்றிய சீரியநாடு. அன்பிலும் அறிவிலும் அழகிலும் கருணையிலும் பொறுமையிலும் வீரத்திலும் ஞானத்திலும் பெரிதும் சிறந்திருந்த பெண் தெய்வங்கள் மலிந்திருந்த நாடு, நமது செந்தமிழ் நாடு. இல்லறமாகிய சிற்றரசுக்குத் தலைமை வகிக்கத் தகுதியுடையவள் இல்லறத் தலைவியாகிய பத்தினியே என்பதை இனிது உணர்த்த, அவளுக்கு 'மனைவி' என்ற தனிப்பெருஞ் சிறப்புப் பெயரை அளித்துச் சிறப்பித்த நாடு, நமது தென்றமிழ் நாடு. இல்லத்திற்கு என்றுங் குன்றாத ஒளி அளிக்க வல்லவள் குடும்பத் தலைவியே என்பதைக் குறிப்பிக்க, அவளுக்கு 'இல்லாள்' என்ற சிறப்புப் பெயரை அளித்துப் போற்றிய நாடு, நமது தண்டமிழ்நாடு. உயிரோடு உயிர் கலந்த உயரிய காதலின் உன்னதத் தத்துவங்களை இனிது விளக்கிய பாவலர் வாழ்ந்த நாடு, நமது பைந்தமிழ் நாடு. கொடிய சோதனைகளுக்கு உட்பட நேர்ந்தாலும் மனஉறுதி நிலை சிறிதும் குலையாமல், கொண்ட கணவனுடன் வாழும் வாழ்க்கை ஒன்றையே சொர்க்க வாழ்க்கையாக மதித்து மகிழ்ந்திருந்த மங்கையர்கள் மலிந்திருந்த நாடு, நமது வண்டமிழ்நாடு.

முற்காலத் தமிழ்நாட்டிலே வாழ்ந்திருந்த குலமங்கையர் யாவரும் பதி-பக்தியில் பெரிதும் சிறந்து விளங்கினர். ஒருவருக்கு மாலையிட்டு வாழ்க்கைப்பட்டு விட்டபின்னர், அவரது இன்ப—துன்பங்களில் சம பங்கைப் பகிர்ந்துகொண்டு அனுபவித்து வந்தனர் அக் குலமங்கையர். பிறந்த அகத்தைத் துறந்து தன்னை மணந்த கணவரின் அகத்திற் புகுந்துவிட்ட பின்னர், அக் குலமங்கையர் தமது பிறந்த அகத்தைப்பற்றிய நினைவை முற்றிலும் மறந்து விடலாயினர். எவ்வளவு குறைகளும் இடர்களும் நிறைந்திருப்பினும், புக்கக வாழ்வே அம் மங்கையர்க்குச் சொர்க்க வாழ்வாகத் தோன்றியது. புக்கக வாழ்வில் புகுந்து தமது கணவரின் வாழ்க்கையில் நேரும் இன்ப—துன்பங்களைச் சரி—சமமாகப் பகிர்ந்துகொண்டு அனுபவிக்கத் தொடங்கி விட்டபின்னர்,—என்றும்—எந்நிலையிலும்—எப்பொழுதும் தமது கணவருடன் வாழும் வாழ்வே அவர்களுக்கு ஒப்பற்ற ஆனந்த வாழ்வாகத் தோன்றியது. செருக்கும் பொருட்பித்தும் புகழ்ப்பித்தும் அவர்களிடம் சிறிது மின்மையால், தெய்விகத்தன்மை பொருந்திய தூய மெய்யன்பு ஒன்றே அவர்களது வாழ்க்கையை ஆனந்தமயமாக்கச் செய்யப் போதியதா யிருந்தது.

பிறந்த அகம் செல்வத்திற் சிறந்திருந்து, புகுந்த அகம் வறுமையில் மிகுந்திருப்பினும் செந்தமிழ்க் குலமங்கையர் புக்கக வாழ்வையே சொர்க்க வாழ்வினும் உயர்ந்த வாழ்வாக மதித்து மகிழ்ந்து இல்லறம் நடத்தி வந்தனர். புக்ககத்தின் எளிமையை எவரேனும் எடுத்துரைத்துப் பரிகசிப்பினும், அக் கணத்திலேயே அவர்களை எதிர்த்துப் பேசி என்றென்றும் தமக்கு மன—மகிழ்ச்சி அளிக்கக்கூடிய இடம் புக்ககமே யென்பதை வலியுறுத்திப் பேசுவதில் அந்த குலமங்கையர் என்றும் பின்னடைவதில்லை. செந்தமிழ்க் காவியமொன்றில், தலைவியின் கூற்றாக அமைந்துள்ள பின்வரும் சீரிய பாடலைக் கவனியுங்கள்.—

"இரா மழைபெய்த ஈரவீரத்துள்
பனை நுகங்கொண்டு யானை வர்பூட்டி
வெள்ளி விதைத்துப் பொன்னே விளையினும்,
வேண்டேன் பிறந்தகத்(து) ஈண்டிய வாழ்வே;
செங்கேழ் வரகுப் பசுங்கதிர் கொய்து
கன்று காத்துக் குன்றில் உணக்கி
ஊடு பதர்போக்கி முன் உதவினோர்க்(கு) உதவிக்
காடு கழி இந்தனம் பாடு பார்த்தெடுத்துக்
குப்பைக் கீரை உப்பின்று வெந்ததை,
இரவற்றூலம் பரிவுடன் வாங்கிச்
சோறது கொண்டு பீறல் அடைத்தே
ஒன்று விட்டொருநாள் தின்று கிடப்பினும்,
நன்றே, தோழி! நங் கணவன் வாழ்வே."

செல்வம் மிகுந்ததொரு குடியிற் பிறந்து வறுமை மிகுந்ததொரு குடும்பத்தில் வாழ்க்கைப்பட்டிருந்த ஒரு பெண்மணியிடம், அவளது பழந்தோழிக

ளுள் ஒருத்தி வந்து அவளது புக்கக வாழ்வில் பெரிதும் அநுதாபம் காட்டிப் பேசத் தொடங்கினள். அதைக் கேட்ட அத் தலைவி, அத் தோழியை நோக்கிப் பின்வருமாறு கூறலாயினள்.—

"நன்று, நன்று தோழி; நீ என்னிடம் கூறத் துணிந்தது வெகு நன்று! பருவ மழை பொழிந்து போதிய ஈரம் கொண்ட சிறந்த நிலத்திலே, நீண்ட பனைமரத்தினுல் ஆக்கிய நுகத்தடியினுல் பெரிய யானைகளையே பிணைத்துப் பூட்டிய ஏரைக்கொண்டு ஓட்டி ஆழ உழுது, வெள்ளி விதைகளை விதைத்துப் பயிராக்கிப் பொன்மணிகளாக அறுத்துக் குவிக்கக் கூடிய பெருஞ் செல்வமுடையதாகவே இருந்தாலும், அத்தகைய பிறந்த அகத்தில் மீண்டும் புகுந்து வாழும் வாழ்க்கையை நான் சிறிதளவும் விரும்பவில்லை. எனது வாழ்க்கைத் துணைவருக்குச் சொந்தமில்லாத பொருட் செல்வத்தில், எனக்கென்ன சம்பந்தம்? என்று எனது கணவர் எனக்கு மாலையிட்டு என்னைத் தமக்கே உரிமைப் படுத்திக்கொண்டு தம்முடன் கூட்டிக்கொண்டு வந்து விட்டாரோ, அன்று முதலே பிறந்த அகத்துடன் எனக்கிருந்த சம்பந்தம் முற்றிலும் நீங்கிவிட்டதல்லவா?

எனது கணவர், தமக்கு உரிமையான நிலத்தில் பயிரிட்டுப் பாதுகாத்து வளர்த்துவந்த பசுமை பொருந்திய அழகிய கேழ்வரகுக் கதிர்களைக் கொய்து கொண்டுவந்து, கன்றுக்குட்டிகள் தின்றுவிடாமல் காவல் காத்து, கற்பாறையிலே அடித்து உதிர்த்து உலர்த்திப் பதர் போகத் தூற்றிச் சுத்தப்படுத்திக் கொண்டுவந்த தானியத்திலே, வயலிற் காவலிருந்தோர்—நீர் பாய்ச்சினோர்—அறுவடை செய்வோர்—கதிர்களை உதிர்த்து உலர்த்தினோர்—ஏனைய வழிகளில் உதவி புரிந்தோர் முதலியவர்களுக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்து மிகுந்திருந்ததை வைத்துக்கொண்டு, காட்டில் உலர்ந்து, கிடந்த விறகுகளைக் கொண்டுவந்து அடுப்பு மூட்டிக் காய்ச்சிய கேழ்வரகுக் கஞ்சியையும் உப்புகூடப் போடாமல் வேக வைத்துக்கொண்டு, அவற்றைக்கூட தினந்தோறும் உண்பதற்கின்றி ஒன்று விட்டொருநாளில் தின்று காலங் கழிக்கவேண்டிய அவ்வளவு எளிய வாழ்வாயிருந்தாலும், எனது கணவனின் வாழ்வே எனக்கும் மன அமைதியையும் மட்டற்ற மகிழ்ச்சியையும் அளிக்கக்கூடிய சீரிய வாழ்வாகும். அவ் வெளிய வாழ்வே எனக்கு அமரர் வாழ்வினும் சிறந்த இன்ப வாழ்வாகத் தோன்றுகிறது. "செல்வமென்பது, சிந்தையின் நிறைவே"—என்பதை நீ உணராயோ? எனது கணவரின் எளிய வாழ்வே எனக்குப் போதிய திருப்தியையும் மகிழ்ச்சியையும் அளித்திருக்கும்போது, மற்ற வாழ்வுகளைப்பற்றிய ஆசை என் மனத்தில் நுழைவதற்கு இடமெங்கே? என் கணவரின் மனத்திற்கு அமைதியையும் மகிழ்ச்சியையும் அளிக்கக்கூடிய வாழ்வு எதுவோ, அவ்வாழ்வே என் மனத்திற்கும் அமைதியையும் மகிழ்ச்சியையும் அளிக்க வல்லதென்பதை, இன்னும் நீ உணர்ந்து கொள்ளவில்லையா என்ன?"

—இவ்வாறு புக்கக வாழ்வு எவ்வளவு எளிய வாழ்வாக இருப்பினும், அவ் வாழ்வையே தமது மனத்திற்கு அமைதியையும் ஆனந்தத்தையும் அளிக்கவல்ல சீரிய வாழ்வாக மதித்துப் போற்றியிருந்த மங்கையர் மிகுந்திருந்த இச் செந்தமிழ்நாட்டின் இன்றைய நிலை என்ன? சொல்லவும் வெட்கம்; சொல்லாதிருக்கவும் முடியவில்லை! இன்றைய செந்தமிழ் நாட்டிலே, புக்ககத்தில் வாழும் பெண்மணிகளில் தமது தாய்வீட்டுச் சிறப்பை உயர்த்தி

யும் கணவன் வீட்டைத் தாழ்த்தியும் பேசாத பெண்களாக நூற்றில் ஐவரைக் காண்பதும் அருமையா யிருக்கிறது. திருமணமாகிப் பல வருடங்களுக்குப் பின்னரும், தமது வாழ்வின் பெரும் பகுதியையும் தாய் வீட்டிலேயே கழித்த பெண்மணிகள் பலர் உளர். சிறு சிறு குடும்பச் சண்டைகள் நேர்ந்தபோதும், 'இதோ என் தாய் வீட்டுக்குப் போய்விடுகிறேன்'—என்று கணவனைப் பயமுறுத்தும் பெண்மணிகள், இன்றைய தமிழ்நாட்டில் ஆயிரக்கணக்கில் மலிந்துளர். எனது நெருங்கிய உறவினர் ஒருவர், ஒரு மங்கையைத் தனது 'சக—தர்மிணி'யாகக் கொண்டு பதினைந்து வருடங்களுக்கு மேலாகின்றன; ஆயினும், அம் மங்கை, அப் பதினைந்து வருடங்களிலே, தனது கணவன் வீட்டில் தங்கி யிருந்து 'புக்கக வாழ்வு' நடத்திய காலம் முழுவதையும் ஒன்ருகச் சேர்த்துக் கணக்கிட்டால், மொத்தத்தில் மூன்று வருஷங்கள் கூடத் தேருது. இரண்டு மூன்று வருஷங்களுக்கு ஒருமுறை 'புக்கக'த்திற்கு வரும் அம் மங்கை, இரண்டொரு மாதங்கள் தங்கி யிருந்து விட்டு மீண்டும் தனது தாய்வீட்டுக்குப் போய்விடுவாள். அதன் காரணமென்ன? நகர்ப்புறத்து நாகரிக வாழ்க்கையிலேயே மோகம் மிகுந்த அவளுக்கு, தனது கணவனது கிராமவாழ்வு 'உற்சாகமற்ற—தற்கால நவநாகரிக வாழ்வுக்குத் தகுதியற்ற—பட்டிக்காட்டு வாழ்வா'கத் தோன்றியதே யாகும். நமது பழந்தமிழர்கள், ஒத்த மனமும் ஒத்த அழகும் ஒத்த குணமும் உடையவர்களையே சதி–பதிகளாகச் செய்விக்க வேண்டுமென்ற சிறந்த கொள்கையைக் கடைப்பிடித்திருந்தனர். உறவு முறைபற்றியோ செல்வத்தை முன்னிட்டோ வேறு காரணங்களினுலோ ஒருவரோடொருவர் பொருந்தாத உள்ளமுடைய இருவரை சதி—பதிகளாக்குவதைவிட, கொடிய செயல் வேறு எதுவுமில்லை. அதன் பயனுக, அச் சதி-பதிகளின் இல்லறவாழ்வு மிக விரைவில் சலித்துப்போய்—காதற் பந்தமும் தளர்ந்துபோய்—மனமும் மாறுபட்டுப் போய் பலவகைப்பட்ட துன்பங்களுக்கு உள்ளாகின்றனர். இந்நிலைமை சீர்திருந்தினுலொழிய, தற்காலத் தமிழ்நாட்டிலுள்ள குடும்பங்கள் பலவற்றின் கேவல நிலைமை மாறப் போவதில்லை.

செந்தமிழ் நாட்டில் பிறந்து வளரும் பேறு பெற்ற பெண் தெய்வங்களே! இல்லற வாழ்வில் ஈடுபட்டிருக்கும் சகோதரிகளே! குடும்ப அரசில் தனி முடி கவித்து அரசாளும் பெண்மணிகளே! அருள் நெறியை வளர்ப்பதற்காகவே ஆண்டவனுல் படைக்கப்பட்ட தாய்மாரே! உங்களது தெய்வங்களைச் சிறிது சிந்தித்துப் பாருங்கள். திருமகள் தனது தலைவரின் திருமார்பையே தான் குடியிருக்கும் கோயிலாகக் கொண்டிருக்கிருள். கலைமகளோ தனது கணவனின் நாவிலேயே இடைவிடாமல் வசித்துக் கொண்டிருக்கிருள். மலைமகளோ, தனது மணவாளரின் உடலிலேயெ ஒரு பாதியைத் தனக்கு உரிமைப்படுத்திக் கொண்டுவிட்டாள். தனது நாயகன் அரசிழந்ததற்கேனும வனம் புகத் துணிந்ததற்கேனும் வருந்தாமல், "நீ வருந்தாதிரு; நான் சென்று வருகிறேன்"—என்று இராமபிரான் கூறிய கொடுஞ் சொல்லைக் கேட்டுப் பெரிதும் துடிதுடித்துக் கண்ணீர் சொரிந்து கலங்கி நின்ற சீதாதேவி சிறந்து விளங்கிய நாடு நமது நாடு. தன்னிடம் விடை கேட்ட கணவனை நோக்கி, "செல்லாமை உண்டேல் எனக்(கு) உரை; மற்று, நின்–வல் வரவு வாழ்வார்க்(கு) உரை"—என்று பதிலிறுத்

ஒற்றை அங்க நாடகம்

# மாதவி

(டி. வி. ராமமூர்த்தி.)

[இந்த ஒற்றை அங்கநாடகம் தமிழ்நாட்டின் சரித்திரக் கதை ஒன்றை தழுவியது. நன்னன் ஒரு சிற்றரசன். அவன் கங்க நாட்டின்மேல் படை எடுத்துச்சென்று அந்நாட்டின் இளவரசனை பிணையாகக்கொண்டு செல்லுகின்றான். காங்கேயனின் அழகும் குணமும் நன்னனைத் திகைப்புறச் செய்கின்றது. எனவே நன்னன் காங்கேயனை ராஜ மரியாதையுடன் நடத்துகின்றான். நன்னனின் ஒரே மகள் மாதவி காங்கேயனைக் காதலிக்கின்றாள். காங்கேயனும் மாதவியைக்கண்டு காதல் கொள்ளுகின்றான். பிறகு இக் கதை ஆரம்பமாகின்றது.]

மாதவி:-"காதல் என்னும் இது என்ன? மனதைத் துடிக்கச் செய்கின்றது; உடலை உருக்குகின்றது."

சித்திரலேகா:—"மாதவி! உடலை உருக்குவது என்னமோ வாஸ்தவம் தான்! ஆனால் பதறாத காரியம் சிதறாது என்பதைக் கவனித்து அதிகமாய் உடம்பை அலட்டிக் கொள்ளாதே."

மா:—"சித்திரலேகா! தென்றல் உடலை எரிக்கின்றதே. இதற்கு என்ன செய்யலாம்?"

சித்:—"மாதவி! இதோ இந்த தாமரை புஷ்பம் எவ்வளவு அழகாக இருக்கின்றது; கவனித்தாயா?"

மா:—"சித்திரலேகா! ஏன் என்னை வதைக்கின்றாய்! அது என் கைக்கு நெருப்புபோல் எரிகின்றது."

---

துப் பிணங்கி நின்ற மங்கை விளங்கிய செந்தமிழ்நாடு நமது நாடு. அவர்கள் பிறந்த நாட்டில் பிறந்து வளரும் பேறுபெற்ற நீங்கள், கணவரின் பிரிவினால் விளையக்கூடிய பெருந்துயரின் கொடுமையை உணராதவர்களா என்ன? கணவர் உறைவிடம் எத்தகையதாக இருப்பினும், அவ் விடத்தையே 'சொர்க்க'மாகப் பாவித்து மகிழ்ந்திருக்க வேண்டுவது உங்கள் கடமை யல்லவா? 'சிந்தையின் நிறைவே செல்வம்' என்பதையும் 'தலைமகட்குத் தெய்வம் கொழுநனே' என்பதையும் மறவாதிருக்கும் வரையில், புக்கக வாழ்வு எத்தகைய வாழ்வாக இருப்பினும் அவ்வாழ்விலேயே பூரண திருப்தி கொண்டு, ஏனைய எல்லாக்கவலைகளையும் மறந்து மகிழ்ச்சி நிறைந்த மனத்துடன் வாழவேண்டுவது உங்கள் கடமை யென்பதைப்பற்றி, இன்னும் விரித்துரைக்க வேண்டுமா என்ன?

சித்:—"ஏனம்மா! வஸந்தா உன் பிரிய சேடி ஆயிற்றே! அவளை அழைக்கட்டுமா?"

மாத:—"ஏண்டி! உன்னைப்போல் ஒத்த சேடியரின் கூட்டம் எனக்கு வேப்பங்காய் தின்கின்றது போலிருக்கின்றது. தனிமைதான் வேண்டும்."

சித்:—"சரி. நானும் சென்று விடட்டுமா?"

மா:—"தனிமையும் எனக்கு பிடிக்கவில்லை. தனிமையில் மனதை மனதே தின்கின்றது!"

சித்:—"பின்னர் உனக்கு என்னதான் வேண்டும்; வாய்விட்டு சொல்லேன்! காங்கேயனைத் தந்திரமாம் அழைத்து வருவதா?"

மா:—"என்ன! உனக்கும் கேலியாய் விட்டது. என் கண்ணிமை மூடவே மாட்டேன் என்கின்றதே!"

சித்—:"அதுதான் உன்னைக் காங்கேயனுக்குக் கொடுப்பதாய்த் தீர்மானமாய் விட்டதே! அப்புறமும் ஏனம்மா உனக்கு கவலை பிடுங்கி தின்கின்றது என்று வேஷம் போடுகிறாய்!

மாதவி:—"இது உண்மையாய் இருக்குமா? காங்கேயனுடைய வன்மை பொருந்திய தோளை அடையும் பாக்கியம் எனக்கு இந்த ஜென்மத்தில் கிட்டுமா? அவருடைய சௌரியத்தையும் உருவத்தையும் நினைக்கும் பொழுது என் மனதில் உள்ள காதல் புயல் காற்றுபோலாய் விடுகின்றது."

சித்:—"புயல்காற்று எதிரில் இருக்கும் எல்லாவற்றையும் மோதி வீழ்த்துவதுபோல் உன் காதலுக்கு முன்னால் எல்லாம் பொடிப் பொடியாய் பஸ்மீகரமாகி விடவேண்டும் என்பதுதான் உன் கருத்தா?"

மாத:—"அது கிடக்கட்டும்—காங்கேயன் என்னை மனதார காதலிப்பது வாஸ்தவம்தானா?"

சித்:—"அது கூட இன்னும் சந்தேகமாய் இருக்கின்றதா! அவன் காதலிக்காவிடில், பூவாணி நீலமாலை மூலமாக அவர் ஏன் அந்த மலர் மாலையை அனுப்புகின்றார்!"

மாத:-"என் மனம் படும்பாடுதான் என்ன! ஆண்சிங்கம் போன்ற என் சிங்கமைந்தன் கையில் துவண்ட புஷ்பங்களா இவை! ஹா! என்ன மகிழ்ச்சி! (அவைகளைத் தன் மார்பில் அணைத்துக் கொள்ளுகின்றாள்.)

(அதற்குள் யாரோ வரும் சந்தடி கேட்டு இருவரும் ஒரு புறமாய் ஒதுங்குகின்றார்கள்.)

(நந்தவனத்தில் தனியாக உலாவி வரும் காங்கேயன் தனக்குள் பேசிக் கொள்கின்றான்.)

காங்:—"எத்தனை நாள் நான் இம்மாதிரி காலம் தள்ளுவது? எனக்கு விடுதலையே கிடையாதா? அரசன் என்னை அன்புடன் நடத்துவது உண்மைதான்! ஆனால் நான் யார்? நான் ஒரு பிணை—கைதி—என்பதும் உண்மை

அல்லவா? இந்த பிணை என்னும் கொடிய வழக்கத்தை எவன் முன்னுல் கைகொண்டானே அவன் மனித சமூகத்திற்கே ஒரு விரோதியாய்த்தா னிருக்கவேண்டும்! அவனைச் சித்திரவதை செய்தாலும் தகும்! இந்த மானம் கெட்ட பிழைப்பைவிட ஒரு அடியாய் தொலைந்தாலும் பாதகமில் லையே! நான் பாவி! துரதிர்ஷ்டசாலி!..........."

(மறைவிலிருந்து சித்திரலேகா வெளிப்பட்டு) சித்:—"ராஜ குமாரா; என்னமோ அபார சிந்தனையில் மூழ்கி யிருக்கின்றீர்களே! அதை எனக்கு தெரிவிக்கக் கூடாதா?"

(காங்கேயன் திகைப்புற்று மௌனமாய் இருக்கிறுன்) (மறுபடியும் விடாமல்) சித்திரலேகா:—"ராஜேந்திரா! உங்களுடைய வருகையால் எத் தனை பேருக்கு மகிழ்ச்சி யூட்டுகின்றீர்! உங்களைப் பிரிந்தும் அவர்கள் வாழ் வார்களா? அம்பு எய்வதிலும் வாள் எரிவதிலும் ஈட்டியால் குத்துவதி லும் உங்களுக்கு யார் நிகர்?"

காங்:—"ஏனம்மா என்னை வீணே புகழுகின்றுய்! நாட்டை விட்டு அகற்றி பிணையாகக் கொண்டுவரும் வழக்கத்தை முதலில் அனுஷ்டானத் திற்கு கொண்டு வந்தானே—பாவி—பாலைவனம்போல் உலர்ந்து போயிருக் கும் அவன் நெஞ்சில் ஈரமே இருந்திராது!"

சித்:—"ஏ குமாரா! மகாராஜா உங்களிடம் அன்பா யில்லையா! தன் மகன் போலும் உங்களை நடத்தவில்லையா!"

காங்:—"அது உண்மைதான்! ஆனுல் நான் ஒரு பிணை என்பதை மறந்து பேசுகின்றுயே! இந்த எல்லையை நான் சுயேச்சையாய் கடக்க முடி யாதே!"

சித்:—"உமக்கு இந்நாட்டில் மகிழ்ச்சி தரும் வஸ்து ஒன்றுமே இல் லையா?"

காங்:—"கொடுஞ்சுரம் போல் உலர்ந்திருக்கும் என் நெஞ்சத்தி னிடையே மாதவியின் நினைவு ஒன்றுதான் தனி அருவிதந்த தண் மலர்ச் சோலையா யிருக்கின்றது!"

சித்:—"ஹா துர்ப்பாக்கிய ராஜனே! அவள் வேறு ஒருவனைக் காதலிக் கின்றுள் என்பதை அறியாது பிதற்றுகின்றுயே!"

காங்கேயன் (திகைத்து) "அவள் அடைவதற்கரிய ஆரணங்கு என்பதில் கிஞ்சிற்றும் சந்தேகமில்லை! ஆனுல்—நான் வஞ்சிக்கப் பட்டேனு! தன் கரு விழிகளால் என்னை அவள் மயக்க முறச் செய்தது பாசாங்குதானு? என் மலர்மாலையை அவள் புன் சிரிப்புடன் ஏற்றதின் கருத்து என்ன?"

சித்:—"மன்னன் மைந்தா! நான் சொல்வதில் உனக்கு சந்தேகமா யிருக்கின்றதா? அதோ அந்தப் புனத்தில் மாதவியுடன் உல்லாசமாக உரையாடும் அந்த யௌவன குமாரன் யார் என்று கவனிக்கலாம் வா!"

காங்கேயன் (இருண்ட முகத்துடன் வாளை உருவிக்கொண்டு):—"என் மாதவியை—எனக்குச் சொந்தமான என் ஆருயிர்க் காதலியை—நினைக்கத்

துணிந்த கள்வனைத் துண்டித்துப் போடுகின்றேன் வா ! சித்திரலேகா ! அவன் இருக்கு மிடத்தைக் காண்பி !''

மாதவி:—(புன்சிரிப்பும் நாணமும் கலக்க திடீரென்று வெளிப்பட்டு):

''கங்க புத்திரரே ! வரவேண்டும் நமஸ்கரிக்கின்றேன் !'' (காங்கேயன் நாற்புறமும் நோக்குகின்றான்.)

சித்திரலேகா:—''மன்னனே ! நின் அன்பை சோதித்த என்னை மன்னிப்பாய் ! மாதவி நின்னைத்தான் நினைத்து வாடுகின்றாள் !''

காங்கேயன்:–(பிரமிப்புடன்) நன்னன் பெற்ற செல்வமே ! உன் காதலைப்பெற்ற என் பாக்கியமே பாக்கியம் !''

மாதவி:—''தங்களுடைய காதலைப்பெற்ற எனக்கு யார் இணை?''

காங்:—''மாதவி ! நான் உன் தந்தையின் பிணை என்பதை நீ அறியாயா ! உன் தந்தை இவ் விவாகத்திற்குத் தன் சம்மதி அளிப்பாரா ?''

ராஜன் (செடி மறைவிலிருந்து வெளிப்பட்டு):–''அவள் பிதாவிற்கு தன் மகளின் விருப்பத்தை ஈடேற்றுவதை விட வேறு சிறந்த பணி ஒன்றுமில்லை !''

காங்கேயன் (திடுக்கிட்டு):– ''ராஜனே ! மன்னிக்கவேண்டும்.''

ராஜன்:—''காங்கேயா ! மன்னிப்பதற்கு என்ன இருக்கிறது ! உங்கள் இருவர் மனமும் ஒன்றை ஒன்று ஆகர்ஷித்ததைக் கண்டு களிக்கின்றேன் ! தனியே புறப்பட்ட நீ எங்கு செல்கின்றாய் என்பதை அறிய உன்னை பின் தொடர்ந்தேன் ! நீ தனியாய் நின்று ஆற்றியதைச் செவியுற்றேன் ! உன் மனம் விடுதலையை நாடி நின்றது கண்டு களித்தேன் ! உன்னைப் பிணையாகக் கொண்டு வந்ததைப்பற்றி வருத்தப்பட்டாயே ! அதற்குப் பரிகாரமாக என் மகளை ஏற்றுக்கொள் ?''

காங்:—''எனக்கும் இத்தகைய பாக்கியமா !''

ராஜன்:—''இன்னுமா சந்தேகம் ! மாதவி ! என் செல்வமே ! ஏன் ஒடி ஒளிகின்றாய் ! என் அருகில் வா !''

மாதவி:—(கூச்சத்துடன்) ''அப்பா ! அரண்மனைக்குப் போகலாமா ?''

ராஜன் (சிரித்துக்கொண்டு) ''அதற்குள் அவசரமா? சோதிடர்களை அழைத்து நல்லநாள் குறிப்பிடவா அரண்மனை செல்ல விருப்பம் கொண்டனை !''

மாதவி:–(காங்கேயனைக் கடைக்கண்ணால் நோக்கிய வண்ணம்) ''போ! அப்பா !'' (எல்லோரும் அரண்மனைக்குப் போகின்றார்கள்.)

---

# இந்தியப் பெண்ணின் கடமை

S. M. மயூரம்.

நான் பூர்வபுண்ணியம் செய்தவனாதலால் குணத்திலும் அழகிலும் சிறந்த மனைவியைக் கடவுள் அருளினார். அப்படியிருந்தும், அவளை வைத்துக்கொண்டு இல்லற தருமத்தைச் செவ்வனே நடத்த முடியாமையினால் ஊராரின் பழிப்புக்கு ஆளானேன். அந்த ஊராரெல்லாம் இப்பொழுது எனது முன்னிலையில் இருப்பார்களேயானால் "என் தங்கை சீதாவே அவற்றிற்கெல்லாம் காரணம்" எனச் சத்தியம்செய்து கொடுத்திருப்பேன். எனது துரதிஷ்டம்; அவர்களெல்லாம் தங்கள் தங்கள் வீடுகளில் இருக்கின்றனர்.

நாங்கள் பணக்காரக் குடும்பத்தினர். ஆகவே நான் பலவித மோதிரங்கள் சங்கிலிகள் முதலியவற்றை அணிந்துகொண்டு அடிக்கடி பட்டணத்திற்கு வந்து போவதுண்டு. ஒருமுறை அம்மாதிரி பட்டணத்தில் நான் இருக்கும் பொழுது கமலாவின் தந்தை என்னைப்பார்த்துவிட்டு மருமகனாகக் கொள்ள நினைத்தார்போ லிருக்கிறது. அவர் வீட்டிற்கு நான் கமலாவைப் பார்க்கப் போனது இன்னும் ஞாபகமிருக்கிறது.

எங்களிருவருக்கும் கலியாணம் நடந்தபொழுது எனக்கு வயது இருபத்திரண்டு; கமலாவுக்குப் பதினெட்டு. கமலா எங்கள் வீட்டிற்கு வந்த நாள்முதல் துன்பமே ஒழிய இன்பம் அனுபவித்தது கிடையாது. எல்லாம் என் தங்கை சீதாவால் ஏற்பட்டவை தான்.

சீதா சிறிது நேரமும் கமலாவைச் சும்மாவிருக்க விடமாட்டாள். 'அதைச் செய்', 'இதைச் செய்' என்று அவள் பிராணனை வாங்கிவிடுவாள். சமையல் வேலைமுதல் சகல வேலைகளும் கமலாவே செய்துவந்தாள். அந்நாட்களில் என் தங்கையின் ஹிதோபதேசத்தால் நானும் கமலாவிற்கு அனேக துன்பங்களைச் செய்துவந்தேன். முற்றாகக்கூறின் நான், அவளை ஒரு அடிமையைப் போலவே நடத்திவந்தேன் என்று சொல்லுதல் மிகையாகாது. ஆயினும் தன்னுடைய கஷ்டத்தைப்பற்றிக் கமலா என்னிடம் ஒருவார்த்தை கூடச் சொல்லியதில்லை. வர வர, அவள் வாடி வதங்கி ஓர் மெல்லிய துரும்புபோ லாய்விட்டாள்.

நாட்கள் பல கழிந்தன. இரண்டு வருடங்களாக சீதாவும் நானும் கமலாவைப் படுத்தியபாடுகள் கொஞ்ச நஞ்சமல்ல. ஒருநாள் நான் காலைச் சாப்பாடு சாப்பிட்டுவிட்டு ஈஸிச்சேரில் சாய்ந்த வண்ணம் ஒரு புதினப் பத்திரிகையை வாசித்துக்கொண் டிருந்தேன். திடீரென ஒரு பியூன் வந்து ஒரு துண்டுப் பத்திரத்தைத் தந்தான். அதை நான் வாங்கி வாசித்ததில் "மனைவியைச் சரியாக நடத்துவதில்லை" யென்ற குற்றம் சாட்டப்பட்டு கோர்ட்டுக்கு மறுநாளே ஆஜராக வேண்டுமென்றிருந்தது. உடனே நான்

இது கமலா செய்த வேலைதான் என யோசித்துக் கொண்டு அவளுக்குச் செய்யவேண்டிய துன்பமெல்லாவற்றையும் அன்றைக்கே செய்து முடித்தேன்.

ஆனல் அன்று மாலை பக்கத்து வீட்டுக்காரன் தன் மனைவியோடு பேசியதைக் கேட்ட பின்புதான் இக்கேஸ் அண்டைவீட்டுக்காரன் கடிதத்திலிருந்து இங்கு நடக்கும் சமாசாரங்களையறிந்த கமலாவின் தகப்பனால் துவக்கப்பட்டது என்பதை அறிந்தேன்.

மறுநாள் நாங்கள் கோர்ட்டுக்குப் போனேம். என் மாமனர் கடிதத்தில் கண்ட சமாச்சாரங்களைக் கூறினர். எல்லோரும் என்னையும் சீதாவையும் சபித்தனர்.

நீதிபதி கமலாவை வரவழைத்தார்.

“அம்மா! உங்களுக்கு, உங்கள் கணவன் ஏதாவது துன்பம் செய்கிறாரா?”

கமலாவின் பதில் யாவரையும் திடுக்கிடச் செய்தது.

“ஐயா, என் புருஷனைப் போன்ற அன்பான புருஷன் இவ்வுலகத்திலேயே கிடையாது; நீங்கள் இதுவரை கேட்டுவந்தது வெறும் கட்டுக்கதையேயாகும்” என்றாள்.

நீதிபதி.—“சீதா என்னும் உங்கள் நாத்தனர் உங்களைத் துன்பப்படுத்துகிறாரா?”.

கமலா:—“நாங்களிருவரும் சகோதரிகளைப்போல இருக்கிறேம். என் கணவனுடைய வீட்டில் சகல காரியமும் என்னுடைய எண்ணப்படியே நடக்கின்றன.”

“கேஸை டிஸ்மிஸ் பண்ணிவிட்டேன்” என்றெழுந்தார் நீதிபதி. நாங்களும் பேசாது வீடு சென்றேம்.

அன்றிரவு கமலா தூங்கிக்கொண்டிருக்கும்பொழுது மெதுவாகச் சென்று எழுப்பினேன். அருகே மண்டி போட்டு நின்றுகொண்டு அவள் கையை முத்தமிட்டு, “கமலா, நீ சாதாரண பெண்ணல்ல! தெய்வீகம் பொருந்தியவள்! உனக்கென ஒரு கோயில் கட்டவேண்டும்” என்றேன். “அப்படியானல் என்னைக் கல்லாகப் போகச் சொல்கிறீர்களா” என்று கேட்டாள் அவள்.

“இல்லை, இல்லை; உன்னை என் இருதயமாகிய கோயிலில் வைத்துப் பூசிக்கிறேன்!—ஆனல் கொஞ்சம் விளக்கமாய் நடந்ததை நீ சொல்லமாட்டாயா” என்றேன்.

“நாதா! ஒன்றுமில்லை; நான் ஒரு மனைவியின் கடமையைத்தான் செய்தேன். பெண்கள் வாழ்க்கையே இம்மாதிரித்தான். அந்தக் காலத்தில் புருஷனுடன் மனைவியும் உடன்கட்டை யேறவில்லையா? புருஷனுடைய சௌகரியத்திற்காகச் சொந்தசுகங்களை நாங்கள் கவனிப்பதில்லை. இது

# தமிழ் நாடகக் கலை

(சி. கனகசுந்தரம்.)

அறுபத்து நான்கு கலைஞானங்களில் ஒன்றாகிய நாடகக்கலையானது பண்டு தமிழகத்தில் மிகவும் சிறப்புற்று உயர்நிலையடைந்து விளங்கியது. இது அக்காலத்திருந்த அரசர்களாலும் அறிஞர்களாலும் போற்றப்பட்டு வந்தது. இதன் காரணமாகவே அக்காலம் அரசாண்ட அரசர்கள் சபைகளில் கூத்தர், பாணர், விறலியர் ஆதியோர் போற்றப்பட்டு வந்தனர். நாடகக் கலையானது கி. மு. மூன்றும் நூற்றாண்டிற்கு முன்னரே உயர்நிலையுற்றிருந்தது. பின்னர் காலஞ் செல்லச் செல்ல வீழ்ச்சி நிலையுற்று வந்தது. இக் காலத்திலேயே பண்டைக்காலத்தில் வாழ்ந்த அறிஞர்கள் செய்த பரதம் அகத்தியம் முதலாம் நூற்களும் சாரகுமாரன் இயற்றிய இசை நுணுக்கமும், யாமளேந்திரர் செய்த இந்திரகாளியமும், அறிவனர் செய்த பஞ்சமரபும் ஆதிவாயிலார் செய்த பரத சேனபதீயமும் பாண்டியன் மதிவாணனர் இயற்றிய மதிவாணர் நாடகத் தமிழ் நூலும் இன்னோரன்ன பிற நூல்களும் அழிந்தொழிந்தன. இவைகளின் காலத்தின் பின் உண்டாகிய செவ்விய நாடக நூற்கள் மிகச் சிலவே. தற்காலத்தில் நாடகக்கலையானது அழிநிலையிலேயே இருக்கின்றது. இவ்வித நிலையிலிருக்கும் நாடகக்கலையானது பேசும் படங்களாலும், இந்தியாவிலும் இலங்கையிலும் சிறந்து விளங்கும் சில அறிஞர்கள் செய்த நாடக நூற்களாலும் ஒருவாறு புத்துயிர்பெற்று வருகின்றது.

இக்காலத்தில் ஆக்கப்படும் தமிழ்ப்பேசும் படங்களில் 90% படங்கள் தமிழ்ப்பாஷையைச் சித்திரவதை செய்வது போன்ற பாஷை நடைகளை உடையனவாயிருக்கின்றன. நூற்றுக்கணக்கான புத்தகங்களை வாசித்தபோதும் மனத்திற் பதியாத உண்மைகள் பல பேசும் படங்களைப் பார்த்த உடனேயே மனதிற் பதிவதைக் காணலாம். இத்தகைய வெற்றி

---

இந்தியப் பெண்ணின் கடமை. நான் வேறு விதமாக நடந்திருந்தால் என்னை ஒருபாரத புத்திரியாக உலகம் கருதாது'' என்றாள்.

''ஆனால் சீதா ?''

''இன்னும் சிலநாளில் அவளும் சரியாய் விடுவாள்.''

''மாதர்களே ! நீங்களே மனித வர்க்கத்தை முன்னேற்ற வந்தவர்கள். மனிதனைத் துன்பத்தினின்றும் விடுவிப்பவர்கள் நீங்களே'' என்றேன்.

எங்கள் வீடு இப்பொழுது முழுமையும் மாறிவிட்டது. கமலாதான் எல்லாவற்றையும் நடத்தும் தெய்வம்; நானும் சீதாவும் அவளை ஆர்வத்துடன் சதா தொழும் இரு பக்தர்கள் ஆனோம்.

வாய்ந்த பேசும் படங்களைச் செவ்விய முறையில் செவ்விய தமிழ் நடையில் அமைக்காமல் விடுவதால் ஏற்படும் கேடுகள் அளப்பில. பல தமிழ்ப்பேசும் படங்களில் சொற்கள் அறுத்துறுத்துப் பேசப்படாமலும் ரகர, றகர பேதங்கள் மலிந்த சொற்கள் பேசப்பட்டும் வருகின்றமை வெளிப்படை.

பேசும் படங்கள் மாத்திரமல்லாமல் தமிழ்த்தாயைச் சிறப்புறச் செய்ய வேண்டிய செய்தித் தாள்களுமே ரகர றகர பேதங்கள் நிறைந்த சொற்களை அடக்கியனவாகவும், பல கொடுந் தமிழ் மொழிகளை வாரியிறைத்தும் வருவது தமிழ் மக்கள் நாணித் தலை குனியக்கூடிய செய்தியாகவே இருக்கின்றது. இவைகள் இப்படி நிகழ்வது தமிழ்த்தாயின் துர்ப்பாக்கிய காலத்தினாலோ? அன்றேல் அறிஞர்களின் பராமுகத்தாலோ? யாமறியேம்.

தற்காலத்தில் தமிழ்நாடக நூற்கள் புதிதாக ஆக்கப்பட்டு வருகின்றமை மிகவரிது. வெளிப்படும் நூற்களும் முன்னர் ஆக்கப்பட்ட நூற்களில் எடுக்கும் பொறுக்கு மணிகளாகவே இருக்கின்றன. நல்ல நாடக நூற்களை எழுதி வெளிப்படுத்துவோரும் அவைகள் ஆதரிக்கப்படாமையால் பின்னரும் அத்தகைய முயற்சிகளில் ஈடுபடுகின்றிலர். இது விசனிக்கத் தக்க காரியமேயாகும். சில காலமாக வெளிவந்த நாடக நூற்களில் சிறந்தன சில இந்திய தேச அறிஞர்களாலும் ஈழத்தில் சிறந்துள்ள சில அறிஞர்களாலும் வெளிவந்துள்ளன.

சமீப காலத்தில் சில இளம் நூலாசிரியர்களும் நாடக நூற்கள் ஆக்க முன் வந்தமை போற்றத்தக்க செயலேயாகும்.

தமிழ்நாட்டில் நாடகக்கலை விருத்தியடைய வேண்டின் ஓர் நாடக சர்வ கலாசாலையை ஏற்படுத்தல்வேண்டும். நாடகக்கலை பயில விரும்புவோர் ஆங்குச்சென்று பயிலுதல் மிகவும் நல்லது. அக்கலாசாலை அறிஞர்களே பேசும் படங்களைத் தயாரிப்பதற்கு வேண்டிய சிறந்த நூல்களைத் தெரிவு செய்து அக்கதைகளைப் படம் பிடிப்பிக்கலாம்; அன்றியும் வெளிவருகின்ற சிறந்த நாடக நூற்களைத் தமிழ் உலகம் ஆதரித்து நூற்கள் ஆக்குபவர்களுக்கு உதவி செய்தல்வேண்டும். இவ்விதமான முறைகளைத் தமிழ்நாடு பெறுதற்கு அறிஞர்கள் விழித்து முயற்சிப்பார்களாக.



# இராமாயண காலத்திய நாகரிகம்

K. V. சிவசுப்பிரமணியன் B. A.

வடமொழிப் புலவராகிய வான்மீகியார் வரைந்த இராம காவியத்தில் காணப்படும் சில சொல்லாட்சிகளைக் கொண்டு அக்காலத்திய நாகரிகத்தை ஒருவாறு தொகுத்துக் கூறலாம்.

நடையும் உடையும்:—சரித்திரப் பேராசிரியர்களால் வரையறுக்கப்பட்டு மிகப் பழமையானதாகக் கருதப்படும் இதிகாச காலமாகிய இராமாயண காலத்தில் ஆடவரும் பெண்டிரும் தம்மை அழகு செய்து கொள்வதில் பெருங் கவனம் செலுத்தி வந்தார்கள். அக் காலத்தில் ஆடவர்கள் முடிவதற்குப் போதுமான கொஞ்சம் மயிரை மட்டும் விடுத்து தலையில் சுற்றிலுமுள்ள மயிரை க்ஷவரம் செய்து விடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். (இன்றும் இவ் வழக்கம் ஹிந்துக்களிடத்தி லிருந்து வருகிறது.) அங்ஙனம் விடப்பட்ட குடுமிக்கு "சிகை" எனப் பெயர். இராமபிரானது உருவத்தை தான் கண்டவாறு கூறப்புகுந்த மாயவரக்கனான மாரீசன் இராமனை "சிகையை யுடை இளங்குரிசில்" எனக் குறிப்பிடுகின்றான். இதனால், ஆரிய நாகரிகம் தலை சிறந்த இராமாயண காலத்திலேயே ஹிந்துக்களிடை குடுமி வைக்கும் கொள்கை வழக்கத்தி லிருந்து வந்ததெனத் தெரிகிறது. க்ஷத்திரிய இளைஞர்கள் காது மறையும்படி மயிரைப் பின்னவிட்டுத் தொங்கவிட் டிருந்தனர். அப் பின்னலுக்கு "காக பக்ஷம்" என்று பெயர். க்ஷத்திரிய குலச்சிறுவர்கள் மணப்பருவ முற்ற காலத்து, அவ்விதம் தொங்கும் மயிரை நீக்கிவிட்டு சிகை வைத்துக் கொள்வது வழக்கம். விசுவாமித்திரர் இராமனையும் இலக்குவனையும் அயோத்தியினின்றும் அழைத்துச் சென்றபோது, அவர்கள் பதினாறு வயது நிரம்பாப் பாலர்களாயிருந்தமையின், காதுகள் மறையுமாறு மயிர்ப் பின்னல் போட்டிருந்ததாகக் கூறப்பட்டுள்ளது. வசிட்டர், விசுவாமித்திரர் முதலிய பிராமண முனிவர்கள் முறுக்கி விடப்பட்ட சடையை யுடையவர்களாய் விளங்கினார்கள். விபீஷணனைப் போன்ற பிரம இராட்சசர்களும், வானரர்களும் இராம இலக்குவரைப் போலவே முடியுடையவர்களாய் இருந்திருக்க வேண்டும். இராமனுக்கு 16 வயதா யிருக்கும்போதே, நந்திக் கிராமத்தில் சுக்ரீவனுக்கும், விபீஷணனுக்கும் மயிர் வினைஞர்கள் வேலை செய்து வந்ததாகச் சொல்லப்படுகிறது. மஞ்சு தோய்ந்த மலை யசைத்த மன்னனாகிய இராவணன், சீதையைக் கவர்ந்து செல்ல பன்னசாலைக்கு வந்தபோது முடியுடையவனாகக் காணப்பட்டான். "அரக்கர் குலத்திற்கே பெரும் பகைவர்களான தசரத குமாரர்கள், இலங்கைக்கு வந்து இராவணனது சிகையைப் பிடித்து இழுத்துச் செல்லு முன்னரே, நமது மன்னரைக் காத்தருள்க" என விபீஷணன் போர்த் தொழில் மந்திரியை குறை யிரந்தான் என வால்மீகி

இராமாயணம் கூறுகின்றது. இயற்கையாய் வளர்ந்துள்ள தலைமயிரை ஓர் நன்னாள் குறிப்பிட்டு அந் நாளில் ஓர் விழாவாகக் கொண்டாடி மயிர் நீக்குவர். மயிர் கழிப்பதற்கு, எஃகினாலாகியதும் கூர்மையானதுமான கத்திகளே உபயோகிக்கப்பட்டு வந்தன. இராமராவண யுத்தத்தில் அரக்கர்கள் ஆடை அவிழ தலைமயிர் அவிழ்ந்து அல்லோல கல்லோலமாக ஆடும்படி வேகமாய் ஓடினார்கள் எனக் கூறப்படுதலின், அரக்கர்களும் க்ஷத்திரியர்களைப் போல சிகை வைத் திருந்தார்களெனத் தெரிகிறது.

பெண்டிர் தம்மை அலங்கரித்துக் கொள்ளும் முறை:—இராமாயண காலத்துப் பெண்டிர், தமது தலையிலுள்ள கூந்தலை நடு மத்தியில் இரண்டாக வகிர்ந்து தனித் தனியே சீப்பினால் சீவி சடையாக பின்னல் போட்டு தொங்க விடுவது வழக்கம். (மேல்நாட்டு நாகரிகத்தின் சேர்க்கையால் இக் காலத்துப் பெண்டிரில் ஒரு சிலர் "கோணல்" வகிடெடுத்துப் பின்னல் போடக் கற்றுக் கொண்டனரேனும், பெரும் பான்மையோர் இன்றும் நேர்வகி டெடுத்தே பின்னல் போட்டுக் கொள்கின்றனர்.) தலையின் பின்புறத்தில் நறு மணம் வீசும் நாண்மலர்களை அணிந்து கொள்வதுமுண்டு. கலீர் கலீரென ஒலிக்கும் நகைகளையும், மணம் வீசும் மலர் மாலைகளையும், தலையிலணிதற்குரிய பூச் செண்டுகளையும் மிகவும் விருப்பத்தோடு அணிந்து கொண்டனர். தங்கள் உடம்பில் சந்தனம், மஞ்சள் முதலியன பூசிக் கொள்வதும் கண்ணுக்கு மையிடுவதும், நெற்றியில் திலக மிடுதலும் பெண்டிர்க் குரிய பொழுது போக்கா யிருந்தன. அவர்கள் இக் காலத்துப் பெண்டிரைப் போலவே மருதாணிச் சாந்தினால் பாதங்களுக்கும், நகங்களுக்கும் செந்நிற மூட்டி அழகுபடுத்திக் கொள்வதுண்டு. பெண்கள், தங்கள் சேடியர்களைக் கொண்டு கன்னத்திலும், மார்பிலும் கிளி, மயில், கொடிகள் முதலிய உருவங்களை கலவைச் சாந்தினால் எழுதச் செய்வர். இத் தொழிலுக்கு "பத்ரலேகை" என்று பெயர். ஆடவரும் பெண்டிரும் அணிந்து கொண்டிருந்த நகைகளாவன:—(1) முத்தாரம் (Pearl necklace) (2) நூபுரம் (Anklt) (3) மேகலை (Waist belt) (4) குண்டலம் (5) கேயூரம் (Armlet) (6) அங்குலிகம் (Rings) (7) ஹாரம் (8) ஹேமசூத்ரம் (Gold string round neck) (9) திலகம் (10) ஹஸ்தாபரணம் (Bracelet) (11) வளையல் (Armlet) (12) சூடாமணி (13) நிஷ்கம் (Ear-Pendant) இராவணனது மனைவியர் இரத்தின வைரக் கற்கள் வைத்திழைக்கப்பட்ட தோடுகளை அணிந்திருந்தனரெனக் கூறப்படுகிறது. மேற்கூறப்பட்ட நகைகளோடு சீதாபிராட்டியார் அணிந்திருந்த மற்றும் சில நகைகள் (1) அங்கடம் அல்லது கேயூரம். (2) பாரிஹார்யம். (3) ராசனம் (இடையணி) முதலியனவாம். இராவணனது சேனைத் தலைவர்களும் தலையில் மகுடம் தரித்திருந்தனர். ஹேம தாமம் என்பது அரக்கர்களின் விசேட அணி. "ஸ்ரோணி சூத்ரம்," "மணி ஸ்ரஜம்" என்னும் நகைகளை கும்பகர்ணன் அணிந்திருந்தான். அரக்க மகளிர் அணிந்திருந்த பற்பல நகைகளின் பெயர் சுந்தர காண்டம் ஒன்பதாவது பகுதியில் கூறப்பட்டுள்ளது.

காலைக்கடன், நீராடல் முதலியன:—நீராடற்கு முன் பல் துலக்குவர். வால்மீகி இராமாயணத்தில் காணப்படும் "தந்ததாவனம்" என்ற சொல் பற் கொம்பைக் குறிப்பதால், அக் காலத்தில் குச்சியைக் கொண்டு பல்

துலக்கும் முறை வழக்கத்திலிருக்க வேண்டும். துவருள்ள மரங்களின் சிறு குச்சிகளை ஒழுங்காக நறுக்கி ஒரு நுனியை துடைப்பானை (Brush)ப் போல் பல்லினால் மென்று மிருதுவாக்கிக் கொண்டு பல்லை சுத்தம் செய்வது வழக்கம். நீராடுவதற்கு முன் உடம்பில் கொஞ்சம் எண்ணெய் தடவிக் கொண்டு நன்றாக கசக்கித் தேய்ப்பது வழக்கம். இங்ஙனம் செய்வதற்கு "உச்சாடனம்" என்று பெயர். உடம்பிலுள்ள எண்ணெயை நீக்குவதற்கு "கல்கம்" எனப்படும் பயறு வகைகளின் பொடியை உபயோகித்து வந்தனர். கோரைக் கிழங்கு முதலிய வாசனை தரும் கிழங்குகளை நசுக்கி ஊற வைத்து கஷாயம் இறக்கி குளிக்கும் நீரில் கலந்து நீராடுவர். பெண்கள் இக் காலத்தில் சங்கீதம், சித்திரம் வீட்டு வேலை முதலியவைகளைக் கற்று வருவது போல், இதிகாச காலத்திய பெண்கள், ஆடவர்களுக்கு உடம்பை செவ்வியின் நீவி, நீராட்டி, மயிருக்கு வாசனைப் புகையூட்டி உலர்த்தும் தொழிலையும் ஒரு சிறந்த கலையாக மதித்து கற்று வந்தனர். செல்வந்தர் வீட்டிலுள்ள ஏவற் பெண்டிரே, ஆடவர்க்கும் பெண்டிர்க்கும் இங்ஙனம் நீராட்டும் தொழிலை மேற் கொண்டிருந்தனர். இஃது இக் காலத்திற்கு ஒவ்வாததோர் செயலேயாயினும், அப்போதைய ஆடவரேனும் பெண்டிரேனும் மனநெகிழ்ச்சியுற்று தத்தம் கற்பு நெறியிற் றவறினால்லர். அங்ஙனம் ஆடவர்கள் தமக்கு நீராட்டும் மகளிரிடம் அன்புடையவராய் இருப்பினும் அது சகோதர வாஞ்சையாக இருக்குமே யன்றி காதலோடு பொருந்திய அன்பாயிராது. தாயுரை கொண்டு தந்தை யுதவிய தாரணி தன்னை தீவினை யென நீத்துச் சென்று இராமனது பாதுகையைப் பெற்று வந்து அதற்கு பட்டாபிஷேகம் செய்து வைத்த நாளில், பரத்துவாச முனிவர், பரதனது சேனைவீரர் ஒவ்வொருவருக்கும் நீராடற்றொழிலில் கற்றுத் துறை போகிய மகளிர் எண்மரைப் பரிசிலாக அளித்தாரெனக் கூறப்படுதல் காண்க. அது போலவே, விபீஷணனும் இராவணன் இறந்த பின்னர், இராமபிரானுக்கு ஏவல் செய்யும் பொருட்டு வனப்பின் மிக்க வனிதையர் பலரை வழங்கினான். அவர்கள் நீராட்டும் முறையிலும், நறுமணப் பொடிகள் (Substtutes for soap) செய்வதிலும், மலர் மாலைகளைக் கொண்டு முடியினை அலங்கரிக்கும் முறையிலும் மிகவும் வல்லவர்களாய் விளங்கினர். சுக்ரீவனது மாளிகையின் அந்தப்புரத்தில் இத்தகைய மகளிரீட்டத்தை இலக்குமணன் கண்டான் எனக் கூறப்படுதலின், வானர வீரர்களும் இம் முறையையே மேற்கொண்டிருந்தார்களெனத் தெரிகிறது. அயோத்தி அண்ணலாகிய தசரதன் அரண்மனையிலும், இலங்கை வேந்தனாகிய இராவணனது அரண்மனையிலும் மேற் கூறப்பட்ட புனிதற்றொழிலில் வல்ல மங்கையர் பலர் காணப்பட்டனர். நீராடற்குரிய நீரில் சந்தனக் கலவையைக் கரைத்து மண மூட்டுவதுமுண்டு. எனவே, அக் காலத்தில் "நீராட்டும் முறை"என்பதும் பெண்டிர் கற்றற்குரிய கலைகளில் முக்கியமானதாகக் கருதப்பட்டு வந்தது என்பது போதரும. நீராடி முடிந்ததும், ஆடையாபரணங்களால் தம்மையலங்கரித்துக் கொண்டு வாசனைத் திரவியங்களையும் பொடிகளையும், தைலங்களையும் உடம்பிலும் கைகளிலும் பூசிக் கொள்வது வழக்கம். மலர்களால் முறையாகத் தொடுக்கப்பட்ட மாலைகளையும் அணிந்து கொள்வதுண்டு. ஆடவரும் பெண்டிரும் கண்களுக்கு அஞ்சனம் (Collyrium) தீட்டி அழகு செய்து கொண்டனர். இது பற்றியே பழந்தமிழ் நூல்கள் பலவற்றினும் "மைவிழி மாதரார்" என்

றும் "காவிநேர் விழி கன்னியர்" என்றும் மகளிர் சிறப்பித்துக் கூறப்படு கின்றனர். அரசிளங் குமாரரை நீராட்டி அலங்கரிப்பதற்குரிய அரிவையர், ஒப்பாரும் மிக்காருமின்றி பேரெழில் படைத்தவராய், ஆடையாபரணங் களால் தம்மையும் பிறரையும் அலங்கரிப்பதில் வல்லவராய் விளங்கினர். ஆட வர்கள் நெற்றியில் யாதொரு குறியும் அணிந்திருந்ததாகக் கூறப்படவில்லை. ஆனால் பெண்கள் Gorocana or red-arsenic முதலிய பொருள்களோடு வாசனை கலந்து சாந்து செய்து நெற்றியில் "திலகம்" இட்டுக் கொள்வ துண்டு. நெற்றியில் திலக மணிவதால் வதனத்தின் வனப்பும் வசீகரமும் அதிகரிப்பதாகக் கருதினர். சீமான்கள், அரசர்களைப் போலல்லாமல் அளவிலும் மதிப்பிலும் குறைந்ததான கிரீடத்தை (Coronet) அணிந்திருந் தனர். தலைப்பாகை யணிவதும் வழக்கத்திலிருந்து வந்ததாகத் தெரி கிறது. ஆனால் ஏவற் பெண்டிரும், அந்தப்புரத்திலுள்ள பேடிகளும்தான் தலைப்பாகை அணிவது வழக்கமாம். எனவே அக்காலத்தில் தலைப்பாகை அணிவது அவ்வளவு மதிப்பைத் தரத்தக்கதல்ல என்பது புலனாகின்றது. அதனாலேயே உயர்குலமக்கள் தலைப்பாகை அணிவதில்லை. (இக்காலத்தில் தலைப்பாகை அணிவோர்தான் பெரும்பாலும் மதிக்கப் படுகின்றனர். இது காலச் சக்கரத்தின் விநோதம்!) இராமாயண காலத்து மக்கள் தோல் அல் லது மரத்தினால் செய்யப்பட்ட பாதரட்சைகளை உபயோகித்து வந்தனர். அரசரும் அரச குமாரரும் சந்தனம் முதலிய உயர்ந்த மரங்களினால் செய் யப்பட்டு பொன் தகட்டினால் மூடப்பெற்ற பாதரட்சைகளை உபயோகித் தனர். அதுதான் "பாதுகை" எனப்பட்டது.

**உபயோகித்த உடைகள்:**—அக்காலத்தில் உபயோகிக்கப்பட்ட நூல் வகைகளாவன.—(1) பருத்தி (2) கௌஸேயம் (Silk) (3) அவிகம் (Wool) (4) சம்பள அஜினம் (மான்தோல்) (5) வல்கலம் (மரவுரி) (6) மகாராஜத வாஸம் (பீதாம்பரம் அல்லது சரிகை ஆடை) (7) சணல் எல்லாவற்றிலும் பட்டாடை மிக வுயர்ந்ததாக கருதப்பட்டது. மற்றும் பூஜா காலங்களில் மஞ் சள் நிறப் பட்டாடை கட்டிக்கொண்டு வழிபடவேண்டியது அவசியமெனக் கருதினர். அரச குமாரிகளுக்கு பட்டாடைகளே மனதுக்குகந்த ஆடைகள். இராமனுக்கு இளவரசுப்பட்டம் சூடிய நாளிலே, கோசலை அரண்மனையில் பட்டாடை யுடுத்திக்கொண்டு பரமனைப் பரவினாளென வன்மீகியார் கூறி யிருத்தல் காண்க. சீதாதேவி என்றும் பட்டாடையுடன் விளங்கினமை யின் "கௌஸேயவாசினி" என்ற சிறப்புப்பெயர் பெற்றாள். முனிவர் களுக்கு ஏற்றதோர் ஆடை மரவுரியே. சன்னியாசிகள் காவியுடை தரித் துக் கொண்டனர். இலங்கை வேந்தன் தன் மெய்யுருக்கரந்து பொய்யுரு கொண்டு சீதையின் பன்னகசாலையை யடைந்தபோது காவியுடையுடன் விளங்கினான். மணமாகாத ஆடவர்கள் இடையில் மாத்திரம் ஆடையுடுத் திக் கொள்ள வேண்டுமென்றும், மேலாடை அணிதல் கூடாதெனவும் ஒரு நியதி பூண்டிருந்தனர். கலியாணத்திற்குப் பின்னர்தான் ஆடவர்கள் உத் தரீயம் (Upper cloth) அணிந்து கொள்வது முறை. தாடகை வதத்திற்கு முன் இராமனைக்கண்ட மாரீசன் 'ஏக வஸ்தரதரன்" ஆக காணப்பட்டான் எனக் கூறுகின்றான். சாதாரணமாக உத்தரீயத்தை கழுத்திலணிந்து தொங்கவிடுவர். வேலை செய்யும்போதோ சண்டை போடும்போதோ மேலா டையை இடுப்பில் கட்டிக்கொள்வர். போர் வீரர்களும், வேலைக்காரர்களும்

"கஞ்சுகம்" (Jacket) அணிந்து கொண்டனர். பெண்டிர்கள், தனித் தனியாக இடுப்பில் ஒரு ஆடையும், மேலாடை யொன்றும் அணிந்து கொள்வது வழக்கம். (இம்முறை இன்னும் சேரநாட்டுப் பெண்களிடையே வழக்கத்திலிருத்தல்காண்க.) ஆனால் உயர்குலப் பெண்டிர்கூட இரவிக்கை அணிந்ததாகக் கூறப்படவில்லை. அக்காலத்துப் பெண்டிர் பெரும்பாலும் மஞ்சள், நீலம், பச்சை, வெள்ளை என்ற நிறங்களையே மிகவும் விரும்பினர். அரக்கர்களுக்கு செந்நிற ஆடையே மனதிற்கிசைந்த உடை. இராவணனை "இரக்தாம்பரதரன்" எனக் குறித்தலின், அவன் சிகப்பு உடைகளே அணிவது வழக்கமெனத் தெரிகிறது. சம்புமாலி முதலிய இராவணனது சேனைத் தலைவர்கள் சிகப்புநிற உடையே தரித்திருந்தனர். அரக்கர்கள் தெய்வத்தை வழிபடுங்கால் வெள்ளையுடையும், சாதாரணமாக அலங்கரித்துக் கொள்ள சிவப்பு உடையும், துக்கம் அல்லது மனவருத்தத்தைக் காட்ட கருப்பு உடையும் அணிந்து கொள்ளவேண்டும் என்ற முறையைப் பின்பற்றினதாகத் தெரிகிறது. அரண்மனையின் அந்தப்புரத்தில் கிழவர்களும், ஆண்மையற்ற பேடிகளும் காவல்காரர்களாக நியமிக்கப்பட்டனர். அவர்களுக்குக் காவியுடையே உரியதென நியமிக்கப்பட்டது.

**ஊர்திகள், வண்டிகள் முதலியன:**—பெரும்பாலும் தேர்களிலும் வண்டிகளிலுமே ஏறிச் செல்வர். குதிரைகளின் மேலும் யானைகளின் மேலும் சவாரி செய்தலுமுண்டு. பல்லக்குகளும், மூடு பல்லக்குகளும் உபயோகிக்கப் பட்டன. மூடு பல்லக்குக்கு "சிவிகை" என்று பெயர். விமானம் (Aeroplane) புஷ்பகம் (Zeppelin) முதலிய வான ஊர்திகளும் அக்காலத்தி லிருந்ததாகக் கூறப்படுகிறது. முனிவர்கள் யாகம் முதலியவற்றிற்கு வேண்டிய தங்களது சாமான்களை ஏற்றிச் செல்லும் வண்டிக்கு சகடம் என்று பெயர். யுத்த இலாக்கா (Commissariat Department) அதிகாரிகளும் தங்களது வில், வாள், அம்பு முதலிய சாமான்களை ஏற்றிச் செல்ல சகடத்தை உபயோகித்தனர். குதிரைகளால் இழுத்துச் செல்லப்படும் தேர்களுக்கு "வாசி ரதம்" எனவும், காளை மாடுகளால் இழுத்துச் செல்லப்படும் தேர்களுக்கு "கோ ரதம்" எனவும் பெயர். சில சமயங்களில் ஒட்டகங்களையும் கட்டுவதுண்டு. பரதன் தன் மாமன் வீடாகிய கேகைய நாட்டிற்குச் சென்று திரும்புங்கால் அவனுக்குத் துணையாக பல போர்வீரர்கள் யானை, குதிரை, ஒட்டகம், தேர் முதலியவைகளில் ஏறிக்கொண்டு முன்னும் பின்னுமாகத் தொடர்ந்து வந்தனராம். புரோஹிதர்கள் தமக்கென செய்யப்பட்ட நூதனமான இரதங்களில் ஏறிச்சென்றனர். அவர்களது தேர் உட்புறம் மான்தோல், புலித்தோல், பட்டாடை முதலியவைகளால் அலங்கரிக்கப் பட்டிருக்கும். காலை மாலைகளில் உல்லாசமாக ஊர்ந்து செல்வதற்கென தயாரிக்கப்பட்ட வண்டிகளும் (Pleasure chariots) உண்டு. அவை இரத்தின கம்பளங்களாலும் சித்திரங்களாலும், கொடிகளாலும் தலையணை மெத்தை முதலிய பொருள்களாலும் செவ்வனே அலங்கரிக்கப் பட்டிருக்கும். குதிரைகளை வண்டியில் கட்டுவதற்கு இப்பொழுதைப்போல் தோற் சாமான்களால் கட்டாமல் பட்டு முதலிய நூல்களாலான கயிறுகளையே உபயோகித்தனர் என்பது கவனிக்கற்பாலது. அரசர்கள் ஊர்ந்து செல்லும் தேர்கள் நான்கு வெள்ளைக் குதிரைகள் பூட்டப்பெற்று, கலீர் கலீரென ஒலிக்கும் பொன்மணிகளை யுடையன

வாய் விளங்கின. சில சமயங்களில் அக்குதிரைகளுக்குப் புலித்தோலினல் போர்வை யிடுவதுமுண்டு.

**பொழில் விளையாட்டும் பொழுது போக்கும்.**—அயோத்திமா நகரின் மக்கள் மேலே சிறப்பித்து கூறப்பட்ட உல்லாஸ ரதங்களில் ஏறிகொண்டு புற நகரங்களிலுள்ள நந்தவனங்களுக்கு (Public parks)ச் சென்று பொழுது போக்குவர். அவ்வனங்களிலுள்ள விளையாடு மிடங்களில் பந்தடித்தல், மல் யுத்தம் முதலிய விளையாட்டுகளை ஆடிப்பொழுது போக்குவர். அங்குள்ள சிறுசிறு மண்டபங்களில் சொக்கட்டான் முதலிய சூதாட்டங்களும் ஆடுவதுண்டு. (தெவணம், பணயம் முதலிய சூதாட்டச் சொற்கள் வழக்கிலிருந்தமையில் சூதாடுதலு முண்டெனத் தெரிகிறது.) இது போலவே இலங்கையிலும் கிஷ்கிந்தையிலும் பலவிடங்களுண்டு. க்ஷத்திரியர்களுக்கு வேட்டையாடுதலே முக்கிய பொழுதுபோக்காகும். அதுவே அவர்களுக்கு விளையாட்டு. கேகைய ராஜன் அரண்மனையில் பரதன் தங்கியிருந்தபொழுது சங்கீதம், நடனம், நாடகம், விகடக்கச்சேரி முதலியவைகளால் மகிழ்வூட்டப்பட்டான். இராட்சதர்கள், கட்குடி, சங்கீதம் குத்துச் சண்டை முதலியவைகளை மிகவும் விரும்பினர். வானர மகளிரும், அரக்கியரும் மாலை வேளைகளில் பாக்கள் பாடிப் பரவசமுறுவர். இயற்கையன்னையின் எழிலில் எஞ்ஞான்றும் ஈடுபடுவர்.

ஒவ்வொரு அரண்மனையிலுமுள்ள அந்தப்புரத்தைச் சார்ந்தாற்போல் ஒரு நாடக அரங்கமும் உண்டு. அரசிகளும் மணப் பருவமடைந்த அரசகுமாரிகளும் பெரும்பாலும் வெளியில் வராமல் ஒழுக்கங் குன்ருதிருத்தற்பொருட்டு அந்தப்புரத்திலேயே இருந்தார்களாகையால், அவர்களுடைய பொழுது போக்குக்காகவே அவ்வரங்கங்கள் அமைக்கப்பட்டன. அயோத்தி அரண்மனையின் அந்தப்புரத்தைச் சேர்ந்த அரங்கத்தில் கவிபாடும் கூத்தர்களும், குள்ளர்களும், கூனர்களும், விகடர்களும், இசைப் புலவர்களும், நடனப் பெண்களும் நிறைந்திருந்தனர். மற்றும் பன்னிறக் கிளிகளும், செந்நிறப் பறவைகளும், மயிலும் குயிலும் முதலியன அங்கே காணப்பட்டமையின் அது ஒரு கண்காட்சி சாலையாகவும் (Zoo) நாடகச் சாலையாகவும் (Theatre) விளங்கிய தென்றே கூறலாம். அந்தப்புர அரசியர்களுக்காகவே அரண்மனையின் புறவெல்லையில் நந்தனவனங்கள் (Parks) அமைக்கப் பட்டிருந்தன. அவற்றிற் பெரும்பாலும் அசோக மரங்களே வைத்துப் பயிரிடுதலுண்டு. அசோகு பெண்களின் கற்பிற்கோர் காவல் மரம் என்பது நூற்றுணிபு. அதனல் அவை "அசோக வனம்" என அழைக்கப்பட்டன. இலங்கையிலும் அயோத்தியிலும் அசோக வனங்களிருந்தன. இராமாயணத்தில் கூறப்படும் பலவகை உல்லாஸ வனங்களாவன:—(1) வனம் (Woods) (2) உபவனம் (Royal parks)(3) ஆக்ரிடம் (Pleasure gardens) (4) நகரோபவனம் (Suburban Park) (5) விகாரம் (6) ஆம்ரவனம் (Mango Park) (7) அசோகவனம் (8) நிஷ்கூடம் (Garden adjoining houses.)

---

# ஓசுப்பொடி வாசு வாத்தியார்

——:(o)——

(வைத்தி.)

ஓசுப்பொடி வாசுவாத்தியார் மாசுமறுவற்ற ராஜு தீக்ஷதர் வம்சத்தில் உதித்தவர். இவருடைய பிதுரார்ஜிதம் காட்டேரி.

காட்டேரி என்பது ஒரு பெரிய கிராமம். இரண்டு அக்ரஹாரமுடையது. அதற்கு அந்தப் பெயர் ஏன் வரவேண்டும்? அதாவது பெரிய காடு ஒன்றின் மத்தியில் ஏரி ஒன்று இருந்ததாம். அந்தக் காட்டை அழித்து நிலங்களை உண்டாக்கி, அதை ஒரு கிராமமாக்கி விட்டார்கள். அப்படிப் பட்ட கிராமத்திற்குத் தான் 'காட்டேரி' என்று பெயர் வந்ததாக என் தாதா சொல்லுகிறார். 'காட்டேரி' என்பது எப்படி வந்தது என்று என் தமிழ் வாத்தியாரையும் கேட்டேன். அவரும் காட்டு+ஏரி இரண்டும் சேர்ந்து 'காட்டேரி' என்று ஆயிற்றென்று சொல்லுகிறார்.

வாசு வாத்தியாரின் முழுப் பெயர் வாசுதேவ சாஸ்திரி. அவர் புரோஹிதம் செய்து வந்ததால் அவரை எல்லாம் 'வாத்தியார்' என்று சொல்லுவது வழக்கம். அவருக்கு ஏராளமான பூஸ்திதி இருந்தது. ஊரிலிருந்த நிலங்களில் முக்கால் பங்கு அவருடையது தான். அப்படியிருந்தும் அவருடைய 'வைதீக புத்தி' அவரை விடவில்லை. கால்படி அரிசிக்கும் காலணுவிற்கும் காத வழி செல்லுவாரென்றால், அவரைப்பற்றி நான் என்ன சொல்ல வேண்டியிருக்கிறது.

—அவருக்கு 'ஓசுப்பொடி வாசு வாத்தியார்' என்று பட்டப் பெயர் உண்டானதற்கு காரணம் அறிந்து கொள்ள இஷ்டமில்லையா? அவர் எல்லோரிடமும் மிகவும் நயமாகப் பேசிக் கொண்டே தன் வலது கையால் மூக்கைத் தொட்டபடியே இடது கையை நீட்டுவார். ஒருநாள் புதியதாய் அவ் வூருக்கு வந்திருந்த ஒருவரிடம், அவருடைய சொந்தக்காரர்—சாஸ்திரிகளைச் சுட்டி காட்டி—'இவரை தெரியுமா'? என்று கேட்டார். புதியதாய் வந்திருந்தவர் 'ஓகோ, இவரை எனக்கு நன்றாய் தெரியுமே. இவர் பெயர் ஓசுப்பொடி வாசு வாத்தியார் அல்லவா?' என்றார். வாசுதேவ சாஸ்திரி முன்னொரு முறை ஒரு சிட்டிகை பொடிக்காக ஒருவரிடம் உறவு கொண்டாடி ஒரு மைல் தூரம் பேசிக் கொண்டே போன கதையையும் சொன்னார். இதைக் கேட்டு ஊரில் சிரிக்காத பேர்வழியே கிடையாது. அது முதல் அவருக்கு 'ஓசுப்பொடி வாசு வாத்தியார்' என்னும் பெயர் வழங்கலாயிற்று.—

வாசு வாத்தியார் காலையில் எழுந்து பல் குச்சியை வாயில் வைத்து கொண்டு, தலைப்பாகை கட்டிக் கொண்டு, பூணூலைத் தாவடமாய் (மாலையாய்) போட்டுக்கொண்டு, வயல்களைச் சுற்றிப் பார்வையிட கிளம்பினாரானால், பகல் பதினொரு மணிக்குத்தான் மேலே சொல்லியவைகளில் மாறுதல்கள் ஏற்படும். அறுவடை காலங்களிலோ கேட்கவே வேண்டாம்—ஏகாதசிதான். வீட்டுப் பக்கமே செல்ல மாட்டார். இராக் காலங்களிலும் களங்களில் தான் படுத்துக் கொள்வார்.

ஒரு கிருஷ்ண பக்ஷம். அமாவாசைக்கு இரண்டுநாள் முந்திய தினம். நெல் சாகுபடியாகி, வைக்கோலும், அடிக்க வேண்டிய பாக்கி கட்டுகளும் களத்தி லிருக்கின்றன. தன் வேலை யாட்களை நம்பாத சாஸ்திரி தானே களத்தில் காவல் புரிகிறார்.

இரண்டு நாட்கள் சென்றன. மூன்றாவது நாள் காவல். அன்று அமாவாசை. எங்கும் ஒரே இருள். 'அமாவாசை கருக்கல்' என்பதின் அர்த்தம் அன்று தான் விளங்கும். களத்தைச் சுற்றி வேலி போட்டு விட்டார். ஆனால் கொஞ்சம் வழி விட்டு அவ் வழியில், தான் படுத்துக் கொண்டார். திடீரென்று, "சாஸ்திரிகளே, எழுந்திரும். டம்ப மங்கலம் டமார வாயர் வீட்டில் அவர் குமாரத்திக்கு உதயமானால் முகூர்த்தம் நடக்க வேண்டும். முன்னதாகவே ஏற்பாடு செய்திருந்த சுருளூர் சுப்பா தீக்ஷிதர் பாரியாள் பிரசவித்து ஜன்னி கண்டு விட்டதாம். அவர் வர சரிப்பட வில்லை. ஆகையினால் அந்த 'லக்கி சான்ஸ்' உங்களுக்கு அடித்து விட்டது. என்னை எதற்காக அனுப்பி யிருக்கிறார் தெரியுமா—டமாரவாயர். உங்களைக் கையோடு அழைத்துக் கொண்டு வர வேண்டுமென்று தான். டமார வாயர் டம்பாச்சாரித்தனம்தான் தெரியுமே. உங்கள் பாடு நல்ல யோகம் தான். இன்றைய தினம் நீங்கள் நரிமுகத்தில் தான் விழித்திருக்க வேண்டும். சரி புறப்படுங்கள் உடனே. ஆத்தில் எல்லாம் அப்புறம் சொல்லிக் கொள்ளலாம். புறப்படும். நம்மையும் கொ......ஞ்...... ச.......ம் கவனிச்சுக்கோங்கோ. என்ன ?" என்றார். அய்யரின் பேராசை தான் தெரியுமே உங்களுக்கு. வீட்டிலும் சொல்லாமல் கிளம்பிவிட்டார். ஆனால் களத்தில் காவலுக்கு ஆள் வேண்டுமே! வழியிலுள்ள வஜ்ர சாம்பானிடம் சென்று—களத்திற்குப் போய் ஜாக்கிரதையாய் பார்த்துக் கொள்ளும்படியாயும்—தான் இன்னும் 4, 5 நாளில் திரும்பி வந்து விடுவதாயும்—தான் வரும் வரையில் மேற் கொண்டு அறுவடை ஒன்றும் செய்ய வேண்டா மென்றும்—சொல்லி விட்டுச் சென்றார்.

வஜ்ர சாம்பான் களத்தை யடைந்தான். பனி ஜாஸ்தியா யிருந்ததால் குளிர்தாங்க முடியவில்லை. களத்தின் மத்தியில் சென்று வைக்கோல் போரின் அடியில் படுத்துக் கொண்டான். நன்றாய் குறட்டை விட ஆரம்பித்து விட்டான். அய்யரோ, அந்தகாரமான அந்த இருட்டில், ஆனந்தமாய், வரும்படியைப் பற்றி மனக் கோட்டை கட்டிக் கொண்டே, வந்த ஆளுடன் வழி பிரயாணம் செய்கிறார்.

* * * *

"அடே சோமு, கிட்டு, எழுந்திருங்கோடா எல்லாம். நம்ப வாசு வாத்தியார் களத்திலே தீ பிடிச்சுண்டு எரியரதடா. என்னடா இப்படிப் பட்ட தூக்கம். வாங்கடா போகலாம்" என்றான் தற்செயலாய் எழுந்த தாரகேசன். இதற்குள் அக்ரஹாரத்தி லிருந்தவர்களும், மற்றவர்களும் எழுந்து கலாட்டாவாகி விட்டது. எல்லோரும் களத்தை அடைந்தனர். அனல் ஜ்வாலை அண்டையில் நெருங்க இடம் தரவில்லை. என்ன செய்வார்கள் பாவம். எல்லாம் சாம்பலாகி தீயும் அணைந்தது. அவ்விடம் வந்திருந்த வாசு வாத்தியார் சம்சாரம், குழந்தை, மற்றவர்களும் கதறியழுதார்கள். என்ன விழிக்கிறீர்களே? காரணம் தெரிய வில்லையா? வாத்தியார் தீயில் அகப்பட்டு வெந்து சாம்பலாகி விட்டா ரென்று தான். வாத்தியா

ரின் மனைவி வனஜா "ஐயோ! நேற்று கூட தயிர்வடை செய் என்று சொன்னரே. வேலை யென்ன, எல்லாம் ஆகட்டு மென்று சொன்னேனே பாவி. அறுவடை எல்லாம் முடிந்ததும் அம்பலவாண செட்டியிடம் போய் வர வேண்டுமென்றூரே. இன்னிக்கி சாயந்திரம் கூட இந்தப் பொண் ணுக்கு நல்ல இடமா பார்த்து கல்யாணம் செய்யணும்னு சொன்னீங்களே. உங்களுக்கு வர இருந்த விபத்து தெரியலியே. பொண்ணு கல்யாணத்தி லேயே பிள்ளைக்கும் உபநயனம் செய்ய ஏற்பாடு பண்ணணுமனு சொன்ன தெல்லாம் இப்போ கதையா போச்சே, அட தெய்வமே! உனக்கு கண் ணில்லையா?" என்று கதறியழுதாள். வஜ்ஜிரன்தான் வெந்து இக் கதிக் காளானு னென்று எப்படி அவர்களுக்குத் தெரியும். வெந்த எலும்புகளிலி ருந்து யார் இறந்தது என்று கூட கண்டுபிடிக்க முடியுமா? பரிதாபம்! திக்கற்ற வஜ்ரனுக்குத் தானு வரவேண்டும் இந்த கஷ்டம்? அய்யருக்கு விரோதமான அண்ணுசாமி பிள்ளை அன்று தானு தீவைக்க வேண்டும்? அவன் மேல் என்ன தவறு? அவன் எப்படி யறிவான் வாத்தியார் ஊருக் குச் சென்றதை? வஜ்ரனுடைய எரிந்த எலும்புகளைக் கண்டு அய்யர்தா னென்று அகமகிழ்ந்தான் அண்ணுசாமி. அய்யரும் இந்த விஷயங்களை அறிய அசக்தரா யிருக்கிருர். அவர் தான் வேறு ஊரிலிருக்கிருரே!

நாசிக வாத்தியாரின் கதையை-கதை என்ருல் என்ன?-ஏற்பட்ட விபத்தை-தன் பந்துக்களுக்கும், மற்றும் முக்கியமானவர்களுக்கும் ஆள் மூலம் அறிவித்தாள் வனஜா. 'அல்லோல-கல்லோலங்களிடையே-ஒன்பது தினங்களும் கழிந்தன. உதயமாளுல் பத்தாவது நாள்-தசாசு நடக்க வேண்டிய கிழமை. வாத்தியாரின் பந்துக்களும், சிநேகிதர்களும் வந்து விட்டார்கள். பிராமண சம்பிரதாயப் பிரகாரம்-வாத்தியார் உயிருடன் இருக்கும்போதே-தலை மயிரும், தாலி சரடும் நீக்கப்பட்டு விதவை வேஷம் போடப்பட்டாள் வனஜா. என் செய்வது? விதி யாரை விட்டது? எந்த எந்த வேளையில் என்ன என்ன நடக்க இருக்கிறதோ, அவைகள் நடந்து தானே தீரும். வாசுக்கு-அடடே மறந்து விட்டேன்-அவர் பெரியவரல் லவா?-வாசு வாத்தியாருக்கு தசாசு, சவுண்டி முதலியதும் பூர்த்தி யடைந்து வந்திருந்தவர்களும் அவரவர் இருப்பிடம் சென்றனர்.

* * * *

"அடியே! ஒரே ஒரு துணி கொடுடீ. நான் துணி இல்லாமெ ரொம்ப கஷ்டப்பட்டேரேண்டி இப்போ. நீ இந்த சமயம் துணி கொடுத்தா தான் என் மானம் நிற்கும், இல்லேன்னு நாலு பேர் காறி உமிவாடி. நான் கல்யாண மெல்லாம் சம்பரமமாய் நடத்தி வச்சேன். ஆனு, இப்பொ என் கதி இபபடியா யுடுத்துடி. நான் உன் கிட்டே சொல்லாதே போயிட் டேன்னு கோவிச்சுக்காதேடீ.

அப்பா! சீனு நீதான் உன் துண்டைக் கொடுடா. இல்லேன்னு ஏதா வது கந்த துணியாவது கொடுத்தா கோவணமாவது போட்டுக்கறேன்" என்று சப்தம் சவண்டிக்கு மறுநாள் இரவு 11-30 மணிக்கு வாசு சாஸ்திரி யின் வீட்டு கதவினிடம் கேட்டது. குழந்தையை பக்கத்தில் விட்டுகொண்டு தூங்க முயன்றுள் வனஜா. ஆனுல் அது எப்படி முடியும்? எப்பொ ழுது உதயமாகு மென்று எதிர்பார்த்து கொண்டிருந்தாள். வர வர பயம் ஜாஸ்தியாகி விட்டது. நல்ல வேளையாய் கொஞ்ச நேரத்திற் கெல்லாம் உதயமாயிற்று-வெளிச்சமும் தெரிந்தது.

மறுநாள் காலை 7-30 மணி இருக்கும். வனஜா வீடு வீடாய் சென்று தன் கதையைச் சொல்ல ஆரம்பிக்கு முன் அவர்களே, "ஏண்டி வனஜா—ராத்திரி என்னமோ விசேஷமாமே என்னடி" என்றார்கள். வனஜாவும் வயிற்றெரிச்சலுடன்—"அந்த அநியாயத்தே ஏன் கேக்கறேள். அந்த பாழா போன பிராமணன் செத்த பாட்டிலேயும் வெறுமே இருக்கக் கூடாதா? குழந்தைகள் இருக்கும் வீட்டிலே ராத்திரியெல்லாம் மிரட்றது. துணியை கொண்டா துப்பட்டியை கொண்டான்னு பிராணனை வாங்கிறது. நான் இழுத்துபோத்திண்டு பேசாமெ படுத்துண்டே இருந்தூட்டேன். என்னமே கல்யாணத்தை திருப்தியா முடிச்சூட்டேன். அப்படி யிருந்தும் என்கதி, ஒரு துணிகூட இல்லாத அழரேன்னு ஒளரினது. ஒரு வேளை பெண்ணுக்கு கல்யாணம்—பிள்ளைக்கு பூணூல்—எல்லாம் செய்யனும்னு சொல்லிண்டே யிருந்ததோல்லியோ—அதே ஞாபகம் போலிருக்கு. அப்பறம் பிள்ளையை துணி கேட்டது. அதெல்லாம் இல்லே—நான்தான் தசாசு, சவண்டி எல்லாம், துணி மணிகள் நிறைய வாங்கிக்கொடுத்து நன்னா செய்தேனே. அப்படி யிருக்கச்சே என்னை ஏன் வந்து தொந்தரவு படுத்தணும்? நான் இந்த குஞ்சான் குட்டிகளையெல்லாம் வச்சிண்டு என்ன பண்ணுவேன்? உங்காத்துலே சொல்லி, ஏதாவது தனிஷ்டே, குனிஷ்டே இருக்குதான்னு பார்க்கச் சொல்லம்மா" என்று ஒருகுரல் அழுது தீர்த்தாள்.

காட்டுத் தீப்போல் பரவிய இச்சங்கதியை கேட்டதும் அவ்வூரிலுள்ள தைரியஸ்தர்களே வெளியில் வர அஞ்சினார்கள்—அதுவும் பகலில். வனஜா மாத்திரம் வேறு வழியின்றி, விதியை நினைத்தவளாய் தைரியமாய் காலந்தள்ளும்படி நேர்ந்துவிட்டது. தன் பிறந்தகம் செல்லலா மென்றாலோ, அங்கே அவளுக்கு கதி யாருமில்லை. என்ன செய்வாள் பாவம்? சேர்ந்தாற்போல் மூன்றுதினம் அவ்விதமே சப்தம் வரலாயிற்று.

இப்படியிருக்கும் சமயத்தில் ஒரு மாந்தரீகன் வந்து சேர்ந்தான் அவ்வூருக்கு. அவன் அவ்வூராரிடம் "ஐயா, நான் இதைப்போல் எவ்வளவோ பிசாசுகளையும் ஆவிகளையும் பார்த்திருக்கிறேன். இது ஒரு பிரமாதமல்ல. ஆனால் இம்மாதிரி அதிருப்தியடைந்த ஆவிகள் சஞ்சரிக்க விட்டுவிட்டால் அது அனேக இன்னல்களை விளைவிக்கும்" என்றான். "நீங்கள் அதைக் கவனித்து சாந்தியடையும்படி செய்ய முடியுமா? நீர் சொல்வதுபோல் அது இப்பொழுதே ரொம்ப தகாதாவெல்லாம் செய்கின்றது." என்றார் அவ்வூர் மணியம் மதுசூதனஐயர். "ஆஹா. நான் அதன் ஆன்மாவை சாந்தி செய்து ஒருவித கெடுதலும் செய்யாதபடி செய்திடுவேன். ஆனால் அதற்கு கொஞ்சம் சிலவாகும் அதாவது சுமார் நாற்பது ரூபாய்வரை சிலவாகும்" என்றான். ஊரிலுள்ளவர்கள் தலைக்குக் கொஞ்சமாய்ப் போட்டு அவ்விதமே செய்வதாக ஏற்பாடாயிற்று.

மந்திரங்களுக்கெல்லாம் ஏற்ற நாள் ஞாயிற்றுக்கிழமைதான். ஆகையால் மறுநாள் செய்யும்படி மணியக்காரர் உத்தரவு போட்டுவிட்டார். மாந்தரீகனும் மறுநாள் ஸ்நானம் முதலியது செய்துவிட்டு விபூதிபட்டை அடித்துக்கொண்டு ஸ்மசானத்திற்கு சென்றான். நான்குமணி நேரத்திற்கப்பால் கொஞ்சம் சாம்பலுடன் திரும்பினான். அந்தச் சாம்பலை எல்லோருக்கும் கொடுத்து நெற்றியில் இட்டுக்கொள்ளச் சொன்னான். "இனிமேல் நீங்கள் எதற்கும் பயப்படவேண்டாம். அது இனிமேல் இவ்விட மிருப்பதில்லை

என்று சத்தியம் செய்துவிட்டது. அது இவ்வூரையே விட்டு ஓடிவிட்டது" என்று சொல்லி உத்தரவு வாங்கிக்கொண்டு கிளம்பி விட்டான்.

அன்று இரவே வழக்கம்போல் "அடியே, உன்னை எத்தனை நாளாய் கேட்கிறேன். எனக்கு ஜாண்துணி கொடு என்றால் கொடுக்கமாட்டே னென்கிறாயே. எனக்குக் காரணம் தெரியவில்லையே" என்று விடிய விடிய இரைச்சல்தான். மந்திரவாதி வைத்துவிட்டு சென்றான் என்பது அப்பொழுது தான் தெரிந்தது ஊராருக்கு.

அடுத்தநாள் விளக்கு வைக்குமுன் வீட்டிற்கு ஒரு ஆளாக வந்து மணி யக்காரர் வீட்டில் கூடும்படி தண்டோரா போடப்பட்டது. அவ்வாறே ஜனங்களும் சாயந்திரம் கூடினார்கள். எல்லோரும் சாப்பிட்டுவிட்டே வந்து விட்டபடியால் சந்தடி செய்யாமல் மூலைக்கொருவராய் படுத்துக்கொண்டு தூங்குபவர்கள்போல் பாவனையுடன் இருந்தார்கள். மணியும் 11 ஆயிற்று. வாசு வாத்தியார் அம்மணமாக தன் வீட்டுக் கதவினிடம் வந்து வழக்கம் போல் துணி கேட்டார். அங்கிருந்தோர் எல்லோருக்கும் கைகால் நடுக்க மெடுத்து, மயிர் கூச்சல் எடுத்தது. இருந்தாலும் முன்னாடியே ஏற்பாடு செய்து கொண்டபடி அவரவர்கள் தீவட்டியைக் கொளுத்திக்கொண்டு, அய்யரை சூழ்ந்து கொண்டார்கள். அய்யரோ 'பேந்தப் பேந்த' விழித் தார். பிறகு எல்லோரும் விஷயம் என்னவென்று விசாரிக்க தன் கதையை நடந்தபடியே சொன்னார். அவர் தன் சமாசாரங்களைச் சொல்லுமுன் தனக்கு ஒரு துணி கொண்டுவரச் சொல்லி அதை உடுத்திக்கொண்டு கீழ்வருமாறு சொன்னார்.

"நான் சொல்வதைக் கேட்டு என்னை யாரும் 'கலாட்டா' செய்யக் கூடாதென்று முதலில் உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். அதாவது நான் களத்தி லிருந்தபோது ஒரு ஆள்வந்து டம்பமங்கலம் டமாரவய்யர் வீட்டு முகூர்த்தத்திற்கு சொல்லியிருந்த சாஸ்திரி வரத் தவறிவிட்டாரென் றும், நான் சென்றால் சரியான ஊதியம் கிடைக்குமென்றும் சொன்னான். மறுநாள் சூரியோதயத்திற் கெல்லாம் முகூர்த்தம் நடக்கவேண்டி யிருந்த தால் நான் வீட்டிற்கு வந்துபோக சௌகரியப்படவில்லை. ஆகையால் வழி யில் பார்த்த வஜ்ரனை களத்திற்கு காவலாய் இருக்கும்படி சொல்லிவிட்டுச் சென்றேன். கல்யாணம் முடிந்தபிறகு, அடுத்த ஊரில் வேத பாராயண கோஷ்டியில் என்னையும் சேர்த்துக் கொண்டார்கள். எல்லாம் முடிந்ததும் ஒரு வாரத்திற்கு முன் நான் சம்பாவனை பெற்றுக்கொண்டு, ரூபாயை எக் கில் சொருகிக்கொண்டு, அரிசி, தேங்காய் இவைகளைத் தலையின்மேல் வைத் துக்கொண்டே வந்தேன். வழியில் இருந்த ஆறு ஒன்றைக் கடக்கும்படி நேரிட்டது. அந்த ஆற்றில் சிறிது வெள்ளம் சென்று கொண்டிருந்தது. இடுப்பளவு தண்ணீர்தானே என்று இறங்கிவிட்டேன். ஆனால் நடு ஆற்றில் வந்தபோது வெள்ளப்பெருக்கு ஜாஸ்தியாகி என்னை அடித்துக் கொண்டு போகும் நிலைமையில் வந்துவிட்டது. நான் என்னாலானமட்டும் சமாளித் கொண்டு கரையேற முயன்றேன். என் வேஷ்டியையும் மூட்டையையும் எவ்வளவோ ஜாக்கிரதையாய் பிடித்துக் கொண்டிருந்தும் அவைகள் ஆற் றில் அடித்துக்கொண்டு போய்விட்டன. நான் அவைகளைப் பிடித்திருந்த பிடியை விடாவிட்டால் 'முதலுக்கே மோசம்' என்பதுபோல் எனக்கே ஆபத்து வந்துவிடும்போ லிருந்தது. ஆகையால் துணி மூட்டை இவைகள்

போனாலும் போகிறது என்று அவைகளைப் பிடித்திருந்த பிடியை விட்டு என்னைக் காப்பாற்றிக்கொள்ள முயன்றேன். அதுவரையில், 'தலைக்கு வந்தது தலைப்பாகையுடன்'—என் ஒருவர் சொல்வதையே நாமும் சொல்ல வேண்டும்—'காலுக்கு வந்தது செருப்புடன் போயிற்று' என்பதுபோல் நான் எப்படியோ தப்பினேன். ஆனால் எனக்கு கௌபீனம்கூட இல்லை. நான் இருட்டாகும்வரை அவ்விடமே இருந்து பிறகு ஊரையடைந்தேன். சுமார் பதினொருமணிக்கு வீட்டையடைந்து கதவை இடித்தேன். யாரும் திறக்கவில்லை. ஒருவேளை நல்ல தூக்கத்திலிருக்கலாமென்று என்னாலான மட்டும் இரைச்சலிட்டும், கதவைத் தட்டியும் பார்த்தேன். பிறகு துணியாவது கொஞ்சம் கொடுங்களென்றேன். அதற்கும் பதிலில்லை. இவ்விடம் நடந்த இந்த விசேஷங்களை நான் கண்டேனா என்ன?

உதயமாகும் சமயமாய்விட்டது. அதற்குமேல் என்ன செய்வதென்று தெரியவில்லை. எனக்குத்தான் கௌபீனம் (கோமணம்)கூட இல்லையே. நேராக களத்திற்குச் சென்றேன். அவ்விடம் ஒன்றுமில்லை. எல்லாவற்றையும் வீட்டிற்கு எடுத்து சென்றிருப்பார்களென்று நினைத்துக் கொண்டேன். பிறகு காட்டு கழனியோரம் உள்ள ஆலமரப் பொந்தில் மறைந்து கொண்டிருந்தேன். துணியில்லாமல் போகவே பகலில் வெளியே வர வெட்கப் பட்டுக்கொண்டே இராக் காலங்களில் தோப்பிற்குச் சென்று தேங்காய், மாங்காய் முதலியவற்றைத் தின்று தண்ணீர் குடித்து காலந் தள்ளினேன்.

இரண்டு நாளைக்குமுன் வைத்தி கவுண்டனும் விச்சு ரெட்டியும் நான் இருந்த மரத்தின் சமீபத்தில் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்ட பிறகுதான் எனக்கு விஷயங்கள் விளங்கின. நான் அப்பொழுது அவர்களிட மிருந்தாவது கொஞ்சம் துணி வாங்கிக்கொள்ளலாமென்று அவர்களைக கூப்பிட்டது தான் தாமதம். அவர்கள் ஓட்டம் பிடித்தனர். நீங்களெல்லாம் நினைத்திருப்பது சுத்தத்தவறு. இறந்தது வஜ்ஜிரனே தவிர நானல்ல' என்று சொல்லி முடிக்குமுன், எல்லோரும் "ஐயோ! பாவம்!!" என்றார்கள்.

இக்கதையைச் சொல்லி முடித்த பின் தன் மனைவியிடம் சென்றார். இவருடைய கதையைக் கேட்ட அவள் இவரைப் பார்ப்பதற்கு வெட்கப்பட்டாள். அவள் வேஷத்தைப் பார்த்த வாசு வாத்தியார் மாத்திரம் என்ன வெட்கமற்றவரா?—தலையைக் குனிந்து கொள்ளாமலில்லை. வாத்தியார் உயிருடன் வந்தது முதல் வனஜாவுக்கு யாரைப் பார்ப்பதென்றாலும் வெட்கம்தான்.

* * * *

வாத்தியார் வரவர, நாளுக்கு நாள் இளைத்து கொண்டேவந்தார். காரணமென்ன? வந்த வரும்படியும் போய், வனஜாவின் வடிவமும் போய் விட்டதேயென்றுதான். உடம்போ 'ஸ்கெலிடன்' என்று சொல்வார்களே அம்மாதிரியாகிவிட்டது. இதே கவலையினால் காயலாவாய் படுத்து விட்டார். இன்றைக்கோ, நாளைக்கோ சாமான் வாங்க வேண்டியதுதான் என்றிருந்தது.

இவ்விதம் நித்யகண்டம் பூர்ணாயுசாய் இருக்கும்போது, ஒருநாள் பக்கத்தாத்து பரசுராம தீக்ஷதர் வந்தார். வந்தவர், "என்ன சாஸ்திரியளே, பேருக்கு 'டெர் பிஸ்வீப் ஸ்டேக்'கிலே ஐம்பதினாயிரம் ரூபாய் விழுந்திருக்

கிறதாமே. பட்டணத்துலே இருந்து என் பேரன் வந்தான் காலையிலே. நேத்து பட்டணத்துக்கு வந்த 'லிஸ்ட்'லே உங்கள் பேரும் இருந்ததாம். பட்டணத்துலே இருக்கவாள்ளாம் 'பட்டிகாட்டிலேயிருக்க பாப்பானுக்கு வந்த யோகத்தைப் பார்த்தாயா?' என்று அமர்க்களப்பட்டாளாம். உங்கபாடு 'வேட்டு'தான்'' என்றார். அவ்வளவுதான் எமன் பக்கத்தாத்து தீக்ஷிதர் மூலியமாய்தான் வந்தான்போலிருக்கிறது. ''ஹா! எனக்கா? நன்றாய் தெரியுமா?'' என்றார். மேற்கொண்டு ஒன்றும் பேசவில்லை. ஹிருதய வெடிப்பினால் சிவபதவியை அடைந்துவிட்டார்.

அம்மாள் முன்னதாகவே போட்டுக் கொண்ட வேஷம் பலித்துவிட்டதல்லவா?

---

# மலைத் தெய்வம்



(கோட்டாறு-தே ப. பெருமாள்.)

மானில மக்கள் மலைத்திடவே
மாவுடல் பெற்ற மாமலையே!
கானிசை கூட்டுங் கறங்கருவி
கவினுர் நீர்நிலை சுனையோடு
தேனிழி சோலை சூழ்வதனுல்
திகழும் இன்பக்கவின் பெற்ருய்
வானவர் நாட்டு வனப்பினையும்
வாங்கு மழகிங்கு நீயுடையாய்! (1)

மன்னர்க் குற்ற காவலனுய்
மானிலங் காக்கும் திறனுடையாய்!
இன்னல் தந்திடு பகைவர்நின்
இருக்கை கண்டு ஏக்குறுவார்
என்ன சேனை வந்தாலும்
எங்கள் வெற்றி நிச்சயமே
உன்ன உன்ன உன்பெருமை
உரைக்க ஒல்லுந் தன்மையதோ? (2)

மாலைப் பொழுது ஆகலுமே
மயில்கள் பலவுங் கூட்டமொடு
கோலச் சிறகை விரித்தாட
கொண்ட காட்சி அதனுலே
வேலை மறந்து நிலைகொண்ட
விலங்கின் கூட்டம் பலகொண்ட
நீலக்கவின் கொள் நெடுமலையே!
நிகரில் இன்பத் தேவதையே! (3)

மலர்கள் விரிந்த மரக்கொம்பில்
மந்தி இருந்து விளையாட
அலகில் புள்ளினம் அருகமர்ந்து
அழகுக் கீதம் தாம்பாட
உலைவில் நாகம் உறையினிலே
உவந்த இசையில் தாமாட

கலைசேர் இன்பக் காட்சியினை
கண்டது யாங்கள் உன்னிடையே! (4)

சிங்கம் சினமதி விருப்ப
சிரித்தே பறவை மாத்திலெல்லை
அங்கம் கொதித்த அரியதனை
அணுகிக் கொல்ல வழிநோக்க
பொங்கிப் பெருகிய பெருங்காற்றில்
போந்த சிலந்தி முன்விழவே
அங்கம் தேய்த்து முனிவகற்றும்
அரிமா உடைய பெருமலையே! (5)

நாட்டின் விருப்பிற் கேற்றவண்ணம்
நல்ல மழையைக் கொணர்ந்திடுவை
வாட்ட முற்ற மக்கட்கு
வேண்டு மூக்க மளித்திடுவை
நாட்டம் பெற்ற பழந்தமிழர்
நின்னில் கண்டார் கடவுளையே
கோட்ட மில்லா நல்வாழ்வு
கொண்டார் அவர்கள் அறிகுவமே! (6)

மண்ணுலில் பிறந்து வாழ்ந்தோர்கள்
மடிந்து மடிந்து மாய்ந்தனரே!
எண்ணில் நினைக்கும் இறப்புண்டோ?
இவ்வுலகில் என்றும் இருப்புடையாய்!
கண்ணுதல் பெருமான் கருணையினல்
கருதிய வரனும் பெற்றுவிட்டாய்!
புண்ணிய மக்கள் புகழினையே
புரிய வைக்கும் புகழ்மலையே! (7)

முருகில் தோய்ந்த பழந்தமிழர்
முருகை இறையாய்க் கண்டார்கள்
முருகின் உறையாம் உன்னிடையே
முருகன் கோயிலும் அமைத்தார்கள்
முருகால் எல்லாம் எய்துவதும்
முறையாய் யாங்கள் அறிந்துவிட்டோம்
முருகைக் கொண்ட பெரியோயே!
முருகை அளிப்பாய் எங்கட்கே! (8)

---

# விசித்திர விநோதம்

உபாத்தியாயர்:—"என்டா சீனு 'பத்து' நூறு, ஆயிரம் இவைகளுக்குள் வித்தியாசம் என்ன?"

சீனு:—வித்தியாசமே கிடையாது சார்.

உபா:—எப்படிடா முட்டாள்?

சீனு:—ஒன்பது பத்து சேர்ந்தால் தொன்னூறு என்றும் ஒன்பது நூறு சேர்ந்தால் தொன்னூறு என்றும் ஒன்பது நூறு சேர்த்தால் தொள் ஆயிரம் என்றும் பெயர்கள் வருகிறதினுல் சார்.

***



போலீஸ் அதிகாரிகளிடமிருந்து ஒரு கிராம முனிசிபுக்கு தப்பியோடின ஒரு கைதியின் ஆறுவித போடோ படங்கள் அனுப்பப்பட்டன. அவைகளைத் தன் தலையாரியிடம் கொடுத்து கைதியைக் கண்டு பிடிக்கும்படி சொன்னுர். ஒரு வாரத்திற்குப் பிறகு கிராம முனிசிபு தலையாரியைக் கூப்பிட்டு, "என்னடா, ஆளைக் கண்டு பிடித்தாயா?" எனக் கேட்டார்.

தலை:-சாமி, நீங்கள் என்னிடம் கொடுத்த ஆறு போடோபடி ஐந்து பேர்களைப் பிடித்து சாவடியில் அடைத்து இருக்கிறேன். ஆருவது கைதிதான் இன்னும் அகப்படவில்லை.

***

புதிய தலைவர்:—என்ன சார், பொது நன்மையைக் கருதி ஏதாவது நல்ல திட்டம் தயாரித்து அமுலுக்குக் கொண்டுவர ஏற்பாடு செய்தால் ஜனங்கள் புகார் செய்ய ஆரம்பித்து விடுகிறுர்களே.

பழய தலைவர்:—அதை என் சார் சொல்கிறீர்கள்? அதெல்லாம் நம் அதிர்ஷ்டம்தான். யார் கண்ணில் குச்சி எடுத்துக் குத்தினுலும் நம்மைக் கெட்டவனென்றே கூறி விடுகிறுர்கள். அதனுல் தான் நீங்கள் தலைவர் பதவிக்கு வந்ததால் நானும் அதை வேண்டாமென விட்டுவிட்டேன்.

கிருபண கிச்சா:—"அரையணு போனாலும் சரி, ஆயிரம் ரூபாய் வந்தாலும் சரி. நம் விரோதியை இந்த வருஷம் ஒரு கை பார்த்துவிட்டே தீர வேண்டும்."

அவன் தந்தை:—"போடா அசடே! நீ பேசும்போதே தெரியவில்லையா? அரையணு நஷ்டத்திலே தானே சொல்கிறாய்!

***

ஏஜெண்டு:—ஐயா நம்ப கம்பெனி கொசு வலைகள் அழகுள்ளது; மிகவும் விலை கம்மியாகக் கொடுக்கிறோம். ஒருதரம் வாங்கினவர்கள் திரும்பத் திரும்ப அடிக்கடி வாங்குகிறார்கள். நீங்களும் ஒன்று வாங்கிப் பாருங்களேன்.

வீட்டுக்காரர்,—வேண்டவே வேண்டா மய்யா! நம்மால் அடிக்கடி வாங்கக்கூடிய சக்தியில்லை.

***



குப்பா சாஸ்திரி:—சாமிநாத சாஸ்திரி நேற்றிரவு தன் மனைவியிடம் நடந்து கொண்டதை அவன் சொன்னதிலிருந்து, அவன் உன்னைப்போல் பெண்டாட்டிக்குப் பயந்தவனில்லையென்று நன்கு தெரிகிறது.

அப்பு சாஸ்திரி:—"ஆமாம்; அவன் மகா வெண்ணெய்வெட்டி வீரனென்று எனக்குத் தெரியுமே?— ஆத்துக்காரி ஊம் என்று மூச்சு விடுவதற்குள், 'தோப்புக் கரணமா போட வேண்டும்; இதோ தேவி! எத்தனை யென்று மாத்திரம் எண்ணிக்கொள்' என்று கூறிச் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து தோப்புகரணம் போடுவானே. அதுமாதிரி நான் பெண்சாதிக்குப் பயந்தவனில்லை யென்று நீ சொல்வது உண்மைதான்.

***

ஒரு ஆபீஸ் குமாஸ்தாவுக்குத் தன் தகப்பனாரிட மிருந்து ஒரு தந்தி வந்தது. அதில் "உனக்குக் கலியாணம் நிச்சயம் செய்திருக்கிறேன். மானேஜரிடம் லீவு கேட்டு உடனே பதில் தந்தி யடிக்கவும்" என்று கண்டிருந்தது. தந்தியையும் எடுத்துக்கொண்டு குமாஸ்தா மானேஜரிடம் சென்று தந்தியைக் காட்டி ஒரு வாரத்திற்கு லீவு கேட்டார்.

மானேஜர் ஒரு கடிதத்தில் ஏதோ எழுதிக் கொடுத்தார். அதில் "கீழ்க் கண்டபடி பதில் தந்தி கொடு" என்றிருந்தது. "ஆபீஸில் வேலை மிகுதியால் இப்பொழுது லீவு கிடைக்கவில்லை. அதற்காகக் கலியாணத்தை நிறுத்த வேண்டாம். வைத்த தேதியிலேயே நடத்திவிடவும்."




**ஜனன மரணங்களைக் காட்டும் கடிகாரம்**

ஜெர்மனி பெர்லின் நகரில் ஒரு கடிகாரம் இருக்கிறது. அது 5 நிமிஷத்துக்கொருமுறை 9 தடவை மணி அடிக்குமாம். அதன் அறிகுறியென்னவென்றால் அந்த நேரத்திற்குள் ஜெர்மனியில் சராசரி 9 குழந்தைகள் ஜனனமாயிருக்கின்றன என்பதைக் காட்டுகிறதாம். அக்கடிகாரத்துக்குப் பக்கத்தில் இரு 'பல்பு'கள் உள்ள இன்னொரு கடிகாரம் இருக்கிறது. அது 5 நிமிஷத்துக்கொருமுறை சுழலும். அச்சமயம் 7 பேர் மரணமடைந்தனர் என்பதை அது அறிவிக்கிறதாம். இவ்விதம் இது தினசரி ஜனனமரண விகிதத்தைக் காட்டுவதற்கு உதவியாக இருக்கிறதாம்.

***

**நஷ்டஈடு பெற்ற திருடன்**

ஸ்காட்லந்தில் ஒரு திருடன் ஒரு வீட்டில் புகுந்து திருடிவிட்டு வெளியேறும்போது காவலிருந்த நாய் அவன்மீது பாய்ந்து கடித்தது. கூச்சல் கேட்டு அவ்வீட்டார் திருடனைப் பிடித்து தண்டனை யடைய வைத்தனர். தண்டனை முடிந்து வெளிவந்ததும் அத்திருடன் தன்னை நாய் கடித்து தொந்தரவு செய்ததற்காக அவ்வீட்டுக்காரன் மீது வழக்குத் தொடர்ந்து நஷ்டஈடு பெற்றானாம்.

***

**தேளா ? பல்லியா ?**

உருவத்தைப் பார்த்தால் தேள்கள் போலிருக்கின்றன; அவைகள் தலைகளில் கொம்புக ளிருக்கின்றன. ஆனால் அவை தேள்க ளல்லவாம். அவை ஒருவகையான பல்லிகளாம். கொம்புகளின் வழியாக அவை மூச்சுவிடுகின்றனவாம்.

***

**காகித உடையணியும் சந்நியாசி**

பிரிட்டனில் கிராய்டன் என்னுமிடத்திற்குச் சமீபத்திலுள்ள கிராமமொன்றில் ஒரு சந்நியாசி இருக்கிறார். இவர் காகிதத்தால் செய்த உடைகளைத்தான் தரித்துவருகிறார். காகிதத்தாலாய செருப்புகளைத்தான் உபயோகிக்கிறார். காகித உடை உடலாரோக்கியத்துக்கு உகந்ததென அவர் கூறுகிறார்.

***

**வாரண்டுக்குப் பயந்து பெட்டிக்குள் புகுந்த பெண்**

பாரனஸ் பெர்லிகரி என்ற அமெரிக்கப் பெண் ஒருகாலத்தில் இருமல்லிரப் வியாபாரஞ் செய்து பெரும் பணக்காரியாயிருந்தவள். அவளுக்கு எதிர்பாரா நஷ்டம் உண்டாகி கடன் ஏற்பட்டுவிட்டது. ஒரு கடன்காரர் எடுத்திருந்த வாரண்டிற்குப் பயந்து இவள் ஒரு பெட்டிக்குள் புகுந்து ரயில் பிரயாணஞ் செய்தாளாம்.




பம்பாய் பிரதம மந்திரி ஸ்ரீ. கேர் தமது 10-வயது மகனுடன் ஹிந்தி வகுப்பில் ஒன்ருக வாசித்தாராம். இதை அவர், சமீபத்தில் ஹரிபுரக் காங்கிரஸை யொட்டி நடந்த ஹிந்தி சபையில் எடுத்துக் கூறினர்.

* * * *

பாபிலோன் நகரில் ஒரு மனிதன் தன் வீட்டை மற்ருெருவனுக்கு விற்றுவிட்டான். அவன் பெயருக்கு மாற்றக் களிமண்ணில் தஸ்தாவேஜு செய்தான். இத்தஸ்தாவேஜு மெஸபடோமியாவில் அகப்பட்டதாம். அதைத் தற்சமயம் சிகாகோ மியூசியத்தில் வைத்திருக்கின்றனர்.

* * * *

இரும்பு பித்தளை பக்கெட்டுகள் அடிப்புறம் தேயாதிருக்க இப்போது ஒரு புது முறை கையாளப்படுகிறது. பக்கெட்டுகளின் அடிப்பாகத்தில் ரப்பர் வளையங்கள்—மூன்று ரப்பர் கால்கள்—அமைக்கப்பட்டு வருகிறது.

* * * *

முதன் முதலாக மூக்குக் கண்ணாடியைக் கண்டுபிடித்தவர் ஸால்வினே டெக்லி அர்மாதி என்னும் இத்தாலியர் எனக் கூறப்படுகிறது.

* * * *

1933-ம் ஆண்டில் குத்துச் சண்டையில் உலகச் சாம்பியனுயிருந்த பிரைமோ கார்னீரா என்பவன் இப்போது புடாபெஸ்ட் நகரில் சோற்றுக்கு வழியின்றி இரத்த நோயினல் பீடிக்கப்பட்டு ஒரு ஆஸ்பத்திரியில் கிடக்கிருனும். கடைசியாக அவன் லீராய் ஹேரன்ஸ் என்ற நீகிரோவிடம் குத்துச் சண்டையில் தோற்றுவிட்ட பிறகே அவன் இவ்விதக் கேவல நிலைமையடைய நேர்ந்ததாம்.

* * * *

பொன்னைவிட விலை மதிப்புள்ள 'ரேடியம்' என்னும் பொருளைக் கண்டுபிடித்த மேரிக்யூரி என்பவளுக்கு அதன் வாயிலாகப் பெரும் பொருளும் செல்வாக்கும் கிடைக்கக்கூடியதாயிருந்தது. ஆனல் அவள் அவைகளை விரும்பவேயில்லை. எப்போதுமுள்ள எளிய வாழ்வே தனக்கு அமையும் என்று அவளிருக்கிருளாம்.

* * * *

அமெரிக்காவில் இப்போது கண்ணுடியால் சீட்டுக் கட்டு தயாரிக்கப் படுகிறது. நியூயார்க் பிரபுக்களுக்குக் 'கண்ணுடித்தகடு ஆஸ்' பிடித்தால் தான் ஷோக்கா யிருக்கிறதாம்.

* * * *

திருவனந்தபுரம் சித்திர கலாசாலையில் தேர்ச்சிபெற்ற ஸ்ரீ ஸாலன் என்பார் பனை ஓலையிலேயே தயாரித்த யானை ரதத்தில் சிலோன் கவர்னருக்கு வரவேற்புப் பத்திரம் வைத்துக் கொடுக்கப்பட்டதாம்.

# ஆசிரியர் குறிப்புக்கள்

## சுபாஷ் பாபுவின் தலைமை உரை

ஹரிபுராவில் கூடிய ஐம்பத்தோராவது காங்கிரஸ் மகாநாட்டில் தலைமை வகித்த ராஷ்டிரபதி சுபாஷ் சந்திரபோஸ் நிகழ்த்திய தலைமைப் பிரசங்கம் ஒரு முதல்தரமான அரசியல் யாதாஸ்தாகும். நம் தேசம், பிரிட்டிஷ் சர்க்கார், உலகம் ஆகியவற்றிற்குச் சம்பந்தப்பட்ட எல்லாப் பிரச்னைகளையும் அவர் தமது பிரசங்கத்தில் ஆராய்ச்சி செய்திருக்கிறார். பிரிட்டிஷ் ஏகாதிபத்யம் ஒரு விசித்திரமான அரசியல் அமைப்பு என்றும் அதை நல்ல முறையில் திருத்தி யமைக்காவிட்டால் அது நிலைகுலைவது திண்ணமென்றும், ஏகாதிபத்யங்கள் பிரித்தாளும் சூழ்ச்சி செய்வதால் அவைகளே கஷ்டத்தில் சிக்கிக் கொள்கின்றன வென்றும் கூறியுள்ளார். இந்தியா ஏகாதிபத்ய எதிர்ப்புப் போராட்டத்தை நடத்தி ஒற்றுமையையும் பலத்தையும் தக்கபடி அடைய வேண்டுமென்றும், சமஸ்தான மக்கள், சிறுபான்மையோர் தொழிலாளர் விவசாயிகள் ஆகியோர் அனைவரும் காங்கிரஸ் கொடியின் கீழ் நின்று சுதந்தரத்தை யடையப் பாடுபட வேண்டுமென்றும் வற்புறுத்தி யுள்ளார். தேசீய புனர்நிர்மாணம் செய்வதற்கான வழிகளையும், விவசாயம், பெரிய தொழில்கள், குடிசைத் தொழில்கள் ஆகியவற்றை அபிவிருத்தி செய்ய வேண்டிய அவசியத்தையும், காங்கிரஸ் மந்திரி சபைகளின் கடமைகளையும் விளக்கியுள்ளார். சமஷ்டி அரசியலால் ஏற்படக் கூடிய தீமைகளை விவரித்து அதை எதிர்க்க வேண்டிய அவசியத்தையும், காங்கிரஸ் ஸ்தாபனத்தை நவீன இயக்கங்களுக்குரிய சகல சாதனங்களுடனும் அமைக்க வேண்டுமென்பதையும் தெளிவுபடுத்தி யிருக்கிறார். இறுதியில் ராஜீயக் கைதிகளின் பரிதாபகரமான நிலைமையை விளக்கி விட்டு அவர்களை விடுவிகக வேண்டிய அவசியத்தை வற்புறுத்திய பின் காங்கிரசில் தீவிரவாதிகளும், இதரர்களும் ஒற்றுமையுடன் இருக்க வேண்டுமென்று தெரிவித்து விட்டு மகாத்மாவின் ஒத்துழைப்பும் சேவையும் எவ்வளவு அவசியமானதாக இருக்கிறதென்பதையும் விவரித்துள்ளார். ஆனால் சமதர்மிகள் போன்ற தீவிரவாதிகள் காங்கிரசில் தங்கள் கட்சியை நடத்திக் கொண்டு போகலாம் என அவர் கூறுவது பொருத்தமல்ல. சமதர்மிகள் காங்கிரசில் இருந்து கொண்டு பொது மக்களிடையே பொதுவான சமதர்மப் பிரசாரம் செய்வதிலும் நமக்கு ஆக்ஷேபமில்லை. ஆனால் காங்கிரசின் ஒரு கட்சியாக இருந்து கொண்டு கார்யக் கமிட்டி செய்துவிட்ட முடிவுகளைப் பற்றியும் பொதுக் கூட்டத்தில் சர்ச்சை செய்வது போன்ற வேலைகளைச் செய்து கொண்டிருக்க அனுமதிப்பது சரியல்ல. இதைப் போன்ற விஷயங்களை அவர் அனுபவத்தில் உணர்வார் என்று நம்புகிறோம்.

---

## ஹரிபுரா காங்கிரசின் செய்தி

ஹரிபுரா காங்கிரஸ் கூடுவதற்கு முன் இருந்த சந்தர்ப்பங்கள் பல. மகாநாட்டில் பற்பல சிக்கலான பிரச்னைகளும் விவாதங்களும் தோன்றி பற்பல கருத்துகளுடையவர்களிடையே மனஸ்தாபமும் சச்சரவும் கூட ஏற்படுமோ என்று அஞ்சியதும் உண்டு. தீவிரவாதிகள் காங்கிரஸ் மந்திரி சபைகளின் வேலைகளையும், கார்யக் கமிட்டியின் சில முடிவுகளையும் எதிர்ப்பார்களென்று எதிர்பார்க்கப்பட்டது. சமஸ்தானப் பிரஜைகள் பிரச்னை, கிஸான் சபைகள் சம்பந்தம், சமஷ்டி திட்ட எதிர்ப்பு முதலிய விஷயங்க

ளில் கார்யக் கமிட்டி செய்த முடிவில் சமதர்மிகள் அவ்வளவாகத் திருப்தி இல்லாதவர்களாக இருந்தார்கள். எனினும் எதிர்பாராத வகையில், காங்கிரஸ் கூடும் சமயத்தில் தேசத்தில் ஒரு பெரிய அரசியல் நெருக்கடியை வைசிராய் உண்டாக்கி விட்டார். இதை மறைமுகமான ஆசீர்வாதம் என்றே கருதவேண்டியிருக்கிறது. காங்கிரசிலுள்ள தீவிர வாதிகளும் சரி, மற்றவர்களும் சரி, தேசாபிமானிகளாதலாலும், தேசத்திற்காகத் தியாகம் செய்தவர்களாதலாலும் நெருக்கடியான சமயத்தில் அபிப்பிராய பேதங்களை மறந்து பரஸ்பரம் விட்டுக் கொடுத்து ஒற்றுமையுடன் வேலை செய்வார்கள் என்பதை ஹரிபுரா காங்கிரசில் நிரூபித்து விட்டார்கள். எல்லாப் பிரச்னைகளிலும் கார்யக் கமிட்டியின் தீர்மானங்கள் நிறைவேறிவிட்டன. பீஹார், ஐக்யமாகாண மந்திரிகளின் ராஜிநாமாவால் ஏற்பட்ட அரசியல் நெருக்கடி சம்பந்தமான மகாத்மாஜியின் தீர்மானம் நிறைவேறியதும் காங்கிரசின் பலத்தையும் கட்டுப்பாட்டையுமே காண்பிக்கின்றது. கிராமத்தில் நடந்த ஒரு காங்கிரஸ் மகாநாடு இவ்வளவு சிறப்பாக முடிவுற்றதாலும், இரண்டு லட்சத்துக்கு மேற்பட்ட ஜனங்கள் கூடியிருந்ததாலும் கிராமங்களில் காங்கிரசின் செய்தி எவ்வளவு தூரம் பரவி இருக்கிறதென்பதும், தேச மக்களிடையே காங்கிரசுக்கு எவ்வளவு மகத்தான செல்வாக்கு ஏற்பட்டிருக்கிறதென்பதும் தெளிவாகிறது. ஆங்கில கனவான் லார்ட் சாமுவேல் அவர்களும் மக்களின் உற்சாகத்தையும், ஸ்தாபனத்தின் கட்டுப்பாட்டையும் கண்டு பிரமித்தாரென்றால் நாம் காங்கிரஸ் மகாசபையின் பெருமையைப் பற்றியும் கூற வேண்டுமா? ஹரிபுராவில் காணப்பட்ட ஒற்றுமையும் கட்டுப்பாடும் தேசம் பூராவும் பரவி சகல விதங்களிலும் காங்கிரஸ் வேலைகள் ஒழுங்காக நடைபெற வேண்டுமென்பதே எமது ஆர்வம்.

---

## நன்முறையில் நடைபெற்ற நிர்வாகம்

பலராலும் பாராட்டத்தக்க முறையில் காங்கிரஸ் மந்திரிகள் ஏழு பெரிய மாகாணங்களில் வேலை செய்து வருவதால் பொதுவாக இந்தியா முழுவதிலும் புதுவிதமான உணர்ச்சியும் நிர்வாக தோரணையும் காணப்படுகிறது. காங்கிரஸ் மந்திரிகள் தேர்தல் சமயத்தில் தேர்தல் விக்ஞாபனத்தில் கூறப்பட்ட வேலைகளையெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாகச் செய்து முடிக்கத் துணிந்தார்கள். முதலில் அரசாங்கத்தின் அடக்குமுறைக்கு ஆளாகியிருந்த ஸதாபனங்கள், நபர்கள் ஆகிய பலருக்கும் விடுதலையளித்தார்கள். பிறகு விவசாயிகளுக்கும் வியாபாரிகளுக்கும் நன்மை செய்தார்கள். நிர்வாகத்திலேயே ஒரு புதுவிதமான மாறுதலை தேசீய தோரணையில் உண்டாக்கினார்கள். அரசியல் கைதிகளை விடுதலை செய்ததாலோ, தொழிலாளர்களுக்குப் புது உற்சாகத்தை அளித்ததாலோ அமைதிக்கும் சமாதானத்துக்கும் எங்கேனும் பங்கம் ஏற்படுமோ என்று தோன்றியபோது தக்க முறையில் அதிகாரத்தைச் செலுத்தி அப்படிப்பட்ட அசந்தர்ப்பங்களை அடக்கிப் போடவும் பின்வாங்கவில்லை. ஏனெனின் அரசாங்கப் பொறுப்பை ஏற்றுக்கொண்ட பின் சரியான முறையில், கண்டிப்பான தோரணையில் நிர்வாகத்தை நடத்த வேண்டாமா? தங்களுடைய அதிகாரத்துக் குட்பட்ட எல்லா விஷயங்களையும் பொதுஜனநன்மைக்கும், காங்கிரசின் கௌரவத்துக்கும் ஏற்ற முறையில் நிர்வகித்து வந்தார்கள். காங்கிரஸ் மந்திரிசபை

களின் வேலைகளை வைசிராய் முதல் பல ஆங்கிலேயர்களும், பிரிட்டிஷ் சர்க்காரின் பிரதிநிதிகளும் பாராட்டி யிருக்கின்றனர். இந் நிலைமையில் காங்கிரஸ் மந்திரிகள் தங்கள் தேர்தல் விக்ஞாபன வேலைத் திட்டத்துக் கேற்ப எல்லா அரசியல் கைதிகளையும் விடுதலை செய்ய முற்பட்டபோது பீஹாரிலும் ஐக்ய மாகாணத்திலும் ராஜீய நெருக்கடி தோன்றியது துரதிர்ஷ்டமான சம்பவமே யாகும்.

## மகாத்மாஜி சாதித்த காரியம்

எல்லா அரசியல் கைதிகளையும் விடுதலை செய்வதென்றால் பலாத்கார குற்றத்துக்காகத் தண்டிக்கப்பட்டவர்கள் உள்பட என்றுதான் அர்த்தம். பாவம்! அவர்களும் தங்கள் தேச பக்தியின காரணமாகத்தான், விடுதலை ஆர்வத்தின் மிகுதியால்தான் அத்தகைய காரியங்களில் இறங்கினர். அவர்களுடைய முறையை நாம் ஆதரிக்க முடியாதென்றாலும் தேச பக்தியைப் பாராட்டாமல் இருக்க முடியுமா? இப்போது தேசத்தின் நிலைமை மாறி விட்டது. பயங்கர இயக்கத்தில் சம்பந்தப்பட்டவர்க ளெல்லாம் தங்களுக்குப் பலாத்காரத்தில் நம்பிக்கை இல்லை யென்றும், மகாத்மாஜியின் அஹிம்சா தர்ம முறையாலேயே இந்தியாவுக்கு நன்மை கிடைக்கு மெனப் பூரண நம்பிக்கை ஏற்பட்டு விட்டதாயும் பகிரங்கமாகத் தெரிவித்து விட்டார்கள். மகாத்மாஜி சாதித்த காரியங்களில் இது மிகப் பெரிய காரியமாகும். காங்கிரஸ் பதவி ஏற்ற பின் இத்தகைய ராஜீயக் கைதிகள் பலர் விடுதலை யடைந்திருக்கிறார்கள். மகாத்மாஜியின் தலையீட்டின் காரணமாக வங்காளத்திலும் கூட எத்தனையோ கைதிகள் விடுதலை செய்யப்பட்டனர். பீஹார், ஐக்கிய மாகாணம் போன்ற காங்கிரஸ் சர்க்காருக்குட்பட்ட மாகாணங்களில் ராஜீயக் கைதிகள் இன்னமும் சிறையில் இருப்பதென்றால் அது சகிக்கக் கூடியதல்ல. இந்த ஒரு சிலர் விடுதலை யடைவதால் இந்தியாவிலேயே அமைதியும் சமாதானமும் கெட்டுவிடும் என்று கூறுவது சரியான சமாதானமாகாது. இதனால் அமைதிக்கு எவ்விதத்திலும் பங்கம் வராது என்று மகாத்மாஜியும் உறுதி கூறினார்.

## வைசிராய் இழைத்த தவறு

பீஹாரிலும் ஐக்ய மாகாணத்திலுமுள்ள சிறு தொகையினரான ராஜீயக் கைதிகளை விடுதலை செய்வதாக மந்திரிகள் உத்தரவிட்ட பின்னர் வைசிராய் தலையிட்டதால் சமீபத்தில் அவ்விரு மாகாணங்களிலும் மந்திரிகள் ராஜிநாமா செய்யவும் அரசியல் நெருக்கடி ஏற்படும்படியான நிலைமை உண்டாகிவிட்டது. இதிலிருந்து மாகாண சுயஆட்சியின் உண்மைத் தன்மை வெளியாகிவிட்டது. மாகாணத்தில் ஆட்சி செலுத்தும் பொறுப்பு முழுதும் மந்திரிகளுடையது என்று கூறப்பட்டது. மந்திரிகள் நேர்மையான முறையில் தங்கள் காரியங்களைச் செய்து வரும்போது, கவர்னர்களும் பொறுமையுடன் இருக்கையில் மாகாணத்துக்கு அப்பாற்பட்ட வைசிராய் விசேஷ அதிகாரம் செலுத்தியதன் காரணம் என்ன? வைசிராய் செய்த வேலை தவறானது என்பதில் ஆக்ஷேபமே இல்லை. இந்தியர்கள் மட்டுமல்ல; பிரிட்டிஷாரும் பிரிட்டிஷ் பத்திரிகைகளும் கூட வைசிராய் அவசரப்பட்டுத் தவறான காரியத்தைச் செய்துவிட்டார் என்று கூறிய

தை நாம் காண்கிறோம். லார்டு லோதியன் அவர்களே, கவர்னர் எச்சரிக்கை செய்திருந்தால் போதுமென்றும், எவ்வித பேராபத்தும் ஏற்பட்டு விடாதென்றும், பிரமாதமான சம்பவங்கள் ஏற்பட்டால் அப்போது அதிகாரத்தைப் பிரயோகித் திருக்கலாமென்றும் கூறியது கவனிக்கத்தக்கது. இதே அபிப்பிராயத்தைத்தான் மகாத்மாஜியும் தமது அறிக்கையில் வெளியிட்டிருக்கிறார். இதுவரை காங்கிரஸ் மந்திரிசபைகளின் வேலைகளைப் புகழ்ந்த வைசிராயும், இதர பிரிட்டிஷ் சர்க்கார் பிரதிநிதிகளும் இப்போது திடீரென்று தங்கள் மனோநிலையை மாற்றிக்கொண்டதன் நோக்கமென்ன? காங்கிரஸ் மந்திரிசபைகளின் வேலை அவர்களை அலுப்படையச் செய்துவிட்டதோ என்று மகாத்மாஜி சந்தேகித்ததில் தவறு என்ன இருக்கிறது? பிரிட்டிஷாரே காங்கிரஸ் மந்திரிகளை வெளியேற்றிவிடக் கருதிவிட்டார்களா என்றும் கேட்கப்பட்டது. மாகாணத்தின் அமைதியையும் சமாதானத்தையும் காப்பது மந்திரிகள் பொறுப்பு. அவர்கள் அதைச் சமாளித்துக் கொள்வார்களென்று வைசிராய் பொறுமையுடன் இராமல் தலையிட்டு அதிகார துஷ்பிரயோகம் செய்து ராஜீய நெருக்கடியை உண்டாக்கி விட்டார்.

---

## எளிதில் தீர்ந்துபோன நெருக்கடி

ஆனால் காங்கிரஸ் தரப்பிலும் சரி, சர்க்கார் தரப்பிலும் சரி சமரச உணர்ச்சியும், நல்லெண்ணமும் இருந்ததால் அந்த நெருக்கடி பிரமாதமாக முடிந்து விடாமல் எளிதில் தீர்ந்துபோனதைக் குறித்து மிகவும் சந்தோஷப் படுகிறோம். வைசிராயும் காங்கிரஸ் மந்திரிகளின் உரிமையைப் பறிக்க வேண்டுமென்னும் எண்ணத்துடன் தாம் தலையிடவில்லை யென்றும், தேசத்தில் அமைதியையும் சமாதானத்தையும் காப்பதில் ஆவல்கொண்டே இவ்வாறு குறுக்கிட்டதாகவும், இப்போ தும் மந்திரிகளும் கவர்னர்களும் கலந்து சமரஸமாக ராஜீயக் கைதிகளை விடுதலை செய்வதில் தமக்கு ஆக்ஷேபமில்லை யென்றும் தெரிவித்துவிட்டார். மகாத்மாஜீயும் இரண்டு மாகாணங்களில் ஏற்பட்ட அசந்தர்ப்பத்தையே காரணமாகக் கொண்டு தேசம் முழுவதிலும் ஒருவிதமான நெருக்கடியை உண்டாக்கி விடாமல் நிதான புத்தியுடன் காரியத்தைச் சாதித்துக் கொள்வதிலேயே கண்ணுங் கருத்துமாக இருந்தார். எனினும் காங்கிரசின் கௌரவத்தையும் விட்டுக் கொடுக்கவில்லை. ராஜப் பிரதிநிதியின் நடத்தை தவறானதென்று கண்டித்தார். பிரிட்டிஷ் சர்க்கார் அறை கூவுமாயின் அதை ஏற்கவும் தயாராக இருப்பதாக அறிவித்தார். ஆனால் சமாதானத்துக்கும் தயாராக இருந்தார். இவ்வாறு இருதரப்பிலும் சமரச உணர்வும், நட்பு முறையும் காணப்பட்டால் நெருக்கடி எளிதில் தீர்ந்துவிட்டது. பழையபடி, ஐக்கிய மாகாணத்திலும், பீஹாரிலும் காங்கிரஸ் மந்திரிகளே அரசியலை யேற்று நடத்தி வருகின்றனர். அவர்களது உத்தரவுப்படி ராஜீயக் கைதிகள் விடுதலை செய்யப்பட்டு வருகின்றனர். இந்த ஒரு விஷயத்தி லிருந்தே மகாத்மாஜிக்கு இன்னமும் தேசத்திலும் காங்கிரசிலும் எவ்வளவு செல்வாக்கு இருக்கிறதென்பது நன்கு தெரிகிறது. மகாத்மா காங்கிரஸில் நாலணா மெம்பராக இல்லாவிட்டாலும் கூட

அவரே அம் மகாசபையின் நடுநாயகமாக விளங்குகிறார். சுபாஷ்பாபு, ஜவ ஹர்லால் முதலிய தீவிர சுபாவம் படைத்த தலைவர்களும் மகாத்மாஜி யைக் கலந்து வேலை செய்வதே சிலாக்யமானதென்று உணர்ந்திருக்கின்ற னர். அவர் உயிரோடிருக்கும் வரையில் அவரே தேசத்தின் மகத்தான தலைவராக விளங்குவார் என்பது நிச்சயம்.

---

## சமஷ்டி திட்டத்தை மாற்று விட்டால்?

காங்கிரஸ் மகாசபை நடத்திவரும் விடுதலைப் போராட்டம், புதிய இந்திய அரசியல் சட்டத்தில் மாறுதல் செய்யவேண்டு மென்பதற்காக அல்ல. பூரண சுயேச்சையை அடைந்து தன் அரசியலைத் தானே வகுத் துக்கொள்ளக் கூடிய உரிமையை இந்தியா அடைவதற்காகவும், அத்தகைய நிலைமையைத் தேசத்தில் ஏற்படுத்து வதற்காகவுமே காங்கிரஸ் மகாசபை உழைத்து வருகிறது. இப்போது மாகாண சுயஆட்சியில் அதிகாரம் வகித்து மக்களுக்குத் தேசீய முறையில் உதவி செய்துகொண்டே போராட்டத்தையும் வலுப்படுத்த முயற்சிக்கிறது. அது போலவே இந்த அரசியல் சட்டத்தில் பிரஸ்தாபிக்கப் பட்டுள்ள அகில இந்திய சமஷ்டி திட்டத்தையும், இடைக்காலத்துக்காக வேனும் பயன்படுத்திக் கொள்ளலா மென்றாலும் அது மிகப் பிற்போக்கான தன்மை வாய்ந்ததாயும், மாகாண சுயஆட்சி எல்பதன் மூலம் கிடைத்த சொற்ப அதிகாரங்களையும் பறித்து விடக் கூடியதாயும் இருப்பதால் அதைப் பகிஷ்கரிப்பதென்றே காங்கிரஸ் தீர்மானித்திருக்கிறது. ஆனால் காங்கிரஸ் விரும்புகிற முறையில் அத் திட்டத்தைத் திருத்தி மத்ய அரசாங்கத்தில் பொறுப்பாட்சி ஏற்படும்படி செய்யப்படுமாயின் அதையும் பயன்படுத்திக் கொண்டு மேலும் போராட் டத்தை நடத்தக் காங்கிரஸ் முயற்சிக்கும். அவ்வாறு எத்தகைய திருத்த மும் செய்யாமல் இப்போதுள்ளபடியே சுமத்தப்படுமாயின் தேசத்தில் மீண் டும் பெரிய அரசியல் நெருக்கடியும், தீவிரமான கிளர்ச்சிகளும் நடக்கும் என்பது திண்ணம். இந்திய அரசியல் சட்டத்தில் கூறப்பட்டுள்ள சமஷ்டி திட்டத்தை இந்தியாவில் எவரும் மதிக்கவில்லை என்பது கவனிக்கத்தக் கது. லார்ட் லோதியனே நேரில்வந்து இங்குள்ள நிலைமையை நன்கு அறிந்து கொண்டுபோயிருக்கிறார். அப்படியிருந்தும் காமன்ஸ் சபையில், இந்திய அரசியல்சட்டம் சமஷ்டி சம்பந்தமாக ஏதேனும் திருத்தப்படுமா என்று கேட்கப்பட்டபோது பிரிட்டிஷ் பிரதம மந்திரி இல்லை என்று ஒரு வார்த்தையில் சுலபமாகப் பதில் கூறியது நமக்கு ஆச்சர்யத்தையே அளிக் கிறது. இப்போது முதலே நிலைமையை என் தெளிவுபடுத்த வேண்டு மென்னும் எண்ணத்துடன் ராஜதந்திர முறையில் கூறப்பட்ட பதிலாக அது இருக்குமாயின் நாம் கவலைப்படவில்லை. இன்றேல் பிரிட்டிஷ் சர்க்கார் இந்திய நிலைமையை அறியும்படியான வகையில் கிளர்ச்சியை வலுப்படுத்த வேண்டியது அவசியம். திருத்தமேயின்றிச் சுமத்தப்படுமா யின் என்ன ஏற்படும் என்பதைப் பகிரங்கமாகவும் தைரியமாகவும் கூறிவிட வேண்டும். உலகம் இன்றுள்ள நிலைமையில் இத்தகைய முதல்தரமான ஒரு நெருக்கடியைப் பிரிட்டிஷார் இந்தியாவில் சிருஷ்டித்துக் கொள்ளத் துணிவார்களென்று நாம் நினைக்கவில்லை. ஆண்டவன் அவர்களுக்குச் சரி யான வழிகாட்டுவார் என்றே நம்புகிறோம்.

தொடர் கதை.

# மாயா விரோதி

ஸி. எஸ். இராமன், எம். ஏ., எல். டி.



"உன் துப்பாக்கிச் சண்டையில உதவியாளாக நான் இருப்பதை நீ மறுக்கிறாயே," என்று ஆச்சரியம் கலந்த குரலில் மோகனரங்கம் கூறினார்.

"நான் எனக்கு, உதவி செய்பவர்களைத் தேர்ந்து எடுத்துவிட்டேன். நீ கொஞ்சம் இருந்தால் நலம். நான் என் மனைவியைக் கண்டு பேசிவிட்டு வந்துவிடுகிறேன்," என்று போலி செங்கோட்டை ஜெமீந்தார் சொல்லியதும் நேராக தோட்டத்தை நோக்கிச் சென்றார்.

மாளிகையை யடுத்திருந்த தோட்டத்தில் ஜெமீந்தாரினி மிக்க குழப்பமடைந்த முகத்தோடு உலவிக் கொண்டிருப்பதை மாயாவிரோதி, கண்ணுற்று சிறிது பயமடைந்தான். இருந்தாலும் அவளுடைய கரத்தைப் பற்றிக் கொண்டு, "நான் வக்கீல் மோகனரங்கத்தைக் கண்டு வெறுப்பு மிகுதியாக அடைகிறேன். சில நிமிஷங்களுக்கு முன்பு, அவன் உன்னோடு பேசிக்கொண்டிருந்தான். உன்னை ஏதோ துன்புறுத்துவதாக நான் நினைக்கிறேன். உன்னிடம் பேசிவிட்டு அவனைத் துரத்திவிடலாம் என்று நினைக்கிறேன். உன் அபிப்பிராய மென்ன? நீ கூறினால் அவனுடைய கழுத்தைத் திருகிவிடலாம் என்று......," என்று மாயாவிரோதி கோபத்தோடு சொன்னான்.

அதைக் கேட்ட இந்திரா திடுக்கிட்டாள். "ஐயோ, நீங்கள் ஏன் அவரோடு பகைத்துக் கொள்ளவேண்டும்? அவர் உமது ஆப்த நண்பர் அன்றோ?" என்றாள்.

அவளுடைய பதில் மாயாவிரோதிக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. அவள் மோகனரங்க முதலியாருக்குப் பரிந்து பேசுவாள் என்று அவன் கனவிலும் கருதவில்லை.

"இவள் மோகனரங்கனைக் காதலிக்கிறாள்!......" என்று செங்கோட்டை ஜெமீந்தார் நினைத்தார். "இந்திரா, அவனை நான் சாப்பிடுவதற்கு இருக்குமாறு சொல்லட்டுமா?" என்று அவளுடைய மனதின் போக்கை அறிந்துகொள்ள கேட்டார்.

"வேண்டாம். நாளைய மறுநாள் அவரை அழைக்கலாம்," என்றாள் இந்திரா.

சிறிது நேரமானதும் அவள் தோழியுடனும் பாலகிருஷ்ணனோடும் தனது மாமியாருடைய வீட்டிற்குச் சென்று, செங்கோட்டை ஜெமீந்தாருடைய நடத்தையில் சிறிது மெச்சும் வகையில் ஏற்பட்டிருக்கும் மாறுதலைச்

சொல்லவேண்டும் என்று மனம் விழைந்தாள். அந்த பெரிய சீமாட்டி தனது மகனைப் பார்ப்பதில்லை என்று முன்பு செய்திருந்த வார்த்தையை இந்திரா நினைத்துக் கொண்டாள்.

கொஞ்ச நேரம் சென்றதும் ஜெமீன்தாரினி இந்திரா தான் நினைத்த வாறே மீனாட்சி அம்மாளைப் பார்க்கச் சென்றாள். மீனாட்சி யம்மாளின் அந்தரங்க சேடியான சரோஜாவை அச்சீமாட்டியின் சிறு வீட்டில் சந்தித் தாள்.

"நீங்கள் வந்தது எனக்கு மிக்க சந்தோஷம். சீமாட்டியவர்களுக்கு உடம்பு அசௌகரியம் ஏற்பட்டிருக்கிறது" என்று சரோஜா சொன்னாள்.

மாயாவிரோதி மோகனரங்க முதலியார் இருக்கும் இடத்தை யடைந் தான்.

"நாளைக்கு அடுத்தநாள் நம்முடன் சிற்றுண்டி யெடுத்துக்கொள்ள நீ வரவேண்டும்" என்று போலி ஜெமீன்தார் புகன்றார்.

"எதற்கும் நான் பார்க்கிறேன்.........ராஜம், நாம் முன்போல் பழைய சிநேகிதர்கள்தானே?" என்று வக்கீல் கேட்டார்.

"ஆம்...ஆம்...முன்போலவே" என்றார் ஜெமீந்தார்.

மோகனரங்கம் சந்தோஷத்தால் ஜெமீந்தாருடைய கரத்தைக் குலுக் கினார். மாயாவிரோதி மிகவும் அழுத்தமாகவே முதலியாருடைய கை விரல்களை வேண்டுமென்று அமுக்கிவிட்டதால் அவர் வலி பொறுக்கமாட் டாமல், "ராஜம், என்ன இது? என் கை விரல்களை ஒடித்துவிடுவாய் போலும்!" என்று சொன்னார்.

மாயாவிரோதி புன்னகை புரிந்தான். "நான் போய்வருகிறேன்," என்று முதலியார் சொன்னார்.

மோகனரங்கம் போனதும் மாயாவிரோதி வாரந்தாவையடைந்து, "இந்திரா! இந்திரா!" என்று அன்பு மிகுதியால் சொல்லிக் கொண்டான்.

பத்து நிமிஷங்கள் ஆனதும் சிங்காரதேவரும் ஜெமீந்தாரின் காரிய தரிசி பிரசாத்தும் அங்கே வந்து துப்பாக்கி சண்டையைப் பற்றி சில விஷ யங்களை ஆராய்ந்து பேசினர். விஜயபாஸ்காப் பிரபு குறிதவறாமல் சுடுவ தில் மிக்க சமர்த்தர் எனும் செய்தியை சிங்காரதேவர் ஜெமீந்தாரிடம் சொன்னார். அதைக் கேட்ட பிரசாத் மிக்க பயந்துபோய் மாயாவிரோ திக்கு ஆபத்து நேராமல் இருக்க வேண்டுமென்று தெய்வத்தை பிரார்த் துக் கொண்டான். மறுநாள் காலை ஒன்பது மணிக்கு துப்பாக்கிச் சண்டை நடைபெறும் என்பதைக் கேடடதும் சௌடிக்கு (பிரசாத்துக்கு) ஆவி துடி துடித்துக் கொண்டது. என் இந்தமாதிரி சச்சரவில் தனது நண்பன் சிக் கிக்கொள்ள வேண்டும் என்று தனது மனதைக் கேட்டான். அதேமாதிரி மனநிலை சிங்காரதேவரும் கொண்டிருந்தார்.

சிங்காரதேவர் அந்தமாளிகையில் தூங்குவதற்குப் போய்விட்டார். சௌடப்பன் மிக்க விசனமிகுதியால் அழவாரம்பித்துவிட்டான். "ஐயோ! நீர் இப்படி ஏன் சண்டைக்கு முற்படவேண்டும்?" என்றான்.

"நீ அஞ்சாதே. நான் உன்னை எனது உயிலில் ஞாபகப்படுத்திக் கொள்கிறேன்" என்று மாயாவிரோதி தைரியம் கொடுத்தான்.

"நீர் ரொம்பவும் உதார குணம் கொண்டவர். நீர் பிரசித்திபெற்ற அப்பிரபுவோடு சண்டை செய்து இறந்துபோனால் நான் மட்டும் உயிர் வைத்துக்கொண்டிருப்பேனா?" என்றான் காரியதரிசி பிரசாத்.

அப்பொழுது இந்திரா பாலகிருஷ்ணனுடன் அங்கே தோன்றினாள். காரிதரிசியைக் கண்டு ஆச்சரியமடைந்தாள்.

மாயாவிரோதி இந்திராவின் பாலனை அன்போடு எடுத்துக்கொண்டான்; விளையாடினான். அந்த நேரத்தில் தனது காரியதரிசியை அறிமுகப்படுத்திவைத்தான். பிறகு தனது தாயார் சௌக்கியமாக இருக்கிறாளா என்பதைக் கேட்டான்.

"அவர்களுக்குப் பரவாயில்லை, சரோஜா உமது அன்னையைச் சரியாகப் பார்த்துக்கொண்டிருக்கிறாள். டாக்டர் சரியாக மருந்து கொடுக்கிறார்," என்று இந்திரா சொன்னாள்.

"என்னை நினைத்துக் கொண்டார்களா?" என்று மாயாவிரோதி கேட்டான்.

"இல்லை. உம்மைப் பற்றி அவர்கள் பேசப் பிரியங்கொள்ளவில்லை."

"ஸ்திரீகள் மிகவும் அதிசயமான பிராணிகள்!" என்று கூறினான் மாயா விரோதி."

"இந்து, நான் மிக்க அவசரமான வேலையை கவனிக்கவேண்டும். வேண்டுமானால் இரவு பத்து மணிக்கு நீ ஒரு கோப்பை காப்பி கொண்டு வந்து எனக்கு கொடுக்கலாம்," என்று சொல்லிவிட்டு, அங்கு நின்றும் அகன்றான்.

நேராகத் தனது அறைக்குச் சென்றான். அங்கு உயில் ஒன்றை எழுதினான். ஒருகால் விஜயபாஸ்கரப் பிரபுவோடு சண்டை செய்கையில் யமனுலகு போக நேரிட்டால் என்ன செய்வது என்று யோசித்தானதலால் தனது திரண்ட ஆஸ்தியை உயில்வாயிலாகப் பிரித்துப் பங்கிடவேண்டும் என்று கொண்டு, அதைத் தயார் செய்துகொண்டிருந்தான்.

இந்திராவின் காதலை அடையுமுன் விஜயபாஸ்கரப் பிரபுவுடன் துப்பாக்கிச் சண்டை செய்து உயிர் துறக்க வேண்டும் என்பதை யோசித்தான். மனம் கலங்கினான். தான் இறந்துபோனால் இந்திராவின் மனது மாறி தன்னைப் பற்றிப் பெருமையான நல்லெண்ணத்தைக்கொள்வாள் என்று நினைத்துக் கொண்டான். ஒருகால் தான் உயிருடன் திரும்பிவந்தால்......அவள் எத்தனை சந்தோஷங்கொள்வாள் என்று யோசித்தான். அவளுடைய மானத்தை நிலை நிறுத்தும் பொருட்டன்றோ சண்டை? இந்திரபோகம் உடனே கிடைக்கும் என்று நினைத்து சந்தோஷ முகமலர்ச்சி கொண்டான் ......பிறகு விசனமும் அடைந்தான். குறிதவறாமல் துப்பாக்கி சண்டை செய்யும் விஜயபாஸ்கரர் முன் தான் எம்மாத்திரம் என்று எண்ணியதும் சிந்தை சிதறி, மனம் பதறினான். அங்ஙனம் கொஞ்சநேரம் கழிந்தது. திடீரென்று ஓர் எண்ணம் தோன்றியதும் விளக்கை அணைத்துவிட்டு, சப்

தம் இல்லாமல் அந்த தூங்கும் மாளிகையில் பூனைபோல் நடந்து, சௌடப்பன் அறையை யடைந்தான்.

சௌடப்பன் அறை மாளிகையின் ஒரு கோடியில் தனிமையில் இருந்தது. சௌடப்பன் துப்பாக்கிச் சண்டையை நினைத்துக்கொண்டேயிருந்தானாதலால் நித்திரை வாராமல் தவித்துக்கொண்டிருந்தான். அச்சமயத்தில் மாயாவிரோதி வந்ததைக் கண்டு, ஆச்சரியம் கொண்டான்.

"என்ன ?" என்று மெதுவாகக் கேட்டான்.

"இதுதான்" என்று மாயாவிரோதி சொல்லிக்கொண்டே தனது அகன்ற மார்பைக் காண்பித்தான். அங்கு பலவகையான அம்புகள்போல் சித்திரம் இருப்பதையும் நடுவில் சில எழுத்துக்கள் இருப்பதையும் போலி காரியதரிசி கண்டான். அதில் "மாயாவிரோதி" என்று தோலின் மீது எழுதியிருப்பதைக் கண்டு, யோசித்தான். அவனுக்கு அதிகமாக ஒன்றும் விளங்கவில்லை.

"ஒன்றும் தெரியவில்லையா ?" என்று மாயாவிரோதி கேட்டபின், "சரி, நான் சொல்லுகிறேன். நான் பிரபுவுடன் சண்டை செய்யவேண்டும் அன்றோ ? நான் குண்டினால் தாக்கப்பட்டால், சிங்கார தேவரும் நீயும் டாக்டருடைய உதவியை நாடி எனது மார்பு காயத்தைப் பார்க்க நேரிடும். அப்பொழுது இந்த வார்த்தையை நீங்கள் பார்த்தால் என்ன சொல்லுவீர்கள் ?"

"ஐயோ !" என்று காரியதரிசி பயந்து கூறினான்.

மாயாவிரோதி மறுபடியும் ஷர்ட்டைப் போட்டுக் கொண்டான்.

"நாம் இந்த இடத்தைவிட்டு வெளிச் செல்வோம் வா" என்று முத்தைய செட்டி கட்டளையிட்டான்.

இருவரும் தோட்டத்தைக் கடந்து சமுத்திரக் கரையருகே போய் உட்கார்ந்து கொண்டார்கள். அங்கு நிர்மானுஷ்யமாக இருந்தது. காற்று மட்டும் வீசிக்கொண்டிருந்ததால் சிறிது சப்தம் செய்துகொண்டிருந்தது.

"நீர் என் மார்புத் தோலையும் மாற்றிக்கொள்ளவில்லை ?" என்று மெல்லிய குரலில் போலி காரியதரிசி கேட்டான்.

"நானும் அதைத்தான் கேட்கிறேன்......ஆனால் அவன் இறந்துபோய் விட்டான். கைகளையும் மூக்கையும் மாற்றுகையில் இந்த மார்புத் தோலையும் மாற்றிவிடுமாறு கேட்டுக்கொண்டேன். மறுத்துவிட்டான். இதில் ஏதாவது சூது செய்ய நினைத்தானோ தெரியவில்லை. எனக்கு அவன்மேல் சந்தேகம் உண்டு, அவன் இறந்துபோய்விட்டான் என்பதை அறிந்த பின்னரே எனக்கு தைரியம் உண்டாயிற்று" என்று மாயாவிரோதி சொன்னான்.

சிறிது அமைதி: இருவரும் மௌனமாக இருந்தனர்.

"நான் பிரபுவைக் கொன்றுவிடவேண்டும்," என்றான் முத்தைய செட்டி.

"அது முடியாமல் போனுல்? உம்மை அவன் சுட்டுக் கொன்றுவிட்டால்?"

"அதுதான் எனக்கும் மிக்க கவலையாக இருக்கிறது" என்றுன் மாயா விரோதி.

அப்பொழுது காலை மூன்று மணியிருக்கும். நிர்மானுஷ்யமாகவிருந்த அந்நேரத்தில் சிறிது தூரத்தில் ஒரு மனிதன் வருவதை இருவரும் கண்டனர். மாயாவிரோதிக்கு மட்டும் வருவது யார் என்பது நன்ருகத் தெரியும்.

"பிரபு!" என்று ஆச்சரிய மேலீட்டால் மெல்ல சொன்னுன்.

அவனுடைய விரோதி! அன்று காலையில் சண்டை செய்பவர்! முத்தைய செட்டியின் உயிரை நீக்கக்கூடியவர்!

மாயாவிரோதி க்ஷணநேரத்தில் ஒரு தீர்மானத்தைச் செய்து முடித்தாலுதலால் சௌடப்பனிடம் குசுகுசு வென்று பேசினுன் என்றுலும் தனது எஜமானனுடைய உயிரை மதித்து அவன் சொல்லியதற்கு இசைந்தான்.

இருவரும் இருந்த இடம் விஜயபாஸ்கரப் பிரபுவுக்குத் தெரியாது. என்? அவர் சிறிது தூரத்தில் மெல்ல யோசனையுடன் வந்துகொண்டிருந்தார். அவர் நித்திரை வராமையால் காற்றுவாங்க அகால வேளையில் அங்கே வந்துகொண்டிருந்தார். யோசனையில் ஆழ்ந்துகிடந்ததால் அவர் மாயாவிரோதியையாவது சௌடப்பனையாவது பார்க்கவில்லை. மேலும் அவர் கடற்கரை யருகே கடலைப் பார்ப்பதும் கீழே பூமியைப் பார்ப்பதுமாக வந்துகொண்டிருந்தார். மாயாவிரோதி இருந்த இடத்தை யடைந்த பொழுது அவர் கடலை நோக்கியவாறு நின்ருர். காற்று ரம்மியமாக அடித்துக்கொண்டிருந்ததால் அலைகளை நோக்கியவாறு இருந்தார். அப்பிரபு இருந்த இடம் கடல் ஆழம் அதிகம்.

மாயாவிரோதி தனது விரோதி நிற்பதை அறிந்து சௌடப்பனேடு மெதுவாய் பிரபுவின் முதுகுப்பக்கம் வந்தான். விஜயபாஸ்கரர் தமக்கு நேரிடவிருக்கும் ஆபத்தை உணராமல் கடலை நோக்கியிருந்தார். மாயாவியும் சௌடப்பனும் திடீரென்று பிரபுவை கடலினுள் தள்ளிவிட்டார்கள்.

கொஞ்ச நேரம் இருவரும் கொதிப்படைந்த மனதோடு நின்ருர்கள். பத்து நிமிஷங்களுக்குப் பின் விஜயபாஸ்காருடைய சவம் கரைக்கு ஒதுக்கப் பட்டதை இருவரும் கண்டு சந்தோஷ மடைந்தார்கள்.

"தொலைந்தான் பாதகன்!" என்று மாயாவிரோதி சொன்னுன். "நாம் இனி இங்கே இருக்கலாகாது. ஆபத்து விளையும், போவோம் வா," என்று மறுபடியும் காரியதரிசியிடம் சொல்லிக்கொண்டே வேகமாக தனது மாளிகையை யடைந்தான்.

(தொடரும்.)

---

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

ஈசுவர௵ பங்குனிமீ—கலியுகாதி 5039, சாலிவாகனம் 1860,
பசலி 1347, கொல்லமாண்டு 1113, ஹிஜரா 1356-57,
இங்கிலீஷ் 1938௵ மார்ச்மீ—ஏப்ரல்மீ

| பங்குனிமீ | மார்ச்சுமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | திங் | திர19-23 | மக49-33 | ம49-33சி | மீனரவி நா-2-50,ஷடசீதி புண்யகாலம் |
| 2 | 15 | செவ் | ச○14-48 | பூர47-15 | சி47-15அ | பௌர்ணமி, ஹோலிகா பண்டிகை ,காம தகனம் |
| 3 | 16 | புதன் | பௌ11-5 | உத்46-0 | அமி46-0ம | பங்குனி உத்திரம் |
| 4 | 17 | வியா | பிர8-45 | அஸ்46-10 | சித்60 | தானியஞ் செலவிட |
| 5 | 18 | வெள் | துதி7-55 | சித்48-5 | சித்60 | |
| 6 | 19 | சனி | திரி8-50 | சு51-33 | அ51-33சி | |
| 7 | 20 | ஞா | சது11-20 | வி56-40 | மர60 | |
| 8 | 21 | திங் | பஞ்15-45 | அனு60 | சித்60 | |
| 9 | 22 | செவ் | சஷ்21-20 | அனு3-13 | சிர3-13ம | |
| 10 | 23 | புதன் | சப்27-35 | கே10-38 | சி10-38ம | |
| 11 | 24 | வியா | அ434-8 | மூல18-20 | சித்60 | |
| 12 | 25 | வெள் | நவ39-55 | பூரா25-38 | பி25-38சி | |
| 13 | 26 | சனி | தச44-45 | உத்31-58 | சித்60 | |
| 14 | 27 | ஞா | ஏகா48-10 | திரு37-8 | அமி37-8ம | |
| 15 | 28 | திங் | து49-53 | அவி40-28 | சித்60 | மாடு வாங்க, கரிநாள் |
| 16 | 29 | செவ் | திர49-50 | சத42-20 | மர60 | பிரதோஷம், வருணி திர |
| 17 | 30 | புதன் | சது48-20 | பூர42-33 | அ42-33சி | மாசசிவராத்திரி [யோதசி |
| 18 | 31 | வியா | ●45-30 | உத்41-30 | சித்60 | சர்வத்திர அமாவாசை |
| 19 | 1938௵ ஏப்ரல்மீ 1 | வெள் | பிர41-25 | ரே39-23 | அமி60 | யுகாதி பண்டிகை |
| 20 | 2 | சனி | துதி36-40 | அஸ்36-28 | சித்60 | சந்திர தெரிசனம் |
| 21 | 3 | ஞா | திரி31-23 | பர33-3 | சித்60 | ஆண்டோளன் திரிதிகை |
| 22 | 4 | திங் | சது25-50 | கி✳29-23 | ம29-23அ | கருத்திகை, மாச சதுர்த்தி |
| 23 | 5 | செவ் | பஞ்20-15 | ரோ25-33 | அ25-33சி | சஷ்டி [விரதம் |
| 24 | 6 | புதன் | சஷ்14-30 | மிரு21-45 | சித்60 | கங்கோற்பத்தி, விவாகம் |
| 25 | 7 | வியா | சப்9-8 | திரு18-13 | ம18-13அ | அசேகாஷ்டமி |
| 26 | 8 | வெள் | அஷ்3-55 நவ59-5 | புன15-0 | சித்15-0ம | அவமாகம், ஸ்ரீராம நவமி, ஸ்ரீராம ஜெயந்தி |
| 27 | 9 | சனி | தச54-38 | பூச12-15 | சி12-15ம | தர்மராஜ தசமி |
| 28 | 10 | ஞா | ஏகா51-40 | ஆயி9-40 | சித்9-40ம | சர்வ, மத்வ ஏகாதசி |
| 29 | 11 | திங் | து47-58 | மக7-53 | ம7-53சித் | வாமனதுவாதசி [ங்களில்) |
| 30 | 12 | செவ் | திர-45-43 | பூர6-50 | சித்6-50அ | பங்குனி உத்திரம் (சிலவிட |
| 1 | 13 | புத | சது44-35 | உத்6-43 | அமி6-43ம | மேஷரவி நா-25-8, வருஷப் பிறப்பு |

| | | | |
|---|---|---|---|
| ச-சு சு-பு | செ | கே | |
| | 14-மே-புதன் 17-கும்-குரு 17-மே-சுக் | | |
| குரு | | | |
| | ராகு | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

'எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு''—திருவள்ளுவர்.



தொகுதி 23 } வெகுதான்யஞு சித்திரைமீ கஉ 1938ஞு ஏப்ரல்மீ 13உ { பகுதி 10

## கடவுள் வணக்கம்.

ஒன்றாகு மாய் எனக்கு எந்தையுமாய்
உடன் தோன்றினராய்
மூன்றாய் உலகம் படைத்து உகந்தான்
மனத்துள் இருக்க
என்றான் இமைய வர்க்கு அன்பன்
திருப்பாதிரிப் புலியூர்த்
தோன்றாத் துணையாய் இருந்தனன் தன்
அடியோங் களுக்கே. (1)

கருவாய்க் கிடந்து உன்கழலே நினையுங்
கருத்து உடையேன்
உருவாய்த் தெரிந்து உன்தன் நாமம் பயின்றேன்
உனது அருளால்
திருவாய்ப் பொலியச் சிவாயநம என்று
நீறு அணிந்தேன்
தருவாய் சிவகதி நீ பாதிரிப்
புலியூர் அரனே. (2)

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்அடி
என் மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டும்
இவ்வை யகத்தே
தொழுவார்க்கு இரங்கி இருந்து அருள்செய்
பாதிரிப் புலியூர்ச்
செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை மேல்வைத்த
தீ வண்ணனே. (3)

# அரும்பொருள் விளக்கம்

1, (இ-ள்.) அடியேனைப் பெற்று எடுத்த தாயும் தந்தையுமாய், என்னுடன் பிறந்த சகோதரர்களாய், மண்ணுலகம், விண்ணுலகம், பாதாள உலகம் ஆகிய மூன்று உலகங்களாய் அவைகளைத் தோற்றுவித்துக் காத்து வருபவன் உள்ளக் கமலத்தில் இருப்பதற்கு இசைந்தான்; தேவர்களுக்கு அன்பனும், திருப்பாதிரிப்புலியூர் என்னுந் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருப்பவனுமுள்ள இறைவன் தனக்கு அடிமைபூண்டொழுகும் அடியவர்களுக்குத் தோன்றாத் துணைவனாய் இருந்து வருகிறான். (எ—று.)

ஆண்டவன் ஒன்றாய், உடனாய் வேறாய் இருந்து எல்லா உயிர்களையும் ஆட்கொள்ளும் தன்மையை, திருநாவுக்கரசு சுவாமிகள் இப்பாட்டில் தெளிவுபடுத்தியிருக்கிறார்.

2. (இ-ள்.) திருப்பாதிரிப்புலியூர் என்னுந் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருக்கும் சங்கரனே தேவரீருடைய திருவருளினாலே நான் கருப்பையில் கிடக்கும்போதே தேவரீரது திருவடிகளைத் தியானிக்கும் கருத்துடையவனாயிருந்தேன்; நான் இவ்வுடம்பைப் பெற்று உலகில் உலவ ஆரம்பித்தபின்னர், தேவரீருடைய திருப்பெயரை மனனஞ் செய்து வரலானேன்: கடைசியாக எனது வாயினால் "சிவாய நம" என்று சூக்கும பஞ்சாட்சர மந்திரத்தை ஓதித் திருநீற்றை நெற்றியிலும் உடம்பிலும் திரிபுண்டரமாகவும், தூளணமாகவும் அணிந்து வருகிறேன்; ஆகவே தேவரீர் அடியேன்மீது கிருபைகூர்ந்து சாயுச்சிய பதவியான சிவகதியை அளித்தருள்வாய். (எ-று.)

இறைவன் திருவருளால் இளமையிலேயே அதுவும் கருவில் சிசுவாய் இருக்கும்போதே சிவஞானங் கைவரப்பெற்று அநுபூதியடைந்திருக்கும் நிலையையும், அத்தகைய தமக்கு சிவகதி சித்திக்கும்படி செய்வது அத்தியாவசியம் என்றும் அப்பர் சுவாமிகள் வேண்டிக்கொள்ளு முறையில் உலக மக்களுக்கு உண்மைநெறி இன்னதென உணர்த்துகிறார். இப்பரந்த உலகத்தில் அன்பு கொண்டு இறைஞ்சுபவர்களுக்குத் திருவுள்ளம் புரிந்தனர்.

3. (இ-ள்.) திருப்பாதிரிப்புலியூர் என்னும் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருக்கும் கங்கைமா நதியைச் சிவந்த சடாபாரத்தின் மீது தாங்கி நிற்கும் அக்னி நிறமேனி யுடைய சிவபெருமானே! புண்ணிய மூர்த்தி! அடியேன் வினைவசத்தால் மீண்டும் பிறப்பெடுத்து கேவலம் புழுவுடலைத் தாங்குவதாயினும், என் உள்ளத்தில் தேவரீருடைய திருவடியை மறவாதிருக்கும்படியான வரத்தை எனக்குத் தந்தருளல் வேண்டும். (எ-று.)

ஆகாமியக் கன்மத்தால் மறு பிறப்பெடுக்க நேர்ந்தால் மனிதப் பிறவியே யன்றி எப்பிறவியை அடைந்தாலும் ஆண்டவனை மறவாதிருக்கும் பெருநெறி தனக்குக் கிடைக்க வேண்டுமென்பார். 'புழுவாய்ப் பிறக்கினும்............வழுவாதிருக்க வரந்தர வேண்டும் என்றார். இவ்விதமே காரைக்காலம்மையாரும் சிவபெருமானை நோக்கி வேண்டுவதாக, "பிறவாதிருக்க வரந்தர வேண்டும், மீண்டும் பிறப்புண்டேல், இறைவா! உன்னை என்றும் மறவாதிருக்க வரந்தர வேண்டும், என்னும் அடிகளால் சேக்கிழார் அழகாக எடுத்துக் காட்டியிருப்பது இங்கு ஒப்பிட்டு நோக்கத்தக்கது.




# கழிந்த ஆண்டும் நிகழும் ஆண்டும்

நேற்றுடன் ஈசுவர ஆண்டு முடிந்துவிட்டது. இன்று முதல் வெகுதான்ய வருஷம் நடக்கிறது. ஆகவே சென்ற ஆண்டில் நமது தேசத்திலும் உலகத்திலும் நடந்த விஷயங்கள் யாவை என்பதுபற்றியும், நிகழும் ஆண்டில் தேச, உலக நிலை எவ்வாறு இருக்கும் என்பதுபற்றியும் ஆராய்வது நன்மை பயப்பதாகும். சென்ற ஆண்டில் இந்தியா சம்பந்தப் பட்ட வரையில், சிறப்பாக நமது சென்னை மாகாணத்தைப் பொறுத்தவரையில் அரசியல், சமூகப் பொருளாதார விஷயங்களில் சௌகரியம் ஏற்பட்டிருப்பதாகவே கொள்ளவேண்டும். ஏன்? ஒழுக்கமும், ஓரளவு உயர்வு பெற்றதென்றே கூறலாம். அரசியலில் ஏற்பட்ட மாறுதல் காரணமாகவே இத்தகைய நன்மைகள் ஏற்பட முடிந்தது. இத்தேசத்தைப் பலவகைகளிலும் சுரண்டுவதையே நோக்கமாகக் கொண்ட அன்னிய ஆதிக்கத்துக்குப் பக்கத் துணைவர்களாக இருந்த பிற்போக்கான அரசியல் கட்சியினரின் ஆதிக்கம் நீங்கி, தேசத்தின் விடுதலைக்காகவும் மகாஜனங்களின் நலத்துக்காகவுமே பாடுபடும் காங்கிரஸ் மகாசபை நம் தேசத்தின் ஏழு பெரிய மாகாணங்களில் அதிகாரத்தை ஏற்றுக்கொண்டது. அவ்வாறு ஏற்றுக்கொண்ட மாகாணங்களில் நமது மாகாணமும் ஒன்று. சென்னை மாகாணத்தில் காங்கிரஸ் அதிகாரம் ஏற்பட்டதால் அது ஜனங்களுக்கு இதமான காரியங்களைச் செய்வதிலேயே கண்ணும் கருத்துமாக

இருக்கிறது. சென்னை காங்கிரஸ் மந்திரி சபை முக்யமாக மக்களின் ஒழுக்க மேம்பாட்டிற்காகவே மதுவிலக்கைத் தனது கொள்கையாகக்கொண்டு சேலம் ஜில்லாவிலும் மதுவிலக்கு சட்டத்தை அமலுக்குக் கொண்டுவந்து விட்டது. விவசாயிகளின் கடன் நிவாரணத்துக்காக ஒரு சட்டமும் நிறைவேறி யிருக்கிறது. கைத்தறித் தொழிலின் பாதுகாப்புக்காக ஒரு சட்டம் கொண்டுவரப் பட்டிருப்பதுடன் அதன் அபிவிருத்திலும் சர்க்கார் சிரத்தை செலுத்தி வருகின்றனர். ஏழை விவசாயிகள் உப தொழில்களின் மூலம் தங்கள் வருவாயைப் பெருக்கிக் கொள்ளும் வகையில் கதர் தொழிலுக்கும் ஆதரவு ஏற்பட்டிருக்கிறது. இன்னமும் சமூக சீர்திருத்தம் சம்பந்தமாக விபசாரத் தடுப்பு மசோதா, தாழ்த்தப்பட்டார் பிரஜா உரிமை மசோதா முதலியனவும் கொண்டுவரப் பட்டிருக்கின்றன. தேசத்தின் பொது பாஷையாகிய ஹிந்திக்கு ஆதரவு காட்டப்படுவதுடன் தாய் பாஷைகளுக்கு அதிக மதிப்பும் செல்வாக்கும் ஏற்படுத்தவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. காங்கிரஸ் மகாசபையின் எதிரிகளும், சுயநலக் காரர்களும் வேண்டுமாயின் காங்கிரஸ் மந்திரி சபையின் மீது ஏதேனும் குறைகள் கண்டு பிடிக்கலாமே யொழிய உண்மையில் காங்கிரஸ் அதிகாரம் வகித்ததால் ஈசுவர ஆண்டில் பல நன்மைகள் நமது மாகாணத்துக்கும் தேசத்திற்கும் ஏற்பட்டிருக்கின்றன.

நமது தேசத்தின் நிலைமை இவ்வாறு இருக்கும்போது உலகத்தின் நிலைமை திருப்திகரமாக இல்லை. சென்ற ஆண்டில் சீனு ஜப்பான் யுத்தம் தொடங்கி இன்னமும் முடிந்தபாடில்லை. ஸ்பெய்னில் உள்நாட்டுக் கலகம் ஓய வில்லை. ஜர்மனி அக்கிரமமாக ஆஸ்திரியாவைக் கைப்பற்றி விட்டது. பிரான்சிலோ நாளுக்கொரு மந்திரி சபை ஏற்படுகிறது. ரஷ்யாவில் சதி வழக்குகள் கொண்டுவரப் பட்டுப் பலரும் மரண தண்டனை யடைகின்றனர். பிரிட்டனோ உறுதியான மனப்பான்மையும் கொள்கையுமின்றி ஐரோப்பாவையே யுத்தத்தில் ஆழ்த்தி விடும் வகையில் நடந்து கொண்டு வருகிறது. இதர வல்லரசுகளும் யுத்த தளவாடங்களை அதிகரித்துக் கொண்டே இருக்கின்றன. எந்த நிமிஷத்தில் உலகயுத்தம் ஏற்படுமோ என்று பலரும் அஞ்சுகின்றனர். நவீன நாகரிகத்திற்குப் பிறப்

பிடமான மேல் நாடும், கீழ்த் திசையில் சில பிரதேசங்களும் பலாத் காரத்திலும் மிருக பலத்திலும் நம்பிக்கை கொண்டு மானிட சமூகத்தை அழிக்கும் தன்மையைப் பெற்றிருக்கின்றன. ஈசுவர ஆண்டில் உலகத்தில் இந்தியா நீங்கலாக இதர தேசங்கள் கண்ட பலன் இதுதான்.

* * * *

இனி இன்று பிறந்த வெகுதானிய வருஷத்தில் என்ன நடைபெறுமோ என்று உலகமக்கள் ஆவலுடன் கவனித்து வருகின்றனர். இந்தியா சம்பந்தப்பட்ட வரையில் அரசாங்கத்தார் அநாவசியமாகக் காங்கிரஸ் வேலைத் திட்டத்தில் குறுக்கிடாமல் இருந்தால் தேசம் அமைதியுடனும் நல்ல முறையிலும் முன்னேற்ற மடையும். ஆனால் சமஷ்டி அரசியல் விஷயமாகப் பிரிட்டிஷார் பின்புத்தியுடன் நடந்து கொண்டுவிட்டால் இங்கும் அரசியல் நெருக்கடி ஏற்பட்டு அதனால் சமாதானமும் அமைதியும் குலைந்து தேசமக்கள் பலவித கஷ்டங்களுக்கும் உள்ளாக நேரிடும் ஏனெனின் எவ்வகையிலும் சமஷ்டியை எதிர்ப்பதென்று காங்கிரஸ் மகாசபை தீர்மானித்து விட்டிருக்கிறது. எல்லாம் வல்ல இறைவன் கிருபையால் பிரிட்டிஷ் அரசியல் வாதிகளுக்கு நல்ல ஞானம் உதயமாகி அவர்கள் இந்திய மகாஜனங்களின் நியாயமான கோரிக்கைகளை நிறைவேற்றி வைத்து நாட்டில் சமாதானமும் அமைதியும் நிலவும்படி நடந்து கொள்வார்களென்று நம்புகிறோம்.

உலகத்தின் நிலைமையையும் அப்படியே. உலகத்தில் மற்றொரு யுத்தம் ஏற்பட்டு மானிட சமூகமும், நாகரிகமும் அதனால் அழியாமல் இருக்க வேண்டுமானால், உலக சமாதானமும் அமைதியும் நிலவ வேண்டுமாயின் எல்லா தேசத்தினரும் பலாத்காரத்திலும், மிருக பலத்திலும் கொண்டுள்ள நம்பிக்கையைக் கைவிட்டு, இந்தியாவில் இப்போது அவதரித்துள்ள மகாத்மாஜியால் பிரசாரம் செய்யப்படுவதும், இந்திய வேதாந்தத்திலும் தத்துவங்களிலும் நீண்ட காலமாகவே உபதேசிக்கப் பட்டிருப்பதுமான அஹிம்சா, அன்பு, உண்மை, சகோதரத்துவம் ஆகியவற்றைக் கடைப்பிடிக்க வேண்டும். இந்த உயரிய தத்துவங்களைப் போதிக்கக் கூடிய அரிய சக்தி இந்தியா ஒன்றிற்குத் தான் உண்டு. அப்

படிப்பட்ட இந்தியா அன்னிய ஆதிக்கத்திற் குட்பட்டுப் பல வகையிலும் அல்லற்படும்போது உலகத்துக்கு உபதேசம் செய்வது எவ்வாறு? ஆதலின் உலக க்ஷேமத்துக்காகவும் இந்தியா விடுதலை யடைய வேண்டியது அவசியமாக இருக்கிறது. ஆகவே உலக சமாதானத்திலும் க்ஷேமத்திலும் கருத்துடைய அனைவரும் இந்தியாவின் விடுதலைக்குத் துணை புரியவேண்டியது அவசியம். இந்த வெகுதானிய வருஷம் இத்தகைய நல்ல நிலைமைகளை உலகிலும் இந்தியாவிலும் ஏற்படுத்த வேண்டுமென்பதே நமது பிரார்த்தனை.

* * * *

உலகத்திலும் இந்தியாவிலும் அஹிம்சா தர்மத்தை அடிப்படையாகக் கொண்ட சமூக அமைப்பு ஏற்பட்டால் தான் இத்தகைய சமாதானமும் உயரிய குணாதிசயங்களும் உலகில் நிலைநிற்குமென்பது நிச்சயம். அப்படிப்பட்ட அஹிம்சையை நமது வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டிய நாம் கேவலம் வாயில்லாப் பிராணிகளான ஆடுமாடுகளையும் கோழியையும் இறைவன் பெயரால் பலி இடுவது மகா பொல்லாத பாவமான காரியமன்றோ? பங்குனி முடிந்து சித்திரை பிறந்துவிட்டால் ஆடி, ஆவணி மாதம் வரையில் நம்மக்கள் மாரியம்மன் கோயில்களில் பலியிடுவது வழக்கமாக இருக்கிறது. இப்பால் ஜீவகாருண் சபைகளும், ஜீவரக்ஷா பிரசார சபைகளும் பல ஏற்பட்டு எவ்வளவோ சிரமத்துடன் பலி இடுவது கூடாதென்று பிரசாரம் செய்து வருகின்றன. எனினும் நீண்டகாலமாக அறிந்தோ அறியாமலோ இந்தப் பழக்கத்துக் குள்ளாகியவர்கள் அதை விடுவது கஷ்டமாக இருக்கிறது. பலி இடும் வழக்கத்தைக் கைவிட்டால் என்ன ஆபத்து நேருமோ என்று அஞ்சுகின்றனர். இதற்கெல்லாம் அறியாமையே காரணம். இதனுல் கோயில்களின் முன் இரத்த ஆறு ஓடுகின்றது. ஐயோ பரிதாபம்! இறைவன் இவ்வாறு இரத்த வெள்ளம் ஓடுவதைக் கண்டு சகிப்பானே? கருணைக் கடலாகிய இறைவன் பெயரால் பலி யிடுவது உயர்ந்த சமயத்தின் தத்துவத்துக்கே முரண்பட்டதாகும். எல்லா உயிரும் ஆண்டவன் கோயில் என்பதே சைவசித்தாந்தம். மேலும் பலியிடுவது நாகரிகம் முற்றியுள்ள இக் காலத்துக்குப் பொருத்தமானதுமல்ல. ஆகவே சென்ற ஈசுவர ஆண்டில் நம்

மக்கள் எவ்வாறு நடந்து கொண்டிருந்த போதிலும் இந்த வெகுதானிய வருஷத்திலேனும் பலி இடுவதன் கொடுமையை உணர்ந்து அந்த தவறான பழக்கத்தினின்றும் நீங்க வேண்டுமென்பதே நமது பிரார்த்தனை. அத்தகைய கருணையையும் நல்லறிவையும் ஆண்டவன் நம் மக்களுக்கு அளிப்பாராக. மேலும் இப்படிப்பட்ட அவசியமான சமூக சீர்திருத்தங்களை பொது நலத்தில் சிரத்தை யுடைய அரசாங்கத்தார் சட்ட மூலமாக வேனும் அமலில் கொண்டுவர முயற்சித்தல் நலம். சென்னையில் அதிகாரத்திலுள்ள காங்கிரஸ் சர்க்கார் பலி இடும் வழக்கத்தைத் தடுக்கும் சட்டத்தை இந்த வெகுதானிய வருஷத்தில் கொண்டு வந்து அஹிம்சா தர்மத்துக்கு அஸ்திவாரத்தைப் போட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம். இது காங்கிரஸ் கொள்கைக்கும் ஏற்றதொன்றாகும்.

ஓம் தத் சத்:

---

# மெய்கொள் கம்பரும் பொய்தீர் புலவரும்

—(0)—

(ரா. திம்மப்ப ஐயர்.)

பழந்தமிழ்ச் சங்கநூல்கள் எண்ணிறந்த பிற்றைத் தமிழ்ப்புலவர் பனுவல்கட்கெல்லாங் களைகணாயிருக்கும் பான்மை, அவை பிற்றை யாராயும் சான்றோர்க்கு அனுபவமாயிருக்கும் என்பது உலகறிந்த தொன்றும். இவ்வாராய்ச்சியால் விளையுமின்பம் விண்ணுலக வின்பினும் மிக்கதா மாதலின் அதனைச் சில எடுத்துக் காட்டுக்கள் கொண்டு வரைய லுறுவே மாயினேம்.

அகிலையிடுவதனுல் உண்டாகும் புகையும், சமையல் மனையகத்துண் டாம் புகையும், கருப்பஞ் சாற்றைக் காய்ச்சுவதற்காக நெருப்பு விளங் குதலையுடைய கரும்பாலையிற் றோன்றுகிற புகையும் அந்தணர் நான்மறை களைப் பாராயணஞ் செய்கின்ற யாகத்திற் றோன்றும் அழகிய புகையுடனே கலந்து மேகங்கள்போல மிகுந்து பலரையும் அறியச்செய்வனவாயின என்ற கருத்தை யமைத்துக் கோசலநாட்டிலுண்டான பல்வகைப் புகைகள் விடய மாகக் கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பநாட்டாழ்வார்,

"அகிலிடும் புகை யட்டி லிடும்புகை
நகலி லாலை நறும்புகை நான்மறை
புகலும் வேள்வியிற் பூம்புகை யோடளாய்
முகிலின் விம்மி முழங்கின வெங்கணும்"

என்ற கவியைக் கூறிப் போந்தார்.

இக்கவியின் ஈற்றடியில் 'முயங்கின' என்ற பாடமும் சில ஏட்டுப் பிரதிகளிலுள. அப்பாடத்திற்கு 'வியாபித்துத் தோன்றுவனவாயின' என் பது பொருள்.

பெரும்பான்மையும் இக்கருத்துக்களை யெடுத்துக்கொண்டு சிறிது வேறுபாடுறச் சேக்கிழார் சுவாமிகள் தமது பெரிய புராணத்தில், மாளிகை கள் சோலைகளாகிய இவ்விடங்களிலெல்லாம் காணப்படும் புகையின் கூட் டம் கருப்பஞ் சாற்றைக் காய்ச்சுகின்ற மள்ளர்களது ஆலையிருக்குமிடத்தி லிருந்து தோன்றிய மணம் பொருந்திய புகையோ? பெண்டிர்தம் கூந்த லில் மொய்க்கும் வண்டுக ளெழும்படி ஊட்டும் அகிற் கட்டைகளின் புகையோ? யூபஸதம்பங்களை நாட்டிச் செய்கின்ற பெரிய யாக சாலைகளி லிருந்து வெளிப்பட்டு விளங்குகின்ற புகையோ? வானிடத்துவரும் கறுத்த

மேகமோ? (இன்னதென வேறுபாடறியக் கூடவில்லை) என்ற பொருளமைய,

"கரும்படு களமாலைக் கமழ்நறும் புகையோ? மாதர்
சுரும்பெழ வகிலாவிட்ட தூபமோ? யூபவேள்விப்
பெரும்பெயர்ச் சாலைதோறும் பிறங்கிய புகையோ வானின்
வருங்கரு முகிலோ? சூழ்வ மாடமும்காவு மெங்கும்"

எனச் செவ்விதின் மொழிவாராயினர்.

இனி, இவ்விரு புலவர் பெருமக்களும் இங்ஙனம் புனைந்துரைத்தமைக் காதாரம் யாண்டுள தென்பதை யொரு சிறிது தெரித்திடுவாம்.

"அட்டிற் புகையும் அகலங் கடி
முட்டாக் கூவியர் மோதகப் புகையும்
மைந்தரு மகளிரு மாடத் தெடுத்த
வந்தீம் புகையு மாகுதிப் புகையும்
பல்வேறு பூம்புகை யளைஇ"

(சிலப்பதிகாரம்) புறஞ்சேரி யிறுத்த காதை அடிகள் (122—126) என்பது, இளங்கோவடிகள் வாக்கு.

பல்வேறு மலர் வாசங்களிற் றுளைந்து, மல்கிய பல்வகைய நறும் புகைகளையப் பெற்றுத் தென்றல்வரத் தொடங்கிற்றென்பதைப் புறஞ்சேரி யிறுத்த காதைக்கண் அடிகள் அழகிதாகக் கிளந்துள்ளனர்,

அடுக்களைகளிற் றாளிப்பு முதலிய புகையும், அகன்ற அங்காடியிடத்து அப்பவாணிகர் முட்டாமற் சுடுகின்ற அப்பவகையிற் புகையும் மைந்தரு மகளிரும் மயிர்க்கும் துகிற்கும் மாலை முதலியவற்றிற்கும் எடுத்த அழகிய இனிய அகிற் புகையும், யாகசாலை தோறும் ஆகுதி பண்ணுதலா லெழுந்த புகையும் ஆகிய இப்பலவாகிய வேறுபட்ட பொலிவினையுடைய புகையை யளவி என்பது, அடியார்க்கு நல்லாருரை.

ஆடவரும் பெண்டிருமாகிய இருபாலாரும், மயிர்க்கும் ஆடைகட்கும், மாலையாதியவற்றுக்கும் அகிற் புகையை யூட்டுவாராயினர் என்று வெளிப்படையாகப் பொருள்பட 'மைந்தரு மகளிரும் மாடத்தெடுத்த, வந்தீம் புகையும்' எனச் சிலப்பதிகார வாசிரியர் கூறினர்.

இப்பொருளே குறிப்பாகத் தொனிக்கும்படி 'அகிலிடும்புகை' எனப் பொதுமுகத்தாற் கம்பநாடர் 'சுருங்கச் சொல்ல'லுக் கிலக்காம்வண்ணம் நவின்றனர். சேக்கிழாரோ, 'மாதர் சுரும்பெழ அகிலாவிட்ட தூபமோ என விதனைப் பிரத்தியேகமாக மாதர்க் குரித்தாக்கினர்.

ஆன்றோர் கருத்துக்களைத் தமது பாசுரங்களில் நுணுக்கமாகப் பெற வமைக்கும் கம்பரது கருத்தமைதி நம்மனோரால் சாலவும் கருதற்பாலதா மன்றோ? யாண்டு மிங்ஙனமே கிளந்து போதல் இவர்க் கியல்பிலேயே யமைந்த மதிநுட்பமா மென்க.

வேந்தர்க்கும் குடிகட்குமுள்ள ஒற்றுமைப் பகுதிகளைக் குறித்துச் சங்கப் புலவர்கள் மிக நன்றாகத் தாமியற்றிய பாசுரங்களிற் குறித்துள்ளார்கள்.

வேந்தனை உயிராகவும் குடிகளை உடல்களாகவுங் கூறியதுட னில்லாது, வேந்தனை யுடலாகவும் குடிகளை யுயிராகவும் நவின்றுள்ளார்கள். இவற்றின் விவரங்களை யினி யெடுத்துக்காட்டி இவற்றுக்கேற்பக் கம்பநாடர் உரைத் துப்போன நயங்களையும் புலப்படுத்துவோம்.

"நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனால், யானுயி ரென்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தர்க்குக் கடனே"

என்பது, புறநானூற்றில் மோசிகீரனர் என்னும் புலவர் பெருந்தகையார் பாடிய பாடலாகும்.

நீரும் அதனை யடுத்து நெல்லும் முக்கிய உணவுப் பொருள்களாக இருப்ப, அவற்றை விடுத்து அரசனை உயிர்ப்பொருளாகக் குறித்த காரணம் என்னையெனிற் கூறுதும்.

'நீரும் நெல்லுமுளவாவன மன்னன் முறைசெய்து காப்பின் என்பதாம்' என்று இப்பாட்டி னுரைக்கீழ் புறநானூற்றுப் பழைய உரையாசிரியர் கூறியிருத்தலால் இதன் கருத்து விவரம் போதரல் காண்க. உலகினர்க்குப் பிராணாதாரமாக விளங்குகிற நெல்லும் நீரும் முறைசெய்யும் மன்னவனாலேயே உளவாகும் என்பது தேர்ந்த கருத்து. இச்சிறப்புப் பற்றியே மன்னவன் உயிர்ப்பொருளாகக் குறிக்கப்பட்டான்.

"இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு"

என்ற திருக்குறள், மன்னவனே தண்ணீர்க்கும், நெல்லுக்கும் காரணமாவனென்பதை யினிது புலப்படுத்தா நிற்கும். இக்கருத்துக்களையே சிந்தாமணி யாசிரியராகிய திருத்தக்க தேவர்,

"நெல்லுயிர் மாந்தர்க் கெல்லாம்
நீருயிர் இரண்டுஞ் செப்பிற்
புல்லுயிர் புகைந்து பொங்கு
முழங்கழ லிலங்கு வாட்கை
மல்லலங் களிற்று மாலை
வெண்குடை மன்னர் கண்டாய்
நல்லுயிர் ஞாலந் தன்னுள்
நாமவே னம்பி யென்றான்"

என்று விளங்கக் கிளந்துள்ளார்.

இலங்கையின் வடதிசை வாயிலின் கோபுரத்தின் ஏறி நின்ற இராவணனையும் அவன் சேனை வீரர்களையும் இன்னாரின்னாரென்று தெரிவிக்கும்படி விபீஷணனுக்கு இராமன் கட்டளையிட, அவ்விபீஷணன் இராவணனைச் சுட்டிக்காட்டிக் கூறிய மாத்திரத்தில் மேலே கூறுவதற்கு முன்னம் மனம் பொறாமற் சுக்ரீவன் அந்தச் சுவேல மலையினின்று கிளம்பிச் சென்று இராவணன்மீது பாய பின்ன ரிருவர்க்கும் வெற்றி தோல்வியின்றி வெகு

நேரம்வரை மல்லயுத்தம் நிகழ்கையில் சுக்ரீவனைப் பிரிந்ததனால் இராகவன் வருந்தா நிற்க, வானர வேந்தன் தசமுகனுடைய பத்து மகுடங்களிலிருந்தும் நாயக மணிகளைப் பறித்துக்கொணர்ந்து ஸ்ரீ இராமபிரானது திருவடிகளிற் சமர்ப்பிக்கச் சேனையிடைப் புகுந்தான் என்ற இடத்தில்,

"கொழுமணி முடிகடோறுங் கொண்டன மணியின் கூட்டம்
அழுதயருறுகின்றான் றன்அடித்தல மதனிற் சூட்டித்
தொழுதயனுணிவின்றான் றூயவ ரிருவரோடும்
எழுபது வெள்ளம்யாக்கைக் கோருயி ரெய்திற்றன்றே"

என்று கம்பநாடர் அழகிதாகக் குறித்திருப்பது ஈண்டைக்கு நோக்கத்தக்கதாகும்.

எழுபது வெள்ளத் தொகையினராகிய வானரர்களை யாக்கைகளாகவும், சுக்ரீவனை உயிராகவும் கூறியமை காணற் பாலது.

"பன்முறை உயிர்க ளெல்லாம்
பாலித்து ஞாலங் காப்பான்
றன்னெடுங் குடைக்கீழ் தத்தம்
நெறிகளிற் சரித்து வாழும்
மன்னரை யின்றி வைகும்
மண்ணுல கெண்ணுங் காலை
இன்னுயி ரின்றி வாழும்
யாக்கையை யொக்கு மென்பார்"

என்று சேக்கிழார் அருளிய மூர்த்திநாயனர் சரித்திரச்செய்யுளும் இக்கருத்தையே நன்கு வலியுறுத்தல் கருதத்தக்கதாம்.

இனி, மன்னனை உடலாகவும் குடிகளை உயிராகவும் குறித்துள்ள இடத்தைக் காண்போம்.

"கோனிலை திரிந்திடிற் கோணில் திரியும்
கோணிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்
மாரிவறங் கூரின் மன்னுயி ரில்லை
மன்னுயி ரெல்லாம் மண்ணாள் வேந்தன்
றன்னுயி ரென்னுந் தகுதியின் றாகும்".

என்பது மணிமேகலை.

வேந்தன் தன் செங்கோல் நிலையினின்று திறம்பினால் வானத்தின்கண் ஒன்பது கிரகங்களும் தத்தமக்குரிய நெறி பிறழ்ந்துபோம். அவையங்ஙனம் முறைமாறின் மழை பெய்தலில்லை. மாரி பொய்ப்பின் நிலை பொருந்திய ஜீவராசிகள் பிழைத்த லியலாதாம். அங்ஙனமாயபோது அச்சீவராசிகள் யாவும் உலகை யாள்கின்ற வேந்தனுக்குரிய உயிர்ப் பொருள் என்கிற உரிமை யில்லையாம் என்பது இவ்வடிகளின் கருத்து. இதனால் ஜீவராசிகள் யாவும் உயிர்ப்பொருள் என்பதும், மன்னன் உடல் என்பதும் பெறக் கிடப்பது காண்க.

வசிட்டமுனிவன் அரசியற் பெருமைகளைச் சக்கரவர்த்தித் திருமக னுக்கு உபதேசித்தகாலை கம்பநாடர் இவ்விடயமாகக் கூறி யிருப்பதை இனி யெழுதத் தொடங்குவாம்.

உலகத்தவர் பெருமையையுடைய உயிராக அந்த நிறைந்த உயிர்களைப் பிழைக்கும்படி, தரிக்கின்ற உடம்பை யொத்த அரசனுக்குத் தருமத்தைத் தவறாமல் கருணை உண்மையாக ஐயமின்றி யிருக்குமாயின் பின்னரவ் வேந்தனுக்கு யாகமும் வேண்டுமோ? (வேண்டுவதன்றாம் என்றவாறு) என்ற கருத்தை யமைத்து,

"வைய மன்னுயி ராகவம் மன்னுயிர்
உய்யத் தாங்கு முடலன்ன மன்னனுக்
கைய மின்றி யறங்கட வாதருள்
மெய்யி னின்றபின் வேள்வியும் வேண்டுமோ"

என்று கம்பர்கூறிய இப்பாசுரத்தில் குடிகள் உயிராகவும், அரசன் உடலாக வும கூறப்பட்டிருத்தல் நோக்கற்பாலதாகும். உயிரில்லாதவழி உடல் இல் லாததுபோலக் குடிகளில்லாதபோது அரசனில்லை யாகலான், உலகை அரசருக்கு உயிரெனக் கவிஞர் குறித்தனர்.

இவ்வாறிருமுறை பொருந்தச் சங்கப் புலவரும், ஏனைய புலவருங் கம்பருங் கூறியிருப்பினும், அரசன் உடலாக, குடிகளுயிராக அமைத லாகிய தன்மையையே கம்பர் பெரிதும் போற்றி யாங்காங்குக் கூறினராவ ரென்பது அக்கவிஞரது கவிகளை நுனித் துணர்வார்க்கு இனிதுபுலனாகும்.

குடிகள் யாவரையும் வேற்றுமையின்றி ஒருமுகப்படுத்தி அமைதியாக இனிதி னரசியற்றப் புகுவார்க்கு அவர்களை வசீகரப் படுத்துதற்குரிய உண்மை யன்போடு கூடிய இத்தகைய குண மமைதல் வேண்டுமென்பது இதனாற் பெறப்படும்.

'A King is he who melts all others' will into his own' என்ற கருத்தை ஓர் ஆங்கிலப் புலவர் கூறியது ஈங்கு மிகப் பொருத்த முடையதாம்.

தன்வழி யொழுகுமாறு குடிகளை ரஞ்சிக்கச்செய்வதால் ராஜா என்று வடமொழியில் அரசனுக்குப் பெயராயிற்று என்பதும் ஈண்டுக் காணத் தகும்.

சிற்சில அரிய நீதிமுறைமைகளை யெடுத்து வலியுறுத்தி விவரித்துப் போகும் விடயமாகச் சங்க நூற்களையும் முதனூலையு மாய்ந்து அந்நூலோர் குறித்தவாறே விடயங்களை யமைப்பாராயினும், தமது உயர் கருத்து மிளிர்ந்து தோன்றும்படி வேறாகச் சில அரிய பெரிய நீதிகளையம் பெய் துரைப்பது நம் கவிச் சக்கரவர்த்தியினது உள்ளக் கிடக்கையா மென்பதற் குச் சான்றாயதொரு செய்தியை யினிக் குறிப்பிடுவாம். செய்ந் நன்றியின் மாட்சியைச் சிறப்பிக்கப் புகுந்த தேவர் தம் குறளில்,

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

என உரைப்பாராயினர்.

எவ்வளவு சிறந்த காரியங்களையும் ஒருகால் விதிவயத்தானோ வேறு வகையானோ கெடுத்தானாயினும் அவற்றிலிருந்து தப்பியுய்யப் பிராயச் சித்தங்கள் உள; செய்ந்நன்றி விடயத்தில் கெடுதி புரிந்தால் தப்புதற்கு ஒரு வகைக் கழுவாயு மில்லையென்று கூறிய வாசகத்தை நோக்குங்கால் இக் குணத்தின் மேன்மை எத்தனையோ சிறந்ததாக அமைந்துளதன்றோ!

திருவள்ளுவர் கருத்தை யறிந்து அதற்குத்தக்க உரைவகுக்கும் பரிமேலழகனார், 'எந்நன்றி' என்ற தொடரிலுள்ளன எந்நன்றி? யென்பதற்குத் தக்கவிடை விடுப்பார் போன்று, 'பெரிய அறங்களைச் சிதைத்தலாவது—ஆன்முலை யறுத்தலும், மகளிர் கருவு சிதைத்தலும், பார்ப்பார்த் தப்புதலும் முதலிய பாதகங்களைச் செய்தல்' என்ற ஆன்றோர் கொள்கைகளை முன்னிட்டுக்கொண்டு பண்டைநூ லாராய்ச்சியின் பயனாக உரைத்த விழுமிய கொள்கைகள் அவர்தம் அரிய நூலாராய்ச்சியை விளக்குகின்றன.

இனி இவர் கூறிய இவை எந்நூலிலுள என்பதைப் பார்ப்போம்.

"ஆன்முலை யறுத்த அறனி லோர்க்கும்
வாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென,
அறம்பா டிற்றே யாயிழை கணவ!

என்பது புறநானூறு.

'ஆனினது முலையாற்பெறும் பயனைக் கெடுத்த தீவினை யாளர்க்கும், மாட்சிமைப்பட்ட ஆபரணத்தையுடைய பெண்டிரது கருப்பத்தை அழித்தோர்க்கும், பார்ப்பாரைப் பிழைத்த கொடுந் தொழிலை யுடையோர்க்கும், அவர் செய்த பாதகத்தினை யாராயுமிடத்து அவற்றைப் போக்கும் வழியும் உளவெனவும், நிலம் கீழ்மேலாம் காலமாயினும், ஒருவன் செய்த நன்றியைச் சிதைத்தோர்க்கு நரகம் நீங்குதலில்லை யெனவும் அறநூல் கூறிற்று; தெரிந்த ஆபரணத்தை யுடையாள் தலைவ?

நிலம்புடை பெயர்வதாயினு மென்பதற்கு ஊழிபெயருங் காலத்து யாவரும் செய்த இருவினையும் நீங்குதலின் அக்காலத்தும் செய்தி (செய்ந்நன்றி) கொன்றோர்க்கு உய்தியில்லை யென்றும், நிலத்துள்ளார் யாவரும் இவன் கூற்றிலே நிற்பாராயினும் என்றும் உரைப்பாருமுளர்.

'கோவதை முதலாயின வாக்காற் சொல்லவும் படாமையின், ஆன்முலையறுத்த எனவும், மகளிர் கருச்சிதைத்தலெனவும், பார்ப்பார்த் தப்பிய வெனவும் மறைத்துக் கூறப்பட்டன' இவை, இப்பாசுரத்தின்கீழ் புறநானூற்றில் பழைய உரையாசிரியரால் எழுதப்பட்டுள்ள உரையாகும். இதனால் திருவள்ளுவர் கருத்தை நனித்துணர்ந்து புறநானூற்றில் இச் செய்யுளாசிரியர் 'எந்நன்றி கொன்றார்க்கும்' என்ற தொடருக்கு விரிவுரை வரைந்தாற் போன்று விடயங்களை யமைத்திருக்கும் மாண்பு பெறக் கிடக்கின்றதன்றோ?

இவ்விரு நூல்களையும் ஆராய்ந்து உள்ளவாறே உரை வகுத்த பரிமேலழகர் உரைத்திட்பம் அதனினும் விழுமிதாமென்பது ஆராய்ச்சியாற் புலனாகு மொன்றாம்.

கார்காலம் கழிந்த பின்னர், சுக்கிரீவனுக்கு ஞாபக மூட்டுதற்காக இராமபிரான் லக்ஷ்மணனிடத்தில் சில செய்திகள் கூறியனுப்பினான். அப்போது இலக்குமணன் கிட்கிந்தை போந்து சுக்ரீவனைக் கிட்டி யவனை நோக்கி நினைவூட்டுதற்காக அறிவு கொளுத்திய காலையில்,

"பிராம்மணனைக் கொன்றவனுக்கும், கட் குடித்தவனுக்கும், திருடனுக்கும், விரதத்திலிருந்து நழுவினவனுக்கும் பிராயச்சித்தம் பெரியோர்களால் விதிக்கப்பட்டிருக்கிறது; நன்றிகெட்டவனுக்குப் பிராயச் சித்தம் கிடையாது" என்ற பொருளுடைய சுலோகத்தைக் கூறியதாக வால்மீகனார் தமது நூலில் குறித்துள்ளார்.

இதில் முதலிற் குறித்த 'பிராம்மணனைக் கொன்றவனுக்கும்' என்ற செய்தி மாத்திரம் முற்கூறிய புறப்பாட்டு முதலிய நூல்களில் கூறப்பட்ட செய்திகளுள் அடங்கும், மற்ற இரண்டும் பிரத்தியேகமாக வால்மீகராற் கூறப்பட்டனவாகும்.

இனி யிவற்றைப் புலவர்களுடன் ஆராய்ந்து இராம கதையைத் தமிழில் வகுத்த கம்பநாடர் கூறிய திறனை நோக்குவோம்.

கோபங்கொண்ட இலக்குமணனை நோக்கிச் சுக்ரீவன் விடயமாக (சேனையைத் திரட்டச் சுக்ரீவன் தாமதிக்கும் செய்தி) தாரை, சமாதான உரைகளை நிகழ்த்தியபோது, இலக்குமணன் சினந் தணியவே அதனை நோக்கி யனுமன் அவனருகில் வந்தனன். அவனை நோக்கி இலக்குமணன் கூறியதாகக் கம்பநாடர்,

"சிதைவகல் காதற்றாயைத் தந்தையைக் குருகுலத் தெய்வப்
பதவியந்தணரை யாவைப் பாலரைப் பாவைமாரை
வதைபுரி குநர்க்குமுண்டா மாற்றலா மாற்றன்மாயா
வுதவிகொன்றார்க் கொன்றேனு மொழிக்கலாமுபாயமுண்
[டோ?"

என்ற கவியை யிசைத்துள்ளார்.

முதனூலாசிரியராகிய வான்மீகனார் கருத்தையும் சங்கப் புலவரது வாக்கையும் பன்னிப் பன்னிப் பன்முறை நோக்கினரேனும் அவற்றுட் சிலகொண்டு, அவர்கள் போன்ற தம் பெருமையும் உலகி லழியாது என்றும் நின்று நிலவுவதுபோல் 'சிதைவகல் காதற்றாயைத் தந்தையைக் குருவை..................பாவைமாரை' என வேறு நான்கு விடயங்களையும் உடன் கூட்டி யுரைத்த நம் கவிச்சக்கரவர்த்தியாரது அரிய பெரிய புலமைத்திறம் ஓர் தனிச்சிறப்பை யுடையதாகவே திகழ்கின்றது.

---



# குன்றுகள்மீதிருக்கும் ஹிந்து தேவதைகள்

—:0:—

வீ. சங்கர ஐயர்.

குன்றுகளின்மீது கோவில்களைக் கட்டி அத்தெய்வங்கள் நோய்களைக் குணப்படுத்துகின்றன என்று கூறியிருக்கும் ஹிந்துக் கொள்கையை நம்பி அநேகர் பண்டைக்காலம் முதற்கொண்டே திருப்பதி முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் செல்வதை நாமறியலாம். இது சுகாதாரத்தை மதத்தோடு இணைத்துக் கூறியிருப்பதேயாம். 'சாஸ்திராயச சுகாயச' என்பதே. நம் தென்னாட்டில் திருப்பதி வெங்கடாசலபதி, திருத்தணி சுப்பிரமணியர், திருக்கழுக்குன்றம் வேதகிரீச்வர ஸ்வாமி, பழனி சுப்பிரமணியர், திருவண்ணாமலை அருணாசலேசுவரர் முதலிய மலைக் கோயில்களைப்போல் கிரேக்கர்களின் ஒலும்பி மலைத் தேவதைகள், ஒலும்பி விளையாட்டுக்கள், ஒலும்பி வேத வாக்குகள் முதலியன சாஸ்திரப் பிரசித்தமானவை.

வயிற்றுவலி சம்பந்தமான வியாதிகளால் வருந்துவோர், சூதகவாயு சம்பந்தமானவர், புத்தி வியாதி சம்பந்தமானவர்கள் மலைக் கோயில்களுக்குச் சென்று பிரார்த்தனை செலுத்தி பலர் சௌக்கிய மடைந்திருக்கின்றனர். அவர்களுக்கு அடியிற் குறிப்பிட்ட நிபந்தனைகளுண்டு.

1. அவரடியிலும் மேலேயும்மஞ்சள்நீரில் நனைத்து உலர்த்திய ஆடையிருக்க வேண்டும்.

2. கால் நடையாகவே குன்றின்மீது ஏறவேண்டும்.

3. மலைமீது ஒரு மண்டலம், அரை மண்டலம் பஜனம் இருக்க வேண்டும்.

4. வார மொருமுறை உபவாச மிருக்க வேண்டும்.

5. தினம் ஒரு முறையோ இரு மூறையோதான் புசிக்கலாம்.

6. தலை மயிர்களை கழிக்க வேண்டும். இதுபோல இன்னும் பல இருக்கின்றன.

மஞ்சளுக்கு விஷங்கொல்லி குணமுண்டு. ஆகையால் விஷ பீஜங்கள் இவர்களை அணுகா. இந்தியன் மெடீரியா மெடிகாவில் கூறி யிருப்பதைக காண்க.

"மஞ்சள் உள்ளுக்கு சாப்பிட்டால் குடற் பூச்சிகள் நசிக்கின்றன. ஆகையால் எல்லாக் கறிகளுக்கும் மஞ்சளைப் போடவேண்டும். அப்போது அரைத்த மஞ்சளே சிலாக்கியமானது. இரத்த சோகை, அசுத்த ரத்தம் முதலியவைகளுக்கு மஞ்சளை மேலே பூசுகிறார்கள். மஞ்சள் வெட்டுக்காயங்கள், அட்டைகடி முதலியவைகளைக் குணப்படுத்துகின்றன. மஞ்சள் வேர் முறை ஜ்வரத்தைக் குணப்படுத்துகிறது. பெரியம்மை, கொப்புளங்கள் முதலியன மஞ்சளைப் பூசினால் ஆறுகிறது.

மலைமீது யேறுவது ஒரு வியாயாமமாகும். தவிர கடற்கரையில் வசிப்போர்களின் தேகத்திலிருக்கும் ஹெமோ குளோபின் சிவப்பு செல் முதலியன மலைமீது அதாவது கடற் மட்டத்துக்கு 5000 அடி உயரத்திலிருப்பவர்கள் இரத்தத்தில் 20% அதிக மிருப்பதாக லிப்மென் என்ற பெரியோர் கண்டுபிடித்திருக்கிறார். இரத்தத்தின் அளவு 7½% அதிக மிருக்கிறதாம். அங்கே ஆரோக்கியவாயு, சுத்த ஜலம் இவைகளும் கிடைக்கும்.

உபவாஸ மிருப்பதைக் குறித்து இங்கு விவரிக்க வேண்டியதில்லை. ஸர். ஹென்றிலன். எம். டி. என்னும் பெரியோர் ஹெல்த் ஆண்டு எப்பிஷியென்ஸி' என்ற பத்திரிகையில் "ஆஸ்பத்திரிகளில் உபவாஸ சிகிச்சை, என்று எழுதியிருக்கும் வியாசத்தைப் படிக்கவும், அதில் அவர் "இந்த பாரிஸ்டர் பான்கிரியாடைடிஸ் முதலிய வியாதியால் வெகுநாள் வருந்தி தேகம் துர்ப்பல மடைந்தார். பல பெயர் பெற்ற வைத்திய நிபுணர்களும் கைவிட்டு விட்டனர். இந்த நிலைமையில் அவர் 50 தினம் உபவாச மிருந்தார். அக்காலத்தில் அவர் தீர்த்தம், பச்சைக் காய் கறிகள், பழங்கள். இவைகளைத் தவிர ஒன்றுமே சாப்பிடவில்லை. அவர் சகலவித வியாதிகளிலிருந்தும் சொஸ்தமடைந்து தைரியவானாக யிருக்கிறார்!"

இம்மாதிரி பல அனுகூலங்கள் ஜனங்களுக்குக் கிடைக்கும் பொருட்டுத்தான் பல தெய்வங்களை மலைகளின்மீது வைத்து நம்மை அங்கு சென்று தரிசிக்கும்படி நம் பெரியோர் ஆக்ஞாபித்திருக்கின்றனர். எப்படி நம் முன்னோர் எல்லா சுகாதார விதிகளையும் மதச் சடங்காக்கி நாம் அறியாமலே அனுஷ்டிக்கும்படிச் செய்திருக்கின்றனர் என்பதை கவனிக்கவும். நம் மதமோ அனாதியானது. அதன் சட்டங்கள் யாவும் நம் நன்மைக்கேயன்றி வேறில்லை. ஆகையால் யாவரும் நம் மதக் கொள்கைகளைத் தவறாமல் கைக்கொண்டு க்ஷேமம் அடைவார்களாக.



# சீமா சாஸ்திரிகளின் சென்னை விஜயம்

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

ருவையாறு—'சீமா' சாஸ்திரிகள், 'கர்நாடக மடிஸஞ்சி சாஸ்திரிகளின் கோஷ்டி'யைச் சேர்ந்தவர். 'சீமா சாஸ்திரிகள்' என்னும் பெயருக்கும், நவீன நாகரிகத்தின் பிறப்பிடமான லண்டன்மாநகரின் பெயராக வழங்கப்பட்டுவரும் 'சீமை' என்னும் பெயருக்கும் ஏதேனும் சம்பந்தம் இருக்க வேண்டும்போலிருக்கிறதே யென்று வீணாக எவரும் மூளையைக் குழப்பிக்கொள்ளத் தொடங்கிவிட வேண்டாம். திருப்பதிப் பெருமாளின் திருநாமமாகிய 'ஸ்ரீநிவாஸன்' என்பது, 'சீனிவாசன்' என்று மாறி; பின் அதுவே 'சீனி'யாகக் குறுகி, மீண்டும் 'சீனு'வாக மாறி, பின்னும் 'சீமாச்சு' என்று புத்துருக் கொண்டு, முடிவில் 'சீமா' என்று குறுகிவிட்டது. எப்படி மாறினால் என்ன? அதன் இரண்டாவது எழுத்து மறையாத வரையில், அப்பெயரால் எத்தகைய அவமானமும் வந்துவிடப்போவதில்லையல்லவா? தமது ஜன்ம ஸ்தலமான் திருவையாற்றிலே, தினந்தோறும் அதிகாலையில் காவேரியில் ஸ்நானம் செய்து, திருமேனி முழுதும் 'முழு நீறு பூசிய முனிவர்' போன்ற தோற்றத்துடனும் மடிப்பு குலையாத மடியுடனும் கூடியவராய் சீமா சாஸ்திரிகள் பஞ்சநதேச்வரர் கோயிலுக்குள் நுழையும்போது, அவரது திருமேனி பரம வைதிகத் திருக்கோலத்திற்கே தனி உரிமை பூண்ட தென்பதை எல்லோருக்கும் விளம்பரப்படுத்துவதே போல் விளங்கும். பஞ்சநதேச்வர ஸ்வாமியின் அநுக்கிரகத்தினால் அவருக்குச் சுகஜீவனம் செய்யப் போதுமான சொத்திருந்ததால், அவரது வாழ்க்கை எவ்வித கவலையுமில்லாத சுக வாழ்வாகவே நடந்துவந்தது. அவருக்கு இருபது வயதுடைய ஒரு புதல்வனும் பன்னிரண்டு வயதுடைய ஒரு புதல்வியும் இருந்தனர். அவரது மகன் பயிர்த் தொழிலை நிர்வகிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்ததாலும், நல்ல பணக்காரக் குடும்பத்திலிருந்து ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுத்து அவனுக்குத் திருமணம் செய்து வைத்துவிட்டதாலும், அவனைப் பற்றி அவர் கொண்டிருந்த கவலை நீங்கிவிட்டது.

தமது அருமைத் திருக்குமாரியைத் தமது அந்தஸ்துக்குத் தகுந்தது ஒரு பெரிய இடத்துப் பிள்ளைக்கு மணம் செய்து கொடுக்கவேண்டுமென்ற கவலையே, அவருக்கு அதிகரித்திருந்தது. அதுமட்டுமல்ல; தமக்கு மருகனாக வருபவன், கேவலம் ஒரு பணக்காரனாக மட்டுமன்றி, பலராலும் கௌரவமாக மதித்து வணங்கப்படக்கூடிய உயர்தர உத்தியோகத்தைப் பெறக்கூடிய 'பெரிய படிப்பாளி'யாகவும் இருக்கவேண்டுமென்பது, சாஸ்திரிகளின் எண்ணம்; தமது ஜீவிய காலத்திற்குள், ஒரு சப்-கலெக்டர் அல்லது சப்-ஜட்ஜின் மாமனார் என்ற கௌரவப் பட்டத்தைச் சம்பாதித்துக் கொண்டுவிட வேண்டுமென்பது, அவரது அந்தரங்கப் போவல். அதன்

பொருட்டு, அவர் தமது கர்நாடக ஆசாரப் பழக்க வழக்கங்களைக்கூட சிறிது விட்டுக் கொடுத்து, தமது வீட்டிலேயே தமது புதல்விக்கு ஆங்கிலம் கற்றுக் கொடுக்க ஒரு உபாத்தியாயினியையும் சங்கீதம் கற்றுக்கொடுக்க ஒரு ஆசிரியரையும் ஏற்பாடு செய்திருந்தார். சென்னை பிரஸிடென்ஸி காலேஜில் 'F. A.' வகுப்பில் படித்துக்கொண்டிருந்த சந்திரசேகரன், அவரது மனைவியின் வழியில் நெருங்கிய உறவினனாக இருந்தான். அவரது கிருகத்தில் சர்வாதிகாரிணியாக 'Home Rule' (மனை ஆட்சி) செலுத்திக்கொண்டிருந்த கனகாம்பாளின் இடையறாத தூண்டுதலின் பயனாக, சீமா சாஸ்திரிகள் சந்திரசேகரனையே தமக்குத் தகுந்த மருகனாகத் தேர்ந்தெடுக்க வேண்டியதாயிற்று. வரதட்சிணையாக ரூபா ஐயாயிரமும் சீர் வரிசைகளில் ரூ. இரண்டாயிரமும் செலவழித்து, கலியாணச் செலவிலும் சரி பாதியைத் தாம் ஏற்றுக்கொண்டு, சாஸ்திரிகள் தமது அருமைப் புதல்வி ராஜத்தை சந்திரசேகரனுக்கு 'கன்னிகாதானம்' செய்து கொடுக்கும்படியாயிற்று.

'N. C. Sekar' எனும் நவீன நாகரிகத் திருப்பெயருடைய சந்திரசேகரனைத் தமது மாப்பிள்ளையாகக் கொண்ட மறு வருஷத்திலே, சீமா சாஸ்திரிகள் தமது மருகனைப் பார்த்துவிட்டு வருவதற்காக திருவையாற்றினின்றும் புறப்பட்டு சென்னைமா நகருக்குச் சென்றார். சந்திரசேகரன் இல்லை. N. C. சேகர்—இனி நாமும் அவனை அவனுக்குப் பிரியமான பெயராலேயே அழைப்போம்.—சென்னை திருவல்லிக்கேணியிலிருந்த வீட்டில் தங்கியிருந்து காலேஜில் படித்துக்கொண்டிருந்தான். ஊரைவிட்டுப் புறப்படுவதற்கு முந்திய நாளில், எழும்பூர் ஸ்டேஷனில் வந்து தம்மைச் சந்திக்குமாறு சாஸ்திரிகள் தமது மாப்பிள்ளைக்கு எழுதியிருந்த கடிதம், சேகர் தங்கியிருந்த வீட்டிலிருந்த ஒரு குழந்தையின் கைகளில் சிக்கிக் கிழிந்து தெருக் குப்பையுடன் உறவாடப்போய்விட்டது. தமது அருமை மருகன் கம்பீரமான உடை உடுத்திக்கொண்டு ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் வந்திருந்து தமது கைகளைப் பற்றி இட்டுச் சென்று ஸ்பெஷல் காரில் ஏற்றி அழைத்துக்கொண்டு செல்லும்போது, தாம் எப்படி எப்படி நடந்துகொள்ள வேண்டும்; என்னென்ன பேசவேண்டு மென்பதைப் பற்றி தஞ்சாவூரில் ரயில் ஏறியது முதல் எழும்பூர் அடையும் வரையில் பலபலவாறு சீமா சாஸ்திரிகள் தமக்குள் கட்டிக்கொண்டிருந்த மனக் கோட்டைகளெல்லாம், அவர் ப்ளாட்பாரத்தில் இறங்கி நெடுநேரம் காத்திருந்து பார்த்தும் எவரும் தம்மை வரவேற்க முன்வாராததன் பயனாக இடிந்து பொடி பொடியாய்ப் போய்விட்டன. முடிவில், வேறு வழியின்றி, அவராகவே ஜட்கா வண்டிகள் நின்றிருந்த பக்கம் சென்றார்.

அவரைக் கண்டவுடனே, ஐந்தாறு ஜட்கா வண்டிக்காரர்கள் அவரிடம் நெருங்கி வந்து, 'எங்கே போவணும் சாமீ?' என்று வினவினர். அவர் வாய் திறந்து பதில் சொல்வதற்கு முன்பே, ஒருவன் அவரது 'மடிசஞ்சி'யையும் மற்றொருவன் அவரது கூஜாவையும் வேறொருவன் பட்சணக் கூடையையும் தொட்டு எடுத்துக்கொண்டு தத்தம் வண்டியில் வந்து ஏறிக்கொள்ளுமாறு கூறலாயினர். "அட, பாபிகளா! பாழும் பரப்பட்டணங்கிறது, ஸ்டேஷன்லியெ சரியாப் போயிடுத்தே! ஆசாமியைப் பார்த்தாவது, ஒதுங்கி நிற்கவாண்டாமா? சிவ, சிவா! எல்லாத்தையும் தீட்டாக்கிட்டேளே! பாழும் போலீஸ்காரான், இங்கே யாரும் இல்லையா?" என்று

கத்திக்கொண்டே ஜட்காக்காரர்களின் கைகளில் சிக்கித் தீட்டாய்விட்ட தமது சாமான்களை அவர்களிடமிருந்து விடுவித்துக்கொண்டு, எல்லாவற்றையும் ஒரு ஜட்காவில் வைத்துவிட்டு, கீழே நின்றுகொண்டே அவ்வண்டிக்காரனுடன் பின்வரும் சம்பாஷணை நடத்தினர்:—

"ஏய்! திருவல்லிக்கேணி மாடவீதி சாமிநாத சாஸ்திரிகள் ஆம் போவணும்; என்ன கேக்கிறே!"

"ரொம்ப வாணும் சாமி; ஒண்ணரை ரூவா குடுங்கோ; ஒரு நொடியிலே போயிடலாம்; ஏறுங்கோ!"

"அட ராமா! ரயில்காரன் கிட்டே ஒண்ணரை ரூவா கொடுத்தா, எழுபது எண்பது மைல் போய்விடலாமே! என்னைப் பார்த்துவிட்டு, பட்டிக்காட்டுப் பார்ப்பான்னு நெனச்சிண்டு பேசறியா என்ன? ஏய்! நான் காவேரி தண்ணி குடிச்சி வளர்ந்தவண்டா! யார்கிட்டே பேசரோங்கிறதை நிதானிச்சிக் கேளு!"

"கோச்சிக்காதே சாமீ! நம்ப குதிரை நூத்தம்பது ரூவாய்க்கி வாங்கினது சாமீ! வண்டி மாத்திரம் நூறு ரூவா. நித்த நித்தம் தீனிச் செலவுக்கே, ஒரு ரூவாய்க்கி மேலே பிடிக்குது சாமீ! போனு போவுது, நாலணு குறைச்சிக்கிட்டு ஒண்ணே காலா குடுத்துடுங்கோ சாமீ!"

"ஏய்! நீ குதிரை வாங்கினதுக்கும் வண்டி வாங்கினதுக்கும் எங்கிட்டேயிருந்தா வசூல் பண்ணப் பார்க்கிறே? எட்டணுவுக்கு ஓட்ட இஷ்டமா, இல்லையா?"

"ஐயோ! ஏழை வயித்திலே இப்படி அடிக்கிறியே சாமீ! மேலே நாலணுவாவது போட்டுக் கொடுங்கோ; ஏறுங்கோ வண்டிலே."

"அதெல்லாம் முடியாது; போனுப் போறது; பத்தணு வாங்கிக்கோ; அதுக்குமேலே, ஒரு பைசாகூட கொடுக்க முடியாது."

"சரி, ஏறுங்கோ, போவலாம்."

அவ்வளவு தர்க்கமும் நடந்து முடிந்தபின், சாஸ்திரிகள் தமது சாமான்கள் சமேதராய் வண்டியில் ஏறிக்கொண்டார். சிறிது தூரம் சென்றபின், ஜட்கா வாலா சாஸ்திரிகளை நோக்கி, "இந்த ரேன்ஸை சித்தே பிடிச்சிக்குங்கோ; இதோ, ஒரு நிமிஷத்திலே வந்துடறேன்" என்று அவரது பதிலை எதிர்பாராமலே 'ரேன்ஸை' அவரது கைகளில் ஒப்புவித்துவிட்டு, வெற்றிலை பாக்குக்கடை ஒன்றை நோக்கிச் சென்றான். "அட, கர்மமே! காசையும் கொடுத்துட்டு, நடு ரோட்டிலே, தோல் பட்டையைப் பிடிச்சிண்டிருக்கணுமா என்ன?" என்று பெருவெறுப்புடன் கூறினர் சாஸ்திரிகள். சிறிது நேரத்திற்குப் பின் திரும்பிவந்த ஜட்காவாலா, ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்து வாயில் வைத்து 'குப், குப்' என்று அப்புகையை சாஸ்திரிகளின் திருமுகத்திற்கு நேரே விட்டுக்கொண்டே, அவரிடமிருந்து ரேன்ஸைத் திரும்பப் பெற்றுக்கொண்டான். அதைக் கண்டு திடுக்கிட்ட சாஸ்திரிகள், தமது மூக்கைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு மறுபக்கம் திரும்பி அமர்ந்துகொண்டார். முடிவில், திருவல்லிக்கேணியில் தாம் தேடிவந்த வீட்டை அடைந்தவுடன், பத்தணு தந்து ஜட்காக்காரனை அனுப்பிவிட்டு உள்ளே நுழைந்தார் சீமா சாஸ்திரிகள். "வரணும், வரணும்" என்று வர

வேற்றூர், வீட்டுச் சொந்தக்காரராகிய சோமசுந்தர சாஸ்திரிகள். "மாப்பிள்ளைக்குப் போட்ட லெட்டர் வந்து சேரலையா?" என்று திருவையாற்று சாஸ்திரிகள் கேட்கவும்; 'இல்லையே' என்று கூறினார் திருவல்லிக்கேணி சாஸ்திரிகள். இருவரும் ஜாதிப் பெயரில் மட்டும் ஒன்றுபட்டிருந்தனரே யன்றி, திருக்கோலத்தில் ஒருவரோ டொருவர் முற்றிலும் வேறுபட்டிருந்தனர். "மாப்பிள்ளை எங்கே போயிருக்கார்?" என்று வந்தவர் கேட்கவும் "ராக்ஸிலே, கிரேடா கார்போ ஆக்ட் பண்ண எக்ஸலெண்ட் டாக்கி ஒண்ணு இன்னக்கி ரன் பண்ணுது. அந்த ஷோவுக்கு இன்னக்கிப் போவணும்னு மார்னிங் சொன்னார். அங்கேதான் போயிருப்பார்னு நெனக்கிறேன்" என்றார் வீட்டுக்காரர். பட்டினத்துச் சாஸ்திரிகள் சொன்னதன் பொருள் என்னவென்பது திருவையாற்று சாஸ்திரிகளுக்கு விளங்கா விட்டாலும், அதன்மேலும் அதைப் பற்றிக் கேட்டால், அவர் தம்மை சுத்தப் பட்டிக்காட்டு மடசாம்பிராணியாக நினைத்துவிடுவாரோ என்னும் பயத்தினால், பேசாமலிருந்துவிட்டார்.

மறுநாள் காலை ஏழுமணி இருக்கலாம். மிஸ்டர். N. C. சேகர், தமது 'பெட்ரூ'மிலிருந்த கட்டிலின்மேல் உடல் முழுவதும் போர்வையால் போர்த்திக்கொண்டு படுத்துக்கொண் டிருந்தார். கட்டிலில் படுத்துக் கொண்டிருப்பவர் தமது மாப்பிள்ளை தானென்பதை வீட்டிலிருந்தவரிடம் கேட்டுத் தெரிந்துகொண்ட சீமா சாஸ்திரிகள், கட்டிலை நெருங்கிச் சென்று நின்று 'மாப்பிள்ளே!' 'மாப்பிள்ளே!'—என்று ஏழெட்டு முறை அழைத்துப் பார்த்தார்; அத்தனை முறை கத்தியும் பயன்படாமற் போகவே, 'மாப்பிள்ளே!' 'மாப்பிள்ளே'—என்று உச்சஸ்வரத்தில் கத்திக்கொண்டே நாலைந்து முறை 'நாஸூக்'காகத் தட்டி யெழுப்ப முயன்றார். தினந்தோறும், 'பெட்—காப்பி' எடுத்துக்கொண்டு வந்து தனக்குத் 'திருப்பள்ளி யெழுச்சி' பாடும் சமையற்காரன் தான் அனுபவித்துக் கொண்டிருந்த நித்திரானந்தத்தைக் கலைத்து விட்டதாகக் கருதிய சேகர், 'டாம்! நான்ஸென்ஸ்! டர்ட்டி பூல்!' என்று வசை புராணம் பாடியவண்ணமே கடுகடுத்த முகத்துடன் கூடியவனாய் கண் விழித்தெழுந்தான். தன்னெதிரில் நிற்பவர் தனது மாமனார் என்பதை உணர்ந்து கொண்ட அவன், "ஓ, நீங்களா! ப்ளீஸ் எக்ஸ்க்யூஸ் மீ! எப்போது வந்தேள்? ஒரு லெட்டர் போட்டுட்டு வரப்படாதோ? ஆத்திலே எல்லோரும் சௌக்கியந்தானே?"—என்று சிரித்த முகத்துடன் வரவேற்பு—குசல ப்ரச்னம் முதலியவற்றை ஒரே சமயத்தில் நடத்தலானான். "உங்களுக்குப் போட்ட லெட்டர் வந்து சேரலே போலிருக்கு. ஆத்திலே எல்லாரும் சௌக்கியந்தான். ராஜம், எப்போ பார்த்தாலும் உங்க நெனவாவே இருக்காள். மணி ஏழரையாயிடுத்தே! ப்ராம்மண ஜாதியிலே பிறந்துட்டு, ஸூர்யோதய காலத்திலே ஸ்நானம்—சந்த்யா வந்தனம்—ஜபம்—அநுஷ்டானம் பண்றதை விட்டுவிட்டு, இந்நேரம் வரேலே இப்படி மூஞ்சை மூடிண்டு தூங்கறேளே! ஸ்நாநம் பண்ண வாண்டாமா?"—என்றார் மாமனார்.

"உங்க 'வில்லேஜ் லைப்'லே, அதெல்லாம் சரிதான்; இங்கே, 'டௌன் லைப்'லே, காலேஜ்லே படிக்கிறவாளுக்கு அதெல்லாம் சரிக்கட்டி வராது. 'கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை'ன்னு சொல்றாளே, அந்தமாதிரி ஒரே சமயத்திலே, லௌகீகத்தையும் கெட்டியா பிடிச்சிண்டு வைதீகத்தையும்

விடாமே பிடிச்சிண்டு காலங் கழிக்க யாரால் முடியும்? மார்னிங்கிலே, கூல் வாடர்லே 'பாத்' பண்ணு, என் பாடிக்கு ஒத்துக்கிறதில்லே. நீங்க போய் ஸ்நானம் பண்ணிவிட்டு அநுஷ்டானம் பண்ணுங்கோ; அதுக்குள்ளே, நான் பல் விளக்கிட்டு வந்துடறேன்"—என்றான் சேகர்.

ஸ்நானம்—ஸந்த்யா வந்தனம்—ஜபம்-முதலியவற்றை முடித்துக்கொண்டு காப்பி சாப்பிடுவதற்காக மாப்பிள்ளையின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்த சாஸ்திரிகள், நெடுநேரம் கழிந்தும் அவன் வராததால் அவனைத் தேடிக்கொண்டு அவனது அறைக்குச் சென்றார். அதே சமயத்தில், மிஸ்டர்—சேகர் 'சேப்டி—ரேஸ'ரும் கையுமாய் கண்ணாடி யெதிரில் அமர்ந்துகொண்டு 'ஸெல்ப்—ஷேவிங்' செய்து கொண்டிருந்தான். அக் காட்சியைக்கண்டு பெரிதும் திடுக்கிட்டுத் திகைத்து நின்ற சாஸ்திரிகளை நோக்கி, "கவர்ன்மெண்ட் உத்தியோகம் சும்மா கிடச்சுடுமா மாமா? அதுக்குத் தகுந்தபடி, இப்போ பிடிச்சே 'அப்—டு டேட் பாஷ'னாக நடந்துக்க வாண்டாமா? என்ன முழிக்கிறேள்?"—என்று சிரித்துக்கொண்டே கூறினான் மிஸ்டர்—சேகர். அதைக்கேட்டு 'அட, கர்மமே!"—என்று தலையிலடித்துக்கொண்டு அப்பால் போய்விட்டார் சீமா சாஸ்திரிகள்.

அன்று சனிக்கிழமை யாதலின், சேகர் காலேஜுக்குப் போகவில்லை. அன்று மாலே, அவன் தனது மாமனாரை அழைத்துக் கொண்டு மௌண்ட் ரோடிலிருக்கும் ஒரு 'ரெஸ்டாரெண்டு'க்குச் சென்றான். அங்கிருந்த இரு நாற்காலிகளில் அவர்களிருவரும் அமர்ந்ததும், ஒருவன் வந்து அன்றைய 'ஸ்பெஷல் ஸ்வீட்க'ளின் பெயர்களைக் கடகடவென்று ஒப்புவித்து, 'என்ன கொண்டு வரட்டும்?' என வினவினான். சாஸ்திரிகள் தமது மருமகனது வலச் செவியில் வாயை வைத்து, "இவர் நம்மளவாளா? அல்லது மலையாளி கிலையாளியா?" என்று ரகசியமாக வினவினார். 'அவர் பிராமணர்தான்' என்று சேகர் கூறியவுடன், கொஞ்சம் மெல்லிய குரலில், "மைசூர், டில்லி, பாம்பே, கல்கத்தான்னு என்னென்னமோ ஊர் பேரெல்லாம் சொன்னரே; அந்தந்த ஊர் பட்சணமெல்லாம், நித்த நித்தம் இங்கே வரவழைக்கிறாளா என்ன?" என்று தமது இரண்டாவது சந்தேகத்தைக் கிளப்பினார் சாஸ்திரிகள். இதைக் கேட்டு கலகலவென்று சிரித்த சேகர், "அப்படியில்லே, அந்தந்த ஊரில்தான் அந்தந்த பட்சணம் முதல் முதல்லே உண்டாச்சாம். அதனால், அப்படி பேர் வ்ச்சுட்டா" என்று கூறிவிட்டு, சப்ளை செய்பவரைப் பார்த்து, "ரெண்டு ப்ளேட் ப்ரூட்—ஸாலட்; ரெண்டு ப்ளேட் பெனரஸ் அல்வா; ரெண்டு ப்ளேட் கல்கத்தா ரஸ-குல்லா; ரெண்டு கப் ஸ்பெஷல் காப்பி" என்று ஆர்டர் கொடுத்தான். அவையனைத்தும் கோப்பைத் தட்டுகளில் ஸ்பூன்களுடன் கொண்டுவந்து வைக்கப்பட்டவுடன், "அட, ராமா! ப்ருகச்சரண கோத்ரத்தில் பிறந்துட்டு, கண்டவன் போனவனெல்லாம் எச்சல் பண்ண பீங்கான் தட்டிலியா சாப்பிடணும்? எல்லாத்தையும் வாழை இலையிலே கொண்டாரச் சொல்லுங்கோ!"—என்று மாப்பிள்ளையைப் பார்த்துக் கூறினார் சாஸ்திரிகள். முடிவில், அவரது விருப்பப்படியே இலையில் கொண்டு வந்து வைக்கப்பட்டவற்றை அவர் உண்ட பின், சேகரிடம் வைக்கப்பட்ட 'பில்'லுக்கு உரிய ணத்தை அவன் செலுத்திவிட்டு தன் மாமனாருடன் வெளியேறினான். பின்னர், அவன் தனது மாமனாரை அழைத்துக் கொண்டு 'மெரினா பீச்'சுக்குச் சென்றான்.

அங்கு கர்ண—கடூரமான சப்தத்தைப் பரப்பிக் கொண்டிருந்த ரேடியோவைக் கண்டு பெரிதும் திகைத்து நின்ற சீமா சாஸ்திரிகள், தமது மருகனை நோக்கி, இந்தக் குழாய் ஏன் இம் மாதிரி அலறுது?"—என்று பெருவியப்புடன் வினவினார். "இது தான் 'ரேடியோ'ங்கிறது. பம்பாய்—மிஸ்டர்—குல் மஹம்மத் ஹிந்துஸ்தானி சங்கீதக் கச்சேரி நடத்துகிறார். அது தான், இங்கே கேட்கிறது"—என்றான் சேகர். "என்னை யாருன்னு நெனச்சுண்டே? நான் பிறந்து வளர்ந்து வசிக்கிற ஊர், சங்கீத பிதா—மகான் தியாகையர்வாள் ஊராக்கும். என்னையா ஏமாத்தப் பார்க்கிறே? இந்த கர்ண கடூரமான கழுதைக் கத்தலைக் கேட்டுண்டு, இங்கே இத்தனை பேர் எப்படி சும்மா பொறுத்துண்டிருக்கா?"—என்று வினவினார் சாஸ்திரிகள். அவ் வேளையில் அங்கு வந்த நவீன நாகரிக முறையில் உடை உடுத்திய ஒரு யௌவன கிறிஸ்தவ மங்கை, சேகரைக் கண்டவுடன் அவனது கைகளைப் பிடித்துக் குலுக்கிக் கொண்டே, "Good evening Mr. Sekar! எங்கே நீங்கள் கொஞ்ச நாளா கண்ணிலே படுவதே யில்லையே! வாங்களேன் சிறிது நேரம் ஜாலியா இருந்து விட்டுப் போகலாம்?"—என்று கூப்பிட்டாள். "I am sorry; Please excuse me; I have an important business at my home to-day"— என்றான் சேகர். அதைக் கேட்டு சிரித்த அம் மங்கை, அவனது கன்னத்தில் சிங்காரமாக ஒரு தட்டு தட்டி விட்டு அப்பால் சென்றாள். அதன் பின், அவனுடன் காலேஜில் படிக்கும் நாலைந்து யுவதிகள் வந்து, சேகரைக் கண்டு கை குலுக்கிப் பேசிக் கொண்டிருந்து விட்டுச் சென்றனர். அவர்களுடன் 'குஷி'யாகப் போக முடியாத படி தன்னருகில் நின்று கொண்டிருந்த தனது மாமனாரை, அவன் தனது மனத்திற்குள்ளேயே திட்டிக் கொண்டிருந்தான். அவற்றை யெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த சீமா சாஸ்திரிகளின் மனத்திலே, மகத்தான பயங்கரப் பிரளயம் நேர்ந்து விட்டது. அவனுடன் வீட்டுக்குத் திரும்பி வந்து சேர்ந்த வரையில், சாஸ்திரிகள் தமது மருமகனுடன் ஒரு வார்த்தை கூட பேசவேயில்லை. அன்றிரவு, காலேஜுக்குக் கௌரவமாய்ப் போய்வர ஒரு மோட்டார் சைக்கிள் வாங்கித் தருமாறு சேகர் தன்னை வேண்டிக் கொண்டதற்கும் சாஸ்திரிகள் எவ்வித பதிலும் சொல்லவில்லை.

மறுநாள் அதிகாலையிலேயே, சீமா சாஸ்திரிகள் தமது மருமகனிடம் சொல்லிக் கொள்ளாமல் கூட புறப்பட்டு ரயிலேறி, தமது சொந்த ஊரை அடைந்து விட்டார். அன்று மாலை, ராஜம் கூடத்தில் அமர்ந்து பூப் பின்னல் போட்டுக் கொண்டிருந்தபோது, அவளை நோக்கி தழதழத்த குரலில்—கண்களில் நீர் கலங்க, "அம்மா ராஜம்! பாழும் உத்தியோகப் பைத்தியம் பிடிச்சுப்போய், கண்ணிருந்தும் பாழுங் கிணத்திலே உன்னைக் கொண்டு போய்த் தள்ளிட்டேண்டியம்மா. இந்தமாதிரி யெல்லாம் நடக்கும்னு எனக்கு அந்த காலத்திலே தெரிஞ்சிருந்தால், ஏழையாயிருந்தாலும் நல்ல குணசாலியான வைதீகப் பிள்ளைக்கு உன்னைக் கொடுத்து ரெண்டு பேரையும் ஆத்தோட வச்சுண்டிருப்பேனே! உன் ஆத்துக்காரன், ப்ராம்மண ஜாதியிலே பிறந்திருந்தும், சகவாச தோஷத்தால் ஜாதி ப்ரஷ்டனாய் மிலேச்சன் மாதிரி ஆயிட்டான். நான் படிக்கப் பணம் அனுப்பிண்டிருந்ததன் பலனாய், அவன் காலஞ்சு சட்டைக்காரிகளைக் கூட வைப்பாட் வச்சுண்டிருக்கான்; அத்தை, என் கண்ணாலேயே பார்த்தேன்; குடி கூட இருக்கும்

# "சமாதி ஆலயம்"

(கோ. சௌந்திராஜன்.)

எங்கள் பள்ளிக் கூடம் கிருஸ்மஸ் பண்டிகைக்காக லீவ் விடப்பட்டது. இஷ்டம் போல் பிரயாண டிக்கட்டில் இந்த வருஷம் திருவனந்தபுரம் போய் வரலாமா என்ற சிந்தனையின் பேரில் ஆஸ்டல் ரூமை விட்டு வெளியே வந்தேன். என் எதிரில் மகாலிங்கம் வந்தான். ஏண்டா ராஜு இஷ்டம்போல் பிரயாண டிக்கட்டில் திருவனந்தபுரம் முதலிய விடங்கள் போய் பார்த்துவிட்டு வரலாமா என்றான். நான் என் யோசனையைத் தெரிவித்தேன். மறுநாள் இருவரும் திருச்சியை விட்டு புறப்பட்டோம். செங்கோட்டையில் எங்கள் பள்ளிக்கூட பழைய நண்பன் சீனுவை சந்தித்தோம். அவன் எங்களுடன் திருவனந்தபுரம் வந்தான். பள்ளிக்கூட நண்பர்கள் அதிலும் லீவ் நாள்களில் ரயிலில் சந்தித்தால் பேச்சிற்கு குறையேது? எங்கள் கம்பார்ட்மெண்டில் உள்ளவர்கள் நாங்கள் பேசும் பலமான சத்தத்தில் அவரவர்கள் பேச்சை நிறுத்திக் கொண்டார்கள்.

இப்பொழுது எங்கே போகிறாப் போல்! என்றான் சீனு. இருவரும் சேர்ந்தாற்போல் ஒரேசமயம் திருவனந்தபுரம் என்றோம். சீனு திருவனந்தபுரம் போய்விட்டு திரும்பும்போது அப்படியே கொல்லத்தில் இறங்கி போட்டு மார்க்கமாய் எர்ணகுளம் போங்கள். போட்டுப் பிரயாணம் ரொம்பவும் ஆனந்தமான பியாணம். நான் பல தடவை போய் இருக்கிறேன் என்றான். எனக்கும் அதே உத்தேசம் (இருவரும் சேர்ந்த ஒரே பதில்) பல சங்கதிகள் சீனு கேட்பதும் நாங்கள் இருவரும் சேர்ந்தே பதில் சொல்வதுமாய் இருந்தோம். பக்கத்தில் இருந்தவர்கள் இந்த வேடிக்கையைக் (கேட்டு) கண்டு சிரிப்பாய் சிரித்தார்கள்.

சீனுவின் உதவியால் திருவனந்தபுரத்தில் சகல சௌகரியங்களுடன் எல்லா இடங்களையும் பார்த்தோம். பத்மநாபர் கோவில் முதல் ஊருக்கு மேற்கே உள்ள தென்னந் தோப்புவரை ஒன்று விடாமல் 2நாள்கள் இருந்து

---

போலேயிருக்கு! என்ன செய்றது? உன் தலை யெழுத்து அந்த மாதிரி ஆயிடுத்து. இனிமேல், அந்தப் பாவிகிட்டே உன்னை அனுப்பறதுக்கு, என் மனம் கொஞ்சங்கூட துணியவே துணியாது. நீ, உன் மூச்சிருக்கிறவரையிலே இங்கியே இருந்துடும்மா; உனக்கு எவ்விதமான குறைச்சலும் ஏற்படாதபடி நான் தகுந்த ஏற்பாடு பண்ணிடறேன்''—என்றார் சீமா சாஸ்திரிகள். அம்மொழிகளைக் கேட்ட ராஜத்தின் உள்ளம், எவ்வளவு கொடிய துன்பத்திற்கு உட்பட்ட தென்பதை வர்ணிக்கவும் முடியுமோ?

பார்த்து விட்டு, அங்கிருந்து கிளம்பி கொல்லம் வந்து சேர்ந்தோம். லீவ் நாளானதால் நீராவிப் படகுகள் கிடைக்கவில்லை. எங்களைப் போல் பலர் காத்திருந்தார்கள். ஒரு படகும் வரவில்லை. எங்கள் கஷ்டத்தைக் கண்டு ஒரு "கைப்படகுக்காரன்" வந்தான். சாமி படகுகிடைப்பது கஷ்டங்க; 4-5 பேர் சேர்ந்து நாலுரூபாய் கொடுத்தால் உங்களை எர்ணுகுளம் கொண்டு போய் விட்டுவிடுகிறேன் என்றான். கைப்படகில் போனால் கடல் காக்ஷி களையும் ஓரங்களில் உள்ள காக்ஷிகளையும் சௌகரியமாய்ப் பார்க்கலாம் என்று எங்களுக்கு தோன்றிற்று. ஒன்றிரண்டு பேர்கள் எங்களோடு வர சம்ம தித்தார்கள். சற்று நேரம் பேரம் பேசி 3½ ரூபாய் வாடகை பேசி படகை அமர்த்தினோம். எங்களுடன் ஒரு நம்பூதிரியாரும், ஒரு நாயர், ஒரு புகை யிலை வியாபாரி நாங்கள் இரண்டுபேர் படகோட்டி ஆக ஆறுபேர்கள் இருந் தோம்.

படகு கரையை விட்டு மெள்ள மெள்ள அசைந்துபோய்க் கொண்டு இருந்தது. சுமார் மூன்றுமணி நேரம் படகு சென்றது. திருவனந்தபுரத்தின் எல்லையைக் காட்ட தூரத்தில் கரையில் ஒரு கொடி பறந்துகொண்டு இருந் தது. எங்களுடன் வந்த மலையாளிகள் இருவரும் படகோட்டி (அவனும் ஒரு மலையாளிதான்) மூவரும் கோவிலைப் பார்த்து வணங்கினார்கள். அவர் களைப் பார்த்து நாங்களும் வணங்கினோம். மகாலிங்கம் நம்பூதிரியாரைப் பார்த்து அது என்ன கோவில் சுவாமியின் பேர் என்ன என்றான். நம்பூதிரி யார் ஆச்சரியமான பார்வையுடன் எங்களைப் பார்த்தார். நீங்கள் இந்த வழி புதிதுபோல் இருக்கிறது. ஆகையால் தான் கேட்கிறீர்கள். அது சுவாமி கோவில் அல்ல. ஆனால் ஸ்வாமிக்கு சமமாய் மதித்து வரும் ஒரு வீர மகனின் சமாதி ஆலயம் என்றார். எங்களுக்கு அந்த ஆலயத்தின் விருத்தாந் தம் கேட்க தூண்டியது. நம்பூதிரியாரும் சந்தோஷமாய் சொல்ல ஆரம்பித் தார்.

சுமார் முன்னூறு வருஷங்களுக்கு முன் திருவனந்தபுரத்தை ஆண்டு வந்த விஸ்வலிங்கபூபதி அரசர்காலத்தில் இந்த கதை ஆரம்பிக்கிறது. எங் கும் சுபிக்ஷமான காலம். ஜனங்கள் வறுமையே அறியாமல் சௌக்கியமாய் கவலையற்று கொண்டாட்டங்களும் திருவிழாக்களும் நடத்தி சந்தோஷ மாய் காலங்கழித்தார்கள். அரசரும் பத்மநாபர் கோவிலை புதுப்பித்து சகல உற்சவாதிகளும் சிறப்பாய் நடத்தி வந்தார். அரச பொக்கிஷங்கள் எல்லாம் பத்மநாபர் ஆலயத்தில் ஒரு இடத்தில் பத்திரப்படுத்தி வைக்கப் பட்டு இருந்தது. கொச்சிராஜ்யம் அப்பொழுது ஒரு குறவர் மரபினனான "கங்காளன்" என்னும் ஒரு தலைவன் ஆளுகையில் இருந்தது. கங்காளன் அடிக்கடி படைகளைத் திரட்டி திருவனந்தபுர ஆலய பொக்கிஷத்தை கொள்ளை அடிக்க வருவான். பக்கங்களிலும் கொள்ளை அடித்துக்கொண்டு போய்விடுவான். பல தடவைகள் அவன் முயற்சி செய்தும் பத்மநாபர் ஆலயத்திலுள்ள பொக்கிஷத்தைக் கொண்டுபோக முடியவில்லை, அரசரும் அடிக்கடி இந்த விதமான தொல்லை ஏற்படுவதால் ராஜ்யத்தில் படைகளை அதிகமாக்கியதுடன் எல்லை ஓரங்களில் படைத்தளங்கள் ஏற்படுத்தினர். இதனால் கொஞ்சகாலம் திருடர் தொல்லை ஒழிந்திருந்தது.

கிழக்கே மேற்குத் தொடர்ச்சிமலை அடிவாரத்திற்கு ஓரம் சாத்தமான் குடி என்று ஊர் ஒன்றிருக்கிறது. அங்கே உள்ள ரங்கநாதர் ஆலயத்தில்

வசந்தோற்சவம் சித்திரைமாதம் வருவது வழக்கம். ஏழாம்நாள் திருவிழாவுக்கு அரசர் தம்முடைய பரிவாரங்கள் சூழ வருவார். எல்லைப்புற படைகளும் சமஸ்தானப் படைகளும் அங்கே வந்து சேரும். திருவிழா மிக விமரிசையாய் கொண்டாடப்படும். அரசரே வருவதால் பக்கத்திய ஊர்களில் உள்ளவர்கள் எல்லோரும் வேடிக்கை பார்க்கப் போய் வருவது வழக்கம். ஒரு வருஷம் திருநாள் ஆரம்பம் ஆயிற்று. எல்லா ஊர் படைகளும் அந்த கோயிலுக்கு வந்திருந்தது. பத்மநாபர் ஆலயத்தின் காவல் படைகள் கொஞ்சம்தான் திருவனந்தபுரத்தில் இருந்தது. இந்த சங்கதி கங்காளனுக்கு தெரிந்தது. இதுதான் சமய மென்று ஒரு படையைத் திரட்டிக் கொண்டு படை எடுத்தான். கிழக்குப் பக்கம் போவது சரியல்ல என்று அவனுக்குத் தெரியும். மற்ற பாதைகள் மலைகள் சூழ்ந்தது; போவது கடினம். ஆகையால் இந்தவழியாய்ச் சுலபமாய் திருவனந்தபுரம் போய் கொள்ளையடித்துக் கொண்டு வரலாம் என்று யோசனையுடன் புறப்பட்டு வந்தான்.

இந்தச் சமாதி ஆலயத்திற்கு பக்கத்தில் சிறு ஊர் ஒன்று இருக்கிறது. சுமார் பத்து இருபது வீடுகள் உண்டு. அந்த ஊரில் இருப்பவர்கள் யாவரும் சுத்த வீரர்கள்; அஞ்சா நெஞ்சுபடைத்தவர்கள். அப்பொழுது அந்த ஊரில் சிறுவர்களும் பெண்களுமே இருந்தார்கள் பெரியவர்கள் அரசன் வந்து இருக்கும் ஊருக்குப்போய் இருந்தார்கள். அங்கங்கே சிறுவர்கள் தெருவில் விளையாடிக் கொண்டு இருந்தார்கள். ஓரிடத்தில் ராமுண்ணி என்ற வாலிபனும் சின்னத்தம்பி என்றவனும் விளையாடிக் கொண்டு இருந்தார்கள். ராமுண்ணிக்கு வயது 16, சின்னத்தம்பியும் அதே வயதானவன். இருவரும் நல்ல திடசரீரம் படைத்தவர்கள். சுத்த வீரத்தனம் அவர்களிடம் குடிகொண்டிருந்தது. விளையாட்டில் பொழுது போக்குகையில் வடக்கே வெகு தூரத்தில் ஒரு படை வருவதை ராமுண்ணி பார்த்தான். கொஞ்ச நேரத்தில் அவர்கள் யார் என்று தெரிந்து கொண்டான். கங்காளன் அடிக்கடி இதே மாதிரி கொள்ளையடித்துக் கொண்டுபோவது தகப்பனால் சொல்ல கேட்டிருக்கிறான் ராமுண்ணி.

'சின்னத்தம்பி! ஓடு சீக்கிரம்' என்றான் ராமுண்ணி. சின்னதம்பி சங்கதி தெரிந்து கொண்டான். 'நீ ஒண்டியாய் இவர்களோடு சண்டை செய்ய முடியாது. நானும் உன்னுடன் இருந்து சண்டை செய்கிறேன்' என்றான். பேச நேரம் இல்லை. படைகள் நெருங்குகிறது. பத்மநாபர் ஆலயம் பழுதடையும்; நிற்காதே ஓடு; நான் ஒருவன் அவர்களை நாலுமணி நேரமாவது தாமதப்படுத்தி விடுவேன்' என்றான் ராமுண்ணி. சின்னத்தம்பி மறுவார்த்தை பேசவில்லை; ராமுண்ணி வீட்டில் இருந்த ஒத்தை மாட்டு ரேக்ளா வண்டி மிகுந்த வேகத்துடன் ஊரைவிட்டுப் புறப்பட்டு மறைந்தது.

ராமுண்ணி வீட்டுக்குள் ஓடினான். அவன் தகப்பனார் வைத்து விட்டுப் போன பட்டயத்துடன் (உடைவாள்) வெளியே வந்தான். தான் ஒண்டியாய் அவர்களுடன் சண்டை செய்வது கடினம் என்பது தெரியும். படகு துறையில் படகுகாரர்கள் படகுகளைக் கரையில் விட்டு விட்டுப்போய் இருப்பதும் தெரியும். அத்தனை படகுகளையும் கடலில் தள்ளிவிடுவது சீக்கிரத்தில் ஆகக்கூடிய காரியம் அல்ல. திடீரென்று அவன் மனதில் ஒரு யோசனை உதித்தது. ஊருக்கு மேற்கே ஓடும் ஒரு காட்டாற்றின் பாலம். காட்டாறு

பள்ளமானது. அதில் யாவரும் இறங்கி அக்கரை போக முடியாது. இறங்கினல் சாக வேண்டியதுதான். படகு துறைக்கு போக அந்த ஆற்றில் ஒரு தென்னம்பாலம் போட்டு இருக்கிறார்கள். அந்த பாலத்தின் வழியாய்த்தான் படகுதுறை போகவேண்டும். பாலத்துக்கு மிக வேகமாய் ஓடினன். அதின் மேல் போடப்பட்டு இருக்கும் மூன்று தென்னை மரங்களை என்ன செய்வது? கொஞ்சம் கொஞ்சமாய் அசைத்து ஒரு மரத்தை ஆற்றில் தள்ளிவிட்டான். படைகள் நெருங்கி வந்து விட்டன; தன் பலம் எல்லாம் சேர்த்து அசைத்து அசைத்து மற்றொன்றையும் ஆற்றில் தள்ளிவிட்டான். ஒன்று தான் பாக்கி. நடுவே இருந்த மரம் மண்பிடிப்பு ஜாஸ்தி. கத்தியைக் கீழே வைத்துவிட்டு மண்ணைப் புரட்டிக்கொண்டு இருந்தான். படைகள் அக்கரையில் வந்துவிட்டன. கள்வர்கள் ஒவ்வொருவராய் பாலத்தின் வழி வந்தார்கள்.

ராமுண்ணி இரண்டு மரங்களைத் தள்ளிவிட்டதிலேயே அசைந்துவிட்டான். அவன் வீரம் தான் அப்போது துணை செய்தது. கள்வர் சிறுவன் ஏதோ பாலத்தடியில் வேடிக்கை பார்ப்பதாய் நினைத்தார்கள். உடைவாள் கீழே கிடந்ததைப் பார்க்கவில்லை. ராமுண்ணி கள்வர்கள் கிட்டே நெருங்குவதைக் கண்டான். மறுகணம் முன்னே வந்துகொண்டு இருந்த இரண்டு கள்வர் உடல்கள் இரண்டு துண்டுகளாய் ஆற்றில் விழுந்தன கள்வர் கூட்டத்தில் கலவரம் ஏற்பட்டது. அதற்குள் மூன்றாமவன் உடலும் இரு துண்டாய் ஆற்றில் விழுந்தது. ராமுண்ணி களைத்திருந்தாலும் தன் உயிர் உள்ளளவும் எத்தனை பேர்களைச் சமாளிக்க முடியுமோ அவ்வளவும் செய்ய தயாராய் இருந்தான். நாலாவது கள்வன் ஜாக்கிரதையாய் சண்டை செய்து கொண்டே வந்தான். கள்வர் கூட்டத்தில் இருந்த ஒரு கூரான வேல் ராமுண்ணி நெஞ்சில் பாய்ந்தது. வேலுடன், நாலாவது கள்வனுடன் போராடி இருவரும் கீழே விழுந்தார்கள். இவர்கள் சண்டையால் ஓரங்களில் இருந்த மண் சேர்ந்து விழாமல் இருந்த மரமும் சாய்ந்தது. ஆனல் ஆற்றில் விழவில்லை. ஓரத்தில் இடிபட்டு நின்ற இடத்தில் இடித்துக்கொண்டு நின்றுவிட்டது. ராமுண்ணி இவர்களுடன் போராடியதில் களைத் திருந்ததால் அசைவற்று விழுந்துவிட்டான். கள்வர் இவன் இறந்தான் என்று நினைத்துப் போய் விட்டார்கள்.

சாத்தமான்குடி திருநாள் கூட்டத்தில் ஒத்தைமாட்டு ரேக்ளா மிக வேகமாய் ஓடி வருவதைக் கண்டார்கள். கொஞ்ச நேரத்தில் சங்கதி எங்கும் பரவிவிட்டது. படைவீரர்கள் குதிரையேறி திருவனந்தபுரத்தை நோக்கி மிக வேகமாய்ப் போனார்கள். பத்மநாபர் ஆலயப்படைகளுக்கும் கள்வர் படைக்கும் பலத்த சண்டை. சிறுபடையால் கள்வர்படைகளைச் சமாளிக்க முடியவில்லை. ஒவ்வொருவராய் இறந்து விழுந்தார்கள்; கொஞ்சம்தான் பாக்கி. அதற்குள் சாத்தமான் குடியில் இருந்துவந்த படைகள் சேர்ந்து கொண்டன. கள்வர் படை ஓட்டம் பிடிக்கத்தான் முடிந்தது. பத்மநாபர் கோயிலும் பொக்கிஷமும் புனிதமாய் காப்பாற்றப்பட்டது.

சின்னத்தம்பியும் அவனுடன் சில வீரர்களும் ராமுண்ணி விழுந்து கிடந்த இடத்திற்கு வந்தார்கள். மார்பில் வேலுடன் இரத்தத்தில் புரண்டு கிடந்தான். ராமுண்ணி அப்பொழுது சாகவில்லை. மற்றவர்கள் செய்த உபசாரத்தால் கொஞ்சம் பிரக்ஞைவந்து சுற்றி நிற்பவர்களை ஒரு முறை பார்த்

தான். மிக தீனமான சுரத்தில் சில வார்த்தைகள் வெளியே வந்தன. பத்மநாபர் ஆலயம்.........நால்வர் உடல் ஆற்றில் விழுந்தது............ஒரு மாத்தை பேர்க்கமுடியவி...சின்னதம்பி......சொன்னபடி......அவ்வளவு தான் அவன் ஆத்மா உடலைவிட்டுப் பிரிந்தது. ஊரில் கண்ணீர்விடாதவர்கள் யாவரும் இல்லை. ராமுண்ணியின் சடலத்தை மிகுந்த சிங்காரத்துடன் வீரனுக்கு ஏற்பட்ட மரியாதைகளுடன் அடக்கம் செய்யப்பட்டது. இந்த காரியத்திற்கு அரசரே வந்து இருந்து நடத்தினர்.

அந்த வீர புருஷன் சமாதிதான் அந்த ஆலயம் என்றூர். கதை முடிந்தது. படகும் எர்ணுகுளம் வந்து சேர்ந்தது. படகை விட்டு கீழே இறங்கினேம்.

# நட்பு



(கோட்டாறு—தே. ப. பெருமாள்.)

நட்பின் கூறுகள் பல. அவற்றை கண்டு இரண்டு வகையாக்ப் பிரிக்கலாம். அவை இயற்கை நட்பு செயற்கை நட்பு என் பனவாம். இயற்கை நட்பு, ஒருவர்பால் இயல்பாய் எழும் அன்பால் அவரி டைக் கொள்ளும் நட்பாம். செயற்கை நட்பு ஒருவரைப் பலபோழ்து கண்டு, அவரது உயரிய குணத்தி லுளங் கொண்டு அவரிடைப் புரியும் நட்பாம்.

இவ் விருதிற நட்புள்ளும் முற் கூறிய இயற்கை நட்பே மாண்புடைய தாகும். இந் நட்பு இறைவனால் கூட்டப் பெறுவதாம். இந் நட்புடை யோர் அடிக்கடி கண்டு பழகுஞ் செய்கை இல்லாதிருப்பினும் இவரது நட்பு என்ஞான்றும் வளர்ந்த வண்ணமாகவே யிருக்கும். இவருள் கருத்து வேற்றுமை கிடையா. இந் நட்புடையோர் எவ்வமையமும் தம்முள் ஒத்த மனமுடையராகவே யிருப்பர். இவர் எச் சமயமும் தம் நண்பரின் நலத்தை எதிர் நோக்கிய வண்ண மிருப்பர். தாம் மண்பதையில் வாழ்தல் தமது நண்பரின் பொருட்டேயாம் என்னும் உயரிய கொள்கை இவரிடை எழும்புவதாகும். இவருள் ஒருவர் உயிர் நீப்பின் மற்றையோர் வாழார். அவரும் தம் நண்பருடன் உயிர் துறக்கும் இயல்பினராவர்.

இந் நட்பு ஒத்த குலத்தாரிடமும், பணத்தாரிடமும் நிகழ்வதன்று. இந் நட்பை அரசன் ஆண்டியிடத்துங் கொள்வன். ஆண்டி அரசனிடத் துங் கொள்வன். உயர்குலத்தோன் தாழ்குலத்தோனிடத்துங் கொள்வன். தாழ்குலத்தோன் உயர்குலத்தோனிடத்துங் கொள்வன். அழகன் அழகில் லானிடத்துங் கொள்வன். அழகில்லான் அழகனிடத்துங் கொள்வன்.

பிசிராந்தையாரும் கோப்பெருஞ் சோழனும் இயற்கை நட்பினராவர். இவர் கண்டெழுந்த காதலால் கிழமை பூண்டவரல்லர். முதற்கண் இவ ருள் ஒருவரை யொருவர் கண்டு கூட அறியார். ஆந்தையார் பாண்டிய நாட்டினர். கிள்ளி சோழ நாட்டினன். பின்னை இவர்களிடை நட்பு எங்ஙனம் முகிழ்த்தது? சோழன் சிறந்த ஞானியென்றும், பெரும் புலவ னென்றும், பாவலரைப் போற்றும் பண்புடையாளனென்றும் ஆந்தையார் பலர் வாயிலாக அறிந்தார். அஃதே போன்றே சோழனும் புலவரது தூய உள்ளப் பண்பையும், அவரது விரிந்த கல்வியையும், உயரிய கவிபாடும் வன்மையையும் ஏனையோர் வாயிலாக அறிந்தார். இத் துணையே. அன்று முதல் இவர்களிடை நட்பு உருக்கொண்டது. அந் நட்பு பின்னை வளர் மதி போலும் வளர்வதாயிற்று. அது முதல் நண்பர் இருவரும் ஒருவர் நலனை பிறிதொருவர் கருதும் இயல்பினராயினர். சோழன் என்ஞான் றும் புலவரைப் பற்றிய செய்தி கேட்க அவாவுறுவன். அவரது பாயங்

கேட்டு மகிழ்வன். அவரது மாண்பை எண்ணி எண்ணி இறும்பூதெய்து வன். புலவரும் மன்னனை எப்போழ்தும் தம் உள்ளத்தின்கண் நிலை நிறுத்தி அவனது செந்நாத்திறனையும், கொடைச் செவ்வியையும் நினைந்து நினைந்து மகிழ்வு பூத்து அவ்வனைப் பாட்டில் பாடுவர். ஒருநாள் அந்திப்போழ்து விண் பரப்பில் அன்னச் சேவலொன்று பறந்து சென்றது. அது தென் றிசையி னின்றும் வடதிசை போதலைக் கண்ட ஆந்தையார் சுறமென அஃதை நோக்கி,

''அன்னச் சேவலே! அன்னச் சேவலே! தனது நாட்டைச் செங்கோல் செலுத்தும் அமர் வெற்றி மிக்க அரசனது முகம் போல், அழகமைந்த திங்களின் நிலா விண்ணிடை விளங்கவும், பிரிந்தோரை வருத்துவது மாய இம் மாலைப் போழ்தில், யாம் செயலற்று வருந்த, நீ குமரித் துறை யில் அயிரை மாந்தி வடதிசைக் கண்ணுள்ள இமயஞ் செல்லுவையாயின், அஃதிரண்டிற்கும் இடை யிட்ட சோழநாட்டின்கண் தங்க நேரிடுமாயின் அந் நாட்டின் தலைநகராகிய உறையூரின் கண்ணே விளங்கும் உயர்ந்த மாடியினிடத்து உனது பெடையொடு தங்கி, உனது வரவை வாயிலோர்க் குரையாதே அரண்மனைபுக்கு கிள்ளிகேட்ப யான் பிசிரென்னும் ஊரின் கணுள்ள ஆந்தையுடைய அடியின் கீழ் வாழ்வேன் என்று சொல்லுவையா யின் அழகிய உனது பெடையன்னம் பூணுதற்குத் தக்க தனது நல்ல அணி கலனை அளிப்பன்'' என்னும் பொருள் தோன்ற,

''அன்னச் சேவல்! அன்னச் சேவல்!
ஆடுகொள் வென்றி அடுபோர் அண்ணல்
நாடுதலை யளிக்கும் ஒண்முகம் போலக்
கோடு கூடுமதிய முகிழ்நிலா விளங்கும்
மையன் மாலையாங் கையறு பினையக்
குமரியம் பெருந்துறை அயிரை மாந்தி
வடமலைப் பெயர்குவையாயின் இடையது
சோழ நன்னாட்டுப் படினே கோழி
உயர் நிலை மாடத்து குறும்பறை அசைஇ
வாயில் விடாது கோயில் புக்கெம்
பெருங் கோக்கிள்ளி கேட்க இரும்பிசிர்
ஆந்தை அடியுறை யெனினே மாண்டநின்
இன்புறு பேடை அணியத்தன்
அன்புறு நன்கலன் நல்குவன் நினக்கே''

என்ற பாட்டைக் கூறினர். இப் பாட்டு எத் துணை அன்பை எடுத்துக் காட்டு கிறது! இப் பாவின் ஒவ்வொரு உறுப்பிலும் நட்பின் வாடை கமழ்தல் காணலாம். இன்னும் நட்பிடை விளையும் நம்பிக்கையும் இதன் கண் விளங்கும். 'தன தடியின் கீழ் வதியும் அன்ன மெனின் சோழன் தவறாது நன்கல மளிப்பன்' என்று கூறும் புலவர் சோழனுக்கு தன்பாலுள்ள அன் பின் முதிர்வை மறைமுகமாகக் கூறிக் காட்டுகின்றார். இன்னும்

'புணர்ச்சி பழகுதல் வேண்டா, உணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்'

என்ற தெய்வப் புலவர் திருக்குறளுக்கு இவரிருவரும் உயரிய சான்ருய் அமைதலுங் காணலாம்.

செயற்கை நட்பு பெரும்பாலும் ஒத்த குண முடைய இருவர் பால் நிகழ்வதாகும். அறிஞர் அறிஞரிடைச் செய்யும் நட்பும், புல்லர் புல்லரிடைச் செய்யும் நட்பும், குடியர் குடியரிடைக் கொள்ளும் நட்பும் இதன் பாற் படுவதாகும்.

இந் நட்பினருள் பொருந்தாக் கருத்துடையார் காண்டல் அரிது. அறிஞராயின் நண்பர் ஒரு மனங் கொண்டு நல்லன செய்ய முற்படுவர். கொலைஞராயின் களவாடற்கு ஒருப்படுவர், குடியரும் தடியரும் குடித்தற்கும், அடித்தற்குமே இசைவர். இவருள் ஒரு சிலர் முரண்பட்ட கருத்துடையரா யிருப்பினும் அவர் தம்முட் கூடி அவ் வேற்றுமையைக் களைதல் செய்வர்.

இவருள் அறிஞர் அறிஞரிடைச் செய்யும் நட்பே உலகில் மாண்பு பெறுவதாகும். இவரது நட்பு நாளுக்கு நாள் வளர் பிறையை யொத்து வளருந் தன்மையதே யன்றி ஏனையோர் நட்பு போன்று அருகுந் தன்மைய தன்று. இவர் ஒரு மனங் கொண்டு நல்லன செய்யவே முற்படுவர். இவருள் ஒருவர் துன்பத்திலழுந்த பிறிதொருவர் அஃது நோக்கி வாளா விரார். அவர் இத் துன்பத்தை நீக்குவதற்கு தம்மால் ஒல்லும் வகை முயல்வர். அம் முயற்சியிலும் தமது உயிரனைய நண்பரின் துன்பம் தொலையாவிடின் தாமும் அவருடன் அத் துன்பத்தைத் துய்ப்பர். 'கொட்டையும் ஆம்பலும் நெய்தலும் போலவே ஒட்டி உலர்வார் உறவு' என்னும் பெரியோர் பொன்னுரைக்கு இவரே ஏற்ற சான்ருய்ப் பொலிவர்.

இந் நட்பு இனிப் பொருந்தாக் குண முடையா ரிடத்தும் நிகழ்தலுண்டு. இவரிடை இந் நட்பு கண்ட போழ்தே விளக்கமுறும். அல்லாத போழ்தெல்லாம் ஓர் பால் மழுங்கி உணர்வின்றிக் கிடக்கும். இந் நட்புடையார் ஒருவர் நலனை ஒருவர் கருதும் இயல்பினரல்லர். கண்ட போழ்து நகை முகங் காட்டி அவமே வெற்றுரையாடும் அளவானே நிற்பவராவர். இத்தகையார் நட்பைப் புலவர் பெருமக்கள் முக நகும் நட்பென்பர். அஃதாவது முகத்தளவானே நிற்கும் நட்பாம்.

இந் நட்புடையாரில் ஒரு அறிஞன் பிறிதொரு இழிகுண முடையானிடம் நட்பு கொண்டானேல் பின்னர் அவ் வறிஞன் படும் பாடென்ன! அவன் அந் நண்பனைக் காண்டற்கும் அஞ்சுவன். காணின் உரையாடற்கும் வெருவுவன். ஏனெனின் தாம் அவ் விழியோனிடம் உரையாடும் போழ்து தம்மை நல்லோரெனப் போற்றும் பிறர் காணின் அவர் தம்மைப் போற்றுத லொழித்து தூற்றுவர் என்னும் எண்ணம் இவருள்ளத்து எழுதலே இதற்குக் காரணமா மென்க. இவ் வெண்ணத்தால் இவர் இந் நட்பைப் பின்னரோம்பாது நாளடைவில் அழித்தற்கே முற்படுவர். இவ்வாறு இந் நட்பு தேய்ந்து தேய்ந்து மாய்தலை தெய்வப்புலவர் திருவள்ளுவனர்.

"நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு"

என்னும் குறளிடை வைத்து விளக்குவாராயினர்.

நாம் நட்பு ஒருவரிடைச் செய்யுங்கால் முதற்கண் அவரை நன்கு ஆய்தல் வேண்டும். சிலர் நம்மிடம் நல்லன பேசியவண்ணமிருப்பர். ஆனால் அவரது உள்ளத்தின்கண் எவ்வமையமும் நம்மைக் கெடுத்தற்கே எண்ணம் எழுந்து கொண்டிருக்கும். இத்தகையோரிடம் நாம் நட்பு கொள்ளுதல் கூடாது. இந் நட்பால் என்ஞான்றும் அழிவேயாம்.

நல்லோரிடமும் சில போழ்து சில தீக்குணங்கள் எழுதலுண்டு. இக் குணத்தால் நாம் இவரை வெறுத்தல் கூடாது. இக் குணங்கள் எழுந்த காலை நாம் இவரிடைச் சென்று சிக்குதலும் கூடாது. அங்ஙனம் அறியாது ஒருகால் சிக்கினும் அப்போழ்து நிகழ்வனவற்றை நாம் அன்புடன் பொறுதல் வேண்டும். அதைப் பொறுத்தற்கு நமக்கு விருப்பமின்றேல் அவரின் நட்பைத் தள்ளிக் களைதல் வேண்டும். அஃதன்றி பிறரிடம் அவரின் தீக்குணத்தை உரைத்தல் கூடாது. அங்ஙனம் உரைத்தல் மடைமையின்பாற் படுமென்க. அறிஞர் இங்ஙனம் உரையார். இதையே,

'வேற்றுமையின்றிக் கலந்திருவர் நட்டக்கால்
தேற்றா வொழுக்க மொருவன்கண் ணுண்டாயின்
ஆற்றுந் துணையும் பொறுக்க பொறுஅயின்
தூற்றாதே தூர விடல்'

என்று ஒரு பெரியார் கூறியது காண்க.

நாம் ஒருவர் நட்பில் குறை கண்டு அவரைப் பிரிதல் செய்தோமாயின் பின்னர் நாம் அவரிடை நட்பு கொள்ளுதல் கூடாது. ஏனெனின் அந் நட்பு முன்போல் மாண்பு பெறாவாம். மேலும் அந் நட்பிடை அச்சமும் ஐயமும் நிகழ்ந்த வண்ணமா யிருக்கும். இத்தகைய வீண் ஐயப்பாட்டிற்கும் அச்சத்திற்கும் இடங் கொடுப்பதினும் கொடா திருத்தலே நன்றாம்.

நாம் நண்பனுடன் எவ்வமையமும் அன்பாய் இருத்தல் வேண்டும். அவன் மிசை கடுமுகம் காட்டுதல் கூடாது. சுடுசொற் கூறுதலும் கூடாது. அவன் வயம் மலர்ந்த முகத்துடனும் இன்சொற் கூறிய நாவுடனுமிருத்தல் வேண்டும். அவன் நலனையே எப்போழ்தும் கருதுதல் வேண்டும். 'உயிர் காப்பான் தோழன்' என்னும் உயரிய பொருளுரைக்கு இலக்காகி

'உடுக்கை யிழந்தவன்கை போலவாங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு'

என்னும் வள்ளுவர் பெருமானின் தெள்ளியவுரையை கருத்திற் கொண்டு நாம் வாழ்வு நடாத்துதல் வேண்டும்.



# சமூகமும் சட்டமும்

(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

சாரதா சட்டம் என்ற பெயர்கொண்ட சட்டம் ஒன்று சிருஷ்டிக்கப்பட்டு சமீபத்தில் பழுது பார்க்கப்பட்டும் வருகிறது. இதன் கர்த்தா நல்ல நோக்கம் கொண்டே இதைச் சிருஷ்டித்தார் என்பதில் சந்தேகமில்லை. தீவிரமாக ஆமோதிப்பவர்களும் அநேகமாக அத்தகையவர்களாகவே யிருக்கலாம். இதன் பயனாக பாலவிதந்துக்களின் தொகை குறையக்கூடும் என்பது திண்ணம். ஆனால் பதினைந்து வயதில் விவாகம் புரிந்துகொண்டு 25-வயதிற்குள் அரையும் காலும் முக்காலும் முழுதுமாக ஒன்றேகால் டஜன் பிரசவங்களுக் குள்ளாகித் தோலும் எலும்புமாகி ஒளியிழந்து குன்றிவரும் யுவதிகளுக்காகப் பரிந்து ஒரு சட்டம் செய்ய மசோதா கொண்டுவரும் ஒரு நிபுணர் ஏனோ முன் வரவில்லை. தென்னாடு சம்பந்தப்பட்ட மட்டில் இந்தச் சட்டத்திற்கு பல வருஷங்கள் முந்தியே வரதட்சணைச் சட்டம் அரசாங்க மெம்பர்களின் தயவின்றியே அமுலுக்கு வந்து விட்டபடியால் 15,16,17,18 வரையிலும் விவாகம் செய்விக்க முடியாமல் கன்னிகைகளை வைத்திருப்போர் தொகை புள்ளி விவரமெடுத்தால் இதில் தப்பினவர்கள் இல்லை யென்பது விளங்கும். இது மட்டில் அல்லாமல் வயோதிக விவாகத்தையும் மனைவி யிருக்கையில் மற்றொரு பெண்ணை மணப்பதையும் தடுக்க ஒரு மசோதாவைப் பெண்கள் நலத்தைக் காக்கக் கரைந்துருகும் இந்த கனவான்களில் ஒருவர் ஏன் கொண்டு வரக் கூடாது? இது ஒருகால் ஆடவர் உரிமையில் தலை யிடுவதாகும் போலும். கிழக் கல்யாணங்கள் கூடாதென்றே அறிஞர்கள் வெறுக்கிறார்கள் என்று நாமும் அறிவோம். அந்த வெறுப்பினால் நடக்கும் விவாகங்கள் தடைப்படவில்லை. 15 வயதுப் பெண் 60 வயதுள்ள கிழவருக்கு மனைவியாவதில் அதிக பிசகில்லை யென்பது இவர்கள் கருத்தா? அதில் இயல்பாக ஏற்படக் கூடிய ஊழல்களைப் பாதுகாக்கத்தான் விதவாவிவாகமும் வரவேற்கப்படுகிறதோ? என்றும் ஊகிக்கவேண்டி யிருக்கிறது.

நமது பண்டைக்கால பாரதபுத்திரிகள் கற்பையும் தர்மத்தையும் தங்களுக்கு ஆருயிராகவும் அணிகலமாகவும் கடைப்பிடித்து வந்தார்களே யன்றி புன்மைப் போகத்திற்கு இரையானார்களில்லை.

விதவை விவாகத்துக்கு ஆக்கந் தேடப் பல பெண்கள் கூட்டங்களைக் கூட்டி அவர்கள் ஆமோதிப்பதாகப் பல உதாரணங்கள் வெளி வருகின்றன. அவைகளும் உண்மையே. பெண்கல்வி பரவுவதாகப் புலப்படும் இக்காலத்திலும் அபூர்வமாக ஒருசிலர் தவிர மற்றப் பெண்கள் எல்லாம் அவரவர்களுக்கு உரிய கணவர்கள் கற்பித்தபடி கூட்டங்களில் பேசி வருகின்றனர் என்பது அநுபவம். பொதுவாக இந்தியநாட்டுப் பெண்கள் தத்தம் கணவர்களின் நோக்கத்தையே ஆமோதிப்பவர்களென்பது வெளிப்படை. அதைத் தம்முடைய கடமை யென்றே கருதுவதும் இயல்பு. இது உண்மையில் பாரத புத்திரிகளின் பெருமையை உயர்த்துவதாகும். ஆடவர்கள் அடக்க வுணர்ச்சியுடைய மனைவியர்களைத் தமது கட்சி வலுவுறச் செய்யும் கருவிகளாகப் பயிற்றுவதுதான் வருந்தத் தக்கது. நற்குடியிற் பிறந்து நல்ல சகவாசமும் பெற்று நற்குணவதிகளாகத் திகழும் எந்தப் பெண்பாலும் இந்நாடு சம்பந்தப்பட்ட மட்டில் விதவா விவாகத்தையும் கலப்பு மணத்தையும் மனதார விரும்பவில்லை யென்பது பெண்களிடையே நெருங்கிப் பழகும் பெண்பாலார்களுக்கு விளங்கும். மேடைமீ தேறித் தீர்மானங்களை பிரேரேபிப்பவர்கள் இந்தியநாட்டு எண்ண முடியாத பெண் குழுவினர்களின் பிரதிநிதிகள் அல்லவென்பது தெளிவு. பலகோடிப் பெண்களுக்குத் தத்தம் பெண்மைக் கேற்பட்ட கடமைகள் தெரியுமேயன்றி இத்தகைய புதிய கருத்தொன்று முகிழ்த்திருப்பதாகக் கூடத் தெரியாது. கள்ள வொழுக்கத்தைவிட மறுமணம் சிறந்ததே. அங்ஙிலையெய்தக் காரணம் பெரிதும் ஆடவர்களின் மிருக உணர்ச்சியே என்பது அறிஞர் துணிபு. ஆங்கிலம் பயின்று அன்னவர் நடையைப் பின்பற்ற ஆர்வம் கொண்டு கலப்பு விவாகத்தை ஆரம்பத்திலேயே பெற்ற சிலர் இயற்கையறிவிலும் கல்விச் செல்வத்திலும் சிறந்தவர்களாகவும் நம்முன் இருப்பது தெரிந்ததே. அவர்கள் புத்திமதி இவ் விஷயத்தில் சாதகமாக இருப்பது இயல்பே. அவ்வளவு சிறப்புள்ள அம்மையே ஆமோதிக்கிறார்களே என மருண்டு அதை அப்படியே வேத வாக்காகக்கொண்டு கலப்பு மணத்திற்கு நம்நாட்டு புனிதமான மாதர்கள் இசைவார்களென்று கனவிலும் கருத வேண்டாம். பகவத்கீதை முதல் அத்தியாயம் நாற்பதாவது சுலோகம் முதல் தொடர்ந்து நாற்பத்து நான்காவது சுலோகம் வரையில் கலப்பு மணத்தின் தீமையை விவரிக்கிறது.

(42) ஸங்கரோ நரகாயைவ குலக்நாநாம் குலஸ்யச—
பதந்தி பிதரோ ஹ்யேஷாம்லுப்த பிண்டோதக கிரியாஹ.

என்று கூறப்பட்டுள்ளது. இதன் பொருளாவது,

"ஜாதிக்கலப்பானது, குலத்தைக் கெடுக்கிறது. அப்படிக் கெடுத்தவர்களுடைய குலமும் நரகத்தை யடைய ஏதுவாகிறது. ஏனெனில் இவர்களுடைய பிதிருக்கள் பிண்டக்கிரியையும் உதகக் கிரியையும் இழந்திட்டவர்களாய் நரகத்தில் வீழ்கிறார்களென்பதே.

முன்னோர்கள் ஆண்மகன் அறிவிலும் ஆற்றலிலும் மெய்யுணர்விலும் சிறப்பதற்கு பிர்மசரியமே மருந்தென உணர்ந்தனர். அதற்கேற்ப இளமையில் ஒழுக்கமும் பணிவும் தோன்றக் குருகுல வாசத்திற் செறிவித்தனர்.

குறைந்தது முப்பது முப்பத்தைந்து வயது ஆகுமுன்பு கிருஹஸ்த தர்மத்தை அதாவது இல்லறத்தை மேற்கொள்ள அநுமதிப்பதில்லை. ஸ்ரீராமகிருஷ்ணபரம ஹம்ஸர் பன்னிரண்டாண்டுகள் (யுக்த வயது வந்தபின்) பிரமசரியத்தை உறுதியாக அனுஷ்டித்தால்தான் மேதை என்னும் நரம்பு எழும் என்றருளியுள்ளார். மரிக்கும் வரை திரும்பத் திரும்ப மணந்து கொண்டே இருபாலாரும் வாழ்க்கை நடத்துவதென்பது கப்பலில் இறக்குமதி செய்த சரக்கன்றி வேறில்லை—மகாத்மாகாந்தி யடிகள் தென் ஆப்பிரிக்காவில் நிறுவியுள்ள போனிக்ஸ் ஸ்தாபனம் பிரமசரியத்தையே முதன்மையாக வளர்த்து வருகிறது. அதிற் பயிலும் மாணவர்கள் நுண்ணிடை மடவார் எதிர்வரில் நோக்காமலே யிருத்தல் வேண்டுமென்பது விதி. கவி தாகூர் அமைத்துள்ள சாந்தி நிகேதனத்தின் விதிகளும் கண்டிப்பானவைகளே.

இளமையில் உயிரினும் சிறந்த ஒழுக்கத்தை ஓம்பாத வாலிபர் மூளையில் என்ன உரம் இருக்கும்? உடல்வன்மைதான் எங்ஙனம் வளம் பெறும்?

"திண்ண மிரண்டுள்ளே சிக்கவடக்காமல் பெண்ணின்பா
லொன்றைப் பெருக்காமல்."

என்றார் வயித்திய நூலாரும். படிப்பை நாடிச்செல்லும் கலாசாலை வாழ்வில்தான் பெரும்பாலும் சுயம்வரங்கள் ஏற்படுகின்றன. வித்தைக்குச் சத்துரு விசனம் தரித்திரம் என்ற பழமொழி பண்டைக்கால முதல் நம் நாட்டில் வழங்கி வருகிறது. இதை மற்றொரு வகையில் வித்தைக்கு சத்துரு விவாகம் தரித்திரம் என்று கூறுவதும் பிழையாகாது. வம்ச விருத்திக்காகவே இந்தக் கன்னிகையை ஏற்கின்றேன் என்பதே விவாகத்தில் மணமகன் செய்யும் பிரமாணம். இச்சைக்காக மணக்கின்றேன் என்னும் சொற்களே கிடையாது. இச்சையை அதாவது காதலை நெருப்போடு ஒப்பிட்டனர் அறிஞர். நெருப்பைப்போல் தன்பாலணுகிய எப்பொருளையும் நாசமாக்கும் ஆற்றல் காமத்திற்கும் உண்டென்பதோடு அவ்விரண்டிற்கும் பரிகாரம் செய்தால் அவைகளால் சமன மடையாமல் மேலு மேலும் விருத்தியாகும் குணமுடைமையும் காண்கிறோம். இவையன்றி நெருப்பும் காற்று முதலிய சாதனங்களினாலே விருத்தி யடைகிறது. அஃதின்றேல் ஆறி நீறாகி யணையும். இச்சையும் அதை வளர்ப்பதற்கு அநுகுணமாக தூர்த்தர் சேர்க்கையோ? சிற்றின்பவுணர்ச்சியைக் கிளப்பிவிடும் நூல்களோ இல்லாவிடில் வீறுகொண் டெழாமல் மங்கி விடுவது கண்கூடு.

சிவப்பிரகாச சுவாமிகளும் பிரபுலிங்கலீலையைப்பற்றிச் சிறப்பிக்கையில் 'உயர்மதன நோய்வளர்க்கு மாற்றமும் அன்று ; இந்நூல் அல்லமன் அமலலீலையே' என்றனர். புருடன் திடசித்தம் உடையவனாகில் பெண்ணானவள் எவ்வித முயற்சி செய்தாலும் பயன்படா தென்பதற்கு அந்நூல் உதாரணமெனப் போற்றலாம். ஆண் மகனது உள்ளத்தூய்மைக்கு அஃது அரண் செய்வதாகும். பெண்கள் பெற்றோர் பெரியோர் அறியாமல் ஆண் மகன் வீசும் நயமொழிகளாகிற மாயவலையிற் சிக்கி நிறையழிவளேல் அதனால் பின்னர் அவள் படும் நிர்க்கதி இதுதான் எனக் குறிப்பதுபோலவே காளிதாஸ மகாகவியால் பொறித்த சாகுந்தலம் நம்முன் பொலிகின்றது. யுவர் யுவதிகளின் உள்ளத்தில் இயற்கையாகவே எழும் உலக வுணர்ச்சிக

ளுக்கு வழிவிட வேண்டியது அவசியமே. அவ்வழி கட்டுக்கடங்கிக் கரைகளை உடைக்காமல் ஒழுகினல் மட்டில் சன்மார்க்கம் தழைக்கு மல்லது போகிற போக்கில் தன்னிச்சைப்படி நடக்க இடம் கொடுப்பது சமூகத்தின் அழகையே அழிப்பதாகும். இதனைக் கவியரசர் இராமாயணம் நாட்டுப்படலம் முதற் செய்யுளிலேயே,

"ஆசலம்புரி யைம்பொறி வாளியும் காசலம்பு முலையவர் கண்ணெனும்
பூசலம்பும் நெறியின் புடைசெலாக் கோசலம்."

என அழுத்தமாக வுணர்த்தினர். காதல் வெள்ளம் நெறிக்கு உள்ளடங்கிப் பெருக வேண்டுமேயன்றி நெறியைக் கடந்து பெருகுதல் கூடாதென்பது தெளிவு. நெறி பிறழ்ந்து மகளிரும் மைந்தரும் ஒழுகும் நாட்டிற்கு ஒரு சிறப்பு முண்டோ? ஒரு வளமும் உண்டோ? புருஷ சிரேஷ்டனுகிய இராமனைப் போன்ற ஒப்பற்ற அவதாரம்தான் தோன்ற முடியுமோ?

கட்டுப்படுத்த முடியாத ஒன்றெனப் புனைந்து புனைந்து புனைகதைகள் வனைவோர் (இயற்றுவோர்) நமது தேசத்தலைவர்களாகிற ஸ்ரீயுத பண்டித நேருவின் வாழ்க்கையையும் ஸ்ரீயுத சுபாஷ்போஸுவின் பிரம்மசரியத்தையும் உன்னி உன்னி நோக்குவார்களாக. நாற்பதாண்டுகள் நிரம்பிய வங்கச்சிங்கம் விவாகத்தைப்பற்றிச் சிந்திக்க அவகாசம் இன்னும் ஏற்படவில்லையெனக் கூறியதாக சமீபத்தில் பத்திரிகைகளில் பலரும் படித்திருக்கலாம். இயற்கையாகிய இன்பவுணர்ச்சிக்கு எவ்வித முக்கியமற்ற ஸ்தானம் அவர் அளித்திருக்கிறர் என்பது நன்கு தெளிவாகிறது. காங்கிரஸ் தலைமையுரையில் வீரம் செறிந்திருப்பதாக அறிஞர் போற்றுகின்றனர். அதைவிட மேலே கூறிய "அதைப்பற்றிச் சிந்திக்க அவகாச மில்லை" யென்னும் விடையிலேயே ஆண்மை மணம் கமழ்கிறதென்று கூறலாம். கூலிக் குழைக்கும் பாட்டாளி ஒருவருக்கு முதல் மனைவியிடம் ஆண்மகவு உதிக்கவில்லையென்று கண்டால் நாலைந்து ஆண்டுகளுக்குள்ளாக சந்ததி வேண்டி மறுமணம் புரிவது கட்டாயமெனக் கருதுவது நம் வறியநாட்டில் சாதாரணமாகிவிட்டது. ஸ்ரீயுத பண்டித நேருவின் மனவுறுதியைப் பாருங்கள். மகாத்மாகாந்தியை யடுத்த மாபெருந் தலைவர்களாக விளங்கும் இவ்விரு பாரதப் புதல்வர்களைக் கண்டும் நினைந்தும் மேல்நாட்டார் என்று சொல்லப்படுவோர் அனைவரும் தத்தம் தலையிறங்கி நாணுதல் வேண்டும்? இத்தகைய ஒப்பற்ற தீரர்களைத் தோற்றுவித்த இப் புனிதநாட்டில் கிழக் கலியாணம் தடுக்கப்பட்டு அதற்காக ஒரு ஸ்தம்பம் நாட்டப்பட்டால் அது போற்றத் தகும். அதைத் தடுக்க எவரும் சிந்தியாமல் கண்கெட்ட பிறகு சூரிய நமஸ்காரம் செய்வதுபோல் பெரும்பாலும் வரதட்சிணைச் சட்டத்தினுல் ஒடுங்கிக் காலாவதியாகி மரித்து மரியும் தறுவாயி லிருக்கும் சிசு விவாகத்தைத் தடுக்க ஒரு சட்டம் செய்வதும் அதை ஆமோதித்தவர் பெயர்களைப் பொன்னெழுத்தில் பொறிக்க ஒருவர் பெருந்தொகை வழங்க முன்வந்து மார்தட்டுவதும், படுகளத்தில் குற்றுயிருடன் கிடந்து மரிக்க விருக்கும் ஒருவனை பிரம்மாஸ்திரம் தொடுத்துத் தலையை வாங்குவோம் என ஆர்ப்பரிப்பதையே ஒக்கும். அத்தகைய குழந்தை மணங்கள் இவர்கள் முயற்சியின்றியே மறைந்து விட்டன. சொற்பம் இருப்பினும் இதற்கான வெற்றி ஸ்தம்பம் தயாராகு முன் முழுதும் ஒழிந்துவிடும் என்பது திண்ணம்.

எனவே, நம் சமூகத்தைச் சீர்திருத்துவதென்று கூறுவது சாரதா சட்டத்தினால் வருவதல்ல. ஆண்பிள்ளைகளின் ஒழுக்க முறைகளை வளர்க்கும் ஸ்தாபனங்களை எழுப்பியும் நெறிபிறழாமை அவசியம், சாத்தியம் என்னும் எண்ணங்களை வளர்க்கத்தக்க புனை கதைகளைப் புனைவித்தும் 45-க்கு மேல் ஆடவர் விவாகங்களைத் தடுத்தும் திட்டங்கள் கோலி வேலை செய்வதினாலேயே வருவதாகும். எம் முறையையும் நாம் ஊக்கத்தால் சாதிக்கலாம் பாரதவாசிகள் கல்வி யறிவில்லாதவர்களாயினும் சன்மார்க்க நெறி எவ்வெத் துறைகளில் காணப்படினும் அதற்குப் பேராதரவு அளிப்பர். சமூகசேவை செய்வோர் கலங்கா மன்முடையவர்களாக மட்டில் இருக்க வேண்டும். அசாத்தியம் என்பதே அகராதியில் இல்லை. கிராப்பிற்கும் பெண்களின் கோணல் வகிடுகளுக்கும், கத்தரிப்புக் கேசங்களுக்கும், முன் தானை வீச்சுக்கும் அரை நிர்வாணமாக மதிக்கத்தக்க 'பாடி'க்கும் யார் மசோதா கொண்டுவந்து சட்டமாக்கினார்கள்? பெருவாரியான ஜனசம் மதமே சட்டமாக ஆக்கம் பெறுகிறது. மகாத்மா ஒரு நூலில் எழுதி யுள்ளதுபோல புது நாகரிகமென்பது பரிகரிக்க முடியாத ஒரு வியாதியே யாகும்.

பொதுவாக சமூக சீர்திருத்தங்கள் எவ்வளவு சிறந்ததாயினும் நமக்குள் கட்டுப்பாடு செய்துகொள்ள முயலல் வேண்டுமே யல்லது அரசாங்கச் சட்டங்களின் ஆதரவு பெற்றுத் திருத்திக்கொள்ளுவது நமது பலவீனத்தையே காட்டுவதாகும். இதைவிட அவமானம் வேறில்லை. காங்கிரஸ் தற்போது இவ்வளவு பலம் பெற்றுத் திகழ்வது உண்மையான உழைப்பினாலும் ஊக்கத்தாலுமே யல்லது சட்டத்தினால் அல்ல.

பதினான்கிற்குள் விவாகஞ் செய்யக்கூடாதென்று கோருவோர் இத்தனை வயதிற்குள் விவாகஞ் செய்யவேண்டும். இன்றேல் தண்டனை என்றும் மசோதா கொண்டுவரலாம். அங்ஙனம் செய்வது அநேகமாக காந்தர்வ விவாகத் தடைச் சட்டமாக அழைக்கப்படலாம். அதனால் சிறிதளவு ஒழுக்கமாவது உயரும். ஒழுக்கத்தைக் கட்டுப்படுத்த முடியாத எந்தச் சட்டமும் புனிதமாகா. சமூக நடைமுறைகளில் உள்ள உரிமைகளையும் விட்டுக் கொடுப்பது தவறு.



# நம் நாட்டுப் பத்திரிகைகள்

——:0:——

(R. வெங்கடாச்சாரியார்.)

பல இடங்களில் நடக்கும் சம்பவங்களை ஓரிடத்தி லிருப்பவரும், ஓரிடத்தில் நடக்கும் சம்பவத்தைப் பலவிடங்களி லிருப்ப வரும், ஒருவர் கூறுவதைப் பலரும், பலர் அபிப்பிராயப் படுவதை ஒவ் வொருவரும் அறியும்படி செய்யும் சாதனம் பத்திரிகை யென்பது. இப் பத்திரிகை மனிதரின் தற்கால நாகரிக வாழ்க்கைக்கு இன்றியமையாதது.

நம் நாட்டில் உள்ள பத்திரிகைகளை மூன்று பிரிவுகளாகப் பிரிக்க லாம். அவை:—(1) சர்க்கார் வெளியீடுகளாகிய கெஸட். புல்லட்டின் போன்ற பிரசுரங்கள். (2) கட்சிப்பத்திரிகைகள். எந்தக் கட்சியிலும் சேராது நடுநிலைமை வகிக்கும் சுயேச்சைப் பத்திரிகைகள்.

மேற்கூறப்பட்ட பத்திரிகைகளிற் சிலவற்றுற் பயனுண்டு. சர்க்கார் வெளியீடுகளாகிய கெஸட், புல்லட்டின் போன்றவை இன்றியமையாத வையே. அவற்றின் நோக்கமே சர்க்கார் பொதுமக்களுக்குப் பஹிரங்கப் படுத்த விரும்பும் விஷயங்களை வெளியிடுவதே. சுயேச்சைப் பத்திரிகை கள், அச்சம், தயை, தாட்சண்யமின்றி, நன்மையானவற்றைப் போற்றித் தீமையானவற்றைக் கண்டித்து எழுதுவதால் அவை பொது நன்மைக்குப் பாடுபடுபவையே. ஆகையால் அதிகப் பயன் உண்டு.

ஆனல் கட்சிப் பத்திரிகைகளாலோ அநேகமாக நன்மை யுண்டாவதற் குப் பதில் தீமையே உண்டாகிறது. கட்சிப் பத்திரிகைகள் அவைகளு டைய கட்சி (நல்லதோ, கெட்டதோ) அதைப் புகழ்ந்தும், மற்ற கட்சிகளை மனமார வசை மொழிகளால் தாக்கியும் எழுதி வருவதால், அநேக வகுப் புச் சச்சரவுகள் பிளவுகள் முதலியன உண்டாகின்றன. அவை அவற்றின் கக்ஷியின் உயர்வை மாத்திரம் பிரசாரம் செய்வதில் ஆட்சேபணை ஒன்று மில்லை. ஆனல் அவை பிறதூஷணை அதிகமாகச் செய்து, அனாவசியமான சண்டை சச்சரவுகளை உண்டாக்குவதால் அவை விரும்பத் தக்கவை யல்ல.

சர்க்கார் கெஸட், பிரசுரங்கள் என்ற வகையில் அடங்கக்கூடிய பத்தி ரிகைகளை நாம் இங்கு கவனிக்க வேண்டியதில்லை. 'தான் பிடித்த முய லுக்கு மூன்றே கால்கள்' என்று விதண்டாவாதம் செய்து வீண் சச்சரவு களைப் புகுத்தும் கக்ஷிப் பத்திரிகைகளையும் பொருட்படுத்த வேண்டிய தில்லை. ஆனல் பாரபட்சமின்றி பொதுமக்கள் நன்மைக்காக வெளிவரும் சுயேச்சைப் பத்திரிகைகளைப்பற்றி நாம் இங்கு சிறிது கவனிப்போம்.

சுயேச்சைப் பத்திரிகை அவை வெளிவரும் கால அளவுபற்றி மூன்று

வகைப்படும். (1) தினசரிப் பத்திரிகைகள் (2) வாரப் பத்திரிகைகள் (3) மாதப் பத்திரிகைகள்.

மேற்கூறிய விதங்களில் இதுவரை நம் தேசத்தில் வெளிவந்திருக்கும் பத்திரிகைகளின் எண்ணிக்கை சுமார் பல ஆயிரங்கள் என்றால் சற்று ஆச்சரியமாகவே யிருக்கும்.

இப்படிப் பெருவாரியாக ஆரம்பிக்கப்பட்ட பத்திரிகைகள் எல்லாம் உயிரோடிருக்கின்றனவோவென்றால் இல்லையென்றே கூறவேண்டும். ஆரம்பித்து ஓராண்டு முடிவதற்குள்ளேயே உயிர் நீத்த பத்திரிகைகளும் உண்டு. மற்றும் பல வருடங்கள் வரை நன்கு வெளிவந்து, நடத்துவதற்குச் திறமையுள்ள ஆசிரியர்கள் இல்லாமையால் நின்று போனவைகள் பல. விஷயங்களிற் சிறந்திருந்தும், ஆதரிப்பார் இன்றிக் கைவிடப்பட்டு, இறந்து போன பத்திரிகைகள் ஏராளம். நந்தமிழ் நாட்டில் தமிழ் வளர்ச்சிக்காகவே, தோன்றிச் சிறிது வளர்ந்து, தமிழ்மொழிக்கு அரும்பாடு பட்டும், ஆதரிப்பார் இன்றி இறந்துபோன பத்திரிகைகளுக்கு உதாரணமாக இரண்டொன்று கூறலாம். தமிழர் நேசன், பஞ்சாமிர்தம், பிழைக்கும் வழி முதலியன. இவற்றின் பழைய இதழ்களைப் புரட்டிப் பார்ப்போர்க்கு இவற்றின் அருமை தெரியவரும்.

தற்போது உயிர் வைத்துக் கொண்டிருக்கும் பத்திரிகைகள் எவ்வாறான நிலைமையில் இருக்கின்றன என்று பார்ப்போம். உண்மையில் சில பத்திரிகைகள்தான் அவை வெளியிடும் விஷயங்களால் வாசகர்களைப் பெற்று, அதிகச் சந்தாதாரர்களையும் கொண்டு, விருத்தியாகிக் கொண்டிருக்கின்றன. மற்றவை பல மாதிரியான வழிகளைக் கையாண்டு ஏனோ தானோவென்று உயிர் வைத்துக் கொண்டிருக்கின்றன. அவை பிழைக்கும் வழிகள் எவை யென்று கூறுவோம்.

(1) உள்நாட்டுச் சாமான்களின் விளம்பரங்கள்:—உள் நாட்டைச் சேர்ந்த சாமான்கள், அவற்றின் விலை, குணாதிசயங்கள் முதலியவற்றைப் புகழ்ந்து எழுதப்பட்ட விளம்பரங்களைப் பணம் பெற்றுக்கொண்டு பத்திரிகைகள் பிரசுரிக்கின்றன.

(2) அன்னியநாட்டுப் பொருள்கள்:—குண்டூசி முதல் மோட்டார் கார் வரை எல்லாக் கைத்தொழிற் பொருள்கள், மற்ற சோப், ஸ்னோ, முதலியவைகள், எல்லாம் நம் நாட்டுப் பத்திரிகைகளில் பரக்கப் பிரசுரிக்கப் படுகின்றன. மேனாட்டு மருந்துச் சரக்குகளின் விளம்பரங்கள் அதிகமாகக் காணப்படுகின்றன. அப் பத்திரிகைகளுக்கு இம்மருந்து விளம்பரங்களை விட்டால் பிழைப்பில்லை. அம் மருந்துகளும் தேசத்துக்குள் வருவதற்கு இம்மாதிரியான பத்திரிகைகளை விட்டால் வேறு வழியில்லை.

(3) சினிமா விளம்பரங்கள்:—சினிமாப் பட முதலாளிகள் பத்திரிகைகள் விஷயத்தில் ஏராளமான பொருளை வாரி இறைக்கின்றனர். அவர்கள் நோக்கமே படங்களைப்பற்றிய விளம்பரங்களைப் பெரிதாக வெளியிட்டால் பொது மக்கள் கவனத்தைக் கவரலாம் என்பது. பத்திரிகைக்காரர்கள் தங்கள் பத்திரிகைகள் பல ஆயிரங்களில் அச்சிடப் படுவதாகக் கூறி எவ்வாறாயினும் சினிமாப் பட விளம்பரங்களைப் பெற்று

விடுகின்றனர். அவர்கள் விளம்பரத்துக்காக ஒரு முழுப் பத்திரிகையை யும் தியாகம் செய்யத் தயார்! அவ்வாறு விளம்பரங் கிடைக்கப் பெறாதவர் கள், விளம்பரங் கொடுக்காதவரின் படத்தைத் தாக்கி எழுதினல், மறு தடவை நிச்சயம் விளம்பரங் கிடைத்து விடுமல்லவா?

(4) போட்டிப் பரிசுகள்.—நம் தேசத்துப் பத்திரிகைகளிற் சில பகிரங்கமாகப் பொது ஜனங்கள் பணத்தைப் பறிக்கக் கூடிய மோசடியான போட்டிப் பந்தயங்களை நடத்துகின்றன. அவை வெளியிடும் போட்டிப் பந்தயங்களுக்குப் பொருந்தக் கூடிய பல விடைகள் உண்டு. ஆனல் ஆசிரியர் குறிப்பிட்டு வைத்திருக்கும் ஓர் விடைக்கு மாத்திரம் பரிசு உண்டாகையினல் போட்டிப் பந்தயத்திற் சேருவோர் பல விடைகளை எழுதியனுப்புகிறார்கள். ஆனல் அத்தனை விடைகளையும் கூப்பன்களில் தான எழுத வேண்டும். அந்தப் பிடிவாதக்காரரான ஆசிரியர்க்கு விடைகள் அச்சுக் கூப்பன்களில் தான் இருக்க வேண்டும். ஆகையால் போட்டிப் பந்தயங்களில் கலந்து கொள்பவர்கள் (பத்திரிகையைப் படிப்பதற்காக இல்லாவிட்டாலும், கூப்பன்களுக்காகவே) பத்திரிகைகளை டஜன் கணக்கில் வாங்குகிறார்கள். போட்டிப் பந்தயத்தில் அடிக்கடி பங்கெடுத்துக் கொள்ளும் நண்பரொருவர் ஓர் சமயம் ஒரு குறிப்பிட்ட தேதியில் வெளியான பத்திரிகை யொன்றின் நூறு பிரதிநிதிகள் வாங்கினதைப் பார்த்திருக்கிறேன். ஆக போட்டிப் பந்தயங்களை நடத்தும் பத்திரிகைகள் ஆயிரக் கணக்கில் செலவாவதைக் கண்டு ஆச்சரியப்பட வேண்டியதே யில்லை. ஆனல் அவற்றைப் படித்து உண்மையில் பயனடைவோர் சொற்பப் பேர் களே யென்பதை அறியாத வியாபாரிகள் விளம்பரங்களைக் கொடுத்து ஏமாந்து போகின்றனர்.

இனி, நம் தேசத்துப் பத்திரிகைகள் வெளியிடும் விஷயங்களைப் பற்றிச் சிறிது கவனிப்போம். பெரும்பாலான பத்திரிகைகள் Cheap literature என்று சொல்லப்படும் பொழுது போக்கு விஷயங்களாகிய கதைகள், விகடங்கள். முதலியவைகளை வெளியிடுகின்றன. அவை கூடச் சில சமயங்களில் சொந்தச் சரக்காய் இருப்பதில்லை. பத்திரிகைகளுக்கு விஷயங்கள் அகப்படா விட்டால் அவை தாராளமாய்ப் பழைய பத்திரிகைகளை காப்பி செய்து விடுகின்றன. பத்திரிகையை அச்சுக்கனுப்ப நேரமாகியும் விஷயங்கள் கிடைக்கப் பெறா விடின் காப்பியடிக்கப்பட வேண்டிய பழைய பத்திரிகைகளில் கத்தரிக்கோல் தாராளமாகப் பிரயோகிக்கப்பட்டு, கத்தரித்து எடுக்கப்பட்ட விஷயங்கள் அப்படியே மறுபடி அச்சடிக்கப் படுகின்றன. 'கண்டு பிடிக்கப்பட்டால் பிறகு பார்த்துக் கொள்ளலாம். கண்டு பிடிக்காத வரையில் க்ஷேமமே' என்று நினைப்பவை போலும் இவை!

நம் தேசம் கலை, விஞ்ஞானம், கல்வி முதலியவற்றில் மேம்பாடடைய வேண்டுமானல் நம் நாட்டுப் பத்திரிகைகள் சிறந்த முறையில் வெளிவர வேண்டும். நம் நாட்டுப் பத்திரிகாசிரியர்கள் சிறந்த கல்விப் பயிற்சி யுள்ளவர்களாயும், சொல் வன்மையோடு பேசவும் எழுதவும் திறமை யுள்ளவர்களாயும் இருக்க வேண்டும்.

பத்திரிகாசிரியர்கள் கையாளும் நடையானது தெளிவான இனிய நடையா யிருத்தல் வேண்டும். அகராதியின் உதவியை நாடும்படி அரும்

# வைத்தியர்

(கே. வைத்தியநாதன்.)

உலகத்தேயுள்ள பல திறப்பட்ட தொழில்களில் வைத்தியம் என்பதும் ஒன்று. அத்தொழிலை மேற்கொண்டு வாழ்க்கை நடத்துபவரும் பலர் உண்டு. எனினும் வைத்தியத் தொழிலைத் தொடங்குபவர் யாவரும் வெற்றிபெற்று விடுவர் என்று சொல்லிவிட முடியாது. அதில் நல்ல திறமையும், அனுபவமும் பெற்ற சிலரே அத்தொழிலை வெற்றிகரமாக நடத்திவருகின்றனர். அவர்களிலும் சிலர்தான் யாவராலும் பாராட்டப்படும் உன்னத நிலையை யடைகின்றனர்.

மனித சமூகத்திலேயே ஒரு சிலருக்குத்தான் இத்தொழில் ஏற்றதாயிருக்க முடியும். அவ்வாறின்றி யாரும் இத்தொழிலைத் திறம்பட நடத்திவர முடியும் என்று எண்ணுவது தவறாகும். இத்தொழிலில் ஈடுபடக்கூடியவனுக்குச் சில பிரத்தியேகமான குணங்களிருப்பது அவசியமாகும். வெறுங் கல்லூரிப்படிப்போ, சர்வகலாசாலைப்பட்டமோ அவனை இத்தொழிலில் மேன்மை படுத்திவிட முடியாது.

எந்த வைத்தியனுக்கும் சில அவசியமான குணங்கள் பிறவியிலேயே ஏற்பட் டிருக்கவேண்டும். நன்கு கூர்ந்து நோக்கும் சக்தி, எதையும் மறவாத தன்மை, உறுதியான கவன சக்தி, ஆராய்ந்து பார்க்குந் தன்மை

---

பதங்களை யுடையதும், படிப்போருக்கு அலுப்பைக் கொடுக்கக் கூடியதுமான உயர்ந்த நடை கூடவே கூடாது. ஆகையால் பண்டிதரும் பாமரரும் படித்து அறிந்து ஆனந்திக்கும் படியான தமிழ் நடை நம் தமிழ் நாட்டுப் பத்திரிகைகளில் மிளிர வேண்டும்.

சில பத்திரிகைகள், அமைப்பு, தலையங்கம், விஷயங்கள் முதலியவற்றை அயல் தேசத்துப் பத்திரிகைகளிலிருந்து காப்பி யடிக்கின்றன. அயல் நாட்டுப் பத்திரிகைகளைப் படித்து விஷயங்களை யறிவது நன்மை பயக்கக் கூடியதே. ஆனால் அவற்றை அப்படியே மொழி பெயர்ப்பதென்பது கூடாது. எவ்வாறு அயல் நாட்டார்கள் அவர்கள் தேசத்துக் கேற்பவும், பத்திரிகையின் நோக்கத்திற் கேற்பவும், வாசகர்களின் விருப்பத்திற் கேற்கவும் பத்திரிகைகளை உசிதமான முறைகளில் நடத்துகிறார்களோ அதுபோல் நாமும் நம் நாட்டு மக்களின் திருப்திக்கும் தேவைக்கும் ஏற்றாற் போல் பத்திரிகைகளைத் திறமையாக நடத்த வேண்டும்.

இந்தியர்களாகிய நாம் பத்திரிகை யுலகில் கடைக் கோடியில் இருக்கிறோம். நாம் முன்னேறுவது எக் காலமோ?

ஆகிய இவை யாவும் ஒரு வைத்தியனுக்கு இயல்பாயமைந்திருக்கவேண்டிய குணங்களாம். இத்தகைய குணங்களை இளமை முதற்கொண்டே எவன் பயிற்சி செய்து வருகிருனே அவனே வைத்தியத் தொழிலிலிறங்கத் தக்கவனுவான்.

ஒருவன் நல்ல வைத்தியனுயிருக்க வேண்டுமானுல், அவன் நல்ல தத்துவ சாஸ்திரியாகவு மிருக்கவேண்டும் மனே தத்துவ நூல் ஆராய்ச்சியாளனுகவு மிருக்கவேண்டும். நோயையல்ல, நோயாளிகளைக் குணப்படுத்துவதுதான் வைத்தியனது வேலையாகும். நோயாளிகளது விருப்பு வெறுப்புக்களை, அவர்களது குணபாவங்களை, அவர்களது பழக்க வழக்கங்களை எந்த வைத்தியனும் நன்கு உணர்ந்திருக்கவேண்டும். முக்கியமாக நோயாளிகளது உள்ளத்தன்மைகளை வைத்தியன் அறிந்து கொள்ளுதல் நலமும், அவசியமுமாம். இதனுல் நோயின் வகைகளையும் அவற்றின் தன்மைகளையும், அவற்றிற்கான சிகிச்சை முறைகளையும் வைத்தியன் தெரிந்துகொள்ளாம லிருக்கலாம் என்றெண்ணுவது தவருகும். இவை தெரிந்து கொண்டாலல்லாமல் அவன் வைத்தியத் தொழிலில் எங்ஙனம் இறங்க முடியும்? எனவே இவற்றின் பரிபூர்ணமான அறிவு எந்த வைத்தியனுக்கும் இன்றியமையாதது என்பது சொல்லாமலே வற்புறுத்தப் படுகிறது. ஆதலால் ஈண்டு நோயாளிகளின் மனேபாவங்களை உணர்ந்து கொண்டு சிகிச்சை செய்தல் வைத்தியர்கள் கடனும் என்பது வலியுறுத்தப்படுகின்றது.

ஒரு நல்ல வைத்தியனுக்குத் தன் தொழிலின் திறமையைப்பற்றியும், அதன் வரையறையைப்பற்றியும் தெரியும். எந்த நோயும் நாளடைவில் தன் வேகந்தணிந்து, முடிவில் மறைந்து போகக் கூடியதென்பது பொது விதி. சுகாதார வசதியுள்ள விடங்களில் வாசஸ்தலங்களை அமைத்துக் கொள்வதாலும், வியாதியின் வேகந் தணிகிறது. நல்ல காற்று, வெய்யில், சுத்த நீர், உடலுக்கேற்ற உணவு இவையாவும் சாதாரணமாக நோயின் கொடுமையை நீக்க வல்லனவே. ஆனுல் உலகத்தில் தோற்றும் நோய்களில் பெரும்பாலானவை இம்மாதிரி இடமாற்றத்தாலோ, இயற்கை சிகிச்சையாலோ குணமாய்விடுவதில்லை. வைத்தியரது ஔஷதங்கள்கூட பயன் படுவதில்லை. இத்தகைய நோய்களெல்லாம் மனநோய்களின் ரகத்தைச் சேர்ந்தவை. உள்ளக் கவலையாலும், ஏக்கத்தாலும் எத்தனையோ பிணிகள் மனிதர்களைப்பற்றி வதைக்கின்றன. இவ்வித பிணிகளுக்கு வைத்தியன் கொடுக்கும் மாத்திரையோ, திராவகமோ எங்ஙனம் பயன்படப் போகிறது?

தன் நோயாளியிடம் எவ்வித கள்ள நோக்கத்துடனும் ஒரு நல்லவைத்தியன் நடந்து கொள்ளமாட்டான். தன்மாட்டு விடப்பட்ட பிணியாளர்களுக்கு ஒரு போதும் தீங்கு செய்ய ஒருப்படான். எவ்வளவு சீக்கிரம் அவர்களைக் குணப்படுத்த முடியுமோ, அவ்வளவு விரைவில் அவர்கள் சுகம் பெற்றெழ முயற்சிப்பான்; நோயின் நிலையை உள்ளவாறுகூறி அதற்கேற்ற சிகிச்சை முறையைக் கையாளுவான்; எக்காரணங்கொண்டும் நோயை மிகப்படுத்திக் கூறி அவர்களைக் கலங்க வைக்கான்; சில மந்திரவாதிகளைப் போல நான் ஒரு நொடியில் குணப்படுத்தி விடுகிறேன் என்று வாய்ப்பந்தல் போடான்; தன் சிகிச்சைத் திறமையைக் குறித்து எவ்வித படாடோபமும்

செய்ய விரும்பான். நோயாளியின் பகைவனிடம் லஞ்சம் பெற்று அவனது நோயை வளரவிட இணங்கான். நேர்மையான நடத்தையுள்ளவனுகவும், பெண் பிணியாளிகளிடம் பழகுகையில் உத்தம குண சீலனுகவும் நடந்து கொள்ளுவான். இதுபோன்ற இன்னும் பல உயர்குணங்களுடன் விளங்கு பவனே உண்மை வைத்தியனுவான். இவற்றில் ஒன்ருே, பலவோ இல்லாத தாலேயே வைத்தியர்கள் தங்கள் தொழிலில் கீர்த்தி பெற முடியாதவர் களானுர்கள்.

வைத்தியத் தொழிலைத் திறம்பட நடாத்தும் ஒரு சிலருக்கே வருவாய் குறைவதில்லை. வனையோர் தங்கள் தினசரி செலவிற்குக் கூட போதிய வருவாய் பெறுவதில்லை. இதற்கு முதற்காரணம் அவர்களிடத்தில் மேலே கூறிவந்த திறமையும், சீலமுமில்லா திருத்தலேயாம். இரண்டாவது காரணம் சர்வகலாசாலைப் படிப்பை முடித்துக்கொண்டு மருத்துவக் கல்லூ ரிக்குச் சென்றதே தாங்கள் பெற்ற கல்வியின் பரந்தநோக்கத்தை அவர்கள் மறந்து விடுவதாகும்.

ஆரம்பக் கல்வியின் அவசியத்தை எல்லாக் குழந்தைகளுக்கும் வலி யுறுத்துவதுபோல், மேற்படிப்பும் எல்லாருக்கும் இன்றியமையாதது என்று திட்டம் வகுப்பது ஏற்றதன்று. மேற்படிப்புக்கென வரும் மாணவர்க ளைக் கலாசாலைகளிற் சேர்க்கும்போது அவர்கள் அறிவின் போக்கைக் கவ னித்து அதற்கேற்றபடி சேர்த்துக் கொள்ளுதல் நன்று. ஆண்டுதோறும் எண்ணிறந்த மாணவர்கள் பட்டதாரிகளாகி வருவது கண்கூடு. ஆனல் இவர்களில் எத்தனையோபேர் வேறுதுறையில் பயிற்றப்பட்டிருந்தால் உலக வாழ்வுக்கேற்ற வகையில் பயன்படக் கூடியவர்களா யிருப்பர். ஆதலால் வெறுங் கல்லூரிப்படிப்பில் காலத்தைப் போக்கி விட்டு மாணவர்களிற் பெருப்பாலார் பிழைக்கும் வழி காணுது திகைத்து நிற்கின்றனர்.

இந்தத் தடுமாற்றமே வைத்தியக் கல்லூரியிலும் நிகழ்கிறது. வைத் தியத் தொழிலுக்குத் தகுதியுடைத் தல்லாதார் எத்தனையோ பேர் அத் தொழிலுக்கென பயிற்றப்படுகின்றனர். இந்நிலையில் இக் கல்லூரிகளில் பயின்று தேறும் மாணவர்கள் அனைவரும் தம் தொழில் மேன்மை யுறுவர் என்று எவ்வாறு நாம் எதிர்பார்க்கமுடியும்?

ஆகவே அன்பர்களே! நல்ல திறமையும், அனுபவமும் பெற்றவர் களே இத்தொழிலி விறங்கலாம். இன்றேல் வைத்தியத் தொழிலின் பெரு மையும், கௌரவமும் வரவரக் குன்றிப்போகும். தன் நம்பிக்கையும், திட சித்தமும் கொண்டவர்களுக்குத் தான் எதிலும் வெற்றிகிட்டும் என்பதை யாரும் மறக்கலாகாது.



# டமாரம் பீடி

(தேயு.)

குமாரவேல் ஒரு பெருத்த பீடி வியாபாரி. அவருடைய கம்பெனி பீடியை வாயில் வைத்து ருசியாதவர் இந்தியாவின் ஒரு நகரத்திலும் இல்லே. ஐரோப்பா முழுவதும் சுற்றுப் பிரயாணம் செய்து தம் பீடியின் உபயோகத்தைப் பரவச் செய்தார்., பீடியை வாயில் வைக்க வெட்கப்பட்ட ஐரோப்பிய மக்கள், தம் சுங்கானுக்குள் அதன் பொடியைச் செலுத்தி அதன் காரத்தையும் மணத்தையும் கண்டு கொண்டனர். ஜப்பானின் மலிவுச் சரக்குகளுக்குப் போட்டியாக குமாரவேல் பீடி ஏற்பட்டு விடலாம் என்று ஜப்பான் வியாபாரிகள் கூட, இவருடன் ஒப்பந்தம்செய்ய யோசித்தனராம். கம்பெனியின் ஆபீசு, கல்லூர் என்ற கிராமத்தில் அமைந்திருந்தது. தினம் ஆயிரம் ரூபாய்க்குச் சரக்குகள் ஏற்றுமதியாவதுண்டு. நாள் செல்லச் செல்ல வியாபாரம் விருத்தியடைந்து கொண்டே வந்தது. குமாரவேல் அவர்களுக்கு ஓய்வில்லாதபடி வேலே அதிகமாகி விட்டது. களைப்பு என்பதையே கனவிலும் அறியாத அவருடைய தேகம் ஒரு நாள் அலுப்படைந்து வேலேகளைக் கவனிக்க மறுத்து விட்டது.

தம் வீட்டுததிண்ணேயில் சாய்ந்து கொண்டே "டே குருசாமி" என்ருர். குருசாமி அவருடைய வீட்டில் வம்ச பாரம்பரையான வேலேயாள்.

"என்னுங்கோ, எசமான்"

"உடம்புக்கு நல்லாயில்லே. சுக்குக் கஷாயம் போடு."

"வைத்தியரையும் கூப்பிடட்டுமா."

"முதலாவ்து கஷாயம் வரட்டும்."

"நல்லதுங்கொ எசமான்."

கஷாயம் சாப்பிட்டும் குணம் உண்டாகவில்லே. அன்று முழுவதும் மறுநாள் முழுவதும் உடம்பிலே களேப்பும் ஆயாசமும் காணப்பட்டது. பாக்கிங் முதலிய வேலேகள் தடைபட்டு விட்டன.

"எசமான், என்ன செலவழிந்தாலும் திருநெல்வேலி டாக்டரை வரவழைக்கணும்" என்று குருசாமி சொல்ல, உடனே தன் மைத்துனனே மோட்டாரில் திருநெல்வேலிக்கு அனுப்பினுர்.

குமாரவேலின் பீடியைப் போல் குமாரவேலனும் பிரசித்தி பெற்றவர்தான். ஆகையால் டாக்டர் பெயருக்கு தகுந்த லாபம் கிடைக்கு மென்றெண்ணி உடனே மோட்டாரில் வந்து விட்டார். நாடி, உஷ்ணம் முதலியன பரிசோதித்தபின் ஒரு நாற்காலியில் உட்கார்ந்தார். குமாரவேல் நிமிர்ந்து படுக்கையில் உட்கார்ந்தார்.

"மிஸ்டர் குமாரவேல், நீங்கள் இளைப்பாற வேண்டும்",

"எத்தனை நாள்"

"ஆறு மாதம்"

"ஐயோ, அதெப்படி முடியும் ? வியாபாரம் கெட்டுப்போகுமே"

"ஆறு வாரத்துக்குள்ளே ஆள் காலியாய் விட்டால் என்ன பண்றது"

"அவ்வளவு மோசமா?"

"நாடி நிமிடத்துக்கு 95-அடி அடிக்கிறது. இந்த வேகத்திலே போனால், ஆறு வாரத்திலே ஆயுள் ஓட்டம் முடிந்து போகும்".

"நாடி வேகத்தைக் குறைக்க மருந்து கிடையாதா?"

"உண்டு"

"பெயர் என்ன"

"ஆறுமாத வியாபாரம் நிறுத்தம்"

"என்னய்யா சொல்றீர்கள். இந்தியா, பினாங்கு, சிலோன், சிங்கப்பூர் இவ்விடங்களிலுள்ள ஒவ்வொரு ஊரிலேயும் இந்த வியாபாரம் செல்லு கிறது. இதை நிறுத்துகிறதென்றால் கூடிய காரியமா?"

"சரி உங்களிஷ்டம். வியாபாரத்துக்கு நீங்கள்தான் முதலாளி. உங்கள் ஆயுளுக்கு நீங்கள் முதலாளியல்ல. எனக்கு விடை கொடுங்கள். போக வேண்டும்."

குமாரவேல் திடுக்கிட்டார். வைத்தியரின் முடிவான அபிப்பிராயத்தை அறிந்து கொண்டார். ஆயிரக் கணக்காய் நஷ்டமானாலும் பரவாயில்லை. ஆயுளையாவது காப்பாற்றிக்கொள்ள வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டான்.

"எப்படிப்பட்ட இளைப்பாறுதல் எடுக்கவேண்டும்." என்று பணிவான குரலில்—சாகுந்தறுவாயிலுள்ளவனின் குரல் போன்ற தொனியில் கேட்க, மிஸ்டர் பெரிரா,

"வியாபாரத்தைப் பற்றிய கவலையே இல்லாமலிருக்க வேண்டும். ஊட்டி, கொடைக்கானல், மதனபள்ளி அல்லது இலங்கையிலே கண்டி, காலி, படுல்லா—இவற்றுள் ஒரு இடம். கூடியமட்டும் சங்கீதம்' அழகிய இயற்கை காட்சிகள், வியாபார சம்பந்தமில்லா சம்பாஷணைகள் — டென்னிஸ், பாட்மின்டன் போன்ற தேகாப்பியாசங்கள்—விகடன் பத்திரிகைகள்" என்று தம் பிரிஸ்கிரிப்ஷனைக் கொடுத்தார். குமாரவேல் பிரிஸ்கிரிப்ஷனை மறுபடியும் சொல்லச் சொல்லி எழுதி வைத்துக் கொண்டார்.

"டானிக் ஏதாவது..........."

"வாரத்துக் கொருமுறை சிட்லின் பவுடர். அதுதான் டானிக்."

"ரொம்ப வந்தனம்."

* * * *

ஆறு வாரத்துக்குள் முடிய வேண்டிய ஆயுள் ஒரு வாரத்துக்குள் முடிந்து விடாது என்று நிச்சயித்து தாமில்லாமல் வியாபாரம் நடைபெற வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய யோசித்தார். ஆனால் உடம்பு வழிக்கு

வரமாட்டேன் என்றது. திடீரென தனது நண்பன் கனக சபையின் ஞாபகம் வந்தது. இந்த உலகில் தன் நம்பிக்கைக்கு உரியவன் அவனொருவன். தானென்று தெரியும். கனகசபையும் ஒரு தனவந்தன்தான். ஆனால் பணத்தை விரயம் செய்வதில் சமர்த்தன். தனக்கென்று செலவழிப்பதை விட, பிறருக்காக அதிகமாகச் செலவழிப்பவன். மறுநாட் காலை கனக சபை வந்து சேர்ந்தான்.

படுக்கையில் தம் நண்பரை ஒரு போதும் பார்த்திராததால் குமாரவேலுக்கு உடம்பு அசௌக்கியம் என்பதைக் கனகசபை கண்டு கொண்டார். கனகசபையைக் கண்டதும், குமாரவேல் படுக்கையில் எழுந்து உட்கார்ந்தார்.

'என்னப்பா, இவ்வளவு அவசரமாக கூப்பிட்டு விட்டாயே. என்ன விசேஷம்?' என்றார் வந்த நண்பர். குமாரவேலும் கனகசபையும் பள்ளியில் ஒன்றாய்ப் பயின்றவர்கள்: ஆகையால் ஒருவரை யொருவர் அடா, புடா என்றே யழைப்பவர்கள்.

''வண்டி படுத்துக் கொண்டது'' என்றார் குமரவேல்.

''நான் எதிர் பார்த்ததுதான். மட்டுக்கு மிஞ்சின வேகத்தில் ஓடினால், ஒரு நாள் முடங்க வேண்டியதுதானே.''

''முடங்கி யாச்சு. இப்போ என்ன பண்றது?''

''வைத்தியரைக் கூப்பிட்டுக் கேட்கிறதுதானே''

''கேட்டு விட்டேன்''

''என்ன சொன்னார்?''

வைத்தியருடைய எச்சரிப்பு, பிரிஸ்கிரிப்ஷன் எல்லாவற்றையும் குமரவேல் சொல்லி முடித்தார்.

கனகசபை 'குயட் ரைட்' என்று தலையை ஆட்டிக்கொண்டே, ''சரி மணி இப்போ பத்து. 11–30 க்கு ஒரு வண்டி புறப்படுகிறது. நாளை மதியம் 12 மணிக்கு ஊட்டி போய்ச்சேருகிறது. புறப்படு என்றார்.

''வியாபாரம்!''

''உன் வியாபார்த்திலே தீயை வை''

''என் வியாபாரமே தீயை வைக்கிற வியாபாரந்தானப்பா. நான் இப்போ புறப்படவும் தயார். இந்த ஆறுமாதத்துக்கு நீ வியாபாரத்தைக் கவனித்துக் கொள்வாயா?''

''இதென்ன பிரமாதமா? ஆறுவருடம் வேண்டுமானாலும் பார்க்கிறேன்.''

குமாரவேலுக்கு இந்த விடை அதிக ஆச்சரியத்தை விளைத்தது. சௌக்கியமாகச் சாப்பிட்டு ஊர் சுற்றுகிறதே தொழிலாகக் கொண்ட தன் நண்பன், இந்த சிரமமான வேலையைக் கவனிக்க ஒப்புக் கொண்டது எவ்வளவு ஆச்சர்யம்! அல்லது வியாபாரத்துக்கே ஆறு நாளையிலே தீவைத்து விடுவானோ!

''உன்னாலே முடியுமா?''

"உலகத்திலே நீ ஒருவன்தான் வியாபாரம் செய்யத் தெரிந்தவன் என்ற எண்ணமா?"

"இல்லே, இல்லே. சும்மா கேட்டேன். உன்னுடைய சுபாவத்துக்கு ஒத்துக்கொள்ளு மோன்னு சந்தேகப்பட்டேன்."

"எவ்வளவு வேணுமானாலும் சந்தேகப்பட்டுக்கோ. புறப்படு சீக்கிரம்.

"நாளைக்குப் புறப்படலாமே"

"இந்த 11–30 வண்டி தப்பினல், உனக்கு என்னுடைய உதவி கிடையாது. நிச்சயம்."

"அப்போ ஊட்டிக்குத்தானா? டாக்டர் வேறே என்னெல்லாமோ இடம் சொன்னரே"

"வேறே எந்த இடம்?"

"கொடைக்கானல், மதனபள்ளி, கண்டி, காலி, படுல்லா"

"குருசாமி இருக்கிருனே?"

"ஆமா அவன் எதற்கு?"

"அவனுடைய ஆலோசனையைக் கேட்போம்."

மறு நிமிடம் குருசாமி உள்ளே வந்து நின்முன்.

"குருசாமி!" என்றார் கனகசபை

"என்னுங்கோ எசமான்!"

"ஐயா சுகத்துக்கு வேறே இடம் போருர். ஊட்டிக்குப் போக லாமா, கொடைக்கானலுக்கா—மதனபள்ளிக்கா—கண்டிக்கா—காலிக்கா படுல்லாவுக்கா?

"ஒரு இடமும் எனக்குத் தெரியாதீங்களே......நம்ம வீட்டுத் தென் னந்தோப்பு ரொம்ப சுகமா யிருக்கிங்க........"

"தென்னந்தோப்பு வேண்டாம். ஒவ்வொரு இடத்தைப்பற்றியும் சொல்லுகிறேன். உனக்கு எது பிடித்தமோ சொல்லு."

"நல்லதுங்க"

"ஊட்டி ஒரு குளிர்ச்சியான இடம், 8000 அடி உயரத்திலுள்ளது."

"அப்பாடி அது வேண்டாங்க. அம்புட்டு உயரத்திலேயிருந்து விழிந்துட்டா ஆள் என்னமாகும்."

"சரி ஊட்டி வேண்டாம். மதனபள்ளி ஒரு கட்டிக்கரையிலுள்ள இடம்........"

"பேரே நல்லாயில்லங்க. பள்ளின்னு எப்படிங்க இருக்கும்"

"சாதிக் கௌரவம் ரொம்ப ஜாஸ்தி உனக்கு. சரி அந்தப் பள்ளி யும் வேண்டாம். கொடைக்கானல் 6000, உயரம்."

"உயரமே வேண்டாஞ் சாமி"

"கண்டி இலங்கையுள்ள இடம்"

"இலங்கை இராவணன் தேசந்தானே"

"ஆமாம்"

"சீதா பிராட்டி அந்த கண்டியிலே தான் இருந்தாங்களா"

"ஆமாம்மா. கண்டியிலேதான் ராவணன், சீதைக்கு எழுதப் படிக்கக் கற்றுக் கொடுத்தானும்."

"கண்டிக்குப் போங்க. நல்ல இடம். வண்டி அமத்தட்டுமா"

"வண்டிலேயா போறது கண்டிக்கு. கப்பலிலே போகணும்"

"கப்பல் திருநெல்வேலியிருந்தா புறப்படுது"

ஆமாம். சரி. நீ போகலாம்"

அன்று முழுதும் குமரவேல் வீட்டில் ஏகதடபுடல். கனகசபையின் அட்டகாசம் சொல்லி முடியாது. குமரவேலைப் பயமுறுத்தி, படுக்கையை விட்டு எழும்ப விடாமல் பார்த்துக் கொண்டார்.

சாயரட்சை ஆறுமணிக்கு இருவரும் ரயில்வே ஸ்டேஷனுக்குப் போனார்கள். மண்டபத்துக்கு மூன்று டிக்கட்டுகள் வாங்கப்பட்டன. குமரவேலுக்கு ஒன்று, குருசாமிக்கொன்று. மூன்றாவது டிக்கட்டு யாருக்கென்று குமரவேலுக்கு விளங்கவில்லை. ரயில் வந்ததும், கனகசபையும் வண்டியில் ஏறினார். வண்டி புறப்படும் போதும் அவர் இரங்கவில்லை. குமரவேலுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"நீ எங்கடா வார்றே"

கனகசபை சிரித்துக் கொண்டே "கண்டிக்குத்தான்"

"வியாபாரத்தைப் பார்க்கிறது யாரு?"

"உன்னைப் பார்க்கிறது யாரு? வியாபாரத்தைப்பற்றிய கவலையே இருக்கக் கூடாதென்று வைத்தியர் சொல்ல வில்லையா? பின்னே ஏன் வியாபாரம் என்று அடித்துக் கொள்கிறாய்? அதற்கெல்லாம் வேண்டிய ஏற்பாடுகள் செய்யாமலா வருவேன்."

"உன் கையில் ஒப்புவித்து விட்டேன். உன்னுடைய இஷ்டம்"

"இந்த ஆறுமாத காலத்திலே உண்டாகிற நஷ்டத்துக்கு நான் ஜவாப்தாரி"

என்றதோடு வியாபாரப் பேச்சு முடிந்தது.

* * * *

மூன்று மாதங்கள் கழிந்தன. குமரவேல் இலங்கை வாழ்க்கையில் மயங்கி விட்டார். இப்படியே இருந்து விடலாமா என்று கூட யோசித்தார். ஒரு நாள் வழியில் பீடி பிடித்துக் கொண்டு போன ஒருவனிடம் "என்ன பீடி தம்பி" என்று கேட்டு விட்டார். "டமாரம் பீடி" என்றான். "நம்முடைய பீடி இந்த இடத்திலே கிடையாதா?" என்று கனகசபையைக் கேட்டார்.

"பார்த்தாயா வியாபாரம் வந்துவிட்டது. பீடிப்பேச்சு எடுத்தாயோ காடிக்கு ஆபத்து" என்ற உத்தரவு வந்ததும், பீடிப் பேச்சு நின்றது.

கனகசபை இடைக்கிடையே கல்லூருக்குப் போய் வந்து கொண்

டிருந்தார். வியாபாரம் க்ஷேமம் என்பதுதான் எப்போதும் அவர் சொல்லும் செய்தி.

வைத்தியர் விதித்த ஆறுமாதங்கள் கழிந்தன. கனகசபையின் பயமுறுத்துதலால் இன்னும் மூன்று மாதங்களும் இலங்கையிலேயே செலவிடப்பட்டன; பூரண சுகமும் பலமும் அடைந்தவராய் குமரவேல் காணப்பட்டார்.

* * * *

திருநெல்வேலிக்கும் கல்லூருக்கும் இடையில் செங்கோட்டைப் பாசஞ்சர் வண்டி போய்க்கொண்டிருக்கிறது. ஒரு இரண்டாம் வகுப்பறையில் கனசபையும் குமரவேலும் பேசிக்கொண்டிருக்கின்றனர். குமாவேலுக்குத் தன் பழைய தொழிலுக்கு வருகிறோம் என்ற பூரிப்பு முகத்தில் தாண்டவ மாடியது.

"ஒரு நல்ல செய்தி சொல்லட்டுமா" என்று கனகசபை திடீரென்று கேட்க, "என்ன செய்தி " என்று குமரவேல் கழுத்தை நீட்டினர்.

"டமாரம் பீடிக் கம்பெனி கல்லூரில்தான் இருக்கிறது."

குமரவேலுக்குத் தூக்கி வாரிப்போட்டு விட்டது.

பல இடங்களில் 'டமாரம் பீடி' என்னும் விளம்பரத்தைக் கொட்டை எழுத்துக்களில் பார்த்திருக்கிறார்.

டமாரம் பீடியின்மேலே உண்டான வெறுப்பும் பகையும் அதிகரித்துக் கொண்டு வந்திருக்கின்றது. இப்போ அதே கம்பெனி தன் ஊரிலே, தன் கம்பெனி வாயிலே மண்ணைப்போட வந்திருக்கிறது என்று கேள்விப்பட்டால் மனம் எப்படிப் பதைக்கும்?

"அதை நடத்துகிறது யார்?"

"சொக்கலிங்கம்"

"அவனு! அட தெய்வமே. அந்தக் கஞ்சிக்கற்ற பயலா!" வண்டி சடக்கென்று நிற்க, கல்லூர், கல்லூர் என்ற சத்தமும் கேட்டது.

பேச்சு மூச்சில்லாமல் ஊர் வந்து சேர்ந்தனர். குமரவேல் பீடிக் கம்பெனி என்ற பலகையைக் காணோம். 'டமாரம் பீடிக் கம்பெனி' என்ற ஒரு பெரிய பலகையைக் கண்டார். அதற்கொரு மெத்தைக் கட்டடம். குமரவேல் பேந்தப் பேந்த விழித்தார்.

"நம்முடைய கம்பெனி எங்கே?"

"குமாரா, இந்த ஊரிலே டமாரம் பீடிக் கம்பெனி ஒன்று தான். குமரவேல் கம்பெனி மூடபபட்டு விட்டது."

"அடா சண்டாளா" என்று நண்பனைத் திட்ட வாயைத் திறந்தார். நல்லவேளை (இவ்வளவுக்கும் கனகசபை சிரித்துக் கொண்டு தான் நின்ருர்.) சொக்கலிங்கம் சுத்தமாக உடுத்து அங்கு வந்து நின்ருன். இருவரையும் வணங்கினன்.

"மிஸ்டர் சொக்கலிங்கம்! குமரவேல் ஐயாவுக்கு, டமாரம் பீடிக கம்பெனியின் முதலாளி யார் என்று சொல்லுங்கள்."

"டமாரம் பீடிக் கம்பெனியின் முதலாளி, கனகசபை அவர்கள்தான்"

குமரவேல், கனகசபையைப் பார்க்க, கனகசபை சொக்கலிங்கத்தைக் கண் சிமிட்ட........

பாவம் குமரவேல்! தன் நண்பனால் ஏமாற்றப்பட்ட பேதை!

"குமாரா, இன்று முதல் நீதான் டமாரம் பீடி கம்பெனி முதலாளி! சொக்கலிங்கம், முதலாளி ஐயாவை ஆபீசுக்கு அழைத்துக் கொண்டு போங்கள்!" என்ற வார்த்தைகள் கணீர் என கனகசபையின் வாயிலி ருந்து பிறந்தன.

* * * *

மறு நாள்,

'கனகா, உன்னைக் கட்டியணைத்து முத்தமிடலாமா என்று யோசிக் கிறேன்."

"அவ்வளவு சந்தோஷமா?"

"சொல்ல முடியுமா?"

"ஒன்று செய். ஊரிலுள்ள ஏழைகளுக் கெல்லாம் மூன்று நாள் சாப்பாடும் ஒவ்வொரு துணியும் தர்மம் செய்யேன்."

"உன் பேச்சுக்கு மறு பேச்சு உண்டா? டே குருசாமி!.............."

"ஆமாம்; ஏன் கம்பெனி பெயரை மாற்றி விட்டாய்?"

"மனுஷன் பெயரை பீடிக்குப் போடக்கூடாது என்ற கொள்கை தான்."

"இன்னும் ஒரே ஒரு பேச்சு. கோபித்துக் கொள்ளாதே. சொக்க லிங்கத்தை மிஸ்டர் சொக்கலிங்கம் என்று கூப்பிடுவது எனக்குப் பிடிக்க வில்லை."

"பிடிக்காவிட்டால் போ. நாளை முதல் ஐயா சொக்கலிங்கம் என்று கூப்பிடப் போகிறேன்."



# சமய உணர்ச்சி

———(0)———

(தென்னாப்பிரிக்கா—டர்பன்
திரு. ச. மூனிஸ்வாமி பிள்ளை எழுதியது.)

சமய உணர்ச்சி என்பது சமயத்தைப் பற்றிய உணர்ச்சியாகும். எது சமைக்கப் பட்டதோ அல்லது செயயப்பட்டதோ அது சமயம் ஆகும். அப்படிச் செய்யப்பட்டது ஓர் நெறியாகும். ஆகவே சமயம் என்பதற்குப் பொருள் நெறியாகும். ஓர் நெறி இருப்பின் அதற்கு ஓர் முடிவிடம் வேண்டப்படும். அந்த முடிவிடம் தான் வீடு ஆகும். வீடு அடைதலுக்குப் பகுத்தறிவுடைய மக்கள் செல்லும் நெறியே சமயம் ஆகும்.

ஓர் ஊருக்குச் செல்ல நினைக்கும் ஒருவன் அதனை அடைவிக்கும் நெறி இன்றியமையாது வேண்டப்படுமாறு போல வீட்டினை அடையக் கருதும் மக்களுக்கு உலக வாழ்வில் சமயம் இன்றியமையாது வேண்டப் படுவது. சமயத்தின் துணைகொண்டல்லது ஒருவர் நல்வழியில் நடந்து வீடு அடையக் கருதுதல், ஓர் கப்பலை ஓட்டும் மாலுமியொருவன் திசைகாட்டுங் கருவியின்றி, அக்கப்பலை ஓட்டுதல் போல ஆகும். சமயம்தான் ஒருவருக்கு உலகில் மறத்தை விலக்கி அறத்தைச் செய்யும்படி அறிவிப்பது. சமயம் தான் கடவுளுக்கும் உயிர்களுக்கு முள்ள உண்மைத் தொடர்பு இன்னது என்றும், அதனை அடைய வேண்டும் வழி இன்னது என்றும் அறிவிப்பது. இனி உணர்ச்சி என்பது அழுந்தி அறிதலாகும். ஒருவர் தன்மனதில் ஒன்றை அறிதல் மாத்திரம் அதனைப் பின் பற்றி ஒழுகுதற்குப் போதாது. உலகில் எத்தனையோ ஆங்கிலம் படித்து பட்டம் பெற்றவர்களும் உலகிற்குக் கேடு விளைக்கும் செயல்களைச் செய்தலை நாம் கண் கூடாகக் காண்கிறோம். அதற்குக் காரணம் அவர்கள் உணர்ச்சியின்மை தான். பிறர் துன்பம் நுகருவதை அறிவதுடன் அத்துன்பம் எப்படியிருக்கும் என்று உணர்தலும் வேண்டும். உணர்ந்தாலொழிய பிறருக்குத் துன்ப முண்டாகும் வினைகளை ஒருவர் செய்து கொண்டுதா னிருப்பார். இத்தகைய உணர்ச்சி சமயத்தைப் பற்றி யிருப்பதே—சமய உணர்ச்சியே—எல்லா நலங்களுக்கும் மூலமா யிருக்கிறது.

சமய உணர்ச்சி திருந்திய உணர்ச்சியா யிருத்தல் வேண்டும். திருந்திய உணர்ச்சி திருந்திய அறிவைச் சார்ந்து உளதாதல் வேண்டும். ஒருவருக்குத் தன் சமயத்தைப் பற்றிய அறிவு செவ்வியதாக இருந்தால் அவரிடத்தில் பிற சமயங்களைப் பற்றிச் சமயப் பொறுமையும் இயல்பாக இருக்கும். அவர் தன் சமயம் எப்படி தான் கடவுளினுடைய அருளைப் பெறுதற்கு வழியாயிருக்கிறதோ, அப்படியே ஏறக்குறைய பிற சமயங்கள் அந்தச் சமயங்களி லுள்ளவர்க்கு வழியா யிருக்கின்றன என்று அறிந்து உணர்ந்து அவர்களுடன் அன்புடையவராய் ஒழுகுவார். இப்படி அல்லாத முரட்டு உணர்ச்சியா யிருந்தால் அது ஒரு சமய மக்களுக்கும், பிறிதொரு

சமய மக்களுக்கும் பகைமையை உண்டு பண்ணி மிகக் கேட்டை இருதிறத் தாருக்கும் உண்டு பண்ணும்.

ஒரு சமயம் சைவ சமயத்தைப்போல் எத்துணை உயரிய சமய மாயினும், அச்சமயத்தி லுள்ளவர்களுக்கு அதனைப் பற்றித் திருந்திய உணர்ச்சி யில்லாவிடின், அது அதற்குத் தக்கபடிக் கேட்டினையே அவர்க ளுக்கும் பிறர்க்கும் உண்டுபண்ணும். ஒரு சமயம் உலோகாயதம் போல எவ் வளவு தாழ்ந்த சமயமாயிருந்தாலும், அதனைப் பற்றித் திருந்திய உணர்ச்சி அச்சமயத்தி லுள்ளவர்களுக்கும் இருக்குமாயின் அது அவர்களுக்கும் பிறரு க்கும் அச்சமய உண்மைக்குத் தக்க அளவு நன்மையே உண்டு பண்ணும். இந்தக் காரணத்தினுலேதான் நமது சைவ சமயம் உலோகாயதத்தையும் ஒரு சமயமாக வைத்துக் கூறுகின்றது.

மேற் கூறியவாறு திருந்திய சமய உணர்ச்சி உண்டாக வேண்டும். ஒவ்வொரு சமயிகளும் தங்கள் தங்கள் சமய நூல்களைக் கற்று அதன் உண் மைகளை நன்றுயறிதல் வேண்டும். பிற சமய நூல்களையும் கற்று அவை களின் உண்மைகளையும் அறிதல் மிக்க நலமாயிருக்கும். அவ்வுண்மை களை மனதில் நன்கு ஆராய்தல் வேண்டும். மனம் ஒன்றனைச் சாராது கூடிய வரை காமம், வெகுளி, மயக்கம், இன்றி நடுவு நிலைமையுடன் ஆராய்ந்து அறிந்த உண்மைகளின் வழியே ஒழுகுதல் வேண்டும். கடவு ளின் அருளைத் துணைக்கொண்டு ஒழுகினுல் மாத்திரமே அறிந்த வண் ணம் உணர்ந்தும், உணர்ந்த வண்ணம் ஒழுகுதலும் நடைபெறும். இப்படிக் கற்றறிந்த மக்கள் ஒழுகுவாராளுல் அவர்கள் மனம் தூய்மை யடைந்து பிரகாச முறுதலே இறைவன் அருளின் குறியாகும். அவர்கள் நாளடைவில் மெய்யுணர்வு பெற்று மெய்யான இன்பம் உணர்வார்கள். இந்த மேலான திருத்த உணர்ச்சி கற்றறிந்தவர்களுக்குக் கூடுமே ஒழிய ஏனையோர்களுக்குக் கூடாது. ஆகையினுலேதான் கற்றவர் விழுங்கும் கற் பகக்கனி என்று கடவுளைப் பெரியோர்கள் கூறியருளினுர்கள்.

ஒவ்வொரு சமயத்திலும் கற்றறிந்த மக்கள் ஏனையோர்களுக்குச் சமய உண்மைகளைக்கூறி அவர்களிடத்தில் கூறியவாறு திருந்திய சமய உணர்ச்சி யும் சமயப் பொறுமையும் உண்டு பண்ணல் வேண்டும். கற்றறிந்தவர்கள் கூறும் உண்மைகளைக் கேட்டு நடத்தல் வேண்டும். இப்படி நமது இந்திய நாட்டிலுள்ள பல சமயத்தார்களும் நடந்து சமய உணர்ச்சி உடையவர் களாளுலொழிய அவர்களுக்குள் மன ஒற்றுமையும், உடன் பிறப்பு அன்பும், நாட்டு நல விருப்பமும், அருளொழுக்கமும் உண்டாகா. இக் குணங்கள் உண்டாளுலொழிய இந்திய நாடு மேலான நிலைமை அடையாது. ஏனைய நாடுகளுக்கு இல்லாத ஒரு சிறப்பு நமது இந்திய நாட்டுக்கு இயல்பா யுள்ளது. அது என்ன வென்றுல் பிற நாட்டிலுள்ள மக்களுக்கு உண்மை யான சமய ஞானம் உணர்த்துவது. இந்தச் சிறப்பு விளங்குவதற்குப் பொதுவாக இந்திய நாட்டிலுள்ள மக்கள் எல்லோரும் சிறப்பாக இந்து சமயத்தவர்களும் மேற் கூறிய திருந்திய சமய உணர்ச்சியுடையவர்களாதல் வேண்டும். இச்சமய உணர்ச்சியே இந்திய நாட்டின் எல்லா நலங்களுக்கும் சிறப்பு நலத்துக்கும் மூலமாயுள்ளது. ஆதலின் அது விளக்கும்படி இந்திய நாட்டு நலம் விரும்பிகள் எல்லாரும் வேலை செய்வது அவர்கள் கடனுகும்.

மக்கள் நலங்களுக் கெல்லாம் அடிப்படையாயுள்ள திருந்திய சமய

உணர்ச்சி உண்டாகிறதற்கு நமது சைவ சமயம் மிக்க ஏற்ற முடையதாயிருக்கின்றது. உலகிலுள்ள எல்லாச் சமயங்களிலும் நமது சைவ சமயந்தான், பிற சமயங்க ளெல்லாவற்றையும் ஒரு புறம் ஒதுக்காது தன்னகத்தே தழுவிக்கொண்டு அவைகள் ஒவ்வொன்றிற்கும் ஏற்ற நிலை அமைத்துத் தன்னிடம் வருவதற்குப் படிமுறை சமயமாகக் கொள்கின்றது.

நமது சைவ சமயம் தான் யார் யார் தங்கள் தங்கள் அறிவுக்குத் தக்கவாறு எத் தெய்வத்தை எவ்வுருவில் எவ்வாறு வணங்கினாலும் சிவபெருமான் அத்தெய்வத்தை அதிட்டித்து நின்று அவர்கள் வழிபாட்டை ஏற்றுக் கொண்டு அதற்குத் தக அருள் செய்கின்றார். சைவசமயம் தான் உலகிலுள்ள பலதர அறிவினையுடைய மக்களுக்கு அவரவர்கள் அறிவுக்குத் தக்க விதமாய்த் தத்துவ வகைகளைக் கொள்ளுகின்ற பல சமயங்கள் உளவாதல் வேண்டும் என்றும், ஏனைய சமயங்களும் எம்பிரான் ஏற்கும் சமயம் என்றும் கூறுகின்றது.

சைவ சமயந்தான் ஏனைய சமயங்களுடன் பிணக்கின்றி இணங்கி ஒழுகும் விரிந்த நோக்கும் பரந்த கருத்துமுள்ள சமயம். அத்தகைய சமயம் இந்திய நாட்டிலுள்ள பல சமய மக்களும் சமயப் பொறுமையுடனும் ஒருவருக்கொருவருடன் பிறப்புரிமை அன்புடனும் உண்மையாகக் கலந்து ஒழுகி உறவாடுதற்கு வேண்டி உண்மைகளைக் கூறுகின்றன. சைவ சமயத்துக்குச் சமயப் பிணக்கு இல்லாதது மன்றிச் சாதிப் பிணக்கு மில்லை. ஒருவர் எந்தச் சாதியிற் பிறந்தவராயினும் அவர் சைவ சமயத்திற் கூறுகின்ற உண்மைகளைக் கடைப் பிடித்து ஒழுகி மேலான நிலை அடைவதற்கு அதில் யாதொரு தடையு மில்லை. தக்க தவமும், தகக ஒழுக்கமும், தக்க அறிவுமே அதில் வேண்டப்படுவன. அறுபத்துமூன்று நாயன்மார்களில் பல இழிந்த குலத்தினர்கள் எனப்படுவோர் சிவபதம் அடைந்தமை இவ்வுண்மையை நன்கு புலனாக்கும்.

சைவ சமயம் அருளொழுக்கம் கூறுவது போல வேறு எச்சமயமும் கூறுகிறதில்லை. புலாலுண்ணாமை முற்றிலும் அதில் விளக்கப்பட் டிருக்கிறது. "தன்னூன் பெருக்கற்குத் தான் பிறிதூனுண்பான் எங்ஙனமாளும் அருள்" என்பது அதன் துணிபு. எவ்வுயிருக்கும் அன்பா யிருத்தல் வேண்டும். என்றும் உயிர்களிடத்து அன்பில்லாது கடவுளிடத்து அன்பாயிருத்தல் கூடாது என்றும் சைவ சமயம் கூறுகின்றது. வீட்டு நெறியில் அது அடியார்களுக்கு உங்கள் பணி எல்லாம் அரன்பணி என்றே செய்யுங்கள் என்று கூறுகின்றது.

மேலே சொல்லிய காரணங்களினால் எல்லா மக்களும் ஓரிடத்தில் சேர்ந்து வாழும்படியான இக்காலத்தில் ஒருவரோடொருவர் இணங்கி, இன்ப நலம்பெற உலகில் வாழ்வதற்கு சைவசமயம் ஏற்ற சமயமாயுள்ளது என்று யாவருக்கும் நன்கு விளங்கும். ஆகையால் சைவ சமயிகள் எல்லாரும் சைவ சமய நூல்களைக் கற்று, உண்மைகளை அறிந்தும், உணர்ந்தும், அவைகளின்படி ஒழுகுவது மன்றி அவைகளை உலகில் எங்கும் பரவும்படி பல இடங்களில் சொற்பொழிவுகள் செய்தும், வெளியீடுகளில் எழுதியும், புத்தகங்களில் எழுதியும் வருவார்களானால் அவர்கள் உலகிற்குப் பேருதவி செய்பவர்க ளாவார்கள். இப்படி அவர்கள் உலகிற்குத் தொண்டு செய்ய இறைவன் அருள்புரிவாராக.



# சுதந்திரப் பள்ளு



(T. S. ராஜகோபாலன், B.A., L.T.)

பாப்பா முதல் வயோதிகர் வரையில் உள்ள மானுட வர்க்கத்திற்குப் பொருந்த உபதேசமாக விளங்கும் பாப்பாப் பாட்டின் படிப்பினால், உள்ளத்தில் உண்டாகக் கூடிய புது உணர்ச்சி கொடுக்கக் கூடிய புதிய சகாப்தத்தை "புது வருஷப்பா"வின் பொருளினால், "பெண் விடுதலை"க்கு ஆர்வமெழுந்து, "பொது விடுதலையின்" போக்கை அனுபவித்த மனோபாவத்தில், சுதந்திரம் பெற்று விட்டவர்களின் ஆரவாரம் எப்படி யிருக்கும் என்பதை யறிய சுதந்திரப் பள்ளைக் கொஞ்சம் யோஜிப்போம். நமது ஆனந்தனில் முன் பகுதியாக வெளியிடப் பெற்றிருக்கும் சஞ்சிகைகளில் "பள்ளு" என்பது என்ன வென்று அறிஞர் R. P. சேதுப்பிள்ளை யவர்கள் வரைந்து, முக்கூடல் பள்ளை விளக்கி யிருப்பது வாசகர்கள் நினைவில் இருக்கிறது. வெகு பாமர ஜனங்கள் தங்கள் மனோல்லாசத்தைத் தெரிவித்து குதித்துக் கொட்டமடிக்கும் சந்தத்திற்கு "பள்ளு" என்று எழுதி யிருக்கிறார்கள். அந்த முறையில் பொது சுதந்திரத்தில் ஆர்வங் கொள்ளுகிறவர்கள் பாமர மக்களே. அதன் பலனை அனுபவிப்பவர்களும் அவர்களே. கள்ளங் கபடின்றிக் கூக்குரலிட்டு களிப்பதும் அதிகமாக அவர்களே. ஏனெனில் பாடு படுவதற்குப் பாத்தியப் பட்டவர்கள், சந்தோஷப் படுவதற்கும் பாத்தியப் பட்டவர்களே யாவர். ஆக அவர்கள் உள்ளத்தில் என்ன கிளர்ச்சி ஏற்படுகிறது என்பதை, அரசியல், சமூகம், பொருளாதாரம் முதலிய துறைகளில் தீர்க்கதரிசியாகவுள்ள பாரதியார் வெகு அழகாகவும், பாமரரும் புரிந்து அனுபவிக்கும் முறையில் எளிதாகச் சித்திரித் திருப்பது, படிக்கப் படிக்க, ஊற்றுப் போல், தெளிவு வீறிட்டெழும். ஒரு காலத்தில், "பாமர மக்கள் நம் பக்கத்தில் தான் இருக்கிறார்கள். படித்து வேலையற்றுத் திரியும் சிலர்தான் 'காங்கிரஸ், ஸ்வராஜ்யம்' என்று கிளர்ச்சி செய்து கொண்டிருக்கிறார்கள்" என்று சொன்ன காலம் உண்டு பிரிட்டிஷ் சர்க்கார். ஆனால் மகாத்மாகாந்தி காங்கிரஸில் சம்பந்தப்பட்டது முதல், வெகு ஜனத் தொடர்பை ஏற்படுத்தி, பிரசாரம் செய்ததன் பலனால், 'ஜனங்களே காங்கிரஸ்; காங்கிரஸ் தான் ஜனங்கள்' என்ற நிலைமை ஏற்பட்டு விட்டது. கிளர்ச்சி வலுத்தது. இப்போதும் அந்த பிரிட்டிஷ் சர்க்கார், பிற்போக்காளரையும், சுயநலமிகளையும், சமூக

வாதிகளையும் கொண்டு கைவிரலைக் கொண்டு கண்ணைக் குத்துவது போல் ஆட்சி நடத்திய போது, "பாமர ஜனங்கள் ஒன்றும் புரியாமல் ஏதோ கத்திக் கொண்டிருக்கிறார்கள். படித்த, வடிகட்டின எஸ்ஸென்ஸ் மேதாவிகள் (Intelligentia) நம் வசம் இருக்கிறார்கள் என்று சொல்லித் திரிந்தனர்! அதையும் பொய்யாக்க தற்பொழுது காங்கிரஸ் காரர்கள் 7 மாகாணங்களில், ராஜ்ய நிர்வாகத்தையும் நடத்தி வருகின்றனர். அவர்களுக்கும் எவ்வளவோ இடையூறுகளும் இன்னல்களும் தடைகளும் உபத்திரவங்களும் இருக்கின்றன. இந்த அளவிலேயே சுதந்திர சூரியன் உதயமாகி பல துறைகளில் முன்னேற்றத்திற்கான வேலைத் திட்டங்கள் நிம்மதியற்ற நிலையில் நிர்மாணிக்கப் படுகின்றன வென்பது இந்தியா பூராவும் அறிந்த விஷயம். ஹரிபுரத்து காங்கிரஸில் கண்ட காக்ஷிகள் கணக்கிலடங்காதனவாக இருக்கின்றன. இவ்வித உணர்ச்சிகளைப் பாமர மக்கள் வாயிலாக ,வெளிப்படுத்துகிறார் பாரதிப் பெரியார்.

"ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே!
ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோமென்று"

என்ற பல்லவியுடன் வராளி ராகத்தில் ஆரம்பிக்கிறார். எல்லாருக்கும், எப்போதும் எங்கும் சுதந்திரம் பெறுவது ஆனந்தமேயாகும். அந்த ஆனந்தத்தில் ஆடுவதும், பாடுவதும், களியாட்டம் நடத்துவதும் மனித இயற்கை. என் ஜீவனுள்ள எல்லாப் பிராணிகளுக்குமே இயற்கையானதாகும் என்பது மிகையாகாது. பாமர ஜனங்களென்றால் சொல்லவே வேண்டாம். கூத்தாடியே களிப்பார்கள். அப்படிக் கூத்தாடிக் களிப்பது யாது காரணமோ வெனில், அவர்கள் மனதில் பல துறைகளிலும் உறுத்திக் கஷ்டப்படச் செய்து, முன்னேற்றத் தடை செய்த இரண்டு என்பது அடுத்துள்ள,

"பார்ப்பானை 'ஐயர்' என்ற காலமும் போச்சே, வெள்ளை
பரங்கியைத் 'துரை' யென்ற காலமும் போச்சே, பிச்சை
ஏற்பாரைப் பணிகின்ற காலமும் போச்சே, நம்மை
ஏய்ப்போருக் கேவல் செய்யும் காலமும் போச்சே,"

என்ற முதல் பாட்டினால் தெரிவிக்கிறார். இதில் நம்மில் ஒரு சிலருக்கு தாங்கொணாத மனக் கசப்பும் தோன்றுவது இயற்கையே. முன்பு ஒரு சமயம் எடுத்துக் காட்டியபடி பாரதிப் பெரியாருக்கு, குற்றம் கண்ட விடம் எதுவானாலும் நிஷ்கண்டகமாய் நசுக்குவது சுவபாவமாகிவிட்டது. 'அள்ளாமல் குறையாது.' 'சொல்லாமல் பிறவாது' என்பதற் கிணங்க, மேலாம் வருணத் துதித்தவ ரெனச் சொல்லிக் கொள்ளுபவரில் பலருக்கு பழைய வாசனை கொஞ்சம் கூட அறவே யில்லாமல் பழைய மரியாதைகளும், உரிமைகளும் வேண்டும் என்று மட்டும் இருக்கும் போக்கை, நியாய புத்தியுள்ள எவரும் சஹித்திருக்க முடியாது. அதை யொட்டியே ராஜாஜீ போன்றவர்களும் மாளவியாஜீ போன்றவர்களும், என்! சங்கராச்சாரியார்களில் ஒருவரும் கூட இந்த கஷ்டத்தைக் களைய முன் வந்து சகலத்தையும் தியாகம் செய்கின்றனர். இந்த வேலையையே உயிர் நாடியாகவும் கொண்டிருக்கின்றனர். பொதுவாக ஆசிரம தர்ம முறைகளை அனுஷ்டா

-னத்தில் தவறாமல் கொண்டவர்கள் "அறிவோர்க்கழகு கற்றுணர்ந்து அடங்கல்" என்றவாறும், "அந்தணர் என்போர் அறவோர், எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலான்" என்றவாறும், "அந்தணர் ஆகலாம் எல்லா நெறி நின்றும், செந்தொண்டர் எனச் செய்யின்" என்றவாறும் அடங்கி, பரன் போக்கில் ஒழுகி நடக்கின்றனர். அனுஷ்டானம் அனுபவமும் இல்லாமல், வெளி வேஷம் மட்டும் போட்டு, வாய் நிறைய பிரசங்கங்களை மட்டும் செய்துவிட்டு விருது கட்டித் திரிகின்றவர்கள் தான் தொண்டை கிழியக் கத்தி, ஆக்க வேலைகளுக்கும் அழிவு தேடுகின்றனர் என்பது பிரத்தியக்ஷம் என்பதை மிக்க வருத்தத்துடன் தான் குறிப்பிட வேண்டியிருக்கின்றது. ஆயினும் ஒரு காலத்தில் சமூக நன்மையை நாடி, பிரிவினைகள் காரணார்த்தமாக ஏற்பட்டதை இப்போது ஸ்தாபிக்க நினைத்தாலும், காலம், தேசம், வர்த்தமானம் என்பனவற்றை யொட்டியும், ஏற்பட்டிருக்கும் பலவித மாறுதல்களின் அவசியத்தினாலும் ஸ்தாபிப்பது முடியாததாக இருக்கிறது. அப்படி முயற்சி செய்தால், கத்துபவர்களே, "அப்படியெல்லாம் முடியுமா ? எல்லாம் அப்படி இப்படித்தான் இருக்கும். இருந்தாலும்..........?" என்று தட்டிக் கழிப்பதை எழுதுபவருடைய அனுபவத்தில் கண்டதுபோல், மற்றும் பல்லாயிரக் கணக்கான பேரும் கண்டிருக்கலாம்! ஆகவே இவ் வடிகள் எழுதப்பட்ட காலத்தில், தற்போதைய நிலைமை தீர்க்க தரிசனமாகக் காணப்பட்டது தெளிவு. மற்றுமோரிடத்தில் பாரதியார், "முன்னாளில் ஐயரெல்லாம் ஓதுவார் வேதம். பெய்யுமடா மூன்று மழை மாதம்! இந்நாளிலோ பொய்ம்மைப் பார்ப்பார் எதுசெய்தும் காசு பெறப் பார்ப்பார் !!" என்று எழுதியதற்கிலக்காக ஒரு சிலரையேனும் சமூகத்தில் காணலா மன்றோ ? "கலம்பாலுக்கு ஒரு துளி மோர்" முறிப்பதற்குப் போதும் அன்றோ? ஆகவே ஆத்திரங் கொள்ளாதபடி, உள்ளதை உள்ளவாறு கண்டு உற்றதைச் செய்து, செய்வித்து, சமூகம் உய்விக்கச் செய்வது தான் தர்மமே தவிர, வேறு வழிகளில் இறங்குவது தற்கொலையேயாகும் என்பது அறிஞரின் துணிபு. ஆகவே துவேஷம் குறைய வழி தேடுவதே செய்யத்தக்க காரியமாகும், "வெள்ளை... .........போச்சே" என்பது முன்பே வந்து விட்டது. ஆனால் ஒரு சிலர் தங்களை வெள்ளையர்களாகவே மதித்து நடந்து வருவதும் காணக் கூடியதாகும். அதுவும் சீக்கிரத்தில் மறையுங் காலம் வந்து விட்டது எனலாம்.

இந்தச் சுதந்திரத்தின் போக்கில் என்னென்ன சொல்லப்படும் என்பதையும்,

"எல்லோரும் ஒன்றென்றும் காலம் வந்ததே பொய்யும்<br>
ஏமாற்றும் தொலைகின்ற காலம் வந்ததே, இனி<br>
நல்லார் பெரியாரென்ற காலம் வந்ததே கெட்ட<br>
நயவஞ்சக்காரருக்கே நாசம் வந்ததே"

என்றும்,

"எங்கும் சுதந்திரம் என்பதே பேச்சு நாம்<br>
எல்லாரும் சமமென்ப துறுதியாச்சு!

சங்கு கொண்டே வெற்றி யூதுவோமே, இதைத்
தரணிக்கெல்லாம் எடுத்தோதுவோமே"

என்றும் சொல்லி குதிக்கச் செய்திருக்கிறார். மேலே முதலாவதாகச் சொல்லப்பட்ட பாட்டின் சரியான தொடர்ச்சியாக வைத்தமைத்துப் பாடிக் களிக்கச் செய்கிறார். இவையெல்லாம் நசுக்கப்பட்டுக் கஷ்டப்பட்டவர்களின் உள்ளக் கிளர்ச்சியின் நெகிழ்ச்சியாகவே வைத்து எழுதும் போக்கு வெகு அற்புதம். அவர்களுடைய மனதில் என்ன போராட்டம், உணர்ச்சி இருக்கும் என்பதை ஸ்வயமாக அனுபவித்து, உணர்ந்து வருத்தப்பட்டு உள்ளம் உருகிக் கதறுகிறார் தெய்வத்தன்மை பொருந்திய தியாகி! இவரைப் பற்றியுங்கூட, துவேஷத்திலேயே ஊறி, துவேஷமே உருவான ஒரு விஷமி, "பாரதி ஒரு பார்ப்பான். அவன் பாட்டுப்பாடுவது தமிழருக்கு அவமானம்" என்று ஒருகூட்டத்தில் சொல்லுவதென்றால் என்னென்று கூறுவது நாட்டின் துரதிருஷ்டவசத்தை? இந்த "சங்கு கொண்டே வெற்றி யூதுவோமே" என்ற அடியை பாரதியாரே பாடியதை 1920-ல் கடற்கரையில் கேட்ட ஒருவர், "அடேயப்பா! என்ன உணர்ச்சியுடன் பாடுகிறாரப்பா? கையை வாயில் வைத்துக்கொண்டு அவர் சொன்னபோது அசல் சங்கநாதம் தொனிப்பதுபோலவே இருந்ததப்பா! இன்னும்கூட அந்த தோற்றம் என் கண்முன்னே நின்று, சப்தம் காதில்படுகிறது" என்று சுமார் இரண்டு வருஷங்களுக்கு முன்புகூட சொல்லியதுண்டு. (அவரைப்போல பாடக்கூடிய ஒருவர் இன்றும் இருக்கிறார். அவரைக் கொண்டு, கிராமபோன் பிளேட்டுகளில் நூறு முக்கியமான பாட்டுகளையாவது ரிகார்ட் செய்துவைக்க வழி தேடினால் நமது காங்கிரஸ் மந்திரி சபையினர் செய்யும் பல நற்காரியங்களில் ஒன்றாகக் கொள்ளலாம். வருங்காலத்துச் சிறார்களுக்கும் நல்ல உணர்ச்சியுண்டாக்கத் தகுந்த காரியமும் ஆகும்.)

அடுத்து, சுதந்திரம்பெற்ற ஜனங்களின் மனப்போக்கு எப்படி என்பதை,

"உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்! வீணில்
உண்டு களித்திருப்போரை நிந்தனை செய்வோம்.
விழலுக்கு நீர்பாய்ச்சி மாயமாட்டோம்
வெறும் வீணருக்குழைத்து உடல் ஓயமாட்டோம்"

என்று சொல்லி நிர்மாண வேலைகளில் ஈடுபட்டு நாட்டுவளம் பெருக்கி, மக்கள் வளம் வளர்த்து, தேச சுபிக்ஷத்திற்கும், முன்னேற்றத்திற்கும் பாடுபடுவோம் என்று சொல்லுகிறார்கள். அவர்கள் தின்றுவிட்டு, திண்ணை தூங்கி தடிராமன்களாக இராமல் சமூகநன்மைக்கே உழைத்து, ஆக்க வேலைகளில் ஈடுபடுவதாகத்தான் சுதந்திரம் கோருகிறார்கள் என்பதை எவ்வளவு நேர்த்தியாகவும், தெளிவாகவும், உருக்கமாகவும் எடுத்து உரைக்கிறார் என்பது உன்னி உன்னிப் பார்த்துத் தெளியவேண்டியதோர் அபூர்வ விஷயமாகும்!

கடைசி பாட்டில் நாட்டைப் பெற்ற மக்கள், நாதனைப் புறக்கணிக்க மாட்டார்கள் என்பதை விளக்கி, நமது உலகிற்கே ஒரு புத்துணர்ச்சி

கொடுத்து பழமையைப் புதுப்பிக்கும் மறு பிறப்பு (Renaissance) ஏற் படுத்த விரும்புகிறார் என்பது விளங்கும்.

"நாமிருக்கும் நாடு நமது என்பதறிந்தோம்—இது
நமக்கே யுரிமையாம் என்ப தறிந்தோம்—பூமியில்
எவர்க்கும் இனி அடிமை செய்யோம்—பரி
பூரணனுக்கே யடிமை செய்து வாழ்வோம்!!"

என்று சுதந்திரப் பள்ளை முடிக்கிறார். ஆக "சுதந்திரம் என்பது, தறிதலைத்தனம், கட்டுப்படாத சண்டித்தனம் பிறர் மனதைப் புண்ணுக்கித்தாக்கும் நாக்கில் நரம்பற்ற தனம்." யார் எக்கேடு கெட்டாலும் என் குடிவாழ்ந்தால் போதும். என் பெயர் விளங்கினுல் போதும் என்று திரியும் தான்றோன்றித் தனம்" என்பது அல்ல என்பதை வெகு அழகாய்ச் சொல்லுவதைக் காணும் எவருக்குத்தான் பாரதிப் பாட்டில் பற்றுதல் வராது. இப்போதிப்போது, சங்கீத வித்வான்களும், கச்சேரிகளின் போக்கில், இரண்டொரு தேசீயப் பாட்டும், அந்தப் போக்கில், ஒரு பாரதிப் பாட்டும் பாடுவது மெள்ள மெள்ள வந்துகொண்டிருக்கிறது! அந்த அளவிலாவது வந்ததுபற்றி சந்தோஷமடைய வேண்டியதுதான். ஆனுலும் சீக்கிரத்தில் பாரதி பாடல்களை, சங்கீத வித்வான்களென விளங்கும் ஒவ்வொருவரும் படித்து, ரஸித்து உணர்ந்து, கேட்போ ருள்ளங்கனிய இப்பாட்டுகளில் பலவற்றைப் பாடிக் களிப்பித்துவர முயற்சி செய்வார்களாக. அதுவே பாரதியாரின் ஆத்ம திருப்திக்கு ஆஸ்பதமாகும். அவருடைய அரும்பெரும் தியாகத்திற்குத் தகுந்த கைம்மாருகும். இந்திய மக்களின் சுதந்திரத் தாகத்திற்குத் தகுந்த இளநீராகும். சுயேச்சைக் கனலுக்குத் தகுந்த நெய்யாகும். அவ்வாறேயாக எல்லாம்வல்ல கருணை சக்தி அருள்புரிவாளாக!

---

# "சந்திப்பு"



(டி. வி. ராமமூர்த்தி.)

படுக்கையில் புதைந்து கிடந்த பத்மநாபன் மெதுவாக தன் தலையை உயரத் தூக்கினான். தன் பொன்னிறக் கிரணங்களை அள்ளி இறைத்துக்கொண்டு தனது பிரயாணத்தைத் தொடங்கிய கதிரவன் அப்பொழுதுதான் ஜன்னல்களின் வழியாக உட்புக ஆரம்பித்தான். இளம் வெய்யிலில் அவன் கண்கள் கூசின.

வாயிற்படியில் நின்று கொண்டிருந்த கோபாலன் பத்மநாபனுடைய செயல்களைக் கவனித்த வண்ணம் சிரித்தான். கடைசியில் பத்மநாபன் படுக்கையில் எழுந்து உட்கார்ந்தான். ஆனால் அசதியின் மிகுதியால் அவன் கைகள் ஒரு பிடிப்பைத் தேடின.

"என்ன கோபால்! ரொம்ப நேரமாக நின்று கொண்டிருக்கிறாயா?" என்று தீனமான குரலில் கேட்டான் பத்மநாபன், அப்பொழுதுதான் கோபாலனைப் பார்த்து!

கோபாலன் உடனே "இல்லை; இப்பொழுதுதான் வந்தேன். உன் சமாசாரம் என்ன?" என்று வினவினான்.

"அது கிடக்கட்டும்! இப்பொழுது கொஞ்சம் தேவலை! உன் வரவு அத்தி பூத்தாப்போல் காணப்படுகிறது! மூட்டையும் பலமாய் இருக்கின்றது" என்று கூறிக்கொண்டே பத்மநாபன் தன் கரங்களை ஆவலாய் நீட்டினான்.

"இந்தா! எல்லாம் உன் தபசுக்காகத்தான்!" கோபாலன் சில பழங்களை எடுத்து வைத்தான்.

பத்மநாபன் முகம் கோபம் தூண்டப்பட்ட ஒரு குழந்தையின் கண்களைப்போல் கலக்க மடைந்தது.

"என்ன பழங்களா? எனக்கு என்னவேண்டும் என்பது உனக்கு தெரியாதா?"

"உனக்கு புஸ்தகங்கள் வேண்டுமா?"

"புஸ்தகமும் வேண்டாம். ஒரு இழவும் வேண்டாம்."

"படங்கள்?"

"என்ன விதமான படங்கள்? எடு பார்ப்போம்" பத்மநாபன் துடியாய் துடித்தான்."

ஆனால் அதற்குள் கோபாலன் மனம் நர்ஸ் ஜீவரத்தினத்தைப் பின் தொடர்ந்தது. அவனால் தாங்க முடியவில்லை.

"நான் இங்கு வரும்பொழுதே நர்ஸ் ஜீவரத்தினத்தைக் கண்டேன்."

"உனக்கு யோகம்தான்."

"அவள் உண்மையில் ஒரு அழகான பெண் என்பதில் சந்தேகமே இல்லே."

பத்மநாபனுக்கு கோபம் அவனேயும் பீறிட்டு எழுந்தது. "அது கிடக்கட்டும். இப்பொழுது நீ என்னேப் பார்க்க வந்தாயா; அல்லது நீ சந்தித்த நர்ஸைப்பற்றி வர்ணிக்கத்தான் வந்தாயா ?"

"இல்லே—அவளே உனக்குத் தெரியுமா என்று கேட்டேன்" கோபாலன் அசட்டு சிரிப்புடன் கேட்டான்.

"நீ கேட்பது விந்தையாய்த்தா னிருக்கின்றது.—இந்த வார்ட் 'டிரெஸ்ஸர்' அவள்தான் !"

"இன்று அவள் என்னவிதமான புடவைக் கட்டிக்கொண்டு வந்தாள்?" என்று கோபாலன் தன் போக்காகவே கேட்டான்.

"எனக்கு ஞாபகமில்லே—நான் அதைக் கவனிக்கவில்லே."

"அவள் ஆஸ்பத்திரி வெள்ளேயுடை தரித்திருந்தாளா அல்லது ஏதாவது கலர் புடவை கட்டிக்கொண்டு வந்தாளா ? அதையாவது நீ கவனித்திருக்கவேண்டும் அல்லவா ?"

"ஆமாம்—ஒரு பாலே வனத்தின் நடுவில் இருக்கும் பொழுது ஒரு டம்ளர் ஜலத்திற்காக மரண தாகத்தால் தவிக்கும் பொழுது அங்கு யாராவது தெய்வச் செயலாய் தோன்றி உனக்கு ஒரு பாத்திரத்தில் ஜலம் கொடுத்தால் அது வெள்ளி டம்ளரா அல்லது ஒரு பூஞ டம்ளரா என்பதைத்தான் நீ முதலில் கவனிப்பாயா! இல்லே—அவர்கள் யார் ? எங்கு வந்தார்கள் என்பதைத்தான் முதலில் விசாரிப்பாயா?" என்று பத்மநாபன் ஆத்திரத்துடன் கேட்டான்.

கோபாலன் பத்மநாபன் கோபத்தை ஒரு பொருட்டாய் கருதவில்லே. ஏதோ ஞாபகமாய்,

"அட போடா! அவளுக்கு அந்த உடை பகட்டாய் இருந்ததா? அதில் அவள் நன்ருய் சோபித்தாளா ? என்று கேட்டால் ஏதோ உளறுகிருயே ! பாலே வனமாம் ! வெள்ளி டம்ளராம். அதெல்லாம் யாருக்கு வேண்டும்" என்ருன்.

"ஓஹோ சரிதான் ! எனக்கு இப்பொழுது தான் புரிந்தது ! இது ஆஸ்பத்திரி வார்டு என்பது முதலில் ஞாபக மிருக்கட்டும். இது கலியாண மண்டபமல்ல !"

பத்மநாபனுக்கு கோபாலனேப் பளீர் என்று அறையலாமா என்று கூட தோன்றியது. பிறகு மெதுவாக தன்னேச் சமாளித்துக்கொண்டு, "எனக்கு செய்யப்பட்ட ரணசிகிச்சையைப்பற்றி தெரிந்து கொள்ளவேண்டும் என்ற ஆவல் உனக்கு உண்டா இல்லேயா ?"

"அதை முதலில் விவரமாய் சொல்லப்பா; கேட்கலாம்" கோபாலன் காகிதத்தையும் பேஞவையும் எடுத்து வைத்துக்கொண்டான்.

அதைச் சொல்லும்பொழுதே கோபாலன் அதே உணர்ச்சி தன்னிலும் ததும்புவதாக காட்டிக்கொண்டான் பத்மநாபன். சிரித்துக் கொண்டே,

"என் ! உனக்கும் வியாதி ஆரம்பமாவதுபோல் காணப்படுகின்றதா ?"

"ஆமப்பா! எரிச்சல் வியாதியின் ஆரம்பமாய் இருக்குமோ?"

"இருக்கலாம்! எனக்கு விலாவில்தான் முதன் முதல் வலி ஆரம்பித்தது."

கோபாலன் தன் விலாவை தொட்டுப் பார்த்துக் கொண்டான். பிறகு,

"எனக்கும்தான் அங்கு வலிக்கின்றது" என்றான்.

"எனக்கு எழுந்து நடமாடுவதே சிரமமாய் விட்டது" என்று பத்மநாபன் தொடர்ந்து கூறினான்.

"என் கதியும் அதில் தான் வந்து முடியுமோ?"

பத்மநாபன் கேலியாய், "அப்படியானால் டாக்டரைப் போய்ப்பார். இன்ஜெக்ஷன் செய்து கொண்டால் வியாதியை முளையிலேயே கிள்ளியெறிந்து விடலாம்!" என்றான். கோபாலன் துள்ளிக் குதித்துக்கொண்டு ஓடினான். பத்மநாபன் மறுபடியும் படுக்கையில் சாய்ந்து கொண்டான்.

* * * *

கோபாலன் ஒரு பத்திரிகை ரிபோர்ட்டர் பத்திரிகைத் தொழிலைக் கைக்கொண்டது முதல் அவன நடவடிக்கையில் மாறுதல் தென்பட்டது. உண்மைக்கு மாறான விஷயங்களையும் தன் கற்பனா சக்தியால் உண்மை போல் திரித்து கூறுவதில் அவன் தன் திறமை முழுவதையும் பயன்படுத்தினான்.

தன் மாயவாழ்வைத் திரையில் தானே கண்டு மகிழ்வதில் மனிதன் உத்ஸாகம் காட்டத் தொடங்கியது சினிமா வாழ்வில் ஏனோ தானோ என்று இருந்தவர்களைக்கூட ஒருபடி முன்னுக்கு கொண்டுவர ஒரு முக்கிய காரணமாய் அமைந்தது.

பத்மநாபன் தனக்குக் கிடைத்த சந்தர்ப்பத்தை நழுவ விடவில்லை. சமூக வாழ்வில் அவன் பெயர் அடிபடாத இடமில்லை. அவனுடைய அறிமுகத்தைப் பெற எல்லோரும் விரும்பினார்கள். சினிமா விளம்பரத்தில் அவன் ஒரு நக்ஷத்திர நடிகனாக காட்சி அளித்தான். பத்மநாபன் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டது முதல் அவன் தேக நிலைமை எல்லோரையும் பாதித்தது. பத்திரிகைகளில் அவனைப்பற்றி விவரங்கள் வெளி வரலாயின.

அதே சமயத்தில் கோபாலனுக்கும் கிராக்கி ஏற்பட்டது. பத்மநாபன் விஷயமாக கோபாலன் எடுத்துக்கொண்ட விசேஷ அக்கரை பத்மநாபனிடம் அவன் கொண்ட விசேஷ அன்பினால் அல்ல என்பதும் அது பத்திரிகைகளுக்கு செய்தி சேகரிக்க அவன் கொண்ட ஆவலினால் தூண்டப்பட்டது என்பதும் கோபாலன் ஒருவனுக்குத்தான் தெரியும் மற்றவர்கள், பத்மநாபன் உட்பட, ஒருவரும் அவனைச் சந்தேகிக்கவில்லை. அன்று கோபாலன் பத்மநாபனைப் -ார்க்க புறப்பட்டான். சில பழங்கள், பத்திரிகை பிரதிகள் இவைகளை எடுத்துக்கொண்டு ஆஸ்பத்திரிக்கு வந்தான். பத்மநாபனும் கோபாலனை எதிர்பார்த்தே இருந்தான்.

* * * *

கோபாலன் அந்த வார்டில் நுழையும் சமயம் எதிரில் வந்து கொண்டிருந்த நர்ஸைக்கண்டு அப்படியே திகைத்து நின்றான். அவளை ஒரு அழகான பெண் என்று கூறினால் மட்டும் போதாது. அழகுத் தெய்வம்

அவன்தான் என்று கூறலாம். கோபாலன் புத்தி தடுமாறி அப்படியே கற்சிலைபோல் நின்றான். அந்தப்பெண் இவனுடைய பேதமையை உன்னித்தான் சிரித்தாளோ என்னமோ அவள் முகம் புன்சிரிப்பைக் காட்டியதென்னமோ உண்மை!

"ஏன் தயங்குகிறீர்கள்? யாரையாவது காணவேண்டுமா?" என்று அவள் எதிர்நின்று மறித்த கோபாலனை நோக்கிக் கேட்டாள்.

கோபாலனுக்கு என்ன பதில் சொல்வது என்று தெரியவில்லை.

"தயக்கமா—ஆம்—இல்லை—பத்மநாபன்—சினிமா நடிகர்—அவரைக் காண முடியுமா?" என்று அவன் தடுமாறிக்கொண்டே கேட்டான்.

"ஆஹா. பேஷாய் பார்க்கலாம். அவர் உள்ளேதான் இருக்கிறார்."

"அவரைப் பார்ப்பதற்கு அனுமதி சீட்டுகொண்டுவர நான் மறந்துவிட்டேன். பாதகமில்லையே!"

"நீங்கள் யார்?" என்று அவள் தன் இனிய குரலில் கேட்டாள்.

"நான் பிரெஸ் ரிபோர்ட்டர் கோபாலன்."

"நீங்கள் வருவீர்கள் என்றுதான் அவர் முன்னமேயே கூறினார். நீங்கள் போகலாம்" என்று கூறிக்கொண்டே அவள் செல்ல முயன்றாள்.

"இந்த வழியாய் போகலாமா?" என்று கோபாலன் இடைமறித்து கேட்டான்.

"அதுதான் வழி......ஆம் ..ஏழாவது படுக்கை. நான் போய் வருகிறேன்" என்ற அவள் பதிலளித்துவிட்டுத் திரும்பினாள்.

ஆனால் கோபாலன் விடவில்லை.

"நான் பத்மநாபனிடம் வழியில் யாரை சந்தித்ததாகக் கூறுவது?" என்று கேட்டான்.

அவள் உடனே சட்டென்று சிரித்துக்கொண்டே "நீங்கள் பத்மநாபனிடம் என்னைப்பற்றி கூறவேண்டும் என்ற அவசியமில்லை. ஆனால் என் பெயர் ஜீவரத்தினம்" என்று கூறிக்கொண்டே ஒரு ரிக்ஷாவைக் கைதட்டி அழைத்தாள். ரிக்ஷாவும் சென்றுவிட்டது.

பிறகுதான் கோபாலன் எவ்வளவோ மனக்கோட்டை எல்லாம் கட்டினான். ஆனால் ஒவ்வொன்றும் தகுந்த அஸ்திவாரமின்றி தகர்ந்து விழுந்தது. எனினும் அநேக நட்சத்திர கூட்டங்களிடையே தோன்றும் ஒரு சந்திரபிம்பத்தை ஒத்து அவ்வாஸ்பத்திரிக்கே ஒரு தனி ஜோதியை உண்டுபண்ணிய நர்ஸ ஜீவரத்தினத்தை அவனால் மறக்க முடியவில்லை.

* * * *

நர்ஸ் ஜீவரத்தினம் மாலையில் திரும்பிவந்தாள். டாக்டரைப் போய் பார்த்ததும் அவர் ஜீவரத்தினத்தைப் பார்த்து ஆஸ்பத்திரியில் புதிதாய் காலையில்தான் அனுமதிக்கப்பட்டிருக்கும் ஒரு நோயாளியைப் போய் கவனிக்கும்படிக் கூறினார்.

ஜீவரத்தினம் கோபாலனைப் போய் கண்டாள்; அவளுக்கே ஆச்சர்யமாயிருந்தது.

"நீங்கள் பத்மநாபனை பார்க்கவந்ததாக அல்லவா கூறினீர்கள்!"

"ஆம்; பத்மநாபனைப் பார்க்கத்தான் வந்தேன்."

"இப்பொழுது நோயாளியின் படுக்கையில் அல்லவா இருக்கிறீர்கள்!" என்று ஜீவரத்தினம் ஆச்சரியத்துடன் கேட்டாள்.

"எனக்கும் ஆச்சர்யமாய்த்தானிருக்கின்றது. என் இழந்த யௌவனத்தில் மீண்டும் உயிர் ஊட்ட முடியும் என்று நான் இன்றுவரை நினைக்கவில்லை." என்று கோபாலன் தன் தைர்யத்தை எல்லாம் வருவித்துக் கொண்டு கூறினன்.

"ஏது—உங்கள் பாஷை அலங்காரமாய் இருக்கின்றது!"

"அது சரி! என் கேஸையும் உங்கள் டயரியில் பதிந்துகொள்ள முடியுமா?"

"அதெற்கென்ன பதிந்துகொள்ளலாம்" என்று ஜீவரத்தினம் தலை அசைத்தாள்.

"அப்படியானல் உங்களால் எனக்கு ஒரு காரியம் ஆகவேண்டியிருக்கின்றது!" என்று கோபாலன் கெஞ்சுதலாக கேட்டான்.

"என்னலா? என்ன அது?"

"ஒரு வாரத்திற்காவது நான் இங்கிருக்க நீங்கள்தான் உதவிபுரிய வேண்டும்!"

ஜீவரத்தினம் முதலில் திடுக்கிட்டாள். பிறகு சாவதானமாக அதைக் காட்டிக்கொள்ளாமல் "ஓஹோ! வியாதியைச் சிருஷ்டிசெய்யவேண்டுமோ?" என்று கேட்டுக் கொண்டே ஜீவரத்தினம் வெளியில் சென்றுள்.

சிறிது நேரத்தில் அவள் ஒரு கிளாஸில் ஏதோ குலுக்கியவண்ணம் திரும்பிவந்தாள்.

"இந்த மருந்தை ஒரே மூச்சில் குடித்துவிடுங்கள். பார்க்கலாம் உங்கள் சமர்த்தை!" என்று வேடிக்கையாய் கூறிக்கொண்டே கிளாஸை அவன் கையில் கொடுத்தாள்.

கோபாலன் அதை மடமட என்று குடித்துவிட்டு "எப்பொழுது நீங்கள் மருந்தைக்கொடுக்க ஆரம்பித்தீர்களோ அப்பொழுது முதற்கொண்டே வியாதியஸ்தன் என்றுதானே அர்த்தம்!" என்று கேட்டான்.

"ஆமாம்" என்று ஜீவரத்தினம் சாதாரணமாகவே கூறினுள்.

"நீ இப்பொழுது போனல் எப்பொழுது திரும்பிவருவாய்?" என்று கோபாலன் கவலையோடு வினவினன்.

"நீங்கள் பேசாமல் படுத்துக்கொள்ளுங்கள்"

"ஆனல் இப்பொழுது சத்தியாக நீ திரும்பிவரமாட்டாயா?"

"இல்லை. நான் சேலம் பெரிய ஆஸ்பத்திரிக்கு மாற்றலாய் போகிறேன். எனக்கு பதிலாய் வேறு ஒருத்தி வருவாள். ஏன்......உங்களுக்கென்ன... ஏன் எழுந்திருக்கிறீர்கள்......நீங்கள் பேசாமல் படுத்திருங்கள்..." ஜீவரத்தினம் அவளுடைய செயல்களின் தாத்பர்யத்தை உணரவில்லை, அல்ல உணரவில்லை என்றுதான் பாசாங்கு செய்தாளோ......!

கோபாலன் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தான். அவன் இந்த அதிர்ச்சியை எதிர்பார்க்கவில்லை. தூக்கு தண்டனை விதிக்கப்பட்டவன்கூட அவ்வளவு கலங்கமாட்டான்.

"என்ன உண்மையாகவா அல்லது கேலியா ?"

ஜீவரத்தினம் அவன் பேச்சை பொருட்படுத்தினதாகத் தெரியவில்லை.

"நீங்கள் பேசாமல் படுத்திருங்கள். நான் மறுபடியும் வருகிறேன்" என்று சொல்லிவிட்டு அவள் போய்விட்டாள்.

ஜீவரத்தினம் அவள் வாக்களித்த பிரகாரமே மறுபடியும் வந்தாள். கோபாலன் அவள் கையைப் பிடித்தான். நடுக்கடலில் விழுந்து திணறும் மக்கள் எப்படி தம் கைக்கு கிட்டும் சிறு துரும்பைக்கூட தாரதம்மியமின்றி வலுவாய் பிடித்துக்கொள்வதில் ஊக்கமும் உற்சாகமும் காட்டுவார்களோ அதைப்போல நோயாளிகளும் ஒரு பிடிப்பைக் கோருவதில் எதிரில் நிற்கும் யாரையாவது தாங்கிப் பிடிப்பதில் விகல்பம் கொள்வதில்லை. எனவே சாதாரண காலங்களில் ஜீவரத்தினம் அதை வித்தியாசமாகக் கருத ஹேது வில்லை.

ஆனால் கோபாலன் "நீ ஒருநாளும் இதைவிட்டு போகக்கூடாது. நான் உன்னை விடப்போவதில்லை. உன்னைப் பார்ப்பதற்காகவேதான் நான் நோயாளி வேஷம் தரித்தேன் என்பது உனக்குத் தெரியாமல் போயிருக்காது. நான் ஒரு 'பிணமி' நோயாளியா யிருக்கையில் நீபோகிறேன் என்றால் நான் அதை ஒப்புக்கொள்வேனா?" என்று தீவிரமாய் கூறினான்.

"நான் போவதும் போகாததும் ஒரு புறத்தில் இருக்கட்டும். நாய் வேஷம் போட்டால் குரைத்துதானே ஆகவேண்டும் அதனால் உக்கிரமாய் பேசவேண்டாம்" என்று எச்சரித்தாள்.

கோபாலன் வயிற்றில் ஏதோ கடபுடா என்று சப்தம் உண்டாயிற்று. அவனால் வயிற்றுவலி பொறுக்க முடியவில்லை.

"நீ என்ன மருந்து கொடுத்திருக்கிறாய்: முதலில் அதைச் சொல்" என்று கேட்டான்.

"ஏன் ?"

"எனக்கு மயக்கம் வருகின்றது; வயிற்றுவலி பொறுக்க முடியவில்லை.; தலை சுழற்றுகின்றது." அதைச் சொல்லும்பொழுதே கோபாலன் ஒரு பக்கமாய் சாய்ந்தான்

"உங்களுடைய கற்பனா சக்தி வெகு தூரம் வேலை செய்யுமோ? பத்திரிகை உற்சாகமோ?" என்று ஜீவரத்தினம் கிண்டலாகக் கேட்டாள்.

"என்ன மருந்து என்பதை முதலில் விவரமாய் கூறு. பிறகு இது என்ன விதமான உற்சாகம் என்று கூறுவதில் ஆக்ஷேபணை இல்லை" என்று கோபாலன் மறுபடியும் கேட்டான்.

"ஒன்றுமில்லை. நன்னாரி ஷர்பத் அல்லவா ஊற்றிக் கொடுத்தேன்" என்று அவள் கூறிக்கொண்டே ஜீவரத்தினம் டம்ளரை முகர்ந்தாள். அந்த எதிர் பாராத வாசனை அவள் முகத்தில் தாக்கவும் அவள் முகம் திடீர் என்று ஏமாற்றத்தையும் கலவரத்தையும் காட்டியது. அங்கிருந்து அவள்

ஒரே ஓட்டமாய் ஓடினுள். பிறகு அவள் கையில் வேறு ஒரு கிளாஸ் டம்ளரில் ஒரு ஸ்பூனைக் கொண்டு கலக்கிய வண்ணம் திரும்பி வந்தாள்.

"இதை உடனே குடித்துவிடுங்கள் நான் மன்னிக்க முடியாத தவறுதல் ஒன்றை இழைத்து விட்டேன்." கோபாலன் தொண்டை வரண்டு இருந்தது. அவனுல் பேசக்கூட முடியவில்லை. மெதுவாக "என்ன தவறு, ஏன் பதைக்கிருய் ?" என்று கேட்டான். அவள் பரபரப்புடன் "அதெல்லாம் சாவகாசமாக பேசிக்கொள்ளலாம். இதை முதலில் குடித்து விடுங்கள்." "நீ இதைவிட்டு கிளம்பப் போவதில்லை என்று வாக்கு கொடு; பிறகு தான் நான் குடிப்பேன்" என்று கோபாலன் பிடிவாதம் காட்டினுன்.

"சரி ஆகட்டும். நான் சத்தியாக இதைவிட்டு போகவில்லை."

"சத்தியாக என்ருல் போதாது. எப்பொழுதுமே போகவில்லை என்று கூறு" என்று கோபாலன் பலவந்தப்படுத்தினுன். "நீங்கள் உண்மையாக அதை விரும்பும் பக்ஷத்தில் முதலில் நான் சொல்வதைக் கேளுங்கள்" என்று ஜீவரத்தினம் அவசரப் படுத்தினுள்.

அவள் டம்ளரை அவன் வாயருகில் கொண்டு போனுள். அவனும் தடை செய்யவில்லை. அதை மடமட என்று குடித்துவிட்டான். பிறகு அவன் தூங்கிவிட்டான்.

* * * *

அவன் கண்களை மறுபடியும் திறந்தபொழுது அவனுக்கு ஒன்றும் புலப்படவில்லை. எதிரில் நிற்கும் நர்ஸைக்கூட அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை. "நான் எங்கிருக்கிறேன். நீ யார்?" என்று அவன் கலவரத்துடன் கேட்டான்.

"நீங்கள் ஆஸ்பத்திரியில் இருக்கிறீர்கள். நான் தான் நர்ஸ் ஜீவரத்தினம்"

"ஒஹோ ஜீவரத்தினமா எனக்கு என்ன உடம்பு?"

'தங்களுக்கு சுதாவாக ஒன்றுமில்லை, நான்தான் விஷம் கலக்கப்பட்டிருந்த கிளாஸில் ஷர்பத் ஊற்றிக் கொடுத்து விட்டேன்."

கோபாலன் ஒவ்வொன்ருய் தன் நினைவுக்குக் கொண்டு வந்தான்.

"அது எப்பொழுது நடந்தது?" என்று கேட்டான்.

"ஒரு வாரத்திற்கு முன்னுல்"

"அப்படியானுல் நீ இவ்வூரை விட்டுப் போகவில்லை!" என்று கோபாலன் கேட்டான்.

"இல்லை, உங்களுக்கு என்னுல் வந்த கஷ்டத்தைப் பரிகரிக்க முடிவு கொடுத்து உங்களைக் கவனிக்க இங்கேயே இருந்துவிட்டேன்" என்று ஜீவரத்தினம் பதிலளித்தாள்.

"இதுவரையில் இங்கேயே இருந்தாயா?" என்று கோபாலன் மறுபடியும் கேட்டான்.

"ஆமாம், நீங்கள் மறுபடியும் எழுந்து பேசவேண்டுமே என்று தெய்வத்தைப் பிரார்த்தித்துக்கொண்டு இங்கேயே காத்துக்கொண்டிருந்தேன்" என்று ஜீவரத்தினம் உணர்ச்சியுடன் கூறினாள்.

"அப்படியானால் உன் முறை ஆய்விட்டது. என் முறைக்கு நான் காத்திருக்கவேண்டும்."

"எதற்காக?" என்று ஜீவரத்தினம் ஒன்றும் தெரியாதவள் போல் கேட்டாள்.

"உனக்காகத்தான்!"

ஜீவரத்தினம் தலைகுனிந்து கொண்டாள். வெட்கத்தால் அவள் முகம் சிவந்து காணப்பட்டது.

கோபாலன் தைர்யமாக அவள் கையைப் பிடித்தான். ஆனால் அவன் முன்னால் அந்த கையைப் பிடித்ததற்கும் இப்பொழுது பிடித்ததற்கும் வித்தியாசம் இல்லாமல் இல்லை. இருவர் கைகளும் உணர்ச்சியால் நடுங்கின.

---

# நதிகளின் சுய சரிதை

(கூடல்-நாவுக்கரசன்)

துறம்.

நிலமகளின் ஆரமென்ன
நிலவிடுவோமே—பலப்
பலகோடி மழைத்துளியால்
பிறந்திடுவோமே. 1.

மலைகளிலே பிறந்து, மக்கள்
மகிழவருவோம்—பல
கலைகளிலும் வல்லவரின்
கவி பெறுவோமே. 2.

வெள்ளித் தூண்கள் வீழ்வதுபோல்
வீழ்ந்திடுவோமே—படு
பள்ளத்தாக்கில் பாய்ந்துவோடி
பிரிந்திடுவோமே. 3.

கரைவளரும் தருவையெல்லாம்
காத்திடுவோமே—வெள்ளம்
விரைந்து,வர வீடுகளை
வீழ்த்திடுவோமே. 4.

எப்பொழுதும் ஓயாது
ஓடிடுவோமே—சிறு
கப்பல்களும் மிதந்து செல்லும்
கவின் பெறுவோமே. 5.

சக்கரங்கள் சுழலச் செய்யும்
சக்தியுள்ளோமே—பாய்
பக்கமுறும் படகுபல
பெற்றிடுவோமே. 6.

அணைகளையும் பாலத்தையும்
அடைந்திடுவோமே—தகும்
துணையில்லாக் காதலருக்கு
துயருறுத்துவமே. 7.

உழவர்களை ஓங்கவைக்க
ஓடிடுவோமே—பின்
கழனிகளும் கரம்பாக
காய்ந்திடுவோமே. 8.

உலகம் உண்ண ஊற்றுகளால்
ஊட்டிடுவோமே—நீர்
பலரும் ஆடி பாவம்தீர்க்கும்
பணி பெறுவோமே. 9.

கூறுபடும் மதங்கள் எல்லாம்
கூறுமொருவனை—யாமும்
வேறுபட்டு மொரேகடலில்
வீழ்ந்திடுவோமே. 10.




ஒரு திருடன் விலையுயர்ந்த புடவையொன்றைத் திருடி, தனது மகனிடம் விற்றுக்கொண்டு வரும்படி கொடுத்தான்.

மகன் விற்கக் கொண்டுபோன வழியில் இன்னொரு திருடன் அதைப் பறித்துக் கொண்டான்.

திருடன்:—(ஏங்கி வரும் மகனை நோக்கி), "புடவையை என்ன விலைக்கு விற்றாய் ?"

மகன்:—"வாங்கின விலைக்குத்தான் விற்றேன்."

***



பாதிரியார்:—(தம் மதத்துக்கு ஆள்சேர்க்கும் நோக்கோடு வழியே போகும் ஒருவனைப் பார்த்து) "இறந்தபின், ஸ்வர்க்கத்துக்குப் போக விரும்புகிறாயா ?"

வழிப்போக்கன்:-"இல்லை."

பாதிரி:—"ஏன் ?"

வழிப்போக்கன்:— "உம் போன்ற மதக் குருக்கள் ஆதிக்கத்தில் அந்த ஸ்வர்க்கம் இருப்பதாயின், நரகமே மேலென எனக்குத் தோன்றுகிறது."

***

ஒரு திருடன் ஒரு வீட்டிற்குப் பகலில் நுழைந்து அவ்வீட்டினுள்ளே இருந்த சேலையை இழுத்தான்.

வீட்டுக்காரி:—ஏண்டா சேலையை இழுக்கிறாய் ?

திருடன்:—நான் சேலையை இழுக்கவில்லை; ஆனால் சேலை சில்கு துணியா என்று பார்த்தேன்.

***

ஸ்கூல் இன்ஸ்பெக்டர் :—குதிரைக்கும், மாட்டிற்கு மிருக்கும் முக்கிய அவயவங்களில் எந்த அவயவமில்லை ?

4-ம் வகுப்பு மாணக்கன் (வெகு அவசரமாக):-தும்பிக்கை யில்லை சார்.

கோபாலன்:—ஏண்டா, உன் உடம்பெல்லாம் சோற்றை ஒட்டிக் கொண்டு இருக்கிறாய்.

இராமன்:-நேற்று என் மாமன் "ஏண்டா நீ சாப்பிடுரது உன உடம்பில் ஒட்டவே யில்லையே," என்றார். அதற்காகத்தான் ஒட்டிக் கொண்டேன்.

***

கோபாலன்:—கிருஷ்ணா! அந்தப் பழத்தை வாங்கிச் சாப்பிடலாமா?

கிருஷ்ணன்:—ஓ! சாப்பிடலாம்! பழத்தின் வாசனைக்கே நாகப்பாம்பு கூட வருண்டா; கோபாலா.

கோபாலன்:—ஹூம். ஹூம். அப்படியானால் நான் சாப்பிடவில்லை. சாப்பிட்டால் கூட பாம்பு வந்து விடும்.

***



கணவன்:—"இதென்ன வேடிக்கை! மாடியில் மின்சார விசிறி நாள் முழுதும் சுற்றிக்கொண்டிருக்கிறதே!"

மனைவி:— "உங்களுக்கு ஏன் கவலை, நாதா! அவ்விசிறி நம்முடையதல்ல. நான் அதைப் பக்கத்து வீட்டிலிருந்து வாங்கி வந்தேன்."

***

வக்கீல்:— (ஆசாரியை நோக்கி) ஏன் ஓய் ஆசாரி! சுரைபோட்டாச்சோ என்றார்.

ஆசாரி:—சுரைபோட்டு, இப்போது காய்க்கத் தொடங்கிட்டதே. வேணுமானால், சாயங்காலம் உங்களுக்கு ஒன்று பையன்மூலம் அனுப்பிவைக்கிறேன்.

வக்கீல்;—இல்லை ஓய்! என் மகளுடைய கம்மலுக்குச் சுரை போட்டாச்சா? என்றல்லவோ கேட்கிறேன்.

ஆசாரி:—அப்படியா! இன்னும் போட வில்லை. நாளை காலையில் போட்டுகொண்டுவந்து தருகிறேன்.

***

தாசில்தார்:—(புதிதாக வந்த சமையல்காரனைப் பார்த்து) உன் சமையல் ரொம்ப முதல்தரம். உனக்கு என்ன (சம்பளம்) வேண்டும்?

சமையல்காரன்:-யஜமான்! எனக்கு சாப்பிட்டதும் தூங்கணும், தூங்கினதும் சாப்பிடணும்.




**கனிகளிலிருந்து வெண்ணெய்:—**

ஆப்பிரிக்காவில் கெப்ரா என்னும் நகரில் ஷீ என்னும் மரத்தினுடைய கனிகளிலிருந்து வெண்ணெய் எடுக்கப் படுகிறதாம் பசும் வெண்ணெயைவிட இக்கனி வெண்ணெய் வாசனையா யிருக்கிறதாம்.

* * *

**நூறாண்டு மனிதர்கள் வாழும் தேசங்கள்:—**

மனிதர்கள் வயது நூறு வருஷம் என்று பொதுவாகக் கூறப்பட்டாலும், இக்காலத்தில் 100-வயதுவரை வாழ்பவர்கள் மிக அபூர்வமாகவே இருக்கிறார்கள். அவ்விதம் நூறுவயதுக்குமேல் வாழ்பவர்கள் தொகை தேசவாரியாகக் கணக்கெடுக்கப்பட்டதில் உலகிலேயே பல்கேரியா தேசம் முதன்மை ஸ்தானம் வகிக்கிறதாம். அங்கு 100-வயதுக்குமேல் வாழ்பவர்கள் 10-லக்ஷம் பேருக்கு 426-பேர் இருக்கிறார்களாம். இக்கணக்குப்படியே கொலம்பியாவில் 311-பேர், (3) பிரஜில் 140. (4) ஸ்வீடன் 65; (5) பெல்ஜியம் 25. (6) ஜெர்மனி 2. (7) ஸ்விட்ஜர்லந்து 1. ஆனால் நம் இந்தியாவிலோ ஆயிரத்துக்கு ஒருவர் இருப்பதே ஆபூர்வமா யிருக்கிறது.

* * * *

**உருளைக்கிழங்கு தோலிலிருந்து 'கார்க்',—**

ஜெர்மன் தலைநகர் பெர்லினில் வசிக்கும் டாக்டர் ஹான்ஸ் மேயர் உருளைக்கிழங்கு தோலைக்கூட வீணாக்காமல் அதை மிஷனில் கொடுத்து ரசாயன ஆராய்ச்சி வாயிலாக 'கார்க்' (சடை) மாதிரி ஒரு புதுப் பொருளைத் தயார் செய்து வருகிறாராம்.

* * * *

**மன அலைகளைப் படிக்கும் சிறுமி:—**

லட்வியா என்னும் தேசத்தில் இல்கா கிர்ப்ஸ் என்னும் 12-வயதுள்ள சிறுமி அதியற்புத சக்திவாய்ந்தவளா யிருக்கிறாள். அவளுக்கு 12-வயதானாலும் அவளது மனம் 5-வயது குழந்தையின் மனம்போலவே இருக்கிறதாம். இல்காவுக்குத் தானாக ஒரு வார்த்தைகூட படிக்க வராதாம். ஆனால் பிறர் படிக்கும் புத்தகம் எதுவாயினும், எப் பாஷையில் எழுதப்பட்டதாயினும் அதை அப்படியே ஒப்புவிக்கிறாளாம். பிறரது மன அலைகளைப் படிக்கும் அற்புத சக்தி இவளிடம் இருப்பதை முதன் முதலாக அவளது உபாத்தியாயர் அறிந்த பிறகே டாக்டரொருவருக்குச் சொல்லியனுப்பினாராம். டாக்டர் பலவித பரீட்சைகள் செய்து பார்த்தார். அச்சிறுமியினுடைய தாயையும் விஞ்ஞான சாஸ்திரிகள் பரீட்சித்தனர். தாய்க்கும் இவ்வித சக்தி இருப்பதை யறிந்து பிரமித்தனராம்.




சமீயத்தில் ஒருநாள் இத்தாலி தேசத்திலுள்ள பாகியா என்னுமிடத்தில், தினசரிப் பத்திரிகை ஒன்றுகூட கிடைக்கவில்லையாம். அதற்குக் காரண மென்னவென ஆராய்ந்தபோது, ஒரு வியாபாரி மோசடி குற்றஞ் செய்ததாக அவ்வூர் கோர்ட்டார் தீர்ப்பளித்து விட்டதாகவும், அவ்விஷயத்தை ஊரார் அறியக் கூடாது என்று கருதி மேற்படி வியாபாரி அன்று வெளியான எல்லா தினசரி பத்திரிகைகளையும் விலக்கு வாங்கி விட்டதாகவுந் தெரிந்தது.

* * * *

ஒரு மனிதர் உலக முழுவதும் கால் நடையாகவே சுற்றுப் பிரயாணஞ் செய்யக் கருதி 1927-ம் வருஷத்தில் புறப்பட்டார். இப்போது அவர் 80,000 மைல் தூரம் சுற்றியிருக்கிறாராம்.

* * * *

சென்ற வருஷத்தில் பிரிட்டிஷ் அரசருக்கு முடிசூட்டு விழா நடைபெற்றதல்லவா! அதற்குச் சுமார் 150,615-19-2-பவுன் செலவாகியதாம்.

* * * *

சமீபத்தில் பிளாக்பூல் என்னு மிடத்தில் பெரிய புயற் காற்று அடித்ததாம். அத்துடன் பெய்த மழையில் மீன்களும் வந்து விழுந்தனவாம்.

* * * *

இங்கிலாந்தின் மேல் பாகத்திலே ஒரு பண்ணையில் பசுவொன்று ஒரு கன்றை ஈன்றதாம். அக்கன்றுக்கு நெற்றியின் முன் புறத்திலே இருதயம் இருந்ததாம்.

* * * *

கல்கத்தா சர்வ கலா சாலையின் அடையாளம் இனி ஒரு விரிந்த தாமரை மலர்மேல் சூரியன் வெளிப்படுவதுபோல சித்திரிக்கப்படு மெனத் தெரிகிறது.

* * * *

இந்தியாவில் புகையிலை நுழைந்தது ஹுமாயூன் காலத்தில்தான் என்றும், அது ஆரம்பத்தில் பெரிய அதிசயப் பொருளாகப் பாவியதென்றும் கூறப்படுகிறது.

* * * *

வாழைப் பழத்தைப்பற்றி ஐரோப்பியர்களுக்கு 1623-ம் வருஷத்தில்தான் தெரியுமாம். ஆரஞ்சுப் பழத்தைக்கூட 1200-ம் வருஷத்திலேயே ஐரோப்பியர் பயிர் செய்யத் தொடங்கினராம்.

* * * *

டாகுவெரி என்னும் விஞ்ஞான சாஸ்திரி 19-ம் நூற்றாண்டின் துவக்கத்தில் போட்டோ எடுக்கும் விதத்தைக் கண்டு பிடித்தாராம்.

# ஆசிரியர் குறிப்புக்கள்

## சர்வதேச விவகாரங்களின் நிலை

உலகில் எங்கும் அமைதியின்மையும், பலாத்கார உணர்ச்சியுமே அதிகமாக இருக்கிறது. ஐரோப்பாவின் நிலைமையையும், கீழைப் பிரதேசத்தில் சீன ஜப்பான் தகராறுகளையும் கவனிக்கும்போது சர்வதேசங்களின் விவகாரம் திருப்திகரமானதாகவோ, நாகரிகத்திற்கு வற்றதாகவோ இல்லையென்று நிச்சயமாகக் கூறிவிடலாம். சர்வதேசங்களுக்கு மிடையே ஏற்பட்டுள்ள உடன்படிக்கைகளையோ, ஒப்பந்தங்களையோ மதிப்பார் எவரும் இல்லை. ஐரோப்பாவில் ஹிட்லரும் முசோலினியும், கீழைப் பிரதேசத்தில் ஜப்பானும் செய்து வரும் அதிக்கிரமத்துக்கு எல்லையே இல்லாமற் போய்விட்டது. பிரிட்டிஷ் சர்க்கார் நடுநிலைமை வகித்து எவ்வளவு தான் யுத்தத்தைத் தவிர்க்க முயன்றபோதிலும் யுத்தம் விரைவில் ஏற்படும் வழியிலேயே உலகம் சென்று கொண்டிருக்கிறது. மற்றொரு யுத்தம் ஏற்படுமாயின் நாகரிகம் அழிந்துபோவது நிச்சயம். ஆகவே இப்போது செய்ய வேண்டியது என்ன என்பதில் அனைவரும் கவனத்தைச் செலுத்த வேண்டியது அவசியம். இது சம்பந்தமாக நமது இந்திய சமஸ்தானாதிபதிகளில் சிந்தியா மகாராஜா அவர்கள் சமீபத்தில் நாசிக்கில் பான்ஸ்லே ராணுவ பாடசாலையை ஆரம்பித்து வைத்தபோது கூறிய விஷயங்களைக் கவனிக்க வேண்டியது அவசியம். 'சர்வதேச விவகாரங்களின் தற்போதைய நிலைமை, ராணுவத்தின் முக்கிய வேலை போர்த் தொழில் புரிவதைவிட அமைதியைக் காப்பாற்றுவது தான் என்பதைச் சந்தேகமற நிரூபித்துவிட்டது. கஷ்டப்படும் உலகமும் அதன் சமாதான வாதிகளும் எதிர்பார்க்கும் சமாதானமும் அமைதியும் வெறும் கானல் நீராகி விட்டது. இன்னமும் வல்லரசுளிடையே பலமே உரிமையாகவும், யுத்தமே கடைசி ராஜ தந்திரமாகவும் இருந்து வருகிறது, என்று அவர் மிக்க வருத்தத்துடன் கூறியுள்ளார். வல்லரசுகள் யுத்தத்தையும் பலாத்காரத்தையும் விட்டு உலகில் அமைதியையும் சமாதானத்தையும் நிலைநிறுத்துவதிலேயே கண்ணுங் கருத்துமாக இருக்க வேண்டும்.

மேலும் அவர் கூறுகையில், 'தன் பக்கத்திலுள்ள நாடுகளைப் பாதிக்காதபடி ஒவ்வொரு தேசமும் தன் பலத்தைப் பாதுகாக்கத் திறம் படைப்பதுடன்பலஹீனமாகஇருக்கும் தன்சகோதர ராஜாங்கங்களுக்கும் பாதுகாப்பு அளித்து அமைதியை ஏற்படுத்தக் கூடியதாக இருக்க வேண்டும். இந்தியாவும் தன் புராதன பெருமைக் கேற்ப திறமையான இந்திய ராணுவமொன்றை அமைத்துக் கொள்ள வேண்டும்' என்றும் தெரிவித்தார். அஹிம்சா தர்மத்தைப் போதிக்கும் இந்தியாவுக்கு ராணுவம் ஏன் என்று சில குதர்க்கவாதிகள் கேட்கலாம். ஆனல் சிந்தியா மகாராஜா கூறியது போல அமைதியை நிலைநிறுத்துவதற்காக ராணுவம் இருக்க வேண்டுமேயொழிய போர்த்தொழிலைப் புரிவதற்காக அல்ல. உலகில் அமைதியை நிலைநிறுத்த இப்போது என்ன செய்ய வேண்டுமென்பதைக் குறித்து லண்டன் மாகன்ஸ் சபையிலும் சர். ஆர்ச்பால்ட் சிங்ளேர் கூறியிருப்பது கவனிக்கத் தக்கதே. அவர், 'சமாதானத்தில் நாட்டமுள்ள தேசங்கள் பரஸ்பரம்

உதவி புரிவதாக ஒப்பந்தங்கள் செய்து கொள்ள வேண்டும். மேலும் ஜர்மனியும் இத்தாலியும் ஆயுதப் பரிகரணம் செய்யவும் எல்லாத் தகராறுகளையும் மத்தியஸ்தத்துக்கு விடவும் ஒப்புக் கொள்ளுமாயின் காலனி பற்றிய கோரிக்கை போன்ற விஷயங்களை ஆலோசிக்கும் பொருட்டு ஒரு சர்வதேச கமிஷன் ஏற்படுத்தும் யோசனைக்கு தாங்கள் இணங்கத் தயாராக இருப்பதாகப் பிரிட்டிஷ் சர்க்கார் அறிவிக்க வேண்டும்' என்று தெரிவித்தது சரியான யோசனையே யாகும். எப்படியாவது சர்வதேச விவகாரங்கள் ஒழுங்காகச் சமாதான முறையில் முடிந்து இனி எக் காலத்திலும் யுத்தமோ, பலாத்காரமோ தலை காட்டாத நிலைமை ஏற்பட வேண்டு மென்று பிரார்த்திக்கின்றோம்.

---

## பாமர மக்கள் கல்விக்கு மார்க்கம்

நமது இந்தியா பரிபூரணமான சுதந்தரத்தை யடையும் நிலைமைக்கு வந்துகொண்டிருப்பதால் தற்சமயம் பாமர மக்களுக்குக் கல்வி யறிவு அவசியமாகும். கல்வி யறிவு என்றால் கலாசாலைப் பட்டதாரிகளாக இருக்க வேண்டு மென்பது அவசியமில்லை. உலக விவகாரங்களை அறிந்துகொள்ளவும், தங்கள் நிலைமையை மேன்மைப்படுத்திக் கொள்ளவும் போதிய அறிவு பெற்றால் அதுவே போதுமானது. இதற்குச் சுலபமான வழி நாடெங்கும் புத்தகசாலைகளை ஏற்படுத்திப் பாமர மக்கள் நல்ல புஸ்தகங்களையும், கதைகளையும், சரித்திரங்களையும் ஓய்வு நேரங்களில் படிக்கும்படி செய்வதே யாகுமென்று மிஸஸ் கசின்ஸ் அம்மையார் சென்னை கவர்னர் விருந்து மண்டபத்தில் சமீபத்தில் கூறியதை அனைவரும் கவனிக்க வேண்டியது அவசியம். அவர் பேசுகையில் பல ஆயிரக் கணக்கான வருஷங்களுக்கு முன்னரே வாசிப்பதும் எழுதுவதும் இந்தியாவில் பிரபலமாக இருந்து வந்திருக்கிறது என்று கூறி யிருப்பது கவனிக்கத்தக்கது. இதிலிருந்து நமது மூதாதையர் கல்வி யறிவற்றவர்களாக இருக்கவில்லை யென்பது நன்கு புலப்படுகிறது. இந்தியாவில் அக் காலத்தில் புராணங்கள், கதைகள் ஆகியவற்றின் மூலமே ஞானத்தைப் பரப்பினார்கள். இப்பால் நிலைமை மோசமாகி விட்டது. இப்போதும் மிஸஸ்—கசின்ஸ் கூறுகிறபடி பணக்காரர்கள் படிப்பில் கவனத்தைச் செலுத்தா விட்டாலும் ஏழைகள் அபரிமிதமாகப் படித்து வருகின்றனர் என்பதில் ஐயமில்லை. அவர்களுக்குப் படிப்பில் உற்சாகமும், சிரத்தையும் ஏற்பட்டிருக்கும் இச் சமயத்திலேயே பல இடங்களிலும் புஸ்தகசாலைகளை இலவசமாக ஏற்படுத்திப் பாமர மக்கள் அறிவு அபிவிருத்திக்கு வழி தேட வேண்டியது அவசியம். இதைச் சர்க்காரே செய்தல் நலம். ஆனால் எல்லாவற்றையும் சர்க்காரின்மீது சுமத்தி விடுவதைவிட நாட்டில் பணக்காரர்களாக உள்ளவர்கள் தங்கள் இடங்களில் இத்தகைய புஸ்தக சாலைகளை ஏற்படுத்தி பொது ஜனங்கள் கல்வி அறிவைப் பெறும்படி செய்தல் வேண்டும். பொது ஜனங்கள் கல்வி நிரம்பப் பெற்று நல்ல வாழ்க்கையை நடத்த ஆரம்பித்தால்தான் ஜன சமூகம் சிறந்த நிலைமையையும் அந்தஸ்தையும் அடைய முடியும். அப்போது தான் சுதந்தரத்தை நிலை நிறுத்திக் கொள்ளவும் சாத்தியப்படும்.

---

## ஜர்மனியின் அதிக்கிரமம்

ஜர்மன் தேசத்தின் சர்வாதிகாரியான ஹிட்லர் செய்து வரும் அக்கிரமங்களால் ஐரோப்பாவின் அமைதி கெட்டு எங்கு மீண்டும் ஒரு யுத்தம் ஏற்பட்டு விடுமோ என்று அஞ்ச வேண்டியதாகத்தான் இருக்கிறது. ஹிட்லர் திடீரென ஆஸ்திரியாவின் மீது பாய்ந்து அதைப் பயமுறுத்தலால் தம் வசமாக்கிக் கொண்டார். உடனே தேசப் பொது வாழ்வின் எல்லா அம்சங்களையும் தனது ஆதிக்கத்திற் குட்படுத்திக் கொள்வதற்கான ஏற்பாடுகளையும் செய்து வருகிறார். ஆஸ்திரியாவில் நாஜி ஆதிக்கமே அதிகமா யிருப்பதால் தேச பக்தர்கள் பலவிதங்களிலும் கஷ்டப்பட வேண்டியதாக இருக்கிறது. யூதர்களின் மீது எதிர்பாராத முறையில் அடக்கு முறைகள் பிரயோகிக்கப் படுவதால் அவர்கள் மனமொடிந்து எதுவும் செய்ய வழியின்றி ஏராளமானவர்கள் தற்கொலை செய்து கொண்டு வருகிறார்கள். ஆஸ்திரியாவின் நிலைமை இவ்வாறிருக்க ஹிட்லர் ஜெக்கோஸ்லோவேக்கியாவையும் கைப்பற்ற முயற்சி செய்வாரோ என்னும் பயம் பலருக்கும் இருக்கிறது. அவர் அந்த ஜெக்கோஸ்லோ வேக்கியாவின் சுதந்தரத்தில் கை வைப்பதில்லையென பிரிட்டனுக்கு வாக்களித்திருப்பதாக அறிவிக்கப் படுகிறது. இது எவ்வளவு தூரம் நிச்சயம் என்பதும் சொல்லமுடியாது. ஹிட்லரின் வாக்குறுதிகளை மதிப்பதற்குஇல்லை. ஹிட்லரும் இத்தாலியின் சர்வாதிகாரியான முசோலினியும் மிக்க சினேகிதர்கள் போல் காணப்பட்டாலும் பரஸ்பரம் இருவரும் சந்தேக முடையவர்களாகவே இருக்கின்றனர். ஹிட்லர் ஆஸ்திரியாவைக் கைப்பற்றியது முதல் அதன் எல்லை சம்பந்தமாக அவ் விரு தேசங்களுக்குமே தகராறு ஏற்படும்போ லிருக்கிறது. ஹிட்லர் தாம் முசோலினியிடம் விசுவாசத்துடனேயே இருப்பதாகவும், எத்தகைய துரோகமும் செய்யப் போவதில்லை யென்றும் கூறுகிறார். ஆயினும் மண், பெண், பொன் ஆகிய இம் மூன்று ஆசையும் பிடித்தவர்கள் பித்தர்களுக்கே சமானமாவார். அவர்கள் பேச்சு, செயல் ஆகியவைகளைப் பற்றி எதுவும் நம்ப முடியாது. இந்த நிலைமையில் ஐரோப்பாவின் நிலைமை யாதாகுமென்று நிச்சயித்துக் கூற முடியாது. ஆனால் ஹிட்லர் மீது தோஷம் கூறுவதற்கில்லை. இவ்வளவுக்கும் காரணம் பிரிட்டனும் பிரான்சும் தங்கள் கடமையைச் சரிவரச் செய்யாமல் சர்வாதிகாரிகளுக்கு இடம் கொடுத்துக் கொண்டே வந்தது தான் என்பது எமது அபிப்பிராயம்

---

## இந்திய வியாபாரமும் சர்க்காரும்

இந்தியா சட்டசபையில் இம்மாதம் முதல் தேதி யன்று ஸ்ரீ. சத்யமூர்த்தி அவர்கள் கொண்டுவந்த புதிய இந்தியா—பிரிட்டிஷ் வர்த்தக ஒப்பந்தத்தையும் அல்லது அதுபோன்ற வேறு எந்த வர்த்தக ஒப்பந்தத்தையும் சட்டசபையை முதலில் ஆலோசிக்காமல் செய்யக்கூடாது என்று இச்சபை சபையுடன் கூடிய கவர்னர் ஜனராலுக்குச் சிபார்சு செய்கிறது' என்னும் தீர்மானம் நிறைவேறியது. இது மிகவும் முக்கியமானதாகும். இத் தீர்மானத்தின் மீது ஸ்ரீ. சத்தியமூர்த்தி தமது தேக அசௌகரியம் காரணமாக அதிகமாகப் பேசாமல் இருந்தும் அதன் முக்கியத் தன்மையை உத்தேசித்தே அதனை அனைவரும் ஆதரித்தார்கள். அதே சமயத்-

தில் டெல்லியில் கூடிய வியாபார சங்க சம்மேளனத்தின் தலைவர் ஸ்ரீ. ரஹீமதுல்லா சினுய் அவர்களும் இந்த இந்தோ—பிரிட்டிஷ் வியாபார ஒப்பந்தம் சம்பந்தமாக அது விரைவில் முடிவடையாமல் இழுத்துக்கொண்டே போவதுபற்றி அது இந்தியாவுக்குச் சாதகமானதாக இருக்குமா என்னும் விஷயத்தில் அச்சங்கொண்டு பேசியிருக்கிறார். இதிலுள்ள முக்கியத் தன்மையை நாம் கவனிக்கவேண்டும். ஒட்டாவா ஒப்பந்தம் பிரிட்டனுக்கு மிக்க அனுகூலமாக இருந்தது. அதை முடிவுக்குக் கொண்டுவந்து விட வேண்டுமென்று இந்தியா சட்டசபை தீர்மானித்து விட்டது. அத்தீர்மானத்தை இந்தியா கவர்ன்மெண்டார் இன்னும் அனுஷ்டானத்திற்குக் கொண்டு வரவில்லை. புதிய உடன்படிக்கை பிரிட்டனுக்கு அனுகூலமாக இருக்குமோ இல்லையோ என்பது தெரியவில்லை. ஆதலின் இந்த இரண்டுங் கெட்ட நிலைமையிலேயே இன்னும் சொற்பகாலம் கழிக்க பிரிட்டன் விரும்புகிறது. அதற்குச் சாதகமாக இந்தியா சர்க்கார் நடந்து கொள்கிறதோ என்று இப்போது வர்த்தக சம்மேளனத்தார் சந்தேகப்படுவதில் ஆச்சர்யமொன்றுமில்லை.

இந்தியா கவர்ன்மெண்டார் உண்மையிலேயே இந்தியாவின் நலத்தைப் பிரதானமாகக் கவனிப்பதாக இருந்தால் இவ்வித நிலைமைக்கு இடங்கொடுத்து வருவார்களா? மேலும் இந்தியா சட்டசபையில் ஸ்ரீ. சத்தியமூர்த்தி கொண்டுவந்த நியாயமான தீர்மானத்தைத்தான் எதிர்ப்பார்களா? எப்படியும் தீர்மானம் நிறைவேறிவிட்டது. ஒரு தேசம் அன்னிய தேசங்களுடன் நடத்தும் வியாபாரத்தினுல்தான் பொருளாதாரத்துறையில் முன்னேற்றம் அடைய வேண்டியதாக இருக்கிறது. அந்த வியாபார விஷயத்தில் அத்தேச சர்க்கார் சரியான முறையில் சிரத்தை செலுத்தவில்லையென்றால் அது கண்டிக்கத் தக்கதல்லவா? இந்தியா சர்க்கார் இப்போதிருப்பதைப் போன்று அன்னிய ஆதிக்கத்தில் இல்லாமல் ஜனநாயகம் வாய்ந்ததாக இருக்குமாயின் நமது பொருளாதார நிலைமையே வேறு விதமாக இருக்கும். இந்தியா சர்க்கார் சட்டசபைத் தீர்மானத்தைப் பின்பற்ற வேண்டியது அவர்களுடைய கடமையாகும். ஆயினும் அவர்களுடைய தற்கால மனோபாவத்தில் அவர்கள் அப்படி செய்வார்களா என்பது சந்தேகமாகவே இருக்கிறது. எனினும் அவர்களின் கடமை இன்னதென்று எடுத்துக் காட்டுவது நமது பொறுப்பு.

---

## தேசீயத்துக்கு முரணானவை

இந்தியர் சுதந்தரம் அடைய வேண்டுமானுல், இந்தியாவின் சுதந்தர ஆவல் கனவாக முடியாமல் நினைவாக மாற வேண்டுமாயின் முக்கியமாக வேண்டியது தேசீய ஒற்றுமை தான். இந்த ஒற்றுமைக்கு முட்டுக் கட்டையாகவும், பரம விரோதமாகவும் இருப்பது வகுப்புவாதமும், குறுகிய மாகாண உணர்ச்சியுமே. இப்பால் இந்த இரு கெட்ட குணங்களும் எதிர்காலப் பிரஜைகளாக விளங்க வேண்டிய மாணவர்களிடையிலும், தேச விடுதலைக்காகவே பாடுபடுவதாகக் கூறிக் கொள்ளும் காங்கிரஸ் வாதிகளிடையிலும் பரவி வருவது வருந்தத்தக்கது. தற்சமயம் தேசத்தின் வாழ்க்கை கிராமங்களிலேயே இருக்கிறது. ஆதலின் அனைவரும் வகுப்பு

வாதம், மாகாண உணர்ச்சி, சுயநலம், தீவிரவாதப் பேச்சு ஆகியவற்றை விட்டுக் கிராமங்களுக்குச் சென்று கட்டுப்பாடாக வேலே செய்து பொது ஜன அபிப்பிராயத்தை வலுவுள்ளதாக்க வேண்டும். கல்கத்தாவில் சமீபத்தில் மாணவர் கூட்ட மொன்றில் இது சம்பந்தமாக மத்ய மாகாண பிரதம மந்திரி கனம் என். பி. கரே செய்த உபதேசம் கவனிக்கத்தக்கது. அவர், 'வகுப்புவாதம் பற்றியும் நீங்கள் உஷாராக இருக்க வேண்டும். அவை உங்களுடைய பரம விரோதிகள். ஆதலின் அவற்றை எதிர்த்துப் போராடுங்கள். தேசீய ஒற்றுமைக்காக உழையுங்கள். இது இல்லாமல் இந்திய சுதந்தர மென்பது வெறும் கனவாகவே போய் விடும்' என்று கூறியதை வங்காளத்திலுள்ளவர்கள் மட்டுமேயன்றி இந்தியா பூராவிலுமுள்ள மாணவர்களும் சுதந்தர ஆர்வ முடையவர்களும் கவனிகக வேண்டியது அவசியமாகும். நம் தமிழர்கள் தேசீயத்திற்குப் பரம விரோதமான இவ் விரு தோஷங்களுக்கும் ஆளாகாமல் தேசீய மனப் பான்மையுடன் நடந்து கொள்வார்க ளென்று நம்புகிறோம்.

---

## சேம்பர்லேன் கூறுவது சரியா?

பிரிட்டிஷ் சர்க்காரின் அன்னிய நாட்டுக் கொள்கை தவறானதாக இருக்கிற தென்று நாம் அடிக்கடி கூறி வருகிறோம். இவர்கள் சர்வாதிகாரிகளைத் திருப்தி செய்து விடுவதாலேயே யுத்தத்தைத் தடுத்து விடலா மென்று நினைக்கிறார்கள். பிரிட்டனின் இந்தக் கொள்கையால் ஐரோப்பாவின் நிலைமையே அபாயத்திற்குள்ளாகி இருக்கிறது. தொழிற் கட்சியினரும், மற்றும் பலரும் பிரதம மந்திரி சேம்பர்லேனின் கொள்கையைக் கண்டித்து வருகிறார்கள். சமீபத்தில் காமன்ஸ் சபையில் சர்க்காரின் கொள்கையைப் பற்றிய கண்டனப் பிரேரணை ஒன்று கொண்டு வரப்பட்டபோது அது தோல்வியுற்றது. சர்க்கார் கட்சியினர் பலர் மீண்டும் பொதுத் தேர்தலில் ஈடுபட விரும்பாத தாலேயே அத் தீர்மானம் தோல்வியடைந்ததே யொழிய பிரிட்டிஷ் மக்கள் கொள்கையை ஆதரிக்கிறார்க ளென்பது அதற்கு அர்த்தமல்ல அந்த விவாதத்தின் போது பிரதம மந்திரி சேம்பர்லேன் தம்மை உலகமே ஆதரிக்கிறதென்று கூறியது தான் விந்தையாக இருக்கிறது. முசோலினி ஹிட்லர் போன்ற யதேச்சாதிகாரிகள் ஒருகால் சேம்பர்லேனை ஆதரிக்கலாம். அது தவிர ஜனநாயகத்திலும் உலக க்ஷேமத்திலும் ஆர்வ முள்ள எவரும் பிரிட்டிஷ் சர்க்காரின் தற்காலத்திய அன்னிய நாட்டுக் கொள்கையை ஆதரிக்க மாட்டார்கள். உண்மையிலேயே சேம்பர்லேனுக்கு ஆதாவு இருக்குமாயின் பிரிட்டனில் ஒரு பொதுத் தேர்தலை நடத்தி வெற்றி பெறுவது தானே.



தொடர் கதை.

# மாயா விரோதி

ஸி. எஸ். இராமன், எம். ஏ., எல். டி.

(Rights Reserved)

அன்று காலை எட்டு மணி இருக்கும். செங்கோட்டை ஜெமீந்தார் தமது காரியதரிசி பிரசாத்துடன் துப்பாக்கிச் சண்டை நடைபெறும் மைதானத்தை யடைந்தார். சிறிது நேரத்திற்குப் பின் சிங்காரதேவரும் அங்கே வந்து சேர்ந்தார்.

பிரபுவும் விஜயபாஸ்காரும் சண்டை செய்யும் இடம் இருவருடைய மாளிகைகளுக்கு இடையில் இருந்தது. பிரகாசத்தோடு சூர்யன் தன் உஷ்ணத்தை உலகினருக்கு கொடுத்துக்கொண் டிருந்தான்.

மைதானத்திற்குச் சிறிது தூரத்தில் செங்கோட்டை ஜமீன்தாருடைய மாளிகையில், மேன்மாடி யறையில், ஒரு சாளர வழியாக மைதானத்தில் நடைபெற விருக்கும் சம்பவத்தைக் காண இந்திரா நின்று கொண்டிருந்தாள். இரவு பூராவும் நித்திரை வராமையால், கவலைமிக்கு தனது நாயகருக்கு என்ன நேரிடுமோ என்று பயம் கொண்டிருந்தா ளாகையினல் ஒரு விசனதேவதை போல் தோன்றினாள். தன் மானத்தை நிலைநாட்ட ஜெமீந்தார் உயிர் துறந்தால் என்று நினைத்தபோது அவள் கண்ணில் நீர் சுரந்தது.

தனது நாயகனைக் கடவுள் எவ்வகையிலாவது காப்பாற்றவேண்டும் என்று வேண்டிக் கொண்டாள்.

அச்சமயத்தில் ஒரு மோட்டார் வண்டி அங்கே வந்து நின்றது. பிரபல துப்பறியும் தீரரான ஸிம்ஹளநாதரும் அவருடைய உதவி போலீஸ் இன்ஸ்பெக்டரும் வண்டியிளின்றும் இறங்கினார்கள். மாயா விரோதி ஸிம்ஹளநாதரைக் கண்டதும் திடுக்கிட்டான். ஆயினும், தனது சந்தோஷத்தை இழக்காமல் அவரைக் கூர்ந்து நோக்கினான்: தன்னை எப்படியாவது கண்டுபிடித்து, பிரபலத்திற்கு வருவதாக அவர் முன்பு சொல்லிக்கொண்டிருந்ததை நினைத்துச் சிரிப்புக் கொண்டான். தனது புதிய வேஷத்தில் அவர் தன்னை அறிந்து கொள்வது துர்லபமான காரியம் என்று மிக்க தைரியம் கொண்டிருந்தானுதலால் துப்பறிபவருடைய வந்தனத்தைக் கெம்பீரமாக ஏற்றுக் கொண்டு, பதில் மரியாதை கொடுத்தான்.

ஸிம்ஹளநாதர் செங்கோட்டை ஜமீந்தாரை யடைந்து, "தாங்கள் இன்று சண்டை செய்ய முடியாததைக் குறித்து வருந்துகிறேன்" என்றார்.

"ஏன்?" என்று மாயா விரோதி கேட்டான்.

"விஜயபாஸ்கரப் பிரபு சமுத்திரத்தினுள் வீழ்ந்து மரித்தார். அவருடைய சவத்தைச் சிறிது நேரத்திற்கு முன்பு கண்டு பிடித்து பிரேத விசாரணைக்கு அனுப்பி விட்டேன்," என்றார் துப்பறியும் ஸிம்ஹளநாதர்.

"என்ன? பிரபு இறந்து போய் விட்டாரா?" என்று ஆச்சரியத்தோடு செங்கோட்டை ஜெமீந்தார் கேட்டார்.

"ஆம்" என்றார் ஸிம்ஹளநாதர். எனக்கு ஒரு புதிய யோசனை தோன்றியிருக்கிறது. பிரபுவே, தாங்கள் மாயா விரோதி மரித்துப் போனதைக் கண்ணாரக் கண்டீர்கள் என்பதைத் தினசரிகளில் முன்பு படித்தேன். அது உண்மைதானே? அவன் இறந்து போய் விட்டதை நான் சரியாக நம்பவில்லை. விஜயபாஸ்கரப் பிரபுவின் மரணத்திற்கு அவன் காரணமோ என்று எனக்கு ஒரு யோசனை ஏற்பட்டிருக்கிறது. பிரபுவே, தாங்கள் அவன் சவம் கடலில் எறியப்பட்டதைக் கண்டீர்களா? நான் கேட்பதைப் பற்றித் தாங்கள் கோபம்கொள்ளக் கூடாது," என்று கேட்டார் துப்பறியும் சிங்கம்.

"மாயா விரோதி இறந்து போகவில்லையா?" என்று செங்கோட்டை ஜெமீந்தார் கேட்டார்.

"மாயா விரோதி இறந்துபோவதென்றால் அது ஒருபோதும் நடவாத காரியம் என்றே என் மனதிற்குப் படுகிறது. தங்களுடைய பணத்தைக் களவாடும் பொருட்டு அவன் இங்கே ஏன் வந்திருக்கலாகாது?"

"மிஸ்டர், நீங்கள் கூறுவது உண்மைதானா?" என்று மாயா விரோதி சொல்லிச் சிரித்தான். அவன் இறந்து போக வில்லை என்று நாம் நினைத்துக் கொண்டால் போகிறது."

"பிரபுவே, மாயா விரோதியின் பழைய செய்கைகளை நினைக்கும் பொழுது நாம் இங்ஙனம் நினைக்க வேண்டி யிருக்கிறது. வேறு எதுவும் தாங்கள் நினைக்கலாகாது. தாங்கள் அவன் இறந்துபோனதை நேரில் கண்டீர்களா?"

நீங்கள் உயிருடன் இருப்பதை நான் எப்படி உண்மையில் இப்பொழுது பார்க்கிறேனோ அப்படி மாயா விரோதி முன்பு இறந்து போனதைக் கண்டேன்," என்றார் ஜெமீந்தார்.

"சந்தோஷம், பிரபுவே. தாங்கள் சொல்வதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். தாங்கள் எதற்கும் என்னை மன்னித்து விடுங்கள்," என்று பிரபல துப்பறியும் உத்தியோகஸ்தர் சொன்னார்.

'விஜயபாஸ்கரப் பிரபு திடீரென்று இறந்து போனதால் அவரோடு சண்டை செய்யும் பாக்கியம் இல்லாமல் போயிற்று" என்று கூறினார்.

ஸிம்ஹளநாதர் பிரபுவைச் சிறிது தூரத்திற்கு அழைத்துச் சென்று, "பிரபுவே, நான் இங்கு வருவதற்கு முன்னால் கமலவேணியம்மாளைப் பார்க்கச் சென்றேன். நான் அவர்களிடம் அவருடைய நாயகர் மரித்துப் போன செய்தியைக் கூறினேன். அந்த அம்மாள் அதற்கு மனம் பதறவில்லை. ஆனால், "என்ன முட்டாள்!" என்று மட்டும் சொன்னார்கள். அதைக் கேள்வியுற்றதும் எனக்கு ஆச்சரியமாயிருந்தது. பிரபுவே, விஜயபாஸ்கரப் பிரபுவினுடைய மரணத்தைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்? அது தற்கொலையா? அல்லது வேறு யாராவது அவரது மரணத்திற்குக் காரணமாக இருக்கிறார்களா? என்பது நாம் ஆராய்ந்து முடிவுக்கு வரவேண்டிய விஷயம்," என்று துப்பறிபவர் உரைத்தார்.

"உமது தீர்மானம் என்ன அவனுடைய சாவைப்பற்றி?"

"அவர் தற்கொலை செய்து கொண்டார் என்றே நான் தீர்மானித்துள்ளேன். பிரபுவும் அவருடைய மனைவியும் பண விஷயத்தில் சிறிது கஷ்டப்பட்டு வந்ததாக நான் கேள்விப் பட்டேன். தங்கள் வருகையைச் சீமாட்டியவர்கள் எதிர் பார்த்திருந்ததாகச் சிலர் சொன்னார்கள். ஆனால் அதற்கு நீங்கள் இடம் கொடுக்க வில்லை. மேலும் அப் பிரபு தங்கள் மனைவியாரை அவமரியாதையாகப் பேசியது தாம் உதவி செய்ய எண்ணியதைத் தடுத்திருக்கிறது. பணக்கஷ்டமே பிரபுவின் தற்கொலைக்குக் காரணம் என்று தெரியவருகிறது."

"துப்பறியும் தீரரே! அவர்களுடைய கஷ்டங்களை நான் தீர்க்க முடியுமா? யௌவனம் காரணமாக நான் கமலவேணிச் சீமாட்டியோடு சிநேகமாக இருந்திருந்தாலும் அதேமாதிரி எப்பொழுதும் இருக்க முடியுமா? என் மனைவியும் குழந்தையும் எனது அன்பிற்குப் பாத்திரமாக வேண்டாமா? அது கிடக்கட்டும். என் மனைவியை ஒரு பெரிய அவமானகரமான அவதூறு அடையாதபடி பிரபுவோடு சண்டை செய்ய ஏற்பட்டது............"

"பிரபுவே, நான் எல்லாவற்றையும் அறிந்து கொண்டேன். விஜய பாஸ்கரப் பிரபு தற்கொலைதான் செய்து கொண்டார் என்றே நாம் நினைக்க வேண்டும்."

அதைக்கேட்ட செங்கோட்டை ஜெமீந்தார் மிக்க மகிழ்வு கொண்டார்.

சிறிது நேரம் வரை அவர்கள் சம்பாஷணையை நடத்தினர். பின்பு மாயாவிரோதி துப்பறிபவருடன் கைகுலுக்கி விட்டு அவரோடு தனது நண்பர்கள் இருந்த மைதானத்தை யடைந்தான்.

மேற் கூறிய விஷயத்திற்குப் பின் அரைமணி நேரம் ஆகி யிருக்கும். மாயாவிரோதி தனது காரியதரிசியுடன் மாளிகைக்குப் போகும் போழுது இந்திரா மோகனரங்க முதலியாருடன் தோட்டத்தில் பேசிக்கொண்டிருப்பதைக் கண்டு, மிக்க கோபமடைந்தான். மோகனரங்கத்தைக் கண்டால் கொன்றுவிட வேண்டும் எனும் பெரிய கோபம் அவன் மனதினுள் எழுந்தது. நேராக வண்டியை விட்டு இறங்கி அவர்கள் இருந்த இடத்தை யடைந்தான்.

நாயகன் திரும்பி வந்ததைக் கண்ட இந்திரா மகிழ்வுற்று, "விஜய பாஸ்கரப் பிரபு தற்கொலை செய்து கொண்ட விஷயத்தை மோகனரங்கர் என்னிடம் சொல்லிக் கொண்டிருக்கிறார். தாங்கள் ஒரு பெரிய ஆபத்திலிருந்தும் தப்பியதாக நான் கருதுகிறேன். பிரபு சண்டையில் மிக்க சமர்த்தர்" என்றாள்.

மாயா விரோதியின் கோபம் சிறிது தணிந்து போயிற்று. அவள் பேசிய வார்த்தைகள் மிகவும் இன்பமாகவும் அன்பாகவும் இருந்தனவாதலால் அவன் கோபத்தை மறந்துவிட வேண்டி யிருந்தது. இருந்தாலும் மோகனரங்க முதலியாரை அவன் சிறிதளவும் விரும்ப வில்லை. சந்தோஷமாக ஜெமீந்தாரினியுடன் தான் பேசி இன்பமாய்ப் பொழுதைப் போக்குவதற்கு வக்கீல் மோகனரங்கம் குறுக்காக நின்று கொண்டிருந்தது அவனுக்கு வெறுப்பைக் கொடுத்தது.

"நான் இவரை சிற்றுண்டிக்கு நாளை வருமாறு சொல்லியிருந்தேன் அன்றோ! அவர் இப்பொழுது இங்கே இருப்பதால் இன்றே இவருடன் சாப்பிடுவோம். நாங்கள் எத்தனையோ விஷயங்களைப் பற்றிப் பேசவேண்டும். நான் சிறிது நேரமானதும் தங்களைச் சந்திக்கிறேன்," என்று இந்திரா மாயா விரோதியிடம் கூறினாள்.

எதிர் பாராத வகையில் தான் அங்கே இருக்கக் கூடாது என்பதை அவளுடைய வாயினால் அறிந்ததும் ஆச்சர்யப்பட்டான். ஸ்தம்பித்து நின்றான். பின்பு அங்கு நின்றும் நீங்கினான். நேராகத் தனது அறையை யடைந்தான். ஒரு நாற்காலியில் சாய்ந்த வண்ணம் யோசனையில் ஆழ்ந்து போனான்.

வெகு நேரம் அந்தநிலைமையில் இருந்தான். பூலோகம் மூழ்கி விட்டதாக எண்ணிக் கொண்டிருந்தான்.

பனிரெண்டு மணி கெடிகாரம் அடித்தது. காரியதரிசி அங்குப் போந்து "சாப்பிட வேண்டாமா?" என்று கேட்டான்.

அதே சமயத்தில் இந்திராவும் மோகனரங்கமும் அங்கே வந்தார்கள். ஜெமீந்தாரினியின் வதனம் களை நீங்கி, கவலை தாங்கி நின்றதைக் கண்ணுற்ற மாயா விரோதி அவள் காதில் "நீ இந்த வக்கீலால் அவதியை அடைகிறாய்," என்றான்.

"இல்லை. இவர் உமது நண்பர் என்பதை மறவாதேயும்," என்றாள். அப்பொழுது அவள் வதனம் பயத்தைக் கொண்டிருந்தது.

வக்கீல் மோகனரங்கம் சிறிது தூரத்தில் நின்று கொண்டிருந்தார்.

மாயா விரோதி இந்திராவிடம் ஏதோ சொல்ல வாயெடுத்தான். அக்கோதை மூர்ச்சை யடைந்தாள்.

மாயா விரோதி அவளுடைய மூர்ச்சையைத் தெளிவித்து, அவளை அவளுடைய அறைக்கு அழைத்துச் சென்றான்.

பத்து நிமிஷத்துக்குப் பின் அவன் தனது அறைக்கு வந்தான். மோகனரங்கத்தை நோக்கி "சீமாட்டியின் தேக அசௌகரியத்தால் உன்னுடன் விருந்துண்ண முடியாது. உனக்கு ஒரு வேண்டுகோள். இனிமேல் நீ என் வீட்டில் பிரவேசம் செய்யக் கூடாது. நாம் இருவரும் மிக்க சிநேகிதர்களாக இருந்தோம். இனிமேல் இல்லை என்பதை அறிந்துகொள். உனக்கு காரணம் தெரியும் என்று கருதுகிறேன். நான் முட்டாள் அல்ல; விஷயத்தை அறிவேன். என் மனைவியை நீ காதலிக்கிறாய். உன் நடத்தையை இப்பொழுது நான் மனதார வெறுக்கிறேன். உன்மேல் எனக்கு விரோதம் இல்லை. உன்னோடு நான் சண்டை செய்து கொள்ள விரும்ப வில்லை. இந்திராவை நான் நன்கு அறிவேன். அவள் உன்னைக் காதலிக்க மாட்டாள். நான் முன்பு அவளுக்கு மன வேதனையைக் கொடுத்திருந்தேன்; இப்பொழுது எனக்கு சுய புத்தி உண்டாகி யிருக்கிறது. இவ்விடத்தை விட்டு இப்பொழுதே செல்." மோகனரங்கம் அசட்டை செய்து, "உனக்கு ஞாபசக்தி முழுவதும் போய் விட்டதா என்ன?" என்று கேட்டார்.

ஞாபகசக்தி............என்ன அது?" என்று மாயா விரோதி சிறிது தடுமாற்றத்தோடு, அவர் போகாமையைக் கண்டு, ஆச்சரியம் சேரக் கேட்டான்.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

வெகுதான்யஞு சித்திரைமீ—கலியுகாதி 5040, சாலிவாகனம் 1861,
பசலி 1347, கொல்லமாண்டு 1113, ஹிஜரா 1357,
இங்கிலீஷ் 1938ஞு ஏப்ரல்மீ—மேமீ

| சித்திரை | ஏப்ரல்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | புதன் | சது44-35 | உத்6-45 | அமி6-45ம | மேஷரவி நா-25-8, வருஷப் பிறப்பு |
| 2 | 14 | வியா | ○44-38 | அஸ்7-48 | சித்60 | ○, சித்திரா பௌர்ணமி |
| 3 | 15 | வெள் | பிர46-.0 | சித்9-58 | சித்60 | |
| 4 | 16 | சனி | துதி49-0 | சு13-33 | அ13-33சி | |
| 5 | 17 | ஞா | திரி53-0 | வி18-25 | மர60 | |
| 6 | 18 | திங் | சது58-18 | அனு24-35 | சித்60 | |
| 7 | 19 | செவ் | பஞ்60 | கே31-35 | ம31-35அ | |
| 8 | 20 | புதன் | பஞ்4-25 | மூல39-5 | ம39-5அமி | |
| 9 | 21 | வியா | சஷ்10-38 | பூரா46-38 | சித்60 | |
| 10 | 22 | வெள் | சப்16-40 | உத்53-33 | சி53-33ம | |
| 11 | 23 | சனி | அ21-48 | திரு59-28 | சித்60 | |
| 12 | 24 | ஞா | நவ25-35 | அவி60 | மர60 | |
| 13 | 25 | திங் | தச27-50 | அவி3-53 | சித்60 | விவாகம் |
| 14 | 26 | செவ் | ஏகா28-5 | சத6-28 | மர60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 15 | 27 | புதன் | து26-30 | பூர7-15 | அமி7-15சி | பிரதோஷம், கரிநாள் |
| 16 | 28 | வியா | திர23-13 | உத்6-20 | சித்60 | மாசசிவராத்திரி |
| 17 | 29 | வெள் | ச● 18-33 | ரே3-53 | அமி60 | சர்வத்திர அமாவாசை |
| 18 | 30 | சனி | அ12-45 | அஸ்0-8<br>பர55-25 | சித்60 | அவமாகம், மூலிகை உபயோகிக்க, ஆயுதம்பழக்க |
| 19 | 1938ஞு மேமீ 1 | ஞா | பிர5-58<br>துதி58-40 | கி✻50-10 | சித்60 | வைசாகசுத்தம், கிருத்திகை சந்திர தெரிசனம் |
| 20 | 2 | திங் | திரி51-10 | ரோ44-40 | அமி60 | அக்ஷய திரிதிகை |
| 21 | 3 | செவ் | சது43-50 | மிரு39-13 | சி39-18ம | மாசசதுர்த்தி விரதம் |
| 22 | 4 | புதன் | பஞ்36-55 | திரு34-18 | சித்60 | ராமாநுஜர், சங்கா ஜயந்தி |
| 23 | 5 | வியா | சஷ்30-43 | புனர்0-0 | அமி60 | சஷ்டி, விவாகம், சீமந்தம் |
| 24 | 6 | வெள் | சப்25-10 | பூச26-25 | மர60 | கங்கோற்பத்தி, கங்கா சப் |
| 25 | 7 | சனி | அஷ்20-38 | ஆயி23-53 | ம23-53அ | நவக்கிரகசாந்தி [தமி |
| 26 | 8 | ஞா | நவ17-18 | மக22-23 | ம22-23அ | சுபகாரிலங்கள் விலக்க |
| 27 | 9 | திங் | தச14-55 | பூர21-55 | சித்60 | மாடு கொள்ள, சித்திரம் எ |
| 28 | 10 | செவ் | ஏகா13-45 | உத்22-43 | அ22-43சி | சர்வ, மத்வ ஏகாதசி [ழுத |
| 29 | 11 | புத | து13-45 | அஸ்24-38 | ம24-38சி | பிரதோஷம், மச்சயஜயந்தி |
| 30 | 12 | வியா | திர-15-3 | சித்27-45 | சி27-45அ | நரசிம்ம ஜயந்தி |
| 31 | 13 | வெள் | ச○17-30 | சுவா32-0 | சித்60 | பௌர்ணமி, வைசாக பௌர்ணமி |

| | | | |
|---|---|---|---|
| சனி | சு-செ<br>சுக்-புத | கே | |
| குரு | 1-ரிஷ-செ<br>12-ரிஷ-சுக் | | |
| | ராகு | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE " ANANDA BODHINI " PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

'எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு''—திருவள்ளுவர்.

தொகுதி 23 } வெகுதான்யஹு வைகாசிமீ கஉ 1938ஹு மேமீ 14உ { பகுதி 11

## கடவுள் வணக்கம்.

கூற்றவர்கள் உண்ணுங் கனியே போற்றி
கழல்அடைந்தார் செல்லுங் கதியே போற்றி
அற்றவர்கட்கு ஆரமுத மானாய் போற்றி
அல்லல்அறுத்து அடியேனை ஆண்டாய் போற்றி
மற்றொருவர் ஒப்பில்லா மைந்தா போற்றி
வானவர்கள் போற்று(ம்) மருந்தே போற்றி
செற்றவர்தம் புரம்எரித்த சிவனே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. (1)

மலையாள் மடந்தை மணாளா போற்றி
மழவிடையாய் நின்பாதம் போற்றி போற்றி
நிலையாக என்நெஞ்சில் நின்றாய் போற்றி
நெற்றிமேல் ஒற்றைக்கண் உடையாய் போற்றி
இலையார்ந்த மூவிலைவேல் ஏந்தி போற்றி
ஏழ்கடலும் ஏழ்பொழிலும் ஆனாய் போற்றி
சிலையால்அன்று எயில்எரித்த சிவனே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. (2)

நஞ்சுடைய கண்டனே போற்றி போற்றி
நற்றவனே நின்பாதம் போற்றி போற்றி
வெஞ்சுடரோன் பல்லிறுத்த வேந்தே போற்றி
வெண்மதியங் கண்ணி விகிர்தா போற்றி
துஞ்சுஇருளில் ஆடல் உகந்தாய் போற்றி
தூநீறு மெய்க்கணிந்த சோதி போற்றி
செஞ்சடையாய் நின்பாதம் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. (3)

# அரும்பொருள் விளக்கம்

(இ-ள்.) கற்றறிந்த பெரியார்கள் நுகரும் பழமே வணக்கம்; தம் திருவடிகளைத் தஞ்சம் அடைந்தவர்கள் செல்வதற்குரிய மோட்சமே வணக்கம்; பாசபந்தம் அறுத்து நின்ற துறவிகளுக்குத் தேவாமிர்தம் போன்றவனே வணக்கம்; இருவினைகளால் ஏற்படும் துன்பங்களை நீக்கி அடியேனை ஆட்கொண்ட பெருமானே வணக்கம்; தனக்கு நிகராக வேறொருவரில்லாத தாரகப்பொருளே வணக்கம்; தேவாதிதேவர்கள் வணங்கும் மலை மருந்தே வணக்கம்; பகையசுரர்களின் திரிபுரங்களைச் சாம்பராக்கிய சிவ பெருமானே வணக்கம்; திருமூலட்டானம் என்னுந் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவனே வணக்கம்; வணக்கம். (எ—று.)

'கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியை' என்று மற்றொரு பெரியாரும் பாடி யிருப்பது இங்கு குறிப்பிடத் தக்கது. 'அற்றது பற்று எனில் உற்றது வீடு' என நம்மாழ்வார் கூறியிருப்பது போல், 'அற்றவர்கட்கு ஆரமுதமானாய்' என்று திருநாவுக் கரையரும் கூறினார். (1)

(இ-ள்.) பர்வதராஜன் மகளாகிய பார்வதிதேவியின் மணவாளனே வணக்கம்; ரிஷபவூர்தியே! உன் திருவடிகளுக்கு வணக்கம்; வணக்கம். அடியேனது உள்ளத்தில் நிரந்தரமாகக் குடிகொண்டிருக்கும் எம்பெருமானே! வணக்கம்; கண்ணுதலே வணக்கம்; சூலாயுதத்தை யேந்திய தேவே வணக்கம்; ஏழு கடல்களும், ஏழு லோகங்களுமாய் விளங்கிய இறைவனே! வணக்கம்; மேருமலையாகிய வில்லினால் முன்னாளில் திரிபுரங்களைத் தகனஞ் செய்த சிவபெருமானே! வணக்கம்; திருமூலட்டானம் என்னுந் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளி யிருக்கும் இறைவனே; வணக்கம்: வணக்கம். (எ—று.)

எல்லாம் வல்ல இறைவன் அஷ்டமூர்த்தமாய் விளங்குகிறான் என்னும் உண்மையை, 'ஏழ் கடலும் ஏழ் பொழிலும் ஆனாய் போற்றி' என்ற அடியால் நன்கு விளக்குகிறார். (2)

(இ-ள்.) விஷமுண்ட கண்டனே வணக்கம்; வணக்கம். நல்ல தவ வடியாய் விளங்கும் தட்சணாமூர்த்தியே வணக்கம்; வணக்கம். வெவ்விய கிரணங்களைப் பரப்பி ஒளிரும் சூரியனது பற்களை உடைத்தெறிந்த மன்னர் மன்னனே வணக்கம்; வெண்மையான சந்திரனைச் சடையில் சூடிய விகிர்தனே வணக்கம்; பேயும் கண்ணுறங்கும் நள்ளிரவில் நடனமாடும் நடராஜனே! வணக்கம்; தூய வெண் திருநீற்றை உடம்பு முழுதும் பூசிய செம்பொன் சோதி சொரூபனே வணக்கம்; சிவந்த சடாதரனே! உன்னுடைய திருவடிகள் வணக்கம்; வணக்கம். திருமூலட்டானம் என்னுந் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளி யிருக்கும் சிவபெருமானே! வணக்கம்; வணக்கம். (எ—று.)

'நாள வட்டத்தளிம நாட்டத்தனும் பதும வீட்டத்தனும் துஞ்சும் நள்ளிருளில் நாப்பண் அண்டகோளவட்டம் பழைய நேமி வட்டத்தினோடு மட்டித்து நட்டமிடும் மதுமத்தன்' என்று குமரகுரு சுவாமிகள் சிவபெருமானது திரு நடனத்தை வருணித்திருப்பதும், 'துஞ்சு இருளில் ஆடல் உகந்தாய்' என்ற அடியோடு ஒப்பிட்டு நோக்கத் தக்கது. (3)




# கிராமாபிவிருத்தியின் அவசியம்



“கிராம சேவை மகாநாட்டைப்பற்றி, என் எண்ணமென்ன வென்றால், அது முற்றுங் கல்வி போதிக்கக் கூடியதாகவும், கிராம வாசிகளுக்குச் சாத்வீகமாகவும், உழைப்பாளிகளாகவு மிருந்தால் தாங்கள் சுதந்திரமாய் வாழலாமென்றும் காண்பிக்கக் கூடியதாகவும் இருக்க வேண்டும்” என்று உலகம் போற்றும் புருஷோத்தமரான காந்தி அடிகள் சமீபத்தில் கோவை பெரிய நாயக்கன் பாளையத்தில் நடந்த கிராம ஊழியர் தலைவர்கள் மகாநாட்டுக்கு அனுப்பிய வாழ்த்துச் செய்தியில் கூறி யிருக்கிறார். அவர் சொன்ன இவ் வரிய கருத்தைக் கிராம சேவையில் ஈடுபட்டுச் சேவை செய்பவரும் ஈடுபட விரும்புபவரும் ஏற்றுக் கடைப்பிடித்து கிராமத் தொண்டு செய்ய வேண்டுமென்று நாம் விரும்புகிறோம்.

நம் பாரதநாடு கிராமங்களை அதிகமாகக் கொண்டது. அக் கிராமங்கள் பொதுவாக நீர் வளமும், நிலவளமுங் கொண்டனவாய் இருந்தமையால் தான், நம் இந்தியா நாகரிகமும், செழிப்பும் வாய்ந்த ரோம், கிரீஸ் போன்ற பழம் பெரும் நாடுகளோடு சரிசமானமான நிலையில் இருந்து வந்தது. இதனாலேயே இயற்கைவளத்தில் இந்தியாவுக்கு இணையான தேசம் வேறொன்று இருக்க முடியாது என்று வெளி நாட்டாரெல்லாம் சிறப்பித்துக் கூறுகிறார்கள். அது போலவே மக்களுக்கு இன்றியமையாது வேண்டப்படும் உணவுப் பொருள்களின் உற்பத்திக்கு இந்தியாவைப் போன்ற சாதனம் பொருந்திய நாடு உலகிலேயே இல்லை யென்றும் துணிந்து கூறலாம். இவ் விதம் பல் வளங்களுங் கொண்டதாய் நம் நாடு சமீபகாலம் வரை இருந்து வந்தமையால் தான் பிரிட்டன், பிரான்ஸ் போன்ற வெளி நாட்டாரது கவனங்களை ஈர்க்கலாயிற்று. அவர்கள் இந்தியாவைத் தங்களுக்கு வேண்டிய உணவு உற்பத்தி ஸ்தானமாகவும், தங்களின் வியாபார ஸ்தலமாகவுங் கொள்ள இட முண்டா

யிற்று. அதுவே சுதந்திரமாக இருந்த நம் நாட்டை அன்னிய ஆட்சிக்கு உட்பட்ட அடிமை நாடாகவும், சுதந்திர மக்களாக இருந்த நம்மை அடிமை மக்களாகவும் ஆக்கியதென்று கூட சொல்லலாம்.

இத்தகைய சிறந்த நிலையிலிருந்த நம்நாட்டின் தற்போதைய நிலை என்ன? பல்வகையிலும் அது மிகவும் க்ஷீணதசையை அடைந்திருக்கிறது. அதற்குக் காரணம் என்ன? நம் தேசத்தி லுள்ள கிராமங்கள்—தேசத்துக்கு ஜீவநாடிகளாகவுள்ள கிராமங் கள்—மிகவும் சீர்கேடடைந் திருப்பதே யாகும். கிராமங்களின் வளங்களுக்கு முக்கியமானது விவசாயம். இவ்விவசாயத் தொழில் அபிவிருத்தி யடைந்து அதன் மூலமாகக் கிராமங்கள் செழித் தால்தான், நம்தேசமும் பல்வகையிலும் வளர்ச்சி யடைந்து பல துறைகளிலும் முன்னேற்ற மடையும். கிராமங்கள் ஏன் க்ஷீண தசையை அடைந்தன? விவசாயம் விருத்தியாகாதது ஏன்? இவற்றிற்குப் பல காரணங்க ளுண்டு. தேசத்தலைவர்கள் பலரும் பலவிதக் காரணங்கள் கூறுகிறார்கள். அவற்றில் நாம் முக்கிய மாகக் கவனிக்கக் கூடியவை: நம் மக்கள் விவசாயத் தொழிலில் கொண்டுள்ள அசிரத்தையும், கிராமங்களைப்பற்றிய இழிவான எண்ணமும், கிராம வளத்தைக் கவனிக்காமையுமே யாகும். இவற்றிற்கெல்லாம் மூலகாரணம் அறியாமைதான் என்று கூறி ளுல் மிகையாகாது.

தேசத்தின் க்ஷீணதசைக்குக் கிராமங்களின் சீர்கேடான நிலைமையே காரணமென, சிறிது காலமாகத்தான் நம்மில் பலர் அறிந்து வருகிறார்கள். இதனால்தான் எங்கு பார்த்தாலும், 'கிரா மப்புனருத்தாரணம்', 'கிராம முன்னேற்றம்', 'கிராமாபி விருத்தி' என்றெல்லாம் முழக்க மேற்பட்டு வருகிறது. 'கிரா மங்களுக்குப் போங்கள்', 'கிராமங்களுக்குச் சென்று சேவை செய்யுங்கள்' என்றெல்லாம் பேரறிஞர்களும், தேசத்தலைவர் களும் பட்டதாரி மாணவர்களுக்கும் வேலையற்றுத் திண்டாடும் வாலிபர்களுக்கும் உபதேசஞ் செய்து வருகிறார்கள். வெள்ளம் பெருக்கெடுத்து வந்தபின் அணை போட்டுத் தடுக்க முயலும் 'அறிவாளி'களைப்போல், கிராமங்கள் மிகவும் சீர்கேடு அடைந்து விட்டபின், இப்போது தான் விழிப்படைந்து ஏதோ சீர்திருத் தஞ் செய்ய சிலர் முயன்று வருகிறார்கள். மிகவும் ஊக்கத் தோடும், தீவிரத்தோடும் செய்தால் நன்னோக்கத்தோடு இத் தகையோர் செய்து வரும் நன் முயற்சி வெற்றிபெறும் என்ப தில் சந்தேக மில்லை. எவ்வளவு வேகமாக வெள்ளம் பெருக் கெடுத் தோடினாலும் பலர் கூடித் தீவிரமாக முயன்று அணை போட்டு விட்டால் அதைத் தடுத்து விடலா மல்லவா! அது

போலவே, கிராமாபி விருத்தியில் கருத்துடையோர் முயற்சியும் தீவிரமாகப் பாடுபட்டால் பயன்படாது போகாது.

தேசத்தின் முன்னேற்றம் கிராமங்களின் செழிப்பில் தான் இருக்கிறது என்னும் உண்மையை உணர்ந்து கிராமாபி விருத்தி சேவையில் ஈடுபட்டு இருப்பவர்களில் கிராம ஊழியர் தலைவர்கள் மகாநாட்டைச் சேர்ந்தவர்களும் முக்கியஸ்தர்களாவர். அவர்கள் சமீபத்தில் கோயமுத்தூரைச் சேர்ந்த பெரிய நாயக்கன் பாளையத்தில் இருக்கும் ஸ்ரீராமகிருஷ்ண வித்யாலயத்தில் மகாநாட்டைக் கூட்டி, கிராமசேவையின் அவசியத்தைப்பற்றியும், எவ்வெவ்வகையில் சேவை செய்யலாமென்பதைப்பற்றியும் ஆராய்ந்தனர். இம் மகாநாட்டுக்குச் சென்னைச் சுகாதார மந்திரி கனம். டி. எஸ். எஸ். ராஜன் தலைமை வகித்தார். பிரதம மந்திரி கனம் ச. இராஜகோபாலாச்சாரியார், காந்தி சங்கத்தலைவர் ஸ்ரீமான் மஷ்ருவாலா, அகில இந்திய கல்வி போர்டு காரியதரிசி ஸ்ரீ அரியநாயகம், அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கக் காரியதரிசி ஸ்ரீ ஜே. சி. குமரப்பா, அகில இந்திய கிஸான் (விவசாயிகள்) சங்கத் தலைவர் புரொபஸர் என். ஜி. ரங்கா, ரெவரண்டு கெய்த்தான், ரெவரண்டு வால்ஷ் உட்பட பல பிரமுகர்களும், கிராம ஊழியர்களும் விஜயஞ் செய்திருந்தது குறிப்பிடத் தக்கது.

கிராம ஊழியர் தலைவர்கள் மகா நாட்டில் அக்கிராசனம் வகித்த டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் பிரசங்கம் கிராம சேவையில் கருத்துடையவர்களுக்கு நல் வழி காட்டுவதாகும்.

"இந்தியா தேசம் கிராமங்கள் அடங்கிய பிரதேசம். தேசீய முன்னேற்றம் என்பது கிராம முன்னேற்றம் தான். தேசீய முன்னேற்றத்தின் உண்மை கிராம வாழ்வில் சீர்திருத்தம் கிராம வாசிகளுக்கு நல்ல உணவு, மொத்தத்தில் கிராமவாசிகளின் சுகாதார முன்னேற்றம் இவைகளில் பார்க்கவேண்டும்..............

"கிராம முன்னேற்ற விஷயத்தில் மூன்று விஷயங்கள் முக்கியமாகக் கவனிக்கவேண்டும். சரியான முறையில் நல்ல குடிக்கும் தண்ணீர் வசதி. சத்துள்ள நல்ல உணவுப்பொருள்; இது கிராமவாசியின் நிலத்திலேயே கிடைக்கக் கூடியதாக இருக்க வேண்டும். கால்நடை அபிவிருத்தி கால்நடைகளின் உணவும் அவைகளின் நோயும் கவனிக்கவேண்டும்."

இவ் வறிவுரையைக் கிராமத் தொண்டு செய்பவர்கள் கூர்ந்து கவனிக்க வேண்டுகிறோம். 'கிராமசேவை,' 'கிராம முன்னேற்றம்' என்று எல்லோரும் பேசி விடலாம். ஆனால் கிராமசேவை செய்ய விரும்புவோர் எவ்வகையில் தொண்டு

செய்யலாம் என்பதை வகுத்துக் கூறுவதுதான் முக்கியமானது. இதைப் பலர் கவனிப்பதில்லை. ஆனால் நமது மாபெருந் தலைவர் மகாத்மாகாந்தி கிராமப் புனருத்தாரணத்துக்குரிய பல வழிகளை வகுத்துக் கூறியிருக்கிறார். அதையொட்டியே டாக்டர் ராஜனும் கிராமசேவையாளருக்குச் சில வழிகளைக் கூறியிருப்பது பாராட்டுதற் குரியதாகும்.

"இரு வாரத்திற் கொருமுறை மாகாணத்தில் காலரா, பிளேக், வைசூரி முதலிய தொத்து நோய்களின் மூலம் வரும் கேஸ்கள், மரணங்கள் இவற்றின் சம்பந்தமாக ஒரு அறிக்கை எனக்கும், கவர்னருக்கும் கையெழுத்திற்கு வருகிறது............ நான் இதைக் கவனித்துப்பார்த்து வரும்பொழுது அநேகமாகக் கிராமங்களில்தான் அதிக தொகை இருப்பதாகத் தெரிகிறது. இதன்மூலம் மக்களின் சுகாதாரம் நமக்கு வாராவாரம் தெரியப் படுத்துவதுடன் வியாதிகள் தடுக்கப்படலாமென்றும் விஷயம் தெரிகிறது...........நான் ஒரு வைத்தியன் என்ற முறையில் இந்த மரணங்கள் நமது தேசத்தில் ஏற்படக் கூடாதென்று எண்ணுகிறேன். மற்ற தேசங்களில் இவை தடுக்கப்பட்டிருக்கின்றன. இங்கேயும் இது தடுக்கச் சாத்தியப்படும். ஆகையால் கிராமஊழியர்கள் முன் இருக்கும் பிரச்சினை இந்நிலைமையை எப்படி மாற்றுவது என்பதுதான்...........தேசீய முன்னேற்றத்தின் உண்மை கிராம வாழ்வில் சீர்திருத்தம், கிராமவாசிகளுக்கு நல்ல உணவு, மொத்தத்தில் கிராமவாசிகளின் சுகாதார முன்னேற்றம் இவைகளில் பார்க்கவேண்டும்.........கிராம முன்னேற்ற விஷயத்தில் மூன்று விஷயங்கள் முக்கியமாகக் கவனிக்க வேண்டும். சரியான முறையில் நல்ல குடிக்கும் தண்ணீர் வசதி. சத்துள்ள நல்ல உணவுப்பொருள்; இது கிராமவாசியின் நிலத்திலேயே கிடைக்கக்கூடியதாக இருக்கவேண்டும். கால் நடைகளின் உணவும் அவைகளின் நோயும் கவனிக்க வேண்டும்" என்று கூறியிருப்பது கவனிக்கத் தக்கது. டாக்டர் ராஜன் கூறுவதுபோல் கிராமசேவை செய்ய முன் வருவோர் பிரதிபலனை எதிர்பாராது உழைப்பவர்களாயிருக்கவேண்டும். அவ்விதம் தன்னலமில்லாச் சேவை செய்வதற்குச் செல்வந்தர்களால் தான் முடியுமேயொழிய, ஏழைகளால் செய்ய முடியாது. ஏழைத் தொண்டர்கள் தன்னலத் தியாகஞ்செய்து உழைக்க முன் வந்தாலும், அவர்களைக் கிராமமக்களோ மற்றவர்களோ நம்பமாட்டார்கள். பொதுவாழ்விலேயே இது ஒரு சங்கடமான நிலைமை என்பதை யாரும் மறுக்க முடியாது. சிறப்பாகச் செல்வந்தர்களும், பொதுவாகத் தன்னலங் கருதாத் தகைமையாளரும் கிராம சேவை செய்ய முன்வந்தாலொழிய, கிராமங்கள் சீர் பெறா; முன்னேற்றமடையா. இத்துடன், கிராம சேவை புரி

வோர் நகர ஆடம்பர வாழ்வைத் துறத்தல் வேண்டும். சுருங்கிய செலவில் எளிய வாழ்க்கையை நடத்தித் தங்களைப் பண்படுத்திக் கொள்ள வேண்டும். இப் பழக்கம் இவர்கள் ஈடுபடும் வேலைக்கு இயன்றதா யிருப்பதோடு, கிராம மக்களுக்கும் ஒரு ஆதர்சமா யிருக்கும். கிராம ஊழியம் புரிய விரும்புவோர் கிராம வாசிகளைப் போல் விவசாயம் செய்வதற்குந் தயாரா யிருக்க வேண்டும். அதில் அவர்கள் பயிற்சி பெற்றால் தான், நாளுக்கு நாள் க்ஷீணதசையை யடைந்து வரும் விவசாயத்தை— உழைப்புக்குத் தகுந்த ஊதியத்தைத் தராத விவசாயத்தை எந்தெந்த முறையில் அபிவிருத்தி செய்தால் போதிய பலனைப் பெறலாம். இன்று விஞ்ஞான சாஸ்திர ஆராய்ச்சியால் கண்டு பிடிக்கப் பட்டிருக்கும் நவீன முறையேதேனும் நம் விவசாயத்துக்குப் பயன்படுமா? என்று பரீக்ஷை பண்ணி பார்த்து, அவற்றில் ஏதேனும் நம் நாட்டு விவசாய அபிவிருத்திக்குப் பொருத்தமானதா யிருக்குமானால், அதைக் கடைப் பிடித்துத் தாம் முதவில் செய்து காட்டி மாற்ற கிராமவாசிகளையும் பின் பற்ற செய்ய முடியும். அவ் வகையில் அவர்களுக்கு உதவி செய்தால், கிராம வாசிகள் அவர்களைத் தெய்வமாகப் போற்றுவார்கள் என்பது திண்ணம்.

தங்கள் நன்மையை நாடி ஒரு சிலர் கிராமங்களில் வாழ்கிறார்கள் என்று கிராம மக்களுக்குத் தெரிந்தால் அவர்கள் கிராம ஊழியர்களுக்கு மதிப்புங் கௌரவமுந் தந்து அவர்களது யோசனையையும் உதவிகளையும் பெறப் பின் வாங்கமாட்டார்கள். முக்கியமாக கிராம ஊழியர்கள் ஒவ்வொரு கிராமவாசியும் தங்கள் வாழ்க்கைக்கு வேண்டிய சகல விதமான பொருள்களையும் தங்கள் நிலங்களிலேயே பயிரிட முடியும்படி வசதி செய்து கொடுக்க வேண்டும். இவ்விதக் கிராமப் புனருத்தாரண வேலைத் திட்டங்களை நிறைவேற்றி வைக்கும் வகையில் தேசத்தை முன்னேற்ற மடையச் செய்ய வேண்டும் என்ற உண்மையான ஆர்வத்தோடு வேலை செய்வோர் ஒரு சிலர் இருந்தாலும் போதும். அவர்கள்தான் டாக்டர் ராஜன் கூறுகிறபடி, மகாத்மாவின் வேலைத் திட்டத்தை நிறைவேற்றி வைத்து அவரது ஆசீர்வாதத்துக்கு ஆளாக முடியும்.

கோவை கிராம ஊழியர் தலைவர் மகாநாட்டினர் கிராமாபிவிருத்தியின் அவசியத்தைத் தாங்கள் உணர்ந்து வேலை செய்து வருவது போலவே, மற்றும் பலர்க்கும் உணர்த்தி, கிராமங்களைச் சீர்திருத்தஞ் செய்து, நம் தேசத்தின் மறு மலர்ச்சியை யுண்டு பண்ணுவார்களென்று நாம் நம்புகிறோம்.

ஓம் தத் ஸத்.

# தமிழ்ப் புதுயாண்டின் பிறப்பு

———:0:———

(மதுரை-பொ. ஸ்ரீநிவாஸன். பி. ஏ.,)

(நேரிசை ஆசிரியப்பா.)

செக்கர் வானமும் செழுங்கதிர்ப் பரிதியும்
எக்கர் பொன்னொளி எல்வரு கானலும்
நன்னெறி யந்தணர் நயம்படு சொல்லும்
வெண்டா மரையொடு தண்ணெழிற் றடாகமும்
நீவிய குன்றின் நிலைபெறு காட்சியும்

தாவிய வில்லின் வகைபெறு நிறனும்
ஓவிய மனைய ஓதநன் முகிலும்
பந்தெனச் சுழலும் பாரதின் மேல்வழி
வந்துபின் கவல விருள்பட மறையச்
சிறுகுறை முழுமதி வானில் ஓங்கச்

சுறுநிறைப் பெருநீர்க் கடற்றிரை வீங்க
நாழிகை முப்பதும் நண்ணி யகலப்
பங்குனி முப்பதும் ஈசுர முடிய
எழில்மிகு மலரின் நறுமணம் வீசச்
சென்னிறச் சென்னிச் சேவல் கூவ

ஓங்கிய கோங்கின் இளந்தளிர் மின்ன
உருவம் அமைபெறு புற்பனி யகல
மறுபடி ஒளிக்கதிர் மிளிர்ந்த ஞாயிறு
இருளற வானில் இன்புற வளரச்
சித்திரைத் திங்கள் சீரொடு பிறக்கப்

புத்தாண் டாகிப் புதுநலம் மிகவேகு
தானிய யாண்டுத் தகைசால் நண்ப!
பேணிய உட(ல்)நலம் பெருகப் பெறுவீர்!
ஒல்கா வலிமை ஓங்கப் பெறுவீர்!
பல்கலை யறிவும் பல்கப் பெறுவீர்!

இயற்கை யிறைவன் திருவருள் பெறுவீர்!
பயக்கும் வாழ்க்கைப் பெருநிதி பெறுவீர்!
கேளிய ரோடும் வாழிய நன்று
நிறையமை நட்பின் தகையால்
இறையடி தாழ்ந்து இறைஞ்சிய வாற்றால்.

# ஒரு நற்றாயின் நிருபம்

——(o)——

(கே. வைத்தியநாதன்).

எனது அன்பார்ந்த குமாரத்தி திருவளர் செல்வி கோமளத்துக்கு:—

உமையொரு பாகன் அருளால் நீ நின் ஆருயிர் மணாளருடன் பல்வகை வளங்களும் பெற்று இனிது வாழ்வாயாக.

மகளே ! நீ உன் நாயகர் கைப்பற்றி அவர் இல்லம் நோக்கிப் புறப்பட்டவன்றே உனக்குச் சில நல்லுரைகள் கூறி அனுப்ப வேண்டுவது என் கடமையாம். ஆனால் உன் மன்றல் காரணமாக எனக்கு இடையறாது பற்பல வேலைகளிருந்துகொண் டிருந்தமையின் உன்னோடு பேசவே எனக்குச் சந்தர்ப்பம் கிட்டாமற் போய் விட்டது. ஆதலால் உனக்கு அவ் வறிவுரைகளை இந் நிருப மூலம் வரையலானேன்.

குமாரி ! இது காறும் நீ எங்கள் வீட்டில் வளர்ந்தாய்; உன் அன்னை தந்தைகளாகிய எங்கள் ஆதிக்கத்திலே உன் வாழ்க்கை பொருந்தியிருந்தது. இனி இதெல்லாம் மாறிப் போய்விட்டன. உன் கணவர் உன் கரந்தொட்ட அந்தக் கணமுதல் உன் வாழ்வு முழுவதும் அவராதிக்கத்திற் போய் விட்டது. அவர் இல்லத்தில் தான் உன் இல்வாழ்வை நீ தொடங்கப் போகிறாய். அங்கே தான் உன் எதிர்கால இன்பம் முழுதும் சேமித்து வைக்கப் பட்டிருக்கிறது.

'குலமகட்குத் தெய்வம் கொழுநனே' என்பது பல பெரியார்கள் அருளிச் செய்த உண்மை.

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை."

என்பது தமிழ் வேதம். முன்னர் தன் மனைவியைக் காசி மன்னன் கட்டளையின்படி வெட்ட முனைந்தபோது "நீ நின் வழிபடு தெய்வத்தை வணங்கிக் கிழக்கு நோக்கியிரு" என அரிச்சந்திரன் கழறலும், அக்கிளிமொழி மடந்தை பழக்கமான அக் கணவனைப் பாவி நின்றாளே யன்றி வேறு தெய்வத்தை நினைத்திலள். ஆதலால் கோமளம் ! நின் கணவரையே நீ வழிபடு கடவுளாகக் கொள்ள வேண்டும். அவரது திருவுருவத்தை உன் உள்ளக் கோயிலிலிருத்தித் தினமும் பூசித்து வணங்கி வருவாயாக. அவர் விரும்புவனவற்றை நீயும் விரும்பாது ஒதுக்கித் தள்ளியும் அவரியல்போடு ஒட்டி யொழுகப் பழகிக் கொள்வது நின் கடனாம். கொண்டான் குறிப்பறிந்து ஒழுகலே குலமகள் கொள்கை என்பதை நீ மறந்து போகாதே.

புதல்வீ ! உன் நாயகரின் பெற்ருேர்கள் இனி உனக்கும் பெற்ருேர்களாவர். எனவே நீ எங்கட்கு ஆற்ற விரும்பும் பணிகளை யெல்லாம் அவர்கட்குச் செய்யத் தவருதே. முதுமைப் பருவத்தில் அவர்களுக்கு நின் சேவை எந்த வகையிலும் தேவையா யிருக்கும். சமயமறிந்து அவர்களுக்கு உன் தொண்டுகளை உவப்புடன் செய்து அவர்களது அன்பைச் சம்பாதித்துக் கொள். இதனுல் வயது முதிர்ந்த அன்னவர்களது ஆசீர்வாதம் உனக்குப் பரிபூரணமாய்க் கிடைக்கும். அவர்கள் அவ்வப்போது எடுத்துரைக்கும் புத்திமதிகளைக் கேட்டு அதன்படி நடந்து நற்குல மகள் எனப் பெயர் எடுக்க முயல்வாயாக. இதுவே நீ உன் பிறந்தகத்துக்கும், உன் பெற்ருேர்களாகிய எங்கட்கும் தேடிக் கொடுக்க வேண்டிய செல்வமாகும்.

உன் கணவரது சகோதர சகோதரிகளை உன்னுடன் பிறந்தவர்களாகவே நீ கருதுவாயாக. அவர்களுக்கு உன் மீது வெறுப்போ, கோபமோ உண்டாகுமாறு நீ ஒருபோதும் நடந்து கொள்ளாதே. அவர்களது அன்பை நீ தேடிக் கொண்டால், அது உன் கொழுநருக்கு மகிழ்ச்சியைத் தரும். உன் இல்லந் தேடி உன் நாயகரது சுற்றத்தார்கள், நண்பர்கள் முதலான பலர் அவ்வப்போது வந்து போவர். மனையாள் என்ற முறையில் நீ அவர்களுக்கு முகமன் கூறி உபசரிக்க வேண்டுவது நின் கடமைகளில் ஒன்ருகும்.

நின் இல்லத்திற்குரியவள் நீ தான் எனினும், உன் மாமனுர், மாமியார் முதலான பலபெரியார்களது முன்னிலையில் உன்உரிமையைப் பாராட்ட முயலாதே. ஆனுல் உன் வீட்டைத் தூய்மையாகவும், அழகாகவு மிருக்கச் செய்து திருமகளுக் குறைவிட மாக்குவது நின் கடமைகளில் சீரிய தொன்ருகும். தான் புகுந்தவிடம் ஒரு சிறு குடிசையே யாயினும் அதனைச் செம்மைப்படுத்திச் செந்தாமரையாள் நோக்குடன் பொலியச் செய்தல் குலமகளிர்தம் செயலாம். நின் இல்லத்தைக் கூட்டி மெழுகிக் கோலமிட்டுப் பார்க்கும் பெருமையை உன்னுடையதாகக் கொள். அதனுல் நீ எய்தப் பெறும் நன்மைகள் பலவாம். வீட்டு வேலையால் பெண் உடல் தழைகிறது. உறுப்புக்கள் வலுவுறுகின்றன. இது நான் கண்ட அனுபவங்களில் ஒன்று.

உன் நாயகரைப் பிறரிடம் பெருமையாகப் பேசு. அவரிடம் ஏதேனும் குற்றங் குறைக ளிருக்குமானுல் அதை வெளியிற் காட்டி விடாதே. அவருக்கு உன்னுல் பெருமையும், மதிப்பும் அதிகரிக்கும் வண்ணம் நீ நடந்து கொள்ள வேண்டும். உன் அழகைக் கண்டு களிப்பவர் அவர். ஆதலால் அவர் எதிரே உன்னை விகாரப் படுத்திக் கொண்டு ஒரு போதும் நிற்காதே. அவருக்கு வீட்டைப் பற்றியே விசாரம் எதுவுமிருக்கலாகாது. "இல்லாள் அகத்து இருக்க இல்லாதது ஒன்றில்லை" என்ற அமுத வாக்கியம் எப்போதும் உன் நினைவிலிருக்கட்டும்.

சிக்கனமாகச் செலவிடுதலை உன் கைகள் பழகிக் கொள்ளட்டும். 'ஏர் பிடித்தவன் என் செய்வான்? பானை பிடித்தவள் பாக்கியவதி' என்ருெரு பழமொழியுண்டு. உன்னுலேயே உன்குடும்பம் தழைக்கவேண்டும். ஊரார்க்காகவது ஆடம்பரமாக வாழ விரும்பும் பெண்களைப் பார்த்து, நீ மயக்

காதே. அடக்கமான வாழ்விற்கே எப்போதும் பேரும் பெருமையுமுண்டு. அதுவே என்றும் நிலைத்து நிற்கும்.

வீட்டிலில்லாத பண்டங்களைக் குறித்து உன் கணவரின் சமய சந்தர்ப்பங்களைத் தெரிந்து சொல்வாயாக. பசியுடனிருக்கும்போதோ, கவலையுடனிருக்கும்போதோ அவரிடங் கூறி அவர் வெறுப்பைத் தேடிக் கொள்ளாதே. உன் கையால் வாங்கப்படும் பண்டங்கட்கும், மற்ற செலவினங்கட்கும் விபரம் எழுதி உன் கணவரிடம் அவ்வப்போது காட்டுவாயானால், அது காரணமாக உன் குடித்தனப்பாங்கை அவர் அறிந்து பாராட்டக் கூடும்.

ஆபரணங்கள் மீது அதிக ஆசை கொள்ளாதே. உன் கணவரோ உன் மாமனாரோ விரும்பிக் கொடுக்கும் அணிகலன்களே போது மென்று மனப்பான்மையை விருத்தி செய்து கொள்வாயாக. இருக்கின்ற நகைகளை அழித்து வேறு புது மாதிரியாகச்செய்ய முற்படும் சில மங்கையர்களைப் போல நீயும் செய்ய விரும்பாதே. நகைகளை இரவல்வாங்குவதும், இரவல் கொடுப்பதும் எப்போதுமே ஆபத்தானது. இது ஒரோர் சமயங்களில் கொடும்பகைக்கும் காரணமாவதுண்டு.

உன் கண்களுக்குப் பிடிக்காவிடினும் உன் நாயகர் விரும்பிக் கொடுக்கும் புடவையே உயர்வானது என்று கொள்வாயாக. உன் தோழிகளில் யாரேனும் ஒருத்தி உடுத்தியிருக்கும் மாதிரியே வேண்டு மென்று பிடிவாதம் செய்யாதே. இதனால் உன் வீட்டுக்காரர் மனம் கசந்து போகும். உயர்ந்த பட்டாடைகளில், பகட்டான சேலைகளில் பொருளைச் செலவிட நீ ஒரு போதும் விரும்பாதே.

ஒழிந்த வேளைகளில், ஒய்வு நேரங்களில் அண்டை வீடுகளுக்குச் செல்லுதல், பெண்களைக் கூட்டி வைத்து வம்பளந்து கொண்டிருத்தல் முதலான பலவும் ஒரு குடும்பப் பெண்ணுக்கு உகந்ததல்ல. வேலை தான் இல்லையே என்று பகலில் படுத்துறங்கலுந் தீதே. ஆதலால் நல்ல அறிவு தரும் நூல்களைப படித் தின்புறுவதிலும், உனக்குத் தெரிந்த பின்னல், தையல் வேலைகளைச் செய்வதிலும் உன் ஓய்வுநேரத்தைச் செலவிடுவாயாக. நீ செய்து முடிக்கும் பின்னல் முதலான வேலைகளை உன் நாயகரிடம் காட்டத் தயங்காதே. அவரே அதன் அருமை பெருமை தெரிந்து உன் கைத்திறனை மெச்சக்கூடியவர்.

கோமளா! ஏதோ என் மனதிற் பட்டதை யெல்லாம் உனக்கு எழுதி விட்டேன். நீ கவனமாய்ப் படித்துக் கருத்துடன் நடந்து கொள்வாய் என நம்புகிறேன்.

இங்ஙனம்,

உன் அன்புள்ள அன்னை

கமலம்.

---

# படைப் பயிற்சியின் அவசியம்

—:(0):—

மு. ரா. சீநிவாசன்.

உலகமானது, இதுபோழ்து நவநாகரிகத்தின் வழிச் சென்று, இயற்கையினின்றும் பிறழ்ந்து பெரும் அல்லலில் அகப்பட்டுத் தவிக்கின்றது. ஓர் நாட்டை மற்றொரு நாடு அடிமைகொள்ள எத்தனிக்கிறது. ஆயுதப் பெருக்கமே நாட்டின் அடிப்படைக் கொள்கையா யிருக்கிறது. நவயுகப் போர் முறைகளை யறியா நாடுகள்—புதுப்புது விஞ்ஞானக் கொலைக் கருவிகளைக் கையாளாத நாடுகள்—ஆயுதப் பெருக்கமில்லா நாடுகள், வல்லரசுக ளென்னுங் கொடும் புலிகளிடம் அகப்பட்ட சிறு விலங்குகளா யழிகின்றன. தற்காலத்தில் உடல்வலியும் மன வலியும் பயன்படாதொழிய, இராணுவ முறைக் கல்வியும், படைப் பயிற்சியுமே, நாட்டுக்கு வெற்றியை அணிவிக்கின்றன. அவையில்லா நாடுகள் நிலப்பரப்பில் அதிகமுடையனவேயாயினும், பலக் குறைவுற்றுத் தோல்வி யடைகின்றன. ஜப்பான் சைனுவின்மீது படையெடுத்து மறப் போர் புரிகின்றது. ஐரோப்பாவில் இரு வல்லரசுகள், புயலும் மழையும் போல ஒன்றி நின்று அமைதியைக் கலைத் தட்டுழியங்கள் புரிகின்றன. உலக முழுவதும் போர்ச்சுழலா லலைக்கப் படுமிந்நிலையில், படைப் பயிற்சியில்லாத சேனுபலம்—ஆயுதப்பலமில்லாத எந்நாடும் அமைதியுற்றிருப்ப தென்பது பெரிதும் சந்தேகிக்கக் கூடிய விஷயமே.

உலக மஹா யுத்தத்தின் முடிவில், தேசங்கள் யாவும் இராணுவக் கல்வியி னவசியத்தையும் படைப்பயிற்சி னவசியத்தையும் நன்குணர்ந்து கொண்டன. அதற்கு முன்னமேயே பல நாடுகள், இப்பயிற்சியில் கவனம் செலுத்தி வந்தன. ஆஸ்ட்ரேலியா, நியூஸிலாண்ட், ஸ்விட்ஜர்லாண்ட், கானடா, தென் ஆப்பிரிக்கா, ஜெர்மனி, பிரான்ஸ், இங்கிலாந்து முதலிய நாடுகள் இராணுவப் பயிற்சியைக் கட்டாயப்படுத்தி வந்தன. ஆனுல் அப்பொழுது ஜெர்மனி போருக்குக் காரணமா யிருந்த தெவ்வாறெனின் அது இராணுவப் பயிற்சியின் நோக்கமே, வெற்றி, வெற்றி என வெற்றி வெறி கொண்டு, தன்னை முன்னணியில் நிலைபெறச் செய்து கொள்வதென நினைத்தது. ஆனுல், படைப்பயிற்சியின் உண்மையான நோக்கம், நாட்டில் அமைதி குலையாமல், போர் முரசு கொட்டாம லியற்கை வழி நின்று அதை ஆள்வதே யாகும்.

தற்சமயம், இந்தியா தவிர, ஏனைய நாடுகள் யாவும் படைப் பயிற்சியை முற்படுத்தி வருகின்றன. உதாரணமாக, ஜப்பான் ஒரு சில நாட்களில், நூற்றுக் கணக்கான விமான ஓட்டிகளையும், சேனைத் தலைவர்களையும் சித்தஞ் செய்ய இயலும். ஆனுல், அதைவிடப் பெரிய நம் நாட்டிலோ! பத்து பேர்களைக்கூட, நாம் உலக முதல்தர உலக விமான ஓட்டிகளெனக்

கூறுவதற்கில்லை. இப்பொழுது துருக்கி அடைந்துவரும் பெருமை யெதனால்? அங்குப் பெண்களும் தேசநலன் கருதி விமானப் படையில் சேர்ந்து வருகின்றனர். ஆப்கனிஸ்தான், ஸையாம் முதலிய நாடுகள் இம் முறையில் வெகு விரைவாக முன்னேறி வருகின்றன. இந்தியாவின் பண்டை வீரம் எங்கே? தற்போதைய வீரம் எங்கே? சாதி சமயப் பிணக்குகளும், வகுப்பு வாதங்களுமன்றோ நாட்டை அரித்து வருகின்றன? சேரன் செங்குட்டுவன் வீற்றிருந்த இத்தொன்மை நாட்டில், துர்க்காவதியார் வெற்றியரசு புரிந்த இவ்வீரநாட்டி லின்று நாம், நம்மை யயல் நாட்டுப் படையெடுப்பினின்றும் காத்துக் கொள்ளத் தெரியாமல் திகைப்பதா? வலியற்றிருப்பதா?

இனி, அறிஞர் சிலர், ஆங்கிலேயர் நம்நாட்டில் எத்தகைய படைப் பயிற்சியினையு மநுமதிக்க மாட்டார்களெனக் கூறுகின்றனர். அஃது ஓர் வீண் காரணமே. அடுத்து முயன்றா லாகாவுளவோ? நாட்டின் தளையை விடுவித்தற்கு அஹிம்ஸா தர்ம முறை சிறந்ததேயாயினும், அதைக் கொண்டே எல்லாக் காரியங்களையும் முடிக்க முயலல் பயனற்றவோர் பிடிவாதமே. அஹிம்ஸா முறை, படைப் பயிற்சியை யாதரிக்கிறது. ஆதலின் ஓரளவு படைப் பயிற்சி, நம்மவர்க்கு மிக அவசியமே.

நிலைகுலைந்து கிடக்கும், நம் பாரத நாட்டைச் சீர்படுத்தி பண்டை நன்னிலையை யடையச் செய்தல், வருங்காலச் செல்வர்களாகிய இளவாலிபர்களின் கையில்தா னுளது. ஆதலின், அவர்களுக்கே இப்பயிற்சிச் சிறப்பாக வளிக்கப்படல் வேண்டும். இப்படைப் பயிற்சி, பண்டை நாளில், யானையேற்றம், குதிரை யேற்றம், வாள்பயிற்சி, விற்பயிற்சி முதலியவைகளைத் தன்னகத்தே கொண்டிருந்தது. ஆனால், இக்காலத்தில் வெடிகுண்டு வீச்சுகளும், விஷவாயுப் பிரயோகங்களும், விஷமப் பிரசாரங்களுமே வெற்றிக்கு வழிகளாயுள்ளன. இச்சூழ்ச்சிகளை வெல்லும் திறனுண்டாகும்படி, நம்மிளைஞருக்கு நற்பயிற்சி யளிக்கப்படல் வேண்டும். மற்றும் கலாசாலைகளில் கற்பிக்கப் பெறும் தேகப் பயிற்சி, 'தம்மை அழகுபெறச் செய்யவே' என்னும் எண்ணம் மாணவர்களிடையே யகற்றப்பட்டு, தாம்பெறும் உடலூரம் தம் தாய்நாட்டுச் சேவைக்கே என்ற தியாக உணர்ச்சி ஒவ்வொருவரிடமும் ததும்பும்படிச் செய்தல் வேண்டும்.

இனி, இப்பயிற்சியினால், ஓர் பெரு நோக்கம் தவிர, அன்றாடம் வாழ்க்கையைச் செப்பஞ் செய்யும் நன்மைகள் பல உண்டு. முதலில் கூறிய பெரு நோக்கமாவது, நம்மை அயல்நாட்டுப் படை யெடுப்பினின்றும் காத்துக்துக் கொள்வதே. பல நன்மைகளெனக் குறிக்கப்பட்டவையாவன:—வாலிபர்களது ஒழுக்கம் நன்னெறியிற் செல்லும்; தன்னம்பிக்கையும் பணிவும் அவர்களிடை மலரும்; ஒன்றி நிற்கும் திறன் இளைஞரிடை முகிழ்க்கும்; தம்மிலும் தம் நாட்டிலும் அவர்கள் பெருமை கொள்வார்கள்; தியாக உணர்ச்சி அவர்களிடை அரும்பும்.

ஆங்கிலேயர் நமக்கு விடுதலை அளிக்க மாட்டாமைக்குக் காரணமாக, 'இந்தியா ஆங்கிலவரசி னின்றும் விடுபட்டால், அதற்குப் போதிய இராணுவப் பயிற்சியும் படை வீரமும் இல்லாததால், வேறொரு வல்லரசு அதை யடிமைகொள்ளும்;' என்கின்றார்கள். அக் கறையைப் போக்கிக் கொள்ள

முற்படுதல், இந்தியராகப் பிறந்த ஒவ்வொரு மனிதரின் கடமையன்றோ? மலையாள விமானி யொருவர் தம்முயற்சியில் வீழ்ச்சி யெய்தியது கண்டு நம்மவர் அயர்ச்சி யெய்தி விட்டனரே! மேலும், நம்நாட்டில், இப்படைப் பயிற்சியினை, நம்மவரே எதிர்ப்பது மிகவும் வருந்தத் தக்கதே. இந்திய அரசாங்க சபையில், சிறிது நாட்குமுன்பு, 'ஹ்ருதயநாத் குஸ்ரு' கொணர்ந்த இம்முறை பற்றிய தீர்மானத்தை, நம் சேனாதிபதியே எதிர்த்துத் தகர்த்தனரே! நாஷிக்கிலும், இலட்சுமணபுரியிலும், இராணுவப் பயிற்சிக் கலாசாலைகள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன. பீஹார் கல்வி மந்திரியும், படைப் பயிற்சியும், விமானப் பயிற்சியும், தம் மாகாணத்தினர்க் களிப்பதாக ஓர் கூட்டத்தில் பேசியுள்ளார். அவர் தம் எண்ணம் ஈடேறுமாறு இறைவனருள்புரிவானாக!

முடிவாக, இந்தியராகிய நமக்கு, தற்காப்பு நிமித்தமும், நம் சகோதர நாடுகளை ஆபத்திலிருந்து இன்றியமையாச் சமயங்களில் விடுவித்தற்கும், பண்டை வீரத்தை யடைதற்கும், 'படைப் பயிற்சி' மிக அவசியமான தொன்றே. 'வீரம் செறிந்த நாடு' எனக் கவிகள் பாடும் பெற்றியை யடைய, நாம் படைக் கலை பயின்று மறு மலர்ச்சி யெய்துவோமாக!

---



# பெருந்தன்மை



(டர்பன்-திரு. முனிஸ்வாமி பிள்ளை.)

மக்களாவார்க்கு இன்றியமையாது இருக்க வேண்டியது பெருந்தன்மை—பெரியாரது தன்மை. அது செயற்கரிய செய்தல், தருக்கின்மை, பிறர் குற்றங் கூறாமை என்ற இவை முதலிய நற்குணங்களால் உண்டாவது.

நிலையில் மேன் மேலும் உயர்த்துவதாகிய இதற்குத் தன்னிலையில் தாழாமையும் ஒருதலையாக வேண்டப்படுவதாம். நாம் பிறரால் செய்தற்கரிய காரியத்தையே செய்ய முயல்வோம் என்று எண்ணி முயலும் ஊக்கம் மிகுதி உள்ளவராகிய ஒவ்வொருவரும் பெருமைக் குரியவரே.

அந்த ஊக்கம் அளவிறந்து செய்யும் உதவியாலும், கொடையாலும் பழகுவதாம். எல்லா மக்களுக்கும் படிப்பு பொதுவாகுமாயினும், செய்கின்ற தொழில்களால் சிறப்பியல்புகளும் வேறு உண்டு. பிறரால் செயற்கரிய செயல்களைச் செய்யாது, செய்தற்கெளிய செயல்களையே செய்து கொண்டு திரிபவர், உயரிய இடங்களில் இருப்பாராயினும் பெரியராகார். செய்தற்கரிய செயல்களையே செய்து திகழ்பவர், வறிய நிலத்திலிருப்பவராயினும் அவர் சிறியாராகார்; பெருந்தன்மைக்குரிய பெரியவரே.

தனது கற்பு நிலையினின்றும் வழுவாது பெருமிதத்தோடு விளங்கும் பத்தினிப் பெண்டிர்களது செயல்போலத் தனது நிறை குணத்தி னின்றும் வழுவாது, தன்னைக் காத்துக்கொள்ளும் குணமுடையோ னிடத்திலேயே பெருந்தன்மை தங்கி நிற்கும்.

இது, மனம் மொழி மெய்களை ஒடுக்கி ஒப்புரவு முதலிய செய்து வாழ்வதால் வளருவது. இங்ஙனம் பெருமையைப் பெற்றவரே வறியரான காலத்தும், செயற்கரிய செயல்களைச் செய்து முடிக்கும் திறனுடையவராவார்.

இத்தகைய சீரியாரது பெருமையை உணரும் வன்மை சிறியாரிடை காணல் அரிதாம். அச்சிறியார் தங்கள் தங்களிடத்திலுள்ள குடிமை, செல

வம், கல்வி என்ற இவற்றைக் கண்டு வியந்திருப்பர். இவை அப்பெரியாரிடத்தில் இயல்பாகவே அமைந்து கிடப்பன என்பதை அறியமாட்டார். அன்றியும் இப்பெரியாராகிய பெருந்தன்மை மிக்காரிடத்து நின்று, பெரும் பயனை விளைவிக்கும். சிறியாரிடைத்தோன்றின் செருக்குக்குள்ளாக்கி இடும்பையை ஊட்டும். பெருந்தன்மை மிக்கார் என்றும் பணிந்தே நடப்பர். சிறியார்போல் தறிதலையாகத் திரியமாட்டார். பெரியோர் பெருமை பேசிக்கொள்ளத்தக்க காரணமிருந்தும், அங்ஙனம் செய்யமாட்டார். பிறருடைய பெருமையே பேசுவார். இத்தகைப் பெரியோரே அனைத்துக் குணங்களாலும் நிறையப்பெற்ற சான்றோராவார்.

இது செய்யத்தகுவது, இது செய்யத்தகாதது என்று உணர்ந்து அறிவு சான்ற பெரியோர்க்கு நல்லனவாய குணங்கள் எல்லாம் இயல்பாகவே அமைந்திருக்கும் குணநலமே நலமாவது. உறுப்புக்களின் நலம் ஏதும் நன்மையைத் தருவதாகாது. சுற்றத்தார் மேலன்றிப், பிறர்மாட்டும் செல்லும் அன்பு, பழிப்பாவங்களுக்கு நாணல், யாவர் மாட்டும் உபகாரம் புரிதல், பகைவர் மேலும் கண்ணோட்டம் கொள்ளல், எவ்விடத்தும் உண்மை நிலை பிறழாதிருத்தல் என்ற இந்த ஐந்துமே சான்றாண்மையைத் தாங்கும் தூண்களாம்.

ஒருயிரையும் கொல்லாத அறச்செயலால் வளருவது நலம் என்பது போல, பிறருடைய குற்றங்களைச் சொல்லாது அறச்செயலால் வளருவது சான்றாண்மை. அச்சான்றாண்மையின் அறிகுறியாகிய அடக்கமே பகைவரை மாற்றும் படையாவது தன்னைப் பிறர்க்குத் தாழ்ந்தவன் என்று கூறிக்கொள்வதில் வெட்கப்படாதவனே சான்றாண்மை மிக்கவனாவான். தனக்குத் துன்பம் செய்தவர்க்கும் நன்மை செய்ய முயலாராயின் அவர் சான்றவராகார். சான்றோர்க்கு வறுமை எச்நாளும் இழிவைத் தருவதொன்றன்று. சான்றோர் ஊழிக்காலத்திலும் தம் நிலை பிறழமாட்டார். அன்னார் தம் நிலைதவறின் உலகமும் திரிந்துவிடும் என்பர் மேலோர். இச்சான்றோரே உலகினரைத் தம் வசப்படுத்தற் குரியவராவார். அன்னார் யாண்டும் நீதியையும், அறத்தையுமே விரும்புகின்றார்.

ஆதலின் உலகினர் பெரிதும் கொண்டாடப்படுவார், விளையாட்டாகக்கூடப் பிறரைப் பழித்தலைச் செய்யலாகாது என்ற கோட்பாட்டினையுடையவர். பெருந்தன்மையும் சான்றாண்மையும் நிறைந்து ஏனைக் குணங்களையும் பெற்றுள்ள பண்புடையவர்களைப் பெற்றிராத உலகம் இருப்பதிலும் இல்லாதிருத்தல் நல்லதாம். ஏனெனில், அவை நிரம்பியிராத மக்கள், மக்கள் உருவினராயினும் மரம்போன்றவரே. பண்பில்லாரது செல்வம், பாத்திரத்தின் கெடுதலால் சுவை கெட்டுப்போன பாலுக்குச் சமமாம். ஆதலால் மக்களாய்ப் பிறந்தார் ஒவ்வொருவரும் பெருந்தன்மை உடையவராய் சான்றாண்மை பூண்டு, பண்பின் மிக்க அன்புற்று இன்புற்று வாழ்ந்து உலகினை இன்புறுத்த முயலுவாராக.

---



# காதலனின் வீரத் தோள்கள்.

:(0):

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

இயற்கைத் தாய், தனது அற்புதத் தெய்வீக சௌந்தர்யம் முழுவதையும் வெளிப்படுத்திக் குதூகலித்திருக்கும் மாலை வேளை. மெள்ள மெள்ள மெல்லிதழ்களை விரித்து மலர்ந்த இனிய நறு மண மலர்களின் மகரந்தம் பொடியை வாரிக் கொண்ட இளம் பூந் தென்றற் காற்று, மென்மையாக வீசிக் கொண்டிருக்கும் அழகியதொரு பூஞ் சோலை. அச்சோலையினிடையே பளிங்குக் கல்லால் கட்டப்பட்டிருப்ப தொரு அழகிய மேடை. அம்மேடையிலே, சுமார் இருபது வயதுடைய இளமங்கை ஒருத்தி, கவலை தேங்கிய முகத்துடன் கூடியவளாய் அமர்ந் திருக்கிறாள். அவளெதிரிலே, பசும் புல் தரையின் மேல், அவளது தோழி அமர்ந்துகொண்டு, அவளது கவலை ததும்பி நிற்கும் முகத்தை மிகுந்த இரக்கத்துடன் உற்று நோக்கிக்கொண் டிருக்கிறாள். அத்தோழி, அத் தலைவியை நோக்கிப் பின்வருமாறு கூறுகிறாள்:—

"என் அன்பே! என் இந்த வீண் வருத்தம்? பெண்ணின் வருத்தம் உணராத பெருமானைக் குறித்து, நீ இடைவிடாமல் எண்ணி எண்ணி ஏங்கி சிந்தை நைந்து உருகிக் கலங்கி நிற்பானேன்? இரவும் பகலும் தன்னையே நினைத்து நினைத்து நெஞ்சு உலர்ந்து நிற்கும் ஒரு பேதை மாதிடம் சிறிதளவும் இரக்கம் கொள்ளாத ஒருவன் 'புருஷோத்தமன்'— என்ற தனிப் பெருஞ் சிறப்புப் பெயரைப் பெற்றவனா யிருப்பினும், அவனை 'உத்தம வீரன்' என்று ஒப்புக் கொள்வது எவ்வாறு? உனது பேதை மனம் இரவும் பகலும் அவன் ஒருவனையே நினைந்து நினைந்து உருகிக் கொண்டிருப்பதை, அப் பெரு மா மாயன் அறியாதவனா என்ன? அறிந்திருந்துங் கூட, இன்றளவும் உன் பக்கலில் மனமிரங்கா திருந்து வரும் அவ் வன்னெஞ்சனிடம், இன்னும் நீ காதல் மிகுந்து ஏங்கிக் கலங்கி நிற்பது ஏனோ?"

தனது தோழியின் பேச்சைக் கேட்ட அத் தலைவி, அவளது பேதைமையை எண்ணி ஒருமுறை எள்ளிச் சிரித்து, அவளை நோக்கிப் பின்வருமாறு பேசத் தொடங்குகிறாள்:—

"அடி, பேதாய்! 'மையல் செய்து என்னை மனம் கவர்ந்து கோண்டருளிய' எனது ஆருயிர்த் தலைவரின் தனிப் பெருங் கருணைப் பெருக்கை,

எவ்வண்ணம் வர்ணிக்க முடியும்? முற்பிறவிகளிலே நான் செய்த கொடிய வல்வினைத் திரளே, இப்பிறவியிலே இப்பொழுது இவ்வண்ணம் என்னைத்



துன்புறுத்துகின்றன. முன்னைய வல்வினைப் பயனாக கொடுந் துன்பங்களை

நுகர்ந்து கொண்டிருக்கும் பாவியேனுக்குப் பரிந்து, அருட்பெரு வள்ள லாகிய எனது இன்னுயிர்த் தலைவரை எனடி பழித்துப் பேசுகிறாய்? எனது ஹிருதயத்திற்கு ஆறுதலளிக்கக் கூடிய எனது காதலரின் வீரத் தோள்கள், என்றென்றும் எனது நெஞ்சில் வீரக் காட்சி அளித்த வண்ணமே விளங்கு கின்றன. ஆனால், அவ்வீரத் திருத் தோள்களின் ஆலிங்கனத்திற்கு உட் பட்டு நிற்கும் பரமானந்த பரவச நிலையை ஒரு முறையேனும் அனுபவித் துப் பார்க்க வேண்டுமென்ற பேரார்வம் ஒன்றே, இன்று என்னை இவ் வாறு நெஞ்சு உருகி ஏங்கி நிற்கச் செய்திருக்கிறது. அவ் வீரத் திருத் தோள்களின் ஒப்புயர்வற்ற பெருமையைச் சற்று கூறுகிறேன், கேள்:

செவ்வொளி வீசிச் சிறந்து விளங்கும் செம்பொற் றகட்டினால் செய் யப்பட்டு, பலவேறு நிறங்களுடைய விசித்திர ஒளிகளை வீசும் உயரிய நவ மணிகள் இழைக்கப்பட்டு அற்புத வேலைப் பாட்டுடன் அமைந்த தோள்வளை களை அணிந்த எனது காதலரின் வீரத் தோள்கள், நீல வானில் தோன்றும் பலவகை நிறங்களுடைய படிந்து கிடக்கும் நீலமலையைப் போல் விளங்கு வனவாகும். ஆனால் வானில் தோன்றும் அந்த இந்திர வில், சில கணங்களே இருந்து விரைந்து மறைந்து விடும் இயல்பின தாகும்; எனது தலைவரின் அழகிய வீரத் தோள்களோ, என்றென்றும் எனது ஹிருதயத்திற்குள் அருளொளி வீசி நிலைத்து நிற்பனவாகும்.

அவ் வீரத் தோள்களிலே அசைந்தாடிக் கொண்டிருக்கும் பசுந் துளவ மாலை, எவ்வளவு அழகாக விளங்கும் தெரியுமா? நாற்புறங்களிலும் நற் புது மணம் பரவும்படி செந்தேன் பெருகிச் சிந்திக் கொண்டிருக்கும் அந்த பைந் துளவ மாலையிலே, பலவகை நிறங்களுடைய கோடிக் கணக்கான வண்டு கள் பண்கள் பாடிய வண்ணம் மொய்த்துக் கொண்டு சுற்றிச் சுழன்று கொண்டிருக்கும். பைந் துளவத்தினின்றும் பெருகும் செந்தேனை உண்ட அவ்வண்டுகள், அத் தேனின் தெய்விக மாண்பினால் பக்தி மேலிட்டு, அவ் வீரத் தோள்களை விட்டு விலகிச் செல்லத் துணிவில்லாமல், அங்கேயே சுற் றிச் சுழன்று பலவகைப் பண்கள் பாடிக் கொண்டிருக்கும். அத்தகைய பைத்துளவ மாலை புரளும் பரந்த மார்பைத் தழுவி மகிழ, எனது மனம் எவ்வளவு ஏங்கி நிற்கிறதென்பதை நீ அறிவாயோ?

செவ்விதழ் விரித்துச் சிரித்து நிற்கும் செந்தாமரை மலரின் மேல், அழகுச் செல்வத்தின் அதி தேவதையாய் அமர்ந்திருக்கும் திருமாமகளா ராகிய பெரிய பிராட்டியார் என்ன? மெய்யன்பர்களின் பிழைகளைப் பொறுத்துத் திருத்தி உய்வித்து ஆட்கொண்டருளுமாறு எம்பெருமானை வேண்டி நிற்கும் அருட்பெருந் தாயும் பொறுமைக் காசியுமான பூமிப் பிராட்டியார் என்ன! எத்தகைய கொடிய துன்ப நிலையிலும் சித்தம் சிறி தும் கலங்காமல் உறுதியாக நின்ற உயரிய தெய்விகக் காதலினாலும் தனது இணையற்ற கற்பொழுக்கத்தாலும் எம்பெருமானது நெஞ்சிற்புகுந்து இடை யறாமல் குடிகொண்டிருந்த சீதா பிராட்டி என்ன! தனது நிகரற்ற அற்புத வடிவழகினாலே எம்பெருமானை எளிதில் வசீகரித்துக் கொண்டு, தன் பொருட்டு பயங்கரமான ஏழு எருதுகளுடன் போராடி வெற்றி பெறவும் தூண்டி நின்ற வீரச் செல்வியும், குறிஞ்சி நிலத்துக்கும் மருத நிலத்துக்கும் நடுவிடமான முல்லை நிலத்தில் குடியிருக்கும் இடைக்குலத்தினரை வாழ்விக்

கத் தோன்றிய குலமணி விளக்குமாகிய நப்பின்னைப் பிராட்டி என்ன! இத்தகைய மங்காப் பெருஞ் சிறப்புடைய மங்கையர் நால்வரின் குங்குமக் குழம்பணிந்த கொங்கைகளால் நெருக்கப் பெற்று குழைந்து நின்ற வீர மணித் தோள்களைத் தழுவி மகிழும் பேறு, பாவியேனது கொங்கைகளுக் கும் என்றேனும் ஒருநாள் வாய்க்காதோ என்று எனது மனம் எவ்வண்ணம் ஏங்கி நிற்கிறதென்பதை நீ உணரவல்லாயோ?

எனது இன்னுயிர்க் காதலரின் வீரத் தோள்கள், முற்காலத்திலே எத் தகைய அற்புத வீரச்செயலைச் செய்திருக்கின்றனவென்பதை நீ என்றே னும் கேட்டதுண்டோ? தம்மிடம் வந்து அடைக்கலம் புகுந்த அமரர் களின் பொருட்டு, தமது திருவுள்ளத்திற்கு மிகவும் உகந்ததான திருப்பாற் கடலையுங்கூட சுற்றிச் சுழன்று கத்திக் கலங்கும்படி கடையவும் துணிந்து விட்டார் அவ்வீரர் பெருமான். அப்பொழுது, அப் பாற்கடலில் பேரொலி எழுப்பி வெண்ணிற நுரைகளை விண்ணுலகிலும் சிதறிப் பெரிதும் கலங்க லாயிற்று; அக்கடலைக் கடைவதற்கு உரிய கயிறாகப் பயன்படுத்தப்பட்ட 'வாசுகி'யாகிய பாம்பு, மென்மை மிக்க அழகிய உடல் தேய்ந்து பெரிதும் அலறியது; அக் கடலைக் கடையும் மத்தாக நாட்டப் பட்ட மந்தர மலையோ, தனது சுந்தர வடிவம் தேய்ந்து வருந்திக் கலங்கியது. தம்மைச் சரண மடைந்து விட்ட அமரர்களின் துயரை அகற்றுவதற்காகவும், எல்லா உல கங்களுக்கும் இன்னருள் புரியும் அன்னையாகிய திருமாமகளாம் பெண் ணமுதத்தைப்பெற்று தமது தனிப்பெருங் கருணை என்றென்றும் குன்றாமல் சிறந்து விளங்கும்படி அவ் வருளரசியைத் தமது திருமார்பில் அமைத்துக் கொள்வதற்காகவும், அமரர்களுக்கு ஆரமிர்தம் அளித்தருள்வதற்காகவும், எனது இன்னுயிர்த் தலைவர் கடல் கடைந்தருளிய கதையைச் சிந்திக்கச் சிந் திக்க, எனது சிந்தையிலுங்கூட இன்னமிர்தம் ஊறிப் பொங்கித் ததும்பு கிறதடீ!

அப் பெருமானது இரு திருச்செவிகளிலும் இலங்கும் மணி மகர குண் டலங்கள் எவ்வாறிருக்கும் தெரியுமா? செஞ்சுடர்க் கிரணங்களை வீசிப் பகவில் உலவும் செங்கதிரோனும், வெண்ணிலவுக் கதிர்களைப் பரப்பி இர வில் திரியும் தண்மதியமும் ஒன்றோடொன்று மாறுபட்டு, ஒரே காலத்தில் இரு பெரு மலைகளில் தோன்றி ஒன்றையொன்று எதிர்த்துப் பெரும் போர் புரிவதே போல், அப்பெருமானது திருச் செவிகளில் விளங்கும் மணி மகரக் குண்டலங்கள் இரண்டும், குளிர்மதி போல் ஒளிரும் அவரது திருமுகத்தின் இருபுறமும் அசைந்தாடிக் கொண்டிருக்கும் காட்சி, கண் குளிரக் கண்டு களிக்கவேண்டிய அற்புதக் காட்சியடீ!

தமக்குத் தாமேயன்றி வேறு எத்தகைய ஒப்பு மில்லாமல் நிமிர்ந் திருந்து, சிறந்த வலிமை பெற்று, அழகு பெறத் திரண்டு அமைந்து, நிக ரற்ற கீர்த்தியினால் பூரித்துப் பரவி, நறு மணம் கமழும் கஸ்தூரி அணிந்து, மனோகரமான சுகந்தம் மிகுந்த கலவைச் செஞ்சந்தனத்தை நிறையப் பூசப் பெற்று, நாசியையும் ஹிருதயத்தையும் ஒருங்கே குளிர்வித்து மகிழ்விக்கும் நறுமணம் வீசும் எனது இன்னுயிர்க்காதலரின் சுந்தரத் திருத்தோள்களைத் தழுவி மகிழும் பேறு, எளியேற்கு என்றேனும் ஒரு நாள் கிடைத்து விட் டாலும் எனது ஆன்மா பரமானந்த மடைந்துவிடுமடீ!

முற்காலத்திலே, பிரம தேவனிடம் தான் பெற்ற வர பலத்ினாலே, தன்னை எதிர்த்துநிற்கத் துணிபவர் எவருமின்றி, எவ்வுலகத்தினரும் தனது அடிகளையே வணங்கி நிற்கும்படி வலியுறுத்தி, செருக்கு மிகுந்து கொடுங் கோல் செலுத்திக் கொண்டிருந்த வல்லரக்கனாகிய இரணியனது மலை போன்ற வலிமை மிகுந்த மார்பை இரு கூறுகளாகக் கிழித்து அவனை அழித்தொழித்த வீரப் படைகளாகிய வலிய நகங்களைக் கொண்டிருந்தவை எனது வீரக் காதலரின் மணிக் கைகளே என்பதை நினைக்குந் தோறும்—தன்னைச் சரணடைந்த மெய்யன்பர்களுக்கு இடையூறுகள் செய்பவர்களை, எனது இன்னுயிர்த் தலைவர் எவ்வளவு கடுமையாகத் தண்டிக்கத் துணிந்து விடுகிறா ரென்பதை எண்ணுந் தோறும்—அவரது சீரிய வீரச் செயல்களைச் சிந்திக்குந்தோறும், எனது நெஞ்சில் பொங்கி யெழும் உணர்ச்சிகளை எத்தகைய மொழிகளைக் கொண்டு எவ்வண்ணம் வெளியிடுவேன்?

அமரர்களின் முறையீட்டுக் கிணங்க, கொடுவினை புரிந்த அரக்கர்களை அழித்து மெய்யன்பர்களை உய்வித்தருள, எம்பெருமான் இராமபிரானாக அவதரித்திருந்தானன்றோ? அக் காலத்திலே, அப் பெருமான் தமது தேவியைச் சிறை மீட்க இலங்கை செல்லக் கடலில் அணைகட்ட முயன்று வருணனை வழி விடும்படி வேண்டி நின்றபோது, அவன் அலட்சியமா யிருந்ததைக் கண்டவுடன், அவன்மீது கொடுஞ் சினங்கொண்டு அக்கடல் நீர் முழுவதையும் வற்றச் செய்துவிடக் கருதி ஆக்னேயாஸ்திரத்தைச் செலுத்தத் தீர்மானித்து, தமது வீர கோதண்டத்தை வளைத்து நின்றாரல்லவா? பின்னர், இலங்கைக்குட் சென்று, தம்மை எதிர்த்து நின்ற இராவணன் தமது விற்போர்த் திறமையைக் கண்டு பெரிதும் வியந்து சிந்தை கலங்கித் திகைத்து நிற்கும்படி பெரிதும் சினந்து, தமது வீர கோதண்டத்தை வளைத்து கணை மழை பொழிந்தாரல்லவா? அவ்விரு நிலைகளும் இன்றும் எனது மனக் கண் முன் தோன்றி எனது நெஞ்சினின்றும் எழுப்பும் மகிழ்ச்சிப் பெருக்கை, வெறும் வார்த்தைகளால் வர்ணிக்கக் கூடிய சக்தி எனக்கு இல்லையடி!

தமது எல்லையில்லாப் பெருமைகளை யெல்லாம் சிறிதளவும் சிந்திக்காமல், தமது திருவுள்ளத்தினின்றும் பொங்கியெழுந்த கருணைப் பெருக்கினால், மிகுந்த எளியவர்களுடனும் கலந்து உறவாடி, தான் 'அடியவர்க்கு எளியவ'னாக விளங்கும் பேருண்மையை உலகுக்கு இனிது உணர்த்தியருளத் திருவுள்ளங்கொண்டு, எம்பெருமான் கண்ணபிரானாக அவதரித்துச் செய்தருளிய திருவிளையாடல்களை, நீ கேட்டிருக்கக் கூடும். அப் பெருமானது லீலைகளுள் சிலவற்றைச் சிந்திக்கச் சிந்திக்க, எனது நெஞ்சம் பெரிதும் கரைந்து உருகுகிறதடீ! வஞ்ச நெஞ்சக் கஞ்சனால் ஏவப்பட்டு, தன்னைக் கொல்லும் நோக்கத்துடன் மிகுந்த வஞ்சனையாக வனத்தில் தனித்து நின்று கொண்டிருந்த வல்லரக்கனின் மாய வடிவாகிய விளாமரம் தன் கனிகளைச் சிந்தி முறிந்து விழுந்து மடிந்து விடும்படி, அக்கஞ்சனாலேயே ஏவப்பட்டு மாயக்கன்று வேடத்துடன் வந்திருந்த மற்றொரு வல்லரக்கனைக் கண்டறிந்துகொண்டு, அம்மாயக் கன்றையே குறுந்தடியாகக் கொண்டு அவ் விளாமரத்தின்மீது வீசி எறிந்து, அவ்வல்லரக்கர்கள் இருவர்களையும் ஒரே சமயத்தில் வதைத்தருளிய பிள்ளைப் பெருமானாகிய எனது தலைவரின் திருவிளையாடலை என்னென்று வியப்பதடீ? கொக்கு வடிவம் கொண்டு வந்

திருந்த 'பகாசுரன்'—என்ற மற்றொரு அரக்கனின் அகன்ற வாயை, இரு கூறாகப் பிளந்ததும் அப் பெருமானேயன்றோ? எனது இன்னுயிர்த் தலைவர், சின்னஞ் சிறு செல்வ மணிக் குழந்தையின் வடிவங் கொண்டு கானில் திரிந்து விளையாடிக் கொண்டிருந்த காலத்திலுங் கூட, அவரது வீர மணித் தோள்களின் ஒப்புயர்வற்ற அற்புத சக்தி சிறிதும் குறைந்து விடவில்லையல்லவா?

முனிவர் தந்த சாபத்தின் பயனாக, நறுமண மலர்களைத் தாங்கி ஓங்கி வளர்ந்திருந்த குருந்த மரங்கள் இரண்டும் முறிந்து விழும்படி செய்து சாப—விமோசனம் செய்தருள்வதற்காக, நான் மறைகளுக்கும் கட்டுப்படாத தம்மை, இடைச்சி ஒருத்தியின் கையினால் உரலோடு பிணைத்துக் கட்டும்படி செய்து கொள்ளவும் திருவுள்ளம் துணிந்து நின்ற கருணைப் பெருக்கை—எளிமைப் பெருக்கை—நினைக்க நினைக்க, எனது நெஞ்சு நீராய்க் கரைந்து உருகுகிறதடீ! ஹிருதய பூர்வமான சீரிய தெய்விகக் காதற் பெருக்கினாலே, தம்மையும் தமது உறவினரையும் முற்றிலும் மறந்துவிட்டு, கண்ணன் ஒருவனையே தமது ஹிருதய சிம்மாசனத்தில் வீற்றிருக்கச் செய்துகொண்டு—அருமறைகட்கும் கிட்டாத அப் பெருமானைத் தமது அன்பு வலையிற் சிக்கச் செய்துகொண்டு—அப் பெருமானது அருள் விளையாடல்களையே நினைந்து நினைந்து நெஞ்சு உருகிக் கொண்டிருந்த ஆய்ப் பெண்களை மகிழ்வூட்டுவதற்காக அவர்களெதிரில் குடக் கூத்தாடி மகிழ்ந்தும் அவர்களுடன் கை கோத்து வட்ட வடிவில் நின்று தாள—லயங்கள் தவறாமல் குரவைக் கூத்தாடி மகிழ்ந்தும் நின்ற அப்பெருமானது திவ்ய லீலைக் காட்சிகளைப் புறக் கண்களால் கண்டு களிக்கக்கூடிய பேறு எனக்கு வாய்க்காமற் போய்விட்டாலும், அவற்றை நான் இப்பொழுதும் அடிக்கடி எனது அகக் கண்ணால் கண்டு களிப்பதுண்டு. நப்பின்னைப் பிராட்டி ஒருத்தியின் மெல்லிய தோள்களைத் தழுவ வேண்டி, போர்த் தொழிலிற் சிறந்த ஏழு எருதுகளையும் தன்னந் தனியாகச் சென்று தழுவி யழித்துச் சினந்தணிந்து வெற்றிச் செருக்கினால் பூரித்து நின்ற வீரத் தோள்கள், எனது இன்னுயிர்க் காதலருடையனவே யல்லவா?

சம்வர்த்தம்—ஆவர்த்தம்—புட்கலா வர்த்தம்—சங்காரித்தம்—துரோணம்—காளமுகி—நீலவர்ணம் என்று கூறப்படும் எழுவகை முகில்களும் பேரொலியுண்டாக இடித்து பசுக் கூட்டங்களும் அவற்றை மேய்க்கும் இடையர்களும் பெரிதும் திகைத்து நடுங்கும்படி மிக வேகமாகப் பொழிந்த பெரு மழையைக் கண்டு, அவர்களது அச்சத்தை நீக்கி அவர்களைக் காத்தருளி 'கோபாலன்' எனும் தனது திருப்பெயரை மெய்ப்பித்தருளத் திருவுள்ளம் கொண்டு, மிகப் பெரிய கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்து ஏழு நாட்களளவும் சுமந்து நின்ற எம்பெருமானது வீரத் திருத்தோள்களின் அற்புதத் தெய்விக சக்தியை, பேலதயாகிய நான் எவ்வாறு வர்ணித்துக் கூறமுடியும்? இரு விழிகளிலும் ஊழித் தீ போன்ற தீப்பொறி பறக்க—தன்னை எதிர்த்துப் போராடத் தன்னெதிரில் வந்த—'குவலயாபீடம்' எனும் கஞ்சனது பட்டத்து யானை நெஞ்சம் பெரிதும் சினந்து பேரொலி எழுப்பும்படி, வெஞ்சினங் கொண்டு அதன் முகத்திலிருந்த அழகிய தந்தங்கள் இரண்டையும் பிடித்துப் பறித்தெடுத்து அதன் செருக்

கொடுக்கிய வீரச் செயலைச் சிந்திக்குந்தோறும், எனது நெஞ்சிலே மகிழ்ச்சி பொங்கிப் பெருகுகிறதடீ!

பிணி—பசி—மூப்பு—பிறப்பு—இறப்பு முதலிய தொலையாத் துன்பங்களுக்குப் பெரிதும் பயந்த மண்ணுலகத்தவரும், அரக்கர்கள் முதலிய பகைவர்களால் நேரும் தொல்லைகளுக்குப் பெரிதும் அஞ்சிய விண்ணுலகத்தவரும் வந்து நின்று, 'அடியோங்கள் உமக்கே அடைக்கலம்! அடைக்கலம்!!'—என்று திருவடிகளில் விழுந்து வணங்குந்தோறும், குறுநகை தவழும் குளிர் மதி முகத்திலே கருணை பொங்கி அலை எறியும் செந்தாமரைக் கண்களால் அவர்களைக் குளிர நோக்கி, அவ்வருட்பார்வை ஒன்றினாலேயே அவர்களது அகத் துயரை நீக்கி, 'அஞ்சேல்!'—'அஞ்சேல்''—என்று அபயம் அளித்து அவர்களைக் காத்தருளும் அருள் திருத் தோள்களல்லவா, எனது தலைவரின் வீரத் தோள்கள்! பகைவர்களின் மேல் பாய்ந்து அவர்களது செருக்கை ஒடுக்கும் பணி எப்பொழுது கிடைக்குமோ என்னும் நோக்கத்துடன் திருக்கையினின்றும் வெளிப்படச் சித்தமாகக் காத்து நிற்கும் 'பிரயோக சக்கர'மும், பகைவர்கள் நெஞ்சம் நடுங்கவும் அன்பர்களின் மனம் குளிரவும் வெற்றி முழக்கம் செய்யும் வீரத் திருச் சங்கும், முறையே நீல மலையினின்றும் ஒரே காலத்தில் எழுந்த வெங்கதிரோனைப் போலும் வெண் மதியம்போலும் முறையே ஒரு புறம் வெயிலையும் ஒரு புறம் நிலவையும் எதிருக்கெதிரே கதிர் வீசிச் சிறக்கும்படி ஒளிவிட்டு விளங்க, அவ்விருவகை ஒளிகளினாலும் அற்புதப் பேரழகு பெற்று விளங்கும் எம்பெருமானது வீரத் திருத் தோள்கள், மெய்யன்பர்களின் உள்ளத்திற்கு எவ்வளவு பேராறுதல் அளிப்பனவாக விளங்குகின்றன என்பதை நீ உணரவல்லாயோ?

பொருளுணர்வதற்கு அரிய வடமொழி மறைகளிலே உறுதிப்படுத்தப்பட்ட விசேஷத் தத்துவார்த்தங்களின் சித்தாந்தத்தை, 'எங்ஙனே சொல்லினும் இன்பம் பயப்பன'வும் முழுதும் 'செவிக்கினிய செஞ்சொற்க'ளாலேயே அமைந்தனவும் இன்னமிர்தம் போலும் இனிமை மிகுந்த செந்தமிழ் மொழியிலே திருவாய் மலர்ந்தருளப் பெற்றனவுமாகிய சடகோபாழ்வாரின் திருவாய்மொழித் திருப்பாசுரங்களைப் பெற்று, 'வெய்ய வாள்—தண்டு—சங்கு—சக்கரம்—வில் ஏந்தும் விண்ணோர் முதல்!'—என்று பெரிதும் வியந்து மகிழ்ந்து போற்ற நின்ற எனது இன்னுயிர்த் தலைவரின் வீரத் திருத்தோள்கள், எம்போன்ற ஏழை மங்கையரின் நெஞ்சைக் கவர்ந்து அடிமை கொண்டுவிடுவது இயல்பேயன்றோ?

இதுகாறும் கூறிவந்த இவ்வளவு பெருமைகளையும் தாங்கி, ஒப்புயர்வற்ற தனிப் பெருஞ் சிறப்பைப் பெற்று நிற்கும் வீரத் திருத்தோள்கள் எவை தெரியுமா? 'பை கொள் பாம்பணை'யை விரும்பி, 'உறங்குவான் போல் யோகு செய்தருளும் பெருமா'னாய்—திருவரங்கப் பெருநகரிலே, 'அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளி கொள்ளும் அணியரங்கப் பெருமா'னாய்—'முகுந்தன்' என்னும் திருநாமத்தைப் பெற்று, பொன் மலைமேல் கிடக்கும் நீலமணி போலும் அருளொளி பரப்பிக் கிடந்தருளும் 'முகில் வண்ணப் பெருமா'னாய் விளங்கும் அழகிய மணவாளப்பெருமானின் வெற்றி மிகுந்த வீரமணித் திருத் தோள்களே அவை. அத்தகைய அருட்பெரு

வள்ளலின் வீரத் திருத் தோள்களைத் தழுவி மகிழும் தனிப் பெரும் பேறு, இப்பிறவியிலேயே எனக்கு ஒரு முறையேனும் வாய்த்துவிடுமாயின், நான் பெண்ணாய்ப் பிறந்ததன் சீரிய பெரும் பயனைப் பெற்று உய்ந்தவளாய் விடு வேன். அப்பேற்றை அடியேற்கு அளித்தருள, அரங்கநாயகனது திருவுள்ளம் இனி என்றுதான் இரங்குமோ அறியேன்."

(—இக் கட்டுரை, திவ்ய கவி—பிள்ளைப் பெருமாள் ஐயங்காரவர்கள் இயற்றிய திருவரங்கக் கலம்பகத்தில் ஏழாவது திருப்பாசுரமாக அமைந்துள்ள 'புய வகுப்பு'—என்னும் வண்ண விருத்தத்தின் கருத்தை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டதாகும்.)

---

# இரக்கமே இராஜ்யம்

(இராஜாராம்.)

ராஜம் அழகான பெண்; மனமும் அப்படியே. மனத்திற்கு அழகு என்ன? இரக்கம் அல்லவா! இரக்கமே ராஜமாக பிறந்தது என்று சொன்னால் பொருத்தமாக இருக்கும். ஆயினும் என்ன! அவள் ஒரு ஏழை வேளாளன் மகள்.

இவளது நற்குணங்களை கண்டு களிக்க கொடுத்து வைக்காத இவள் தாய் இவளை ஏழு வயதில் விட்டு இறந்து விட்டாள். இவள் தந்தைக்கு உயிர் இவள்மீதே. "தீனதயாளு" என்ற பெயருக்குத் தக்கபடி அவர் மனமும் ஏழைக்கு இரங்கும் இயல்புள்ளது.

காலை கூலிக்காக வெளியே செல்பவர் மாலைதான் திரும்புவார். என்ன செய்வது! ஒருநாள் தவறினும் பட்டினிதான். அவர் வரும்போது கொண்டுவரும் தானிய மூட்டையையும் காட்டுக் கீரையையும் வாங்கிக் கொண்டு, அவர் கையைப்பற்றி ஆடிவருவாள் ராஜம். அதுவே அவருக்கு பேரானந்தம். இப்படியே ஏழு வருஷங்கள் கழிந்தன.

வயது வளர்வதேபோல் அழகும் அறிவும் வளர்ந்தது. வீட்டிலேயே சிறிது எழுதப் படிக்கவும் தெரிந்து கொண்டாள். இயற்கையான இரக்க குணமும் வளர்ந்தது.

தன்னிடம் உள்ள சிறிய குறையை நீக்க நினையாத சந்திரன், உலகத்தின் பெரிய இருளை நீக்குவது போல் ராஜம் தன் ஏழ்மையைக் கருதாமல் ஏழ்மையால் வருந்துவோருக்கு இரக்கம் கொள்வாள். இதனாலேயே ஏழைகள் இவளை 'சந்திரமுகி" என்று சொல்வதுண்டு.

பிச்சைக்காரர்கள் இவளை பிரபுவின் மகள் என்று நினைத்தனர். அவ்வூரார் "தருமராஜாத்தி" என்று அழைப்பது வழக்கம்.

## (2.)

ஒரு நாள் மந்தை வெளியில் பெரிய கூட்டம். இரைச்சல் அதிகம். எங்கும் "அய்யோ! பாவம்!" என்ற வார்த்தையே மிஞ்சியது. இடையே உற்று கவனித்தால் "ஐயோ அம்மா! அப்பா! என்ன செய்வேன்! பசி காதை அடைக்குதே! சாப்பிட்டு மூணு நாளாச்சே! தருமவான் இல்லையா? புண்ணியவான் இல்லையா?" என்று பரிதாபகரமான மெல்லிய குரல் வந்து கொண்டிருந்தது.

ராஜம் தந்தையின் வரவைக்காண வழக்கப்படி வெளியே வந்தாள். மந்தை வெளியின் கூட்டத்தையும் பேரிரைச்சலிடையே தோன்றும் தீனமானகுரலையும் கவனித்தாள்.

மஞ்சள் வெயில் பரவிய மாலை நேரம். அவள் அறியாமலே அந்த ஓசை ஓர் இனிமையைத் தந்தது. இவ்வளவு இனிமையான குரலை யுடையவர் யாரோ! இவர் படும் வேதனை இவருக்கு வரத்தக்கதாக தோன்றவில்லையே!'' என்று எண்ணமிட்டாள்.

பிறர் கஷ்டப்படுவதைப் பார்த்தால் அவள் தேகம் நடுங்கும் கண்கள் தானாகவே நீர் பெருக்கும். மனம் பதைக்கும். எப்படியாவது அவர்களுக்கு உதவவேண்டும் என்று எண்ணுவாள்.

இரக்கம் உள்ளவர்களுக்கு இல்லை என்பது எது? "மனம் உண்டானால் இடமுண்டு" என்பது பழைய வார்த்தை. அப்படியே ராஜம் தன்னிடம் உள்ளதைச் சிக்கனமாக செலவழித்து மிச்சம் பிடித்து ஏழைகளுக்கு உதவும் குணமுள்ளவ ளல்லவா?

உடனே புறப் பட்டது அவள் கால்கள். "யாராக இருந்தால் என்ன?" பசிவந்திடப் பத்து பறக்குமன்றோ! இந்த கூழைக் கொண்டுசெல்லுகிறேன். பசிதணியட்டும். உண்மையை விசாரிப்போம்'' என்று கூட்டத்தை யடைந்தாள்.

ராஜத்தைக் கண்ட எல்லோரும் வழிவிட்டனர். அங்கே பிச்சைக்காரன் போல் தோன்றிய ஒருவன் சோர்ந்து கிடந்தான். நினைவின்றியே சத்தம் செய்து கொண்டிருப்பது போல் தோன்றியது.

"அடே!'' என்பாரும், "அப்பா!" என்பாரும், தடியாலதட்டுவாரும், குச்சியால் குத்தி கூப்பிடுவாரும், சூழ்ந்திருந்தனர். ஒருவராவது தொடத் துணியவில்லை. அவ்வளவு எளியவனாகக் காணப்பட்டான்.

கண்டாள் ராஜம். கிட்ட சென்றாள். "ஐயா! ஆகாரம்'' என்று குயிலினும் இனிய குரலால் அன்பொழுகக் கூப்பிட்டாள்.

பிச்சைக்காரன் அரைக்கண் திறந்து இனிய சத்தம் வந்த இடத்தைக் கவனித்தான். அரக்கர்கள் மத்தியில் ஜானகியின் குரல் வேறுபட்டு தெரிந்ததே போல் ராஜத்தின் குரல் கேட்டது. அவன் முகம் புத்துயிர் பெற்றது. என்னதான் மூட முயன்றாலும் கண்கள் தானாகவே திறந்துகொண்டன.

முகத்துக்கு முகம் சந்தித்ததும் ராஜம் மின்ஸார சக்தியால் தாக்கப்பட்டதுபோல் பிரமித்துப் போனாள். வாடிய அந்த பிச்சைக்காரன் முகத்தில் அவள் கண்டது என்ன? அவளுக்கே விளங்காத ஓர் வித உணர்ச்சியால் தன்னை மறந்து நின்றாள். மனம் ஏதேதோ எண்ணமிட்டது. கடைசியாகத் துணிந்து "ஐயா! பசியால் வாடி இருக்கிறீர். இந்தாரும் ஆகாரம்'' என்றாள்.

"ஐயோ எனக்கு கைவல்லையே! எவராச்சிம் வாயிலே போட்டுடுங்களேன்'' என்று பரிதாபமாக கெஞ்சினான் பிச்சைக்காரன்.

ஒருவரும் முன்வரவில்லை. ராஜம் சற்று யோசித்தாள். இளகியமனம் பின் வாங்க வில்லை. துணிவடைந்தாள். பிச்சைக்காரன் தலையை இடது கையால் பிடித்தாள்; வலது கையால் கூழை வாயில் ஊற்றினாள்.

பிச்சைக்காரன் முகம் பூரித்தது; சுவைத்துச் சுவைத்துக் குடித்தான்.

சூழ் ஆகி விட்டால் "தன்னை ஸ்பரிசித்துக் கொண்டுள்ள கைகள் விலகி விடுமோ!" என்று எண்ணினவன் போல் மெதுவாகக் குடித்தான்.

"அதிக பசியால் தொண்டை காய்ந்துவிட்ட"தென்று எண்ணி வருந்தினன் ராஜம். மார்பைத் தடவினுள். முந்தானையால் களை நீங்க விசிறினுன்.

தன்கடமையை தான் செய்வதாகவே கருதினுள். பிகைசச்சாரனின் ஸ்பரிசம் அவளுடைய மனத்தையே மாற்றிவிட்டது. தேகம் ஓர் சுக புருஷனுடையது போல அவ்வளவு மெதுவாக இருந்தது.

வெளித் தோற்றத்தால் வேடிக்கை பார்க்கும் ஜனங்கள் இதை எப்படி அறிவார்? பிச்சைக்காரன் பசிதணிந்து முகம் மலர்வதே ராஜத்துக்கு பேரானந்தமாக இருந்தது.

"ஓ! பிச்சைக்காரனை தீண்டிவிட்டாள்" என்ற பேரொலி எங்கும் பரவியது. அதை நம் பெண்மணி லக்ஷியம் செய்யவில்லை.

(3.)

மணி ஆறு ஆயிற்று. கருப்புத்திரை விரித்தது போல் இருள் மூட ஆரம்பித்தது. ஆனல் அந்த திரைமுன் மின்ஸார விளக்கிட்டது போல் சந்திரன் உதயமானுன்.

ராஜத்தின் தந்தையும் வந்தார். வீட்டில் மகளைக் காணுமல் மனம் பதைத்தார். மந்தை வெளியைப் பார்த்தார். ஒரு வேளை அங்கு இருக்கலாம் என்று ஓடி வந்தார்.

கிராமத்தாரின் பரிகாச வார்த்தை காதைப் பிளந்தது. பிச்சைக்காரனுக்கு உணவு கொடுத்துக் கொண்டிருந்த ராஜத்தைக் கண்டார். சந்தோஷம் கொண்டார். 'ஆ! நீயே என் மகள்' என்று பூரித்தார்.

வேடிக்கை பார்த்திருந்தவர்கள் "பேஷ்! பேஷ்!" என்று நகைத்தனர். ஓ! தீனதயாளு! நீ சைவ வேளாளனல்லவா? ஜாதியறியாத பிச்சைக்காரனை, அதுவும் வயது வந்த உன் மகள் தொடுவதா?" என்று கூச்சலிட்டனர்.

தீனதயாளுவின் மனமும் மாறுபட்டது. "ராஜம்! என்ன இது! இரக்கமிருந்தால் சோறு போடு! அதை வாயில் ஊட்டலாமா? உனக்கு இவ்வளவு சுதந்திரம் கொடுத்தது என் மேல் பிசகு?" என்று கோபித்தார்.

"தந்தையே! பசி என்பது ஏழை பணக்காரன், பிராமணன் பறையன், உயர்ந்தோன் தாழ்ந்தோன் என்ற பேதம் பார்க்காமல் வருத்தும் போது அதை விலக்குவதில் மாத்திரம் பேதம் பாராட்டலாமா?

பசி என்ற அக்கினி கடவுளால் ஜீவர்களின் உணவுகளைப் பக்குவப்படுத்தி பலனுள்ளதாக்கும்படி எல்லோருக்கும் பொதுவாக ஏற்பட்டிருக்கிறது. அந்த அக்கினியைத் திருப்திசெய்யும் முறையில் வித்தியாசம் காட்டல் மகாபாபமன்ருே? இது நீங்கள் அறியாதல்லவே!" என்று இனிமையாக மொழிந்தாள்.

"ராஜா! நீ அதிகப் பிரஸங்கி யாகி விட்டாய்! எனக்கும் உபதேசம் செய்கிருயா? நான் சொல்வதை அலக்ஷியம் செய்கிருய்! இனி நீ வீடு திரும்

பாதே! பிச்சைக்காரனையே மணந்து கொள்!" என்று படபடவென்று பேசினர்

ஒருநாளும் கோபியாத தந்தையின் முகத்தைக் காணவும் தாளாத ராஜம் தலை குனிந்தாள். "ஐயோ! அன்னமிட்டு, வருத்த முகத்தைக் காட்டினல் பலனற்றதாகி விடுமோ!" என்று பிக்சைக்காரன் இருந்த இடத்தைப் பார்த்தாள்.

எல்லோரும் திடுக்கிட்டார்கள்! ராஜம் தன் கண்களை நம்பவில்லை! என்ன ஆச்சரியம்! பிச்சைக்காரனைக் காணோம்! அவன் உடைகளே காணப்பட்டன. அந்நாட்டின் அரசன் நின்றான்.

"ஆ! தீனதயாளு! நீரே பாக்யவான்! அழகுக்குத் தக்க குணமுள்ள பெண்ணைப் பெற்றீர்! பொன்மலர் மணம் பெற்றது போல் அழகும் குணமும் ஒருங்கே அமைந்தது.

உன் மகள் மணக்க வேண்டிய பிச்சைக்காரன் யானே! பெயருக்குத் தக்கபடி ராஜாத்தியாக வேண்டியவள் தானே! இரக்க குணம் உள்ள அழகான பெண்ணைத் தேடியே இந்த வேஷத்துடன் ஊரூராய் அலைந்தேன். இரண்டும் அமைந்தவர்களைக் காணவே இல்லை.

இவ்வளவு உதாரத்வம் பொருந்திய சீமாட்டியாகிய உன் மகள் என் போன்ற பிச்சைக்காரனை மணக்க சம்மதிப்பாளோ! என்று தான் எண்ணமிடுகிறேன்.

இரக்கத்தின் அரசியே! இந்த எளியவரின் வேண்டுகோளை அங்கீகரிப்பீரா?" என்று ராஜத்தைப் பார்த்தான் அரசன்.

ராஜம் வெட்கத்தால் தலை குனிந்தாள். இனிய பார்வையுடன் புன்னகை புரிந்து நன்றியை தெரிவிக்கும் மாதிரியாக நின்றாள்.

அடுத்த நாளே தீனதயாளுவும் ராஜமும் ராஜதானியை அடைந்தனர். ராஜம் ராஜாத்தி ஆனாள். ஏழைகள் மகிழ்ந்தனர். ஜனங்கள் "அரசன் கலியாணமின்றி இருக்கிறாரே!" என்ற வருத்தம் ஒழிந்தனர். ராஜத்தின் இரக்கமே ராஜ்யத்தைக் கொடுத்ததைப்பற்றி புகழாதவர் இல்லை.

தருமராஜ்யம் தழைத்தது தருமசத்திரங்கள் இலவசப் பாடசாலைகள், கைத் தொழில் சாலைகள் எல்லாம் ஏற்பட்டன. வாழையடி வாழையாய் ராஜ்யத்தைத் தாங்கும்படியாய் அழகிய இளவரசனும் அடுத்த வருடமே அரண்மனையில் தவழ்கிறான்.

அடிக்கடி "அம்மா சோறு! அப்பா சோறு!" என்று மந்திரத்தைச் சொல்லி அரசி அரசனைக் கேலி செய்கிறாள்.

"அந்த மந்திரங்களல்லவா என் உயிர்மணியை அளித்தன. என் குடி மக்கள் வருத்தம் நீக்கும் கற்பகத்தருவைப் பெற்றேன்" என்று அரசியின் கன்னத்தில் முத்தமழை பொழிகிறான் அரசன்.

அரசியும் அதை வட்டியுடன் திருப்பிக் கொண்டிருக்கிறாள். தீனதயாளு கவலை இன்றி அரண்மனையில் ஓர் தவசிபோல் சந்தோஷமாக வசிக்கிறார்.

---

# அடியார்கள் எழுதிய அழகர் ஓவியம்

——:0:——

(கூடற்பதி-நாவுக்கரசன்.)

அலைகடலையாடையாயுடுத்த அண்டத்தையும் அதின்கண்வதியும் சர அசரப் பொருள்களையும் படைத்து காத்து துடைத்து மறைத்து அருளும் இறைவன் ஒருவன் உளனென்பதை இயற்கை இன்ன முதை யருந்தி இன்ப நலந் திளைக்கும் யாவரும் எவ்வாற்றனும் என்றும் யாண்டும் அறியலாகும். அத்தகைய முதற்பொருள் தான் உண்டாக்கிய அம்மன்னுயிரனைத்தும் ஒருபொருள் பிறபொருளான் மயங்கி உழன்று அழியாது தடுத்தாட் கொள்ளும் பொருட்டு இன்பமேனும் துன்பமேனும் ஈந்து தன்னினைவு அவற்றிற்குண்டாமாறு செய்து அவ்வுயிரின்கண் தன் னினை வமைதற்குக்காரணமாக எவ்வுருவில் அவ்வான்மாக்கள் நினைக்கின்ற னவோ அவ்வுருவிற்றனே நின்று காட்சி யளித்து பரிபக்குவமடையும் ஞான்று பேரின்பமாய தன்னகத்தை தனதம்சமாய அந்நுண் பொருள் அடையுமாறு அருளுகின்றது. இதனையே அப்பர் சுவாமிகள்

ஆருருவ உள்குவார் உள்ளத்துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந் தோன்றும்:—(232-11)

எனக் கூறியிருப்பதுங் காண்க.

அத்தகைய உருவங்கள் எண்ணில. ஆயின் அப் பல் திறப்பட்ட அவை அன்றன்று தோன்றி மறையாது அனைத்தும் நிலைபெற்றது என்னையோ வெனின்: ஓர் உருவத்தினராய் முழு முதற்பொருளை நினைத்து அவ்வுரு வத்தில் இறையைக்கண்டு இன்பம் எய்திய அன்னவர்களினது வழி வழி வந்தோர் அவ்வுருவிலேயே அருட்பெருங்குன்றை வணங்குவோராயினர். " உருவென் பொருட்டு வேண்டும்? கோவில் என்னத்திற்கு வேண்டும்? 'நினைப்பவர் மனங் கோயிலாக் கொண்டவன்' என்பதற்கேற்ப மனத்தினல் நினைப்பின் ஆகாதோ " என்னில்,

'மனமெனு இழுதை' எனக் கம்பநாட் டாழ்வாரும்,
'பாவி மனக் குரங்காட்டம்' என இராமலிங்கரும்,
'சிந்தையை யடக்கியே சும்மாவிருக்கின்ற திறம் அரிது'

எனத் தாயுமானரும் கூறியது போல, பொறிவாயில் ஐந்தவித்து முற்றும் துறந்த முனிவர்கள் அன்றி, இன்பம் போலும் காணப்படும் இவ்வுலகத் துன்பங்களில் மூழ்கி பரிபக்குவ மடையாத மன்னுயிர்கள் தம் மனத்து எப் போதும் அகலாது நிகழும் பல உலக எண்ணங்களை யெல்லாம் விடுத்து அவைகளை வென்று, இறைவனைப்பற்றிய சிந்தனைக்கு தன் மனத்தே சிறிது நேரம் இடங் கொடுக்கவேண்டுமானல், தனது குழந்தைப் பருவமுதல்

தாய் தந்தையர் உலகத்தார் பலரானும் தெய்வம் என்று எண்ணி வணங்கப்படும் ஒருருவத்தின் வாயிலாகவே அது இலேசாக முடியும் என்பது எம்போலியரின் கருத்து.

மேற்கூறியவற்றான், மனத்தின்கண் இறைவனைப்பற்றிய சிந்தனையைப் புகுத்தற்பொருட்டே பல்லாண்டாக தெய்வத்தன்மை பொருந்தியதாக பதிக்கப்பட்ட ஓர் உருவம் வேண்டும் என்பதும் 'பல்லூழிகாலம் பரனையர்ச்சித்தால் நல்லறிவு சற்றே நகும்' என்பதற்கேற்ப எவ்வளவு அதிக நேரம் யாம் இறைவனை நினைக்கின்றேமோ அவ்வளவுக்கும் பலன் அதிகரிக்கும் என்பதும் பெற்றும். ஆயின் அத்தெய்வ உருவை யாம் கண்கொண்டு காண்கின்றும். எவ்வளவுநேரம் காண்கின்றேமோ அவ்வளவு நேரம் அத்தெய்வ நினைவு கண்வழி சென்று மனத்துள் நின்று அருளூட்டுகின்றது. அழியும் அக் கண்களின் இயற்கை யென்னவெனிலோ உலகப் பொருட்கண் எப்பொருள் மிக்க அழகுற்று விளங்குகின்றதோ அப்பொருளை அகலாது நெடுநேரம் நோக்குந் தன்மையது. எப்பொருள் எவ்வளவு அழகு இருக்கிறதோ அவ்வளவுநேரம் அவ்வழகெனும் தேனைத் தானே வாயாகக்கொண்டு தன் வழியே அருந்தி மனம் எனும் வயிறு நிறைந்து திருப்தி யடையச் செய்யும். அக்கண்கள் தெய்வ உருவத்தை நோக்கும்போதும் அந்தத் தன்மையையே காட்டும். எனவே, யாம் மிக்க பயன் அடைய வேண்டுமெனில் நீண்டகாலம் இறைவனை நினைப்பதில் பொழுது கழிக்கவேண்டும். நெடுநேரம் இறைவனை நினைக்க வேண்டுமாயின் யாம் வணங்கும் தெய்வ உருவத்தை நீண்டநேரம் கண்களால் நோக்கவேண்டும். ஆகலின் அவ்வுருவம் கண்களுக்கு மிக்க அழகுடன் பொலிவதா யிருத்தல் நலமன்றோ?

திருவுருவங்களை கல், உலோகம், கட்டை முதலியவற்றான் அமைப்பதில், என்னதான் மிகச் சிறந்த சிற்பியினால் கைதேர்ந்த வேலைப்பாடுடையதாக செய்யினும் அவற்றுள் ஒரோவொரு வண்ணத்தைத்தானே காணலாம். உதாரணமாக, ஒருவர் 'அம் பொறி மயில்மீதூர்ந்த ஆறுமுகனை' வணங்குவதாக வைத்துக்கொள்வோம். கல்லினால் செய்யப்பட்ட அவ் வறுமுகனது உருவில், நீலநிறக்கடலின் மீது செவ்விளஞ் சூரியன் கண்டாலென, அழகிய மயிலின் நிறத்தையும் அதன்மீது சிவந்த மேனியையும் பொன்னிற வேற்படையையும் காண்பது எங்ஙனம் இயலும்? இயலாதன்றோ! ஆனல், அத்தகைய உருவினை ஓவியமாக எழுதியமைத்து வணங்கலா மன்றோ? எனின், கல்லுருவைவிட இவ்வுருவம் வண்ணப்பண்பில் வளமுடைத்தாயினும் வடிவப்பண்பில் திருவுருவின் அவயவம் அனைத்தும் காண்பதற்கில்லையே! மற்று அவ்வுரு முன்னுருவைவிட மிக சீக்கிரம் அழியுந் தன்மைத் தன்றோ?

இதென்ன? அவ்வுருவுமின்றி இவ்வுருவுமன்றி பின் எவ்வுருவிற்றான் வண்ணமும் வடிவும் அழகும் மிகுந்து பொலியும் என்று வினவின், இறைவனை அழகுள்ள உருவத்தில் அமைத்து வணங்கின் நீண்டகாலம் வணங்க இயலும் என்பதையும், அதன் பயனாக அதிக நலன் அடையலாம் எனும் உண்மையையும் அறிந்து, அத்தகைய உருவிற்கு முன்கூறிய இரண்டுருவும் உதவுமேனும் 'அவை யிரண்டினும் சிறந்தது மானசீகமாக அமைத்து வணங்கும் அவ்வுருவே சிறந்தது' எனத் தேர்ந்து அத்தகைய அழகிய உரு

வொன்று சிருட்டித்து, அழகன் எனும் நாமம் புனைவித்து, அவ்வுருவத்தில் அவரைக் கண்டு அருள் எய்திய, தெய்வபக்தியும் செந்தமிழ்ப்புலமையும் சிறந்து விளங்கிய அம் மெய்யடியார்கள்—அநேக ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்த அன்னவர்கள்—தம் வழி வழிவரும் மன்னுயிர்களும் அவ்வுரு வில் இறையைக்கண்டு அன்பு பெறுமாறு, என்றும் அழியாத சொல்லெனும் கல்கொண் டமைத்த சுவற்றில், பொருள் எனும் எழுத்தாணியால், அணி யெனும் வண்ணம் கொண்டு, தீட்டிய பாவெனும் ஓவியத்துள் அமைத்து தந்த அழகரது (மானசீக) உருவத்தில்தான்.

அவர்களின் நினைவுக்கேற்ப அதற்குப் பின்வந்தோரும் அம் மானசீக உருவினை வணங்கி வளம்பெற்று, தாமும் ஒவ்வொரு சொல்லோவியம் தீட்டி வைத்து வீடெய்தினர். அத்தகைய உருவத்தின் அழகுதான் என்ன! திருமேனியின் வண்ணம் நல்ல நீலம். கண், கை, கால், உந்தி யிவை இளஞ்சிவப்புநிறம். இரு கரங்களின் ஏந்திய சங்கு சக்கரங்களோவெனில் பரிசுத்த தன்மையை விளக்கும் வெண்ணிறம். திருமுகமோ, பதினறுகலை களும் பொருந்திய மறுவற்ற மதியம். உடுக்கும் ஆடையோ உரைமாற் றளவற்ற பொன்னுலாயது. பூணும் ஆபரணங்களோவெனில் மின்னலை யொத்த பிரகாசம் பொருந்தியவை. அவரது வாகனமோ செம்பட்டை நிறம்பொருந்திய தெய்வப்புள். பள்ளி கொண்டிருக்கையிலோ மாணிக்கங் களை சிந்துகின்ற ஆயிரம் படங்களையுடைய அரவமே நிழலைச் செய்வ தோடு தன் உடலைச் சுருட்டி அணையாக உதவுகிறது. அழகர் என்றாலும் அவ்வுருவுக்கல்லவா தகும்!

இனி, அவ்வழகரை மெய்யடியார்கள் எவரெவர் எவ்வெவ்விதம் மானசீக உருவில் சொல்லோவியமாக அமைத்தனர் என்பதை ஆராய்வாம். திருவாய்மொழி எழுபத்தொன்பதில் முதற்பாசுரத்தின்கண்,

"கருமாணிக்க மலைமேல் மணித்தடந் தாமரைக் காடுகள்போல்
திருமார்பு, வாய், கண், கை, யுந்தி காலுடை யாடைகள் செய்யபிரான்"

என்று, ஆழ்வார், அழகரது சரீரத்தின் நீலவண்ணத்திற்கு கருமாணிக்க மலையையும் தேகத்தில் பொருந்திய சிவந்த அங்கங்களுக்கு கருமாணிக்க மலையிற் பொருந்திய தாமரைக்காட்டையும் இல்பொருள் உவமையாகக் கூறி யிருப்பது எவ்வளவு மானசீகமாக இருக்கிறது. இதையே கம்பர்,

"கண்ணுற்றுன் வாலி, நீலக் கார்முகில் கமலம் பூத்து
மண்ணுற்று......... .....வருவதே போலும் மாலை."

என்று கூறி யிருக்கிறார். இந்த பாக்களில் தேகத்தையும் அவயவங்களையும் மட்டுந்தானே அழகான சொல்லோவியமாக அமைக்கப்பட்டிருக்கின்றது. ஆனல் இதோ பாருங்கள்!

மதிதாங்கிக் கஞ்சம்பூத்து, மின்பத்தி செயும் பச்சைமாமுகில் போலழ கர் இந்த வரிகளில் இன்னும் இரண்டு அழகு அதிகரித்திருக்கிறது. ஒப் பற்ற பெரிய பசுநிறமேகம் தன்னிடத்தில் கலைநிறை சந்திரன் பிரகாசிக்க மின்னல்கள் பத்திபத்தியாய் மின்ன சிவந்த தாமரைக்காடுகள் பூக்கப்பெற்று இருக்குமானல் என்ன அழகாக இருக்கும். அப்படி யிருக்கிறதாம் அழக ரின் காட்சி; அவருடைய திருமுகம் ஒளிபொருந்தி யிருப்பதாலும் கண்ட

வர்க்குக் குளிர்ச்சியைச் செய்வதாலும் மதிக்த ஒப்பிடப்பட்டிருக்கிறது. பூணும் ஆபரணங்கள் ஆரம் ஆரமாக தொங்குகையில் ஒளிவீசுவது பத்தி பத்தியாக மின்னுவதற்கு உவமிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஒவியம் மெய்யடியார் பிள்ளைப்பெருமாளையங்கார் இயற்றிய அழகர் அந்தாதியில் 'எத்து மின்' என்று தொடங்கும் கட்டளைக் கலித்துறையில் காணப்படுகிறது.

இன்னும் ஒருவர் அழகெல்லாவற்றையும் ஒன்று சேர்த்து பிரம்மிக்கும் படி கூறி யிருக்கிறார் பாருங்கள்.

"விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி
இருமருங் கொடிய இடைநிலைத் தானத்(து)
மின்னுக்கொடி யுடுத்து விளங்குவில் பூண்டு
நன்னிற மேகம் நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி
நலம்கிளர் ஆரம் மார்பில் பூண்டு
பொலம்பூ ஆடையிற் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்."

நல்ல நீலநிறமேகம் ஒன்று சூரிய சந்திரர்களை இருபுறம் பெற்று பொன்னிறமான மின்னலை யுடுத்து சப்த நிறங்களோடு கூடிய இந்திரதனுசைப் பூண்டு தாமரைக்காடுகள் பூக்கப்பெற்று நின்றால் எவ்வளவு அழகாக விருக்கும். நீலநிறமேகம் அழகரது திருமேனி. சூரியசந்திரர்கள் வெண்மை நிறம் பொருந்திய இருபுறமும் ஏந்திய ஆழியும் சங்கும். மின்னல் அவர் உடுத்தி யிருக்கும் பொன்னிற ஆடை. இந்திரதனுசு, திருமேனியில் பூணும், மரகதம், கோமேதகம் முத்துபவளம் முதலிய நவமணிகளாலும் இழைக்கப்பட்ட ஆபரணங்களின் வரிசை. தாமரைக்காடு அவரது திருக்கை கண் முதலியன. எத்தனை வண்ணங்கள்! எவ்வளவு பொருத்தமான உவமைகள்! என்ன அழகான உருவம்! மற்றவர்கள் உவமையை மட்டும் அமைத்திருக்க உவமேயம் உவமானம் இரண்டையும் பொருத்தி அம்சங்கள் பலவற்றையும் விருத்தி செய்திருக்கும் இவர் யாரோ ஒரு ஆழ்வார் என்றுதானே எண்ணுகிறீர்கள். அதுதான் இல்லை. சங்ககாலத்து தமிழ் இலக்கியத்துள் தலைசிறந்து விளங்கும் பெருங் காப்பியமாகிய சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகள் செய்த ஒவியமே மேல் கூறிய அடிகள்.

இவைகளில் கூட அழகர் வாகனத்தோடு எழுந்தருளும் அழகு வருணிக்கப்பட வில்லையல்லவா? அந்த குறையை கம்பர் தீர்த்து விட்டார் இதோ இந்த நான்கு அடிகளில்.

கருமுகில் தாமரைக் காடுபூத்து நீடு
இருசுடர் இருபுறத் தேந்தி யேடவிழ்
திருவொடும் பொலியவோர் செம்பொற் குன்றின்மேல்
வருவபோல் கலுழன்மேல் வந்து தோன்றினான்.

பிறகும் இராம பட்டாபிஷேகத்தில், அந்த உருவம் தனது திருமனைவி

யோடும் வீற்றிருக்கும் அழகையும், அத்தகைய அழகினைக் காண்போர் அவ்வழகு காரணம்பற்றி அதிகநேரம் இறையைத் தியானித்து அதன் பயனாக அடையும் பலனையும் ஒன்றுசேர்த்து, கீழ்வரும் பாவில் அமைத்திருக்கும் ஓவியத்தையும் உண்மையையும், உற்று நோக்குங்கள்.

"மரகதச்சயிலம் செந்தாமரை மலர்க்காடு பூத்துத்
திரைசெறிக் கங்கைவீசும் திவலையால் நனைந்து செய்ய
இருகுழை தொடரும் வேற்கண் மயிலொடும் இருந்ததேய்ப்ப
பெருகிய செவ்விகண்டார்; பிறப்பெனும் பிணிகள் தீர்ந்தார்."

மேற்கூறிய அழகின் அம்சங்கள் அனைத்தையும், ஒன்றில் விடுபட்டதை மற்றொன்றில் இருந்து எடுத்து சேர்த்து பொலிவு நிறைவுற,

"கருநிற மேகங் கஞ்சக் காடுடைத் தாகித் தூய
இருசுடர் ஏந்தி, வண்ண இந்திர தனுவைப் பூண்டு
பொருவில்பொன் மின்னுடுத்தி பொறியுடை மயிலும் நிற்க
பெரிய செங்குன்றின்மேற் போய் படிந்தது போலும் (கண்ணன்.)

ஓவியம் ஒன்று மானசீகமாக அமைத்தால் என்ன அழகாக விருக்கும். அழகையே நோக்கும் அழிவுறும் கண்கள் அடியார்கள் தீட்டிய அழகர் ஓவியத்தை விட்டு அகன்று வேறொன்றை காணுமா?

"கருணையங்கடலை யென் கண்ணை விட்டகலா
கருமணியைக், கோமளத்தைக் கண்டுகொண்டேன்
கண்டுகொண்டேன் கண்டு கொண்டேனே."

---

# பொன் மொழிகள்

(வித்துவான்-ரா. நமசிவாயம்.)

1. இல்லறம் ஒரு நாணயம். கணவனும் மனைவியும் அதன் முன் பின் புறங்கள். இந்நாணயம் தேய்ந்து போனால் இதன் மதிப்பும் பெருமையும் குறைதலுடன் இதனால் பெறக்கூடிய வீட்டினையும் அடைதல் முடியாது. அன்றியும் எந்நாட்டிலும் எக்காலத்தும் செல்லுபடியாகாது.

2. கல்விக்கு இருவர் தேவை! அதில் நீ ஒருவனாயிரு!

3. விருப்பும் வெறுப்பும் நேர் விரோதமா யிருந்தாலும் அவை எப்பொழுதும் இணைபிரியா நண்பர்களாயிருக்க வேண்டுமென்பதே இயற்கையின் ஏற்பாடு.

4. எவனொருவன் தன்னை உண்மையாய் நேசிக்கின்றானோ அவன் தன்னுடைய தேகம், மனம் முதலிவைகளுக்கு இடையூறான ஒன்றையும் சிந்திக்கவாவது, செய்யவாவது துணிய மாட்டான்.

5. ஒரு பெண்ணை ஒருவன் தாயென நேசிக்கின்றான். இன்னொருவன் சகோதரி எனவும், வேறொருவன் காதலி என்றும் விசுவாசிக்கின்றான். என்னே பெண்ணின் மகிமை? பெண் ஓர் மாயை, ஒவ்வொருவருக்கும், வேறு வேறாகத் தோன்றுகிறது. என்னே, இப்பிரபஞ்ச விநோதம்!

6. இவ்வுலகம் ஒரு கண்ணாடி. நீ நகைக்கும்போது அதுவும் நகைக்கும். நீ முகம் சுளிக்கும்பொழுது அதுவும் சுளிக்கும். ஆகவே, அதனிடம் சரியாய் நடந்து கொள். அது உன்னைத் திருத்திவிடும்.

7. சண்டைக்கு இருவர் தேவை! அதில் நீ ஒருவனாயிராதே.

8. தங்கள் முகத்தைக் கடுமையாக வைத்துக்கொண்டு கொடுமையான வார்த்தைகளைச் சொல்லி மயக்கினும், தங்கள் மனத்துள் சிறிதும் வேறுபாடில்லாமல் தீபத்துள் பொருந்திய பிரகாசமான ஜுவாலை போன்று, அசைவற்றிருப்பவர்களே பரிசுத்த மனமுடையோராவர்.

9. துவளும்படியான சிறிய கொம்பாக வழியில் நின்ற இள மரமும், உள்வயிரங் கொண்ட காலத்து, மத யானையையும் கட்டுதற்குரிய தறியாகிவிடும். அதுபோல் சோம்பலுக்கு அடிமையாகாமல் தன்னை மேன்மையடையச் செய்வானாயின் அவ்வாறே மேன்மை யடைவான்.

10. நீ உன் காரியத்தை மாத்திரம் பார்த்துக்கொள்வது தவறு. நீ ஒரு ஆலமரம் போல் இருந்து கொண்டு உன் நிழலில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் ஒதுங்க வேண்டும்.

11. தன்னையே "அறிவிலி" எனக் கருதுகின்ற ஒருவன் தன்னுடைய வாணாளையே வீணாளாக்கிக் கொள்வதோடு தனக்குத் தானே குழியுந் தோண்டி புதைக்கப்பட்டுப் போகின்றான்.

12. மனிதன் தன்னிஷ்டப்படி நடக்க உரிமையுடையவன். ஆனால் பிறருடைய சுதந்திர உரிமைக்கு ஒரு சிறிதும் தன்னால் இழுக்குவராதபடி மட்டும் பார்த்துக்கொள்ள வேண்டும்.

# தாய்க் கடனாற்றல்



(பூதை. S. C. முத்து.)

**தலைவன் தாங்கண்ட கனவைப் பாங்கனுக் குரைத்தல்.**

அந்திப் பொழுதினிலே—யானும்
அடர்ந்ததோர் காட்டி(ன்)நடுவிடையே சென்றேனை
பந்தலிட்டாற் போன்ற—பசும்
பைங்கொடியே படர்ந்தோர் மாத்திற் சுற்றி
சந்த நிழற்றந்தே—அங்கே
தண்ணென் றிருந்தது தங்கினே னேயானும்
இங்கிதப் புல்லழகும்— பச்சை
இரத்தினக் கம்பளத் தொத்ததிருந்திட —(அந்தி)

தென்றல் நறுங்காற்றும்—வீசி
சிலீர் சிலீரென்றெனை தங்கங் குளிர்ந்தது
பொன்வரிப் பட்சிகளும்—சிலப்
பொங்கிப் பறந்துநற் கீதங்கள் பாடவே
அற்றே சற்றயர்ந்தேன்—அந்தோ
அடக்க வொணுக் கனவொன்றது கண்டேன்
கண்டவுடன் தானே—மனது
கலங்கியே வாரி யெழுந்துமே நின்றது —(அந்தி)

கனவது வென்னவெனின்—நல்ல
கட்டழகு வாய்ந்த கன்னியா ளொருத்தி
கண்முன்னே தோன்ற லுற்றுள்—யானுங்
காட்சி தருமிவள் யாரென்று நோக்கினேன்
வண்ணப் பொன்மேனியினுள்—தலை
வாரிப் பின்னுமலே தொங்கிடவுமந்த
மாதும் வருந்தி நின்றுள்—முகம்
அடக்க வொண்ணுத தேக்கமது கொண்டு —(அந்தி)

செங்கண் கருங்குவளை—முத்துச்
சிந்தியே கண்ணீருதிரவுமே யவள்
தேங்கித் தேங்கி யழுதாள்—கையிற்
சிக்குந் தழைபூட்டி நிற்கவே கண்டயான்

பொங்கு மழுகையினல்—"உன்
புனிதப் பெயரேது" என்றுமே கேட்டேன்
"சங்கத் தமிழீ யென்ருள்—கையிற்
றழையைத் தவிரென கையை யுயர்த்தியே —(அந்தி)

தேங்கித் திகைத்து நின்று—"மறு
தேசத்தா ரெல்லாஞ் சிரித்திடவே யானும்
பங்கப் பட்டுப்போனேன்"—எனப்
பாரதத் தாயவள் ஓலமிட்டனளே
அங்கயற் கண்ணியினுள்—"நீங்கள்
அனைவருஞ் சேர்ந்தெனை யாதரிக்காம லென்
சங்கத் தமிழ்மேனி—இப்போ
தளர்ந்து மிழிந்துந் தயங்கல் கண்டிலேயோ —(அந்தி)

எனதரு மக்களன்ருே—உங்கள்
இதயத் திடத்தே தமிழார்த்த மூறி
எங்கும் பரந்திடச் செய்—இதற்
கெதிர்ப்ப திருந்தால்நீ எங்கி விடாதே
சந்தப் பிள்ளைக்கழகு—தாய்க்குத்
தகுந்ததைச் செய்யுங் கடமை யீதென்ருள்
இந்த வுரைகேட்டு—யானு
மெழுந்துமே நின்றேன் யாரையுங் காணேம் —(அந்தி)

தாயை மறந்தோமே—நமது
தன் கடமைத் தலையைத் துறந்தோமே
வாயும் நமக்குளவோ—நமது
மானமுங் கெட்டு மதிப் பிழந்தோமே
தீயைத் தணித்தமொழி—நமது
தெய்வத் திருமொழி செம்மொழி நம்மொழி
தூயகுணத்தோனே—உயிர்த்
தோழனே நம்மொழியே யுணர்ந் துய்குவோம். —(அந்தி)



# வாழ்க்கைத் திறவுகோல்

(T. R. இராஜகோபால்.)

"Truth is the summation of man's experience at any given moment; truth is a lantern that illuminates his next few steps; past truth becomes incomplete as a greater truth replaces it; truth is an instrument for the creation and working out of a human purpose, becoming sharper and more effective as that purpose itself becomes clearer, and as man's reading of natural process becomes more and more accurate.

"If a philosophy is to be a real, living guide to man, it must illuminate the part he has to play in reshaping the world so that his ideals may be finally achieved."

பூகம்பம்—எரிமலை—கடும்புயல்—இறுகக் கட்டி நொறுக்கும் சர்ப்பம்—கிழித்துதறித் தள்ளும், அல்லது கபடமாகப் பற்றிப் பக்ஷிக்கும் விலங்கினங்கள் நிரம்பப் பெற்றது இயற்கை உலகம். பிறப்பிறப்புக்கள்—சுக துக்கங்கள்—வெற்றி தோல்விகள்—உவப்பு வெறுப்புகள்—ஆசை ஆசாபங்கங்கள்—துர்க்கொலை களவு போர்கள் மலிந்து நிற்கப் பெற்றது வாழ்க்கை உலகம். தோன்றி மறைதலும்—பெருகிச் சிறுகுதலும்—வளர்ந்து தேய்ந்து மடிதலுமாகச் சதாகாலமும் இயங்கும் குணம் வாய்க்கப் பெற்றன பிரகிருதிப் பொருட்கள். இன்னமும் வீணர்களும் விடர்களும் ரமித்துச் சுகித்துப் பெருவாழ்வு வாழ்கின்றனர்; ஆனால் ஞானமும் சுசீலமும் நிரம்பிய பேரான்மாக்கள் வெறுத்துதறித் தள்ளப்பட்டு வாடி வதங்கிப் பெருமூச்செறிந்து மாய்கின்றனர்! ஒவ்வொரு நாளும் காலை முதல் மாலை வரையில் இடைவிடாமல் பாடுபடுபவர் பெற்று அநுபவிப்பன எவை எனின், கொடுந்தரித்திரமும்—தீராப் பசியும் பிணிகளும்—பலியாத ஆசைகளும்—வலி வருத்தமேக்க மாகியவைகளுமேயாம்! சூது வாதுகளிலும் கட்குடியிலும் பரத்தையர் கூட்டத்திலும் ஆடல் பாடல்களிலும் ஓய்வொழி வில்லாமல் தம்முடைய வாணுட்களைப் போக்கி வரும் புல்லியரும்—அயலவரை ஒறுத்து வருத்திவரும் துரான்மாக்களும் ரமித்துச் சுகித்து வருகிறார்கள்! குரூபிகள் ஆராதித்துத் தொழப் படுகிறார்கள்; ஆனால் அன்பும்—இனிமையும்—விவேகமும் ததும்பும் பரோபகாரிகள் தூற்றி விலக்கப் படுகிறார்கள்! எனினும், இவர்களுக் கிடையில், துரோகி எனவும்—மடியன் எனவும்—கருமி எனவும் இகழப் படுபவன், ஏனையோர் எதிர் பாராதபடிக்கு, அரும் பெரும் காரியங்களில் ஈடுபட்டு இணையற்ற தீரவீரனாகவும்—தர்மியாகவும்—மாந்தரின் வழி காட்டியாகவும் உயர்ந்து விளங்குகின்றான்! பல்வேறு நற்குண நடத்தைகளை உடைத்தாயிருந்தும் தக்கன செய்யாது, கர்வமுற்றுத் தம்மை அதி மேதாவிகளெனப் பாவித்து அயலவர்களை நிந்தித்துப் பொருளும் பொருத்தமும் உபயோகமுமற்ற கற்பனைகளை உண்டு பண்

ணிக் குழப்பி, மாந்தரிற் பெரும்பாலோரையும் மெய்வழியினின்று வெகு தூரம் அப்பாற்படுத்தித் திகைக்கச் செய்பவரும் இருந்து வருகின்றனர்! "வாழ்க்கை உலகை உற்றுப் பார்த்தலானது அழல் மண்டியெரியும் எரி மலையை ஊன்றி நோக்குதலை ஒத்துளதாகும்."

இவ் வுலகமானது ஓர் விநோதக் காட்சியாகவும், வாழ்க்கையானது விபரீதச் சம்பவங்களை நிரம்பவும் உடையதாகவும், வாழ்க்கைப் போக்குகள் வெகு விசித்திரமானதாகவும் தோன்றிய போதிலும், அதினிமித்தம் மனங் கலங்கி உள்ளத் துடிப்புற்று அவைகளைத் தூஷித்துத் துறந்து ஓடி அமர் தல் விவேகத்தின் அறிகுறியன்று. சூரிய வொளியை நோக்கிக் கம்பீர மாக உயர்ந்து மலரும் ரோஜா புஷ்பத்தைக் கவனியாது, முட்களால் அது சூழப்பட் டிருப்பதையும், இருளும் அசுசியும் மிகுந்துள்ள பூமிக்குள் வேர் விட்டு நிற்பதையும், கடைசியில் வாடி வதங்கி அழுகிப் போதலையுமே கவனித்து அதை ஒதுக்குவாருண்டோ? "ஆறிலும் சாவு, நூறிலும் சாவு. அறமும் அழகும் யௌவனமும் நித்தியச் சாதனங்களன்று. மேலும் ஒவ்வொரு வஸ்துவிலும் அவைகள் பூர்ணமாகத் தோன்றி விளங்குவனவுமன்று. அறிஞன் அறிவிலி—ஆண் பெண்—தனவான் தரித்திரன்—அரசன் ஆண்டி—தர்மிஷ்டன் தீயன் யாவரையும் சுழற்காற்றும்—பெருந் திவலைகளும்—கருங்கடலும் — மின்னலிடிகளும் — திமிங்கிலமும் — புலியும்—நோய்களும்—மரணமும் பாரபக்ஷ மில்லாமல் தாக்கி முறித்து வீழ்த்தி யழிக்கின்றன! இவ் விஷயங்களைப் பார்த்தறிந்தும், வாழ்க்கையையும்—வாழ்க்கை அநுபவங்களையும் — உலகையும்—உலக சாதனங்களையும் பொருட்படுத்திப் பெரிதும் பாடுபட்டு வருபவரின் மதி என்னே! உலகும் உலகாதிகளும்—அவைகளின் அமைப்பும் போக்கும் நம்முடைய ஆட்சிக் குட்பட்டு நம்முடைய க்ஷேமத்திற்கும் இன்பத்திற்கு மானவாறு இயங்கி இருந்து வருவனவன்று. மானுட ராசியானது பதறி ஓடியாடிப் பரதவித்துப் பறக்கும் பதர்கள் போலும்! "தேகம் ஆத்மாவின் கல்லறையாகும்" நித்தியமாய்—நிராமயமாய்—நிர்மலமாய்—நிட்களமாய்—நிறைவாய் விளங்கும் தேஜோமயானந்த வஸ்துவை இப்பிரபஞ்சமும் பிரபஞ்சாதிகளும் இழிவு படுத்துவனபோலும்! ஆதலால், "பகையும் பணிப்பும் இடும்பையும் பிணியுமிடுக்கிய யாக்கையைத் துறவு என்ற கோடரியினால் பிளந்து, விழுப்பொருளறியா வழுக்குறு மனதையும், ஆணவமலத் துதித்து உளைந்திடும் நினைவைப் புழுவென நெளிந்திடுஞ் சிந்தையையும் நிராசையாகிய நெருப்பினால் தகித்துச் சாம்பராக்கி, புலவழி யலைத்திடும் கனவெனும் வாழ்க்கையைக் களைந்து," "நானெனவும் நீயெனவு மிருதன்மை நாடாமல் நடுவே சும்மா தானமரு நிலையே சுகம்" என்ற உண்மையைத் தெளிந்து, "எல்லாம் வைத்திருந்த தாரகத்தை" நோக்கி "உடல் குழைய—என்பெலாம் நெக்குருக—விழிநீர் ஊற்றென வெதும்பி யூற்ற"க் கதறிப் பணிந்து, இறுதியில், ஈசனருள் பெற்று அவனுள் ளொடுங்கி மறைதலேதான் வாழ்க்கைக் கருத்தாகும்." "இவ்வாப்த மொழி"களைக் கேட்டிராதவர்க ளில்லை.

பிரபஞ்சமும் பிரபஞ்சாதிகளும் எல்லையற்ற ஞானமும் கிருபையும் ஆனந்தமும் ததும்பப்பெற்ற பரம்பொருளால் படைத்துப் பரிபாலிக்கப் பட்டுவருவன என்றால், மேற்காட்டிய "விபரீதங்களும் விபத்துக்களும்"

அச் சிருஷ்டிகளுக் குட்பட்டனவன்றோ? அல்லது, "நன்மை"களுக்கு அதிகாரி ஒருவனும், "தீமை"களுக்கு அதிகாரி மற்றொருவனுமாக இருவரோ ஆட்சி செலுத்தி வருகின்றனர்? இவ்வாறாயின், "எல்லாம் வைத்திருந்த தாரகம்" என்பதின் பொருளென்னையோ? ஜடனும் ஜீவனும் கோடிக் கணக்கான ஜீவராசிகளும் "பரிபூரணானந்தத்தி னின்றுண்டாகித் திளைத்து லயிப்பன" எனின், காட்சி உலகைக் கூறுபடுத்தி, ஒரு பாகத்தைப் பற்றிச் சிலாகித்தலும், மற்ற பாகத்தை நீக்கி இகழ்தலுமோ விவேகம்? விதம் விதமான வஸ்துக்களையும் தோற்றங்களையும் பலன்களையும் உவந்தளித்துவரும் "கருணாகரக் கடவுளின் கருணை"யைப் பெறுதற்கான உபாயம் எது வெனின், அவனுடைய உலகையும் சாதனங்களையும் சாதகங்களையும் இடுங்கிக் குறுகிய நோக்கத்துடன் பார்த்து வெறுத்துத் தூஷித்துத் தள்ளிச் செயலற்றுக் கிடந்து கண்மூடிப் போதலோ? வாழ்க்கைப்பற்றை அழித்தற்காகவோ நாம் எல்லோரும் தோன்றி வருவது? மழுக்கி அணைத்தற்காகவோ ஜீவ ஒளியானது சர்வக்ஞனால் நமக்கு அருளப்பட்டிருக்கின்றது? உலகாதிகளின் இயக்கங்களையும் வாழ்க்கையின் சுழற்சிகளையும் மாற்றங்களையும் பார்த்துக் கலங்கித் திகிலுற்று அவைகளினின்று அதிசீக்கிரத்தில் தப்பியோடிப் போதற்காகவோ ஜீவசக்தியை நாம் பெற்று வருகின்றோம்? சாந்தநிலையெய்தி உயர விரும்புதலானது, உண்மையில், மரித்து அழிந்து போக விரும்புவதாகும். தூற்றி விடுத்தற்கான உலகையும், வெறுத்துத் தள்ளுவதற்கான காட்சிகளையும், கூடிய சீக்கிரத்தில் எவ்விதத்திலாயினும் தப்பியோடிப் பிழைக்கவேண்டிய முடிபுடைய வாழ்க்கையையும் ஆக்கிக் காத்துவரும் "பிதா"வின் அறிவையும் அருளையும் சக்தியையும் பற்றி நாம் யாது நினைப்பது!

அழகும் விகாரமும், இன்பமும் துன்பமும், நன்மையும் தீமையும் இவ்வுலகாதிகளில் பிரிக்கக்கூடா வண்ணம் இயைந்து இறைந்து கிடப்பன.

அவைகளைப் பிரித்து நமக்கு ஆனவைகளையே யேற்று அநுபவித்தல் இயலாததாகும். தீமையில்லாமற் போயின், நன்மையும் இல்லாமற் போம்; தீமையை முற்றிலும் அழிக்க முயற்சிப்பின், நன்மையும் தானே அழிந்து விடும். விகாரம் எனப்படுவது இல்லையானால், அழகின் வனப்பும் சிறப்பும் புலப்படாது. பற்பல முயற்சிகளுக்கும் இன்ப சுகாநுபவங்களுக்கும் தூண்டுகோலாவது இன்மை உணர்ச்சி, அல்லது வறுமையாகும். தீமைகளுக்குத் தூண்டுகோலும் பக்கபலமுமாவது செல்வமாகும்; எனினும், செல்வமில்லையானால் எக்காரியத்தையும் ஏற்றுச் செய்து இனிது முடித்துத் திருப்தியுறுதற் கியல்வதில்லை.

நானாவித ஜீவத்தோற்றங்களைப் பற்றுகளேதான் உண்டுபண்ணிப் பிரித்துச் சேர்த்து மாற்றிப் பெருக்கி முன் பாயவும் மேலேறவும் உதவுவன போலும். வித்தகர் அறிந்து விரிக்கவேண்டிய மெய்ப் பிரச்னை யாதெனின், "சேதனாசேதனப் பொருட்களெல்லாம் தற்சமயத்தில் தோன்றி இயங்கி வருகிறபடிக்குத் தோன்றி இயங்கி நீடித்து இருந்து வர வேண்டுமா, அல்லது உடனே அவைகள் முற்றிலும் அழிந்து விட வேண்டுமா?" என்பதாகும்.

சுருக்கத்தில், தீராத அச்சமும்—மடியும்—சந்தேகமும்—விபரீத உணர்ச்சியும்—ஒரு தலை சார்பும்—குருட்டு பக்தியும் பூரிக்கப் பெற்றுள்ள புன்மாக்களுக்கு இப்பூவுலகில் யாதொரு வேலையுமில்லை போலும். நினைத்ததையே நினைத்துச் செய்ததையே செய்து, அநுபவித்தவைகளையே அநுபவித்துவரும் சோகையர்க்கும் கோழையர்க்கும் இப்பிரபஞ்ச வாழ்க்கை தக்கதன்று. வீரிய உணர்ச்சியும்—பலமும்—ஆர்வமும்—ஆழ்ந்து பரந்த நோக்கமும்—தீர்க்காலோசனையும்—தன்னம்பிக்கையும்—நன்னம்பிக்கையும்—குறைவுறாச் சிரத்தையும்—சோர்வுறா ஊக்கமும்—தளரா உழைப்பும் உடையவர் தான், பிரபஞ்ச அமைப்பையும், வாழ்க்கைப் போக்கையும் கருத்தையும், உலகாதிகளின் தன்மை-சீர் சிறப்புக்களையும் உபயோகத்தையும் செம்மையாக அறிந்துணர்ந்து இனிது வாழ இயலும். இல்லாததைக் கற்பித்துக் கஷ்டசாத்தியமானவைகளை அவாவி உள்ளதைத் திரித்தலாலும் சிறுகிய நோக்கத்தாலும் உண்மையை நாம் உணர முடியாது. இச்சா சக்தி—ஞான சக்தி—கிரியா சக்திகளை ஊட்டிப் பெருக்கி முன் செல்ல உதவாத தத்வக் கோட்களும் மதச்சாதனைகளும் டம்பாசாரங்களும் சிறுத்துக் குறுகிய மனப்பாங்கும் பயனற்றவையாம்; மற்று அபாயகரமானவையாம்.

இன்னமும், பொறிகளின் போக்கை அநுசரித்து புலனறிவைப் பற்றி நடத்தல் துர்மரணத்திற்கும் இழிந்த வேதனைகளுக்கும் காரணமாதலால், அவைகளை அடைத்து விட வேண்டும்! ஒவ்வொரு ஜீவான்மாவுள்ளும் மறைந்து நிற்கும் பரமான்மாவின் ஆக்ஞையை ஒட்டி நடத்தலே தான் சீரியது. எனினும், புலச் "சேஷ்டைகள்" மூலமாகத்தான் விவேகம் வளர்ந்து அநுபவம் முதிர்கின்றது; விவேக வளர்ச்சியினின்றும் வாழ்க்கை அநுபவங்களினின்றுமே தான் "ஆத்ம ஞானம் சுரக்கின்றது. இம்மெய்யை அறியாது, மேற் சொல்லியவாறு பிதற்றுதல் புத்தியீனமன்றோ? தேகம் எனவும் ஜீவன் எனவும் அந்தர்யாமி எனவும் பகுத்து, ஒன்றைப் பாபக்கேணி எனவும்—துர்க்கந்த ஊற்றெனவும் பரிகசித்து மற்றதை உயர்த்திப் போற்றுவதின் பொருளும் பொருத்தமும் என்னேயோ? தேகியின் உய்விற்காக அந்த ரான்மாவானது ஒவ்வொரு தேகத்தினுள்ளும் நிறைந்து உறைந்து ஆக்ஞா சக்கிரம் உருட்டுவதாகவும் ஒவ்வொரு தேகியும் தன்னுடைய பரிபக்குவ நிலைமைக்கும் தேவைக்குமான தேகத்தைப் போர்த்து "வாழ்க்கை நாடக"த்தை நடத்தி வருவதாகவும் அருமறைகள் அறைவதை ஒப்புக்கொண்ட போதிலும், கடுந்துறவை மக்களனைவர்க்கும் தகுதியான ஒரே செந்நெறி எனவும், வாழ்க்கை இழிந்ததெனவும் கழறுவதில் விவேகமென்னேயோ? வீர சூரர்களை விடக் கண்களை யடைத்துக் காதுகளைப் பொத்திப் "புல வியாபார"ங்களை ஒடுக்கி, இருளடர்ந்த காட்டிலும், ஸ்மசானத்திலும், பனிமலைகளின் உச்சியிலும் அமர்ந்து, "யோக நித்திரை"யி லாழ்ந்து காலத்தைப் போக்கும் "ஞானியே" பகவானுக்கு உகந்தவனெனச் சாதிப்பதற்கும், அகில புவனங்களை யெல்லாம் படைத்துக் காத்துவரும் சக்தி மாதாவை அநுதினமும் ஸ்மரித்து ஆராதிக்க வேண்டுமெனப் போதித்து, நம்முடனிருந்து சுகதுக்கங்களை யநுபவித்து நம்முடைய வளர்ச்சிக்கும் க்ஷேமத்திற்கும் பாடுபட்டு வரும் தாய்களையும் சகோதரிகளையும் மனைவியர்களையும் பகைத்துப் பாசக்

கயிற்றினுல் நம்மை இறுகக் கட்டித் திக்குமுக்காடச் செய்யும் யமபடர் என ஓலமிடுதற்கும் ஆதார மென்னேயோ?

"அஞ்சா நெஞ்சம்—இனிய கீதங்கள்—ரம்மிய ஆடல்கள்—கம்பீரத்தோற்றங்கள்-வீரமொழிகள்—தைரியச் செயல்கள்—துல்லிய கவிதைகள் முதலாயினவெல்லாம் வெறுப்பிற்குப் பாத்திரமான வெறும் ஆரவாரங்களோ? நீல ஆகாயமும்—விண்ணே நோக்கி நிற்கும் பர்வதங்களும்—தெண்ணீர் அருவிகளும்—மலர் வனங்களும் எழிற்பொருட்களும் பழித்து உதைக்கப் படுவதற்காகவோ சர்வேச்வரனுல் சிருஷ்டிக்கப் பட்டுள்ளன? சிருஷ்டிப் பொருட்களே அவமதித்து இழித்துப் பேசுதலோ பிரபஞ்ச கர்த்தாவைத் தொழுதற்கான மந்திரங்கள்? ஜகதீசனின் மிகமிக நேர்த்தியான பிரபஞ்சத்தை இகழ்தலோ அவனுடன் லயித்தற்கான முறை! வாழ்க்கையை அதிவிரைவில் சுருக்கிட்டு மாய்த்தற்காகவோ எண்ணிறந்த ஜீவத் தோற்றங்கள் ஒவ்வோர் வழியில் இடைவிடாமல் ஜனித்து வருகின்றன? லளிதவித்தையர்களோ, அல்லது மீசையும் தாடியும் வளர்த்து உடல்முழுதும் தூசுகள் படியப் பெற்றுத் திரிந்து உலகை ஓர் மயானமாகவும், ஜீவான்மாக்களேப் பிரேதங்களாகவும் மாற்ற முயற்சிப்பவரோ மேலானவர்? கணித சாஸ்திரம் மெய்யானவையா, அல்லது புராணங்கள் மெய்யானவையா? அரசாங்கம் சிறந்ததா, அல்லது கருட புராணம் சிறந்ததா?' இவ்விணுக்களுக்குச் சரியான விடைகளேத் தீர்க்கமாகத் தெளிந்தறிதல் அவசியமன்ரே?"

உண்மையில், அங்கந்தளர்ந்து வீரியம் குறைந்தபோதிலும், ஆசைகள் பல மாத்திரம் விநாடிதோறும் மும்முரித்து எழுந்து தம்மைத் தாக்கிப் புரட்டுகையில் அவ்வாசைகள் பூர்ணமாத நிறை வேருதபொழுதும் அல்லது பங்கமடைந்த பொழுதும், செவிகள் அடைபட்டு நேத்திரங்கள் பஞ்சடைந்த பொழுதும், துரப்பியாசங்களால் தீராநோய்களுக் சிலக்காகித் துடிக்கும் பொழுதும், சாந்தகுணம்—செயலற்றுக்கிடத்தல், வாழ்க்கைத் துறவு—உலகாதிகளின் விபரீத குணப் போக்குகளேப்பற்றி "அவதார புருஷர்களும் யோகிகளும் தர்ம சிரோமணிகளும்" விதம்விதமான அதிசயக் கூற்றுக்களேப் பின்னிக் கழறி வருகிருர்கள்! மேலும் தட்டுத்தடைகளில்லாமல் விரும்பியவைகளேப் பெற்றுத் துய்த்தபின் அவைகளே வெறுத்துத் தள்ளுதலும், எச்சிரமப் பட்டபோதிலும் பெற்றுப் போகிக்க முடியாதவைகளேத் துச்சமென ஒதுக்குதலும் மானுடக் குணுதிசயங்களுள் சிலவாம். விரிக்கின் பெருகும்.



# தில்லைக் கூத்தன்—என் காதலன்

K. V. சிவசுப்பிரமணியன், B. A.

இயற்கை யன்னை தனது இணையற்ற அற்புதப் பேரழகு பெரிதும் சிறந்து விளங்கக் கொலு வீற்றிருப்பதொரு சிங்காரப் பூம்பொழில். சுரும்பினங்கள் கரும்பினுமினிய தேனை விரும்பியுண்டு மதி மயங்கி ரீங்காரம் செய்து பண்கள் பாடித் திரியும் மாலை வேளை. மலர்கள் பல மெல்ல மெல்ல இதழ்விரித்து நறுமணம் பரப்பும் மாலை நேரம். இரை தேடச் சென்றிருந்த புள்ளினங்கள் தத்தம் குஞ்சுகளை யடைந்து குலாவிக் களிக்கும் காலம். மயில்கள் ஒயிலாய் நடமிடுவன ஓர் பால்; பைங்நிறக் கிள்ளைகளும் மைங்நிறக் குயில்களும் மெய்ம்மறந்து தீங்குர லிசைப்பன மற்றோர் பால்; மான் குட்டிகள் தம் தாயுடன் துள்ளி விளையாடுகின்றன. தவளைகள் வதியும் குவளைகள் நிறைந்ததோர் தீம்புனல் தடாகம். அதன் மேற்பால் பசும் புற்றரையால் அமைந்ததொரு செய்குன்று. அம்மேடை மேல் சுமார் பதினெட்டு வயதுடைய சுந்தரி ஒருத்திமட்டும் நீர் வார் கண்ணளாய் வீற்றிருக்கின்றாள். அவளது முகத் தோற்றத்தால் அவள் தன் எதிரிலுள்ள இயற்கை யின்பக் காட்சிகளை நாடவில்லை எனத் தோற்றுகிறது. அவளது கண்களினின்றும் நீர் தாரை தாரையாய் வழிந் தோடுகிறது. தனது மனதைக் கொள்ளைகொண்டு மையல் பெருக்கிய ஆருயிர்த் தலைவராகிய அம்பலத் தரசரைப் பிரிந்ததனால் வந்த பெருந் துயரைப் பொறுக்கும் ஆற்றலிழந்தவளாய் பெரிதும் தவித்து நிற்கிறாள் அப்பேதை. அதே சமயத்தில் அக்குளத்தில் நிகழ்ந்ததோர் நிகழ்ச்சி அவள் மனதை முன்னையினும் மிகவும் புண்படுத்துவதாயிற்று. அதுவே தாமரை மலர் தன் கள்ளக் காதலராகிய வண்டுகளோடு கூடிக் குலாவும் காட்சி. அதைக் கண்ட அம் மெல்லியலாள், "காலையில் தோன்றிய தன் காதலனாகிய கதிரவனை இதழ் விரித்துப் புன்னகை பூத்து வரவேற்ற இத்தாமரையின் சூழ்ச்சிதான் என்னே ! அவன் மறைந்தொழிந்தான். இப்பொழுது தனது கள்ளக் காதலராகிய வண்டுகளை வாசனை வீசி யழைத்து வனப்பு மிக்க தனது உடலை அவற்றிற்கு அர்ப்பணம் செய்து தனது வெண்ணிறப் பொடியில் ஆசைதீர உருண்டு புரண்டு இதழமுதத்தைத் தரச் செய்து இன்புற்றிருக்கின்றன. இப்பொழுது வெண் கதிரோனும் வான வீதியில் வனப்புறத் தோன்றினான். ஆ! என்ன விந்தை ! இக்கள்ளக் கஞ்சமலர் தான் இவ்வண்டுகளோடு இன்பம் நுகர்வதை இச்சந்திரன் கண்டு விட்டால் தன் நாயகனாகிய சூரியனிடத்தில் தனது களவொழுக்கத்தை ஒருகால் கூறிவிடுவானோ என்ற ஐயத்தால், வண்டு நாயகனை உள்ளேவைத்து தனது கைகளால் மூடி மறைத்து இறுகத் தழுவி இரவெல்லாம் இன்பமனுபவிக்கிறதே! நாளைத் தன் காதலன் கிழக்கிலெழுந்து தன்னை நோக்கி வருவானானால் தனது கைகளை விரித்து வண்டுகளை ஓடச்செய்து நேற்று தன் நாதனை வரவேற்றது போலவே மீண்டும் இதழ்களை விரித்துக்கொள்ளும்போலும்! ஆ! இத்தாமரையாளின்

சூழ்ச்சித் திறம் யாரறிவார்? பாவம்! கதிரவனும் தன் காதலி தன்னைக் காணுந்தோறும் கைவிரித்துப் புன்னகை பூத்தலின் கற்பின் வழாக் கட்டழகி எனக் கருதி ஏமாந்து விடுகிறான். கேவலம் தாவரவர்க்கத்திலுதித்த தாமரைக்குப் பகலவன் பரிவு காட்டுகிறான். நானோ அல்லும் பகலும் ஆலமுண்ட நீலகண்டன் ஒருவரையே மனமுருகக் காதலித்து தவிக்கின்றேன். இருந்தும், அவ்வண்ணலார் இதுவரையில் ஏழையாகிய என்பேரில் தன் திருநோக்கத்தைச் செலுத்தாம லிருக்கிறாரே. இதனால் அவரை "அடியார்க் கெளியன்" என்றும் "ஏழை பங்காளன்" என்றும், "பெருந்துறையின் மேய பெருங் கருணையாளன்" என்றும் உலகோர் புகழ்வது வீண் பிதற்றல் என்றே தோன்றுகிறது. அப்பெரியார் என்னைத் தாமரையினும் கீழ்ப் பட்டவளாகக் கருதினார் போலும்" என்று நினைந்து நினைந்து உள்ளம் நைந்துருகிக் கண்ணீர் ஆறாய்ப் பெருக்கி நின்றாள்.

அப்போது தனது அன்னையும் செவிலியும் அங்கே வருவதை நோக்கினாள். அவர்கள் இவள் பக்கத்திலமர்ந்து தமது செல்வியின் வாடிய முகத்தை நோக்கி காரணமறியாது கலங்குகின்றனர். பின்னர் அவளது தாய் "அருமைக் குழந்தாய்! ஒருநாளும் கவலை என்பதறியாத நின் வதனம் இன்று வாடி வதங்க கண்ணீர் பெருக்கும் காரணம் என்ன?" என்று வினவினள். அதுகேட்ட அச் சுந்தரமங்கை இதுகாறும் தன் மனச் சிறையிலடைத்து வைத்திருந்த சொற்களஞ்சியத்தை தன் நற்றாய்க்குப் பின்வருமாறு கூறலுற்றாள் :—

"தாயே! ஆதிரைநாளன்று அணிதில்லை வீதியில் அடியார் குழாங்களுடன் திரு உலாப்போந்த ஒரு பேரழகன் தான் என் உள்ளங் கவர்ந்த கள்வன். எனது தலைவரின் எழிற் சிறப்பை எங்ஙனம் எடுத்துரைப்பேன்? சிவந்த திருமேனியும், திருவெண்ணீறும், வேதம் பாடும் சிவந்த அதரமும், கழலணிந்து ஆடிய பாதமும் என் மனதைக் கொள்ளைகொண்டன. யான் ஆராயாது அவனைக் காதலித்தேன் என்றெண்ணாதே. அயனுக்கும் அரிக்கும் தலைவராகிய அவரை எனது தலைவன் தலைவன் என்று கூறித் திரிந்து அலமருகின்றேன். அதுகேட்டும் அவர் என்னைத் தன் இன்னுயிர்க் காதலியாகக் கொள்ளாது வன் செவியனாய் வாளா விருக்கின்றார். அன்று வேள்வியிலெழுந்த மானை ஒரு பொருட்டாக மதித்து தனது திருக்கரத்திற் கொண்டாரே! அம்மானினது இயல்பெலாம் பெற்ற யான், அவரது திருவுருவத்தையே நினைந்துருகிக் கொண்டிருப்பினும் என்னை ஏறெடுத்துக் கூட பார்க்கவில்லையே. இதுவும் என் வினைப்பயனோ. மன்றுளாடும் பெருமானை "கருணைக் கடல்" என்றும் "உள்நின் றுருக்கி உலப்பிலா ஆனந்தம் தருபவர்" என்றும் மக்கள் கூறுவனவெல்லாம் வெற்றுரையோ? அவை மெய்யாயின் அறுபது நாழிகையும் அவரை நினைந்து அல்லலுறும் என்பால் அணுவளவேனும் கருணை காட்டாரோ? என் மனதைக் கொள்ளைகொண்ட மன்னனை "சித்தமணாளர்" "நிரம்ப வழகியர்" என்றெல்லாம் பிறர் புகழக் கேட்ட என்மனம் கொல்லுலைக் கூடத்துத் துருத்தியொப்ப பெருமூச்செறிகிறது. எஞ்ஞான்றும் பெருந்துறைப்பதியில் பேரின்பவாணராய் வீற்றிருக்கும் வித்தகரது உருவம் என் கண்முன் நிற்கின்றதே! எனது மணாளர், ஏங்கிக் கிடக்கும் என்னை இமைப்பொழுதாகிலும் வாவென்றழைத்துப் பக்கத்திலிருத்தாரோ! பேயும் உறங்கும் நள்ளிரவிலுங்கூட உறக்கமின்றி

வாடும் யான், ஒரு நாழிகையை ஒரு யுகமாகக் கழிப்பதை அம்மா, நீ அறியாயோ? எனது தலைவர் தான் என்னைப் புறக்கணித்தாரெனின், தண் சுடர்க் கதிரவனும் தனது கொடிய கிரணங்களால் என்னை வாட்டி வதைக்கின்றான். திங்கள் மறைந்து ஞாயிறு எப்பொழுது கிழக்கே தோன்றுவானோ என்று எதிர்பார்த்து என் நெஞ்சம் துடிதுடிக்கிறது. தோழி! தலைவரைத் தணந்து தனித்திருக்கும் எனது துயரைப் பன்மடங்காக்கும் இருட்படலத்தை வாராமலே தடுத்து விடும்படி தில்லை நாதனிடம் தெரிவிக்க மாட்டாயோ?

ஆடரவம் பூண்டு அவனியை ஆட்டிவைக்கும் ஆற்றலையும், புலித்தோலுடுத்திப் புரத்தற்றொழிலையும், வெண்ணீறணிந்து ஒடுக்கும் ஆற்றலையும் சூக்குமமாக உலகினர்க்குக் காட்டிநிற்கும் முழுமுதற் றன்மையையுடைய எனது தலைவரது பெருமையை நினைக்குங்கால், யான் அவரை அடைதல் கூடுமோ என்றெண்ணி ஏழை நெஞ்சம் ஏக்க முறுகின்றது. எனது முழுமுதற் றலைவரது நீண்ட கையும், இருண்ட தலைமயிரும், நீர்பூத்த வெண் மேனியும் என் மனதைவிட்டு நீங்க மாட்டேனென்கின்றனவே. பரந்தெழும் சிந்தையை ஆண்டன்பு செய்யும் அவ்வள்ளல் என்மாட்டு வன் கண்ணராய் இருக்க யானிழைத்த தவறுதான் யாதோ? ஒருகால், என்னையழைத்து அன்புசெய்து அணைந்தால் மலைமாதும் அலைமாதும் மனம் பொறாது சீற்றங் கொள்வரென அஞ்சிக் கிடக்கின்றாரோ?

நினைத்து அளவிட முடியாத பெரும் புகழுடைய திருவுத்தரகோச மங்கைப் பெருமான் எனது உள்ளத்தையே பெருங் கோயிலாகக் கொண்டார். எளியளாகிய எனது உள்ளத்தில் அவர் நிலைத்திருக்கவும், ஆற்றல் மிக்க தேவர்களாகிய அரியும் அயனும் அவரைக் காணும் ஆற்றலிலாது மானமழிந்தமை வியப்பினும் வியப்பே. தில்லைப் பெருமானது திருமுடியிற் பொருந்தியிருக்கும் செந்தேனொழுகும் பசுங் கொன்றை மாலைமேல் யான் அடங்காப் பெருமையல் கொண்டுவிட்டேன். அப்பெருமானிடமிருந்து அம்மாலையை வாங்கிவர பற்பலரைத் தூதாகவும் அனுப்பினேன். அவர் அம்மாலையைக் கொடுத்து என் மாலைத் தீர்க்க இன்னும் மனமிரங்கினபாடில்லை அம்மா? அம்மாலை வருமளவும் என்மனம் அனலிடை மெழுகென உருகித் தத்தளிக்கும்.

முன்னொரு சமயம், "பொலிதருபுலியூர் பொதுவினில் நடம் நவில் களிதருசெவ்வாய் உமையொடு காளிக்கு அருளிய திருமுகத்து அழகுறு சிறுநகையை" எந்நேரமும் ஏங்கிக் கிடக்கும் என்பாற் காட்டியருளினால் என் மனம் சாந்தி யடையாதா? அன்று, தாருகா வனத்திலே தவமுனிவர்களது மனைவியர் குழாத்திடையே பிச்சாடன வடிவங்கொண்டு சென்றக்கால், அவர்கள் மெய்சோர அளகம் அவிழ்ந்தாட, நாவில் ஊறூத அமுதூறி உடல் புளகித்து உள்ளமெல்லாம் உருகி, ஆடை யவிழ உடன் தொடர்ந்து ஓடி வரச்செய்து அவர்களது நிறையழித்த தில்லை மன்றநாதன், இன்று கங்கு கரையின்றிப் புரண்டோடும் களங்கமற்ற காதலினால் கழன்றுவிழும் எனது சேலையை, உடல்சோரத் தழுவி, தளராது நிலைபெறச் செய்ய திருவுளம் பற்றாததென்னே? அம்மா! நீ அறியாயோ.

வெள்ளை யாடையுடுத்து வெண்ணீறணிந்து வெண்பரியேறி வந்து என் வெள்ளை யுள்ளத்தைக் கொள்ளைகொண்ட அக்கள்வன் இன்று என்

முன் வரின் காமுறத் தழுவி ஓடிப்போகாதவாறு மனச் சிறையி லடைத்து விடுவேன். ஆனால் அவர் என் கைகளிற்படாத பெரும் விரகனாய்த் திரி கின்றாரே. அம்மா! கலவை யணிந்து, சுடலைப் பொடி பூசி என்னுள்ளங் கவர்ந்த கள்வன், பீடுடைய பிரமபுரமேவிய பெருமானே என நீ யறிந்தும் எனது ஆற்றாமையை நின் தோழி மூலம் அவர்க்குணர்த்தலாகாதா? எனது தலைவராகிய கைலைநாதன் அன்பர் பொருட்டு போகவடிவமும் யோக வடி வமும் கொள்கின்றார். அவர் பிச்சை ஏற்பான் போற் புகுந்து தாருகா வனத் துப் பெண்டிரை மயக்கியதுபோல், என்முன் தோன்றி ஆவியைக் கவர்ந்து அன்பினாற் பிணித்துச் சென்றார். அவரது பிரிவுபற்றி இவ்வுடலம் வாடு கின்றது. அவரது சடை முடியில் விளங்கும் ஊமத்தம்பூ மாலை என்னை மால்மய மாக்கிய தாகையால் அதைப் பெறும்வரையில் என் கண் படை பெறாது.

அன்றொருகால், அரணியத்தில் தவங்கிடந்த அருச்சுனனுக்கு அருள் புரியக் கருதி வேட னுருக்கொண்டு சென்று வேடச்சியாய் வந்த உமையம் மையினது நகிலாகிய புனிதப் பொய்கையில் மூழ்கி இதழமிர்தம் ஈந்தமை நீ அறிவாயன்றோ. அதுபோலவே அப்பெருமான், தமது சோதிவாயமிழ் தினை எனக்கொரு முறையேனும் அளிக்கத் திருவுளம் பற்றினால் அவ்வுத வியை யான் அல்லும் பகலும் நினைந்து வாயார வாழ்த்திப் பாடேனோ?

ஒருசமயம் திருவாஞ்சிய மென்னும் திருப்பதியில் திருமணக் கோலத் தோடு வீற்றிருந்து மருவார் குழலியொடு மகிழ்ந்த மன்றவாணர் என்னை மருவி மயல் தீர்க்கும் நாள் எந்நாளோ?

மற்றொருகால், சிவபத்தியிற் சிறந்த வாளாசிரியரது மனைவியை விழைந்த அவனது மாணவனுடைய உண்மைத் தன்மையினை வெளியிட்டு அவனை ஒறுக்கவேண்டி சிறந்த நீதிமானாகத் தோன்றியவனும், மாமனாக வந்து வழக்குரைத்த மாண்புடையவனும், பண்ணார் பைந்தமிழ்ப் புரவலர் களாகிய ஆண்டியர் குலத்திலே தோன்றி பாராண்ட பண்புடையவனு மாகிய எனது தலைவர், இப்போது என்பாற்காட்டும் நீதி மிக நன்றாக இருக் கிறது? ஆலவாய் அரனையே ஆருயிர்க்கு அரசராகவும், தனிப்பெருந் தலை வராகவும், இன்னுயிர்த் துணைவராகவும், தஞ்சமென சேர்தற்குரிய தெய்வ மாகவும் நம்பி இருக்கும் என்னிடம் அவர் செலுத்தும் நீதி அநீதியாகவல் லவோ இருக்கிறது. அவர் விரைந்து வந்து எனது மயக்கத்தைத் தீர்க் காது இனியும் வாளாவிருப்பரேல், நான் அவரை மதுரையில் மண் சுமந்து மன்னனால் மொத்துண்டு புண்சுமந்த பித்தன் எனவும், கண்ணப்பனது காலாலுதைபட்ட கயவனென்றும், புலித்தோலுரித்துப் போர்வையாய்க் கொண்ட பித்தன், விடமுண்ட பித்தன், ஊர்ப்புறம்பான சுடுகாட்டில் சாம்பற் பூசித் திரியும் பெரும் பித்தன், அழலுருவாய் நின்ற பித்தன், மோஹினியின் பின்னே யோடிய முழுப் பித்தன், பெண்டிர்க்காகத் தூது போன பெரும் பித்தன், மதுரைப் பெருநன்மா நகரிருந்து குதிரைச்சேவ கனாகிய குணக்கேடன் என்றெல்லாம் சொல்லிச் சொல்லி அலர் தூற்று வேன். அம்மா! இதை நீ அவருக்கு அறிவித்து விடுவாயாக."

இங்ஙனம் தன் செல்வப் புதல்வி கருத்தழிந்து கண்கள் நீர் சோர கழ றிய சொற்களைக் கேட்ட அன்னை ஒன்றும் செய்ய இயலாதவளாய் "குழந் தாய்! நினது பித்தத்தைத் தெளிவிக்கும் மருந்து உனது சித்தத்தில் குடி

# மஹா வீரன்

("காளி புத்திரன்.")

பாடலிபுர சக்கரவர்த்தி பிந்துசாரன். அவனுக்கு கணக்கற்ற மனைவியர் இருந்தனர். தர்மாதேவி பட்டமகிஷி ஸுஷீமன் அவளது புத்திரன். சுபத்ராங்கி சக்கரவர்த்தியின் வேறொரு மனைவி. இவள் பிராமணப் பெண். அசோகன் இவளது புத்திரன். பட்டம் ஸுஷீமனுக்கே உரியதாயிருந்தும் அதிர்ஷ்டம் அசோகன் பங்கிலிருந்தது. ஆகவே, அசோகன் பட்டத்திற்கு வந்தான்.

அசோகன் நல்ல அறிவாளி. வித்துவான்களை அவன் பெரிதும் ஆதரித்து வந்தான். பல கலைஞர்கள் அவன் அவையில் காட்சி யளிப்பர். புத்ததேவரின் கொள்கைகளை உலகெங்கணும் பரப்பியவருள் அசோகன் முதன்மையானவன். கொல்லாமை நல்லாண்மை எனக் கருதி அவன் ஆட்சி புரிந்து வந்தான். அசோகன் மகா வீரன். அவன் செய்கைகளில் பெருந்தன்மை பிரகாசித்துக் கொண்டிருக்கும். அசோகனின் வாழ்க்கையில் நடைபெற்ற ஒரு சம்பவம் இங்கு தரப்படுகிறது.

கலிங்கத்து அரசன் கீர்த்தி பிரதாபமுடையவன். வீரத்தில் அவனையொப்பவர் அக்காலத்தில் அரிதாயிருந்தனர். அவனுடன் யுத்தஞ்செய்யத் துணிபவர்கள் ஒருவருமில்லை. ஆதலின் ஒப்பற்ற சூரியன்போல் கலிங்க அரசன் பிரகாசித்து வந்தான். அசோகன் இதைக் கவனிக்காமலில்லை. கலிங்க அரசனை வென்றி கொள்ள வேண்டுமென்று அவன் ஆசை கொண்டான். இயற்கையிலே அசோகன் மகா தீரவானுதலால் கலிங்கத்தின்மேல் போர் தொடுக்க வேண்டுமென்று அவன் ஆசை கொண்டது இயற்கை. துங்கன் மூலம் "பணிந்து கொள். இன்றேல் இருபத்தி நான்கு மணிக்குள் யுத்தம் நேரிடும்" என்று தூதனுப்பினான்.

கலிங்கனும் சிறந்த வீரனல்லவா! வீரன் வீரனுக்கு அடிமைப் படுவானு? படான். ஆகவே, சினந்தெழுந்தான். யுத்தம் ஆரம்பமாயிற்று. உதங்கன் யானைப் படைத் தலைவன். குதிரைப் படைக்கு குதம்பன் தலை

---

யிருக்கும் முத்தனே. அவனன்றி யோரணுவும் அசையாது. ஆகையால் "ஒளி வந்துன் உள்ளத்தின் உள்ளே ஒளிதிகழ அளிவந்த அந்தணனைப் பாடி நின் தோழியரோடு கூடி அம்மானையாடி மனக் கவலை மாற்றுவாயாக" என்று தேறுதல் கூறி உடனழைத்துச் சென்று வீடடைந்தாள்.

[மணிவாசகப் பெருந்தகையாரது திருவாசகத்திலுள்ள "அன்னைப் பத்து" என்னும் பதிகத்தை ஆதாரமாகக் கொண்டு இக்கட்டுரை எழுதப் பெற்றது.]

மை வகித்தான். தேர்ப்படைத் தலைவன் தேனுவன். காலாட் படைத் தலைவன் காம்பன். இவ்விதம் அணி வகுத்து யுத்தத்தை ஆரம்பித்தான் அசோகன்.

பத்து நாள் யுத்தம் நடந்தது. வீரருடன் வீரர் மோதினர். குதிரையுடன் குதிரை மோதியது. யானையுடன் யானை எதிர்த்தது. தேருடன் தேர் மோதியது. மகா உக்ரமாக போர் நடந்தது. கண்ணிழந்தோரும், கையிழந்தோரும், காலிழந்தோரும், தலையிழந்தோரும் கணக்கிலர். இரு தரப்பிலும் லக்ஷம் வீரர்கள் இறந்து பட்டனர். கலிங்கன் சேனையில் அளவற்ற சேதம் உண்டாயிற்று. ஒரு லக்ஷத்து ஐம்பதினாயிரம் வீரர்களை அசோகன் கைதியாக்கினான். கலிங்கர் சேனை தோற்று ஓடியது. கலிங்கனால் தனித்து என்ன செய்ய முடியும்? எனினும் அவன் அசோகனுக்குப் பணிந்தானில்லை. வெற்றி அல்லது மரணம். இதுதான் அவனது சித்தாந்தம். தன்னந்தனியாக நின்று பகைவர் தானையைச் சின்னா பின்னமாக்கினான். கோடிக் கணக்கானவர்களை ஒருவனால்—அவன் என்ன தான் சாமர்த்தியவானாக இருந்தபோதிலும் எதிர்த்து நிற்க முடியுமா? முடிவில் அசோகன் முன்னிலையில் கைது செய்யப்பட்டு நிறுத்தப்பட்டான்.

கலிங்க யுத்தத்தால் அசோகனுக்கு கோடிக்கணக்கான பவுன் நஷ்டம். அவனது படை வீரர்களும் கணக்கற்றோர் மடிந்திருந்தனர். கலிங்கத்தையாண்டு அசோகன் அதற்கு ஈடு செய்ய வேண்டும் என்பது மந்திரிகள் எண்ணம். கலிங்க அரசனைக் கொலை செய்ய வேண்டுமென்று அவர்கள் கருதி துடி துடித்து நின்றனர். அசோகனும் தங்கள் எண்ணப்படியே செய்வான் என்று அவர்கள் எண்ணி மன மகிழ்ந்திருந்தனர். ஆனால்......?

கலிங்கர் வேந்தனை விலங்கிட்டுத் தன் முன் நிறுத்தியதும் அசோகன் மனம் எண்ணாத எண்ணங்களெல்லாம் எண்ணி புண்பட்டது. தன் காரணமாக எத்தனை யாயிரம் உயிர்கள் மரண மடைந்தன என்று எண்ணி துயர் கொண்டான். ஓடிச்சென்று கலிங்கனைப் பிணித்திருந்த கட்டுகளை அவிழ்த்தான். "கலிங்க! உன் வீரத்தைக் கண்டு உள மகிழ்ந்தேன். போதிய முன்னறிவிப்புத் தராது உன்னுடன் நான் யுத்தத்திற்கு வந்தது பிசகு. உனக்குத் தகுந்த சந்தர்ப்பம் தந்திருந்தேனாயின் நீயே யுத்தத்தில் வென்றி மாலை புனைந்திருப்பாய். உன்னுடைய சிநேகிதனாக இருக்க என் மனம் விழைகிறது. கலிங்கத்தை நீயே ஆண்டு கொள். நான் அடைந்த வெற்றிக்காக யாதாயினுந் திறை தந்து கொண்டிரு. நீ தர இணங்காவிட்டால் வேண்டாம்" என்றான்.

மந்திரி பிரதானிகள் திடுக்கிட்டனர். தம் அரசனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதோ என்று கருதி முணு முணுத்தனர். கோடிக் கணக்கான பொருளையும் வீரர்களையும் இழந்து பெற்ற நாட்டை தானஞ் செய்கிறானே மூடன் என்று ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். அசோகன் இதை அறிந்துகொண்டு புன் முறுவல் செய்தான். வீரன்தான் வீரனின் மதிப்பை அறிவான். அசோகன் மகா வீரன் அல்லவா?

---

# ஸுப்ரம்மண்ய விசேஷமும், கங்கா பிரபாவமும்

(வீ. சங்கரய்யர்.)

ஸு—நன்மை யளிக்கும்; பிரம்மணியம்—ஸதாசிவம்; அதாவது உலகத்தாருக்கு நன்மையையே கொடுக்கும் கடவுள் என்பது பொருள். சிருஷ்டிகர்த்தா பிரம்மாவாகவும், ஸ்திதிகர்த்தா விஷ்ணுவாகவும், ஸம்ஹார கர்த்தா ருத்திரனாகவும், திரோதான கர்த்தா மஹேசனாகவும், அனுக்கிரக கர்த்தா சதாசிவனாகவும் இருக்கிறார்கள்.

சதாசிவனுக்கு பஞ்சமுகன் என்றும், பஞ்சானனன் என்றும் பெயர்களுண்டு. இவ் வைந்து முகங்களும் முறையே (1) ஸத்யோஜாதம் (2) வாமதேவம்: (3) அகோரம். (4) தத்புருஷம். (5) ஈசானம் என்று கூறப்படுகின்றன.

இந்த பஞ்சானனனாகிய சதாசிவன் சக்தியாகிய தேவியுடன் சேர்ந்தால் தான் லோக க்ஷேமம். அவ்வாறு பஞ்சாஸ்யனுக்கும் சக்திக்கும் பிறந்த குமாரன் லோகக்ஷேமம் கொடுப்பவன் என்ற பொருளுள்ள ஸுப்ரம்மண்யனே யாகும். இவ் விஷயத்தை,

"சிவச்சக்த்யாயுக்தோ யதி பவதி சக்தஃ பிரபவிதும்" என்று ஸௌந்தர்ய லஹரி முதல் சுலோகத்தில் ஆதி சங்கராசார்ய ஸ்வாமிகள் அருளியிருக்கிறார்கள். பஞ்சாஸ்யனுக்கும் சக்திக்குமாகப் பிறந்த குமாரனே ஷண்முகக் கடவுள். ஸுப்ரம்மண்யனே சக்தியின் மைந்தனான சக்திதரன்.

தக்ஷயாகத்திற்கு, தக்ஷன் தன் மாப்பிள்ளையான மஹேசுவரனையும் தன் மகளான தாக்ஷாயணியையும் அழைக்க வில்லை. ஆனாலும் பிதிரு பக்தியினால், தன் கணவன் அனுமதியோடு, தாக்ஷாயணியும் தன் பிதா யாகம் செய்யும் யாக சாலையை அடைந்தாள்.

அங்கே அவள் வருகையை யறிந்த தக்ஷன் அவளை அழைக்காததால், பிதிரு கிரகத்தில் ஏற்பட்ட அவமானம் பொறுக்க முடியாதவளாகி, யாகாக்னியில் விழுந்து அவ் வுடலை இழந்தாள். இதைக் கேள்விப்பட்ட பரமசிவனும் தன் கோபாவேசத்தால் வீர பத்திரனை உற்பத்தி செய்து தக்ஷன் சிரத்தைக் கொய்து வரும்படி ஏவினான்.

வீர பத்திரனும் தன் யஜமானன் கட்டளைப்படி தக்ஷன் உத்தமாங்கத்தை உடலிலிருந்து பிரித்து விட்டான். அம்பிகை, ஹிமவானுக்கும் மேனகைக்கும் புத்திரியாக அவதரித்து பரமசிவனையே மணக்க விரும்பித் தவமிருந்து வந்தாள். பரமசிவனே கைலையங்கிரியின் மீது தவவேடம் பூண்டு (1) ஸனக (2) ஸனந்தன (3) ஸனாதன (4) ஸனத் குமாரர்களாகிய,

நான்கு முனி சிரேஷ்டர்களுக்கும் தக்ஷிணாமூர்த்தியாக வட விருக்ஷ மூலத்தில் அமர்ந்து கொண்டு சின் முத்திரையால் அவர்களுடைய சம்சயங்களைத் தீர்த்துக் கொண்டிருந்தார்.

தேவர்கள், முன் சிவனுக்கு அபராதம் செய்த தக்ஷனுடைய யாகத்தின் ஹவிர் பாகத்தைக் கிரகித்தபடியால், அந்த பாபத்தினுடைய (சிவாபராத பாபத்தினுடைய) பலனை அனுபவிக்கும் காலம் அவர்களுக்குக் கிட்டியது. கச்யபருக்கு, மாயையிடம் தாரபாஸுரன், சூரபத்மாஸுரன், ஸிம்ஹவக்த்ரன், முதலிய அஸுரர்கள் பிறந்தனர். இவர்கள் கடுந்தவமியற்றி பகவானிடமிருந்து பல வரங்களைப் பெற்று அதி வீர்ய சௌர்ய பராக்ரமர்களாகி தேவர்களைப் பல விதத்திலும் துன்புறுத்த ஆரம்பித்தனர்.

தேவர்களோ அஸுரர்களுடைய துன்பம் பொறுக்க முடியாதவர்களாகி சங்கரன் (சுகத்தைக் கொடுக்கிறவன்) இருக்கும் வெள்ளிமாமலையை அடைந்தார்கள். அப்பொழுது அவ்விடத்தில் பர்வதராஜ குமாரியான இளமங்கை நிற்பதைக் கண்டார்கள். சங்கரனையும் பார்வதியையும் அதாவது சிவனையும் சக்தியையும் ஒன்று சேரும்படிச் செய்தாலன்றித் தங்கள் கஷ்டம் தீராது என்றுணர்ந்து மன்மதனைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டார்கள்.

மன்மதன் தன் இக்ஷு சாபத்தில் ஞாண் ஏற்றி (1) அரவிந்தம் (2) அசோகம் (3) சூதம் (4) நவமல்லிகை (5) நீலோற்பலம் ஆகிய ஐந்து பாணங்களையும் ஏக சமயத்தில் பஞ்சாஸ்யன் மீது எய்தான். இதனால் பஞ்சாஸ்யன் பஞ்சபாணன் வசமாகி தியானம் கலையப்பட்டான். ஆகையால் கோபாக்ராந்தனாகி மன்மதனைத் தன் திருதீய நேத்ரமாகிய பால நேத்ரத்தைத் திறந்து அதிலிருந்து வெளியேறின அக்னியால் தஹிக்கும்படிச் செய்தார். ஆனால் பஞ்சபாணனுடைய புஷ்பபாண மகிமையால் பார்வதியை மணந்து கொண்டு ரதிதேவியின் பிரலாபத்துக்கு இரங்கி, மாரனை அனங்கனாக இருக்கும்படி அனுக்ரகித்து ரதீ தேவிக்கு மாங்கல்ய பிக்ஷை யளித்தார். பஞ்சபாணனால் ஒன்று சேர்த்து வைக்கப்பட்ட பஞ்சாஸ்ய சக்தியிடத்திலிருந்து ஒரு ஜோதிர் மயமான தேஜஸ் புறப்பட்டது.

அந்த ஜோதியை அக்னிபகவான் கங்கையில் கொண்டு போய்ச் சேர்த்தார். ஆகையால் அக்னிபூ என்றும், காங்கேயன் என்றும், பாலநேத்ர ஸுதன் என்றும் பெயர்கள் ஸுப்ரமண்யருக்கு இடப்பட்டன.

மாரனை, கு=பிரயோஜ மில்லை என்று பொருள் தாக் கூடிய அழகுடையவனாக யிருப்பதால் குமாரன் என்ற பெயரும் ஏற்பட்டது. கங்கையின் நாணற்காட்டின் நடுவில் ஆறு குழந்தைகளாக இருந்து அழுது கொண்டிருந்ததைக் கண்டது ஆகாசத்தில் சந்திரனோடு கூட இருந்த ஆறு கார்த்திகை நக்ஷத்திர தேவதைகள். உடனே அவர்கள் கீழே இறங்கி வந்து அக் குழந்தைகளுக்கு ஸ்தன்ய பானம் செய்வித்தார்கள். ஆகையால் தான் கார்த்திகேயன் என்றும் சரவணபவன் என்று பெயர்கள் உண்டாயின.

இக் குமாரனும் சரவணத்தில் பிறந்தான். இச் சரவணமோ, கங்கைக் கரையிலிருந்தது. இக்கங்கையோ விஷ்ணுபதமான ஆகாசத்திலிருந்து பகீரதனுடைய தபஸ்ஸின் மஹிமையால் பூமிக்கு சிவனுடைய ஜடையின்

வழியாக இறங்கி வந்தவள். இந்த கங்கை திருபுவனத்தையும் பாவன மாக்குகிறாள் என்று கூறப்பட்டிருக்கிறது. இப் பிரபாவம் கங்கைக்கு இருக்கும் படியாக நமது புராணங்கள் கூறக் காரண மென்ன? அதைக் குறித்து ஆராய்வோம்.

சாஸ்திரமும் சுகாதாரமும் ஒன்றாக இணைக்கப்பட் டிருக்கிறது. "சாஸ்திராயச சுகாயச" என்றபடி சாஸ்திர மெல்லாம் நம்முடைய க்ஷேமத்தைக் கருதி எழுதப் பட்டவையே.

தங்கு நீரை விட கிணற்று நீரும், அதை விட ஊற்று நீரும், அதை விட குளத்து நீரும், அதை விட ஆற்று நீரும் கிரமமாக அதிக பரிசுத்த மானவை யென்று நம் சாஸ்திரங்கள் கூறி யிருக்கின்றன. நதி தன் வேகத்தாலேயே சுத்தமாகிறது என்று மனு கூறி யிருக்கிறார். இதைப் பல நவீன சாஸ்திரிகளும் சரியென்றே ஒப்புக் கொள்ளுகிறார்கள். மாஜி சென்னை சானிட்டெரி கமிஷனராக யிருந்த லெப்டினெனன்ட் கர்னல் கிங் ஐம். எம். எஸ் என்பவர் காவேரி நதியின் ஜலத்தைப் பரீக்ஷை செய்து நதி ஜலம் தன் வேகத்தால் சுத்தமடைகிறது என்பதாகக் கண்டு பிடித் திருக்கிறார்.

மிஸ்டர் ஹான்கின் செய்த பரீக்ஷையிலிருந்து யமுனா நதியின் ஜலத்துக்கு அசுத்தங்களை அதி சீக்கிரத்தில் பரிசுத்தம் செய்யும் சக்தி யிருக்கிறது என்றும், டாக்டர் டி. ஹெரிலி செய்த பரீக்ஷையிலிருந்து கங்கா ஜலத்தில் எந்த அசுத்தம் கலந்தாலும் அச் சமயமே அவைகளெல்லாம் காணாமல் போய் விடுகின்றன என்றும் கண்டுபிடித் திருக்கிறார்கள். கல்கத்தாவிலிருந்து கங்கா ஜலத்தை கப்பல்களில் எடுத்துச் செல்லுகிறார்கள். அது லண்டன் சென்றும் கூடக் கெட்டுப் போவதில்லையாம். ஆனால் கப்பலில் கொண்டுவரப் படுகின்ற தேம்ஸ் நதி ஜல மானது ஸூயெஸ் கால்வாய் வரும் முன்னேயே கெட்டுப் போய் விடுகின்றனவாம்.

காசியிலுள்ள கல்லூரியில் தலைமை ஸ்தானம் வகித்த ரிச்சர்ட்ஸன் துரை அவர்கள் கங்காஜலத்தில் பல சாக்கடை நீர்களும் பிணங்களும் வந்து சேர்ந்து அசுத்தப்படுகிறது என்பதைப் பார்த்து ஜனங்களையும் வித்யார்த்திகளையும் அந்த நீரைக் குடிக்கக் கூடாது என்று பல விதத்திலும் கண்டிப்பாய் உபந்யஸித்து வந்தார். அவர்கள் அந்த நதி ஜலத்தையே பானம் செய்தும் யாதொரு விதமான வியாதியும் அவர்களைத் தாக்காததைக் கண்டு ஆச்சரியப்பட்டு அத் தீர்த்தத்தைப் பல விதத்திலும் பரிசோதனை செய்தார். பல ரோக பீஜங்களைக் கொண்டு வந்து போட்டும் பார்த்தார். கங்கா ஜலத்துக்கு எவ்விதமான அசுத்தத்தையும் இல்லாமல் உடனே பரிசுத்தஞ் செய்யக் கூடிய சக்தி ஒன்று இருக்கிறது என்றும் ஆகையால் தான் அதை ஹிந்துக்கள் ஒரு தேவநதி யென்று கொண்டாடுகிறார்கள் என்றும் தெரிந்து கொண்டார். அன்று முதல் அவர் பெரிய கங்கா பக்தர் ஆகி விட்டார். அவரை காசி வாசிகள் 'கங்கா பக்தர்' என்று அழைக்கத் தொடங்கினார்கள். அது முதல் அவர் ஹிந்து மதக் கொள்கைகளிலும் நம்பிக்கை யுள்ளவராகி அவைகளையே அனுசரிக்கவும் செய்தார்.

இவ்வளவு பிரபாவம் இந்த கங்கா நதிக்கு இருப்பதால் தான் இதை

ஒரு தெய்வீக நதி யென்றும், அத் தீர்த்தத்தை ஒவ்வொரு வீடுகளிலும் பாத்திரங்களில் மூடிவைத்து பூஜை செய்து வர வேண்டு மென்றும், யாராவது அசுத்தம் (ஆசௌசம்) நீங்கி சுத்தமாக கங்கா தீர்த்தமும் பஞ்ச கவ்யமும் உட்கொள்ள வேண்டுமென்றும் மற்றும் நமது சாஸ்திரங்கள் கூறுகின்றன. பல வருஷங்கள் வைத்திருந்தாலும் கங்கா ஜலம் கெட்டுப் போவதில்லை என்பது ஹிந்துக்கள் யாவருக்குமே தொன்று தொட்டே தெரிந்த விஷயம்.

ஆகையால் தான் கங்கா ஸ்நானம் செய்வது மஹா புண்ய மென்று கூறப்படுகிறது; தேகாரோக்யம் உண்டாகிறது. மனோ பீடை, சரீர அசௌக்கியம் இவைகள் மனிதனை விட்டு அகலுகிறது.

கங்கா ஜலத்துக்கு இவ்வளவு மஹிமை இருப்பதை விளக்கவே அது சுப்பிரமணியருடைய பிறப்பிடம், விஷ்ணு பாதம், சிவனுடைய ஜடையி லிருந்து புறப்படுகிறது, பகீரதனுடைய பிதிருக்களுக்கு மோக்ஷத்தைக் கொடுத்தது என்றெல்லாம் சாஸ்திரங்கள் கூறுகின்றன. இவ்விஷயங்களை நன்றாய் ஆராய்ந்து சகல பாப நிவாரணார்த்தம் யாவரும் கங்காஸ்நானம் செய்ய விரும்புவீர்களாக. விரும்பினால்தான் காரியசித்தி யுண்டாகும்.

நிற்க, கலிகால வரதனாகிய சுப்பிரம்மணியன் தென்னிந்தியாவில் பல குன்றுகளிலு மிருக்கும் க்ஷேத்திரங்களி லிருக்கிறார். ஷண் மதங்களான (1) சைவம் (2) வைஷ்ணவம் (3) சாக்தம் (4) ஸௌரம் (5) காணபத்யம் (6) கௌமாரம் இவைகளை ஆதி சங்கராசாரிய சுவாமிகள் ஸ்தாபித்தார். இவ்வாறு மதங்களும் ஷண்முகனுடைய ஷண்முகங்களே. சைவர்களும் வைஷ்ணவர்களும் வித்தியாச மன்னியில் பணியக்கூடிய கடவுள் ஷண்முகனே. ஆகையால் ஸுப்பிரம்மண்யனை யாவரும் திருச்செந்தூர் முதலிய க்ஷேத்திரங்களில் சென்று தரிசித்து கங்காஸுதன் அருள் பெறுவீர்களாக.



# தானமும் தருமமும்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

★



இத்தலைப்பில் கண்ட தானம் தருமம் என்பன தனித்தனி விஷயங்கள் என்பதைப் பெரும்பாலோர் உணர்ந்துள்ளார். சிறிது சிந்தித்தால் அனைவருமே உணருதல் எளிது. அங்ஙனமிருந்தும் உலகில் இவ்விரண்டினையும் ஒன்றெனவே கருதி தான தருமம் எனச் சிலர் வழக்கில் கையாளுவதையும் காண்கிறோம்; ஒரு சிலர் தானச் செயலை தருமச் செயலாகவும் பாவித்துப் பேசுகின்றனர். தானம் என்பதற்கு ஈகையென்பதே பொருள். தருமம் என்பது ஆன்றோர் ஒழுகிய ஒழுக்கம் என்பது பொருள். விதி நூல்களுக்கு தரும சாஸ்திரங்கள் என வழங்கும் பெயரே இதற்குத் தக்க உதாரணமாகும். ஈகையிற் சிறந்த கர்ணனை வள்ளல் என்றழைத்தனர். நெறி வழுவாது நூலொழுங்கில் நடந்த யுதிஷ்டிரனைத் தருமன் என்றழைத்தனர் அறிஞர்.

தானம் செய்தலையே கொள்கையாக உடையோர்களில் இருவித மனப்பான்மை யுடையோர்களுமுளர். இரப்போர் யாராயினும் அவரை யாவரென்று விசாரியாமல் ஈதலே சிறப்புடைத் தென்பவர் ஒரு சாரார். பாத்திரமறிந்தே தானம் அளித்தல் வேண்டுமென்போர் மற்றொரு சாரார். இதில் சிந்திக்க வேண்டிய நுட்பம் இருப்பதுண்மை.

திருட்டுத் தொழிலையுடைய கள்வன் ஒருவன் ஒரு இல்வாழ்வானையணுகி உதவி கேட்கிறான். உதவியும் பெறுகிறான். அதனால் சோர்வு நீங்கித் திடம் பெற்று ஒரு வீட்டில் புகுந்து அங்குள்ளாரைக் கொடிய முறையில் துன்புறுத்தி அகப்பட்ட பொருளைக் கவர்ந்து செல்கிறான். இத்தகைய துன்மார்க்கனுக்குப் பசியைத் தணிவித்துத் திடம் பெற உதவிய இல்வாழ்வானுக்குத் தான் செய்த தானத்தினால் புண்ணிய பலன் கிடைப்பதற்கு மாறாகத் திருடனுக்குத் திருடியதால் வரும் பாவத்தில் பாகமும் கிடைக்கிறது என்று சாஸ்திரம் கூறுகிறது. இதைக் குறிப்பிடவே பாத்திர மறிந்து பிச்சையிடு என்ற பழமொழியும் தொன்று தொட்டு வழங்குவதாகும். நமது மூதுரைப் பேராசிரியையாகிய ஔவையாரும்,

"சாதி யிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின்—இட்டார்
பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கில் உள்ளபடி"

என்று கூறினர். இட்டவரெல்லாம் பெரியோர்; இடாதார் எல்லாம் சிறியோர் என ஔவையார் கூறி வைத்ததால் யார் கேட்டாலும் இல்லையென்

முரையாது கேட்போரைக் கவனியாது கொடுப்பதையே ஷை வெண்பா மூலம் பாராட்டினர் என்று பொதுவாகப் பார்க்குமிடத்துத் தோன்றலாம். உண்மையில் ஷை வெண்பாவைத் தொடர்ந்து கவனித்தால் பாத்திர மறிந்து பிச்சை யிடுவதை ஆமோதிப்பது நன்கு விளங்கும். அதாவது "நீதி வழுவா நெறிமுறையின் இட்டார்" என்று இரண்டாமடியில் விவரிக்கின்ரூர். சான்ரூர் வகுத்த நியாய முறைப்படி தானம் புரிவதற்கு உரிய வழிகளை ஆராய்ந்து அம்முறைகளில் பிழைபாடின்றி இட்டார் என வெகு எச்சரிக்கையாக அமைத்து வைத்திருக்கிரூர் என்பது நுட்பமாய் ஆராயும் கல்விமான்களுககு இனிது விளங்கும். பாப பலன் வரினும் வருக; இரப்போர் எவராயினும் இல்லை யென்னுமல் ஈவதே சிறப்பென்று கருதுவோர்களே வள்ளல்கள் என்றழைக்கப்படுகின்ரூர். இதில் சிறப் பென்னையெனின் சுயநலம் கருதாமையே யாகும். உண்மையில் சுயநல மறந்த தூயோர்க்கு இது பெரும் சிறப்பே யாகும். சுயநலமுடைய பலரும் காண்போர் வியக்கும்படி சுயநலம் அற்றவர் போன்று நடிப்பது இரங்கத் தக்கதொன்ரூம். அதையே ஔவையார் மறை முகமாகக் கண்டிப்பதாகவும் கொள்ளலாம். 'இது குறித்தே பலன் கருதாது எதையும் செய்' எனக் கீதையில் வலியுறுத்தியருளினர் கிருஷ்ண பரமாத்மா. கர்ணன் உயிர் பிரியும் தருவாயில்கூட,

"ஓவிலாதி யான்செய் புண்ணியம் அனைத்தும்
உவந்தனன் கொள்கநீ யுனக்குப்
பூவில்வாழ் அயனும் நிகரிலை யென்ருல்
புண்ணியம் இதனினும் பெரிதோ?"

எனத் தான பலனுகிய புண்ணியத்தை அலட்சியமாகவும் தனது கொள்கையை முக்கியமாகவும் கூறியதாக வில்லி பாரதம் கூறுகிறது. இத்தகைய சீரியர் உலகம் தோன்றிய காலந்தொட்டு முதலெழுவள்ளல்கள் இடையெழுவள்ளல்கள் கடையெழு வள்ளல்கள் என முக்கூறுபடுத்தி இருபத்தொரு பெயர்களையே அறிஞர் குறிப்பிட்டுள்ளார். இத்தகைய மனவுறுதியுடையோர் பல கோடிக் கொருவர்கூடத் தேருவதரிதாதலின் எல்லாரும் அவ்வழியை மேற்கொள்ளுவ தெவ்விதம் பொருந்தும். பாத்திர மறிந்து பிச்சை யிடுவதால் ஒழுக்கம் கெட்டவர்களும் சன்மார்க்கர்களாக முயலவும் கூடும். தானம் இடுவோரும் நீண்ட நாள் தானம் புரிதலைத் தொடர்ந்து செய்ய முடியும். சத்துரு வெனத் தெரிந்தும் தன்னழிவைப் பொருட்படுத்தாமலும் மகாபலி தானம் கொடுத்தார். ஆனுல் தனது ஒப்பற்ற பெரும் தகுதி நீண்ட நாள் உலகிடை நின்று நிலவ முடியாது மறைந்ததால் ஈகை மறைந்தது. புகழ் உடம்பு மறையவில்லை யாயினும் அவரால் பயன் பெறுவோர் ஏமாற்றமெய்தினர். இவைகளைக் கருதியே பாத்திர மறிந்து இடுவதை வற்புறுத்தினர் அறிஞர் பெருமக்களும். இத்தகைய தானத்தைச் செய்வோர்களைத் தான கர்த்தாக்களென வழங்க வேண்டுமே யன்றித் தருமவான்களெனக் குறிப்பது தவறு.

உதாரணமாக கோவில் தருமகர்த்தர்களை எடுத்துக் கொள்வோம். பழமையான நடைமுறைகளைச் சரிவர நடத்தி வைப்பதாலேயே அவர்க

ளுக்குத் தருமகர்த்தர்கள் என்று பெயர் வழங்குகின்றது. எனவே தருமம் என்பது தொன்மையான ஒழுக்கத்தையே குறிக்கிறதென்பது வெளிப்படை. அங்ஙனமாயின் தனித்தனி விஷயங்களாகும் இரண்டினையும் பிரித்தாளாமல் ஒன்றையொன்று தழுவி நிற்பதுபோலத் தானதருமம் என வழங்குவதற்குத் தக்க காரணமிருத்தல் வேண்டும் அன்றோ? அதனை உய்த்துணருங்கால் தானமும் தரும வழியில் ஆற்றுதல் இன்றியமையாததென்பது புலனாகின்றது. தருமம் என்பதற்கு அறம் என்பதே பொருளாதலினால் கொடுக்கும் கொடை சன்மார்க்கத் துறையில் பயன்படுதலா யிருத்தல் வேண்டுமென்பது அறநூலோர் கட்டளை.

திருவள்ளுவரும்,

"அறத்தினூங் காக்கமு மில்லை யதனை
மறத்தலினூங் கில்லை கேடு"

என்று வலியுறுத்தினர். செய்வோர் அறத்தின் பயனைச் சிந்தியா தொழியினும் அவ்வறம் துன்மார்க்கர்கட்குப் பயன்படுமாயின் அவர்களுடைய பாவச் செயல்களுக்கு மறைமுகமாக உதவியவர்களாகின்றனர். ஆதலினால் எச்செயல் புரியினும் அச்செயல் அறவழிப்பட்டதா? என்று ஆராய்தல் கடமை. அதனை மறந்தால் கேடுறுதல் திண்ணம் என்பதே குறளின் கருத்து. தவிர அறம், பொருள், இன்பம் வீடெனத் தொடர்ந்து கூறியதும் அறத்தாற்றில் ஈட்டும் பொருளே பொருளென்றும் அறத்தாற்றில் நுகரும் இன்பமே இன்பமென்றும் குறிப்பால் உணர வைத்ததாகும். அறவழிப் பொருளீட்டில் அறத்தாற்றில் இன்பம் துய்த்த புனிதர்க்கே வீடுபேறடைதல் கூடுமென்பது தோன்ற அதனை ஈற்றில் பெய்தனர் போலும். உலகறிய மணந்த மனையாளோடு கூடி இன்புற்று வாழ்தலையே 'அறத்தோடு நிற்றல்' எனக் கூறினர் பெரியோர். அங்ஙனம் ஒருமையினொழுகாமல் விலங்குணர்ச்சி கொண்டு கண்ணுக்கினிய இடங்களிலெல்லாம் கருத்தழுந்தி தூய ஒழுக்கங் கெடும் புல்லியர் மனதில் அச்சமும் அமைதியின்மையும் துன்பமும் கொண்டு உடல் வளமும் குன்றி நோய் பலவுழந்து, தக்கோர் முன்னிலையில் நிமிர்ந்து நிற்கக் கூசிக் குலைந்து இகழப்பட்டழிவர். அறத்தாற்றினை மறவா தொழுகுவோர்க்குப் புகழே பெருகும். இனி ஈகையுடையோர் தரும வழியில் பிறழ்ந்தொழுகுதலும் உண்டு. அது போற்றப்படுவதொன்றன்று. உதாரணமாக கர்ணன் வரையாது கொடுக்கும் வள்ளலே. அதன் பயனாக அவனுக்குப் பெருஞ் சிறப்புண்டு. எனினும் அறத்துறை வழாத சன்மார்க்கர்களாகிய பாண்டவர்களைத் தன் ஆயுள்நா ளெல்லாம் எதிர்த்துப் பகைத்து மறத்துறை நின்ற சுயோதனனை ஆதரித்துத் தூண்டினான். உண்மையில் கர்ணனுடைய துணைவலி யின்றேல் துரியன் இத்துணைக் கொடுமைகள் செய்திருக்கவு முடியாது. அறத்தை மறந்த பயன் தானும் கெட்டுத் தன்னை நம்பினவனையும் வேரோடழித்தது. இத்தகைய அறத்தினை ஆண்மகன் பேணுவதற்கு ஆக்க மளிப்பது பெண்மகளே யென்று பொருள்படுமாறு கம்பநாடர் கம்பராமாயணம் நாட்டுப்படலத்தில்,

"பொற்பி னின்றன பொலிவு பொய்யிலா
நிற்பி னின்றன நீதி மாதரார்

அற்பி னின்றன அறங்க ளன்னவர்
கற்பி னின்றன கால மாரியே.''

என் றறிவுறுத்தினர். ஆடவர் மனம் நல்லாற்றில் ஒழுகுமாயினும் பெண் மணி அதனை முழுமனதுடன் ஆதரிக்க முற்பட்டாலன்றிக் கணவனின் தனி முயற்சி பயன்பட முடியாது. அதுபற்றியே தொழிற்பட்டு கணவன் பாற்பட்டாலும் மாறுபாடற்ற அன்பு மனைவிபால் முகிழ்த்தல் வேண்டும். ஓர் ஆவிற் கிருகோடு பூத்தாலன்ன சதிபதிகள் ஈடுபடும் அறமே அறமாகும். அத்தகைய அறத்தினாலேயே காலமாரியும் பெய்யும். அதனாலேயே உலகம் செழித்து உயிர்க்கின்பம் பெருகும். அறப்பயிரை வளர்ப்பது மகளிருள்ளத்தில் மலர்ந்து மணம் வீசும் அழியாப் பேரன்பே யாகும். அன்புப்புனலால் வளரும் அறப்பயிரின் பயனே கற்பாகும். கற்புநிலை பிறழாத நாட்டிற் காலமாரி பெய்யும் என்பது முக்கால முணர்ந்த மூதறிஞர் கூற்று. கம்பநாடர் கருதிக் கூறிய இதே கருத்தைத் திருவள்ளுவனார்,

''தெய்வந் தொழாஅள் கணவற் றொழு தெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை.''

என்ற குறட்பாவில் நன்கு காண்கின்றோம். ஆடவனிடமுள்ள வன்கண்மைக் கஞ்சி நங்கை கொழுநனை வணங்கி அடங்கி நடப்பதைப் பொய்யா மொழிப்புலவர் குறிப்பிடவில்லை. மெய்யன்பினால் வழி யொழுகித் துணை செய்வதையே அச் செம்மொழி குறிக்கும். இக் குறளினால் பெண்கள் சுதந்தரத்திற்கு இழுக்கென் றுகூட ஒரு சிலர் பொருள்கொண்டு சீறுகின்றனர். இது இரங்கத் தக்கதே யாகும்.

இராமபிரானுக்கும் தனக்குமுள்ள விள்ளா அன்பினை சீதாபிராட்டியார் உண்மையன்பின் இலக்கண மறியாத தசமுகனை நோக்கிக் கூறியதாக ஒரு கவி யுளது. அது,

''எனக்குயிர் பிறிதும் ஒன்றுண் டென்றிரேல் எனக்குமன்றித்
தனக்குயிர் வேறின்றாகி.''

எனத் தெளிவுபட விளக்குவதாகும்.

'எனக்கு உயிர்நிலை அத்தாசரதி யென்பது மட்டில் அல்ல. அத்தாசரதிக்குயிர் நிலை ஜாநகியாகிய யானே. இவ்வுண்மை வரம்பிலாது பலப்பல மனைவிமார்களையுடைய நீ எங்ஙனம் உணர்வாய். பேதாய் நீ யுணரத்தான் முடியுமோ? அறத்துறை நிற்காத உன்னை உண்மையாய் ஒரு பெண்ணும் நேசிக்க மாட்டாள். ஆதலின் நீயும் நேசத்தின் நுட்பம் இன்னதென அறிந்ததில்லை. ஏகபத்தினி விரத சீலராகிய என் கணவருக்கும் கற்பருங் கலமாகிய எனக்கும் சமத்துவநேயம் நிலவிப் பிணித்திருப்பதை நீ எவ்வாறறிதல் கூடும்? அறிந்திருந்தால் என் மனதைத் திருப்பலாம் என்றெண்ணி மோசம் போகமாட்டாய்' என அறத்துறை யொழுகாத சிறுமையை இழித்துப் பேசி நிந்திக்கின்றார். இதனால் சதிபதிகளின் சமத்துவ நிலை நன்கு விளங்குகின்றது. வினிமா கொட்டகைகளில் மனைவிமாரைத் தம்மோடு சமமாக வீற்றிருக்கச் செய்வதே முன்னேற்றமென்று கருதும் தற்

கால யுவர்களிற் சிலர் பண்டைக்கால வாழ்க்கை முறைகளை இகழ்ந்து மூடர்களெனவும், மூடப்பழக்கத்தினர் எனவும் கூறி வருவது சர்வ சாதாரணம். பழம்பெண்டிர் தம்மைப் பிற ஆடவர்களின் கவனத்திற் குள்ளாக்கிக் கொள்ள ஒருபோதும் விழைந்ததில்லை. அது அம்மங்கையர்களது மனமுவந்த செயலே தவிரக் கணவர்களின் கட்டுப்பாட்டினுல் அன்றென்பது தெளிவு. தற்காலப் பெண்களைச் சிங்காரித்துக்கொள்ள சந்தர்ப்பம் அளித்து உடன் கூட்டிக்கொண்டு கண்காட்சிச் சாலைகளுக்கும் களியாடல் கூட்டங்களுக்கும் செல்வதை நாகரிக பாவனையாக எண்ணுவது தற்காலப் போக்கு. இத்தகைய நவநாகரிக யுவர்கள் மாதர்களை முன்னுளில் வீட்டில் அடைத்து வைத்திருந்தனர் அக்கால ஆடவர் என மதித்துப் பிற்போக்காளரெனத் தூற்றுவ தியல்பே யன்றோ?

"நிட்டூர மாக நிதிதேடு மன்னவனும்
இட்டதனை மெச்சா விரப்போனு—முட்டவே
கூசி நில்லாத குலக்கொடியும் கூசுகின்ற
வேசியும் கெட்டு விடும்."

என்ற பழம் பாவினுல் அயல் ஆடவன் அகஸ்மாத்தாகத் தன் பக்கல் சமீபித்துவர நேரினும் உள்ளமும் உடலும் கூசிக் குலைவர் குலமகளிர். இத்தகைய மெய்ப்பாடு எந்த மாதர்க்கு இல்லையோ அம்மாதர் சமூகத்தில் தனக்குரிய ஸ்தானத்தை யிழந்து கெடுதி யெய்துவர் என்பது முக்காலத்திற்கும் ஒத்த உண்மை. அதையே மேலே கூறிய வெண்பா உணர்த்துகிறது. இது போன்றவைகளே ஸ்திரீ தர்மம் என்று கொள்ளப்படுகிறது. பெண்மையைப்பேணி ஒழுகும் நிலையுடையவரையே ஸஹதர்மிணி என அழைத்தனர் முன்னோர்.

எண்வகைப் புணர்ச்சியில் பிரதம ஸ்பரிசமும் சேருமென்பது நூன் முடிபு. அதற்கு மாறாக மேல்நாட்டாரைப்போல எவருடனும் கைகுலுக்குவதில் தவறில்லையெனும் எண்ணம் பாரதபுத்திரிகளின் பெருமைக்குக் களங்கம் உண்டு பண்ணுவதாகும். பெண்மகள் தனக்குரிய தர்மத்தைத் தானே பாதுகாக்கக் கடமைப்பட்டிருப்பதை நினைவூட்டவே,

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்."

என்றருளிச் செய்தனர் பெரியர்.

கவிச்சக்கிரவர்த்தியும் இது குறித்தே,

"மாதரார் அற்பி னின்றன அறங்கள்."

எனத் துணிந்து கூறினர். "மனமுண்டேல் வழியுண்டு" எனும் ஆங்கிலப் பழமொழிக் கிலக்கியமாக பெண்மகள் தனது ஸ்திரீ தர்மத்தை ஒரு சிறிதும் பிறழாது காக்க உறுதிபூண்டால் அவர்களை எத்தகைய ஆண்மகனும் அடிமைப்படுத்தவோ சிறுமைப்படுத்தவோ முடியாது. அந்த தருமம் கோணியபின்னர்தான் கணவன் காதை யறுத்தான்; மூக்கைக்கடித்தான்; தலையைச் சீவினுன் என்னும் நிகழ்ச்சிகளும் 'விஷய விளம்பி' களில்

காண நேர்ந்து விட்டதென்பது தெளிவு. தானம் வேறு; தருமம் வேறு. ஆயினும் தருமத்தை அநுசரித்தே தானம் நடைபெறல் வேண்டும் என்னும் ஒழுங்கை நினைவூட்ட முற்பட்டதுபோலக் கம்பர் விபீடணன் அடைக்கலப் படலத்தில்,

"சிந்தனை நறவமும் நெறியில் ஊன்களும்
தந்தன கண்டிலேன் தரும தானமும்
வந்தன நீதியும்."

என்று ஒரு கவியில் அமைத்து வைத்தார்.

இது மிக்க அர்த்த புஷ்டியுடையது. "ஆட்சேப மில்லாத அபிப்பிராய மில்லை; தாட்சண்ய மில்லாத தயவில்லை" என்பது ஒரு அநுபவ உண்மையானபழமொழி. அதற்கிணங்க தாட்சண்யத்திற்காக தானம், தயவிற்காகத் தானம், உலகில் விளம்பரமாக வேண்டித் தானம், பின்னால் வரக் கூடுமென்று தானம் எனத் தானங்கள் பல நிறப்படுகின்றது. அவைகள் உண்மையான தானங்களாக மாட்டா'வென்பது நூலோர் கொள்கை. பசுவைக் கொன்று செருப்புதானம் என ஒரு பழமையான உதாரணமும் நம் நாட்டில் வழங்கி வருகிறதை அறியாதார் இல்லை.

ஒரு பக்கத்தில் தரும விரோதமான செயல்; மறுபக்கத்தில் பிரபலமான தானம் செய்தல் சர்வ சாதாரணமான நிகழ்ச்சிகளே. எட்டு வட்டி வாங்கிப் பொருள் குவித்த தனிகரும் முழு ரூபாய் பூரி கொடுப்பர். பின்னால் செல்லாகவேண்டிய வருஷவட்டியை முன்னாலேயே பிடித்துக் கொள்ளும் பிரபுக்கள் ஆலயத்திருப்பணி செய்து புகழ்சூடப் பின்வாங்குவதில்லை. தனது குடும்பத்தில் உள்ள தலைமை உரிமையுள்ள விதந்துவுக்குக் கண்ணியமான அளவிற்கு வசதியளிக்க மனமின்றிக் கோர்ட்டிற்குப் போகும்படி கம்பீரமாகக் கூறும் பெரிய மனிதர்கள் வெள்ளிச் சொம்புகளைக் கலசமாக வைத்துச் சடங்குகளில் தானம் செய்வதைக் கண்டிருக்கிறோம். இவைகளும் தானந்தான் என்று கொள்வதோ? பலபேரிடம் பொருளை வசூலித்து தன் பெயரால் தானம்புரிவதும் ஒரு தந்திரம். அதிலும் ஒரு பாதி செய்தல் சுயநலப் பிரயாசை.

இக் கொடுமைகளை நோக்கியே கவியரசர் தான தருமம் என்று மொழியாமல் தருமதானம் என ஷை கவியில் ஆண்டனர் போலும் என்றெண்ணுவது மிகையாகாது.

அதனாலேயே அறவழியே பொருள் ஈட்டு தலையும் அறவழியிலேயே இன்பம் நுகர்தலையும் வற்புறுத்தப்பட்டது. பொருள் என்பது செல்வப் பொருளை மட்டில் குறிப்பிடவில்லை. கல்விப்பொருள், புண்ணியப் பொருள் ஆகியவைகளையும் குறிக்கும். கல்விப் பொருளை ஈட்டுவதில் அறத்தாறு யாதென ஐயுறலாம். உதாரணமாகக் கர்ணன் பரசு ராமரிடம் சென்று அவரது கொள்கைக்கு விரோதமாகத் தான் வேதியச்சிறுவன் என்று பொய்புகன்று தனுர் வித்தைகளைப் பயின்றான். ஆனால் எங்கும் நிறைந்த கடவுளின் சங்கற்பப்படி பொய் வெளியாயிற்று. அவன் கற்ற கல்வி நல்ல தருணத்தில் பயன்படாமல் போகக் கூடிய சாபத்தையே பெற்றான் இவ் வொன்றே போதிய சான்றாகும்.

அறத்தாற்றில் இன்பம் துய்த்தலை வற்புறுத்தியும் புறத்தாற்றில் புகுவதால் நேரும் இழிவு துன்பம் முதலியவைகளை நன்கு விவரித்தும் சான்றோர் சுடச்சுடக் கூறியுள்ள பலகோடி நீதிகளை எடுத்துக் காட்ட வேண்டியதில்லை. ஒரு நாடு சிறக்கவேண்டின் சன் மார்க்கம் தலை எடுக்க வேண்டும். சன்மார்க்கம் தழைப்பது அறத்தாற்றில் ஈடுபடும் குடிமக்களால் என்பதும் அத்தகைய அறத்தை கோடாமற் பாது காப்பவனே காவலன் என்பதும் பண்டைப் பாரத நாடு கண்ட மாட்சி. மனம் போன போக்கெல்லாம் போக வேண்டிய உரிமை அவசியம் வேண்டு மென்பது நவீன கால நீதி. இதனை விரிப்பது இக்கட்டுரைக்கு ஏற்றதல்ல.

ஒரு கை கொடுக்கும் தானத்தை மறுகரம் உணரக் கூடா தென்பது தான சாஸ்திரம் உணர்ந்தோர்களின் திடமான கருத்து. இத்தகைய எண்ணமே உண்மைத் தானத்தை உயிர்ப்பிப்பதாகும். தருமம் என்பதற்குப் பொதுவாக அறம் என்று பொருள் காணப்படினும் அறம் என்பதற்கு அறிஞர் கண்ட விரிவுரைகள் உரையி லடங்கா; முடிவு காண்பதும் இயலாது. அதனைத் திருவள்ளுவர் சுருக்கி

"அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா வியன்ற தறம்"

என்று நான்கே வாக்கியங்களில் அடக்கிக் காட்டினார்.

---

# ஊர்வசியின் காதல்

(S. கிருஷ்ணன்.)

## II

இவ்வாறு இருவரும் பேசிக்கொண்டு ஆகாய மார்க்கமாக பிரதிஷ்டா நகரம் வந்தார்கள். ஊர்வசி சொல்லுகிறாள்:—"தோழி! இந்த நகரை பார்த்தாயா? பிரயாகையில் அதன் சாயல் எவ்வளவு மகோன்னதமாகத் தெரிகிறது பார்! இதுதான் அம் மகாராஜாவின் மாளிகையோ? இப்பட்டணத்திற்கு நடு நாயகமாக விளங்குகிறதல்லவா! இருக்கட்டும். இப்பொழுது இவைகளை யெல்லாம் பேசிப் பயன் என்ன? நாம் போகிறோமே! நம்மைக் கண்டால் அவர் மதிப்பாரா? நம்மிடத்தில் அன்பாயிருப்பாரா? அவர் எண்ணம் எப்படி யிருக்கிறதோ?" என்று கூறி நந்தவனம் ஒன்றில் இறங்கினாள்.

அவ்விடத்தில் புரூரவன் இருப்பதைக் கண்ட சித்திரலேகை "கண்மணி! இவனைப் பார்த்தாயா! ஒளி மழுங்கின சந்திரன் போல் தோன்றுகிறான்"

ஊர்வசி:—ஆமாம். முன் நாம் பார்த்ததற்கும் இப்பொழுது பார்க்கின்றதற்கும் உருவம் மிகவும் வேறுபட்டு காணுகிறது. ஆதலின், திரஸ்கரணி வித்தையால் நம்மை அவர் அறிந்துகொள்ள முடியாதபடி மறைந்து அவரண்டை போய் என்ன பேசுகிறார் என்பதை அறிந்து கொள்வோம்.

சித்திரலேகை சம்மதிக்க இருவரும் மறைந்து அவன் பக்கத்தில் வந்து நின்றார்கள். புரூரவன் விதூஷகனோடு துக்கத்துடன் பேசினவைகளைக் கேட்டு சித்திரலேகை: "நீ நம்மை அவர் மதிப்பாரா என்று விசனமடைந்தாயே! அவரும் உன்னை நினைந்து புலம்புகிறார் பார்" என்றாள்.

ஊர்வசி:—உண்மைதான். நான் நினைத்தது முழு பிசகு. அவர் எதிரில் செல்ல என் மனம் துணியவில்லை. எனினும் எழுத்து மூலமாக என் கருத்தை அவருக்கு தெரியப் படுத்துகிறேன் என்று தன் கை நகத்தால் மரப் பட்டையில் கீழ்க்கண்ட கருத்துகள் அடங்கிய இரண்டு சுலோகங்கள் எழுதி புரூரவன் எதிரில் எறிந்தாள்.

"நீர் கூறியவதெல்லாம் உண்மையே. நான் அதிர்ஷ்டம் இல்லாதவள். ஆனால் உம்மிடத்தில் எனக்கு ஆசை யில்லையா? இல்லாவிட்டால் பாரிஜாத பூக்களான மெத்தையில் ஏன் எப்பொழுதும் புரண்டு கொண்டிருக்கின்றேன்? குளிர்ந்த தென்றற் காற்று நெருப்புப் பொறிகளாக தோன்றக் காரண மென்ன?"

மரப்பட்டை எதிரில் விழுந்ததும் விதூஷகன்:—ஓ! இதென்ன ஆச்சரியம்! என்னமோ பறந்து உன் சமீபம் வருகிறதே! பாம்புத் தோல் போல் தோன்றுகிறது.

புரூரவன்:—பாம்புத் தோலன்று. மரப்பட்டை. யாரோ எழுதிப் போட்டிருக்கிறார்கள்.

விதூஷகன்:—உன் துக்கத்தைக் கண்டு ஊர்வசி இரங்கி எழுதி அனுப்பி யிருப்பாள்.

புரூரவன்:—ஆசைக் களவுண்டோ? பார்ப்போம்—என்று கூறி, அதை எடுத்துப் படித்துப் பார்த்து நீ சொன்னது சரிதான் என்றான்.

விதூஷகன்:—பூராவும் அறிய விரும்புகிறேன். உரக்கப் படித்துக் காட்டும் என, புரூரவன் வாசித்துக்காட்டினான். பின் விதூஷகன், இதனால் உமக்கு ஆறுதல் உண்டாயிற்றன்றோ? என்றான்.

புரூரவன்:—நீ இதை ஆறுதல் என்றா கூறுகிறாய்? என்மீது பூரணமான ஞாபகம் வைத்திருப்பதாய் அவளே எழுதியிருக்கிறாள். இதைப் பார்க்கிற பொழுது எனக்கு அவளை நேரில் கண்டால்போன்ற சந்தோஷம் உண்டாகிறது. என் விரல்கள் வியர்க்கின்றன. எழுத்துக்கள் அழிந்து போகக் கூடும். ஆதலால் நீ இதை வாங்கி வைத்துக் கொள் என்றான்.

அவனும் அதை வாங்கிக்கொண்டு "உன்மீது அவ்வளவு ஆசை யுடையவள் என் இன்னும் உன்னுடன் வந்து அளவளாவவில்லை" என்றான்.

இதைக் கேட்ட ஊர்வசி சித்திர லேகையைப் பார்த்து "தோழி! நான் திடீரென்று அவர் எதிரில் போவதானால் பயமாக இருக்கிறது. நான் என் மனதைச் சமாதானப்படுத்திக் கொள்ள சாவகாசம் வேண்டும். அதற்குள் முன்னதாக நீ போய் அவருடன் சம்பாஷித்திரு" என சித்திர லேகை அப்படியே ஆகட்டும் என்று அரசன் எதிரில் வந்து ஆசீர்வாதம் செய்து நின்றாள்.

அரசன் அவளை விசாரித்து விட்டு "கங்கையைப் பிரிந்த யமுனையைப் போல ஊர்வசியை விட்டு நீ மாத்திரம் பிரிந்து வந்தது எனக்கு அதிக சந்தோஷத்தைக் கொடுக்கவில்லை" என்றான்.

சித்திர லேகை:—உண்மைதான். மேகம் எழும்பின பின் தானே மின்னல் மின்னும். அரசே! முன் அசுரன் கையிலிருந்து மீட்டது போல் இப்பொழுது காமன் கையிலிருந்தும் காப்பாற்றும்படி ஊர்வசி தங்களை வேண்டிக் கொள்கிறாள்.

புரூரவன்:—நீ ஊர்வசி மாத்திரம் மிக வருந்துவதாகக் கூறுகிறாயே! அவளுக்காக நானடைகிற துக்கம் மாத்திரம் உன் கண்களுக்கு என் புலப்படவில்லை?

சித்திர லேகை ஊர்வசியைப் பார்த்து "ஊர்வசி! இன்னும் உனக்கு வர பயமில்லையா?" என்று அழைத்தாள். ஊர்வசி அவள் எதிரில் வந்து "என்ன! மகா சாமார்த்தியம் உடையவளாயிருக்கிறாயே! என்னைத் தனியே விட்டு விட்டு எனக்குத் தெரியாமல் இங்கு வந்து விட்டாயே" என்று ஒன்றும் தெரியாதவள் போல் நடித்தாள்.

சித்திர லேகை "அடி பேதையே! நீ என்ன கண்டாய்! போகட்டும். முதலாவது மகா ராஜாவை நமஸ்கரிப்பாய்" என்றாள். உடனே ஊர்வசி யும் வணங்கி நின்றாள்.

புரூரவன் "கண்மணி! தேவேந்திரனுக்குச் செய்யவேண்டிய மரியா தையை எனக்குச் செய்தனையே! இவ்வுலகத்தில் இப்படி புகழ் பெற்ற வன் என்னையல்லாமல் வேறு யார் இருக்கிறார்" என்று சரசமாய் பேசி னான். அப்பொழுது தேவலோகத்தினின்று தேவ தூதன் ஒருவன் வந்து சித்திர லேகையைப் பார்த்து "ஊர்வசியைத் தயாராக இருக்கச் சொல். பரத நாட்டியத்தை நீங்கள் ஆட பார்க்கும்படி இந்திரன் முதலிய தேவர் கள் விருப்பங் கொண்டிருக்கிறார்கள்" என்று கூறினான். "ஐயோ? இப்பொழுதுதானா பரத நாட்டியம் ஆட வேண்டும்? தேனை உண்ணப் போகும் சமயத்தில் புலி தூரத்தியதைப் போன்றிருக்கிறதே" என எல் லோரும் சங்கடப் பட்டார்கள்.

சித்திர லேகை:—ஊர்வசி! தூதன் கூறியதைக் கேட்டாயா? மகா ராஜாவிடம் விடை பெற்றுக் கொள்.

ஊர்வசி:—நான் என்ன சொல்ல? எனக்கு கேட்க வாயில்லையே!

சித்திர லேகை:—அரசே! ஒருவனுக்கு அடிமையா யிருந்தால் அவன் உத்தரவிற்கு கீழ்ப்படிய வேண்டியது தானே! தேவேந்திரன் ஊர்வசியை வரும்படி சொல்லி யனுப்பி யிருக்கிறான். அவள் உம்மிடம் கூறி விடை பெற அஞ்சுகிறாள். தாங்கள் விடையளிக்க வேண்டும்.

புரூரவன்:—நான் உங்கள் எஜமானன் கருத்தைத் தடுக்க மாட்டேன். சுகமாக போய் வரட்டும். ஆனால் என் நினைவு கொஞ்சம் இருக்கவேண்டும்? என்று சொல்லவும், ஊர்வசி மறுபடியும் பிரிந்து போக வேண்டி நேர்ந் ததே என்று துக்கப்பட்டு சித்திர லேகையுடன் தேவலோகம் சென்றாள்.

புரூரவன் (துயரத்துடன்):—பால் பாக்கியம் இல்லாதவன் விலைக்கு பால் வாங்க அதனையும் பூனை குடித்த கதையாக இருக்கிறது என் பாடு. வந்ததும் தங்கவில்லை. என் துரதிர்ஷ்டத்தை என்ன சொல்ல!

விதூஷகன் (மனதிற்குள்):—ஊர்வசி வந்திருந்தபோது அந்த மயக் கத்தில் அவள் என்னிடம் கொடுத்திருந்த மரப் பட்டையை இழந்து விட் டேனே! இவன் கேட்டால் என்ன சொல்வேன்.

புரூரவன்:—என்ன ஆலோசித்துக் கொண்டிருக்கிறாய்!

விதூஷகன்:—இல்லை. அவளுக்கு உன்மேல் எவ்வளவு காதல் இருக்கி றது என்று யோசித்துக் கொண்டிருந்தேன்.

புரூரவன்:—நானும் அதையே யோசித்துக் கொண்டிருக்கிறேன். அவள் போனபோது அவள் எண்ணமெல்லாம் என் மேலேயே இருந்தது. ஆயினும் அவள் ஒருவனின் அடிமை யல்லவா? இப்பொழுது அதை நினைத்துப் பயன் என்ன? அவள் எழுதியெறிந்த பட்டையைக்கொடு. அதைப் பார்த்தாலாவது மனம் ஆறுதலடையும்.

விதூஷகன்,—(பயந்து) ஊர்வசியோடு அதுவும் போய் விட்டது.

புரூரவன்:—நீ செய்வதெல்லாம் இப்படித்தான் என்று விதூஷகனை கோபித்து அதைத் தேட ஆரம்பித்தான்.

# என்னுடைய அறியாமை

(P. வேங்கடராமன் B. A)

ஒரு நாள் ஒரு சிறுவன் எனக்கு ஒரு கடிதம் எழுதி இருந்தான். அதில் அவன் என்ன புத்தகங்கள் படித்தால், மிகவும் கெட்டிக்காரனாயும், அறிவாளியாயும் வரலாம் என்று என்னை யோசனை கேட்டிருந்தான். நான் அவனுக்கு எனக் கெட்டியபடி ஓர் யோசனை கூறி மறு மொழி கொடுத்தேன். பிறகு நான் இதைப்பற்றி சிந்திக்கலானேன்.

இப் பையன் என்னை ஓர் பெரிய படிப்பாளி என்றும் எனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை என்றும் கருதி விட்டான் போலும்! நான் கற்றது கைம்மண்ணளவு கூட இல்லை. நான் முதல் வகுப்பு வண்டியில் ஏறி பிரயாணம் செய்து, பிறகு 3-ம் வகுப்பு டிக்கட்டை காட்டினால் எவ்வளவு அவமானமாய் இருக்குமோ அவ்வளவு அவமான மடைந்தேன். அச் சிறுவன் எண்ணுவதுபோல் எனக்கு அவ்வளவு ஞானம் உள்ளதாகத் தெரியவில்லை. என்னிடம் இருக்கும் கல்விச் செல்வத்தின் குறைவை உணர்ந்து நான் வெட்கிக்கும் நிலையில் என்னை அச் சிறுவன் வைத்துவிட்டான். நான் அறிந்த விஷயங்களையும், அறிய வேண்டியவைகளையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசத்தை ஒத்திருந்தது. என் ஐஸ்வரியத்தின் அளவு நான் ரூபாயில் காலணா கூட கொடுக்க இயலாத ஸ்திதியில் இச்செல்வத்தை வைத்திருக்கிறேன். இந்த ஸ்திதியில் நீ ஏன் என்னிடம் கடனுக்கு வருகிறாய் என்று அச் சிறுவனை நொந்த வண்ணம் இருக்கிறேன்.

முதலாவதாக—என்னையே எடுத்துக் கொள்வோம். இவ்வுடல் பார்வைக்கு ஒரு மரத்தைப்போன்று, இரு கிளைகளும், அவைகளின் நுனியில் ஐந்து கொப்புகளும், எல்லாவற்றிற்கும்மேல், ஒரு உருண்டையான குமிழும், அதில் விசித்திர ஓட்டைகளும், மினுமினுக்கும் வைரம் போன்ற வஸ்துக்களும், ஒரு பாய் போன்ற மூடுகுல்லாவும், நூதனமான சப்தம் செய்யும் யந்திரமும் உடையது. இதைப்பற்றி எனக்கு என்ன தெரியும். நான் ஓர் சட்டை அணிந்த நூதன வஸ்து.

உன்னுடைய 'எபிக்லாடிஸ்' (Epiglottis) எங்கு இருக்கிறது என்றால் நான் அகராதியைப் புரட்ட வேண்டியதுதான். ஒரு பையனை, உபாத்தியாயர் "டயாபரம்" (Diaphram) எங்கிருக்கு என்க, அவன் வட இந்தியாவில் என்றது எனக்குச் சிரிப்பைத் தருவதுபோல, நான் 'எபிக்லாடிஸு'க்கு விடை கொடுத்தால் வைத்திய மாணவர்கள் சிரிக்கத் தக்கதாக முடியும். இந்த அணுக்க ளடங்கிய மனித சரீரத்தின் இரகசியங்கள் வைத்தியர்களுக்கே ஓர் நூதனந்தான்.

பிறகு எனக்கு, இவ்வாகாயத்தின் பெருமையையும், அளவையும் பிரகாசத்தையும், அதில் அடங்கிய நக்ஷத்திர மண்டலங்களையும் அதற்கப்பால் உள்ளவைகளையும், அதற்கு எல்லை யுண்டா இல்லையா என்பதையும் பற்றி ஏதாவது தெரியுமா? இவ்வுலகின் அற்புதமான வஸ்துக்கள் ஏன் உண்டாகின்றன; எப்படி உண்டாகின்றன என்று எனக்கு கிஞ்சித்தேனும் தெரியாமலிருக்க, நான் இச்சிறுவனுக்கு என்னத்தைச் சொல்லப் போகிறேன்.

நான் என் கொல்லையில் மரம் செடிகளைக் கொத்துகையில் ஒரு பெரிய வேர் தென்பட்டது. இவ்வேரை அடியோடு அகற்ற வேண்டுமென்று ஆழமாக வெட்டவெட்ட பல வேர்கள் மண்வெட்டியில் சிக்குப்பட்டன. நான் தைரியத்தை இழக்காமல், சாயந்திரம் வரையில் மும்மரமாக வேலை செய்து களைத்ததுதான் மிச்சம். பிறகு என் மனைவியை அழைத்து உள்ளதைச் சொன்னேன். அவள் ஓர் சிரிப்புச் சிரித்துவிட்டு, “ஐயோ! பாவம். நீர் அடுத்த கொல்லையிலுள்ள ஆலமரத்தின் வேரை யல்லவோ வெட்டிக் கொண்டிருக்கிறீர்” என்றவுடன் என் அறியாமை எனக்கு விளங்கி விட்டது. இப்படியே ஒவ்வொரு விஷயத்திலும் நமக்கு அறியாமை யதிகமே ஒழிய, அறிந்தது கடுகளவுதான். எவ்வளவு புத்தகங்கள், நான் படிக்கவில்லை? எவ்வளவு பாஷைகள் எனக்குத் தெரியாது? எவ்வளவு விஷயங்கள் எனக்குச் செய்யத் தெரியாது? நான் இவைகளைச் சொல்லப் புகுந்தால், நீ ஆச்சரியப்படுவாய். ஆனால் இதைப்பற்றி வருத்தப்படவில்லை. எனக்கு இவ்வளவு பிரதேசங்கள் போய் இன்னும் சுற்றவேண்டி இருக்கின்றன. ஒரு சிறுபாகத்தை மட்டிலும் எடுத்து நான் பயன்படுத்தி பலனடைந்து வருகிறேன். மற்றவைகளை என் சௌகாரியம்போல் ஆடிப் பார்த்து வரலாம். இப்படி பெரிய கவிகள், ஞானிகள் முதற்கொண்டு, தெரியாதவைகளைக்கொண்டு தெரிந்த விஷயங்களை அளந்தால், ஒருவரும் கர்வப்படக் கூடியதாயிராது. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பகுதியில் கொஞ்சம் தெரியும். எல்லாம் அறிந்தவர் கிடையாததுபோல, ஒன்றும் அறியாதவரும் கிடையாது. நாம் நம் இயல்புக்குத் தக்கபடி கொஞ்சமோ, கூடவோ தூக்கிச் செல்லுகிறோம். ஓர் மாட்டிடையனுக்குத் தெரிந்த விஷயம் ஓர் அமைச்சனுக்குத் தெரியாது. தாமஸ் பிரௌன் (Browne) என்பவர் சூரியனே பூமியைச் சுற்றுகிறான் என்றார். எனக்கு இவ்விஷயத்தில் எது உண்மை என்று அவரை விடத் தெரிந்தபோதிலும், நான் அவரிலும் கெட்டிக்காரன் என்றால் வியக்கத்தக்க தல்லவோ! அறிவு இதுகளில் தங்கினதல்ல. என் எண்ணத்தில் லிங்கன் (Lincoln) என்பவர் மிகவும் அறிவாளி; மற்றைய மனிதர்களை விட விஷய மறிந்தவர். இப் பூவுலகின் கண் உள்ள மானிடரில் அவர் மிகத் தெளிவாய் விஷயங்களை அறிந்திருந்தார். ஆனாலும் இப்போது சர்வகலாசாலை மாணவர்கள் பயிலும் பாடங்களில் அவருக்கு என்ன பகுதி தெரியும்!

அதனால், நாம் ஒன்றும் கற்கவேண்டியதில்லை. கற்றதேபோதுமென்பதில்லை. நான் தினந்தோறும் புதிதான விஷயங்களை உணரவேண்டும். இச் சூரியனை வருஷத்திற்கு ஒருமுறை சுற்றும் ரதத்தி லடங்கிய விஷயங்கள் யாவையும் நாம் அறியவேண்டும். ஆனால் கடைசியாக நாம் அறிந்தது எம்மட்டு என்று நினைத்தால், வியப்பானது! அதனால் நாம் விஷயங்கள் சேகரித்து, பத்திரமாய் காப்பாற்றும் குதிராய் இராமல், மற்றவை



# "இன்றைய குடியானவன்"

(கா. ஆ. வீ. சிவனணைந்த பெருமாள்)

அன்று நமது அரும்பெரும் மூதாட்டியான ஔவை சோழ ராசனை வாழ்த்துங்கால் 'வரப்புயர' என்றாள். அப்பொழுது ஆங்குள்ளோருக்கு அதன் பொருள் விளங்கவில்லை. பின்னர் ஔவை அதனைப் பின் வரும் அடிகளால் விளக்கினாள். அவை யாவெனில்,

'வரப்புயர நீருயரும்
நீருயர நெல்லுயரும்
நெல்லுயரக் குடி உயரும்
குடி உயரக் கோனுயரும்,'

என்று சொல்லி முடிக்கவும் ஆங்குள்ளோர் யாவரும் அக மகிழ்ந்தனர். ஆதலால் ஓர் தேசத்தின் அரசாட்சி சிறப்புற்று நீடூழி கால மிருக்க வேண்டுமென்றால் அதிலும் அத்தேசம் விவசாயமே முக்கிய ஜீவனாம்சமாகக் கொண்டிருக்கும் பொழுது, அந்நாட்டின் குடியானவன் ஒவ்வொருவனும் அந்நாட்டின் அரசியலைத்தாங்கும் தூணாகவும் நாட்டின்செழிப்புக்குக் காரணகர்த்தனாகவு மிருக்கிறான். இவ்வுண்மை பண்டு தொட்டு உணரப்பட்டு வந்திருக்கின்றது. ஆனால் இன்றைய குடியானவனின்கதி என்ன? பெரும்பான்மையோர் பட்டினியால் வாடுகின்றனர். பெண்டிர் மகளிர் படும் கஷ்டம் சொல்லத்தரமன்று. கடன்காரன் ஒரு புறம், கவர்னமெண்டின் தீர்வை ஒருபுறம், அகாலமழை ஒருபுறம் ஆக இவையனைத்தும் ஓர் குடியானவனை மிகவும் வருத்துகின்றது. ஆனால் இவை அனைத்திலும் மிகவும் கொடுமை விளைவிக்கும் கடன் சுமை குடியானவனது முதுகை வளையும்படி செய்கிறது. அநியாய வட்டி வாங்கி அல்லல் படுத்தும் அநேக மார்வாரிகளும், தொந்தி படைத்த லேவாதேவிக்காரர்களும் குடியானவனது க்ஷீண

---

ரோடு அன்பாய் வசித்துவர முயற்சி செய்தலே நமக்கு சிறந்த அறிவாய் கருதல் வேண்டும். நம் பெருமை அறிவை ஒத்து அல்ல; இவ்வுலகில் வசிக்கும் திறமையை ஒத்தே இருக்கிறது.

A. G. Gardiner எழுதிய கட்டுரை யொன்றை மொழி பெயர்க்கப் பட்டது.

திசைக்கும் அவனது மனைவி குழந்தைகளது பட்டினிக்கும் முக்கிய காரண, கர்த்தர்களா யிருக்கின்றனர். இங்ஙனம் குடியானவனின் நிலைமை வருஷத்திற்கு வருஷம் மிகவும் மோசமாக ஆகிறது. நமது கருணை மிகுந்த கவர்ன்மெண்டாரோ இந்த அவதியைக் கண்கூடாகக் கண்டும் அதைத் தீர்ப்பதற்கு வேண்டிய நிவாரணங்களை இதுகாறும் செய்ய முன் வரவில்லை. நமது மாட்சிமை தங்கிய வைசிராய் பிரபு லார்டு லின்லித்கோ அவர்கள் தாம் பதவிக்கு இந்தியாவிற்கு வரும் முன்னர் தமக்கு விவசாயத்தில் அதிக சிரத்தை உண்டென்றும், அதை முக்கியமாக இந்தியாவில் விருத்திபண்ண எல்லாவகையிலும் பாடுபடுவார் என்றும் படாடோபமான அறிக்கைகள் பல விடுத்தார். எல்லாம் பேச்சளவிலே தான். காரியாம்சத்தில் அவர்கள் நடந்துகொண்ட விதம் மிகவும் மோசமாயிருக்கிறது.

எல்லாம் வல்ல இறைவன் திருவருள்படி நமது காங்கிரஸ் மகாசபையானது சென்ற வருடத்தில் மாகாணங்கள் எங்கும் மட்டற்ற பெருமையை நிலை நாட்டியது. பெரும் பான்மை காங்கிரஸ் அங்கத்தினர்கள் சட்டசபைகளில் நுழைந்தார்கள். காங்கிரஸ் மந்திரிகள் தாம் அரசியல் துறையில் இறங்கி பொது மக்களுக்கு எவ்வகையிலும் தமக்குக் கொடுக்கப் பட்டுள்ள நிர்ணயிக்கப் பட்ட அதிகாரங்களை வைத்து உதவி செய்யும் நோக்கம் கொண்டுள்ளார்கள். அதன்படி அவர்கள் சட்டசபைகளில் நுழைந்தது முதல் எவ்வளவோ பிரயாசைகளுடன் சில சீர்திருத்தங்களைக் கொண்டு வந்திருக்கின்றனர். அவைகளில் முக்கியமாக ஈண்டு குறிப்பிடத் தக்கது கடன்நிவாரணச் சட்டமாகும். காங்கிரஸ் என்றும் ஏழையின் பொருட்டு எதையும் செய்யச் சித்தமா யிருக்கிறதினால் இன்று ஒவ்வொரு குடியானவனும் தனது வளைந்த முதுகை சிறிதாவது உயர்த்த முடிகிறது. இச்சட்டத்தினால் எவ்வளவோ முதலாளிகளும் மார்வாரிகளும் வயிற்றெரிச்சல் கொண்டிருப்பார்கள். என்றாலும் எவ்வளவோ பெரும்பான்மை ஏழை விவசாயிகள் இனியாவது கவலையின்றியாவது கால்வயிறாவது சாப்பிடுவார்கள். இன்னும் கொஞ்சகாலத்தில் அவர்கள் வயிறாரச் சாப்பிட்டு வளமாக வாழுங் காலம் நமது காங்கிரஸ் மந்திரிகளால் ஏற்படும் என நம்புவோம். இன்றைய க்ஷீணதிசையி லிருக்கும் குடியானவனை பல்லாண்டுகளுக்கு முன்னர் செழுமையிலிருந்த குடியானவனாக ஆக்கக் காங்கிரஸ் பாடுபடும்; கடவுளும் அருள் செய்வாராக.



# விசித்திர விநோதம்

பிரபு:—என்னடா! நல்ல குண்டோதரன் மாதிரி யிருக்கிறாய், காசு கேட்கிறாயே உனக்கு வெட்கமில்லையா?

பிச்சைக்காரன்:—கேட்க வெட்கமாய்த்தா னிருக்கிறது. ஆனால் கேட்காமல் எடுத்துக் கொண்டதற்காக முன்பே ஒரு தரம் சிறைவாசம் கிடைத்திருக்கிறது.

***





கணவன்:—(அதிகக் கோபத்துடன்) "இனி நான் தனிக் காய் கனிதான் சாப்பிடப்போகிறேன்."

மனைவி:—"ஏன்? வைத்தியர் உத்திரவா?"

கணவன்:—"அது ஒன்றுமில்லை. அந்தக் கசாப்புக் கடைக்காரன் நான் அவனுக்குக் கொடுக்கவேண்டிய பாக்கிக்காக 'உனக்குச் சொரணையில்லையா' என்று கேட்டுவிட்டான்."

***

"என்ன சார்! உமது வீட்டில் சுண்டெலிகள் அதிகம் போலிருக்கே!"

"ஏன் அப்படிக் கேட்கின்றீர்"

"இல்லை. ராத்திரி 12 மணி வரை எனக்குத் தூக்கமே வரவில்லை.—உமது வீட்டு சுண்டெலிகளின் தொல்லையினால்"

"அடா கர்மமே! அது என் மனைவி பிடில் (Fiddle) வாசிப்பதையா!"

***

மனைவி—(விருந்து நடக்கும் வீட்டில்) அடிக்கடி உள்ளே போய் பக்ஷணங்களை எடுத்து வந்து தின்கிறீர்களே! எனக்கு வெட்கமா யிருக்கிறது! வீட்டிலுள்ளவர்கள் உங்களைப்பற்றி என்ன நினைத்துக்கொள்ளமாட்டார்கள்!

புருஷன்:—அதைப்பற்றிக் கவலைவேண்டாம்! எல்லாம் உனக்குத்தான் என்று சொல்லி வந்திருக்கிறேன்.

பல்ல வெட்டியார் (கடன் கொடுத்தவர்):—பணத்தைத் திருப்பிக் கொடுங்க ஐயா! எத்தனை நாள் வருகிறது ?

கடன் வாங்கினவர்:—நீ ஏன் வீணாய் அலைகிறாய்; நான்தான் சொன்னேனே சனிகழித்து மூன்று நாளைக்கும் புதன் கழித்து இரண்டு நாளைக்கு மட்டும் வராதே என்று!

***

மனைவி:—இன்று காலையில் எந்தக் கழுதை முகத்தில் விழித்தேனோ தெரியவில்லை. உங்களிடம் இப்படித் திட்டும், அடியும் படவேண்டியதாயிற்று.

புருஷன்:—நீ காலையில் என் முகத்தைத்தானே பார்த்தாய், கழுதை என்று சொல்லுகிறாயே. ஜாக்கிரதையா யிரு, அல்லது இன்னும் உதைப்பேன்.

***



உபாத்தியாயர்:— நீ வீட்டில் எழுதிக்கொண்டு வந்த பாடம் உங்கள் அப்பா கை யெழுத்தாட்ட மிருக்கிறதே?

பையன்:-உண்மையைச் சொல்லி விடுகிறேன். அப்பா பவுண்டன் பேனாவில்தான் நான் இதை எழுதினேன்.

***

மாணிக்கம்:—உங்களப்பா, கள் சாப்பிடுவார்களாமே!

ஒரு உத்தியோகஸ்தர் மகன்:—அவர்கள், ஒருநாளும் கள்ளுக் கடைக்குப் போகமாட்டார்களே; வீட்டி லிருந்துதானே சாப்பிடுவது வழக்கம்.

***

நோயாளி:—என்ன ஸார்? நான் தங்களிடம் மருந்து சாப்பிட்டதற்கு 25—ரூ. பீஸ் பண்ணிவிட்டீர்களே. என் மாத வருமானமே 28-ரூபாய் தானே. நான் எப்படி சாப்பிடுவது?

டாக்டர்:—அதனால் தான் உனக்கு மருந்து கொடுக்கும் போதெல்லாம் சாப்பாடு எதுவும் சாப்பிடாதே; வெறுங் கஞ்சியே குடியென்று சொன்னேன்.

***

உபாத்தியாயர்:—பையன்காள், குருபக்தி ஒவ்வொருவருக்கு மிருக்க வேண்டியது அவசியமாகும். உபாத்தியாயரைத் தொந்தரவு செய்யக் கூடாது.

ஒரு மாணவன்:—ஸார், நீங்கள் வகுப்பில் தூங்கிக்கொண் டிருக்கும் போது உங்களுக்குத் தொந்தரவு செய்யாமல் அமைதி யாகத்தானே இருக்கிறோம்.




### காலால் டைப் அடிக்கும் சிறுவன்

லண்டனில் செயிண்ட் ஜான்க்ரோல் என்னுமிடத்தில் பீட்டர் ஒடெல் என்ற பெயருடைய சிறுவன் கால் விரலால் டைப்ரைட்டிங் மெஷினை உபயோகிக்கக் கற்றுக் கொண்டு சாமர்த்தியமாகச் செய்து வருகிறானாம். இதுவன்றி, அவன் காலில் பிரஷைப் பிடித்துக் கொண்டு சித்திரம் எழுதுகிறான். கிராமபோன் ரேடியோ மெஷின்களை உபயோகத்துக்குக் காலாலேயே திருப்பி வைக்க அவனுக்குப் பழக்கமுண்டு.

***

### உதட்டில் செடி வளர்க்கும் இந்திய ஸாது

சமீபத்தில் வடமதுராவில் நடைபெற்ற ஒரு இந்து ஹடயோகி மைதானமொன்றில் மல்லாந்து படுத்துக் கொண்டு, உதட்டில் ஈரமண்ணை அப்பி யதில் கடுகு விதைகளை விளைக்கச் செய்தார். சாது அசைவின்றிப் படுத்து சூரிய வெப்பத்தில் உணவு நீரின்றிப் படுத்திருந்தார். இரண்டு நாட்கள் இவ் விதமே அவர் ஹடயோகஞ் செய்து கொண்டிருக்கையில் கடுகு செடி முளைத்து விட்டதாம். இவ் வதிசயச் செயலை மக்கள் கண்டு பிரமித்தனராம்.

***

### பறக்கமுடியா பறவை.

உயரப் பறப்பதனால்தான் பட்சிகளுக்குப் 'பறவை' யென்று பெயரேற்பட்டது. ஆனால், பென்குய்ன் என்னும் ஒருவகைப் பறவை பறப்பதில்லையாம். அதற்குப் பதிலாக வாத்தைப்போல் தள்ளாடித் தள்ளாடி நடக்கிறதாம். அதற்குக் களைப் பேற்பட்டால் அதன் சிறகுகளில் ஒன்றினால் தலையை மறைத்துக் கொண்டு நின்று கொண்டே தூங்குமாம். இவ்விதப் பட்சிகள் அநேகமாகக் குளிர்ச்சி மிகுந்த தேசங்களிலேயே காணப்படுகின்றனவாம்.

***

### எலிகளுக்த விருந்தா ?

பொமராணியா என்னு மிடத்தில் வாழும் 8-வயதுள்ள ஒரு விவசாயப் பெண்ணுக்கு எலிகளிடம் பிரியம் அதிகமாம். அதனால் அவள் தான் சாப்பிடும்போது எலிகளையுங் கூப்பிட்டு உணவுப் பொருள்களை வைப்பாளாம். இவைகளோடு பழகிய இரு எலிகள் குறிப்பிட்ட நேரத்தில் வந்து விடுகின்றனவாம். அவள் அவைகளுக்கென இரு சிறு நாற்காலிகளையும் ஒரு மேஜையையும் செய்து வைத்திருக்கிறாளாம். அப்பெண் பழக்கியபடி எலிகள் நாற்காலிகளில் அமர்ந்து மேஜை மேல் வைக்கப்பட்ட பாலைக் குடிக்கின்றனவாம்.




உலகில் நூற்றுக்குச் சுமார் 30 பேர் இடதுகையை அதிகமாக எதற்கும் உபயோகிப்பவர்களாக இருக்கின்றனர்.

*    *    *    *

துருக்கியில் அதன் அதிபதி முஸ்தபா கமால்பாஷாவுக்கு 22,000 சிலைகள் வைக்கப்பட்டிருக்கின்றனவாம்.

*    *    *    *

இந்தியாவில் 1901-வது வருடத்தில் 70 லட்சம் பேர்தான் வேலையில்லாது இருந்துவந்தனராம்.

*    *    *    *

1931-ம் வருஷத்திலோ நம் தேசத்தில் வேலையற்று திண்டாடுவோர் தொகை ஒரு கோடி எழுபத்தெழு லட்சத்து ஐம்பதாயிரமாகப் பெருகியிருக்கிறதாம்.

*    *    *    *

வாஷிங்டன் என்னுமிடத்தில் உயிருள்ள பாம்புகளைக்கூட பார்ஸல் செய்து அனுப்புகிறார்களாம். தபால் அதிகாரிகள் அவ்விதஞ் செய்யக்கூடாதென அறிக்கை வெளியிட்டிருக்கிறார்களாம்.

*    *    *    *

லண்டன் டாக்டர்களும் பாடகர்களும் சேர்ந்து புதிய இயக்கமொன்றை ஆரம்பித்திருக்கிறார்கள். ஆரோக்கியத்துக்குப் பாடுவது மிக நல்லதென்றும், பாடுவதன் வாயிலாக சுவாசப் பைகளுக்குத் தேகப்பயிற்சி யுண்டாகிறது என்றும் கூறுகிறார்கள். அக்கோஷ்டியார் பாடும் பயிற்சிக் கழகமொன்றை அமைக்க முயன்றுவருகிறார்களாம்.

*    *    *    *

ஜெர்மன் மாஜி சக்கரவர்த்தி வில்லியம் கெய்சருக்கு ஸ்வஸ்திக் அடையாளத்தைக் கண்டால் சிறிதும் பிடிக்காதாம். அதற்காக, அவரது சிப்பந்திகள் அவருக்கு வரும் கவர் (அவற்றின் மீது ஸ்வஸ்திக் அடையாளம் பதிந்த தபால் முத்திரை)களைக் கிழித்துவிட்டுத்தான் கடிதங்களைக் கொடுப்பார்களாம்.

*    *    *    *

தேள் என்றவுடனே நமக்கு நடுக்கம் உண்டாகிறதல்லவா! அத்தேள்கள் வாழ்க்கையை அறிந்தாலும் நடுக்கமே ஏற்படுகிறது. ஆண் தேளும் பெண் தேளும் இன்பநுகர்ச்சி அநுபவித்தவுடனே, பெண் தேள் ஆண் தேளைத் தின்றுவிடுகிறதாம். பின்னர் பெண் தேள் கர்ப்பந்தரித்து குட்டிகளைப் பெற்றதும் அவைகளை முதுகில் வைத்துக் காப்பாற்றுகிறதாம். ஆனால், குட்டித் தேள்கள் தாயைச் சிறிது சிறிதாகக் கொன்று தின்று வளருகின்றனவாம். எவ்வளவு பயங்கரமான வாழ்க்கை பார்த்தீர்களா?

# ஆசிரியர் குறிப்புக்கள்

## வரதட்சணைத் தடைச் சட்டம்

இப்போது பீஹார் ஜனப்பிரதிநிதி சபையில் ஒரு நல்ல மசோதா வரவிருக்கிறது. ஸ்ரீ சிக்லால சிங் என்னும் பெயருடைய காங்கிரஸ் மெம்பர் விவாகங்களில் வரதட்சணை வாங்குவதையும் கொடுப்பதையும் குற்றமாகக் கருதும் வரதட்சணைத் தடைச்சட்டம் என்ற பெயரோடு ஒரு மசோதாவை அடுத்து கூட விருக்கும் கூட்டத்தில் கொண்டுவரப் போகிறாராம். இச் செய்தியைக் கேட்டு நமக்கு உண்டான மகிழ்ச்சியை அளவிட்டுச் சொல்ல முடியாது. நம் இந்துக்களிடையே வரதட்சணை என்ற கொடிய பழக்கம் எப்படியோ வந்து ஆதிக்கம் பெற்று விட்டிருக்கிறது. அதனால் விளைந்து வருந் தீமைகள் அளவிடற்கரியன வாகும். அதுவும் நம் தமிழ் நாட்டில் முக்கியமாகப் பிராம்மண சமூகத்தில் இவ்வரதட்சணைப் பேய் மிகக் கோரமாகத் தாண்டவமாடி வருவது நம்மெல்லோருக்கும் தெரிந்த விஷயம். இவ்வரதட்சணைப் பேயினால் எத்தனை குடும்பங்கள் நாசமாயின? எத்தனை மகளிர் பலியாயினர்? இதனால் விளையுங் கோரங்களைச் சிந்தித்துப் பார்க்கும்போது நம் நெஞ்சந் திடுக்கிடுகிறது. இவ் வரதட்சணைக் கொடுமையால் பணக்காரர்களைக் காட்டிலும் ஏழைகளே அதிகமாகப் பாதிக்கப்படுகின்றனர். ஆகவே, இக் கொடுமையை ஒழிப்பதற்குத் தக்க பரிகாரஞ் செய்யவேண்டியது அவசியம். அவ்வகையில் பீஹார் சட்டசபையைச் சேர்ந்த காங்கிரஸ் மெம்பர் இவ் வரதட்சணைக் கொடுமையை ஒழிக்கச் சட்டம் செய்வதற்கு மசோதா கொண்டுவர முன் வந்திருப்பது பாராட்டத் தக்கது. வரதட்சணை வாங்கினாலும் இதற்கான சாமான்களாக வாங்கினாலும் அது குற்றமாகுமென்றும், இதற்கு ஆறு மாதங்களுக்கு மேற்படாமல் தண்டனை விதிக்கலாமென்றும், ஆயிரம் ரூபாய் அபராதம் அல்லது இரண்டும் விதிக்கலாமென்றும் இம் மசோதாவில் கூறப்பட்டிருக்கிறது. இது போன்றே மற்ற மாகாணங்களைக் காட்டிலும் வரதட்சணைக் கொடுமை மிகுந்துள்ள சென்னை மாகாணத்திலும் அதாவது சென்னைச் சட்டசபைகளிலும் வரதட்சணைத் தடைச் சட்டம் கொண்டுவந்து நிறைவேற்ற வேண்டுமென்பது எம் பேராவல்.

---

## லஞ்சப் பேய்க்குச் சாவுமணி?

காங்கிரஸ்காரர்கள் அதிகாரத்துக்கு வந்த பின்னர், லஞ்சப் பேயை ஓட்டத் தீவிரமாக உழைத்து வருவது பொதுமக்கள் அறிந்ததே. சர்க்கார் உத்தியோகஸ்தர்களிடையும், மற்றும் பல அதிகாரிகளிடையேயும் நீண்ட காலமாகக் குடியிருந்து வரும் லஞ்சப் பேயினால் ஏற்படும் கோரம் பொது நலத்தை நாடும் காங்கிரஸ்காரர்கள் மனதை வெகுவாக உறுத்திக்கொண்டு வந்திருக்கிறது. ஆகவே, அவர்களில் சிலர் அரசாட்சிக்கு வந்ததுமே, இந்த லஞ்சப் பேயை எவ்வளவு சீக்கிரம் ஒழிக்க முடியுமோ அவ்வளவு சீக்கிரம் ஒழிக்க மிகவும் பாடுபட்டு வருகின்றனர். ஐக்கிய மாகாண காங்கிரஸ் கமிட்டியார் லஞ்ச ஒழிப்புக் கமிட்டியொன்றை நியமித்து 'லஞ்ச

வழக்கத்திற்குரிய முக்கிய காரணங்க ளென்ன? அவ் வழக்கத்தை எவ் வெவ் வகையில் தடுத்து ஒழிக்க முடியும்' என்றெல்லாம் ஆராய்ச்சி செய்து முடிவு கட்டும்படி ஏற்பாடு செய்திருந்தனர். அக் கமிட்டியின் யாதாஸ்து சமீபத்தில் வெளியா யிருக்கிறது. அதில் லஞ்சத்தைத் தடுக்கக் குறிப்பிட் டிருக்கும் வழிகள் காரிய சாத்தியமானவைகளாக இருப்பது குறிப்பிடத் தக்கதாகும். அவைகளில் முக்கியமானவைகளை வாசகர்களுக்குச் சமர்ப் பிக்கிறோம். "(1) லஞ்சம் வாங்குவதைப் பிரகடனப் படுத்தவேண்டும். (2) அயோக்கியத் தனமான உத்தியோகஸ்தர்களைக் கண்டுபிடித்து வேலையி லிருந்து நீக்கும் உத்தியோகஸ்தர்களை நியமிக்கவேண்டும். (3) ஒவ்வொரு ஜில்லாவிலும் ஜில்லா மாஜிஸ்திரேட் தலைமையில் ஒரு லஞ்ச ஒழிப்புக் கமிட்டியை நியமிக்கவேண்டும். (4) தலைநகரில் லஞ்ச ஒழிப்பு இலாகா இருக்கவேண்டும். (5) சர்க்கார் ஊழியர்களுடைய நடத்தைபற்றிய குறிப்பு தாமதமின்றிப் பரிசீலிக்கப்படும். (5) சர்க்கார் ஊழியர் முதலில் நியமிக்கப்பட்டவுடன் தமக்கு சொந்தமான ஸ்தாவர சொத்துகளின் விவ ரம் தமது குடும்பத்தைச் சேர்ந்தவர்களது பெயர் இவற்றைப்பற்றிச் சரி யான ஜாப்தாவை ஆஜர் செய்யவேண்டும். அவர் புதிதாக வாங்கும் ஒவ் வொரு சொத்தைப்பற்றியும் தகவலை மேலதிகாரிக்குத் தெரிவிக்கவேண் டும். வருஷா வருஷம் யோக்கியதாம்ச சர்டிபிகேட் கொடுக்கப்படும்" லஞ்ச வழக்கத்தை யொழிக்க ஐக்கிய மாகாண காங்கிரஸ் கமிட்டியார் திட் டம் வகுத்துள்ளதைப் போலவே, மற்ற மாகாணங்களிலும் முயற்சி எடுத் துக்கொள்ள வேண்டுமென்று விரும்புகிறோம்.

---

## வைசிராய் வழிக்கு வருகிறார்

லக்ஷியத்தில் உறுதியாக இருந்து தக்கபடி கிளர்ச்சி செய்தால் வெற் றிக்கு வழி ஏற்படும் என்பது நிச்சயம். பிரிட்டிஷ் சர்க்கார் புதிய இந்திய அரசியல் சட்டத்தின்படி ஒரு விதமான சமஷ்டியை இந்தியாவில் பலவித மாகவேனும் புகுத்துவதென்று நிச்சயித்திருந்தார்கள். அந்த சமஷ்டியைத் தேசத்தில் எந்த அரசியல் கட்சியினரும் விரும்பவில்லை யென்றாலும் காங்கி ரஸ் மகாசபை ஒன்றுதான் தீவிரமாக எதிர்த்துப் பிரசாரம் செய்து வரு வதுடன் அதற்காக அவசியமானால் ஒரு நேரடியான போரைத் துவக்குவ தென்றும் நிச்சயித்தது. சமஷ்டி முதலில் அமலுக்கு வர வேண்டு மென் றும், பின்னர் குறைகள் தென்பட்டால் திருத்திக் கொள்ளலா மென்றும் பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் இதோபதேசம் செய்து பார்த்தார்கள். காங்கி ரஸ் லக்ஷியத்தில் உறுதியுடன் இருப்பதால் பிரிட்டிஷார் வழிக்கு வர வேண்டியதாயிற்று. லார்ட் லோதியன் சமீபத்தில் லண்டன் இந்திய மாணவர் கூட்டத்தில் பேசுகையில் சமஷ்டியைத் திருத்தியமைக்க வேண்டு மென்பதை ஒப்புக்கொண்டார். இப்போது வைசிராய் லின்லித்கோ பிரபுவும் மகாத்மாவைச் சந்தித்து சமஷ்டிப் பிரச்னையைப் பற்றிக் கலந்து பேசுகிறார். வைசிராய், இந்தியா சட்டசபையில் பொதுஜன அபிப்பிராயத் துக்குச் சிறிதும் மதிப்புக் கொடுக்காமல் வேலை செய்து வருவதைப் பார்த் தால், எதையும் தன் இச்சையாகவே செய்வார் என்று கருத வேண்டி யிருந்தது. ஆயினும் அவர் நிலைமையை உத்தேசித்துக் காங்கிரஸ் தலைவர் களுடன் கலந்து ஆலோசிப்பதே நலமெனக் கருதி மகாத்மாவைச் சந்தித்

துப் பேசினர். லண்டனுக்குச் சென்று சமஷ்டி திட்டத்தில் சில மாறுதல்களைச் செய்ய முயல்வாரென்றும் சொல்லப்படுகிறது. இப்போதேனும் வைசிராய் வழிக்கு வருவது பாராட்டக் கூடியதே. அவர் இறுதி வரை இந்த நல்ல வழியையே பின் பற்றி இந்திய அரசியலில் அநாவசியமாக எவ்வித நெருக்கடியும் ஏற்படாதபடி கவனித்துக் கொள்வாரென்று நம்புகிறோம்.

---

## நிறத்தடையை எதிர்க்க ஐக்கிய முன்னணி

நம் நாட்டில் ஜாதிபேதக் கொடுமை எவ்வளவு கடுமையாக இருந்து வருகிறதோ அதுபோல, தென்னப்பிரிக்கா போன்ற நாடுகளில் நிறபேதக் கொடுமையை மிகக் கடுமையாக இருந்து வருகிறது. இதனல் அந்த நாட்டுச் சுதேசிகளேயன்றி, இந்தியர்களும் கஷ்டப்படுத்தப்பட்டு வருகின்றனர். வெள்ளையரல்லாதவர்களை வெள்ளையர் படுத்துங் கொடுமையிலிருந்து விடுவிக்க அந்நாட்டுச் சர்க்காரோ ஸ்தாபனங்களோ எவ்வித முயற்சியுஞ் செய்வதில்லை; பரிகாரமுந் தேடுவதில்லை. மகாத்மாகாந்தி தென்னப்பிரிகாவில் இருக்கும்போது இந்நிறத் தடைக் கொடுமையை ஒழிக்க நடத்திய போராட்டத்தை யாரும் மறக்க முடியாது. சமீபத்தில் தென்னப்பிரிக்கா கேப்டவுன் என்னு மிடத்தில் சுதேசிகள் இந்தியர்கள் முதலிய வெள்ளையரல்லாத ஜாதியினரைக் கொண்ட 45 ஸ்தாபனங்களின் பிரதிநிதிகள் மகாநாடுகூடி "தென்னப்பிரிக்காவி லிருந்து வரும் நிறத் தடையைச் சுதேசிகளும், இந்தியரும் வெள்ளையரல்லாத மற்றவர்களுஞ் சேர்ந்து எதிர்க்கும் பொருட்டு வெள்ளையரல்லாத மக்களின் ஐக்கிய முன்னணியை ஏற்படுத்த நடவடிக்கை எடுத்துக்கொள்வதென்று தீர்மானித் திருக்கிறார்கள். இது பாராட்டுக்குரிய தாகும். இவர்களது முயற்சி வெற்றிபெற வேண்டுகிறோம்.

---

## பிரிட்டிஷ் சிங்கம் பணிந்தது

கடைசியாக, சர்வாதிகாரத்துக்குப் பிரிட்டிஷ் சிங்கம் பணிந்து விட்டது. இத்தாலி சர்வாதிகாரியான ஸினர் முஸோலினியோடு சிநேகபாவத்தை யுண்டு பண்ணிக் கொள்வதற்கு ஏதுவாகிய உடன்படிக்கையைப் பிரிட்டிஷ் பிரதம மந்திரி நெவில் சேம்பர்லேன் செய்து கொண்டார். இதற்குத்தான் அந்தோனி ஈடனை அந்நிய நாட்டு மந்திரி பதவியிலிருந்து விலகிச் செல்லும்படி விரட்டி யடித்தார். ஆங்கிலோ—இத்தாலிய உடன்படிக்கையைக் கூர்ந்து கவனித்தால் அப்படியொன்றும் பிரமாதமானதாகத் தோன்றவில்லை. இதற்குத் தான பிரிட்டன் இவ்வளவு தூரம் கௌரவத்தையும் பெருமையையும் விட்டுக்கொடுத்து நடந்து வந்தது? என்று கூட நமக்குத் தோன்றுகிறது. இதில் ஒரு வேடிக்கையென்னவென்றல், உலக சமாதானத்துக்கும் பாதுகாப்புக்காகவுமே இரு தேசங்களும் உறவு கொண்டாடி உரையாடத் தொடங்கியதாக உடன்படிக்கை பீடிகை போட்டு பேசுகிறது. இதுவரை, முஸோலினி செய்து வந்த அட்டூழியங்களை மறைமுகமாக ஆதரித்து வந்த பிரிட்டன் இவ்வுடன்படிக்கை வாயிலாகப் பகிரங்கமாக ஆதரித்து அங்கீகார மளித்திருக்கி

றது. முஸோலினி அபிஸீனியாவை ஸ்வாகா பண்ணியதற்குச் சேம்பர் லேன் ததாஸ்து கூறி யிருக்கிறார். அடுத்தபடி ஸ்பெயின் வீழ்ச்சிக்கும் ததாஸ்து கூறத் தயாரா யிருப்பதாக உடன்படிக்கைப் போக்கே தெரிவிக்கிறது. மொத்தமாகப் பார்த்தால் இவ் வுடன்படிக்கையால், பிரிட்டனைக் காட்டிலும் இத்தாலிக்கே அதிக நன்மையும் சௌகரியமும் கிடைத்திருக்கின்றன எனத் துணிந்து கூறலாம்.

---

## ஜனாப். ஜின்னாவின் மிரட்டல்

சிற்சில சமயங்களில் பெரிய மனிதர்களும் அபாரமான தவறுகளை இழைத்து விடுகிறார்கள். அதுபோல ஜனாப். ஜின்னா அவர்களும் சமீபத்தில் கூடிய அகில இந்திய முஸ்லிம் லீகின் விசேஷக் கூட்டத்தில் பேசிய பேச்சுக்கள் அவரைப் போன்ற உன்னத நிலைமையிலுள்ள ஒரு பெரிய மனிதருக்கு ஏற்றதாக இல்லை என்பதைப் பகிரங்கமாகத் தெரிவிக்க வேண்டி யிருப்பதற்காக வருந்துகிறோம். முஸ்லிம் லீக் ஒன்று இருந்து முஸ்லிம்களின் நலத்துக்கு எவ்வித இடையூறும் ஏற்படாதபடி பாதுகாத்துக் கொள்வதில் நமக்கு எவ்வித இடையூறும் ஏற்படாதபடி பாதுகாத்துக் கொள்வதில் நமக்கு எவ்வித ஆக்ஷேபமும் இல்லை. ஆயினும் தப்பும் தவறுமாகப் பேசிப் பாமர மக்கள் தவறான எண்ணங்களைக் கொண்டு முறையற்ற வழியில் இறங்கி விடாதபடி பார்த்துக் கொள்வது ஜனாப். ஜின்னா போன்ற தலைவர்களின் கடமை யல்லவா? ஜனாப். ஜின்னா கல்கத்தா மகாநாட்டில், முக்கியமான அரசியல் பிரச்னைகளான சமஷ்டி, யுத்தம் வரும் நிலைமை, உலகத்தின் இன்றைய நிலை, தேச மகாஜனங்களின் க்ஷேமம் ஆகிய விஷயங்களைப் பற்றி எதுவுமே பேசாமல் காங்கிரசைத் தாக்குவதிலே தமது முழு கவனத்தையும் செலுத்தி யிருப்பது வருந்தத் தக்கது. கல்கத்தாவில் மகாநாடு கூடிய அன்றைய தினமே பம்பாயில் கலவரம் ஏற்பட்டுப் பலர் உயிரையும் இழக்க வேண்டியதாயிற்று. இப்படிப்பட்ட பொறுப்பற்ற பேச்சுக்களால் தான் வகுப்புக் கலவரங்கள் ஏற்படுகின்றன என்பதைச் சமூகத் தலைவர்கள் உணர வேண்டும்.

காங்கிரஸ் ஹிந்து ராஜ்யத்தை ஸ்தாபிக்க முயல்வதாகவும், அது ஹிந்து முஸ்லிம் சமரசம் ஏற்பட வேண்டுமென்று கூறினாலும் அதற்காக ஒன்றும் செய்யவில்லை யென்றும், அது வகுப்புத் தீர்ப்பை ஒழித்துவிடவும், தனித் தொகுதியை நீக்கிவிடவும் முயல்வதாயும் அவர் கூறிகிறார். ஆயிரம் தடவைகளில் காங்கிரஸ் தலைவர்கள் பிற்காலத்தில் ஏற்படும் சுயராஜ்யம் ஹிந்து ராஜ்யமாகவோ முஸ்லிம் ராஜ்யமாகவோ இருக்காதென்றும், இந்திய மகாஜனங்களின் ஆட்சியாகவே இருக்குமென்றும், சிறுபான்மையோரின் உரிமைகளுக்குப் பாதுகாப்புகள் அளிக்கப்படுமென்றும் கூறி யிருக்கிறார்கள். பண்டித ஜவஹர்லாலும், மகாத்மாஜியும் நல்லெண்ணத்துடன்தான் ஜனாப். ஜின்னாவுடன் கடிதப் போக்குவரத்து நடத்துகின்றனர். ஆயினும் காங்கிரஸ் மகாசபை, ஹிந்து மகாசபையைப்போலல்லாமல் விட்டுக்கொடுக்கும் சுபாவத்துடன் வேலை செய்வதால், அதை மிரட்ட வேண்டுமென்னும் எண்ணத்துடன் ஜனாப். ஜின்னா நிபந்தனைகளை அதிகரித்துக்கொண்டே போவதுடன், சமூக ஒற்றுமைக்கு இடையூறு நேரும் வகையில் பேசியும் வருகிறார். சாஹித்கஞ்ச் விஷயமாக அவரே,

சமூக ஒற்றுமைக்கு முட்டுக்கட்டையாக இருக்கும் காலிகளை அடக்க வேண்டுமென்று கூறிவிட்டு, அதற்கு மாறான வகையில், பரஸ்பரம் இரு தாத்தாரும் ஒருவரை யொருவர் மதிக்கவும், அஞ்சவும் கூடிய சரிசமமான நிலைமை ஏற்பட்டால்தான் கௌரவமான ஒப்பந்தம் ஏற்படும் என்று கூறுகிறார். இரு தாத்தாரும் பரஸ்பரம் மதிக்க வேண்டும் என்பது வாஸ்தவமே. ஆனால் அஞ்சவேண்டும் என்று கூறுவதன் அர்த்தமென்ன? அச்சத்தினால் ஏற்படும் ஒரு காரியம் நிலையாக நிற்குமா! மேலும் யாரை யார் அச்சமூட்டுவது? இரு சமூகத்தாரும் ஒருவரை யொருவர் அச்சமூட்டுவதென்று ஆரம்பித்தால் அமைதியும் சமாதானமும் இருக்குமா?

இஸ்லாம் என்பதற்கு சாந்தி என்று பொருள். அந்த சாந்தியை நிலைநிறுத்த முஸ்லிம் சகோதரர்கள் முயல்வார்களாக! ஹிந்து முஸ்லிம் பொது ஜனங்களுக்கு இத்தகைய பேச்சுகளாலும் மிரட்டல்களாலும் எத்தகைய நன்மையும் ஏற்படப் போவதில்லை. முஸ்லிம்கள் பொதுவாகச் சிறுபான்மையோ ரென்றாலும் வங்காளம், பாஞ்சாலம் போன்ற சில மாகாணங்களில் அவர்களே மெஜாரிட்டியாக இருக்கிறார்கள். அந்த இடங்களில் அவர்கள், சிறுபான்மையோரான ஹிந்துக்களுக்கு வசதிகளையும் பாதுகாப்புகளையும் அளித்து வழிகாட்டுவதுதானே!

---

## முனிசிபல் தேர்தல்களின் முடிவு

சென்னை மாகாணத்தில் பல முனிசிபாலிட்டிகளுக்கும் சமீபத்தில் தேர்தல் நடைபெற்றது. நமது தமிழ்நாடு சம்பந்தப்பட்ட வரையில் காங்ரசின் எதிரிகள் மகாஜனங்களுக்குக் காங்கிரஸ் வேலைகளிலும் மந்திரி சபையின் நடை முறைகளிலும் அதிருப்தி ஏற்பட் டிருப்பதாகவும், ஆதலின் முனிசிபல் தேர்தல்களில் காங்கிரஸ் தோல்வி யுறுவது நிச்சய மென்றும் கொக்கரித்தார்கள். காங்கிரசிலேயே உள்ள ஒரு சில விஷமிகள் தலைவர்கள்மீது அநாவசியமான புகார்களைக் கிளப்பிக் காங்கிரசிலேயே பிளவை உண்டாக்கி அட்ஹாக் கமிட்டிகளுக்கு அபகீர்த்தியையும் தோல்வியையும் உண்டாக்க முயன்றார்கள். ஆயினும் தேர்தல்களின் முடிவு உற்சாகத்தையும் சந்தோஷத்தையும் அளிப்பதாகவே இருக்கிறது. சில இடங்களில் 100-க்கு 100 வீதம் பூரண வெற்றியும், வேறு பல இடங்களில் 70, 80 சத விகிதம் வெற்றியும் ஒன்றிரண்டு இடங்களில் திருப்திகர முடியாத வகையில் உபாய வெற்றியும் கிடைத் திருக்கிறது. காங்கிரசின் எதிரிகள் காலித்தனமாக நடந்து கொண்ட இடங்களில் காங்கிரஸ் பூர்ண வெற்றியடைந் திருப்பது குறிப்பிடத்தக்கது. ஏதோ இரண்டொரு இடங்களில் ஏற்பட்ட தோல்விக்கு அங்குள்ளவர்களுக்குத் தனிப்பட்ட முறையில் இருந்த செல்வாக்கும், அவர்கள் செலவழித்த பணமுமே காரணமாகும். இந்தியா சட்டசபை, மாகாண சட்டசபை, ஜில்லா போர்டு முதலிய ஸ்தாபனத் தேர்தல்களுக்கும் முனிசிபல் தேர்தல்களுக்கும் வித்தியாசம் உண்டு. முனிசிபல் தேர்தலில் ஒவ்வொரு வார்டும் ஒரு தொகுதியல்லவா? ஏதேனும் சிற்சில வார்டுகளில் காங்கிரசின் எதிரிகளுக்குச் செல்வாக்கு இருக்கலாம். ஆகவே பொதுவாகப் பார்க்கு மிடத்து இந்த ஸ்தல ஸ்தாபன தேர்தலில் காங்கிரஸ் தமிழ் நாட்டில் நல்ல வெற்றியையே அடைந்திருக்கிறது என்பதை எவரும் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

தொடர் கதை.

# மாயா விரோதி

ஸி. எஸ். இராமன், எம். ஏ., எல். டி.



மோகனரங்க முதலியார் நாற்காலி மீது உட்கார்ந்தபடி பேசத் தொடங்கினர். "உனக்கு ஞாபகசக்தி நோய் காரணமாகப் போயிருந்தாலும் அதைச் சரிப்படுத்தி விடுகிறேன். பழைய நட்பை யோசித்து அதை நான் செய்யக் கடமைப் பட்டிருக்கிறேன். அதைச் செய்வதற்கு டாக்டருடைய உதவி தேவையில்லை." அவர் அப்படிப் பேசுகையில் மனதில் கொடிய கோபம் குடிகொண் டிருந்தது; ஆனல் அவர் அதை வெளியில் காண்பியாதவாறு பேசினர்.

மூன்று விநாடிகட்குப் பின் மோகனரங்கம் திடீரென்று எழுந்து, மாயா விரோதியின் தோள் மீது கையைப் போட்டு, அதிகாரம் பொருந்திய குரலில், "எதையும் நீ மறந்து போக வில்லை என்று சொல்............ நீ சொல்ல வேண்டும்........." என்ருர். இந்த வார்த்தைகளைப் பேசுகையில் வக்கீல் முகத்தில் கோபப் பொறி உண்டாகிக் கொண்டிருந்தது.

மாயாவிரோதி சிறிது சஞ்சலமடைந்து, மோகனரங்க முதலியாருடைய முகத்தைப் பார்த்தான். அப்பொழுது முதலியாரைப் பயமுறுத்துவது கூடாதென்று கருதினன். அவர் சொல்லியதில் ஏதோ முக்கிய மர்மகரமான கருத்து இருக்கவேண்டும் என்று நினைத்துக் கொண்டான். அதனல் வக்கீல் பேசியதற்கு முரணக எதுவும் பேசக்கூடாதென்று தீர்மானித்துக் கொண்டான்.

"நான் எதையும் மறந்து போக வில்லை.............," என்று கனவில் பேசுவது போல் மாயாவிரோதி உரைத்தான்.

"சரி............எனக்கு இப்பொழுது ஆயிரம் ரூபாய் கொடு........." என்று மோகனரங்க முதலியார் சொன்னர்.

"ஆயிரம் ரூபாய்தானு? இங்கிருந்தும் போய் விட இன்னும் வேண்டுமா?" என்று மாயாவிரோதி ஆச்சர்யத்தோடு கேட்டான்.

"உன்னுடைய சிநேகம் எல்லாவற்றைக் காட்டிலும் மேலானது," என்று வக்கீல் சொல்லுகையில் மாயாவிரோதி அவருக்கு பத்து நூறு ரூபா நோட்டுகளைக் கொடுத்தார். அவற்றைப் பெற்றுக் கொண்டு, "நான் இனிமேல் வந்தால் 'போ' என்று சொல்லாதே. நாம் இருவரும் அடிக்கடி சிநேக முறையில் சந்திக்க வேண்டும் என்பதை மட்டும் மறந்து போகாதே. சரி, எனது வந்தனங்களை ஜெமீன்தாரினிக்குச் சொல்லவும். நான் நாளைய

தினம் இரண்டு மணிக்கு மத்தியானத்தில் சந்திப்பாகச் சொல்லவும். நாளையதினம் முடியா விட்டால் மற்றொரு நாள் சந்திக்கிறேன்.'' என்று மேலும் அவர் சொல்லி விட்டு, சீழ்க்கை அடித்துக் கொண்டு, அங்கு நின்றும் அகன்றார்.

மாயாவிரோதி ஆச்சரியத்தோடு புத்தி மயங்கி ஒரு நாற்காலி மீது அமர்ந்தான். அப்பொழுது காரியதரிசி பிரசாத் அங்கு வந்தான். இருவரும் சிறிதுநேரம் பேசினர். அப்பொழுது ஒரு வேலையாள் அங்கே வந்து ஜெமீந்தாரினி அம்மாள் அன்று யாரையும் பார்க்க முடியாது என்பதைச் சொல்லிச் சென்றான்.

''என்னையும் பார்க்க அவள் விரும்பவில்லை போலும்,'' என்று மாயாவிரோதி சொல்லிக்கொண்டான்.

அன்று முழுவதும் செங்கோட்டை ஜெமீந்தார் தமது மனைவியைப் பார்க்கவில்லை. மறுநாளாவது அவளோடு சந்தோஷமாகப் பேசலாம் என்று கருதினான். மறுநாளும் ஜெமீந்தாரினிக்கு உடம்பு அசௌகரியமாகவே இருந்தது. உண்மையில் இந்திராவுக்கு ஜுரம் கொஞ்சம் ஏற்பட்டிருந்தது. இருந்தாலும் மாயாவிரோதி குழந்தை பாலகிருஷ்ணனோடு அவளுடைய அலங்காரமான அறைக்குச் சென்றான். உலகில் விலையிலாமாணிக்கம் எனக் கருதிய அவனுடைய இன்பக்குயில் சோபையற்ற வதனத்தோடு படுக்கையில் படுத்துக் கொண்டிருப்பதைக் கண்டு மனக்கவலை கொண்டான். என்ன பேசுவது என்று தெரியாமல் மனம் கலங்கினான். டாக்டரை அழைத்து வரச் சொல்லட்டுமாவென்று கேட்டான். இந்திரா வேண்டாமென்று சொல்லிவிட்டாள். சிறிது அமைதி இருந்தால் போதுமென்றும் அது அவளைக் குணப்படுத்தி விடும் என்றும் சொன்னாள். மேலும் அவளுக்குப் பழக்கமான சையத்ராவுத்தர் என்ற டாக்டரைத் தான் கூப்பிடுவது வழக்கம் என்றும், ஆனால் அவர் இலங்கைக்குச் சென்றிருப்பதாகவும் சொன்னாள்.

''அவர் இங்கு வந்து எத்தனை நாட்களாயின?'' என்று ஜெமீந்தார் கேட்டார்.

''அவர் இங்கு வந்து சில வாரங்கள்தான் ஆகிறது. மிகவும் கெட்டிக்காரர். தமது மனைவியை அழைத்து வரப் போயிருக்கிறார்,'' என்று இந்திரா சொன்னாள். மேலும், ''அவர்தான் உமது தாயாருக்கும் வைத்தியம் செய்து வருபவர்,'' என்றாள்.

செங்கோட்டை ஜெமீந்தாரினி கூறியது உண்மைதான் சையத்ராவுத்தர் புதிதாக மதுரைக்கு வந்து, அங்கே வைத்தியத்தொழிலை ஆரம்பித்து, சீக்கிரத்தில் நல்ல பெயரை அடைந்தார். மாயா விரோதி அந்த டாக்டரைப்பற்றி எதும் சிரத்தை யெடுத்துக் கொள்ளவில்லை. இந்திராவுடன் சந்தோஷமாகப் பேசினால் அதுவே அவனுக்கு மகோன்னத நிலையைக் கொடுக்கும் என்று கருதி யிருந்தான்.

அவன் அத்தகைய நிலையில் இருக்கையில் இந்திராவின் சுந்தரவதனத்தைக் கண்டு மனம் பூரித்தான். சுரம் இருந்தும் அவள் தனது முகக்களை

முழுதும் வாடாமல் பார்ப்பதற்கு அழகுத் தெய்வம் போலவே யிருந்தாள். மாயாவிரோதி அமோகமான காதலில் சிக்குண்டு இருந்தமையால் அவளுடைய கரத்தை எடுத்து முத்தமிட்டான். இந்திரா ஏதும் பேசாமல் சும்மாவிருந்தாள்.

மாயாவிரோதி அவள் வாளா விருப்பதைக் கண்டு ஏதோ கருத்து தோன்றி, அங்கு நின்றும் தோட்டத்திற்கு ஓடினன். வக்கீல் மோகன ரங்க முதலியார் வருவதைக் கண்டு கோபங்கொண்டான்.

"ஜெமீந்தாரினிக்கு உடம்பு இன்னும் அசௌகரியமாகவே இருக்கிறது. நீ இப்பொழுது அவளைப் பார்ப்பது முடியாத காரியம். மேலும் அவள் இன்று யாரையும் பார்ப்பதில்லை," என்று செங்கோட்டை ஜெமீந்தார் திடீரென்று சொல்லுகையில், ஜெமீந்தாரினியின் வேலைக்காரி ஒருத்தி அங்கே வந்து, வக்கீலிடம் மிகவும் பணிவாக, சீமாட்டியவர்கள் தாங்கள் இங்கு வந்து போனால், அவர்களைக் கண்டு போகும்படி கேட்டிருக்கிறார்கள். தாங்கள் ஹாலில் சீமாட்டியைக் காணலாம்," என்று சொன்னாள்.

அதைக் கேட்டதும் மாயாவிரோதிக்குக் குழப்பம் ஏற்பட்டது. ஏதும் பேச முடியாமல் அருகிலிருந்த ஒரு மரக்கிளையை ஒடித்தான். வக்கீல் மோகனரங்கம் தமது கையில் வைத்துக்கொண்டிருந்த அழகிய கோலினால் கீழேயிருந்த புற்களைத் தட்டினார். பின் சிறிது சிரித்தவண்ணம் அங்கு நின்றும் அகன்றார். மாயாவிரோதிக்கு அவரைக் கொன்றுவிடவேண்டும் எனும் எண்ணம் எழுந்தும், அப்பொழுது முதலியாரை ஒன்றும் செய்ய முடியாமல் போயிற்று.

மேலும் சிறிது தூரம் நடந்து செல்லுகையில் சௌடி வருவதைக் கண்ணுற்று, அவனை நோக்கி நின்றான். அவன் கிண்டியிலிருந்தும் வந்ததன்றி, சந்தோஷம் ததும்பிய முகத்தையும் காண்பித்த வகையில் தனது நண்பனை நோக்கினன். கிண்டியில் ஒரு பெண்மீது அவனுக்கு திடீரென காதல் அன்று காலையில் தோன்றியதால் அவளோடு சிறிது நேரம் இன்பமாகப் பேசிவிட்டு மாளிகைக்குத் திரும்பினன்.

நண்பனைக் கண்டதும் அவன் சந்தோஷ முகமலர்ச்சி கொண்டு, "இப்பொழுதுதான் திடீரென்று காதலின் மகத்துவத்தை யறிந்தேன்," என்றான்.

"ஓ! நீ இன்று காலையில் காதற்கிளி ஒன்றைக் கண்டனையா?" என்று மாயாவிரோதி கேட்டான்.

"ஆம், அபரஞ்சி ஒரு பால்காரியின் மகள். திடீரென்று சந்தித்தேன்; இருவரும் காதல்............நான் அவளுக்கு இனமாக ஒரு சவரனைக் கொடுத்துவந்தேன்," என்று பற்களைக் காண்பித்தவண்ணம் சௌடி சொன்னான்.

"ஐயோ! உனக்கு காதலின் கொடுமையை நான் கூறுகிறேன். மிகவும் வருத்தத்தையும் பொறாமையையும் கொடுக்கத்தக்கது அது. கொடிய தீமைகளுள் காதலும் ஒன்றாகும். அது என்னைச் சாப்பிட்டுக் கொண்டு வரு

கிறது. மாளிகைக்குள் போகும் அவனைப் பார். யார் தெரியுமா?'' என்று கேட்டான் மாயாவிரோதி.

"வக்கீலா?'' என்று கேட்டான் சௌடி.

"ஆமாம். அவன்தான். அக்கொடியவன் ஜெமீந்தாரினியைக் காதலிக்கிறான் என்று தெரியவருகிறது. இந்திராவும் அவனுக்கு இடம் கொடுப்பதாக அறிந்தேன். அப்பாதகன் அவளை இப்பொழுது ஹாலில் பார்க்கப்போகிறானாம். நீ மறைவாக இருந்து அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்பதை அறியவேண்டும். நான் இங்கேயே இருக்கிறேன், சீக்கிரம் சென்று, அவர்கள் பேசும் விஷயத்தை எனக்கு அறிவிப்பாய்'' என்று மாயாவிரோதி கூறினான்.

சௌடி மரியாதை செய்து அங்கிருந்தும் நீங்கினான். அவன் போனதும் மாயாவிரோதி மாளிகையை மற்றொரு புறத்தேயிருந்து நோக்கினான். பதினைந்து நிமிஷங்களுள் வக்கீல் மோகனரங்கம் மலர்ந்த முகத்துடன், கைப்பிரம்பை சுழற்றியவாறு மாளிகையிலிருந்தும் மற்றொரு வழியாகப் போவதைக் கண்டு பிரளயகால ருத்திரனைப்போல் சீற்றங்கொண்டு, சௌடப்பன் வருகையை எதிர் நோக்கினான்.

சௌடி அங்கே வந்தான். அவன் ஏதோ கெட்ட சமாசாரத்தைச் சொல்வானோ என்று மாயாவிரோதி அச்சமடைந்து. சௌடியின் பேச்சைக் கேட்க அஞ்சினான். மாயாவியின் ஹிருதயம் பயத்தால் துடித்துக்கொண்டிருந்தது. ஒருகால் இந்திரா அவனைக் காதலிக்க ஒப்புக்கொண்டிருந்தால் தன்னுடைய கதி என்னாகும் என்று துடிதுடித்தான்.

"என்றால் எல்லாவற்றையும் சரியாகக் கேட்க முடியவில்லை. மோகனரங்க முதலியார் ஒரு கிராதகன், அவன் உமக்கு துரோகம் செய்ய நிச்சயித்திருக்கிறான்......'' என்றான் சௌடி.

மாயாவிரோதி மிக்க மனக்கவலையும் கோபமும் கொண்டு, ஏதும் பேசாமல், சௌடியுடன் மாளிகைக்குப் பின்னால் இருந்த ஒரு இடத்தை அடைந்தான். ஆகாயத்தைப் பார்த்தவண்ணம், "ஐயோ! அவன் அவளைக் காதலிக்கிறானா?'' என்றான்.

"ஆம்,'' என்றான் சௌடி. "நீங்கள் வெகுகாலம் வேறு எங்கேயோ இருந்தீர்கள்.''

"ஜாஸ்தி பேசாதே. சரி, அவள் ஒரு கபடி'' என்று ஜெமீந்தார் சொன்னார். "சௌடி, அவள் பேசியதைக் கேட்டனையா?''

"அந்த ஹாலில் வேலைக்காரர்கள் அடிக்கடி வந்து போய்க்கொண்டிருந்தனர். அவர்கள் நான் ஒளிந்துகொண்டிருந்ததைக் கண்டுபிடித்துவிட்டால் என்ன பண்ணுவது என்று நடுங்கிக்கொண்டிருந்தேன்.''

"சரி......அவள் என்ன பதில் சொன்னாள்......?''

"வக்கீல் அவளைக் காதலிப்பதாகச் சொன்னான்; மற்றும் என்னமோ உளறிக்கொண்டிருந்தான்.''

"பிறகு என்ன?''

"நான் சொல்லவேண்டுமா?........" என்று சௌடி சொல்லுகையில் பயந்துபோனான்.

"ஆம்," என்று கட்டாயப்படுத்தினான் மாயாவிரோதி.

"இந்திரா தேவியைப் பார்க்க ஒரு நாளை ஏற்படுத்தினான். நாளைக்கு மறுநாள் அவர்கள் அவனைப் பார்க்கவேண்டுமாம்."

"ஓ! எப்பொழுது? நாளைக்கு மறுநாளா? எத்தனை மணிக்கு, சௌடி?"

"மத்தியானம் மூன்று மணியாம். வக்கீல் புதிதாக வாங்கிய ஒரு வீட்டில் தேவியவர்கள் அவனைக் காணவேண்டுமாம். அவர்களும் ஒப்புக்கொண்டார்கள்......"

அன்று இரவில் ஜெமீந்தார் ஏதோ முக்கிய காரியார்த்தமாக அயலூருக்குப் போவதாகத் தமது மனைவி இந்திராவிடம் சொல்லிச் சென்றுவிட்டார். அவருடன் அவருடைய காரியதரிசியும் சென்றான். அவர் சென்று இரண்டாவது நாள் மத்தியானம் ஒரு மோட்டார் வண்டியில் இந்திரா ஏறி உட்கார்ந்துகொண்டாள். (தொடரும்.)

## வியாயாமம்.

ஆரோக்கிய ஸ்தாபனங்கள், ஜிம்னேஷியா, அகாராஸ, ஜிஜிட்ஸு, குஸ்தி, கிரிகெட், புட்பால், ஹாக்கி முதலிய விளையாட்டுகள் ஆகிய இவற்றின் மூலமாய் தேக பலத்தை விருத்தி செய்வது அநேக வகைகளில் இப்போது கவனிக்கப்பட்டு வருகிறது. யோகாப்பியாஸம் செய்வோர், தம் தேகங்களைக் குறுக்கியும், திருப்பியும் வியாயாமம் செய்து தம்முடைய ஆஸனங்களும் சாதனங்களும் தேகத்தில் உண்டாகும் எல்லா வியாதிகளையும் தீர்க்கவல்லன என்று சொல்லுகிறார்கள். மல் யுத்தம் செய்வோர் தேகத்தின் சதையையும் வலுவையும் பெருக்கச்செய்வதற்கு இது தான் எடுத்ததென்று தனது அப்பியாஸத்தைப் புகழ்ந்து பேசுகிறார்கள். பயில்வான் தொன்றுதொட்டுத் தான் செய்துவரும் வித்தைகளுக்கு மிஞ்சியவை ஒன்றுமில்லையென்று கொண்டாடுகிறான். தேகாப்பியாஸ ப்ரொபெஸர் தேகத்திற்கு வலுவை அளிப்பதற்கு தான் செய்து காட்டும் அப்பியாஸங்களே மேலானவை என்று சொல்லுகிறான். ஜப்பான் தேசத்திய ஜிஜிட்ஸு உபாத்தியாயர்கள் இந்த அப்பியாஸத்திற்கு மேலானது ஒன்றுமில்லையென்றும், அதற்கு ஒருவனைக் கீழே தள்ளவோ அல்லது தன்னைக் காப்பாற்றிக்கொள்ளவோ அபார சக்தி யுண்டென்றும் சொல்லுகிறார். சைகில் விடுதல், ஓடுதல், டென்னிஸ், ஹாக்கி, புட்பால் விளையாடுதல் ஆகிய இவ்வியாயாமங்களையும் புகழ்ந்து பேசுவாரும் உண்டு; கண்டனம் செய்வோரும் உண்டு.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

வெகுதான்யஞு வைகாசிமீ—கலியுகாதி 5040, சாலிவாகனம் 1861,
பசலி 1347, கொல்லமாண்டு 1113, ஹிஜரா 1357,
இங்கிலீஷ் 1938ஞு மேமீ—ஜூன்மீ

| வைகாசி | மேமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | சனி | ○20-55 | வி37-18 | சித்60 | விஷ்ணுபதி புண்யகாலம் |
| 2 | 15 | ஞா | பிர25-28 | அனு43-25 | மர60 | வைசாகபகுளம் |
| 3 | 16 | திங் | துதி30-48 | கே50-20 | சித்60 | |
| 4 | 17 | செவ் | திரி36-48 | மூல57-48 | அ57-38சி | |
| 5 | 18 | புதன் | சது43-0 | பூரா60 | அமி60 | |
| 6 | 19 | வியா | பஞ்49-3 | பூரா5-25 | சித்60 | |
| 7 | 20 | வெள் | சஷ்54-35 | உத்12-43 | சி12-43ம | |
| 8 | 21 | சனி | சப்59-3 | திரு19-18 | சித்60 | |
| 9 | 22 | ஞா | அஷ்60 | அவி24-43 | ம24-43சி | |
| 10 | 23 | திங் | அ2-5 | சத28-35 | சி28-35ம | |
| 11 | 24 | செவ் | நவ3-20. | பூர30-45 | ம30-45அ | |
| 12 | 25 | புதன் | தச2-45 | உத்30-58 | சி30-58ம | |
| 13 | 26 | வியா | ஏகா0-10<br>து55-45 | ரே29-20 | சி29-20அ | சர்வ, மத்வ ஏகாதசி, அவ<br>மாகம், சுப முகூர்த்தம் |
| 14 | 27 | வெள் | திர49-45 | அஸ்26-3 | அமி26-3சி | பிரதோஷம், உபநயனம் |
| 15 | 28 | சனி | சது42-28 | ப✲21-18 | சி21-18அ | கிருத்தினக, கத்திரி முடிவு |
| 16 | 29 | ஞா | ●34-23 | கிரு15-30 | சித்60 | சர்வந்திர அமாவாசை |
| 17 | 30 | திங் | பிர25-35 | ரோ9-0 | அமி60 | ஜேஷ்டசுத்தம் |
| 18 | 31 | செவ் | துதி16-45 | மிரு2-10<br>திரு55-38 | சித்2-10ம | ரம்பாதிரிதிகை, கல்கி ஜய<br>ந்தி,சுவர்ண கவுரி விரதம் |
| 19 | 1938ஞு ஜூன்மீ 1 | புதன் | திரி8-0<br>சது59-53 | புன49-15 | சித்60 | மாச சதுர்த்தி விரதம், சுப<br>முகூர்த்தம்,வாகனமேற |
| 20 | 2 | வியா | பஞ்52-50 | பூச44-0 | அமி44-0சி | விவாகம் [விரதம் |
| 21 | 3 | வெள் | சஷ்47-0 | ஆயி39-53 | மர60 | சஷ்டி, ஆரண்ய கௌரி |
| 22 | 4 | சனி | சப்42-30 | மக37-15 | அ37-15சி | தானியம் செலவிட |
| 23 | 5 | ஞா | அஷ்39-40 | பூர36-10 | சி36-10அ | சித்திரம் எழுத |
| 24 | 6 | திங் | நவ38-28 | உத்36-40 | சித்60 | களஞ்சியம் வைக்க |
| 25 | 7 | செவ் | தச38-48 | அஸ்38-45 | சித்60 | தசஹாரா விரதம் |
| 26 | 8 | புத | ஏகா40-40 | சித்42-15 | சித்60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 27 | 9 | வியா | து43-50 | சுவா47-0 | அ47-0சித் | இராமலட்சுமண துவாதசி |
| 28 | 10 | வெள் | திர-48-5 | வி52-48 | சித்60 | பிரதோஷம். |
| 29 | 11 | சனி | சது53-13 | அ59-28 | சித்60 | நரசிம்ம ஜயந்தி |
| 30 | 12 | ஞா | ○58-48 | கேட்60 | மர60 | பௌ○ [ணமி வெட்ட |
| 31 | 13 | திங் | பிர60 | கேட்6-35 | சித்60 | திருதினஸ்பிருக், குளம், ஷ |
| 32 | 14 | செவ் | பிர4-53 | மூல14-8 | அ14-8சித் | ஷடசீதி புண்ணியகாலம் |

| | | | |
|---|---|---|---|
| சனி | புத | கே-சூரி<br>சுக்-செ | |
| குரு | 5-மிது-சுக்<br>14-மிது-செ<br>21-ரிஷ-புத<br>30-கடக-சுக் | | |
| | | | |
| | ராகு | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE " ANANDA BODHINI " PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

'எப்பொரு ளெத்தன் மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 23 } வெகுதான்யஷு ஆனிமீ கஉ
1938ஷு ஜூன்மீ 15உ { பகுதி 12

## கடவுள் வணக்கம்.

வெங்கமலி கடல்நஞ்சம் உண்டாய் போற்றி
மதயானை ஈர்உரிவை போர்த்தாய் போற்றி
கொங்கு அலரு(ம்) நறுங்கொன்றைத் தாராய் போற்றி
கொல் புலித்தோல் ஆடைக்குழகா போற்றி
அங்கணனே அமரர்கள் தம்இறைவா போற்றி
ஆலமா நீழல் அறஞ்சொன்னாய் போற்றி
செங்கனகத் தனிக்குன்றே சிவனே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. (1)

பொன்இயலும் மேனியனே போற்றி போற்றி
பூதப்படை யுடையாய் போற்றி போற்றி
மன்னியசீர் மறைநான்கு மானாய் போற்றி
மறிஏந்துங் கையானே போற்றி போற்றி
உன்னுவோர்க்கு உண்மையனே போற்றி போற்றி
உலகுக்கு ஒருவனே போற்றி போற்றி
சென்னிமிசை வெண்பிறையாய் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. (2)

சங்கரனே நின்பாதம் போற்றி போற்றி
சதாசிவனே நின்பாதம் போற்றி போற்றி
பொங்குஅரவா நின்பாதம் போற்றி போற்றி
புண்ணியனே நின்பாதம் போற்றி போற்றி
அங்கமலத்து அயனோடு மாலுங் காணா
அனல்உருவா நின்பாதம் போற்றி போற்றி
செங்கமலத் திருப்பாதம் போற்றி போற்றி.
திருமூலட் டானனே போற்றி போற்றி (3)

# அரும்பொருள் விளக்கம்

(இ-ள்.) கப்பல்கள் நிறைந்த கடலி னின்றும் உண்டான கொடிய விஷத்தை யருந்திய ஆண்டவனே உனக்கு வணக்கம்; மதங்கொண்ட யானையினுடைய குளிர்ந்த தோலைத் தேகத்தில் போர்த்த பெருமானே வணக்கம்; கோங்குமலர் பூக்கும் வாசனை மிகுந்த கொன்றைமாலை சூடிய கோவே வணக்கம்; கொல்லக் கூடிய கொடுந் தன்மை வாய்ந்த புலியி னது தோலை ஆடையாக அணிந்த அமலனே வணக்கம்; அழகிய நெற்றிக் கண்ணையுடைய திரி நேத்திரதாரியே! தேவர் தேவனே வணக்கம்; ஆலமா நிழலில் ஜனக ஜனுதியர்களாகிய நால்வர்க்கு அறம் உரைத்த தட்சணு மூர்த்தியே! வணக்கம்; தகதகவென ஜொலிக்கும் பொன் (மேரு) மலை போன்ற பெருமை யுடைய பெம்மானே! சிவபெருமானே வணக்கம்; திரு மூலட்டானம் என்னும் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளி யிருக்கும் இறைவனே வணக்கம்; வணக்கம். (எ—று.)

சிவபெருமான் பல சமயங்களில் செய்த திருவிளையாடல்களை இப் பாடலில் வெகு அழகாகத் திருநாவுக்கரசு சுவாமிகள் கூறி யிருக்கிமுர். (1)

(இ-ள்) பொன் மயமான மேனி யுடைய புனிதனே வணக்கம்; வணக்கம்; பூதகணங்களைத் தனக்குப் படைகளாக உடைய தேவ சேனு பதியே வணக்கம்; வணக்கம்; நிலைபெற்ற சிறப்பு வாய்ந்த நால் வேதப் பொருளே வணக்கம்; மான் ஏந்துகின்ற காதலமுடைய கருணுகரனே வணக்கம்; வணக்கம். சதா சிந்தனையால் பாசுபவர்களான அடியார்க்கு உண்மைப் பொருளாய்த் திகழுஞ் சோதியே வணக்கம்; வணக்கம்; சகல லோகங்களுக்குந் தாரகமாய் இருக்கும் ஒப்பற்ற நாயகனே! வணக்கம்; வணக்கம்; தலைமீது வெண்மையான பிறைச் சந்திரனை யணிந்த சந்திர சேகரனே வணக்கம்; வணக்கம்; திருமூலட்டானம் என்னுந் திவ்விய க்ஷேத் திரத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே வணக்கம்; வணக்கம்.

அண்ட புவனங்களுக்கெல்லாம் தனித் தலைவனு யிருப்பவன் சிவ பெருமான் ஒருவனே என்பார், 'உலகுக்கு ஒருவனே' என்முர்.

(இ-ள்) சங்கார காரணனே! உனது திருவடிகளுக்கு வணக்கம்; வணக் கம்; சதாசிவ மூர்த்தியே! உனது திருவடிகளுக்கு வணக்கம்; வணக்கம்; சீறி யெழுகின்ற பாம்புகளை ஆபரணங்களாக பூண்ட பெருமானே! உனது திருவடிகளுக்கு வணக்கம்; வணக்கம்; புண்ணிய மூர்த்தியே! உனது திரு வடிகளுக்கு வணக்கம்; வணக்கம்; அழகிய தாமரையில் வீற்றிருக்கும் பிரம தேவனும் திருமாலுங் காண முடியாத அக்னி சொருபனே! உனது திரு வடிகளுக்கு வணக்கம்; வணக்கம். செந்தாமரையினுஞ் சிறந்த திருவடி களுக்கு வணக்கம்; வணக்கம்; திருமூலட்டானம் என்னுந் திவ்வியக்ஷேத் திரத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே வணக்கம்; வணக்கம்.

எத்தகைய பெரியோராயினும் நான் என்னும் முனைப்பு நீங்கி ஞானக் கண்ணுல் நோக்கினன்றி, சாதாரண ஊனக் கண்ணுல் முழு முதற் கடவுளைக் காண முடியாதென்பார், "அயனேடு மாலுங்காணு அனல் உருவா!" என்று விளக்கினர். (3)




## சமரச முயற்சி சாத்தியமா?



"யாதும் ஊரே! யாவருங் கேளிர்" என்னுஞ் சமதர்ம தத்துவ மொழி பிறந்த நம் நாட்டில் இன்று எத்தனை விதமான வேற்றுமைகள் மலிந்து கிடக்கின்றன? அப்பாடா! அதை நினைத்தாலே பயங்கரமாக வல்லவோ இருக்கிறது! சாதி வேற்றுமைகளும், சமய வேற்றுமைகளும், மொழி வேற்றுமைகளும், நாட்டு வேற்றுமைகளும், நிற வேற்றுமைகளும் கணக்கற்றுக் காணப்படுகின்றன. இவ்விதம் பல் வேறுபட்ட பேதங்கள் மலிந்து கிடப்பதனால் நம் நாடு அடிமைத்தனத்தில் அகப்பட்டு முன்னேற்றத்துக்கு வழியின்றி இருந்து வருகிறது. மகாத்மாகாந்தி போன்ற தலைவர்கள் தேச விடுதலைக்காகப் பெரும் போராடி அரும் பாடுபட்டு வந்தாலும், நம்மையாளும் பிரிட்டிஷார், "நாங்கள் இந்தியாவை ஆளாவிடில் அங்கு வகுப்புக் கலகங்களும் உள் நாட்டுக் கலகங்களும் குழப்பங்களும் ஏற்பட்டு அமைதிக்குப் பங்க முண்டாகி நாடே சீர் கேடடைந்து விடும்" என்று கூறி வருகின்றனர். 'வகுப்பு வேற்றுமைகளுக்கும் மதமாற்சரியங்களுக்கும் இடங் கொடுத்துள்ள இந்தியர்கள் தங்கள் நாட்டைச் சுதந்திரமாக ஆண்டு கொள்ள சிறிதுந் தகுதியற்றவர்கள்' என்றும் காரணங் கூறி வருகின்றனர். பலவித பேதங்கள் நிறைந்த நம் இந்தியா ஒரு 'Nation' ஆகக் கருத முடியாது; ஆகவும் முடியாது என்பது ஒரு சாரார் எண்ணம். "The India never become a Nation' என்று ஒரு ஆங்கிலப் பேரறிஞர் கூறினர். அவர் இவ்விதம் உறுதியாகக் கூறியதற்குக் காரணம், நம்மிடையே உள்ள குறுகிய மனப்பான்மையும், வேற்றுமைகளுமேயாகும்.

இவ்விதம் பிறநாட்டார் தது எளனத்துக்கும் ஒற்றுமையின்மைக்கும் மூலகாரணமாயிருப்பது மற்றெல்லா வேற்றுமைகளையும் விட வகுப்பு வேற்றுமையே என்பதை யுணர்ந்து தான்,

மகாத்மாகாந்தி முதல் காங்கிரஸ் தலைவர்கள் அனைவரும் 'வகுப்பு வாதம் விஷம் போன்றது; அதை யொழித்தால் தான் நமக்கு விமோசன முண்டு. நம் தாய்நாடும் க்ஷேமமடையும்' என்று சதாசர்வ காலமும் முழங்கி வருகிறார்கள்.

இவ்வாறு ஒரு பக்கம் தேசிய உணர்ச்சி கொண்ட தலைவர்கள் வகுப்புவாதத்தை வேரோடு கெல்லி யெறிய முயன்று வருகையில், மற்றொரு பக்கம் வகுப்பு வாதிகள்-தேச நலத்தையோ பொது நலத்தையோ சிறிதுங் கருதாது தம் சுயநல மொன்றையே பெரிதாக மதித்து வரும் வகுப்புவாதிகள் வகுப்பு வாதத்தை நிலை நிறுத்த பல வழிகளிலும் முயன்று வருகிறார்கள் அவ் வகுப்புவாதிகள் தங்கள் சமூகத்தின் பெயரைச் சொல்லி அரசாங்க வாயிலாகப் பட்டம், பதவி, உத்தியோகங்களைப் பெற. வகுப்பு சங்கங்களை ஏற்படுத்தி; வகுப்பு மகாநாடுகளை நடத்தி வருகிறார்கள். இவர்களது விபரீத முயற்சியும் செய்கையும் வகுப்புவாத நோயை நிரந்தரமாக ஜன சமூகத்தில் நிலை நிறுத்தவே உதவியாக இருந்து வருகின்றனவே யொழிய, அவ் வகுப்பு மக்களின் முன்னேற்றத்துக்கோ அறிவு வளர்ச்சிக்கோ அரண் செய்யக் கூடியதாக இல்லை. இவ்விதம் நாட்டுக்கு மட்டுமல்ல; குறிப்பிட்ட வகுப்புக்குக் கூட வகுப்புப் பிரிவினை நலன் தராததை யுணர்ந்துதான், ஸ்ரீமதி சரோஜனி தேவியார் இவ் வகுப்பு வாதத்தை அறவே வெறுக்கிறார்:—"வகுப்புவாரி முறையில் இந்தியாவில் மகாநாடுகள் நடைபெற்று வருகின்றன. இக்கேடு நாளுக்குநாள் அதிகரித்து வருகிறது. இம்மாதிரியான மகாநாடுகளை நான் வெறுக்கிறேன். ஏனெனில், அவை தாய் நாட்டின் விடுதலைக்காகத் தோளோடுதோள் நின்று போராடக்கூடிய இரு பெருஞ் சமூகங்களைப் பிரித்து வருகின்றன. இத்தகைய மகாநாடுகளை எவ்வளவுக்கெவ்வளவு துரிதமாக ஒழிக்க முடியுமோ அவ்வளவுக் கவ்வளவு நல்லதாகும்" என்று அவர் சமீபத்தில் ஹைதராபாத்தில் நடைபெற்ற முனிசிபல் மகாநாட்டில் பேசும் போது குறிப்பிட்டிருக்கிறார். அதில் ஸ்ரீமதி சரோஜனி குறிப்பிடும் இருபெருஞ் சமூகங்கள் எவையென நாம் எடுத்துக்காட்ட வேண்டியதில்லை. இந்தியாவிலுள்ள பல பிரிவினருள் இந்துக்களும் முஸ்லீம்களுந்தான் பெருந்தொகையினராகப் பல்லாண்டுகளாக இருந்து வருகின்றனர். ஆனால் இவ் விரு சமூகங்களுள்ளும் ஐக்கிய மனோபாவம், எக் காரணத்தாலோ சரியாக வேரூன்றவில்லை. அரசியல் காரணங்களால் அவ் வேற்றுமையும் வகுப்பு வாத உணர்ச்சியும் அதிகமாகி வருகிறது. இவ்வளவு தூரம் அரசியல் விழிப்பும் சுதந்தரதாகமும் ஏற்பட்டுள்ள இக்காலத்திலும், மேற்குறித்த வகுப்பு வாதத்தினால் ஏற்படும் தீமைகளைச் சிந்

தித்துப் பார்க்கக் கூட பலர் தயாராக இல்லை என்பதை நினைக்கும் போது நம்நாட்டின் துரதிர்ஷ்டந்தான் என்னே! என்னே! என்றே மனமாழ்க வேண்டி யிருக்கிறது.

நம் பாரத நாட்டுக்கு இன்னும் நல்லகாலம் ஏற்படவில்லை என்பதற்குச் சமீபத்தில் மகாத்மா காந்தி காங்கிரஸ் தலைவர் சுபாஷ் சந்திர போஸ் ஆகியவர்களும், முஸ்லிம் லீக் தலைவர் ஜனாப் முஹம்மதலி ஜின்னாவும் கூடிப் பேசிய இந்து முஸ்லிம் சமரச முயற்சி வெற்றிபெறாது போய்விடக் கூடிய நிலையில் இருந்து வருவதொன்றே போதிய சான்றாகும். மௌலானா அபுல்கலாம் ஆஸாத்தின் முயற்சியின் பயனாக சென்ற மாதத்தில் மகாத்மா காந்தி ஜனாப் ஜின்னாவைக் கண்டு பேசினார். பிறகு, மகாத்மாவின் யோசனையின்மீது காங்கிரஸ் தலைவர் சுபாஷ் சந்திர போஸ் பம்பாய் வந்து ஜனாப் ஜின்னாவைக் கண்டு பேசினார். இந்து முஸ்லிம்களிடையே நிரந்தரமான ஐக்கிய மனோபாவத்தை யுண்டு பண்ணும் நோக்கத்தோடு காங்கிரஸ் தலைவர்களும் முஸ்லிம் லீக் தலைவரும் மனங்கலந்து பேசியதாகப் பத்திரிகைகளெல்லாம் வர்ணித்தன. ஆனால் அதன் முடிவு என்ன? தாம் முஸ்லிம் லீக் நிர்வாக சபையைக் கூட்டி இதுவிஷயமாக ஆலோசித்து ஒரு முடிவான தீர்மானத்தைக் கூறுவதாகச் சுபாஷ்பாபுவிடம் கூறிய ஜனாப் ஜின்னா, இப்போது முஸ்லிம் லீக்கின் முடிவான தீர்மானத்தை வெளியிட்டிருக்கிறார். இம்முடிவை யறிய தேசமக்கள் அனைவரும் ஆவலோடு துடிதுடித்துக் கொண்டிருந்தார்கள். இந்திய மக்கள் எவ்வளவுக் கெவ்வளவு ஆவலா யிருந்தார்களோ அவ்வளவுக் கவ்வளவு முஸ்லிம் லீக் நிர்வாக சபையின் தீர்மானம் பெரிய ஏமாற்றத்தை யுண்டுபண்ணி யிருக்கிறது.

ஒருகாலத்தில் தேசிய வாதியாகத் திகழ்ந்த ஜனாப் ஜின்னா வகுப்புவாதியாக மாறிய பின்னர், அவரது போக்கும் செயலும் பலமுறை இவ்விதமே தேசமக்களை ஏமாற்றமடையச் செய்திருக்கிறது. நம் இந்தியாவின் முன் நிற்கும் பல பிரச்சினைகளுள் இந்து முஸ்லிம் பிரச்சினை மிக முக்கியமானதொன்று என்று கருதிய காங்கிரஸ் தலைவர்கள் பல வருஷங்களாகப் பலமுறை இந்து—முஸ்லிம் ஒற்றுமையை ஏற்படுத்த வெகுவாகப் பாடுபட்டு வந்திருக்கிறார்கள்.

மகாத்மா காங்கிரஸ் மகா சபையில் முக்கிய பங்கு எடுத்துக் கொண்டு வேலை செய்யத் தொடங்கிய பின்னர் எத்தனையோ முறை இந்து முஸ்லிம் ஐக்கியத்துக்காகப் பாடு பட்டார். பாபு ராஜேந்திர பிரஸாத் தாம் காங்கிரஸ் தலைவராக வந்த காலத்து இச்சமரச முயற்சியில் அதிக கவனஞ் செலுத்தலானார். பண்டித ஜவஹர்லால் நேரு இந்து முஸ்லிம் பிரச்சினையைத் தீர்க்க வெகு

சிரமமெடுத்துக் கொண்டார். அப்போதெல்லாம் ஜனுப் ஜின்ஞ முதலில் நம்பிக்கை யுண்டு பண்ணிக் கடைசியில் ஏதோ ஒரு சாக்கு சொல்லி இம் முறையைப் பயனற்ற தாக்கி வந்ததோடு, தேசமக்களையும் ஏமாற்றத்துக்கு உள்ளாக்கி வந்திருக்கிருர். அது போன்றே தான் இன்றும் அவர் ஆசை காட்டி மோசஞ் செய்திருக்கிருர்.

முஸ்லிம்லீக் நிர்வாக சபை செய்திருக்கும் தீர்மானந்தான் என்ன? இந்தியாவிலுள்ள எல்லா முஸ்லிம்களின் கட்சியில் நின்று பேசுவதற்கு உரிமை யுடைய ஸ்தாபனம் முஸ்லிம்லீக் ஒன்று தான் என்று காங்கிரஸ் ஒப்புக் கொள்ள வேண்டுமாம். அதுமட்டு மல்ல; இந்துக்கள் அனைவர் சார்பிலும் பேசுவதற்குத் தனக்கே உரிமை யிருக்கிற தென்று காங்கிரஸ் உறுதி கூற வேண்டுமாம். அவ் வாக்குறுதியை கொடுத்தால் தான் சமரசத் துக்கு வழியேற்படு மென்று முஸ்லிம்லீக் நிர்வாக சபை கூறு கிறது. மேற்படி லீகின் தீர்மானப் போக்கைக் கவனித்தால், பொதுவாக லீகின் முக்கியஸ்தர்கள் இச்சமரச முயற்சியை விரும்பவில்லை யென்றே ஊகிக்க வேண்டியிருக்கிறது. வகுப்பு வாதத்தின் பெயரால் பட்டம் பதவி முதலிய உயர்ந்த அந்தஸ்து களைப் பெற்று வந்தவர்களும், பெற விரும்புபவர்களுமான முஸ் லிம் லீக் மெம்பர்களுக்கு இச்சமரச முயற்சி பிடிக்காததும், ஒற்றுமைக்கு வழியின்றி முட்டுக் கட்டை போட்டு வருவதும் ஆகியவற்றைக் கண்டு நாம் ஆச்சரியப் படுவதற்கில்லை.

முஸ்லிம்லீக் சொல்கிறபடி, அந்த லீக்கை முஸ்லிம்கள் அனை வர்க்காகவும் உரிமையோடு பேசக் கூடிய ஸ்தாபன மென்று எவ்வாறு காங்கிரஸ் ஒப்புக் கொள்வதென்று நமக்கு விளங்க வில்லை. முஸ்லிம்லீக்கில் ஒரு சிலரே அங்கம் பெற்றிருக்கின்ற னர். அவ்வொரு சிலரும் பட்டம் பதவிகளுக்கு ஆசைப்பட் டுள்ள வகுப்பு வாதிகளே யொழிய. முஸ்லிம் சமூகத்தின் நன் மைக்காகப் பாடுபடக் கூடியவர்கள் எவரும் இருப்பதாக நமக் குத் தெரிய வில்லை. முஸ்லிம் சமூகத்துக்காக உண்மையாகப் பாடுபடக் கூடிய தலைவர்களும், முஸ்லிம் சகோதரர்களால் நன்கு மதிக்கக் கூடியவர்களுமான கான் அப்துல் கபார்கான், மௌ லானு அபுல்கலாம் ஆஸாத் போன்ற தலைவர்கள் காங்கிரஸில் முக் கியத்துவம் வகித்து வருகின்றனர். அப்படியிருக்க, முஸ்லிம் லீக் முஸ்லிம்கள் அனைவருடைய உரிமைக்காக உழைக்கும் ஸ்தாபன மென்று எவ்வாறு ஏற்றுக்கொள்ளமுடியும்? இதுகூட பரவாயில்லை என்று ஒருவாறு ஒப்புக்கொண்டாலும் காங்கிரஸ் மகா சபை இந் துக்கள் சார்பில் பேசக்கூடிய ஸ்தாபனமென்று வாக்குறுதி கூற வேண்டு மென்றுகேட்பது எவ்வளவு விஷமத்தனமான யோசனை

என்று கூறத்தேவையில்லை. காங்கிரஸ் மகாசபை இந்தியாவி லுள்ள சகல சமூகத்தினருக்கும், மதத்தினருக்கும் அனைவருக் கும்சொந்தமான ஸ்தாபனம். அத்தகைய தேசமகாசபையை இந் துக்கள் சார்பில் மட்டும் பேசக்கூடிய உரிமையுடைய ஸ்தாபன மென்று எப்படி காங்கிரஸ் தலைவர்கள் கூறுவது? காங்கிரஸ் தலைவர்கள் இந்து முஸ்லிம் சமரச முயற்சியில் ஈடுபட்டதே, இந்தியாவிலுள்ள சகல வகுப்பினரையும் ஒன்றுபடுத்தி நன்மை செய்யவேண்டிய எண்ணத்தோடேயே யொழிய, தனிப்பட்ட யாருடைய அல்லது எந்த வகுப்பு நன்மைக்காகவும் அல்ல.

"காங்கிரஸ் மகாசபை இந்தியாவின் தேசீய ஸ்தாபனமா கும். இந்தியாவிலிருக்கும் இந்துக்கள், முஸ்லிம்கள், ஜைனர்கள் சீக்கியர்கள், கிறிஸ்தவர்கள் உட்பட அனைவரும் அதில் சேர லாம்.' ஜாதி மத வித்தியாசமின்றி இந்திய மக்கள் யாவரையும் ஒன்றுபடுத்திச் சுதந்திரமடைவதுதான் அதன் நோக்கமாகும். ......................காங்கிரஸ் இந்துக்கள் ஸ்தாபனம் தான் எனக் கூறுவது தகாது. அதில் பல முஸ்லிம் மெம்பர்களும் உளர். இந்து முஸ்லிம்களுக்குப் பொதுவான பிரச்சினைகள் காங்கிர ஸில் கவனிக்கப்படுகிறது" என்று சமீபத்தில் நடந்த ரங்கப் பூர் ஜில்லா அரசியல் மகா நாட்டில் தலைமை வகித்த வங்க மாகாண காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி ஜனுப் அஷ்ராவுத்தீன் சவுத்திரி கூறியுள்ள மொழியே நமது கூற்றுக்குப் போதிய ஆதாரமாகும்.

ஆகவே, முஸ்லிம் லீக்கினர் தேசமகாசபையாகிய காங்கி ரஸை இந்துமக்கள் ஸ்தாபனமென்று கூறுவதோ, இந்துக்கள் சார்பில் பேசக்கூடிய சபையென்று வாக்குறுதி யளிக்கும்படி கேட்பதோ சிறிதும் பொருத்தமில்லை ; நியாயமுமில்லை.

கடைசியாக நாம் காங்கிரஸ் தலைவர்களுக்கு ஒரு வார்த்தை கூற விரும்புகிறோம். இனிமேல் காங்கிரஸ் தலைவர்கள் இந்து முஸ்லிம் சமரச முயற்சி விஷயத்தில், முஸ்லிம் லீக் கையோ அதன் நிரந்தர தலைவரான ஜனுப் ஜின்னாவையோ நாட வேண்டாமென்றும், அவர்கள் வாயிலாகச் சமரசம் சாத்திய மில்லை யென்றும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

அதற்குப் பதிலாக, பாபு ராஜேந்திர பிரஸாத் முன் யோசனை கூறியபடி, காங்கிரஸ் முஸ்லிம் பாமர மக்களிடம் தொடர்பு வைத்துக்கொண்டு அதைப் பலப்படுத்திக்கொண்டு அதன் வாயிலாக இந்துமுஸ்லிம் ஒற்றுமையை ஏற்படுத்துவதே சிறந்த மார்க்கமாகும். காங்கிரஸ் தலைவர்கள் என்ன செய்யப் போகிறார்களென்று பொறுத்திருந்து பார்ப்போம்.

# சந்தாநேயர்களுக்கு வேண்டுகோள்

## 24-வது ஆண்டின் முன்னறிக்கை

"பத்திரிகைக்கும் பொது மக்களுக்கும் உள்ள தொடர்பு, மிக நெருங்கியது. சூரியனுக்கும் நிலத்துக்கும், நிலத்துக்கும் நீருக்கும் உடலுக்கும் உயிருக்கும் உள்ள சம்பந்தத்தைப் போல் இதுவும் விவரிக்க முடியாதது.........வயது வந்தவர்களுக்குக் கல்வி போதிக்கும் வழியில் அதன் உபயோகம் மிகவும் மதிக்கப் படுகிறது. இதனுல்தான் பத்திரிகைகள் உலகத்தில் நான்காவது சக்தியாகக் கருதப் படுகிறது." என்று ஒருசமயம் 'சுதேச மித்திரன்' ஆசிரியர் ஸ்ரீ ஸி. ஆர். ஸ்ரீநிவாஸன் 'பத்திரிகைகளுக்கும் பொது மக்களுக்கும் உள்ள சம்பந்தம்' என்பதைப் பற்றிப் பேசும்போது குறிப்பிட்டார். இத்தகைய உயரிய தத்துவத்தை உணர்ந்துதான், தமிழ் மக்களுக்குச் சேவை செய்ய வேண்டுமென்ற பெருநோக்கோடு சுமார் 23 வருஷங்களுக்கு, முன் நாம் "ஆனந்த போதினி" என்னும் மாதப் பத்திரிகையைத் தொடங்கினோம்.

அக்காலத்தில் இரண்டொரு பத்திரிகைகளே நிலவிவந்தன. இச்சமயம் உள்ள சௌகரியங்களைப் போல், அக்காலத்தில் பத்திரிகைகளை எளிதாக வெளியிட்டுவிட முடியாது. பத்திரிகைகள் வெளியிடுவதற்குச் சிரமமும் அதிகம்; செலவும் அதிகம். இவ்விதம் அதிகச் செலவில் பத்திரிகைகள் நடத்த வேண்டியிருந்ததால்தான் மற்றவர்களெல்லாம் தாங்கள் வெளியிடும் பத்திரிகைகளுக்குச் சந்தா அதிகம் வைத்து விற்பனை செய்யலாயினர். ஆனல், நாமோ தமிழ்நாட்டிலுள்ள சாதாரண ஏழை மகனும் வாங்கிப் படித்துப் பயன்பெற வேண்டுமென்ற ஒரு பெருநோக்கோடு மிகக் குறைந்த தொகையாகிய ஒரு ரூபாய் சந்தா ஏற்படுத்தினோம். குறைந்த சந்தாவேயொழிய நிறைந்த விஷயங்கள் கொண்டு விளங்கும்படி, காலதேச வர்த்தமானத்திற்கேற்றவாறு சகல விஷயங்களையும் எழுதி வெளியிட்டு வரலானோம். இவ்வகையில் நம் "ஆனந்தன்" இந்த இருபத்துமூன்று வருடங்களாகத் தமிழ் மக்களுக்குச் செய்துள்ள அரிய சேவையைத் தமிழ் மக்கள் அனைவரும் அறிவார்கள். ஒரு தமிழ் மாதப் பத்திரிகை முதன் முதலாகப் பல்லாயிரக் கணக்கான சந்தாதாரர்களைப் பெற்று நடந்து வந்த தென்றால்-இன்னமும் நடந்து வருகிறதென்றால் அது நம் "ஆனந்த போதினி"யே யாகும். இன்று தமிழ்நாட்டில் சிறந்த எழுத்தாளர்களாக விளங்குபவர்களில் பலர் நம் "ஆனந்தன்" வாசகர்களே யாவர்.

இங்ஙனம் பல்வகையிலும் சீரிய முறையில் நடந்து இருபத்து மூன்றாவது ஆண்டு முடிவடைந்த நம் "ஆனந்த"னுக்கு வருகிற ஆடிமாத முதலில் இருபத்து நான்காவது ஆண்டு பிறக்கிறது. ஆகவே, 'ஆனந்தனை' நல்வரவேற்கு முறையில் தமிழ் மக்கள்

இத்தனை வருஷங்களாகப் பேரன்புகொண்டு சந்தாதாரர்களாக இருந்து ஆதரித்து வந்தது போல், இனியும் பேராதரவு காட்டி வருவார்களென்று நம்புகிறோம்.

வரப்போகும் 24-வது ஆண்டு முதல் வழக்கப்படி தமிழ் நாட்டில்பேரும் புகழும் பெற்று விளங்கும் தமிழ்ப் பேரறிஞர் சமயப் பேரறிஞர் கட்டுரைகளும், புத்தம் புதிய அறிவூட்டும் ஏனைய கட்டுரைகளும் "ஆனந்தனை"யை அலங்கரித்து எல்லாருக்கும் மகிழ்வூட்டும் என்று தெரிவித்துக் கொள்ளுகின்றோம். ஆதலால் "ஆனந்த போதினி"யின் பால் அன்பு பூண்டு ஆதரித்து வரும் சகோதர சகோதரிகள் எல்லாரும் 24-வது ஆண்டின் சந்தாத் தோகையை நாளது வெகுதானிய வருடம் ஆனித் திங்கள் 31-ந் தேதி 15—7—38-க்குள் மணியார்டர் மூலமாகவோ நேரிலோ எங்கட்குக் கிடைக்குமாறு செய்ய வேண்டுகின்றோம். சந்தாத் தொகையின் பொருட்டு வி. பி. பி. அனுப்புவதால் தபாற் செலவு 4 அணு மணியார்டர் கமிஷன் 2 அணு ஆக ௦ அணு அதிகச் செலவும் சஞ்சிகை வந்து சேர வீண் கால தாமதமும் ஏற்படும். ஆகையால் எல்லாரும் மேற்குறிப்பிட்ட தேதிக்குள் மணியார்டர் செய்து விடுவது தான் உங்கட்கும் எங்கட்கும் இலாபமும் சௌகரியமும் ஆகும். வி. பி. அனுப்புவதால் இன்னொரு சங்கடமும் உண்டு. அதாவது வி. பி. வந்தால் ஏழு நாளைக்கு மேல் தபாலாபீஸில் வைத்திருக்க மாட்டார்கள். அதற்கு மேல் வி. பி.யை நிறுத்தி வைக்க வேண்டும் என்று விரும்புகின்றவர்கள் நாள் 1-க்கு 2 அணு வீதம் தபால் தலை வாங்கி ஒட்டி விண்ணப்பித்துக் கொள்ள வேண்டும். அதுவும் பத்து நாளைக்கு மேல் தபாலாபீஸில் வைத்திருக்க மாட்டார்கள். இந்த சங்கடங்களை யெல்லாம் உத்தேசிக்கும் போது எல்லாரும் சந்தாத் தொகையை முன் பணமாக அனுப்பி ஆதரிப்பதே நன்மை என்று தோன்றும். சிங்கப்பூர், பினாங்கு, போன்ற வெளி நாடுகளுக்கு வி.பி.யே கிடையாது.

குறிப்பு:—முன் பணம் அனுப்புவோர் பழைய சந்தாதார்களா யிருந்தால் மணியார்டர் கூபனில் தங்களுடைய சந்தா எண்ணைக் குறிப்பிட்டு "24-வது ஆண்டுக்கு" என விவரம் எழுத வேண்டும். புதிய சந்தாதார்கள் "புதிய ஆண்டுக்கு" என்று விவரம் எழுத வேண்டும்.

## இனும்! இனும்!! இனும்!!!

சந்தாத் தொகையை மேற் குறிப்பிட்ட தேதிக்குள் அனுப்புகிறவர்களுக்கு எங்களது அடுத்த பிரமாதி வருஷ "ஆனந்த போதினி" பஞ்சாங்கம் ஒன்று இனமாக அனுப்பப்படும்.

மானேஜர்.

# மனத்தூய்மையின் மாண்பு

(தெல்லிப்பழை-கா. சின்னப்பா.)

(கு ம் மி.)

மனத்தூய்மை யாலேநாம் மாண்பைப் பெருக்கி
மகிழ்ந்திவ் வூரிலே வாழ்ந்திடில் நல்லோர்
தினமும் வந்தெம் சிநேகத்தைத் தேடுவர்
திண்ணமி தல்லவோ ஞானப்பெண்ணே. (1)

ஈசன் திருவரு ளெய்திரா முய்திட
எண்ணிடி லெப்போது மேற்ற வகையாகப்
பாசங்க ளெங்களைப் பற்று திருக்குநற்
பான்மையைத் தேடுவோம் ஞானப்பெண்ணே. (2)

தேகத்தைக் காய்ச்சல் சிரங்கு முதலிய
சேர்ந்து வருத்திடல் போல மனதையும்
சாகும் வரைக்கும் சலனப் படுத்தும்
தகாத குணங்கள்தான் ஞானப்பெண்ணே. (3)

மனப்பெலம் நாடிடும் மானிட ரெப்போதும்
மாண்பு நிறைந்த மனத்தூய்மை தன்னைச்
சினம தகற்றித் திகழ்ந்திடச் செய்திடின்
தேசத்தோர் மெச்சுவர் ஞானப்பெண்ணே. (4)

கெட்ட பழக்கத்தாற் கீழோ ரெனப்பலர்
கேள்விநற் கல்விகள் கிட்டாதோ ரென்றெமை
இட்டமாய்ச் செப்புதற் கென்றும் மனத்தூய்மை
இல்லாமை காரணம் ஞானப்பெண்ணே. (5)

கெட்டவர் கூட்டத்திற் கிட்டவும் சேராது
கீழ்மக்க ளென்றும்நாம் கேளா திருந்திடில்

மட்டான சீவியம் மாண்புடன் செய்து
மனத்தூய்மை யெய்துவோம் ஞானப்பெண்ணே. (6)

எத்தனையோநல் லெழிலாரும் வன்மைகள்
எங்கள் மனத்தி லிருப்பதை நாமோர்ந்து
சித்தத்தை யூக்கமாய்ச் சீருறச் செய்தாற்
சிறந்திடுஞ் சீவியம் ஞானப்பெண்ணே. (7)

சிந்தையி லாறுத லோடுநற் சந்தோஷம்
சேர்ந்து விளங்கியே சீருற வேண்டிடின்
எந்தத்தூர்ச் செய்கையும் ஏற்கா தெமக்கென
என்றும்நா மெண்ணுவோம் ஞானப்பெண்ணே. (8)

காந்தி மகாத்மாவாய்க் கண்ணியம் பெற்றதும்
காத்திரம் மேலோரிற் கற்றவர் காண்பதும்
சாந்தம் மனதினில் தக்கநற் றூய்மையால்
சார்ந்ததா லல்லவோ ஞானப்பெண்ணே. (9)

கல்லூரிக் கல்வியைக் கற்கா திருந்தும்நற்
கண்ணியம் ராமக்கிருஷ்ண பகவானில்
துல்லியமாகவே தோற்றிய தற்கிங்கு
தூய்மையே காரணம் ஞானப்பெண்ணே. (10)

ஆசை பயத்தோ டனேகநற் பான்மைகள்
அற்றுப் பெரியோரா யாதிக்க முற்றிடில்
பாசம் பெருக்காப் பரிசுத்த சிந்தையைப்
பாரினிற் றாங்குவோம் ஞானப்பெண்ணே. (11)

எல்லாரும் வாழ்த்தவ ரின்பமு மெய்திடும்
ஈசன் திருவரு ளென்று மணைந்திடும்
பொல்லாக் குணங்களும் புத்தியைச் சாரா
பொருந்திடிற் றூய்மைதான் ஞானப்பெண்ணே. (12)





# தலைவியின் முறையீடு

———:(0):———

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

காதலர்களின் நெஞ்சிலே விரகத் தீ எழுந்து கொழுந்து விட்டெரியும்படி, மாரவேள் தென்றல் தேரில் ஏறி உல்லாஸமாகப் பவனிவரும் மாலை வேளை. பகற்பொழுது முழுதும் பூவலம் வந்த சிரமத்தைத் தணித்துக்கொள்ள, செஞ்சுடர்க்கதிரோன் தனது வெஞ்சுடர்க் கிரணங்களின் வெப்பம் முழுவதையும் தணிவித்து, மனோகரமான மஞ்சள் வெயிலை எல்லாப் பொருள்களின்மேலும் பரப்பி, மேற்கடலில் கொஞ்சங் கொஞ்சமாக இறங்கும் அந்திவேளை. ஒன்றின் பின் ஒன்றாக எழுந்து விழுந்து சுருண்டு புரண்டு கரையை நோக்கி வேகமாக ஓடிவந்து மீண்டும் விரைந்து திரும்பி ஓடிக்கொண்டிருந்த அலைகளின் காட்சி, அற்புதக் காட்சியாக விளங்குகிறது. அவ்வலைக் குழந்தைகளின் குறும்பு மிகுந்த விளையாட்டை நோக்கி நோக்கி நெஞ்சினின்றும் பொங்கியெழுந்த மகிழ்ச்சிப் பெருக்கினால், நீலத் திரைக் கடலரசன் குதூகல ஆரவாரம் செய்து கொண்டிருக்கிறான். அத்தகைய கடற்கரையிலே, பளிங்கு நொய்யே போல் விளங்கும் வெண்மணல் தரையிலே, அழகு தவம் செய்து பெற்றவளே போன்று இருபது வயதுடைய இளமங்கை ஒருத்தி, தனது கருவிழிகளினின்றும் பெருகும் கண்ணீர் சிவந்த கன்னங்களின் வழியே இழிந்து தனது மடியை நனைத்துக் கொண்டிருக்க, நீலத் திரைக் கடலை நோக்கிப் பெரிதும் ஏங்கியவண்ணம் அமர்ந்து கொண்டிருக்கிறாள். அந்த சுந்தரியின் நெஞ்சில் பொங்கியெழுந்த வெந்துயர்ப் பெருக்கினாலே, அவளெதிரிலுள்ள அஃறிணைப் பொருள்களெல்லாங்கூட உயிர்பெற்று அவளுடன் உரையாட முயல்வனவேபோல் அவளது கண்களுக்குக் காட்சி அளிக்கின்றன. தான் தன்னந்தனியே அமர்ந்திருந்து அருந்துயரால் வருந்திக் கொண்டிருப்பதைக் கண்டும், தன்னிடம் அன்போ இரக்கமோ சிறிதளவும் கொள்ளாமல், தத்தம் கருமத்திலேயே கண்ணா யிருக்கும் அவற்றை நோக்கி, அந்த சுந்தரி பின்வருமாறு முறையிடுகிறாள்:—

"எனது மனங் கவர்ந்துகொண்ட மாமாயப்பிரானாகிய மணிவண்ணப் பெருமானின் மரகத வண்ணத்தைப் பெற்றுத் தழைத்துச் செழித்துள்ள பச்சிலைகளையும் வெண்முத்தை யொத்த வெண்ணிற மொக்குகளையும் மலர்களையும் தாங்கி, கடற்கரையில் நறுமணம் வீச நிற்கும் கண்ணுக்கினிய

புன்னை மரங்கள் நிறைந்துள்ள குளிர் சோலையே! இந்த மாலை வேளையிலே, எனது இன்னுயிர்க் காதலர் என்னுடன் இங்கு இருந்திருப்பாரானால், நீ ஏந்திக் குலுக்கிக் கொண்டிருக்கும் வெண்மலர்கள், எனது நெஞ்சுக்கு எவ்வளவோ இன்பூட்டக்கூடியனவாக இருக்கும். அம்மலர்களைத் தமது மணிக்கரத்தினால் பறித்து எனது கருங்குழலில் சூட்டி என்னைக் கட்டியணைத்து முத்தமிட்டு மகிழ்ந்து நிற்கும் எனது இன்னுயிர்க் காதலர், இப்போது என்னருகில் இல்லையே! உனது மண மலர்கள், எனது தலைவரின் செல்வமணிக் கையால் தீண்டப் பெற்றுவிட்டால், அவை எனக்கு மட்டற்ற மகிழ்ச்சியை விளைவிக்கும். அவர் அருகில் இல்லாத இவ்வேளையிலே, உன் மலர்களால் எனக்குப் பயனென்ன? அவர் வருவார் வருவாரென்று எதிர்பார்த்து எதிர்பார்த்து எனது நெஞ்சில் பொங்கிப் பெருகிக் கொண்டிருக்கும் ஆசை வெள்ளத்தை, எத்தகைய அணை போட்டுத் தடுத்துக் கொள்ளவும் என்னால் முடியவில்லையே!

தெளிந்து குளிர்ந்த நீர் நிறைந்த அழகிய குளத்திலே, நீல நீரின்மேல் தலை நிமிர்ந்து நின்று மெல்லிய காற்றில் உல்லாஸமாக அசைந்தாடிக் கொண்டிருக்கும் செந்தாமரை மலரின் செவ்விதழ்களின் நடுவிலே படுத்துக் கிடக்கும் பொன்வண்டே! அம்மலரிலிருந்த செந்தேனை உன் சிறு வயிறு நிறையக் குடித்து விட்டதன் பயனாக விளைந்த மதி—மயக்கத்தினாலே, நீ சுய உணர்வை இழந்து உறங்கிக் கிடக்கிறாயா என்ன? ஐயோ, பாவம்! அளவு மீறிய ஆசையை அடக்க முடியாமல், கள் குடித்து உணர்வை இழந்த பித்தனைப் போல், நீ உன்னையும் மறந்து உறங்கிக் கொண்டிருக்கிறாய் போலும்! நீயோ களிப்பின் மிகுதியினால் மென்மலர்ப் பள்ளியிலே ஆனந்த நித்திரை செய்து கொண்டிருக்கிறாய்! நானோ, எனது இரு விழிகளினின்றும் இடையறாமல் அருவிபோலும் பெருகிக் கொண்டிருக்கும் கண்ணீர்ப் பெருக்கினால், ஒரு கணமேனும் கண்ணிமைத்து உறங்க முடியாமல் கலங்கித் தவித்துக் கொண்டிருக்கிறேன். உனது செந்தாமரைக் காதலியின் செவ்விதழ்களில் முத்தமிட்டு, அவ்விதழ்களில் படிந்துள்ள செந்தேனைச் சுவைத்துச் சுவைத்து உண்டு களித்த காதற் செருக்கினாலே, நீ இப்பொழுது ஆனந்த நித்திரை செய்து கொண்டிருக்கிறாய்! துர்ப்பாக்கியவதியாகிய நானோ, எனது இன்னுயிர்க் காதலரின் செங்கனிவாயமிர்தம், இனி எனக்கு என்றுதான் கிடைக்குமோ என்ற ஏக்க மிகுதியினாலே, விழித்த கண் விழித்தபடியே சிறிது நேரங்கூட உறங்க முடியாமல் பெரிதும் தவித்துக் கொண்டிருக்கிறேன்.

பரந்த நீலக் கடலிலே ஓடுகிற மரக்கலமே! குதூகலித்துக் கொந்தளித்தெழும் பயங்கரமான கடலலைகளில் சிக்கிப், பலவாறு அசைந்தாடிக் கொண்டிருந்தும், நீ சிறிதுகூட அஞ்சுவதாகக் காணோம்! அவ்வசைவும் ஆட்டமும் உனக்கு அச்சமூட்டுவதற்குப் பதிலாக, ஆனந்தத்தையே ஊட்டுகின்றன! பாவியேனுக்கோ, பழிமொழி கூறச் சிறிதும் அஞ்சாத ஊராரின் நாவும் வாயும், சகித்தற்கரிய கொடிய பகைகளாக இருந்து வருகின்றன. அவர்களின் பழிமொழிகளாகிய அலைகளினால், எனது நெஞ்சு பலவாறு அலக்கழிக்கப்பட்டு கலக்கப்பட்டு வருவதை என்னால் சிறிதும் சகிக்கவே முடியவில்லை. "இடும்பைக்(கு) இடும்பை படுப்பர்—இடும்பைக்கு—இடும்பை படாஅ தவர்"—என்ற அருள்மொழிகளிணங்க, பகைவர்களது




நாய்க்கும் உத்தியோகம் ?

கானடா தேசத்தில் பிராண்டன் என்னும் நகரில் ஒரு நாய் மனிதர்களைப்போல் உத்தியோகஞ் செய்து வருகிறது என்பதைக் கேட்டால் நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். இந்நாய் எவராலும் வளர்க்கப்படவில்லை. ஆயினும், அந்நாய் புத்தி கூர்மையுடையதா யிருந்தமையால், அவ்வூர் தண்ணீர் டாங்கியை காவல் காத்து வந்ததாம். யாரேனும் திருடர்கள் வந்தால் அவர்களை விரட்டி யடிக்குமாம். இதை யறிந்த அந்நகர சபைத் தலைவர் அந்த நாய்க்கு நல்ல உணவு கொடுக்க ஏற்பாடு செய்ததோடு, அதை முனிசிபல் சிப்பந்திகளில் ஒன்றாகச் சேர்த்து வருட மொன்றுக்கு 4 டாலர் சம்பளங் கொடுக்க ஏற்பாடு செய்தாராம்.

***

கட்டிடம் இடம் மாற்றம்

ருஷியத் தலை நகரமான மாஸ்கோ அதிகாரிகள் ஓரிடத்திருந்த சில கட்டிடங்களை அடியோடு தூக்கி மற்றோரிடத்தில் மாற்ற விரும்பினார்கள். அதன் பொருட்டு இக் கட்டிடங்களுக்கு நாற்புறமும் பெரிய தண்டவாளங்களை நிறுத்தி அப்படியே தூக்கி 200 அடி தூரத்தில் கொண்டுபோய் வைத்தனர். இவ்வற்புத வேலையை இரண்டு நாளில் அதாவது 48-மணி நேரத்தில் செய்து முடித்துவிட்டனர்; ஆனால் அக்கட்டிடத்தில் இருந்தவர்கள் அப்படியே அசையாதிருந்தனராம். டெலிபோன் கம்பிகளுக்குக்கூட சேதங் கிடையாதாம்.

***

அலுமினியம் கண்டுபிடித்தவருக்குப் பைத்தியக்காரப் பட்டம்

சுமார் 120 வருஷங்களுக்கு முன், ஜான் பென்னெட் என்பவர், ஒரு வித மண்ணிலிருந்து வெள்ளியைவிட வெண்மையானதும் இரும்பைவிட விலை குறைவானதும், மரத்தைவிட லேசானதுமான உலோகத்தை எடுக்கக் கூடுமென்று கண்டுபிடித்தார். இவ்வித உலோகத்துக்குத்தான் அலுமினியம் என்று வழங்கப்படுகிறது. அச்சமயத்தில் மண்ணிலிருந்தாவது? உலோகமாவது? என்று பரிகசித்து உலோக உருக்குத் தொழிலாளிகளும், டாக்டர்களும் பென்னெட்டுக்குப் பைத்தியக்காரப் பட்டந் தந்தனர். ஜான் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோய் வைக்கப்பட்டார். கடைசியில் அவர் அங்கு உண்மையாகவே பைத்தியக்காரராய்விட்டார். ஜன சமூகத்துக்கு மிகவும் உபயோகப்படக்கூடிய வஸ்துவைக் கண்டுபிடித்தவருக்கு நேர்ந்த கதியைப் பார்த்தீர்களா !

# சமூக சீர்திருத்தங்களும் புரட்சிகளும்

—(0)—

(T. R. ராஜகோபால்.)

பழையன தாமே கழியா; புதியன தாமே புகா. பழையன கழிந்து புதியன புகுதற்குக் காரணமென்னே? பழையனவற்றைக் கழித்துப் புதியனவற்றைப் புகுத்தற்கு உபாயம் யாது?

பிரம்மாண்டச் சண்டமாருதங்களைப் போன்ற மாறுதல்களாலும், கிளர்ச்சி—புரட்சிகளாலும், கடலிடைப்பட்ட ஒரு சிறு தோணிபோல், மனித உலகமானது, இந்நேரத்தில், புரண்டு மோதிச் சுழன்று தத்தளிக்கின்றது! இன்னோரன்ன சமயத்தில், "ராமன் ஆண்டாலென்ன, ராவணன் ஆண்டாலென்ன? வடகோடு உயர்ந்தென்ன, தென்கோடு சாய்ந்தென்ன?" எனப் பிதற்றிச் சும்மாவிருத்தல் துரோகமாகும். நம்முடைய எதிர்கால வாழ்வானது நம்மவரின் பயிற்சி—முயற்சி—தேர்ச்சிகளைப் பொறுத்திருக்கின்றது. நயவஞ்சகத்தினாலும், புஜபலத்தினாலும், பேராசையினாலும் தூண்டப்பட்டுக் கொடிய போர்க்கருவிகளாலும் முறைகளாலும் நாலா பக்கத்திலுமுள்ளவரை எதிர்த்து, அவர்களுடன் கடும்போர் புரிந்து அடக்கியும் அழித்தும் வரும் "வீர சூரர்" பெருகி வருகையில், வாழ்க்கையின் இழிவையும், உலகம்—உலகாதிகளின் அநித்யத்வத்தையும் இடைவிடாமல் ஓதுதல் மிக்க இழிவாகும். வாழ்க்கைக்கு இன்றியமையாத உணவும்—உடுப்பும்-ஒரு சிறு குடிசையு மில்லாது பரிதவிக்கும் மக்களைப் பார்த்து, "எல்லாம் ஈசன் செயல், விதிப்பயன்" எனப் போதித்து அவர்களை ஆற்றுவிக்க முயற்சிப்பவர் மதிகெட்ட கன்னெஞ்சினர் அல்லரோ!

விலங்குகளுக்கும் மானுடர்க்குமுள்ள பெரிய வித்தியாசம் யாதெனின், இயற்கை அன்னையால் அளிக்கப்பட்டவைகளைத் தின்று மிருகங்கள் வாழ்ந்து வருகின்றன; ஆனால், மனிதனே வாழ்க்கைக்கு வேண்டியவைகளைச் சுயமுயற்சியினால் உண்டாக்கிப் பெருக்கி வாழ்ந்து வருகிறான். மேலும், பசிதாகங்கள் உண்டாகும் பொழுதுதான் விலங்குகள் ஓடி யலைந்து கிடைத்தவைகளைத் தின்று திருப்திபுற்று உறங்கிவிடும் சுபாவமுடையனவா யிருக்கின்றன; ஆனால், மனிதனே பாவனாசக்தி வளமையினாலும் பலதிறப்பட்ட விசாரிப்பு—அநுபவங்களாலும் எதிர்காலத்தையும், தன் உறவினர்—அயலவரின் க்ஷேமத்தையும் உத்தேசித்துச் சதாகாலமும் தொழில்கள் பலவற்றை ஏற்றுப் புரிந்து விதம் விதமான பண்டங்களைத் தயாரித்துக் குவித்து வரும் இயற்கையை யுடையவனாயிருக்கிறான். இவ்விரு திறக் குணங்களுமேதான் மாந்தர்தம் உயர்வு தாழ்வுகளுக்கும்—சுகதுக்கங்களுக்

கும்—அமைதி யவதிகளுக்கும்—பொய், குறளை, வன்சொற்களுக்கும்—விடுதலைக்கும் நானாவிதப் பந்தங்களுக்கும் விளைநிலமும் பக்கபலமுமாயின என்று எண்ணுவதற்கு இட மிருக்கிறது.

பிரகிருதி லீலைகளான அதிவிருஷ்டி அனுவிருஷ்டி—வெகு வெள்ளம் வரட்சி—கடும்புயல் பூகம்பம் முதலியவைகளாலும், வெட்டுக்கிளிகள் போன்ற ஜீவஜந்துக்களினாலும், இடைவிடாப் போர்—கொலை—களவுகளினாலும் உண்டாகும் பஞ்ச காலங்களில் ஆகாரத்தினிமித்தம் அவதிப்படாதிருக்கும் பொருட்டுப் பலவிதத் தான்யங்களைப் பயிரிட்டுச் சேமித்துக் காப்பாற்றவேண்டி வருகின்றது. காடு நாடாய்த் திரிந்து வேட்டையாடிக் கிடைத்தவைகளைத் தின்று வந்தவர்கள் மேற்குறிப்பிட்ட காரணத்தினால் ஒவ்வோர் இடத்தில் ஸ்திரமாகத் தங்கிப் பூமியைச் செப்பனிட்டுப் பயிர் செய்து வாழத் தலைப்பட்டனர். விவசாயம் பெருகி ஜனத்தொகை அதிகரிக்கவே, கூட்டுறவு வாழ்க்கை, அல்லது சமூக வாழ்க்கை உண்டாயிற்று. இவ்வாறு வேளாண்மையும் ஜனத்தொகையும் அதிகரிக்கவே, குடும்ப வாழ்க்கையும்—சமூகங்களின் எழுச்சியும்—தொழில்களும்—தொழிற் பிரிவுகளும், இறுதியில், அவைகளின் மூலமாகப் பிணக்கமும்—பகையும்—புரட்சியும்—போரும்—சிறு பகுதியினர்க்குச் செல்வமும் செல்வாக்கும், இன்பங்களும்—பெரும் பகுதியினரின் நல்குரவும் துயரமும் அடிமைத்தனமும் அதிகரித்தன.

ஆரம்பத்தில், தகப்பனே ஒவ்வொரு குடும்பத்தின் நிர்வாகி, அல்லது தலைவனாக விளங்கினான். குடும்பங்கள் பல சேரப்பெற்றுள்ளது சமூகம். ஒவ்வொரு குடும்பத்தினரும் அவ்வக் குடும்பத்தின் தலைவனான பிதாவின் ஆக்ஞைகளுக்குக் கீழ்ப்படிந்து நடந்தனர். மதக்கொள்கைகளும்—ஆசாரங்களும், குடும்ப க்ஷேமத்திற்கான பழக்க வழக்கங்களும்—விதிவிலக்குகளும், தொழில்களின் அபிவிர்த்திக்கான முறைகளும், சமூகத்தின் இணக்கத்திற்கும் ஏற்றத்திற்குமான உபாயங்களும் ஒவ்வொரு குடும்பத்தின் பிதாவினாற்றான் ஆக்ஞாபிக்கப்பட்டு ஏனையோரால் அநுசரிக்கப்பட்டு வந்தன. குடும்பத்தில் ஒவ்வொருவரும் அவ்வாக்ஞைகளை எத்தகைய ஆக்ஷேபமும் சலிப்புமில்லாமல் ஏற்று எள்ளளவும் முறை பிறழாது ஒழுகி வந்தனர். அக் குடும்பங்களைப் பொதுப் பழக்க வழக்கங்களேதான் இணைப்பித்து ஒருவாறு சுகம்—இன்பம்—சமாதானங்களுடன் வாழச் செய்தன. அக் குடும்பங்களையும் அவர்களுடைய சமூகத்தையும் சேர்ந்திராத சுற்றுப் புறத்தவர்கள் விரோதிகளாகவும் சண்டையிட்டுத் தோற்கடித்து அடக்குவதற்கான அடிமைகளாகவும் கருதப்பட்டனர். கிருஷிகத்திற்கு வேண்டிய கருவிகளை நிருமித்தல்—உழுது பயிரிட்டுத் தண்ணீர் பாய்ச்சி அறுவடை செய்தல்—அயலவர் களவு செயற்களினின்று பாதுகாத்தல்—வேட்டையாடல்—போர் செய்தல் முதலான தொழில்களில் ஆண்மக்கள் பிரவிர்த்தித்தனர். ஆடைகள் நெய்தல்—கூடைபின்னல்—குழந்தைகளைப்-பாமரித்தல்—அன்னபானங்களைத் தயாரித்தல் முதலானவைகளைப் பெண்பாலர் ஏற்றுப் புரிந்தனர்.

நாளாவட்டத்தில், உடைமை உரிமைகளென்ற பாவனைகள் மேம்பட்டன; தொழிற் கிளைகள் பற்பலவாகப் பிரிந்து செழித்து ஓங்கி வளர்ந்து

வியாபித்தன. இக் காரணங்களால், சிற்சில சமயங்களில், குடும்பத்தினருள் வேற்றுமைகளும் வழக்குகளும் தலைக்காட்டின. மேலும், குடும்பங்கள் பெருகவே, பொருளாதாரங்கள் வேண்டிய அளவு பெற்று அனுபவித்தல் கஷ்ட சாத்தியமாயிற்று. இந்நிலைமை சமூக முழுதிலும் பரவித் தாக்கவே அச் சமூகத்துள் சில மாறுதல்கள் எழுந்தன. நாளுக்குநாள் வளர்ந்துவந்த தம்முடைய தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்காக வெவ்வேறு இடங்களுக்குக் குடிபுக நேரிட்டது. ஆனால், அவ்விடங்களிலும் தங்களைப்போல் பற்பலர் வாழ்ந்து வந்தனர். எவனும் தன் உடைமைகளைப் பிறர்க்குக் கேட்டவுடன் கொடுப்பதில்லை. கபடமாகவோ, அல்லது பகிரங்கமாகவோ, அவனுடன் சண்டையிட்டுப் பிடுங்கவேண்டும். இது எளிதில் செய்யக் கூடியதன்று. ஆதலால், புஜபலத்திலும் புத்தி சாதுர்யத்திலும் சிறந்து விளங்கிய தீரர்களை ஒவ்வொரு குடும்பத்தினின்றும் பொறுக்கி எடுத்து, அவர்களுடைய தலைமையின் கீழ் அச் சமூகத்தினர் படை யெடுத்துச் சென்று அயலவருடன் சண்டைசெய்து, அவர்களை முறியடித்து; அவர்களின் சொத்துக்களையும்—பூஸ்திதியையும் தம் வசப்படுத்தி—ஆண் பெண்—பாலர் விருத்தர் என்ற வித்தியாசம் பாராமல் யாவரையும் அஸ்திரங்களுக்கும் வாளுக்கும் இரையாக்கிப் பூண்டோடு அழித்து, இவ்வாறு செய்ய முடியாமற்போனால், தோற்றவர்களை அடிமைகளாக்கி, அவர்களுடைய இடத்தைத் தமக்குச் சொந்தமாக்கிப் பெருக வாரம்பித்தனர். இச் சூழ்ச்சிகளில் சேனைகள் திரட்டிச்சென்று வெற்றியடைதற்குப் பேருதவி புரிந்த வீரதீரர் பிரத்தியேக உடைமை யுரிமைகளைக் கைம்மாறாகப்பெற்று உல்லாசமாக வாழத் தொடங்கினர். பின், அயலவர் மீது அணிவகுத்துச் சென்று தோற்பித்தற்கான உபாயங்களைத் தேடித் துருவிப்பார்த்தலும், பற்பல அப்பியாசங்களால் தேகவலிமையையும் வீரியத்தையும் உறுதியையும் யந்திர தந்திரங்களையும் பெருக்குதலுமே தான் அச் சூரர்களின் வாழ்க்கைக் கருத்தும் கடமையுமாயின. அவ்வீர தீரர்தான், நாள் செல்லச்செல்ல, உன்னத அரண்களும் ஆழ்ந்த அகழ்களும் உடைய அரசராகவும், மன்னவர் மன்னராகவும், தளகர்த்தராகவும் உயர்ந்தனர். பிற்காலங்களில், அவர்களுடைய ஆரவாரங்களும் அட்டூழியங்களுமே தான் ராஜாங்கம் என முழங்கின என்று சொல்லவேண்டியதா யிருக்கிறது.

குடும்பத்தினர்க்குள் உண்டான பிணக்குகளும் வழக்குகளும் அக் குடும்பத்தின் தலைவனான பிதாவினால் தீர்க்கப்பட்டதுபோல்; பற்பல குடும்பங்களுக்குள் உண்டான வேற்றுமைகளும் சண்டைகளும் அக் குடும்பத் தொகுதியினால் பொது க்ஷேமத்தின் பொருட்டுத் தெரிந்தெடுக்கப்பட்ட ஒரு பிரதிநிதியினாலோ, அல்லது பல பிரதிநிதிகளாலோ தீர்க்கப்பட்டன. பொதுஜனப் பாதுகாப்பிற்கும் நன்மைக்கும் உயர்வுக்குமான பாரம்பரியப் பழக்க வழக்கங்கள் நியாயச் சட்டங்களாக மாறின. அவைகளை மீறி நடந்தவர்கள் பொதுஜன மன்றத்திற்குக் கொண்டுவரப்பட்டு, மேற்சொல்லிய பிரதிநிதிகளால் விசாரிக்கப்பட்டனர். ஜாதிப் பிரஷ்டமும், தேச நீக்கமும் சிரச்சேதமும் மிகவும் தாராளமாகக் கையாளப்பட்டன. நியாயவாதிகளும், நீதிபதிகளும், ஸ்தலங்களும், நாள் செல்லச்செல்ல, நியாயம் மாயமாகப் பறந்துபோகும்படிக்குக் கணக்கற்ற கிளைகள் விட்டுப் பெருகி வியாபித்தன. மேற்சொல்லிய போர் வீரர்களைப்போல், இவர்களும் வேறு எவ்

வேலையும் ஏற்றுச் செய்வதில்லை. இவ் வகுப்புக்களைப் போற்றுதற்குப் பிறர் பெரும் பெரும்பாடுகள் படவேண்டியதாயிற்று!

பொது ஜனங்களின் அடியார்களாகவும், மக்களின் தோழராகவும், ஏழைகளின் ரக்ஷகராகவும் விளங்க வேண்டியவர், காலச் சுழற்சியில், பேராசையும்—செருக்கும்—தன்னலச் சிந்தனையும் மேலடையவே, வெளிபாகத்தினருடன் பழகியது போல், தம் நாட்டினருடனும் பழக வாரம்பித்தனர். இதற்கு அநுகூலமானவர்களைத் தம் பக்கத்தில் சேர்த்துப் பற்பல உதவிகள் புரிந்து உயர்த்தினர். ராஜாங்கக் கிளைகளும் சமூகப் பிளவும் பொது ஜனங்களின் துயரமும் இவ்வாறு வளர்ந்து பெருகின.

சிறு கிராம வாழ்க்கையானது, நாளாவட்டத்தில், தொழில்களின் அபிவிருத்தியினாலும் ஜனத் தொகை வளர்ச்சியினாலும் நகர வாழ்க்கையாக மாறிற்று. பற்பல பாகத்தினர்க்குள் அறிமுகம் ஏற்பட்டு வியாபாரம் தலை காட்டியது. உலோகங்களும், அவைகளின் உபயோகங்களும், புதிய பிரதேசங்களும் கண்டு பிடிக்கப்பட்டன. இவைகளுடன் கலைகள் பலவும், விஞ்ஞான சாஸ்திரப் பயிற்சியும்—தேர்ச்சியும் செழிக்கவே, வாழ்க்கைப் போக்கும் கருத்தும் முடிபும் மாறுதலுற்றன. சிற்சில சமயங்களில், மாந்தர் உலகமானது, ஒரு புறத்தில் இந்திர லோகமாகவும், மறு புறத்தில் நரக லோகமாகவும், தோன்றிற்று; இன்னமும் அவ்வாறு தோன்றி வருகிறது. இது நிற்க; ஆதி காலத்திய சமதர்ம வாழ்க்கையானது, நாளேற நாளேற, ஆள்வோர்—ஆளப்படுவோர், அல்லது ராஜாங்கம்—குடி எனப் பிரிந்தது. வியாபாரமும் தொழில்களும் பொருளாதாரமும் தழைத்தோங்கவே, முதலாளி—தொழிலாளி, யஜமானன்—அடிமை என்ற பிளவுகள் உண்டாயின. முதலிருவகுப்பினரும் பரஸ்பர ஒற்றுமையுடனும் நட்புடனும் பழகி ஏனையோர்களை ஒறுத்து அடக்கத் தலைப்பட்டனர். எனினும், ஒவ்வோர் சமயத்தில், ராஜாங்கத்தினர்க்குள்ளும் பொருளாளிகளுக்குள்ளும் வித்தியாசமும் விரோதமும் ஏற்பட்டுக் கலகங்களும் உள்நாட்டுப் போர்களும் உண்டாயின.

இன்னமும், ஒவ்வொரு பாகத்தினர்க்கும் போதுமான நந்நிலங்களும்—சீதோஷ்ண ஸ்திதியும்—ஆறு குளம் ஏரி வாய்க்கால்களும் தொழில்களுக்கு வேண்டிய ஆயுதங்களையும் இயந்திரங்களையும் செய்தற்கான உலோகங்களும்—அபாயமற்றுச் செப்பனிடப்பட்ட நற்பாதைகளும்—துறை முகங்களும் சரியானபடிக்கு இப் பூவுலகெங்கும் பரவியிராமையினால் பற்பல பாகத்தினர்க்குள் சிநேகமுண்டாகவே, பண்ட மாற்றங்களும்—ஏற்றுமதி இறக்குமதிகளும் மலிந்து பெருகின.

எத் தட்டுத் தடைகளும்—சண்டை சச்சரவுகளு மில்லாமல் அப் போக்கு வரத்துக்கள் ஒழுங்குடனும் அமைதியுடனும் நடந்து நீடித்திருக்கும் பொருட்டு பரஸ்பர உடன்படிக்கைகளும்—நியாய விதி விலக்குகளும் ஏற்படுத்தப்பட்டன. எனினும், சில பேராசைப் பேய்களும்—சுயநலச் சிந்தனையாளரும் தக்க தருணம் வாய்ந்த பொழுது, மேற் சொல்லிய கட்டுப்பாடுகளைக் கொஞ்சமேனும் பொருட்படுத்தாமலும், தம் குடிகளின் விருப்பத்தையும் அபிப்பிராயத்தையும் விசாரித்தறியாமலும் பிரதேசங்கள் மீது அணிவகுத்துச் சென்று, அவர்களுடைய உடைமைகளைக் கைப்பற்றி

னர். மேலும், போருக்குப் பின் எஞ்சி நின்றவரைச் சிறைப்படுத்தியும்—அடிமைகளாக்கியும்—மேலெழாவண்ணம் பலவிதங்களில் ஹிம்சித்தும் வந்தனர்; இன்னமும் அவ்வாறு செய்து வருகின்றனர்! ராஜாங்கத்தினரும் தனவந்தரும் தங்களுடைய சேனைகள் உதவியினாலும்—பொருள் பலத்தினாலும் தம் ஆதிக்கத்துக் குட்பட்டவரை உதைத்து அழுத்தித் தாம் மாத்திரம் விலாப் புடைக்கத் தின்று கொழுத்து, எளியோரை இடுப்பொடிய உழைக்கச் செய்து, அவ் வுழைப்புக்களின் பலன்களை முற்றிலும் தாம் கவர்ந்து, அவர்களை ஆறாப்பசி—தீராப்பிணி—நித்திய வருத்தமாகிய சங்கிலிகளால் கட்டினர்! சுயநலம்—சுயலாபம்—சுய சிறப்புக்களி னிமித்தமே பற்பலக் கபடோபாயங்களால் தொழிலாளரையும் ஏழைகளையும் வஞ்சித்து யுத்த பீடத்தில் பலியிட்டனர்; இன்னமும் அவ்வாறு செய்து வருகின்றனர்! வெற்றி பெறினும்—தோல்வி யுறினும், பொது மக்களை யொட்டிய வரையிலும் யாதொரு நன்மையும் அவர்களுக்கு உண்டானதில்லை. மித மீறிய செல்வாக்கும் அபரிமிதமான செல்வமும் எவரையும் இழித்து அழிக்கும் குணம் வாயப் பெற்றன போலும். ஆக்ஞா சக்கிரச் சுழற்சியின் கடு வேகமானது மூளையைக் கலக்கி விடுகின்றது போலும். அக்கயவர்களின் சூழ்ச்சிகளுக்கு இரையாகி மாய்பவர் லக்ஷக்கணக்கான பேதைகள்! அந்தோ, இக் கொடூரம் எப்பொழுது எவ்வாறு அழியுமோ?

ராஜாங்கங்களின் ஆரம்பம்—வளர்ச்சிகளையும், நடத்தப்படும் முறைகளையும், செல்வாக்கினரின் மெய்க்குண நடத்தைகளையும் நோக்கங்களையும், செல்வரின் போக்கையும் முடிபையும் பற்றிய மர்மங்களை மெய்யறிஞரின் போதனைகளாலும் சுய அவதி அநுபவங்களாலும் பொது ஜனங்கள் உணர்ந்தறியவே, அவர்கள் விழித்தெழுகின்றனர். எதற்கும் அளவு ஒன்று உண்டல்லவோ? தன் குடும்பத்திலுள்ள வயோதிகர் பாலர்—ஆண் பெண் யாவரும் ஓய்வொழிவுகளில்லாமல் நாள்தோறும் உழைத்த போதிலும், கந்தையுங் கஞ்சியு மில்லாதும், கல்விப் பயிற்சி—மனத்தேர்ச்சி—தேகாரோக்கியங்களைக் கனவிலும் அநுபவித்தற் கியலாதும் பரிதவிப்பவர் அக் கொடூரங்களைக் காலவரையின்றிப் பொறுத்திருக்க முடியுமோ? பிரஜைகளின் சுபிக்ஷத்தினிமித்தம் பிரஜைகளால் உயர்த்திப் பராமரிக்கப் படுவதையும், மாடமாளிகைகளும்—தனமும்—செல்வாக்கும் அவர்களால் தமக்கு அளிக்கப்பட் டிருப்பதையும் ராஜாங்கத்தினர் மறந்து, எல்லாச் சாதகங்களையும் சாதனங்களையும் சுய சுகபோகங்களுக்கே எனப் பாவித்து இறுமாந்து, வெறி பிடித்த தம் மனப்போக்கை அநுசரித்துக் கொடுங் கோலாட்சி புரியத் தலைப்படின், அவ் விபரீதங்களை எவர் தாம் பார்த்துச் சகித்திருப்பர்?

சுருக்கத்தில், "பல்வேறு தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகச் சமூக வாழ்க்கை ஏற்பட்டது. துர்க்குண வொழுக்கங்களின் அறிகுறியாகவும் பலனாகவும் விளங்குவதாம் ராஜாங்கம் என்பது. ராஜாங்கத்தினரும்—செல்வாக்கினரும்—முதலாளிகளும் அகக் குருடர்போலும். அவர்களிடமிருந்து எந் நன்மையையும் எவரும் சுலபமாகவும், நியாய மாகவும் பெறுதற்கியலாது! ராஜாங்கம் என்பது சத்தியலோகத்தின் பிரதி பிம்பமன்று. சமூக வாழ்க்கையானது ஒற்றுமை உணர்ச்சியை ஊட்டிப் பெருக்குவதா

கும்; பிளவுகளையும் பரஸ்பர விரோதத்தையும் ராஜாங்கம் என்பது மூட்டி வளர்ப்பதாகும். முதலாவது யாவரையும் நேசிக்கச் செய்து ரக்ஷித்து உயர்த்தும் சக்தியாகும்; பின்னதோ தன் சிறு கூட்டத்துட் படாதவர்களையும் தன்னை எதிர்ப்பவர்களையும் தண்டித்துச் சிறைப்படுத்தி யடக்கி யழிக்கும் கருவியாகும். நாம் உவந்து அளித்த சக்தியை மீண்டும் நம் மீதே பிரயோகித்து நம்மை அலப்புறுத்தி யழிக்கும் அரும் பெருங் குணம் பெற்றுள்ளதாம் ராஜாங்கம்! மூளை இருக்க வேண்டிய இடத்தில் சேறும், நெஞ்சின் ஸ்தானத்தில் கல்லும், கைகால்களுக்குப் பதிலாகத் துப்பாக்கியும் பீரங்கியும் வாளும் அமையப் பெற்ற உருவமாம் ராஜாங்கம்.'' இன்னமும் "ராஜாங்கங்களின் உற்பத்தி—வளர்ச்சி—ஸ்தானங்களின் விவரங்களையும் மக்களிற் பெரும் பாலரும் படும் கஷ்ட நிஷ்டூரங்களுக்குக் காரணத்தையும் பற்றிய உண்மைகளை உள்ளவாறு ஒவ்வொரு அறிஞரும் பிறர்க்குப் பகிரங்கப்படுத்த வேண்டும். தன்னம்பிக்கையும்—ஒற்றுமையையும் விருத்திசெய்யக் கூடிய விஷயங்களைத் திரிந்து மாற்றி மறைக்காமல் வெளியிட வேண்டும்."

செய்தவைகளையே மீட்டும் மீட்டும் செய்தலும், முன்னோரின் சுவடுகளையே சிறிதும் சுய விசாரிப் பில்லாமல் பற்றி நடத்தலும் சுலபமானதால், பெரும் பான்மையோரும் 'புராதனம்'' என்ற கள்ளைப் பருகி, 'ஆன்றோர் ஆக்ஞை' என்ற போர்வையைப் போர்த்து மயங்கித் திக்குமுக்காடிக் கெடுகின்றனர். பசிப்பிணியும்—தேகநோய்களும்—நானாவித இன்னலிடர்களும், காட்டுத் தீ போல், மும்மரமாகப் பரவி யாவரையும் அழிக்கையில், "மாயா வுலகப் போக்கு, கடவுள் லீலை'' எனவும், "பாபத்துக்குக் கூலி மரணம்'' எனவும், "பழிக்குப் பழி தீர்த்தல் நாகவழி'' எனவும் குழறிக் கொண்டிருப்போமாயின், நம்முடைய கதி அதோகதிதான்! அகச் சக்தியையும்—சுய நம்பிக்கையையும்—தற்பெருமையையும் குலைத்தழிக்கும் கல்விப் பயிற்சியையும்—நோக்கங்களையும்—ஆசார வுபசாரங்களையும் காலதாமதமின்றி அப்புறப் படுத்த வேண்டும். ராஜாங்கமும் நீதி ஸ்தலங்களும், நியாய விதிகளும் நம்முடைய இன்பத்திறகும் சிறப்பிற்கும் அவ்வப்போது நம்மவரால் ஆக்கப்பட்டு வருவனவாதலின், நமக்கு முரணாக அவர்கள் நடத்தப்படும் பொழுதும், நமக்குப் பிரதிகூலமான வழிகளில் நம்மைப் புகுத்தி அலைப்புறச் செய்யும் பொழுதும், அவைகளை நாம் உடனே தகர்த்துத் துகளாக்க வேண்டும். "பாம்பு ஒன்றை நாகம் என அறிந்தவுடன் அதனுடன் கூடிக் கொஞ்சுவா ருண்டோ?''





# விமலா

——:0:——

(V. கணேசன்)

ஏராளமான பொருட் செலவில் மிகவும் விஸ்தாரமாக புதிதாகக் கட்டப்பட்ட ஸெனட் மண்டபத்தில் கூட இடம் போதாத படி கூட்டம் குழுமி யிருந்தது. நாகரிகமாக உடையணிந்த கனவான்களும், மாணவ மாணவிகளும் மற்றும் பலரும் தம் தம் ஆசனத்தில் அமர்ந்திருந்தனர். உயரமாக அலங்கரிக்கப்பட்ட மேடையின் மீதுள்ள ஆசனத்தில் மாட்சிமை தங்கிய கவர்னர் தம் தேவியுடன் காட்சியளித்தார். சுவிப் பற்று உழைக்கும் எலக்ட்ரிக் விசிறியுடன் போட்டியாக கடல் காற்றும் உத்தரவின்றி உள்ளே புகுந்து வீசியது. வானமும் கார்மேகக் குடைவிரித்து இடி மேளம் வாசித்தது.

அன்று ராஜதானி ஆங்கில வியாசப் போட்டியில் முதலில் தேரியவருக்குப் பரிசளிக்கும் தினம். பஞ்சாயத்தார்கள் இருவருடைய வியாசங்களைச் சிறந்ததெனத் தேர்ந்தெடுத்திருந்தார்கள். ஒன்று பிரஸிடென்ஸி காலேஜ் மாணவரான ராகவனாலும், மற்றது குவீன் மேரீஸ் காலேஜ் மாணவியான விமலா தேவியாலும் வரையப்பட்டது. உண்மையில் பிந்திய வியாசம் ராகவனுடையதற்கு அடுத்தபடியாகவே கருதப்பட்டாலும், அதை எழுதியது ஒரு பெண்மணி என்ற காரணத்திற்காக அவளையும் முதற்பரிசுக் குடையவளாகச் செய்திருந்தனர்.

குறித்த நேரம் வந்தது. கவர்னர் தம் பிரசங்கத்தை முடித்து விட்டு தம் மனைவியைப் பரிசுகளை வழங்கக் கேட்டுக் கொண்டார். முதலில் விமலாவின் பெயர் கூப்பிடப்பட்டது. ஸ்திரீகளின் கூட்டத்தி னடுவில் சந்திரோதயம்போல் பிரகாசம் தோன்றிற்று. குழுமி யிருந்தோரின் கண்கள் அத்திசையை நோக்கின.

"கன்னங் கறுத்த குழல்
சின்னஞ் சிறுத்த இடை
அன்னம் பழித்த நடை
சொர்னம் பழித்த உடை,"

மெல்ல மேடைக்குச் சென்று கட்டிடம் இடிந்து விழுந்து விடும் போன்ற கரகோஷத்தி னிடையே கவர்னர் பெருமாட்டியின் கையில் ஜ்வலித்த மெடலையும் அத்தாட்சிப் பத்திரத்தையும் பெற்று கைகுலுக்கி விட்டு தன் னிடத்தில் சென்றுட்கார்ந்தாள் விமலா.

மற்ற யாவரும் களிப்புடன் ஆரவாரம் செய்து கைகொட்டும் இக் கூட்டத்திலும் இக் காட்சியைக் காணச் சகியாத உருவமும் ஒன்றிருந்தது. அது ராகவன் தான். விமலா விரும்பும் பொருள் எவரஸ்ட் சிகரத்திலிருந்தாலும் எப்பாடு பட்டாவது கொண்டுவந்து தருவதற்குத் தயாராகக் காத்திருக்கும் வாலிபர்கள் எவ்வளவோ பேர். அன்றொரு நாள் அவளைக் கடற்கரையில் பார்த்ததிலிருந்து அவள் பொருட்டு மிஸ்டர் ராகவனும் தன் உயிரையும் தியாகஞ் செய்யத் தயாரா யிருந்தான். ஆனால் அவ்வளவு பேர் மத்தியில் நியாயமாக அவன் அடைய வேண்டிய கௌரவத்தை ஒரு பெண் அடைவதென்றால் எந்த ஆடவனின் மனம் தான் குமுறாமலிருக்கும்? தான் மட்டும் அடைய அருகதையான பரிசுக்கு ஒரு பெண்மணியையும் பாதிப் பங்காளியாக்கி, அதிலும் அவளையே முதலில் கூப்பிட்டுக் கொடுப்பதென்றால்? பரமசிவன் போன்று விமலாவிற்குத் தன் உடலில் பாதியைக் கொடுக்கச் சித்தமாக இருந்த ராகவனுக்கு அவளுக்குத் தன் பரிசில் பாதியைக் கொடுக்க மனம் வரவில்லை.

அடுத்த விநாடி அவன் பெயர் கூப்பிடப்பட்டது. இரண்டு மூன்று தரமும் கூப்பிட்டார்கள். ராகவன் எழுந்திருக்க வில்லை. ஆசாமி ஆஜரில்லை யென்று பரிசுகள் அவன் காலேஜ் பிரின்சிபாலிடம் ஒப்புவிக்கப்பட்டன. கூட்டம் முடிந்து கலைந்தது. ராகவனின் கண்ணீர் போல் வருணனும் வருஷிக்க வாரம்பித்தான். வந்திருந்தோர் அனைவரும் வண்டியிலும் காரிலும் சென்று விட்டனர். ராகவனிடம் குடை கூட இல்லை. வெளியேயுள்ள தாழ்வாரத்தில் தன் விதியை நொந்து கொண்டு நின்றான். சற்று நேரத்திற் கெல்லாம் வானத்தில் தோன்ற வேண்டிய மின்னல் அவன் பக்கத்தில் மின்னிற்று. திரும்பிப் பார்க்கவே விமலா நின்றாள். வள்ளை யொத்த காதில் அணிந்திருந்த வைரங்களும், மார்பில் தொங்கிய மெடலும் மதிமுகக் காந்தியின் முன் சோபிதமாக ஜ்வலிக்க வில்லை. ராகவனைக் கண்ட அவள் ஆச்சர்யம் எதுவுமின்றி, "தங்களுக்கு ஆட்சேபம் இல்லையானால் என்னுடன் காரில் வந்தால் தங்கள் இல்லத்தில் விட்டுச் செல்வேன்" என்று குயிலினு மினிய குரலால் மொழிந்தாள். வேறு வழி யில்லாததாலும், சந்தர்ப்பத்தை நழுவவிட பிரியமில்லாததாலும் வந்தனம் என்று சொல்லி தலையசைத்து கார் வரவும் முன்னால் டிரைவருக்குப் பக்கத்தில் ஏறிக்கொண்டான். அவனது மனப்பான்மையை அறிந்துகொண்ட விமலா அவனுடன் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. ராகவனுக்கும் பேச நாவெழவில்லை. காரின் வேகத்தைவிட அதிகமாக அவன் மனதில் எண்ணங்கள் தோன்றி மறைந்தன. எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி எண்ணி ஏங்கி உட்கார்ந்திருந்தான்.

"ஹேரால்ட் ஆன்—பதினெட்டு, ப்ராடீஸ் ரோடு" என்று விமலா சொன்னவுடன்தான் பிரக்ஞை வந்தது. சட்டென்று கார் அவன் வீட்டு வாசலில் நின்றது. தன் விலாசம் எவ்விதம் அவளுக்கு தெரிந்தது என்ற ஆச்சரியத்திலும் ஏற்கனவே உள்ள மனக்குழப்பத்திலும் தான் கொண்டுவந்த நோட்டைக்கூட காரிலேயே விட்டுவிட்டு வந்தனம் என்று சொல்லி இறங்கிச் சென்றான் ராகவன்.

விமலா வீடு சேர்ந்ததும் டிரைவர் அந்த நோட்டை எடுத்துக் கொடுத்தான். அதைப் புரட்டினாள். அதன் அட்டையில் ஒரு அறை இருந்தது.

அதைப் பிரிக்கவும் அதனுள் ஒரு புகைப்படமிருக்கக் கண்டு வெளியில் எடுத்தாள். பார்த்தாள். திகைத்தாள். சிரித்தாள். அது அவளுடைய புகைப்படமே. நோட்டைத் தன்னிடமே வைத்துக்கொண்டாள்.

* * * *

சுந்தரேசய்யர் தஞ்சை ஜில்லாவில் பெரிய மிராசுதார். ஏராளமான நிலபுலன்களும் சொத்து முடையவர். அவர் தன் ஒரே பிள்ளையான ராகவனை ஆனர்ஸ் படிப்பிற்காக சென்னையில் விட்டிருந்தார்.

விமலாவின் தந்தை ஹைக்கோர்ட்டு ஜட்ஜ் வேதாசல மய்யரிடமிருந்து சுந்தரேசய்யருக்கு ஒரு கவர் வந்தது. அதில் விமலாவின் ஜாதகத்தையும் குறித்து, பெண்ணின் குணங்களையும் தெரிவித்து, தாம் செய்யவிருக்கும் சீரையும் எழுதி அவர் பிள்ளை ராகவனுக்குக் கலியாணம் செய்து கொள்ள சம்மதமாவென்றும் கேட்டிருந்தது. சுந்தரேசய்யர் அதைப் படித்து முடித்ததும் அவர் வீட்டில் பின்வரும் சம்பாஷணை நடந்தது.

ஐயர் சம்ஸாரம்:—ஆனர்ஸ் படித்த பெண் அடக்கமாக ஆத்துக்காரியம் செய்துகொண்டு அடங்கி நடக்குமா?

ஐயர்:—அதற்கு ஒரு சமயற்காரி, நாட்டுப்பெண்ணாக வரவேண்டும்.

அம்மாள்:—சிங்காரம் செய்துகொண்டு வீணையையும் பிடிலையும் வாசித்துக்கொண்டு உட்கார்ந்திருக்குமே ஒழிய எனக்குத் தள்ளாத காலத்தில் உதவுமா?

ஐயர்:—நான் ஒரு பட்டிக்காட்டு 'புரூட்'டைக் கட்டிக்கொண்டு அவதிப்படுவது போதாதா; ராகவனுக்காவது நல்ல நாகரீகமான பெண் வரட்டுமே.

அம்மாள்:—நான் சின்னவளாக இருந்தபொழுது எங்கப்பா, உனக்கு பாட்டுக்கு சில வழிக்கும் பணத்திற்கு ஒரு கிராமபோன் வாங்கினால் காதாரப் பாட்டுக் கேட்கலாமென்று சொல்லிவிட்ட படியால் எனக்குப் பாடத் தெரியவில்லை.

ஐயர்:—உன் மாமனார் கூடத்தான். இவனைப் படிக்கவைத்து சில வழிக்கும் பணத்தைக்கொண்டு எருமை மாடு வாங்கினால் ஏர் உழ உதவுமென்றார்.

இப்படியாக இவர்கள் பேசியபின்பு, பெரிய இடம்; நிறைய வரதக்ஷிணை என்ற காரணங்களுக்காக ஐயர் சம்மதித்தாலும் அம்மாளால் அது அப்பீலில் ஆமோதிக்கப்படவில்லை. அடுத்தமாதம் அம்மாவின் மனதுக்குப் பிடித்த பெண்ணை நிச்சயம்செய்து ராகவனுக்குத் தெரிவித்தார்கள். தனக்குச் சம்மதமில்லை என்று அவனிடமிருந்து பதில் வரவே, அவனுடைய அதிகப்பிரசங்கித்தனத்திற்காக ஆத்திரப்பட்டு, இனி தன் சொத்தில் ஒரு காசுகூட அவன் அடையமாட்டான் என்று கடிதம் எழுதிவிட்டார். அந்த விஷயம் விமலாவிற்குத் தெரிந்தது. மறுநாள் ஒரு ஆள் அவனுடைய காணமற்போன நோட்டைக் கொண்டுவந்து கொடுத்தான். அநேக நாளாகக் கிடைக்காத நோட்டைக் கண்டவுடன் அதில் வைத்திருந்த புகைப் படத்தைப் பார்க்க விரும்பிப் பிரித்தான். ஆனால் அங்கே புகைப்படத்திற்குப் பதில் பதினாயிரம் ரூபாய் நோட்டு மட்டும் இருந்தது. அந்தப் படம்

கேவலம் பதினாயிரம் ரூபாய்தானா பெறும்? என்று பெருமூச்சு விட்டான். மறுவிநாடி தந்தையால் துறக்கப்பட்ட அவனுக்கு அந்தப் பதினாயிரம் செய்யும் பிரயோசனத்தை அறிந்தான்.

ஆனர்ஸில் முதலில் தேரிய ராகவன் அடுத்தவருஷம் ஐ. ஸி. எஸ். படிக்க சீமைக்குச் செல்லப் பிரயாணமானான். அதற்கு முதல் நாள் விமலாவைக் கடற்கரையில் சந்தித்தபொழுது விஷயத்தைத் தெரிவித்தான். "சீமையில் இருக்குமளவும் என் ஞாபகமாக இந்தப் படத்தை எடுத்துச் செல்லும்" என்று ஒரு புகைப்படத்தை ராகவனிடம் கொடுத்தாள். அவன் புகைப்படத்தினடியிலுள்ள தன் கையெழுத்திலிருந்து அது தன் நோட்டிலிருந்த படமென்று தெரிந்து கொண்டான்.

சுந்தரேசய்யரிடமிருந்து பதில் வராததால் வேதாசலமையர் தம் பெண்ணுக்கு வேறு இடத்தில் வரன் நிச்சயம் செய்தார். விஷயமறிந்த விமலா தாங்கவொணுத் துக்கத்தில் ஆழ்ந்தாள். தனக்கு விருப்பமில்லாததையும் தெரிவித்தும் பார்த்தாள். கர்நாடக சம்பிரதாயத்தில் நம்பிக்கையுடைய வேதாசலமையர் காதில் விமலாவின் வார்த்தைகள் விழவில்லை. விமலாவிற்கு வயதாகி விட்டபடியால் இனியும் கலியாணம் செய்யாமலிருப்பது பந்துக்களின் பழிப்புக்கு இடமாக நேரிடுமென்று பயந்து பிடிவாதமாகக் கலியாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார்.

கலியாண நாள் வந்தது. மாப்பிள்ளை வீட்டாரும் பந்து ஜனங்களும் வந்து சேர்ந்தனர். பொற்குடத்திற்குப் பொட்டிட்டது போல விமலாவிற்கு விலையுயர்ந்த ஆடையாபரணங்களால் சிங்காரம் செய்திருந்தார்கள். செயற்கை சோடனையில் விமலாவின் எழில் வதனத்தில் இயற்கையாக இலங்கும் பிரகாசமும் புன்னகையும் எங்கோ மறைந்து போயின. முகூர்த்த நாழிகை வந்தது. பெண்ணைக் கூப்பிட்டார்கள். அந்தோ? விமலா மணக்கோலத்திலா இருந்தாள்? ரணக் கோலத்தில் விளங்கினாள். புதுப் புடவைக்கும் அக்னி பகவானுக்கும் உள்ள நெருங்கிய உறவைக் கொண்டாடத் தருணம் இதுவோ! குத்து விளக்கு ஜ்வாலையும் சேலையின் சரிகைத் தலைப்பும் கைகுலுக்க சமயம் வேறில்லையா? விமலாவின் உடம்பு முழுவதும் வெந்துபோய் விட்டதால் வாஸிலேன் தடவப்பட்டிருந்தது. முகத்திலும் கைகளிலும் கட்டுப் போடப்பட்டிருந்தன. எரிச்சல் தாங்கவில்லையே என்றலறிக்கொண்டே படுக்கையில் புரண்டாள். எவ்வளவு பன்னீரைத் தெளித்தும், எலக்ட்ரிக் விசிறிகள் எவ்வளவு வேகமாகச் சுழன்றும், எரிச்சல் தணியவில்லை. ஆடைகள் அலங்கோலமாக இருந்தபடியால் ஒன்றிரண்டு தாதிகளைத் தவிர வேறு யாரையும் உள்ளே அனுமதிக்கவில்லை. விமலாவை வேகச் செய்த தீ விஷயம் காட்டுத் தீ போல் ஊர் முழுவதும் பரவியது. மணவாழ்த்துகளுக்குப் பதில் அனுதாபத் தந்திகள் வந்து குவிந்தன.

விமலாவின் விபத்தை யறிந்த மாப்பிள்ளை வீட்டார் நல்ல காலமாக, இந்த சம்பவம், மணமானபின்பு ஏற்படாமல் போனதைக் குறித்து மனமகிழ்ந்து வரதக்ஷிணைத் தொகையை திருப்பிக் கொடுத்துவிட்டு ஊர்போய்ச் சேர்ந்தனர். வேதாசலமையர் எவ்வளவு சொல்லிப் பார்த்தும் நெருப்பில் வெந்து கருத்த விமலாவை மணந்துகொள்ள அவர்கள் சம்மதிக்கவில்லை. இவர்கள் நடத்தை வேதாசலமையருக்குப் புத்தி புகட்டியது. கேவல மனப்

பான்மை வாய்ந்த காமஇச்சை கொண்ட ஈனர்களிடம் தனதருமை விமலாவை விட சம்மதித்த தன்னைத் தானே நொந்து கொண்டார். ஈஸ்வர கிருபையால் இதே சம்பவம் மணமுடிந்த பின் நிகழாததற்காக அகில ஜீவாதாரனைப் போற்றினார். அவ்விதம் நேரிட்டிருக்குமாகில் விமலாவின் வாழ்வு எவ்விதமாகும்? கணவனால் வெறுக்கப்பட்ட காரிகையின் கதியைக் கண்கொண்டு காணச் சகிக்குமோ! உண்மைக் காதலின் உயர்வை உணர்ந்தார். உடனே தன் பிரிய குமாரியிடம் மன்னிப்புக் கேட்பதற்காக, காற்று வசதிக்காக கடற்கரையோர பங்களாவில் விடப்பட்டிருந்த விமலாவைக் காண காரில் விரைந்தேகினார்.

ஹாலுக்குள் நுழைந்த வேதாசலமய்யரால் தம் கண்களையே நம்ப முடியவில்லை. தாம் காண்பது கனவா, நினைவா? அவரை அவ்விதம் திக்பிரமையடையச் செய்த காட்சிதான் என்ன?

அங்கொரு சாய்வு நாற்காலியில் ஒய்யாரமாக சாய்ந்துகொண்டு பிரசண்ட விகடனைப் படித்துக் கொண்டிருந்தாள் விமலா. முன்னிலும் பதின்மடங்கு வசீகரம் அவள் பங்கஜ வதனத்தில் திகழ்ந்தது. நெருப்புச் சுட்ட புண் என்ன வாயிற்று? கட்டுப் போடப்பட்டிருந்த கைகள் காமன் சரம் போல் ஜ்வலிப்பதெங்ஙனம்? தந்தை வந்ததை யறிந்த விமலா எழுந்து வரவேற்றாள். அவர் தன்னைக் கண்டு திகைப்பதைப் பார்த்து பின் வருமாறு மொழிந்தாள்.

"நீங்கள் எனக்கு ஏற்படுத்திய மணமகனின் மனப்பான்மையை உங்களுக்குத் தெரியும்படி செய்வதற்காகவே நானும், தோழி கமலாவும் சேர்ந்து இச் சூழ்ச்சி செய்தோம். உண்மையில் என்னை அன்று தகித்தது காதல் தீயே தவிர நெருப்புத்தீ அல்ல. தங்களுக்கு உண்டாக்கிய பொருட்செலவையும் சிரமங்களையும் மறந்து மன்னிக்க வேண்டுகிறேன்."

மன்னிப்புக் கேட்கச் சென்ற இடத்தில் மன்னிக்குமாறு ஏற்பட்டதை அறிந்த வேதாசலமய்யர் தன் அருமைப் புதல்வியை ஆர்வத்துடன் அணைத்து ஆசீர்வதித்தார்.

சில மாதங்கள் (விமலாவிற்கு சில யுகங்கள்) சென்ற பின்பு ராகவன் ஐ. சி. எஸ். பாஸ் செய்து விட்டு சென்னை வந்து சேர்ந்தான். சின்னாளில் தஞ்சை ஜில்லா கலெக்டராக நியமிக்கப்பட்டான். மிஸ்டர் ராகவன் எம். ஏ. ஐ. சி. எஸ். என்பவர் கலெக்டராக வந்திருக்கிறார் என்றறிந்த சுந்தரேசய்யர் தன் பிள்ளையைப் பற்றி எண்ண வாரம்பித்தார்.

"நாமும் பணம் அனுப்பி நம் ராகவனைப் படிக்க வைத்திருந்தால் இப்போது நான் கலெக்டருடைய தகப்பனாக இருக்கலா மல்லவா? நம் ராகவன் எந்த கிளப்பில் வேலை செய்கிறானோ அல்லது தற்கொலை செய்து கொண்டு விட்டானோ? பணமனுப்பமாட்டேன் என்று பயமுறுத்தினாலாவது என் சொல்படி நடப்பான் என்று எண்ண, விபரீதமாக வன்றோ முடிந்து விட்டது?"

ஜில்லா கலெக்டர் தலைமையின் கீழ் தஞ்சை ஜில்லா மிராசுதார்கள் மகா நாடு நடைபெற்றது. பெரிய மிராசுதார் என்ற ஹோதாவில் சுந்தரேசய்யரும் ஜரிகைத் தலைப்பாகையுடன் வந்திருந்தார். மிராசுதார்களுடன் கை குலுக்கிக் கொண்டே கலெக்டர் மேடைக்குச் சென்றார். சுந்தரேசய்யர்

கலெக்டரைப் பார்த்தார். கலெக்டர் சுந்தரேசய்யரைப் பார்த்தார். ஒருவர் முகத்தை யொருவர் பார்த்துக் கொண்டே கோத்த கையை விடவில்லை. கலெக்டர் என்ற ஹோதாவில் ராகவன் உடனே தன்னிடத்திற்குச் சென்று அமர்ந்தான்.

கூட்டம் கலைந்தது. தந்தையையும் தன்னுடன் காரில் ஏற்றிக் கொண்டு பங்களாவிற்குச் சென்றார். சுந்தரேசய்யர் முகத்தில் துக்கம், வெட்கம், சந்தோஷம் எல்லாம் தாண்டவமாடின. விமலா பொருளுதவி செய்ததை யும் மற்ற சமாசாரங்களையும் ராகவன் சொன்னான். ஜட்ஜ் வேதாசலமய்யர் என்றவுடன் சுந்தரேசய்யருக்குப் பழைய சம்பவம் நினைவிற்கு வந்தது.

"என்மேல் குற்றம் ஏதொன்று மில்லை. நான் சம்மதித்ததற்கு உன் அம்மாதான் அப்படி, இப்படி என்று ஆட்டமாக ஆடினாள். உனக்குப் பிடிக் காத அந்த சம்பந்தம் தான் வேண்டு மென்று ஒற்றைக் காலால் நின்றாள்!" என்றார்.

அடுத்த தை மாதத்தில் ஸ்ரீமதி விமலாதேவி பீ. ஏ. (ஆனர்ஸுக்கும்) மிஸ்டர் ராகன் எம். ஏ. ஐ. சி. எஸ்ஸுக்கும் விவாகம் வெகு சிறப்பாக நடந்தது.

அன்று ஸெனட் ஹாலில் முதலில் பரிசு பெற்றதற்காகப் பொறாமைப் பட்ட ராகவன் இப்பொழுது எங்கு சென்றாலும், போக்கிரிக்கு முதல் தாம்பூலம் என்பது போல முதல் மரியாதையோ, ரோஜா மாலையோ கலெக்டரின் மனைவிக்குக் கிடைப்பதைப் பற்றி ஆனந்த மடைகிறானே யொழிய ஆத்திரப் படுவதில்லை. எந்த உபசாரங்களுக்குப் பதில் அளிக்கை யிலும் கூட 'எனது மனைவிடம் நானும்' என்று சொல்லத் தவறுவதில்லை. "சீக்கிரமேவ புத்ர ப்ராப்தி ரஸ்து."

---

# பெண்மை யரசு

(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)



"ஆளுமே பெண்மை அரசு" எனப் பெண்மைக்கு ஓர் உயரிய அரச பீடம் தந்தார் ஒப்பில் புலமைப் புகழேந்தியார். இப் புலவர்பெருமான் தனது சீரிய கருத்தைத் தமயந்தி வாயிலாகச் செப்பஞ் செய்தார். பெண் பிறவியைப் புண்பிறவியாகப் படிப்போர் எண்ணத்திற் படியும்படி இழித்திழித்துக் கூறிச் சென்ற பாவாணர்கள் சிலரோ பலரோ இருந்த துண்மை. தீஞ்சுவைப்பாலைப் பருகல் கூடாதெனச் சுவை யடக்கம் புலனடக்கம் செய்யும் உண்மை விரதியர் மேற்கொள்வது சிறப்பே. அதற்காக அப்பரிசுத்தமான பாலை கொல்லும் விடமென்றும் குமட்டும் எண்ணையென்றும் கைப்புமிக்க எட்டியென்றும் இகழ்ந்து நிந்திப்பது எங்ஙனம் நீதியாகும்? இதற்குப் புல்லறிவாளரை நல்வழிப்படுத்தவே அறிஞர் அவ்வண்ணம் வெறுப்புணர்ச்சி தோன்றப் புகன்றிருக்கலாம் எனச் சிலர் சமாதானமும் கூற முற்படுகின்றனர். இஃதெங்ஙனம் அறமாகும் என்பதை விவேகிகளே சிந்திப்பது கடமை. திராக்ஷையை வேப்பங்கனி என்று ஏமாற்றுவதானால் அதனை நம்பிக் கைவிடுவோர் இருப்பரோ என்பதை விவரிக்க வேண்டுவதில்லை. ஆனால் இந்தக் குருட்டு யுக்தி நமது புகழேந்திப்பெருமானுக்குப் பிடிக்கவில்லை. ஆதல் பற்றியே—

"நாற்குணமும் நாற்படையா ஐம்புலனு நல்லமைச்சா
ஆர்க்கும் சிலம்பே அணிமுரசா—வேற்படையும்
வாளுமே கண்ணா வதனமதிக் குடைக்கீழ்
ஆளுமே பெண்மை யரசு."

என்ற வெண்பாவை அழகுபெற அமைத்தருளினார்.

அரியாதனத் தமரும் அரசருக்கு இரதம் கஜம் துரகம் பதாதி எனப் பண்டைக்காலப் படைகள் நான்கு வேண்டும். ஈண்டு பெண்மையரசுக்கும் நாண், மடம், அச்சம், பயிர்ப்பு என நான்குவித சேனைகள் உண்டு. ஆண்டு ஆலோசனை கூறும் மந்திரிமார் அரசருக்கு அமைந்திருப்பதுபோல, பெண்மை யரசுக்கு சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் (சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்தம்) என்னும் ஐந்து புலன்களும் நன்மந்திரிகளாக அமைந்து நிலவுகின்றன. அரசு வாழ்வுக் கறிகுறியாக முரசவாத்தியம் ஒலிப்பது போலப் பெண்ணரசு வாழ்வுக்கு மங்கல அறிகுறியாகக் காற்சிலம்பு இன்னிசை யளிக்கின்றது. இனி அரசர்க்கு வேற்படையும் வாளாயுதமும் உடனிருப்பதுபோலப் பெண்மை யரசுக்கு இரண்டு கருவிழிகளும் மிளிர்கின்றனவென உருவகப்படுத்தி யுள்ளார்.

சாதாரணமாக அரசருக்கு அமைச்சராவோர்களில் காலவசமாகத் துன்மதியாளரும் இருத்தல் கூடும். அவ்வாறே பெண்மையரசுக்கும் அமைச்சராக அமைந்த ஐம்புலன்களிலும் தீமைகளில் ஈர்த்துச் செல்லும் ஈடுபாடும் இருக்கலாம். அவ்விதம் தவறு செய்யின் அச் செயல் பெண்மையரசினைக் கட்டாயம் வீழ்த்தும். அதுகுறித்தே புலவர் பெருமான் நல் அமைச்சாக விளங்கவேண்டுமென மறவாது பொறித்தருளினர். நல்ல அமைச்சாக ஐம்புலன்களும் தொழில் புரியும் வரையில் பெண்மை யரசு வீடுடையதாகி நிற்கும். அதை யசைக்கவோ, பறிக்கவோ எந்த ஆண் அரசுகளாலும் முடியாது. இது பற்றியே,

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மை யுண்டாகப் பெறின்."

எனப் பொய்யாமொழிப் புலவர் வியந்து கூறினர்.

நல்லமைச்சர்களைக் கொண்டும் நாற்படைகளைக் கொண்டும் காக்கப் படுவது அந்தக் கற்புச் செல்வமே யாகும். அத்தகைய செல்வம் உறுதியாக விருக்குமாகில் பெண்மையிலும் சிறந்த பெருந்தகுதி எதற்குண்டு? என வியந்து கூறுகிறார் வள்ளுவரும். மனித சக்திக்கு மேற்பட்ட தெய்வ சக்தியுள்ளவராக மகளிரை மாற்றுவது அசையாத கற்பே யாகும். சந்திராங்கதராஜனுடைய மனைவி சீமந்தனி பெண்வேடம் புனைந்து தன்னை ஏமாற்றவந்த வாலிபனைப் பெண்ணாகவே ஆகும்படி மனோபாவனையினால் மாற்றினர். பொழுதே புலரா திருக்கும்படி செய்தார் ஒரு கற்புக்கடவுள். முத்தொழில் புரியும் மூவர்களையும் தொட்டிற் குழந்தைக ளாக்கினர் ஒரு மாதரசி. கொழுந்து விட்டெரியும் செழுங்கனலைத் தாமரை ஓடையாக்கினர் ஒப்பில்லாக் கற்பினுக் கணியாய சீதாபிராட்டியார். தன்னைத் தவறு நினைத்த வேடனை நீறாக்கினர் தமயந்திதேவியார்.

பெண்மையரசுக்கு அரியாதனமளித்த பெரும்புலவர், வேற்படையும் வாளுமே கண்களென வருணித்த நாவலர், தான் கூறியதற்கேற்பப் பின்னர் நளவெண்பாவில்,

"சீறு விழித்தாள் சிலைவேட னவ்வளவில்
நீறாய் விழுந்தா னிலத்து."

எனப் பொருத்தமுறக் கூறினர். தவறு செய்தோரைக் கடியவே வாளும் வேலும் வடிக்கப்படுகின்றனவாகலின் அவ்வழியில் கையாளப்பட்ட தமயந்தியின் கண்களை அவ்வாளும் வேலும் என முதலில் போற்றியது தோற்றத்தால் மட்டில் அல்லாமல் தொழிலாலும் என்று உய்த்துணரவேண்டும்.

இனி, நாணம் இருபாலார்க்கும் பொதுவான குணம். ஆயினும், ஆண்மகன் தனது கீர்த்திக்கு இழுக்கு நேருங்கால் இயல்பாக நாணுற்று வருந்துதல் இயல்பு. பெண்மகள் தனதியற்கையான அழகினைப் பிறர் சிறிது நோக்கவோ கருதவோ நேருமாயின் நாணுழந்து வருந்துவள். பிறர் எவரும் காணத் தன்னை ஒப்பனை செய்துகொள்ளச் சிறிதும் ஒருப்படாள். இதனை வற்புறுத்த வேண்டியே விவாக காலத்தில் மணப்பெண்ணை அருந்ததியை நோக்கும்படி இன்றும் கூறி வருகின்றனர் பழமை பாராட்டுவோர்.

அருந்ததி தன்னைப் பிற ஆடவர் நோக்கிற் படாமலிருக்க வரம் பெற்றதனால் அவருக்கு இத்தகைய அரும் சிறப்பு நிலைத்தது. இது ஆடவரின் அடக்குமுறையால் ஏற்படுவதன்று. பெண்மையின் உண்மையான உயர் குணமேயாகும், இதற்கு,

"அங்கம் புறந்தோன்ற ஆடைபுனைந் தேதிலர்முன்
சங்கையற நிற்கும் சழக்கியரை—மங்கலமாம்
முன்தானை வீசு முகடியரைச் சேராளே
மென்றாமரை வாழு மின்."

என்ற வெண்பா பொருத்த முடையதே. பெண்மையைக் காக்கும் படைகளுள் முதற்படை உள்ளத்தினின்றும் பிரிக்க முடியாத நாணந்தான்.

இத்தகைய நாணம் உரிய கணவர்மாட்டும் காவல் புரியவல்லது என்பதைப் புகழேந்தியாரே சுயம்வர மொன்றை மீட்டும் உத்தேசித்ததாக அந்தணன் அயோத்தி வேந்தனுடைய அரசவையிற் கூறியது கேட்ட நளன்,

"குறையாத கற்பினாள் கொண்டானுக் கல்லால்."

என்று கூறி வைத்தார். நாணம் என்பது கொண்டானிடமும் குறைந்தே நிற்குமென்பது உய்த்துணரத் தகும். நாண முதலிய நாற்குணங்களும் மறைந்தொழியின் அப்பெண் இறந்தவளுக்கே சமானம். தமயந்தியோ உயரிய உத்தமகுண வனிதை ஆதலினால் "இறவாத ஏந்திழையாள்" எனத் தொடர்ந்தும் கூறினார். பொதுவாக ஆடவர் உரிய மனைவிபால் நாணுவார். அப்படி நாணுதல் அவர்க்குச் சிறப்பாகாது. பெண்களோ உரிய கணவரிடமும் நாணுறுவர். இது இவர்கட்கு இயற்கைச் சிறப்பே யாகும். இதனை வலியுறுத்தவே ஔவையார் 'முட்டவே—கூசிநில்லாத குலக்கொடியும் கூசுகின்ற வேசியும் கெட்டு விடும்' எனச் சுட்டிக்காட்டினார்.

இனி, மடம் எனப்படுவது மகளிர்க்குரிய நாற்குணங்களுள் இரண்டாவதாக வகுத்துள்ளார். மடம் என்பதற்கு அறியாமை எனப் பொதுவாகப் பொருள் கொள்கின்றனர். ஆனால் மடமை என்பதற்கே அறியாமை என்பது பொருள் படுமல்லது மடம் என்பதற் காகாது. ஈண்டு மகளிர் குணங்களி லொன்றாகிய மடம் என்பதற்கு அறிந்தும் அறியாதவர்போல் ஒழுகுதல் என்பதே நேரிய பொருளாகும். பெண்கள் தெரிந்த ஒரு விஷயத்தைக்கூட அவசரப்பட்டு வெளியிட முற்படுவது சிறிதும் அழகன்று; உசிதமாகவு மிராது. கம்பநாடர் இந்தப் பேதமைக்குணம் பெண்மைக்கு எத்தகைய பெருமையை அளிக்கின்ற தென்பதைப் பிராட்டியார் அநுமனிடம் கூறிய கூற்றாக ஒரு கவியில் அமைத்து வைத்தார். அதாவது, அநுமன் அரக்கியர் இடையில் துன்புற்று மெலிந்து சோர்வுறும் அன்னையைக்கண்டு மனம் தாளாமல், "நீர் இந்த நிலைமையி லிருக்கக் கண்டு நான் வாளா திரும்புதல் அடாது. எனது மிருதுவான மயிர்கள் அடர்ந்த தோளின்மீது ஏறுவீராயின் ஒரே கணத்தில் இராமபிரான் இருக்கும் மலையில் கொண்டு சேர்ப்பேன். இந்தப் புனிதமான தொண்டினை யான்

செய்து தலைவனை வணங்குவேன்" எனக் கோருகிறார். அதற்குப் பிராட்டியார் யாது கூறுகிறார்.

"அரிய தன்றுநின் ஆற்றலுக் கேற்றதே
தெரிய வெண்ணினை செய்யவும் செய்தியே
உரிய தன்றென ஓர்கின்ற துண்டதென்
பெரிய பேதமைச் சின்மதிப் பெண்மையால்."

என்பதே. உண்மையில் அந்நிய ஆடவர் ஸ்பரிசம் பெண்களுக்குக் கூடாதென்பது தர்மம். அதனை எண்வகைப் புணர்ச்சிகளில் ஒன்றெனவும் கூறியுள்ளார் அறநூல் வகுத்தோர். இராவணனோ தனக்கிணங்காவிடில் பாகசாலையிற் கொன்று சமைப்பித்து உணவாகவாவது உண்டு திருப்தி யடைவேன் என்று வீரம் பேசுகிறான். அந்நிலையில் பிராட்டியார் சிறையினின்றும் தப்ப எண்ணுவதை முக்கியமாக எண்ணவில்லை. அதைவிட, பரபுருஷ ஸ்பரிசத்தைத் தவிர்ப்பதையே முக்கியமாகக் கருதுகிறார். 'இக் கருத்தை ஆண்பா லினத்தவனாகிய நீ பேதமை யெனவே எண்ணுவாய். அது உண்மையாயினும் அத்தகைய பெரிய பேதமைச் சின்மதி எனது பெண்பிறவிக் குரியதே யாகும். அதினின்றும் நான் வழுவ முடியாது; நாற் குணங்களைத் தளரவிடாது பேணுதல் எனது கடமை' என விடை கூறுகின்றனர்.

"ஏறு சேவகன் மேனியல்லா விடை
ஆறும் ஐம்பொறி நின்னையும் ஆணெனக்
கூறு மிவ்வுருத் தீண்டுதல் கூடுமோ"

என்ற செய்யுளால் விளக்கியும் கூறுகின்றார். இந்த இடத்தில் உண்மைத் தூதுவனும் உயிர்தந்த உதவியாளனுமாகிய புதல்வன் அனைய அநுமனைத் தீண்டுதலும் மகளிர் அறத்திற் கொவ்வாத தென்னும் காரணத்தை முதலிலேயே கூறியிருந்தால் அநுமன் மனம் கெடும் அல்லது வருந்தும். ஆதலின் அது கூடா தென்று கருதியே ஜானகியார் ஏதோ என் பேதைமதியில் நீ சொல்லும் யோசனையை ஏற்பது உரியதன்றென எனக்குத் தோன்றுகிறது எனக் காரணம் அறியாதவர் போலப் பேசுகிறார். இவ்வாறு காரணம் அறிந்திருந்தும் அறியாதவர் போல மறைத்துப் பேசுவதற்கே 'மடம்' என்று பெயர். இதனை, இதை விட அழகாக ஔவையார் 'பேதமை யென்பது மாதர்க்கணிகலம்' என்றருளினர். அதாவது பேதமை யென்பது மகளிரை அழகு பெருகச் செய்யும் ஆபாணங்களைப் போல்வது என்று போற்றுகிறார். மடம் என்னும் குணம் இல்லாத பெண் மங்கல அணியற்றவளே என்பது குறிப்பு. மகளிருக்கு அறியும் சக்தியே இல்லை யென்பது ஔவையாருக்கு உடன்பாடாயின், பேதமை யென்பது மாதர்க்கு அவயவம் என்று கூறி யிருத்தல் வேண்டும். அவயவங்கள் உடம்பினின்றும் பிரிக்க முடியாதவை; உடன் தோன்றியவை. அணிகலமோ, அவசியம் ஏற்பட்டபோது அணியவும் அஃதில்லாதபோது தவிர்க்கவும் கூடியவைகள். சமயம் நோக்கிப் பேதமை யுள்ளதாக நடிப்பதே பெண்மைக் குரிய குணமாகலின் பேதமை யென்பது மாதர்க் கணிகலம் என்றருளினர் என்பது அறிந்து அநுபவிக்கத்தக்கது.

கற்புச் சட்டத்தைப் பாதுகாக்கவே இம் மடம் என்னும் குணமும் தொழிற் படுவதால் நாற்படைகளில் மடம் ஒன்றெனப் போற்றுகிறார் புலவர் பெருமான். இந்த நளவெண்பாவில் நளன் கதாநாயகியாகிய தமயந்தி பால் தேவர்கள் வேண்டியபடி எவரும் காண முடியாத அஞ்சன உதவி கொண்டு தூது செல்கின்றான். தமயந்தி தன் முன் வந்து நிற்பவன் தான் மாலையிட விரும்பிய நளனே என்றுணர்கின்றாள். உணர்ந்தும் அதனை மறைத்து ஏதும் அறியாதவள் போல் கம்பீரத்துடன் அவனை நோக்கித் தன் கற்புக் கிழுக்கு வாராமல் காதற்குருகிப் பீடழியாமல்,

''காவல்கடந் தெங்கள் கன்னிமாடம் புகுந்தாய்
யாவனோ விஞ்சைக் கிறைவனோ—தேவனோ
உள்ளவா சொல்லென்றாள் ஊசற் குழைமீது
வெள்ளவாள் நீர்சோர விட்டு.''

எனப் பெண்கள் சூழலில் தனிமையில் பிரவேசித்த குற்றத்தையும் சாட்டி வீரமாக வினவியதாகப் பொறித் திருப்பது பெண்மைக்கே பெருஞ் சிறப் பளிப்பதாகும். 'அன்னம் கூறிய நளமகா ராஜன் நீவிர் தானோ? வந்ததில் மகிழ்வே. பிறரறிதல் பிழையாகும்' என அக் கன்னிகை கூறி யிருந்தால் அது எவ்வளவு சுவையற்றதாக விருக்கும் என்பதைக் கூறாமலே உணர லாம்.

இனி அச்சம் என்பது மூன்றாவது படையாகும். ஆண் மகன் அச்சம் காரணத்தோடு கூடியது. பெண் மகள் அச்சம் போதிய காரணம் இல் லாதது. ஆண்மகன் உடல், பொருள், ஆவி ஆகிய மூன்றினில் ஒன்றிற்கா வது தீங்கு நிகழலாம் என எண்ணுவதால் விளைவது. மகளிர் அச்சம் பெரும்பாலும் உள்ள நிறைக்கு ஊறு நேருமோ என்னும் ஐயம் நேர்ந்துழி நிகழ்வது. அதற்குப் போதிய ஆதாரம் இல்லா விடினும் சொற்ப காரணம் கொண்டே முகிழ்ப்பது. சிறு வயதில் எங்கோ ஓரிடத்தில் பேய் உலவுவ தாகப் பிறர் சொல்லக் கேட்டால் பிறகு எத்தனை வருடங்கள் சென்றாலும் அதை மறக்க மாட்டார்கள். அது பற்றியே பெண்களைப் பேய் பிடிப்ப தும். இவ்வித அச்சம் அவிவேகத்தால் எழுவதன்று. பெண்மைக்கு இயல் பான குணமாகும். இவ்வித அச்சம் அமையப் பெறாத பெண்களே தனி வழிப் பிரயாணம் செய்து கேவலமான நிலைமையில், மானம் அழியும் தன் மையில், பலப்பல ஆபத்துகளுக் குள்ளாய் வருகின்றனர் என்பதை பத்திரி கைச் செய்தி படிப்போர்க்கு நினைவூட்ட வேண்டுவதில்லை. இதற்காகப் பெண்களுக்கு எப்போதும் சுயேச்சையாய் வெளிக்கிளம்ப முற்கால அறி ஞர் அநுமதிக்க வில்லை. பிதா, கணவன், மைந்தர் இவர்களின் துணைவலி கட்டாயம் இன்றியமையாதது எனக் கருதினர். இதனைத் தற்கால யுவர் கள் முற்கால அறிஞர் பெண்களுக்குச் சுதந்தரமே கொடாமல் அடக்கி ஒடுக்கி யாண்டதாகப் பழி சுமத்துகின்றனர். வீட்டுக்குள் எல்லாக் காரி யங்களிலும் பூரண சுதந்தரம் பெண்களுக்கு அந்நாளில் இருந்த தென் பதை வேத காலத்திய ஆராய்ச்சியாளர் உணர்வர். நமது லோகமான்னிய பாலகங்காதர திலகருக்கும் பெண்கள் வெளியேறி எந்தப் போராட்டத் திலும் கலப்பதில் உடன்பாடில்லை. காரணம் பெண்கள் துன்மார்க்கர்க ளால் ஒரு சமயம் அவமதிக்கவும் படலாம். அதற்கு தமது கற்பிற் சிறந்த

பாரத புத்திரிகளை உள்ளாக்குதல் கூடாதென்பதேயன்றி வேறில்லை. இதனை நிலை நிறுத்தவே ஔவையார் 'நிலையிற் பிரியேல்' எனப் பெண்மையின் தற்காப்பு நோக்கியே பொறித்தனர் எனக் கோடல் வேண்டும். பொதுவாகப் பெண்களை வருணிப்போர்கள் எல்லாம் இயல்பாகவே மருண்ட பார்வையை யுடைய மான்களையே உவமிப்பர். பெண்களின் கண்களுக்கு அழகு தருவது அதில் இயற்கையாகக் காணப்படும் மருட்சியேயாகும். ஆகையினால் அச்சமே பெண்மையைப் பெருமையுறக் காவல் புரியும் பீடுடைய ஆயுதமெனக் கூறுதல் பொருந்தும். இனிப் பயிர்ப்பு என்பது உடலின் உணர்ச்சியைக் குறிப்பது. மகளிர் உடலுக்குத் தம் மேற்படும் கரம் ஆடவனுடையது, பெண்ணினுடையது என கண் கொண்டு காண முடியாத காரிருளிலும் உணரும் சக்தி யுண்டு. ஆடவரிலும் உரிய புருடன் பரபுருடன் என்னும் பாகு பாட்டைக் கூர்ந்து தெளிதல் அரிதன்றென்பது நூலோர் துணிபு. அவ் வுணர்ச்சியற்ற பெண் பெண் தன்மை வாய்ந்தவளல்லள். இதற்குச் சான்றாகக் கம்பர் கைகேசி மந்தரை தன் பாதங்களைப் படுக்கையில் வருடித் துயிலுணர்த்தி தன் கருத்தை வெளியிட எண்ணியதாகக் கூறுமிடத்தில்,

> "தீண்டலு முணர்ந்த அத்தெய்வக் கற்பினாள்
> நீண்டகண் அனந்தரும் நீங்க கற்றிலள்"

பட்ட மகிஷியான கைகேசி தன்னைத் தீண்டியவள் தாதியான மந்தரையென பரிசத்தால் உணர்ந்து கொண்டாள். அதனாலேயே திடுக்கிடாமலும், கண்களை விழிபாமலும் இருந்தாள் என்று கூறிய கவியரசர் தீண்டலும் தீண்டியவர் இன்னாரென் றுணரும் கூர்மை தெய்வக் கற்புடையவர்க்கே இயல்பென உணரவைத்தார். இதையே பயிர்ப்பு என்று கோடல் தகும். இதுவும் கற்பைக் காக்கும் சாதனமாதலினால் நாற்படையிலொன்றாயிற்று. இந்த சைனியங்களின் உதவியால் கற்புக் கோட்டையை அரண் செய்த நெறி பிறழாத ஐங்குண அமைச்சர்களுடன் வதனமாகிய மதிக் குடையின் கீழ் இருந்து அரசு செலுத்துவதாகக் கூறுகிறார்.

முகத்தை மதிக்கொப்பெனக் கவிஞர் கூறுவதால் அம் மரபு பற்றி மட்டில் மதிக்குடை யென்று கூறவில்லை. புத்திக் கிருப்பிடம் நுதல்; அதுவும் தண்மையும் இன்பமும் தருவது. இவ் விரண்டையும் நல்லாற்றில் ஈடுபடுவதால் பெறலாம். பெண்மை யரசுக்கு பரபரப்பில் ஈடுபடாத சாந்தம் வேண்டும். தெளிந்த அறிவாகிய மதிக்குடையின் கீழ் உத்தம குணப் பெண்கள் கடனாற்றல் வேண்டு மென்பது குறிப்பாலுணர்த்தப்பட்டது. பிறர் தூண்டுதலால் பேதுறுதல் உத்தமப் பெண்களிடம் கனவிலும் காண முடியாது. பெண் என்னும் பெயருக்கு அத்தகைய மாதரசிகளே உரியவர்கள். அவ்விதத் தகுதியற்றவர்கள் பேய்க்குலமேயாவர்.



# விடுதலைப் பாட்டு



(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

கல்வி, அரசியல், பொருளாதாரம், நாகரீகம், நிர்வாகமுறை, போன்ற பல அம்சங்களிலும், வெகுதூரம் முன்னேறி தலை சிறந்து விளங்கியது நம் பாரத வர்ஷம் என்று நம்மில் பலரும் பழங்கதைகள் பேசிவருகிறோம். அவை உண்மைதாம் என்பதற்கு ருஜுக்களும் கிடைக்கின்றன. ஆனாலும் நம்மை ஆளும் ஆங்கில மக்கள் நாம் குழந்தைப் பருவத்திலேயே இருப்பதாகவும், நம்மை பல வழியிலும் முன்னேறச் செய்து கொண்டு வரும் டிரஸ்டிகளாகவும் மேற்கு நாட்டு நவநாகரீகர்களை நம்பும்படியும் செய்து வருகினறனர் என்பது கண்கூடு. அவ்விதம் நினைக்கிறார்களே என்று மனம் வெதும்பித்தான் பாப்பாப் பாட்டிலுள்ள கருத்துக்களைக் கொண்டு நமது வரகவி தெய்விகப் பாரதியார், அவர்களைப் பொய்யர்களாக்க விரும்பினாரெனவும் கொள்ளலாம். அப்பாரதியாரின் திருப்பாடல்களை மேற்போக்காகவாவது படிப்பவர்களுக்குங் கூட, "உள்ளத்தில் ஒளியுண்டாகி" மறுமலர்ச்சி, புதிய சகாப்தம் நாட்டுக்கே ஏற்பட்டு விடும்.

நமது பாரதிப் பெரியார் ஒரு தீர்க்கதரிசி என்பதும், ஆழ்ந்த கருத்துள்ள பாட்டுக்களை அரைக்கணத்தில் அருள்வாக்காக அமைத்து விட வல்லவர் என்பதும் பன்முறையும் சொல்லப்பட்டு வந்திருக்கிறதை நேயர்கள் அறிவர். இப்பெரியார், பாடும் சமயம் எதுவென்று காத்திருப்பதில்லையாம்! எந்த இடத்தில் என்ன உணர்ச்சி எப்படித் தோன்றியதோ அப்படியே, அக்கணமே, அங்கேயே, கடல்மடை திறந்ததுபோல் மளமளவென்று காட்டுவெள்ளம் போல் வார்த்தைகள் வந்து சொட்டுமாம்! இந்த விதமே யென்று அவருடன் நெருங்கிப் பழகிய பெரியார் சொல்லக் கேட்டதுண்டு. அவ்வித பாக்கியம் பெற்ற பெரியார் பலரும் இன்னும் ஜீவிய திசையில் இருக்கின்றனர். இம்மாதிரியாகவே, ஒரு தடவை சுரேந்திரநாத பானர்ஜியோ அல்லது விபினசந்திரபாலரோ சென்னைக்கு வர நேர்ந்து, கடற்கரைக் கூட்டம் நடப்பதற்கு முன்னதாக, முன்பின் எச்சரிக்கையின்றி, பாட வேண்டுமென்று கேட்டுக் கொள்ளப்பட்ட உடனேயே பாடப்பட்ட பாட்டு ஒன்றுதான்: "வாழ்க பாரத சமுதாயம் வாழ்க வாழ்கவே" என்று தொடங்கும் பாட்டு! அதில் "பொதுவுடைமை" என்ற பதம் அப்பொழுதே இவரால் அருள்வாக்காகச் சொல்லப்பட்டது. 'தனியொருவனுக் குணவில்லை யெனில் ஜகத்தினை யழித்திடுவோம்" என்று பாடியபோது கண்களில் நெருப்புப் பொறி பறப்பது போன்ற தோற்றம் அவருக்கிருந்ததைச் சபையிலுள்ள பலரும் கண்டு விதிர்ப்புற்றனர் என்றும் சொல்லப்படுவதுண்டு. பாரதியார் இறந்து இற்றைக்கு பதினாறு வருஷங்களுக்கு மேலாகின்றன. அதற்கு முன்பு எப்பொழுது பாடப்பட்டதோ இந்த "விடுதலைப் பாட்டு"! அதில் ஜாதிச் செருக்கு, கல்விச் செருக்கு, செல்வச் செருக்கு இவற்றை ஒழித்து, சகலருக்கும் சம

உரிமை வேண்டுமென்று அவருடைய ஆத்மா அவருக்கு அறிவுறுத்தி அருள் வாக்காக அலறுகிறார். 1920–க்கு மேல் மஹாத்மா தீண்டாமை விலக்கைப் பற்றி பிரஸ்தாபித்து, 1928–ம் வருஷத்திற்கு மேல் அதைப் பற்றி தீவிர பிரசாரம் செய்து, கண்டனம் செய்து, கடைசியாக, கல்நெஞ்சர் மனதைக் கரைக்க பிராயோபவேசமாக புகழ்பெற்ற புனஉபவாசத்தை மேற்கொண்டது உலக மறிந்ததேயாகும். ஆனால் இதே விஷயமாக எவ்வளவோ வருஷங்களுக்கு முன்னதாகவே பாரதியார் தன் பாடல்களில் பொலித்துப் பொறித்திருக்கிறார். அந்த விடுதலையில் ஆர்வம் பீறிக் கொண்டு பிலஹரி ராகத்தில், நெஞ்சையும் பிளக்கின்றது. பாட்டின் ஆரம்பமே,

"விடுதலை! விடுதலை!! விடுதலை!!!"

என்ற பல்லவியுடன் கிளம்புகிறது. அடுத்து முதல் பாட்டாக,

"பறையருக்கு மிங்கு தீயர் புலையருக்கும் விடுதலை!
பரவரோடு குறவருக்கும் மறவருக்கும் விடுதலை!!
திறமை கொண்ட தீமையற்ற தொழில் புரிந்து யாவரும்
தேர்ந்த கல்வி ஞானமெய்தி வாழ்வமிந்த நாட்டிலே!!!"

என்று எடுத்த எடுப்பில் தீண்டாமையும், (Untouchability) காணாமையும் (Unapproachability) இவர் மனதைப் பிளந்து ஆத்திரத்தைக் கிளப்பி, வார்த்தைகள் வெளிவருகின்றன. நம் தேசத்தில் தூரத்திலாவது இருக்கச் செய்து பேசுகிறோம். கேரளத்தில் கண் முன் கூட வரக்கூடாதாம்! என்ன கொடுமை? அவர்கள் வரும்படியாக நேராமல் நேர்ந்து விட்டால், வருகையைத் தெரிவித்து ஊளையிடுவது போன்ற ஒரு சப்தத்தைக் கிளப்ப வேண்டுமாம்! அது கேட்டுப் புனித மக்களாகக் கருதிக் கொள்பவர்கள் கண்களை மூடிக்கொண்டு அப்புறம் விலகுவார்களாம்! அதற்கு அடுத்தபடி தான் மறவர், பரவர், குறவர். ஆனால் பின் சொன்ன மூவர்களுக்கு முன் சொல்லப்பட்ட இருவரைப் போல அவ்வளவு கொடுமை சமூகத்தில் அனுபவத்தில் காணப்படுவதில்லை யானாலும், கொடுமை கொடுமைதான் என்பதை வற்புறுத்துகிறார்! இந்தப் பிரிவினைகள் யாவும் ஆதியில் தொழில் காரணமாகப் பிறந்தன என்ற உண்மையை பாமரரும் அறிந்து கொண்டு, கொடுமையைக் கொன்றொழிக்க வேண்டி, "திறமை கொண்ட தீமையற்ற தொழில்புரிந்து யாவரும், தேர்ந்த கல்வி ஞானமெய்தி வாழ்வமிந்த நாட்டிலே" என்கிறார். அதிலும், தீர்க்கமான ஆழ்ந்த அறிவுள்ள, ஞானம் பயக்கக்கூடிய கல்வியினால் இத்தீமைகள் ஒழியும் என்பதையும் தெளிவுபடுத்துகிறார். மேல்கொண்டு வரும் இரண்டாவது பாவில்,

"ஏழையென்றும் அடிமையென்றும் எவனுமில்லை ஜாதியில்!
இழிவுகொண்ட மனிதரென்ப திந்தியாவில் இல்லையே!!
வாழிகல்வி செல்வமெய்தி மனமகிழ்ந்து கூடியே
மனிதர் யாரும் சரிநிகர் சமானமாக வாழ்வமே!!!"

என்கிறார். முன்பாட்டில் தொழில் முறையில் வந்தது ஜாதிப் பிரிவினை என்பதைக் குறிப்பிட்டு, அது சரியான கல்விப் போக்கினால் மறைந்துவிடும் என்று தெரிவித்த பெரியார், சந்தேகப் பிராணிகளுக்கென்றும், தர்க்க வாதிகளுககென்றும் திடமாகப் போதிக்க வேண்டும் என்று எண்

ணியவராய், பச்சையாக, மண்டையிலடித்துச் சொல்லுவது போல, "ஏழை யென்றும் அடிமையென்றும் எவனுமில்லை ஜாதியில், இழிவு கொண்ட மனிதரென்ப திந்தியாவில் இல்லையே!" என்று கர்ஜிக்கும் பாவனையில் அமைந்திருக்கிறது உன்னி நோக்குபவர்களுக்குப் புலனாகும்! தவிரவும் தொழில் முறையிலும் சமூக நன்மையை யொட்டின தொழிலே ஆதியில் கருதப்பட்டது. தன்னலப் பெருக்கிற்காக ஏற்பட்டதல்ல! அந்த முறை யில் ஏதும் பொருள் சேர்த்துக் கொண்டு, முதலாளித்துவம், யஜமானத் துவம் என்ற கொள்கைகள், ஆதியில் உத்தேசிக்கவேபடாமல் இருந்து, "பிற்காலத்திய விளைவாக ஏற்பட்டன இவை நமதிந்தியாவில்" என்பதை உலகத்தாருக்கு விளக்கவும், நம்மிலும் தம்மை மறந்து தலைதிரும்பி நிற்கும் கனதனவான்களையும் நினைப்பூட்டவும், "ஏழை" "அடிமை" என்ற பதப் பிரயோகம் இருக்கலாம் என்பது கொள்ளற்பாலது! இது "தேவைக்கு மேல் சேர்த்திடுதல் திருட்டேயாம்! பூவிலும் ஏழ்மை புகும்" என்ற மற் றொரு அறநூல் குறளால் அறியக் கிடக்கின்றது. இதுவே, பல கஷ்டங் களுக்கும் மருந்தென பிரயோகிக்கப்படும் ருஷ்ய முறை என்பதை உல கம் அறியும். அம்மாதிரியான சுயநலப் போக்கும், கல்விக் குறையினால் தான் என்று கருதிய பாரதியார் "தேர்ந்த கல்வி" "ஞானம்" என்பவற்றை முதல் பாட்டில் பிரயோகித்தவர், இரண்டாம் பாட்டில், "வாழிகல்வி செல் வம் எய்தி மனமகிழ்ந்து கூடியே, மனிதர் யாரும் சரி நிகர் சமானமாக வாழ்வமே!" என்று, நம் கனதனவான்களுக்குச் சொல்லுவதையும் அறி வுடையோர் சிந்தித்து சிந்தித்து, தேர்ந்து, உணர்ந்து ஒழுகுவார்களாக! "பழி செய்தே பணங்குவிக்கும் பங்கமெல்லாம் தீர தொழிலாளர் தொல் லைகைத் தூண்டுதடா—தர்மம்" என்பதை நிதானமாக புரிந்து நடந்து கொள்ளுவது முறை என்றதே மஹாத்மாவின் அஹிம்சா தத்துவ முறை யாகும். இதுதான் சமதர்மமும், "சரிநிகர் சமானமாக மனிதர் யாரும் மகிழ்ந்து கூடி வாழவேண்டிய வழியுமாகும் என்பதும் பாரதியாரின் குறிப் பாகும். முன்பு சொன்ன பெண் விடுதலை மீண்டும் பொது விடுதலைப் பாட்டில் முனைந்து வந்து விடுவதைக் கவனிக்கும் போது, பாரதியாரின் பெண் விடுதலையின் வேகம் தெற்றெனத் தெளிவுபடும். ஆகவே விடுதலை பாட்டின் மூன்றாவது பாட்டு,

'மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம்!
வையவாழ்வு தன்னிலெந்த வகையிலும் நமக்குளே,
தாதரென்ற நிலைமை மாறி ஆண்களோடு பெண்களும்,
சரிநிகர்ஸமானமாக வாழ்வம் இந்த நாட்டிலே!!"

என்று முடிகிறது. இந்த விடுதலைப் பாட்டில் காணப்பட்ட இந்த விஷ யங்கள்தாம், சமூக சீர்திருத்த வாதிகளின் கர்ஜனை காரணங்கள். புதிய விஷயங்களைப் போல, பத்திரிகைப் பிரசாரம், மேடைப் பிரசங்கங்கள், வியாச கருத்துகளும் அமைந்து நடைபெறுகின்றன. ஆனாலும் எவ்வ ளவோ பிரசாரங்களும், பிரசங்கங்களும், வியாசங்களும் ஏற்பட்டும் சில சந்தர்ப்பங்களில் தூஷணை பிரசாரங்களும் நடந்துங்கூட, மேல்கண்ட விஷ யங்களில் தடைகளும் முட்டுக்கட்டைகளும் இருந்து கொண்டுதான் இருக் கின்றன. இதற்குக் காரணம் வரையறையற்ற, தான்தோன்றித் தனமான நிலைமைக்கு வந்து விடுமோ என்ற அச்சந்தான் அப்பிற்போக்காளர்களை

கருதப்படுபவர் மனதில் இருப்பது உணரவேண்டியது. ஆனால் நாளடைவில் காலப் போக்கில் இக்குறைகள் நீங்கிவிடலாம் என்பதற்கான ஹேதுக்களும் இருக்கின்றன. முற்காலத்தில் பெண்களுக்குப் பூரண ஸ்வதந்திரம் இருந்திருப்பது எல்லாரும் அறிந்ததே. இக்காலத்திலும், வெளியே பேசப்படுவதைப் போல அவ்வளவு மோசமான நிலைமையை உடைத்தா யிருக்கவில்லை. வீட்டிற்குள்ளே பொறுத்த மட்டில் ஸ்திரீகள்தான் சர்வாதிகாரிகளாக இருக்கிறார்கள். எந்த விஷயத்தையும் நிர்வகிக்கக் கூடியவர்களாகவும், நிர்வாகங்களுக்கு தகுந்த யோசனைகளைச் சொல்பவர்களாகவும், அவசியமானபோது, தன்னலத் தியாகமும் செய்து வருபவர்களாகவும் இருக்கிறார்கள் என்பதையும் ஒப்புக் கொள்ளாதவர்கள் ஆழ்ந்து யோஜிக்கக் கூடியவர்களில் இருக்கமாட்டார்கள் என்பது திண்ணம். "ஆரியக் கூத்தாடிக்குக் காரியத்திலே கண்" என்பது போன்ற கிரியாம்சைக்கு வரும்போது, ஆண்களைவிட பெண்களுக்குத்தான் தியாக உணர்ச்சியும், இரக்கச் சிந்தையும், பரோபகாரப் போக்கும், சஹிப்புத் தன்மையும் அதிகம். பஹிரங்கமாக வெளியே மேடைகளுக்கு வந்து, புருஷர்களுடன் கைகுலுக்கி, மாலைபோட்டு, மாலை போடுவித்துக் கொண்டு, கைகளைக் கால்களைத் தூக்கி பிரசங்கங்கள் புரிந்து, டென்னிஸ கிரிக்கட் விளையாடிக் களிக்க அதிகம் பேர் வருவதில்லைதான். அதற்குக் குடும்ப நிர்வாகப் பொறுப்பும், பொருளாதார நிலைமைச் சீர்கேடும்தான் காரணமாகும். இவைகளின் இரண்டுங் கெட்டான் நிலைமை யாவரும் உணரக்கூடியதே யாகுமன்றோ?

எவ்விதமாயினும், இம்மாதிரியான தீர்க்கதரிசனமுள்ள அருள்வாக்கான பாட்டுகள், சமரஸ உணர்ச்சிக்கும், ஹிருதய பூர்வமான மனமாறுதலுக்கும், ஊக்கத்திற்கும் அஸ்திவாரமாகும் என்ற கருத்தில் பாடவேண்டும் என்பது எவ்வளவு வற்புறுத்தப்பட்டாலும் அது அதிகமாகாது.

# கடனும் துன்பமும்

(அரியலூர்-அ. ரங்கராஜன்.)

குரைகடல் சூழ் குவலயத்தில் அசுரர் சுரர், நரர், விலங்காய்த் தோன்றிய உயிர்கட் கெலாம் சகடக்கால் போன்று இன்ப துன்பங்கள் மாறி மாறி வருதல் கண்கூடு. இன்பம் என்பது:—ஒருவன் தான் மண், பெண், பொன் எனுமாலை வயப்பட்டு மதிமயங்கி, மனங் கலங்குங் காலத்து தான் விரும்பிய பொருள் கிட்டுமாயின்—அதைத்தான் அனுபவிக்க நேருமாயின்—அவன் மனம் முன் இருந்த கலக்க நிலையினின்று விலகி ஓர்வித ஆனந்தத்தை அடையும். அதுவே இன்பமாகும். ஆனால் ஒரு காலத்து இன்பத்தை ஊட்டிய இவ்வுலகப் பொருள் மறுகணத்தே துன்பத்தை விளைப்பினும் விளைவிக்கும். மேற்கூறிய ஆசை மனதின் கண் எழ, எழ, மானிடன் துன்புறுகிறான். ஆகவே ஒருவன் விரும்பிய வஸ்து கிட்டாத காலத்து, மனதிலேற்படும் சம்ஸ்காரமே துன்பமாகும். 'அடுத்தது காட்டும் பளிங்குபோல்' நெஞ்சத் தெழாநின்ற துன்பத்தை முகம் தோற்றுவிக்கச் செய்யும். துன்பங்கள் மூன்று காரணங்களினால் ஏற்படும்.

(1) முற்பிறப்பிற் செய்த தீவினையின் நிமித்தமோ, மற்று இப்பிறப்பில் பேதமையாலோ ஏற்படும் வியாதி (க்ஷயம், குஷ்டம்; வெள்ளை, வெட்டை.)

(2) மானிடர், விலங்கு முதலியவைகளினால் ஏற்படும் தீங்கு.

(3) தெய்விகமாக வீடிடிந்தோ, மரமுறிந்தோ, இடிவிழுந்தோ ஏற்படும் விபத்து.

மேற்கூறிய மூன்றையுமுறையே ஆதி ஆதீகம், ஆதிபௌதிகம், ஆதி தெய்விகம் என வேதாந்திகள் விளம்புவர். சுக துக்கங்கள் யாவும் கடவுள் சிருஷ்டியென நோக்கு மிடத்து.

"திகழ்ந்த வீசனார் சிருட்டியும் வெவ்வேறே,
சகந்தனிற் பொது வீசனார் சிருட்டிகள் சராசரப் பொருளெல்லாம்,
அகந்தையாமபிமானங்கள் கோபங்க ளாசைகளிவை யெல்லாம்,
இகழ்ந்த சீவனார் சிருட்டிகளாகுங்காணீசனார் செயலன்றே."

எனும் கைவல்ய சுருதிபின்படி மானிடனே தன் மதியின்மையால் துன்ப, இன்பங்களைச் சிருட்டித்து அனுபவித்து வருகிறான் என்பது வெள்ளிடை மலை. 'ஈசனோ டாயினு மாசை யறுமின்' என மேலோர் மொழிந்த மொழியை யாவரும் சிந்திக்கற்பாலது. அனுபவிக்கு மிடத்து, துன்பங்கள் யாவற்றையு மிரண்டாகப் பிரிப்போம்.

(1) சரீரத்தைப் பற்றியுள்ள துன்பங்கள்.

(2) மனதைப் பற்றியுள்ள துன்பங்கள்.

இவற்றில் முறையே மணிமந்திர மருந்துகளினாலும் மனத்தினாலும் ஒருவாறு அகற்றலாம்.

உண்மையை விசாரிக்குங்கால், சகடக்கால் போன்று, மாறி மாறி வராநின்ற சுகதுக்கங்கள் சடமாகிய உடற்கே உரியதன்று, சத்தாய் சித்தாய், ஆனந்தமாய்,—எங்கு மெவ்விடத்து மென்றும் ஒரு நீக்க மற நிறைகின்ற பரிபூரண பிரம சிற்சாயையாகிய ஆன்மாவிற்கு—நமக்கு உரித் தன்று. அஞ்ஞான சந்தேக விபரீதங்கள் அணுவளவு மடையாமற் சச்சி தானந்த பிரமமே தானெனத் திடப்படத் தேறி பிராரப்தத்தைப் புசிப் பான்-அனுபவிப்பான்—நிமித்தம் விதிக்கப்பட்டுள்ள வாழ்க்கையை நடாத் துவதே சிறந்தது. இதுவே வேதங்களில் விதித்துள்ள விதி. பெரியோர், பல்லோர் புகன்ற பொன்மொழி. எழுவகைத்தோற்றம், நால்வகைப் பிறப்பு, மூவகைச் சாதிகளிலே சிறந்த மானிடப் பிறவியின் மாண்பு—பயன்—முத்தி, ஒருவன் ஒரு அறையினிடத்து நள்ளிருவில் விளக்கின்றி இருப் பானே யாமாயின், வழி தெரியாமலும், ஆங்குள்ள பற்பல பொருள்களை அறிய மாட்டாமலும் மயக்கமுறுவதே போன்று, நாம் ஞானமாகிய விளக் கின்மையால் உடலின் தன்மை—அசித்து, சடம் துக்கம்—அறியாமல் திகைப் புறுகிறோம். ஆகவே ஆராயுமிடத்து நமக்கு அந்நியமாய்—அழிதலே இயல்பாய் உள்ள உடல், அனுபவிக்கும் சுக துக்கங்கள் என்றும் எக்காலத் தும், எவ்விடத்தும், எதனாலும், எள்ளளவும் அழிவுறாத ஆன்மாவாகிய நாம் அனுபவிப்பதாகத் தோன்றுவதால் அவற்றைத் திருஷ்டி, சுக துக்கங்க ளென நான்மறை அந்தங்கள் நவிலா நிற்கின்றன.

மண்ணுலகில் மானிடனடையும் திருட்டி துக்கங்களில் கடன் படுவ தாலேற்படும் துக்கம் தலையாயது ஆகும். கடனென்ற பதத்திற்குக் கடமை, உரிமை எனப் பொருள்படும். ஒருவன் தனக்கு வேண்டிய உதவியையோ பொருளையோ, பிறரிடமிருந்து பெறுவானே யாமாயின் அவன் திரும்பி அவனுக்குச் செய்யவோ, கொடுக்கவோ உரிமையுள்ளவனாக உள்ளான். கொடுப்போன் திரும்பி வாங்குமெண்ணத்துடன் கொடுத்தல் கடனென்றும், அவனிடமிருந்து பிற உதவி, பொருள் முதலிய ஒன்றையும் எதிர்பாரா மல் கொடுத்தல் ஈகையெனவும் கூறப்படும். பின் புகன்ற ஈகையே சிறந்தது. பண்டைக் காலந் தொட்டே நந்தண்டமிழ்நாடு எண்டிசையும் புகழ் வாய்ந்த எண்ணிறந்த கொடை வள்ளல்கள் அவதரிக்கும் திருநாடாகவுளது. நாம் யாவரும் கொடையைக் கையாள ஆரம்பிப்பின் கடனென்பதே தலை காட்டாது. ஆகவே துன்ப மொழிந்து இகபர சுகமும் புகழும் உண்டா கும். ஒருபொருளை ஒருவனிடமிருந்து திருப்பிக் கொடுப்பதென்ற ஒப்பந் தத்துடன் வாங்குபவன் கடன் பட்டோனாகும். பொருள் கொடுத்தோன் கடன் கொடுத்தோனாகும்.

கடன் பட்டோன் தன்னை ஐயிரண்டு திங்களாய், அங்கமெலா நொந்து பெற்றெடுத்து சீராட்டி, தாலாட்டி முலையூட்டி காற்றாலே புவியாலே ககன மதனாலே கனலாலே புனலாலே கதிராதியாலே, மற்று பிணியாலே கொலைக் கருவியாலே கோளாலே பிறவியற்றும் கொடுஞ் செயல்களாலே, வேற்றாலே எஞ்ஞான்றும் துன்ப மடையாவாறு தாங்கிநின்று பாதுகாத்த தன் தாயையும் தன்னைப் பெறுவான் நிமித்தம் அரன் பூஜை, அடியார் பூஜை, அரிய விரதங்கள் ஆகுதிகள், முதலியவைகளைத் தூய மன மொழி மெய்க

ளால் செய்த தன் தந்தையையும், தரணி வாழ்க்கையில் இல்லறமே நல்லற மென்பதைத் தான் நடாத்தி இம்மை மறுமைப் பயன்களை யனுபவிக்க தூய துணையாயுள்ள தாரத்தையும் தீங்குநேரும் காலத்துத் துணைபுரியும் நற்குணமுடைய உறவினரையும், சகோதர சகோதரிகளையும், நண்பரையும் காலத்தின் விதிவலியினால் இழக்க நேரினும் சிறிது மனங் கலங்கி பின்னர் ஒருவாறு மனந்தேறி வாழ்க்கையை நடத்தி மகிழ்வெய்துவன்என்பது திண்ணம். ஆனால் கடன் கொடுத்தோரைக் காணில் கண்கலங்கி, மதியிழந்து மாண்பிழந்து, மற்று உடலொடுங்கி 'அவன் யாது புகல்வனோ? யாது செய்வனோ?' எனப் பயந்து அவனிடம் பற்களிரு பதினாறையும் காட்டி, கைகட்டி, வாய்புதைத்து, பணிந்து அவன் கேள்விக்கு பதிலிறுத்துப் பின்னவன் போவெனத் தான் வரவேண்டியவனாக வுள்ளான். 'மானமே உயிரினுமாண்புடைத்து' என்பதற்கியைந்த உத்தமர்களோ கடன் கொடுத்தோனைக் கண்ட காலத்துங் காணா காலத்துங் கண் கலங்கிக் 'கடன் தீர்க்கும் மார்க்கம் எப்படி?' என வருந்தி விசன சாகரத்தில் மூழ்குவர். கடன் கொடுத்தோன், கடன் வாங்கியவனிடமிருந்து தான் கொடுத்த பொருளை வட்டியுடன் கோர்ட்டு மூலமாக வசூல் செய்தடைய போதிய சட்டங்களை அரசாங்கத்தா ரமைத்திருப்பினும், அவன் கடன் பட்டோனைத் தன் நாவு கொண்டு மனமாரத் தூற்றியும், ஒரு சிறிது கரங் கொண்டு—கோல்கைக் கொண்டு—நையப் புடைத்தும், தான் நன் மகிழ்வு பெற முயலுகின்ற மூடத் தன்மையே இத்துன்பம் யாவற்றிலும் தலை சிறந்ததற்குக் காரணமாகும். அந்தோ!

"தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினாற் சுட்ட வடு"

எனும் பொய்யில் புலவர் புகன்ற பொன் மொழியின்—ஒண்குறளின்—மாண்பை ஆபத்தில் வீசங் கொடுத்து எட்டு வீசமெனப் பிறரை மோசஞ் செய்யும்—வட்டிகள் வாங்கும் மட்டிகள் அறிவரோ?

அஷ்ட திக்குகளையும் வென்று, இஷ்டப்படி நவக்கிரகங்களை ஆட்டித் தேவர்களைப் புகலொணாக் கஷ்டத்துக்குள்ளாக்கி, புஜபலபராக்கிரமம், தவம், தனம், தமர், படை முதலியவைகளில் எங்கும் தனக்கு ஒப்புயர் வில்லையெனும்படி இலங்கையைய அரசு புரிந்து வந்தான் இராவணனெனுமோர் அசுரன். அவன் தன் சகோதரன் கும்பகர்ணன் என்றவனே கூற்றையுமாடல் கொண்டானெனின் இராவணன் தன் பராக்கிரமம் பகரவும் போமே! ஸ்ரீராமருடன் தான் நடாத்திய போரில் தன்படை, தமர், தனயன், சகோதரன் யாவரையும் இழந்தான். தான் தனிமையாகப் போர்க் கோலம் புனைந்து, போர்க்களம் புகுந்தான். ஆங்கு உயிர்நெறி போய்—கரம் வேறு-சிரம்வேறு-கால்வேறு-தோள்வேறு—ஆக சிதறிக் கிடந்த தன் படை வீரர்கள்- தமர்—தனயன்—தம்பி முதலியோரைக் கண்டனன்—ஆற்றொணாத் துயர் மனதின் கண் கொண்டான். அச்சமயத்து அவன் கொண்ட துயரை மண்ணிலுள்ளோர் எண்ணத்தான் கூடுமோ?—எடுத் தியம்பத்தான் படுமோ? ஆனால் அவனது நிலைமையை எடுத்தியம்ப—வருணிக்கப் புகுந்த கவிச்சக்கரவர்த்தி கம்பர் அதற்கேற்ற உபமானத்தை மண்ணிலும், விண்ணிலும், மற்று பல விடங்களிலும் தேடினர். உகந்த உபமானங் கிடைக்கப்

பெருமையால் மனம் வாடினர்—மயங்கினர்.—தியங்கினர்—ஆஹா! சட்டென ஒன்று அவர் கூரிய மதியிலுதித்தது; அதை உடன் அவர் பட்டெனப் பாட்டில் புகுத்தினர். அஃது என்ன? 'கடன் பட்டார் நெஞ்சம் போற் கலங்கினனிலங்கை வேந்தன்' எனத் தீட்டினர் பாட்டை. மற்றும் அரிச்சந்திரன், முனி புவிகேட்க மனமுவந்தளித்தனன் அதனால் மனதில் எள்ளளவும் வருத்த முற்றானில்லன். தான் பட்ட கடனுக்கே நெஞ்சம் கலங்கினன் 'கடன் தீர்ப்பான் நிமித்தம் தாரம் விற்றான்—தநயனையும் விற்றனன். அந்தோ! பிரிதற்கரிய மனைவியையும், பெறுதற்கரிய புதல்வனையும் கேவலம் விலங்கு, பூமி முதலியவைகளைப் போன்று விற்றது கடனால் அன்றோ? என்னே, கடனின் கொடுமை!

இக்கொடுந் துன்பத்தை மனத்தா லொருவாறு யூகித்தறிய வேண்டுமே யன்றி வாக்கு கொண்டு எடுத்தியம்பவோ, வாக்கியங் கொண்டு வரையவோ முடியா. எனினும் அவன் தன் இன்னலை ஈண்டு ஒருவாறு உரைப்பாம். கடன் பட்டோன் விதிவலியினால்—திரும்பிக் கடன் பட்ட பொருளைக் கொடுக்க வலியின்மையால்—மதியிழந்து, மானமிழந்து, மாதா பிதா, மனைவி சுற்ற மிழந்து ஒருகாலத்தில் பொற்காப்பும் பொற் சங்கிலியும் பூடப்பட்டிருந்த— தன்னிரு கரங்களிலும் அரசாங்க உத்தரவுப்படி சட்டப்படி—இரும்பு விலங்குகளிடப் பெற்று, பூவுலக நரகமெனப் பலர் புகலும்-சிறைச்சாலையை அடைய நேரிடுகிறது. சிற்சில சமயங்களில் கடன் பட்டோனுக்கும் கொடுத்தோனுக்கும் ஏற்படும் வாயுரை வாய்ச்சண்டையாய்—கைச்சண்டையாய்—கொலைகட்குக் காரணமாகவே அரசாங்க சட்டப்படியோ—ஒளிந்து உயிர் வாழவோ—கடன் பட்டோன் தன் தாய் நாட்டினை இழந்து தஞ்சமென அந்நியநாடு புக நேரிடுகிறது. 'மானமழிந்த பின் உயிர் வாழாமை முன்னரினிதே' எனும் மாசற்ற மொழிக் கிணங்க தூய உத்தமர் பலர் கடனிமித்தமே உயிர் நீக்கத் துணிவர். பஞ்சமா பாதகங்களில் தலை சிறந்தது கொலை புரிதலே என பழ மறைகள் கோஷிக்கின்றன. அரசாங்கத் தண்டனைகளில் மரண தண்டனையும், நாடு கடத்தலு மிக மிகக் கொடிது. ஆகவே இம்மையினும் மறுமையினும் துன்பங்களை யனுபவிக்கத் தனிவித்தாக விருப்பது கடன் படுதல் அன்றோ?

"அந்தோ! கொடிதே கொடிது கடன் படுதல்
அதினுங் கொடிது சிறை படுதல்
அதனினுங் கொடிது நாடு கடத்தல்
அந்தோ! கொடிதே, கொடிதே உயிர் நீத்தல்"

பலவளம் மிகுந்த பாரத நாட்டுச் சோதர சோதரிகாள்! இனியேனும்—வெகு தானிய விளைவை விரும்பி வேண்டி யளிக்கும் நிமித்தம் தோன்றியுள்ள வெகுதான்ய வருட முதற்கொண்டேனும்—வெகு துன்பங்கட்கு—கொலை—, சிறை, இம்மையிற் பழி, மறுமையில் நரகம்—காரணமாகிய கடன் கொள்ளல் எனும் கொள்ளிவாய் பேயினின்றும் நீங்கி நாம் பண்டை நம் மூதாதையர்களை போன்று ஒப்புயர்வற்ற வள்ளலாக விளங்க எல்லாம் வல்ல எம்பெருமான் ஆன இறைவன் அருள் புரிவாராக!!

---

# ஊர்வசியின் காதல்

—••❖(ஜ)❖••—

(S. கிருஷ்ணன்.)

## III

புரூரவனின் பட்ட மகிஷிக்கு அரசனின் நடத்தை பிடிக்கவில்லை. அவன் தன்னைவிட்டு வேறு மாதின் வலையில் சிக்கிவிட்டான் என்று யூகித்து கொண்டாள் அதன் உண்மையை அறிய வேண்டு மென்று தன் தோழியாகிய நிபுணிகை என்பவளை அழைத்து "நமது அரசர் இன்று காலையில் எழுந்தது முதல் ஒரு மாதிரி யிருக்கிறார். அதன் உண்மை விதூஷகனுக்குத் தெரியக் கூடும். அதை எவ்விதமாவது அவனிடமிருந்து அறிந்து வா" என்றாள்.

விதூஷகன் சிங்காதனத்துக் கருகில் சித்திரம்போல் அசையாமல் வீற்றிருந்தான். நிபுணிகை "இவனை எவ்விதம் மோசஞ் செய்வது? புல் மேல் விழுந்த பனிபோல் இவன் மனதில் உள்ள காரியமும் நிமிஷத்தில் வெளிப்பட்டு விடும்" என மனதில் நினைத்து அவனை வணங்கி நின்றாள்.

விதூஷகன் அரசன் சொன்ன காரியத்தை யாரிடம் வெளியிடுவது என்று துடித்துக் கொண்டிருந்தான். நிபுணிகையைக் கண்டதும் பதைபதைப்புடன் 'நீ இவ்வளவு தூரம் வரக்காரண மென்ன' என்று வினவினான்.

நிபுணிகை:—அரசமாதேவி தங்களிடம் அனுப்பினாள்.

விதூஷகன்:—என்ன உத்தரவோ?

நிபுணிகை:—தாங்கள் தேவியிடம் மிகுந்த அன்புடையவ ரென்றும் அவர் துயரப்படுவதானால் ஒருநாளும் அலக்ஷியம் செய்யமாட்டீரென்றும் தங்களிடம் கூறும்படியாக எனக்கு உத்தரவிட்டார்.

விதூஷகன்:—மகாராஜா அவ்விடத்தில் ஏதாவது கோபமாக நடந்து கொண்டாரோ?

நிபுணிகை:—ஆம். எவனொருத்தியை மனதில் எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருக்கிறாரோ அவள் பெயரை கூறி மகாராணியைஅழைத்தார்.

விதூஷகன்:—(மனதில்) அவரே உண்மையை வெளியிட்டு விட்டார். நாம் ஏன் மறைக்க வேண்டும்? (வெளிப்படையாக) ஊர்வசி என்று அழைத்திருப்பார். வேறு எண்ணம் அவர் மனதில் இருக்க இடமில்லை. அவளைக் கண்டது முதல் பித்தம் பிடித்தவர் போல் இருக்கிறார். தேவியாருக்குத் தொந்தரை கொடுப்பது மாத்திரமல்ல. எனது பிராணனையும் வாங்கி விடுகிறார்.

நிபுணிகை:—(மனதில்) விதூஷகனை ஏமாற்றி உண்மையை அறிந்து

கொண்டோம். (வெளிப்படையாக) ஆமாம். நான் தேவியிடம் என்ன சொல்லவேண்டும்?

விதூஷகன்:—நான் அரசரின் மோகத்தை நீக்கி அதன் பின் தேவியை வந்து பார்ப்பேன் என்பதாகச் சொல்.

நிபுணிகை பட்டமகிஷியிடம் சென்று விஷயத்தைக் கூறவும், அது முதல் மகாராஜாவின் செய்கைகளை அறிந்து தனக்குத் தெரிவிக்கும்படி நிபுணிகைக்கு கட்டளையிட்டாள். நிபுணிகை கொடிமண்டபம் வந்து அங்கு விதூஷகனுடன் மகாராஜா விசாரப்பட்டுக் கொண்டிருப்பதைக் கண்டு தேவியிடம் சொல்ல ராணி "ஆனால் பார்க்கலாம்; வா" என்று நிபுணிகையை அழைத்துக் கொண்டு மண்டபம் வந்தாள்.

அந்த கொடி மண்டபத்தில் அரசனையும் விதூஷகனையும் கண்ட அரசி "நிபுணிகா! நீ கூறியது உண்மையே. இதோ அரசரும் விதூஷகனும் உட்கார்ந்திருக்கிறார்கள். இந்த மரத்து மறைவில் ஒளிந்திருந்து அவர்கள் பேசுவதைக் கேட்போம், வா. அப்பொழுது நீ சொன்னது உண்மையா பொய்யா என்பது தெரிந்து விடும்" என்று கூறி அம்மரத்தின் மறைவில் போய் நின்றாள். அரசன் தேடிக் கொண்டிருந்த மரப்பட்டை காற்றினால் அடிக்கப்பட்டு அரசியின் காலடியில் போய் விழுந்தது. (தொடரும்)

---




# ப்ளாரன்ஸ் நைட்டிங்கேல்

——(o)——

(M. A. S. முத்துசாமிப் பிள்ளை.)

மேனாட்டில் தூய தொண்டினையே விரும்பி சுய நலத்தைப் பலி கொடுத்து தொண்டாற்றக் கருதிக் கூட்டங் கூட்டமாகப் பல வகைப்பட்ட தொகுதியினர் குழாங்கள், மாதரால் அமைக்கப்பட்டிருக்கின்றன. இவைகள் பெரும்பாலும் தந்நலங் கருதா உழைப்பையே தொழிலாகக் கொண்ட மாதர் குழாங்கள். சமயத் தொண்டாற்றும் தொகுதியினர் ஒரு குழாம். மருத்துவத் தொழில் கொண்டு மருத்துவம் புரிபவர் ஒரு குழாம். ஆதரவற்ற பெற்றோரில்லாக் குழந்தைகளைப் பேணி வளர்த்தற்குரிய குழாத்தினர் ஒரு பக்கம், மேதினியிலுள்ள நாடுகள் பலவற்றிலும் ஏற்படும் இயற்கை ஆபத்துகள், எதிபாரா விபத்துகள் இவைகளால் பீடிக்கப்பட்ட பிற மக்களுக்கு வேண்டும் பேருதவிபுரிய ஈடுபடும் பெண்டிர் தொகுதிகள் பல; நோயாளிகள் சிகிச்சை பெறும் மருத்துவ சாலைகளில் வேண்டும் ஆதரவுகள், உதவிகள், ஊழியங்கள் முதலியன செய்வதற்கென்று சேவைபுரியும் சேயிழையார் சங்கங்கள் பல, எனப் பல் வேறு தொகுதியினராக மக்களினத்திற்கு வளம்படு நலன் புரிந்து தொண்டியற்றி வருகின்றனர். இன்னும் விலங்கினங்களுக்கு வேண்டிய உதவி புரிய வித விதமாகக் கூட்டம் நிறுவியுள்ளார்.

இத்தகைய நிலையங்களுக்கு அடிகோலி முறை வகுத்த அம்மையார்களுள் ஒருவர் வாழ்க்கை வரலாற்றையே இங்கு எழுத முன் வந்தோம்.

அம்மையார் ஐரோப்பா கண்டத்து மாதர். தாய் தந்தையர் இங்கிலாந்து நாட்டு இயற்கை வாசிகள். அங்கே அவர்களுறைவிடம் டெர்பிஷையரிலுள்ள லீகால். இவர்கள் சிறிது காலம் இத்தாலியா நாட்டை இருப்பிடமாகக் கொண்டு வதிந்து வந்தனர். அந் நாட்டிலுள்ள பூநகர் என்னும் பிளாரன்சு நகரில் அவர்கள் பொருந்தி வீற்றிருந்த பொழுது அவர்கட்கு ஓர் பெண் மகவு 1820-ம் ஆண்டில் அருமையாகத் தோன்றியது. தந்தையார் அக் குழந்தைக்கு அப் பட்டினப் பெயரையே இட்டு அழைத்தனர். குடும்பப் பெயரோடு புனைந்து அவள் பெயர் பிளாரன்சு

நைட்டிங்கேல் என வழங்கப் படுவதாயிற்று. நாமோ அவளைப் பூங்காப் பூவை என வழங்குதல் அமையும்.

பிளாரன்சு நைட்டிங்கேல் பிறந்ததின் பின்னே அவளது இருமுது குரவராம் மகனார் நைட்டிங்கேலும் மகளிர் நைட்டிங்கேலும் இத்தாலியா நாட்டைச் சிறிது காலத்தில் விட்டகல எண்ணினர். வெளிநாட்டில் வாழும் விருப்பம், மாறியதும், டெர்பிசையரில் சிற்றோடைகட்கும், சிறு குன்றுகட்கும் இடையிலுள்ள தங்கள் வீடு நோக்கி விரைவில் மீண்டனர்.

டெர்பிசையரில் லீகால் என்னும் இடமே அவர்கள் பண்டு தொட்டுறையும் பழம்பதியாகும். ஈண்டு பிளாரன்சு தந்தையாரகிய மகனார் நைட்டிங்கேல், பிரயாணங்களில் பேணி வைத்திருந்த நூல்களும் பண்புடைப் பொருள்களும், அவர்களுக்குப் பொழுது போக்குவதற்குப் பெரிதும் உதவியாய் நின்றன.

ஆனால் அவர் அவ்வூரி லுறைவோர் உறுநலன் கருதினர். அவர்க்கு வேண்டுவனவற்றை மிக மகிழ்வுடனமைத்தனர். சிறுவர்கள் பயில்வதற்கெனச் சிறு பாடசாலைகள் இயற்றினர். பிள்ளைகள் பள்ளிக்குச் செல்லுமாறு பெரு முயற்சி எடுத்தனர். எண்ணவும், எழுதவும், அவற்றினைப் பார்த்து இயம்பவும் கற்குமாறு ஏற்பாடு செய்தனர். இனிக் கிராமவாசிகள் உடல் நல மிழப்பினும் அன்றி உறுதுய ருழப்பினும் மாதர் நைட்டிங்கேல் அவர்பாற் சென்று மதியுரைகளாலோ அன்றி வள்ளன்மையாலோ வருத்தம் நீக்கிடுவர். அப்பொழுதெல்லாம் அவள் இளந்தோன்றல்களாம் பிளாரன்சும் அவட்கிளையோளுமாகிய இரு மடமங்கையரும் அவளுடன் செல்வர்.

அழகுபொலி டெர்வண்டு ஆற்றைக் கவிந்து அணிபெறச் செய்யும் அலர்மலர்கள் செறிந்த வயல் நிலங்கட்கும் சிறுவரைகட்கு மிடையே பிளாரன்சின் இளமைப்பருவம் இனிமையுடன், மலர்ந்தது. அணிபெற உயர் ஆடைகள் தரித்து இரு சிறு மகளிரும் இருமுது குரவருடன் ஞாயிற்று நாட்களிலும் மற்று நல் விழாக்களிலும் பசும் புற்றரை கடந்து டெத்திக் நகரிலுள்ள பரமன் ஆலயம் சென்று பணிந்திடுவர். டெத்திக் நகரம் மேட்லாக் நகரத்துக்கு மிக அணுக்கமாயுள்ளது. இதற்கருகில் உங்பீல்டு மேனர் எனும் வேறொரு நகருளது. இங்கே இதற்கு இருநூற்றைம்பது ஆண்டுகட்கு முன் நேர்ந்ததோர் சம்பவத்தை அவர்கள் நினைவு கூர்தலுண்டு. அப்பொழுது ஆங்கில நாடு எலிசபெத்து அரசியார் ஆளுகையிலிருந்தது. 1568-ம் ஆண்டு ஸ்காத்லாந்து தேசத்தின் அரசியாம் மேரி அவண் யாவையு மிழந்து அந் நாடு விட்டகன்று ஆங்கில நாட்டிற்கு அஞ்சியோடி வந்தனள். அங்கே அரசி எலிசபெத்து அவளை அருஞ் சிறையிலிட்டனள். 1569-ல் உங்பீல்டு எனு மிடத்திலேயே மேரி உறைந்தனள் சிறையில். பின்னர் அரசியின் ஆக்ஞையால் அவள் தன் ஆருயிரையும் அகற்றிவிட்டனர். அவள்பால் ஆர்வமுடைய தொழும்பன் அந்தோணி பாபிங்டன் என்பவன் அரசியலைக் கவிழ்க்கச் சதி செய்தான் என்னும் அபவாதத்திற்காக அரசி எலிசபெத்து ஆணையின்படி அவன் ஆவியை அகற்றினர். டெத்திக் என்னு மிவ்விடத்தில் தான் அந்தோணி பாபிங்டன் முழங்

காலிட்டு மேரி அரசிக்காய் மிகுந்த தவமுயன்றான். டெத்திக்கிலிருந்து சிறிது தூரத்திலிருந்த உங்பீல்டு மேனரில் அடைபட்டிருந்த அரசிபால் அடிக்கடி அவன் எண்ணங்கள் சென்றன.

இந்த அந்தோணி பாபிங்டனைப் பற்றிய முழு விபரமும் அறிந்தனள் அம்மை பிளாரன்சு. அங்கு அழிதலுற்றுக் கிடக்கும் அவன் வீட்டினைப் பார்ப்பதே அவட்கு ஓர் அகமகிழ்வைக் கொடுக்கும். அக்கட்டிடம் காப்போன் பிளாரன்சு நங்கையைக் காணின் களிப்பெய்திடுவன். அங்குள்ள அதிசயமெல்லாம் காட்டி அதன் முழு விபரத்தையும் அவட்கெடுத்துரைப்பான். அவ்வீட்டு மடைப்பள்ளியிலே மறைவாக ஓர் பொறி வாயிலுளது. அஃது ஓர் அந்தரங்க மாளிகையில் கொண்டுபோய் உய்க்கும். அங்கு பல காலங்களாகப் பார்க்கப்படாதவாறு பதுங்கி வாழ்தல் கூடும். சதி செயலையுடையோர் தங்குவதற்கு அஃது ஓர் தகுந்த இடமே. இன்னுமோரிடத்தில் ஒடுங்கியதும் ஒளியில்லாததும் மேனோக்கிச் சுழல் சுழலாகச் செல்லுவதுமான படிக்கட்டுகளுள்ளன. அதன் இறுதியிலுள்ள வாசலைத் தட்டினால் அங்கு ஓர் படுக்கையறையைப் பார்த்திடலாகும்.

இங்ஙனம், லீகால் எனு மிடத்தில் நைட்டிங்கேல் குடும்பத்தினர் சிறியோரும் முதியோரும் நலனுற நாட்கழித்து அதனை நனிது விரும்பினராயினும் மாரிகாலத்தில் அவண் மறைவு அடக்கமின்றி குளிர் மல்குவதாயுற்று. ஆதலினால் மகனார் நைட்டிங்கேல் ஆதாவும் பாதகாப்பும் அதிகமாயுள்ள இடம் நாடி வேறோர் புதுமனை இயற்ற எண்ணினர். லீகாலிலிருந்து ஒருகல் தூரமுள்ளது லீகர்ச்ட்டு எனனும் நகரம். அதன் பார்வையும் லீகாலைப் போலவே டெர்வண்டு நதியை நோக்கியுள்ளது. ஆனால், அங்கு போலல்லாது இங்கு மலைகள் மரம் செறிந்திருந்தன, ஓலமிட்டலறும் உரம் மிகு காற்று அதனால் ஊறுபட்டு நின்றது. அவண் அமைத்த புது இல்லத்தில் அவர்கள் குடிபுகும்பொழுது பிளாரன்சுக்கு வயது ஆறு நடந்து கொண்டிருந்தது.

புதுமனை தனிலே நைட்டிங்கேல் புதல்வியரிவரும் மது மலர்ச் செடிகள் வளம் பெற நாட்டத் தனியிடம் பெற்றனர். இன்னும் அவ் வில்லத்தின் நாப்பண் இறைவனைப் போற்ற ஓர் இடமமைந்துளது. அஃது மிகப் பழமை வாய்ந்தது. அதனைப் பற்றிய பழங்கதைகள் பல உள அஃது பேசி மகிழ்வதற்கு அவர்க்குப் பெருங் கிளர்ச்சி விளக்கும். பின்னர் கோடைக்காலக் கட்டிடம் ஒன்றுளது. அங்கே அவர்கள் தேயிலை நீர் அருந்தலாம். மேமாசத்தில் சாலை மரங்களினூடு போகும் தனிப்பாதை வழி சென்றால் நீண்ட தூரத்தில் அதனெல்லையிலுள்ள ஒரு வாயிலில் வந்து நின்றிடுவர். அதில் நின்று கொண்டு சுற்றிலும் மலைகள் பல மைல்கள் தூரத்தில் சூழ்ந்திருப்பதை நோக்கும் பார்வை கண்ணுக்குக் கன விருந்தளிக்கும் காட்சியாகும். இதனையே பிளாரன்சு இனிது விரும்புவள்.

ஆனால், மகனார் நைட்டிங்கேல் இதனோடு மனம் நிறைவுற்றவராய்த் தெரியவில்லை. லீஃகர்ச்ட்டு அவர் எண்ணியவாறு அவர்க்கு இனிமை பயக்கவில்லைபோலும். எனெனில் சில திங்கள் கழிந்ததும் ஹேம்ப்சையரிலுள்ள எம்பிளி எனு மிடத்தில் இல்லம் வகுத்தனர். லீகர்ச்ட்டிலுள்ள

மரங்கள் வரண்டு வசந்தகாலம் வரவும் எம்பிளிக்கு வந்திடுவர். அங்கு பசுமலைகள் பச்செனத் துளிர்க்கும் பருவத்தில் மீளவும் திரும்புவர். சில வேளைகளில் வழியில் லண்டன் மாநகரில் நடுவே தங்குதலுண்டு. அங்கே அழகிய படங்கள் பார்ப்பதுவும், இனிய இசைகள் கேட்பதுவும், நைட்டிங் கேல் மகளார்க்கு அறிமுகமுள்ள சில அரிய மாந்தருடன் அளவளாவுதலும் நேரும்.

கடைசியில், அவர்கள் தங்கள் வீடு சென்றதும் அவணருகிலுள்ள சிற் றில்களிலும், சிறு குடிசைகளிலும் வதியும் பழ நண்பர்களைப் போய்ப் பார்த்து மகிழுவர். சிறிய நங்கையர் அங்கு இலாச் சிறிது காலத்தில் ஆண்டு நிகழ்ந்தவைகளைப் பற்றி மகிழ்ந் துரையாடுவர். கண்ட விநோதக் காட்சிகளை யெல்லாம் அவர்களிடம் விண்டு உரைத்து வியப்படைந்திடுவர். அவர்கள் செய்ய நேர்ந்த அரிய செயல்களை யெல்லாம் அவர்க் கெடுத் துரைப்பர். பூனை நாய்களின் பொற்புடைப் பார்ப்புகள் பிளாரன்ஸ் ஸுக்குப் பிரியம் மிக விளைக்கும். ஏனெனில், பிளாரன்ஸ் பிராணிகளிடத் தில் பெருகு மன்புடையவள். உயிர்களிடத்தில் உருகு மன்புடையவள். அவற்றின் தேக நலன் குறையின் அதனைச் சீர்ப்படுத்துவதற்கு, அயலி லுள்ளவர்கள் அவட்கு ஆளனுப்பி வைப்பர். அவற்றில் வயது முதிர்ந்த வைகளும், வனப்பில்லாதவைகளுமே பிளாரன்சின் கவனத்தைப் பெரி தும் இழுத்தன. பிளாரன்ஸ் வெளிச் செல்லும் பொழுது, பழம், சருக் கரை, கிழங்கு முதலியன பதுக்கிக் கொண்டு போதல் வழக்கமாயிருந்தது. அவற்றை வயல் வெளிகளில் வயோதிகத்தினால் வருந்தும் வன விலங்கு களுக்கு அவள் ஊட்டுவதுண்டு. அப்படிச் செல்லுகையில் அங்குள்ள அணில்களுடனும், அணி மிகு முயல்களுடனும் அன்பு கூர்ந்து சிறு விளை யாட்டில் அமர்ந்திடுவள் இடை இடை. வன விலங்குகளும் வனப்புடைப் பறவைகளுமே பிளாரன்சின் விருப்புடை நண்பராவர். மானினங்கள் மகிழ்ந்து விளையாடலும், வனப்பறவைகள் அவண் வந்து பாடலும் அவட்கு மகிழ்வினைப் பெருக்கும். இவைகளிடம் வைத்த பிரியம் போலும் இவட்குத் தன் சிறு குதிரைகளிடமும் உள.

எம்பளியிலிருக்குங் கால் அங்குள்ள இறைவனடி யியற்றுபவர் (சமய போதகர்) பிளாரன்சினிடத்தில் மிகப் பிரியம் வைத் தொழுகுவர். சமய போதகர், தமதாட்சிக்குட்பட்டோரை மேல்பார்த்து வருவதற்கு வெளிச் செலும் பொழுது பிளாரன்ஸைப் பரிவுடன் பரிமேலேற்றி அப்பாங்கெல் லாம் சுற்றுவர். அவட்கு அது மிக விரும்பினைப் பயக்கும். ஆட்களை யெல்லாம் அவள் நன்கு அறிந்து கொள்ளுவள். பிள்ளைகளின் பெயர்களை யாவது அல்லது அவள் பிறந்த நாட்களையாவது அவள் என்றும் மறந்தன ளில்லை. அவள் அன்னையோ பிணியாளர்கட்குதவும் பண்டம் ஏதேனும் கொண்டு செலுமாறு இவளிடம் கொடுத்தனுப்பி வைப்பாள். பிளாரன் சும் மலர்கள் அலருங்காலம் தனது மலர்ச்சோலையின்றும் பூப்பறித்துத் தன் விருப்புடை நண்பர்களுக்கு எடுத்தேகுவள்.

(தொடரும்)



# கொள்ளைகொண்ட கோபாலன்

—:(o):—

(S. L. நாராயணன்.)

ஞாயிற்றுக்கிழமை மாலை சுமார் 5½—மணி இருக்கும். கதிரவன் தன் தங்கமயமான ஜோதியைப் பரப்பிக் கொண்டு சிறிது சிறிதாக மேற்கடலில் மறைந்து கொண்டிருந்தான். சென்னை திருவல்லிக்கேணி பீச் பக்கம் பிளஷர் கார்கள் ஒரே வரிசையாய் அணிவகுத்து அழகுற நிறுத்தப்பட்டிருந்தன. காலேஜ் பையன்களின் கூட்டம் ஒருபுறம்; இள மங்கையர் குழாங்கள் ஒருபுறம்; ஒருபுறம் உத்தியோகஸ்தர்கள், சிறையினின்று விடுபட்டவர்களைப்போல களிப்புற்று உலாவிக்கொண்டிருந்தனர். வானத்தில் எழுந்த பூர்ண சந்திரனை கண்டு ஆனந்தித்துக் கொந்தளித்துக்கொண்டிருந்த கடலைக் கண்டு ஆரவாரம் செய்யும் வாலிபர்களின் சரகோஷம் ஒருபுறம். இதற்கிடையில் ரேடியோவின் மூலம் கேட்கும் சங்கீதத்தின் சப்தத்தைக் கேட்டு ஒருபுறம் வியப்பும், ஒருபுறம் ஆனந்தமும் எய்தப் பெற்று மெய்மறந்து ஈடிதாபக்கம் நின்றுகொண்டிருந்தார்கள் பாமர மக்கள்.

இவ்வாறு ஜனங்கள் தங்கள் கஷ்டத்தை மறந்து அந்த ஒன்று அல்லது இரண்டு மணிநேரம் களிப்புற்றிருந்த சமயம் அவர்களது சந்தோஷத்தைக் கண்டாவது தான் களிப்புறலாம் என்று எண்ணி கடற்கரையை நோக்கி வந்துகொண்டிருந்தான் நமது கோபாலன். கோபாலன் பி. ஏ. ஹானர்ஸ் பாஸ் செய்து இரண்டு வருடம் இருக்கும். அவன் தகப்பனாரிடம் இருந்த பூஸ்திதி எல்லாம் அவன் படிப்பிற்கு செலவு செய்யப்பட்டது. பாஸ் செய்த பின் சிலகாலம் தன் ஜில்லாவில் வேலைக்காக அவன் போகாத ஆபீசுகள் கிடையாது. பின் தன், தாய் தகப்பனார் தொந்திரவு பொறுக்க முடியாமல் அவர்கள் கடன் வாங்கிக் கொடுத்த சிறிது பணத்துடன் மதராஸ் வந்து சேர்ந்தான். அவன் கொண்டுவந்திருந்த பணத்தைக் கொண்டு இரண்டு வாரங்களே காலம் கழிக்க முடிந்தது. கோபாலனுக்கோ மதராஸில் உற்றார் உறவினர் ஒருவருமிலர். அதனால் தன் கையிலுள்ள பணம் காலியானதும் அவன் சாப்பாட்டிற்குத் திண்டாட வேண்டியதாயிற்று. வேலைக்காக தான் அலைந்து மனம் சோர்வுறப் பெற்றான். தன் நண்பர் சிலர் மதராஸிலிருந்தும் அவர்கள் இருக்குமிடம் தேடிப்போக அவனுக்கு இஷ்டமில்லை. ஆதலால் ஒருநாள் முழுவதும் பட்டினி கிடக்க நேர்ந்தது. இயற்கை வனப்பைக் கண்டாவது தன் பசிப்பிணியை போக்கிக் கொள்ளலாம் என்றெண்ணிக் கொண்டே கடற்கரை வந்து சேர்ந்தான். அவனது அகத்தின் ஞானம் அவன் முகத்தில் வீசிக்கொண்டிருந்தது. எனினும் அவனைக் கவனிப்பார் ஒருவருமிலர். கோபாலனுக்கோ வயது 23 இருக்கும். தனக்கு அவ்வளவு வயதாகியும் தன்தாய் தகப்பனாரைக் காப்பாற்ற வழியில்லாத தன்மை

யைக் குறித்து அவன் மனம் நொந்துகொண்டான். என் செய்வான் பாவம்! அவன் அலையாத இடமில்லை. ஏன் மனிதனாய்ப் பிறந்தோம் என்றுகூட தன்னைத்தானே நிந்தித்துக் கொண்டனன். இந்நிலைமையில் கடற்கரை வந்து சேர்ந்த கோபாலன் அங்குள்ள வைபவத்தைக் கண்டு சிறிது மெய்மறந்து மணலின்மேல் துயிலுறலாயினன்.

சிறிது நேரத்திற்கெல்லாம் கார்கள் புறப்படும் சப்தம் அவனைத் தட்டி எழுப்புவதுபோலிருந்தது. ஜனங்கள் தங்கள் இல்லங்களை நோக்கிப்போக ஆரம்பித்தனர். அவர்களைப்போல் தனக்குத் தங்க ஒரு இடமுமில்லையாயி னும் கோபாலன் தான் வந்தவழி நோக்கி திரும்பிச் செல்ல ஆரம்பித்தான். கால் நடையாகவே மெதுவாக சென்றுகொண்டிருந்த கோபாலன் கடைசியாக உடல் தளர்ந்து மேற்கொண்டு நடக்கமுடியாமல் தான் போய்க்கொண் டிருந்த தெருவிலுள்ள ஒரு வீட்டின் வாசல்புறத்தில் உட்கார்ந்தான். அப் பொழுது இரவு சுமார் 9-மணி இருக்கும். போக்கு வரவு சப்தம் சிறிது சிறி தாக குறைந்து கொண்டிருந்தது. சிறிது நேரத்திற்கெல்லாம் ஒரு பேபி ஆஸ்டின் கார் கோபால் உட்கார்ந்திருந்த வீட்டுப்பக்கம் வந்துநின்றது. உடனே போலீஸ் உடையுடன் காரிலிருந்து இறங்கினர் ஒரு மகான். அவர் தான் ஸர்க்கிள் வரதாச்சாரி. இறங்கியதுதான் தாமதம்; உடனே அவர் கண்கள் உட்கார்ந்திருந்த கோபாலன்மேல் பாய்ந்தன. "யாரடா அது!" என்று ஒரு சர்ஜனை செய்தார். பதிலொன்றும் வரவில்லை. உடனே வீட்டிற்குள் நின்றுகொண்டிருந்த கான்ஸ்டேபிளைக் கூப்பிட்டு இந்தப் பயலைப் பிடித்துக்கொண்டு வா என்று கூறிவிட்டு வீட்டுற்குள் நுழைந் தார்.

இவ்வார்த்தைகளைக் கேட்டதும் இடிஒலி கேட்ட நாகம்போல் துடித் தது கோபாலனின் மனம். இனி அங்கிருத்தல் கூடாது என நினைத்து மெள்ள எழுந்துபோக ஆரம்பித்தான். அதற்குள் கான்ஸ்டேபிள் வந்து கோபாலனை இழுத்து வீட்டிற்குள் தள்ளினன். அவ்வாறு தள்ளப்பட்ட கோபாலன் தான் ஒரு மாணுக்கன் என்று மட்டும் கூறினன். அதற்கு மேல் பேச அவனுக்கு நா எழவில்லை. இதைக்கேட்ட வரதாச்சாரி "இன் னம் எத்தனைபேர் உன்னைப்போல் வேஷம் போட்டு களவு செய்ய வந் திருக்கிறார்கள். உண்மையை யுரை" என்று கூறிவிட்டு அவனை வீட்டை விட்டு வெளியே தள்ள உத்தர விட்டார். உத்தரவிட்டதுதான் தாமதம்; அந்த கான்ஸ்டபிள் தன் வீரத்தை அந்த அநாதை கோபாலனிடம் காண் பித்தான். மறு நொடியில் பிணம்போல் தெருவில் விழுந்து கிடந்தான் கோபாலன். இதற்குள் பக்கத்து வீட்டுக்காரர்கள் வந்து கோபாலனது நிலைமையைக் கண்டு பரிதபித்து ஒன்றும் பேசாமல் நின்றனர்.

தான் ஒரு மாணுக்கன் என்று கூறியதுதான் கோபாலனுக்குத் தெரி யும். பின் என்ன நடந்தது என்பது கோபாலனுக்குத் தெரியாது. மறு நாள் காலை 7-மணிக்குக் கண்களை திறந்தான் கோபாலன். தான் ஒரு பங் களாவில் மூன்றுவது மாடியிலிருப்பதாக நினைத்தான். ஆனல் சிறிது நேரத்திற்கெல்லாம் தூயவெள்ளை யுடைதரித்த நர்ஸ்களின் நடமாட்டத் தைக் கண்டான். அப்பொழுதுதான் தான் முன்பு பார்க்கவேண்டுமென்று எண்ணியிருந்த ஜெனரல் ஆஸ்பத்திரியி லிருப்பதாக தெரிந்து கொண்

டான். இதற்கிடையில் தன் தகப்பனர் ஞாபகம் வர தன் ஊருக்கு செல்ல வேண்டுமென்ற அவா அவனுக் கேற்பட்டது. ஆனல் படுக்கையைவிட்டு எழுந்திருக்கக் கூட அவனுக்கு சக்தியில்லை. சில நிமிஷங்களுக்கெல்லாம் டாக்டரொருவர் வந்து அவனைப் பரிசீலனை செய்துவிட்டு இன்னம் ஒரு வாரத்தில் குணமாகி விடும் என்று தேறுதல் சொல்லிவிட்டுச் சென்ருர்.

கோபாலனுக்கோ ஒன்றும் விளங்கவில்லை. நான்குநாள் அங்கேயே யிருந்தான். தேகத்திலுள்ள காயமும் ஆற ஆரம்பித்தது. சிறிது பலமும் ஏற்பட்டது. ஐந்தாம்நாள் மாலை 5-மணி இருக்கும். அவனிருந்த கட்டிடத்திற்குள் சில இளங்கன்னிகைகள் நுழைந்தனர். அவர்களில் சிலர் தங்கள் சகோதரர்களைப் பார்த்துப் பேசிக்கொண்டிருந்தனர். அவர்களுடன் வந்த வனஜாதான் அங்கு ஒருவரையும் பார்க்க வராததாலும் அன்றுதான் ஆஸ்பத்திரிக்குள் போனதாலும் அங்கு மிங்கும் சுற்றிப்பார்த்துக் கொண்டிருந்தாள். பார்த்துக் கொண்டிருந்தவள் சிறிது நேரத்தில் கோபாலனது முகத்தை நோக்கினுள். அவனது முகப் பொலிவைக் கண்ணுற்றதும் இரக்கம், அன்பு, வெட்கம் மூன்றும் சேர்ந்து அவளைத் தாக்கின. அவ்வளவு தான் அவளது மனத்தைச் சிறைப் பிடித்தது கோபாலனின் தோற்றம். உடனே வனஜா கோபாலனிடம் சென்று நீங்கள் யார், எந்த ஊர் என வினவினுள். கோபாலனே திடுக்குற்று பதில் ஒன்றும் கூற முடியாமல் தன் கண்களினின்று நீர்த்துளிகளை உதிர்க்க ஆரம்பித்தான். அதைக் கண்ட வனஜாவின் மனம் அலைவிட்ட மெழுகு போல் உருக ஆரம்பித்தது. தன் தேகத்திலுள்ள வெப்பத்தைத் தணிப்பது போலிருந்தது அவளது கண்ணீரருவி. விஷயம் என்ன வென்று ஒருவருக்கும் விளங்க வில்லை. இதற்குள் வனஜாவுடன் வந்தவர்கள் அவளை அழைத்தும் அவள் பதிலொன்றும் கூருததால் அவர்கள் வெளியே போய் விட்டனர். சிறிது நேரத்தில் கோபாலனது மடியில் மூர்ச்சையாய்க் கிடந்தாள் வனஜா. பின் ஓர் நர்ஸ் வந்து மூர்ச்சை தெளிவித்த பின், கோபாலன் அவளை 'நீ யார்' என்று வினவ பதிலொன்றும் கூருமல் தான் மறுநாள் அங்கு வருவதாகக் கூறிவிட்டு அகன்றனள் வனஜா.

கோபாலனுக்கோ ஒன்றும் புரியவில்லை. ஆனல் அன்று முதல் தன் தாய் தகப்பனர் எண்ணத்துடன் வனஜாவின் எண்ணமும் அவன் மனதில் பசுமரத் தாணிபோல் பதிந்திருந்தது. மறுநாள் மாலை வந்தது. ஆவைப் பிரிந்திருந்த கன்றைப் போல் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான் கோபாலன். அந்தோ பாவம்! வனஜா வரவில்லை. முந்திய நாள் நடந்ததெல்லாம் கனவாய் இருக்கலாமோ என்று எண்ணினுன். முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப் படுவதை யொத்தது தனது எண்ணம் என்று நினைத்து வனஜாவை மறக்க முயன்றும் அது அவனது மனதை விட்டு அகன்றிலது.

இஃது அவ்வாறிருக்க வீடு சென்ற வனஜா புத்தி கூர்மையுள்ளவளாதலால் தன் தகப்பனர் பிறருடன் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டதும் தன் மனத்தைக் கொள்ளை கொண்ட கோபாலனுக்கே அவர் கெடுதி செய்திருந்ததாக தெரிந்து கொண்டாள். தன் எண்ணம் தாயின் மூலமே கைகூடுமென நினைத்தாள். ஏனென்றால் வீட்டிற்கு வெளியில் அதிகாரம் செலுத்தும் வரதாச்சாரி வீட்டிற்கு வந்தால் தன் மனைவியின் அதிகாரத்

திற்கு உட்பட்டு நடக்கும் பிரஜைகளில் தலைமை வகிப்பவராவர். தாயிடம் மட்டும் தனது இச்சையைக் கூறிய வனஜா மன்மதனின் பாணத்திற்கு இலக்காயினமையின் மறுநாள் பள்ளிக்குக் கூடச் செல்லவில்லை.

இவ்வாறு வனஜாவின் மனதைச் சிறைப்படுத்திய கோபாலன் ஆஸ்பத்திரியை விட்டு வெளியே வந்தான். தன் ஊர் செல்ல நினைத்து பணத்திற்காக வழி தேடும் சமயம் அவனது ஆருயிர் நண்பன் ரமணனைத் தற்செயலாக பீப்பிள்ஸ் பார்க்கில் சந்தித்தான். நெடுநாள் ஒருவரை யொருவர் பிரிந்திருந்தமையால் ஆனந்தக் கண்ணீருடன் ஒருவரை யொருவர் ஆலிங்கனம் செய்து கொண்ட பின் ரமணன் கோபாலனைத் தன் காரில் ஏற்றிக் கொண்டு தன் வீடு சென்றனன். இரயில் கோபாலனது நிலைமையைக் கேட்ட ரமணன் மறுநாள் காலையில் தன் காலேஜ் பிரின்ஸிபாலிடம் அழைத்துப் போவதாகச் சொன்னான். அவ்வாறே மறுநாள் இருவரும் "லயோலா காலேஜ்" சென்றனர். கோபாலனது உண்மை அறிவொளியைக் கண்ட அந்த காலேஜ் பிரின்ஸிபால் அவனை அன்றுமுதல் இங்கிலீஷ் உபாத்தியாயராக நியமித்தார். கோபாலனுக்கு சம்பளம் ரூ. 200. மறுவாரமே அவனது தாய் தகப்பனார் வந்தனர். மாம்பலத்தில் மனோரமா என்ற பங்களாவில் குடியிருக்கலாயினன் கோபாலன்.

இதற்கிடையில் வரதாச்சாரி மகள் படும் துயரத்திற்கு ஆற்றாமலும் தன் மனைவிக்குப் பயந்தும் கோபாலனைத் தேடித் திரிய ஆரம்பித்தார். தனது சிறிய தகப்பனார் வீட்டிற்குச் சென்றிருந்த ரமணன் தன் நண்பன் கோபாலனைப்பற்றிச் பேசவே, கும்பிடப் போனத் தெய்வம் குறுக்கே வந்ததைக் கண்ட வரதாச்சாரி ஆனந்த மெய்தி மறு நாளே குடும்பத்துடன் மாம்பலம் சேர்ந்தார். கோபாலனைக் கண்டதும் வனஜாவுக் கிருந்த வருத்தம் பறந்தோடியது. மறுவாரத்தில் இருவருக்கும் விவாகம் நடந்தேறியது. அன்று முதல் தொடங்கிய கோபாலனது வாழ்க்கையின் இன்பத்தை எழுதுவது மிகவும் அரிதாகும். அவனது இன்பமான இல்வாழ்க்கை கரும்புத் தடியை நுனியிலிருந்து சுவைத்துக் கொண்டு இனிய ரசம் பருகும் தன்மையை யொத்ததா யிருந்திருக்கு மென்பதற்கு ஒரு சந்தேகமும் வேண்டுமோ?



# பாத்தூண்ணல்

(K. V. சிவசுப்பிரமணியன் B. A.)

மேனாட்டு நாகரிகம் தலைவிரித்தாடும் இவ்விருபதாம் நூற்றாண்டிலே நம் தமிழ்நாடு எந்நிலையிலுளது என்பதை ஒரு சிறிது கவனிப்போம். நாடெங்கும் பசிப்பிணி; செலவுக்குத் தக்க வருவாயின்றி வாடுகின்ற மக்கட் கூட்டமோர் பால்; மெய்வருத்தம் பாராது கண் துஞ்சாது பசி நோக்காது அல்லும் பகலும் உழைத்தும் அரைவயிற்றுக் கஞ்சி தானும் அகப்படாது அல்லற்படும் பயிர்த் தொழிலாளர் மற்றோர் பால். நமது பண்டைக்கால கைத்தொழில் முறைகளைக் கற்றும் அத்துறையில் போதிய வருவாயில்லாது தவிக்கும் தொழிலாளர்களின் கூட்டமோர் பால். இங்ஙனமாக எத்துறையிற் சென்று பொருளீட்டினும் இக்கால மனிதர்களிடையே மன வமைதி என்பதே இல்லாது போயிற்று. என்னை? மேல்நாட்டுக் கலைவல்லுநர்களால் இற்றை நாட்களில் பற்பல புதுப் பொருட்களும், பொழுது போக்குப் பொருள்களும் கண்டு பிடிக்கப்படுகின்றன. எனவே, பண்டைக் காலத்து மனிதனைக் காட்டிலும் தற்கால மனிதனுக்கு அன்றாட வாழ்க்கையில் இன்றியமையாதனவாய பொருள்கள் பலவாயின. ஆனால் அவனுக்கு வேண்டிய அப்பொருள்களை எல்லாம் வாங்கிக்கொள்ள போதிய வருவாய் இல்லாமையால் அவன் மனம் எங்ஙனம் இன்பசாகரத்தில் படிந்து கிடக்கக் கூடும்? பண்டைக்கால தமிழ் மக்கள் போதுமென்ற மனமே பொன் செய்யு மருந்து என்ற முதுமொழிக்கு இலக்காய் விளங்கினார்கள். இந்நாளில், போதாதென்ற மனமே மனிதனைப் புண்படுத்துவதாயிற்று. இனி, பண்டைக் காலத்திலே, தமிழன்னை வீறு கொண்டு விளங்கிய காலத்திலே மக்கள் மனவமைதியும் மகிழ்ச்சியும் பெற்றிருந்தமைக்குரிய காரணங்க ளெவை என்பதும், அவை இற்றைஞான்று காணக் கிடைக்காது ஒழிந்தமை எக்காரணங்களா லென்பதும் ஈண்டு ஆராய்தற்குரியன:—

பண்டைக் காலத்தில் தமிழனுவான் ஒவ்வொருவனும் சோம்பலின்றி தனக்கு வேண்டிய பொருள்களைச் சம்பாதித்து பெரும் பகுதியை தனக்கு வைத்துக் கொண்டு தன்னாலியன்ற சிறு பகுதியை பொருளீட்டி வாழத் திறனற்ற மக்களுக்கு பகிர்ந்தளித்து இன்ப வாழ்வு நடத்தினான். அதுவே பாத்தூண்ணல் எனப்படும். பாத்தூண்ணல் எனும் பண்பின் உயர்வை வள்ளுவனார் மிக அழகாகக் கூறிப் போந்தார். பாத்தூண்ணலாவது தன் உழைப்பால் அறநெறியில் சம்பாதித்த பொருளை இயல்புடைய மூவர் முதலாயினர்க்கும், தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல் என்ற நால்வருக்கும் பகிர்ந்தளித்துத் தானும் உண்டல் என்றார் பரிமேலழகர். பாத்தூண்ணலுக்கு அடிப்படையான பண்பு பிற உயிர்களிடத்து அன்பு. அன்பின் வழியது உயிர் நிலை. ஆகலின் மக்கட் சமூகத்தில் அன்பு பரவுதல் வேண்

டும். அன்பெனும் உயரிய பண்பு அரசன் முதல் அடிமை வரையில் எல்லோர் உள்ளத்திலும் தாண்டவமாடிக் கொண்டிருத்தல்வேண்டும். அதுவே நாகரிகம் பெற்ற நாடெனப் பெரியோர்களால் கருதப்படுகிறது. அன்புடைமையால் வன்கண்மை நீங்கி மக்களிடையே சகோதர பாவம் ஏற்படும். அங்ஙனம் பக்குவமடைந்த நாட்டிலே உள்நாட்டுக் கலகமோ அன்றி படையெடுப்போ ஏற்படாது. தற்காலத்தில் ஐரோப்பிய நாடுகள் அன்பெனும் பண்பினை அறவே மறந்து இரத்த வெறிகொண்டு ஒன்றோடொன்று மறப்போர்தொடுத்து மாய்கின்றன. இதனால், பண்டைத் தமிழ் மக்களிடையே போர் நிகழவில்லை என்று கூற முன்வரவில்லை. பண்டைத் தமிழர் போர் முறையிலுங்கூட அன்பு காணப்பட்டது. ஒரு நாடு பிறிதொரு நாட்டின் மேல் போருக்கெழுமுன் பறையறைவித்து ஆநிரை கவர்ந்து பின்னர் அறப்போர் புரிவர். அறப்போராவது, பார்ப்பாரும் ஆவும், பெண்டிரும், குழவியும், விருத்தரும் பாலரும், கருவுறு பெண்டிரும், ஆயினோரை ஊரினின்றும் அகற்றிய பின்னர், முரசறைந்து கடிமரம் வெட்டி போர் தொடுப்பது. அத்தகைய போர்முறை எந்நாட்டிலும் இதுகாறும் இருந்ததில்லை என்றே கூறலாம். சுருங்கக் கூறின் தமிழர் அன்புருவாயவர் எனக் கூறலாம். அன்பெனும் பண்பு நண்பெனும் நாடாச் சிறப்பினை நல்கும். ஒருவன் மனத்தின்கண் அன்பில்லாது இல்லறம் நடத்தல் பாலை நிலத்தின்கண் 'பட்டமரம் தளிர்த்தாற்போலும் என வள்ளுவனார் மிக அழகாகக் கூறினார். அன்பெனும் பண்பினால் உடன் பிறப்பெண்ணம் தோன்றுமென முன்னர் கூறினேன். எனவே, பண்டைக்காலத் தமிழன் தன்னை யடைந்தவரனைவரும் தனது உடன் தோன்றலர் எனவே கருதினான். அதனால் தான் பாடுபட்டுத் தேடிய பொருளில் அவர்களுக்கும் ஒரு பகுதியைக் கொடுத்து தானும் உண்டு மகிழ்வானாயினன். ஆகையால் மக்களிடையே மன வேறுபாடின்றி ஒற்றுமை ஏற்பட்டது. அதன் பயனாய், பிறனொருவனைக் கெடுத்து தான் மட்டும் வாழவேண்டும் என்ற கொடிய எண்ணம் அறவே ஒழிந்தது. பாத்துண்ணல் எனும் பண்பு பரவி விளங்கியது. பகிர்ந்துண்டு வாழ்தலே ஆரா இன்பம்; அதுவே தன்னலமற்ற தொண்டு. பகுத்துண்ணும் முறை கையாளப்படும் நாட்டில் ஏழை என்றும் பணக்காரனென்றும் ஏற்றத் தாழ்வு காணமுடியாது. இம்முறை வழக்கிலிருந்துவரும் ருஷ்ய தேசத்தின் உயர்ந்த நிலையை அன்பர்கள் நோக்குவார்களாக. இத்தகைய சிறப்புவாய்ந்த "பாத்துண்ணல்" எனும் பண்பு தற்காலத் தமிழர்களிடம் தினைத்துணைகூட காணக்கிடைத்திலது. அதன் காரணம் என்ன? அன்பெனும் பண்பினை அடியோடு மறந்தனர்; அந்நிய நாகரிகத்தின் பயனாய் பிறர் கெடத் தான் வாழும் மனோபாவம் மக்களைப் பிடித்துக் கொண்டது. அதன் பயனாய், நெற்றிவியர்வை நிலத்தில்விழப் பாடுபடுபவன், பலனடையாது வருந்தி நிற்க, பணக்காரர்கள் விலாப்புடைக்க உண்டு, தன்னலங் கருதித் தம்மினும் மிக்க பணமோ அதிகாரமோ படைத்தவர்களைக் கூட்டிக்கொண்டு விருந்தளித்து விளையாட்டயர்ந்து காலத்தைப் போக்குகின்றனர். உதாரணமாக, சென்னையில் பூந்தமல்லி ஹைரோட், அடையாறு முதலிய இடங்களிலுள்ள உய்யானவனங்கள் நிறைந்த மாடமாளிகைகள் எல்லாம் கிராமங்களிலுள்ள ஏழைக் குடியானவர்களின் பேருழைப்பின் பயனாய் எழுந்தவையே என்பது அனைவரும் அறிந்ததொன்று. செல்வந்தர்கள் தம்மை நம்பி யடுத்துப் பிழைக்கவந்த குடியானவர்கள் வயிற்றுக்குப் போதிய கஞ்சி

கிடைக்காது வாடிக்கிடக்க தாம் மட்டும் குபேர வாழ்வினை மேற் கொண்டு பெண்டு பிள்ளைகளோடு கடற்கரை காற்று நாடி மோட்டாரி லேறிச் சென்று பொழுது போக்குதல் முறையோ? அன்னாரது அகத்தின் கண் அன்பெனும் பண்பு அறவே ஒழிந்ததனாலன்றோ இத்தகைய வன்கண்ணராய் மாறிவிட்டனர். இறைவன் இவர்களுக்கு இரக்கமெனும் பணியினை யூட்டி ஏழைகளுக்கு அருளும் நாளென்னாளோ? இங்ஙனம் உண்ண உணவும் உடுக்க உடையுமின்றி பெரும்பான்மை மக்கள் வாடி வதங்கித் தவித்துக் கொண்டிருக்க, ஒரு சிலர் மட்டுமே ஏழை மக்களின் உழைப்பால் கிடைத்த பொருளைத் தனக்கும் தன் மனைவி மக்களுக்குமாக வேண்டிய பொருள்களில் செலவழித்து மகிழ்கின்றனர். பாடுபட்டவன் பயனடையாவிடில் அவன் மனம் படும்பாடு சொல்லுந்தரத்ததோ? வறுமைப் பேயின் கொடுமையால் உடல் வளம் குன்றி உற்சாகம் இழந்து நடைப்பிணங்களாய் ஒடுங்கி நிற்கும் இவர்களுக்கு இந்த உலகமானது ஆசைப் பேய்களும், வஞ்சனை நாய்களும், பொறாமைக் கழுகுகளும் கூடிக்கொண்டு உயிரோடு கொத்திப் பிடுங்கித்தின்னும் பயங்கரமான போர்க்களமாகத் தோன்றுகிறது. பணப்பேய் தலைவிரித்தாடும் இவ்வுலகம் அவர்களுக்குக் கொடிய சுடுகாடெனத் தோன்றும்.

இங்ஙனம் தமிழ் நாட்டில் பெரும்பாலோர் வயிற்றுப் பெருமான் பொருட்டே வாழ்நாளெல்லாம் உழைக்கவேண்டி யிருப்பதால் அவர்களது மனம், தெய்வ வழிபாடு, ஓவியம், காவியம், நாடகம், மருத்துவம், பௌதிக ஆராய்ச்சி முதலிய துறைகளில் எங்ஙனம் செல்லுதல்கூடும்? அதனாலேயே பண்டைக்காலத்தில் தமிழரிடையே இருந்தனவாகக் கூறப் படும் கலைகள் யாவும் நாளுக்கு நாள் அழிந்து கொண்டே வருகின்றன. "வேத்தியல் பொதுவியல் என்றிருதிறத்துக் கூத்தும் பாட்டும் தூக்கும் துணிவும், பண்ணியாழ்க் கரணமும் பாடைப் பாடலும், தண்ணுமைக் கருத்தும் தாழ் தீங்குழலும் நாடகமகளிர்க்கு நன்கனம் வகுத்த ஓவியச் செந்நூல் உரைநூற் கிடக்கையும் கற்றுத் துறைபோகிய பொற்றொடி நங்கை"யாய் விளங்கினள் மணிமேகலை. அக் கலைகளெல்லாம் இற்றை நாட்களில் எங்கு சென்றொளித்தன? ஓதுவாரின்றி ஒடுங்கிய கலைகள் பல; ஆதரிப்பாரின்றி அழிந்த கலைகள் பல. இவற்றின் சிதைவுக்குக் காரணம் வறுமைப் பிணியே.

"நீரின்வந்த நிமிர்பரிப் புரவியுங்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமு மகிலும்
தென்கடன் முத்துங் குணகடற் றுகிருங்
கங்கை வாரியுங் காவிரிப் பயனும்
ஈழத் துணவும் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெரிய வீண்டி"

இருந்த தமிழ்நாடு இந்நாளில் எந்நிலையி லிருக்கிறது? நினைப்பின் மனம் பதறுகின்றது. வயிற்றிற்கு உணவின்றி வாடிவதங்கும் இந்தியர்கள் வனப்

பின் மிக்க ஓவியம் தீட்டுதல், வானேறி யுயரப் பறத்தல் முதலிய நவீன ஆராய்ச்சித்துறைகளை எங்ஙனம் கைக்கொள்ள வியலும்? எனவே, வறுமைப்பிணி நாட்டை விட்டொழிய வேண்டும். வறுமை யொழிய வேண்டுமாயின் பாத்தூண்ணல் எனும் பண்பு பரதநாட்டு மக்களிடையே பரவுதல் வேண்டும். அன்றே நம்நாடு பண்டைநாட் சிறப்புகளை எல்லாம் பெற்று மீண்டும் புகழுடன் பொலிவுறும். அப்பொழுதுதான், "புத்தம் புதியகலைகள் மெத்த வளருது மேற்கே; அவை யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்" என்று கூறிய பாரதியாரின் ஆவல் முற்றுப்பெறும். திறக்குறளில் "பாத்துண்ணல்" எனும் சொற்றொடர் காணப்படும் பாக்கள் வருமாறு:—

பாத்தூண் மரீஇயவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது. (ஈகை)

பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்று மில். (இல்வாழ்க்கை)

தம்மிலிருந்து தமது பாத்து உண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு. (புணர்ச்சி மகிழ்தல்)

வரைவு விழைந்த தோழிக்கு, தலைவன் "இல்லறஞ் செய்தாரெய்தும் துறக்கத்தின்பம் எனக்கு என் காதலியிடத்து புணர்ச்சியே தரு"மென கூறியதாக கடைசி குறள் அமைந்திருக்கிறது.

[இஃது, 9-1-1938-ல் சென்னையில் நடந்த நான்காவது தமிழர் மகாநாட்டில் வித்வான் திரு. T. P. மீனாட்சிசுந்தரம் பிள்ளை. M. A. B. L., M. O. L. அவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவின் ஒருசில கருத்துக்களை ஆதாரமாகக் கொண்டு எழுதப் பெற்றது.]

# தமிழ்நெறி வழக்கம்



(கவிராஜ பண்டிதர்- . திரு. ரா. தீர்மப்ப ஐயர்.)

இக் கட்டுரையின் தலைப்புப்பெயரை நோக்குவோர், தமிழ் மொழியினது பல்வகைய வழிகளின் வழங்குத லுடைமை யென்ற பொருளில் அஃது அமைக்கப்பெற்றிருக்கலாமோ என்று யோசிக்கலாம். பொதுவாக அங்ஙனம் பொருள்படுமாயினும், சிறப்பு முகத்தான் இதற்கு வேறு பொருளுண்டாமாகலின், அதனைப் புலவராயினர் எடுத்துத் தெருட்டியவாறு ஈண்டொரு சிறிது தெரிக்கலுற்றும்.

'குமிழிநீ ரொடுஞ் சோரிக்
　　கனலொடுங் கொழிக்குங் கண்ணன்
தமிழ்நெறி வழக்க மன்ன
　　தனிச்சிலை வழங்கச் சாய்ந்தார்
அமிழ்பெருங் குருதி வெள்ளை
　　மாற்றுவாய் முகத்திற் றேக்கி
யுமிழ்வதே யொக்கும் வேலை
　　யோதம்வந் துடற்றக் கண்டான்.'

என்பது, கம்பராமாயண யுத்தகாண்டத்து இராவணன் களங்காண் படலத் துள்ள அரிய பாசுரமாகும்.

தேவர்கள் வருந்தும்படி வானரர்களை யோட்டி இலக்குமணனை மயன் கொடுத்த வேற்படையால் வீட்டி இராவணன் மகிழ்ந்திருக்கையில், மூல பல முடிந்ததைக்கண்ட தூதுவர் விரைந்து தசமுகனருகிற்போந்து செய்தி தெரிவிக்கவே, அரக்கர்கோன் அச்சமுந் துக்கமும் மேலிட்டுத் திகைத்து நின்று மூலபல முற்றும் முடிந்தது பொய்போலும் என்றயிர்த்துக் கூற உடனே மாலியவான் என்பான் தூதர் கூறியது பரம நிச்சயமே யென்றற்குரிய காரணங்களைக் காட்டுவானாயினன். மற்றும், இப்போதேனும் பிராட்டியை இராமன் பால் விடுத்துய்வதே செயற்குரியதாம் என மாலியவான் செப்பக் கேட்ட கந்தசன் நான் இலக்குமணனைக் கொன்றிட்டேனாதலால், இனி வானரப்படை வருந்த இராமன் றன்னுயிரை நீப்பான்; வெற்றி யென்னதே யாகுமென்று செருக்கிக் கூறினன். அக்காலை, யனுமான் கொணர்ந்த மருந்து மலையால் இலக்குமணன் பிழைத்தெழுந்ததைக் கண் கூடாகக் கண்ட தூதுவர் அங்கிருந்து போந்து அச் செய்தியை இராவணனுக் கறிவித்தனர். அரக்கன் முதலில் நம்பாதவனாகி அதனுண்மையைக் காணக் கோபுரத்தில் மீதேறி, அரக்கியரின் புலம்பலொலி செவிப்படப் போர்க்

களத்தின் அலங்கோல நிலை பலவற்றையுங் காண்பானுயினுன் என்ற சந்தர்ப்பத்தில் கம்பநாடர் இக் கவியைக் கூறி யுள்ளார்.

[('கண்களிலிருந்து வருத்தத்தால்) குமிழ்த்தலையுடைய கண்ணீரோடு (சினத்தினுல்) நெருப்புடன் குருதியுங் கொழிக்கின்ற கண்களையுடையவனுன, இராவணன், தமிழ்மொழியில் மரபாக உள்ள வழக்குக்கள்போல (மிகப்பலவாக) ஒப்பற்ற (இராமனது) வில் (அம்புகளை) வழங்க, இறந்த அரக்கரது அமிழ்கின்ற பெருங்குருதிப் பெருக்கைக் குடித்து, ஆற்றின் முகத்துவாரத்தினுல் உமிழ்வபோலக் கடலின் வெள்ளம் வந்து அலைமோதுவதைக் கண்டான்']

இராமனது வில், மூலபலப்படைமீது அபரிமிதமாக அம்புகளைப்பொழியலாயிற்று என்ற விடயத்திற்குத் தமிழ்ப்பாஷையில் மரபாக உள்ள வழக்குக்கள் மிகப் பலவாக இருப்பதைக் கவிஞர்பெருமான் உவமையாகக் குறித்தாரென்பது இக் கவியிற்றேன்றும் சாமானியமாகிய பொருளாகும்.

தமிழ்மொழியில், மரபாக உள்ள வழக்குக்கள் மிகப் பலவாம். ஒரே வில்லிலிருந்து புங்கானு புங்கமாக அம்புகள் பல புறப்பட்டு வந்தமைக்கு மேற்கூறிய உவமையைக் காட்டியதிலிருந்து கவிஞருடைய தமிழ்ப்பாஷை யார்வமும், அம்மொழியின் கரைகாணவொண்ணுத ஆழமும், கம்பீரமும், பெருமிதமும், தன்னிகரில்லாச் சிறப்பும், பிற பாஷைகட்கெல்லாந் தலைமை மேற்கொண்டு தனியாசு செலுத்திவரும் வெற்றியும் பெறக் கிடக்கின்றன.

இனித் 'தமிணெறி வழக்க மன்னதனிச் சிலைவழங்க' என்ற இத் தொடர்க்குக் கம்பர் நெஞ்சுக்கு மிகப் பாங்காக உள்ள பிறிதொரு பொருளும் உண்டு. அப் பொருள் வருமாறு:—அது, (தமிழ்ப்பாஷையின் பல்வகைய புறத்திணை வழிகளிலே ஒன்ருக அமைந்துள்ள 'எருமை மறம்' என்ற துறைத்தன்மை தன்னிடத்துப் பொருந்தச் சிறிதும் அஞ்சாது, வீரனுகிய இராமன் வெற்றிக் கோதண்டத்திருந்து பல்வகைய கொற்றப் பகழிகளைக் கொழிக்க) என்பதாம்.

'எருமை மறம்' என்பது இன்னதெனத் தெரிந்தாலன்றித் 'தமிழ்நெறி வழக்கம்' விளங்காதலின்றித் 'தமிழ்நெறி வழக்கம்' விளங்கா தாகலின், அதனை யினி விவரமாகத் தக்க சான்றுகள் கொண்டு விளக்குவாம்.

'தானை யானை குதிரை யென்ற
நோனு ருட்கு மூவகை நிலையும்
வேன்மிகு வேந்தனை மொய்த்தவழி யொருவன்
ருன்மீண் டெறிந்த தார்நிலை யன்றியு
மிருவர் தலைவர் தபுதிப் பக்கமும்
ஒருவ னெருவனை யுடைபடை புக்குக்
கூழை தாங்கிய வெருமையும் படையறுத்துப்
பாழி கொள்ளு மேமத் தானும்

..............................
..............................
..............................
புல்லித் தோன்றும் பன்னிரு துறைத்தே.'

என்பது, தொல்காப்பியப் புறத்திணை யியலி லமைந்து பொருளாகிய தும்பைத்திணைக்குத் துறைகள் இன்ன தன்மையன என்பதை வகுத்துக் காட்டும் அரிய சூத்திரமாகும்.

இதில் 'ஒருவன் ஒருவனையுடை படைபுக்குக் கூழை தாங்கிய எருமையும்' என்ற தொடரே யீண்டு நம் ஆராய்ச்சிக்குரியதாகும்.

[உடைபடை ஒருவன்புக்கு ஒருவனைக் கூழை தாங்கிய எருமையும்—தனதுடைந்த படைக்கண்ணே ஒரு படைத்தலைவன் சென்று நின்று, அவ்வினனக் கெடுத்த மாற்று வேந்தன் படைத்தலைவனை அவன் எதிர்கொண்டு நின்ற பின்னணியோடே தாங்கின கடாப்போலச் சிறக்கணித்து நிற்கும் நிலைமைக்கண்ணும்.]

என்பது, இத் தொடரின் கீழ் உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் பொறித்துள்ள அரிய உரையாம்.

இதற்குதாரணமாகச்,

'சீற்றங்கனற்றச் சிறக்கணித்துச் செல்லுங்கா
லேற்றெருமை போன்றுனிகல் வெய்யோன்—மாற்றான்
படைவளவு காத்துத்தன் பல்படையைப் பின் காத்
திடை வருங்காற் பின்வருவார் யார்'

என்ற சிறந்த செய்யுள் அவ் வுரையின் கீழ்க் குறிக்கப்பட்டுள்ளது. இச் செய்யுள் இன்ன நூலில் உளதென்பதற்கு ஆதார மொன்றுங் கிடைத்திலது.

இவ் 'வெருமை மற'த்தை விளக்கப் போந்த புறப்பொருள் வெண்பாமாலை யாசிரியர் கூறியதனை யினிக் காண்போம்.

## [எருமை மறம்.]

'வெயர் பொடிப்பச் சினங்கடைஇப்
பெயர்படைக்குப் பின்னின்றன்று'

[வேரரும்பச் சினத்தைக் கடாவி, முதுகிட்டதன் சேனைக்குப் பின்னே நின்றது.]

'கடுங்கண் மறவன் கனல்விழியாச் சீறி
நெடுங்கைப் பிணத்திடை நின்றான்—நடுங்கமருள்
ஆள்வெள்ளம் போகவும் போகான்கை வேலூன்றி
வான்வெள்ளந் தன்மேல் வர'

(தறுகண் வீரன் நெருப்புப் போல விழித்துக் கோபித்து நெடிய கையை யுடைய யானைப் பிணத்தின் நடுவிலே நின்றான். கண்டார் நடுங்

கும் போரிடத்தக் காலாள் வெள்ளம் இரிந்தோடவும் போகானுகித் தன் கைவேலை யன்றிப் பகைவர் வாட்படை வெள்ளம் தன் மேலே யடர்ந்து வர.)

இவையே, இத் துறையின் கீழ் இந் நூலுட் காணப் படுவனவாம்.

இனித் திருவாரூர் வைத்தியநாத தேசிக ரென்பார் 'இலக்கண விளக்க' மென்னும் அரிய இலக்கண நூலில் இத்துறை விடயமாகக் கூறிய தனை யெழுதுவாம்.

'தும்பை தானே நெய்தலது புறனே
மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
சென்றுதலை யழிக்குஞ் சிறப்பிற் றென்ப'

என்பது, தும்பைத்திணை, நெய்தற்றிணைக்குப் புறனென்பதைக் கூறவந்த சூத்திரமாகும்.

(மேற் கூறிய புறத்திணை யேழனுள் தும்பைத்திணை, முற் கூறிய அகத்திணையேழனுள் நெய்தற்றிணைக்குப் புறனும்; அது தனது வலியினை உலகம் மீக் கூறுதலே தனக்குப் பெறும் பொருளாகக் கருதி மேற் சென்ற வேந்தனை அங்ஙனம் மாற்று வேந்தனும் அவன் கருதியமைந்தே தான் பெறு பொருளாக எதிர் சென்று தலைமையைத் தீர்க்குஞ் சிறப்பினை யுடைத் தென்று சொல்லுவர் ஆசிரியர்) என்பது, மேற்படி வைத்தியநாத தேசிகர் எழுதிய உரையாம்.

'கருங்கழல் வேந்தன் செங்களங் கருதிப்
பசுந்துணர்த்தும்பை வெண்பூச் சூடலும்
....................................
....................................
குருதிவே லொருவன் கூழை தாங்கி
யிரிபடைப் பின்னின்ற வெருமை மறமும்
.................................
...........................
செப்பிய நாலேழ் திறத்தன வெல்லாம்
துப்பமை தும்பைத் துறையெனப் படுமே'

என்பது, அத் தும்பையின் துறைவகைகளை விவரித்துக் கூறிய சூத்திர மாகும்.

இந் நூலிற் குறித்த எருமை மறத்திற் குதாரணமாகப் புறப்பொருள் வெண்பாமாலை யாசிரியர்காட்டிய செய்யுளையே இவரும் உதாரணமாகக் குறித்துள்ளார்.

இம் மூவகை யிலக்கண நூலாரும் விளக்கிக் காட்டிய தன்மையிலிருந்து 'எருமை மறம்' என்ற தும்பைத்திணையைச் சார்ந்த புறப் பொருட் டுறையின் இலக்கணங்கள் யாவும் தெள்ளிதிற் பெறக் கிடக்கின்ற தன்மையை ஈண்டுக் கண்டு கொள்க.

இனி, இத் துறை அசகாய சூரனாகிய கொற்றக் கோதண்டத்தை யன்றி வேறு துணை வேண்டாத ஐயனாகிய இராமனிடத்து அமைந்திருக்கும் பான்மையைக் கவனிப்போம்.

நிகழும் போர் கண்ட யாவர்க்கும் அச்சத்தை விளைக்கக்கூடிய தன்மை யொன்று; தன்னுடன் வந்த காலாட்சேனையின் மிகுதி பகைவர் சேனையைக் கண்டு பயந்தோடும் தன்மையொன்று; அங்ஙனந் தன் காலாட்சேனை வெருவி இரிந்தோடவும் தான் அவண் விட்டேகாது தன் கை வேலை யூன்றி நிலையாக வீற்றிருத்தல் ஒன்று; பகைவர் வாட்படை வெள்ளம் தன் மேல் பெரிது மடர்ந்து வருதல் ஒன்று; ஆக இத் தன்மைகள் யாவும் நிகழ்ந்த போதிலும் மகா வீரனாயினான் ஒருவன் நெருப்புப் போல் விழித்த கண்களை யப்படியே கொண்டவனாய்த் துதிக்கைகளைக் கொண்ட யானைகள் மிகுதியாக இறந்து கிடக்கின்ற பிணங்களினிடையே கனகம்பீரமா யமைந்து நிற்றலையே, பெரியோர் 'எருமை மற'த்துக்கு உதாரணமாகக் காட்டுவர். இதனால், தனது வலியினை உலகம் மீக் கூறுதலாகிய தன்மை, பகைச் சேனையைப் பராக்கிரமங் காட்டி வென்ற படை வீரனொருவனுக்கு வெற்றியுடனமைதல் பெறக் கிடக்கின்றமை காண்க.

மூல பலவதைப் படலத்திற் கம்பர் குறித்துள்ள விடய அமைப்புக்களே மேற்குறித்த துறையை விளக்கப் போதியனவா யிருத்தலின் ஈண்டவற்றைச் சுருக்கி வரைவாம். அச் சுருக்கம் வருமாறு:—

[வன்னி யென்பவனை யுள்ளிட்ட அரக்கர்சேனையை நோக்கி யிராவணன் 'நான் வானர சேனையைத் தொலைக்கின்றேன்; நீயிர் இராமலட்சுமணரை வதியுங்கள்' என்ன, அவர்கள் உடனே தத்த மூர்திகளிலேறிச் சேனையுடன் சேர்ந்தனர். அச் சேனைக்கு முன்னே மூலபலஞ் செல்லக் கட்டளையிட்டு அரக்கர் வேந்தன் தேர்மீது இவர்ந்து வானரப் படைமீது பொரச் சென்றான். மூலபலச் சேனை பத்துத் திக்கிலும் பரவவே, அதன் தொகை மிகுதியைக் கண்டு, * தேவரஞ்சிச் சிவபிரானிடம் முறையிட்டனர்,

இராமனொருவனே இவர்களை யெல்லாஞ் சிதைத் தொழிப்பான்; நீவிர் யாவிரு மஞ்சற்க எனப் பரசிவமூர்த்தி யவர்க்குத் தேறுதல் கூறினான். இது நிற்க, † வானரர்கள் அச்சேனைத் திரளைக்கண்டு மிக அஞ்சிச் சிதறி

---

* ஒருவரைக் கொல்ல வாயிர மிராமர் வந்தொருங்கே
இருபதிற் றிரண்டாண்டு நின்றமர் செய்தா லென்னாம்?
நிருதரைக் கொல்வ திடம் பெறு:விடையி னின்றன்றோ?
பொருவதிப் படைகண்டு தம்முயிர் பொறத்தன்றோ?

[கம்பராமாயணம் மூலபல வதைப்படலம் யுத்தகாண்டம்......செய்யுள் 25.]

† 'அரியின் வேந்தனு மனுமனு மங்கதனவனும்
பிரிய கிற்றில ரிறைவனை நின்றனர் பின்றார்
இரியலுற்றனர் மற்றையோரி யாவரு மெறிநீர்
விரியும் வேலையுங் கடந்தது நோக்கினன் வீரன்'

(மூலபல வதைப்படலம் செய்யுள் 30.)

யோடலாயினர். சுக்ரீவன் அங்கதன் அனுமான் என்ற இவர்கள் தாம் அப்போது ஓடாதவர்கள். அப்போது இராகவன், வீடணனால் அச்சேனையின் விவரந் தெரியப் பெற்று அஞ்சியோடின வானரர்களை அங்கதனைக் கொண்டழைப்பிக்கையில் அவ்வானரர்கள் தமக்குற்ற பேரச்சத்தைத் தெரிவிக்கலாயினர். யாவர்க்கும் அறிவூட்டி யூக்கம் பிறப்பிக்கவல்ல நீயும் அஞ்சற்பாலையோ? என்று சாம்பவானை நோக்கி அங்கதன் வினவ ‡ விடையாக அவன் எத்தகையோரையும் நடுநடுங்கச் செய்யும் எதிரிகளின் பேராற்றலை யெடுத்துக் கூறி நாணி நிற்பானாயினன்.

உடனே வாலி சேய் 'வருவது வருக; இச்சேனைகட்கு முன் நம்மாற் செய்யலாவது வேறொன்றுமில்லை; நாமனைவேமும் இனி யிராமனைச் சார்ந்து நிற்போம்' என்று கூறித் திரும்ப, ஜாம்பவானுடனே வானரர்களுமுடனாகத் திரும்பி வந்து சேர்ந்தனர். அதுகாலை, இராமன் வானரத்தானையைப் புரக்குமாறு இலக்குவற்குக கட்டளை யிட்டுச் சுக்ரீவன் முதலானோரை அன்னானுக்குத் துணை வலிமையாக அமைத்திட்டுத் தான் தன்னந் தனியனாய்ப் பொரச் செல்வானாயினன். அதுகண்ட வாயுசேயாகிய அனுமான் தன் தோளிலிவர்ந்து கொண்டாதல், அல்லது தானருகிருந்து குற்றேவல் புரிய உடன்பட்டாதல் போர் புரிதல் வேண்டுமென இராமனைப் பிரார்த்திப்பானாயினன். ¶ ரகுவீரன் அதற்குடம்படானாய் அவனையும் இலட்சுமணனுக்கே துணைபுரியும்படி பணித்துத் தான் தனித்து நின்று ஓய்வு ஒழிச்சல் இன்றி, மாற்றார் சேனையை மருட்டி அம்பு மழையைப் பொழிந்து பகைவரது முன்னணிச் சேனையை யெல்லாந் தொலைத்தொழித்தனன்.

அதுகண்ட அரக்கர் சேனைத் தலைவன் வன்னி என்பான், 'ஒருவனை யெதிர்க்க இத்தனை பேரிருந்தும் முடியாமல் மயங்குவதோ? நாம் ஒருங்கே மேல் விழுந்தாலும் அவ்விராமனை யொன்றும் புரிய வொட்டாது செய்திடலாமே' எனக்கூற, உடனே எழுவெள்ளஞ் சேனைகள் ஒருங்கே இராமன்மீது படைகளைப் பொழிவவாயின. யாவற்றையும் பெருமான் சின்ன

‡ 'நாணத்தாற் சிறிது போது நலங்கின னிருந்து பின்னர்த்
தூணொத்த திரள்தோள் வீர! தோன்றிய வரக்கர் தோற்றம்
காணத்தானிற்கத் தானக் கறைமிடற் றவர்க்குமாமே?
கோணற் பூவண்ணும் வாழ்க்கைத் தூரங்கின் மேற்
[குற்றமுண்டோ?'

'தேவரு மவுணர்தாமுஞ் செருப்பண்டு செய்தகாலம்
ஏவரே யென்னாற் காணப்பட்டிலர் இருக்கையான
மூவகை யுலகினுள்ளா ரிவர் துணை யாற்றன் முற்றும்
பாவகருளரே! கூற்று மிவருடன் பகைக்கவற்றோ?'

¶ மாலியைக் கண்டேன் பின்னை மாலிய வானைக் கண்டேன்
கால நேமியையுங் கண்டேன் இரணியன் றனையுங் கண்டேன்
ஆலமா விடமுங் கண்டேன் மதுவினை யனுசனோடும்
வேலையைக் கலக்கக் கண்டேன்; இவர்க்குள மிடுக்குமுண்டோ?
(மூலபலவதைப் படலம் செய்யுள் 50, 51, 52.)

பின்னைப்படுத்தியும், எதிர்ச் சேனைகள் மிகப் பலவாக எதிர்த்து வர, அவற்றையும் அவ்வீரன் பல துண்டங் கண்டனன். இங்ஙனம் நூறு வெள்ளஞ் சேனை யிரவிகுலாதிபனால் நொறுக்குண்டு சிதைந்தன. அப்போதும் விடாமல் பதினாயிரங் கோடிச் சேனைத் தலைவர் காகுத்தனைக் கிட்டி யமர்புரிவாராயினர். பலவாறு அவர்கள் அனைவோரையும் வீழ்த்தித தள்ளிப் பின்னர் இராமன் இறுதியில் காந்தர்வாஸ்திரத்தைத் தொடுத்து விடுப்பானாயினன். மூலபலம் அப்போது பெரும்பான்மையும் மாண்டொழிந்தது. பின்னர் வெவ்வேறிடத்திருந்த அரக்கர் பலர் திரண்டு தசரதன் புதல்வனுடன் பொருவாராயினர். வாலியை வதைத்தோன் சாரிகை சுற்றிப் பொருகின்ற விசையினால் அப்போரில் பகைவர்க்கு எங்கும் இராமனாகவே தோன்றிற்று. அன்றியும் தம்மவரே இராமனாகத் தோற்றியபடியால் தம்மவரைத் தாமே அச்சேனைக் கூட்டத்தார் பொருது மடிவாராயினர்.

எண்ணிறந்த நிசாசரர் பின்னுந் தெய்வப் படைகளை விடுத்து வெல்வோமெனக் கருதி நாராயணாஸ்திரம் முதலிய பல அஸ்திரங்களைத் தொடுப்பாராயினர். பெருமான் அவ்வக் கடவுட்கணைகளாற் பகைவர் பகழிகளைச் சிதைத்துத் தான் பின்னுமவர் மீது தெய்வவாளிகளை விடுப்பின், உலகம் நசித்துப் போகுமென்றுணர்ந்து, அது தவிர்ந்து கடுங்கணை மூலமாகவே எதிரிகளைக் கொன்றிட்டனன். இங்ஙனம் பகைவர் யாவரும் இறந்தொழிவாராயினர். புவிப் பொறையும் நீங்கலாயிற்று. ¶ ஆயிரம் யானையும், பதினாயிரந்தேரும், ஒருகோடி குதிரையும், ஆயிரம் சேனாதிபதிகளும் இறந்தால், இராமனுடைய வில் ஒருதரம் கணீரென ஒலிக்கும்; அந்த மணி ஏழரை நாழிகை ஓயாதொலித்த தென்றால் இறந்த பகைவர் தொகுதியைக் கணக்கிட்டுரைப்ப தெங்ஙனம்?

இவ்வண்ணம் மூலபல அரக்கரை யெல்லாம் ஒழித்த பின்பு, முனிவர் முதலியோர் மகிழத் தேவர்கள் பூமாரி பொழியப் பொருத இளைப்புத் தீர்ந்து ஸ்ரீ இராமன் அப்போர்க்களத்தை விட்டு இளைய பெருமானோடு இராவணனை யெதிர்பார்த்துக் கொண்டு அவன் போர்புரிகின்ற யுத்த களத்தை நோக்கிச் சென்றான்] என்பதாம்.

'கடுங்கமருள்—ஆள் வெள்ளம் போகவும் போகான், கைவேலூன்றி, வாள்வெள்ளந் தன்மேல்வர' என்ற 'எருமை மறத்'தின் இலக்கணம் யாவும் இம்மூலபலப் போரில் பொருந்தி யிருப்பது காணத் தக்கதாகும்.

இம் மூலபல வதைப் படலத்திற்குப் பின் 'வேலேற்ற படலம்' 'வானரர் களங் காண்படலம்' 'இராவணன் களங்காண்படலம்' 'இராவணன் தேரேறு படலம்' என்ற படலங்கள் யுத்த காண்டத்தில் உள்ளன. மூலபல முடிந்த பின்னர் இராவணன் பொருதற்குத் தேரேறிச் சேனைகளுடன் இராமனிருக்கு மிடத்திற் போந்தான் என்று கதைத் தொடர்ச்சி யுள்ளது

---

¶ 'ஆனை யாயிரந் தேர் பதினாயிர மடர்பரியொருகோடி
சேனைகாவல ராயிரம் பேர்படிற்செழுமணிக் கவந்த மொன்றாடும்
கானமாயிர மாயிரங் கோடிக்குக் கவின்மணி கணிலென்னும்
வன வம்மணி யேழரை நாழிகை யாடிய தினிதன்றே.
(மூலபலவதைப் படலம் செய்யுள் 228)

ஞல், இத்தன்மை, 'வாள்வெள்ளந் தன்மேல் வர' என்ற அத்துறையைப் பற்றிய செய்தியில் அடங்கி யிருத்தல் ஊன்றி யுணரற்பாலது.

இனி, 'நெடுங்கைப் பிணத்திடை நின்றான்' என்ற அத்துறையின் செய்திக்குரிய தன்மையை யிராம காதையிற் பொருத்திக் காட்டுவாம்.

பிணக் குவயல் மலைமலைகளாகக் குவிந்து கிடத்தலால், சாரிகை திரியும் இராமன் ஓர் பிணமலையிலிருந்து மற்றொரு பிண மலையிற்றாவி நடக்கும்படி யாயிற்று என்ற கருத்தை யடக்கிக் கம்ப நாடர் மூலபல வதைப் படலத்தில் கூறியுள்ள பாசுரம் வருமாறு: அது,

'களியானையும் நெடுந்தேர்களுங்
கடும்பாய்பரிக் கணனும்
தெளியாளியு மூரட்சியமுஞ்
சினவீரர் தந்திறமும்
வெளிவானக மிலதாம்வகை
விழுந்தோங்கிய பிழம்பால்
களிமாமலை மலைதாவின
னடைந்தான் கடற் கிடந்தான்'

என்பதாம்.

ஏனைய சேனைகளினழிவை மூலபலப் போரில் வெகு சமத்காரமாகக் கம்பர் வருணித்துள்ளமையைக் காட்டிலும் ஒருபடி யுயர்வாகவே யானைகள் அழிந்து பட்டமையைப் பற்றிக் கிளந்துள்ளாராதலின், வாசகர்கட்கு அதனின் வீறு விளங்குதற் பொருட்டு ஈண்டுச் சில செய்யுட்களைத் தருகின்றேம்:—அவை,

வரை பொருத மதயானைத் துணைமருப்புங்
கிளர்கழுத்து மணியும் வாரித்
திரைபொருது புறங்குவிப்பத் திறங்கொள்பணை
மாமுருட்டிச் சிறைப்புள் ளார்ப்ப
நுரைக்கொடியும் வெண்குடையுஞ் சாமரையு
மெனச்சுமந்து பிணத்தி னேன்மைக்
கரைபொருந்துங் கடன்மடுக்குங் கடுங்குருதிப்
போரறு காண்மின் காண்மின்'

'கைக்குன்றப் பெருங்கரைய நிருதர்புயக்
கற்செறிந்த கதலிக் கானம்
மொய்க்கின்ற பரித்திரைய மூரட்கரிக்கைக்
கோண்மாவ முளரிக் கானின்
மெய்க்கின்ற வாண்முகத்த விழுக்குடரின்
பரிசடைய நிணமேற் செற்ற

வுய்க்கின்ற வுதிரநிறக் களங்குளங்க
ஞலப்பிறந்த வுவையுங் காண்மின்'
'நெடும்படைவா ளுஞ்சிலுழு நிணச்சேற்றி
னுதிரநீர் நிறைந்த காப்பிற்
கடும்பகடு படிகிடந்த கடும்பாம்பி
னினமள்ளர் பரந்த கையிற்
படுங்கமல மலர்நாறு முடிபரந்த
பெருங்கிடக்கை பரந்த பண்ணை
தடம்பணையி னறும்பழனந் தழுவியதே
யெனப் பொலியுந் தகையுங் காண்மின்'

என்பனவேயாம். (வானரர் களங்காண்படலம் செ. 23–24–25.)

பல்வகைய சேனைகளையும் ஊடுருவிக் கிழித்துச் சென்ற இராமபாணங் களின் அதியாச்சரியமான செய்தியை யுணர்த்தும் பாசுர மொன்றை வரைந்து இக் கட்டுரையை நிறுத்துவோம். அது,

கைத்தலமுங் காத்திரமுங் கருங்கழுத்தும்
நெடும்புயமு முரமுங் கண்டித்
தெய்த்தில போய்த் திசைதொறு மிருநிலத்தைக்
கிழித்திழிந்த தென்னி னல்லால்
மத்தகரி வயமாவின் வாணிருதர்
பெருங்கடலின் மற்றிவ் வாளி
தைத்துளதாய் நின்றதென வொன்றேயுங்
காண்பரிய தகையுங் காண்மின்'

என்பதாம். (யுத்தகாண்டம் வானரர் களங்காண் படலம். 27 செய்யுள்)

இது காறுங் கூறியவாற்றான் 'தமிழ் நெறி வழக்கத்தின்' விழுமிய பொருள் தெற்றென விளங்குதல் காணற் பாலதாம்.

புறப் பொருட்டுறைகளின் இலக்கணங்கள் ஆங்காங்குப் பொருந்த மெய்யையும் மனத்தையும் ஒருங்கு உருக்குமாறு நம் கவிச்சக்கரவர்த்தியாங் கம்ப நாட்டாழ்வாரது பாசுரங்கள் நுணுகி யாயப் புகுவார்க்கு ஈரேழ் புவ னங்கள் போற் பரந்து காணப்படுமெனின் மற்றவற்றின் பெருமித் மாண்பு களை யெல்லாந் தனித்தனி யளவிட்டுரைத்த லியாங்ஙனம்?



# கல்வியின் சிறப்பு

(எம். பி. மகாராஜா.)

இந் நிலவுலகில் உள்ள எல்லா மக்களும் தம்முயிரையும் உடம்பையும் ஓம்பி இன்ப வாழ்க்கை இனிது நடாத்த முன்னின்று துணைபுரிந்து முன்னேற்றுவிக்கும் திறமை கல்விக்கே இருக்கின்றது. ஒருவன் எத்தகைய தொழிலைச் செய்து முடிக்க முயன்றிடினுங் கல்வியின்றி அவன் கருதிய தொழிலைச் செவ்வையாகச் செய்து முடித்தல் இயலா.

கல்வியானது யாவர் மனத்தையும் தீயவழியிற் செல்லவிடாது, சீரிய வழியிற் செலுத்தி மக்களிடமுள்ள மிருகத் தன்மையை மாற்றி, மாண்புறும் மனிதத்தன்மையை ஈந்து மாட்சியினை அளிக்கும் மகிழ்ச்சி கல்விக்கே உரியதாகும். இதனாலன்றோ நமது ஔவைப் பாட்டியாரும்,

"கல்வியறிவுதரும் கற்பைநிலை நிறுத்தும்
இல்வாழ்க்கேற்ற இசை வெல்லாஞ்—சொல்விக்கும்
இந்நிலத்து மேன்மைஎல்லா மெய்துவிக்கும்
முக்தி என்னும் அந்நிலத்துக்குற்ற துணையாம்,"

என்று பாடியுள்ளார். இப்புவியின்கண் மக்களிடை நிகழும் அறியாமையென்னும் பேயை அகற்றுவதற்கு, கல்வியைப் போல் உற்ற மருந்து எவையும் உளதா? இலவே-இல். ஆதலாற் கல்வி மக்கட்கு மிக வேண்டற்பாலது. கல்வியினைப் பயிலுந்தோறும் கருத்துடன் கற்க வேண்டும்

கல்லாத ஒருவன் கண்ணில்லா குருடனெனவுங் கற்றோர் கண்ணுடையரெனவும் வான்புகழ் வள்ளுவர் பெருந்தகையர் தம் அருமைத் திருமறையிற் கீழ்வரும் பாவை அருளிப் போந்தார். அவை:—

கண்ணுடைய ரென்போர் கற்றோர், முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லாதவர்—என இச்சீரிய செந்தமிழ் கூற்று,

கல்வியினைச் சிறப்பித்துக் கூறுதல் காண்க.

கல்லாத மாந்தர் கண்ணொளி பெறினும் அவை புண்களை யொக்கும், கற்றோர் எந்நாடு சென்றிடினும் ஏற்று உபசரிக்கடபடுவர்; அரசனைக் காட்டினும் பதின் மடங்கு அன்னாரைப் பாராட்டிப் பணிவர். புவியாளும் வேந்தர்க்குத் தந்தேய மட்டும் புகழுண்டு, ஆனால் கவிவேந்தர்க்கோ, சென்றுவிட மெல்லாஞ் சிறப்புண்டு என்பதனை:—

"மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்
மன்னனில் கற்றோன் சிறப்புடையோன்—மன்னனுக்கு
தன்தேயமல்லாற் சிறப்பில்லை கற்றோர்க்குச்
சென்ற விடமெல்லாஞ் சிறப்பு."

என நல்வழி நவில்வது ஓர்க.

ஆதலால் மக்கட்கு இன்றியமையாது வேண்டற் பாலது கல்வி எனக் கூறத்துணிவதும் தெறறென விளங்காமற் போகா? இளமைப் பருவத்திலிருந்து சோம்பலை விடுத்து, கல்வி கற்க வேண்டுதல் நன்று. மக்களனைவரும மதயை, ஒழுக்கம், ஈவு, இரக்கம், அறிவு முதலியன அடைய ஆசைகொள்ளின் அவர்தம் முதலில் கல்வியின்பாற் கருத்தைச் செலுததிக் கற்றல் வேண்டும்.

அங்ஙனம் கல்வியைக் கருத்துடன் கற்றோர் அடையும் நற்பயன் எம்மால் எடுத்து இயம்ப இயலா. இளமையிற்கல் எனும் மொழியினை இதயத்தில் நிறுத்தல் நன்றாம். கல்லாத ஒருவன் தடையின்றித் தரித்திரத்தைத் தாங்குவான். கல்வியானது அன்பை வளர்த்து அறிவைப் பண்படுத்திப் பக்தி வழியைக் காட்டி இன்பப் பேற்றினை ஈயவல்லது.

உலகமக்கட்குப் பெரிதும் வேண்டற்படுவது செல்வப் பொருள் எனினும் கல்விப் பொருளைப் போற் நிலையுள்ளது செல்வமன்று. ஆறிடும் மடுவும்போற் அழிந்தொழியும். கல்விப் பொருளோ எனில் காவலரால் கவரப் படாததும், பகைஞரால் பங்கிடாததும் கொடுத்தாலுங் குறைவுறாததும் தீயினால் தீங்குறாததும் மறைந்தொழியாது எஞ்ஞான்றும் நிலைப் பெற்றுத் திகழ்வது. கல்வி களஞ்சியமென்று கூறத் தயங்கேன். இதனாற் செல்வப் பொருளினும் கல்விப்பொருள் எத்துணை சிறந்தது என்பது நோக்குக.

"இம்மை பயக்குமால் ஈயக் குறைவின்றால்
தம்மை விளக்குமால் தாமுணரக் கேடின்றால்
எம்மை யுலகத்தும் யாம் காணோம் கல்வியைப்போல்
மம்மர் அறுக்கும் மருந்து."



# விசித்திர விநோதம்

போலீஸ் கமிஷனர்:—ஒரு ரூபாய்க்கு வாங்கின புத்தகத்தை எப்படி 10 ரூபாய்க்கு விற்பாய்.

வியாபாரி:—கோபித்துக் கொள்ளாதீர்கள் சார், நான் பள்ளிக்கூடத்தில் படிக்கும் பொழுது என் உபாத்தியாயர் சுன்னத்திற்கு ஒன்றும் மதிப்பில்லை என்று போதித்தார்.

***



உபாத்தியாயர்:-பையா, சிரஞ்சீவிகளில் ஒருவரைச் சொல் ?

பையன்:— சிரஞ்சீவிகளில் ஒருவர் பரசுராமர்.

உபா:—அவருக்கு எவ்விதம் அவ்வகைப் பதவி கிடைத்தது?

பை.—அவர், க்ஷத்ரிய வம்சத்தில் அநேக சிரசுகளை தன் வாளால் சீவி எறிந்திருக்கிறபடியால் அவருக்கு சிரஞ்சீவி என்ற பதவி கிடைத்திருக்கிறது.

***

ரயில் பாராத நாட்டுப்புறத்தான்:— வெகுவேகமாக ஓடிவரும் ரயிலைக் குறுக்கிட்டு நின்று டிரைவரை நோக்கி ஐயா! கொஞ்சம் நிறுத்துங்க. நான் அவசரமாக எங்க ஊருக்குப் போகணும். வேண்டுமென்றாலும் இந்தாங்க இரண்டணா.

***

வண்டியில் இருக்கும் பாஸெஞ்ஜர்:—எ "ஹிண்டு" இங்கே வா.

ஹிண்டு பேபர் விற்கும் காதர்பாசா:—ஓய் ஜாக்கிரதை. இனிமேல் ஆளை அறிந்து கூப்பிடும்.

வாயிலில் பாண்டியாடிக் கொண்டிருந்த சிறு பயல்களைப் பார்த்துக் கொண்டிருந்த சிறு குழந்தை தானும் ஓர் ஓட்டாஞ்சில்லியை எடுத்துக் கொண்டு அதைப் போட்டு மிதித்து இரண்டுதரம் குதித்து விளையாடி விட்டு அந்த ஓட்டாஞ்சில்லியை சட்டென்று எடுத்து வாயில் போட்டுக் கொண்டது.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த தாயார்,

"ஏண்டா, சீ! கழுதை ஓட்டைத் துப்பு. அதை ஏண்டா வாயில் போட்டுக்கொள்கிறாய்.

குழந்தை:—இல்லெம்மா, நா பாண்டியாடி பழம் எடுத்துட்டேன். பழத்தை அண்ணா பிடிங்கிண்டுடு வான்னு சாட்டேன் அம்மா." :

***

காதலன்:—இதற்குள்ளாக எனக்கு கலியாணம் வேண்டாமென்று என் பெற்றோர்கள் சொல்லுகிறார்கள். இன்னம் சில தினங்கள் பொறுத்துக் கொண்டு இருக்க முடியுமா?

காதலி:—என் உயிர்க் காதலரே! அதற்கென்ன நிச்சயமாய்......... இன்னொரு காதலர் ஏற்படாதவரையில் பொறுத்துப் பார்க்கிறேன்.

***

தகப்பனார்:—நீ தருமம் செய்ய துணிவாய்.

மகன்:—சரிதாம்பா.

தகப்பன்:—(மறுநாள்) காலில் பெருங்காயமா யிருக்கே?

மகன்:—ஏம்பா, நீங்கதான் தருமம் செய்ய துணிவாய் என்றீரே.

தகப்பன்:—இப்படியா துணியச் சொன்னேன்,

மகன்:—இல்லேபா, நேற்று ஒருகார் ரொம்பொ வேகமாய் போயிட்டிருந்தது. அது எங்கனுபோய் மோதிக்கொள்ள போகிறது என்று என் காலைக் குறுக்கே நீட்டினேன்.

***

புரோகிதர்:—"ஏண்டா சுப்பா, புதுப் பஞ்சாங்கத்தை அந்தமாதிரி கசக்குகிறாயே."

சுப்பன்:—"இல்லிங்கசாமி; மழை தேதி போட்டிருக்குன்னு சொன்னீங்களே; பிழிந்து பார்க்கிறேன் ஜலம் வருதான்னு."

***

ராமு—என்ன சீனு, மிட்டாய் கடையை முறைத்துப் பார்க்கிறாய்?

சீனு:—கடையைப் பார்க்கவில்லே ராமு! கடைக்காரன் வியர்வை எல்லாம் மிட்டாயில் விழுகிறதே! அதைத்தான் பார்க்கிறேன்.

# ஆசிரியர் குறிப்புக்கள்

## நியாயங் கிடைத்தது

சென்ற வருஷத்தில் வேலை நிறுத்த காலத்தில் வேலையிலிருந்து நீக்கப்பட்ட ஐந்து டிராம்வே தொழிலாளர்களை மீண்டும் வேலையில் வைப்பது சம்பந்தமாக, சென்னை டிராம்வே கம்பெனி ஏஜண்டுக்கும், டிராம் தொழிலாளர் சங்கத்துக்கும் தகராறு நடைபெற்று வந்ததை வாசகர்கள் அறிவார்கள். ஒரு வருஷத்திற்கு மேலாகியும் இப் பிரச்சினை தீராமலிருந்து வந்தது. டிராம் தொழிலாளர் சங்கத்தின் மற்ற கோரிக்கைகளையெல்லாம் ஒப்புக்கொண்ட ஏஜண்டு, தொழிலாளர் தலைவர்கள் எத்தனையோ முறை கேட்டுக்கொண்டும் இந்த ஐந்து தொழிலாளர்களை மட்டும் மீண்டும் வேலையில் வைக்க முடியாதெனக் கண்டிப்பாக மறுத்து விட்டார். இதன் காரணமாக, சம்பந்தப்பட்ட 5 தொழிலாளர்களும் உண்ணுவிரதங்கூட இருக்க நேர்ந்தது. நிலைமை மிகவும் மோசமாய்ப் போய் விடுமென்று கண்ட தொழில் மந்திரி கனம் கிரி இத் தகராறைச் சமரசமாக முடித்து வைக்க முயற்சி எடுத்துக் கொண்டார். டிராம் தொழிலாளர் சங்கத்தார், இச் சங்கத்தில் அதிகமாகப் பங்கெடுத்துக் கொண்ட காரணத்திற்காக இந்த 5 தொழிலாளர்களையும் கம்பெனியார் வேலையிலிருந்து நீக்கி விட்டதாக வாதித்தனர். ஏஜண்டு, வேலையில் அசிரத்தையாக இருந்ததற்காகவே ஐவரையும் வேலையிலிருந்து நீக்கப்பட்டதே யொழிய, சங்கத்தில் நிர்வாகஸ்தர்களாக இருந்ததற்காகவோ, வேலை நிறுத்தத்திற்குக் காரணமாக இருந்ததற்காகவோ அல்ல என்று கூறினார். எனவே, இவ்விஷயத்தைப்பற்றி விசாரணை செய்து ஒருவித முடிவை யுண்டாக்க ஜஸ்டிஸ் பாண்டுரங்கராவை மத்தியஸ்தராக நியமித்தார்கள். மத்தியஸ்தரின் முடிவான தீர்ப்புக்கு இருதிறத்தாரும் கட்டுப்படுவதாக ஒப்புக் கொண்டார்கள். அதன்படியே இப்பிரச்சினையை ஜஸ்டிஸ் பாண்டுரங்காராவ் விசாரணை செய்தார். கம்பெனி சார்பில் அட்வொகேட் ஜெனரல் கிராண்ட் ஆஜராகி அவர்கள் கட்சியை எடுத்துக்கூறி வாதித்தார். தொழிலாளர் சார்பிலும் பலர் சாட்சியங் கூறினர். இவ் விசாரணை முடிவில் நீதிபதி பாண்டுரங்காராவ் தொழிலாளர் பக்கமே நியாயமிருப்பதைக் கண்டு, 'சங்க நிர்வாகத்தில் அதிக பங்கு எடுத்துக் கொண்டதற்காகவே கம்பெனியார் அந்த 5 தொழிலாளிகளை வேலையிலிருந்து நீக்கி விட்டனர்; ஆதலால் அவர்களை மீண்டும் வேலையில் வைத்துச் கொள்ளவேண்டும்' என்று தீர்ப்பளித்தார். இத் தீர்ப்பு இருதிறத்தாருக்கும் வழங்கப்பட்டது. சர்க்காரும் இத் தீர்ப்பின்மீது தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்து கம்பெனியாருக்கு அனுப்பினர். ஏஜண்டு இத்தீர்ப்புக் கிணங்கி, நீக்கப்பட்ட ஐவரையும் மீண்டும் வேலைக்கு வைத்துக்கொண்டார். டிராம் தொழிலாளர்கள் பல நாள்பட்ட சிரமத்துக்கும் முயற்சிக்கும் தக்க பயனை அடைந்து விட்டார்கள். இந்நியாயத் தீர்ப்பின் வாயிலாக டிராம் தொழிலாளர்களுக்குக் கிடைத்த வெற்றி அவர்களுக்கு மட்டுமன்று; தொழிலாளர் உலகத்துக்கே வெற்றி யாகும். இச் சம்பவம் முதலாளி வர்க்கத்திற்கே ஒரு எச்சரிக்கையாக இருக்குமென்று நாம் நம்புகிறோம்.

## ம. மா. மந்திரி சபைத் தகராறு முடிவு.

மத்திய மாகாண மந்திரி சபையில் பிரதம மந்திரி கனம். கரேயுக்கும் மற்ற மூன்று மந்திரிகளுக்கும் இடையே ஏதோ சில காரணங்களால் அபிப்பிராய பேதம் ஏற்பட்டது. இதன் காரணமாக, மூன்று மந்திரிகளும் தாங்கள் பிரதம மந்திரியின் ஆதிக்கத்தின் கீழ் ஸ்தானம் வகித்துக் கொண்டிருக்க முடியாதெனக் கூறி ராஜிநாமா எழுதி யனுப்பினர். பிரதம மந்திரி இந்த ராஜிநாமாக்களை ஏற்றுக் கொள்ளாது, இத் தகராறைத் தீர்க்க எவ்லாவிதமான முயற்சிகளும் எடுத்துக் கொண்டார்; ஆயினும் அவையெல்லாம் பலனளிக்கவில்லை. ஆகவே இவ்விஷயத்தில் பார்லி மெண்டரி போர்டு தலைவர் சர்தார் வல்லபாய் பட்டேலும், ஜனுப் அபுல்கலாம் ஆஸாத்தும் தலையிட்டு விசாரணை செய்தனர். இதனிடையே மத்திய மாகாண சட்டசபைக் காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் இவ்விஷயம் விவாதிக்கப் பட்டது. அதன் பயனாக அக்கூட்டத்திலேயே மந்திரிகளிடையேயுள்ள மனக்கசப்பு நீங்கிச் சமரசம் ஏற்பட்டு விட்டது. பிரதம மந்திரியிடம் பழையபடி நம்பிக்கை வைத்திருப்பதாக அம்மந்திரிகள் உறுதி கூறினர். இவர்கள் ஐக்கிய மனோ பாவத்தோடு சமர்ப்பித்த அறிக்கையைச் சர்தார் படேலும் அபுல்கலாம் ஆஸாதும் ஒப்புக் கொண்டனர். காங்கிரஸ் கமிட்டியின் ஆக்ஞைப்படி, சட்ட மந்திரி ஸ்ரீ ஷெரீப் தமது பதவியை ராஜிநாமா செய்து விட்டார். அவருக்குப் பதிலாக அவரது ஸ்தானத்தில் வேறு யாரும் நியமிக்கப்படப் போவதில்லையாம்.

இத்துடன் ம. மா. மந்திரிகளின் நிர்வாகத்தைப்பற்றிப் பொதுவாகக் கூறப்பட்ட புகார்களையும், ஏற்கனவே வாக்குறுதியளித்தபடி சர்தார் படேல் விசாரணை செய்தார். அதில் மந்திரிகள் மீது சாட்டப்பட்ட பெரிய குற்றச் சாட்டுகள் ஆதார மற்றவை எனக் கண்டு பிடிககப்பட்டது. உத்தியோக நியமன விஷயங்களில் மட்டும் மந்திரிகள் சிறு தவறுகள் செய்திருக்கின்றனர் என்பது ஏற்பட்ளது. மந்திரிகள் மீது கூறப்பட்ட இப்புகார் விஷயத்திலும் பார்லிமெண்டரி சப் கமிட்டியினர் அளித்த தீர்ப்பை மத்திய மாகாண மந்திரிகள் ஏற்றுக் கொண்டிருக்கின்றன ராதலால் அவர்கள் தங்கள் சிறு தவறுகளையுந் திருத்திக்கொண்டு எச்சரிக்கையாக நடப்பார்கள் என்பது திண்ணம். எனவே, இனி ம. மா. மந்திரி சபையில் எவ்வித சச்சரவும் ஏற்படாது நல்ல முறையில் ஆட்சி நடைபெறு மென்று நாம் நம்புகிறோம்.

---

## லவுங்க பகிஷ்கார முடிவு

சென்ற மாதத்துக்கு மேலாகவே ஜான்ஸிபார் லவுங்க பகிஷ்காரம் சென்னை, பம்பாய், கல்கத்தா முதலிய முக்கிய நகர்களில் தீவிரமாக நடைபெற்று வந்ததை வாசகர்கள் அறிவர். இப் பகிஷ்காரத்துக்குக் காரணம், ஜான்ஸிபாரில் கிராம்பு வர்த்தகஞ் செய்து கொண்டிருந்த இந்தியரை விரட்டுவதற்கு அங்குள்ள சர்க்கார் செய்த சூழ்ச்சியேயாகும். இவ்விஷயத்தைப்பற்றி ஜான்ஸிபார் இந்தியப் பிரதிநிதி இந்தியாவுக்கு வந்து காங்கிரஸ் தலைவர் பண்டித ஜவஹர்லால் நேருவிடம் முறை

யிட்டுக்கொண்டார். எனவே காங்கிரஸ் தலைவர்களும் இப் பிரச்சினையை ஏற்றுக்கொண்டு, காங்கிரஸ் தொண்டர்களைக்கொண்டு கிராம்பு பகிஷ்காரஞ் செய்யும்படி ஏற்பாடு செய்தது. இதன் பயனாக, இந்திய வர்த்தகர்களோடு ஜான்ஸிபார் சர்க்கார் சமரசஞ் செய்து கொள்ளவேண்டிய நிலைமை ஏற்பட்டது. இச் சமரச ஒப்பந்தம் ஏற்பட்டவுடனேயே இப்பகிஷ்காரத்தை நிறுத்தி யிருக்கவேண்டும். ஆனால் இந்தியப் பிரதிநிதிகள் இவ்வொப்பந்தம் மேலே அங்கீகாரம் பெறும் வரை பகிஷ்காரத்தை நிறுத்தக் கூடாதெனக் கேட்டுக்கொண்டனர். அதனாலேயே இதுவரை பகிஷ்காரம் நீடிக்கப்பட்டது. இப்போது இங்கிலாந்திலிருக்கும் குடியேற்ற நாட்டிலாகா கிராம்புத் தகராறு விஷயமாக ஜான்ஸிபார் சர்க்காருக்கும் இந்திய வியாபாரிகளுக்கும் ஏற்பட்ட சமரச ஒப்பந்தத்தை அங்கீகரித்து விட்டனர். ஆகவே ஏற்கனவே இச்சமரச ஒப்பந்தத்துக்கு அங்கீகார மளித்து விட்ட காங்கிரஸ் காரியக் கமிட்டியார், இவ் வொப்பந்தம் குடியேற்ற நாட்டு இலாகாமந்திரி மிஸ்டர் மால்கம் மாக்டோனல்டின் அங்கீகாரம் பெற்றதை யறிந்தவுடனே, லவுங்க பகிஷ்காரத்தை நிறுத்தும்படி கட்டளையிட்டு விட்டனர். அவ்வுத்தரவுப்படி கிராம்பு பகிஷ்காரக்கமிட்டி சார்பில் பகிஷ்காரம் நிறுத்தப்பட்டு விட்டது. இப்பகிஷ்கார விஷயத்தில் கலந்து கொண்ட காங்கிரஸ் தொண்டர்களுக்கும் தேசசேவகிகளுக்கும்: ஒத்துழைத்த லவுங்க வியாபாரிகளுக்கும் காங்கிரஸ் தலைவர்கள் நன்றி பாராட்டி யிருக்கின்றனர். இந்த ஜான்ஸிபார் லவுங்கபகிஷ்கார சம்பவத்தைக்கொண்டு, வெளி நாட்டிலிருக்கும் இந்தியர்கள் உரிமைகளையும் இந்திய தேசீயக் காங்கிரஸ் பாதுகாக்கு மென்பதை உணர்ந்து கொள்ளலாம்.

---

## ரயில் பிரயாணிகள் மகாநாடு

நம் இந்தியாவிலுள்ள ரயில்வேக்கள் பொதுமக்கள் சொத்துக்களாகும். சர்க்கார் வரிமூலமாக மக்கள் கோடிக்கணக்கான ரூபாய்களைப் போட்டிருக்கின்றனர். ஆனால் ரயில்வேக்கள் வியாபார தோரணையிலோ தேசீய முறையிலோ இல்லை. அதற்கு மாறாக அயல் நாட்டினரின் விசேஷ பாத்தியதையைப் பாதுகாக்கவே அவை இருக்கின்றன. வெளி நாட்டுக்கு மூலப்பொருள்களை அனுப்புவதற்கு ரயில்வேக்கள் உபயோகமாக இருக்கின்றன. அதனால்தான் பிரயாணிகளுடைய வசதியை ரயில்வேக்காரர்கள் கவனிக்காமலிருந்து வருகின்றனர். ஆகவே, சமீபத்தில் தேவகோட்டையில் கூடிய மூன்றாவது வகுப்புப் பிரயாணிகள் மகாநாட்டில் தலைவர் ஸ்ரீ கோரதன் தாஸ் கோகுலதாஸ் மோரார்ஜி கூறியபடி, தேசீய முறையை அடிப்படையாகக் கொண்டே சர்க்கார் ரயில்வேக்களின் நிர்வாகம் மாறினால் தான், வகுப்புப் பிரிவு ஒழிந்து, ரயிலில் பிரயாணஞ் செய்யும் எல்லா பிரயாணிகளுக்கும் தகுந்த வசதி ஏற்படும்.

---

## பண்ணையாள் முறை ஒழிக

நமது நாட்டில் உள்ள மக்களில் பெரும்பாலோர் விவசாயிகளே. விவசாயத் தொழிலில் ஈடுபட்ட மக்களை ரயத்துவாரி பிரதேசங்களைப்

பொறுத்த வரையில், நிலவரி கொடுப்போர், பட்டாதார், குடியானவன், பண்ணையாள் என நால்வகையாகப் பிரிக்கலாம். இந்நாற்பிரிவினரில் நில வரி கொடுப்போர், பட்டாதார் ஆகிய இருதிறத்தினருடைய உரிமைகளைப் பற்றியே அதிகமாக எல்லாராலும் பேசப்படுகிறது. குடியானவன, பண்ணையாள் ஆகியவர்களைப் பற்றிப் பேச்சே கிடையாது. முன்னைய இரு பிரிவினரும் பெரும்பாலும், பணக்காரர்களாகவும் செல்வாக்குடையவர்களாகவும் இருக்கின்றனர். பின்னைய பகுதியினரோ அநேகமாக ஏழைமக்களே யாவர். ஆகவே, அவர்களைப் பற்றிக் கேள்வி முறையே இதுவரை இல்லாதிருந்து வந்ததில் ஆச்சரிய மொன்றுமில்லை. இப்போது சென்ற வாரத்தில் தஞ்சாவூர் ஜில்லாவைச் சேர்ந்த வீராங்கூரில் குடியானவன், பண்ணையாள் ஆகியோரின் நன்மை கருதி விவசாய பண்ணை யாட்கள் மகாநாடு என்ற பெயரோடு ஒரு மகாநாடு நடைபெற்றதுதான் வியப்புறத் தக்கதாகும்

நிலமில்லாத விவசாயிகளில் பெரும்பாலோர் தாழ்த்தப்பட்ட மக்களே. இவர்களில் அநேகர் "பண்ணையாள் முறை"யின் கீழ் வேலை செய்கிறார்கள். இம்முறையின்படி அவர்கள் விவாகம், சாவுபோன்ற சுப அசுப காரியங்களுக்காகத் தங்கள் எஜமானர்களிடம் கடன் வாங்குகின்றனர். இக் கடனுக்கு வட்டி யில்லையாயினும், இதை மிராசுதார்கள் மிகக் குறைந்த கூலி கொடுப்பதன் வாயிலாகச் சரிக்கட்டி விடுகின்றனர். இவ்விதம் குறைந்த கூலி வாங்குவதனால் பண்ணையாட்கள் தங்கள் வாழ்க்கையில் ஏற்படும் விசேஷ செலவுக்கு மேலும் கடன் வாங்க நேரிடுகிறது. இதனால் பண்ணையாள் அதிக கூலி வேண்டுமென்று எஜமானைக் கேட்க முடியாது. அது மட்டுமோ! எஜமானன 'ஆண்டை'யின் உத்தரவுக்கெல்லாம் கீழ்ப் படிந்து நடக்க வேண்டும். அதிக கூலி சம்பாதிக்க கருதினாலும் இருக்கும் இடத்தை விட்டு வேறிடத்துக்குப் போக முடியாது. ஏனென்றால் அப்படி எதுவாயினும் செய்ய வேண்டுமென்றால், எஜமானிடம் வாங்கியுள்ள கடனுக்கு வழி செய்து விட்டல்லவா போக வேண்டும்? எனவே, இப்பண்ணையாள் முறை கடனை யடிப்படையாகக் கொண்ட அடிமை முறையேயாகும். இதற்கும் பண்டைக் காலத்தில் இருந்த அடிமை வியாபாரத்துக்கும் அதிக வித்தியாசமில்லை. பண்ணையாள் முறையில் உள்ள இக்கொடுமையை யுணர்ந்துதான் மேற்படி மகாநாட்டில் தலைமை வகித்த ஸ்ரீ கே. சந்தானம், "இப்பண்ணையாள் முறை எவ்வளவு சீக்கிரம் நிறுத்தப்படுகிறதோ அவ்வளவு சீக்கிரம் ரயத்துகளுக்கும், பண்ணையாட்களுக்கும் நன்மை யேற்படும். தற்போதுள்ள அடிமை சாசனங்களை யெல்லாம் சர்க்கார் ரத்து செய்து பண்ணையாட்களை வேலையில் அமர்த்த நிபந்தனைகள் ஏற்படுத்த வேண்டும். பண்ணையாட்கள் மாத சம்பளம் பெறும் தொழிலாளர்கள் போல் நடத்தப்பட வேண்டும். மாத சம்பளத்தை ஓரளவு தானியமாகவும், ஓரளவு பொருளாகவும் கொடுக்க வேண்டும். அறுவடையில் ஒரு விழுக்காடு வருஷ போனஸாகவும் கொடுக்கவேண்டும்" என்று ஆலோசனை கூறினார். இத்துடன் மற்றும் பல சீர்திருத்தங்களையும் கூறியிருக்கிறார். இவை அவசியம் கவனிக்கப் படத்தக்கவை. எவ்வகையிலும் பண்டைய அடிமை முறையை வற்புறுத்துவதுபோலுள்ள இப்பண்ணையாள் முறையை உடனே ஒழித்துவிட சர்க்கார்

முயற்சி செய்யவேண்டும். சட்டம் செய்து அதன் வாயிலாக இவ்வடிமை முறையே இல்லாதபடி செய்யவேண்டும். இப்பண்ணையாள் முறைக்குப் பெரிதும் ஆட்பட்டிருப்பவர்கள் தாழ்த்தப்பட்ட மக்களே யாதலால், அவர்கள் முன்னேற்றத்துக்காகப் பாடுபடும் காங்கிரஸ் தலைவர்களும், சர்க்காரும் இவ்வடிமைத் தளையிலிருந்து அவர்களை விடுவிக்கக் கூடிய சீக்கிரம் நடவடிக்கை எடுத்துக்கொள்வார்களென்று நம்புகிறோம்.

---

## தொழிலாளரைச் சுரண்ட முயல்வதா?

காங்கிரஸ் மந்திரி சபைகள் ஏற்பட்டதிலிருந்து, சென்னையிலும் மற்றுஞ் சில மாகாணங்களிலும் முதலாளி தொழிலாளிகளின் தகராறு அடிக்கடி ஏற்பட்டு வருகிறது. தொழிலாளர்கள் தங்களது கடைசி ஆயுதமாகிய வேலை நிறுத்த முறையை உபயோகிக்க வேண்டிய அவசிய மேற்பட்டு விடுகிறது. இந் நிலைமைக்கு முக்கிய காரணம் பெரும்பாலும் முதலாளிகளின் குறுகிய மனோபாவமும், தொழிலாளர்களைச் சுரண்ட முயலும் முயற்சியுமே யாகும் என்று பத்திரிகைகளில் அவ்வப்போது வெளிவரும் செய்திகளிலிருந்து அறிய இடமிருக்கிறது. முதலாளி தொழிலாளிகளின் தகராறைக் காங்கிரஸ் மந்திரிகளும், பிற தலைவர்களும் தீர்க்கப் பாடுபட்டு வருகின்றனர். அவ்வித ஒப்பந்தங்களுக்குக் கட்டுபட்டுத் தொழிலாளர்கள் நடக்க முயன்றாலும், முதலாளிகளில் சிலர் அதீதமான காரியங்களைச் செய்து ஒப்பந்தங்களை முறித்து விடுகின்றனர். இது அவர்களது அகம்பாவ மனோ பாவத்தையே யன்றோ காட்டுகிறது? இதனால் என்னவிதமான பலன் விளையுமென்று அவர்கள் சிறிதாயினுஞ் சிந்தித்துப் பார்க்கின்றனரா? தாங்களே யோசித்து பார்க்கா விடினும், கனம் ராமன் மேனன் கோவை நஞ்சுண்டபுரம் மரமேறுவோர் சங்கத்தின் வரவேற்புப் பத்திரத்துக்குப் பதிலளிக்கையில் குறிப்பிட்ட விஷயத்தை யாகிலும் கவனித்துப் பார்க்கட்டும்.

"மரமேறுவோருக்கும் முதலாளிகளுக்கும் ஒரு மந்திரி மூலம் ஒப்பந்த மேற்பட்டதாகவும் அதை முதலாளிகள் முறித்து விட்டதாகவுந் தெரிகிறது. முதலாளிகள் இந்த ஏழைத் தொழிலாளிகள் விஷயத்தில் சரியான முறையில் நடந்து கொள்கிறவரையில் தேசத்தில் அமைதி நிலவியிருக்காதென்று இவர்களுக்கு நான் எச்சரிக்கை செய்கிறேன். தொழிலாளிகளைச் சுரண்டலாமென்று அவர்கள் நினைத்தால் அது பிசகு. உலகம் மாறிக் கொண்டு வருகிறது. இந்தியாவும் மாறி வருகிறது. ருஷியாவில் சென்ற 5 வருஷங்களாக நடந்து வரும் சம்பவங்கள் இந்த முதலாளிகளுக்கு ஞாபக மிருக்கலாம். அவை இந்தியாவிலும் நடக்க வேண்டுமென்று நான் கூறவில்லை; நாம் இந்திய முறையில் நமது பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்ளலாம்." இவ் வெச்சரிக்கை மரம்கண்டிராக்டர்களுக்கு மட்டுமல்ல. பொதுவாக எல்லா முதலாளிகளுக்குமே உரியதாகும். ஆகவே உலக நிலைமை தேச நிலைமைகளை யுணர்ந்து முதலாளிகள் தங்கள் மனோபாவத்தை மாற்றிக் கொள்ள முயல்வார்களாக.

---

தொடர் கதை.

# மாயா விரோதி

ஸி. எஸ். இராமன், எம். ஏ., எல். டி.



செங்கோட்டை ஜெமீந்தாரினி இந்திரா, பற்பல எண்ணங்கள் அவளுடைய மனதில் தாக்க, யோசனை செய்தவளாய் தனது மாளிகைக்கு அருகில் இருந்த மோகனரங்க முதலியாருடைய மாளிகைக்கு அவர் அனுப்பி வைத்த மோட்டார் வண்டியில் செல்லுகையில், மார்க்கபந்துவை நினைத்துக் கொண்டாள். அவரை நினைக்கும் பொழுதெல்லாம் அவள் பாலகிருஷ்ணனுடைய உருவத்தையும் மனக்கண்ணில் கண்டு, மிகுந்த சந்தோஷங் கொள்ளுவாள். ஆனால் எப்பொழுதும் அத்தகைய சந்தோஷ முகமலர்ச்சி அவளுக்கு ஏற்படவில்லை. வக்கீல் மோகனரங்கம் அவளுடைய ரகசியத்தை எவ்வாறோ உணர்ந்திருந்தமையால் அது அவளுக்கு பீதியைக் கொடுத்தது. மேலும் அந்த வஞ்சகன் அவளுடைய காதற் கடிதங்களைத் திருடிவைத்துக்கொண்டு ஜெமீந்தாரினியைப் பயமுறுத்திக் கொண்டிருந்தது இந்திராவுக்கு சொல்லமுடியாத மனவேதனையைக் கொடுத்துக் கொண்டிருந்தது. செங்கோட்டை ஜெமீந்தார் உண்மையை அறிந்தால் தன்னையும் பாலகிருஷ்ணனையும் பகை செய்ய மாட்டாரா என்று அவள் கருதினள்.

அங்ஙனம் அவள் மன நிலைமை இருக்க மோட்டார் வண்டி சடுதியில் மோகனரங்க முதலியாருடைய வீட்டை யடைந்து நின்றது. ஓராள் கதவைத் திறக்க, இந்திரா அதினின்றும் இழிந்து சிறிது இருளோடு இருந்த ஹாலையடைந்து, மாடிக்குச் சென்றாள்.

இந்திரா மாடியில் விசாலமாக இருந்த அறைக்குள் நுழைகையில் அங்கு ஒருநாற்காலியில் அலங்காரத்தோடு மோகனரங்கம் தன்னை வரவேற்பதைக் கண்டு முனிவு அடைந்தாள்.

"இந்திரா, நீ உனது சொந்த வீட்டில் இருப்பதாக நினைத்துக் கொள்." என்று மோகனரங்கம் சொன்னார்.

அதைச் சொல்லிக் கொண்டே அவர் திறந்திருந்த வாசற்கதவை உள்பக்கம் மூடினார்.

இந்திரா அதைக்கண்டு, "காற்றுகூட வாராதபடி என்னை இந்த அறைக்கா அழைத்து வருவது?" என்று கோபித்துக் கொண்டாள்.

மோகனரங்க முதலியார் ஜெமீந்தாரினியை எப்படியாவது தனது காதலியாகச் செய்து கொள்ள வேண்டும் எனும் எண்ணத்தோடு மிக்க ஜாக்கிரதையாக சில ஏற்பாட்டைச் செய்திருந்தார். தற்செயலாக

அகப்பட்ட ஒரு மோட்டார் டிரைவரைக் கண்டு, அவனிடம் சீமாட்டியை அழைத்துவரக் கட்டளையிட்டு, சிறிது முன் பணம் கொடுத்திருந்தார். வீட்டு மேன்மாடியில் இந்திராவை வரவேற்று அவளுடையபிரியத்தைக் சம்பாதித்துக்கொள்ள வேண்டுமென்று மேம்பாடு மிக்க அலங்காரத்தை அந்த அறைக்குக் கொடுத்திருந்தார். விலையுயர்ந்த படங்களும் தனது மோகன ரூபமும் ஜெமீந்தாரினியின் மனதை மாற்றி விடும் என்று அவர் மனப்பால் குடித்துக் கொண்டிருந்தார். எல்லா சாளரக் கதவுகளையும் மூடி விட்டு, அறையில் வருண விளக்குகளை எரியுமாறு செய்திருந்தார்.

இந்திரா மிக்க மனச்சோர்வுடன் நாற்காலியில் அமர்ந்தவாறே முதலியாரை நோக்கினாள். அது மிக்க பரிதாபகரமாக இருந்தது. அப்பார்வையை மற்றொருவன் கண்ணுற்றிருப்பானாகில் அப்பெண்மணியிடம் இரக்கம் தோற்றுவித்து, இடுக்கண்ணிலிருந்தும் அவளைக் காப்பாற்றி யிருப்பான். மோகனரங்கம் அத்தகைய எண்ணம் ஏதும் பெறாமல், அவளை இம்சித்து, இஷ்டத்தைப் பெறவேண்டும் எனும் கருத்துடன் "இந்திரா, நான் கடிதங்களைக் கொணர்ந்து, உன்னுடன் பேசுகிறேன்," என்று சொல்லிவிட்டு, வெளியே சென்றார்.

இந்திரா அதைரியத்தோடு நாற்காலியில் சாய்ந்து அவர் வெளியில் சென்றதைப் பார்த்து மனமுருகினாள்.

வக்கீல் திரும்பி வந்தார். அவர் கரத்தில் ஒரு கடிதக்கட்டு இருந்தது. அதைக் கண்ணுற்றதும் அதை எப்படியாவது பெற்றுக் கொண்டு, நெருப்பில் போட்டுக் கொளுத்தி விடவேண்டும் எனும் கருத்து அம்மாதின் மனக்கண்ணில் உதித்தது.

"என் பிரியே, உனக்கு இக்கடிதக் கட்டில் ஆசை ஏன்? என்மீது பிரியம் கொள். நான் உனக்கு சிநேகிதன் அன்றோ?" என்று மோகனரங்கம் சொன்னார்.

அவள் பதில் கொடுக்கவில்லை.

"நீ ஏன் இங்கு வந்தாய்? உன் புதல்வனுடைய வருங்கால க்ஷேமத்தைக் கோராமல் நீ இங்கே வந்திருக்க வேண்டியதில்லை...சரி, நீ செய்த மோசத்தனம் மிகவும் பொல்லாதது. நல்லவளாக என்பால் காதல் கொள்," என்று அவர் கூறிக்கொண்டே கடிதக்கட்டை இந்திராவிடம் வீசினார்.

இந்திரா அவருடைய வார்த்தைகளை அசட்டை செய்து, கடிதக் கட்டைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டாள். அப்பொழுது அவள் கொண்ட சந்தோஷம் எழுத முடியாதபடி இருந்தது.

"நீ கடிதங்களை எண்ணிக்கொள். எல்லாம் சரியாக உள. நான் கொடுக்கும் பேச்சிலிருந்து எப்பொழுதும் பிறழுவதில்லை. நான் மரியாதை மிக்கவன் கண்ணியம் பொருந்தியவன். நான் ஏதாவது ஒரு கடிதத்தையாவது எடுத்து வைத்துக்கொள்ளலாம். நீ கொண்டுள்ள எண்ணத்தைக் கெடுத்து விடலாம். உனது புதல்வன் பாலகிருஷ்ணனுடைய உடம்பில் ஜெமீந்தாருடைய ரத்தம் கொஞ்சம்கூட ஓடா திருந்தாலும்,

உண்மையை உன் புருஷன் அறிந்து கொள்ளவில்லை. சரி, நான் உன்னுடைய ரகசியத்தை யாருக்கும் சொல்லுவதில்லை," என்று மோகனரங்கம் கம்பீர மனிதன்போல் பேசிக்கொண்டே, ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக்கொண்டு, அவளை நெருங்கினர்.

சீமாட்டி இந்திரா பயத்தினுல் முகத்தை மூடிக்கொண்டாள்.

"முகத்தை ஏன் மூடிக்கொள்ளுகிருய்? என்னைப் பார்க்க உனக்கு வெட்கமா? மார்க்கபந்து விடம் முன்பு நீ உனது காதலைக் கொடுத்து, அவரையே சிலகாலம் புருஷன் என்று நீ நினைத்துக் கொண்டிருக்கவில்லையா? அதுமாதிரி என்னையும்......நீ கோபம் கொள்ளாதே. உன்னுடைய நன்மையையும் க்ஷேமத்தையும் கோரியேதான் நான் உன்னைக் காதலிக்கிறேன். நான் பல வருஷங்களாக உன்னைக் காதலித்து வருகிறேன். நாம் இருவரும் பரஸ்பரமாக காதலர்களாக இருந்து விடுவோம்...நான் சொல்வது தெரிந்ததா? என்னைக்கண்டு பராமுகம் செய்யாதே. எனது நல்லெண்ணங்களையும் குணுதிசயங்களையும் சீக்கிரத்தில் அறிந்து கொள்ளுவாய்," என்ருர்.

தன்னிடம் காதற்கடிதங்கள் கிடைத்து விட்டதால் இந்திரா அவருடைய வார்த்தைகளுக்குச் செவி சாய்க்கவில்லை. அதைத் தெரிந்து கொண்ட முதலியார், "கடிதக்கட்டு உன்னிடம் வந்தமையால் நான் உனக்கு ஏதும் ஹானி செய்ய முடியாது என்று நினைத்துக் கொள்ளாதே. இக் கடிதங்களைப் புகைப்படம் எடுத்து வைத்துக் கொண்டுள்ளேன். என்ருர். அதைக் கேட்டதே இந்திரா தனது சந்தோஷத்தை இழந்தாள்"

முதலியார் அவளை அடைந்து, "கண்ணே! என்னேடு பேசு," என்று சொன்னர்.

மோகனரங்கம் தனக்கும் தன் புதல்வனுக்கும் எப்படியும் தீமை செய்யும் ஆற்றலைக்கொண்டவர் என்பதை இந்திரா நன்ருக அறிந்திருந்தாளாதலால் அவருடைய வார்த்தைகளை நம்பவில்லை. அவருக்கு திரவியத்தைக் கொடுத்து சரிப்பண்ணி விடவேண்டும் எனும் கருத்தைக்கொண்டு, "நான் என்னுடைய பிரத்தியேக சொத்தைக் கொடுத்து விடுகிறேன்...... உன்னை நான் காதலிக்க முடியாது," என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள்.

"உனது புருஷன் எனக்குப் பணம் கொடுக்கிருன். நீ எனக்கு ஆசைக்கிழத்தியாக இருந்தால் போதும். உலகம் இதை அறியாதபடி நாம் நடந்து கொள்ளுவோம். காதலுக்கும் பணத்திற்கும் இப்பொழுது இணைப்பு இல்லை," என்று சிரித்துக்கொண்டே பேசினர் மோகனரங்கம்.

"அயோக்கியன் நீ!" என்று இந்திரா பற்களைக் கடித்துக்கொண்டு சொன்னுள்.

"உன்னை நான் மனதார விரும்புகிறேன்!!"

"பாதகா, நான் கெட்ட ஸ்திரீ அல்ல என்பதை நீயே ஒப்புக்கொள்ளுவாய்."

"இந்திரா, உனக்கு முதலில் ஒரு காதலன் இருந்தான். நான் இரண்டாவது காதலன். சந்தோஷத்தோடு நான் சொல்லுவதற்கு இணங்கிவிடு," என்று மோகனரங்கம் உரைத்தார்.

இந்திரா கடிதக்கட்டைப் பெற்றும் சந்தோஷம் கொள்ளவில்லை. முதலியாரிடம் கடிதங்கள் புகைப்படம்போல் எடுக்கப்பட்டு விட்டிருந்ததால்தான் கடிதங்களைப்பெற்றும் பிரயோஜனம் இல்லையென்றும் எப்பொழுது வேண்டுமானாலும் அவர் தன்மீது வஞ்சம் தீர்த்துக்கொள்ளக் கூடுமென்றும் பின்னர் தனது கணவன் தன்மீதும் குழந்தை பாலகிருஷ்ணன் மீதும் கொடிய கோபம் காண்பித்து இம்சிக்கக் கூடுமென்றும் இந்திரா துக்கத்தோடு சிந்தித்தாள். ஆகையால் எப்படி அவருடைய கோபத்திலிருந்தும் பின்பு தப்பிச் செல்லவேண்டும் என்பதை யோசித்தாள். பாலகிருஷ்ணனுக்குப் பெருத்த அவமானத்தைக் கொடுக்க அவள் சிறிதும் மனம் விழையவில்லை. மேலும் வக்கீல் மோகன்ரங்க முதலியாருடைய காமப் பித்துப் பேச்சுகள் அவளுடைய செவிகளுக்கு எட்டாதபடியால் வாளாவிருந்தாள்.

முதலியாருக்குக் கோபம் உண்டாகவே, அவர் இந்திராவைப் பலாத்காரம் செய்துவிட வேண்டுமென்று தீர்மானித்து, அக்கோதையின் மெல்லிய மேனியைத் தொடுவதற்கு ஆயத்தமானார். செங்கோட்டை ஜெமீந்தாரினி அவருடைய மானக்கேடான செய்கையைச் சிறிதும் விரும்பாதவளாய் அவரை எதிர்த்தாள். இருவரும் இரண்டு விநாடிகள் வரை போராடினர். இந்திரா மேலும் போராடுவதற்குச் சக்தியற்றவளாய் மோகனரங்க முதலியாருடைய முரட்டுத்தனமான பிடிவாதத்திற்கு ஆளாகிவிடவேண்டிய ஸ்திதிக்கு வரும் நிலையை யடைந்து விட்டாள். அப்பொழுது அவள் "தெய்வமே, என் மானத்தைக் காப்பாற்ற மாட்டாயா?" என்று கூவினாள்.

அவள் கூவியதை மோகனரங்க முதலியார் கேட்டு கேலி செய்து, 'இங்கு யாரும் வந்து உனக்கு உதவி செய்ய மாட்டார்கள். வீண் பிடிவாதம் எதற்கு?' என்றார்.

அப்பொழுது அவ்வறையின் ஒரு சோபாவின் அடியிலிருந்தும் திடீரென்று ஒரு மனிதன் கையில் ரிவால்வர் வைத்துக்கொண்டே மோகனரங்க முதலியார் முன் சென்று நின்று, "இந்த சீமாட்டியவர்களை ஏதாவது இனியும் துன்புறுத்த நினைப்பாயாகில் ரிவால்வருக்கு இரையாவாய்," என்று அதிகாரத்தோடு சொன்னான்.

மோகனரங்கம் அந்த ஆளைக் கண்ணுற்று, மிக்க பயம் அடைந்து, மேனி பதற, ஆவி துடிக்க, கீழே விழுந்தார். இந்திராவும் சிறிது பயம் கொண்டாலும் அப்படி திடும்பிரவேசமாகத் தோன்றிய மனிதன் தன்னைக் காப்பாற்றுவதற்கே வந்தான் என்று நினைத்து தைரிய மடைந்தாள். "மாயா விரோதி சமயத்திற்கு தெய்வம் போல் வந்தானே," என்று தனக்குள் சொல்லிக்கொண்டாள்.

"பெண்ணே, நீ பயப்படாதே. நீ இப்பொழுதே கீழே சென்று, உன் மாளிகைக்குச் செல்," என்று மாயா விரோதி சொன்னான். அவள் அவன் சொன்னபடியே கீழே சென்று, அங்கு இருந்த மோட்டார் வண்டியில் ஏறிக்கொண்டு, தனது மாளிகைக்குப் போய் விட்டாள்.

அவள் போனதும் மாயா விரோதி வக்கீலை உதைத்துத் தள்ளி, "ஜாக்கிரதை, செங்கோட்டை ஜெமீந்தாரினியை இனிமேல் அடைய முயற்சித்தால் உன் மூளையை நான் சிதறவடிப்பேன்," என்று கர்ஜித்துச் சொல்லி, அங்கு நின்றும் அகன்றான்.

இந்திரா மோகனரங்கத்தைச் சந்திப்பதைக் காரியதரிசி பிரசாத் வாயிலாக மாயா விரோதி அறிந்ததும் அவளை எப்படியாவது காப்பாற்ற வேண்டும் என்று முடிவு செய்து, மோகனரங்கத்தின் மாளிகைக்கு ரகசியமாகச் சென்று, தனது சுய ரூபத்தில் மோகனரங்க முதலியாருக்குக் காட்சி கொடுத்ததும் பின்பு சென்றதும் நேயர்கள் அறிவார்கள்.

அன்றிரவு செங்கோட்டை ஜெமீந்தார் தமது மனைவியை யடைந்து, மோகனரங்க முதலியார் மார்க்கபந்துவைப் பற்றிய விஷயங்களைத் தம்மிடம் கூறியதாகப் பொய் புகன்றார். அதைக் கேட்ட இந்திரா ஆயிரம் தேள்கள் ஒன்று சேர்ந்து ஏக காலத்தில் கொட்டினால் எப்படி யிருக்குமோ அப்படி வியாகூலமடைந்து, வெட்கமும் கொண்டாள்.

"அன்பே, போனது போகட்டும். எனது கொடுமையால் நீ தவறு செய்தாய். அது எனது முட்டாள் தனத்தினால் நேர்ந்து விட்டது. என்னை மன்னித்து விடு," என்று சொன்னார்.

இந்திரா ஏதும் பதில் சொல்லாமல் இருந்தாள். ஜெமீந்தார் அவளை யடைந்து, "நீ பயம் கொள்ளாதே. பாலகிருஷ்ணன் எனது புதல்வன் அல்லவென்றாலும் நான் அவனை எனது புதல்வன் என்றே கருதி வருவதால் அவனுக்கு என் அன்பு எள்ளளவும் மங்காது. என்மேல் நீ பிரியமாக இருந்தால் போதும்," என்று சொன்னார். பிறகு அன்பு வார்த்தை பல பேசி, அவளுடைய சந்தோஷமான காதலைப் பெற்றார்.

(தொடரும்.)



# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

வெகுதான்யஹு ஆனிமீ—கலியுகாதி 5040, சாலிவாகனம் 1861,
பசலி 1347-48, கொல்லமாண்டு 1113, ஹிஜரா 1357,
இங்கிலீஷ் 1938ஹு ஜூன்மீ—ஜூலைமீ

| ஆனிமீ | ஜூன்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 15 | புதன் | துதி11-0 | பூரா21-38 | அமி60 | |
| 2 | 16 | வியா | திரி16-58 | உத்29-0 | சித்60 | |
| 3 | 17 | வெள் | சது22-58 | திரு35-55 | ம35-55சி | |
| 4 | 18 | சனி | பஞ்27-18 | அவி42-3 | சித்42-3அ | |
| 5 | 19 | ஞா | சஷ்30-55 | சத46-55 | சித்60 | |
| 6 | 20 | திங் | சப்33-10 | பூர50-25 | ம50-25சி | |
| 7 | 21 | செவ் | அ33-48 | உத்52-23 | அ52-23சி | |
| 8 | 22 | புதன் | நவ32-33 | ரே52-25 | மர60 | |
| 9 | 23 | வியா | தச29-30 | அஸ்50-33 | அ50-33சி | |
| 10 | 24 | வெள் | ஏகா24-35 | பர46-55 | சித்60 | |
| 11 | 25 | சனி | து18-8 | கி✲41-48 | அமி60 | கிருத்திகை [ரை |
| 12 | 26 | ஞா | திர10-20 | ரோ35-30 | சித்60 | மாச சிவராத்திரி, யாத்தி |
| 13 | 27 | திங் | சது1-35 ● 52-10 | மிரு28-28 | அ28-28சி | சர்வத்திர அமாவாசை, அவமாகம் |
| 14 | 28 | செவ் | பிர42-30 | திரு21-3 | ம21-3சித் | ஆஷாடசுத்தம் |
| 15 | 29 | புதன் | துதி33-13 | புன13-33 | சித்60 | சந்திர தெரிசனம் |
| 16 | 30 | வியா | திரி24-35 | பூச6-43 | அமி6-43சி | விவாகம், சர்வ முகூர்த்தம் |
| 17 | 1 | வெள் | சது17-3 | ஆயி0-45 மக56-13 | மர60 | ஸ்கந்த பஞ்சமி, மாச சதுர்த்தி விரதம், அவமாகம் |
| 18 | 2 | சனி | பஞ்10-53 | பூர53-25 | சி53-25ம | சஷ்டி, சித்திரம் எழுத |
| 19 | 1938ஹு ஜூலைமீ 3 | ஞா | சஷ்6-30 | உத்52-30 | அமி60 | குமார சஷ்டி, விஸ்வத் சப்தமி, ஆனித் திருமஞ்சனம் |
| 20 | 4 | திங் | சப்4-8 | அஸ்53-35 | சி53-35பி | விவாகம், பும்சவனம் |
| 21 | 5 | செவ் | அஷ்3-45 | சித்56-25 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 22 | 6 | புத | நவ5-15 | சுவா60 | சித்60 | லட்சுமி விரதம் ஆரம்பம் |
| 23 | 7 | வியா | தச8-30 | சுவா1-0 | அமி1-0சி | மாடுகொள்ள |
| 24 | 8 | வெள் | ஏகா13-0 | விசா7-3 | சித்60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 25 | 9 | சனி | து18-28 | அ13-55 | சித்60 | சனிப் பிரதோஷம்,6க்குள் |
| 26 | 10 | ஞா | திர-24-28 | கே21-18 | ம21-18அ | குளம் கிணர் வெட் [மழை |
| 27 | 11 | திங் | சது30-35 | மூல28-55 | சி28-55ம | பவித்ரோபணம்,மாடுவாங் |
| 28 | 12 | செவ் | ○36-45 | பூர36-23 | சி36-23அ | பௌ○, வியாச பூஜை [க |
| 29 | 13 | புதன் | பிர42-28 | உத்43-35 | அ43-35சி | ஆஷாடபகுளம் |
| 30 | 14 | வியா | துதி47-43 | திரு50-23 | சித்60 | சாதுர்மாஸ்ய துதியா, அசூன்ய சயன விரதம் |
| 31 | 15 | வெள் | திரி52-20 | அவி56-30 | சித்60 | விவாகம் சர்வ முகூர்த்தம் |

| | | | |
|---|---|---|---|
| சனி | | புத கே | செ சூரி |
| குரு | 5-மிது-புத 19-கடக-புத 24-சிம்ம-சுக் 29-கடக-செ | | சுக் |
| | ராகு | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No. 8, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.